உ

ஸ்ரீ வேதவியாஸ பகவான் அருளிய

# ஸ்ரீ தேவீ பாகவதம்

(வசனம்)

## 12 ஸ்கந்தங்களும் அடங்கியது


திருவனந்தபுரம்

ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ண ஐயர்

தொகுத்தது



பிரசுரித்தவர்

டி. கே. சுப்பிரமணிய ஐயர்

ஸ்ரீ கோமளவல்லி அம்மன் கோவில்

ஆய்க்குடி

(திருநெல்வேலி தென்காசிக்கு சமீபம்)

பதிப்புரிமை] 1953 [விலை ரூ. இருபது



C. K. VADHYAR & SONS

BOOK-SELLERS & PUBLISHERS



ஆய்க்குடி ஸ்ரீ கோமளவல்லி அம்மன் கோவில்

ஸ்ரீ கோமதி சங்கர ஸகாயம்

# சிறப்புரை

திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தில் செங்கோட்டைத் தாலூகாவில் ஆய்க்குடி என்ற ஸ்தலம் இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தென்காசியிலிருந்து ஆறு மைல் தூரத்திலும் நயினரகரம் என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் ஒரு மைல் தூரத்திலும் இருப்பது. ஹனும நதிக் கரையில் திருக்குற்ருலத்தின் காற்று வீசும் இடத்தில் இயற்கை வளம் செறிந்து கண்டோர் உள்ளங் கவரும் பூம்பொழிலும் பிற காட்சிகளும் அமைந்து விளங்கும் அந்த ஸ்தலத்தில் ஸங்கேதிகள் என்னும் வமிசத்தில் பண்டைக் காலத்தில் உதித்த ஸித்தர் ஒருவர் அருள் விலாஸம் பொழிய வாழ்ந்து ஸமாதி அடைந்தார். அவர் ஸமாதியின்மேல் திரிமூர்த்தி உருப்பெற்ற அரச விருக்ஷம் இருந்தமையின் ஸித்தரை அரசடியார் என்று யாவரும் வழங்கலாயினர். இறைவன் திருவருளால் அவ்விடத்தே ஸித்தருடைய சக்தி திரண்டு ஸ்ரீ பால ஸுப்ரமண்யஸ்வாமியாக உருப்பெறவே, அப்பெருமான் எழுந்தருளும் ஆலயம் ஒன்று அங்கே நிறுவப் பெற்றுப் பூஜை முதலியன நடந்துவரலாயின.

அப்பால் 1936-ஆம் வருஷம் ஸித்தர் வம்சத்தைச் சேர்ந்த என் தந்தையாரும், என் அன்னையாராகிய ஸ்ரீ ருக்மிணி அம்மாளும் மிக பிரசித்தி பெற்ற ஸ்ரீ சங்கரநயினர் கோயிலுக்குத் தரிசனம் செய்யச் சென்ற காலத்தில் இத்தலத்தில் வேறொரு கோயில் அமைப்பதற்குக் காரணமான அற்புத நிகழ்ச்சி ஏற்பட்டது. அது முதல் அம்பிகையின் திருவருள் விலாஸச் சூழலிலே சிக்கிய என் அன்னையார் பல பல ஸ்தலங்களைத் தரிசித்து, திருவருளே கண்ணுகப் பல நிகழ்ச்சிகளை முன்னுடியே அறிந்து, ஆய்க்குடியில் ஸ்ரீ கோமளவல்லி யம்பிகையைப் பிரதிஷ்டை செய்வித்து வழிபடலாயினர். இந்த ஸந்நிதியில் குறையிரக்கும் பக்தர்கள் தங்கள் விருப்பம் நிறைவேறப்பெறுகின்றனர். இப்போது ஸ்ரீ கோமளவல்லி யம்பிகை பல ஊர்களிலிருந்தும் வரும் பக்தர்களுக்குத் திருவருள் பாலித்துக் கொண்டு கண்கண்ட தெய்வமாய் எழுந்தருளியிருக்கிருள்.

சித்தர்களின் வரிசையில் சேர்க்கப்படவேண்டிய என் அன்னையார் முறையாகக் கல்வி கற்றவர் அல்லர். ஆயினும் ஸ்ரீ கோமதி அம்மன் சந்நிதியில் திருவருள் நோக்கத்துக்கு உள்ளானது முதல் பல பல தீர்க்க தரிசனமொழிகளையும், துதி மொழிகளையும் வேதாந்த தத்துவங்களையும் திருவாய் மலர்ந்தருளியிருக்கிருர். திருவருள் வசப்பட்டவர்கள் அற்புதமான ஆற்றலைப் பெறுவார்களென்பதற்கு என் அன்னையார் சிறந்த சான்ருகத் திகழ்கின்ருர்.

இந்நூலிலிருந்து கிடைக்கும் வரும்படி முழுவதும் ஆய்க்குடியிலிருக்கும் ஸ்ரீ கோமளவல்லியம்மன் கோவிலுக்கே உரித்தாகும்.

டி. கே. சுப்பிரமணியன்

ஸ்ரீ கணேசாய நம:

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி குருப்யோ நம:

# முன்னுரை

मनौ या तिष्ठन्ती भवति च मते: अन्तरतरा
नकिंचित् जानाति स्वयमपि मति: यां अविषयम् ।
मतिर्यस्या: देह: स्वयमपि मतिं प्रेरयति या
नमो हृल्लेखायै सकलनिगमोत्तंसमणये ॥
तरुणेंदु मौलि तरुणीं अरुणां करुणारसेन परिपूर्णां ।
वंदे समदंहसितां अङ्कुश पाशौ वराभये दधतीं ॥
नम: श्री शंकराचार्य पादाब्जायोपकारिणे ।
यस्य प्रत्युपकाराय नम इत्येव केवलम् ॥

பதினெட்டுப் புராணங்களுக்குள் இரண்டு பாகவதங்கள் பிரஸித்தமானவை. அவ்விரண்டினுள் ஒன்று மஹாபுராணம் என்றும், மற்றது உபபுராணம் என்றும் லோகப்பிரஸித்தமானது. ஒன்றுக்கு ஸ்ரீ தேவீ பாகவதம் என்று பெயர்; மற்றொன்றுக்கு விஷ்ணு பாகவதம் என்று பெயர். இவ்விரண்டில் ஒன்று மஹாபுராணம், மற்றொன்று உபபுராணம் என்பதில் விவாதமே இல்லை. இருப்பினும் ஸ்ரீ தேவீ பாகவதம் மஹாபுராணமா விஷ்ணு பாகவதம் மஹாபுராணமா, விஷ்ணு பாகவதம் உபபுராணமா தேவீ பாகவதம் உபபுராணமா என்ற ஸம்சயம் மாத்திரம் வித்வான்கள் மூலமாக இன்னும் நிர்ணயிக்கப் படவில்லை. அவரவர் பக்திக்குகந்த படி கூறுகிறார்கள். சிலர் விஷ்ணு பாகவதம் தான் மஹாபுராண மென்றும் ஸ்ரீ தேவீ பாகவதம் உபபுராணமென்றும் சொல்லு கின்றனர். சில வித்வான்கள் ஸ்ரீ தேவீ பாகவதம் தான் மஹா புராணமென்றும் விஷ்ணுபாகவதம் உபபுராணமே யென்றும் சொல்லுகிறார்கள். முக்கியமான இந்த விஷயத்தைத் தீர்மானிப் போம்: ஏகதேசிகள் என்ற சில வித்வான்கள் பாகவதம் ஒன்று தான், இரண்டாவது பாகவதம் என்பதே இல்லை என்று சொல்லு கிறார்கள். அந்த ஒன்று என்று சொல்லப்படுகிற பாகவதமும் விஷ்ணு பாகவதம்தான், தேவீ பாகவதம் அல்ல என்கிறார்கள். சில வித்வான்கள் விஷ்ணுபாகவதம் என்பது சுகப்ரம்ம ஸ்வாமி களால் உபதேசிக்கப்பட்டதல்ல, போபதேவன் என்ற ஒரு ரிஷி செய்தது என்றும், தேவீ பாகவதம் ஒன்றுதான் புராணம்

ஆகும் என்றும் அதுவே மஹாபுராணத்திலும் சேர்ந்தது என்றும் கூறுகின்றனர். 'ஹேமாத்ரி' என்ற கிரந்தத்தில் தானமஹிமையைச் சொல்லி வருகையில் பதினெண் புராணங்களையும் பற்றி வரிசையாகச் சொல்லப்படுகிறது. ஸநத்குமார ஸம்ஹிதையை முதற் புராணமாயும் நாரஸிம்ஹ ஸம்ஹிதையை இரண்டாவது புராணமாயும் பராசர ஸம்ஹிதையை மூன்ருவது புராணமாயும் விஷ்ணு பாகவதத்தை நான்காவது புராணமாயும் தெளிவுபடுத்தியுள்ளது. ஆகவே பதினெண் உபபுராணங்களுடைய முறையில் விஷ்ணு பாகவதம் படிக்கப்படுகிறது. அதனுல் விஷ்ணு பாகவதம் மஹா புராணத்தில் சேர்ந்ததாகாது என்றும் ஸ்ரீ தேவீ பாகவதம் தான் மஹா புராணமாகுமென்றும் வித்வான்கள் ஸித்தாந்தப் படுத்துகிருர்கள். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற தேவதைகளுக்கு ரஜோகுணம், தமோகுணம், ஸத்வகுணம் என்ற ஒவ்வொரு குணமும் உபாதியானதினுல், குணங்கள் ஸமமாக இருக்கும்போது மாயையானது மேற்சொன்ன எந்த தேவதைக்கும் உபாதியாக ஆகாது. அந்தந்த குணத்தை முன்னிட்டு அந்தந்த தேவதையை வர்ணிக்கிற புராணத்தைப் புராணமென்று சொல்லக்கூடும்; ஆயினும் ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்களும் ஸமமாக இருந்துவரும் நிலையில் மாயை என்ற உபாதியில் ஸம்பந்தப்பட்ட பிரம்ம சைதன்யத்தையே தேவியினுடைய ஸ்வரூபமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறபடியால் அந்த பரதேவதையை நிரூபிப்பதை மஹாபுராணம் என்று சொல்லுகிருர்கள். கேவல ஸத்வகுணத்தை உபாதியாக அவலம்பித்த தெய்வத்தைத் தான் விஷ்ணு என்று சொல்லவேண்டும். விஷ்ணு மாயையை உபாதியாக அவலம்பித்த சைதன்யமாக ஆகாமல் இருக்கும்போது மாயை ஹிதசைதன்யமான பிரும்மம் என்று விஷ்ணுவை எப்படிச் சொல்லலாம்? மாயோபஹிதமான சைதன்யம் பிரம்மம் என்ற பெயர் ஸாக்ஷாத் பரதேவதை ஒருவளுக்குத் தான் ஏற்படும். அந்த தேவிதான் அகுணமான சக்தியாவாள்; மற்ற தேவதைகள் அந்தந்த குணங்களை உபாதியாக உடையவர்கள். அந்தந்த குணங்களை முன்னிட்டு அந்தந்த தேவதையை வர்ணிக்கிற புராணங்களை அபேக்ஷித்து குணவிபாகங்களைச் செய்யாமல் பொதுவாகவே, லோக மாதாவான ஜகதீஸ்வரியைச் சொல்லுகிற புராணத்தைத்தான் மஹாபுராணம் என்று சொல்லலாம். அதுதான் தேவீ பாகவதம்.

सकल भुवनमेतत् सृष्टुकामा यदात्वम्
सृजति जननि देवान् विष्णुरुद्राजमुख्यान् ।
स्थिति लय जननं तैः कारयस्येकरूपा
नखलु तवकथंचित् देवि संसार लेशः ॥

பரதேவதையானவள் ஜகத்தை சிருஷ்டிக்க விரும்பும் பொழுது பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூன்று தேவதைகளையும் சிருஷ்

டிக்கிருள். அந்த மும்மூர்த்திகள் மூலமாக சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களை நடத்துகிருள். அந்த மூன்று தேவதைகளும் ஸ்ரீதேவியின் ஆக்ஞைக்கு உட்பட்டு முறைப்படி தம்தம் தொழிலை நடத்துகின்றனர். அவ்வப்போது ஸ்ரீ தேவியினிடத்தில் விக்ஞாபனம் செய்து கொண்டு தேவியினுடைய பிரஸாதத்திற்கு பாத்ரபூதர்களாகிருர்கள். பரதேவதையோ, 'பிந்து' பீடத்தில் அமர்ந்திருக்கும் நிர்விசேஷப் பிரம்மமாகிய காமேஶ்வரனுடைய மடியில் அமர்ந்து இவ்வாறு தேவர்களை நடத்துகிருள். இவ்வாறு ஏனைய புராணங்களுடைய ஸாராம்சம் தெரிகையில் தேவியினுடைய தத்வங்களை எடுத்துக்கூறும் ஸ்ரீ தேவீ பாகவதம் என்ற மஹா புராணத்தை வியாஸ பகவான் உபபுராணம் என்ற பெயரிலா எழுதுவார் ? தேவியினுடைய புத்ரஸ்தானத்தில் உள்ள விஷ்ணுவினுடைய சரித்திரத்தைக் குறிப்பிடும் விஷ்ணு பாகவதம் மஹா புராணமாவது எப்படி ? மஹா விஷ்ணுவானவர் தேவியினுல் சிருஷ்டிக்கப் பட்டவர் என்பதைக் கவனித்தால் தேவிக்கும், விஷ்ணுவுக்கும் மாத்ரு புத்ரபாவம் ஸித்திக்கிறது. மாதாவினுடைய கதையும் புத்ரனுடைய கதையும் ஸமமாவது நியாயமில்லை. ஆதலால் விஷ்ணு பாகவதம் மஹா புராணமென்றும், தேவீ பாகவதம் உபபுராணமென்றும் சொல்வதற்கு வித்வான்கள் எப்படி முன் வருவார்கள் ? அத்துடன், மும்மூர்த்திகளும் ஜகதீஶ்வரியால் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற தொழில்களில் கிரமமாக நியமனம் பெற்ற காலத்தில், நாங்கள் எங்கள் தொழில்களை இயற்ற எவ்விதம் சமர்த்தர்களாக ஆவோம் என்று பிரார்த்திக்க, பரதேவதை உடனே ஸகுணமான ஸரஸ்வதி, லக்ஷ்மி, துர்கை என்ற மூன்று சக்திகளைப் படைத்து முறையே மூவர்க்கும் அளித்து அந்தந்த தேவதையினுடைய மந்திர ரஹஸ்யத்தையும் உபதேசம் செய்து சிரத்தானு பக்தியுடன் தம் தம் தொழிலைச் சிறிதும் ஆயாஸமில்லாமல் செய்து வரும்படி அந்தத் திரிமூர்த்திகளைப் பார்த்து தேவி ஆக்ஞாபித்ததாகவும் தெரிய வருகிறது. இந்தக் காரணங்களைக் கொண்டு தேவீ பாகவதம் ஒன்றுதான் மஹா புராணமென்றும் அதிலும் அப் புராணம் ஐந்தாவது மஹா புராணமென்றும் சொல்லவேண்டியதாக ஏற்படுகிறது. மனிதனுக்கு ஜாக்ரம், ஸ்வப்னம், நினைவு, மூர்ச்சை, மரணம் என்ற ஐந்து அவஸ்தைகள் உண்டு. ஐந்தாவது அவஸ்தையாகிற மரணத்தை இந்த தேவீ பாகவத கதாசிரவணம் பண்ணினவன் ஜயிக்கிருன். ஐந்தாவது அவஸ்தையை நீக்குவதால் இந்த மஹா புராணத்தை ஐந்தாவதாக வேதவியாஸர் குறிப்பிட்டிருக்கிருர். லோகத்தில் சக்திபுஷ்டியுடைய பொருளைத்தான் பூஜ்யமாக உபாதானம் செய்வார்கள். यत्र यत्र पतति त्वं तत्र तत्र शक्तिमत्वं என்ற வ்யாப்தியினுல் ஒருவித சக்தியுமில்லாததை ஒரு பதார்த்தமாகவே வித்வான்கள் கருதமாட்டார்கள். லோகத்தில் ஸகல ஜனங்களும் விஷ்ணுவைப் பூஜிக்கின்றுர்கள். பூஜ்யத்வம் என்ற அந்த தர்மத்தில் பரிபாலன சக்திதான் காரணமாகும். பரிபாலன சக்தியில்லாமற்

போனால் விஷ்ணுவை யாரும் பூஜிக்கமாட்டார்கள். இவ்விதமே பிரம்மாவினிடத்தில் சிருஷ்டிக்கிற சக்தியிருக்கிறது; அதனாலே தான் அவர் லோக பூஜ்யராக விளங்குவது. ருத்ரனிடத்தில் ஸம்ஹாரசக்தி இருக்கிறது; அதனால்தான் அவர் பூஜ்யத்வம் என்ற பெருமைக்குக் காரணமாகிறார். இவ்விதம் எந்த வஸ்துவைக் கவனித்தாலும், அந்தந்த வஸ்துவில் அபூர்வமான ஒரு சக்தி விசேஷம் இருப்பதைக் கொண்டுதான் ஆங்காங்கு அந்தந்த வஸ்துக்கள் பெருமை பெறுகின்றன. இந்த விஷயத்தைத்தான் பகவத் பாதாளும்

शिवः शक्त्या युक्तः यदि भवति शक्तः प्रभवितुं
नचेदेवं देवो नखलु कुशलस्पन्दितुमपि ।
अतस्त्वां आराध्यां हरिहरविरिंचादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कमकृत पुण्यः प्रभवति ॥

என்ற சுலோகத்தால் சக்தியில்லாத பதார்த்தம் பதார்த்தத்திலேயே சேராது என்பதை விளக்கியிருக்கிறார்கள். ஸகல வஸ்துக்களுக்கும் பூஜ்யத்வம் ஸித்திப்பதற்கு எந்த சக்தியினுடைய உதவி வேண்டியது அவசியமாக ஏற்படுகிறதோ அந்த பராசக்தியினுடைய திவ்ய சரித்திரத்தை ப்ரதிபாதனம் செய்கிறபடியால் ஸ்ரீ தேவீ பாகவதம் என்ற மஹா புராணமானது பரமோத்க்ருஷ்டமானதாகிறது என்பதாக வேதவியாஸரால் கூறப்படுகிறது. ஸ்ரீதேவீ மாஹாத்மியத்திலும்,

ब्रह्म विद्या जगद्धात्री सर्वेषां जननी तथा
यया सर्वमिदं व्याप्तं त्रैलोक्यं सचराचरम् ।
सैव सेव्याच पूज्याच नान्यद्वै देवतान्तरम् ॥

என்ற சுலோகங்களால் லோகமாதாவான பராம்பிகையை ஸர்வோத்க்ருஷ்ட தேவதையாக வர்ணிக்கப் பட்டிருக்கிறது. மந்திர சாஸ்திரத்திலும்,

एवं यः पूजयेत् भक्त्या प्रत्यहं परमेश्वरीं ।
भुंक्त्वा भोगान् यथाकामं देवि सायुज्यमाप्नुयात् ॥
यो न पूजयते नित्यं चण्डिकां भक्तवत्सलाम् ।
भस्मीकृत्यास्य पुण्यानि निर्दहेत् परमेश्वरी ॥

என்ற வசனங்களால் பராசக்தியினுடைய பூஜையானது சந்தியாவந்தனாதிகளைப் போல் நித்யகர்மாவாகச் சொல்லப்பட்டிருப்பதால் புகழை விரும்புகிற ஸகல ஜனங்களும் ஸ்ரீ தேவியை ஆராதித்தே தீரவேண்டும்.

आराध्या परमा शक्तिः सर्वैरपि सुरासुरैः ।
मातुः परतरं किंचिदधिकं भुवनत्रये ॥

என்று தேவியானவள் லோகமாதாவானதினால் தேவிக்கு மேலான

தெய்வமே கிடையாது. ஆகையால், தேவியை ஆராதித்தே தீரவேண்டும்.

ओंकारं पितृ रूपेण गायत्रिं मातरं तथा ।
पितरौ यो न जानाति स विप्रस्त्वन्यरेतजः ॥

இவ்விதம் மஹிமையுள்ள ஸ்ரீ தேவியினுடைய சரித்திரத்தை மஹா புராணமென்றுதான் சொல்லித் தீரவேண்டுமேயல்லாமல் உப புராணத்தில் சேர்க்கமுடியாது. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இம் மூவரும் ரஜோ குணம், ஸத்வ குணம், தமோ குணம் என்ற மூன்று குணங்களையும் முறையே உபாதியாக அவலம் பித்திருப்பவர். இக்காரணத்தால் இவர்களை குணோபஹித தேவதைகளாகத்தான் கொள்ள வேண்டும்; ஸாம்யா வஸ்தையை ஸ்வரூபமாக உடைய மாயையை உபாதியாக அவலம்பித்த பிரம்மமென்று இவர்களைச் சொல்லமுடியாது. அவ்விதமிருக்கும்போது விஷ்ணுபுராணம், பிரம்மபுராணம், சிவ புராணம் இவைகளை மஹா புராணத்தினுடைய வரிசையில் எவ்விதம் சேர்க்கமுடியுமென்று சந்தேகப்படலாம். ஸமாதானம்: பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் மூவரும் அந்தந்த குணோபஹிதமான தேவதைகளாயினும் ஸாம்யாவஸ்தாபன்னமான மாயோபஹித மான பிரம்மஸ்வரூபிணி என்ற பரதேவதையானவள் அந்தந்த தேவதைகளிடத்தில் அந்தர்யாமியாக விளங்கிவருவதால் அந்த தேவியினுடைய அபேதத்தை அந்தந்த தேவதைகளிடம் நிரூபிக்க வேண்டிய அவசியத்தைக் கொண்டு அந்தந்த தேவதையைச் சொல்லும் புராணத்தையும் மஹா புராண வரிசையில் சேர்த்துக் கணக்கிடப்பட்டிருக்கிறது. மஹா புராணம் என்பது தேவீ பாக வதம்தான். ந்ருஸிம்ஹ மூர்த்தியான தெய்வம் ஸத்வ குணோபஹி தனை விஷ்ணுவென்பது ஸர்வசாஸ்திர ஸம்மதமாகும்; ஆயினும் அந்த மஹாவிஷ்ணுவை, மாயா சக்தியை உபாதியாக உடைய பரப்ரம்ம ஸ்வரூபிணியான பரதேவதை என்றே "தாபனீயம்" என்ற உபநிஷத் வர்ணித்துள்ளது. அக்காரணத்தால் ந்ருஸிம்ஹ புராணம் மஹாபுராணமாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. எந்தப் புராணத்தில் பிரதிபாதிக்கப்படும் தேவதை குணஸாம்யாவஸ் தாபன்னமான மாயோபஹித பிரம்மஸ்வரூபமென்று ஒப்புக் கொள்ளப்படுகிறதோ, அந்தப் புராணத்தைத்தான் மஹாபுராண மாக ஒப்புக்கொள்ள முடியும். குணோபஹிதமான பிரம்மம் என்றும் மாயோபஹிதமான பிரம்மம் என்றும் பிரம்மத்தினுடைய ஸ்வரூபம் இரண்டு விதமாக சாஸ்திரங்களில் பிரிக்கப்பட்டிருக் கிறது. பரதேவதையினுடைய ஸ்வரூபம் ஸாம்யாவஸ்தா பன்ன மாயோபஹிதமான பிரம்மமென்பது ஸர்வசாஸ்திர ஸித்தாந்தமாகும். மற்ற எந்த தேவதையும் அந்தந்த குணத் தால் உபஹிதமான பிரம்மமே ஆகும். குணோபஹிதமான பிரம்மத்தைக் காட்டிலும் மாயோபஹிதமான பிரம்மம் ஸர்வவேத தாத்பர்ய விஷயபூதமான அர்த்தப்படி சிறந்ததானதினால் அது

பிரம்மோத்கிருஷ்டமாகிறது. எந்தப் புராணத்தில் காயத்ரீ பரதேவதையினுடைய ஸம்பந்தம் இல்லையோ அதைப் புகழை விரும்புகிறவர்கள் ஆதரிப்பது கூடாது; ஆதரிக்கும்படி ஒரு சாஸ்திரத்திலும் சொல்லவில்லை. காயத்ரீ மஹா மந்திரத்தினுடைய ஸம்பந்தத்தை ஒவ்வொரு புராணத்திலும் நிரூபணம் செய்கிற காரணத்தினுலேதான் அந்தந்தப் புராணத்தில் சொல்லப்படுகிற தேவதையை குணஸாம்யாவஸ்தாபன்ன பரப்ரம்ம ஸ்வரூபிணி யான பரதேவதா ஸ்வரூபம் என்று வர்ணித்து, புகழை விரும்பு கிறவர்கள் அதை ஆதரிக்க வேண்டுமென்று நிரூபணம் செய்ய வேண்டியதாகிறது. அல்லாமல் அகாரணமாக குணோபஹிதமான தேவதையினிடத்திற் கொண்ட பக்ஷபாதத்தால் அந்த தேவதை யைச் சொல்லுகிற புராணத்தை மஹாபுராணமென்று வாதிக்க வரும் வித்வான்களின் ஸாஹஸத்திற்கு அவகாசமே ஏற்படாது என்றுதான் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. குணோபஹிதமான தேவதைகளை மாயோபஹிதமான தேவதா ஸ்வரூபமாக ஒப்புக் கொண்டு அந்தந்த தேவதையைச் சொல்லுகிற புராணத்தை மஹா புராணமென்று சொல்லக்கூடுமானுல் மாயோபஹிதமான பிரம்ம ஸ்வரூபமேயான பரதேவதையை பிரதிபாதிக்கின்ற இந்த ஸ்ரீ தேவீ பாகவதத்தை மஹாபுராணமென்றே ஒப்புக்கொள்வதில் யாவருக்கும் எவ்விதமான ஆக்ஷேபணையும் இராதன்றோ? 'காலோத்தரம்' என்ற பிரகரணத்தில்,

धिक् धिक् धिक् धिक्च तज्जन्म यो न पूजयते शिवां ।
जननीं सर्वजगत: करूणारस सागरम् ॥

என்று சொல்லியிருக்கிறது. இதன்படி பரதேவதையை, அதாவது குணஸாம்யாவஸ்தாபன்ன மாயோபஹித பரப்ரம்ம ஸ்வரூபிணி யான ஸர்வ ஜகத்திற்கும் மூலகாரணமான தேவதையை எந்த மனிதன் பூஜிக்கவில்லையோ அவனுடைய ஜன்மம் வீணுகிவிடும் என்று சொல்லப்படுகிறது. இதுபோலவே, மற்ற உபபுராணங் களிலும் தந்த்ர சாஸ்திரங்களிலும் 'சக்தி தத்வ விமர்சினி' என்ற கிரந்தத்திலும் விஸ்தாரமாக பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விதமான மஹாபுராணப் பிரதிபாத்ய பரதேவதையினுடைய பெருமையை யாரால்தான் வர்ணிக்க முடியும்? இந்த மஹா புராணத்தில் ப்ரதிபாதிக்கப்படுகிற பரதேவதையினுடைய ஸ்வ ரூபத்தை புத்தி சக்திக்கு எட்டின பிரகாரம் ஸ்ரீ தேவீ பாகவத ஆரம்பமாகிய முதல் சுலோகத்தால் ஸங்கிரஹமாக (சுருக்கமாக) வர்ணிக்கப்படுகிறது.

सर्वचैतन्य रूपां तां आद्यां विद्यांचधीमहि ।
बुद्धिं या न: प्रचोदयात् ॥

ஸர்வக்ஞரான வேத வியாஸர் இந்த தேவீ பாகவதத்தில் சொல்லப்படும் பரதேவதையினுடைய ஸ்வரூபானு ஸந்தானத்தை கிரந்த ஆரம்பத்தில் பரம மங்களமாக அனுஷ்டிக்கிற இந்த

சுலோகத்திலுள்ள சைதன்யம் என்ற சப்தத்திற்கு சேதனமான ஆத்மா என்ற அர்த்தத்தைக் கிரஹித்துக்கொள்ள வேண்டும். ஹிரண்யகர்ப்பன் முதல் ஸ்தாவரமான வஸ்துவரையிலும் உள்ள ஸகல பிராணிகளிடமும் சேதனுத்ம ஸ்வரூபமாக விளங்கி வரும் பரதேவதையை என்பது ஸர்வசைதன்யரூபாம் என்ற பதத்தின் அர்த்தமாக அறியவும். அத்துடன் தீமஹி என்ற க்ரியா பதத்தையும் சேர்த்துக் கொள்ளவும். அதனுல் ஸர்வஜகத்திலும் சேதனுத்ம ஸ்வரூபிணியான பராம்பிகையை த்யானம் செய்கின்ருேம் என்பது அதன் தாத்பர்யமாகும். சேதனமான ஆத்ம ஸ்வரூபம்தான் ஸர்வ பிராணிகளுடைய புத்திவிருத்திக்கு ப்ரேரக மாக காயத்ரீ மஹாமந்திரத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. சேதனுத்மக ஸ்வரூபமான பிரம்மமோ நிஷ்க்ரியமான ஸ்வபாவ முள்ள தானதினுல் புத்தி விருத்திகளுக்கு அது எப்படி பிரேரகமாகு மென்ற சங்கைக்கு ஸமாதானமாக ஆத்யாம் வித் யாஞ்ச என்ற விசேஷணங்கள் சேதனுத்ம ப்ரம்ம ஸ்வரூபிணியான பரதேவதைக்கு அலங்காரமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின் றன. ஆத்யாம் என்ற பதத்தால் அநாதியாய் விளங்கிவரும் என்ற தாத்பர்யம் பிரகாசிக்கின்றது. வித்யாம் என்ற பதத்தால் பரப்ரம்மத்தை விஷயீகரித்ததாயும் சுத்த ஸத்வ ப்ரதானமாயும் அந்தர்முகமாயும் பரப்ரும்ம பிரதிபிம்ப விசிஷ்டமாயும் உள்ள, வித்யாதத்வ ரூபிணியாம் மோக்ஷ ஸாதனமான அகண்டாகார விருத்தி என்ற தாத்பர்யத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதைத் தான் தாபனீயோபநிஷதத்தில் துரீயோபாதி என்றும் தாபனீ யாள் சொல்லுகிருர்கள். ஒன்ருயுள்ள மாயா சக்தியே அந்தர் முகமாயும் பிரம்மத்தை விஷயீகரித்ததாயும் சுத்த ஸத்வ ப்ரதான மாயும் பிரம்ம பிரதிபிம்ப அலங்கிருதமாயும், அவித்யையோ அதனுல் கல்பிக்கப்பட்ட த்வைத பிரபஞ்சமோ இவைகளை நிவிருத்தி செய்துவைக்கும் ஸாமர்த்திய முள்ளதாயும் விளங்கும் பக்ஷத்தில் அதை வித்யா தத்வரூபிணி என்றும் அந்த ஸந்தர்ப்பத்தில் ஆத்ம ஸ்வரூபமாக பிரகாசிக்கும் பிரம்மத்தை துரீயதத்வம் என்றும் உபநிஷத்துக்கள் வர்ணிக்கின்றன. அதே மாயா சக்தியானது பஹிர் முகமாக த்வைத பிரபஞ்சத்தையும் பீஜ ரூபமாகக் கவர்ந்துகொண்டு விளங்கி வந்தால் அவித்யா தத்வ ரூபிணி அதில் பிரகாசிக்கும் ஆத்ம ஸ்வரூபத்தைத்தான் பிராக்ஞன் என்று சொல்லுவார்கள். இதனுல் ஸர்வபிராணிக ளிடமும் அநாதியான சேதனுத்ம பிரம்மஸ்வரூபமாக பிரகாசிக்கும் பரதேவதையையும் அநாதி பூதமான வித்யாதத்வ ரூபிணியான மாயையையும் த்யானம் பண்ணுகின்ருேம். இதனுல் ஸர்வ வேதாந் தங்களிலும் போதிக்கப்படுகிற சுத்தசித்ரூபமான பிரம்மத்தையும் வித்யா தத்வ ரூபிணியாகும் துரீயோபாதியான மாயையையும் சேர்த்து த்யானத்தில் விஷயமாக உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும். இந்த ஸ்ரீ தேவீ பாகவதத்தில் பிரதிபாதிக்கப்படுகிற பராசக்தியோ வித்யாதத்துவ ஸ்வரூபிணியான மாயை என்ற

உபாதியினுல் உபஹிதமான சுத்த ப்ரம்மமே பராசக்தியாக விளங்கி வருவாள் என்பது வெளியாகிறது. சுத்த ப்ரம்மமானது நிர்விகாரமானதினுல் புத்திவிருத்தி ப்ரேரகத்வம் ஸ்வயமாக ஸம்பவிக்காமற் போறைலும் மாயோபஹிதமான அவஸ்தையில் ஸகலபிராணிகளுடைய புத்தி விருத்தியை பூர்வ கர்ம வாஸனையை யனுஸரித்து ஏவக்கூடுமானதினுல் எந்த பரப்ரம்மமானது மாயா சபளிதமாகி எங்களுடைய புத்தி விருத்தியை பிரேரேபிக்கின்றதோ அந்த பரப்ரம்மத்தை என்னுடைய பிரத்யேகாத்ம ஸ்வரூபமாக நானும் என் பரிஜனங்களும் சேர்ந்து த்யானம் பண்ணுகிறோம். காயத்ரீ பரதேவதையானவள் அந்தர்யாமியான பரப்ரம்ம ஸ்வரூபிணியா யிருந்துகொண்டு ஸர்வ பிராணிகளுடைய புத்திவ்ருத்திக்கு ப்ரேரகியாகிருள். இது ஸர்வ வேதாந்த தத்வ சித்தமாகும். ஆனதினுல், இந்த மங்கள சுலோகத்திலும் காயத்ரியில் உள்ள 'தீமஹி' என்ற முக்ய பதமும், இந்த சுலோகம் மூன்று பாதத்தில் முடிவதினுல் பாதத்திற்கு எட்டு எழுத்துப் பிரகாரம் 24 (இருபத்துநான்கு) அக்ஷரங்களாக ஏற்பட்டதிலிருந்து காயத்ரீ சந்தஸ்ஸால் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது என்றும் தெரிகிறபடியால், இந்த ஸ்ரீ தேவீ பாகவத ப்ரதிபாத்ய வஸ்துவும் மாயா விசிஷ்ட அந்தர்யாமி பிரம்மஸ்வரூபம் என்பது ஸித்தமாகிறது. தேவியினிடத்தில் பக்தியுள்ளவனும் அந்த பரதேவதையினுடைய மகிமையைக் கேட்கவேண்டுமென்கிற சிரத்தையுள்ளவனும் இந்த மஹாபுராணத்தை சிரவணம் பண்ணுவதில் அதிகாரியாவார்கள். தேவியினுடைய பிரஸாதத்தால் மோக்ஷஸாதனமான ஞானத்தை அடைந்து மோக்ஷலாபத்தையும் அடைவான். ஆனுஷங்கிகமாக ஸகலவிதமான போக போக்கியாதிகளையும் தேவியினுடைய பிரஸாதத்தால் இகத்தில் அடைந்து தீர்க்கமான ஆயுளோடு நோயற்றவனுய் ஜீவிப்பான்; இது அவாந்தர பலமாகும். மோக்ஷமோ மஹா பலமாகும்.

# விஷய ஸூசிகை

## மூன்றும் ஸ்கந்தம்

பக்கம்

## நான்காம் ஸ்கந்தம்



## ஐந்தாம் ஸ்கந்தம்

## ஆறும் ஸ்கந்தம்

## ஏழாம் ஸ்கந்தம்

பக்கம்

## எட்டாம் ஸ்கந்தம்



## ஒன்பதாம் ஸ்கந்தம்

## பத்தாம் ஸ்கந்தம்



## பதினென்ரும் ஸ்கந்தம்

பன்னிரண்டாம் ஸ்கந்தம்

# ஸ்ரீ தேவீ பாகவத மகிமை

## (ஸ்ரீ ஸ்காந்த மகாபுராணத்தின் மானஸ கண்டத்தில் உள்ள ' ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மியம் ' என்ற ஐந்து அத்தியாயங்கள்)

## (1)

सृष्टौ यासर्गरूपा जगदवनविधौ पालनी या च रौद्री
संहारे चापि यस्या जगदिदमखिलं क्रीडनं या पराख्या ।
पश्यन्ती मध्यमाथो तदनु भगवती वैखरी वर्णरूपा
सास्मद्वाचं प्रसन्ना विधिहरि गिरीशा ऽऽराधिताऽ लङ्करोतु ॥

இது ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மியத்தில் உள்ள முதல் சுலோகம். காணப்படும் இந்த உலகத்தை ஈச்வரன் படைக்கும் பொழுது தேவி படைப்பிற்கு அதிதேவதையாக விளங்கி வருகிருள். வைகுண்டாதிபதியான மஹாவிஷ்ணு உலகத்தைப் பரிபாலனம் செய்யும் காலத்தில் தேவி அதற்கு அதிதேவதையாக விளங்கி வருகிருள். காலாக்னி ருத்ரன் உலகத்தை அழிக்கிற காலத்தில், அதற்கு அதிதேவதையாக விளங்கி வருகிருள்.

உலகங்களெல்லாம் ஜகதீச்வரியான பரதேவதைக்கு விளையாட்டுப் பொருள்கள் போல்வனவாம். அவள் படைக்குங் காலத்தில் ஸரஸ்வதி தேவியாகவும், பரிபாலன காலத்தில் மஹாலக்ஷ்மியாகவும், அழிக்கிற காலத்தில் மஹா துர்க்கையாகவும் விளங்கி வருகிருள். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் மூன்றுபேர்களும் தம்தம் தொழிலை ஜகதீச்வரியின் ஏவலினுல் மேற்கொண்டு தம்தம் திறமை தத்தம்மிடத்தில் விளங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அந்தந்த தேவதையை வழிபட்டு வருகிருர்கள். தவிரவும், மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தத்திற்கு அந்தரங்க ஸாதனமான அகண்டாகார விருத்தியானது நாதம், பிந்து, கலை, வைகரீ என்று நான்குவிதமாக வித்வான்களுடைய அனுபவத்தில் பிரஸித்தமாக விளங்கி வருகிறது. இந்தப் பிரிவைத் தழுவித்தான் பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்றும் சில மஹான்கள் ஒப்புக்கொள்வார்கள்.

நாத ஸ்வரூபிணியான பரை என்ற சக்தியானவள், மூலாதார சக்ரத்தில் தான் ஒருவிதமான அறிவிற்கும் விஷயமாகாமல் மற்ற புத்தி விருத்திகளுக்கும் விளங்காத ஜோதிஸ்வரூபமாய் விளங்கி வருகிருள். பிந்து ஸ்வரூபிணியான பச்யந்தி என்ற பரதேவதையானவள் ஹ்ருதயாகாசத்தில் ' த்ருவ்ருத் ' என்ற ஓங்

கார ஸ்வரூபிணியாக விளங்கி வருகிருள். கலே என்ற மத்யமா தேவியானவள் விசுத்தி சக்ரத்தில் அகாரம் முதலான ஸ்வரங்க ளாகவும், ககாரம் முதலான ஸ்பர்சங்களாகவும் சுத்தவர்ண ஸ்வரூபி யாக விளங்கி வருகிருள். வைகரீ என்ற பரதேவதைதான் வாக் ரூபிணியாக ஒவ்வொன்றின் பொருளேயும் விளக்கி வைக் கிற ஒளிமயமாக விளங்கி வருகிருள். மூலாதாரத்திலோ நாதஸ்வ ரூபிணியாக இருக்கும் அந்த தேவியானவள் தன்னே வழிபடுகிற வர்களுக்கும் ஏனேயோர்க்கும் புலப்படாமல் ஸூக்ஷ்மமாக இருந்து வருவாள். பரை என்ற ஸ்வரூபத்துடன் ஹ்ருதயாகாசத்தில் இருக் கும்போது வழிபடுகிறவர்களுக்கு மாத்திரம் நிலேயில்லாமல் ஒரு க்ஷணகாலம் மின்னல்கொடிபோல் வருவாள். மத்யமா என்ற அவ சரத்திலோ விசுத்தி சக்ரமென்ற ஸ்தானத்திலிருந்துகொண்டு நிலே யான அக்னி ஜ்வாலேயைப்போல் தீர்க்கமாய் வழிபடுவோர்க்கு விளங்கி வருகிருள். வைகரீ என்ற பாஹ்ய தேசத்தில் சப்தரூப மாக விளங்கி வருங்காலத்தில் வழிபடுகிறவர்களுக்கும் மற்றவர் களுக்கும் விளங்குவாள். அவேத்யமானநிலே, ஸ்வஸம்வேத்ய மானநிலே ஸ்வபரவேத்யமானநிலே என்று அந்த தேவியினிடம் மூன்று அவஸ்தைகளுண்டு. ஸ்வஸம்வேத்யமானநிலே என்பதை ஸ்திரமானநிலே அஸ்திரமானநிலே என்று இரண்டுவிதமாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். நாலாவது நிலேயில் வைகரீ ரூபிணியாக விளங்கிவரும் பரதேவதைதான் ஸகல லோகங்களேயும் விளங்கவைக்கிற சப்தஸ்வரூபிணீ என்று சொல்லப்படுகிறபடி யால் மனிதர்கள் அந்த நிலேயிலேதான் தங்களுடைய வாக்கிஞல் விவரிக்கமுடியும். இவ்விதம் பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்று விளங்கி வருகிறவளாயும் ஸரஸ்வதி, லக்ஷ்மி, துர்க்கை என்ற ரூபத்தோடு கூடினவளாயும் உள்ள வேதாந்த மஹாவாக்ய ஜன்யமான அகண்டாகாரவ்ருத்தி ஸ்வரூபிணியான தேவதையான வள் என்னுடைய வாக்கு எல்லோர்க்கும் தெளிவாக விளங்கும்படி செய்துவைத்து அலங்கரிக்க வேண்டுமென்று ஸ்ரீ தேவீ பாகவத மஹா புராணத்தில் புகழ்ந்துரைக்கப்படுகிற பராசக்தியைப் பிரார்த் தித்துக்கொண்டு இந்த மஹா புராணத்தை பகவாஞன வேதவியா ஸர் ஆரம்பம் செய்கிருர். அதில் முதல் பாகமாக ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மிய கிரந்தமானது சொல்லப்படுகிறது.

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥

நரநாராயண அவதாரம் செய்த ஸாக்ஷாத் மஹாவிஷ்ணு வாகிற ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவையும் அர்ச்சுனஞகிய பாகவ தோத்தமனேயும் வணங்கிவிட்டு வாக்தேவதையான ஸரஸ்வதீ தேவி யின் திருவருளேப் பெறுவதற்காக அந்த பரதேவதையையும் வணங்குகிருர். அப்பால் ஸகல புராணங்களுக்கும் முக்கிய கர்த்தா வாயும் ஸர்வக்ஞராயும் மஹாவிஷ்ணு ஸ்வரூபியாயுமுள்ள வேத வியாஸரையும் வணங்கி இந்த 'தேவீ பாகவதம்' என்ற கிரந்தத்தை

சொல்லத் தொடங்கவேண்டும் என்ற நியமமானது சொல்லப்படுகிறது.

இந்த சுலோகத்தில் ஜய: என்ற பதம் இருப்பதனுல் 'ஜயதி அநேந ஸர்வம்' (जयति अनेन सर्वं) என்ற கரணே வித்பத்தி பலத்தால், ஜய: என்ற சப்தத்தால், ஸகலலோகங்களையும் ஜயிக்க சக்தியைக் கொடுக்கும் அநேக ரஹஸ்யமான மந்திரங்களால் இந்த கிரந்தமானது அலங்கரிக்கப்படும் காரணத்தால் இந்த கிரந்தத்திற்கே ஜயம் என்ற திருநாமமானது விளங்கி வருகிறது. அதனுல் ஜயத்தைச் சொல்லவேண்டும் என்பதிலிருந்தும் இந்த கிரந்தத்தைத் தொடங்கவேண்டும் என்ற தாத்பர்யம் வெளியாகிறது.

நைமிசாரண்யத்தில் ஸூதமஹாமுனிவரைப் பார்த்து சௌனகாதி மஹரிஷிகள் சொல்லுகிருர்கள் : ஸூதரே ! தாங்கள் அநேக ஆண்டுகள் வாழவேண்டும் ! தாங்கள் வியாஸ பகவானுடைய முக்ய சிஷ்யர் ; மஹாபுத்திமான் ; புண்யத்தை அளிக்கக் கூடியதாயும் மிகவும் அழகாயும் உள்ள புராணக் கதைகளை அடிக்கடி சொல்லிக்கொண்டு கேட்பவர்களுக்கு ஜன்ம ஸாபல்யத்தை யளித்து வரும் காரணத்தால் நீண்டநாள் தாங்கள் வாழ்ந்திருக்க வேண்டுமென்று நாங்கள் மனதோடு ஆசீர்வாதம் செய்கிரோம். மனிதர்களுடைய ஸகல பாபங்களையும் போக்கி மஹா புண்யத்தைத் தரக்கூடியதாயும் ஆச்சர்யகரமாயுமுள்ள விஷ்ணு கதையைத் தாங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். அதிலும், மஹாவிஷ்ணுவினுடைய லீலா அவதாரக் கதைகளை ரொம்பவும் அழகாகத் தாங்கள் சொல்ல, நாங்கள் கேட்டிருக்கிரோம். பரமேச்வரனுடைய சரித்திரத்தையும் அடிக்கடி தாங்கள் சொல்ல நாங்கள் கேட்டிருக்கிரோம். விபூதியின் மஹிமையைப் பற்றியும் ருத்ராக்ஷதாரண வைபவத்தைப் பற்றியும் சொல்லியிருக்கிறீர்கள். அப்படியிருந்தும் கேட்டது போதும் என்ற எண்ணம் எங்களுக்கு இன்னும் வரவில்லை ; மஹா புண்யத்திற்குச் சாதனமான கதாம்ருதத்தை பானம் செய்யவேண்டுமென்ற இச்சை யுள்ளவர்களாகத் தான் நாங்கள் இருந்து வருகிரோம். எந்த ரஹஸ்யமான விஷயத்தை நாங்கள் தங்கள் முகமாக சிரவணம் செய்தால் சிரமமில்லாமல் புத்தியையும், முக்தியையும் பெற்றுக் கொள்ளலாமோ அந்த அதிரஹஸ்யமான தத்துவத்தைச் சொல்லி, எங்கள் பிறவியைப்பயனுடையதாகச் செய்து வைக்க வேண்டும். இக் கலியில் தங்களுக்கு மேலான ஒரு வித்துவான் உண்டு என்று நாங்கள் எண்ணவில்லை. கலியில் பிராணிகளுக்கு ஒவ்வொரு தத்துவத்திலும் பலவிதமான சந்தேகங்கள் ஏற்படலாம். அந்த ஸந்தேகங்களை நீக்கி வைத்து, கேட்பவர்களுடைய மனத்திற்கு ஆனந்தமுண்டாக்குவதில் தங்களுக்கு நிகரான வித்துவான் இல்லை என்பதே எங்களுடைய மனப்பூர்வமான அபிப்பிராயம். ஆகையினுல் தாங்கள் கருணை கூர்ந்து தத்வோபதேசம் செய்து எங்களை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்றிவிடவேண்டு மென்று பிரார்த்தித்துக் கொள்ளுகிரோம் என்றுர்கள்.

சௌனகாதிகளுடைய வேண்டுகோளுக்கிரங்கி ஸூத மஹா முனிவர் பதில் சொல்லுகிறார் : மஹரிஷிகளே ! நீங்கள் விரும்புவது உலகத்திற்கு அரிய பெரிய நன்மையைச் செய்யக் கூடிய உயர்ந்த கேள்வியாக இருக்கிறது. சகல சாஸ்திரங்களுக்குள் அதிரஹஸ்யமான விஷயம் எதுவோ அதை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். உலகத்தில் புகழ் பெற்ற புராணங்களோ, புண்யதீர்த்தங்களோ, விரதங்களோ, மற்ற எந்த ஸத்கர்மாக்களோ ஆனாலும் அவைகளெல்லாம் ஸ்ரீ தேவீ பாகவதத்தை சிரவணம் பண்ணாதவர்களுக்குத் தான் உயர்ந்ததாகத் தோன்றுமேயன்றி தேவீ பாகவதத்தை ஒரு தடவையாவது பாராயணம் பண்ணினாலும் சரி, சிரவணம் செய்தாலும் சரி அந்த மனிதனுக்கு மற்ற எந்தப் புண்ணியங்களும் புண்ணியங்களாகவே தோன்றா. ஸ்ரீதேவீ பாகவதம் என்ற பெரிய கோடாலி கிடைக்குமாயின் பெரிய பாபங்களாகிற காடுகளை அழித்துவிடலாம். தேவீ பாகவதத்தைப் பாராயணம் செய்கிறவர்களை வியாதிகளாகிற இருள் அண்டாது. துர்வியாதிகளை மூலத்தோடு நாசம் செய்கிற விஷயத்தில் தேவீ பாகவதமானது கோடி சூரியனுக்கு நிகரான சக்தியுடையது. அது சகல சாஸ்திரங்களின் ஸாரமான பொருளாகும். புண்ய பூமியாகிய இந்த நைமிசாரண்யத்தில் உங்களைப் போன்ற மஹான்களுக்கு நான் அதை எடுத்து உரைக்கின்றேன் என்று ஸூத மஹாமுனிவர் தேவீ பாகவதத்தைச் சொல்வதாக பிரதிக்ஞை செய்தார். அதைக் கேட்ட சௌனகாதி முனிவர்களும் பரம ஸந்தோஷமடைந்து பிரதக்ஷிண நமஸ்காராதிகளால் பூஜை செய்து வியாச பீடத்தில் அந்த முனிவரை அமர்ந்தருளும்படி கேட்டுக்கொண்டு கைகூப்பியபடி ஸ்ரீ தேவீ பாகவத கதாசிரவணத்தில் தங்களுக்குள்ள அளவில் அடங்காத உற்சாகம் விளங்க அவரைப் பார்த்து, பகவானே! தேவீ பாகவதமென்ற மஹா புராணமானது எவ்விதமான மஹிமையுள்ளது ? அதை சிரவணம் பண்ண வேண்டியவர்கள் எவ்விதமான நியமத்தை அனுஷ்டிக்கவேண்டும் ? எவ்வளவு நாள் சிரவணம் செய்யவேண்டும் ? பூஜா விதிகள் எவை ? இந்த பாகவத மஹாபுராணத்தை முன்னோர்கள் யார் யார் சிரவணம் செய்து என்னென்ன மனோரதத்தை அடைந்திருக்கிறார்கள் என்று கேட்டார்கள்.

ஸூத மஹா முனிவர் பதில் சொன்னதாவது : மஹரிஷிகளே ! ஸாக்ஷாத் மஹா விஷ்ணுவே பராசரர் மூலமாக ஸத்யவதி என்ற ஸ்திரீயினிடம் வேதவியாஸராக அவதாரம் செய்தார். அந்த மஹானுபாவன் ஒன்றாக இருந்த வேதத்தை நான்கு பாகங்களாகப் பிரித்து நான்கு சிஷ்யர்கள் மூலமாக உலகத்தில் பிரசாரம் செய்வித்தார். நேரே வேதத்தை அனுஷ்டிக்க அதிகாரமில்லாத வ்ராத்ய புருஷர்களும் த்விஜபந்துக்களும், ஸ்திரீகளும் எவ்விதம் தர்மத்தின் உண்மையறிவை அடையக்கூடும் என்ற கவலையடைந்து, அவர்களும் தர்மானுஷ்டான தத்பரர்களாக வேண்டும் என்ற எண்ணத்துடன் மஹாபாரதம் என்ற

இதிஹாஸத்தையும் பதினெட்டு மஹாபுராணங்களையும் இயற்றினர். என்னை ஒரு முக்கிய மாணவனுக ஏற்றுக்கொண்டு எனக்கு அவற்றை அத்யயனம் செய்து வைத்தார். என்னைப் போல் வேதவியாஸருக்கு அநேக மாணவர்கள் உண்டு. அந்த மாணவர்கள் மூலமாக மஹா புராணங்களையும் பாரதத்தையும் ஆங்காங்கு பரவும்படி செய்தார். ஆயினும் ஸ்ரீ தேவீ பாகவதத்தை மாத்திரம் மற்றவர்கள் மூலம் பிரசாரம் செய்வியாமல் தாமே ஆங்காங்கு பிரசாரம் செய்து வந்தார். அவைகளில் பரீக்ஷித்து மஹாராஜாவின் புத்திரனை ஜனமேஜய மஹாராஜாவிடம் வியாஸ பகவான் தேவீ பாகவதத்தை பிரவசனம் செய்தது முதல் தடவையாகும். ஜனமேஜய மஹாராஜாவினுடைய தந்தையான பரீக்ஷித்து மஹாராஜாவுக்கு ஸர்ப்பம் தீண்டி மரணம் ஏற்படும் என பிராம்மண சாபம் ஏற்பட்டிருந்தது. அவ்வாறு துர்மரணத்தை யடையும் படியான துக்கம் தந்தைக்கு ஏற்பட்டு விடுமோ என்ற அச்சமுண்டானபடியால் ஜனமேஜயன், அதற்கு சாந்தி காண விரும்பி வேத வியாஸரையே வேண்டிக்கொண்டு அந்த மஹானுடைய முகாரவிந்தத்திலிருந்து தேவீ பாகவத கதாம்ருத பானம் செய்து அந்தப் புண்ணிய மஹிமையால் தன் பிதாவான பரீக்ஷித்து மஹாராஜாவை துர் மரணத்திலிருந்து விடுவித்து ஸ்ரீ தேவியினுடைய ஸாயுஜ்ய பதவியை அடைந்தார் என்ற விருத்தாந்தம் புராதனமானது. வியாஸ பகவான் ஒன்பது தினங்களில் ஜனமேஜய மஹாராஜாவுக்கு தேவீ பாகவதத்தை சிரவணம் செய்து வைத்ததாகவும் தெரிய வருகிறது. அந்த ஒன்பது தினங்களிலும் தினந்தோறும் லோகமாதாவான பராசக்தியை நவாவரண விதியை யனுஸரித்து பூஜை செய்து வரவேண்டுமென்ற நியமத்தையும் வியாஸர் அனுஷ்டிக்கச் செய்தார். ஒன்பதாவது நாள் ஸ்ரீ தேவீ பாகவத ஸமாப்தி நடந்த ஸந்தர்ப்பத்தில் ஜனமேஜயருடைய பிதாவான பரீக்ஷித்து மஹாராஜா தேவியின் ஸாயுஜ்ய பதவியை யடைந்து விமான ஆரூடராய் தம் புத்திரனை ஜனமேஜய மஹாராஜாவுக்கு தரிசனம் கொடுத்து, நீ தான் உண்மையான ஸத்புத்ரன் ; வியாஸப் பிரஸாதத்தாலும் பரதேவதையினுடைய அனுக்ரஹ விசேஷத்தாலும் தேவீ பாகவத கதா சிரவணத்தாலும் தக்ஷகன் பிராம்மண சாபத்தின்படி என்னைத் துர்மரணத்திற்காளாக்காமல் விடுவித்தாய். பிதாவை (புத் என்ற) நரகத்திலிருந்து விடுவிக்கிற காரணத்தால் புத்திரன் என்ற பெயர் ஏற்பட்டது என்ற சாஸ்திரத்தை மெய்யாகும்படி செய்தாய் ; உன் மூலமாக நான் தன்யனுனேன் என்று தன் புத்திரனை ஜனமேஜயனுக்கு ஸந்தோஷமான வார்த்தைகளைச் சொல்லிவிட்டு ரிஷிகளும் போற்றும் மஹிமையோடு ஸுதா ஸிந்துவின் நடுவில் விளங்கும் ஸ்ரீபுரம் சென்றுர். ஜனமேஜய மஹாராஜாவும் தம் தந்தைக்குக் கிடைத்த இந்த உத்தமமான பதவியை நினைத்து ஆனந்தமடைந்து ஸ்ரீ தேவீ பாகவதத்தை சிரவணம் செய்துவைத்த வியாஸ பகவானை விசேஷமாகப் பூஜித்து உபசாரம் செய்தார். ஆகையால் பதினெண் புராணங்களுக்குள்

இந்த தேவீ பாகவத புராணம் மிகவும் மேன்மையானது. கேட்கும் ஜனங்களுக்கு, தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் சிரவண மாத்திரத்தால் கால தாமதமில்லாமல் அளிக்கவல்லது. ஸ்ரீ தேவீ பாகவதத்தை பக்தியோடு சிரவணம் பண்ணுகிறவர்களுக்கு ஸமஸ்தமான ஸித்திகளும் கைகூடி வரும். ஒரு நாளாவது அல்லது அரை நாளாவது அல்லது கால் நாளாவது ஒரு முகூர்த்தமாவது ஒரு க்ஷணமாவது குடும்பத்தில் தேவீ பாகவத பாராயணம் செய்து கொண்டு வந்தாலும் அல்லது உபாஸகர்களை பாராயணம் செய்யச் சொல்லிக்கேட்டாலும் அந்தக் குடும்பத்தில் எந்தவிதமான துன்பமும் ஏற்படாது என்பது திண்ணம். ஸகலபுண்ய தீர்த்தங்களிலும் ஸமஸ்தமான யக்ஞங்களிலும் ஸகல தானங்களிலும் எந்த பலன் ஏற்படுமோ அந்த பலனானது தேவீ பாகவத கதாசிரவணத்தால் ஏற்படும் என்பதில் ஸந்தேகமே இல்லை. கிருதயுகம் முதலான காலங்களில் தர்மங்களை அனுஷ்டிக்கப்போதுமான ஸௌகர்யங்கள் இருந்து வந்தன; கலியிலோ இந்தப் புராண சிரவணத்தைத் தவிர, யாரும் எந்த தர்மத்தையும் அனுஷ்டிக்க இயலாது. அதர்மத்திற் கிடமுண்டாக்கும் இக்கலியில் அற்பாயுளோடு கூடிய மனிதர்களுக்கு தர்மத்தையனுஷ்டிக்க ஸாவகாசமேது? இதை நினைத்துத் தான் வேத வியாஸர் ஸ்ரீதேவீ பாகவதம் என்ற இந்த மஹா புராணத்தை இயற்றினரோ என்று தோன்றுகிறது. அமிருதத்தைப் பானம் செய்யின் செய்தவன் மாத்திரம் மூப்பு மரணங்களினின்றும் விடுபட்டவனுவான்; இந்த தேவீ பாகவத கதாமிருதமோ குலத்தில் உள்ள அனைவரையும் மூப்பு மரணங்களினின்றும் விடுவிக்கும். தேவீ பாகவதத்தை சிரவணம் பண்ணுவதில் இந்த மாஸத்தில் தான் சிரவணம் பண்ண வேண்டுமென்ற நியமமில்லை; இவ்வளவு நாளில் சிரவணம் பண்ண வேண்டுமென்ற நியமமுமில்லை. எந்த மாதத்திலும் எவ்வளவு நாளானாலும் மனிதர்கள் தேவீ பாகவதக் கதையை எப்பொழுதுமே சிரவணம் பண்ணிக் கொண்டிருக்கலாம். ஏதாவது பயனைக் கருதி சிரவணம் செய்தால் அந்த ஸந்தர்ப்பத்தில் சில மாதங்களைக் குறிப்பிட்டு வியாஸர் சொல்லியிருக்கிறார். அதாவது, ஐப்பசி மாதம், சித்திரை மாதம், மாசி மாதம், ஆடி மாதம் இந்த நான்கு மாதங்களை முக்கியமாகக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். அதனால் சாரதா நவராத்திரி, வஸந்த நவராத்திரி, மாகநவராத்திரி, ஆஷாட நவராத்திரி என்ற நான்கு விதமான நவராத்திரி புண்யகாலங்களில் ஒன்பது தினங்களில் நவாஹயக்ஞவிதியை அனுஸரித்து சிரவணம் செய்து வரவேண்டும். மற்ற எல்லாப் புண்ய கர்மங்களைக் காட்டிலும் தேவீபாகவத நவாஹ கர்மாவானது உத்கிருஷ்டமானது, மேலான புண்யத்தைக் கொடுக்கக்கூடியது. கபடமான மனதுடன் கூடிய பாபிகள், தன்னை நம்பினவர்களுக்கு துரோகம் செய்கிறவர்கள், காரணமில்லாமல் ஹிம்ஸை செய்வதிலேயே எண்ணமுள்ளவர்கள், நாஸ்திக மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள்,

பிறர் இடம், பொருள் ஆகியவைகளை வஞ்சகமாகக் கைப்பற்றுகிற வர்கள், பசு, அந்தணர்களிடம் பக்தி இல்லாதவர்கள், வேத தர்மத்தை நிந்திக்கிறவர்கள், ஆகிய மஹா பாபிகளும் ஸ்ரீ தேவீ பாகவத நவாஹ யக்ஞத்தால் பரிசுத்தர்களாகி ஸகல புருஷார்த் தங்களையும் அடைதற் குரியவர்களாகிறார்கள். அதி உக்ரமான தபசுகளாலும் விரதானுஷ்டானங்களாலும், தீர்த்தாடனத்தா லும், மற்ற நியமங்களாலும், அக்னிஹோத்ரம் முதலிய நியமங்க ளாலும், மஹாமந்திர ஜபஸித்திகளாலும் அடையக்கூடாத பயனை இந்த தேவீ பாகவத நவாஹ யக்ஞத்தால் அடைந்து விடலாம். கங்காதேவியோ, கயையோ, காசிக்ஷேத்திரமோ, நைமிசாரண் யமோ, மதுரையோ, புஷ்கரதீர்த்தமோ, பதரிகாச்ரமமோ அவ்வளவு சுத்தியை மனிதனுக்குக் கொடுக்கமாட்டா. தேவீ பாகவத கதாசிரவணத்தால் ஏற்படக்கூடிய புண்ணியம் அள வுக்கு உட்படாத வைபவத்தோடு கூடியது. ஆகையால் தேவீ பாகவத புராணமானது தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களைக் கொடுக்கவல்லது. ஆதலால், இது புராணங்களுக்குள் மிகச் சிறப்புடையதாகும். கன்னியா ராசியில் சூரியன் இருக்கும்பொழுது, அதாவது புரட்டாசி மாத அமாவாசை ஆன பிற்பாடு ஆச்வின சுத்தத்தில், சுக்லபக்ஷ அஷ்டமியில் ஸ்ரீ தேவீ பாகவத மஹா புராணத்தை ஸ்வர்ண ஸிம்மாஸனத்தில் வைத்துப் பூஜித்து தேவீ பாகவத ரஹஸ்யத்தை அறிந்த வித்வான்களிடம் இதைத் தானம் செய்தால் தாதாவானவன் ஸ்ரீ தேவீ ஸாயுஜ்யத்தை அடைவான். பிரதிதினமும் தேவீ பாகவ தத்தில் ஒரு சுலோகமோ, அரை சுலோகமோ, பரமபக்தியுடன் பாராயணஞ் செய்கிறவன் பரதேவதையினுடைய பிரீதிக்குப் பாத்திரமாவான்.

நிவிருத்தி செய்யமுடியாததான மஹா கோரமான வியாதிகளை யும் மஹாமாரியினுடைய பாதையையும் மற்ற உத்பாதங்களால் (அபசகுனங்களால்) நேரிடக்கூடிய ஆபத்துக்களையும் தேவீ பாகவத கதாசிரவணம் நாசம் செய்துவிடுகிறது. பாலக்ருஹம் பூதப்ரேதபயம் இவைகளும் தேவீ பாகவதக் கதையைக்கேட்ட மாத் திரத்தில் வெகுதூரத்திற்கப்பால் பயந்து ஓடிவிடும். தேவீ பாகவ தத்தை பக்தியோடு படிப்பவனோ கேட்கிறவனோ, தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்குவித புருஷார்த்தங்களையும் அடை கிறான். யதுவம்சத்தில் பிறந்த வஸுதேவர் பிரஸேனஜித்தைத் தேடிப்போன தன் புத்திரனை கிருஷ்ணன் வெகுகாலமாகத் திரும்பி வராத கவலையால் தேவீ பாகவத நவாஹ யக்ஞத்தை அனுஷ்டானம் பண்ணி உடன் திரும்பிவந்த தன் புத்திரனை கிருஷ்ணனையும் பார்த்து, கிருஷ்ணனுடன் வந்த வைபவங்களை யும் அடைந்து ஸந்தோஷப்பட்டதாக புராணக்கதைகளால் தெரிய வருகிறது. ஆகையால் நான்கு விதமான புருஷார்த்தங்களையும் அடைய அந்தரங்க ஸாதனமான ஸ்ரீ தேவீ பாகவதத்தை இக் கலியில் எல்லோரும் தினந்தோறும் பக்தியுடன் சிரவணம் செய்து

வரவேண்டும். புத்திரனில்லாதவனுக்கு புத்திரலாபம் ஏற்படும்; பரமதரித்திரனும் தனவானுகலாம்; மஹாரோகியும் ரோகத்தினின்றும் விடுபடலாம். காகவந்தையான ஸ்திரீயோ, பிறந்து பிறந்து குழந்தையை இழந்து வரும் ஸ்திரீயோ, ஸ்ரீ தேவீ பாகவதக் கதையைக் கேட்டமாத்திரத்தில் தீர்க்க ஜீவியான புத்திரலாபத்தை அடையலாம். ஸ்ரீ தேவீ பாகவத புஸ்தகமானது எந்த கிருஹத்தில் தினந்தோறும் பூஜிக்கப்பட்டு வருகிறதோ அந்த கிருஹமானது பரமபரிசுத்தமான ஸ்தலமாகிறது; அந்த கிருஹத்தில் வாசம் செய்யும் ஸகல பிராணிகளுடைய ஸகல பாபங்களையும் அது ஒழிப்பிக்கிறது. அஷ்டமியிலோ, சதுர்த்தசியிலோ, நவமியிலோ ஸ்ரீ தேவீ பாகவதக் கதையை பக்தியுடன் கேட்கிற மனிதன் மேலான ஸித்திகளைப் பெறுகிறுன்; பிராம்மணனு யிருந்தால் வேதத்தையும், வேதார்த்தத்தையும் அறிந்த வித்வான்களுக்குள் முதல்வனுகப் பூஜிக்கத்தகுந்த வித்வத் ஸார்வபௌமனு கிறுன். க்ஷத்திரியனுனல் ஸகலஸாமந்த ராஜாக்களையும் தனக் கடங்கினவர்களாகச் செய்துகொண்டு 'ஸம்ராட்' ஆகிறுன். வைசியனுனல் ஏராளமான தனத்தை அடைகிறுன். சூத்திரனு னல் தன் வம்சத்தில் உயர்ந்த கல்யாண குணங்களோடு கூடினவனுகி உலகத்தில் நிகரற்ற புகழை அடைகிறுன்.

## (2)

துவாரகா வாஸியான ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்யமந்தக மணியின் பொருட்டு பிரஸேனஜித் என்றவனைத் தேடிக்கொண்டுபோய், வெகு காலமாயும் திரும்பி வரவில்லை; அதனுல் வஸுதேவர் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது ஸ்ரீ தேவீபாகவத நவாக யக்ஞத்தை நடத்தினுர்; அதன் ஒன்பதாவது நாளாகிய கடைசி நாளில் பரமலாபங்களுடன் ஸ்ரீ கிருஷ்ணன் திரும்பி வந்தார். வஸுதேவரும் அதனுல் பரமானந்தமடைந்தார் என்று முன் அத்தியாயம் கூறுகிறது. அந்தக் கதையை எங்களுக்கு விரிவாக எடுத்துச் சொல்லவேண்டும் என்று சௌனகாதி மஹரிஷிகள் பௌராணிகரில் உத்தமரான ஸூதரைப் பார்த்துக் கேட்டார்கள். ஸூதமஹாமுனியும் சௌனகாதி மஹரிஷிகளுக்கு அந்த உபாக்யானத்தை விஸ்தாரமாகச் சொல்லுகிறுர்:

யாதவர்களுக்குள் போஜர் என்று ஒரு பிரிவுண்டு. அந்த வம்சத்தில் பிறந்த ஸத்ராஜித்து என்ற ஒரு மஹானுபாவன் சூரிய பகவானைத் தினந்தோறும் வழிபட்டுவந்தான்; அந்த வழிபாட்டால் சூரிய பகவானுடைய திருவருளையடைந்து மிகுந்த செல்வத்துடன் துவாரகையில் வாசம் பண்ணிவந்தான். இப்படியிருக்கையில் ஒரு நாள் ஸத்ராஜித்துக்கு சூரிய பகவான் காட்சி தந்து அவனைத் தம்முடைய லோகத்திற்கு அழைத்துக்கொண்டு போனுர். அங்கே மனிதர்களடைதற்கரிய பூஜைகளை அந்த பக்தனுக்குச்

செய்து வைத்து ஸ்யமந்தகமணி என்ற ஒரு ரத்னத்தையும் அளித்து அனுக்கிரஹம் செய்தார். பிறகு பக்தனைப் பார்த்து, இந்த மணியைப் பூஜாக்ருஹத்தில் பெருமை பொருந்திய ஆஸனத்தில் வைத்து, ஸ்ரீ விஷ்ணு அதிதேவதையானதினால் இந்த மணிக்குத் தினந்தோறும் விஷ்ணுஸஹஸ்ரநாம பாராயணமும், மற்றும் வைஷ்ணவபரமான ஸ்துதி பாடங்களும், புருஷஸூக்த ஜபம் முதலானவைகளும் செய்து நீ தவறாமல் ஆராதனை செய்து வரவேண்டும். அப்படி பக்தியுடன் செய்து வந்தால் இந்த ஸ்யமந்தக மணி ஒவ்வொரு தினத்திலும் எட்டு பாரத்திற்குக் குறையாத ஸ்வர்ணம் கொடுத்து உன் குடும்பத்திற்கு நன்மை பயக்கும் என்று சொல்லி அஷ்டாக்ஷரீ மஹாமந்திர உபதேசமும் செய்து அனுப்பினார். ஸத்ராஜித்தும் துவாரகைக்கு வந்து சேர்ந்து பகவான் கூறியபடியே அனுஷ்டானம் செய்து வந்தான். ஒவ்வொரு தினத்திலும் எட்டு பாரம் தங்கம் கிடைத்து வந்தபடியால் அதைக்கொண்டு துவாரகையில் அவன் பெரிய தனிகனாய் விட்டான். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா லக்ஷ்மீபதியானாலும் அவருடைய ராஜாங்கத்திலேகூட அவ்வளவு தனமில்லை என்று புகழும்படி அவனிடம் பொருள் பெருகிவிட்டது. இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் அந்த ஸத்ராஜித்தினுடைய தம்பியான பிரஸேனஜித்து என்பவன் அந்த ஸ்யமந்தக மணியைத் தங்கச் சரட்டிலே கோர்த்துத் தன் கழுத்தில் கட்டிக்கொண்டு மாலைநேரத்தில் குதிரையில் ஏறி வனத்தில் வேட்டையாடச் சென்றான். அந்த வனத்தில் ஒரு பெரிய சிங்கம் இருந்தது. அது பிரஸேனஜித்தை எதிர்த்துப் போரிட்டு அவனையும் அவன் குதிரையையும் கொன்றுவிட்டு அந்த மணியைக் கொண்டுபோய்விட்டது. அந்தக் காலத்தில் அங்கே ஒரு குகைக்குள் வாசம்பண்ணி வந்த ஜாம்பவான் என்ற ஸ்ரீராம பக்தர் இதையறிந்து சிங்கத்தைக் கொன்று ஸ்யமந்தகமணியையடைந்து அதனைத் தன் குழந்தைகளுக்கு ஒரு விளையாட்டுப் பொருளாகக் கொடுத்து வைத்தார். இவ்வாறிருக்கையில், தன்னுடைய சகோதரன் பிரஸேனஜித்து வெகுகாலமாயும் திரும்பி வராததைக் கவனித்த ஸத்ராஜித்து மிகவும் துக்கமடைந்தான்; சூரிய பகவானால் தனக்கு வெகுமானமாகக் கொடுக்கப்பட்ட ஸ்யமந்தக மணியை இழந்தது பற்றியும் வருந்தினான். இதைப்பற்றி துவாரகையில், ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். ஸ்யமந்தகமணி வந்ததுமுதல் ஸத்ராஜித்துக்கு ஏராளமான பொருள் குவிந்து விட்டது; ராஜாங்கத்தில் கூட இவ்வளவு பொருளில்லை. இதனால் கிருஷ்ணனே பிரஸேனஜித்தை ரகஸ்யமாக அனுசரித்துப்போய்க் கொன்றுவிட்டு ஸ்யமந்தகமணியை அபகரித்துக்கொண்டு வந்திருக்க வேண்டுமென்று துவாரகை ஜனங்கள் ஆங்காங்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் அபவாதத்தைச் சொல்லத் துணிந்து விட்டார்கள். ஸத்ராஜித்துக்கும் அவ்விதமே ஸந்தேஹம் ஏற்பட்டு விட்டது. இதையறிந்த பகவான் கிருஷ்ணனுக்கோ, ஜனங்கள் காரணமில்லாமல் நம்மிடத்தில் இந்த அபவாதத்தைச்

சுமத்துகிறீர்களே ! இது அபகீர்த்தி அல்லவா ? இதை நாம் மாற்றிக் கொள்வதற்கு வழியைத் தேடவேண்டும் என்று தீர்மானித்து, பிரஸேனஜித்து போன வழியை அனுசரித்து அவனைத் தேடிச் சென்று சமீபத்தில் இருந்த ஒரு உபவனத்தில் சிங்கத்தால் கொல்லப் பட்ட பிரஸேனஜித்தின் உடலையும் அவனுடைய குதிரையின் உடலையும் கண்டு, மிகவும் வருத்த மடைந்தார். பிறகு சிறிது தூரம் சிங்கத்தின் காலடியைத் தொடர்ந்து போனார். அங்கோ ரிடத்தில் ரிக்ஷராஜனை ஜாம்பவானால் கொல்லப்பட்டுக் கிடந்த அந்தச் சிங்கத்தையும் பார்த்தார். பிறகு கரடியின் காலடியைக் கவனித்துக்கொண்டு சற்று தூரம் போய் ஒரு பர்வதத்தின் குகைக்குள் அந்தக் கரடி போயிருக்கவேண்டுமெனத் தீர் மானித்துத் தம்முடன் வந்த ஜனங்களைத் தாம் திரும்பி வரும் வரையில் அந்தக் குகையின் வாயிலிலேயே இருந்து வரும்படித் திட்டம் செய்துவிட்டுக் குகைக்குள் நுழைந்தார். ஜனங் களும் பகவானுடைய கட்டளைப்படி அவ்விதமே குகையின் வாயிலிலேயே நின்றுகொண்டு அவர் வரவை எதிர்பார்த் திருந்தார்கள். குகைக்குள் பிரவேசித்த பகவான் அதனுள் ளிருந்த மற்றொரு குகைக்குள்ளும் நுழைந்தார். அங்குதான் ஜாம்பவான் தம் குடும்பத்துடன் கிருஹயக்ஞம் நடத்தி வந்த படியால் அந்த குகையின் வாயிலில் ஜாம்பவானுடைய புத்திரன், பல குழந்தைகளுடன் ஸ்யமந்தகமணியைக் கையில் வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தார். பார்த் ததும் பகவான் அந்தக் குழந்தையின் கையிலிருந்து அந்த மணியை அபகரிக்கமுயற்சி செய்தார். அப்பொழுது ஜாம்பவா னுடைய புத்திரன் தன் தாயைக் கூவிக் கூப்பிட்டுக் கதறினன். அந்தப் பெண்கரடி அலறிக்கொண்டு வந்ததைக்கண்ட ஜாம்ப வானும் வெளிப்பட்டு அட்டகாசம் செய்து, கிருஷ்ணனை எதிர்த்துத் தன் நகங்களாலும் பற்களாலும் கீறிக் கடித்து போர்புரிய ஆரம்பித்தார். கிருஷ்ணனோடு ஜாம்பவான் இரவு பகலாய் ஓயாமல் இருபத்தேழு நாள் போர்புரிந்தார். கிருஷ்ணனுக்கும் ஜாம்பவானுக்கும் நடந்த இந்த யுத்தம் மஹா பெரிய யுத்தமாய்விட்டது. குகையினுடைய வாயிலில் கிருஷ்ணனுடைய ஆக்ஞைப்படிக் காத்துக்கொண்டிருந்த துவாரகா வாசிகள் கிருஷ்ணனுடைய வரவைப் பன்னிரண்டு நாள் வரையிலும் எதிர் பார்த்தார்கள். குகைக்குள் ஒரு பெரிய போர் நடப்பதைப் போரின் ஆரவார சப்தங்களால் அறிந்து கொண்டபடியால் குகையின் வாயிலிலே நிற்பதற்கும் பயந்து துவாரகைக்கே போய் விட்டார்கள். இங்ஙனம் துவாரகைக்குச் சென்ற அவர்கள் நடந்த விருத்தாந்தங் களை யெல்லாம் ஆரம்பம் முதல் ஒன்றுகூட விடாமல் அவ்விடத்து ஜனங்களிடம் சொன்னார்கள். அதைக்கேட்ட அவர்கள் ஸத்ரா ஜித்தை நிந்திக்கத் தொடங்கினர்கள்: உன்னிடம் அந்த ஸ்ய. மந்தகமணி இருந்ததனால் அல்லவா, உன் தம்பி பிரஸேனஜித்து அதைக் கழுத்தில் அணிந்துகொண்டு குதிரையின் மீது ஏறிக்

காட்டிற்குப்போகவும், அங்கு அவனையும் குதிரையையும் சிங்கம் அடித்துக்கொல்லவும், அந்தச் சிங்கத்தை ஒரு கரடி அடித்துக் கொல்லவும் நேரிட்டது. தவிர, நீ கிருஷ்ணன்தான் பொறாமையினால் இவ்வாறு செய்துவிட்டான் என்று வெளியில் சொல்லத் தொடங்கினாய். அந்த அபவாதத்தை நிவிருத்தி செய்துகொள்ள கிருஷ்ணன் உன் தம்பிபோன வழியை அனுசரித்துப் போனார். அங்கு நடந்த ஸகல கோரமான விபத்துக்களையும் கண்டு முடிவில் ரிக்ஷராஜனை ஜாம்பவானோடு கோரமான போர் புரிகிறார். உன்னாலே லக்ஷ்மீபதியான கிருஷ்ணனுக்கும் இந்தக் கஷ்டம் ஏற்பட்டு விட்டதே என்று சொல்லி அவனைச் சபித்தார்கள். வஸுதேவரும் பிரிய புத்திரனை கிருஷ்ணனுடைய பிரிவைப் பொறுக்கமுடியாமல் பெருந்துயரத்திற்குள்ளாகி, என்ன நேரிடுமோ என அஞ்சி, எப்படி ஸம்பவிக்குமோ, ஹா கிருஷ்ணா! உன்னை நான் எப்போது பார்ப்பேன் என்று அலறியபடி கீழே விழுந்து மூர்ச்சையடைந்தார். சற்றுநேரம் கழித்து கிருஷ்ணனை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டுக் கதறினார். அந்தச்சமயத்தில் தற்செயலாய் பரம பாகவதோத்தமரான நாரத மஹரிஷி வஸுதேவரிடம் வந்து சேர்ந்தார். வஸுதேவர் தேவரிஷியே வந்திருப்பதால் பக்தியுடனும் வரவேற்று வலம் வந்து பணிந்து மகிழ்ச்சியடையச் செய்து, விதிப்படி பூஜை செய்தார். நாரத மஹரிஷி திருப்தியுடைந்து, வஸுதேவரைக் குசலப்ரச்னம் செய்து, முகம் பிரஸன்னமாக இல்லையே; உமக்குக் கவலை என்ன என்று கேட்டார். வஸுதேவர், பகவானே! ஸத்ராஜித்திற்குச் சூரியன் மூலமாக ஸ்யமந்தக மணி கிடைத்தது. அதை அவன் தம்பி பிரஸேனஜித்து தன் கழுத்தில் அணிந்துகொண்டு குதிரையின் மீதேறி ஒரு சமயம் காட்டுக்குச் சென்றான். அவனையும் அவன் குதிரையையும் ஒரு சிங்கம் கொன்று விட்டு அந்த மணியைக் கொண்டுபோய்விட்டது. அந்தச் சிங்கத்தை ஜாம்பவான் கொன்று அந்த மணியைக் கைப்பற்றிக்கொண்டு தன் குகைக்குள் நுழைந்துவிட்டார். என் புத்திரனை கிருஷ்ணனே ஸத்ராஜித்தினிடம் பொறாமைகொண்டு அவன் தம்பி பிரஸேனஜித்தைத் தொடர்ந்துபோய் அவனைக் கொன்றுவிட்டு, மணியைக் கொண்டுவந்துவிட்டதாக லோகாபவாதம் ஏற்பட்டுவிட்டது. அதை நிவிருத்தி செய்து கொள்வதின்பொருட்டு நகரவாசிகள் சிலருடன் சென்ற கிருஷ்ணன் நடந்த அனைத்தையும் தெரிந்து கொண்டு, ஜாம்பவானுடைய குகைக்குள்ளே போய் அவனுடன் பெரிய போர்செய்வதாகத் தெரியவருகிறது. கிருஷ்ணனுடன் சென்றவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். அந்த விருத்தாந்தத்தைக் கேட்டதுமுதல் என் மனம் படுகிறபாட்டைச் சொல்லி முடியாது. சிங்கத்தையே கொன்ற ஜாம்பவானோடு போர்செய்யும் கிருஷ்ணன் அவனை ஜயிப்பான் என்று எப்படிச் சொல்ல முடியும்? இவ்விதமான ஆபத்து எனக்கு நேர்ந்துவிட்டது. இதனால் மனம் துக்கத்திலாழ்ந்து தவிக்கிறது. கிருஷ்ணன் வெளியில் போய் வெகு நாட்கள்

ஆகிவிட்டன. அவன் திரும்பி வருவது பற்றியொன்றும் காதில் படவில்லை. என் மனதுக்கு உபசாந்தி ஏற்படும்படியாய்ப் புத்திரனை நான் அடைய எந்த உபாயத்தை அனுஷ்டிக்கலாமென்று சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறேன். தங்களுடைய ஸமாகமமோ பூர்வ புண்யவசத்தால் கிடைக்கக்கூடியது. பகவானே! இந்த துக்கசாந்திக்கு நான் எந்த உபாயத்தை அனுஷ்டானம் செய்ய வேண்டுமோ அதை ஆக்ஞாபிக்கும்படி பிரார்த்திக்கிறேன் என்று கேட்டுக்கொண்டார். நாரத மஹரிஷியும் வஸுதேவரின் பிரார்த்தனைக்கிணங்கி, பராசக்தியை ஆராதிக்கவேண்டும்; அம்பாளுடைய அனுக்ரஹ விசேஷத்தால் கிருஷ்ணன் ஜாம்பவானை வென்று ஸ்யமந்தகமணியுடனும் ஜாம்பவதி என்ற திவ்ய ஸ்திரீயோடும் மற்றும் பல பரம வைபவங்களோடும் அதிசீக்கிரத்தில் வந்து விடுவான்; பார்த்து நீரும் ஆனந்திக்கலாம். தேவியினுடைய ஆராதனத்தால், பிரத்தியக்ஷமாக மனிதர்கள் சிரேயஸை அடையக்கூடும். ஆகையினால், கொஞ்சமேனும் தாமதியாமல் மாச, தின, நக்ஷத்திரங்களைக் கவனியாமல் உடனே தேவியை ஆராதிக்கவேண்டும் என்று கட்டளையிட்டார். வஸுதேவர், மஹரிஷே! ஸர்வக்ஞ! தேவி என்றால் யார்? எவ்விதமான மஹிமையோடு கூடினவள்? அந்த தேவியை எப்படி ஆராதிக்கவேண்டும்? அதன் முறைகளைச் சொல்லித் தாங்களே கூட இருந்து அந்த உபாயத்தை அனுஷ்டித்துக்காட்ட வேண்டும் என்று பிரார்த்தித்தார். நாரதர், வஸுதேவருக்கு தேவியின் ஸ்வரூபத்தை உபதேசிக்கின்றார்: வஸுதேவரே! இந்தப் பதினான்கு உலகங்களிலும் பரதேவதையினுடைய மஹிமையை விஸ்தாரமாகச் சொல்லுவதற்கு ஒருவனும் ஸமர்த்தன் அல்ல என்று நிச்சயமாகச் சொல்லலாம். அந்தப் பரதேவதையோ, ஜகத்தின் உற்பத்திக்கு முன்னும், பிரளய காலத்திற்குப் பின்னும், வர்த்தமான காலத்திலும் ஆக மூன்று காலங்களிலும் ஸம்பந்தமற்ற தன்மையோடு கூடினவளாக விளங்கி வருகிறாள். மூன்று காலங்களிலும் விளங்கக்கூடிய பிரம்மம் என்பதே அந்த தேவிதான். அவள் ஸச்சிதானந்த ரூபிணி. கார்ய ப்ரபஞ்சமாகிற இந்த லோகத்தை ஆட்டிவைக்கிற மாயையைத் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருக்கும் பரதேவதை; அந்த தேவி சகல உலகங்களிலும் வியாபித்திருப்பவள். அந்த தேவியை ஆராதித்துத் தான் பிரம்மா உலகத்தைப் படைத்தார். அந்த தேவியை ஸ்தோத்திரம் செய்து தான் மதுகைடபன் என்ற அசுரனுடைய பயத்தினின்றும் பிரம்மாவும் விடுபட்டவர் ஆனார். மஹாவிஷ்ணுவும் தேவியினுடைய கிருபையால் தான் லோகத்தை ரக்ஷிக்கிறார். ருத்திரனும் தேவியினுடைய கருணைகடாக்ஷத்தால் தான் ஸம்ஹார காலத்தில் ஸர்வஜகத்தையும் ஸம்ஹரிக்கின்றார். தன்னை வழிபடாதவர்களுக்கு பவ பந்தத்தை விருத்தி பண்ணுகிறவளானாலும் தன்னை ஆராதிக்கும் பக்தர்களுக்கு உடன் முக்தியைக் கொடுக்க வல்லமையுள்ளவள் அவள். அந்தப் பரதேவதை தான் மஹாவாக்கிய ஜன்யமான

அகண்டாகார விருத்தியாகிய வித்யா தத்வஸ்வரூபிணியாக விளங்கி வருகிருள். ஈஸ்வரனுக்கெல்லாம் ஈஸ்வரியாக அவள் விளங்கி வருகிருள். அந்தப் பரதேவதையை ஒன்பது நாள் பூஜை செய்து ஸ்ரீதேவி பாகவத கதா சிரவணத்தையும் ஒன்பது நாளில் செய்தால் உடனே கிருஷ்ணன் வருவான், பார்க்கலாம். சிரவண மாத்திரத் தால் புத்ரனை அடைவீர். தேவீ பாகவத சிரவணம் செய்கிற வனுக்கு புக்தியோ, முக்தியோ கிடைப்பதரிதல்ல என்று நாரதர் சொல்ல, வசுதேவரும் தேவீ பாகவத நவாஹ யக்ஞத்தை நடத்து வது என்று தீர்மானித்தார்; நாரத மஹரிஷியையே ஆசார்ய ஸ்தானத்தில் வைத்து அதை நடத்தவேண்டுமென்ற எண்ணத் துடன் அவரைப் பார்த்து வஸுதேவர் பிரார்த்தித்துக் கொள் கிருர்:

மஹரிஷியே! தங்களுடைய தரிசனத்தாலும், தேவீபாக வதத்தின் பெருமையைக் கேட்டதினுலும் எனக்கு முன் ஸம்பவித்த ஒரு வரலாறு நினைவுக்கு வருகிறது. அதுவும் தேவியினுடைய பெருமையை வெளிப்படுத்தும் ஒரு ஸம்பவம்தான். என்னுடைய கலியாண காலத்தில் ஆகாசவாணியின் மூலமாக தேவகியினுடைய எட்டாவது கர்ப்பமாகிய கிருஷ்ணன் மூலமாகத் தனக்கு மரணம் ஏற்படப்போகிறது என்பதை அறிந்த மஹாபாபியான கம்ஸன் தேவகி என்ற என் மனைவியோடு என்னைச் சிறை செய்து, மிகவும் ஹிம்ஸை செய்தான். பிறக்கும் ஒவ்வொரு குழந்தையையும் கம்ஸன், இந்தப் புத்திரனுல் தான் தனக்கு மரணமிருக்குமோ என்று நினைத்துக் கொன்றுவிட்டான். இவ்விதம் ஆறு புத்திரர்களை யும் அந்த மஹாபாபி ஹதம் செய்தான். அதனுல், என் மனைவி சோகக்கடலில் மூழ்கி இரவும் பகலும் மிகவும் கஷ்டப்பட்டு வந்தாள். அப்போது எங்கள் குல புரோஹிதரான கர்காசார்யரை ரகஸ்யமாக அழைத்து நானும் என் மனைவியும் வணங்கி, எங்களுடைய துக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு, யது வம்சத்திற்கே தாங்கள் ஆசார்யராக விளங்கி வருகிறீர்கள். தங்களுக்குச் சகல சாஸ்திரங் களும் தெரியும். கம்ஸன் தேவகியினிடத்தில் பிறந்த ஆறு குழந்தைகளைக் கொன்றுவிட்டான். இனிமேலாவது தீர்க்கமான ஆயுளோடு புத்ரப்ராப்தி ஏற்படும்படி தாங்கள் ஏதாவது ஒரு ஸாதனத்தை அனுஷ்டானம் செய்யவேண்டும். அப்படி அனுஷ்டிக் கிற ஸாதனம் கம்ஸனுக்குத் தெரியாமல் பரம ரகசியமாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டோம். கர்காசாரியரும் எங்களுடைய பிரார்த்தனைக் கிணங்கி துர்காதேவியினுடைய தத் வத்தை உபதேசம் செய்து, பக்தர்களுடைய ஸகலதுக்கங்களையும் விலக்குகிற காரணத்தால் பரதேவதையான ராஜராஜேஸ்வரிக்கு 'துர்க்கை' என்ற பெயர் ஏற்பட்டது; அவள் தன் பக்தனுடைய குடும்பத்தில் மேலான நலன்களெல்லாம் சேரும்படி செய்துவரு கிறவள். அந்த துர்காதேவியை ஆராதனம் செய்தால் சகல சிரேயஸ்ஸையும் அடையலாம். இகத்திலும் பரத்திலும் விரும்பு கிற ஸகல விருப்பங்களையும் அடையலாம். துர்காதேவியைப்

பூஜிக்கிற மனிதர்களுக்கு உலகத்தில் ஒன்றுமே துர்லபமில்லை என்று கர்காசார்யர் சொன்னார். அதைக்கேட்ட நானும் என் மனைவியும் அவரை வணங்கி, குருநாதரே! தங்களுக்கு இந்த யது வம்சத்திலேயே மிகவும் பிரீதி உண்டு. அதிலும் எங்கள் குடும்பத்தில் பரிபூர்ணமான அனுக்ரஹத்தை எப்பொழுதும் செய்யும் ஸ்பாவமுள்ளவர்கள் அல்லவா தாங்கள்? நாங்களோ, கம்ஸனால் காராக்ருஹத்தில் அடைக்கப்பட்டு சுதந்திரம் இல்லாமல் இருந்து வருகிறோம். இந்தச்சமயத்தில் துர்கையை நாங்கள் எப்படி ஆராதிப்போம்? ஆகையால் எங்களுக்காகத் தாங்களே தங்களுடைய கிருஹத்தில் துர்க்கையைப் பூஜை செய்து எங்களுக்குப் புத்திர ஸந்ததி உண்டாகும்படி சண்டிகாதேவியினுடைய பிரஸாதத்தை வழங்கவேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டோம். கர்க மஹா முனிவர் எமது பிரார்த்தனைக்கு இணங்கி, விந்தியபர்வதம் சென்று, அநேக பிராம்மணர்களுடனிருந்து எங்களுடைய மனோரதம் நிறைவேறுவதற்காக நியமத்தோடு விந்தியாசல நிவாஸினியான பரமேஸ்வரியைப் பூஜித்தார். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் திரிசதி மஹாஸ்தோத்ர பாராயணம் ஸ்ரீ தேவீ பாகவத நவாஹயக்ஞ அநுஷ்டானம், ஸப்தசதீ பாராயணம், ஸ்ரீ நவாக்ஷரீ, ஷோடசாக்ஷரீ முதலிய மஹாமந்த்ர புரஸ்சரணை முதலியவைகளையும் செய்தார். அந்த ஆராதனையின் ஸமாப்தி தினத்தில் ஒரு அசரீரி வாக்கு ஏற்பட்டது; ஹே முனிவரே! தேவகி வஸுதேவர் என்ற திவ்ய தம்பதிகளின் மனோரதம் பூர்த்தியாகிவிட்டது. பரம நியமத்துடன் நீ என்னை ஆராதித்திருத்தபடியால் நான் பிரஸன்னமானேன். உன் மூலமாக வஸுதேவர், தேவகி இவர்கள் விஷயத்திலும் பரிபூர்ணமான அனுக்ரஹம் செய்யக் காத்திருக்கிறேன். அபராஜிதமான வைகுண்டத்திற்கு அதிபதியான மஹாவிஷ்ணு என்னுடைய பிரேரணையினால் வஸுதேவருடைய தர்மபத்தினியான தேவகியினிடம் பரிபூர்ணமாக அவதாரம் செய்யப்போகிறார்; மூட ஜனங்களுடைய திருஷ்டியை அனுஸரித்து ஒரு சிறிய சிசுவைப் போல் விளங்கிவருவார். கம்ஸனுக்கு பயந்து வஸுதேவர் இரவில் அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டுபோய் நந்தகோபருடைய கிருஹத்தில் நந்தகோபருடைய பத்தினியான யசோதையினுடைய படுக்கையில் தூங்கச்செய்து விட்டு வருவார். அதே சமயத்தில் யசோதையினிடம் பெண் குழந்தையாக அவதரிக்கும் என்னுடைய விபூதியையும் வஸுதேவர் எடுத்துக்கொண்டு மதுராபுரிக்குவந்து சிறைச்சாலையை யடைந்துவிடுவார். எட்டாவது பெண் குழந்தையாகப் பிறந்திருக்கிறதென்று கம்ஸன் அறிந்து அந்தப் பெண் குழந்தையைக் கொல்ல எண்ணி அதன் இரண்டு கால்களையும் தன் இரு கைகளாலும் பிடித்துத் தூக்கி பூமியில் உள்ள ஒரு பாறையில் துணியை அறைந்து துவைப்பதுபோல் அடிக்க யத்தனம் பண்ணுவான். அப்பொழுது அந்தப் பெண் குழந்தை கம்ஸனுடைய கையிலிருந்து திமிறிக்கொண்டு விடுபட்டு ஆகாயத்

தில் திவ்யரூபதாரிணியாகக் காட்சி தந்து மறைந்து பின் இந்த விந்திய பர்வதத்திலேயே நித்யவாஸம் செய்துகொண்டு ஸர்வ ஜகத்திற்கும் சுபத்தைச் செய்யப்போகிருள் என்று ஆகாயவாணி கூறியது. அதைக்கேட்ட கர்க முனிவர் சந்தோஷமடைந்து துர்க்கையின் ஆராதன மஹோத்ஸவத்தை ஸமாப்தி செய்து உடன் எங்களிடம் வந்து, நடந்த விசேஷங்களைச்சொல்லி, தேவியினுடைய பரிபூர்ண அனுக்ரஹத்தை எங்களுக்கு ஸம்பாதித்துக் கொடுத்தார். அதிலிருந்து அந்த ஆகாய வாக்குப்படியே எல்லாம் நடந்து வந்தது. அப்பொழுது முதலே தேவியினுடைய மஹிமை அபாரமானது என்பதை நான் அறிந்துகொண்டேன். இப்பொழுது தாங்கள் அதை ஞாபகப் படுத்தினீர்கள். கிருஷ்ணன் ஜாம்பவானை ஜயித்துத் திரும்பி வந்துசேரவேண்டும்; இந்த மனோரதம் நிறைவேறத் தாங்கள் கூறியபடி ஸ்ரீ தேவீ பாகவத நவாஹயக்ஞத்தை விதிப்படி நடத்தச் சித்தமாக இருந்து வருகிறேன். தாங்களே ஆசார்ய ஸ்தானத்தில் இருந்து ஸ்ரீ தேவீ பாகவத கதா சிரவணத்தை எங்களுக்குச் செய்து வைக்க வேண்டும். நாங்கள் செய்த பஹுஜன்ம புண்ய பரிபாகத்தால் பிரம்மபுத்திரரான தங்கள் ஆகமனமும் இந்தச்சமயத்தில் எங்களுக்குக் கிடைத்தது என்று நாரத மஹா முனிவரைப் பிரார்த்தித்தார். நாரத மஹரிஷியும் அவ்விதமே சுபமான நக்ஷத்திரத்தில் சுபதினத்தில் சுபமுஹூர்த்தத்தில் ஸ்ரீ தேவீ பாகவத கதாரம்பம் செய்தார். தேவீ பாகவதக் கதை நிர்விக்னமாக நடக்கவேண்டியதை உத்தேசித்து பிராம்மணுளைக்கொண்டு நவாக்ஷரீ மஹாமந்திர புரஸ்சரணையும் செய்யும்படி ஏற்பாடு செய்தார். மார்க்கண்டேய புராணத்தில் சொல்லப்பட்ட ஸப்தசதீ பாராயணத்தையும் தேவீ பாகவத நவாஹயக்ஞத்திற்கு அங்கமாக பிராம்மணர்களைக்கொண்டு பாராயணம் செய்யும்படி ஏற்பாடு செய்தார். தாமே ஆசார்ய பீடத்திலமர்ந்து ஸ்ரீ தேவீ பாகவதக் கதையை வஸுதேவருக்கு சிரவணம் செய்து வைத்தார். முதல் ஸ்கந்தம் முதல் விடாமல் பாகவத ஸமாப்தி பர்யந்தம் வஸுதேவரும் தேவகியம்மாளும் கதாசிரவணம் செய்து வந்தார்கள். ஒன்பதாவது தினத்தில் ஸ்ரீ தேவீ பாகவதக் கதை பூர்த்தியாகும் ஸமயத்தில் ஸ்ரீ தேவீ பாகவத புஸ்தகத்திற்குப் பூஜை செய்தார். ஸ்ரீ தேவீ பாகவத சிரவணம் செய்து வைத்த நாரத மஹாமுனிவரை வஸுதேவர் உதாரமான மனதோடு ஷோடசோபசார பூஜைகளால் திருப்தி செய்துவைத்து மஹரிஷியின் அனுக்ரஹத்தையும் பெற்றுக்கொண்டு சந்தோஷமடைந்தார். இச்சமயத்தில் ரிக்ஷராஜரான ஜாம்பவானும் அவருடைய குகையில் கிருஷ்ணபகவானுடைய முஷ்டியுத்தத்தால் அவயவங்கள் சிதைவுற்று சிரமத்தை யடைந்துவிட்டார். கிருஷ்ண பகவானுடைய முஷ்டிகள் தம்முடைய சரீரத்தில் பட்டபோது ஜாம்பவான் ஸ்ரீ ராகவனுடைய முஷ்டியெனவே உணர்ந்தார். ஸ்ரீ ராகவன்தான் இந்த ரூபமாக விளங்குகிருர் என்றும் தீர்மானித்து வலம் வந்து வணங்கி, ஸ்வாமி! கோபத்தால் கடலை

வற்றச்செய்த மஹானுபாவராகிய ஸ்ரீ ரகுபதியல்லவா தாங்கள்? ராவணனை அவன் உறவினருடன் வதம் செய்தவரல்லவா? திரேதாயுகத்தில் அபூர்வமான இந்தப் பராக்ரமங்களை வெளியிட்ட ஸ்ரீ ராமன்தான் தாங்கள் என்று நான் தீர்மானிக்கிறேன். நான் ஜாம்பவான். தங்கள் ஸேவகன் அல்லவா நான்? தங்கள் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் அபராதம் செய்துவிட்டேன். பொறுத்துக் கொள்ளவேண்டும். நான் தங்கள் ஏவலாள். என்ன செய்ய வேண்டுமோ, அதைக் கட்டளையிடவேண்டும் என்று ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களில் விழுந்து கதறினர். பகவான் ஜாம்பவானுடைய வாக்கியங்களைக் கேட்டு சந்தோஷமடைந்து, ஸ்யமந்தகமணி காரணமாக உன்னுடைய குகைக்கு நான் வந்தேன். அந்த மணி துவாரகாவாஸியான ஸத்ராஜித்தினுடையது. அதை அவனிடத்தில் சேர்ப்பிக்கவேண்டும். அதை என்னிடம் கொடு என்று கேட்டார். ஜாம்பவான் இதைக் கேட்டதும் பரம ப்ரீதியோடு பகவானை வணங்கி, தாம் ஸ்வயம் பிரம்மாவானதினால் தம் சிருஷ்டியில் நிகரற்ற ஸௌந்தர்யத்தோடு சிருஷ்டிக்கப்பட்டு தன்னுடைய கிருஹத்திலேயே வளர்ந்து ஜாம்பவதி என்ற காரணப் பெயரோடு கூடின கன்னிகையை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு விவாக விதியை அனுஸரித்துக் கலியாணம் செய்து கொடுத்து ஸ்யமந்தகமணியையும் அவரிடம் அர்ப்பணம் செய்தார். பகவான் ஜாம்பவதி என்ற கன்னிகையையும், ஸ்யமந்தக மணியையும் அடைந்து ரிக்ஷராஜரான ஜாம்பவானுக்குப் பரிபூர்ணமாக அனுக்ரஹம் செய்து அவரிடம் விடைபெற்றுப் புறப்பட்டுத் துவாரகைக்குப் பிரயாணமானர்.

துவாரகையில் அந்தச் சமயத்தில் நாரத மஹரிஷியினால் சொல்லப்பட்டு வந்த ஸ்ரீ தேவீ பாகவதக் கதை ஸமாப்தியடைந்தது. அன்று பிராம்மணோத்தமர்களுக்கு வஸுதேவர் போஜனஞ் செய்து வைத்து, தக்ஷிணை தாம்பூலங்களை வழங்கினர். இதே ஸந்தர்ப்பத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் ஜாம்பவதி என்ற பெண்ணுடன் கழுத்தில் ஸ்யமந்தக மணியை அணிந்துகொண்டு பரம ஸந்தோஷத்துடன் தனது கிருகத்திற்கு வந்துசேர்ந்தார். தேவகியும் வஸுதேவரும் ஸ்ரீ கிருஷ்ணன் வந்துசேர்ந்ததைக் கண்டு தங்கள் உறவினருடன் ஆனந்தத்தை அடைந்தார்கள். துவாரகா வாஸிகள் ஆனந்த பாஷ்பத்தைப் பெருகச் செய்து கொண்டு ஸ்ரீ தேவீ பாகவத நவாஹக் கதையினுடைய பெருமையையும் புகழ்ந்து சந்தோஷமடைந்தார்கள். பரதேவதையினுடைய திருவருளால் ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்யமந்தக மணியுடனும் ஜாம்பவதி என்ற பெண்மணியுடனும் வந்தது தேவியினுடைய பிரஸாதமே என்று ஆங்காங்கு புகழ்ந்து கொண்டாடினர்கள்; ஸ்ரீ தேவீ பாகவதத்தைச் சொன்ன நாரத மஹரிஷியின் பாதங்களில் பலமுறை வணங்கி உற்சாகமடைந்தார்கள். தேவரிஷியான நாரதரும் கிருஷ்ணனுடைய ஆகமனத்தால் பரம ஸந்தோஷமடைந்து வஸுதேவரிடத்தில், நான் போய்வருகிறேன் என்று விடைபெற்றுக்

கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனிடமும் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லிவிட்டுப் பிரம்மலோகஞ் சென்றார் :

हरि चरितमिदंयत्कीर्तितं दुर्यशोघ्नं
पठति विमल भक्त्या शुद्धचित्त: शृणोति ।
सभवति सुखपूर्ण: सर्वदा सिद्धि कामो
जगतिचवपुषोन्ते मुक्तिमार्गं लभेच्च ॥

(3)

சௌனகர் முதலான மஹரிஷிகளுக்கு ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மியத்திலுள்ள மற்றொரு இதிஹாஸத்தைப் பௌராணி கோத்தமரான ஸூத மஹாமுனிவர் சொல்லுகிறார் :—

ஏ மஹரிஷிகளே ! இப்பொழுது நான் சொல்லப் போகும் இதிஹாஸத்தைத் தாங்கள் கேட்பீர்களானால் நீங்கள் எப்பொழுதும் ஸ்ரீ தேவீ பாகவதத்தையே சரணமடைந்து அம்பாளைப் பூஜித்து வருவீர்கள். ஆகையால் சொல்லப்போகிற இதிஹாஸத்தை ஸாவ தானமான மனதோடு கேட்கவேண்டும்.

ஒரு ஸமயத்தில் ஸ்ரீ தேவியினுடைய பக்தகோடிகளுக்குள் முதன்மையாகக் குறிப்பிடக்கூடிய மஹா பதிவிரதையான லோபா முத்திரை என்ற உத்தம ஸ்திரீயினுடைய பர்த்தாவான அகஸ்திய மஹரிஷியானவர், மஹா கைலாஸத்தில் சிவதீர்த்தம் என்ற புண்ய தீர்த்தத்தின் கரையில் அமர்ந்து ஸ்வரூபாநுஸந்தானம் செய்து வருகிற ஸுப்ரம்மண்ய ஸ்வாமியைப் போய்ப் பார்த்து பிரதக்ஷிண நமஸ்காராதிகளால் அவரைப் பூஜித்தார். ஷண் முகன் அவருக்கு ரஹஸ்யமான புண்யக் கதைகளை உபதேசித் தார் ; அகஸ்தியர் மிகவும் சிரத்தையுடன் சிரவணம் செய்து வந்தார். தானத்தின் மஹிமை, புண்ய தீர்த்தத்தின் மஹத்வம் விரதாதிகளுடைய பெருமை இவைகளை விரிவாகச் சொல்லி ஸுப்ரம்மண்ய ஸ்வாமி அகஸ்தியருக்கு ஸந்தோஷமுண்டாக்கினார். வாராணஸீ என்ற காசி க்ஷேத்திரத்தின் மஹிமையையும் கங்கா தேவியின் மகிமையையும் விரிவாகச் சொன்னார். மணிகர்ணிகை யின் பெருமையை மிக ரஹஸ்யமாக அகஸ்தியருக்கு உபதேசித்தார். அகஸ்தியர் ஷண்முகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியவைகளை யெல்லாம் ஆதரவோடு கேட்டு மகிழ்ந்து மறுபடியும் லோக க்ஷேமார்த்தமான அந்தரங்க உபாயங்களை அவரிடம் தெரிந்து கொள்ள விரும்பி பக்தியுடன் கேட்கிறார்: சிங்கமுகன், தாரகா சுரன், சூரபத்மன் இம்மூன்று அசுரர்களையும் வதஞ்செய்து லோகத்திற்கு க்ஷேமமுண்டாக்கிய பிரபுவே! ஸ்ரீ தேவீ பாகவதத் தின் மாஹாத்மியத்தையும் அதை சிரவணம் செய்வதற்குரிய விதிகளையும் எனக்கு விரிவாகச் சொல்லவேண்டும். ஸ்ரீ தேவீ பாக

வதம் என்ற புராணமோ ஏனைய புராணங்களை விடச் சிறந்தது. மூன்று லோகத்திற்கும் மாதாவான ஜகதீச்வரியைப் பற்றி அந்தப் புராணம் விஸ்தாரமாக வர்ணிக்கிறது. ஸர்வலோக ஜனனியான தாயாரை உண்மையாக பக்திசெய்ய வேண்டுமென்று எண்ணுகிற மனிதன் ஸ்ரீ தேவீ பாகவதத்தை சிரவணம் பண்ணமலிருக்க முடியாது. ஆகையால் அந்த மஹா புராணத்தின் மாஹாத்மியத்தை எனக்குச் சொல்லவேண்டும் என்று கேட்டார்.

பகவான் சொல்லுகிருர் :—மஹரிஷே! ஸ்ரீ தேவீ பாகவதத்தின் மஹிமையை விரிவாக யாரால் சொல்லமுடியும் ? சுருக்கமாகச் சொல்லுகிறேன், சிரத்தையுடன் கேட்க வேண்டும். ஸ்ரீ தேவி யானவள் உற்பத்தி விநாசம் அற்ற நித்யஸ்வரூபி. ஸச்சிதானந்த ரூபிணியாகிய அந்த தேவியை ஸர்வ ஜகத்திற்கும் மூலதேவதை யாக உபாஸிக்க வேண்டும். அவள் தன்னை ஆச்ரயித்த பக்தனுக்கு புக்தி முக்தியைக் கொடுக்கக்கூடியவள். அவளுடைய பெருமையைச் சொல்லும் ஸ்ரீ தேவீ பாகவதத்தை பரதேவதையினுடைய வாங்மய மான மூர்த்தியென்றே சொல்லவேண்டும். தினந்தோறும் அதை சிரத்தையாகப் படிக்கிறவனுக்கோ, கேட்கிறவனுக்கோ உலகத்தில் ஒன்றுமே துர்லபமாகாது. விவஸ்வான் என்ற சூரிய பக வானுக்கு சிராத்த தேவன் என்ற ஒரு புத்திரனுண்டு. அந்த மஹானுபாவனைத்தான் வைவஸ்வதமனு வென்று பௌராணிகர் கள் சொல்லுவார்கள். அந்த மனுவுக்கு வெகுகாலம் வரையில் புத்ரபாவம் இல்லாமலிருந்தது. வசிஷ்டருடைய ஆக்ஞையின் பேரில் அவன் புத்திரகாமேஷ்டி யாகத்தை விமரிசையாகச் செய் தான். அந்த யாக காலத்தில் சிராத்த தேவன் என்ற வைவஸ்வத மனுவாகிய யஜமானனுடைய தர்மபத்தினியான சிரத்தா தேவி என்பவள், ஹோதா என்ற ரித்விக்கினிடம், பிரம்மன்! இந்த யாகத்தால் கன்னிகை ஏற்பட வேண்டுமென்ற ஆசை இருந்து வருகிறது. அது எப்படி ஸம்பவிக்கக் கூடுமோ, அவ்விதமான உபாயத்தை தாங்கள் தேடவேண்டும். தேவதைகளை ஆஹ்வானம் செய்கிற காரியம் தங்களைச் சேர்ந்தது. ஆனதினுல் வருகிற அந்தந்த தேவதைகள் பிரத்யக்ஷமாகத் தங்களுக்குப் புலப்படக்கூடும். அந்த தேவதைகளிடம் யஜமான பத்தினிக்கு புத்திரியை அடைய வேண்டுமென்ற ஆவல் இருப்பதாகத் தெரிவித்து அவ்விதமே அத்வர்யு மூலமாகவும் அதற்குள்ள புரோடாசாதிகளை ஹோமம் பண்ணச் சொல்லி அந்த தேவதையைத் திருப்தி செய்து வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள்.

யஜமானனுடைய பத்தினியின் இஷ்டம்போலவே ஹோதா வானவர் அந்தப் புத்திரகாமேஷ்டி யாகத்தை அத்வர்யுவினுடைய ஸஹாயத்தால் அனுஷ்டிக்கலானூர். யாக ஸமாப்தியில் யஜமான பத்தினியினுடைய இஷ்டம்போல் அக்னி பகவான் திவ்ய புத்திரியை ஜ்வலிக்கிற அக்னியிலிருந்து தோன்றச் செய்து கொடுத்து ஸந்தோஷமுண்டாக செய்துவிட்டு அந்தர்பாவத்தை யடைந்தார். அந்தப் பெண்ணுக்கு அக்னி பகவானலேயே இளா என்று

நாமகரணமும் செய்விக்கப் பட்டது. நாம் புத்திரனைக் குறித்து யாகம் செய்தோம்; பெண்ணாகப் பிறந்து விட்டதே யென்று வருத்த முற்ற யஜமானனாகிய மஹாராஜா வசிஷ்ட பகவானைப் பார்த்து, மகரிஷே! யாகத்தில் என்ன அபராதம் நேர்ந்து விட்டதோ தெரிய வில்லை; புத்திரகாமேஷ்டி யாக மல்லவா நாம் செய்தோம்? புத்திரி யாக ஏற்பட்டுவிட்டதே! இதற்கு ரித்விக்குகளுடைய குற்றம்தான் காரணமாக இருக்கவேண்டும். நான் ஒருவிதமான குற்றமும் செய்ய வில்லை. இனிமேல் நாம் என்ன செய்கிறது என்று கூறி வருத்தப் பட்டார். வசிஷ்ட பகவான், வருத்தப்பட வேண்டாம் என்று சொல்லி, சிரத்தா தேவியினுடைய அபிப்பிராயப்படி ஹோதா நடந்துகொண்டதைத் தெரிவித்து அதை மாற்றிவிடலாமென்ற தைரியத்துடன் வைவஸ்வத மனுவைப் பார்த்து புத்திரகாமேஷ்டி யாகத்தில் தோன்றிய பெண் குழந்தை ஆண் குழந்தையாக வேண்டுமென்ற விருப்பத்துடன் காமேச்வரனை பஞ்சாக்ஷரீ என்ற மஹா மந்திரத்தால் பூஜித்து வந்தால், அவருடைய அனுக்ரஹ விசேஷத்தால் பெண் ஆணாய்விடும் என்று சொன்னார்.

சிராத்ததேவனும் அவ்விதமே காமேச்வரனை வழிபட்டார். பரமேச்வரியினுடைய திருவருளாலும் வசிஷ்ட முனியினுடைய தபோ மஹிமையினாலும் ஸர்வஜனங்களும் பார்த்துக்கொண் டிருக்கும் பொழுதே அந்தப் பெண் ஆண் குழந்தையாக மாறி விட்டது. புத்திரகாமேஷ்டி யாகம் நடந்த யக்ஞ சாலையிலேயே இந்த ஆச்சரியம் நடைபெற்றது. அந்த புமானுக்கு ஸுத்யும்னன் என்று வசிஷ்ட பகவான் நாமகரணம் செய்து ஜாதகர்மா முதலிய ஸம்ஸ்காரங்களை விதிவத்தாகச் செய்து வைத்தார். காலக்கிரமத் தில் அந்த ஸுத்யும்னன் என்ற சிராத்த தேவனுடைய புத்திரனும் மஹா வித்வானானான். அவனுக்கு யௌவன வயது வந்தது. அப்போது அவன் வேட்டை யாடுவதற் காகக் குதிரையின்மேல் ஏறிக்கொண்டு தினந்தோறும் காடுகளில் வேட்டையாடும் வழக்கத்தை மேற்கொண்டான். அப்படி யிருக்கையில் ஒரு நாள் மஹா மேருவினுடைய அடி வாரத்திலுள்ள தாருகா வனத்தில் வேட்டையாடச் சென்றான். அந்த வனத்தில் பரமேச்வரன் பார்வதியோடு ஏகாந்தமாக இருந்துவந்தார். அநேக மஹரிஷிகள் சிவதரிசனத்திற்காக அங்கு வந்து சேர்ந்தார்கள். பார்வதியானவள் அப்பொழுது மிகவும் வெட்கமுற்றாள். மஹரிஷிகள், இந்த ஸமயத்தில் நாம் வந்தது தவறு என்று நினைத்துத் திரும்பிச் சென்றனர். பரமேச்வரன் தம்முடைய தேவியான பார்வதி தேவிக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி இதுமுதல் எந்த ஆடவன் இந்த அரண்யத்திற்குள் வருகிறானோ அவன் ஸ்திரீயாகக்கடவது என்று அந்த உத் யானவனத்திற்குச் சாபந் தந்தார். இதையறிந்த ஒரு ஆடவ னும் அந்த அரண்யத்திற்குள் போவது கிடையாது. ஸுத் யும்னனுக்கோ இந்த விஷயம் தெரியாது. ஆகையினால் தாருகாவனத்தில் பிரவேசித்த மாத்திரத்தில் அவன் ஸ்திரீயாகி

விட்டான். அவனை அநுஸரித்துப் போன படர்களும் ஸ்திரீகளா கிவிட்டார்கள். ஸுத்யும்னன் ஏறிக்கொண்டுபோன குதிரையும் பெண்குதிரையாகிவிட்டது. இவற்றைப் பார்த்து ஸுத்யும்னன் பரம ஆச்சரியமடைந்தான். பிறகு ராஜ்யத்திற்குள்ளே போவ தற்கு வெட்கப்பட்டு ஒவ்வொரு காடாக சஞ்சரித்துக்கொண்டு வந்தான். அப்படியிருக்கையில் ஒரு சமயம் சந்திரனுடைய புத்திர னை புதனுக்கு இந்தப் பெண்ணிடத்தில் மோஹம் ஏற்பட்டபடி யால், பிறகு விவாக சம்பந்தமும் ஏற்பட்டது. அப்பால் அவர்கள் அந்த அரண்யத்திலேயே ஒரு ஆசிரமம் ஏற்படுத்திக்கொண்டு சுக மாக இருந்தார்கள். புதனுக்கும் இந்தப் பெண்ணிடத்தில் புரூரவன் என்ற ஒரு புத்திரன் பிறந்தான். இப்படி இருக்கையில் வெகு காலங் கழிந்தபின் ஸுத்யும்னனுக்குத்தான் ஆண்பிள்ளை, தாருகா வனத்தில் பிரவேசித்ததினுல் ஸ்திரீயாய் விட்டோம் என்பது நினைவுக்கு வந்தது. அதனுல் துக்கமடைந்து புதனுடைய ஆச்சிரமத்தினின்று வெளிப்பட்டு பரமகுருவான வசிஷ்ட ருடைய ஸந்நிதிக்குச் சென்று அவரை வலம் வந்து வணங்கித் தன்னுடைய விருத்தாந்தங்களைத் தெரிவித்துக் கொண்டான். வசிஷ்டரும் ஸமாதியினுல் நடந்த ஸகல விஷயங்களையும் அறிந்து கொண்டபடியால் பரமேச்வரனுடைய சாபத்தால் ஸ்திரீயாக இருக் கும் ஸுத்யும்னனைப் பார்த்து, நீ மஹா கைலாசம் போய் முன் போலவே நான் ஆண்பிள்ளையாக ஆகவேண்டுமென்று விருப்பத் துடன் பரமசிவனை ஸ்துதித்து வா என்று கூறி—

नमोनमः शिवायास्तु शंकराय कपर्दिने ।
गिरिजार्द्धाङ्ग देहाय नमस्ते चन्द्रमौलये ॥
मृडाय सुखदात्रेते नमः कैलास वासिने ।
नीलकण्ठाय भक्तानां भुक्ति मुक्ति प्रदायिने ॥
शिवाय शिवरूपाय प्रपन्न भय हारिणे ।
नमो वृषभ वाहाय शरण्याय परात्मने ॥
बृह्म विष्णवीश रूपाय सर्गस्थिति लयेषुच ।
नमो देवाधि देवाय वरदाय पुरारये ।
यज्ञ रूपाय यजतां फलदात्रे नमो नमः ।
गंगाधराय सूर्येन्दु शिखि नेत्राय ते नमः ॥

நமோநம: ஶிவாயஸ்து ஶங்கராய கபர்தினே
கிரிஜார்தாங்க தேஹாய நமஸ்தே சந்த்ரமௌலயே
ம்ருடாய ஸுகதாத்ரேதே நம: கைலாஸவாஸினே
நீலகண்டாய பக்தானும் புக்திமுக்தி ப்ரதாயினே
ஶிவாய ஶிவரூபாய ப்ரபன்ன பய ஹாரிணே

நமோ வ்ருஷப வாஹாய ஶரண்யாய பராத்மனே
பிரம்ஹ விஷ்ண்வீஶ ரூபாய ஸர்கஸ்திதி லயேஷுச
நமோ தேவாதி தேவாய வரதாய புராரயே
யக்ஞ ரூபாய யஜதாம் பலதாத்ரே நமோநம:
கங்காதராய ஸூர்யேந்து ஶிகி நேத்ராயதே நம:

என்ற ஸ்தோத்திரத்தையும் ஸுத்யும்னனுக்கு வசிஷ்ட பகவானே உபதேசம் செய்து, இந்த ஸ்தோத்திரத்தால் பகவானைத் துதித்து வந்தால் பரமசிவன் பிரஸன்னமாய் உன்னை ஆடவனாகச் செய்து விடுவார் என்று சொல்லி அவனைக் கைலாஸத்துக்கு அனுப்பினார்; தானும் அவனுடன் கைலாஸம் சென்றார். ஸுத்யும்னனும் கைலாஸம் சென்று வசிஷ்டபகவான் உபதேசித்தபடி பரமேஶ்வரனைத் துதித்தான். பரமேஶ்வரன் சந்தோஷமடைந்து ஸுத்யும்னனுக்குத் தரிசனம் கொடுத்து, என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். ஸுத்யும்னன், நான் சிராத்ததேவனுடைய புத்திரனாக இருந்தவன். தாருகாவனத்தில் அறியாமல் பிரவேசம் செய்ததினால் இந்த ஸ்திரீ ரூபம் வந்துவிட்டது; அபராதத்தை மன்னித்து, முன் போலவே நான் ஆடவனாக அருள்புரியவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டான். பரமசிவன், நீ ஒருமாதம் ஆடவனாகவும் ஒருமாதம் பெண்ணாகவும் இருந்து வருவாய் என்று வரங்கொடுத்து அந்தர்தானம் அடைந்தார். அதே சந்தர்ப்பத்தில் ஜகதம்பிகையும் ஸுத்யும்னனுடைய கண்ணுக்குப் புலப்பட்டாள். ஸுத்யும்னன் தேவியையும் ஆராதனை செய்து துதிக்கலானான் :

जय देवि महादेवि भक्तानुग्रह कारिणी ।
जय सर्व सुराराध्ये जयानन्त गुणालये ॥
नमो नमस्ते देवेशि शरणागत वत्सले ।
जय दुर्गे दु:ख हंत्रि दुष्ट दैत्य निषूदिनि ॥
भक्ति गम्ये महामाये नमस्ते जगदम्बिके ।
संसार सागरोत्तार पोतीभूत पदांबुजे ॥
ब्रह्मादयोपि विबुधा: त्वत्पादांबुज सेवया ।
विश्व सर्ग स्थिति लय प्रभुत्वं समवाप्नुयु: ॥
प्रसन्ना भवदेवेशि चतुर्वर्ग प्रदायिनि ।
कस्त्वां स्तोतुं क्षमो देवि केवलं प्रणतोस्म्यहम् ॥

ஜயதேவி மஹாதேவி பக்தானுக்ரஹ காரிணி
ஜயஸர்வ,ஸுராராத்யே ஜயாநந்த குணாலயே
நமோ நமஸ்தே தேவேஶி ஶரணாகத வத்ஸலே

ஜய துர்கே துக்க ஹந்த்ரி துஷ்டதைத்ய நிஷூதினி
பக்தி கம்யே மஹா மாயே நமஸ்தே ஜகதம்பிகே
ஸம்ஸார ஸாகரோத்தார போதீ பூத பதாம்புஜே
பிரம்மாதயோபி விபுதா: த்வத் பாதாம்புஜ ஸேவயா
விஶ்வஸர்க ஸ்திதிலய ப்ரபுத்வம் ஸமவாப்நுயு:
பிரஸன்னபவ தேவேஶி சதுர்வர்க ப்ரதாயினி
கஸ்த்வாம் ஸ்தோதும் க்ஷமோ தேவீ கேவலம் பிரணதோஸ்ம்யஹம்

இவ்வாறு துதித்ததும், ஜகதீஶ்வரியானவள் ஸுத்யும்னனுடன் வந்து தன்னை ஸ்தோத்திரம் பண்ணின வசிஷ்டபகவானைப் பார்த்து, ஸுத்யும்னனை அழைத்துக்கொண்டு ராஜகிருஹம் சென்று ஸ்ரீ தேவீ பாகவத நவாஹ யக்ஞத்தை நடத்திவைத்து இவனுக்கு அந்த கிரந்த சிரவணம் செய்துவைத்தால் இவன் எப்பொழுதுமே ஆடவனாக இருக்கும் நல்ல பாக்யத்தையடைவான் என்று வரமளித்தாள். பிறகு பார்வதியும் பரமேஶ்வரனும் அந்தர்த்தானமாய்விட்டார்கள். அப்பால், வசிஷ்டபகவான் ஸுத்யும்னனை அழைத்துச் சென்று தானே ஆசார்யஸ்தானத்தில் இருந்து, ஒன்பது நாளில் ஸ்ரீ தேவீ பாகவதத்தைப் பாராயாணஞ் செய்து கதா சிரவணமும் செய்துவைத்தார். அம்பாளுடைய அநுக்ரஹத்தால் ஸுத்யும்னன் நிரந்தரமாகவே ஆடவனாகிவிட்டான். வசிஷ்ட பகவான் அவனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்துவைத்து, பூமண்டலம் முழுவதையும் ஆளும்படி அநுக்ரஹம் செய்தார். அவன் வெகு காலம் ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டு ஸ்ரீ தேவியினுடைய ஆராதனத்தில் பரமபக்தியுடன் ஈடுபட்டவனாயிருந்து அம்பாளுடைய அநுக்ரஹத்தால் ஸாயுஜ்ய பதவியை அடைந்தான் என்று ஸ்கந்தபகவான் மூலமாக ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மியத்தை அகஸ்திய மஹாமுனிவர் அறிந்துகொண்டார்.

## (4)

இவ்விதம் ஸ்கந்த பகவான் திருவாய்மலர்ந்தருளிய இந்த இதிஹாஸத்தை அகஸ்திய மஹாமுனிவர் கேட்டு பரம ஸந்தோஷமடைந்து, பிரபுவே! ஸ்ரீ தேவீ பாகவத மாஹாத்மியத்தை அவலம்பித்த மற்றும் ஏதாவது இதிஹாஸ விசேஷமிருந்தால் அதையும் திருவாய் மலர்ந்தருளி எனக்குச் சந்தோஷமுண்டாக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார். ஸ்கந்தமூர்த்தி, நல்லது, ஸ்ரீ தேவீ பாகவதத்தினுடைய மஹிமைகளில் ஏதோ ஒரு ஏகதேச பாகத்தைத் தான் சொல்லக்கூடும். முழுமையும் யாவராலும் வர்ணிக்க முடியாது. தேவீ பாகவதத்தில் விளக்கப்பட்டுள்ள தர்மங்கள் எல்லைக்கு உட்படாத அளவினையுடையவை காயத்திரியினுடைய மஹிமையைப் பற்றி தேவீ பாகவதத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்

பட்டிருக்கிறது. காயத்திரி தேவதைக்கு பகவதி என்ற பெயர் சாஸ்திரங்களில் பிரஸித்தமானது. அவ்வாறு பகவதி என்ற பெயரோடுகூடின காயத்திரி தேவியினுடைய மஹிமையானது இந்தப் புராணத்தில் விளக்கப்படுகிற காரணத்தைக் கொண்டுதான் இதற்கு பாகவதம் என்ற பெயரே ஏற்பட்டுள்ளது. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளாலும் ஆராதிக்கப்படுகிற தேவதையான பராசக்தியே இந்த ஸ்ரீ தேவீ பாகவதத்தில் பிரதிபாதிக்கப்படுகிற முக்கிய தேவதையாகும். 'ரிதவாக்' என்ற ஒரு மஹரிஷி மிகவும் பிரஸித்த மஹிமை பெற்றவராக இருந்து வந்தார். அந்த மஹாநுபாவருக்கு ஒரு புத்திரனுண்டானன். ஆனல் அந்தப் புத்திரன் பிறந்த ஸமயத்தை ஜோதிஷ சாஸ்திரத்தில் கண்டாந்தம் என்று சொல்லுவார்கள். அதாவது பூஷா என்ற தேவதையோடு கூடின நக்ஷத்திரத்திற்கு பௌஷ்ண்யம் என்றுபெயர். ரேவதி என்று சொல்லப்படுகிற நக்ஷத்திரமே அந்த நக்ஷத்திரமாகும். அதனுடைய நாலாவது பாதத்திற்குக் கண்டாந்தம் என்று கணித சாஸ்திரத்தில் பயிற்சியுள்ள வித்வான்கள் சொல்லுவார்கள். அந்தக் காலமானது அவ்வளவு விசேஷமாக சாஸ்திரத்தில் சொல்லப்படவில்லை. ஆயினும், புத்திரனுடைய ஆவிர்ப்பாவம் ஏற்பட்டது என்ற சந்தோஷத்தால் அந்த மஹரிஷி அந்தப் புத்திரனுக்கு ஜாதகர்மா நாமகரணம் முதலான ஸம்ஸ்காரங்களை மிகவும் விதிவத்தாகச் செய்துவைத்தார். சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்களும் ஒழுங்காக நடந்தன. ஆயினும் அந்தப் புத்திரன் ஜனித்த காலதோஷத்தால் ரிதவாக் என்ற மஹரிஷியானவர் கொஞ்சமேனும் மனச் சந்துஷ்டி இல்லாமல் பல விதமான மனோவியாதிகளாலும், சரீர ரோகங்களாலும் மிகவும் கஷ்டப்பட்டுவந்தார். அந்தப் புத்திரனுக்குத் தாயான ரிதவாக் மஹரிஷியின் தர்மபத்தினியும் அவ்விதமே துக்கங்களாலும் ரோகங்களாலும் பீடிக்கப்பட்டுச் சிறிதும் சுகமில்லாதவளாயிருந்தாள். பிறந்த புத்திரனே சிறிதும் ஆசாரத்தில் சிரத்தையில்லாமல் மூர்க்கனயிருந்து வந்தான். மஹரிஷிகளுடைய தர்மபத்தினிகளையும், யௌவனகாலம் பார்த்துக் கன்னிகைகளையும் பலாத்காரமாகக் கெடுத்துவந்தான்; பரம நாஸ்திகனக இருந்தான். தாய் தந்தையர் எவ்வளவோ விதத்தில் கண்டனம் தண்டனைசெய்து வந்ததுமல்லாமல் நல்லவழிகளிலும் திருப்பப் பார்த்தார்கள். அவைகளை அவன் லக்ஷியமே செய்யவில்லை. அதுகண்ட மஹரிஷயும் எந்தவிதமான பாபகர்மங்களை ஜன்மாந்தரத்தில் செய்தோமோ, அவைகளின் பலன் இவ்விதமாக நேர்ந்திருக்கிறது; இதுபோல் மூர்க்கனை புத்திரன் பிறப்பதைக் காட்டிலும் புத்திரனே இல்லாமலிருப்பது மிகவும் மேலானது. ஒழுங்கீனமுடைய புதல்வன் ஸ்வர்க்கலோகத்தில் இருக்கும் பிதிருக்களைக்கூட நரகத்தில் தள்ளிவிடுவான். அவன் பிறந்து ஜீவிக்கிறவரையிலும் தாய்தந்தையர்களுக்குக் கஷ்டந்தான். அந்தத் தாய்தந்தையர்களின் ஜன்மாவைச் சுடத்தான்வேணும். அவனுடைய உறவால் பந்து ஜனங்களுக்கு

ஸந்தோஷமும் இராது; சத்துருக்களுக்குத் தாபமும் இராது. முன் ஜன்மாக்களில் அளவிடமுடியாத ஸுகிருத விசேஷங்களைச் செய்தவர்களுக்குத்தான் ஸத்புத்திரலாபம் ஏற்படும். ஸத்புத்திரனால் பரோபகாரமும் ஸித்திக்கும். தாய்தந்தையர்களுக்கு எப்பொழுதும் ஸௌக்யம் ஏற்படும். நாஸ்திக புத்திரனால் குலம் நஷ்டமாய் விடும்; தந்தையினுடைய புகழும் போய்விடும். பாபியான அவனால் தாய்தந்தையர்களுக்கு இகலோகத்திலும் துக்கந்தான்; பரலோகத்திலும் துக்கந்தான். நாஸ்திக புத்திரனால் வம்சமே அழிந்துவிடும். துஷ்டையான பார்யையினால் ஜன்மாவே நஷ்டமாகிவிடும். பரான்ன போஜனத்தால், செய்த தர்மங்களே தொலைந்துவிடும். மூர்க்கர்களின் நட்புக்கொண்டால் சிறிதும் நன்மையோ ஸுகலேசமோ ஏற்படாது என்று சாஸ்திரங்கள் கூறுவது வீணாய்விடுமா என்று இராப்பகலாக சிந்தனையிலாழ்ந்து கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். பின்பு ஒருநாள் பூர்வகர்மாவை அறிந்து சொல்வதில் வித்துவானான கர்காசாரியாரிடம் சென்றார். அவரை வணங்கி, முனிவரே! தாங்கள் ஜோதிஷ சாஸ்திரத்தில் நிகரற்ற வித்துவான் அல்லவா? என்னுடைய ஸதாசாரத்தைத் தாங்கள் கேட்டு அறிந்திருக்கலாம். நான் எட்டாவது வயதிலேயே உபநயனம் செய்துகொண்டேன். அனேக நாள் குருகுல வாஸம்பண்ணி குரு சிச்ரூஷை செய்தேன். நான் செய்தாற் போல் எந்த சிஷ்யனும் குரு சிச்ரூஷை செய்திருக்கமுடியாது. குருவினுடைய அநுக்ரஹத்தால் வேதங்களையும் ஸம்பூர்ணமாக அத்யயனம் செய்தேன். பிரம்மசர்ய விருதத்தை முடித்துக் கொண்டு ஸத்குலத்தில் ஜனித்த கன்னிகையையும் காலத்தில் விவாஹம் செய்து கொண்டேன். சாதுவான மனைவியுடன் இல்லறத்தை முறைப்படி அனுஷ்டித்து வந்தேன். பஞ்சயக்ஞம் என்ற வைஶ்வதேவகர்மாவைத் தினந்தோறும் தவறாமல் அனுஷ்டித்து வருகிறவன் நான். பித்ருரிணத்தை நிவிர்த்திசெய்ய வேண்டுமென்கிற உத்தேசத்துடன் கர்ப்பாதானம் என்ற கர்மாவில் விதிவத்தாகப் பிரவர்த்தித்தேனே தவிர காமபராதீனனாக நான் பிரவர்த்திக்கவில்லை. இவ்விதம் ஸதாசார ஸம்பன்னனான எனக்குப் பிறந்திருக்கும் புத்திரனோ மூர்க்கனாக இருந்து வருகிறான். அதற்குக் காரணம் என்னுடைய தோஷம் என்று சொல்லமுடியாது. என்னுடைய தர்மபத்தினியான அந்தப் புத்திரனுடைய தாயின் தோஷமென்றும் சொல்லமுடியாது. அந்தப் புத்திரன் பிறந்ததிலிருந்து தாய் தந்தையர்களாகிய எங்களுக்கு துக்கானுபவமே தவிர, சுகம் சிறிதுமில்லை. எங்களைச்சேர்ந்த பந்து ஜனங்களுக்கும் பரமதுக்கம்தான் ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. அதின் காரணமோ இன்னதென்று என்னால் அறிய முடியவில்லை. தாங்கள் ஜோதிஷ சாஸ்திரத்தில் பாரங்கதர். ஆகையினால் அதையறிந்து சொல்லவேண்டும் என்று பிரார்த்தித்துக் கேட்டுக் கொண்டார்.

கர்கமுனிவர் அந்தப் புத்திரனுடைய ஜாதகத்தை நன்றாக

விமர்சனம் செய்து பார்த்துவிட்டுத் தம்முடைய உபாஸனு பலத்தால் ரிதவாக் என்ற மஹரிஷியைப் பார்த்துச் சொன்னதாவது :—ஹே மஹரிஷியே! ரேவதி நக்ஷத்திரத்தினுடைய கடைசிப் பாதத்தைக் கண்டாந்தம் என்று சொல்லுவார்கள். அந்தக் காலத்தில் உமக்குப் புத்திரன் ஜனித்த காரணத்தால் அந்தப் புத்திரன் மூர்க்கனுகிவிட்டான்; தாய் தந்தையர்களுக்கும் சுகம் சிறிதுமில்லாமற்போய்விட்டது. அந்தத் துக்கம் உபசாந்தி அடையவேண்டுமானுல் லோகமாதாவாகிய துர்கையைப் பூஜிக்கவேண்டும். துர்க்கா ஹோமம் விதிவத்தாகச் செய்தால் அப்புத்திரனும் ஸுபுத்திரனுய்விடுவான். தாய் தந்தையர்களுக்கு பரமஸௌக்யம் ஏற்படும் என்று சொன்னுர். அதைக்கேட்ட ரிதவாக் மஹரிஷியானவர், மஹாதபஸ்வியானபடியினுல் கடுங்கோபமடைந்து, ஹே ரேவதி நக்ஷத்ர தேவதே! நீ ஆகாயத்தில் இருக்க நியாயமில்லை. பூமியில் விழுந்து கஷ்டப்படவேண்டும் என்று ரேவதியைச் சபித்தார். சாபங்கொடுத்தவுடன் ரேவதி நக்ஷத்திர தேவதை, ஆகாயத்திலிருந்து பூமியில் ஸகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே குமுதபர்வதம் என்ற மலையில் விழுந்தாள். அதுமுதல் குமுதபர்வதம் ஒரே ஜ்வாலையினுல் அலங்கரிக்கப்பட்டதாயிற்று; பிறகு, 'ரைவதகம்' என்ற பெயருடன் கூடினதாகிவிட்டது. அந்தக் குமுதமலை யினுடைய ஸௌபாக்ய அதிசயமும் லோகத்தில் பிரஸித்தமாக விளங்கிவந்தது. அவ்வாறு அந்த ரேவதியைச் சபித்துவிட்டு, கர்கமஹாமுனிவர், சொன்ன பிரகாரம் துர்கா ஹோமத்தையும் செய்து அம்பிகையை ஆராதித்து வந்தார். அதிலிருந்து அந்தக் குபுத்திரனும் ஸுபுத்திரனுய்விட்டான். தாய் தந்தையர்களுக்கு பரமசௌபாக்யம் ஏற்பட்டது. ரேவதிநக்ஷத்திர தேவதை அந்தக் குமுதமலையில் எந்த இடத்தில் விழுந்ததோ அந்த இடத்தில் அந்த தேஜஸ்ஸிலிருந்தும் ஒரு திவ்ய கன்னிகை உண்டானுள். அந்தக் கன்னிகையைப் பார்த்தவர்கள் மஹாலக்ஷ்மியே என்று கொண்டாடினுர்கள். குமுதமலையிலேயே தவம்செய்துவந்த பிரமுசர் என்ற ஒரு மஹரிஷி ரேவதியினுடைய காந்தியிலிருந்து உண்டான அந்தக் கன்னிகையைப் பார்த்து, ஆச்சர்யமடைந்து, ரேவதி என்றே அந்தக் கன்னிகைக்கு நாமகரணஞ்செய்து அதே மலையில் அந்தப் பெண்ணைத் தன் பெண்ணுகப் பாவித்து வளர்த்து வந்தார். சிறிது காலமானவுடன், அந்தப் பெண் பெரியவளாய் விட்டாள். அவளை விவாஹம் செய்து கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் பிரமுச மஹரிஷி வரனைத் தேடலானுர். தேடித்தேடிப் பார்த்தும், அந்தப் பெண்ணினுடைய அழகுக்குச் சமானமான வரன் அகப்படவில்லை. உடனே மஹரிஷி அக்னிசாலையில் சென்று அக்னிபகவானை உபாசித்து வந்தார். அக்னிபகவான் பிரத்யக்ஷமாகி, மஹரிஷியே! துர்த்தமன் என்று ஒரு ராஜ புத்திரன் இருந்து வருகிருன். அவன் பரம தார்மிகன். பலிஷ்டன்; மதுரவாக்குடையவன். எந்தவிதமான யுத்தத்திலும்

ஜயமடையத்தக்க பிரஸித்திபெற்ற வீரன். அந்த துர்த்தம னுக்கு இந்தப் பெண்ணை விவாஹஞ் செய்துகொடு என்று சொல்லிவிட்டு அந்தர்தானத்தை யடைந்து விட்டார். இச் சமயத்தில் துர்த்தமன் என்ற அந்த அரசனும் வேட்டையாடு வது என்ற காரணத்தால் அந்தக் குமுதமலையினுடைய உப வனத்தில் வந்து வேட்டையாடிவிட்டுத் தற்செயலாக அந்தப் பிரமுச மஹரிஷியின் ஆசிரமத்துக்கு வந்தான்.

அந்தத் துர்த்தமனும் சுவாயம்புவ மனுவினுடைய இரண் டாவது புத்திரனான பிரியவிரதருடைய வம்சத்திலுதித்த விக்ரம சீலன் என்ற அரசனுக்கு காளிந்தி என்ற பட்டமஹிஷியி னிடத்தில் பிறந்த ஒரு ராஜபுத்திரனுவான். பிரமுச மஹ ரிஷியின் ஆசிரமத்திற்குள் வந்த அவன் மஹரிஷிக்கு அபிவந்த னம் செய்யவேண்டுமென்று பக்தியுடன் மஹரிஷியைத் தேடினுன். மஹரிஷி அச்சமயத்தில் அங்கே இல்லை. ஆனுல், குமுத மலையில் ரிதவாக் என்ற மஹரிஷியின் சாபத்தால் ஆகாசத்தி லிருந்தும் கீழேவிழுந்த ரேவதி நக்ஷத்திர தேவதையினுடைய தேஜஸ்ஸிலிருந்து உதித்த கன்னிகையாய் பிரமுச மஹரிஷி யினுல் ரேவதி என்று நாமகரணம் செய்யப்பட்டுத் தன் புத்திரி யைப்போல் ஆச்ரமத்தில் வளர்க்கப்பட்டுவந்த அழகான அந்தக் கன்யாரத்தனத்தை மாத்திரம் அங்கே பார்த்தான். பார்த்த மாத்திரத்தில் அவனும் நல்ல யுவாவானதினுல் காமதாபத்தை அடக்க முடியாமல், ஹே பிரியே! என்று அழைத்து, பிரமுச மஹரிஷி ஆசிரமத்தை விட்டு எங்கே போயிருக்கிருர்? மஹரிஷி யினுடைய பாதங்களில் நமஸ்கரித்துப் போகவேண்டுமென்ற இச்சையுள்ளவனுக இருக்கிறேன்; ரிஷி இருக்குமிடத்தை, ஹே கல்யாணி! நீ சொல்லி அருள்புரிய வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்.

அந்தக் கன்னிகை, அக்னிசாலைக்குள் மஹரிஷி தபோநிஷ்ட ராக இருந்து வருகிருர் என்று சொன்னுள். துர்த்தமன் அக்னி சாலைக்குச் சென்று வாயிலில் பக்தியுடன் நின்றுன். பிரமுச மஹரிஷி ராஜலக்ஷணத்தோடுகூடின துர்த்தமனைப் பார்த்து சந்தோஷமடைந்தார். மஹரிஷியினுடைய தரிசனத்தால் புளகாங் கிதமான அவன் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு நின்றுன். மஹரிஷி உடன் கௌதமன் என்ற தம் சிஷ்யனை அழைத்து, அர்க்கியபாத்தியம் சீக்கிரத்தில் கொண்டுவா; இவர் அர்க்கியம் முதலான பூஜைகளுக்குத் தகுதிவாய்ந்த தார்மிகர் என்று சொன் னுர். கௌதமன் உடனே சென்று, அர்க்கிய பாத்யாதிகளைத் தனித் தனியான பாத்திரத்தில் கொண்டுவந்து மஹரிஷிக்கு எதிரில் வைத்தான். பிரமுசமஹரிஷி பரமசந்தோஷமடைந்து, நான் உன்னை வெகுகாலமாக எதிர்பார்த்தேன். அக்னிபகவானுடைய அனுக்ரஹ விசேஷத்தால் எனக்குக் கிடைத்த என்னுடைய ஜாமாதா நீ என்று சொல்லி அவனுடைய கையில் அர்க்கி

யத்தைக் கொடுத்தார். அர்க்கியத்தைக் கையில் வாங்கிக் கொண்ட அரசனும் மஹரிஷியினுடைய ஆக்ஞையின்பேரில் ஆஸனத்தில் அமர்ந்து கைகூப்பிக்கொண்டு மஹரிஷியை சேவித்தான். மஹரிஷி அவனுக்குப் பலபடியாக ஆசீர்வாதங்களைச்செய்து க்ஷேமம் விசாசரிக்கலானார்: ராஜனே! நீ க்ஷேமமாக இருந்து வருகிறாயா? உன்னுடைய ஸேனாபலம், பொக்கிஷங்கள், சினேகிதர்கள், வேலையாட்கள், மந்திரிவர்க்கங்கள், தேசத்தில் உள்ள ஜனங்கள் ஆகியோர் எல்லாவிதத்திலும் க்ஷேமத்தோடு இருந்து வருகிறார்களா? உன்னை க்ஷேமமா என்று கேட்டேன்; உன்னுடைய மனைவி க்ஷேமமா என்று நான் கேட்கவில்லை. அதற்குக் காரணம், ரேவதி நக்ஷத்திரம் ரிதவாக் என்ற முனியினுடைய சாபத்தால் பூமியில் விழுந்தாள்; அந்த தேஜஸிலிருந்து ஒரு கன்னிகை தோன்றினாள். அவளுக்கு நான் ரேவதி என்றே நாமகரணம் செய்தேன்; அவளை என்னுடைய சொந்தப் பெண்ணைப்போல் பாவித்து ஆச்ரமத்திலேயே வளர்த்து வருகிறேன். அக்னி பகவானுடைய அநுக்ரஹத்தால் அவள் உன்னுடைய மனைவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள். அந்த ஸ்திரீ ரத்னமானது என்னுடைய சமீபத்திலேயே விளங்கிக்கொண்டு வருவதனால் அவளைப் பற்றி க்ஷேமமா என்று விசாரிக்கவில்லை என்று மஹரிஷி சொன்னார். அதைக்கேட்ட துர்த்தமன் பரம சந்தோஷமடைந்து, மஹரிஷியே! நல்லது; தங்களுடைய பிரஸாத விசேஷத்தால் என்னுடைய பந்துக்களனைவரும் க்ஷேமமாக இருந்து வருகிறார்கள் என்று கூற மஹரிஷி, அரசனே! உன்னுடைய பார்யை ரேவதி என்பவள் என்னுடைய ஆச்ரமத்தில் இருந்து வருகிறாளே; நீ ஏன் அவளைத் தெரிந்து கொள்ளவில்லை என்று கேட்டார். ராஜன், ஸுபத்ரை முதலான அநேக பார்யைகள் எனக்கு உண்டு. என்னுடைய திருமாளிகையில் அவர்கள் சுகமாக விளங்கி வருகிறார்கள். அவர்களைப் பற்றி மாத்திரம்தான் எனக்குத் தெரியும். தங்களுடைய ஆச்சிரமத்தில் இருந்துவரும் ரேவதி என்ற பெயரோடு கூடின ஸ்திரீ ரத்னத்தை நான் என்னுடைய பார்யை என்று அறியவில்லை என்று சொன்னான்.

மஹரிஷி, நான் அக்னிசாலையிலிருக்கும்போது நீ அந்த ரேவதியைப் பார்த்து, ஹே பிரியே! என்று அழைக்கவில்லையா? அவ்விதமிருக்க அதற்குள் அவளை நீ மறப்பதற்குக் காரணம் என்ன? அவள் பரம சிலாக்யமான குணங்களோடு கூடினவள் என்று சொன்னார். அவன், தாங்கள் அக்னிபகவானுடைய சந்நிதியில் இந்தப் பெண் குழந்தைக்கு யார் பார்த்தாவென்று கேட்டதற்கு அக்னிபகவானும் என்னைக் குறிப்பிட்டுச் சொல்லத் தாங்களும் அவ்விதமே சம்மதிக்க, அந்ததெய்வ வாக்கு வீண் போகாமல் அந்தப் பெண்ணைப் பார்த்த மாத்திரத்தில், பிரியே என்று அழைக்க என் புத்தியில் எண்ணம் ஏற்பட்டது. என்னுடைய மனதில் யாதொரு விதமான விகாரமுமில்லை. அவ்விதம் நான் அழைத்ததற்காக தாங்கள் கோபம் அடையக்கூடாது என்றான்.

ரிஷியும், நீ சத்தியத்தைத் தான் சொல்லுகிருய். 'மனதில் யாதொருவிதமான விகாரமுமில்லே. அக்னிபகவானுல் ஏவப்பட்டே, ஹே பிரியே! என்று நீ அழைத்திருக்கிருய்; அக்னிபகவானே நான் பிரார்த்தித்து இந்தக் கன்யாரத்னத்துக்கு யார் பார்த்தாவாக ஏற்படப் போகிருர் என்று கேட்டதற்கு அவர் துர்த்தமன் என்ற அரசன் நாயகனுக ஏற்படப் போகிருன் என்று அனுக்ரஹம் செய்தார். அந்த க்ஷணத்திலேயே இக்கன்னிகையை நான் மனப்பூர்வமாக உனக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். அந்த தெய்வச் செயலாலேதான் இந்தப் பெண்ணைப் பார்த்த மாத்திரத்தில், ஹே பிரியே! என்று அழைக்க உனக்குத் தோன்றிற்று. நீ ஒன்றுமே கவலை அடையவேண்டாம். உன் நாயகியாகத்தான் இந்த ஸ்திரீ ரத்னம் ஆவாள் என்ருர். ராஜன் மௌனமாக ஒன்றும் பதில் சொல்லாமலே மஹரிஷியின் எதிரில் நின்று கொண்டிருந்தான். மஹரிஷி கன்னிகையை விவாஹம் செய்து கொடுப்பதாகத் தீர்மானித்தார். தன்னுடைய கலியாண மஹோத்ஸவத்தைச் செய்ய மஹரிஷி சித்தமாயிருப்பதை அறிந்த அந்தக் கன்னிகை மஹரிஷியைப் பார்த்து, ரேவதி நக்ஷத்திரத்திலேயே என்னை விவாஹம் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். மஹரிஷியோ, ஹே குழந்தாய்! விவாஹத்திற்கு யோக்யமான நக்ஷத்திரங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ரேவதி நக்ஷத்திரமோ இப்பொழுது ஆகாயத்தில் இல்லை; ரிதவாக் என்ற முனியின் சாபத்தால் பூமியில் விழுந்துவிட்டது. ஆகாயத்தில் அந்த நக்ஷத்திரம் இல்லாமலிருக்கும்போது அந்த நக்ஷத்திரத்தில் உனக்கு எவ்விதம் விவாஹம் செய்துகொடுப்பது என்று எனக்கு சங்கை உண்டாகிறது என்ருர். மறுபடியும் அவள் அந்த ரிஷியைப் பார்த்து, ரேவதிநக்ஷத்திரம் என்னுடைய விவாஹத்திற்கு யோக்யமான காலம் ஆகாமற்போனுல் பூஷா என்ற தேவதையினுடைய ஆனுகூல்யம் இருக்குங் காலத்திலாவது என்னை விவாஹம் செய்து கொடுங்கள் என்று கேட்டுக்கொண்டாள். அந்த ரேவதி என்ற கன்னிகை, ரேவதி நக்ஷத்திரத்தைச் சபிக்கும் படியான மஹத்தான தவத்தை ரிதவாக் மஹரிஷி ஒருவர்தானு செய்திருக்கிருர்? தாங்கள் அவரைப்போல் தவம் செய்யவில்லையா? ஜகத்தை சிருஷ்டிக்கவே தங்களுக்கு ஸாமர்த்தியம் உண்டே. தங்களுடைய தபோமஹிமையினுல் முன்போலவே ரேவதி நக்ஷத்திரத்தை ஆகாயத்தில் ஸ்தாபனம் செய்து விட்டு அதே நக்ஷத்திரத்தில் என்னுடைய விவாகத்தைச் செய்து கொடுக்க வேண்டும் என்று பிரார்த்தித்தாள். பிரமுக மஹரிஷி சூரியனுடைய சமீப ராசியிலுள்ள ரேவதி நக்ஷத்திரத்தை ஸௌரமார்க்கத்தில் ஸ்தாபிக்காமல் சந்திரனுடைய மார்க்கத்தில் ஸ்தாபனம் செய்கிறேன் என்று சொல்லிவிட்டுத் தன் தபோ மஹிமையினுல் சாந்திரமானத்தை யனுஸரித்து ஆகாய மார்க்கத்தில் ரேவதி நக்ஷத்திரத்தை ஸ்தாபனம் செய்தார்; அவ்விதம் ரேவதி நக்ஷத்திர தினத்திலேயே ரேவதியை துர்த்தமனுக்கு விதிப்படி கலியாணம் செய்து கொடுத்து, ராஜனைப்

பார்த்து, உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். ராஜன், நான் சுவாயம்புவ மனுவினுடைய வம்சத்தில் உதித்தவன்; மன்வந்தரத்திற்கு அதிபதியாகக் கூடிய யோக்கியமான புத்திரனைத் தங்களுடைய பிரஸாதத்தால் விரும்புகிறேன் என்று சொன்னான். மஹரிஷி, உனக்கு இவ்விதம் இச்சையிருக்கும் பக்ஷத்தில் நீ ஸ்ரீ தேவியை ஆராதனம் செய்தால் மன்வந்தராதிபதியான புத்திரனை அடையலாம். ஸ்ரீ தேவீ பாகவதம் என்ற மஹா புராணமோ பதினெண் மஹா புராணங்களுக்குள் ஐந்தாவதாகும். இந்த ரேவதி என்ற மனைவியினிடம் ரைவதன் என்ற புத்திரன் பிறந்து ஐந்தாவது மன்வந்தராதிபனுக விளங்கி வருவான். அந்த உன் புத்திரனே வேத வித்தாயும் சாஸ்திர தத்வங்களை அறிந்தவனுயும், பரம தார்மிகனுயும், மகா சூரனுயும், விளங்கி வருவான் என்று அனுக்ரஹம் செய்தார்.

இவ்விதம் மஹரிஷியினால் அனுக்ரஹம் செய்யப்பட்ட துர்த்தமன், தன் மனைவியோடு பிரமுக மஹரிஷிக்கு நமஸ்காரம் செய்து விடைபெற்றுத் தன்னுடைய ராஜ்யத்திற்கு வந்து சேர்ந்தான். பித்ரு பிதாமஹ பரம்பரையாகப் பரிபாலனம் செய்து வந்த ராஜ்யத்தைத்தானும் சிறிதும் தர்ம விரோதமில்லாமல் பிரஜைகளைத் தன் சொந்த புத்திரர்களைப்போல் பாவித்துப் பரிபாலனம் செய்து வந்தான். இவ்விதமிருக்கும்பொழுது லோமசர் என்ற ஒரு மஹரிஷி தற்செயலாக அவனுடைய திருமாளிகைக்குப் போய்ச்சேர்ந்தார். மஹரிஷியை அரசன் விதிவத்தாகப் பூஜித்து வினயத்துடன் க்ஷேமம் விசாரித்து, மஹரிஷே! ஸ்ரீ தேவீ பாகவதம் என்ற மஹாபுராணத்தைத் தங்கள் மூலமாக சிரவணம் பண்ண வேண்டுமென்று இச்சையுள்ளவனுக இருந்து வருகிறேன். தேவியினுடைய பிரஸாதத்தால் வம்சவிருத்திகரனுன புத்திரலாபத்தையும், எனக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். லோமச மஹரிஷி பரம ஸந்தோஷத்துடன், ராஜனே! திரிலோகத்துக்கும் தாயாரான பரதேவதையிடம் உனக்கு பக்தி திடமாக ஏற்பட்டிருப்பதனுல் நீதான் பரம தன்யனுவாய். தேவர், அசுரர், மனுஷ்யர், முதலிய எல்லோராலும் ஆராதிக்கத் தகுந்த பரதேவதை அந்த ஜகதம்பிகை ஒருவள்தான். அந்தப் பரதேவதையினிடத்தில் உனக்குப் பக்தியிருப்பதனுல் உன்னுடைய மனேபீஷ்டம் கட்டாயம் நிறைவேறிவிடும். ஸ்ரீ தேவீ பாகவத மஹா புராணத்தை சிரவணம் பண்ணினமாத்திரத்தில் பூலோகத்தில் ஒன்றும் துர்லபமாகாது. ஆகையால் அந்த மஹா புராணத்தை உனக்கு சிரவணம் செய்து வைக்கின்றேன் என்று சொல்லி ஒரு சுபதினத்தில் ஸ்ரீ தேவீ பாகவதத்தை ஆரம்பித்தார். ஐந்து தடவை இந்த மஹாபுராணக் கதையை அரசனும் தன் மனைவியோடுகூட சிரத்தையுடன் சிரவணம் செய்தான். ஸமாப்தி தினத்தில் புராணக் கிரந்தத்தைப் பூஜித்து புராண வக்தாவான லோமச மஹரிஷியையும் விதிவத்தாகப் பூஜித்தான். நவாக்ஷரீ மஹாமந்திரத்தால் ஹோமம் செய்து குமாரிகா பூஜையும் வடுக பூஜையும் செய்து

அநேக ஸுவாஸினிகளை ஆராதனம் செய்து, தம்பதி பூஜை களும் செய்தான். இவ்விதமிருக்கும்போது சிலகாலங்கழித்து ராஜனின் தர்மபத்னியும் கர்ப்பவதியாய் லோகத்திற்கே பரம கல்யாணத்தைச் செய்யக்கூடிய திவ்ய புத்திரனை சுப நக்ஷத் திரத்தில் சகலமான கிரகங்களுடைய அனுகூலம் இருக்கும் பொழுது பெற்றாள். ராஜன் புத்திரனுக்கு ஜாதகர்மா முதலான ஸம்ஸ்காரங்களை விதிவத்தாகச் செய்தான். உபநயன காலத்தில் உபநயன கர்மாவையும் செய்துவைத்து வேதங்களை அத்யயனம் செய்யும்படி செய்தான். நாளுக்குநாள் சுக்லபக்ஷ சந்திரனைப்போல் ராஜகுமாரனும் ஸர்வ வித்யாநிதியாயும், பரம தர்மிஷ்டனாயும் அஸ்திர வித்தையில் மிகவும் சூரனாகையும் விளங்கலானான். வர்ணாச்ரம தர்மங்களை ஆங்காங்கு ஸ்தாபனம் செய்து அதன் மூலம் லோகத் திற்கு க்ஷேமத்தை விருத்தி செய்து வந்தான். அந்த மஹா மேதாவியான புத்திரனைப் பிரம்மாவும் மானவமான ஸ்தானத்தில் ராஜ்யாபிஷேகம் செய்துவைத்து, 'ரைவதமனு' என்ற பட்டப் பெயரைக் கொடுத்து லோகத்தை ரக்ஷிக்கும்படி ஆக்ஞாபித்தார். பிரம்மாவினுடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரனாகி லோகங் களில் ஸகல ஸத்கர்மாக்களையும் செய்கிறகாலத்தில் 'ரைவதமனு வந்தரே' என்று ஸங்கல்பம் செய்யும்படியான கீர்த்தியை அடைந் தான். இவ்விதம் பரதேவதையினுடைய மாஹாத்மியத்தை யறிந்து கொள்ளவேண்டும். ஸ்ரீ தேவீ பாகவத புராணத்தின் மாஹாத் மியத்தை யாரால்தான் வர்ணிக்கமுடியும்? அகஸ்திய மஹரிஷியோ, ஷண்முகனுடைய முகமாக ஸ்ரீ தேவீ பாகவதத்தினுடைய மாஹாத் மியத்தை சிரவணம் செய்து விதியையும் அறிந்துகொண்டு அவரை விதிவத்தாகப் பூஜித்துவிட்டு தம் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந் தார். இவ்விதம் குமாரஸ்வாமி யானவர், அகஸ்திய பகவானுக்குச் சொன்ன ஸ்ரீ தேவீ பாகவத மஹிமையை சௌனகாதிகளான மஹ ரிஷிகளுக்கு சூத மஹாமுனிவர் சொல்லிச் சந்தோஷ முண் டாக்கினார்.

## சிரவண விதி

சௌனகர் முதலான மஹரிஷிக்ள் பௌராணிகோத்தமரான ஸூதரைப் பார்த்துச்சொல்லுகிறார்கள்: தாங்கள் ஸ்ரீ தேவீ பாக வதத்தினுடைய மஹிமையை விரிவாகச் சொல்லக் கேட்டு நாங்கள் ஸந்தோஷமடைந்தோம். அந்த மஹா புராணத்தைச் சிரவணம் பண்ணுதற்குரிய நியமங்களைச் சொல்லவேண்டும் என்று பிரார்த் தித்தனர். சூதர் கூறுகின்றார்: சிரவணம் பண்ணின மாத்திரத்தில் சகல விருப்பங்களையும் கொடுக்கக்கூடியது தேவீ பாகவதம். அதைச் சிரவணம் பண்ணுவதற்குரிய விதியைச் சொல்லுகிறேன், சாவதானமாகக் கேளுங்கள்: ஜோதிஷ சாஸ்திரத்தில் பாண்டித்ய முள்ள வித்வான்களை அழைத்துக் கதாரம்பம் செய்வதற்கு நல்ல முஹூர்த்தத்தைப் பார்க்கவேண்டும். ஆவணி மாதம் முதல் ஆறு மாத காலங்களில் ஒவ்வொரு மாதத்திலுமுள்ள சுக்ல பக்ஷம் கதாரம்

பத்தைச் செய்வதற்கு மிகச் சிலாக்யமான காலம். ஹஸ்தம் அசுவதி முதலான நக்ஷத்ரங்களும் சேர்ந்தால் விசேஷ பலனைக் கொடுக்கும். நல்ல திதியும் நல்ல வாஸரமும் சேர்ந்தால் ரொம்பவும் விசேஷமானது. தர்மஸித்தி, லக்ஷ்மீகடாக்ஷம், மேலானசுகம் இவைகளைக் கொடுக்கும். ஸகல ரோகங்களையும் நாசஞ்செய்யும். ராஜ தரிசனத்திற்குரிய அனுகூலத்தை உண்டாக்கும். இவ்வளவு சௌபாக்யங்களையும் கிரமமாகக் கொடுத்துக் கொண்டே வந்து மோக்ஷ சாதனமான ஜீவப்பிரம்ம ஐக்ய ஸாக்ஷாத்காரத்தையும் கொடுக்கக்கூடிய வல்லமையுள்ளது. காமேச்வரனால் சொல்லப்பட்ட இவ்வுபதேசத்தைப் பரீக்ஷித்துப் பார்க்கலாம். ஸ்ரீ தேவியினுடைய பிரீதியைக் கருதி ஆஷாடம், ஆச்வயூஜம், மாகம், வஸந்தம் என்ற நான்கு நவராத்திரி காலங்களிலாவது தேவீ பாகவதக் கதையை சிரவணம் செய்யவேண்டியது அவசியமாகும். விவாஹ காரியத்தில் எவ்விதமான ஸாமக்ரிகளைச் சேர்க்கிறோமோ அவ்வளவு ஸாமக்ரிகளைச் சேர்க்கவேண்டும். ஸஹாயத்திற்காக மனிதர்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். அவர்கள் தேவீ பக்தர்களாயும் டம்பம் லோபம் முதலான துர்க்குணங்களில்லாதவர்களாயும் இருக்கவேண்டும். ஒவ்வொரு தேசத்திலும் நகரத்திலும், கிராமத்திலும் இந்த தேவீ பாகவத கதாமிருத பானம் ஒன்பது நாள் நடைபெறும்படி செய்யவேண்டும். தேவியினுடைய பிரஸாதத்தை அடைய விருப்பமுள்ள மனிதர்கள் அவசியம் கதாசிரவணம் செய்ய வரவேண்டுமென்று பத்திரிகை மூலம் தெரிவிக்க வேண்டும். பிராம்மணர்கள் முதலான நான்கு வர்ணத்தவர்களும் கதாசிரவணத்திற்கு வரலாம். ஆசிரமிகளும் வரலாம். பலத்தைக் கருதுகிற காமிகளும், ஒரு பலத்தையும் கருதாமல் தேவியினுடைய பிரஸாதத்தை மாத்திரம் எதிர் பார்க்கிறவர்களும் வரலாம். ஒன்பது நாளும் இருந்து கதாசிரவணம் செய்யமுடியாமற் போனால் அவகாசத்தை அனுஸரித்து அவசியம் கதாசிரவணத்திற்கு வர வேண்டும். இந்தப் புண்ய காரியத்தில் ஒரு க்ஷணகாலம் இருந்து சிரவணம் பண்ணினாலும் மஹா புண்யத்தை அடைதல்கூடும். இவ்விதம் ஒவ்வொருவரையும் அழைக்கவேண்டும். வந்த மஹான்களுக்கும் அவரவருடைய யோக்யதானுஸாரம் ஆஸனம் கொடுத்து உட்காரச் செய்யவேண்டும். ஸபா மண்டபம் நன்றாய் விதானாதிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்க வேண்டும். கரை உன்னதமான ஓர் ஆஸனத்தில் கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ உட்காரச்செய்து பூஜிக்கவேண்டும். நல்ல வித்வானையும், தேவியை ஆராதிக்கிற உபாஸகனையும், தயாளுவாயும் உள்ள மஹானுபாவரையே புராணிகராகக் கொள்ளவேண்டும். அவருக்குச் சகாயமாக மற்றொரு வித்வானையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். புராணிகர் கதாரம்பத்திற்கு முன்பாகவே வபனம் செய்துகொண்டு தீக்ஷிதனாக இருக்கவேண்டும். அருணோதயகாலத்தில் ஸந்தியா வந்தனாதிகளை ஸங்கிரஹமாகச் செய்துவிட்டுக் கதாரம்பம் செய்து நடத்தவேண்டும். ஒருவிதமான விக்னங்களும் ஏற்படாமலிருப்

பதற்கும் மஹா கணபதி பிரஸாதத்தையடையவும் முதலில் கணபதி பூஜை செய்யவேண்டும். பிறகு, கலச ஸ்தாபனம் செய்து அந்தக் கலசத்தில் அம்பிகையை த்யான ஆவாஹனாதிகளால் பூர்ண ஸாந்நித்யம் அடையும்படி செய்து ஸ்ரீ சக்ரத்தைக் கலசத்திற்குமேல் பாகத்தில் ஸ்தாபனம் செய்து நவாவரண விதியை அனுஸரித்து சிரத்தையுடன் பூஜை செய்வதற்காக ஒரு உபாஸகனையும் ஸ்தாபகம் செய்யவேண்டும். வடுக பூஜை, க்ஷேத்ரபால பூஜை, யோகினீ தேவதைகளுடைய பூஜை, ஸப்த மாத்ருகா தேவிகளின் பூஜை, துளஸீதேவி பூஜை, நவக்ரஹ பூஜை, விஷ்ணு ஸமர்ச்சனம், சங்கர ஸமாராதனம், இவைகளை அங்கங்களாகச் செய்துவிட்டு, நவாக்ஷரீ மஹாமந்திரத்தால் ஸ்ரீ பராசக்தியையும் பூஜை செய்த பிற்பாடு ஸ்ரீ தேவீ பாகவத புஸ்தகத்தையும் பூஜிக்கவேண்டும். ஸ்ரீ தேவீ பாகவதம் வைகரீ என்ற வாங்மயமான மூர்த்தியாகும். அந்தப் புஸ்தகத்தைப் பூஜித்தால் தேவியையே ஆராதனம் பண்ணின புண்ணியத்தை அடையலாம். ஹே காத்யாயினி! ஹே மஹாமாயே! ஹே பவானி! ஹே புவனேஶ்வரி! பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற தேவதைகளாலும் ஆராதிக்கத் தகுந்த ஹே பரதேவதே! ஹே தாயே! ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கித் தவிக்கிற என்னைக் கரையேற்றி வைத்து என்னுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். உன்னுடைய பாதார விந்தத்தில் நமஸ்கரிக்கின்றேன் என்று பிரார்த்தித்துக் கொண்டு ஏகாக்ரமான மனதுடன் பக்தியோடு கதாசிரவணம் செய்யவேண்டும். ஸ்ரீ தேவீ பாகவத கதா பிரவசனம் செய்கிற புராணிகரையும் புதிய வஸ்திர ஆபரணாதிகளால் பூஜித்து பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து அஞ்சலி பந்தத்துடன் நின்று, ஹே பிரம்மன்! தாங்கள் சகல சாஸ்திரங்களுடைய ரஹஸ்யத்தையும் அறிந்தவர்கள்; இதிஹாஸ புராணங்களை ஜனங்களுக்கு உபதேசம் செய்து கேட்பவர்களுடைய மனதை சுத்தப்படுத்தி அவர்களை மோக்ஷ ஸாதனமான ஆத்ம ஞானத்தில் அதிகாரமுள்ளவர்களாகச் செய்து வைக்கிற விஷயத்தில் தங்களுக்கு ஸமானமாக லோகத்தில் ஒருவருமே இல்லை. தேவீ பாகவதக் கதையாகிற பூர்ண சந்திரனை உதிக்கச்செய்து மனதில் உள்ள அக்ஞானமாகிய இருளைப் போக்கடித்து என்னைக் கிருதார்த்தனாகச் செய்யவேண்டும் என்று பிரார்த்தனை செய்து பிராம்மணோத்தமர்களை முதல் ஆஸனத்தில் உட்காரவைத்து அவர்களுடைய ஆக்ஞையின் பேரில் தானும் ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்து கதாசிரவணம் செய்யவேண்டும். ஸாவதானமான மனதோடு தர்மம், அர்த்தம், காமம் மோக்ஷம் என்ற நான்கு விதமான புருஷார்த்தங்களை அடையவேண்டுமென்ற உத்தேசத்துடன் பரமபக்தியுடன் கதாசிரவணம் செய்யவேண்டும். தம் வீடு, மக்கள், மனைவி, நண்பர், பொருள் இவைகளைப் பற்றி யாதொரு விதமான சிந்தனையும் இல்லாமல் செய்து கொள்ள வேண்டியதும் மிகவும் அவசியமாகும். தினந்தோறும் சூரிய உதயத்தில் கதையை ஆரம்பிக்கவேண்டும். அர்த்தாஸ்தமன பரியந்தம் பிரவசனம்

செய்யவேண்டும். மத்யான்ன காலத்தில் ஒரு முஹூர்த்தம் ஓய்வு ஏற்படலாம். மலமூத்திர உபத்ரவமில்லாமலிருப்பதற்காக மிதமான போஜனம் செய்யவேண்டும். ஹவிஸ்ஸை உட்கொள்வது மிகவும் சிலாக்யமானது. அதுவும் ஒரு வேளைதான் சாப்பிட வேண்டும்; அல்லது பழங்களை ஆகாரம் செய்யலாம். கோக்ஷீரத்தையும் ஆகாரமாகக்கொள்ளலாம். அல்லது பசுவின் நெய்யை ஆகாரமாகச் செய்யலாம். கதைக்கு விக்னம் வராதபடி சரீர திருடமுண்டாகக் கூடிய ஆகாரம் செய்யலாம். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களிடம் பேத புத்தியுடையவர்களை தேவீ பாகவத கதா சிரவணத்திற்குத் தகுதியற்றவர்களெனத் தள்ளிவிட வேண்டும். ஸாக்ஷாத் ஸ்ரீ தேவியினிடத்தில் பக்தியில்லாதவர்களையும், சிரவணத்திற்குத் தகுதியற்றவர்களென நீக்கிவிட வேண்டும். பிராம்மணத்வேஷிகள், தெய்வம், பரலோகம், இவைகளை ஒப்புக் கொள்ளாத நாஸ்திகர்கள், பிராம்மணனுடைய சொத்தை அபகரித்தவர்கள், பரஸ்திரீ கமனம் செய்கிறவர்கள், தேவாலயத்திலுள்ள தனங்களை அபகரிக்கிறவர்கள் இத்தகைய பாபிகளும் கதாசிரவணத்திற்கு அநதிகாரிகளாவார்கள். இவர்களையும் விலக்கிவிடவேண்டும். கதா ப்ரவசனம் செய்கிற வித்வானும் பிரம்மசர்ய விருதத்தோடு ஜிதேந்திரியனாக இருந்து வரவேண்டும். பக்குவமாகாத ஆகாரங்களையும் தள்ளிவிடவேண்டும். பரம தரித்திரனும் புத்திரனில்லாதவனும் இருக்கிறவர்கள் இந்தக் கதையைக் கேட்டால் அவர்கள் மனோரதங்களைப் பூர்த்திசெய்து கொள்ளலாம். இந்தக் கதா சிரவணம் பரம ஔஷதமாகும். இந்த ஒன்பது தினங்களையும் யக்ஞ தினங்களாகப் பாவிக்கவேண்டும். இவ்விதம் ஒன்பது தினங்களிலும் ஸ்ரீ தேவீ பாகவதக் கதையை நடத்திய பிறகு, உத்யாபனம் செய்யவேண்டும். அற்பப் பயனை விரும்பாத மஹா ஜனங்கள் கதாசிரவண மாத்திரத்திரத்தாலேயே சித்த சுத்தியடைந்து மோக்ஷஸ்தானமான ஜீவ பிரம்ம ஐக்கிய ஸாக்ஷாத்காரத்தை அடைந்தவர்களாவார்கள். தேவீ பாகவத புஸ்தகத்தையும் புராணிகரையும் விசேஷமாகப் பூஜித்துப் புராணிகரிடம் பரம பக்தியுடன் பிரஸாதத்தை கிரஹித்துக் கொள்ளவேண்டும். தினந்தோறும் குமாரிகாபூஜை, ஸுவாஸிநீ பூஜை, பிரம்மண ஸந்தர்ப்பணை முதலானவைகளைக் கதா தினங்களில் நடத்திவந்தால் அந்த அதிகாரிக்கு ஸகல ஸித்திகளும் கூடிவரும். ஸமாப்தி தினத்தில் ஸகல தோஷங்களும் உபசாந்தி அடைவதின்பொருட்டு காயத்ரீ ஸஹஸ்ரநாமத்தையும் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் படிக்கவேண்டும். பகவானை விஷ்ணுவினுடைய ஸ்மரணமும் நாமஸங்கீர்த்தனமும் தபஸ் யக்ஞம் முதலான ஸத்கர்மாக்களின் மத்தியில் செய்யப்பட்டு வந்ததேயானால் அந்தக் கர்மாக்களில் அக்ஞானகிருதமான தோஷங்கள் ஏதாவது ஸம்பவித்திருந்தாலும், அவை விலகிப்போம். அந்தக் கர்மம் ஸம்பூர்ணமான பலத்தைக் கொடுக்க சக்தியுள்ளதாய்விடும். மஹா விஷ்ணுவினுடைய சக்தியோ அபாரமானது.

ஆகையால் தேவீபாகவதப் பிரவசனத்தினுடைய முடிவில் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் அவசியமானது. கதா ஸமாப்தி தினத்தில் 'ஸப்தசதீ' மஹா மந்திரத்தால் அக்நியில் ஹோமம் செய்ய வேண்டியது அவசியமாகும். ஸப்தசதீ மஹா மந்திரத்தால் ஹோமம் செய்யாமற்போனால் தேவீ மாஹாத்மியம் என்ற ஸப்த சதிக்கு மூலமந்திரமான நவாக்ஷரியினாலாவது ஹோமம் செய்ய வேண்டும். அதுவும் அஸாத்யமாகத் தோன்றினால் காயத்ரீ மஹா மந்திரத்தால் ஹோமம் செய்யலாம். ஸ்ரீ தேவீ பாகவதம் என்ற கிரந்தமே காயத்ரீ மஹாமந்திர ஸ்வரூபமானதால் காயத்ரீ மஹா மந்திரத்தால் ஹோமம் செய்வது மிகவும் விசேஷமானது. பாயஸான்னத்தால் ஹோமம் செய்யவேண்டும். ஹோமத்ரவ்யமான பாயஸான்னத்தில் கடுகையும் சேர்த்துக்கொண்டு ஹோமம் செய்வது மிகவும் விசேஷமாகும். பாகவதப் பிரவசனம் செய்த புராணிகரை வஸ்திராலங்காரங்களால் பூஜித்து சிறிதும் லோபமில்லாமல் ஏராளமாய்ப் பொருளைத் தக்ஷிணையாக வாரி வழங்கி அவரை ஸந்தோஷப்படுத்தவேண்டும். கதா பிரவசனம் செய்த வித்வான் சந்தோஷமடைந்தால் யஜமானனுடைய விஷயத்தில் ஸகல தேவதைகளும் திருப்தி யுள்ளவர்களாவார்கள். பிறகு பிராம்மணோத்தமர்களுக்கு போஜனம் செய்துவைத்து தக்ஷிணை தாம்பூலாதிகளால் அவர்களைத் திருப்தி செய்துவைக்க வேண்டும். இந்த பூலோகத்தில் பிராம்மணோத்தமர்கள் தெய்வத்தின் உருவாக எண்ணப்படுகிறார்கள். அவர்கள் திருப்தியடைந்தால் யஜமானன் எதிர்பார்க்கும் ஸமஸ்தமான பலமும் ஸித்தித்துவிடும். ஸுவாஸிநீ பூஜை, குமாரிகா பூஜை, இவைகளையும் தேவி என்ற பக்தியோடு செய்யவேண்டும். அவர்களுக்கும் தக்ஷிணை தாம்பூலாதிகளை ஸம்பூர்த்தியாகக் கொடுத்து ஆத்ம சித்தியைக் கருதவேண்டும். நவாஹயக்ஞத்திற்கு அங்கமாக சில தானங்களையும் முக்கியமாகச் செய்யவேண்டும். ஸ்வர்ணதானம், கோதானம், பூதானம் முதலானவைகள் முக்கியமானவை. நன்றாக எழுதிய ஸ்ரீ தேவீ பாகவத கிரந்தத்தை ஸ்வர்ண ஸிம்மாஸனத்தில் வைத்து பீதாம்பரத்தால் அலங்கரித்து அஷ்டமி தினத்திலோ, மஹாநவமி தினத்திலோ, அதை ஸ்ரீ தேவீ பாகவத கதாப் பிரவசனம் செய்துவந்த ஆசார்யனுக்கு தானமாகக் கொடுத்துவிடவேண்டும். அவ்விதம் செய்தால் யஜமானன் ஸகலவிதமான போக போக்யாதிகளை அனுபவிப்பதுமல்லாமல் முடிவில் பரம புருஷார்த்தமாகிற மோக்ஷத்தையும் அடைவான். லோகத்தில் மந்திர தந்திரக்ஞானான ஸத்குருக்கள் எவ்வளவோ பேரிருக்கிறார்கள். எல்லோரைக் காட்டிலும் இந்த தேவீ பாகவதம் என்ற மஹா புராணத்தையறிந்து தேவீ பக்தியோடு இதை ஜனங்களுக்கு சிரவணம் செய்துவைக்கிற வித்வான் குருக்களுக்கும் குரு ஆகின்றான். இந்தப் புராணத்தைச் சொல்லும் புராணிகர் வியாஸ பீடத்தில் அமர்ந்து பிரவசனம் செய்கிற காலத்தில் வேறு எந்த மஹானுபாவன் அந்த சபையில் வந்தாலும் புராணிகரைத் தவிர கேட்கும் ஜனங்கள் யாருக்கும்

வந்தனுதிகளைச் செய்யக்கூடாது. பக்தியில்லாமல் இந்தப் புராணக் கதையை சிரவணம் பண்ணிஞல் அவர்களுக்கு கதாச்ரவண பலம் இல்லாததோடுகூட துக்கமும் தாரித்ரியமும் விருத்தியாகும்.

உபவாஸாதி நியமங்களோடு இந்தக் கதையைக் கேட்க வேண்டும். புராணிகர் அமர்ந்திருக்கும் ஆஸனத்தைக் காட்டிலும் மேலான ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு இந்தக் கதையை பக்தியில்லாமல் எந்த மனிதர்கள் கேட்கிருர்களோ அவர்கள் அடுத்த ஜன்மத்தில் காக்கைகளாகப் பிறந்து நரக துக்கத்தை அனு பவிப்பார்கள். கதாப்ரவசனம் செய்கிற புராணிகர் புராணம் சொல்லிக்கொண்டு வருங்காலத்தில் எந்த மனிதன் ஆபாஸமான கேள்விகளைக் கேட்டு அவரை அநாதரவு செய்கிருனே அவன் அடுத்த ஜன்மத்தில் கழுதையாகவும், ஒட்டகமாகவும் பிறந்து கஷ்டப் படுவான். இந்தப் புராணத்தை ரஸமில்லாதது என்று நிந்திக் கிறவனும், இந்தப் புராணத்தைச் சொல்பவர்களை தூஷிக்கிற வனும், நூறு தடவை நூறு ஜன்மம் நாய்களாகப் பிறப்பார்கள். ஸமானமான ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு கதையைக் கேட்ப வர்களுக்கு குருதல்பகமனம் செய்த பாவம் ஏற்படும். புராணி கருக்கு நமஸ்காரம் செய்யாமல் கதையைக் கேட்கிறவர்கள் விஷ விருக்ஷங்களாகப் பிறப்பார்கள். சயனம் செய்துகொண்டு கேட்ப வர்கள் மலைப்பாம்பாகப் பிறப்பார்கள். ஸ்ரீ தேவீ பாகவதக் கதையையே தங்கள் வாழ்நாளில் ஒரு தடவையாவது கேட்காத ஜனங்கள் அடுத்த பிறவியில் காட்டுப் பன்றியாக பிறப்பார்கள். தேவீ பாகவதக் கதையை ஆமோதிக்காதவர்களும் அந்தக் கதைக்கு விக்னம் பண்ணுகிறவர்களும் அநேக காலம் நரக துக்கத்தை அனுபவித்து விட்டுப் பின்பு பன்றியாகப் பிறப்பார்கள். ஆஸனம் பாத்திரங்கள் பொருள் கறிகாய்கள் திவ்யவஸ்திரங்கள் கம்பளங்கள் இவற்றை இந்தப் புராணத்தை யறிந்த வித்வான்களுக்கு எவர்கள் தானம் பண்ணுகிருர்களோ அவர்களுக்கு அபராஜிதமான வைகுண்டத்திலேயே நித்திய வாஸம் ஸித்திக்கும். இந்தப் புராண புஸ்தகத்திற்குப் பட்டுவஸ்திரத்தை பரிதானமாகச் செய்து அலங் கரிக்கிறவர்கள் நித்தியஸூரிகளாக விளங்குவார்கள். மற்ற எந்தப் புராணங்களை சிரவணம் செய்தாலும் அதனுல் எவ்விதமான பலம் ஸித்திக்குமோ அதைக் காட்டிலும் நூறுமடங்கு அதிகமான மஹா பலத்தை ஸ்ரீ தேவீ பாகவத கதா சிரவணத்தால் அடையலாம்.

நதிகளுக்குள் கங்கையைப் போலவும், தேவதைகளுக்குள் பரமேச்வரனைப் போலவும், காவ்யங்களுக்குள் ஸ்ரீமத் ராமா யணத்தைப் போலவும், ஜோதியோடு கூடின பொருள்களுக்குள் சூரியனைப் போலவும், மனிதர்களுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிற பொருள்களுக்குள் சந்திரனைப் போலவும், வேத தர்ம சாஸ்திரங் களுக்குள் சிரத்தையுள்ளவர்களுக்கு யசஸ்ஸைப் போலவும், பொறுமையுள்ளவர்களுக்குள் பூமியைப் போலவும், கம்பீரமான பொருள்களுக்குள் ஸமுத்திரத்தைப் போலவும், மந்திரங்களுக்குள்

காயத்ரியைப் போலவும், பாபத்தை த்வம்ஸம் செய்கிற விஷயத்தில் மஹாவிஷ்ணுவைப் போலவும், பதினெண் மஹாபுராணங்களுக்குள் ஸ்ரீ தேவீ பாகவதமானது உயர்ந்த புராணமாகும். எவ்விதமான உபாயத்தாலாவது மனிதன் தன்னுடைய ஆயுளுக்குள் ஒன்பது தடவை நவாஹயக்ஞ விதியை அனுஸரித்து சிரவணம் செய்து விட்டால் அந்தப் புண்யவான் ஜீவன்முக்தன் என்பதில் ஸந்தேகமே யில்லை. ராஜ பயம், சத்துரு பயம், மஹாமாரி பயம் முதலிய கெட்டகாலங்களில் ஸ்ரீ தேவீ பாகவத கதா சிரவணம் மிகவும் அவசியமானது. ராஜ்யலாபத்திற்கோ, புத்திரலாபத்திற்கோ ஸ்ரீ தேவீ பாகவத கதா சிரவணத்திற்கு நிகராக மற்றொன்றைச் சொல்ல முடியாது. ஸ்ரீ தேவீ பாகவதத்தை தானே படிக்கிறவனோ அல்லது ச்ரவணம் பண்ணுகிறவனோ முழு கிரந்தத்தையும் சிரவணம் பண்ண முடியாமற் போனாலும் தினந்தோறும் ஒரு சுலோகத்தையாவது அல்லது பாதி சுலோகத்தையாவது பாரா யணம் செய்து வந்தால் போதுமானது. ஸாக்ஷாத் பரதேவதையே பாதி சுலோகத்தால் தேவீ பாகவத மஹா புராணத்தை பிரசம்ஸை செய்திருக்கிறார்கள். அதனுடைய தாத்பர்யந்தான் சிஷ்யர் மூலம் பன்னிரண்டு ஸ்கந்தமாக வெளியில் ப்ரகாசப்படுத்தப் பட்டிருக் கிறது. காயத்திரிக்கு ஸமானமான தெய்வமும் இல்லை; காயத்திரிக்கு ஸமானமான மந்திரமும் இல்லை. ஸ்பஷ்டமாக காயத்ரியை உச்சாரணம் செய்து ஜபம் செய்கிறவனை அந்த காயத்ரியானவள் ஸகலவிதமான ஆபத்துக்களிலிருந்தும் ரக்ஷிக்கிறாள். ஆகையினாலே தான் அந்த தேவிக்கு காயத்திரீ என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. அந்த காயத்திரீ தேவதையானவள் இந்த பாகவதத்தில் உத்கோஷிக்கப்படுகிறாள். காயத்திரீ ரகஸ்யம் என்ற அதி கோப்யமான ஒரு தத்துவமும் இந்த பாகவதத்தில்தான் பிரகாசப் படுத்தப் படுகிறது. ஸ்ரீ தேவிக்குப் பரம ப்ரீதியை உண்டு பண்ணுகிற இந்த தேவீ பாகவதத்தின் பதினாறில் ஒரு கலையைக் கூட அனுஸரிக்க முடியாது. இந்த ஸ்ரீதேவீ பாகவதமென்ற மஹா புராணமோ பிராம்மணோத்தமர்களுக்குக் குலதனமாக ஏற்பட்டது; நாராயண மஹரிஷியினால் வெளியில் பிரகாசப்படுத்தப் பட்டது.

காயத்திரீ ரஹஸ்யம், மணித்வீப வர்ணனை, ஸ்ரீதேவியான பராம்பிகை பர்வத ராஜனை தன் பிதாவுக்கு உபதேசம் செய்த கீதா ஸாரம் (தேவீ கீதை) மற்றும் இதுபோன்ற ரஹஸ்ய விஷயங் கள் பல இந்த தேவீ பாகவதத்தில் பிரகாசப்படுத்தப் பட்டிருக் கின்றன. இந்த மஹாபுராணத்திற்கு ஸமமான சாஸ்திரம் ஒன்றுமே இல்லை. ஸ்ரீ தேவீ பாகவதத்தினுடைய பெருமையை பிரம்மாவே இன்னும் அறியவில்லை; மஹாவிஷ்ணுவும் அறிந்தவர் அல்லர்; பரமசிவனுக்கும் தெரியாது; ஆதிசேஷ பகவானும் அறிந்தவர் அல்லர். தேவர்களும் ஸ்ரீ தேவீ பாகவதத்தினுடைய பெருமையின் அம்சத்தினுடைய அம்சத்தையே அறிந்தவர் என்று சொல்லலாம். தேவியினுடைய திருப்பாதத்தில் ஸம்பந்தப்பட்ட தூளியைக் கொண்டுதான் பிரம்மா ஜகத்தை சிருஷ்டிக்கிறார்; மஹாவிஷ்ணுவும்

தேவியினுடைய பாததூளியின் பெருமையினுல் ஜகத்தை ரக்ஷிக்கிருர்; ருத்ரனும் பராசக்தியினுடைய சரணுரவிந்தத்தில் ஸம்பந்தப்பட்ட தூளியை விபூதியாக தரித்துக் கொண்டுதான் ஜகத்தை ஸம்ஹாரம் செய்கின்ருர். அமிர்த சாகரத்தின் நடுவில் கற்பக விருக்ஷ நந்தவன மத்யப்பிரதேசத்தில் 'மணித்வீபம்' என்ற த்வீபத்தில் 'சிந்தாமணி' என்ற ரத்னத்தால் இழைக்கப் பட்ட மனோகரமான கிருஹத்தில் 'மஹா பிந்து' என்ற காமேஶ்வர னுடைய மடியில் வீற்றிருந்தருளும் ஜகதீஶ்வரியை புண்யவான் களான உபாஸகர்கள் தங்களுடைய ஹிருதயத்தில் தியானம் பண்ணுகிருர்கள். அந்தப் புண்யவான்களுக்குத்தான் போகமும் மோக்ஷமும் கைகூடும். பிரம்மா, விஷ்ணு, ஈஶ்வரன், இந்திரன் மற்றும் மஹரிஷிகள் முதலானவர்களால் உபாஸிக்கப்படுகிற மணித்வீபத்தில் வசிக்கும் பரதேவதையானவள் ஜகத்தினுடைய க்ஷேமத்தின் பொருட்டு எப்பொழுதும் பிரஸன்னமான முகத்தோடு விளங்கி வரவேண்டும்!

---



**श्री राजराजेश्वरी**

वन्दे मातर मम्बिकां भगवतीं वाणीरमासेवितां,
कल्याणीं कमनीयकल्पलतिकां कैलासनाथप्रियाम् ।
वेदान्तप्रतिपाद्यमानविभवां विद्वन्मनोरञ्जनीं,
श्रीचक्राङ्कितरत्नपीठनिलयां श्रीराजराजेश्वरीम् ॥

உ

ஸ்ரீ கோமதி சங்கர சகாயம்

# ஸ்ரீ தேவீ பாகவதம்

## पराशक्ति स्तुतिः ॥

यामाराध्य विरिञ्चिरस्यजगतः स्रष्टा हरिः पालकः
संहर्ता गिरिशस्स्वयं समभवत् ध्येया सदा योगिभिः ।
यामाद्यां प्रकृतिं वदन्ति मुनयः तत्वार्थ विज्ञाःपराम्
तां देवीं प्रणमामि विश्वजननीं स्वर्गाऽपवर्गप्रदाम् ॥
यास्वेच्छयाऽस्य जगतः प्रविधायसृष्टिं
संप्राप्य जन्म शतथा पतिमापशंभुम् ।
उग्रैस्तपोभिरपि यां समवाप्य पत्नीम्
शंभुः पदं हृदिदधे परिपातु सा नः ॥

## பராசக்தி வணக்கம்

பிரம விஷ்ணு ருத்திரர்கள் எந்தப் பராசக்தியைப் பூஜித்து இவ்வுலகிற்கு முறையே படைத்தல் காத்தல் அழித்தலாகிய அதிகாரங்களைப் பெற்றார்களோ, பரமயோகிகளால் எந்த ஆதிசக்தி சொரூபமானது எப்பொழுதும் தியானிக்கத் தகுந்ததோ, தத்வார்த்த முணர்ந்த மஹரிஷிகள் எந்தப் பராசக்தியை முதற் காரணமாகக் கூறுகின்றனரோ, அங்ஙனமான போகமோக்ஷங்களைத்தரும் பிரபஞ்ச மாதாவாகிய அம்பிகையை நமஸ்கரிக்கின்றேன்.

எந்த அம்பிகை தனதிச்சா சாமர்த்தியத்தினுல் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்றனளோ, எந்தத் தாக்ஷாயணி பர்வதராஜ புத்திரியா யவதரித்து உக்ரமான தபோபலத்தினுல் பரமசிவனைப் பதியாக அடைந்தனளோ, எந்தப் பார்வதியைப் பரமசிவன் பத்தினியாகக்கொண்டு அவளது பாதத்தை இருதயத்தில் வைத்துக் கொண்டனரோ அப்படிப்பட்ட தேவி நம்மைக் காப்பாற்றுக.

ॐ सर्वचैतन्यरूपां तामाद्यां विद्यां च धीमहि । बुद्धिं या नः प्रचोदयात् ॥

# முதல் ஸ்கந்தம்

कारणपरचिद्रूपा काञ्चीपुरसीम्नि कामपीठगता ।
काचन विहरति करुणा काश्मीरस्तबककोमलाङ्गलता ॥ १ ॥

காரணபரசித்ரூபா காஞ்சீபுரஸீம்நீ காமபீடகதா
காசன விஹரதி கருணு காம்மீரஸ்தபககோமளாங்கலதா.

ஓம் ஸதாசிவ குடும்பின்யை நம:

## 1. சவுனகர் வினு

சவுனகர் சொல்லுகின்ருர் :—சூதமுனிவரே ! நீர் சுபகரமான புராணங்களுள் அடங்கிய ஸம்ஹிதைகளைக் கற்றுணர்ந்தவரா யிருக்கின்றபடியால் நீரே மஹா புண்யபுருஷர், மஹானுபாவர், மஹா பாக்கியசாலி, ஸத்யவதீ புத்திரராகிய வியாசமுனிவர் முகமாய்ச் ஸம்ஹிதைகளே யன்றி பஞ்சலக்ஷண முள்ளதாயும், அதிக ரகசியத்துடன் கூடினதாயும், ஜ்ஞானப்பிரதமாயும், திவ்ய (மனசுக்கு ரம்ய)மாயும் இருக்கின்ற *சகல புராணங்களையும் கற்றுணர்ந்தவர். (1–3)

(இத்தகைய சிறப்புவாய்ந்த தேவரீர்) எங்களுடைய புண்ய சம்பந்தத்திஞல், மஞேகரமாயும், நம்பத்தகுந்ததாயும் புண்ய ரூபமாயும், கலிதோஷத்தைப் போக்குவதாயும், மிகவும் உத்தமமாயுமுள்ள இவ்விடம் வந்தடைந்தீர். ஓ ஸர்வஜ்ஞரே ! தாபத்திரய மில்லாதவரே ! மஹா பாக்யசீலரே ! நீர் நீடுழி கால மிருக்க

* சகல புராணங்களென்றது - உபபுராணங்களை. இம்மூன்று சுலோகங்களால் முறையே சவுனக முனிவரையுள்ளிட்ட முனிவர்களெல்லாம் சூதமுனிவரைப் போதகாசிரியராகக் கொண்டனராகையால் அக் கொள்கை தோன்ற மஹா புண்ய புருஷர், மஹானுபாவர், மஹா பாக்யசாலி என ஒவ்வொரு பதத்தையும் உபசர்க்கத்துடன் புகழ்ந்தும், (எனவே - அடை மொழியினல் சொல்லப்படுபொருளை வேருெரு பொருளைக்கொண்டு வலி யுறுத்தியும்) அவர் அனுக்கிரஹ சாமர்த்திய முடையவரென்பது தோன்றச் சகல புராணங்களடங்கிய ஸம்ஹிதைகளைக் கற்றுணர்ந்தவரெனவுங் கூறிஞர்.

இவற்றுள் புராணங்களுள் அடங்கிய சம்ஹிதைகளை முன்னும், அதன் பின் பதினெண்புராணங்களையும், அதன்பின் உபபுராணங்களையும் உணர்ந்தவரென்றது என்னையோவெனின் - உபபுராணங்கள் புராணங்களை வலியுறுத்துவன. அப்புராணங்கள் ஸம்ஹிதைகளைத் தலைமையாகக்கொண்டு தழுவி யிருப்பன. ஏனெனின் "ம்ருதிஸம்ஹிதாமிதி ஸகல ம்ருத்யர்த்த சங்கிரஹாத்மிகாம்" என்பது பிரமாணமாகலான் அத்தலைமைபற்றி அங்ஙனம் கூறியதென்க. ஆயின் ஸம்ஹிதைகளையும் புராஞேப புராணங்களையும் உணர்ந்தவரென்று கூறிஞரேயன்றி வேதங்களை யோதி யுணர்ந்தவரென்று கூருதது என்னையெனின், புராணுதிகளை யுணராது வேதம் மாத்திரம் உணர்ந்தவன் வேதத்தைத் துன்பஞ் செய்கிறவனென்றும், புராணங்கள் உணர்ந்தவன் வேதப் பொருளை யுணர்ந்தவனென்றும் கூறியிருத்தலான் புராணங்களைக் கற்றுணர்ந்தவரென்று கூறவே வேதங்களையும் அறிந்தவரென்றே கொள்ளக் கிடக்கின்றது. புராணங்களின் சிறப்புத்தோன்ற வியாச முனிவரால் சொல்லப்பட்டதெனவும், பஞ்சலக்ஷண முடையதெனவும், சகல ரகசியங்களுடன் கூடினதெனவும் சூதமுனிவர் சிறப்புத்தோன்ற புராணங்கள் உணர்ந்தவரெனவும் கூறியதென்க.

வேண்டும். இங்கிருக்குங் கூட்டத்தவராகிய முனிவர்களெல்லாரும் பெரும் புண்ணியத்தைத் தருவதாகிய புராண ஸம்ஹிதைகளைக் கேட்க விருப்பமுள்ளவர்களாயிருக்கின்றனர். ஆகையால் வேதத்துக்குச் சமானமாயுள்ள அப்புராணங்களைச் சொல்லவேண்டுமென்கிற கருத்துடன் கூறவேண்டும்.* (4–6)

ஓ சூதமுனிவரே! சுரோத்ரேந்திரியத்துடன் கூடினவர்களாயும், அறுசுவையறிவதில் சமர்த்தர்களாயும் இருக்கின்ற எந்த மானிடர் † புராணங்களைக் கேட்கிறதில்லையோ, அவர்கள் தெய்வத்தினுல் வஞ்சனை செய்யப்பட்டவர்களன்றோ ? (எனவே, கேட்கும் புண்ணியமாகிய ஊழ் இல்லை யென்றபடி.) காதில்லாமலிருக்கிற சர்ப்பங்களே ஆகாயத்தின் குணமாகிய சப்தபேதங்களால் மிகவும் பிரமிக்கின்றன என்ருல், மானிட யாக்கையைப் பெற்றவர்கள் சத்வாக்கியங்களைக் கேளாராயின் கேட்குங் காதுகளைப் படைத்தவராயினும், அவர்கள் எவ்வாற்ருனுங் காதுகளைப் படையாதவர்களே. (சிறியோர்களுக்கு) அறுசுவைகளால் எப்படி ஜிஹ்வேந்திரியானந்தம் உண்டாகிறதோ அப்படியே பெரியோர்களுக்குச் சத்வாக்கியங்களால் சுரோத்ரேந்திரியானந்தம் உண்டாகிறதென்று சொல்லப்படுகிறது.

ஆகையால், சாந்தரான ஓ சூதபகவானே! இம்முனிவர்களெல்லோரும் இக்கலியினது கொடுமையை எண்ணிப் பயந்தவர்

---

* இம்மூன்று சுலோகங்களால் முறையே புண்ணிய வசத்தால் நைமிசாரண்யங் கிடைத்ததுபோல் நீரும் கிடைத்தீரென வருகையைக் கூறி அவரை மகிழ்வித்தனரெனவும், நைமிசவனமும் முனிவராகிய நீரும் கிடைக்கப்பெற்ற புண்ணியத்தின் பயன் புராணங் கேட்பதே யாமெனத் தமது அநுக்ரஹ சீலமுடைமையைப் புலப்படுத்தி அவரைக் கருத்துடையவராய்ச் சொல்லவேண்டுமென்று கேட்டனரெனவும், உம்மால் எங்களுக்குக் கிடைக்கப்படுவதாகிய செவிச்செல்வம் எந்நாளும் நீங்காதிருக்க வேண்டுமெனத் தமது அன்புடைமையைக் காட்டி அவரை நீடூழிகாலம் இருக்க வேண்டுமென்று வாழ்த்தினரெனவுங் கொள்ளற்பாற்று.

† அவர்கள் வேறு சில கேட்கின்ருர்களே என்பவரை மறுத்தற்கு 'ஸகர்ணயேந ம்ருண்வந்தி தேப்யகர்ணு: கதஞ்சந' என்ருர். இதனுல் அவர்கள் அர்த்தமில்லாத சொல்லைக் கேட்கின்றவர்கள் என்றபடி. அர்த்தமில்லாத சொல்லென்றது கேட்கப்படு நூற்பொருளமையாத சொல். அச்சொல் மாத்திரங் கேட்பராயின் பொருள் விளங்குவதும்,'கேட்கப்படு நூற்பொருளமைந்த சொல்லைக் கேட்பராயின் பொருள் விளங்காமையுமான செவியைப் படைத்தவர்கள். ஆகலான் இவர்கள் செவியுடையவர்களாயினுஞ் செவி யில்லாதவர்களே. இதனை "கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற் ருேட்கப்படாதசெவி" எனவே கேள்வியால் துளைக்கப்படாத செவிகள் தம் புலமாகிய வோசைமாத்திரங் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையவேயாம். ஏனெனின் ஓசை மாத்திரத்தான் இம்மை மறுமைப் பயனுகிய உறுதி யடையாமையின் "கேட்பினுங் கேளாத்தகையவே" என்ருர். கேள்வி என்பது உட்டுளையையுடைய காதினை மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்குங் கருவி என்று கூறியிருத்தலாற் காண்க.

களாய்ப் புராணங்களைக் கேட்க வேண்டுமென்கிற சிரத்தையோடு இந் நைமிசாரண்ணியத்தில் வசிக்கின்றார்கள்.* (7–10)

இவ்வுலகின்கண் காலம் ஏதாவது ஒருபாயத்தினுற் கழிக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. (அதுபோலவே) மூர்க்கர்களுக்கு † வியசனத்தினாலும் பண்டிதர்களுக்குச் சாத்திர சிந்தனையினாலும் கழிக்கப்படுகிறது. சாஸ்திரங்கள் விசித்திர மாயும், ‡ ஜல்பவாதங்களுடன் கூடினவைகளாயும், ஏதுக்க

* இந்நான்கு சுலோகங்களுள் முதலாவது அநுக்கிரஹ சாமர்த்திய முடைய உம்மை யாங்கள் அடையப்பெற்றும் புராணார்த்தங்களைக் கேளா தொழிவோமாயின் தொன்றுதொட்டுவரும் புண்ணியமில்லாதவரென்றும், அதனால் கேள்வி கேட்கும் புண்ணியத்தைத் தெய்வங்கூட்டாதொழிந்தது என்றும், அறிஞரால் இழித்துரைக்கப்படும் பழிப்புரை கூறப்பெறுவோம். ஆகலின் அது பெருவண்ணஞ் செய்யவேண்டு மென்றுணர்த்த "வஞ்சிதா விதிநாஹிதே" எனவும், இரண்டாவது, நீர் கற்றுணர்ந்த கல்விகளெல் லாம் உணரும் அதிகார சீலமுடையவரா யிருக்கின்றோம். எம்பால் உம் முடைய சாஸ்திரத்தை மொழியீராயின் உமக்கு உலகின்கண் பிரகாசமின் றாம். ஆகலின் அவ் வப்பிரகாசம் உமக்கு உண்டாகாவண்ணஞ் சொல்ல வேண்டுமென்றுணர்த்த "ஸூதியாம் வசோபி: ஶ்ரோத்திரேந்த்ரியா ஹ்லாத: ஸ்ம்ருத:" எனவும், மூன்றாவது தொன்று தொட்டுவரும் புண்ணியமில்லாதவர்கள் என்கிற பழிப்புரை வருவதேயன்றி அர்த்தமில் லாத சொல்லை மாத்திரங் கேட்குஞ் செவியைப் படைத்தவர்கள்போல் இவர் களும் அவிவேகிகளென்றும் எங்களை யாவரும் அநாதரண்யஞ் செய்வார் களென்றுணர்த்த "ஸகர்ணயே நஶ்ருண்வந்தி தேப்யகர்ண: கதஞ்சன" எனவும், நான்காவது யாவராலும் புகழுரையும் ஆதரணீயமும் உண்டாக வேண்டுமென்கிற எண்ணமேயன்றிக் கலிபீடா நிவாரணம் உண்டாக வேண்டுமென்கிற ஆஸக்தியையும் உடையவர்களா யிருக்கின்றோம் என்ப துணர்த்த "அதஸ்ஸர்வே த்விஜாஸ் ஸௌம்ய ச்ரோது காமாஸ் ஸமாஹிதா:" எனவுங் கூறினார்.

† விசனமாவது, காமந்தக: "மிருகயாக்ஷோ திவாஸ்வாப: பரிவாத ஸ்திரியோமத: தவுர்யத்ரிகம் வ்ருதாடாட்யா காமஜோ தசகோகுண:" என வருதலாற் காண்க. மிருகயா - வேட்டையாடுதல், அக்ஷ: - சொக்கட்டா னுடுதல், திவாஸ்வாப: - பகற்பொழுது தூங்கல், பரிவாத - அபவாதங் கூறுதல், ஸ்திரிய: - எப்பொழுதும் மோஹத்தினுல் பெண்களோடு கூடி யிருத்தல், மத: - செருக்கடைந்திருத்தல், தவுர்யத்ரிகம் - ஆடலைப்பார்த்தல், பாடலைக்கேட்டல், வாத்தியங்களை வாசித்தல், வ்ருதாடாட்யா-எப்பொழுதும் வீணைகச் சஞ்சரித்தல் இப்பத்தும் மூர்க்கரிலக்கணம். ஆடலென்பது பதத்தி னர்த்தத்தைக் காட்டுவதாகிய அபிநயம். இதனுல் மூர்க்கர்களுக்கு இங் ஙனம் கூறிய வகையான காலம் போவதுபோல் எங்கள் காலம் போகாது. சாஸ்திர சிந்தனையிலேயே போகவேண்டுமென்று குறித்ததென்க.

‡ ஜல்பம் - பரபக்ஷத்தை நிராகரித்து சுபக்ஷஸ்தாபனஞ் செய்தல், வாதம் - ப்ராமாண்ய பலத்தின் உண்மையை அறியவேண்டுமென்கிற விருப்பங்கொண்டு பரபக்ஷத்தாரோடு சம்பாஷித்தல். அர்த்தவாதம் - 'நியாய சித்தாந்த மஞ்சர்யாம் ஆகாக்ஷவாத: விரோதே குணவாதஸ்யா தநுவாதோவதாரிதே, பூதார்த்தவாத ஸ்துத்தாநாதர்த்தவாதஸ்திரிதா மத:" என்றபடி குணவாதம், அநுவாதம், பூதார்த்தவாதம் என மூன்று வினையாகப் பிரிந்திருக்கின்றது. இதனுல் சாஸ்திர புராணுதிகள் முக்குண

ளுடன் கூடினவைகளாயும், மிகவும் பெரிதானவைகளாயு முள் ளன. (அவைகளில்) வேதாந்தம் சாத்வீகமெனவும், மீமாம்ஸம் இராஜசமெனவும், தர்க்கம் தாமசமெனவும் ஏது வாதங்களால் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. வேதாந்தாதிகளுக்குக் கூறிய படியே புராணங்களும் முக்குணங்களுடையன வென்றும் சர்க்கம் பிரதிசர்க்கமாகிய ஐந்திலக்கணங்களுடையன வென்றும் உம்மால் கதா ரூபமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. (11–14)

அவற்றுள், பாகவதம் மிகவும் புண்யத்தைத் தருவ தாயும், வேதத்துக்குச் சமானமாயும், ஐந்தாம் வேதமென்னும் பெயருடையதாயும், எல்லா லக்ஷணங்களோடு கூடினதாயும் உள்ளது என்று உம்மால் முன்னம் கூறப்பட்டிருக்கின்றது. இந்தப் பரமாற்புதமாகிய பாகவதம் எண்ணிய மாத்திரத்தில் முமுக்ஷுக்களுக்கு மோக்ஷப்பிரதமாயும் அப்படியே தர்ம காம சிந்தனையுடையவர்களுக்குத் தர்மகாமப்பிரதமாயும் இருக்கிற தென்றும் சொல்லியிருக்கின்றீர். (15–16)

ஆகையால் யாங்களனைவரும் நூல்களிற் சிறந்து அறம் முதலியன தரும் சுபகரமாகிய இந்த உத்தமமான பாகவ தத்தைக் கேட்க ஆசையுடையவரா யிருக்கின்றோம். ஓ தர்மபரி சீலனரே! நீரொருவர்தாம் வியாசரால் உபதேசிக்கப்பட்ட புராண ஸம்ஹிதைகளை நன்குயறிந்தவர். (அன்றியும்) *குருபக்தியிற் சிறந்தவர். (அதனால்) சத்வகுணங்களுக்கெல்லாம் வாசஸ்தான மாக விருக்கின்றீர். ஓ சர்வஜ்ஞரே! உம்முடைய திருவாக்கினின் றும் வெளிப்பட்ட வேறு சில புராணங்களை யாங்கள் கேட்டவர் களாயிருந்தும் தேவர்கள் எங்ஙனம் அமிர்தபானம் செய்வதில் திருப்தியடைந்திலரோ அங்ஙனமே இப்பொழுது சிறிதும் திருப்தி யடைந்திலம். (எனவே தேவர்களுக்கு அமிர்தம் உண் பதில் நீங்காத விருப்ப முண்டாவதுபோல எங்களுக்குப் புராணங்களைக் கேட்பதில் நீங்காத விருப்பம் உண்டாகிறது.) ஓ சூதரே! அமிர்தபானம் செய்யும் தேவர்களுக்கு அந்த அமிர்த பானத்தால் முக்தியென்பது ஒரு ஞான்றும் அந்தோ, உண்டாவதே இல்லை. பாகவதமென்னும் அமிர்தத்தைப் பானம் செய்யும் மக்கட் பிறப்பினர் அக்கணமே சங்கடத்தினின்றும் விடுபடுகின்றனர். எனவே அமிர்தபானம் நரை திரை மூப்பைப் போக்குவதே யன்றி முக்தியைத் தருவதன்று. அதனால் அது துச்சம். பாகவத மென்னும் அமிர்தத்தைக் கேட்பது நரை திரை மூப்பைத் தருவதாகிய தேக பந்தத்தை யொழித்து முக்தியை அக்கணமே தரும் அதிசயத்தை யுடைத்து. (17–20)

---

சம்பந்தமுடையனவாயும் பஞ்ச லக்ஷணங்களோடு கூடினவைகளாயும் இருக்கின்றனவென்று குறிக்கப்பட்டன.

* குருபக்தி யுடையவர்க்கே குணசீலத்வமும் அதனால் தர்ம சிந்தனை யும் உண்டாம். இவ்விரண்டு முடைமையான் சற்குருலாபமும் அந்த லாபத்தால் சாஸ்திரஞானமும் உண்டாம் எனுமுறைமைகள் விளங்கின.

ஓ சூதரே! யாங்கள் அமிர்தபானம் உண்டாம் வண்ணம் எண்ணிறந்த யாகங்கள் செய்தனம். அங்ஙனஞ் செய்தும் யாங்கள் ஒரு சிறிதும் சாந்தியடைந்தோமில்லை. (எனவே) யாகங்களால் எங்கள் மனம் உபசாந்தியடைந்த (ஜனன மரண துக்கம் நீங்கிய)தில்லை. யாகத்திற்குப் பலன் ஸ்வர்க்கத்தை யடைவதும் மீளவும் அச் சொர்க்கத்தினின்றும் அதப்பதனமாவதும் இயற்கை. இவ்வாறே இச்சம்சார சக்கரத்தில் மாறிமாறிச் சுழன்றிருப்பதே நிரந்தரமாயுள்ள செயல். இதனால் ஒரு சிறிதுஞ் சாந்தியடைந்தோமில்லை. ஓ ஸர்வஜ்ஞரே! திரிகுணாத்மகமான இக்கால சக்கரத்திற் சுழன்று கொண்டிருக்கின்ற ஆன்மாக்களுக்கு ஞானஜ்ஞேயமின்றி ஒரு பொழுதும் முக்தியுண்டாவதேயில்லை. (எனவே) ஞானத்தினால் கர்மநிவிர்த்தி யுண்டாமன்றி யாகாதி கிருத்தியங்களால் அஃதுண்டாவதில்லை. ஆகையால் எல்லா ரசங்களோடு கூடினதாயும் புண்ணிய சொரூபமாயும் பரிசுத்தமாயும் முக்தியைத் தருவதாயும் ரகசியமாயும் முமுக்ஷுக்களுக்கு எப்பொழுதும் விருப்பமாயும் உள்ள பாகவதத்தைச் சொல்லியருளும். (21–24)

ஓம் ஸகலாதிஷ்டான ரூபாயை நம:

## 2. கிரந்தசங்கியை

சூதர் கூறுகின்றார்:—ஓ முனிவர்களே! மஹான்களாகிய நீவிர் என்னைப் பார்த்து மஹா புண்யத்தைத் தருவதாயும், வேதங்களில் முறையிடப்பட்டதாயும் உள்ள தேவீ பாகவத புராணத்தைச் சொல்லுமென்று கேட்டதனால், யான் தந்யனாயினேன், மஹா பாக்யசாலியாயினேன், பரிசுத்தனுமாயினேன். ஓ அந்தணர்களே! மிகவும் மேன்மையுடையதாயும் மனோகரமாயும் முக்திப்ரதமாயும் பிரமனாதியரால் சேவிக்கப்பட்டதாயும் தோத்திரஞ் செய்வதில் ஆசையுடையவர்களான முனிவர்களால் எப்பொழுதும் தியானிக்கத் தக்கதாயுமுள்ள அந்தப் பராசக்தியின் பாதாரவிந்தத்தை வணங்கி அதிகாரமுள்ளதாயும் உத்தமமாயும் எல்லா ரசங்களுக்குமிருப்பிடமாயும் சகல வேதார்த்த சம்மதமாயும் சகல சாஸ்திர சம்மதமாயும் ஆகமங்களுக்குள் உத்தமமாயும் தேவியினுடைய நாமத்தினால் பிரசித்தி பெற்றதாயும் உள்ள ஸ்ரீ தேவீ பாகவத புராணோத்தமத்தை அன்புடன் விரிவாய்ச் சொல்லுகின்றேன்.* (1–3)

---

* "மஹாத்மபி:" என்றதனால் முனிவர் சிறப்பும், "மஹத்புண்யம் வேதவிஂருதம்" என்றதனால் புராணச் சிறப்பும், "தன்யோஹம்-அதிபாக்யோஹம் பாவிதோஹம்" என்பவைகளால் புராணத்தை எடுத்துக் கூறுவதனால் வரும் பிரயோஜனமும் கூறியவாறு.

வேதார்த்தத்திற்கும் ஆகமத்திற் கூறும் ரகஸ்யத்திற்கும் விரோதமின்மையை எடுத்துக் கூறுவது இப்புராணமென்பது தோன்ற "ஸர்வ ஶ்ருத்யர்த்தம்" "ஸர்வ ஶாஸ்த்ராணாம் ஆகமானாம் அநுத்தமம்" எனவும் வேதார்த்த சம்மதம் உள்ளது எதுவோ அதுவே நமக்குச் சம்மதமென்பது தோன்ற "ஸம்ப்ரவக்ஷ்யாமி" எனவுங் கூறினார்.

எனக்கு, எந்தப் பராசக்தியை வேதத்தில் வித்தை எனவும் ஆதியானவளெனவும், ஸர்வஜ்ஞை எனவும், சம்சார பந்தத்தைச் சேதிப்பதில் நிபுணை எனவும், சர்வாத்மாக்களுடைய இருதய கமலத்தில் வீற்றிருப்பவளெனவும், துராத்மாக்களால் அறியப்படாதவளெனவும் முனிவர்களால் தியானாஸ்பதத்தை அடைவிக்கச் செய்கின்றவளெனவுங் கூறப்படுகிறதோ அந்தப்பகவதி பிரத்தியக்ஷமாய் எழுந்தருளிவந்து எப்பொழுதும் நிர்மல புத்தியைத் தருவாளாக !* (4)

யாதொரு பராசக்தி திரிகுணாத்மகமாயிருக்கின்ற தனது சக்தியினால் சேதனாசேதனங்களாயுள்ள இந்த ஜகத்தைச் சிருஷ்டித்துக் காக்கின்றனளோ, அப்படியே கற்பாந்தத்தில் இந்த ஜகத்தைச் சங்கரித்துத் தானொன்றாகவே யிருந்து விளையாடிக் கொண்டிருக்கின்றனளோ அங்ஙனமான உலகமாதாவாகிய பராசக்தியை மனதினால் தியானிக்கின்றேன்.† (5)

---

யோகிகள் விரும்பும் முக்தியும், பிரமனாதியர் பெற விரும்பும் சிருஷ்டியாதி அதிகாரமும், முனிவர்கள் நிலைபெற விரும்பும் மனன சீலமும் எண்ணியாங்களிப்பது தேவியினது பாதகமலங்களே யாகலான் "ஸால லிதம் முக்திப்ரதம், யோகினாம்" எனவும், "பிரம்ஹாத்யைரபிஸேவிதம்" எனவும், "ஸ்துதிபரை: முநீந்த்ரை: த்யேயம்" எனவும், தேவியினது பாதம் மனோவாக்கிறந்த விடத்துத் தோன்றுவதாகலான் "தத்பத"மெனவுங் கூறினார்.

* "வித்யை ஆத்யை சர்வஜ்ஞை" என்று சிவசக்தியின் ஜ்ஞான சக்தியையும், "பவபந்தஸித்தி நிபுணா" என்று அச்சக்தியின் கிரியா சக்தியையும், "ஸர்வாம்ரயேஸம்ஸ்திதா" என்று அச்சக்தியின் இச்சா சக்தியையும், "துர்ஜ்ஞேயாஸா துராத்மபி:" என்று அச்சக்தி திரோதான சக்தியாயிருத்தலையும் "முனிபிர்த்யானாஸ்பதம்" என்று அச்சக்தி அநுக்கிரக சக்தியாயிருத்தலையும் விதந்தமை காண்க. இதனாலே சிவசத்தி, இச்சா சக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, திரோதான சத்தி, அநுக்கிரக சக்தி எனப் பஞ்ச சக்திகளாய் விவகரிக்கப்பட்டிருத்தல் காண்க.

அன்றியும், இந்தப்பொருளடங்கிய "யாவித்யேத் யபிதீயதே ம்ருதி பதே சக்திஸ்ஸதா த்யாபரா, ஸர்வஜ்ஞா பவபந்தசித்தி நிபுணா ஸர்வாம்ரயே சம்ஸ்திதா துர்ஜ்ஞேயாஸா துராத்மபிஸ்சமுநிபி:த்யா நாஸ்பதம்ப்ராபிதா, பிரத்யக்ஷாபவதீஹஸா பகவதீபுத்திப்ரதாஸ்யாத் ஸதா" என்னும் இந்த சுலோகத்தில் "யாவித்யா" என்று தொடுத்து "ஸர்வாம்ரயே ஸம்ஸ்திதா" என்று ஒரு முடிவும், "துர்ஜ்ஞேயா" என்று தொடுத்து "தியானாஸ்பதம்ப்ராபிதா" என்று ஒரு முடிவுமாகக் கூறினமையான், அப்பராசக்தியை ஞானக்கிரியா சக்தியாகவே தியானித்து என்னுடைய மன வாக்குகளுக்கு வியஞ்ஜகமாயிருந்து வேதார்த்தங்களை யறியவும் சொல்லவும் செய்ய வேண்டுமென்று வணங்கியதாமென்றுங் குறிப்பாற் கொள்ளக்கிடந்தன.

† முக்குண சம்பந்தமா யிருக்கின்ற பிரகிருதி மாயாசக்தி சிவசக்தி யாகிய பராசக்தியன்றி இயங்குவதின் றாகலான் திரிகுணாத்மகமா யிருக்கின்ற பிரகிருதிமாயையைத் தனதுசக்தி எனவும், இவ்வுலகமெல்லாந் தத்துவதாத்திகங்களாகிய சடரூபமாகவும், உயிர்வர்க்கங்களாகிய சித்ரூபமாகவுங் காணப்படுதலால் "அகிலம் ஜகதிதம் ஸதஸத்ஸ்வரூபம்" எனவும்

(ஏனென்றால்) இவ்வுலகங்களையெல்லாம் சிருஷ்டித்தவன் பிரம தேவனென்று வேதங்களைக் கற்றுணர்ந்தவராலும் பௌராணிகர் களாலும் பிரசித்தமாய் வழங்கப்பட்டிருக்கின்றது. அவர்களாலேயே அப்பிரமனும் விஷ்ணுவினுடைய நாபிகமலத்தில் உற்பத்தியானு னென்றுங் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விசாரத்தால் இவர்க ளெல்லாம் சிருட்டிக்கும் சுதந்தர மில்லாதவரென்று வெளி யாகின்றது.* (6)

விஷ்ணுமூர்த்தியென்றுலோ கற்பாந்தகாலத்தில் ஆதிசேஷ ஞகிய சயனத்தில் உறங்குகின்றுரெனவும், அவருடைய நாபிக் கமலத்தில் பிரமன் உற்பத்தியாகின்றுனெனவும், அந்த விஷ்ணு வுக்கு ஆயிரம் பணமுடிகளையுடைய ஆதிசேஷன் ஆதாரமாயிருக் கின்றுனெனவுங் கூறப்பட்டுள்ளனலன்றே ? ஆகலான் அந்தமுராரி எப்படிப்பகவானென்று அழைக்கப்படுவான் ? (7)

---

சிருட்டியாதி முத்தொழிலைச் செய்தல் பராசக்தியின் பகுதியனவாகவே கூறப்பட்ட வாமாதி சக்திகளின் காரியங்களேயாகலான் " சிருஷ்ட்வா பரி பாதிவிஸ்வம் " எனவும், முத்தொழிற்படுதல் பலமுறையாகலான் " கல் பாந்த ஸமயே " எனவும், இங்ஙனம் பலமுறையியற்றுதல் " ஐங்கலப்பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு ஓர் விளையாட்டென்பதுபோல் " மிகவெளிமையா யியற்றுவதேயன்றி அத்தொழிலால் ஒரு சிறிதும் துன்பமுறுத லில்லையாக லான் " ரமதே " எனவும், சிருட்டியாதி காரியங்களுக்கேற்ற பல சக்தி களாய்ப் பலபெயர் பெறினும் அவைகட்கெல்லாங் காரணசக்தி சிவசக்தி யொன்றேயாகலான் " ஏகா " எனவும், மக்கட்பிணியை யகற்றுந் தாய் போல் உயிர்களுக்கு மலநோயைச் சிருஷ்டியாதிகளாற் போக்கலான் "விஸ்வஜனனீம்," எனவும், பராசக்தி ஞானப்பிரதமாகலான் அச்சக்தியை ஞானத்திஞல் வணங்கலே முறைமையாகலான் " மனஸாஸ்மராமி " எனவுங் கூறினர்.

* பராசக்தியே உலகத்தைப் படைத்தாளென்பது உண்மையாயின் பெரியோரெல்லாம் பிரசித்தமாய் உலகமெல்லாம் படைத்தவர் பிரமதேவர் என்றும், அவரைப் படைத்தவர் விஷ்ணுமூர்த்தி யென்றுங் கூறுவது என்னை என்னும் பூர்வபக்ஷிகளை மறுத்தற்கு " ஸ்வதந்த்ர நஹி ஸ்ருஜதே" என்றுர். எனவே இவர்களெல்லாம் அவாந்தர காரணராவர் என்று சித்தாந்தங் கூறியதாகும். ஏனெனில் கர்த்தா எனப்படுவோர் பிறராற் படைக்கப்படாதவராயிருத்தல் வேண்டும். படைக்கப்படுவாராயின் அவர் கர்த்தாவாகார். அன்றியும் அவர் காரணத்தாற் படைப்பவரேயன்றி சங்கற்பமாத்திரத்தாற் படைக்கும் ஆற்றலில்லாதவர். அதனுல் அவர் தொழிற்குச் சுதந்தரராகார் என்றும் வலியுறுத்தினமை காண்க.

பராசக்தியை " மனஸாஸ்மராமி " என்று ஞானத்தால் வணங்கிப் பின்னர் பிரமவிஷ்ணுக்கள் காரணராகார், அவர் தியானித்தற்குறியராகார் என்றெடுத்துக் கூறியது என்னையென்றுராயின், சிருஷ்டியாதி கிருத்தி யங்களைச் செய்தல் பாராசக்தியே, இவர்களன்றெனவும், சங்கற்பமாத்தி ரையாற் படைத்தல் அச்சக்தியே, இவர்கள் ஆதாரத்தை யுடையவரெனவும் இக்காரணத்தால் பிரமனுதியர் தியானப்பொரு ளாகாராகலான் இங்ஙனம் வணங்காதொழிந்தோ மெனவும் விளக்கி, சங்கற்ப மாத்திரத்தால் யாவை யும் படைப்பவராய்த் தாமென்றேயாயிருப்பவரே தியானப்பொருளாவா ரென அறிவுறுத்தியவாறு காண்க.

*பெருவெள்ளமாகிய கடல் நீரானது ஒரு தன்மையாகிய ரசரூபமே. அந்த ரசரூபமாகிய ஜலமானது (கடலென்கிற) பாத்திரமில்லாமல் ஒருபொழுதுமிருப்பதன்று. (அதுபோல) தேவி சர்வான்மாக்களுடைய விஷயத்தில் சக்தி ரூபமாக விருக்கின்ருள். ஆகலான் அவ்வுலகமாதாவையே சரணமடைகின்றேன். (8)

கமலாசனனுகிய பிரமன் முன்னொரு காலத்தில் விஷ்ணு மூர்த்தியை யோகத்திலிருப்பவராகவறிந்து எந்தத் தேவியைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினனோ அந்தத் தேவியை நான் வணங்குகிறேன். (9)

சகுண சொரூபியாயும் நிர்க்குண சொரூபியாயும் மாயா பந்தத்தையும் முக்தியையுந் தருபவளாயுமுள்ள அப் பராசக்தியைத் தியானித்து தேவீ பாகவதமென்னும் புராண முறைகள் யாவும் இவ் விடத்தில் சொல்லுகிறேன், முனிவர்களே ! கேளுங்கள். (10)

---

* ஜலத்தினிடத்தில் சுவை எப்படிப் பிரிவில்லாம லிருக்கின்றதோ அது போலவே பிரம்ம விஷ்ணுக்களேயன்றி எல்லா வுயிர்களுடைய அறிவிலும் தொழிலிலும் பிரிவில்லாமல் அநந்நியமாய்ச் சிவசக்தியிருப்ப தென்று குறித்தமை காண்க. இதனுல் முன்னர் பிரமனுதிய அகாரணரென்றதை "ஏகார்ணவஸ்யஸலிலம்ரஸரூபமேவ" என்னும் உவமானத்தான் வலியுறுத்தியதென்க. எனவே பிரமனுதி எல்லா வுயிர்களுடைய அறிவு தொழில்கள் பல புவனங்களில் பலவாக விரிந்திருப்பனவாகலான் அவையெல்லாம் (ஏகார்ணவஸ்ய ஸலிலம்) பெருவெள்ளமாகிய கடல் நீர் போல் எனவும், அவ்வெள்ளத்தில் ஒரு பாகத்திற்ருன் அந்த ஜலத்திற்குரிய ரசமிருப்ப தென்பதின்றி முற்றுங்கலந்திருப்பதுபோல் சிலரிடத்திற்ருன் சிவசக்தி கலந்திருப்பதென்பதின்றி யாவரிடத்துங் கலந்திருந்து அவரவரறிவு தொழில்களைச் செய்விக்கின்றபடியால் "ரஸரூபம்போல்" எனவும், எல்லாருடைய தொழிலும் அச் சிவசக்தியின் செயலாக வெளிப்படவே அச்செயல் நிகழ்தற்கிடமாய் நின்ற பிரமனுதி உயிர்களெல்லாம் கடல்போல் பாத்திரமென்னும் அளவை மாத்திரையே யானுராகலான் "பாத்திரம்போல்" எனவும் கூறினர். இவ்விசாரத்தால் சிருட்டியாதி தொழிற்குரியவராகிய பிரமனுதியர் உருவங்களெல்லாம் கடல்போல் பாத்திரங்களெனவும், அவர் தொழில்களாகிய சிருட்டியாதிகளெல்லாம் அக்கடலிற்றங்கிய ஜலம்போலெனவும், அந்த ஜலத்திற்றங்கிய ரசம்போல் சிவசக்தியாகிய ரசம் கலந்திருப்பதெனவுங் கொள்ளக் கிடந்தன. கொள்ளவே யாவரும் பாத்திர ரூபம், அறிவு தொழில்கள் ஜலரூபம், அறிதற்சக்தி செய்தற்சக்தி ரசரூபம், பாத்திரத்தைவிட்டு ஜலமில்லை ஜலத்தைவிட்டு ரசமில்லை ; அதுபோலும் பிரமனுதியரை விட்டு சிருட்டியாதி தொழில்களில்லை, அச் சிருட்டியாதிகளை விட்டுச் சிவசக்தியில்லை என்றபடி. முன்னர் "உறங்குகின்றவரைத் தியானிப்பது விதியன்றென்றதையும் விஷ்ணுவாதியர்களெல்லாம் தியானித்தற்குரியராகாரென்றதையும் இச்சுலோகத்தால் வலியுறுத்திய தெனக்கொள்க. அன்றியும் இங்கு உறங்குகின்ருரென்னுது யோகத்திலிருப்பவராக வறிந்து தேவியைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினு ரென்றதனுல் திருமாலும் தம்முடைய உள்ளத்தில் பராசக்தியையே தியானிக்கின்ருரென் றுணர்ந்து தாமும் அத்தேவியையே வணங்கவேண்டுமென்று தெளிந்து பின்ருெடங்கினுரென்பதே தேற்றமெனக் கொள்க.

ஸ்ரீமத் பாகவதமென்று சொல்லப்பட்ட இப்புராணம் உத்தமமாயும் புண்ணிய ரூபமாயுமுள்ளது. இது வியாச முனிவரால் நன்ருகச் சோதிக்கப்பட்டு பதினெண்ணுயிரம் சுலோகங்களாகவும் பன்னிரண்டு ஸ்கந்தங்களாகவும் முந்நூற்றுப் பதினெட்டு அத்தியாயங்களாகவும் செய்யப்பட்டது. முதல் ஸ்கந்தம்—இருபது அத்தியாயம் ; இரண்டாவது ஸ்கந்தம்—பன்னிரண்டு அத்தியாயம் ; மூன்ருவது ஸ்கந்தம்—முப்பது அத்தியாயம் ; நான்காவது ஸ்கந்தம்—இருபத்தைந்து அத்தியாயம் ; ஐந்தாவது ஸ்கந்தம்—முப்பத்தைந்தத்தியாயம் ; ஆருவது ஸ்கந்தம்—முப்பத்தொன்றத்தியாயம் ; ஏழாவது ஸ்கந்தம்—நாற்பது அத்தியாயம் ; எட்டாவது ஸ்கந்தம்—இருபத்துநான்கத்தியாயம் ; ஒன்பதாவது ஸ்கந்தம்—ஐம்பது அத்தியாயம் ; பத்தாவது ஸ்கந்தம்—பதின்மூன்றத்தியாயம் ; பதினென்ருவது ஸ்கந்தம்—இருபத்துநான்கத்தியாயம் ; பன்னிரண்டாவது ஸ்கந்தம்—பதிஞன்கத்தியாயம் எனவும் சுலோக சங்கியைகள் பதினெண்ணுயிரமெனவும் இவ்வகையாக இப்புராணம் மஹாத்மாவான வியாச முனிவரால் கூறப்பட்டிருக்கின்றது. (11–17)

## புராண லக்ஷணம்

**புராணம் :**—சர்க்கம், பிரதிசர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சானுசரிதம் என்று சொல்லப்பட்ட பஞ்ச லட்சணங்களையுடையது.

**சர்க்கம் :**—நிர்க்குண சொரூபியாயும் எப்பொழுதும் நாசரகிதையாயும் சர்வ வியாபகியாயும் யோக சாத்யையாயும் சர்வ லோகங்களுக்கும் ஆதாரமாயுமிருக்கின்ற யாதொருசிவசக்தி துரீயப் பொருளா யிருக்கின்றதோ அப் பராசக்தி ஒரு கூற்ருனே சாத்விகம் இராஜஸம் தாமஸம் என மூன்று சக்திகளாகி முறையே சாத்விக சக்தி மஹா லக்ஷ்மி என்றும், இராஜஸ சக்தி ஸரஸ்வதி என்றும், தாமஸ சக்தி மஹா காளி என்றும் பெயர் பெறுமென்றும் அந்த மூன்று சக்திகளுடைய திருமேனிகள் சிருட்டியாதி நிமித்தம் கொள்ளப்படுமென்றும் அவர்கள் உற்பத்தியாதிகளைக் கூறுவதாகும்.

**பிரதி சர்க்கம் :**—உற்பத்தி ஸ்திதி நாசமென்னும் முத்தொழிலியற்ற பிரம விஷ்ணு ருத்திரர்களுடைய உற்பத்தியைக் கூறுவதாகும்.

**வம்சம் :**—சோம சூரியாக்கினிகளால் உற்பத்தியான இரண்யகசிபு முதலிய அசுரர்களுடைய வம்சத்தைக் கூறுவதாகும்.

**மன்வந்தரம் :**—சுவாயம்பு முதலிய பதிஞன்கு மனுக்களுடைய மன்வந்திரங்களின் மாறுபாட்டையும் அவர்களுடைய காலவளவைகளையும் எடுத்துக் கூறுவதாகும்.

**வம்சானு சரிதம் :**—மேற்கூறிய மனுக்களுடைய வம்ச சரித்திரங்களை எடுத்துச் சொல்லுவதாகும். இவ்வைந்துமே புராண லக்ஷணங்களா மென்க.

இவையன்றி வியாச முனிவர் வேத சம்மதமாயும் ஐந்தாம் வேதமாயுமுள்ள மகா பாரதமென்கிற இதிகாசமும் செய்தனர்; அஃது ஒரு லக்ஷத்து இருபத்தையாயிரம் கிரந்தங்களாம். (18–26)

சௌனகர் சூதரைப் பார்த்துக் கூறுகின்றார்:—ஓ சர்வஞ்ஜரே! நீர் முற்றுமுணர்ந்தவ ராகையால் புராணங்களென்றவை எவை? எவ்வளவு சங்கியையோடு கூடினவை? அவற்றின் விரிவையுங் கேட்க வேண்டுமென்னும் அவா வுடையவர்களாக விருக்கின்றோம். ஆகையினால் அவற்றை விரிவாய் எங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். நைமிசாரண்ய முனிவர்களாகிய யாங்களெல்லாம் கலிக்கு மிகவும் பயமுற்றனம். எங்களுக்குப் பிரமதேவர் மனோகரமாகிய சக்கரத்தைக் கொடுத்து ஆக்ஞையொன்று செய்தனர். அஃதாவது நீங்கள் யாவரும் புண்ணிய க்ஷேத்திரத்தை யுத்தேசித்து இச்சக்கரத்தின் பின்னே செல்லுங்கள். இஃது எவ்விடத்தில் சிதறி விழுகின்றதோ அந்த விடந்தான் புண்ணிய பூமி. அந்த விடத்தில் ஒரு பொழுதும் கலிதோஷம் அணுகமாட்டாது. ஆகையால் கிருதயுகம் வருமளவும் நீங்கள் யாவரும் அவ்விடத்திற்றானே தவஞ் செய்திருங்கள் என்று கட்டளை யிட்டனர். யாங்களெல்லாம் சகல தேசங்களையும் பார்க்கவேண்டு மென்கிற இச்சையினால் அவரால் சொல்லப்பட்ட கட்டளையை அங்கீகரித்து வேகமாய்ச் சுழன்று போகிற அச்சக்கரத்தின் பின்னால் சென்றுகொண்டிருந்தோம். சுழன்றுகொண்டே வந்த அச்சக்கரம் இவ்விடத்திற் சிதறி விழுந்தது. நாங்கள் அதைப் பார்த்தோம். அதனால் இந்த க்ஷேத்திரம் நைமிசமெனப் பெயர் பெற்றது. இது மகா பரிசுத்தமானது. இவ்விடத்தில் கலியின் பிரவேசமேயில்லை. அதனால் என்னலும் முனிவர்களாலும் மகாத்மாக்களாகிய சித்தர்களாலும் வசிக்குமிடமாகக் கொள்ளப்பட்டது. அன்று முதல் இம்முனிவர்களெல்லாம் பசுவின்றிப் * பிஷ்ட பசுக்களால் யாகங்கள் செய்து வருகின்றார்கள். இப்படியே கிருதயுகம் வருமளவும் காலங்கழிக்க வேண்டியதாக விருக்கின்றது. (27–34)

சூத முனிவரே! நீவிர் எமது பாக்கிய வசத்தால் இவ்வனத்தை வந்தடைந்தீர். ஆதலால் எவ்விதத்திலாயினும் இப்பொழுது வேத சம்மதமாயும் பரிசுத்தமாயுமுள்ள இப்புராணத்தைச் சொல்லி யருளல் வேண்டும். மேதாவியான நீர் எப்படிப் போதகாசிரியத் தன்மை யுடையவராக விருக்கின்றீரோ அப்படியே யாங்களனைவரும் கவலைகளனைத்தையும் விட்டொழித்து மனமொருமைப்பட்டுக் கேட்கும் விருப்பமுடையவராக விருக்கின்றோம். ஆத்யாத்மிகம் முதலிய தாபத்திரயங்களினின்றும் விடுபட்ட நீர் தீர்க்காயுளுடையரா யிருத்தல் வேண்டும். எந்தப் புராணத்தில் தர்மார்த்த காமங்களுடைய சிறப்பு விதிபூர்வகமாகக் கூறப்படுகிறதோ அப்படிப்பட்ட புண்ணிய மங்கள சீலம் வாய்ந்த புராணம் இப்புராணமேயாம். ஆகையால் அதை எங்களுக்குச் சொல்லியருளும்.

---

* பிஷ்டம் - மா.

(ஏனெனின்) பாகவதமென்னும் இக்கதை பர வித்யா சொரூபமென்றும் இதனாலேயே மோக்ஷ முண்டாகுமென்றும் வியாச முனிவரிடத்தில் கேட்டதாகக் கூறுகின்றீரல்லவா? சூதரே! *த்வைபாயன முனிவராலே பரிசுத்தமான எந்தப் புராணங்கள் கூறப்பட்டனவோ அந்த மனோகரமாகிய புராணங்களை யாங்கள் கேட்டுத் திருப்தி யடைந்திலம்; மேலும் கேட்க விருப்பமுடையவரா யிருக்கின்றோம். எந்தப் பாகவதம் சகல குண சமூகங்களுக்கு முக்கியமான பாத்திர மாயும் பரிசுத்தமாயும் எல்லா வுலகங்களுக்கும் மாதாவான அம்பிகையினுடைய நாட்டியம்போல் விசித்திரமாயும் மல சமூகமனைத்தையும் நசிக்கச் செய்வதாயும் இஷ்ட காமியங்களை நிறைவேற்றுவதற்கு மூலமாயும் பகவதியினுடைய நாமத்தோடு கூடினதாயுமுள்ளதோ அந்தப் பாகவதத்தைப் பிரகடனஞ் செய்யவேண்டும். (35–40)

ஓம் ஸத்யரூபாயை நம:

## 3. புராணசங்கியை

சூதமுனிவர் சவுனகாதியரை நோக்கிக் கூறுகின்றார்:— முனிவர்களே! சத்யவதீசுதரான வியாசரிடத்தில் எப்படிப் புராணங்களைக் கேள்வியுற்றேனோ அப்படியே பதினெண் புராணங்களுடைய பெயர்களை அக்ஷரசங்கியையாக உண்மையாய்க் கூறுகின்றேன், கேளுங்கள். (1)

மகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்களிரண்டு; பகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்களிரண்டு; ப்ரகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்கள் மூன்று; வகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்கள் நான்கு; அ-நா-ப-லிங்-க-கூ-ஸ்கா என்கிற அக்ஷரங்களைத் தனித்தனி முதற்கண்ணுடைய புராணங்களேழு (ஆகப் பதினெட்டு). (2)

மகாரத்திலிரண்டு என்றது மத்ஸியம், மார்க்கண்டேயம்; பகாரத்திலிரண்டு என்றது பவிஷ்யம், பாகவதம்; ப்ரகாரத்தில் மூன்று என்றது பிரம்மம், பிரம்மாண்டம், பிர்ம்மகைவர்த்தம்; வகாரத்தில் நான்கு என்றது வாமனம், வாயவ்யம், விஷ்ணு, வராகம்; அ என்றது அக்னி புராணம்; நா என்றது நாரத புராணம்; ப என்றது பத்ம புராணம்; லிங் என்றது லிங்க புராணம்; க என்றது கருட புராணம்; கூ என்றது கூர்ம புராணம்; ஸ்கா என்றது ஸ்கந்த புராணம்.

இனி, முன்னர், வர்ணக்கிரம முறையாகக் கூறிய பதினெண் புராணங்களுடைய கிரந்த சங்கியை கூறுகிறேன்.

முதலாவதான மத்ஸிய புராணம் - பதினாலாயிரம் கிரந்தம்; மஹாத்புதகரமான மார்க்கண்டேயம் - ஒன்பதினாயிரம் கிரந்தம்;

* த்வைபாயன முனிவர் - வியாசர்.

பவிஷ்ய புராணம் - ஐந்நூற்றை அந்தத்திலுடைய பதினாலாயிரம் (14500) கிரந்தம்; பிரம்ம புராணம் - பதினாயிரம் கிரந்தம்; பிரம்மாண்ட புராணம் - நூற்றையும் இரண்டாயிரத்தையும் அதிகமாகவுடைய பதினாயிரம் (12100) கிரந்தம்; பிரம்ம கைவர்த்தம்; பதினெண்ணாயிரம் கிரந்தம்; வாமன புராணம் - அறுநூற்றைப் பின்னேயுடைய பதினாயிரம் (10600) கிரந்தம்; வாயவ்ய புராணம் - ஆயிரமென்னும் எண்ணைப் பின்னேயுடைய இருபத்து நாலு (24000) கிரந்தம்; பரமாத்புதமான விஷ்ணு புராணம் - இருபத்து மூவாயிரம்கிரந்தம்; வராகம் - இருபத்து நாலாயிரம் கிரந்தம்; அக்கினி புராணம் - பதினாயிரம் கிரந்தம்; சிறந்ததான நாரதபுராணம் - இருபத்தையாயிரம்கிரந்தம்; பெரிதான பத்மபுராணம் - ஐம்பத்தையாயிரம் கிரந்தம்; லிங்க புராணம் - பதினோராயிரம் கிரந்தம், விஷ்ணுப்ரதிபாதகமான காருடம் - ஒன்றொழிந்த இருபதினாயிரம் கிரந்தம் (19000); கூர்மாவதாரத்திற் கூறப்பட்ட கூர்மபுராணம் - பதினேழாயிரம் கிரந்தம்; ஆச்சர்யகரமான ஸ்கந்த புராணம் - எண்பத்தோராயிரம் கிரந்தம்; பாபரஹிதர்களான முனிவர்களே! யாம் இப்பொழுது புராணங்களுடைய பெயர்களும் அவற்றின் சங்கியைகளும் விஸ்தாரமாகக் கூறினோம். (3–12)

ஓ முனிசிரேஷ்டர்களே! பதினெண் புராணங்களைக் கூறிய படியே உபபுராணங்களையும் இனிக்கூறுகின்றோம், கேட்பீர்களாக. சநத்குமாரம், நாரசிம்மம், நாரதீயம், சிவம், சிறந்த தூர்வாசம், காபிலம், மானவம், அவசநஸம், வாருணம், காளிகாக்யம், சாம்பவம், அழகான நந்திகேச்சரம், சௌரம், பராசரராலே கூறப்பட்ட பராசரீயம், ஆதித்யம், மாஹேஸ்வரம், பாகவதம், வாஸிஷ்டம் ஆகிய இவைகளே உபபுராணங்களென்று மஹத்துக்களாற் கூறப்பட்டன. (13–16)

ஸத்யவதீ புத்ரரான வியாச முனிவர் அஷ்டாதச புராணங்களையும் இயற்றி ஒப்பில்லாததான பாரதமென்னும் இதிகாசத்தையும் அப்புராணங்களுக்கு * உபப்ரமாணமாகச் செய்தருளினர். எல்லா மன்வந்தரங்களிலேயும் வரும் துவாபரயுகங்கடோறும் விஷ்ணுமூர்த்தியானவர் தர்மத்தை விரும்பி வியாசராயவதரித்து உயிர்களுடைய நன்மைகளைக் கருதினவராய் ஒவ்வொரு வேதத்தையும் சாகோப சாகைகளாயும் விதிப்படி புராணங்களையும் இடைவிடாமற் செய்கின்றார். அதுவுமன்றி இந்த வியாசரே கலியுகத்திற்றோன்றிய அந்தணர்களை அற்பமாயுளுடையவர்களாகவும், அற்ப அறிவினையுடையவர்களாகவும் அறிந்து யுகந்தோறும் புண்ணியமான ஸம்ஹிதைகளையும் ஸ்திரீ சூத்ரர் †த்விஜ

* உபப்ரமாணம்-அங்கமென்றுவது, அவற்றிற் கூறாத ஏனைய விஷயங்களைக் க்ரோடீகரித்து (சேகரித்து) என்றுவது பொருள் கொள்க.

† த்விஜபந்து பிராமண குலத்திற்பிறந்து அக்குலாச்சார தர்மங்களைக் கைவிட்டுப் பெயர் மாத்திரமுடையவர்.

பந்துக்கள் ஆகிய இவர்கள் வேதத்தைக்கேட்கும் அதிகாரமில்லா தவர்களாதலால் இவர்களுடைய நன்மையைக் கருதி புராணங்களை யும் செய்துவருகின்றூர். ஓ முனிசிரேஷ்டர்களே! சுபகரமான தும் வைவஸ்வத மென்னும் பெயருடையதுமான ஏழாவது மன் வந்தரம் நிகழுங்காலத்தில் வருவதான இருபத்தெட்டாவது துவா பரயுகத்தில் சத்யவதீ புத்திரரும், தர்மஜ்ஞருட் சிறந்தவரும் எனக்கு ஆசிரியருமாகிய இவ்வியாசமுனிவர் அவதரிக்கின்றூர். மேற்கூறிய மன்வந்தரத்தில் வரும் இருபத்தொன்பதாவது துவாபர யுகத்தில் அஸ்வத்தாமர் வியாசராக அவதரிப்பார். இம்முறை யானே இருபத்தேழு வியாசர்கள் முன் அவதரித்துச் சென்றனர். அந்த வியாசர்களால் யுகந்தோறும் புராணமும் ஸம்ஹிதைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. (17–24)

முனிவர்கள் மஹாபாக்கியவந்தரான சூதமுனிவரைப்பார்த்து, ஓ சூதரே! முன் யுகங்களில் அவதரித்தவர்களான வியாசர்கள் ஒவ்வொரு துவாபரயுகத்திலும் புராணங்களை எப்படிக் கூறினூர்கள்? அதைத் தெரிவிக்கவேண்டுமென்ன, சூதர் தயைகூர்ந்து முனிவர்களை நோக்கிக் கூறுகிறூர் :—முதல் துவாபரயுகத்தில் பிரமதேவராலேயே வேதங்கள் வகுக்கப்பட்டன. இரண்டா வது துவாபரயுகத்தில் பிரஜாபதி என்பவர் வியாசருடைய காரியத்தைச் செய்தனர் (புராணங்களைச் செய்தனரென்றபடி). மூன்றுவது துவாபரயுகம் ஆதியாக இருபத்தெட்டாவது துவா பராந்தம் முறையே அவதரித்த வியாசர்கள் உசனர் (சுக்ராசாரியர்), பிரகஸ்பதி, சூரியன், இயமன், இந்திரன், வசிஷ்டர், சாரஸ்வதர், த்ரிதாமர், த்ரிவிருஷர், பரத்துவாஜர், அந்தரிக்ஷர், தர்மர், த்ரையாருணி, தனஞ்ஜயர், மேதாதி, ரதீ, அத்திரி, கௌதமர், உத்தமர், ஹரீயாத்மர், வேனரென்கிற வாஜஸ்ரவர், அமுஷ்யாயன ரென்கிற சோமர், திரணபிந்து, பார்க்கவர், சக்தி என்கிற ஜாது கர்ணர், கிருஷ்ணத்வைபாயனர் என்று நான் கேட்டிருக்கிறேன்; கேட்டவாறே ஈண்டெடுத்துக் கூறினேன். (25–33)

இந்த வியாசமுனிவராலேயே கூறப்பட்டதும் புண்ணிய மானதும் துக்கசமூகங்களை யெல்லாம் நாசப்படுத்துவதுமான பாகவதமென்னும் புராணமும் கேட்டிருக்கின்றேன். இப்பாகவதம் மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கது. காமியார்த்தங்களைத் தரத் தக்கது. வேதார்த்தங்களைப் *பரிப்ரும்ஹிதம் (எடுத்துக் கோஷிக்கத் தக்கது.) எல்லாவாகமங்களுடைய சாரங்களுக்கும் சோலையா யுள்ளது. முமுக்ஷுக்களுக்கு எப்பொழுதும் பிரீதிகரமானது. வியாசமுனிவர் மங்களம் வாய்ந்த இப்பாகவதத்தை இயற்றி மகாத்மாவாயும் வைராக்யத்தோடு கூடினவராயும், விசேஷ ஜ்ஞராயும், அரணியிற்றேன்றினவராயும் தமது புத்திரராயுமுள்ள சுகமுனிவருக்கு உபதேசித்தனர். (34–36)

---

* வேதங்களில் ஆழ்ந்திருக்கும் அர்த்த புஷ்டிகளை மதச்செருக்குற்ற யானைபோல் கோஷிப்பது.

ஓ முனீந்திரர்களே! கருணாநிதியாயும் எமது குருவாயுமுள்ள வியாசமுனிவர் அற்புத அறிவுடையவராயும் அயோநிஜராயுமுள்ள சுகமுனிவருக்கு சர்வபுராண ரகஸ்யமானதும் மஹாப்ரபாவ முடையதுமான இத் தேவீ பாகவதத்தை எவ்விடத்தில் பிரசங்கித் தனரோ அவ்விடத்தில் யானும் அவரது கருணையினால் கேட்டுக் கிரஹிக்கவுமாயினேன். சம்சாரமென்னும் ஆழ்ந்த கடலைக் கடத்தற்கு விருப்பமுடையவரான சுகமுனிவர் நானாவிதமான கதாரசங்களமைந்த பாகவதமென்னும் கற்பகவிருக்ஷத்தினுடைய பல ரசத்தை யுட்கொண்டு அதன் சுவையையறியும் அறிவுடைய வராய் அன்போடு செவிகளாற் கேட்டனர். ஆதலான் அற்புதமான இப்புராணத்தைக்கேட்டு இவ்வுலகில் கலியினது கொடுமையி னின்றும் விடுபடாதவ ரெவருள்ளார்? (37–39)

பாவமுடையவனாயினும் வேத தர்மங்களைக் கைவிட்டவனாயி னும் குலாசாரத்தை விட்டொழித்தவனாயினும் புல்லறிவுடையவனா யினும் பிரயத்தினமின்றித் தற்செயலால் மிகவுஞ் சிறந்த இப் பாகவதத்தைக் கேட்கப்பெறுவானாயின் அவன் இம்மையில் பெறுதற்கரிய போகங்களெல்லாம் அனுபவித்து இவ்வுடல் நீக்கத்தில் அழிவில்லாததும் யோகிகளாலடையத்தக்கதும் பகவதியினுடைய திரு நாமத்தால் முத்திரிக்கப்பட்டதும் அழகினையுடையதுமான தத்பதத்தை யடைகிறான். எந்தப் பரதேவதை நிர்க்குணையாயும் ஹரிஹராதிகளால் அறியப்படாதவளாயும் சாதுக்களுக்குப் பிரிய தமையாயும் சமாதியவஸ்தையில் அறியப்பட்டவளாயும் அடையத் தக்க வித்யாரூபியாயுமிருக்கின்றனளோ அந்தப் பகவதியினுடைய இப்பாகவதத்தை எந்த சத்புருஷன் எப்பொழுதும் சிரவணஞ் செய்கிறானோ அவனுடைய இருதயமாகிய குகையுள் பாவனாரூப மாய்ப் பிரகாசிக்கின்றாள். எந்த அறிவிலியானவன் எல்லா வுறுப்புகளோடு கூடின மானிட சம்பந்தமான சரீரத்தைப் *பிறவிக் கடலைக் கடப்பதற்குத் தோணியாக அடைந்தும் சுகத்தைத்தருவ தான புராணவசனங்களைக் கேட்கிறதில்லையோ, அவன் அந்தோ! இவ்வுலகில் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவனாவன். எந்த மனிதன் பெறுதற்கரிதான இம்மானிட ஜன்மத்தில் †செவிகளைப்

---

* இதனால் மானிடயாக்கை, பிறவிக்கடலைக் கடப்பதற்கு ஓர் தோணி யாயுள்ளதெனவும், அதனைச் செலுத்துவதற்குக் கலைஞானங்களைக் கற்றதற் குரிய வாக்கு செலுத்துங் கருவியாயுள்ளதெனவும், செலுத்துங் கருவியாற் கடலைக்கடந்தவழி அக்கலைஞானங்களில் எடுத்துரைக்குஞ் சதுர்ப்பாடா கிய ஞானம் அங்கு அடையக் கடவதாகிய பயனெனவும், அந்த ஞான மாகிய பயனை எளிதிற்கூட்டவல்ல இப்புராணஞ் செவிப்புலனுக்கெட்டும் பாக்கியமிலனாயின் அதுவே தெய்வவருள் பெறாததன்மை எனவுங் கொள்ளக் கிடந்தன.

† எவனொருவன் மனிதயாக்கையைப்பெற்றும் அதில் சதுர்ப்பாடுடைய இரண்டு செவிகளைப்படைத்து புறங்கூறுதலாகிய சொற்களையே கேட் கின்றானோ அந்த அறிவிலி சகலபுருஷார்த்தங்களைத் தருவதாயும், சுவை களுக்கெல்லாம் இருப்பிடமாயும் நிர்மலமாயுமிருக்கின்ற இப்பாகவதத்தைக்

படைத்தும் இடைவிடாது பரதூஷண வசனங்களைக் கேட்கின்றானோ, அப்புல்லறிவாளன் இவ்வுலகில் அர்த்தங்களை யெல்லாந் தருவதும் ரசநிதியாயுள்ளதும் மலமற்றதுமான புராண சாரமாகிய தேவீ பாகவதத்தைக் கேளான்; அவன் மனிதனல்லன், பதிதன். (40–43)

ஓம் ஸமாக்ருத்யை நம:

## 4. தேவியின் சிறப்பு

சவுனகாதியர் வினவுகின்றார் :—ஓ சாந்தரான சூத முனிவரே! வியாசருடைய எந்த மனைவியினிடத்தில் சுகரென்னும் புத்திரர் உற்பத்தியானார்? அன்றியும் அச்சுகமுனிவர் அயோநிஜரென்றும், அதுபோலவே அரணியிற்றோன்றினவரென்றும் கூறக் கேட்டிருக்கிறோம். அவ்விஷயத்தில் பெருஞ்சந்தேகம் உண்டாகின்றது. ஓ தீர்க்கதரிசியே! அதை இப்பொழுது எங்களுக்குச் சொல்லவேண்டும். அன்றியும் சுகமுனிவர் மஹாதபசி என்றும், கர்ப்பத்திலேயே யோகவானா யிருந்தனரென்றுங் கேட்டிருக்கின்றோம். அவர் மிகவும் விஸ்தாரமான இப்புராணத்தை எவ்வாறு கற்றனர்? (1–3)

சூதர் கூறுகின்றார் :—ஓ முனிவர்களே! முன்னொரு காலத்தில் ஸத்யவதீ புத்ரரான வியாசர் ஸரஸ்வதி நதி தீரத்திலுள்ள ஓராச்ரமத்தில் ஆண்பெண்ணாகிய ஊர்க்குருவிகள் லீலாவினோதமாயிருத்தலைக்கண்டு மிகவும் வியப்படைந்தனர். பின்னர் அவ்விரண்டு ஊர்க்குருவிகளும், கூட்டில் தாங்களிட்ட முட்டையினின்றும் வெளிப்பட்டதும் அழகானதும் செம்பைப் போலும் செந்நிறமுடையதும் மேன்மையான வடிவமுடையதும் இறகு முளையாததுமான அக்குஞ்சுகளைக்கண்டு களித்துக்கொண்டிருந்தன. பின்னர் அப்பறவைகளிரண்டும் தம் குஞ்சுகளுக்கு உணவைத் தேடிவந்து ஊட்டுந்தொழிலில் மிகவும் வருந்திய முயற்சிகளுடையவைகளாய் உணவைக் கொண்டுவந்து அப்பிள்ளைகளினுடைய வாயில் சிறிது சிறிதாய்ப் பலதடவை யூட்டிக்கொண்டிருந்தன. அன்றியும் குஞ்சுகளினுடைய உடம்போடு தம்முடம்பை அணைத்துக்கொண்டும் முகத்தில் அன்போடு முத்தமிட்டும் சந்தோஷித்து மகிழ்ந்துகொண்டிருந்தன. இவ்வாறு அவ்விடத்தில் அப்பறவைகள் தம் பிள்ளைகளினிடத்தில் பாராட்டிக்கொண்டிருந்த ப்ரேமாதிசயத்தை வியாசர் கண்டு தம்முடைய மனதில் இதனை யோசிக்கலாயினர் : ஆ! ஆ! என்ன ஆச்சரியம்! பக்ஷிஜாதிகளுக்கும் தமது குஞ்சுகளிடத்தில் எவ்வளவு ஆராமை யிருக்கின்றது! இதனை ஆராயுமிடத்து புத்திரனால் தாங்கள் பலத்தையடைய

---

கேளாமையால் அவனது செவித்துளையை நரகத்திற் செலுத்தும் ஒரு பிலத்துவாரமென்றறியவேண்டும்.

விரும்பும் மானிடர்கள் புத்திரர்களிடத்தில் வாஞ்சைவைத்திருப்பது ஓரதிசயமா ? (4–9)

இப்பறவைகளிரண்டும் இக்குஞ்சுகளுக்குச் சுகசாதனமாயுள்ள விவாகத்தைச்செய்து மருமகளுடைய குளிர்ந்த முகத்தைக்கண்டு சுகத்தையடையப் போகின்றனவா ? அதுவன்றியும், *பரமதர்மிஷ்டரான இந்தப் புத்திரர் (குஞ்சுகள்) தாய்தந்தைகளான இப்பறவைகளுக்குக் கிழத்தன்மை வருகிறபோது புண்ணியத்தைவிரும்பி ஏவற் பணிவிடையைச் செய்யப்போகின்றனவா ? அதுவன்றியும், இக்குஞ்சுகள் அநேகமான திரவியங்களைச் சேகரித்து இத் தாய்தந்தைகள் பரலோகமடைதற்குரிய அபரகர்மங்களை விதிப்படி நடத்தப்போகின்றனவா ? அல்லது, அவற்றி லொன்றேனும் காசிக்குப்போய் கயா சிராத்தம் செய்யப்போகின்றதா ? பிதுர்க்களை யுத்தேசித்து †விருஷோத்ஸர்ஜனம் முதலியவற்றை விதிமுறையாகச் செய்யப்போகின்றதா ? (இங்ஙனங் கூறிவந்தவைகளிலொன்றுமில்லையே) நூல்களிலும் இச் சம்சாரத்தில் புத்திரனுடைய சரீரத்தைத் தழுவிக்கொள்வதனு லுண்டான அடையாளத்தையே சுகத்துக்குள் உத்தமமான சிறந்த சுகமென்று கூறப்பட்டிருக்கின்றது. புத்திரனில்லாதவனுக்குக் கதியில்லை ; சுவர்க்கமும் இல்லை, இல்லை ; (ஆகையால்) புத்திரனைக் காட்டிலும் வேறான எந்தச் சாதனமும் பரலோக சாதனமாக மாட்டாது. மனு முதலிய நீதிமான்களால் ஏற்படுத்தப்பட்ட தர்ம சாஸ்திரங்களிலும் புத்திரனையுடையவன் சுவர்க்கத்தை யடைகிறனென்றும் புத்திரனில்லாதவன் ஒருபொழுதும் அதை யடைகிறதில்லையென்றுங் கூறப்பட்டிருக்கிறது. அஃது அனுமானத்தாற் சாதிக்கப்பட்டதன்று. இவ்விடத்தில் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. இதனுல் புத்ரவான் பாபத்தினின்றும் விடுபடுகிறனென்ற வேத வாக்கியம் நிச்சயமாயிற்று. ரோகத்தாற் பீடிக்கப்பட்டவன் அந்திய காலத்தில் பூமியிற் புரண்டு துக்கித்தவனுய், அந்தோ ! நமக்குப் புத்திரனில்லாமற் போயிற்றே என்று மனதில் ஏக்கமுறுகிறன். அன்றியும் நமக்கு அளவிறந்த செல்வமும், கிருகத்தில் அநேக பாத்திர வரிசைகளும், சுதந்தரமான வீடும் இருக்கின்றன ; இவைகட்கு எவன் அதிகாரியாகப் போகிறனே, அறியோம். இவ்வாறு மரணந்த காலத்தில் அவனுடைய மனமானது துயரத்தால் மிகவும் பிரமிக்கின்றது. அதனுல் பிராந்தசித்தனுன அவனுக்கு எவ்விதத்தினுலுந் துர்க்கதியேயன்றி வேறில்லை யென்று சிந்தித்துக் கொண்டிருந்தனர். (10–20)

என்றிவ்வாறு வியாச முனிவர் பலவாருய்ச் சிந்தித்து

---

* பரமதர்மிஷ்டர் புத்திரர் என்பன இழிவு சிறப்பு.

† அபரகிரியையில் (11) வது தினத்தில் இறந்து போனவருக்குப் பைசாசு மனம் வராதிருத்தற்காக இளஞ்சேவை சூல முதலியவைகளாற் பொறித்து ஆலயத்துக்கு விடுதலாகிய சடங்கு.

வெம்பிப் பெருமூச்செறிந்து மனோவிசார முடையவராயினர். இப்படி மனதில் பெரும்பாலும் சிந்தித்துப் பின்னர் புத்திராபேக்ஷை யுடையவராய் மேருவின் சிகரத்தில் தவம்புரிய நிச்சயித்து அங்குச் சென்றனர். சென்று வரந்தருவதில் சாதுர்ய முடையவரும் இஷ்ட காமியங்களை நிறைவேற்றுபவருமான உருத்திர மூர்த்தியை உபாசிப்போமா, அல்லது விஷ்ணு, இந்திரன், பிரமன், சூரியன், கணேசர், கார்த்திகேயர், அக்னி, வருணன் முதலிய இவர்களை யுபாசிப்போமா? எந்தத் தெய்வத்தை யுபாசிப்போம் என்று மனதில் சிந்தித்தனர். இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்கு மளவில் வீணை பாணியாகிய நாரதமுனீந்திரர் அங்குத் தெய்வகதியாய் வந்தனர். சத்தியவதீ புத்திரரான வியாசமுனிவரும் அந்த நாரதரைக் கண்டு மனமகிழ்ந்து அர்க்கிய பாத்திய ஆசமனுதிகள் கொடுத்து அவரது க்ஷேமாதிசயங்களை வினவினர். நாரத முனிவர் அந்த வியாசர் கூறிய குசல வார்த்தைகளைக்கேட்டு ஆனந்தித்து, ஓ வியாசரே! நீர் மனோசிந்தையுடையவராகக் காண்கிறீர். அதற்குக் காரணம் யாது? அதைக் சொல்லுமென்ன, வியாசர் வினவுகின்றார் :— ஓ நாரத முனிவரே! புத்திரனில்லாதவனுக்குச் சத்கதியில்லை என்று வேதங்கள் முறையிடுகின்றன. அதனுற்றான் என் மனதுக்குச் சுக முண்டாக வில்லை. அக்காரணம்பற்றியே நான் பலமுறையுஞ் சிந்தித்துச் சிந்தித்துத் துக்கிக்கின்றேன். (இது நிற்க) இப் பொழுது நான் தவத்தினுல் எந்த தேவதையைத் திருப்தியடையச் செய்யலாம், எந்தத் தேவதை இஷ்டார்த்தத்தைக் கொடுக்கும் என்கிற விஷயத்தில் துணிவு பிறவாதவனுய் உம்மைச் சரணமடை கின்றேன். தயாநிதியான முனிவரே! நீர் சர்வக்ஞரல்லவா? யான் எந்தக் கடவுளைச் சரணமடையலாம்? எந்தக் கடவுள் எனக்குப் புத்ர சம்பத்தைக் கொடுப்பார்? அதனை விரைவிற் கூற வேண்டும். (21–30)

இவ்வாறு வியாசராலே கூறக்கேட்ட வேத வித்தான நாரத முனிவர் மிகவும் பிரீதியோடு அம்முனிவரை நோக்கிக் கம்பீரமாய்க் கூறத் தொடங்கினர் :—

மகாபாக்கியவந்தரான வியாசரே! நீர் இப்பொழுது எம்மை நோக்கி எத்தகைய கேள்விகளைக் கேட்டீரோ அக்கேள்விகளையே எம்முடைய பிதாவாகிய பிரமதேவரும் நாராயண மூர்த்தியை நோக்கிக் கேட்டிருக்கின்றார். எங்ஙனமெனில், எம்முடைய பிதா ஒருக்கால் நாராயணமூர்த்தியைத் தியான நிஷ்டையி லிருப்பவ ராகவறிந்து அதிக ஆச்சரியமடைந்து தேவேசனுயும் லக்ஷ்மீபதி யாயும், ஜகத்பதியாயும் கௌஸ்துவமணியால் பிரகாசிக்கின்ற திரு மார்புடையவராயும் சுந்தர வடிவுடையவராயும் சங்குசக்கர கதாதர ராயும், பீதாம்பரதாரியாயும், நான்கு புயமுடையராயும், ஸ்ரீவத்ஸ மென்னும் மருவுடையவராயும், எல்லா வுலகங்களுக்குங் காரணரா யும், தேவதேவராயும், ஜகத்குருவாயும் மகத்தான தவத்தைச் செய் கின்றவராயும் விளங்காநின்ற வாசுதேவரை நோக்கி அடியில் வரும் வகையாக வினவுகின்றார்:—இறந்தகாலம் முதலிய முக்கால முணர்ந்

தவராயும், தேவதேவராயுமுள்ள பகவானே! நீர் யாது காரணத்தால் தவஞ்செய்கின்றீர்? யாரைத் தியானஞ் செய்கின்றீர்? இது எமக்கு மிகவும் வியப்பைத் தருகின்றது. (ஏனெனில்) நீர் எல்லா உலகங்களுக்கும் பிரபு. அங்ஙனமிருக்க நீர் இப்பொழுது தியான நிஷ்டராக விளங்குகின்றீர். ஓ தேவேசனே! உலகில் இதைவிட ஆச்சரியம் யாதிருக்கின்றது? ஓ லக்ஷ்மீபதே! தேவரீரது உந்திக் கமலத்தினின்றுந் தோன்றிய யானே எல்லா வுலகங்களுக்குங் கர்த்தனாக விருக்கின்றேன். ஆதலால் இப்பூமியில் உம்மைவிட மேலானவர் எவருளார்? உளரெனில் ஆச்சரியமே. அப்படி யொருவரிருந்தாற் சொல்லும். யான் ஜகந்நாதரான உம்மையே எல்லாவற்றிற்கும் முதற்காரணமாகவும் சிருஷ்டி கர்த்தாவாகவும் பரிபாலகராகவும் சம்ஹார மூர்த்தியாகவும் எல்லாக் காரியங்களையுஞ் செய்வதில் சமர்த்தராகவு மெண்ணி யிருக்கின்றேன்.

ஓ மஹாராஜாவே! உமது ஆஜ்ஞையினால் யானிவ்வுலகைப் படைக்கின்றேன். உருத்திரர் கற்பாந்தத்தில் எல்லாவற்றையும் சம்ஹரிக்கின்றார். சூரியன் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றான். வாயு சிறுகாற்றும் பெருங்காற்றுமாக வீசுகின்றது. அக்னி ஸப்த ஜ்வாலையோடு பிரகாசிக்கின்றது. மேகங்கள் வருஷித்துக் கொண்டு வருகின்றன. (31–41)

இத்தகைய பெருமை வாய்ந்த தேவரீர் எந்தத் தெய்வத்தைத் தியானிக்கின்றீர்? இவ்விஷயத்தில் எனக்குப் பெருஞ்சந்தேகமுண்டாகின்றது. ஏனெனில், மூன்றுலகத்திலும் உம்மைவிடச் சிறந்த தெய்வமொன் றிருக்கின்றதாக யான் கண்டிலன். ஆதலால் உமது பக்தனும் புத்திரனுமாகிய எனக்கு அன்புகூர்ந்து அவ்வுண்மையை விளக்கவேண்டும். (ஏனெனில்) மகத்துக்களுக்குத் தமதன்பர்களிடத்தில் மறைக்கத்தக்க பொருளொன்று மில்லையென தர்ம சாஸ்திரங் கூறுகின்றதல்லவா? எனவே (பெரியோர் தம்மை விசுவாசித்தவர்களுக்கு உண்மைப் பொருளை மறைத்தல் குற்றமென்பது விதியல்லவா?) (42–43)

இவ்வாறு பிரமன் கூறிய வசனத்தைத் திருமால் கேட்டு அப்பிரமனை நோக்கிக் கூறுகின்றார்:—ஓ சிருட்டிகர்த்தனே! நீ ஒருமைப்பட்ட மனமுடையவனாய்க் கேட்பாயாக. யான் என்னுடைய மனதிலுற்றவற்றைக் கூறுகின்றேன். உன்னையும் என்னையும் ருத்திர மூர்த்தியையும் சிருட்டியாதிகளுக்குக் கர்த்தாக்களாக தேவாசுரர்களும் மனிதர்களும் ஆகிய இவர்களனைவரும் அறிவார்கள். (நீ அதனை யெண்ணுதொழிவாய்.) (44-45)

பிரமனே! நீ படைப்பதும் நான் காப்பதும் அரனழிப்பதும் ஆகிய இம் முத்தொழில்களும் சக்தியினாலே செய்யப்படுகின்றன வென்று வேதபாரகர்களால் கணிக்கப்பட்டிருக்கின்றது. அஃது எப்படி என்றால் அச்சக்தி உலகைப் படைக்கின்ற உன்னிடத்தில் இராஜஸகுணமாயும், காக்கின்ற என்னிடத்தில் சாத்விக குணமாயும், சங்கரிக்கின்ற உருத்திரரிடத்தில் தாமஸகுணமாயும்

வியாபித்திருக்கின்றது எனவும், அச்சக்தி உன்னிடத்தில் பரிண மிக்காவிடில் நீ படைப்பதற்குக் கர்த்தாவாக மாட்டாய், அப்படியே யானும் பரிபாலிப்பதற்குக் கர்த்தனுக மாட்டேன், அப்படி சங்கர ரும் சங்கரிப்பதற்குச் சக்தராகமட்டார் எனவும், யாம் அனைவரும் எக்காலத்தும் அச்சக்திக்கு ஐக்கியப்பட்டவர்களாகவே யிருக்கின் ரும் எனவுங் கூறுகின்றனர். அது பரோக்ஷமாயும் பிரத்யக்ஷமா யும் பார்க்குங்கால் உண்மையாகவே விளங்குகின்றது. அதற்குத் திருஷ்டாந்தமொன்று கூறுகின்றேன். இவ்விஷயத்தில் யாதொரு சந்தேகமுமில்லை. மீண்டும் ஒருகால் ஜாக்ரகாலவசப்பட்டவனு யெழுந்திருக்கின்றேன். (46–50)

யான் அச்சக்திக்குடன்பட்டே எப்பொழுதும் தவம் புரிகின் றேன். ஒரு சமயத்தில் இலக்குமிதேவியோடு சுகமாய் ரமிக்கின் றேன். மற்றொரு சமயத்தில் யுத்தரங்கத்தில் அசுரர்களோடு பயங்கர மாயும் தேகத்தை துன்பப்படுத்துவதாயும் உலகங்களுக்கெல்லாம் நடுக்கத்தை விளைவிப்பதாயுமுள்ள போர் செய்கின்றேன். ஓ தர்மஜ்ஞனே! முன்னொரு காலத்தில் அவ் வசுரர்களோடு ஐயாயிர வருடம் இடைவிடாமல் யான் மல்யுத்தஞ் செய்தது உனக்குப் பிரத்தியக்ஷமாய்த் தெரிந்திருப்பதுதானே. அப்படிப் போர் புரியுங் காலத்தில் என்னுடைய காதிலுள்ள மலத்தினின்றும் உற்பத்தி யானவர்களும் துஷ்டர்களும் மதோன்மத்தர்களுமான மதுகை டபர்களென்கிற இரண்டசுரர்களும் *தேவியினுடைய அநுக்ரஹத் தினுல் சம்ஹரிக்கப்பட்டவர்களல்லவா? அப்பொழுது எல்லாவற்றிற் கும் காரணமாயும் பராபரமாயும் உள்ளது சக்திரூபமே என்று ஏன் உன்னுலறியப்படவில்லை? ஹே மஹா பாக்கியசாலியே! அவ் விஷ யத்தைப்பற்றி மீண்டும் மீண்டும் கேட்பது எற்றுக்கு? (51–55)

அன்றியும் யான் புருஷரூபமாய்த் திருப்பாற் கடலில் வசிப்ப தும் யுகந்தோறும் மத்சியமாயும் நரசிம்மமாயும் வாமனமாயும் அவதரிப்பதும் அப்பராசக்தியினுடைய இச்சாமாத்திரமேயன்றி என்னிச்சையன்றும். திரியக்யோனிகளிற் பிறந்தவன் ஒருவருக் கும் பிரியனுக ஆகமாட்டான். யானே வென்ருல் வராக மச்சியாதி களாகிய திரியக்யோனிகளில் உற்பவித்தும் சகலப் பிராணிகளுக் கும் விருப்பமுடையவனு யிருக்கின்றேன். அஃது என்னுடைய இச்சையாகமாட்டாது. எனவே என்னுடைய இச்சாசுதந்திரத்தி னுல் திரியக் யோனிகளிற் பிறப்பவனுமன்று; அப்பிறவிகளிற் பிறந்தும் இகழ்ச்சியடையாது புகழ்ச்சியடைந்திருப்பவனுமன்று. யாவும் அச்சக்தியின் இச்சா சுதந்தரத்தினுலேயாம். லக்ஷ்மி தேவியோடு ரமித்திருப்பதாகிய உல்லாசத்தையும் சயனத்தையும் விட்டு மச்சிய முதலிய இழிந்த யோனிகளில் எவன்ருன் பிறப் பான்? அன்றியும் கருடனை ஊர்தியாகக்கொண்டு மஹத்தான யுத்தஞ்செய்வதும் என் சுதந்தரந்தானு? அன்று. முன்னொரு

* தேவியினுடைய அனுக்ரகத்தினுலென்பது 'மது கைடப வதம்' என்ற 9-ஆம் அத்தியாயத்தில் காண்க.

காலத்தில் வில்லிற் பூட்டிய நாண் அற்றுப்போக அதனால் ஒளி பொருந்திய என் சிரம் அறுபட்டது. அது எவ்விடத்திற்றான் போயிற்றோ! பின்னர் சிற்பவேலையில் வல்ல நீ குதிரையின் சிரத்தைக் கொண்டுவந்து பொருத்தினை. அது முதல் யான் ஹயானனன் (குதிரை முகமுடையவன்) என்று வழங்கப்பட்டேனென்கிற விஷயம் உலக கர்த்தாவாகிய உனக்குப் பிரசித்தமாய்த் தெரிந்திருப்பதுதானே. யான் சுதந்தரனாயிருப்பேனாயின் அப்படியெல்லாம் ஆவனோ? (56–61)

ஆகலான் யான் சுதந்தரனன்று; எப்பொழுதும் சக்திக்குட்பட்டவனாகவே யிருக்கின்றேன். அந்தச் சக்தியையே இடைவிடாமற் சிந்தித்துத் தியானிக்கின்றேன். அதைவிட மேலான வஸ்து ஒன்றிருக்கிறதா? ஓ கமலோத்பவனே! யானறியேனென்று பிரம தேவனுக்கு வைகுண்டநாதர் கூறினார். ஓ வியாசரே! யானும் அந்த நிச்சயஞானத்தினாலேயே முத்தனானேன். அப்படியே நீரும் அந்த ஞானத்தினால் மங்களமான புருஷார்த்த சித்தியின் பொருட்டு இருதய கமலத்தில் தேவியினுடைய பாதகமலத்தைத் தியானஞ்செய்யும். அந்தத்தேவி உம்முடைய அபீஷ்டங்களை முடித்தருளுவள்; இதில் ஐயமில்லை. இவ்வாறு நாரதமுனிவரால் கூறப்பட்ட வுண்மையைச் சத்யவதீ புத்ரரான வியாசருணர்ந்து தேவியினுடைய பதாம்புஜத்தில் நிச்சலபுத்தி யுடையவராய்த் தவஞ்செய்வானெண்ணி மேருமலையை நோக்கிச் சென்றனர். (62–65)

ஓம் ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ர்யை நம:

## 5. ஒப்புவமையில்லாத் தேவி

சவுனகாதியர் வினவுகின்றார் :—சூதமுனிவரே! தேவரீர் கூறி வந்தவைகளில் மிகவும் ஆச்சரியத்தைக் கொடுப்பதாயும் உலகினர் நகைப்பதற்கேது வாயுமுள்ள ஒரு விஷயத்தைக் கூறினீர். அதிலுண்டாகிய ஐயமென்னும் கடலில் எங்களுடைய மனம் மிகவும் தத்தளிக்கின்றது. ஏனெனின், விஷ்ணுமூர்த்தியினுடைய சிரம் தம்முடைய தேகத்தினின்றும் அறுபட்டுச் சென்றவிடந் தெரியாமற் சிதறிப்போயிற்றென்றும், அதன் பின்னர் அத்திருமால் சர்வநியந்தாவான ஹயக்ரீவராக அவதரித்தாரென்றுங் கூறின் சிரம் அறுபட்ட ஹயக்ரீவர் கடவுளாவது எப்படி? அன்றியும் எந்த ஹயக்ரீவரை (உலகமெல்லாம்) புகழ்ந்திருக்கின்றதோ, தேவர்களெல்லாம் எவரை ஆஶ்ரயிக்கின்றார்களோ அந்த ஆதிதேவரே ஜகந்நாதரான கடவுளாவாரெனவும், அவரே எல்லாவற்றிற்குங் காரணராகின்றாரல்லவா எனவும் அவரை வேதங்கள் புகழ்ந்து தோத்திரஞ் செய்யுமா? ஆகலான் முன்னர் கூறிய சிறப்புவாய்ந்த விஷ்ணுமூர்த்தியினுடைய சிரம் ஒரு காலத்தில் தெய்வகதியாய் எப்படிப் போயிற்று? அதனை அறிவிற்சிறந்த நீர் விரிவாய் விரைவில் சொல்லல் வேண்டும். (1–4)

சூதமுனிவர் கூறுகின்றார் :—ஓ மஹரிஷிகளே ! நீங்களனை வரும் தேவர்களுக்கெல்லாந் தேவரும் பெரிய காந்தியையுடைய வருமான விஷ்ணு மூர்த்தியினுடைய சரித்திரத்தைச் சாவதான மாக முற்றும் முறையாகக்கேளுங்கள் கூறுகின்றேன். ஓர் காலத்தில் அநாதியான விஷ்ணுமூர்த்தி பதினாயிரம் வருடம் அசுரரோடு பயங்கரமான யுத்தத்தைச்செய்து மிகவும் சோர்வடைந்தவராய்ச் சமமாயும் சுபகரமாயுமுள்ள ஓரிடத்திற்சென்று பத்மாசனராய் நாணேடுகூடிய திண்ணிய வில்லைப் பூமியிலூன்றிக் கண்டப்பிரதே சத்தில் (முகவாய்க் கட்டையில்) நாட்டி அவ்வின்நுனியில் தமது தேகபாரத்தை நிறுத்தி நித்திரைசெய்யத் தொடங்கினர். அப்பொ ழுது அவ்விடத்தில் பிரபுவான அந்த லக்ஷ்மிநாதர் மிகவும் இளைப்படைந்தவ ராகையினுல் தெய்வச் செயலாய்ப் பேருறக்கங் கொண்டனர். (5–8)

அக்காலத்தில் இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் தங்க ளுடைய காரியசித்தியின் பொருட்டு பிரம ருத்திரர்களோடு கூடி அனேககாலமாய் ஓர் யஜ்ஞம் செய்யவேண்டு மென்கிற விருப்ப முடையவர்களாய், யஜ்ஞகர்த்தாவாயும் பிரபுவாயும் விளங்காநின்ற விஷ்ணுமூர்த்தியைப் பார்ப்பதற்கு வைகுண்டத்தை யடைந்தார்கள். வைகுண்டத்தில் அப்பொழுது நாராயண மூர்த்தியைக் காணுமல் தேவர்கள் தங்கள் ஞானதிருஷ்டியினுல் அவரிருக்குமிடமறிந்து அங்குச்சென்று பிரபுவாகிய விஷ்ணுமூர்த்தி மெய்ம்மறந்து நித்திரையி லிருப்பதையறிந்து நித்திரை நீங்குமளவு மிருப்போமென் றெண்ணி, அவ்விடத்திற்றுனே யிருந்தார்கள். இவ்வாறு இவரெல்லாம் நின்றவண்ணமே நிற்க உலக கர்த்தாவாகிய விஷ்ணுமூர்த்தியோ நித்திரையிற்றுனே யிருந்தனர். பிரமருத்திரர் களை முதன்மையாகவுடைய தேவர்களனைவரும் இவரது பேருறக் கத்தைக் கண்டு சிந்தாகுலமாயினர். பின்னர் இந்திரன் தன் பரி வாரங்களாகிய தேவர்களைப்பார்த்து, "தேவர்காள் ! இப்பொழுது யாம் யாதுசெய்வோம் ? விஷ்ணுவினுடைய நித்திரைக்குப் பங்கஞ் செய்வது உசிதமாகுமா ? இதனை ஆராய்ச்சி செய்யுங்கள்" என்று கூறினன். (9–14)

அப்பொழுது *ருத்திரர் இந்திரனைப்பார்த்துக் கூறுகின்றார் : நித்திரையைப் பங்கப்படுத்துவதினுல் குற்றமிருக்கின்றது. குற்ற முள தாயினும் இச்சமயம் தேவர்கள் செய்யவேண்டிய யஜ்ஞத் திற்கு ஏது வொன்றைத் தேடிக்கொள்ளல் வேண்டும். அன்றியும் பூர்வத்தில் சத்யலோகவாசியான பிரமனுல் செல் என்கிற ஒரு செந்து உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றது. அந்தச்செல்லுருவத்தி னுல் இப்பொழுது பூமியில் நாட்டியிருக்கப்பட்ட வில் நுனியைப் பக்ஷிப்பதற்கு வேண்டிய முயற்சியிலே தலைப்படுங்கள். அப்படி வில் நுனி பக்ஷிக்கப்படுமேயானுல் வில்லானது மேலே நிமிர்ந்து

* ருத்திரரென்பது ஏகாதசருத்திரரை. இவ்வாறு வருமிடந்தோறுங் காண்க.

விடும். அதன்பின்னர் இந்த நாராயணர் நித்திரையினின்று நீங்கி விழித்துக்கொள்வர். அப்பால் தேவகாரியமனைத்தும் நிர் விக்கினமாய் நிறைவேறுமென்பதிற் சந்தேகமில்லை. தேவர்களிற் சிறந்த உருத்திரர் இந்திரனைச் செல்லுருக்கொண்டு வரும்படி ஆஜ்ஞைசெய்த அப்பொழுதே அவராணையின்படி செல்லுருக் கொண்டு இந்திரன் உருத்திரமூர்த்தியை நோக்கி சிலவெண்ணிக் கூறுகின்றான் :—எங்களுக்குத் தலைவரும் உலகத்திற்குக் குருவும் ஆகிய லக்ஷ்மிநாதருக்கு யான் நித்ராபங்கம் எவ்வண்ணஞ் செய்யலாம் ? நித்ராபங்கம் செய்வதும் கதாச்சேதம் செய்வதும் (இதிகாசாதிகளை முறையே சொல்லிவந்து இடையேவிடுவதும்) ஸ்திரீபுமான்களாகிய தம்பதிகளுக்கு அமைந்துள்ள பிரேமாதிசயத் தைக் கெடுப்பதும், தாயைவிட்டுச் சிசு தனித்திருக்கச் செய்வது மாகிய இவையெல்லாம் பிரம்ம ஹத்திக்குச் சமானமாகச் சொல்லப் பட்டிருக்கிறதல்லவா ? (15–19)

ஆதலால் யான் தேவதேவரான விஷ்ணு மூர்த்திக்குச் சுக சாதனமாயுள்ள நித்ரையை எப்படி பங்கம் செய்யத் துணிவேன்? ஓ தேவனே ! யான் எந்த கிருத்தியத்தினால் பாவத்தைச் செய்தவ னாக ஆவேனோ அந்த கிருத்தியம் இதுவாகவே இருக்கின்றமையால் அந்தவில்லைப் பக்ஷிப்பதனால் வரும் பிரயோஜனமென்னை? இவ் வாறு யோசிப்பேனாயின் உலகத்தில் யாவருந் தன் காரியார்த்த மாய்ப் பாவத்தைச் செய்கின்றாரல்லவா ? ஆதலால் யானும் என் பிரயோசனத்தை நாடியே வில்லைப் பக்ஷிக்கின்றேன் என்றனன். அப்பொழுது பிரமன் கூறுகின்றான்:— ஓ இந்திரனே! நீ அங்ஙனஞ் செய்வையாயின் யாங்கள் யஜ்ஞம் செய்யும் சமயத்தில் உனக்கு அவிர்ப்பாகம் கொடுக்கின்றோம். ஆகையால் நீ சொன்னபடியே எங்களுடைய காரியத்தைச்செய். விஷ்ணுவை யெழுப்புவாயாக. சாவகாசஞ் செய்யாதே ; (இதுவன்றி உனக்கு) ஓமகிருத்தியத்தில் அவிர்ப்பாகங் கொடுக்குங்கால் பக்கத்தில் எந்தபாகம் விழுகின்றதோ அதுவும் உன்னுடைய பாகமென்றே அறி. ஆதலால் விரைவுடன் அக்காரியத்தைச் செய்வாயாக என்றனன். பிரமதேவர், செல்லுருக் கொண்ட இந்திரனை நோக்கிச் சொல்லியவுடன் அவன் அதிசீக்கிர மாய்ப் பூமியில் நாட்டப்பட்ட வில் நுனியைக் கடித்தனன் ; உடனே வில் நாணிற்றுப் போயிற்று. (20–25)

நாணிற்றவுடன் மேனுனியும் மேலே நிமிர்ந்தது. நிமிர்ந்த வுடன் பயங்கரமான பேரொலி யொன்றுண்டாயிற்று. அவ்வொலி யால் தேவர்களனைவரும் மிகவும் நடுக்குற்றனர். பிரம்மாண்ட மெல்லாம் பொடிப்பொடியாய்ப் போயிற்று. பூமியும் அப்பொழுது கம்பமாயிற்று. சமுத்திரமும் கரைபுரண்டது. நீர்வாழுயிர்களும் அச்சமுற்றன. அப்படியே காற்றும் வேகமாக வீசிற்று. பர்வதங் களும் நடுங்கின. இனி வரப்போகின்ற துக்கத்தைச் சூசிப்பிக்கின்ற அழற்கொள்ளிகளான மகோத்பாதங்களும் உண்டாயின. திக்கு களெல்லாம் மிகவுங் கோரதரங்களாயின. சூரியனும் அஸ்த மனம் அடைந்தவன் போலாயினன். அச்சமயத்தில் தேவர்களனை

வரும் இத்தன்மையான இத்தீய நாளில் என்னவரப்போகின்றனவோ வென்று சிந்தாகுலமடைந்தனர். ஓ முனிவர்களே! தேவர்க ளெல்லாம் இவ்வாறு மனக்கவலை யுற்றிருக்கு மளவில் விஷ்ணுவி னுடைய மகுட குண்டலங்களோடு கூடிய சிரம் அறுபட்டுப் போன விடந்தெரியாமற் போயிற்று. (26–30)

அப்பொழுது கோரமான அந்தகாரம் (சிறிது) நீங்கிற்று. நீங்கியவுடனே பிரம ருத்திர ரிருவரும் அழகு குறைந்ததும் சிரமற்றதுமான சரீரத்தைக் கண்டனர். தேவர்களும் அந்த விஷ்ணுவினுடைய கபந்தமாயிருக்கின்ற சரீரத்தைக்கண்டு ஹா! ஹா! என்று ஆச்சரியமடைந்து துன்பக்கடலில் மூழ்கி சோகத்தாற் பீடிக்கப்பட்டவர்களாய்க் கூ கூ வென்று பேரொலியிட்டு அழுதனர். ஆ நாதா! இது வென்ன? ஓ பிரபோ! மனிதர்களால் கணிக்கக்கூடாத அத்யத்புதமான செய்கையாயிருக்கின்றதே! ஓ அநாதியான தேவதேவனே! இது தேவர்களனைவர்க்கும் இம்சை யைத்தருகின்றது. உம்முடைய சிரமானது எதனால் அபகரிக்கப் பட்டது? இஃது எந்தத் தெய்வத்தினுடைய மாயை? நீர் ஒருவ ராலுஞ் சேதிக்கப்படாதவராயிற்றே. ஓ விஷ்ணுவே! நீரே இந்தக் கதியை யடைவீரானால் இனித் தேவர்களுக்கும் மரணமடைவது தான் கதி. ஆகையால் உம்மிடத்தில் எப்படிப்பட்ட சிநேகமுமில்லை. இப்பொழுது எங்களுடைய காரியத்தினாலேயே யாங்கள் *துன்பப் படுகின்றோம். (31–35)

இந்தத்தீங்கு †அசுரரால் செய்யப்பட்டதுமன்று; இராக்கத ரால் செய்யப்பட்டதுமன்று; தேவர்களாகிய எங்களாலேயே செய்யப்பட்டது. ஓ ரமாபதி! இதற்கு யாரைப் பழிப்பது? பிரம னைப் பழிப்பதனாற் பயனென்னை? தேவர்களெல்லாம் பராதீனர்க ளானார்கள். அதற்கு என்செய்வோம்? மூடர்களான தேவர்களுக்கு இனிப் பாதுகாப்பு ஒரு சிறிதுமில்லை. இப்பொழுது எந்த மாயையி னால் உமது சிரம் சேதிக்கப்பட்டதோ அந்த மாயை சாத்வீககுண முடையதுமன்று, இராஜஸகுண முடையதுமன்று, தாமஸகுண முடையதுமன்று, ஜகத்குருவாகிய ஈசனுடைய மாயையேயாம் என்றனர். (36–39)

என்றிவ்வண்ணம் பலவாறாக வெண்ணிப் புலம்பிக்கொண் டிருக்கும் சிவபுரோகமர்க (பரமசிவனை முன்னிட்டவர்க)ளான தேவர்களை வேதவித்தமரான பிரகஸ்பதி துக்கோபசமனஞ் செய்து கூறத்தொடங்கினர் :—தேவர்காள்! நீங்கள் துக்கிப்பதினாலேயுங்

---

* ஈண்டு யாங்கள் எங்களுடைய பிரயோஜனத்தை (நஷ்டத்தை) நாடித் துன்பமடைகின்றோம் எனவும், அன்று எங்களுடைய பிரயோ ஜனத்தை எண்ணாமல் பிரிவாற்றாமையை எண்ணித் துன்பமடைகின்றோம் எனவும், அன்றி எங்கள் பிரயோஜனத்தைப்பற்றிச் சிறிதுந்துன்பப்படவே மாட்டோம், யாம் செய்த இக்காரியமே துன்பத்தை விளைவித்தது எனவும் பொருள்கொள்க.

† சுரர்பேதம் அசுரர், அசுரர்பேதம் இராக்கதர்.

கூக்குரலிட்டழுவதினுலேயும் பிரயோஜனமென்ன ? எக்காலத்தில் எதுபுத்திக்கு கோசரிக்கின்றதோ அதனை அக்காலத்துக்குரிய உபாயமென்றெண்ணிச் செய்யவேண்டும். ஓ தேவேசனே ! உலகில் தெய்வப்பிரயத்தனம் புருஷப்பிரயத்தன மென விரண்டு கூறுவர். அவ்விரண்டும் ஒப்பானவை. ஆகலான் புருஷன் பிரயத்தனஞ் செய்வானுயின் அப்பிரயத்தனத்தினு லடையும் பயனை எவ்வகையிலாயினும் கூட்டி முடித்தல் தெய்வப்பிரயத்தனம். எனவே, தெய்வமாகிய ஈஶ்வரனுடைய பிரேரேபணையன்றித் தெய்வமாகிய வினையின் முயற்சி புருஷனிடத்தில் நிகழமாட்டாது. அவ்வினையான் வரும் முயற்சியன்றி புருஷப் பிரயத்தனமும் முடிவு பெருது. ஆதலால் வினை காரணமாகவரு முயற்சியும் அம் முயற்சியளவாகச் செய்யும் புருஷப்பிரயத்தனமும் ஆகிய இவ்விரண்டும் தெய்வமாகிய ஈஶ்வரனுடைய செயலாகவே எண்ணி நீ செய்வாயென்ன, இந்திரன் தனது குருவை நோக்கி, ஆசிரியரே ! தேவரீர் கூறியவற்றுள் தெய்வப்பிரயத்தனமும் மனுஷப் பிரயத்தனமும் ஒன்றென்பது ஒப்பத்தகுந்ததன்று. ஆதலால் இருவகைப் பிரயத்தனங்களுள் தெய்வப் பிரயத்தனத்தையே முதன்மையாக வெண்ணுகிறேன். அனர்த்தத்தை விளைக்கும்படியான பௌருஷத் (புருஷப் பிரயத்தனத்) தைச்சுடும் (தள்ளும்). ஏனெனின் தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கிற பொழுதே விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுப்போயிற்றே. இதில் புருஷப் பிரயத்தனமும் தெய்வப் பிரயத்தனமும் ஒத்திருக்குமாயின் அறுபடுமா ? என்றனன். அப்பொழுது பிரமதேவன் கூறுகின்ருன் :—காலத்தினுல் எந்த வினை பிரேரேபிக்கப்படுகின்றதோ, அதனுல் வருவது நன்மை தீமை என்னும் இரண்டு பகுப்பினையுடையது. அவ்விரண்டும் முயற்சி என்னுங் கருவியால் அனுபவத்திற்கு வருவது உண்மையாதலால் அவ்விரண்டையும் அவசியம் அனுபவித்தே தீரவேண்டும். தெய்வச் செயலை எவன்தான் அதிக்கிரமிப்பான் ? (40–43)

சரீரமெடுத்தவன் சுகதுக்கங்களை அனுபவிக்கின்றவனுகவே ஆகிருன். இதில் ஐயமில்லை. எங்ஙனமெனின், முன்காலவசத்தினுல் (என்னறிவுகெட) அதுகண்ட சிவனுர் என்றலையைக் கிள்ளினர். அப்படியே, பிரகஸ்பதியினுடைய சாபத்தினுல் சந்திரன் க்ஷயரோக முடையவனுயினன். சசிதேவியினுடைய பதியாகிய இந்திரனும் (கௌதமர் சாபத்தினுல்) ஆயிரம் யோனிகளை யடையவும் அதுபோலவே, ஒருகால் அகத்தியமுனிவர் சாபத்தினுல் சுவர்க்கத்தினின்றும் தவறிப் பூமியில் விழவும் பிரஹ்ம ஹத்தியினுல் பீடிக்கப்பட்டு மானத தடாகத்திலுள்ள தாமரை நாளத்தில் வசித்திருக்கவுமாயினன். அதுபோலவே இப்பொழுது விஷ்ணுமூர்த்தியினுடைய சிரமும் உப்புக்கடலிற் போய் விழுந்தது. இவையெல்லாம் தெய்வத்தின் செயலேயன்றே ! (அதனைக்கடப்பது) கஷ்டம் என்று கூறிப் பின்னர்த் தேவர்களைப்பற்றி, ஓ தேவர்களே ! இவர்களனைவரும் எப்பொழுதும் மாறிமாறித் துன்பத்தை அனுபவிக்கின்றவர்களாகவே யிருக்கின்றுர்கள். ஆகையால் இத்தேகமாகிய சம்சாரத்

தினால் எவர்தான் துன்பம் அனுபவிக்காமலிருக்கின்றனர்? ஆகவே நீங்கள் விசனப்படுவதை விட்டொழியுங்கள். மஹாமாயை எனவும், வித்யை யெனவும், தேவி எனவும், சநாதநி எனவும், பிரசித்தி பெற்ற நாரணியைத் தியானஞ் செய்யுங்கள். நிர்க்குணமாயும் பிரகிருதியாயும் உள்ள அப்பரதேவதை நமது அபீஷ்டத்தை நிறைவேற்றுவள். சராசரமாயுள்ள இந்த மூன்றுலகமும் எந்தப் பகவதியினாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பிரம்மவித்தையாயும், ஜகத் சிருஷ்டிகர்த்தையாயும், யாவருக்கும் மாதாவாயும் இருக்கின்ற பகவதியைத் தியானஞ் செய்யுங்கள் என்றனன். இவ்வாறு பிரமதேவன் தேவர்களை நோக்கிக் கூறிப் பின்னர் தேவகாரிய சித்தியின்பொருட்டு நான்கு வேதங்களும் தேகவுருவோடு கூடினவைகளாக எதிரில் வந்திருக்கும்படிக் கட்டளையிட்டனன். அவைகளும் அப்படியே வந்தன. (44–50)

பிரமன் அந்த வேதபுருஷர்களைப் பார்த்து பிரம்மவித்தையாயும், சநாதநியாயும், *மறைக்கும்படியான அங்கங்களையுடையவளாயும், மஹாமாயையாயும், சர்வகாரியங்களையுஞ் சாதிக்கும் வல்லமை யுடையவளாயும் இருக்கின்ற பரதேவதையைத் தோத்திரஞ் செய்யுங்கள் என்று கூற பிரம்ம தேவருடைய வசனத்தை வேத புருஷர்கள் கேட்டு மிகவும் சுந்தரமான அங்கங்களுடையவளாயும் ஜ்ஞானத்தினால் அறியப்பட்டவளாயும், மாயாசொரூபியாயும், ஜகத்துக்குள் இருப்பவளாயும் விளங்கா நின்ற அக்காரணியைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர் :— (51–52)

## வேதங்கள் செய்யுந் தோத்திரம்

ஹே அம்பிகே! ஹே மஹாமாயே! ஹே விச்வோற்பத்திகரே! (பிரபஞ்சோற்பத்தி காரியங்களைச் செய்கின்றவளே!) ஹே சிவே, நிர்க்குணே, ஹே மாத, சங்கரகாமதே (சங்கரனுக்குக் காமந்தருகின்றவளே), நீ எல்லா பூதமயமாயிருக்கின்றாய். உனக்கு வந்தனம். நீ எல்லா பூதங்களுக்கும் ஆதாரை, பிராணிகளுக்கெல்லாம் பிராணை, அப்படியே, †தீ, ஸ்ரீ, காந்தி, க்ஷமை, சாந்தை, சிரத்தை, மேதை, த்ருதி, ஸ்மிருதி என்று சொல்லப்பட்ட நவசக்தி சொரூபை என்று துதிக்கப்பட்டவளாயும் இருக்கின்றாய். அன்றியும் அக்ஷரசங்கியையில் கணிக்கப்பட்ட அர்த்தமாத்திரையாயும், காயத்ரியாயும், வியாஹ்ருதி (மந்திரவிசேஷை) யாயும் அப்படியே ஜயையாயும், விஜயையாயும், ‡தாத்திரியாயும், லஜ்ஜையாயும்,

---

* தேவியினது அக்ஷர சொரூபமாயிருக்கின்ற பிரம்மவித்தையும் மறைக்கத்தக்கது. சிருஷ்டி நித்தம் கொள்ளும் சரீராங்கமும் மறைக்கத் தக்கது. ஆகலான் மறைக்கும்படியான அங்கங்களையுடையவளென்று கூறியதென்க.

† தீ-புத்தி, ஸ்ரீ-சம்பத்து. மேதை-ஞானம், த்ருதி-தைரியம், ஸ்மிருதி-சித்தம். ஏனைய வெளிப்படை.

‡ தாத்திரி-சிருஷ்டிகர்த்தை.

கீர்த்தியாயும், ஆசையாயும் தயையாயும் இருக்கின்றாய். ஹே அம்மையே! உன்னை மூன்றுலகங்களையும் படைத்துக் காக்கின்றவ ளெனவும், தயாரசத்தோடு கூடினவளெனவும், ஜனங்களுக்கு ஜநநி எனவும், வித்தை சிவை எனவும், எல்லா வுலகங்களுக்கும் ஹிதை எனவும், வரேண்யை (வரிப்பதற்கு யோக்யை) எனவும், மந்திர பீஜங்களிடத்தில் வாசஞ்செய்வதில் நிபுணை எனவும் ஜன்மத்துக்கு நாசத்தைச் செய்கிறவளெனவுந் துதிக்கின்றோம். (53–56)

*(ஹே தேவீ) பிரமன், அரசன், அரி, இந்திரன், வாயு, அக்னி, சூரியன் ஆகிய இவர்களெல்லாரும் புவனங்களுக்கு அதிகாரிகளா யினும் இவர்கள் உன்னுஜ்ஞையினாலே யாதும் செய்துவருகின்றனர். ஆகலானும் நீ ஸ்தாவர ஜங்கமங்களுக்கு மாதா ஆகின்றமை யானும் இவர்கள் முதன்மையான கர்த்தாக்களாகமாட்டார். அன்றியும் நீ எப்பொழுது இவ்வுலகமனைத்தையும் படைப்பதற்கு இச்சிக்கின்றனையோ அப்பொழுதே, ஹே ஜநநி! பிரம்ம விஷ்ணு ருத்திரர் முதலிய தேவர்களைப் படைத்து அவர்களால் சிருஷ்டி ஸ்திதி லயாதி கிருத்தியங்களைச் செய்விக்கின்றாய். ஹே தேவீ! (அங்ஙனஞ் செய்விக்கின்ற †அத்தொழில்களால்) உனக்குச் சம்சார பந்தம் ஒரு சிறிதுமில்லை; ஒரு வடிவமாகவே யிருக்கின்றாய். இதனால் சகல புவனத்திலும் உனது சொரூபத்தை அறிவதற்கு ஒருவரும் சக்தராகார். அதுபோலவே உன்னுடைய நாமசங்கியைகளை எடுத்துச் சொல்வதற்குஞ் சமர்த்தரான புருடர் ஒருவருமில்லை. ஏனெனின் அல்பமான ஜலத்தைத் தாண்டுவதற்குக் கூடாத தொருவன் கரையில்லாத சமுத்திரத்தைக் கடப்பதற்குச் சாதுர்ய முடையவனாக எப்படியாவான்! ஹே பகவதி! உனது மகிமையை இவ்வுலகிலேனும் தேவசமூகத்திலேனும் ஒருவரும் அறியமாட்டார். ஹே! ஜநநி! நீ ஒருருவாகவே யிருக்கின்றாய். அப்படி ஒருருவாகவே யிருந்தும் ‡இல்லையாய்ப் போகின்ற இப்பிரபஞ்சமனைத்தையும் எவ்வாறு படைக்கின்றனை? ஹே தேவி இவ்விஷயத்தில் வேத வசனமும் பிரமாணமாகக் கூறப்படுகிறது. (57–60)

---

* இதனால் "தச்சனுலாகிய கோயில்" என்பதுபோல் பிரமனாதியரால் சிருஷ்டியாதி தொழில் நிகழ்தலால் (நமுக்யா: - முக்யமான கர்த்தர்க ளாகார்) எனவே ஏவுதற் கர்த்தாக்களாகார். ஆகவே இவரெல்லாம் இயற் றுதற் கர்த்தாக்களே யாவரெனவும், அம்பிகையோ "அரசனுலாகிய கோயில்" என்பதுபோல பிரமனாதியரை சிருட்டியாதி தொழில்களில் ஏவும் எல்லாவுயிர்களுக்கும் நிலையான மாதாவாய் நிற்றலான ஏவுதற் கர்த்தா எனவுங் குறித்தமை காண்க.

† தொழில்களால் சம்சாரபந்தமில்லை என்றது—அவைகளை அருளால் செய்கின்றவளெனவும், ஒருவடிவமாகவே இருக்கின்றாள் என்றது—கன்மமல மில்லாதவளெனவுங் குறித்தற்கென்க.

‡ பிரபஞ்சம் இல்லை என்று சொல்லும்படி நாமரூபங்களழிந்து மாயை யிலொடுக்கி யிருத்தலை முன்னுள்ளவாறு தோன்றத் தேவிசங்கற்பிக்கின்றன ளாதலால் இல்லையாய்ப்போகின்ற இப்பிரபஞ்சமனைத்தையும் எவ்வாறுதான் படைக்கின்றனை என்று வியந்ததென்க.

நீ ஆசையற்றவளாகவே யிருந்தும் எல்லா வுலகங்களுக்குங் காரணமாக இருக்கின்றாய். இது மிக்க ஆச்சரியம்! ஹே பகவதி! உனது சரித்திரம் விசித்திரமானது. எங்களுடைய மனம் இவ்விஷயத்தில் கலக்கமுறுகின்றது. சகல வேதங்களுடைய அந்தத்திலும் அறியக்கூடாத மகிமையையுடைய உனது பரதத்துவத்தை நீயும் அறியமாட்டாய். ஹே ஜநநி! நீ விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுச் சிதறிப்போனதை அறியமாட்டாயா? ஹே சிவே! விஷ்ணுவினுடைய இவ்வளவு எளிமையான சக்தியை அறியாமல் எதையறியப்போகின்றாய்? ஹே அம்பா! விஷ்ணுவினுடைய பலிஷ்டமான பாவக்கூட்டம் இதுதானோ? ஹே! ஜநநி! உன்னுடைய பாதபத்மத்தில் தியானநிபுணரா யிருக்கின்றவரிடத்தில் பாவம் எப்படியிருக்கும்? தேவஸமூகத்தினிடத்தில் பிரியமுள்ள உனக்கு மிகவுங்குடிலமான இத்தகைய உபேக்ஷை எற்றுக்கு? மிகவும் ஆச்சரியகரமான விஷ்ணுவினுடைய சிரோநாசமானது உனக்குச் சம்மதம்போலும்! ஹே அம்பா! அதனால் நீ சரீரச்சேதஞ்செய்வதில் மிகவுஞ் சாமர்த்தியமுடையவள் என்று எண்ணப்படுகின்றாய். இது பெருந்துக்கம்! சிரசை ஒன்றுசேர்ப்பதில் நீ காலதாமதஞ் செய்வது எப்படி சகிக்கத்தக்கது? அறியோம். ஹே தேவி! உனது சித்தத்தில் எல்லாத்தேவர்களுக்கும் தாபத்தைத் தரும்படியான தோஷமியற்றுதற்கு இன்றுதான் அறிந்தனையோ? அன்றி யுத்தத்தினால் விளைந்த சொல்லுதற்கரிதான விஷ்ணுவினுடைய அகங்காரமே வேகமாய்ச் சேதிப்பதற்குச் சக்தியுடையதாயிற்றோ? ஹே அம்பா! உனது மஹிமாவிலாசத்தை யாங்கள் அறியவேமாட்டோம். * ஹே பவாநீ! இப்பொழுது அவ்விஷ்ணுவினுடைய சிரம் மிகவும் ரம்மியமான தீர்த்தப்பிரதேசத்தில் கோரமான தவஞ்செய்து உன்னிடத்தில் வரம்பெற்றவரும் அவ்விஷ்ணுவினால் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டவருமான அசுரர்களால் மறைந்துபோகும்படி செய்விக்கப்பட்டதா? இப்படி தலையற்றுப் போன வாசுதேவனைப் பார்ப்பது அவர்களுக்கு ஒரு விநோதமா? (61–65)

முதன்மையானவளே! அன்றியும் நீ சமுத்திரராஜக்குப் புத்ரியான லக்ஷ்மியினிடத்தில் கோபங்கொண்டனையோ இல்லையாயின் இந்த லக்ஷ்மியை நாதனற்றவளாகப் பார்க்கின்றது எற்றுக்கோ? அக்கமலாஸிநி உனக்கு ஏதேனும் அபராதஞ் செய்திருப்பாளாயினும் அவள் உனது அம்சத்தினின்றும் உண்டானவளாகலின் அவளுடைய அபராதம் பொறுக்கத் தக்கதன்றோ? இனி என் விண்ணப்பத்தையேற்று இந்த விஷ்ணுவை எழுப்பி ஸ்ரீதேவியைச் சந்தோஷப்படுத்தும்படியாகச் செய்வது அவசியம். ஹே சகலாதிநாதை! இந்த லக்ஷ்மியேயல்லாமல் இந்தத்தேவர்களுந் துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கின்றனர். இவர்களோ காரியங்களில் முதன்மையானவராயும் பிரசித்தமான பிரபாவத்தையுடையவராயும் இருக்கின்றவர். உன்னை எப்பொழுதும் நமஸ்கரித்துக்

* பவன் – சிவன். பவாநி – சிவனுடைய பத்நி.

கொண்டும் இருக்கின்றனர். ஆகையால் இவரனைவர்க்கும் நாதனாய் விளங்காநின்ற விஷ்ணுமூர்த்தியை எழுந்திருக்கச்செய்து அவர்களைத் துக்கசாகரத்தினின்றும் கரையேற்றுவாயாக. ஹே தேவி! விஷ்ணுவினுடைய சிரம் எவ்விடஞ் சென்றதோ அறியோம்; இப்பொழுது அவரைப் பிழைப்பிக்கும் உபாயம் யாங்கள் வேறொன்றையும் அறிந்திலம். நீயோ எப்படி அமிர்தமானது தேவர்களைச் சீவிக்கச்செய்யுந் தொழிலில் ஆற்றலுடையதோ, அப்படியே உலகத்திற்குப் பிராணனைக் கொடுக்குந்தொழிலில் ஆற்றலுடையவள். இவ்வண்ணஞ் சரீரத்தோடு வெளிவந்த வேதாகமங்கள் குணதீதையாயும் மஹா மாயாசொரூபையாயும் உள்ள மஹாதேவியைத் துதிக்க, அத்தேவி பிரசன்னையாய் ஆகாயத்திற்றோன்றி இனியவோசையால் ஜனங்களுக்கு ஆனந்தத்தைத் தருவதும் சுபகரமுமான அசரீரிவாக்கால் அந்தத் தேவர்களை நோக்கிக் கூறுகின்றாள்: (66–70)

ஓ தேவர்காள்! நீங்கள் துன்பப்படவேண்டாம். அமரர்களே! ஸ்வஸ்தமாக இருங்கள். வேதங்கள் என்னைத் துதித்தன. அதனால் சந்தோஷமடைந்தேன். இதில் ஸம்சயமில்லை. இந்த மானிடப் பிரபஞ்சத்தில் எந்தப் புருஷன் என் சம்பந்தமான அத் *துதியை எப்பொழுதும் பக்தியோடு தோத்திரஞ் செய்கின்றானோ அவன்

---

* நமோதேவி மஹாமாயே விச்வோத்பத்தி கரேசிவே
நிர்க்குணே ஸர்வபூதேசி மாத: சங்கரகாமதே (1)

த்வம்பூமிஸ் ஸர்வபூதாநாம் ப்ராண: ப்ராணவதாம் ததா
தீ:ஸ்ரீ:காந்தி:க்ஷமா சாந்தி: ஶ்ரத்தா மேதா த்ருதி ஸ்ம்ருதி: (2)

த்வமுத் கீதேர்த மாத்ராஸி காயத்ரீ வ்யாஹ்ருதி ஸ்ததா
ஜயாச விஜயாதாத்ரீ லஜ்ஜா கீர்த்தி ஸ்புருஹாதயா. (3)

த்வாம் ஸம்ஸ்து மோம்ப புவன த்ரயஸம்விதாந
தக்ஷாந்தயார ஸயுதாம் ஜநநீம் ஜநாநாம்
வித்யாம் ஶிவாம் ஸகலலோக ஹிதாம்வரேண்யாம்
வாக்பீஜ வாஸ நிபுணாம் பவநாஶகர்த்ரீம். (4)

ப்ரஹ்மா ஹர சௌரிஸஹஸ்ரநேத்ர
வாக்வந்நி ஸூர்யா புவநாதிநாதா:
தேத்வத் கிருதாஸ் ஸந்தி ததோநமுக்யா
மாதாயத ஸ்த்வம் ஸ்திர ஜங்கமாநாம் (5)

சகலபுவனமேதத் கர்த்து காமாயதாத்வம்
ஸ்ருஜஸி ஜநநி தேவாந் விஷ்ணுருத்ராஜ முக்யாந்
ஸ்திதிலயஜநநம் தை: காரய ஸ்யேக ரூபா
நகலு தவகதம் சித்தேவிஸம்ஸாரலேச: (6)

நதேரூபம் வேத்தும் ஸகலபுவநே கோபிநிபுணோ
நநாம்னும் ஸங்கியாந்தே கதிதுமிஹ யோக்யோஸ்தி புருஷ:
யதல்பம் கீலாலம் கலயது மசக்த: ஸதுநர:
கதம் பாராவாரா கலநசதுர: ஸ்யா த்ருதமதி: (7)

நதேவானும் மத்யே பகவதி தவாநந்த விபவம்
விஜாநாத்யே கோபி த்வமிஹ புவநை காஸிஜநநி

எல்லா அபீஷ்டங்களையு மடைவன். எந்தப்புருஷன் மூன்று காலத்திலும் பக்தியோடு எனது சம்பந்தமான இந்த ஸ்தோத்திரத்தைத் தவருமற் கேட்கின்ருனே, அப்புருஷன் துக்கத்தினின்று நீங்கினவனும் சுகமடைந்தவனும் ஆகின்றனன். இத்தோத்திரம் வேதத்தினுல் சொல்லப்பட்டபடியால் வேதத்துக்கொப்பானதாம். இனி எக்காரணத்தினுல் விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுப் போயிற்ருே அக்காரணத்தை இப்பொழுது கேளுங்கள். சம்சாரமாகிய இந்தப்பிரபஞ்சத்தில் ஒருவருக்கும் ஒரு காரண மன்றியில் நன்மை தீமையாகிய காரியங்கள் எப்படிச் சம்பவிக்கும்? ஓர் காலத்

---

கதம் மித்யா விஸ்வம் ஸகல மபிசைகார சயஸி
ப்ரமாணந் த்வே தஸ்மிந் நிகம வசனம் தேவி விஹிதம் (8)
நிரீஹை வாஸித்வம் நிகிலஜகதாம் காரணமஹோ
சரித்ரந்தே சித்ரம் பகவதி மநோநோ வ்யதயதி
கதம் காரம் வாச்ய: ஸகல நிகமா கோசரகுண
பிரபாவ: ஸ்வம்யஸ்மாத் ஸ்வயமபி நஜாநாஸி பரமம். (9)
நகிஞ்ஜாநா ஸித்வம் ஜநநி மதுஜின் மௌளிபதனம்
சிவேகிம்வா ஜ்ஞாத்வா விவிதிஷஸி ஶக்திம் மதுஜித:
ஹரே: கிம்வா மாதர் துரித ததிரேஷாபலவதீ
பவத்யா: பாதாப்ஜே பஜனநிபுணே க்வாஸ்தி துரிதம். (10)
உபேக்ஷா கிம்சேயம் தவஸுர ஸமூஹேதி விஷமா
ஹரேர்மூர்த்னோ நாஶோ மதமிஹ மஹாஸ்சர்ய ஜனகம்
மஹாத்துக்கம் மாதஸ் த்வமஸி ஜனனச் சேதகுஶலா
நஜாநீமோ மவுளேர் விகட நவிலம்ப: கதமபூத். (11)
ஜ்ஞாத்வா தோஷம் ஸகலஸுரதா பாதிதம் தேவிசித்தே
கிம்வா விஷ்ணு வமரஜனிதம் துஷ்கிருதம் பாதிதந்தே
விஷ்ணோர் வாகிம் ஸமரஜநித: கோபிகர்வோதி வேகாச்
சேத்தும் மாதஸ் தவவிலஸி தம்நைவ வித்மோத்ர பாவம். (12)
கிம்வா தைத்யைஸ் ஸமரவிஜிதை ஸ்தீர்த்ததேஶே ஸுரம்யே
கோரம் தப்த்வா பகவதிவரம் லப்தவத் பிர் பவத்யா:
அந்தர்த்தானம் கமிதமதுநா விஷ்ணுஶீர்ஷம் பவாநி
த்ரஷ்டும் கிம்வா விகதஶிரஸம் வாஸுதேவம்விநோத: (13)
ஸிந்தோ: புத்ரியாத் ரோஷிதாம் கிந்த்வமாத்யே
கஸ்மா தேநாம் பிரேக்ஷஸே நாதஹீநாம்
க்ஷந்தவ்யஸ்தே ஸ்வாம்ஶ ஜாதா பராதோ
வ்யுத்தா ப்யைநம் மோதிதாம் மாம்குருஷ்வ. (14)
ஏதே ஸுராஸ்த்வாம் ஸததம் நமந்தி
கார்யேஷுமுக்யா: ப்ரதித ப்ரபாவா:
சோகார்ணவாத்தா ரயதேவிதேவாந்
உத்தாப்ய தேவம் ஸகலாதி நாதம். (15)
மூர்தா கத: க்வாம் பஹரேர் நவித்மோ
நான்யோஸ்த்யுபாய: கலுஜீவநேத்ய
யதாஸுதா ஜீவன கர்மதக்ஷா
ததா ஜகஜ்ஜீவித தாஸிதேவி. (16)

தில் விஷ்ணுமூர்த்தி, சமுத்திரராஜபுத்திரியும் தன் சமீபத்தில் நிலைபெற்றிருப்பவளும் பிரியதமையுமாகிய லக்ஷ்மியினுடைய மனோரம்யமான முகத்தைப்பார்த்து இகழ்ந்து கூறினர். லக்ஷ்மி தேவி, பிரபுவானபதி நம்மைப்பார்த்து ஏன் பரிகாசஞ் செய்கின்ருர்? நமது முகம் யாது காரணத்தினுல் அவருக்கு விரூபமாக (அழகில்லாததாகக்) காணப்பட்டது? அது நம்மாலறியப்படவில்லை; இதுவுண்மை ஆயினும், காரண மில்லாமல் நம்மைப் பரிகாசஞ் செய்தற்கு ஏது வென்னை? நம்மிலுஞ் சிறந்த சுந்தரியான வேருெரு காமக்கிழத்தியே இப்படி நம்மைச் செய்யும்படிச்சொல்லியிருக்கவேண்டும் என்ருலோசித்துக் கோபங் கொண்டு தமோ குணப் பிரதானையாயினள். அப்போது தாமஸசக்தியும் அவளது தேகத்தில் வியாபித்தது. மிகவும் கொடூரமான தாமஸசக்தி அந்த லக்ஷ்மி தேகத்தில் வியாபித்ததை ஆராயுங்கால் யாதோவொரு காலத்தில் தேவகாரியசித்தி யுண்டாகும் பொருட்டென்றே நிச்சயிக்கவேண்டும். (இதுநிற்க) பின்னர் அந்த ஶ்ரீதேவி தாமஸ சக்தியினுல் கவரப்பட்ட தேகத்தையுடையவளாய் மிகவும் உக்கிராவேசங்கொண்டு திருமாலைநோக்கி உன்னுடைய தலை அற்றுப் போகக்கடவது என்கிற இக்கடுஞ் சொல்லைக் கோபமிகுதியினுல் நாத்தழுதழுத்துக் கூறினள். (71–81)

அந்தோ! *வைதவ்யத்தினுல் வரும் துக்கத்தைக் காட்டிலும் காமக்கிழத்தியினுல் வரும் துக்கம் மிகவும் கொடுமையான தென்றெண்ணித் தாமஸசக்தியின் சம்பந்தத்தினுல் இவ்வாறு கூறினுள். எனவே லக்ஷ்மிதேவி, நாம் சாபம் இடுவோமாயின் பதியை யிழக்க நேருமே, அது வருமாயின் சுகத்துக்கழிவும் அமங்கலத்வமும் உண்டாகுமே என்கிற எண்ணங்கொள்ளாமல் மாற்ருளிடத்துக்கொண்ட பகையினுல் தன் கணவன் அவளுக்கு உதவாமற் போகவேண்டுமென்கிற எண்ணத்தையே பெரிதாகக் கொண்டனள். ஓ முனிவர்களே! ஸ்திரீகளுக்கு மூர்க்கத் தன்மையும் தயையின்மையும் பேராசையும் ஆசாரமின்மையும் அசத்தியம் பேசுவதும் ஸாஹஸஞ்செய்வதும் மாய வித்தை காட்டுவதும் ஆகிய இவைகளெல்லாம் இயற்கையாயுண்டாகுந் துர்குணங்களாம். (இதுநிற்க) விஷ்ணுமூர்த்திக்கு சாபம்வந்த காரணத்தைக்கூறிய பின்னர் தேவி தேவர்களை நோக்கி, ஓ தேவர்காள்! இந்த விஷ்ணுவினுடைய தலை உப்புக்கடலில் ஆழ்ந்து போயிற்று. இப்பொழுது அந்த வாசுதேவனைச் சிரத்தோடு கூடினவனுகச் செய்கின்றேன். இதுவன்றியும் வேருெரு காரணம் இருக்கின்றது. அதனுல் உங்களுக்கு மஹத்தான கார்யானுகூலம் உண்டாகப்போகிறது; இதில் ஐயமில்லை. (82–85)

முன்னொரு காலத்தில் மஹாபாகுவும் (பெருந்தோளனும்) ஹயக்ரீவனென்று பிரசித்திபெற்றவனுமான ஓரசுரன்

---

* வைதவ்யம் தவ-பதி, வி-இல்லாதது, ஆகவே விதவை பதியில்லாதவள். பதியற்றதன்மை வைதவ்யம். எனவே அமாங்கல்யம்.

ஸரஸ்வதி நதிக்கரையில் மிகக்கடினமான தவஞ்செய்திருந்தனன். அவ்வசுரன் ஆகாரமில்லாதவனுயும், ஜிதாத்மாவாயும், எல்லாப் போகங்களையும் வர்ஜித்தவனுயும், எனது மாயா பீஜாத்மகமான ஏகாக்ஷர மந்திரத்தை ஜபித்தவனுயும் ஸர்வாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட எனது தாமஸ சக்தியைத் தியானித்தவனுயும் ஆயிரம் வருஷம் கோரமான தவஞ்செய்து வந்தனன். அப்பொழுது அவனுடைய கண்ணுக்கெதிரில் அவ்வசுரனுல் எவ்வாறு தியானிக்கப்பட்டேனே அவ்வாறே அத்தகைய தாமஸவுருவங் கொண்டு யான் சிம்மவாகனனூடையாய் அவனிடத்தில் கருணையுடையவளாய் தோன்றி, ஓ மகாபாக்கியவந்தனே! விரதசீலனே! நீ விரும்பிய வரத்தைக் கேட்பாய். அதனை உனக்குத் தருகின்றேன் என்று கூறினேன். (86–90)

அவன் என்னுடைய இனியவசனத்தைக் கேட்டுச் சந்தோஷ பூரிதனுய் அதிசீக்கிரத்தில் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து எனது அற்புதரூபத்தைக் கண்டு பிரேமையினுல் மலர்ந்த கண்களை யுடையவனுய் சந்தோஷத்தினுல் ஆனந்தக்கண்ணீர் பெருகத் துதிக்கத் தொடங்கினன் :— *ஹே தேவி! மஹாமாயே! சிருஷ்டிஸ்திதி சம்ஹாரகாரணீ! பக்தர்களுக்கு அனுக்ரஹஞ் செய்வதில் சாமர்த்திய முடையவளே! அபீஷ்டத்தைத் தருபவளே! மோக்ஷத்தைக் கொடுக்கின்றவளே! உனக்கு வந்தனம். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களுக்கும் கந்த ரச ரூப ஸ்பரிச சப்தங்களுக்கும் நீயே காரணை. ஆக்ராணம் ஜிஹ்வை சக்ஷு த்வக் சுரோத்ரம் ஆகிய ஞானேந்திரிய பஞ்சகங்களும் இவைகட்கு வேறுன வாக் பாத பாணி பாயுரு உபஸ்தங்களென்னும் கன்மேந்திரியங்களும் ஆகிய இவைகளெல்லாம் உன்னிடத்திலிருந்தே வெளியாகின்றன என்று தோத்திரஞ் செய்தனன். யான் அவனைப்பார்த்து உனது பக்தியினுலும் அற்புதமான தவத்தினுலும் ஆனந்தமடைந்தேன். உனக்கு அபீஷ்டமான வரம் யாது சொல்வாய்? எதை நீ விரும்புகின்றனையோ அதனைத் தருகின்றேனென்றேன். அவன் ஹே அம்பா! எனக்கு எப்படியானுல் மரணம் நேரிடமாட்டாதோ அந்த வகையாய்ச் செய்வாய். யான் எப்படி யோகியாய்த் தேவர் அசுரர்களால் ஜயிக்கப்படாதவனுய் தேவத்வத்தை யடைவேனே அப்படிச் செய்வாயென்றனன். ஜன்மம் எடுத்தவனுக்கு மரணம் நிச்சயம். அதுபோலவே மரணமடைந்தவனுக்கு ஜன்மம் நிச்சயம்.

---

* நமோ தேவ்யை மஹாமாயே ஸ்ருஷ்டி ஸ்தித்யந்த காரிணி
பக்தாநுக்ரஹ சதுரே காமதே மோக்ஷதே சிவே.
தராம்புதேஜ: பவன கபஞ்சா நாஞ்ச காரணம்
த்வங்கந்த ரஸரூபாணும் காரண ஸ்பர்ஶ சப்தயோ:
க்ராணஞ்ச ரஸநாசக்ஷு ஸ்த்வக் சுரோத்ர மிந்த்ரியாணிச
கர்மேந்திரியாணி சாந்யாநி த்வத்தஸ் ஸர்வம் மஹேஶ்வரி.

இத்தகைய மரியாதை உலகத்தில் வழங்கப்பட்டு வருகின்றது. இம்முறைமைக்கு மாறான விதி எப்படி யுண்டாகும் ? (91-98)

ஓ அசுரகுலோத்தமனே ! நீ இவ்வாறு மரணவிஷயத்தில் நிச்சயபுத்தி வைத்து மனதினால் யோசித்து உனக்கு இஷ்டமான வேறுவரத்தைக் கேட்பாயாக என்றேன். அவன் ஹே ஜகதம்பிகே ! எனக்கு ஹயக்ரீவனிடத்திலிருந்தே மரணமுண்டாக வேண்டும் ; வேறொருவராலும் எனக்கு மரணம் வரக்கூடாது ; இதுதான் என் மனத்திலுதித்த இஷ்டம். இந்த இஷ்ட காமத்தைப் பூரணஞ் செய்வாயாக வென்றனன். (99–100)

ஓ மஹாபாக்கியவந்தனே ! வீடு போய்ச் சேர்ந்து இராஜ்ய பாரத்தை உன்னிஷ்டம்போற் செய்வாயாக. ஹயக்ரீவனைத் தவிர உனக்கு வேறொருவராலும் மரணம் நேரிடமாட்டாது. இது நிச்சயம் என்று அந்த ஹயக்ரீவனுக்கு வரந்தந்து அப்பொழுதே மறைந்து போயினேன். அந்த அசுரனும் பரமானந்தத்தையடைந்து தன் வீட்டுக்குச் சென்றனன். பின்னர் துஷ்டாத்மாவான அந்த அசுரன் மஹரிஷிகளையும் வேதங்களையும் பீடித்தும் நிந்தித்தும் வந்தனன். அவ்வசுரனைக் கொல்லத்தக்கவர் மூன்றுலகத்திலும் இல்லை. ஆதலால் பிரம்மதேவன் மனோகரமான குதிரையினுடைய சிரசை அறுத்து சிரோபங்கமான விஷ்ணுவினுடைய தேகத்தில் இப்பொழுது சேர்த்துவிடுவான். அதன் பின்னர் ஹயக்ரீவனான நாராயணன் உங்களுடைய நன்மையைக் கருதி பாபிஷ்டனும் குரூரனும் பகைவனுமான அவ்வசுரனைக் கொல்லப்போகின்றான் என்று கூறினள். (101–105)

இவ்வாறு தேவர்களை நோக்கி ஆகாசவாணியாய்க் கூறிய சர்வாணியாகிய மஹாதேவி மௌனமுற்றனள். பின்னர் தேவர்களும் பரமானந்த பரவசராய்த் தேவ சில்பியான பிரமதேவனை நோக்கிக் கூறத்தொடங்கினர் :—ஓ பிரம்மதேவரே ! தேவர்களுடைய காரியமாக விருக்கின்ற விஷ்ணுவினுடைய சரீரத்தில் தலையைப் பொருத்துவதைச் செய்வீர். பின்னர் ஹயக்ரீவ உருவங்கொண்ட விஷ்ணுமூர்த்தி அசுரசிரேஷ்டனான அந்த ஹயக்ரீவனைச் சம்ஹரிப்பதாகிய தேவகாரியத்தைச் செய்து முடிப்பரென்று கூறினர். ஓ முனிவர்களே ! இவ்வாறு கூறிய தேவர்கள் விண்ணப்பத்தைப் பிரம்மதேவர் கேட்டு மிக விரைவோடு தேவர்களுடைய முன்னிலையிலேயே வாளினால் ஒரு குதிரையின் சிரசையறுத்து மஹாமாயா சொரூபிணியாகிய தேவியினுடைய திருவருளால் அத்தலையை விஷ்ணுமூர்த்தியினுடைய கண்டத்திற் சேர்க்க அவரும் எழுந்தனர். அதனால் அந்நாள்தொட்டு விஷ்ணுமூர்த்தி ஹயக்ரீவரென்னுந் திருநாமம் உடையவராயினர். பின்னர் மதோன்மத்தனும் தேவர்களுக்குச் சத்துருவுமான அந்த தைத்தியனாகிய ஹயக்ரீவன் பலிஷ்டரும் தேஜோவானுமான விஷ்ணுமூர்த்தியாகிய அந்த ஹயக்ரீவனாலேயே யுத்தத்தில் கொல்லப்பட்டனன். பூமியில் எந்த மனிதர்கள் சுபகரமான இந்த ஹயக்

ரீவோ பாக்கியானத்தைக் கேட்கின்றார்களோ, அவர்கள் சகல துக்கத்தினின்றும் நீங்கினவராகின்றனர் ; இதில் ஐயமில்லை. இந்த மஹாமாயா சொரூபிணியாகிய தேவீ சரித்திரம் பாபத்தைப் போக்குவது, பரிசுத்தமானது, படிப்பவர்களுக்கும் ஸர்வ ஸம்பத்தையுந் தருவது. (106–112)

ஓம் ஸமாநாதிகவர்ஜிதாயை நம:

## 6. மது கைடபர் போர்க்கோலம்

சவுனகர் சூதமுனிவரைப் பார்த்து, ஓ முனிவரே ! நீர் விஷ்ணு மூர்த்தி ஹயக்ரீவரான வரலாற்றைக் கருணையினாற் கூறக் கேட்டோம் ; இனி அவர் மதுகைடபர்கள் என்னும் அசுரர்களோடு கடலில் ஐயாயிர வருடம் போர் புரிந்ததாகக் கூறினீரல்லவா ? அதனையும் அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று கேட்கத் தொடங்கினர். அந்த மஹா சமுத்திரத்தில் மஹாபலிஷ்டரும், ஒருவராலும் அதிக்கிரமிக்க முடியாதவரும், தேவர்களாலும் வெற்றிகொள்ளக் கூடாதவருமான அவ்விரண்டசுரரும் எப்படிப் பிறந்தார்கள் ? எப்படி விஷ்ணுமூர்த்தியினால் சங்கரிக்கப்பட்டார்கள் ? அந்த அற்புதமான சரித்திரத்தைக் கூறும். யாங்களனைவரும் கேட்பதில் விருப்பமுடையவர்கள். மிக்க கேள்வியுடைய நீரும் சொல்வதில் வெறுப்பில்லாதவர். இப்படிப்பட்ட நம்மிருவரும் இவ்வனத்தில் சந்திக்கும்படி நேரிட்டது தெய்வச்செயல்தான். மூர்க்கனைச் சந்திப்பது விஷத்தைக்காட்டிலுங் கொடுமையானதென்றும், விவேகியைச் சந்திப்பது தேவாமிருதத்தைக் காட்டிலும் மிக இனிமையானதென்றும் சொல்லப்படுகிறது.

பசுக்களான எல்லா ஜந்துக்களும் ஜீவித்திருக்கின்றன ; புல் முதலியவைகளைத் தின்கின்றன ; வீரியத்தை ஸ்கலிதஞ் செய்கின்றன ; விஷயாகாரமான புணர்ச்சியின்பத்தையும் அற்புதமாயறிகின்றன. இவையன்றி அவைகளுக்கு நன்மை தீமைகளை அறியும் அறிவுமில்லை ; மோக்ஷந்தரும் ஞானமுமில்லை. ஆதலால் எவர்களுக்கு சத்கதைகளைக் கேட்பதில் விருப்பமில்லையோ அவர்கள் மேற்கூறிய பசுக்கள் முதலிய ஜந்துக்களுக்கு ஒப்பாகவே மதிக்கற்பாலர். (1–6)

விலங்கு முதலிய செவிபடைத்த சிற்சில ஜந்துக்கள் இனிய வோசைகளில் இன்புற்றிருக்கின்றன ; செவிபடையாத சர்ப்பங்கள் நாதவொலியைப் பானம் பண்ணி மிகவும் மோகமடைகின்றன. ஆகலான் மெய், வாய் முதலிய பஞ்சேந்திரியங்களுள் கேட்குந் தொழிலமைந்த செவியே சிறந்ததாம். ஏனெனின் செவி என்னும் அவ்விந்திரியத்தைக் கொண்டன்றி கேட்பது முடியுமா ? அக்கேள்வியன்றி ஒருவஸ்துவினுடைய சொரூபம் விளங்குமா ? அது விளங்காதாயின் அவ்வஸ்துவைப் பார்ப்பதினாலுண்டாகும் சித்தக் களிப்புண்டாகுமா ? இவ்வகையான சிறப்படைந்த அக்கேள்வியாகிய சிரவணம் ஸாத்விக ராஜஸ தாமஸ மென்கிற பேதங்களால்

மூவகைப்படும். ஓ மஹரிஷிகளே ! இது மெய்ஞ்ஞானிகளால் கூறப்பட்ட உண்மை. (7–10)

அவற்றுள் சாத்விக சிரவணம் வேதசாஸ்திரம் முதலிய சாஸ்திர விசாரஞ்செய்தலெனவும், ராஜஸ சிரவணம் காவியாலங்கார நாடகாதி ஸாஹித்தியங்களைப் பழகுதலெனவும், தாமஸசிரவணம் போர்புரிவதற் கேதுவான வார்த்தையாடல் ; பிறன்பழி கூறுதல் முதலியன எனவும் கூறப்படும். அன்றியும் அச்சாத்விக விசாரம் முதலிய மூன்றுந் தனித்தனி உத்தமம் மத்திமம் அதமம் என மூவகைப்பட்டு ஒன்பது வகைப்படும். அவை யாவன :—சாத்விக விசாரத்தில் உத்தமம் மோக்ஷ பதத்தைப் பற்றி விசாரிக்கும் விசாரமெனவும், மத்திமம் சுவர்க்கபதத்தைப் பற்றி விசாரிக்கும் விசாரமெனவும், அதமம் இவ்வுலக போகத்தைப் பற்றி விசாரிக்கும் விசாரமெனவும் ; ராஜஸ விசாரத்தில் உத்தமம் தான் கற்ற சாஹித்தியங்களால் தன் நாயகியினிடத்தில் சுகிப்பதெனவும், மத்திமம் கணிகை மாதரிடத்தில் சுகிப்பதெனவும், அதமம் பர தாரத்தினிடத்தில் சுகிப்பதெனவும் ; தாமஸ விசாரத்தில் உத்தமம் எப்பொழுதும் போர் புரிவதில் ஆயத்தமாயிருப்பதெனவும், மத்திமம் துரியோதனுதியர்களால் பாண்டவர்களுக்கு எப்படி துவேஷ முண்டாயிற்றோ அப்படி சத்துருக்களினிடத்திலுண்டாவதெனவும், அதமம் காரணமன்றி விவாதத்திலும் கலகத்திலும் பிரவிர்த்தியுண்டாவதெனவும் பெரியோர்களால் கூறப்படுதேயாமென்க. (11–16)

ஓ மேதாவியரான சூதரே ! இங்ஙனம் கூறிவந்தவைகளில் சாத்விகத்தில் உத்தமமான வேதசாரமாகிய புராணத்தைக் கேட்பதே மேன்மையாம். அது புத்தியை வளரச் செய்யும், புண்ணியத்தைத் தரும், அதன்பின்னர் பாபத்தை நசிக்கச் செய்யும். ஆகையால் அறிவிற் சிறந்த நீர் முன் வியாசரால் கேட்கப்பட்டதும் புருஷார்த்தங்களை யெல்லாம் தருவதும் மங்களம் வாய்ந்ததுமான புராணக் கதைகளைச் சொல்லியருளும் என்றனர். சூதமுனிவர் கூறுகின்றார் :—ஓ மஹாபாக்கிய சீலர்களே ! இவ்வுலகில் நீங்களே தன்யர்கள், யானே தன்யன். உங்களுக்குப் புராணங் கேட்பதில் எப்படி புத்திப்பிரவேசம் உண்டாகின்றதோ அப்படியே எமக்கும் சொல்லுவதில் ஆஸக்தி யுண்டாகின்றது. (17–19)

முன்னொரு காலத்தில் சமுத்திரம் பெருவெள்ளமாகப் பெருக அதில் மூவுலகமும் மூழ்கிப்போக அப்பொழுது வாசுதேவராகிய ஜனார்த்தனர் ஆதிசேஷனாகிய படுக்கையில் உறங்கிக்கொண்டிருக்க அவருடைய காதுகளிலுள்ள மலத்தினின்றும் மஹாபலிஷ்டரும் அசுரத்தொழிலுடையவருமான மது கைடபரென்னுந் தைத்தியர்கள் தோன்ற அக்கடலிற்றானே வளர்ந்து வந்தனர். அதன் பின்னர் பெரிய சரீரத்தையுடைய அம்மதுகைடபரிருவரும் அச்சமுத்திரத்தில் விளையாடவேண்டுமென்னும் இச்சையுடையவர்களாய் அங்கும் இங்குமாக உலாவி விளையாடிக் கொண்டிருக்கும்

பொழுது சகோதரர்கள்போல் பிரியாது வாழும் அவ்விருவரும் மனதில் அடியில் வருமாறு சிந்திக்கலாயினர் :— (20–22)

எவ்விடத்துங் காரணமின்றிக் காரியம் நிகழாதென்பதும் *ஆதாரமின்றி ஆதேயப்பொருள் நிலைபெறு தென்பதும் உண் மையன்றோ?. ஆகலான் நாம் இப்பொழுது ஆதார ஆதேயங்களின் தன்மை அறியவேண்டியவர்களா யிருக்கின்றோம். ஏனெனின் மிகவும் விசாலமாயும் சுகரூபமாயும் நீர்மயமாயும் விளங்கும் இக் கடலுக்கு ஆதாரம் யாது? இது யாருடைய படைப்பு? எப்படி யுண்டாயிற்று? இக்கடலில் மூழ்கியிருக்கிற நாமிருவரும் எப்படி யாரால் உண்டுபண்ணப்பட்டோம்? நமது தந்தை எங்குற்றனர்? இவ்விஷயங்கள் நமக்கு நன்றாய்த் தெரியவில்லையே என்கிற விசார மும், தெரியவேண்டுமென்கிற விருப்பமும் உடையவர்களா யிருந் தோமேயன்றி நிச்சயம் அறிந்தோமில்லை. (23–26)

இவ்வாறு தங்களுக்குள் சந்தேகமுற்றுச் சிந்தித்திருந்த இரு வருள் கைடபன் தன் பக்கத்தில் நீரில் நின்ற மது என்பவனைப் பார்த்துக் கூறுகின்றான் :—ஓ மதுவே! இங்கு இந்த ஜலார்ணவத் தில் நம்மை நிலைபெறச் செய்வதாயும் அசைவற்றதாயும் மஹா பலத்தோடு கூடினதாயுமுள்ளது யாதொரு சக்தியோ அச்சக்தியே காரணமாகுமென்பது எனது அபிப்பிராயம். இக்கடலும் அச்சக்தி யினாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது; அதனையே ஆதாரமாகவும் கொண்டிருக்கிறது. ஆகையினால் நம்மிருவருக்கும் எல்லாவற் றிலும் மேம்பட்ட அத்தேவியே காரணியாயிருக்கின்றனள் என்றனன். மதுவும் அவ்வாறே அபிப்பிராயப்பட்டனன். இவ் வாறு இருவரும் அறிவினால் யூகித்துக்கொண்டு யோசனையுடன் இருக்கையில் மனங்கவரும் அழகிய வாக்பீஜமாகிய அக்ஷரவோசை ஆகாயத்தில் உண்டாகியது. அதை அவ்விருவரும் கேட்டு மனதுட் கொண்டனர். உடனே ஒரு மின்னொளியும் அவர் கண்ணுக்குத் தோன்றிற்று. ஒளியையும் ஓசையையும் கண்டு கேட்ட அவ்விரு வரும் அவ்விரண்டையும் நன்றாய் ஆராய்ந்தவர்களாய் நாம் கேட்ட ஓசை வாக்பீஜமாகிய ஒரு மந்திர சொரூபமாகவேண்டும்; நாம் கண்ட வொளி தியேயப் பொருளாகிய ஸகுண ஸ்வரூபமாக வேண் டுமேயன்றி அது வெற்றோசையுமன்று, அது வெற்றொளியுமன்று என நிச்சயித்து தாங்களுண்ணும் உணவை ஒழித்து ஐம்பொறிகளை யும் உள்ளடக்கி அறிவைத் தியேயப் பொருளிற் கூட்டி, மனத்தை அக்ஷரத்தில் நிறுத்தி, உடலைச் சமாதி யோகத்தில் இருத்தி, ஆயிரம் வருடம் உக்கிரமான தவம் புரிந்து வந்தனர். (27–33)

அப்பொழுது பராசக்தி, அவ்விருவருக்கும் பிரசன்னையாய்த் தவம் செய்வதில் மனவுறுதியுடையவராய் மிகவும் வருந்துகிற அவ்விரண்டசுரரையும் பார்த்து, அவர்களுக்கு அனுக்கிரகம் புரிவா னெண்ணி முன்போல் அசரீரியாயிருந்து, உங்களிருவரது தவங்

* ஆதாரம்—ஒரு பொருளிருக்க இடம். ஆதேயம்—அவ்விடத்தைத் தங்குமிடமாகக் கொண்டிருக்கும் பொருள்.

கண்டு மகிழ்ச்சியுற்றனம், யாம் உங்களுக்குச் சம்மதமான வரத்தைத் தருகின்றோம் கேட்பீராக. (33½–36)

இவ்வார்த்தையைக் கேட்ட தானவரிருவரும், ஹே தேவி! எங்களிருவருக்கும் மரணம் யாங்கள் விரும்பும்பொழுது உண்டாம் வண்ணம் அனுக்கிரகித்தல் வேண்டுமென்றனர். தேவி, ஓ தயித்தியர்காள்! எனது அனுக்கிரகத்தால் நீவிர் விரும்பும்பொழுதே மரணத்தை யடையக் கடவீரேயன்றித் தேவர்களாலும் ஏனைய அசுரர்களாலும் நீவிர் இருவரும் ஜயிக்கப்பட வல்லீரல்லீரென்று அனுக்கிரகித்தனர். இவ்வரத்தைப் பெற்ற அசுரர் இருவரும் மதமடைந்து செருக்குற்று நீர் வாழ்வனவாகிய உயிர்களோடு கலந்து கூடி விளையாடிக் கொண்டிருந்தனர். (37–39)

ஓ முனிவர்காள்! இவ்வசுரர் இவ்வாறு விளையாடிக் கொண்டிருக்கையில் ஒரு நாள் கமலாசனனும் சிருஷ்டி கர்த்தனுமாகிய பிரமன் திடீரென்று அவர் முன் தோன்ற மஹா பலசாலிகளாயும் யுத்தம் செய்வதில் விருப்புடையவர்களாயும் உள்ள அவ்விருவரும் பிரமதேவனைக் கண்டு களிப்படைந்து கூறுகின்றனர் :—ஓ பிரமதேவனே! எங்களிருவருடன் யுத்தம் செய்யக் கடவாய்; இன்றேல் உனக்காசனமாயுள்ள தாமரையைவிட்டு எங்கேனுஞ் செல்லக் கடவாய். போர் செய்ய வலியிலனாகிய உனக்கு மங்களகரமான இச்சுகாசனம் எங்ஙனங் கூடும்? இக்கமலாசனம் வீரத்தோடு கூடினவர்களுக்குத் தகுதியேயன்றி பயத்தோடு கூடினவர்களுக்குத் தகுதியன்று; ஆகையால் நீ இதைவிட்டு உடனே போகக் கடவாய் இவ்வாறு கூறிய அவ்விருவரது வாய்மொழியைப் பிரஜாபதி கேட்டு மிகவும் விசாரமுற்று அதி பலசாலிகளாயுள்ள இவர்களை அந்தோ! நாம் யாது செய்யுந் திறமுடையோம் என ஏங்கி மனதில் ஆராய்வானாயினன். (40–43)

ஓம் ஸர்வோத்துங்காயை நம:

## 7. பராம்பிகைத் துதி

சூதமுனிவர் கூறுகின்றார் :—ஓ முனிகணங்காள்! மதுகைடபருடைய வீரமொழியினால் மதிமயங்கி ஆராயத்தொடங்கிய சர்வ தந்திர வேத்தாவான பிரமன் அவ்விருவரையும் நோக்கித் தண்டத்தை யீறாகவுடைய சாம தான பேதமென்னுஞ் சதுர்வித உபாயங்களையும் ஆலோசித்துத் தன்னுள் எண்ணலாயினர் :— (1–2)

நாம் இப்பொழுது இவ்விருவரது பலமும் இவ்வளவினதென உள்ளவாறு அறிந்தோமில்லை ஆகலானும், பகைவர் வலியுணராது யுத்தஞ் செய்தல் மிகவும் தகுதியற்றதாகலானும், இவர்களிடத்தில் யுத்தஞ் செய்ய வேண்டுமென்னும் எண்ணம் ஒழித்துத் துதிசெயின் மதம் பிடித்திருக்கும் இவ்விருவருக்கும் நமது வலியின்மை நம்மாலேயே தெற்றென வெளியாகும் ஆகலானும், அங்ஙனம்

வலியின்மை வெளியாகுங்கால் (நம்மைக் கொல்ல இரண்டுபேர் வேண்டுமா ?) ஒருவனே கொல்லுவான் ஆகலானும், அன்றித் தானத்தால் வெல்லலாமென்று எண்ணுவோமாயின் அதற்கு நாம் ஒரு சிறிதும் யோக்கியதை யுடையோம் அல்லோம் ஆகலானும், அன்றிப் பேதத்தில் வெற்றியடைவோம் என்றெண்ணுவோமாயின் இவர்களைப் பேதிக்க எவ்வாற்றானு முடியாதாகலானும், இந்நான் குபாயங்களையும் எண்ணுவதொழித்து ஜனார்த்தனராய், மஹா வீர முடையவராய் நான்கு திருக்கரங்களையுடையராய் ஆதிசேஷன் மடியில் துயில் கொள்ளுந் திருமாலைத் துயிலுணர்த்தின் நமது இடுக்கணைத் தீர்த்தருளுவர் என மனதில் நிச்சயித்து உந்திமலரிற் றோன்றிய அப்பிரமன் அவரது தாமரைத் தண்டுட் சென்று துக்கந் தீர்க்கவல்ல விஷ்ணு மூர்த்தியை மனத்தாற் சரணமடைந்து, அவர் துயிலுணரும் பொருட்டு ஜகந்நாதரும் யோக நித்திரையில் அசை வற்றவரும் நாராயணருமான அரியை அவரது மங்களகரமான திருநாமங்களால் அழைப்பானாயினன். (3–7)

ஹே தீனநாத ! ஹரே ! விஷ்ணோ ! வாமன ! மாதவ பக்தார்த்த ஹருத் (அடியாரிடர் தீர்ப்பவனே) ! ஹ்ரிஷீகேச ! (இந்திரிய நிக்கிரஹ) ! ஸர்வவாச ! ஜகத்பதே ! அந்தர்யாமின் ! அமேயாத்மன் (அளவிடப்படாத சொரூப முடையோய்) ! வாசுதேவ! துஷ்டார நாச! நைகாக்கிரசித்த (துஷ்டராகிய சத்ருக்களை அழிப்பதிலேயே செலுத்துமன முடையோய்) ! சக்ரகதாதர ! சர்வஜ்ஞ ! சர்வ லோகேச ! சர்வசக்தி சமன்வித ! தேவேச ! துக்கநாச ! பள்ளி எழுந்தருளும், எழுந்திரும், அடியேனைக் காத்தருளும். (8–10)

ஹே விஸ்வம்பர ! விசாலாக்ஷ ! புண்யச்ரவண கீர்த்தன ! ஜகத்யோநே ! நிராகார ! சிருஷ்டி ஸ்தித்யந்த காரக ! இந்த இரண்டசுரரும் மதம்பிடித்து என்னைக் கொல்ல விருப் புற்றனர். எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரே ! யான் சங்கடப் படுவதைத் தேவரீர் அறியாதது என்னை ? அதிகத் துன்பத்தினால் மெலிந்து தேவரீரைச் சரணமடைந்திருக்கிற அடியேனைக் கடாக்ஷித் திலீராயின் ஹே ! தீனரக்ஷகரே ! தேவரீரது காத்தற் றொழில் நிலையற்றதாகுமன்றோ ? இங்ஙனம் பிரமன் மிக வருந்தித் துதித்தும் திருமால் யோக நித்திரையை விட்டுத் திருக்கண் மலர்த்தாதிருக்க மீளவும் பிரமன் ஆலோசிப்பதாயினன் :—(11–13)

யோக நித்திரையின் வசப்பட்ட விஷ்ணு பகவானை நாம் இவ்விதமாகத் துதித்தும் அவர் திருப்பள்ளியுணராராயினர். தர்ம ஸ்வரூபியாகிய அவரென் செய்வர் ? நித்திரா சக்தியால் விழுங்கப்பட்டு அதற்குள்ளாகி திருக்கண் விழித்திலர். இவ்விரு தானவரும் மதச் செருக்குற்று நம்மைக் கொல்லக்கருதிக் கண்ணிமை கொட்டாது குறுகுகின்றனர். இவர்களால் மிகத் துன்புற்ற நாம் இனி யாது செய்யவல்லம், எங்குச் செல்லவல்லம் ? என மனதில் பலவாறாக வெண்ணிக் கவலையுற்றுப் பின்னர் தெய்வ வருளால் ஒருவாறு கவலையற்றுத் தெளிந்து இவ்விஷ்ணுமூர்த்தி

யையும் அசைவற்ற அசேதனப் பொருள்போற் செய்தது எந்தச் சக்தியோ அச்சக்தியே நம்மைக் காக்க வல்லவளாவள். (14–16)

ஏனெனின், பஞ்சபூதங்களின் குணங்களாகிய சப்தாதி விஷயங்களை உயிர் நீங்கினபின் அறியாவாறுபோல் இத்திருமாலும் நித்ராசக்தியான் திருக்கண்கள் மூடப்பட்டு ஒன்றும் அறியா திருக்கின்றனர். நாம் இவரை எவ்வளவு பரத்வமாகத்துதித்தோம்! அத்துதியுள் ஏதேனும் ஒன்று கேட்டிருப்பரோ? ஆகையால் இவர் நித்ராசக்தியின் வயத்தரேயன்றி நித்ராசக்தி இவர் வயத்ததன்று. பிறர் வயப்பட்டோர் அவரது ஏவலரேயாவர். இம்முறைமையான் நித்திராசக்தியின் வயத்தவராகிய இவருக்கு அந்நித்திரா தேவியே ஏவல் கொள்ளுங் கடவுளாவள். (17–21)

அத்தேவி லக்ஷ்மிதேவி என்று சொல்லலாமோவெனின் அத்தேவியும் நமது தோத்திரத்தைக் கேட்டுக் கண்விழித்திலள். ஆகையால் இலக்குமி தேவியும் அத்தேவியாகாள். அவளுக்கும் யாவருக்கும் எஜமானனுகிய திருமாலையே நித்திரையின் வயத்தராக் கியதால் இவ்வுலகமெல்லாம் அச்சக்தியின் வயத்ததேயாம். இதனுல் நாமும் திருமாலும் ருத்திர மூர்த்தியும் ஸரஸ்வதியாதி முத்தேவி முதலிய யாவரும் அத்தேவியின் வயத்தரே என்பதிற் சிறி தேனுஞ் சந்தேகமில்லை. (22–23)

திருமாலே இத்தேவியினது மகிமைக்குத் தோற்றுப் பிராகிரு தரைப்போல் தன்வயமிழந்து கிடக்கின்ருரெனின் ஏனைய கடவுளரைப்பற்றிச் சொல்லக் கிடப்பதென்னை? ஆதலால் இப்பொழுது யோகநித்திரா சக்தியைத் துதிப்போம். அங்ஙனந் துதிப்பின் அந்தேவியானவள் கருணை கூர்ந்து திருமாலைக் கண்விழிக்கும்படிச் செய்வள். அப்பொழுது சநாதனராகிய மஹா விஷ்ணுவானவர் அவ்வசுரருடன் போர்செய்தருளுவர் எனப் பிரமனெண்ணித் தாமரைத் தண்டினின்றும் ஏகாக்ர சித்தமுடைய வனுய்த் திருமாலது திருமேனியில் வியாபித்திருக்கும் யோக நித்திரையைப் பின்வருமாறு துதிப்பானுயினுன் :— (24–26)

ஹே தேவி! இவ்வுலகிற்குத் தேவரீரே காரணமென வேதவாக் கியங்களைத்தானும் அறிந்தேன். (அதற்குச் சான்ருக) எவ்வுல கிற்கும் அறிவளிக்கும் புருஷோத்தமராகிய திருமாலும் இன்று உம்மால் நித்திராதேவியின் வயத்தராயினர். ஹே அன்னுய்! எல்லாப் பிராணிகளது மனதிலுறைபவளே! திருமாலே தன்வய மிழந்து கிடக்கின்றனரெனின் தேவர்களுள் மிகச்சிறந்த சமர்த்த னுய் எவன்ருன் நிர்க்குணையாகிய நினது மோகவிலாச லீலையை (மதிமயக்கும் வேடிக்கையான விளையாட்டை, இவ்விதமானதென அறியவல்லவன்? அங்ஙனமறியக் கூடாததை மூடனுன யானு அறிவது? (27–29)

ஹே தேவி! (நிர்க்குணையாகிய உம்மை) சந்தியை என்னும் பெயரால் முனிகணங்கள் மூன்று காலமுந்தவருது எவ்வாறு குணரூபங்களைத் தியானிக்கின்றனரோ, அத்தகைய தியானரூப

ஸகுணையாய்த் தேவரீர் பலவகையான நடனங்கள் செய்கின்றீர். அங்ஙனமான நடனத்தொழிலியற்றுவதில் தேவரீர் சம்பந்தப் படுவதை யாவரு முணரார். (30)

உம்மைச்சாங்கியர் புருஷனென்றும், பிரகிருதி என்றும், சைதன்ய பாவரகிதை யென்றும் கூறுவது மல்லாமல் ஜகத்தைப் படைக்குங் கர்த்தையென்றுங் கூறுகின்றனர். நீர் படைக்கும் மகிமையை யுடையவர்தானு? அதுவுண்மையாயின் இந்த விஷ்ணு மூர்த்தியை ஏனிப்பொழுது பிரஜ்ஞையில்லாதவராகச் செய்தீர்? இது மாத்திரந்தானு, ஸகுணையாயிருந்து நானாவிதமான நாட்டியத் தைச் செய்கின்றீர். இவ்வாறு செய்வதாகிய உம்முடைய சதுர்ப் பாடாகிய தொழிலை ஒருவருமறியார். ஹே பவாநீ! உம்மை முனிகணங்கள் முக்காலத்திலும் இடைவிடாமல் சந்தியை, சாவித்திரி, காயத்திரி என்னும் நாமகுணங்களைக் கற்பித்துத் தியானிக்கின்றுர்கள். ஹே மாதா! நீர் எப்பொழுதும் அறிவை உயிர்களுக்கு ஊட்டுகின்றபடியால் புத்தி என்றும், தேவர்களுக்கு எக்காலத்தும் சுகத்தைத் தருகின்றபடியால் ஸ்ரீ என்றும், ஏனையோ ருக்கு மதி, காந்தி, சிரத்தை முதலிய குணவிசேஷங்களைத் தருகின்றபடியால் அவ்வக்குண சொரூபி என்றும் கூறப்படுகின்றீர். (இக்காரணங்களை யோசிக்குங்கால்) உம்மைவிட மேலான தெய்வம் ஒன்றிருக்கின்றதென்றும் அநேகம் பிரமாணங்களினுலும் என்னு லறியப்படவில்லை. ஆகையால் நீரே எல்லாவுலகங்களுக்குந் தாயென்பது சத்தியம்! இதற்கும் சாக்ஷி இரக்ஷிக்கின்றவரென்று பேருடையவராயிருக்கின்ற இந்த விஷ்ணு நித்திரை வசப்பட்டிருக் கின்றதேயாம். ஏனெனில் இந்நாள்காறும் இவரையே தெய்வமென் றெண்ணியிருந்தேன். இவரிப்பொழுது அறிவுகெட்டுறங்கும் மானிடரைப்போல் யாதொரு உணர்ச்சியுமின்றி என்னுடைய துக்கத்தை யறியாமல் உறக்கங்கொண்டிருக்கின்றுர். இவரை நானெப்படி தெய்வமாகிய தாயென்று கூறுவேன்? ஹே தேவி! நீர் வேதவித்துக்களாலும் அறியப்படாதவர். வேதத்தாலும் அவ்வேதந் தன்னுளடக்கிக்கொண்டிருக்கும் அர்த்த விசேஷங் களாலும் உம்முடைய பெருமையறியப்படமாட்டாது. ஏனெனில் இந்த வேதம் உம்மாலுண்டாக்கப்பட்டது; உலகத்தில் நடக்கும் சகல கிருத்தியங்களும் உம்முடையதே; இது பிரத்தியக்ஷந்தான். உம்முடைய மகிமை பொருந்திய சரிதங்களனைத்தையும் எந்தப் புத்திமான்கள்தானறிவார்கள்? எவருமறியமாட்டார்; யானுமறிய மாட்டேன்; ஹரிஹரரும் ஏனைய அமரரும் அறியமாட்டார். இவர் களே யறியார்களாயின் முனிவர்கள் எங்ஙனம் அறியப்போகிறுர் கள்? அவர்கள் அசக்தர்கள். என்னுலுண்டாக்கப்பட்ட புத்திரர்களும் அறியார். ஆகையால் எந்த வுலகத்திலும் உம்முடைய மகிமையை அறியவல்லாரொருவருமில்லை. அது வாக்குக்கெட்டாதது. ஹே தேவி! வேதவித்துக்கள் யாகங்களில் ஆகுதி செய்யுங்காலத்தில் (ஸ்வாஹா) என்னும் உமது நாமத்தை உச்சரிக்காமற் போவாரா யின் யஜ்ஞத்தில் கொடுக்கப்படும் அவிர்ப்பாகத்தைத் தேவர்கள்

ஒருபொழுதும் பெறமாட்டார்கள். ஆகையால் தேவர்களுக்கும் தேவரீர்தான் ஆகாரத்தைத் தருகின்றவராகின்றீர். (31–35)

ஹே பகவதி! பூர்வத்தில் உம்மால் தேவர்களும் யானும் அசுரர்களுடைய பயத்தினின்றும் காக்கப்பட்டோமல்லவா? அது போலவே இப்பொழுதும் காக்கப்படவேண்டும். ஆகையால் இப் பொழுது மதுகைடபருடைய கோரமான தொழிலைக்கண்டு நடுங்கி உம்மைச் சரணடைந்தேன். என்னைக் காத்தருளல்வேண்டும். மந்தமதிகளாகிய சிலர் வேறு சில தேவர்களைத் துதிக்கின்றனர். தேவரீர் ஒருக்கால் நீ முன் விஷ்ணுவைத்தானே சரணமென் றடைந்து துதி செய்தனை என்று வினவுவீராயின் அவரிப்பொழுது எனக்கு நேரிட்டிருக்கும் துக்கத்தை யறிந்தாரில்லை. (அவரறி யாமைக்குக் காரணம்) அவர் உம்முடைய சக்தியினால் வசீகரிக்கப் பட்ட சரீரத்தை யுடையவராயிருக்கின்றார். ஆகையால் அவரை நித்திரையினின்றும் விலக்கிவிடும்; இல்லையாயின் இவ்வசுரர்களை யாவது கொன்றுவிடும். இதுவன்றி யான் அதிகமாகச் சொல்லும் யோக்யதையுடையேனல்லேன். ஹே பகவதி! யான் விண்ணப்பஞ் செய்து கொண்டவற்றுள் உமக்கு எது உசிதமென்று தோன்று கிறதோ அதனைச் செய்தருள்வீர். உம்முடைய பிரபாவத்தை ஹரிஹராதிகளும் அறிந்துகொள்ளக்கூடாதவராய் தியானஞ் செய் கின்றார்கள். (உம்முடைய பெருமை இவ்வாறிருக்குமாயின் நீர் இது செய்யுமென்று அடியேன் எங்ஙனம் சொல்வேன்?) ஹே ஜநநீ! யானும் உமது பிரசித்தமான மகிமை அளவுகடந்ததென்று அறிந் தேன். இதற்கும் சாக்ஷி இந்த விஷ்ணுமூர்த்தியே. (எப்படி யென்றால்) இந்த விஷ்ணுமூர்த்தியினுடைய மார்பில் வசிக்கின்ற கடலிற்றோன்றிய லக்ஷ்மிதேவியும் நித்திரா சக்தியின் வயத்தராய்க் கிடக்கும் தனது பதியாகிய ஹரியை எழுப்புவதற்குச் சக்தியற்ற வளாய்ப் போனதுமன்றித் தானும் நித்திரா சக்தி வசப்பட்டுப் பராதீனையா யுறங்குகின்றாள். இப்படி இந்த லக்ஷ்மியும் அறி விழந்து உறங்குவதற்குக் காரணம் உம்முடைய சக்தியாலென்றே நினைக்கின்றேன். ஹே தேவி! இவ்வுலகத்தில் அந்நிய தெய்வங் களைத் தோத்திரஞ் செய்வதை விட்டுவிட்டு உம்முடைய பாத கமலங்களில் ஆழ்ந்த பக்தியை யடையப் பெறுவார்களாயின் அவர்களே செல்வவான்களாவர். அந்நெறியை யுடையவர்கள்தான் அம்பிகையாகிய உம்முடைய பக்தி மார்க்கங்களனைத்தையும் நன்குணர்ந்து ஸர்வஜநநியாய் விளங்குங் காமதேனுவாகிய உம்மைத் தியானிப்பார்கள். ஹே தேவி! இந்த லக்ஷ்மி இங்கு உறங்கிவிட்ட அவரது கணங்களையுங் காண்கிலள். உம்முடைய சொரூபமாகிய புத்தி, காந்தி, கீர்த்தி, நல்விருத்தி முதலிய குணங் களைத் தம்முடைய குணங்களாகக் கொண்டிருக்கும் இவ்விஷ்ணு அக்குணங்களை நீக்கிவிட்டு நித்திரையை ரம்யமாகக்கொண்டு எவ்விடஞ் சென்றனர்? (36–41)

இவ்வண்ணம் விஷ்ணுவும் உறங்குகின்றார்; அவருடன் லக்ஷ்மி யும் உறங்குகின்றாள்; அவருடைய குணங்களுமொழிந்தன என்று

பிரமன் எண்ணி மறுபடியும் தேவியைத் துதிக்கிறான். ஹே பகவதி! மிகவும் மானமுடைய உம்முடைய சக்தியாகிய நித்திரையினால் இவ் விஷ்ணு கட்டுப்பட்டா ரென்பது நிச்சயம். ஹே தேவி! எல்லா மகிமையும் உமக்கிருக்கின்றமையால் உலகத்திற்கு நீரே சக்தி. (அன்றியும்) இவ்வுலகெல்லாம் உம்முடைய சங்கற்ப மாத்திரத்தினால் சிருஷ்டிக்கப்பட்டது. ஒரு நாடகன் தன்னால் செய்யப்பட்ட நாடகத்தைத் தானே அவ்விடத்தில் நடித்துக் காட்டுவதுபோல் உம்மால் நிர்மிக்கப்பட்ட மோஹஜாலமான இவ்வுலகமாகிய நாடகசாலையில் நீர் விளையாடுகின்றீர். பூர்வம் சிருஷ்டி காலத்தில் விஷ்ணுவை வெளிப்படுத்திக் காத்தற்றொழிலுக்குரிய அமலமாகிய சக்தியைத் தந்தருளியதால் அவரிவ்வுலகத்தைக் காத்தருளினர். இப்பொழுது அவரை நித்திரா சக்தியின் வசத்தராக்கினீர். ஹே அம்பா! தேவரீர் திருவுளத்தில் எது எது எப்பொழு தெப்பொழுது உதிக்கின்றதோ அதையதை அப்பொழு தப்பொழுதே செய்து வருகின்றீர். (உம்மைத் தடுப்பாரார்?) இது நிச்சயம். ஹே பகவதி! என்னையும் தேவரீரே விரும்பிப் படைத்தருளினீர். படைத்த நீரே இப்பொழுது கொல்ல இச்சைப் படுகின்றீரென் றெண்ணுகிறேன். அப்படி என்னைக் கொல்லும் இச்சை இல்லையாயின் (யானெது சொல்லியும் கேளாததுபோலிருக்கின்ற) மௌன முத்திரையை விட்டுத் திருவாய் திறந்தருளுவீர். ஹே சங்கரி! கருணாகரி! கால சொரூபிகளான இந்த அசுரர்களை இப்பொழுது படைத்திருக்கின்றீரே, அவர்களைப் படைத்தது என்னைப் பரீக்ஷிக்கவேண்டு மென்கிற எண்ணங் கொண்டேயன்றி வேறென்னை? உம்முடைய அற்புதமான லீலை இத்தன்மைத் தென்று (இப்பொழுது) யானறிந்தேன். நீர் இந்த உலகங்களைப் படைத்து சுதந்தரையாய் விளையாடுகின்றீர். பின்னர் சங்கரிக்கின்றீர் (இப்படி உலக முழுவதையும் படைத்தளித் தழிப்பதை ஓர் விளையாடலாகக் கொண்ட நீர் முன் என்னைப் படைத்ததும்) இப்பொழுது கொல்ல இச்சிப்பதும் ஓராச்சரியமா? அன்று. ஹே மாதா! உம்மிச்சைப்படி என்னைக் கொல்லும். ஹே ஜகதம்பிகே! மரணமடைவதில் துக்கம் எனக்குச் சிறிதுமில்லை. (இல்லையாயினும் உமக்கொரு பழியுண்டாகுமே என்று எண்ணுகிறேன்.) என்னையெனின், பூர்வத்தில் உம்மால் சிருஷ்டி கர்த்தாவாகப் படைக்கப்பட்ட பிரமன் தைத்யர்களால் கொல்லப்பட்டான் என்னும் அபகீர்த்தி உலகத்தில் நிலைபெற்றிருக்கு மென்பதேயன்றி வேறில்லை. ஹே தேவி! எழுந்திரும், எழுந்து அற்புதமான ஓர் திருவுருவங் கொண்டு என்னையாவது, இந்த அசுரர்களையாவது கொன்று விடும். சிறிய பாலையைப்போல் லீலை செய்கின்றவரே! உம்முடைய இச்சைப்படி செய்யும். அப்படி யில்லையாயின் இந்த விஷ்ணுவையாவது எழுந்திருக்கச்செய்யும். (உம்மால் எழுந்திருப்பராயின்) அவர் இவ்வசுரர்களைக் கொல்ல வல்லவராவர். இவை யாவும் உம்மாலேயே நிறைவேறத்தக்கவை. என்றிப்படி பிரமனால் பிரார்த்திக்கப்பட்ட அம்பிகையினருளால் விஷ்ணுமூர்த்தியினுடைய சரீரத்தினின்றும் தாமஸ ரூபமான நித்திராசக்தி அவ்

**விரு தானவரையும் ஒழிக்கும் பொருட்டு வெளிப்பட்டு அவ்வம்பிகை யின் பக்கத்தில் நின்றனள். உடனே விஷ்ணுமூர்த்தி தேஜோரூபி யாய் பிரகாசித்துத் தன்னுடைய சரீரத்தை யசைத்தனர். அது கண்ட பிரமன் அளவிறந்த ஆனந்தமடைந்தனன்.** (42–50)

ஓம் ஸங்கஹீருயை நம:

## 8. சக்தி சொரூப நிர்ணயம்

சவுனகாதிகள் மஹா பாக்கியசாலியான சூதமுனிவரைப் பார்த்து வினவுகிருர் :—நீரிப்பொழுது கூறிவந்த கதையில் அநேக ஆச்சரியமான சந்தேகங்கள் எங்களுக்குண்டாகின்றன. என்னே யெனின், வேதசாத்திர புராணங்களாலும் பெரியோர்களாலும் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாகிய இவர்களே அருதியாயுள்ள கடவுளரெனவும், இவர்களுக்குள் மேலானேர் இப்பிரமாண்டத்தில் இல்லை எனவும், இவர்களுள் பிரமதேவன் சிருஷ்டிக்கின்றவனென வும், விஷ்ணு ரக்ஷிக்கின்றவரெனவும், ருத்திரர் சங்கரிக்கின்றவ ரெனவும், இம்மூவரே உலகிற்குக் காரணகர்த்தாக்களெனவும் ஒரு மூர்த்தியே சத்துவ ரஜஸ்தமோகுண வேற்றுமைகளான் பிரம்ம விஷ்ணு மகேச்வரரெனப் பெயர்பெற்று எல்லாக் காரியங்களையும் நடத்துகின்றவரெனவும், இந்த மூவருள் மாதவரும், புருஷோத் தமரும், ஆதிதேவரும், ஜகந்நாதருமாகிய விஷ்ணு மூர்த்தியே சர்வகாரியங்களிலும் சமர்த்தரெனவும் அவரே சிரேஷ்டமானவ ரெனவும், நின்மலமான தேஜோரூபியான இவரையன்றி வேருெரு சமர்த்தரில்லை எனவும் நிச்சயிக்கப்பட்ட இவர் நித்திரா சக்தியிஞல் அவசப்பட்டு உறங்கிஞரென்பது எப்படி? அவருடைய ஞானம் போனவழி எப்படி? இறந்து போகாமல் உயிரோடு கூடியிருக்கிற அவருடைய கரண சேஷ்டைகள் அடங்கினவழி எப்படி? என்று அடியேங்களுக்கு ஐயந்தோன்றுவதால் அவ்வையமகலத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும். (1–7)

இதுவன்றி, பூர்வத்தில் விஷ்ணுமூர்த்தி சக்தியிஞல் வெல்லப் பட்டாரென்று கூறினீரல்லவா? அந்த சக்தி எது? அது எப்படியுண் டாயிற்று? அப்படிப்பட்ட சக்தியையுடையது எது? அந்தச் சக்தியை யுடையதாகிய அது எப்படிப்பட்டது? ஸர்வேச்வரன், விஷ்ணு, வாசுதேவன், ஜகத்குரு, பரமாத்மா, பரமானந்தன், சச்சிதானந்த விக்ரஹன், ஸர்வகிருத் (எல்லாம் செய்பவர்), ஸர்வபிருத் (எல்லாம் பரிப்பவர்), ஸர்வச்சுசி என்று புகழப்பட்ட விஷ்ணுமூர்த்தி எவ் வாறு நித்திராசக்தியிஞல் மயக்கப்பட்டு பரதந்திரராயிஞர்? இஃது எங்களுக்கு ஆச்சரியமாயும், சந்தேகத்துக்குக் காரணமாயு மிருக் கின்றது. சூதமுனிவரே! நீர் வியாஸ பகவானுக்கு மாணுக்கராயும் அறிவிற் சிறந்தவராயு மிருத்தலால் எங்களுக்குத் தோன்றிய இவ் வையங்களை உமது ஞானவாளுருவிக் களையக் கடவீரென்று பிரார்த் தித்தனர். (8–11)

ஸூதர், முனிவர்களை நோக்கிக் கூறுகின்றார் :—ஓ முனிவர்களே! உங்களைப்போன்ற பெரியோர்களுக்குண்டாகும் சந்தேகத்தை நிவிர்த்தி செய்வதற்கு இவ்வுலகில் எவர்தான் சமர்த்தர்? பிரமதேவனுடைய புத்திரரான ஸநகாதியரும் நாரதமுனிவர் கபிலர் முதலிய முனிபுங்கவரும் இப்படிப்பட்ட வினாக்களுக்கு விடை தருவதற் கஞ்சுகின்றனரென்றால், அறிவிற் சிறியவனான யான், பரியாலோசித்துச் சொல்வது மிகவும் கஷ்டதரமென்பதற்குச் சந்தேகமுமுளதோ? ஆதலால் யான் என்ன சொல்லப் போகிறேன்? முனிவர்களே! சிலர் தேவர்களுக்குள் விஷ்ணுவே யாவுமறிந்தவரெனவும், யாவரையும் பரிபாலிக்கின்றவரெனவும், விராட் புருஷரெனவும், அவரிடத்திலிருந்தே சராசரமான இவ்வுலகந்தோன்றியதெனவும், மேலானவற்றிற்கு மேலானவரெனவும் ஹ்ருஷீகேசரெனவும், ஜநார்த்தனரெனவும், வாசுதேவரெனவும் வேதம் கோஷிக்கின்றபடியால் அவரை வணங்கி உபாசிக்கின்றனர். சிலர் மஹாதேவரான சங்கரரையும் அதுபோலவே சங்கரன், சந்திரசேகரன், திரிநேத்திரன், பஞ்சவக்திரன், சூலபாணி, விருஷபத்துவஜன், திரியம்பகன், கபர்த்தி, கௌரிபாகன், கைலாசவாசன், ஸர்வசக்திதரன், பூதகணநாதன், தக்ஷயஜ்ஞவிகாதகன் என்று வேதங்கள் ஸ்தோத்திரஞ் செய்கிறபடியால் அவரை யுபாசிக்கின்றனர். சிலர் சூரியனே பரம்பொருளென்று கூறுகின்றபடியால் காலை மாலை பகலென்னும் முக்காலங்களிலும் அவனை உபாசிக்கின்றனர். சிலர் அதுபோலவே இந்திரன், அக்னி முதலாயினோரையும் எண்ணி உபாசிக்கின்றனர். சிலர் கங்கையானது பல நதிகளுள் கலக்குமாறுபோல விஷ்ணுமூர்த்தியை எல்லாத் தேவருள்ளும் சேர்த்து நமஸ்கரிக்கின்றனர். இதுவேயுமன்றி சில பண்டிதர்கள் பிரத்யக்ஷம், அநுமானம், சப்தம் என அளவைகள் மூன்றென்றும், சிலர் உவமானவளவையைக் கூட்டி நான்கென்றும், சிலர் அருத்தாபத்திப் பிரமாணங் கூட்டி ஐந்தென்றும், புராணிகர் ஏழென்றும் கூறுகின்றனர். இங்ஙனம் கூறுகின்ற பிரமாணங்களொன்றாலும் அறிதற்கரிய சச்சிதானந்த சொரூபமான பரம்பொருளொன்று உண்டென்று சிலர் கூறுகின்றனர். இப்படிப் பலபலவாய் அவரவருங் கூறுகின்றபடியால் அவரவருங் கூறும் பிரமாணங்களைக் கொண்டே எவர் பரம்பொருளாவர் என்று புத்தி விசாலத்தால் தன்னறிவோடு கூடிய ஆகமத்தைக்கொண்டு தர்க்கித்து அத்தர்க்கத்தில் செல்லும் யுக்தியினால் பன்முறையும் விசாரித்து நிச்சயிக்கவேண்டும். அவ்விசாரமாவது முன்னர் வேதத்தில் கூறும் வாக்கியங்களை விசாரிக்கவேண்டியது. அங்ஙனம் வாக்கியவிசாரஞ் செய்த புத்தியினாலும் அந்த புத்தியைக்கொண்டு யூகித்த யுக்தியினாலும் பின்னர், இஃது இவருக்குக் கூறியது வுண்மை, இஃது இவருக்குக் கூறியது உபசாரமென்று இடைவிடாமற் சிந்திக்க வேண்டியது. அதன் பின்னர் அச்சிந்தனையால் ஐயமற்றுணர்ந்த அறிவைக்கொண்டு திருஷ்டாந்த வாயிலாகவும், மெய்ஞ்ஞானிகளாகிய பெரியோர் சென்ற சன்மார்க்க முறையாகவும் தெளிய

வேண்டியது. இப்படி யறியவேண்டுமென்றே அனுதியாயுள்ள சாஸ்திரங்களுங் கூறுகின்றன. வேதவித்துக்களுங் கூறுகின்றனர். முனிவர்களே! இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்ல வேண்டிய பாகம் மிக விஸ்தாரமாகவிருக்கின்றது. அதனை எடுத்து இவ்விடத்திற் சொல்லப் புகுவேனுயின் பலவாய் விரிந்து நாட்செல்லுமாகையால் எடுத்த பிரமேயத்துக்கு வேண்டியது எதுவோ அதனை இப்பொழுது எடுத்துக் கூறுகின்றேன். (12–26)

விஷ்ணுவாதி கடவுளரைப் பெரியோர்களே யன்றி வேத சாஸ்திர புராணங்களும் இவ்வுலகமும் சக்தியையுடையவர்களென்று கூறுகின்றனவா, சக்தியற்றவர்களென்று கூறுகின்றனவா? ஒருவரையும் ஒருபொருளையும் சக்தியற்றவரென்றும், சக்தியற்றதென்றும் மறந்துங்கூரு; ஆகையால் அச்சக்தியானது யார் யாரிடத்தில் எது எதனிடத்தில் எப்படி எப்படியிருக்கின்றதோ அதனதன் பேதத்தைச் சிறிது கூறுகின்றேன், கேளுங்கள். அது பிரமனிடத்தில் சிருஷ்டிசக்தியாயும், ருத்திரனிடத்தில் சம்ஹார சக்தியாயும், சூரியனிடத்தில் பிரகாசப்படுத்துஞ் சக்தியாயும், ஆதிசேஷன் கார்க்கோடகன் கூர்மன் முதலியவைகளிடத்தில் தரிசிக்குஞ் சக்தியாயும், அக்கினியிடத்தில் சுடுஞ் சக்தியாயும், வாயுவினிடத்தில் தள்ளுஞ் சக்தியாயும், பரமசிவனிடத்தில் குண்டலி சக்தியாயும் நிலைபெற்றிருக்கின்றது. இங்ஙனம் கூறிவந்தபடி அரி அராதிகளிடத்திலும், அக்கினியாதிகளிடத்திலும், பரமசிவனிடத்திலும் சக்தியில்லையாயின் செயலற்றிருப்பாரென்றும், செயலற்றிருக்குமென்றும் பண்டிதர் கூறுகின்றனர். அன்றியும் இந்தப் பிரமாண்டத்தில் சராசராத்மகமாய் விளங்கும் பிரம்மாதி ஸ்தம்பபரியந்தமாகிய சர்வ பூதங்களிடத்திலுஞ் சக்தியில்லையாயின் அவைகள் துச்சமென்றும் சக்தியில்லா பதார்த்தங்களென்றும் நிந்திக்கப்படுகின்றன. அன்றியும் ஒருவனை யொருவன் வெல்ல நினைப்பானுயின் சக்தியில்லாமல் வெல்லுவானு? நடக்கவெண்ணியவன் சக்தியில்லாமல் நடப்பானு? ஆகாராதிகளை யுண்ண வெண்ணினவன் சக்தியில்லாமல் உண்பானு? ஆகவே, எல்லாவற்றிலும் சக்தியென்பதொன்று நிறைந்திருக்கின்றது என்றறியற்பாலதாகும். அந்தச் சக்தியாகிய தேவியே பிரமசொரூபமென்றறியப்படுகின்றனள். மேதாவியருக்கும் இந்திராதி தேவர்களுக்கும் அவளே உபாசன மூர்த்தியாயுள்ளவள். அன்றியும் அந்தச் சக்தி விஷ்ணுவினிடத்தில் ஸத்வகுணசக்தியாயும், பிரமனிடத்தில் ரஜோகுண சக்தியாயும், உருத்திர மூர்த்தியினிடத்தில் தமோகுண சக்தியாயும் இருந்து காத்தும் படைத்தும் அழித்தும் வருகின்றது. இவ்வாறு அச்சக்தி அவர்களிடத்திலில்லையாயின் விஷ்ணு முதலிய மும்மைத் தேவரும் தத்தந் தொழில்களைச் செய்யவறியார். ஆகையால், முனிவர்களே! சக்திதான் பிரம்மாண்டத்தைச் சிருஷ்டித்து யாவற்றையுங் காத்துத் தன்னிச்சையால் சராசரமான இவ்வுலகனைத்தையும் அழிக்கின்றனள். திருமாலேனும் ருத்திரனேனும் இந்திரனேனும் பிரமனேனும் அக்கினியேனும் சூரியனேனும் வருணனேனும் யாவரேனும் தந்தந்தொழிலில் வல்லரல்லர். (27–36)

அச்சக்தியோடு கூடியே மேற்கூறிய யாவரும் தந்தந் தொழி லியற்றுவராதலின் அத்தேவியே காரணங்களிலும் காரியங்களிலும் காட்சியானவையா னறியத்தக்கவர். அச்சக்தியை ஸகுணை எனவும் நிர்க்குணை எனவும் இருவிதமாகப் புத்திமான்கள் கூறுகின்றனர். ஸகுணையாகிய அத்தேவியை போககாமிகளும் நிர்க்குணையாகிய அத்தேவியை மோக்ஷகாமிகளும் உபாசிக்கின்றனர். அறம்பொரு ளின்பம் வீடென்பவற்றிற்கு எதிரற்ற எஜமானி அவளே யாகலான் விதிப்படி அவளைப் பூசிப்போர்க்கு வேண்டுவன தந்தருள்வாள். மாயாவயத்தராகிய மூடர் அவளது கருணையை யறியார். சிலர் அறிந்தும் பிறரை மயக்குகின்றனர். பண்டிதரும் கலியின் கொடுமையால் அறிவிழந்து பலவிதமான பாஷாண்ட மதங்களை வயிற்றின் கொடுமையால் உலகிற் பரவச்செய்கின்றனர். அறிவிற் சிறந்த முனிவர்காள்! நாலுபேதங்களுடன் கூடிய வேதவிருத்த மாகிய தர்மங்கள் பல இக்கலியில் உண்டாகின்றனவே யன்றி மற்ற யுகங்களில் சிறிதேனும் உண்டானதில்லை. (37–40)

இம்மஹாவிஷ்ணுவும் பிரமனும் உருத்திரமூர்த்தியும் தமக்கு வேண்டிய தொன்றைப் பெற தியானித்துக்கொண்டு அநேக வருஷம் உக்கிரமான தவஞ்செய்கின்றனர். அத்தேவியைக் குறித்தே பலவித வேள்வியியற்றுகின்றனர். பிரமமென்று கூறப் படும் பரமாத்மாவாகிய தேவியையே அழியா தென்றுமுள்ள மேலானசக்தி யென்றெண்ணி அம்மூன்று மூர்த்திகளும் எப்பொழு தும் மனதாற்றியானிக்கின்றனர். ஓ முனிவர்காள்! கலியின் கொடுமையயறிந்து அவ்வழி செல்லாது ஸர்வசக்திசொரூபமாகிய பரதேவதையையே பெரிய தெய்வமென்று துணிவீராக. எல்லா நூல்க ளும் துணிந்தெடுத்துக் கூறும் பொருளும் இதுவேதான். (41–48)

இந்த ரகசியத்தை எனது குருவாகிய வியாசமுனிவர் கூறி னார். அவருக்கு நாரதமுனிவ ருபதேசித்தனர். அவருக்கு பிரம தேவ ருபதேசித்தனர். அவருக்கு விஷ்ணுமூர்த்தி யுபதேசித்தனர். இன்னோரன்ன வுபதேசமொழியாற்றெளிந்த உண்மையை யறியப் பெறாத மந்தமதிகள் பலர் பலநெறிகளைக் கூறுவர். அவைகளைக் கேட்பதும் நினைப்பதும் பெரும் பாவம். ஆகையால் பராசக்தியே பரம்பொருளென்றும் அவளே வணங்கப்படுந் தெய்வமென்றும் நிச்சயித்து வழிபடுவீராக. (49–51)

ஓம் சகுணாயை நம:

## 9. மது கைடப வதம்

சவுனகாதியரை, சூதமுனிவர் கண்ணுற்று, ஓ முனிவர்காள்! உங்களுக் கிதுகாறும் பராசக்தியின் சொரூபத்தை ஒருவாறு எடுத் துக்கூறினேம். இனி விஷ்ணுமூர்த்தியினுடைய அங்க வியாபக மாயிருந்த நித்திரா சக்தி அவரை விட்டு விலக, அந்த விஷ்ணுமூர்த்

திக்கும் மதுகைடபருக்கும் உண்டான யுத்தத்தைக் கூறுகின்றேன் கேட்பீர்களாக என்று கூறுகின்றார் :

முன் விஷ்ணுமூர்த்தியினுடைய நேத்திரம் முகம் மூக்கு தோள் இருதயம் முதலிய சர்வாங்கங்களிலும் நித்திராரூபமாய் வியாபித்திருந்த தாமஸ சக்தி வெளிப்பட்டு ஆகாயத்திற் கட்புலனுக்குத் தோன்றாதிருந்த பராசக்தியுடனிற்க, விஷ்ணுமூர்த்தி கண் விழித்து மதுகைடபருக்கஞ்சி மிகவும் பயந்து நிற்கின்ற பிரமனைப்பார்த்து கம்பீர தொனியோடு, தாமரை மலரிற்றோன்றிய பிரமனே ! நீ தவத்தை விட்டு இவ்விடம் வந்த காரணமென்னை ? பயத்தாற் கலங்கிய மனத்தனாய் இங்கு துக்கத்துடனே இருப்பதற்குக் காரணமென்னை ? என்று வினவினர். அதற்குப் பிரமன் கூறுகின்றார்: என் தந்தையே ! உமது காதிலுள்ள மலத்தினின்றும் உதித்த மதுகைடபராகிய அசுரர் கோரமான பெரிய உருவங்கொண்டு என்னைக் கொலைசெய்ய வருகின்றனர். யான் பயந்து தேவரீரைச் சரணமடைய வந்தேன். ஓ வாசுதேவரே! பயத்தினால் நடுங்கி அறிவிழந்து வந்த என்னைக் காத்தருளல் வேண்டும் என்றனன். விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார் : ஓ ! பிரமனே ! அவர்களை ஒரு நிமிஷத்திற்கொன்று விடுகிறேன். அவர்கள் என்னுடைய பலத்தையறியாமல் உன்னைப் பின்றொடர்ந்து வந்து என்னுடன் போர்செய்ய எத்தனித்துக் கொண்டிருக்கின்றனர். அஃது அவர்கள் விதி முடிந்ததனாற்றான். நீ அஞ்சாதே. இவ்வாறு அபயமொழி கூறிக்கொண்டிருக்கும் பொழுதே அவ்வசுரர் அங்குவந்து கூறுகின்றார் :

ஓ ! சதுர்முகனே ! எங்கொளித்தனை ? எங்கொளித்தனை ? என்று அங்கு நெருங்கி ஆதாரமில்லாமல் ஜலத்தில் நின்றுகொண்டு பிரமனைப்பார்த்து, ஓ பலமில்லாதவனே ! எங்களுடன் போர்புரிவதற்கஞ்சிப் பயமுற்றோடிவந்து இத்தூங்குமூஞ்சியுடன் சேர்ந்தனையே. எங்களுக்கென்ன பயம் ? இவன் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே உன்னைக்கொன்றுவிட்டு, பின் சேஷசயனத்தின் மீதிறுமாந்திருக்கும் அவனையும் கொன்று விடுகிறோம். ஓ பிரமனே ! நீ போருக்கு வருவாயாக ; அல்லது உங்களுக்கடிமை என்று சொல்லிப் பணிவாயாக, என்றனர். (1–11)

இவ்வாறு உதாசீனமாய்ப் பேசும் அவ்வசுரர்களை விஷ்ணுமூர்த்தி பார்த்துக் கூறுகின்றார் : ஓ அசுர சிரேஷ்டர்களே ! நீங்கள் வாயில்வந்தபடி பிதற்றவேண்டாம். நீங்கள் வீரராயிருப்பீராயின் என்னுடன் போர்புரிய வம்மின். ஒரு கணப்பொழுதில் உங்கள் மதகர்வத்தையடக்கி விடுகிறேன். வீணாய் வீரம்பேசுவதிற் பயனென்னை ? காரியத்திற்காண்பிப்பதன்றோ ஆண்பிள்ளைத்தனம் என்றனர். விஷ்ணு கூறியதைக் கேட்டு மதுகைடபர் மிகுந்த கோபங்கொண்டு கண்சிவப்பேறி சமுத்திர மத்தியினின்றபடியே யுத்தஞ்செய்ய ஆரம்பித்து இருவருள் மது என்பவன் முற்பட்டு மிகவேகமாய்ப்பாய்ந்தோட கைடபன் அவ்விடத்திற்றானே நின்றுவிட்டனன். ஓடிய மது விஷ்ணுமூர்த்திமேற் பாய்ந்து அவரைத் தழுவி யிறுகக் கட்டிக்கொண்டு மற்போர்செய்யத் தொடங்

கினன். விஷ்ணுமூர்த்தி சிறிதேனும் இளைக்காமல் எண்ணிறந்த காலம் அம்மதுவென்பவனோடு போர்செய்து அவனைப் புறங்கொடுத் தோடும்படிச் செய்தனர். அவன் ஓடுதலைக்கண்ட கைடபன் அவ னைப் போலவே திருமாலோடு போர்புரிந்தோடினன். இவன் ஓடு தலைக்கண்ட மது முன்போலெதிர்த்துப் போர்புரிந்தனன். இவ்வாறு இரண்டசுரரும் ஒரு ஹரியோடு மாறிமாறிப் போர்செய்து வந்தனர். (12–17)

இப்போரைப் பிரமனும் ஆகாயத்தில் நிற்கும் நித்திராதேவியும் பார்த்து எண்ணுவதாயினர் :—இரண்டசுரருள் ஒருவனாவது சிறிதும் இளைத்தானில்லை. விஷ்ணுவோ மதோன்மத்தர்களான இருவரோடும் போர்புரிந்து மிகவும் இளைத்திருக்கின்றனன். இந்த யுத்தம் ஆரம்பித்து ஐயாயிர வருடமாயிற்று. இவ்வளவு காலமாகி யும் அசுரர்கள் அழியும்வகையைக் காண்கிலேம். இவ் வாறு எண்ணும்பொழுது விஷ்ணுமூர்த்தியும் இதுபோலவே எண்ணி அந்தோ ! நமது சௌரியமும் பலமும் எவ்வாறு போயிற்று ? அசுரர்களுக்கு அவ்விரண்டும் எவ்வாறு வளருகின் றன ? இஃது என்ன ஆச்சரியம் ! இவர்களை நாம் எந்த உபாயத் தினால் கொல்லப்போகிறோம் ? உபாயம் நமக்கொன்றும் தோன்றவில்லையே. தோன்றாமைக்குக் காரணம் என்னையோ அறியோமென்று ஏக்கமுற்றுச் சிறுபொழுது நின்றனர். (18–21)

அப்பொழுது அசுரர்கள் மேகம்போல் கர்ச்சித்துத் திரு மாலைப் பார்த்து, ஏன் ஏக்கமுற்று நிற்கின்றாய் ? எட்டினால் குடிமியைப் பிடி எட்டாவிட்டால் காலைப்பிடி என்னும் பழ மொழியை நீ யறிந்திலையோ? நீ யொன்றும் யோசிக்கவேண்டாம். எங்களை ஜயிப்பதற்கு உனக்கு இயலாம லிருக்கின்றபடியால் அடைக்கலமென்று எங்கள் காலில் வீழ்ந்துவிடு; அங்ஙனம் வீழ்வை யாயின் உயிர் பிழைப்பாய்; விழாது நிற்பையாயின் உயிரிழப்பாய். ஒருக்கால் தைரியங்கொண்டு முன்போல் போர்புரிய வெண் ணுவையேல் உனக்குப்பலமேது ? அதனை நாங்களொழித்து விட் டோம். அந்தோ பாவம் ! நீ என்செய்வாய்? எங்கள் வார்த்தையில் உனக்குச் சந்தேக மிருக்குமாயின் இந்த க்ஷணமே போருக்கு வரு வாயாக; காலத்தை வீணுக்கவேண்டாம். உன்மகனாகிய பிரமனோ நீ ஜயமடைவையோ மரணமடைவையோ வென்று இமைகொட் டாமல் விழித்தகண் விழித்தவண்ணமாகவே யிருக்கப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவன் சந்தேகந் தீரும்படி உன்னைக் கொன்று பின்னர் அவனையும் கொல்லவேண்டி யிருக்கிறது என்ற னர். இவ்வாறு கூறும் பரிகாசவார்த்தையை விஷ்ணுமூர்த்தி கேட்டு இனி நமக்கு வெற்றி யுண்டாவதருமை; இவர்களைத் தந்திரத்தினால் வெல்லவேண்டு மென்றெண்ணி, அசுரரைப்பார்த்துக் கூறுகின்றார்: ஓ வீரர்களே ! யுத்தமுகத்திலிளைத்துப் போனவனையும் நிராயுத பாணியாயிருக்கின்றவனையும் சோர்ந்து கீழேவிழுந்தவனையும் பால பருவமுடையவனையும் சுத்தவீரர்கள் யுத்தத்தில் கொல்லநினையார். இந்த நீதி நீவிரும் அறிந்திருப்பீர்கள். ஆகையால் இப்பொழுது நான் மிகவும் இளைப்படைந்திருக்கின்றேன். நீவி ரிளைப்படைய

வில்லை. ஏனெனில் நீவிர் இருவரும் சேர்ந்து சண்டைசெய்யாமல் தனித்தனியே செய்கின்றபடியால் இளைப்பாறுவதற்கிடனுண்டா யிற்று. நான் தனியனுகையால் இளைப்பாறுதற் கிடனேது? இந்த வுண்மையை எண்ணி நான் சிறிது நேரம் இளைப்பாறுமளவும் நீவி ரிருவரும் நிதானிப்பீர்களாயின் இளைப்பாறியவுடன் முன்போல் போருக்கு வருகிறேன். பின்னர் நியாயமான யுத்தஞ்செய்வோம். இதிற் சந்தேக மில்லை என்றனர். விஷ்ணுமூர்த்தி சொல்லிய வார்த்தையை அசுரர்கள் கேட்டு, நம்பிக்கையுடையராய் இளைப்பா றிய பின்னரே யுத்தஞ் செய்யலாமென்று நிச்சயித்து அவரை யிளைப்பாறவிட்டு தூரத்தில் நின்றனர். அது கண்ட சதுர்ப்புஜ ராகிய திருமால் இனிநாம் அவ்விருரையும் எவ்விதவுபாயத்தினுலா வது கொல்லவேண்டுமே என்று அதற்குரிய ஆலோசனையை அடியில்வருமாறு எண்ணுவதாயினுர்: (22–31)

இவ்வசுரர்கள் தேவியினிடத்தில் எங்களிஷ்டப்படி மரண முண்டாக வேண்டுமென்று வரம்பெற்றிருக்கின்ருர்களல்லவா? இவர்களிளைப்பார்களா? இவர்களுக்கு நம்மால் மரணமுண்டா குமா? நாம் இதுவரையிற்செய்த சண்டை வீண்தானே. போர் செய்ய முடியாமல் விட்டு விடுவோமாகுல் இவ்வசுரர்கள் தேவர் முதலிய யாவருக்கும் பெருந்தீங்கு விளைப்பார்களே. இதற்கு நாமென்ன செய்யலாம்? இவர்கள் சரீரம் இளைக்கும்படியாகக் கொடுமையான வியாதிகளை யுண்டுபண்ணி விடுவோமென்ருலோ அவைகளால் சிறிதேனும் இளைப்பார்களா? இவர்க ளெந்தக்காலத் தில் என்னவிதமாய் மரணமடையலா மென்றெண்ணி யிருக்கின் ருர்களோ நாமறியோம். ஆகையால் இனி நாம் போர்செய்ய வெண்ணங்கொள்வது வீணுகும். இவர்கள் மரணத்தை விரும் பும்படியான காரியமெதுவோ அதனைச்செய்ய வெண்ணங்கொள் வதே மேலான யோசனையாகும். அது செய்வதற்கும் தேவியினு டைய கருணையின்றி எப்படி முடியுமென்று பரியாலோசனை செய்து ஆகாயத்தில் ஜோதிசொரூபமாய் நின்றருளுந் தேவியைப் பார்த்து அஞ்ஜலிசெய்து துதிக்கின்றனர் :—

ஹே புவனேஶ்வரி! மஹாமாயி! சிருஷ்டி சம்ஹாரிணி! புக்தி சித்திப் பிரதாயினி! உன்னுடைய சகுண ரூபத்தையும், உன்னு டைய மதுகையைக் கூறுஞ்சரித்திரங்களேயும் யானறியேன். உன்னை நமஸ்கரிக்கின்றேன். என்னன்னையே! யான் மிகவும் மனங்கலங்கித் திகைக்கின்றேன். யான் உனது மாயையால் நித்திராசக்தியினுல் கவரப்பட்டு பிரக்ஞையற்றவனுய்க் கிடந்தேன். அத்தருணத்தில் பிரமன் என்னிடம் வந்து நான் இந்திரிய சேஷ்டையில்லாமல் அசே தனனுயுறங்குவதைப்பார்த்து என்னை யெழுப்ப முயற்சித்தும் எழுந்திராமையால் தேவரீரைத் தோத்திரஞ்செய்ய, தேவரீர் கருணை கூர்ந்து என்னை விழிக்கும்படி செய்தீர். நான் விழித்தது முதல் இந்த ஐயாயிரவருடமும் இந்த மதுகைடபரோடு போர்புரிந்து இளைத்தேன். அசுரர்களோ உமது வரப்பிரசாதத்தால் வன்மை

யடைந்திருக்கின்றனர். நான் அவர்களோடு போர்புரிய முடியாமை யால் மறைந்துபோகலாமென்று மறைந்துபோவேனுயின் அவர்கள் பிரமனைக் கொல்வதிற் சந்தேகமில்லை. ஆகையால் என்னையும் பிரம னையுந் தேவரீர் காப்பாற்றியருள வேண்டுமென்று சரண மடைந் தேன். எனக்கு அனுக்கிரகஞ் செய்யுந்தருணம் இதுவே. நீரிப் பொழுது அனுக்கிரகஞ் செய்யாதொழியின் எங்களை அசுரர்கள் கொன்றே விடுவர். யான் என்செய்வேன்? எங்கு செல்வேன்? என்று கண்ணீராருய்ப் பெருகத் துக்கித்து விஷ்ணுமூர்த்தி நின்றனர். (32–49)

தேவி கருணைகூர்ந்து, ஓ மாதவனே! நீ அஞ்சவேண்டாம். நீ இப்பொழுது சண்டைசெய்யச் செல்வாயாக. உனக்கு ஜய முண்டாகுமாறு அவர்களுக்கு நான் என்னுருவத்தைக்காட்டி மோகங்கொள்ளும்படி வஞ்சிக்கின்றேன்; அத்தருணத்தில் நீ வெற்றிகொள்வா யென்றருள் செய்தனர். அவ்வண் மொழியைக் கேட்ட திருமால் ஆனந்தபரவசமுற்று வணங்கி விடைபெற்று, சமுத்திர மத்தியிற்சென்று போர்த்திறங்காட்டிக் தோள்தட்டி நின்றனர். அசுரர்கள் விஷ்ணுமூர்த்தியினுடைய கொக்கரிப்பைக் கண்டு பளா! பளா! நீ மிகச்சமர்த்தன்தான்; யுத்தஞ்செய்ய வா, வா; நம்மிருவருடைய வெற்றிதோல்வி தெய்வாதீனமேயன்றி நம் ஆதீனமன்று. ஓர் காலவிசேடத்தில் பலிஷ்டன் இளைக்கின்முன்; இளைத்தவன் பலிஷ்டனுகின்முன். ஆகையால் அறிவுடையார் வெற்றியுண்டானபோது சந்தோஷத்தையும் தோல்வியுண்டான போது துக்கத்தையும் அடையார். பூர்வம் உன்னுல் எங்களினத் தவர் தோல்வியடைந்திருக்கின்றுர்கள்; இப்பொழுது எங்களால் நீ தோல்வியடைந்திருக்கிருய். இது நிலையல்ல; நாமிருவரும் யுத்தஞ் செய்யத் தொடங்குவோமென்று கூறியவுடனே விஷ்ணுமூர்த்தி வீராவேசங்கொண்டு வெகுசாதுர்யமாய்க் கையை முஷ்டியாகப் பிடித்து இருவரையுங் குத்திஞர். அவர்களும் அப்படியே இவரைக் குத்திஞர்கள். இவ்வாறு இருவரும் முஷ்டியுத்தஞ்செய்து வருகையில் அசுரர்கள் முன்போல் வெற்றியடைவாராயினர். திருமால் முன்போலிளைத்து ஏதேது, இவர்கள் இளைப்பார்களா, இவர்கள் மஹாசூரர்களாயிருக்கின்றுர்கள்; நாம் அம்பிகையி னுடைய அனுக்கிரகத்தைப்பெற்றும் இவர்களைக்கொல்ல முடிய வில்லையே. இனி என் செய்வோமென்று ஏக்கமுற்று முகம்வாடி நின்றனர். அப்பொழுது அம்பிகை கருணைகூர்ந்து அசுரர்களுக்கு முன்னர்வந்து தமது கடைக்கண்ணுகிய காமபாணத்தை அவர்கள் மேல்விடுத்து, புன்னகையாகிய தீயை மூட்டி, அபிநயமாகிய நாடகத்தால் அவர்களைப்போர் செய்யவொட்டாது மயக்கி, சங்கீத கானத்தால் மோகாந்த காரத்தில் மூழ்கச்செய்து வெறி பிடித்தவர் போலாக்கித் தன்னையே பார்த்திருக்கச் செய்தனர். அத்தருணத்தில் விஷ்ணுமூர்த்தி தேவியினுடைய திருவுள்ளக் குறிப்புணர்ந்து இனி இவ்வசுரர்களை நாம் வெல்வதிற் றடையில்லை யென்று தீரங்கொண்டு அவர்களைப் பார்த்து நகைத்துக் கூறு

கின்றூர் : ஓ ! வீரர்களே ! உங்களைப்போல் யுத்தஞ்செய்தவர்களை யான் எங்கும் கண்டதில்லை. உங்களுடைய யுத்தத்திறமையைக் கண்டு மிகவும் சந்தோஷித்தேன். இப்பொழுது உங்களுக்குப் போர்செய்ய வேண்டுமென்கிற ஆவல் இல்லைபோற் காண்கின்றது. இனி உங்களுக்கு யாது வேண்டியது ? வேண்டியவற்றை யான் கொடுப்பதற்குச் சித்தமாயிருக்கின்றே னென்றனர். (50–67)

அசுரர்கள் ஜகன்மோகினியாகிய தேவியினால் காமாதுரர்களா யிருந்தும் விஷ்ணுமூர்த்தி தான் கொடுக்குங்கர்த்தாவாகக்கூறிய வார்த்தையைக்கேட்டுச் சகியாதவர்களாய், ஓ விஷ்ணுவே ! என்ன கூறினாய் ? நாங்களா உன்னிடத்தில் யாசிக்கத்தக்கவர்கள் ? நீ யல்லவா எங்கள் மரபினரிடத்தில் யாசிக்கின்ற வழக்கமுடைய வன். அதை மறந்து இவ்வாறு கூறினையன்றோ, நன்றாயிருந்தது ! ஆயினும் நாங்கள் உன்னுடைய யுத்த சாமார்த்தியத்தைக் கண்டு மிகவும் சந்தோஷித்தோம். உனக்குப் பரிசளிக்கவேண்டுமென்கிற எண்ணம் எங்களுக்குமுண்டு. ஆகையால் உனக்குவேண்டிய வற்றைச் சீக்கிரமாகக் கேட்பாயென்றனர். விஷ்ணுமூர்த்தி நமக்கு நல்லகாலம் வந்துவிட்டதென்று உள்ளே மகிழ்ந்து ஓ அசுரர்களே ! உங்களுக்குக் கொடுக்குந்திறமும் என்னுடைய யுத்தத்தில் சந்தோஷமும் உண்மையாயிருந்தால் இந்த யுத்தத்தில் என்னால் கொல்லப்படும் விருப்பம் உமக்குண்டாகவேண்டும். அதா வது உங்களை நான் கொல்லவேண்டும். இதுதான் எனக்குவேண்டிய வரமென்றூர். (68–70)

இதைக்கேட்ட அசுரர்கள் பிரமைகொண்டு மெய்ம்மறந்து ஐயோ ! நாம் மோசம்போனோமே, இவன் நம்மை வஞ்சித்து விட்டானே. நாம் இவன் வேண்டியவற்றைக் கொடுத்துத் தொலைத்துவிட்டு இந்தப்பெண்ணோடுகூடி வாழலாமென் றெண்ணி யன்றோ நாம்கேட்டது. இவன் நமது உயிருக்கே உலை வைத்து விட்டானே ! அடபாவி ! என்று மனம்நொந்து இனி நாம் எண்ணி யாவதென்னை ? (மேலுலகம் இல்லெனினுமீதலே நன்று ஆகையால்) நாம் அவ்வஞ்ச னெண்ணியபடியே இறந்து விடுவோமென்று துணிந்தவர்களாய் விஷ்ணுவைப்பார்த்து, ஓ மாயனே ! முன் னொருகாலத்தில் இப்பூலோகமெல்லாம் ஜலமயமா யிருப்பதைப் பார்த்து உன்னிடத்தில் நாங்கள் ஓர் வரம் வேண்டும்பொழுது கொடுக்கவேண்டுமென்று கேட்டிருக்கிறோம். அது உனக்கு ஞாபகமிருக்கின்றதோ, இல்லையோ ; நீ உண்மையானவனா யிருந்தால் இப்பொழுது நாங்கள் வேண்டும் வரத்தைக் கொடுக்கக் கடவாய். அஃதாவது ஜலமயமாயிருக்கின்ற இந்தவிடத்தில் எங்களைக் கொல்லாதே ; ஜலமில்லாமலும் விசாலமாயு மிருக்கின்ற பிரதேசத்தில் எங்களை உன்னிஷ்டம்போல் கொன்றுவிடு. இதுதான் எங்களுக்கு வேண்டுவது என்றனர். விஷ்ணுமூர்த்தி உடனே சக்கிராயுதம் தம்மிடம் வரும்படி சிந்தித்தனர். அதுவும் வந்து கரத்திற்றங்கியது. அப்பொழுது அசுரர்களைப்பார்த்து புன்னகை செய்து, ஓ மதுகைடபர்களே ! உங்களை இப்பொழுது நீங்கள்

வேண்டியபடியே நிர்ச்சலப்பிரதேசத்திற் கொன்று விடுகிறே னென்று கூறி விஸ்வரூபமெடுத்துத் தனது துடைகளை விசாலமான பூமியாகக் காண்பித்து, ஓ! அசுரர்களே! இந்தப் பூமியைப் பார்த்தீர்களா? இங்கு ஜலமில்லை. இது நிர்ஜலமானவிடம்; இந்த விடத்தில் உங்கள் சிரசை நாட்டுங்கள்; இப்பொழுதுதான் நான் சத்தியவானுயினேன். நீங்களும் சத்தியவான்களாகவேண்டும் என்றனர். அசுரர்கள் அம்மொழியைக்கேட்டு இனி நாம் சத்தியந் தவறுவது நீதியல்ல. ஆயினும் இந்த மாயவன் ஒரு உபாயஞ் செய்தது போல் நாம் ஓர் உபாயம் செய்தோமென்றெண்ணி தங்கள் சரீரத்தை ஆயிரம்யோசனை நீளமுள்ளதாகக் காட்டினுர்கள். விஷ்ணுவும் தம் துடைகளை இரண்டாயிர யோசனை நீளமுள்ளதாகக் காட்டினுர். அசுரர்களதைப் பார்த்து நாணமுற்று அதிசய மடைந்து இனி நாம் நம்முடைய தலைகளைக் கொடாமலிருப்பதற்கு முடியாது என்றெண்ணி விசாலமான அவ்விஷ்ணுவினுடைய துடைகளில் தங்கள் தலைகளை வைத்தார்கள். வைத்தவுடன் விஷ்ணு மூர்த்தி சக்கிராயுதத்தினுற் சங்கரித்தனர். அவர்களும் பரலோக மடைந்தனர். அப்பொழுது அவர்களுடைய சரீரத்தினின்றும் வெளிப்பட்ட உதிரமும் மாமிசமும் சமுத்திரத்திற் பரவியது. பரவிய விடமெல்லாம் பூமியாய்விட்டது. அதனுல் இந்த பூமிக்கு மேதினி என ஒரு பெயர் வந்தது. இப்பூமி அசுரர்களுடைய மேதை யானதால் உண்ணுகின்ற பதார்த்தமாகா தொழிந்தது. (71–86)

ஓ முனிவர்களே! இந்த மதுகைடபர் விஷ்ணுவினுடைய பலத்தினுலாவது சாமர்த்தியத்தினுலாவது இறந்தவர்களல்ல ரென்பதும் தேவியினுடைய மோகனுசக்தியினுற்ருன் அவர்கள் இறக்க நேர்ந்த தென்பதும் உங்களுக்கு நன்ருக விளங்கியிருக்கு மன்ருே? ஆகையால் சகுணை நிர்க்குணையாகவிருந்து அனுக்கிரகஞ் செய்யும் பராசக்தியே சுராசுரர்களால் பூசித்து வணங்கத்தக்கவள். அந்தத் தேவிக்குக் கிஞ்சித் அதிகமாக ஒருவரும் திரிலோகத் திலும் கிடையாது. இது சத்தியம், சத்தியம் சத்தியம்; இதுவே வேத சாஸ்திர சம்மதமென்று தெளிமின். (87)

ஓம் ஸகலேஷ்டதாயை நம:

## 10. சிவன் வரமளித்தல்

சவுனகாதி முனிவர்கள் சூதமுனிவரைப் பணிந்து வினவு கின்ருர்கள்: தேவரீர் எங்கள்பால் வைத்த கருணையினுல் மதுகை டபருடைய யுத்தத்தைக்கேட்கப் பெற்றனம். இனி முன்னர் வியாச முனிவர் செய்தற்கருமையான தவத்தைச்செய்து சுகரென்னும் ஓர் புத்திரரைப் பெற்று அவருக்குச் சகல சாஸ்திர புராணங்களையும் உபதேசித்தனரென்று கூறினீர். அந்தச் சரித்திரத்தை எங்களுக்கு விரித்துச் சொல்ல வேண்டுமென்றனர். சூதர் மகிழ்ந்து கூறு கிருர்:—ஓ முனிவர்களே! வியாசமுனிவர் முன்னர் மிகவும்

ரம்யமான மேருபர்வதத்தின் சிகரத்தில் புத்திரப்பேறு வேண்டி நாரதமுனிவரால் வாக்பீஜமென்னும் ஏகாக்ஷர மந்திரத்தை யுபதேசிக்கப்பெற்று ஜபித்து வந்தனர். பின்னர் அம்பிகையி னுடைய மாயையால் தேவியை மறந்து பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்று சொல்லப்படும் பஞ்சபூதங்களுக்குள்ள வன்மை யுடைய ஒரு புத்திரனைத் தரவேண்டுமென்று மஹாதேவராகிய சதாசிவமூர்த்தியைத் தியானித்து அன்னபானாதி ஆகாரங்களை விலக்கி நூறு வருடம் கோரமான தவம்புரிந்து வந்தனர். அங்ஙனஞ் செய்தும் புத்திரோற்பத்திக்குக் காரணமான குறிகுணங்கள் தமக்குத் தோன்றாமையால் வியாசர் சிறிது கவலைகொண்டு நாம் முன்னர் யாரைத் தியானித்தோம்? இப்பொழுது யாரைத்தியானிக் கிறோம்? இஃதுவென்ன மாயம்? நாம் நாரதரிடத்தில் தேவி மந்திரத்தை உபதேசித்துக்கொண்டு மஹாதேவரை மாத்திரம் தியானித்துப் பிரார்த்திக்கின்றோமே; இஃதுவென்ன மடமை! உலகில் சாதாரணமாய்ச் சக்தியோடு கூடினவனை யாவரும் புகழ்கின்றார்கள். சக்தி யில்லாதவனை யாவரும் இகழ்வார்கள். நாம் மஹா பூஜ்யையான பராசக்தியை விலக்கிப் பரமசிவத்தை மாத்திரம் தியானித்தோமே. அந்தோ! நமது தவம் வீணாய்ப் போயிற்றே. இனி என் செய்வோமென்று ஏங்கிப் பின்னர் ஒருவாறு தெளிந்து மேருமலையைவிட்டுப் பத்திர புஷ்ப பலங்களால் நிறைந்து அழகான அநேக வனப்பிரதேசங்களையுடையதும், தேவர் முனிவர் துவாதசாதித்தர் ஏகாதச ருத்திரர் அஷ்டவசுக்கள் சப்த மருத்துக்கள் அச்வினிகள் பிரம நிஷ்டர்கள் ஆகிய இவர் களால் சூழப்பெற்றதும், கந்தர்வர்களால் கானங்கள் நிறையப் பெற்றதும், மஹாதேவிக்கு அதிகப்பிரியகரமானதுமான இம்மலையி னுச்சியிற் சென்று தேவியோடு பரமசிவத்தைத் தியானித்து முன்போல் தவஞ்செய்யத் தொடங்கினர். (1–11)

அவருடைய தபாக்கினியானது எல்லா உலகங்களிலுஞ் சராசரங்களிலும் வியாபித்து இந்திரன் முதலிய தேவர்களைச் சுட்டெரித்தது. இந்திரன் இத் தபாக்கினியைக் கண்டு கோபமும் நடுக்கமுங் கொண்டு சிவபெருமானிடத்திற் சென்றுபணிந்து நின்றனன். சிவபெருமான் இந்திரனைப் பார்த்து, ஓ இந்திரா! நீ ஏன் பயமடைந்திருக்கின்றனை? ஏன் கோபத்துடனிருக்கின்றனை? இப்பொழுது சுட்டெரிப்பது தபாக்கினியல்லவா? தவஞ்செய்பவ னிடத்தில் நீ கோபங்கொள்ளலாமா? அது நியாயமன்று. நீ பயப்படுதற்குக் காரணமில்லை. அவன் உன் பதத்தை விரும்பித் தவஞ் செய்தாலல்லவா நீ பயப்படவேண்டும்? அதுவுமில்லை. முனிவராயினோர் தங்களுயிருக்கு ஓர் இறுதி வந்தபோதிலும் தாங்கள் பிறவுயிருக்குத் தீங்கு செய்யார். தவஞ்செய்கின்ற வியாச முனிவனோ இப்பொழுது என்னைச் சக்தியோடு சேர்த்துத் தியானிக்கவேண்டுமென்று ஆராய்ந்து தெளிந்து அப்படியே தவஞ்செய்து வருகின்றான். தவஞ்செய்யும் காரணம் என்னை யெனின், தனக்கு ஒரு சத்புத்திரனுண்டாக வேண்டுமென்றுதான்.

வருடமோ நூறாயிற்று. அவனுக்கு நாம் அனுக்கிரகஞ் செய்யப் போகின்றோம். நீ உன்னுலகம் செல்லக்கடவையென்று விடை கொடுத்தனுப்பினர். (12–18)

சங்கரர் வியாசரிடஞ்சென்று, ஓ வியாசனே! எழுந்திரு. உனது தவத்தை மெச்சினோம்; உனது வேண்டுகோளின்படி நல்ல தேஜோரூபியாயும், ஞானியாயும், கீர்த்தியுடையவனாயும் இவ்வுலகத்திற்கு நாயக மணியாயும் சாந்தமுடையவனாயும் சத்தியனாயும் விளங்கத்தக்க ஒரு புத்திரனை உனக்குத் தந்தோம் என்றனர். அவ்வருண்மொழியைக் கேட்ட வியாச முனிவர் ஆனந்தமுற்று அடியில் வீழ்ந்து பணிந்து நிற்ப, சிவபெருமான் திருவுருக் கரந்தனர். வியாசரும் தம்மிடஞ்சென்று தவஞ்செய்யுங் காலத்தில் விட்டிருந்த அக்னி காரியத்தை அப்பொழுதே செய்யவேண்டுமென்றெண்ணி அரணியில் மத்தைப்பூட்டிக் கடையும்பொழுது இவருடைய மனதில் புத்திரோற்பத்திக் கேதுவான ஒருவிதமான காமசிந்தனை தேவசங்கற்பத்தால் உண்டாயிற்று. (19-23)

முனிவர்காள்! அஃதென்னையெனில், நாம் மத்தை இந்த அரணியோடு சேர்த்துக் கடைவதினாலல்லவா அக்னியுண்டாகிறது. மத்தை அரணியோடு சேர்க்காமற் போவோமானால் அக்னி எப்படியுண்டாகும்? அது போலவே நாம் ஒரு ஸ்திரீயோடு சேர்ந்தாலல்லவா நமக்குப் புத்திரனுண்டாவான்? இல்லாவிடில் புத்திரனேது? ஆகையால் யௌவனமுடையவளாயும் சுந்தரியாயும் நற்குலத்திற் பிறந்தவளாயும் பதிவிரதையாயுமுள்ள மனைவி நமக்குக் கிடைக்கவேண்டுமே; கிடைத்தாலும் அவளுக்குப் புத்திரோற்பத்தி யுண்டாகுமென்பதும் பதிவிரதா தர்மம் கெடாதிருக்குமென்பதும் நாமெப்படி நிச்சயஞ் செய்யக்கூடும்? இந்த இரண்டும் உடையவளாயிருந்தாலும் அதி காமியாயிருப்பாளானால் நம்மை எப்பொழுதும் நிர்ப்பந்தப்படுத்திச் சிற்றின்பத்தில் மூழ்கச்செய்து பேரின்பத்தைப் போக்கி விடுவாளே. சிற்றின்பம் எப்பொழுதும் சிவத்தியானமுடையவர்களைக் கெடுக்கும் பெரும் பாசமல்லவா? இது நமக்குப் பெரிய பந்தமாக முடிவதிற் றடையென்னை? ஆகையால் யான் கிருஹஸ்தாச்சிரமத்திற் புகேன்; பிரமசாரியாச்ரமத்தை விடேன் என்று எண்ணிக்கொண்டிருக்கும்பொழுது மின்னற்கொடி போன்ற ரூபத்தையுடைய தேவ ரம்பையானவள் ஏக்கமுற்றிருக்கும் அவரது சமீபத்தில் ஆகாயத்திற்றோன்றினாள். (24–29)

வியாசமுனிவர் அசைந்து கொண்டிருக்கும் அவளது அங்கத்தையும், நீண்ட புருவத்தையும், உருண்ட நேத்திரத்தையும், பந்து போன்ற தனத்தையும், சிறுத்த இடையையும், கோவை போன்ற அதரத்தையும், சங்கம்போன்ற கண்டத்தையும், கொடி போன்ற சரீரத்தையும், பிறை போன்ற நெற்றியையும், வளைந்த மயிரினையும், சுவர்ணகாந்தியையுங் கண்டு காமனுடைய பஞ்சபாணத்தால் வருந்தி, அந்தோ! என் செய்வேன் சங்கடத்திலகப்பட்டுக் கொண்டேனே! தவநெறியைக்கைக்கொண்டிருக்கும் என்னெதிரில்

அடக்கக்கூடாத காமத்தீ சுடர்விட்டெரிகின்றதே. இவ்வெறியைத் தணிப்பதற்கு இவளை யங்கீகரிப்பேனாயின் பின்னர் இவள் நம்மை வஞ்சிக்கும்நிமித்தம் இங்கு வந்ததாக வெளிப்படுங்கால் உலகத்தார் நகைப்பார்களே; முனிவர்களுள் சிரோரத்தினமாய்ப் பிரகாசித்தது போய் அவர்களால் பரிகசிக்கப்படுவேனே; நூறு வருடங் கோர மான தவம் புரிந்து கடைசியில் சிற்றின்பத்துக் காசைப்பட்டு ஆசேதனமான ஒரு பெண்ணைக்கண்டு மயங்கிப் போயினனே; இஃது என்ன மடமை! என்று வைராக்கிய சீலரால் கூறப்படு வேனே என்று தவத்தைக் கைவிடுவதற்குக் கூடாமல் வருந்தினர். (30–34)

பின்னர் இவ்வாறு பலரால் நிந்திக்கப்பட்டாலும் படுவோம். கிருகத்தாச்சிரமத்தில் உண்டாகவேண்டிய ஒப்பில்லாத புத்திரசுகம் உண்டாகாதுற்போதும். புத்திர சம்பத்தால் இம்மையிலும் மறுமை யிலும் இன்பமுண்டாகுமென்றும் அநேக ஞானிகள் இல்லறத்தோடு கூடியிருந்து மோக்ஷத்தையடைந்தார்களென்றும் பல சாத்திரங்க ளால் கேள்விப்பட்டிருக்கின்றோம். ஆகையால் தெய்வ கதியாய் நேரிட்ட இவளை நாம் கைவிடக்கூடாது. இவளை அங்கீகரிக்க வேண்டும். ஆனால் முன் ஊர்வசியைப் புரூரவன் கூடிப் பின் அவளால் அவமானத்தை யடைந்தன னென்று நாரதர் ஒரு கதை கூறியிருக்கின்றார். இவள் அப்படி அவமானஞ் செய்பவளாகத் தோன்றவில்லை யென்று நிச்சயித்தனர். (35–36½)

ஓம் சகாரிண்யை நம:

# 11. புதனுற்பத்தி

சௌனகாதியர், சூத முனிவரை நோக்கி, எங்களையரே! புரூரவ னென்னும் அரசன் யார்? ஊர்வசி யென்னுந் தேவ கன்னிகை யார்? அவளால் அவ்வரசன் எப்படி அவமானத்தை யடைந்தான்? இவ்வரலாற்றைக் கேட்கவேண்டுமென்கிற ஆவல் யாவருக்கும் அதிகமாகவிருக்கின்றது என்று பல இனிய உபசார மொழிகளோடு விண்ணப்பஞ் செய்ய, சூதமுனிவர் கூறுகின்றார்: ஓ முனிவர் களே! முன்னொரு காலத்தில் தேவகுருவாகிய பிரகஸ்பதியினுடைய பத்னியாகிய தாரை என்பவள் சந்திரனுடைய வீட்டிற்குச் சென் றனள். அவன் இவளது அழகைக்கண்டு காமாதுரனாயினான். இவளும் அவனது முகவிலாசத்தைக்கண்டு தன்னறிவிழந்தாள். இவ்வாறு இருவரும் மன்மதனுக்காளாய் ஒருவருக்கொருவர் அதிக மோகங்கொண்டு கிரீடித்துக் கொண்டிருந்தனர். (1–10)

தேவகுரு சந்திரனிடஞ்சென்ற தாரை நெடுநாளாகியும் வராமை யால் மிகவும் கவலையுற்று சந்திரனுடைய கிருகத்துக்குச் சென்ற வள் இதுவரையில் வாராமைக்குக் காரணமென்னை? என்ன தீங்கு விளைந்ததோ? மோசம் வந்தது என்று கோபாவேசங்கொண்டு தனது மாணாக்கருளொருவனைத் தாரையை யழைத்து வரும்படி ஏவினார். அவன் சந்திரன் வீட்டுக்குப்போய், அம்மணீ! உம்மை உம்

முடைய கணவராகிய என்னுசிரியர் அழைத்துவரும்படி ஏவினுர், வாரும் என்றனன். அவள் அச்சொல்லை ஒரு சிறிதும் கேளாதவள் போல் சும்மாவிருக்க, அக்குறிப்புணர்ந்து வந்த மாணுக்கன் தேவ குருவினிடஞ்சென்று, சுவாமீ! அந்த அம்மாள் வருவதாகத் தோன்ற வில்லை என்றனன். அதைக்கேட்டவுடன் வேறு சில சீடர்களை ஒரு வன்பின் ஞெருவனை அனுப்பியும் அவள்வராமலே யிருக்கக்கண்டு இவள் சந்திரன் வசமுற்றிருக்கின்றுள், இனி நாமே செல்வோ மென்று அதிக கோபங்கொண்டு சந்திரனிடத்திற் சென்று அங்கு மதோன்மத்தனுய்த் திரிந்துகொண்டிருக்குஞ் சந்திரனைப்பார்த்து, ஓ சந்திரா! என்ன காரியஞ்செய்தனை? என் மனையாளை இதுவரை யில் என்னிட மனுப்பாத காரணமென்னை? தருமத்திற்கு விரோத மான காரியத்தைச் செய்வது நீதியா? அவளை இதுவரையில் வைத் துக்கொண்டு ரக்ஷிப்பதற்குக் காரணமென்னை? யான் உனக்குக் குருவல்லவா? குருபத்னியாகிய அவள் உனக்குத் தாயல்லவா? உன் குறிப்பை நோக்குங்கால் அவளை உனக்குத் தாயாக எண்ணி யிருப்பதாகத் தெரியவில்லை; ஆகையால் அவளால் நீ அநுபவிக் கப்பட்டனையா? உன்னுல் அவள் அநுபவிக்கப்பட்டனளா? இவ் விரண்டுமின்றி உன் காவலிலிருந்தவளா? ஏ மூடா! பிரமஹத்தி செய்தவனும் பொன் திருடினவனும் மதுபானஞ் செய்தவனும் குருமனைவியைப் புணர்ந்தவனுமாகிய இந்நால்வரும் கொடும்பாவிக ளென்றும் இவர்களை நேசிக்கின்றவன் ஐந்தாவது பெரும்பாவி என் றும் தரும நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றதல்லவா? இந்தத் தாரை உன்னு லனுபவிக்கப் பட்டிருப்பாளாயின் நீ முன் கூறிய பஞ்சமாபாதகருக்குள் ஒருவனுயினை யன்றுே? இனி நீ தேவர் களிடஞ் செல்வதற்கு யோக்கியனல்லை. யாவராலும் நிந்திக்கப்படு வாய். இப்பொழுதாயினும் என் மனைவியை விட்டுவிடு; நான் அழைத்துக்கொண்டு போகிறேன். இல்லையாகில் ஹே துஷ்டா! என்னுல் குருதாராபகாரி என்று பழிக்கப்படுவாய். குருவினுல் நேரிடும் பழியை சிவபெருமானுலும் நீக்கமுடியாது. சொன்னேன், சொன்னேன் என்று தாரையினிடத்தில் வைத்திருக்கும் பிரியத்தை மாற்றக்கூடாத தேவகுரு கடிந்து பேசும் வார்த்தையைச் சந்திரன் கேட்டுக் கூறுகின்றனன்: (11–18)

ஓ தேவகுருவே! மனைவியைப் பிரிந்திருக்குங் காரணத்தினுல் உமக்கு அளவு கடந்த கோபம் வருகின்றது. கோபமுடைய அந்த ணரைப் பூசிக்கக் கூடாதென்றுங் கோபமில்லாத அந்தணரை விதிப்படி பூசிக்க வேண்டுமென்றும் தருமசாஸ்திரங் கூறுகின்றதே. அதை நீர் அறியாமற் போனதென்னை? நீர் கோபத்தோடு வருங் குறிப்பை யறிந்தே யான் வழிபாடியற்றுமலிருந்தேன். இனி நீர் அதி கமாய்ப் பேசவேண்டாம். உமது மனைவி உம்மிடம்வர இஷ்டமிருந் தால் இத்தனை மாணுக்கரும் நீரும் வரவேண்டுமா? இதைத்தெரிந்து கொள்ளும் மதியுமக் கில்லையா? அவளுக் கெப்போதிஷ்டமோ அப் போது உம்மிடம் வந்து சேருவள். ஒருசமயம் வராம லிவ்விடத்தி லேயே தங்கியிருந்தாலு மிருப்பள். ஏனெனில் பெரும்பாலும் அவ

ளுக்கு இவ்விடத்திலேயே சுகத்தை யனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பமிருக்கின்றது. அதற்கிடையூறு செய்து நீர் கொடுக்கப் போகிற சுகமென்னே? இதனை யறியாதிருக்கின்றீரே. உமக்கு வந்த கேடென்னே? நீர் தனித்திருக்க லாகாதா? இப்போது நீர் யான் சொல்லும் புத்தியைக் கேட்டுப் போவீராயின் அவள் சில காலஞ்சென்று தானாய் வந்து சேருவள். அவளென்னிட மிருப்ப தால் அவளுக்கு வருந் தோஷமென்னே? நீர் முன்னொரு காலத்தில் இவ்விஷயத்தைப்பற்றி விபசாரஞ்செய்கிற ஸ்திரீயும் வேதவிதிப் படி கன்ம மநுட்டிக்காத அந்தணனும் தூஷிக்கப்படமாட்டார்கள் என்று ஓர் தர்மசாஸ்திரம் ஏற்படுத்தியிருக்கின்றீரே. அது உமக் கில்லையோ? ஊருக்குத்தானு சொன்னது? ஆ! ஆ! நன்ரு யிருந்தது! என்றிவ்வாறு உதாசீனமாய்க் கூறிய சந்திரன் வார்த்தை யைக்கேட்டு தேவகுரு மிகவருத்தமடைந்து வாடின முகத்தோடு சிந்தாகுலப்பட்டு காமம் மேலிட்டவராய் அங்கிருக்கவுங் கூடாமல் தமதிருப்பிடஞ் சேர்ந்தனர். (19–23)

சில காலஞ்சென்ற பின்னர் மீண்டும் சந்திரனுடைய கிருகத் திற்குச் சென்றனர். அங்கிருந்த ஓர் காவலாளி அவரை யுள்ளே போகவிடாமற் றடுக்க, மிக்க கோபங்கொண்டு அக்காவற்காரனைப் பார்த்து, என் வரவை உன் எஜமானனுக்குத் தெரிவிப்பாயென்று சொல்ல, அவன் ஓர் ஆளையனுப்பிச் சந்திரனுக்குத் தெரிவித்தும் அவன் வரவில்லை. அப்படி வராமையைத் தேவகுரு வெண்ணி, இப் பரம சண்டாளன் எனக்குச் சீடனாய் வந்து என் மனைவியை யப கரித்தமையால் இவனுக்குப் பலமான தண்டனை செய்யவேண்டும், இவனை எளிதில் விட்டுவிட்டால் நகைப்புக்கிட முண்டாகுமென்று அந்த வாசற்படியிற்றனே நின்று ஒரு பெருங்கூச்சலிட்டு, அடா துற்புத்தியுடையவனே! தேவாதமனே! பாபீ! தெருவில் யான் நின்றுகொண்டிருக்க நீ வீட்டில் என் மனைவியோடு தூங்கிக்கொண் டிருக்கின்றனையே; அவளைச் சீக்கிரம் விட்டுவிடு; இல்லையாயின் கடுமையான சாபத்தினாலுன்னைச் சாம்பராக்கிவிடுவேன்; இஃது உண்மை. வீணாய்க் கெடாதே. தாரையை சீக்கிரம் என்னிடம் கொண்டுவந்துவிடு, என்றிவ்வாறு கூறியலறினர். குரு வசனத் தைக்கேட்ட சந்திரன் கோபாவேசங்கொண்டு விரைவாய் வெளியே வந்து குருவைப் பார்த்து, நீ ரென்ன அதிக வார்த்தைகளைப் பேசு கின்றீரே. நீரென்ன மன்மதனோ? அவளும் மோடித்திருப்பது நீதி யாமோ? குரூபியான உமக்கு ரூபவதியான இத்தாரை எப்படித் தகுதியானவள்? உமக்கேற்றபடி குரூபியான ஓர் ஸ்திரீயை சுவா தீனப்படுத்திக்கொண்டு இனிச்சுகமாயிரும். பிச்சை யெடுத் துண்ணுமுமது வீட்டில் இவள் கால்வைக்கவுங் கூடுமா? ஸ்திரீ களுக்குத் தனக்குச் சமானமான ரூபலாவண்ணியமுடைய புருஷ னிடத்திலேயே அன்புண்டாகுமென்று சொல்லப்பட்டிருக்கும் காம சாஸ்திரத்தை மனைவி மனைவி என்றமும் நீரறிந்தபோதிலும், ஓ மூடரே! (தாரை காமசாஸ்திரப்படி தனக்கொப்பாகாத உம்மிடத்தில் உண்மையான அன்பை வைக்காமல் தனக்கேற்ற என்னிடத்தில்

அன்பை வைத்திருக்கிருள்) நீர் ஏன் சாஸ்திர விருத்தஞ் செய்கின்றீர்? வந்தவழியைப் பார்த்துச்செல்லும்; என் அன்புக்கன்பான தாரையை விடமாட்டேன். நீர் இப்பொழுது காமவெறிமேலீட்டினுல் கொடுக்குஞ் சாபம் என்னையொன்றுஞ் செய்யமாட்டாது. உமது மனைவியைக் கொடேன். உம்மாலானதைப் பார்த்துக்கொள்வீர் என்றனன். சந்திரன் வசனத்தைக் குரு கேட்டு நான் மனைவியை இழந்ததுமன்றி இப்பாபியினுல் சொல்லப்படும் துச்சவார்த்தைகளைக் கேட்கும் விதியுமிருந்ததே என்று அவ்விடம்விட்டு இந்திரனிடஞ் சென்றனர். (24–35)

இவர் வரவைக்கண்ட இந்திரன் அர்க்கிய பாத்யா சமனுதிகள் கொடுத்து ஆசனத்திலுட்காரச் செய்து மிகவணக்கத்தோடு வினவுகிருன்: உமது திருமுகத்தைப் பார்க்கும்போதே விசனகரமான குறியைக் காட்டுகின்றது. அப்படிப்பட்ட துக்கம் என்னவுண்டாயிற்று? எதற்குச் சிந்தனைப்படுகின்றீர்? எனக்குக் குருவாயிருக்கின்ற வுமக்கென்ன குறையுளது? என் ராஜ்யத்தில் தேவரீரை எந்த துஷ்டன் அவமானப்படுத்தினுன்? என் பரிவாரங்களாயுள்ள சைனியங்களையெல்லாம் உமது வசத்தில் ஒப்புவித்துவிட்டேன். உமக்கேதேனும் இடையூறு வரும் பக்ஷத்தில் பிரமனுதி தேவரும் சகாயஞ்செய்யச் சித்தமாயிருக்கின்றனர். இப்படியிருக்கத் தேவரீருக்கு என்ன விசனம் நேரிட்டதென்று கேட்க, பிரகஸ்பதி கூறுகின்றுர் :— ஓ இந்திரா! என் மாணுக்கனுகிய சந்திரன் எனக்கு அதிகப்பிரியமான மனைவியை யபகரித்துப் போயினன். யான் பலமுறை சென்று அனுப்பும்படி கேட்டும் அனுப்பவில்லை. யான் என் செய்வேன்? எனக்கு நீ தான் கதி. எனக்கு வேண்டுஞ் சகாயத்தை நீயே செய்யவேண்டும். நான் மிகவும் வருத்தப்பட்டிருக்கிறேன் என்றுகூற, இந்திரன் ஓ பிரபு! நீர் வருத்தப்பட வேண்டாம். உமக்குவேண்டுஞ் சகாயஞ் செய்வதற்கு யான் அடிமையாளா யிருக்கிறேன். இந்நிமிஷத்திற்றுனே சந்திரனிடஞ் சென்று உம்முடைய மனைவியை யழைத்துக்கொண்டு வருகிறேன். அன்றித் தூதுவனை யனுப்புவனேயாயின் காமாந்தகனுன சந்திரன் அனுப்பமாட்டான். ஆயினும் அனுப்புகிறேன், அவன்பின் தாரையை யனுப்பானுயின் பின்னர் யான் சேனைகளோடு சென்று யுத்தஞ் செய்தாவது உமது காரியத்தை நிறைவேற்றுகிறேன் என்று ஆசிரியருக்குச் சமாதானங்கூறி ஓர் தூதனை அழைத்துச் சந்திரனிடஞ்சென்று நமது குருபத்தினியை யழைத்துவா வென்று அனுப்பினுன். (36–44)

அவன் சந்திரனிடஞ்சென்று, ஓ சந்திரனே! யான் யார் தெரியுமா? உனக்கரசனுன இந்திரனுல் அனுப்பப்பட்ட தூதன். அந்தப்பிரபு உன்னிடத்தில் ரகஸ்யமாகச் சில சங்கதிகளைச் சொல்லும்படி எனக்குக் கட்டளையிட்டனுப்பினர். அதைச் சொல்லுகிறேன் கேள்: நீ எல்லா நீதிகளையும் உணர்ந்தவன்; நீ யறியாத தருமம் ஒன்றில்லை. உனது பிதாவோ அத்திரிமகரிஷி. அவர் பெயரைச்சொல்லும்போதே உலகமெல்லாம் ஆச்சரியமடையும். அப்

பெரியோருடைய கீர்த்திக்குக்கெடுதி வரும்படியாக நீ நடக்கலாமா? உலகத்தில் பசு பக்ஷி முதலிய ஜீவராசிகள் தனது தாரத்தைக் காப்பாற்றிக்கொள்வதில் சோம்பலின்றிச் சாக்கிரதையாயிருக்கின்றன. அந்த விஷயமாய் அவைகளுக்குள் நேரிடும் கலகங்களும் விரோதங்களும் அளவிறந்தன. அங்ஙனமிருக்க, எல்லா அறிவோடுங் கூடிய மானிடர் தம் மனைவியைப் பிறருக்கு ஒப்புவித்துவிட்டுத் தான் தனியே உறங்கி வீழ்வரா? இப்பொழுது உன் மனைவியைப் பிறர் அனுபவிக்க நீ மனம் ஒப்புவையா? தன்னைப்போல் பிறரையும் பார்ப்பதல்லவோ நீதி. உன் மனைவியைக் காக்க நீ எப்படி முயலுகின்றனையோ அப்படியே பிறரும் இருப்பாரென்று நீ ஏன் உணரவில்லை? உனக்குத் தக்ஷனால் கொடுக்கப்பட்ட மனைவிகள் இருபத்தெண்மரும் அதிரூபவதிகளாயிருக்க குரு தாரத்தையிச்சித்தது என்னை? இஃது உனது கீர்த்தியைத் தொலைக்கும் தொழிலாய் முடிந்தது. பரஸ்திரீகமனஞ் செய்யவிருப்பமிருந்தால் மேனகை முதலிய தாசிகள் இருக்கின்றார்களே, அவர்களை இஷ்டப்படி அனுபவிக்கலாகாதா? நீ செய்வது அநீதி என்று யான் சொல்லவேண்டுமா? வீணைக் கெடாதே. உன் குருவின் மனைவியை அனுப்பிவிடு. உன்னைப்போன்ற நீதிமான்களே இத்தகைய தீத்தொழிலில் பிரவேசித்தால் மூடர்களான என்போலியர் அதனையே சாக்ஷியாகக்கொண்டு அஞ்சாமல் நடப்பார்களல்லவா? அப்பொழுது தருமம் வேரோடொழிந்துவிடும். அதை வாய்திறந்து சொல்லவும் வெட்கமாயிருக்கிறதே. ஆகையால் இக்கணமே தாரையை யனுப்பிவிடு. அனுப்பாமற்போனால் இது நிமித்தமாக ஒருவருக்கொருவர் கலகப்பட்டு யுத்தத்தால் மடியவரும். இதில் ஐயமில்லை; அக்கலகம் நேரிடாவண்ணம் செய்வதே அறிவுடையோர்க்கு இலக்கணமென்று தூதன் கூறினன். (45–54)

சந்திரன் கோபங்கொண்டு கூறுகின்றான்: ஓ தூதனே! உன்னிடஞ் சில நியாயங் கூறுகின்றேன். அதனை நீ இந்திரனிடஞ் சென்று நான் நேரிற்சொல்லுவதுபோல் சொல்லவேண்டும். என்னையெனில், ஓ இந்திரா! நீ எல்லா நீதிகளையு முணர்ந்தவன். ஓ தேவ ராஜனே! உனக்குக்குரு பிரகஸ்பதி. உங்களிருவருடைய புத்தியைக் குறித்து நானென்னவென்று புகழ்வேன்! உலகத்தில் அநேகர் பிறருக்கு வைராக்கிய ஞானோபதேசஞ் செய்வதில் சமர்த்தராயிருக்கின்றனர். அதுபோல் தாங்கள் நடப்பதில்லை. நடக்கின்றவர் மிகவும் அருமை. பிறர் குற்றம் கூறப்புகுந்தவர் முன்னர் தங்கள் குற்றங்களை ஆலோசிக்கவேண்டிய தவசியமான காரியம். எனக்கு நீதி சொல்லவந்தவன் பரதாரகமனஞ் செய்யாதவனாயிருந்தாலல்லவோ உன் சொல் என்னிடம் கௌரவப்படும். உனக்கெப்போதும் பரதாரகமனஞ்செய்யச் சந்துபார்ப்பதே வேலை. உன் செய்தி இப்படியிருக்க, உன் குருவாகிய பிரகஸ்பதி காம சாஸ்திரம் ஏன் செய்யவேண்டும்? செய்தது காமுகர்களாயிருக்கின்றவர் அந்த சாஸ்திரப்படி நடப்பதற்கா? அதைக் கைவிடுவதற்கா? கைவிடுவதற்காயின் இவர் செய்தது வீண்தானே.

அந்தச் சாத்திரப்படி பார்க்கும்போது நான் விரோதஞ் செய்ததாக ஏற்படமாட்டாது. அவருக்கு மாணுக்கராயிருக்கிற நான் அவர் சொல்லிய சாத்திரப்படி நடப்பதன்றோ தருமம்? இதனை நான் சொல்ல வேண்டுமா? அவர் கூறிய சாஸ்திரத்தில் பெண் ஒரு புருஷனிடத்தில் ஆராவன்பு வைப்பாளாயின் அவளை ரமிக்கலா மெனவும், வன்மையாளருக்கு எல்லாப் பெண்களும் சுவாதீன மெனவும், மென்மையாளருக்குத் தமக்குரிய வொருபெண்ணும் சுவாதீனமில்லையெனவும், தந்தாரம், பிறர்தாரம் என்கிற வேற்றுமை மந்தமதிகளுக்குண்டாகும் வீண் பிரமையெனவும் கூறப்பட்டிருக் கின்றன. இந்த நியாயப்படி தாரை என்னிடத்தில் வைத்திருக்கும் பிரேமைக் களவேயில்லை; அதிலோரணுவளவும் குருவினிடம் வைத்தவளன்று. அப்படி என்னிடம் பிரேமை வைத்திருக்குந் தாரையை அவர் கூறிய நீதிப்படி விடக்காரணமில்லை. அன்றியும் இல்லறத்தில் வாழ விருப்பமுடையவளுக்கு இல்லறம் ஒத்திருக்கும். இல்லறத்தில் வெறுப்புடையவளுக்கு அது ஒத்திருக்குமா? இவள் இல்லறத்தில் வாழும் விருப்பில்லாதவளாக இருந்தமையால் நானந்த தாரையை இளைய தாரமாகக் கொண்டேன். ஓ ஆயிரங் கண்ணனே! நீ அரசனுயிருந்தால் உன்னிஷ்டப்படி செய் என்று கூறுவாயென்ன, தூதன்கேட்டு வேறு சொல்ல வறியாது இந்திர னிடஞ் சென்று சந்திரன் கூறியவாறே கூறினன். (55–61)

இந்திரன் கண்சிவந்து பெருமூச்செறிந்து தன் சேனையுடன் யுத்தஞ் செய்யத் தலைப்பட்டனன். அத்தருணத்தில் அசுர குருவாகிய சுக்ராசாரி தன் பகைவராகிய தேவ குருவுக்கும் சந்திரனுக்கும் நேர்ந்திருக்கும் விரோதத்தைக்கர்ண பரம்பரையாகக் கேட்டுச் சந்திரனிடஞ் சென்று, சந்திரா! நீ ஒருக்காலுந் தாரையை பிரகஸ்பதியினிடம் விடாதே. அவனுவது மற்றை யாராவது போருக்கு வருவாராயின் நான் வேண்டிய சகாயம் அசுரராலுஞ் அஸ்திரத்தினுலும் மந்திரத்தினுலுஞ் செய்கிறேன் என்று தைரியம் கூறினன். இச்செய்தியைத் தேவகுரு வறிந்து ஹே சங்கரா! எனக்கு நீதான் துணை. உன்னையன்றி வேறு துணையில்லை என்று பிரார்த்தித்த காலத்தில், சங்கரர், நானே உனக்குத் துணையா யிருக்கின்றேனென்று துணையாயினர். போர்க்கோலங்கொண்ட இந்திரன் சந்திரனிடஞ் செல்ல, அவ்விடத்தில் சுக்கிரனுடைய முயற்சியினுல் கூடிய யாவரும் வந்து சேர்ந்தனர். பின்னர் முன் தாரகாதிகளுக்குண்டான யுத்தம் போல் தேவாசுரர்களுக்குள் யுத்தம் மூண்டது. இந்த யுத்தம் இவ்வாறு நெடுநாளாய் நடந்து வருவதைப் பிரமன் கேட்டு இஃது வென்ன பாவம்? குருபத்தினிக்காக இப்படி யுத்தஞ் செய்வாரு முண்டா? இதனை நாம் சென்று சமாதானஞ் செய்து வருவோமென்றெண்ணி போர்க்களத்தில் வந்து சந்திரனைப் பார்த்து, ஓ சந்திரா! உன்னை மதியென்று வித்துவான்கள் கூறுகின்றுர்களே, இனி உன்னை மதிப்பார்களா? அடா மதிகெட்ட வனே! குரு பத்தினியைக் கொடுத்துவிடு; இல்லையாயின் விஷ்ணு மூர்த்தியைக் கொண்டு உன்னை நாசஞ்செய்து விடுவேனென்று

சந்திரனுக்குக் கூறி, அவனருகிலிருக்கும் சுக்கிரனைப் பார்த்து, உனக்கும் என்ன மதிகெட்டுப் போயிற்று? நீதி யில்லையா? பிறர் மனைவியை விரும்பினவர் இதுவரையில் யாராயினும் பிழைத்த துண்டா? புகழ் படைத்ததுண்டா? இச்சண்டையில் தலையிட்டுக் கொண்டனையே; இது உன் புகழுக்கு ஏதுவாகுமோ? உன் பேரிற் குறை கூறுவதனுற் பயனென்னை? இது சேர்க்கையினுல் வந்தகேடு. இனியாவது சண்டையை நிறுத்து என்றிடித்துச் சொல்லினன். அந்த நல்லுரையால் தான்கொண்ட துன்மதியை விட்டுச் சந்திரனைப் பார்த்து, இனி யான் யுத்தத்திற்குச் சகாயஞ் செய்ய மாட்டேன். தாரையை அனுப்பிவிடு; என் தந்தை மிகவுங் கோபிக் கின்றுர் என்றனன். அசுர குரு வசனத்தைக்கேட்டு சந்திரன் மிக வருத்தத்தோடு தாரையை கர்ப்பாதனத்தோடு குருவினிடம் போய்ச் சேரும்படி யனுப்பினன். அவள் தேவ குருவின் பால் வர அவரும் கர்ப்பவதியா யிருக்கின்றுளே என்பதையும் யோசியா மல் மகிழ்ந்தவரா யழைத்துக்கொண்டு தம்மிடஞ் சென்றனர். பிரமன் முதலிய தேவர்களும் அசுரர்களும் தங்கள் தங்களிடம் போய்ச் சேர்ந்தனர். (62–74)

தாரை கர்ப்பிணியானதால் சில நாட் சென்றபின் நல்ல திதி வார நக்ஷத்திரங்கூடிய சுப தினத்தில் அழகான புத்திரனைப் பெற்றனள். தேவ குருவும் தமக்குப் புத்திரப் பேறுண்டாயிற் றென்று ஆனந்த மடைந்தவராய் ஜாதகாதிகளை விதிப்படிச் செய்து முடித்தனர். இச்செய்தியைக் கேட்ட சந்திரன் ஓர் தூதனை யனுப்பி சந்திரன் வீரியத்திற்குப் பிறந்தவனை உன் மகனுக வெண்ணிக் கூத்தாடுகின்றனையே. அவன் உனக்குப் பிறந்தவனு, உனக்கு அறிவில்லையா என்று கேட்கும்படி செய்தனன். அப்படியே தூதனுஞ் சென்று கேட்க தேவகுரு இப்போது ஜனித்தவன் என்னைப்போல் இருப்பதனுல் என் மகனென்பதற்குச் சந்தேகமென்னை? இவனைப்பற்றிச் சந்திரனுக்கு யாதொரு சம்பந்தமு மில்லையென்று தூதனிடஞ் சொல்லியனுப்ப முன் போல, சந்திரனுக்கும் தேவ குருவுக்கும் கலகம் விளைந்து தேவர் களும் அசுரர்களும் போர் புரிய, பிரமன் வந்து சமாதானஞ் செய்து சண்டையை நிறுத்தி இதனுண்மையறியத் தாரையி னிடஞ் சென்று, ஓ தாரையே! இப்போது பிறந்திருக்கும் உன் புத்திரன் சந்திரனுக்குண்டானவனு? உன் நாயகருக்குண்டான வனு? சந்தேகமறச் சத்தியமாய்ச் சொல்வாயென்று கேட்கத் தாரை நாணத்தினுல் தலையிறங்கிக்கொண்டு, இவன் சந்திரனுக்கே பிறந் தவனென்று முற்றுங்கூற நாணமுற்றுச் சந்திரனுக்கே என்று குறிப்பிக்க, பிரமன் சந்திரனுக்குற்பத்தியானவ னென்று தெளிந் தனன். அப்புத்திரனுக்குச் சந்திரன் ஜாதகாதி கர்மங்களை விதி வத்தாய்ச் செய்து புதனென்று பெயரிட்டனன். தேவ குருவும் தம்மிடஞ் சென்று பத்னியுடன் வாழ்ந்திருந்தனர். (75–86)

ஓம் காமேஸ்வர ப்ராணநாட்யை நம:

## 12. புரூரவன் பிறப்பு

சூதமுனிவர் முனிவர்களைப் பார்த்து, ஓ, விரத சீலர்களே! இனிச் சுத்யும்னனென்னும் ராஜாதி ராஜன் பெண்ணுருவமடைந்து புதனோடு புணர்ந்து புரூரவனைப்பெற்ற வரலாற்றைக் கூறு கின்றேன் கேட்பீர்களாக என்று கூறுகின்றார்: சுத்யும்னனென்னும் அரசன் சத்தியவந்தனையும் தருமசீலனையும் யஜ்ஞ தானாதிகளைச் செய்கின்றவனையும் பஞ்சேந்திரியங்களை வென்ற வீரனையும் நல்ல உத்தமமான க்ஷத்திரியகுலத்திற் பிறந்தவனையும் இருந்தனன். இவன் ஓர் நாள் வேட்டையாடும் நிமித்தம் அதற்குரிய ஆயுதங் களோடு குதிரைமீதேறிக்கொண்டு சில மந்திரிகளைப் பின்றொடர்ந்து வரும்படியாகக் கட்டளையிட்டு அடர்ந்த வனஞ்சென்று அங்குள்ள மான், முயல், பன்றி, கட்கமிருகம், சிறுத்தை, சர்ப்பம், காட்டெருமை, கவரிமான், காட்டுக்கோழி முதலியவற்றை வேட்டையாடிக் கொன்றுவிட்டு மேருமலையின் தாழ்வரையிலுள்ள தும் அழகானதும் மந்தார விருக்ஷங்களால் சூழப்பட்டதும் அசோக விருக்ஷத்தின் கிளைகளினால் மறைக்கப்பட்டதும் தாழைகளால் வாசம் வீசப்பட்டதும் தேக்கு, பனை, தெங்கு, கதலி முதலிய பல விருக்ஷங்களால் அலங்கரிக்கப்பட்டதும் புன்னை, மாலதி (மனோ ரஞ்சிதம்), குந்தம் (குருக்கத்தி), மல்லிகை முதலிய கொடி முதலிய வைகளால் நிறைந்திருக்கப்பட்டதும் அன்னங்களால் சூழப் பட்டதும் மூங்கிற் புதரிலுண்டான நாதங்களால் சப்தமயமாகச் செய்யப்பட்டதும் வண்டுகளின் ஒலியால் திக்குகளில் சப்திக்கப் பட்டதும் எல்லாச் சுகங்களுக்கும் உற்பத்திஸ்தானமாய் விளங்கப் பட்டதுமான ஓர் உத்யான வனத்தைக்கண்டு பரிவாரத்தோடு சென்று விருக்ஷங்கள் மலர்ந்திருப்பதையும் குயில்கள் இனிமை யான வொலியோடு விளையாடிக் கொண்டிருப்பதையும் அரசன் கண்டு அதிக சந்தோஷத்தோடு உள்ளே பிரவேசித்த மாத்திரத்தில் ஸ்திரீரூபமடைந்தனன். அவனேறிவந்த குதிரையும் பெண் குதிரையாயிற்று. ராஜ ரிஷியான இவ்வரசன் தானும் தன் குதிரையும் பெண் வடிவமானதைக் கண்டு சிந்தாகுலமடைந்து இஃதுவென்ன ஆச்சரியம் என்று தன் மனதில் எட்டியமட்டும் ஆலோசித்தும் அதன் காரணம் ஒன்றும் புலப்படாமையால் துக்க சாகரத்தில் மூழ்கி நாணமடைந்து, யான் என் செய்வேன்? இந்த ஸ்திரீ ரூபத்தோடு எவ்வண்ணம் என் ராஜ்யத்திற்குச் சென்று அரசியல் நடத்துவேன்? என்னை யார் வஞ்சித்தனரோ தெரிய வில்லையே எனப் பலவாறாக நினைந்து ஏக்கமுற்று அவ்வனத் திலேயே இளையென்கிற பெயர்பெற்று அங்குமிங்குந் திரிந்து கொண்டு வாழ்ந்திருந்தனன். (1–11)

முனிவர்கள், சூத முனிவரே! நீர் கூறிய சுத்யும்னனென்னும் அரசனுக்கு ஸ்த்ரீரூபப்பிராப்தியைக் கேட்கக் கேட்க ஆச்சர்யகர

மாக இருக்கின்றது. அவ்வரசனுக்கு மனோகரமான அந்த உத்தியான வனத்தில் பிரவேசித்தவுடன் பெண்ணுருவம் வருவதற்குக் காரணமென்னை ? அவனவ்விடத்தில் யாது செய்தனன் ? இவைகளை விரிவாகச் சொல்லவேண்டுமென்று கேட்க, சூதர் கூறுகின்றார் : முனிவர்களே! ஒரு காலத்தில் சநகாதி முனிவர்கள் சிவபெருமானைக் காணும் விருப்பமுடையவர்களாய் ஆகாய மார்க்கமாக அந்த உத்தியான வனத்தை நோக்கி வரும்போது அவ்விடத்தில் சங்கரர் பார்வதி தேவியோடு உல்லாசமாய் கிரீடித்திருக்குஞ் சமயமாயிருந்தது. அதனை அறியாது இவர்கள் சென்றனராகையால் இவர்களுடைய சரீரகாந்தி வனமுற்றும் பரவியது. அவ்வொளியால் சிவபெருமானோடு கிரீடித்திருந்த அம்பிகை அவர்களைக் கண்டு நாணமுற்றுச் சங்கரருடைய மடியினின்றும் எழுந்து ஆடையின்றியிருந்த தமது அங்கத்தை ஆடையினால் மறைத்துக்கொண்டு அவ்விடத்தைவிட்டு மறைவான ஓரிடத்தில் தலை வணங்கினவராய் மிகவும் வெட்கத்தோடிருந்தனர். இதுகண்ட சநகாதியர்களும் உமா சங்கரர்களுடைய தபோவனஞ் சென்றனர். பின்னர் சங்கரர் உமாதேவியைப் பார்த்து, ஓ பிரியே ! நீ யாது காரணத்தால் லஜ்ஜாமுகியாயிருக்கின்றாய் ? உன்னிஷ்டப்படி கிரீடிப்பதற்கு இப்போது இடையூறென்ன வுண்டாயிற்று ? அதனைக் கூறுவையாயின் அவ்விடையூற்றைப் போக்கி உனக்குச் சுகமுண்டாகும்படிச் செய்கின்றேனென்ன, அம்பிகை, ஓ என் பிராணநாயகரே ! சநகாதியர் நாமிருவங் கிரீடித்திருக்குஞ் சமயத்தை நோக்காதவர்களாய் இவ்வனத்தின் வழியாக வந்தனர். அவர்கள் தேககாந்தி பரஞானவொளியாகையால் இவ்வனமுற்றும் பரவியது. யான் இவ்வொளிக்குக் காரணம் யாதென்று பார்க்க, அவர்களைக் கண்டேன். அதனால் நாணமுற்றிருக்கின்றேனே யன்றி வேறு காரணமின்றென்ன, சங்கரர் பார்வதி தேவியைப் பார்த்து, ஓ தேவி ! இன்று முதல் இவ்வனம் நம்மிருவருக்கும் கிரீடார்த்தமா யிருப்பதென்றறியாமல் எவனொருவன் பிரவேசிக்கின்றானோ அவன் பெண்ணுருவத்தையடையக் கடவனென்று சபித்தனர். ஓ முனிவர்களே ! இவ்வனம் இவ்வாறான சாபமேற்றிருப்பதைப் பலரும் அறியார். அறிந்த சிலர் இவ்வனத்திற் பிரவேசிப்பதில்லை. சுத்யுமனனும் இதனை அறியாதாகையால் அவ்வனத்திற் பிரவேசித்துப் பெண்ணுருவத்தையடைந்தனன். வனத்தின் செய்தி இங்ஙனமிருக்க, இனிப் புரூரவன் பிறந்த வரலாற்றைக் கூறுகின்றேன்: ஓ முனிவர்காள் ! சுத்யும்னன் பெண்ணுருவோடு அவ்வனத்தில் வாழ்ந்துகொண்டிருக்கும் பொழுது சந்திரன் புத்திரனான புதன் தேச சஞ்சாரஞ் செய்துகொண்டு அவ்வனத்தின் வழியாய்ப் போகுந் தருணத்தில் அதி சுந்தரியாய் விளங்கும் இளையைப் பார்த்து மோகித்தனன். இளையும் அவனைப் பார்த்து மோகித்து, ஓ சுந்தரா ! உன்னை யான் புருஷனாகக்கொண்டு சுகிக்கவெண்ணி யிருக்கிறேன் என்று கூறியவளவில் அவனும் மோகித்தவளைப் புணர்ந்து சென்றனன். பின் இளை என்னுமரசன் கர்ப்பவதியாய் புரூரவனைப்பெற்று

வளர்த்து அக்குழந்தையின் முகத்தை அடிக்கடி பார்த்துப் பார்த்துத் தீராத் துயரமடைந்து தன் குல குருவாகிய வசிட்டரை நினைத்தனன். அம்முனிவர் இவனடைந்திருக்குந் தீனதசையை ஞான திருஷ்டியால் உணர்ந்து கருணைகூர்ந்தவராய் இவனை ஸ்திரீ ரூபத்தினின்றும் மாற்றவேண்டி மகாதேவரை நோக்கித் தவம்புரிய அம் மகாதேவரெழுந்தருளி வந்து, உனக்கு வேண்டும் வரத்தைத் தருகின்றேன் கேளென்று கூறினர். வசிட்டர் பணிந்து, எம்பெருமானே! அடியேன்பால் கருணை வைத்திருப்பதுண்மையாயின் பெண்ணுருவடைந்திருக்கும் சுத்யும்னன் மீண்டும் புருஷரூபமடையக் கிருபை புரியவேண்டும் என்று பிரார்த்திக்க, சிவபெருமான் யாம் அவ்வனத்தில் யாவர் வரினும் ஸ்திரீ ரூபத்தையடையக் கடவரென்று சபித்திருக்கின்றோ மாகையால் அந்தச் சுத்யும்னன் மீண்டும் புருஷ ரூபமடைவதரிது. அவன் ஒரு மாதம் புருஷ ரூபமும் ஒரு மாதம் ஸ்திரீ ரூபமு மடையக்கடவனென்று அனுக்கிரகஞ் செய்து மறைந்தனர். வசிட்டரும் மகிழ்ந்திருக்குஞ் சமயத்தில் சுத்யும்னன் முன்போற் புருடவடிவங்கொண்டு தன் பட்டணத்திற்கு வந்து ஆசிரியராகிய வசிட்டரை வணங்கித் தன் வரலாற்றைச் சொல்லி இப்பெண்ணுருவம் மாறினமை யானறியேனென்ன, வசிட்டர் தாம் தவங்கிடந்து பெற்ற வரலாற்றைக் கூறினர். அது தவத்தாலென்று கேட்டு விடைபெற்றுப் பெண்ணுருவுடைய மாதத்தில் அந்தப் புரத்திலும் புருடவுருவுடைய மாதத்தில் அரசாட்சி நிமித்தம் கொலுமண்டபத்திலும் இருந்து நாட்கழித்து வந்தனன். இதனையறிந்து நகரவாசிகள் அவ்வரசனிடத்தில் வெறுப்புடையவர்களாய் அலக்ஷியஞ்செய்து வந்தனர். இவ்வாறு சிலகாலம் சென்றபின்னர் தன் புத்திரனாகிய புரூரவனுக்கு யௌவனதசை வர பட்டாபிஷேகஞ் செய்து அவனிடம் அரசாக்ஷியை யொப்புவித்து ஆரணியஞ்சென்று நாரத முனிவரிடத்தில் நவாக்ஷர மந்திரோபதேசம் பெற்று அம்மந்திரத்தை மனவுறுதியோடு அநேக வருடம் ஜெபித்து வந்தனன். அம்மந்திர தேவதையாகிய பராசக்தி சிம்ஹாரூடையாய்ப் பிரசன்னமாயினள். சுத்யும்னன் மிகுந்த பக்தியோடு துதிக்கலாயினன் : (12–40)

திவ்யஞ்சதே பகவதி பிரதிதம் ஸ்ரூபம் திருஷ்டம் மயாஸகலலோக ஹிதாமரூபம், வந்தே த்வதங்க்ரி கமலம் ஸுரசங்க ஸேவ்யம் காமப்ரதம் ஜநநிசாபி விமுக்திதஞ்ச. (41) கோவேத்தி தேம்ப புவிமர்த்ய தநுர்நிகாமம் முஹ்யந்தி யத்ரமுநயஸ்ச ஸுராஸ்சஸர்வே, ஐஸ்வர்யமேததகிலம் க்ருபணே தயாஞ்ச திருஷ்டேவதேவி ஸகலம் கிலவிஸ்மயோமே. (42) சம்புர்ஹரி: கமலஜோமகவாரவிஸ்ச வித்தேசவந்ஹி வ்ருணு: பவநஸ்சஸோம:, ஜாநந்தி நைவ வஸவோபி ஹிதேப்ரபாவம் புத்யேத்கதம் தவகுணநகுணே மநுஷ்ய:. (43) ஜநாதிவிஷ்ணு ரமித த்யுதிரம்ப ஸாக்ஷாத் த்வாம் ஸாத்விகீ முததிஜாம் ஸகலார்த்ததாஞ்ச, கோராஜஸீம் ஹரவுமாங்கில தாமஸீம் த்வாம் வேதாம்பிகே நதுபுந: கலுநிர்க்குணம் த்வாம். (44) க்வாஹம் ஸுமந்த மதிரப்ரதிம

ப்ரபாவ: க்வாயம் தவாதி நிபுணே மயி ஸம்ப்ரஸாத:, ஜாநே பவாநி சரிதம் கருணாஸமேதம் யத்ஸேவகாம்ஸ்ச தயஸே த்வயி பாவயுக்தான். (45) விருத்தஸ்த்வயா ஹரிரஸௌ வநஜேஶயாபி நைவாசரத் யபிமுதம் மதுஸம்ஹதேநஸ்ச, பாதௌ தவாதி புருஷ: கிலபாவகேந கிருத்வாகரோதிச கரேண சுபௌபவித்ரௌ. (46) வாஞ்சத்யஹோ ஹரிரஶோக யிவாதிகாமம் பாதாஹதிம் ப்ரமுதித: புருஷ: புராண:, தாம்த்வங் கரோஷி ருஷிதாப்ரண தம்சபாதே த்ருஷ்ட்வாபதிம் ஸகல தேவநுதம் ஸ்மரார்த்தம். (47) வக்ஷஸ்தலே வஸஸிதேவி ஸதைவதஸ்ய பர்யங்கவத்ஸம் சரிதே விபுலேதி ஶாந்தே, 'ஸௌதாமநீவ சுகநேஷம் விபூஷிதேச கிந்தேநவாஹந மஸௌஜகதீஶ்வரோபி. (48) த்வம் சேஜ்ஜஹாஸி மதுஸம்ஹதந மம்பகோபாந் நைவார்ச்சிதோபி ஸபவேத்கிலசக்தி ஹீந:, பிரத் யக்ஷமேவ புருஷம் ஸ்வஜநாஸ்த்ய ஜந்தி ஶாந்தம் ஶ்ரியோஜ்ஜி தமதீவ குணைர்வியுக்தம். (49) ப்ரஹ்மாதய: சுரகணா நதுகிம் யுவத்யோ யேத்வத்பதாம்புஜ மஹர்நிஜ மாஶ்ரயந்தி, மந்யேத் த்வயைவ விஹிதா: கலுதேபுமாம்ஸ: கிம்வர்ணயாமி தவசக்தி மநந்தவீர்யே. (50) த்வம்நாபுமாந்நசபுமாந்நிதிமேவி கல்போ யாகாஸி தேவி ஸகுணா நநு நிர்க்குணாவா, தாந்த்வாம் நமாமி ஸததம் கிலபாவயுக்தோ வாஞ்சாமிபக்தி மசலாம் த்வயிமாதரந்தே. (51)

ஹே ஜநநி! ஹே பகவதி! திவ்யமாயும் சர்வ வேத ப்ரசித்தி யாயும் சர்வலோக க்ஷேமகரமாயும் இருக்கிற உம்முடைய சொரூபமானது என்னாலே காணப்பட்ட படியினால் தேவ சமூகங் களாலே சேவிக்கப்படுகிறதாயும் போகமோக்ஷப் பிரதமாயும் விளங்கும் உம்முடைய சரணாரவிந்தத்தை நமஸ்கரிக்கின்றேன். (இதனால், என்னாலே காணக்கூடாத உன்னுடைய சொரூபம் உன் னுடைய அனுக்ரகத்தால் காணப்பெற்றேனாகையால் இதற்கு நானென்ன கைம்மாறு செய்வேன்? வேறொன்றறியேன். உன்திரு வடியை நமஸ்கரிக்கின்றதேயாம் என்றறிவித்ததென்க.) ஹே அம்பா! முனிவர்களும் தேவ சமூகங்களும் (என்னுடைய சம்பந்த மான) யாதொரு விஷயத்தையும் அறியக் கூடாமல் மயங்குகின்றார் கள். (இவர்களே மயங்குகின்றாரெனின்) பூமியில் எந்த மானிடன் உன்னுடைய சொரூப விசேஷத்தை யறிவான்? (அறியான், இஃது இங்ஙனமிருக்க) ஹே தேவி! தீனனாகிய என்னிடத்தில் ஒவ்வொன் றிலும் குறைவில்லாமல் அகண்டமாய் நிறைந்துள்ள ஐஶ்வர்யங் களையும், உம்முடைய தயையையும் பார்க்கின்றபொழுதே (எனக்கு) ஆச்சரியமல்லவா உண்டாகிறது. (இதனால் உன்னாலடையவேண் டிய மோக்ஷ ஐஶ்வர்யமும் போகைஶ்வர்யமும் அடைவதற்கு உன்னுடைய சொரூபத்தை யறிவதற்கின்றி மயங்குகின்றார்கள். பூமியிற் பிறந்த மானிடரிற் கடைப்பட்ட யான் ஒன்றிலுங் குறை வில்லாத அகண்டைஶ்வர்யமும், உன்னுடைய தயையும் கிடைக்கப் பெற்றதை எண்ணுங்கால் ஆச்சரியமன்றோ உண்டாகிறதென்று

கருணையை வியந்ததென்க.) சம்பு, நாராயணன், பிரமன், இந்திரன், சூரியன், குபேரன், அக்னி, வருணன், வாயு, சந்திரன், வசுக்கள் என்று சொல்லப்பட்ட இவர் முதலியோரே உன்னுடைய மகிமையை அறியமாட்டார்களென்றால் குண ஹீனனாகிய மானிடன் எப்படி யறிவான்? (இதனால் உலகினர் ஐச்வர்யம் பெறுதற்குரியார் இவரென்பார்க்கு ஐச்வர்யங் கொடாமலும், பெறுதற்கு உரியராகாரென்பதற்கு ஐச்வர்யங் கொடுத்ததுமாகிய உனது அனுக்கிரக சூழ்ச்சியை ஒருவருமறியாரென்று அனுக்கிரக மகிமையைக் கூறியதாம்) ஹே அம்பா! சர்வ வியாபியாயும், அளவிறந்த தேஜோரூபியாயும் இருக்கின்ற சங்கரர் உன்னைப் பிரத்யக்ஷமா யறிவார். (வேறொருவரும் அறியார்.) ஏனெனில், நீ ஸத்வகுண சம்பன்னையாகிய பாற்கடலிலுதித்த லக்ஷ்மி சொரூபியாயும், ரஜோகுண சம்பன்னையாகிய சகல வேதார்த்தமாய் விளங்கும் சரஸ்வதி சொரூபமாயும், தமோகுண சம்பன்னையாகிய துர்க்கா சொரூபமாயும் இருக்கின்றனை. (இம்முக்குண ரூபமல்லாத) நிர்க்குணையாயும் இருக்கின்றனை. (ஆகையால்) உன்னைச் சங்கரரன்றி எவரறிவார்? (இதனால் திரிகுண சக்தி சொரூபமா யெவராலும் அறியத்தக்கவள் போலிருக்கின்றாய். ஒருவராலும் அறியக்கூடாத நிர்க்குணையாயுமிருக்கின்றா யாகையால் உன்னை நிர்க்குணையே என்று கணிப்பார்க்குச் சகுணையாயும், சகுணையே யென்று கணிப்பார்க்கு நிர்க்குணையாயு மிருத்தலால் உன்னை எவரறிய வல்லா ரென்க.)

மந்தபுத்தியுள்ளவனாயும், அப்பிரசித்தனாயும் இருக்கின்ற நான் எவ்வளவு தன்மையுடையவன்; என்னிடத்தில் மிகவும் விசேஷித்திருக்கின்ற உனது நல்ல அனுக்ரஹம் எவ்வளவு மேம்பாடுடையது. ஹே அம்பா! தயையோடு கூடிய உன்னுடைய சரித்திரத்தை நானறிவேன். (என்னையெனில்) ஒருவன் எந்தக் காரணத்தினாலாவது உன்னிடத்தில் பக்தி பாவத்தோடுகூடியிருப்பானாயின் அவ்வடியானுக்கு அனுக்கிரகஞ்செய்யும் இயல்புடையவளல்லவா? (இதனால் யாவனாயினும் உன்னிடத்தில் பக்தி பாவத்தோடு கூடியிருப்பானாயின் அவனளவுநோக்காது அளவிறந்த அனுக்கிரகஞ் செய்யுங் கருணையுடையவள் நீ என்று குறித்ததாம்.) உன்னாலுண்டாக்கப்பட்ட பிரமன், மதுசூதனனாயும் ஆதிபுருஷனாயுமுள்ள விஷ்ணு, ருத்திரர் ஆகிய மூவரும் ஆனந்தத்தை யடையவில்லை; அதனால் அம்மூவரும் பரிசுத்தமாயும், சுபகரமாயுமுள்ள உன்னுடைய பாத கமலங்களைத் தங்களுடைய கரங்களால் அடிக்கடி நமஸ்கரிக்கின்றார்கள். (இதனால் மும்மூர்த்திகள் சிருஷ்டியாதி முத்தொழிலியற்றினாலும் அதனால் பிரம்மானந்த முண்டாகாமையால் அஃதுண்டாகும் பொருட்டு அவ்வானந்தத்திற் கிடனாகிய திருவடியைப் பிரார்த்திக்கின்றார்களென்று குறித்ததாம்.) ஆதிபுருஷராகிய நாராயணர் ஆனந்தத்தை யடைந்து சோகமில்லாதவர்போல் உன்னிடத்தில் சரணாகதியை அபேக்ஷிக்கிறார். சகல தேவதைகளாற் றுதிக்கப்பட்டவராயும், காமபீடிதராயும், பாதத்தில் வீழ்ந்து கிடக்கிற அந்த நாயகரைப் பார்த்து நீ அந்த சரணாகதியைக் கடூரமாகச்

செய்கிருய். (இதனுல் தேவியே நீ லக்ஷ்மி சொரூபியாய் நாராயண ருக்குப் பத்னியாக விருப்பது உண்மையானுல் அந்த நாராயணர் உன்னுடைய திருவடியில் அடைக்கலம்புக எண்ணுவாரா ? அப்படி யடைக்கலம் புகுந்த அவரை காமபீடிதராய் வீழ்ந்தாரென்று திருவுள்ளத்திலெண்ணித் திரஸ்கரிப்பாயா ? ஆகையால் நீ அவரால் ஆளப்பட்ட சக்தியன்று, அவரையாளும்சக்தி என்று குறித்ததாம்.) நல்ல லீலாவினோதமுடையவளே ! திவ்யாலங்காரமுடையவளே ! அதிசாந்தமுடையவளே ! ஹே அம்பா ! மஞ்சம்போல் விசால மாகிய அந்த நாராயணருடைய மார்பில் மேகத்திற் ருேன்றுகின்ற மின்னற்கொடிபோல வாசம் பண்ணுகிருய். இந்த நாராயணர் உனக்குவாகனமாக மாட்டாரா ? ஆவது ஓரருமையா ? (இதனுல் நீ நாராயணரது மார்பைக் கட்டிலாகக்கொண்டு மின்னல்போல் பிர காசிக்க அவர் உனக்குக் கட்டிலாகவிருப்பது ஆச்சரியமன்று. ஏனெனில் உன்னுலாளப்பட்டவரென்று முன்னரே குறித்திருக்கிறே னுகையால் உனக்கு அவர் கட்டிலாகவிருப்பது ஓரருமையன்றென்று குறித்ததாம்.) ஹே அம்பா ! ஒருக்கால், நீ கோபத்தினுலே மது ஸூதனராகிய நாராயணரை விட்டுவிலகுவையே யானுல் அந்த நாராயணர் யாவராலும் பூஜிக்கப்பட்டவரா யிருந்தாலும் (நிக்ர ஹானுக்கிரகம் செய்யும்) சக்தியில்லாதவராக ஆகமாட்டாரா ? (ஏனெனில்) உலகில் பிரத்யக்ஷமாய் ஒருவன் சாந்தனுயும், ஐஶ்வர்ய வந்தனுயும் இருந்தபோதிலும் குணஹீனனுயிருப்பானுயின் அவனை அவனுடைய ஜனங்கள் விட்டுவிடுகிருர்களல்லவா ? (இத ஞல் ஒருவனிடத்தில் குணம் நீங்குமாயின் அவனினத்தவர் அவனை விட்டு நீங்குவதுபோல நீ நாராயணனைவிட்டு நீங்குவா யாயின் உன் சக்தியாகிய நிக்ரகானுக்ரகமும் அப்பொழுதே நீங்குமென்று குறித்ததாம்.) பிரம்மா முதலாகிய யாதொரு தேவகணங்கள் உன்னுடைய பாதாரவிந்தத்தை இரவும் பகலும் ஆஶ்ரயிக்கின்ருர்களோ அவர்களெல்லாம் உன்னுலேயே சிருஷ்டிக் கப்பட்டவர்கள். ஸ்திரீகளோ என்ருல் அப்படியன்று. அனந்த சாமர்த்திய முடையவளே ! உன்னுடைய சக்தியை என்னவென்று கவனிக்கப்போகிறேன். (இதனுல் புருஷரெல்லாம் உன்னுல் சிருஷ் டிக்கப் பட்டவரானபடியினுல் உன்னை ஆஶ்ரயிக்கின்ருர்கள். ஸ்திரீகளெல்லாம் நீயாகவே யிருக்கின்றபடியால் அடிமைகளாக ஆஶ்ரயிக்கவில்லை என்று குறித்ததாம்.) நீ புருஷரூப மல்லாதவளா யுமில்லை புருடனுகவுமில்லை. (இவ்விஷயத்தில்) பிரேமையுண்டா கிறது. ஹே தேவி ! (நீ ஆணே பெண்ணே) ஸகுணையோ நிர்க் குணையோ, எவ்வண்ணமிருந்தாலும் இருப்பாயாக ; ஒரு வண்ண முஞ் சொல்லக்கூடாதிருக்கின்ற உன்னை (நான்) பக்திபாவத்தோடு கூடினவனுக எக்காலமும் நினைக்கின்றேன். (ஏனெனில்) ஹே அம்பா ! தேஹாந்தத்தில் உன்னிடத்தில் ஸ்திரமான பக்தியை அபேக்ஷிக்கின்றேன். (இதனுல் நீ ஸ்திரீரூபமாத்திரமா யிருக்கின்ரு யென்ருலோ புருடரூபமாகவுங் காணப்படுகிருயாகையால் நீ ஆணே பெண்ணே நிர்க்குணையோ ஸகுணையோ இன்னும் எத்திறத்

தனளோ யான் கணிக்கற்பாலனல்லன்; கணித்தற்கறிவில ளுயினும் உன்னை நமஸ்கரிக்கின்றேன். அதற்கு நீ எனக்கு மரணுந்தத்தில் உன் பக்தியைக் கொடு என்று குறித்ததாம்.) என்று தோத்திரஞ் செய்து தேவியினுடைய பாத கமலங்களைப் பணிந்தனன். தேவி இவனது தோத்திரத்திற்கு மகிழ்ந்து அவ்வரசனுக்குத் தன் சொரூபத்தில் நீங்காதிருக்கும் சாயுஜ்யபதமளித்தனள். பின்னர் சுத்யும்னன் அத்தேவியினுடைய அனுக்கிரஹத்தினுல் முனிவர்களுக்குங் கிடைத்தற்கரியதும், சிலாக்கியமானதும், நாசமில்லாததுமான பதத்தை யடைந்தனன். (42–53)

ஓம் காமேஶ்வர மநோஹராயை நம:

## 13. புரூரவ-ஊர்வசி சரிதம்

சூதர் கூறுகின்றார் : ஓ முனிகணங்காள் ! சுத்யும்னனென்னும் அரசன் சுவர்க்கலோகமடைந்தபின்னர் சற்குணனும் அழகிற் சிறந்தவனும், மன்னுயிர்களைக்காப்பதில் மாண்புடையவனும், எல்லா வரங்களையும் உணர்ந்தவனுமிருந்த புரூரவனென்னும் அரசன் தனது பிரதிஷ்டா நகரத்தை நீதியோடு அரசாண்டு வந்தனன். அவன் தனது ரகசியம் இத்தன்மைத்தென்று சத்துருக்களால் உணர வொட்டாமலும் சத்துருக்களது ரகசியம் தானெளிதாகவுணர்ந்தும் பிரபுத்துவ சக்தி உற்சாக சக்தி ஆகிய இவைகள் எக்காலத்தும் நீங்காது நிறையப்பெற்றதும், ஸாமபேத தான தண்டங்களாகிய நான்குபாயங்களால் யாவரையும் சுவாதீனப்படுத்தியும், நான்கு வருணத்தவரும் தங்கள் தங்களொழுக்கங்களிற் றவருது நடந்துவரவும் செங்கோல் செலுத்தி வந்தனன். இதுவன்றி அஶ்வமேதாதி அநேக யாகங்களையும் கோதான முதலிய அனேக தானங்களையும் மாருது செய்துவந்தனன். (1–5)

இந்தப் புரூரவ சக்கரவர்த்தியினுடைய பேரரசு பெருங்குணம் பெருநடக்கை பேராண்மை முதலியவைகளை இந்திர னுலகிலுள்ள ஊர்வசி கேள்வியுற்று அவனைத் தான் விவாகஞ் செய்துகொள்ள விரும்பினள். இதனையறிந்த பிரமன், தேவர்களைப் பார்த்து மோகிக்கவேண்டிய நீ மண்ணுலகிலுள்ள மானிடனிடத்தில் மோகங் கொண்டமையால் இனித்தேவலோகத்தில் வசிப்பதற்குரியளாகாய் ; ஆகையால் மண்ணுலகில் போகக்கடவாயென்று சபித்தனன். உடனே பூலோகம்வந்து தானெண்ணியவாறே புரூரவ சக்கரவர்த்தியைக் காந்தருவ விவாகத்தால்கூடிக் கூறுகின்றுள் : ஓ அரசனே ! என்னை நீர் ஒருநாளும் மறவாமல் ரக்ஷிக்க வேண்டும். இதுமுதல் நான் கொடுக்கும் நெய்யைத் தினந்தோறும் புசித்து வரவேண்டும். வேறுபோஜன மொன்றையுங் கொள்ளக்கூடாது. என்னிடமிருக்கும் உரணங்களை உம்மிடங் கொடுக்கின்றேன். இதைக் கள்வரால் களவு போகாவண்ணம் பாதுகாத்தல்வேண்டும். நீர் நிர்வாணியா யிருக்கும்போதும் வேறு ஸ்திரீயோடு சங்கமஞ்செய்யும்போதும் உம்மைப்

பாரேன். யானிப்போது குறிப்பிட்ட விஷயங்களைத் தவருது நடத்துவீராகில் உம்மிடத்தில் மாருத நேசமுடையவளாயிருப்பேன். இவைகளிலொன்று தவறினும் நானும்மை விட்டுப்போய் விடுவேன். இது சத்தியம். அரசனே! இதற்கு நீரென்ன சொல்லுகிறீர் என்று கேட்டனள். அரசன் அதற்கிணங்கி யுறுதி மொழி கூறி அவளோடு வாழ்ந்திருந்தனன். இவளுடைய மோகத்திஞல் தான் நடத்தவேண்டிய அரசநீதி முதலிய யாவையுங் கைவிட்டு ஒருவரு மறியாமல் அநேக வருடகாலமாய் ஊர்வசியோடு ஒன்றுபட்ட மனமுடையஞய் ரமித்துப் போகித்துவந்தனன். அவளை விட்டு ஒரு கணமேனும் பிரிந்தவனன்று. எப்போதும் உல்லாசமாய் விளையாடிக்கொண்டே இருந்தனன். ஊர்வசியும் அரசனிடத்தில் மிக்க அன்புவைத்து அவனுக்காசை காட்டித் தானும் இன்புற்றிருந்தனள். (6-13)

இவ்வாறு அநேக காலமாய் பூலோகத்திற்ருனே இருந்துவிட்டமையால் இந்திரன் தன் சபைக்கு ஊர்வசியில்லாக் குறையைப்பார்த்து கந்தருவர்களையழைத்துக் கூறுகின்ருன்: ஓ கந்தருவர்களே! சிலநாளாய் ஊர்வசி இங்குவராத காரணமென்ன? நீங்களனைவரு மொன்றுகூடி எவ்விதத்திலாவது அவளை யழைத்து வரவேண்டும். ஆனல் அவள் தேவலோகத்திலிருப்பதாகக் காண வில்லை; பூலோகத்தில் புரூரவ சக்கரவர்த்தியின் அந்தப்புரத்திலிருப்பதாகத் தெரிகிறது. அந்த அந்தப்புரத்தினின்றுஞ் சமய மறிந்து வெளிப்படுத்திக்கொண்டு வரவேண்டும். ஊர்வசியில்லாமல் என் சபை சிறிதேனும் பிரகாசிக்கவில்லை. இவளுக்குப் பிராணனைப்போன்ற வுரணங்களைத் தக்க முயற்சியிஞல் கைக்கொள்வீராயின் அவள் வந்து சேருவளென்று கட்டளையிட்டனுப்பினன். (14–16)

கந்தருவர் அந்தகாரமான (இருள்சூழுஞ்) சமயம் பார்த்து புரூரவனுடைய அந்தப்புரஞ்சென்று அந்த வுரணங்களைக் கவர்ந்து கொண்டு ஆகாயவழியாகச் செல்லுங்கால் அவைகள் சப்தித்தன. அதைக்கேட்ட ஊர்வசி நித்திரை தெளிந்து கந்தருவரால் உரணம் போகின்றமையையறிந்து அரசனிடத்தில் அதிக கோபங்கொண்டு அரசனைக் கூவி, ஓ அரசனே! இனி உன்னை விட்டுபோவதற்குக் காலம் வந்துவிட்டதே! இப்படி வருமென்று கூறி உன்னிடத்தில் உறுதிமொழி கேட்டிருந்தேனே! அதனை நீ மறந்தனையோ! யான் உன் உறுதிமொழியைக் கேட்டுக் கெட்டுப் போனேனே! உன்னிடத்தில் அன்பு பாராட்டியது வீணுயிற்றே! என் உரணங்களையும் உன்னுலிழக்கப் பெற்றேனே! அவைகளைக் கள்வரைப்போலே கந்தர்வர்கள் கொண்டுபோகின்ருர்களே! அவை எனக்குப் புத்ரனுக்குச் சமானமாயிருப்ப தென்றறியாயா? நீ எந்த ஸ்திரீயோடு தூங்கிக்கொண் டிருக்கின்றனையோ? நீ எனக்குக் கொடுமையான புருஷனுயினையே! உன்னைப்பதியாக அடைந்து வீணுய்க் கெட்டுப் போனேனே! நீ புருஷகோடியிற் சேர்ந்தவன்ருே? உன்னிடம் சௌரியங் கிடையாதா? மானமென்பதை அடியோடு விட்டு

விட்டனையா? என்று பலவாருய்க் கூக்குரலிட்டு அழுதனள். அரசன் ஊர்வசியின் கோபவார்த்தையையும் அறியாமல் அப்படியே விரைவாயோடி வந்து அவளைப் பின்ருெடர்ந்தனன். அத்தருணத்தில் கந்தருவர் மாயையால் ஒரு மின்னலையுண்டாக்கினர். ஊர்வசி நிர்வாணியாயிருக்கும் அரசனைப் பார்த்து அளவிறந்த கோபங் கொண்டு அந்தப்புரத்தை விட்டுப்போயினள். (17–23)

கந்தருவரும் இவள் வருகின்ருளென்று தெரிந்து தாங்கள் கொண்டுவந்த உரணங்களை ராஜ மார்க்கத்தில் போட்டு விட்டுப் போயினர். அரசன் வழியில் வீழ்ந்துகிடக்கும் உரணங்களை எடுத்துக்கொண்டு வாட்டமுற்று ஊர்வசியைக்காணுமல் திகம்பரனுகவே வீடுவந்துசேர்ந்து அவளை நினைந்து நினைந்து, அவள் நம்மைப் பிரிபவளா? பிரியாள். நாம் நிர்வாணியா யிருந்தமையினுற்ருன் முன் நமக்குச்சொல்லிய உறுதிமொழிப்படி பிரிந்து விட்டனள். ஆகையால் நாமிப்போது ஆடையுடையவனுகச் செல்வோமாயின் ஒருக்கால் நேரிடமாட்டாளா? எங்கே யிருப்பாளென்று தேடுவோம் என்றழுதுகொண்டே தேசமெல்லாம் சுற்றிக் கொண்டு சரீரம்நொந்து குருக்ஷேத்திரம் செல்லுங்கால் அங்கு ஊர்வசியைக்கண்டு தன் துயரமொழிந்து சந்தோஷ முடையவனுய்ச் சொல்லுகின்ருன்: (24–27)

ஓ மாதரசே! நில்லு, நில்லு. நீ என் மனைவியல்லவா? கற்பிழந்த துஷ்டையைப்போல் என்னைவிட்டுப்போவது நீதியல்லவே. நானுனக்கு மனப்பூர்த்தியாக ஒரு பிழையையுஞ் செய்ததில்லையே. எப்போதும் உனக்கு வசப்பட்டவனுகவே யிருந்தேனே. உன்னைப்பார்க்கவே இப்பூவுலக முற்றிலுஞ் சுற்றி வந்தேனேயன்றி பூப்பிரதக்ஷிணஞ் செய்தவனன்றே. இங்குவந்த எனக்கு ஏதோ தெய்வச்செயலால் நீ நேரிட்டும் என்னை விட்டுப்போவதற்கே எத்தனஞ் செய்கின்றனையே. அந்தோ! அந்தோ! நீ போவையாகில் என் பிராணனை வைத்திருப்பேனு, இவ்விடத்திலேயே போக்கிவிடுவேன். அப்பொழுது உன் நிமித்தமா யிறந்துபோன என் சரீரத்தை கழுகுகளும், காக்கைகளும் பிடுங்கித் தின்றுவிடும்; அந்தப் பழியை நீ யடைவாய். அது உன்னை விட்டுப் போகாது என்றனன். இவ்வாறு கூறிக்கூறி யழுதுகொண்டிருக்கும் அரசனைப் பார்த்து ஊர்வசி கூறுகின்ருள்: (28–30)

ஓ அரசனே! நீ என்ன அறிவிலியா? உன்னறிவு எங்குப் போயிற்று? பெண்களுக்குப் புருஷனிடத்தில் நேசமென்பது ஏது? அவர்கள் பாராட்டும் நேசம் புலி.மானிடத்தில் பாராட்டும் நேசத்திற் கொப்பானதல்லவா? இதனை நீ யறியாமற்போனது மிக்க ஆச்சரியமே. பெண்களிடத்திலும், கள்வரிடத்திலும் நல்ல குலத்துதித்த அரசன் நேசம் பாராட்டுதல் கூடாதென்பதல்லவோ நீதி. நீதி மறந்த உன்னைப் பார்த்தேன். இனி நீ என் முன் நிற்காதே. உன்னரண் மனைக்குச் செல்லக் கடவாய். வீணுய் வருந்துவதனுற் பயனென்னை, என்று பலவாருய் திக்கரித்துச் சொல்லினள். அரசனதனை யுணர்ந்து தெளியாது தாசியின் மோகவலையிற் சிக்கிக்

கொண்டு தீராத துக்கத்திலாழ்ந் திருந்தனன். முனிவர்களே! ஊர்வசியின் சரித்திரம் மிகப்பெரியது; ஈண்டுச்சுருக்கிக் கூறினேன். (31–34)

ஓம் காமேஸ்வர ப்ராண நாட்யை நம:

## 14. சுகோற்பத்தி

சூதர் கூறுகின்றார்: ஒ முனிவர்களே! புரூரவ சக்கரவர்த்தி யைத் துயரத்திலாழ்த்திய ஊர்வசி என்னும் வேசி வியாசராச்சிரமஞ் சென்று கூக்குரலிட்டு அழுதுகொண்டிருந்தனள். வியாச முனிவர் அவளைப்பார்த்து, இக்கன்னிகை தேவகன்னியாயிருத்தல் வேண்டும். இவளை நாம் அங்கீகரிப்பது தகுதியன்று; இவளை விடுவதுங் குணமன்று; இதற்கென் செய்வேன், என்றிவ்வாறு சிந்தித்திருக்குந் தருணத்தில், நிவர்த்தி செய்துகொள்ளலாமென் றெண்ணி அவள் (சுக) கிளி ரூபங்கொண்டு அதிகபக்தியோடு சிங்காரமாய் அங்குமிங்கும் உலாவினள். அதைக்கண்ட வியாசர் வியப்படைந்து காமமீதூர்ந்து மயிர்ப்புளகங்கொண்டு மனங் காம வழியிற்செல்ல அதைத் தன்னறிவாற் கூடியவளவில் உள்ளடக்கி யும் தன்னுளடங்காமல் அவளுள்ளொடுங்கி மோகவலையிற் சிக்கிக் கொண்டுழலும்போது தாம்செய்யத் தகுவதாகிய அக்னி காரியத் தைச் செய்யவேண்டுமென்கிற அறிவு தோன்றி அரணியில் மத்தைப் பூட்டி அக்னியை வெளிப்படுத்த விடாது கடையுங்காலத்தில் இவரது வீர்யமானது அந்த அரணியில் சிதறியது. சிதறியதனால் அக்னிக்கு அநுசிதமுண்டாயிற்றென்று சிந்தித்து மீளவும் விடாது கடைந்துகொண்டிருந்தனர். (1–7)

அச்சமயத்தில் அவ்வரணியிலிருந்து இவரைப்போலுமோர் புத்திரன் தோன்றினன். புத்திரனைக் கண்ணுற்ற வியாசர் ஆனந்த மடைந்து அரணியிலுண்டான இவன் மகா பரிசுத்தன். இவனுற் பத்தி யாவராலும் வியக்கத்தக்கது, என்று நினைத்துக்கொண்டே அவ்வரணியினின்றும் அக்னியை வெளிப்படுத்தினர். அவ்வக்னி நெல் முதலிய அவிசுகளை யுட்கொண்டு மேலோங்கி எழுவதுபோல் அதிகமாய்ச் சுவாலித்து வலஞ்சுழித்தெழுந்தது. வியாசர் அதைப் பார்த்து அனுசிதமுண்டாயிற்றே என்றெண்ணிய ஐயத்தினின்று நீங்கி மிக்க ஆனந்தமடைந்து இது சிவபெருமான் தந்த வரத்தின் பெருமைதானே? இந்த அரணியிற்றோன்றிய தேஜோரூபமான புத்திரன் இரண்டாவது அக்னிபோற் சுவலித்துக் கொண்டிருக்கின் றனே; இவனல்லவோ புத்திரன் என வியப்புற்று அக்குழந்தையைத் தழுவிக் கையிலெடுத்துக்கொண்டு கங்கையில் ஸ்நானஞ்செய்து மீண்டும் தன்னாச்சிரமமடைந்து சுகரூபியான ஊர்வசியைக் கண்டு மோகங்கொள்ள இப்புத்திரன் உண்டானமையால் சாதகாதிகர்மங் களைச் செய்து சுகன் என்று பெயரிட்டனர். ஆகாயத்தினின்று புஷ்ப மாரி பொழிந்தது. தேவர்கள் துந்துபி முதலிய பஞ்சவாத்தியங்

களை முழக்கினர். தேவதாசிகள் நடித்தனர். கந்தருவர் பாடினர். நாரதர் முதலிய ரிஷிகள் ஆசீர்வதித்தனர். உலகத்திலுள்ளவர்க ளெல்லாம் ஆனந்தசாகரத்தில் மூழ்கினர். அத்தருணத்தில் ஆகாயத்தினின்றும் தண்டமும் கமண்டலமும் கிருஷ்ணுசனமும் வியாசருக்கருகில் வீழ்ந்தன. அதைச் சுகரெடுத்துத் தரித்துக் கொண்டனர். பின்னர் வியாசர் சுகருக்கு உபநயனஞ் செய்தனர். உடனே சுகர் அதிக தேஜஸுடன் வளர்ந்து வேதங்களையும் வேதாந்தங்களையும் தம் பிதாவைப்போலுங் கற்றுணர்ந்த வராயினர். (8–19)

வியாசர் சுகருடைய தீக்ஷண்ய புத்தியைக்கண்டு நமது குமார ஞகிய சுகமுனிவன் பிரமசரியாச்சிரமத்தையடைந்து குருகுல வாசஞ்செய்து ஸர்வசாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து பின்னர் இல்லற தருமத்தை வந்தடையவேண்டு மென்றெண்ணும் பொழுது பிரகஸ்பதி பகவான் அங்கு வந்தனர். அவரைக் கண்டவுடன் தமது ஞானபுத்திரனை அவரடிபணியச் செய்து அவர் பின் அனுப்பினர். சுகர், பிரகஸ்பதி பகவானை உபாத்தியாயராக வைத் துக்கொண்டு வேதவேதாந்தங்களையும், தருமசாஸ்திரங்களையும் நன்ருய்க் குருகுல வாசஞ்செய்து கற்றுணர்ந்து குருதக்ஷிணையுங் கொடுத்துத் திரும்பித் தன் தகப்பஞரிடம் வந்தனர். வியாசர், ஸர்வசாஸ்திர சம்பந்நஞன புத்திரனைக் கண்டதும் அன்போடெழுந் திருந்து விரைவா யாலிங்கனஞ்செய்து உச்சிமோந்து இனியமொழி கூறி, கல்விநலமுசாவி, தமது ஆச்சிரமத்திலேயே யிருக்கச் செய்து பின்னர் விவாகஞ் செய்விக்கவேண்டு மென்கிற எண்ண முடையவராய் ஒரு முனிகன்னிகையை விசாரித்து சுகரைப் பார்த் துக் கூறுகின்ருர்: ஓ! மேதாவி! நீ தர்ம சாஸ்திரம் முதலியவைகளை நன்ருய்க் கற்றுணர்ந்தவன். உனக்கு யான் அதிகமாய்ச் சொல்ல வேண்டுவதில்லை. நீ இப்போது நல்ல லக்ஷணமான கன்னிகையை விவாகஞ் செய்துகொண்டு கிருகஸ்தாச்சிரமிகள் செய்யவேண்டிய தேவயஜ்ஞம், பிதுர்யஜ்ஞம் முதலிய கர்மங்களை மனைவியுடன் செய்து பிதுர்க்கடனினின்றும் என்னை விமோசனம் செய்துவை. புத்திரனில்லாதவனுக்கு சுவர்க்கமில்லை யென்று தர்மசாஸ்திரம் கூறுகின்றமையால், நீ கிருகஸ்தாச்சிரமத்தை யடைந்து என்னைச் சுகிக்கச் செய்வாய். பிரமசரியத்தை நிறைவேற்றினது போல் கிருகஸ்தாச்சிரமத்தையும் நிறைவேற்றிவிட்டுப் பின்னர் தவம்புரியச் செல்வாய். யான் உன்னை புத்திரஞயடைவதற்கு அநேக காலம் தவம் புரிந்தேன். பின் நீ அயோநிஜஞகவும், மேதாவியாகவும், தேவதாரூபியாகவும் பிறந்தாய். உன் தந்தையான என்னை, கிருகஸ் தாச்சிரமமடைந்து காப்பாற்றுவாய் என்றனர். இவ்வாறு கூறிய இல்லற விருப்பமுடைய தந்தையைப் பார்த்து அதில் விருப்ப மில்லாத சுகர் கூறுகின்ருர்: (20–33)

ஓ மேதாவியான தர்மஜ்ஞரே! நீர் என்ன சொல்லுகின்றீர்? நான் உம்முடைய மகஞயினும் நன்மார்க்கத்தில் பிரவேசிக்கும்படிக் கட்டளையிட்டால் அந்தப்படி செய்வதற்கு அதிக விருப்பமுடையவ

ளுவேன். வேறு மார்க்கத்தைக் கூறுவீராயின் நானெப்படி விரும்பு வேன். வியாசர் கூறுகின்ருர் : ஓ குழந்தாய்! யான் நூறு வருடம் கோரமான தவம்புரிந்து அதிக கஷ்டத்துடன் சிவா ராதனையும் செய்து உன்னைப் புத்திரனுகப் பெற்றேன். ஆதலால் என்னிஷ்டத்துக்கு விரோதஞ் செய்யாதே. உனக்குப் பொருள் வேண்டுமாயின் அரசனை யாசித்து வேண்டிய பொருள் சம்பாதித் துக் கொடுக்கிறேன். அதனை வைத்துக்கொண்டு மனைவியோடு யௌவனத்தில் நல்ல சுகத்தையனுபவித்துக் கொண்டிருவென்று கூறினர். சுகர் கூறுகின்ருர் : ஓ பிதாவே! இம்மானிடவுலகத்தில் விசாரமற்ற சுகமென்பது ஏது? நீர் கூறிய சுகம், முன்னர் சுகம் போற்ருேன்றிப் பின்னர் ஆருத்துயரந் தருகின்றது. இப்படி துக்க பரம்பரைக்கிடமா யிருக்கிற இல்லறவாழ்க்கையை அறிவுடையோர் சுகமென்று கூருர். உம்முடைய சொற்படி ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொண்டால் அப்பெண்ணுக்கு யான் வசப்பட்டிருக்க வேண்டும். பிறருக்குட்பட்டிருக்கின்றவனுக்குச் சுகமென்பது உண்டாகுமா? உண்டாகிறதே யில்லை. அதிலும் ஸ்திரீ வசப்பட்ட வனுக்குச் சுகமுண்டாகிறதென்பது விந்தையினும் விந்தையே. அப்படி அறிவின்மையால் ஸ்திரீ வசப்பட்டவன் புத்திர பௌத்திரர் களாகிற இரும்பு விலங்குகளில் கட்டப்பட்டு ஒருநாளும் அவ்விலங்கி னின்றும் விடுபடுகிறதில்லை. இத்தேகம் மல மூத்ராதிகளால் செய்யப்பட்ட பிண்டமாயிருக்கின்றது. இது போலவே பெண்கள் தேகமுமிருக்கின்றது. இப்படிப்பட்ட சரீரத்தில் என்ன சுகமுண் டாகப் போகிறது? இதில் வித்வான் பிரீதிவைப்பதற்குச் சம்மதியான். ஓ பிதாவே! யான் யோனியிற் பிறவாதவன். அப் படிப்பட்ட எனக்கு இத்தகைய அற்ப விஷயங்களில் மனம் பிரவேசிக்கச் சம்மதியாது. ஆதலால், உம்முடைய சொல்லைக்கேட்டு மணம்புரிந்து இனி யோனியில் ஜனிக்கும்படியான காரியத்தைச் செய்யமாட்டேன். மலமூத்திரத்தில் சுகிக்கயான் விரும்பேன். அற்புத மான ஆத்மசுகத்தை யனுபவிப்பதற்கே என் விருப்பம். அந்தப்படி, ஆத்ம சுகத்தை யனுபவிப்பேனேயாயின், கர்ப்பவாசஞ் செய்து யோனிவாயிலாக ஜன்மமெடுக்குந் துக்கத்தை யனுபவிக்காமலிருப் பேன். யான் பிரதமத்தில் ஆத்ம சுகத்தைத் தரும்படியான வேத வேதாந்தங்களை விஸ்தாரமாய்க் குருவினிடத்தில் படித்தேன். இப் போது உம்மிடத்தில் கர்மமார்க்கப் பிரவிருத்திகளான இம்சையான பாடங்கள் படிக்கும்படி நேர்ந்தது. எனக்கு வாய்த்த பிதா குரு ஆகிய உங்களிருவரிடத்திலும் நன்மார்க்கத்தைக் காணேம். என்னுசிரியரோ, நீர் கூறிய இந்தச் சம்சாரசாகரத்தில் நன்ருய் முழுகிக்கிடக்கிருர். இஃது அஞ்ஞானமல்லவா? இப்படி அஞ்ஞானத் தால் கவரப்பட்ட பிரகஸ்பதி, என்னைக் கடைத்தேறச் செய்வதற்கு எப்படித் திறமைசாலியாவர்? ரோகத்தால் பீடிக்கப்பட்ட வைத்தியன் எப்படிப் பிறருக்கு ரோகசிகிச்சை செய்வதற்காளாவான்? ஆயினும் அவர் உம்மை நோக்க நல்லவரே. ஏனெனில் சம்சாரத்தில் மூழ்கினவராயிருந்தும் மோக்ஷமடைய விருப்ப

முடையவெனக்கு அதற்கேதுவான நிலேயைக் கூறிஞரேயன்றி உம்மைப்போல் கிருகஸ்த நிலேயைக் கூறியதில்லே. நீர் என் பிதாவாக விருந்துந் துன்பந்தரும் கிருகஸ்த தருமத்தை உபதேசிக்கின்றீர். இது பயனற்ற உபதேசம். எனக்குத் தத்வோபதேசஞ் செய்து சம்சாரமாகிய கொடிய பாம்பின்வாயிற் புகவொட்டாது காப்பது உமது கடமை. இக்கோரமான சம்சாரம் சக்கரம்போல் சுழன்றுகொண் டிருக்கின்றது. சூரிய னிரவிலும் பகலிலும் உழன்று வருகின்ருனே யன்றி இளேப்பாறுத லெப்படியில்லேயோ அப்படியே அச்சம்சார சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டவனுக்குச் சுகத்திற்கிடமேயில்லே. (34–46)

ஓ தந்தையே! விசாரிக்குமளவில் இதனுள் சுகமென்பது ஒரு சிறிதாயினுமிருக்கின்றதா? அமேத்யத்திற் கிருமியுழன்று சுகிப்பது போல் மாந்தர்களுக்கு இச்சம்சாரத்தில் சுகபுத்தியுண்டாகிறது. சம்சாரத்தில் அதிக ஆசை வைப்பவரெவர்களோ அவர்களேவிட மூடர் ஒருவருமில்லே. அப்படிப்பட்டவர் பன்றிக்கும் நாய்க்கும் சமானமானவர். பெருதற்கருமையான மானிட சரீரத்தை யெடுத்து வேதசாஸ்திரங்களேயும் விதிப்படி அத்யயனஞ்செய்து சம்சாரமாகிய பாசத்தாற் கட்டுப்பட்டால் அந்தக் கட்டை விடுவிப்பதற்கு எவன் சாமர்த்தியமுடையவன்? புத்திரனிடத்திலும், தாரத்தினிடத்திலும், வீட்டினிடத்திலும், மிக்க ஆவல்கொண்ட பண்டிதன் இந்த வுலகத்தைவிட மேலான பரலோகமொன்றுமில்லே யென்று மதி மயங்கிக் கூறுகின்ருன். அவன் விசேஷமாய்க் கற்றுணர்ந்தவனுயினும் அவன் அறிவில்லாதவனே. எந்த மனிதன் பெண்களாகிற மாயவலேயினுற் கட்டப்படவில்லேயோ அவனே வித்வான், அவனே மேதாவி, சாஸ்திர பாரங்கதன் (எல்லேயுணர்ந்தவன்.) வேதத்தை யுருவேத்திப் பாடம்பண்ணுவதனுலென்ன பயன்? சம்சாரபந்தத்தினின்றும் விடும்படியான பாடத்தைப் படிப்பதுதான் பயன். பாசத்திஞற் கிரஹித்துக் கட்டியிருக்கச் செய்வது எதுவோ அது கிருகஸ்தமெனப் பெயர்பெறும். அதனேயுடையவன் கிருகஸ்தன். அப்படிப்பட்ட பந்தத்தில் என்னேப் பிரவேசித்துச் சுகிக்கும்படி உபதேசிக்கின்றீரே. அதனுள் உண்மையில் சுகமிருக்கின்றதா? ஆகையால் அதனுள் பிரவேசிப்பதற்கு மிகவும் பயப்படுகிறேன். எவர்கள் வேத சாஸ்திரங்களேக் கற்றுணர்ந்தும் மந்தமதிகளா யிருக்கின்ருர்களோ அவர்கள் விணேயினுல் கவரப்பட்டவர்களே. அவர்கள் அந்த கிருகஸ்தாச்சிரமத்தையடைந்து மீண்டும் மீண்டும் ஜன்மமெடுப்பதற்கு வித்தை நாட்டிப் பந்தப்பட்டிருப்பவர் இவ்வாறு. கூறிய சுகரைப் பார்த்து வியாசர் கூறுகின்ருர்: (47–54)

ஓ குழந்தாய்! நீ கிருகஸ்தாச்சிரமத்தை மந்தமதிகளுக்கும், விணேயினுல் கவரப்பட்டவர்களுக்கும், ஆலயமென்று கூறினுயல்லவா? அதை அப்படிக் கூறுவதற்குக் காரணமொன்றுமில்லே. ஒருவன் கிருகஸ்தாச்சிரமத்திலிருந்தும் மனதில் பற்றில்லாமலிருப்பானுனல் முக்தனுவான். அன்றி அவ்வாச்சிரமத்தில் நியாய வழியாய்ப் பொருளேச் சம்பாதித்து வேதத்தில் விதித்த கர்மங்களேக்

கிரமப்படிச் செய்யுஞ் சிரத்தையுடையவனும், சத்தியசந்தனு யும், ஆசாரசீலமுடையவனும் இருப்பானாயின் அவன் அப்பந் தத்தினின்றும் விடுபடுவானென்பதில் தடையேதுமில்லை. அன்றி, பிரம்மசாரியும் வானப்பிரஸ்தனும் சந்நியாசியும், மத்தியான வேளை யில் கிருகஸ்தரை நாடிச் சீவிக்கின்றனர்கள். நீதியிலொழுகும் கிரு கஸ்தாச்சிரமிகளும் தங்கள் வீட்டைநாடி வந்த மேற்கூறிய மூன் றாச்சிரமிகளையும், பக்தியினாலேயும், அன்னதானத்தினாலேயும் இனிய சொற்களினாலேயு முபசரிக்கின்றனர்கள். ஆதலால் இல்லறத் தைவிட மேலான தருமமொன்றுமில்லை. அப்படி யிருப்பதாய்ச் சொல்லப்படவுமில்லை. அக்காரணம்பற்றியே, வசிட்டர் முதலிய பெரியோர்களினாலேயும், ஞானிகளினாலேயும் அஃது அங்கீகரிக்கப் பட்டது. வேதத்தில் விதித்த கர்மத்தை வழுவாமற் செய்கின்ற வனுக்குச் சாதிக்கக்கூடாதது எது விருக்கிறது? சுவர்க்க மோக்ஷமோ, நல்ல ஜன்மமோ இவற்றுள் எதனை விரும்புகின்றனோ அது வருகின்றது. தர்மவித்துக்கள் கூறும் விதி என்னவெனில், ஒவ்வொரு ஆச்சிரமத்தையுந் தவறாமல் கொள்ளவேண்டுமென்பதே யாகும். (55–61)

ஆதலால், கிருகஸ்தாச்சிரமத்தை யடைந்து, தேவர்களையும், பிதுர்க்களையும், மானிடர்களையும், விதிப்படி திருப்தியடையச் செய் யும்படியான கர்மங்களைச் சோம்பலின்றிச் செய்து, உன் மனைவி யோடுகூடி, சத்புத்திரனைப் பெற்று, அவனை கிருகஸ்தாச்சிரமத்தில் சேர்த்துவிட்டுப் பிறகு அந்த ஆச்சிரமத்தைப் பரிகரித்து, வானப் பிரஸ்தாச்சிரமத்தையடைந்து, அதற்குக்கூறிய விரதத்தையனுட் டித்து, அந்த ஆச்சிரமத்திற் சிலகாலமிருந்து, பின்னர் சந்நியாச ஆச்சிரமத்தை யடைவாய். ஹே புத்திரா! இந்திரியங்களையும் மன சையும் வெல்வது இல்லறத்திலீடுபடாதவனுக்கு முடியாது. ஆத லால் அவைகளை வெல்வதற்காகவே கலியாணஞ் செய்துகொண்டு, அவைகளைவென்று பின்னர் வார்த்திகதசையில் தவம்புரியவேண்டு மென்பது, சாஸ்திரங்களிற் கூறப்படும் முடிவு. ஓ புத்திரனே! விச்வாமித்திர முனிவர், மூவாயிரவருடம் அகோராத்திரமாய்க் கோரமான தவம் புரிபவராயிருந்தும் மேனகையைக் கண்டவுடன் மோகித்து அவ்வனத்திலேயே சகுந்தலையென்னும் புத்திரியைப் பெற்றனரல்லவா? எனக்குப் பிதாவான பராசரர், வலைஞர்மகளாகிய மச்சகந்தியைக்கண்டு மோகித்து அப்பெண்ணை சுவாதீனப்படுத் திக்கொண்டு ஓடத்திலேயேயிருந்தனர். பிரமன் தன் புத்திரியினி டத்தில் மோகங்கொண்டோடித் திரிந்து மூர்ச்சையடைந்து பின்னர் சிவபெருமானால் தெளிவடைந்தனன். ஆதலால் இவைகளையெல் லாம் நீ நன்று யாலோசித்து என் சொற்படி நல்ல குலத்திலுதித்த கன்னிகையை மணம்புரிந்து வேத சம்பந்தமான கர்மங்களைச் செய்வாயாக என்றனர். (62–70)

ஓம் காமேசோத்ஸங்கவாஸிந்யை நம:

## 15. சுகர் வைராக்கியம்

சுகர், தம் பிதாவாகிய வியாசரைப் பார்த்துக் கூறுகின்றார்: ஓ தந்தையே! யான் எப்போதும் எல்லா மனிதர்களுக்கும் துயரத்தைத் தருவதாயும், மிருகத்தைப் பந்திக்கின்ற வலைபோன்றதாயுமுள்ள கிருகஸ்தாச்சிரமத்தில் ஒருநாளும் பிரவேசிக்கமாட்டேன். பொருளிலாசையுடைய மனிதர்களுக்குச் சுகமென்பது ஏது? பொருளில்லாதவனைப் பந்துக்களெப்போதும் நெருங்கிப்பீடிப்பார்கள். சந்நியாசியானவன், எல்லாவற்றையும் விட்டொழிந்தமையால், அவனைப்போல் சுகி இந்திரனுமாகான். இந்தச் சம்சார பந்தத்திலிருப்பவன் திரளான பொருள் நிறைந்திருந்தாலும் மேன்மேலும் பொருள் விருத்தியடைய வேண்டுமென்றே விரும்புவானேயன்றித் திருப்தியடைகிறதில்லை. இந்திரன் மூன்றுலகங்களும் தன் சுவாதீனத்திலிருக்கும்படியான சம்பத்தைப் பெற்றிருந்தும் பிறர் கோரமான தவம் புரிவாராயின் தனது இந்திர பட்டம் போய்விடுமே என்கிற அச்சத்தால் அவர்களுக்கு அளவிறந்த இடையூறுகளைச் செய்கின்றான். இது சம்சார பாசத்திலுண்டான துக்கமல்லவா? இதுபோலவே பிரமனும் சரஸ்வதியை மணம்புரிந்து, ஒரு சுகத்தையு மடைந்தவனன்று. விஷ்ணுமூர்த்தி லக்ஷ்மியையடைந்ததனால் என்ன சுகத்தைப் பெற்றார்? அந்த விஷ்ணுமூர்த்தி, அசுரர்களோடு போர்புரியும் ஒவ்வொரு சமயத்திலும் லக்ஷ்மியை எந்த அசுரனாவது அபகரித்துக்கொண்டு போய்விடுவானோ என்பதாதி துக்கங்களை யனுபவித்துக்கொண்டேயிருக்கின்றார். அன்றி, அசுரர்களைச் ஜயிப்பதற்காகக் கோரமான தவங்களைச்செய்து, சொல்லமுடியாத கஷ்டங்களையெல்லாம் அனுபவிக்கின்றார். விஷ்ணுவுக்கு லக்ஷ்மி மனைவியாயிருப்பதால், அவருக்கிருக்கும் சம்பத்துக்களவில்லை. அப்படிப்பட்ட திரளான சம்பத்திருந்தும் நல்ல சுகத்தை யனுபவிக்க முடியவில்லை. இவர்களே துக்கத்தை யனுபவிப்பராயின், சாமான்யர்களான தனஹீனர்களுக்கு, இல்லறத்தில் சுகம் எப்படி யுண்டாகும்? ஓ தந்தையே! யான், உமது ரேதஸுக்கு ஜனித்தேனென்பதை நன்றாயறிவேன். அக்காரணத்தையே முக்கியமாக வைத்துக்கொண்டு என்னைக் கோரமான சம்சார வலையில் சிக்கிக்கொள்ளும்படிக் கட்டளையிடுகின்றீர். (1–9)

ஜன்மமெடுப்பதே துக்கம். எடுத்துவிட்டால், பின்னர் கிழத்தன்மை வந்துவிடுமே என்பதில் துக்கம். அது வந்த பின்னர் மரணத்தில் துக்கம். அதுவும் சமீபித்தபொழுது, புனர்ஜன்மம் வருமென்கிற துக்கம். அது வருங்கால் மலமூத்திரமயமான கர்ப்ப வாசத்தில் அதிக துக்கம். அதன் பின்னர் நமக்கு எல்லா ஐச்வர்யங்களும் நிரம்ப இருக்கவேணுமென்பதில் துக்கம். அஃது இல்லாவிட்டால், யாகம்செய்து வாங்கிய பொருளினால் பிழைப்பது புத்தி

பலமில்லாதவர் செய்யத்தக்க சீவனமென்கிற துக்கம். பிறர் வாழ்ந்திருப்பதைப் பார்க்குந்தோறும் தனக்கில்லையே என்கிற துக்கம். இவையன்றி யமபாதையை நினைக்கும் நிமிஷந்தோறுமுண்டாகுந் துக்கம். இத்துக்கங்கள் நீங்கத்தக்கதன்று. கிருகஸ்தாச்சிரமத்தில் புகுந்தவன் சகலசாஸ்திரங்களுணர்ந்தவனுனாலும் யாவருக்கும் இஷ்டனுனாலும், பொருளில்லாதவனுயிருப்பானுயின், தனிகர்களுடைய வீடுதோறுஞ்சென்று தலையிறங்கி இச்சகம்பாடி யாசிக்க வேண்டியேவரும். ஆகையாலிதனைவிட்டு ஏகாகியாயிருப்பனுயின், வயிற்றைப்போஷிக்க வேண்டியதைப்பற்றி யோசிக்கவேண்டியதில்லை. ஏனென்றால், ஆரணியம் விஸ்தாரமாயிருக்கின்றது. அதில் கனிவர்க்கங்களும், இலை காய் கிழங்குகளும் ஏராளமாக விருக்கின்றன. எதனுலாவது தன் வயிறு நிறையும்படிச் செய்துகொள்ளலாம். மனைவி புத்திரபௌத்திரர் சகோதரர் பந்துவர்க்கங்கள் அதிகமாக இருக்குமாயின் இவர்களுடைய வயிற்றை நிரப்புவதற்கு அதிகமாக முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இது துக்கத்திலும் பெருந்துக்கந்தானே. இப்படியிருக்க, இதைச் சுகமென்று எப்படிக் கூறலாம்? ஆதலால் எனக்கு யோகசாஸ்திரத்தையும், ஸன்மார்க்கத்தையும் எடுத்துச் சொல்லும். இதுதான் சொல்லுதற்கரிதான சுகத்தைத் தரத்தக்கது. கர்மகாண்டத்தைப்பற்றி, எவ்வளவு புகழ்ந்துரைப்பினும் அதில் என் மனம் விருப்பங்கொள்ளாது. இனி, நீர் கர்மமூலமாகிய ஆகாமிய-சஞ்சித-ப்பிராரப்த்தங்களான மூன்றையும் ஒழிக்குமுறையையே விதிப்படிக் கூறும். அட்டையைப்போல் எப்போதும் புருஷர்களுடைய ரத்தத்தை ஸ்திரீகள் பானஞ்செய்கிறுர்களென்கிற விஷயத்தை மூடர்களறியாமல் அவர்களுடைய அங்கசேஷ்டைகளைக்கண்டு மோகிக்கிறுர்கள். ஸ்திரீகள் போகத்தினுல் பலத்தையும் செல்வத்தையும் சொற்சாதுர்யத்தினுல் மனத்தையும் அபகரிக்கிறுர்கள். ஸ்திரீயோடு சிநேகம் செய்கிறவன் எல்லா மகத்துவத்தையும் இழக்கின்றுன். ஆதலால் இதைவிடவேறு என்ன வைரி இருக்கின்றது? மூடன் நித்ராசுகத்தை இழப்பதற்காகவே மணம் புரிகிறுன். ஆனுல் அவன் அது கெடுகிறதென்பதனையறிகிறதில்லை. மாயையால் அவன் துக்கத்தைச் சுகமென்றெண்ணி மோசம் போகிறுன். (10–20)

இவ்வாறு சுகர் கூறிய சொற்களைக்கேட்ட வியாசர் அதிக துக்கத்தையடைந்து, கண்ணீர்சொரிந்து, வேர்வையரும்பி, இனி நான் என் செய்யப் போகின்றேனென்று சோகமாயினர். சுகர் தந்தையைப்பார்த்து நகைத்துக் கூறுகின்றுர்: ஆ! இஃது என்ன ஆச்சரியம். மாயையின்வலி மிகக்கொடியது, கொடியது! பண்டிதராகிய இவரும், மாயைக்குட்பட்டுத் துயரப்படுகின்றுரென்றெண்ணி, ஓ தந்தையே! நீர் பிரம்மசூத்திர முதலிய வேதாந்த சாத்திரங்களையியற்றினவர். எல்லா முணர்ந்தவர். உம்மிடத்தில் இக்கொடிய மாயையானது எப்படி வசிக்கிறதோ அறியேன். இதை யோசிக்குங்கால் அது கொடிதென்பது சொல்லாமலே யமையும். பண்டிதராகிய உம்மைக்கூட மோகிக்கச் செய்கிறதல்லவா? நீர்

வேதங்களையும் வரையறுத்தவர். புராணங்களையும் பாரதத்தையு மியற்றினவர். நீர் இப்படிப்பட்ட மோகத்தை யடைகிறீர். பிரம விஷ்ணு ருத்திராதிகளும் அந்த மாயைக்கு வசப்படுவாராயின் ஏனையரைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? மூன்றுலகத்தினும் மாயைக்குட்படாத மேதாவியர் எவரிருக்கின்றனர்? ஆகையால் மாயையின் வலி இவ்வளவென்று சொல்லவியலுமா? அதனது சௌரியம் எத்தகையதோ? இது தேவியினால் எப்படி உற்பத்தி செய்யப்பட்டதோ? இது மூன்றுலகத்தையும் எப்படி மோகிக்கச் செய்கின்றதோ? யானறியேன். சர்வஜ்ஞான ஈசுவரனும் இதை மாற்றுமலிருக்கின்றனரே. ஆகையால், அந்த மாயையை யாள் கின்ற தேவியை யான் சரணமடைகின்றேன். அவள் எனக் குத்தக்க ஞானோபதேசத்தைச் செய்தருளுவள். புராணிகர் வியாசரை விஷ்ணு அம்சமாகக் கூறுகின்றார். இவரும் மாயா சமுத்திரத்தில், மூழ்கிப்போன வோடத்தையுடைய வணிகர்போல மூழ்கித் தத்தளிக்கின்றனரே! கண்களில் பாமரஜனங்களைப்போல் தாரை தாரையாய் நீரைச் சொரிகின்றனரே! அந்தோ! இவர் கற்றுணர்ந்த அறிவால் மாயையை வெல்ல சாத்தியப்பட வில்லையே! இதன் வன்மையே வன்மை. இவர் யார்? யாம் யார்? நம்மைப்பற்றி இத்தகைய பிரமத்தையடைவானேன்? பஞ்சபூதங்களாலாக்கப்பட்ட தேகத்தில், தகப்பனென்றும், பிள்ளையென்றும் உண்டாகும்படியான பாசம் மாயையினாலன்றோ? இந்த மாயை மிகவலுவானதே. மகான் களையும் மோகிக்கச் செய்கிறதே. அந்தோ! இவர் இந்தத்தேக மாயைக்கு வசப்பட்டு வெட்கமின்றி யழுகின்றனரே! என்றிவ்வாறு சுகர் மனதில் ஆலோசித்துக்கொண்டு, எல்லாவற்றிற்குங் காரணை யாயும், இந்திராதிதேவர்களுக்கும், பிரமாதிகளுக்கும், மஹேஸ்வரி யாயுமிருக்கின்ற அம்பிகையை நன்றாய்த் தியானித்து, துயரக் கடலில் மூழ்கிக் கரை காணாது திகைத்துக் கொண்டிருக்கும் தந்தை யைப் பார்த்து, விவேகத்தோடு கூடிய வசனத்தைக் கூறத் தொடங்கினர் : (21-35)

ஓ பிதாவே! நீர் அறிவிலிகளுக்கும் அறிவை விளக்கும் போதகாசிரியரல்லவா? அத்தகைய நீர் துயரப்படுவானேன்? நீர் படுகிற துயரம் ஒன்றுமறியாத பிராகிருதருக்குண்டாகுந் துயரம் போலிருக்கின்றதே. யானிந்தச் ஜன்மத்திலுமக்குப் புத்திரனாகப் பிறந்தேன். இதற்கு முந்திய ஜனனத்தில் எவருக்குப் புத்திரனோ அறியேன். நீர் யார், யான் யார்? பரமாத்மாவினால் இத்தகைய பிரமையெல்லாங் கற்பிக்கப்பட்டு வருகின்றது. இனியாவது, மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு விழித்துப்பாரும். வீணான விஷயத்தில் துயரப்படும்படி மனதை விடாதேயும். இவையெல்லாம் மாயையின் கூற்றெனத் தெளிந்து துயரத்தை விட்டொழிப்பீராக. ஒருவனுக்குப் பசியுண்டாகுமாயின் அதற்கேற்ற ஆகாரத்தை யுட் கொண்டாற் றீருமேயன்றிப் புத்திரனைப் பார்ப்பதாற் றீருமா? தாகமெடுக்குங்கால் ஜலபானஞ் செய்தாற் றீருமேயன்றிப் புத்திர னைப் பார்ப்பதினாற் றீருமா? மூக்கு வாசனையினால் சுகிக்கின்றது.

செவி, இனியவோசையினால் சுகிக்கின்றது. ஸ்திரீசுகம், ஸ்திரீயினாலேயே யுண்டாக வேண்டும். யானோ பிள்ளை, என்னால் என்ன சுக முண்டாகும்? நான் என் செய்வேன்? அரிச்சந்திரன் செய்யத் தொடங்கிய வேள்விக்கு அஜீகர்த்தர் தன் புத்திரனை யாக பசுவாகத் திரளான திரவியத்துக்கு விற்று விட்டனர். ஆதலால், சுகங்களுக் கெல்லாம் சாதனமாயிருப்பது செல்வம். செல்வத்திற்றான் சுக மிருக்கின்றது. (36–42)

அப்படி உமக்குச் சுகம் வேண்டுமாயின் பொருளைச் சம்பாதியும்; யானோ புத்திரன். என்னாலெப்படிச் சுகமுண்டாகும்? ஓ தந்தையே! நீர் சிறந்தஞானியல்லவா? எனக்கு நல்ல ஞான முண்டாகும்படிச் செய்யும். இப்போது நீர் உத்தேசிப்பது மீண்டும் எனக்குக் கர்ப்பவாசமுண்டாகாமைக்கேயாக வேண்டும். கர்மபூமியான இவ்வுலகில் மானிட ஜன்மமெடுப்பது அருமையினும் அருமை. அதிலும் பிராமண ஜன்மம் எடுப்பது மிகவும் அரிது. அதிலும் உத்தம குலத்திலுதிப்பது அதனினுமரிது. அதிலும் எனக்கு மீண்டும் கர்ப்பவாச முண்டாகாமலிருக்க வேண்டுமென்கிற நிச்சய புத்தியுண்டானது எவ்வளவு அரிதானதோ அதனை நீரே அறிந்துகொள்ளும். நான் கட்டுண்டவ னேனென்கிற புத்தியானது என்னைவிட்டுச் சிறிதுமகலவில்லை. என்னைப்பற்றிய மாயையானது, ஜன்மஜன்மாந்தரங்களில் அளவிறந்த துன்பங்களை யனுபவிக்கச் செய்து, கிழத்தன்மையை யடைந்து இப்போது என்னைவிட்டு விலகிப்போயிற்று என்றனர். இவ்வாறு மீண்டும் கூறக்கேட்ட வியாசர், இவன் நல்ல பரிபாகியாயும், சந்நியாச ஆச்சிரமத்திலேயே அதிக ஊக்கமுடையவனாயு மிருக்கின்றான்; இனி இவனுக் கிரண்டாவது ஆச்சிரமத்தைப் பற்றி விசேடமாய்க் கூறுவதிற் பயனில்லையென நினைத்துச் சுகரைப் பார்த்துக் கூறுகின்றார்: (43–47)

புத்திரனே! யான் பாகவதமென்கிற சுருக்கமான புராண மொன்றியற்றியிருக்கின்றேன். அது, வேத சம்பந்தமானது. பன்னிரண்டு ஸ்கந்தங்களோடு கூடியது. ஸர்க்கம், பிரதி ஸர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சானு சரிதம் என்று கூறப்படும் ஐந்து லக்ஷணங்களோடு கூடியது. எல்லாப் புராணங்கட்கும் மகுடமாய் விளங்கத்தக்கது. இதைக்கேட்ட மாத்திரத்தில் ஸதஸத்தாகிய ஆத்மவிசாரஞ் செய்யும் நல்லறிவு உண்டாகும். அதை நீ இப்போது படிக்கத் தொடங்குவாயாக. ஓர் காலத்தில், விஷ்ணுமூர்த்தி அரசிலையின் மீது பாலரூபத்தோடு படுத்துக்கொண்டு அடியில்வருமாறு ஆலோசிக்கத் தொடங்கினார்: "யான் யாது காரணம்பற்றிச் சிதாத்துமாவினால் பாலரூபனாய் இதிலடைக்கப் பட்டேன்? இந்த வுலகத்தை எந்தக் கருவியினால் எவ்விதமா யறிகிறேன்?" என்றிவ்வாறு ஆலோசித்துக் கொண்டிருக்க, அவரது சந்தேகம் நிவிர்த்தியாமாறு அம்பிகை எல்லாப் பொருளும் அடங்கியிருக்கிற ஒரு பாதி சுலோகத்தைக் கூறினள்:—"காணப்படும் இவ்வுலகமெல்லாம் யானே; என்னைத்தவிர அனாதியானது

வேறொன்றுமில்லை'' என்பது அதிலுள்ள பொருள். அந்த சுலோகத்தைக் கேட்டு விஷ்ணு, இவ்வரிய பொருளோடு கூடிய சத்தியமான சொல் யாரால் கூறப்பட்டது? பெண்ணால் கூறப்பட்டதா? புருடனால் கூறப்பட்டதா? நபும்ஸகனால் கூறப்பட்டதா? இதனை எப்படி யறிய முடியும் என்று ஏக்கமுற்றிருக்கும் தருணத்தில், இந்தப் பாகவதச் செய்யுளாகிய அந்தப் பாதிச் செய்யுள், அவருடைய இருதய கமலத்திற்றரிக்கப்பட்டு, அடிக்கடி உச்சரித்துக் கொண்டே வடபத்திரத்தில் சயனித்துக்கொண்டு இதன் பொருளை விசாரித்திருந்தனர். அப்போது அம்பிகை சாந்தையாயும் சங்கு சக்கர கதை பத்மம் என்கிற ஆயுதங்களை புஜங்களில் தரித்தவளாயும், திவ்ய வஸ்திராபரணாலங்கிருதையாயும் தனக்குச் சமானமான வசின்னியாதி சகிகளால் சூழப்பட்டவளாயும், அளவற்ற வொளியை யுடையவளாயும், விஷ்ணுவினெதிரில் நின்று, மந்த காசஞ் செய்தனள். இவளைக்கண்ட மகாலக்ஷ்மியும், தேவியென்றுணராது, புன்னகை செய்து மலர்ந்த முகமுடையவளாயினள். அவ்வாறே விஷ்ணுமூர்த்தியு முணராது அற்புத வேஷத்துடன் ஆதாரமில்லாமல் பாற்கடலில் நின்றுகொண்டிருக்கும் அம்பிகையைப் பார்த்து அதிக ஆச்சரியமடைந்து சிரித்தனர். மற்றொரு கணத்துக்குள், அந்த அம்பிகையின் பக்கங்களில் ரதி, புத்தி, கீர்த்தி, ஸ்மிருதி, திருதி, ஶ்ரத்தை, மேதை, ஸ்வதை, ஸ்வாஹா, க்ஷுதை, நித்திரை, தயை, துஷ்டி, புஷ்டி, க்ஷமை, லஜ்ஜை, ஜ்ரும்பை, தந்திரை முதலிய சக்திகள் நானாவிதமான ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டும், அநேகவிதமான ஆபரணங்களை அலங்கரித்துக்கொண்டும், ஜாதி முதலிய புஷ்பமாலை, முத்துமாலை முதலிய மாலைகளைத் தரித்துக்கொண்டும், அந்தப் பாற்கடலிலேயே தோன்றினர். இவைகளை யெல்லாங்கண்ட விஷ்ணு அளவிறந்த ஆச்சரியமடைந்து இதனை யாலோசிக்கலாயினர்:—இது என்ன மாயை! கண்டவர்களுக் கெல்லாம் வியப்பைத் தருகின்றது. இந்தப் பெண்கள் எப்படி உண்டானார்கள்? இப்பரிவாரங்களோடு நிற்கின்றவள் நம் மாதாவா? அல்லது மாயையா? இதனுண்மை யறிய முடியவில்லையே. யாது காரணம்பற்றி இங்கு இவர்கள் காணப்பட்டனர்? இவ் விஷயத்தில் என்னாற் சொல்லத்தக்கது என்னவிருக்கிறது? இவர்களிங்கிருக்க வேண்டியவரோ, போக வேண்டியவரோ, ஒன்றுந் தெரியவில்லை. நாம் சிறுவனைப்போல் மௌனமாயிருத்தலே நலமென்றிருந்தனர். (48-67)

ஓம் காமேஶ்வர ஸுகப்ரதாயை நம:

## 16. ஸ்ரீ தேவீ பாகவதத் தோற்றம்

வியாசர் கூறுகிறார்:—மகாலக்ஷ்மி, விஷ்ணுமூர்த்தி வடபத்திரத்தில் சயனரூபியாய்ப் புன்னகையோடு கூடியிருப்பதைப் பார்த்துக் கூறுகின்றாள்: நீர் என்ன சிரித்துக்கொண்டிருக்கின்றீர்? மகா சக்தியுடைய மாயாப் பிரபாவத்தினால் இங்கே

தோன்றிய தேவியை, தேவியென் றுணராது நகையாடுகின்றீர். அப்பராசக்தி, இவ்வுலகம் லயமடைந்து சிருஷ்டிக்குந்தோறும் ஸகுணையாய் (வடிவமுள்ளவளாய்) ஆவிர்ப்பவிக்கின்றாள். யான் அவளுடைய ஸகுணை; என்னை ஸாத்விக சக்தி அம்சமா யறிந்து கொள்ளும். உம் நாபிக்கமலத்தில் பிரமனுதிக்கப் போகிறான். அவன் தவம்புரிந்து ஒப்பில்லாத ராஜஸ சக்தியோடு கூடி, செந்நிற முடையவனாய்ப் பூவுலகத்தைப் படைப்பான். அப்பிரமன் தனது புத்திவிசேஷத்தால் பஞ்சபூத சம்பந்தமான உருவங்களையும், இந்திரியங்களையும், அறிகருவிகளான மனம் முதலியவைகளையும், முன்வினைக்குத் தக்கவாறு கூட்டிமுடித்தலாகிய உற்பத்தியைச் செய்து வருவானாதலால், சிருஷ்டிகர்த்தாவென்று கூறப்படுவான். நீரோ, அவனால் படைக்கப்பட்ட இவ்வுலகத்தைக் காக்கின்றவராவீ ராதலால், காவற்கடவுளெனப் பெயர் பெறுவீர். அந்தப் பிரம னுடைய புருவநடுவிலிருந்து, உக்கிரத்தோடு கூடிய *ருத்திர மூர்த்தி தோன்றி, கோரமான தவம்புரிந்து தாமஸ சக்தியுக்தராய், கற்பாந்த காலத்தில் எல்லாவற்றையும் சங்கரிக்கும் ஸம்ஹார கர்த்த ராவர். ஓ விஷ்ணுவே! பிரமனுக்கும் ருத்திரமூர்த்திக்கு முரிய சக்திகளைக் கூறினேன். உமக்குச் சக்தியாரெனில், சாத்விக சக்தியாகிய யானே யென்றறிவீர். யான் எப்போதும் இந்த சாத் விக வுருவத்தோடே உம் சமீபத்தில் வசிப்பேன். அந்த சமீபத் தானம் எதுவென்றால் உமதுடைய இருதயமாகும் என்றனள். விஷ்ணுமூர்த்தி வினவுகின்றார் :—ஓ தேவி! யான் முன்னர் நல்ல பொருளமைந்த பாதி சுலோகமொன்று கூறக்கேட்டேன். அது யாரால் கூறப்பட்டது? அதனை எனக்குச் சொல்லவேண்டும். அது பற்றிப் பெருஞ் சந்தேகமிருக்கின்றது. தனமில்லாதவன், எப்படி ஸர்வ காலமுந் தனத்தையே சிந்தித்துக்கொண்டிருப்பானோ அப் படியே யானும் அடிக்கடி சிந்தித்துக்கொண்டிருக்கிறேன் என்றனர். இவ்வாறு கூறிய விஷ்ணுவின் வசனத்தைக் கேட்ட மகாலக்ஷ்மி சொரூபியாய் வந்த தேவி, நகைத்து அதிகப் பிரேமையோடு கூறு கின்றாள் : (1–13)

ஓ விஷ்ணு மூர்த்தியே! என் சொல்லைக் கேட்பீராக. என்னை, நீர் இப்போது கண்ட ஸகுணை சொரூபமாக அறிந்தீரே யன்றி, நிர்குணையென யறிந்தீரில்லை. அறிந்திருப்பீராயின், அந்த சுலோகம் யாரால் சொல்லப்பட்டதென்று கேட்க மாட்டீர். அது நிற்க, நீர் கேட்பது பகவதியால் சொல்லப்பட்ட பாகவத சாரமாம். இதிற் சந்தேகம் வேண்டாம். அதனுள் பாகவதத்தின் தாத்பரிய விசேஷங்கள் தெளிவுபடுத்தியிருக்கிறது. ஆகையால் வேதசார மான பாகவதமென்றே அறிந்துகொள்ளலாம். உமக்குத் தேவியின் கிருபை மிகவும் விசேஷமாயிருந்தபடியினால் பாகவதத்தின் ரகஸ்யா

* இவர் காலாந்தங்களைச் சங்கரிக்கும் மஹா ருத்திரரன்று; பிரகிருதி தத்வபுவனங்களைச் சங்கரிக்கின்ற குணருத்திரர் என்றறிக.

மிசத்தைக் கூறினள். அதனை நீர் மறவாமல் மனத்திலிருத்தி எப்போதும் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். இஃது, எல்லாச் சாஸ்திரங்களிலும் ரகசியமான அமிசம். இதைவிடச் சிறந்த சாஸ்திரங்கள் மூவுலகினுமில்லை. அதைக் கேட்ட விஷ்ணு, பாகவத சாரமான அம்மந்திரத்தை அநுதினந் தியானித்து வந்தனர். இவ்வாறு சிலகாலஞ் சென்றபிறகு அந்த விஷ்ணுவினுடைய நாபிக்கமலத்தி லுற்பவித்த பிரமன் மதுகைடபருடைய பீதியினால் அவரைச் சரணமடைய உடனே மதுகைடபரோடு போர் புரிந்து, சங்கரித்துவிட்டு, பின்னர் பாகவதசார மந்திரமாகிய பாதி சுலோகத்தை ஜபித்தனர். அவ்வாறு ஜபித்துக்கொண்டிருக்கும் விஷ்ணுவை, பிரமன் பார்த்து, நீர் என்ன ஜபஞ் செய்கின்றீர்? உம்மைவிட மேலான தெய்வமொன்றிருக்கிறதா? நீர் ஜபிப்பதால், உம்மைவிடச் சிறந்த தெய்வமிருப்பதென்பது நிச்சயம். அஃது எது? என்றனன். விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார்: ஆம் அப்படியே சிறந்த தெய்வமொன்றிருக்கின்றது. என்னிடத்திலும் உன்னிடத்திலும் தொழில்களை யியற்றும் சக்தியொன்றிருக்கிறதல்லவா? அஃது, இத்தன்மைத்தென விசாரித்துப்பார்ப்பாய். அத்தகைய சிவ சக்தி சொரூபமாய் விளங்கும் அம்பிகையே, நம்மிருவருக்கும் மேலான தெய்வம். அத்தேவியை ஆதாரமாக வைத்துக்கொண்டிருப்பதனாற்றான், இப்பூவுலகமும் ஜலமயமான சமுத்திரத்தில் விளங்கிக் கொண்டிருக்கிறது. அவளது பெருமையை இப்படிப் பட்டதென்று ஒருவராலுங் கூறமுடியாது. அவள்தான், ஆதியந்த ரஹிதமான மேலான தெய்வம். அவளாற்றான் தாவர ஜங்கமாத்மகமான இவ்வுலகம் படைக்கப்படுகிறது. அவளது கருணையினாற்றான், மானிட ஜன்மமெடுத்தோர் முக்திபெறவேண்டும். அவள் தான் முக்திக்கதிஷ்டான தேவதை. பந்தத்தில் கட்டுண்டுழல்வதற்கும், அவள்தான் தாரகம். யாமும் இப் பிரபஞ்சமனைத்தும், அவளது சிற்சக்தியால் தோற்றப்பட்டவர்களே. இதிலையமொன்று மில்லை. இதனை யதார்த்தமென் றுணர்வாயாக. அவ்வம்பிகை, என்னிடத்தில் கருணை கூர்ந்து பாகவதசாரமான அர்த்த சுலோகத்தை உபதேசித்தனள். அந்த சுலோகார்த்தமானது, துவாபர யுகாரம்பத்தில் விஸ்தாரமான பாகவதமாகப் போகின்றது. இவ்வாறு கூறியவுடனே, பிரமன் அப்பாகவதசார மந்திரத்தை அவரிடத்தி லுபதேசம் பெற்றனன். அவர் தன் புத்திரனாகிய நாரதருக்குபதேசிக்க அவர் என்னிடத்தில் கருணைவைத்து உபதேசித்தனர். அவரது கிருபாபலத்தினால், துவாபரயுகாதியில் அந்தப் பாதி சுலோகார்த்தத்தைப் பன்னிரண்டு ஸ்கந்தமாகச் செய்தேன். இதனை நீ என்னிடம் உபதேசம் பெற்றுக்கொண்டு படிப்பாயாக. (14–31)

இது பஞ்சலக்ஷணத்தோடு கூடினதாயும், அம்பிகையின் லீலாவினோதாதி சரித்திரங்களடங்கினதாயும், தத்துவ ரகசியங்கள் நிறைந்ததாயும், எல்லாப் புராணங்களிலுஞ் சிறந்ததாயும், தரும சாஸ்திரத்துக் கொப்பானதாயும், வேதார்த்தப் பிரதிபாதகமாயும், விருத்திராசுரவத சரித்திரம் முதலிய அநேக சரித்திரங்களடங்கிய

தாயும் பிரம்மவித்தைக்கு ஆதிகாரணமாயும், ஸம்சார சமுத்திரத்தைத் தாண்டிவைப்பதாயு மிருக்கின்றமையால், இதனை நீ என்னிடம் உபதேசம் பெறுவாயாக. இதற்கு நீதான் யோக்கியன் ஆவாய். இதனை நீ இடைவிடாமற் பாராயணஞ் செய்து வருவாயாக. இது பதினெண்ணுயிரஞ் சுலோக சங்கியையுடையது. அஞ்ஞானத்தை நசிக்கச் செய்வது. மேலான ஞானமென்னுஞ் சூரியனைப் பிரகாசிக்கச் செய்வது. சுகத்தையும் செல்வத்தையும், ஆயுள் விருத்தியையுந் தரத்தக்கது. இதனைப் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும், புத்திர பௌத்திர தனதானியாதி சம்பத்தைத் தரத்தக்கது. இப்புராண ஸம்ஹிதை, உன்னுடன் எவர் படிக்கின்ருரோ அவர், எனக்குச் சீடராவர் என்றனர். சூதர் கூறுகின்ருர் : இவ்வாறு இப்புராண ஸம்ஹிதையை, வியாசர் தன் புத்திரனுகிய சுகருக்குபதேசிக்க பின்னர், ஓ முனிவர்களே ! எனக்குபதேசித்தனர். (32–39)

வியாசர் ஆச்சிரமத்தில் அதுமுதல் அச்சுகர் பாராயணஞ் செய்துகொண்டு இதற்குப் புறம்பான கர்மமொன்றுஞ் செய்கிறதில்லை ' தன் சுகத்தையும் நாடுகிறதில்லை. ஏகாந்தத்திலேயே யிருப்பர். அதிதமாக ஆகாரமுங் கொள்ளார். உபவாசத்திலேயே விருப்பம். அவரைப் பார்க்கும்போதெல்லாம் கேவல ஞானநிஷ்டராகவே தோன்றுவர். தமக்கு வேண்டுமென்ருென்றையும் விரும்பார். யாவரையும் வேற்றுமையின்றிச் சமமாக நினைப்பார். எக்காலத்திலும் சிந்தாஸக்தராகவே யிருப்பார். இவ்வாறு சுகமுனிவரிருப்பதைக் கண்ட வியாசர் கூறுகின்ருர் : அப்பா குழந்தாய் ! நீ யாது காரணத்தால் சிந்தாகுலனுகவும், எங்குப் போவோமென்று துரிதப்பட்டுக்கொண் டிருக்கிறவனுகவுங் காணப்படுகின்ருய் ? அன்றி, கடன்காரரால் பீடிக்கப்பட்ட நிர்த்தனனைப்போல், ஸர்வகாலமும் ஏக்கமுற்றவனுயு மிருக்கின்ருய். அத்தகைய வியாகூலம், யானிருக்கும்போது உனக்கெப்படி வந்தது ? இனி விசனப்படுவதை யொழித்து, இஷ்டப்படி வேண்டிய சுகங்களை அனுபவிப்பாய். ஞான சாஸ்திரத்தை சாஸ்திர விதிப்படி அனுஷ்டிப்பாய். மேலான ஞான வழியில் அறிவைச் செலுத்துவாய். என்னுடைய உபதேசத்தால் உனக்கு மனவொடுக்கம் உண்டாகாமற் போனுல் ஜனக மகாராஜன் பரிபாலித்துவரும் மிதிலா பட்டினஞ் சென்று அவரைக்கண்டு அவருடன் சிலகாலம் பழகி வருவையானுல் அவர் உனது அஞ்ஞானத்தை யொருங்கே யொழித்துவிடுவர். அவர் சாமானியமானவரல்லர்; தர்மபுத்தி யுடையவர், சத்யசந்தர், ஜிதேந்திரியர். அவரை யாவரும் விதேகரென்று கூறுவர். அப்படிப்பட்ட மகாத்மாவான ஜனகரை யடைந்து, உனது ஐயத்தை யெல்லாம் நிவிர்த்தித்துக்கொள்வாய். அவர் ஜீவன்முக்த தசையிலிருப்பவர். தெளிவான பிரம்மஞான முடையவர். நல்ல சீலர், ராஜரிஷி, மிகவும் சாந்தகுணமுடையவர், யோகி. (40–48)

வியாசரது இதவார்த்தைகளைக் கேட்ட சுகர் வினவுகின்ருர் : ஓ பிதாவே ! நீர் கூறிய ஜனக சக்கரவர்த்தி, அதிசயமான டம்ப

முடையவரென்று என் மனதிற் றோன்றுகின்றது. அவரை நீர் ஜீவன் முக்தரென்றும், விதேகரென்றும் தர்மசாஸ்திரப் பிரவீண ரென்றுங் கூறியது, மலடி மைந்தன் கதைபோலிருக்கிறது. அவர் ராஜ்யத் தைப் பரிபாலித்துக் கொண்டிருக்கும்போதே விதேகரெனக் கூறிய விஷயத்தில் எனக்குச் சந்தேக முண்டாகின்றது. அப்படிப்பட்ட விதேகரான அரசனைப் பார்ப்பதற்கு எனக்கு அதிக விருப்பமுண் டாகிறது. ஸம்ஸாரத்தில் தாமரை இலையிலிருக்கும் நீரைப்போ லெப்படி யிருக்கமுடியும்? இதை யோசிக்குங்கால் ஸம்சயமுண்டா கின்றது. ஓ தந்தையே! மோக்ஷமென்பது என்னை? அநுபவித்தும் அநுபவிக்காம லிருப்பதெப்படி? இந்திரியங்களுடைய தொழில்களை விலக்குவதெப்படி? தாய், புத்திரன், மனைவி, உடன்பிறந்தார், வியபசாரி இவர்களிற் பேதாபேதம் எப்படி யுண்டாகாமற் போகும்? உண்டாகுமானால் முக்த லக்ஷண மென்பது எது? கசப்பு, உவர்ப்பு, தித்திப்பு, புளிப்பு, காரம் முதலிய ரசவர்க்கங்களை நாவு அறியுமாயின் போகத்தை அனுபவிக்கிறதாகிறது. சீதம், உஷ் ணம், சுகம், துக்கம் இவை தோன்றாமலிருப்பது எப்போது? முக் தனாகவிருப்பது எப்படி? முக்ததசை யடைந்திருக்கு காலத்தில் சத்ருவானவன், நன்மையைச் செய்வான்போல் நடிப்பானாயின் அவனை எவ்வாறறிவது? விவகார தசையில் மிக யூக்கமில்லாதவ னாயின் அதனை யெவ்வாறறிந்து கொள்வான்? சோரனையும், தபசி யையும் சமானமாக எப்படி எண்ணுவான்? சமானமான புத்தி யுடையவனல்லவோ முக்தனாவன்? ஆகையால் அரசரில், ஒருவ னாவது ஜீவன் முக்தனாக விருப்பனென்று யானிதுவரையில் கேட்ட தில்லை. அன்றியும் கிருகஸ்தாச்சிரமத்திலிருந்த வண்ணமே முக்த னாவானென்கிற விஷயத்தில் மேன்மேலு மெனக்குச் சந்தேக முண் டாகிறது. ஒருவனை அரசனாகவிருந்தே ஜீவன் முக்தனாக விருக்கிறா னென்று நீர் குறிப்பிட்டுக் கூறினமையால் அந்தச் சந்தேகத்தை யொழித்துக்கொள்ள அவ்வரசனிருக்கும் மிதிலா நகரம் செல்லு கின்றேன். (49–61)

ஓம் காமேஶ்வர ஸுகப்ரதாயை நம:

## 17. சுகர் மிதிலைக் கேகல்

சூதர் கூறுகின்றார் :—இவ்வாறு சுகமுனிவர் வினவித் தன் தந்தையை நமஸ்கரித்துக் கைகூப்பி நின்று கூறுகிறார் : யான் மிதிலைக்குப் போகவிருக்கிறேன் என் தந்தையே! ஜனக சக்கர வர்த்தி ஜனங்களைத் தண்டிக்காமலே நீதிவழியினிருத்தி ஆண்டு வருகின்றானென்று கூறினீர். எந்த ராஜ்யத்தில் பிரஜைகளிடத்தில் தண்டத்தை அரசன் செலுத்தாமலிருக்கின்றானோ, அந்த ராஜ்யத் தில் பிரஜைகள் நீதி மார்க்கத்தில் சரியாகச் செல்லமாட்டார்கள். மனு முதலிய தரும சாஸ்திரங்களில் அரசன் தன் தேயத்தில்

தருமம் நிலைக்கவேண்டுமென்றெண்ணுவானாயின், அது நிலைப்ப தற்குத் தண்டமே முதற் காரணமெனக் கூறப்பட்டிருக்கிறதல்லவா? இங்ஙனமிருக்க, மிதிலா நகரத்தில் தண்டமில்லாமற் பிரஜைகள் நீதியில் நிற்கின்றார்களென்பதை யோசிக்குங்கால், இதோ இருக் கின்ற எனது தாய் மலடியெனக் கூறுங் கதைபோலிருக்கின்றது. ஆகையால் இவ்வற்புதத்தைப் பார்க்க விரும்புகின்றேனாகையால் அங்கு செல்ல விடைதர வேண்டும். (1-5)

வியாசர் புத்திரனைக் கட்டித் தழுவிக்கொண்டு கூறு கிறார் :—ஓ குழந்தாய் ! உனக்கு மங்களம் உண்டாகுக. நீ சிரஞ் சீவியா யிருக்கக்கடவாய். எனக்குறுதியான வார்த்தையொன்று சொல்லிவிட்டு, உன்னிஷ்டம்போற் போய்வருவாய். அஃதா வது, நீ போய்வரும்போது, என்னாச்சிரமம் வந்து சேரவேண்டும். இதைவிட்டு வேறோரிடமுஞ் செல்லக்கூடாது. இதுதானெனக்குச் சொல்லவேண்டிய உறுதிமொழி. இதுகாறும் உனது முகத் தைப் பார்த்துக்கொண்டே சந்தோஷமாய்க் காலங் கழித்து வந் தேன். இதுமுதல் உன்னைக் காணுமளவும், உன் முகம் பாராமை யாகிய துக்கசாகரத்தில் மூழ்கிக்கிடப்பேன். என் பிராணன் நீ தான். நீ இங்கிருந்து ஜனகனிடஞ்சென்று சந்தேகங்களை நிவிர்த் தித்துக்கொண்டு, இங்கு வந்து சேர்ந்து வேதாத்தியயனஞ் செய்து கொண்டே காலத்தைச் சுகமாய்க் கழிப்பாய். சுகமுனிவர் வியாசமுனிவரை பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, வில்லினின் றும் வெளிப்பட்ட பாணம்போல், அதிவேகமாய் வெளிப்பட்டு, அநேக தேசங்கள், நதிகள், அரண்யங்கள், புண்யக்ஷேத்திரங்கள், தபோவனங்கள் ஆகியவற்றைக் கடந்து, அங்கங்குத் தவம்புரி கின்றவர்களையும் யோகிகளையும் வானப்பிரஸ்தர்களையும் பாசு பதர்களையும் சாக்தர்களையும் தரிசித்துக்கொண்டு இரண்டு வரு ஷத்தில் மேருவையும் ஒருவருஷத்தில் ஹிமாசலத்தையுந் தாண்டி ஸர்வஸம்பத்துக்க ணிறைந்துள்ளதும் ஸதாசார நிரதர்களான அந் தணர்களாற் சூழப்பட்டதுமான மிதிலாநகரத்தை யடைந்து சுற்றிப் பார்த்து வருந் தருணத்தில் அங்கு ஒரு காவலாளி, ஏன் வந்தாய் ? உனக்கிங்கென்ன காரியம் ? சொல்லென்று கேட்கப் பதி லொன்றுங் கூறாது மௌனமாயிருந்தனர். (6-18)

இருக்கவே, அவன் நகர வாசற்படியிற் றள்ளிக் கொண்டுவந்து விட அவ்வாசற்படியிலேயே கட்டையைப்போல் நின்று நகைத்துக் கொண்டு பேசாதிருந்தனர். காவலாளி வினவுகிறான் : நீ என்ன ஊமையா ? எவ்வளவுகேட்டும் பதிலொன்றும் பேசுவதில்லை. பேசாத நீ இங்கு யாதுகாரணம் பற்றி வந்தனை ? எவ்வளவு மூடனா னாலும் ஒரு காரியமின்றி ஓரிடமுஞ் செல்லான். அது நிற்க, யாவ ராயினும் இந்த நகரத்தில் பிரவேசிக்க வேண்டுமானால் அரசனுத் தரவுவேண்டும். ஊர்பெயர் தெரியாத புதுமையானவன் இந்நகரத் தில் பிரவேசிக்கக்கூடாது. உன் முகத்தைப் பார்த்தால் பிரம்ம தேஜஸ் ஜொலிக்கிறது. வேதவித்தகரைப் போலுங் காணப் படுகின்றது. ஆதலால் இனியாவது குலம், பெயர், ஊர், வந்த

காரியம் ஆகிய இவற்றைச் சொல்லிவிட்டு உன்னிஷ்டம்போல் நகரத்துக்குட் செல்வாய். (19-21)

சுகர் அவனைப் பார்த்துக் கூறுகின்றார்: ஓ துவார பாலகனே! யான் எந்தக் காரியத்தை யுத்தேசித்து இவ்விடம் வந்தேனே அந்தக்காரியம் உன் வார்த்தையினால் கைகூடிவிட்டது. நகரத்துட் பிரவேசிப்பதே துர்லபமாயிருக்கும்பொழுது என் காரியத்தைச் சொல்வதினாற் பயனென்னை? என்னறிவின்மையால், அந்தோ! இரண்டு மலைகளை வெகு கஷ்டப்பட்டுத் தாண்டி வழி தெரியாமற் றிரிந்தலைந்து வருத்தத்துடன் அரசனைப் பார்க்க வேண்டுமென்னும் அவாவினால் இங்குவந்தேன். வந்த காரியம் வீணாயிற்று. என் தகப்பனார் என்னை வஞ்சித்தனர். பிறரைப் பழிப்பதிற் பயனென்னை? யான் எவ்வளவு திரியவேண்டுமோ, அவ்வளவுந் திரிந்தாயிற்று. ஓரிடத்திலும் இவ்வளவு கடுமையான சொல்லைக் கேட்டறியேன். தனத்தில் விருப்பமுடையவனுக்கு, உலகத்தைச் சுற்றித் திரிவதும், ஒவ்வோ ரிடத்திலும் இச்சகம் பேசிப் பொருளைத் தேடுவதும் இயற்கை. எவற்றிலும் ஆசையற்றவனுக்கு சுகந்தானகவேயமையுமல்லவா? அவன் வீணாகக் கண்டவிடங்களிற் றிரிவது அறிவின்மையன்றோ? எனக்கோ பொருள் தேடவேண்டு மென்றாவது, அதனால் விஷய சுகத்தை அனுபவிக்க வேண்டுமென்றாவது விருப்ப மிருக்கின்றதோ வெனின், ஒரு சிறிதுமில்லை. அப்படியிருக்க நான் அரசனைக் காணவேண்டு மென்று பேரவாக்கொண்டு தேசம்விட்டுத் தேசம்வந்து பயனற்றுப் போயினேன். இதைவிட அறிவின்மையான செய்கை என்ன விருக்கின்றது? மேரு பர்வதமெங்கே! மிதிலை நகரமெங்கே! இதற்கும் அதற்கும் எவ்வளவு தூரமிருக்கின்றது! இவ்வளவு தூரமுங் காலால் நடந்து வந்தேனே! அப்படி வந்தும் என்ன பலன் கண்டேன்? யான் மிகவும் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவ னானேன். நன்மையாயினும், தீமையாயினும் வருவது வந்தே தீரும். பிராரப்தம் அவசியம் அனுபவிக்க வருமென்பது நிச்சயம். புருஷப் பிரயத்தனமும் அதற்கொத்ததாகவே யிருக்கும். இவ்விடத்தில் தீர்த்த மிருக்கின்றதா? வேத மிருக்கின்றதா? ஒன்று மில்லையே. இவ் வலைச்சலில் எனக்குச் சிரமந்தான் பிரயோஜனம். இது பிராரப்தந் தானே? இந்நகரத் தரசனே தன்னகரத்தில் ஒருவரும் பிரவேசிக்கக் கூடாதென்று கட்டளையிட்டிருக்கின்றான். (22-29)

இவ்வாறு சுகர் பலவாறாய் மன வருத்தத்துடன் சொல்லிவிட்டு மௌனமுற்றிருக்க, இதைக் கேட்ட துவார பாலகன், அவரைச் சிறந்த ஞானியென்றறிந்து, அதிக விநயத்தோடு கூறுகின்றான்: ஓ பிராமணோத்தமரே! இனி உம்மிடம் என் அதிகாரத்தைச் செலுத்துவேனாயின் என் குலம் நாசமாய் விடும். ஆதலால் நீர் எங்கு செல்லவேண்டுமோ அங்கு செல்லலாம். உமது காரியத்துக்கு என்னால் ஒரு தடையும் நேராது. இது வரையில் என்னாலுண்டான அபராதத்தைப் பொறுத்தருளல் வேண்டும். நும்மைப் போன்ற மகான்களுக்குப் பொறுமையன்றோ சிறந்த பூஷணம்?

**சுகர் கூறுகிறார் :** ஓ துவார பாலகனே! உன் பேரில் சினங் கொள்ளக் காரணமென்னை? நீ பராதீனன்றனே. சேவகன் பிரபுவின் உத்தரவின்படி காரியத்தைச் சரிவர நடத்தவேண்டியது நீதிதானே. இவ்விஷயத்தில் அரசனைப் பழிப்பதுந் தகுதியன்று. சோரன் பகைவன் முதலியோர் நகரில் பிரவேசிக்காமற் காப்பதே புத்திமான்களிலக்கணம். பிறராளுகைக் குட்பட்ட பிரதேசத்தில் சுலபமாய்ப் பிரவேசிக்க எண்ணியது அறிவின்மையாதலால், இவ்விஷயத்தில் என்னிடத்திற்றான் குற்றமிருக்கின்றது. (30-35)

அவன், சுகமெது? துக்கமெது? சத்ரு எவர்? மித்திரர் எவர்? சுபத்தை யபேக்ஷிக்கிறவனாலே செய்தத்தக்கது என்ன? இவற்றை நன்றாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சுகர் கூறுகின்றார் : எல்லா வுலகத்திலும் இரண்டுவிதமிருக்கிறது; அதிலிருக்கும் பிரஜைகளும் ராகி விராகி என இரண்டுவிதமா யிருக்கின்றனர். அவர்களுடைய சித்தமும் இரண்டு விதம். இவைகளுள் விராகி என்பவர் அறிந்தவர், அறியாதவர், அறிந்தும் அறியாதவர் என மூன்று விதமாய் இருப்பர். ராகி என்பவர் மூர்க்கர், சதுரர் என இரண்டு விதமாயிருப்பர். அந்தச் சதுர்ப்பாடு சாஸ்திர விசாரத்தால் வருவதாகிய சாமர்த்தியம், புத்தி சூக்ஷ்மத்தால் வருவதாகிய சாமர்த்தியம் என இருவிதம். அந்தப் புத்தி, யுக்தம் அயுக்தமென இரண்டுவிதம் என்று கூறிவரும்பொழுது துவாரபாலகன் கூறுகின்றான் : ஓ! பிராம்மணோத்தமரே! நான் அர்த்த ஞானமுடையவனல்லன். ஆகையால் நீரிப்போது கூறிய சொற்களுக்குப் பொருள்கள் நன்றாய் விளங்கவில்லை. ஆதலான், சற்றுத் தயவுசெய்து விளங்கச் சொல்லவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன். சுகர் கூறுகின்றார் : எவனுக்கு ஸம்சாரத்தில் விருப்பமிருக்கின்றதோ, அவன் ராகி எனப்படுவன். அவன்றான் எல்லாவற்றிலு மோகமடைகின்ற மூர்க்கன். அவனுக்குச் சுகதுக்கங்கள் அநேக விதங்களாக விருக்கின்றன. என்னவென்றால், தனம், புத்திரன், செல்வம், மனைவி, மானம், விஜயம் முதலியவற்றையும், காரியசாதனத்தையும் பெறுவதினாற் சுகமும், அதைப் பெறாததனால் துக்கமும், நிமிஷந்தோறும் மாறிமாறி வந்து கொண்டே இருக்கின்றன. அவனது செய்கையெல்லாம் சுகத்தை யடையவேண்டுமென்கிற விருப்பத்தை யுடைத்தாயிருக்கிறது. அச்செய்கைக்கு மாறான செய்கையை யியற்றித் தடைப்படுத்துகிறவன் சத்ருவாகின்றான். அச்செய்கைக்குச் சாதகனாயிருக்கிறவன் மித்திரனாகின்றான். விராகி, விஷய சுகங்களொன்றிலும் ஆசை வையாமல் ஏகாந்தத்தில் வேதாந்த விசாரஞ்செய்து ஆத்ம சுகத்தை யநுபவித்துக் கொண்டிருப்பான். அவன்றான் எந்த விஷயத்திலும் மோகமடையாத பண்டிதன். அவனுக்கு ஸம்சார வாழ்க்கையின் சுகமெல்லாந் துக்ககரமாகவேயிருக்கும். ஆயினும் அப்படி ஆத்ம சுகத்தை நாடுகின்றவனுக்குக் காமக்குரோத லோபமதமாச்சரியம் முதலிய கொடிய சத்துருக்கள் பலருண்டு. இப்படிப்பட்ட சத்துருக்களால் பீடிக்கப்பட்டவனுக்குப் பந்து, சந்தோஷமென்பவனொரு

வனே ; அவனைத்தவிர வேறெருவரும் மூன்றுலகத்திலுமில்லை. இவ்வாறு சுகர் கூறக்கேட்ட துவாரபாலகன், அவர்ஞானி யென்றெண்ணி, பட்டினத்தில் சுயேச்சையாகச் சஞ்சரிக் கும்படி விட்டனன். பின் இரண்டாவது சூரியனைப்போலும் பிரகாசிக்கின்ற சுகமுனிவர் உள்ளேசென்று அந்நகரம் அநேக ஜனங்களால் சூழப்பட்டிருப்பதையும், கடைகளாலலங் கரிக்கப்பட்டிருப்பதையும் மூன்றுலகத்திலுமுள்ள எல்லாப்பொரு ளும் நிறைந்திருப்பதையுங்கண்டு அப்புறஞ்செல்ல, அங்கு வியா பாரிகள் கிரயவிக்ரய வியாபார விஷயமாய்ப் பேசிக்கொண்டிருப் பதையும், ஜனங்கள் ராகத்துவேஷ காமக்குரோதலோபமோகாதி களால் பரஸ்பரம் போராடிக் கொண்டிருப்பதையும், பண்டிதர்கள் சாஸ்திரவாதஞ்செய்து கொண்டிருப்பதையும், பார்த்துக்கொண்டே உள்ளே பிரவேசிப்பதற்குப் பிரயத்தனப்படுங்கால், அவ்விடத்தி லும், முன்போல் ஓர் துவாரபாலகனுல் தடுக்கப்பட்டு அவ்விடத்தி லேயே ஓர் விருக்ஷநிழலில் உட்கார்ந்துகொண்டு பிரம்ம விசாரஞ் செய்திருந்தனர். இப்படிச் சிலநேரம் ஒரு கட்டுத்தறியைப் போலும் தியானநிஷ்டராயிருக்கும் தருணத்தில் அரசனுடைய மந்திரி, அவ்விடம்வந்து அவர் நிஷ்டராயிருப்பதைப் பார்த்துக் கைகூப்பி நடுநடுங்கி, சுவாமி! எங்கள் அபராதத்தைப் பொறுத் தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்து, இரண்டாவது பிராகாரத் திற்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கு அநேகவிதமான பரிமள புஷ்பங்கணிறைந்த உத்யானவனத்தைக் காண்பித்து, அவ்விடத் தில் அர்க்கியபாத்திய ஆசமனுதிகள் தந்து உபசரித்து வைத்தனன். (36–55)

அதுவேயுமன்றி அம்மந்திரி அரண்மனையில் ராஜசேவை செய்கின்றவர்களாயும், சங்கீத நாட்டியாதிகள் செய்வதில் வல்லவர்களாயுமுள்ள ஸ்திரீகளை அழைத்து நீங்கள் இச்சுக முனிவரை உபசரித்து வாருங்களென்று கட்டளையிட்டுச் சென்றனன். அந்த ஸ்திரீகளும் அம்முனிபுங்கவரை நாடோறுந் தவருமல் அன்னபானுதிகளால் வேண்டியவுபசாரங்கள் செய்து வந்தனர். சுகரும் சுகானந்தமாயிருந்தனர். பின்னர், அந்தப் புரத்தில் வசிக்கும் சில ஸ்திரீகள் உத்யானவனஞ்சென்று ரமிக்க விருப்பங்கொண்டவர்களாய், அநேக தாதிகளோடு அவ்வனஞ் சென்று குதூகலத்துடன் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும் போது ஒரு பக்கத்தில் ஆயிரம்சந்திரன் ஏககாலத்திலுதித்தாற் போல், சாந்தமூர்த்தியாய் மிருதுவான வார்த்தை யுடையவராய் விளங்கும் மன்மதப் பிரதிநிதியான சுகமுனிவரைக்கண்டு, மோகமடைந்து, ஒருவருக்கொருவர், இவரது ரூபலாவண்யங்களைப் பேசிக்கொண்டும், ஒருவருக்கொருவர் முந்திச் சென்றும், அவரை முற்றுகை செய்ததுபோல் சூழ்ந்துகொண்டு ஒவ்வொருவரும், என்னிடத்திலன்பு வைக்கவேண்டும், அன்புவைக்கவேண்டுமென்று பலவாருகச் சகிக்கக்கூடாத ஸாகஸங்களாற் பலாத்காரஞ் செய் தனர். ஜிதேந்திரியரான முனிவர், அவர்களுடைய மோகவசனங்

களுக்கிடங்கொடாமல் நிச்சலசித்தராய்க் கட்டையைப் போலிருந் தனர். இப்படியிருப்பதையறிந்த பெண்கள் இவரை எப்படியாவது நம்முடைய சுவாதீனத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்து, சிலர் உயர்ந்த சயனுதிகளையும் சிலர் மணிகுண்டலாதி ஆபரணங்களையும் வெகுமானமாகக் கொடுத்தார்கள். அவைகளி லொன்றையேனும் லக்ஷ்யஞ்செய்யாமல் உதாசீன பாவமுடைய வராய், கமண்டலத்திலிருக்குஞ் ஜலத்தினுல் கைகால் சுத்திசெய்து கொண்டு சந்தியாதி காலந்தோறுஞ் செய்யவேண்டிய வந்தனுதி அநுஷ்டானங்களைச் செய்து முடித்தும், ஒரு யாமகாலம்தியான நிஷ்டராகவிருந்தும், பின் சுகமாய்ச் சயனித்துக்கொண்டும், இரண்டுயாமம் நித்திரைசெய்தும், நான்காவது யாமம் முழுவதை யுந் தியானயோகத்திலேயே கழித்தும் பின்னர் ஸ்நானஞ்செய்து காலைக்கடனை முடித்தும், முன்போல் தியான நிஷ்டராகவும் இருப் பரேயன்றி ஸ்திரீகளுடைய செயலையறிந்து அதற்குடன்பட்டா ரல்லர். இவ்வாறு ஒவ்வொரு தினமும் வழுவாதியற்றிவந்தனர்.
(56–66)

ஓம் காமேஶ்வர ப்ராணநாட்யை நம:

## 18. சுகஜனக சம்வாதம்

சூதர் கூறுகின்ருர் :—ஓ சௌனகாதி முனிவர்காள்! இவ்வாறு உத்யான வனத்தில் சுகமுனிவர் சீலராயிருப்பதைக்கேட்டு ஜனக மகாராஜன், ஆசாரயுக்தனுய் மந்திரிகள் பக்கங்களிலும் புரோகிதர் முன்னுமாக வர உத்யானவனஞ்சென்று சுக முனிவரைக்கண்டு, விதிப்படி அர்க்கிய பாத்யாசமனுதிகள் தந்து சிறந்த ஆசனத்தி லிருக்கவைத்து கோதரிசனஞ்செய்வித்து வேத விதிப்படி பூஜித் தனன். அவரும், அவனது உபசாரமுழுவதையும் சந்தோஷமா யங்கீகரித்தனர். பின்னர் அரசன் சுகமுனிவரை நோக்கித் தேவரீ ரது கிருபாவிசேஷத்தால் செங்கோல் நடந்து வருகின்றது என்று தனது ராஜ்யக்ஷேமாதிகளைச் சொல்லிவிட்டு, சுகருடைய க்ஷேமத்தைக் கேட்கத் தொடங்கினன். தபோபலத்தினுல், சூரியனைப்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் வியாசபுத்திர ராகிய ஓ முனிவரே! உம்மைப் பார்க்கும்பொழுதே ஒன்றிலும் ஆசையில்லாதவராகக் காணப்படுகிறது. ஆகையால், தேவரீர் இங்குவந்த காரணத்தைத் தயைகூர்ந்து சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தனன். சுகர் அரசனைப் பார்த்துக் கூறுகின்ருர் : ஓ மகாராஜனே! என் தகப்பனுர் ஆச்சிரமங்களில் கிருகஸ்தாச் சிரமமே சிறந்ததென்று புகழ்ந்து என்னை விவாகஞ்செய்து கொள்ளும்படி கூடியமட்டும் பலாத்காரம் செய்தனர். யான், அது பந்தத்தைத் தருமென்றெண்ணி, அவரது வாக்கியத்தை அங்கீ கரிக்காமலிருக்க, அவர் என்னை விடாது, அது பந்தத்தைத்தர மாட்டாதப்பனேயென்று பலகாரணங்களைச் சொன்னுர். சொல்லி

யும் யானுடன்பட்டேனில்லை. இப்படி யான் திடசித்தனாயிருப்பதை யறிந்து, ஓ பிள்ளாய்! யாதொன்றுக்குங் கவலைப்படாதே. நீ மிதிலாநகரஞ் செல்வாய். அங்கு ஜீவன் முக்தனான விதேகி என்னும் ஜனகராஜர், ராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டும், ஸம்சார வலையில் சிக்கிக்கொள்ளாமலு மிருக்கின்றார். அவரைப் பார்த்த பின்னராவது, பாணிக்கிரஹணஞ் செய்துகொள்ளப் பயந்து தவம் புரியப் பிரயத்தனப்படுகின்ற நீ, கிருகஸ்தாச்சிரமத்திலிருக்கும் பீதியொழியப்பெற்று, பாணிக்கிரகணஞ்செய்து கொள்வாயென்றெண்ணுகின்றேன். இதிற் சந்தேகமேதாவது இருப்பின், ஜனக மகாராஜனைக் கேட்பாய். அவர் தெளிவாய்க் கூறுவர் என்றனர். அவர் கூறிய வார்த்தையைக்கேட்டு, அதிக வியப்புண்டாகி, உம்மைக் காணவேண்டுமென்கிற அவாவினால், கிரிகளையும் நதிகளையும் வனங்களையும் தேசங்களையும் கடந்து இங்கு வந்தனன். ஆதலால் நான் மோக்ஷகாமியாயிருக்கிறேன். அந்த மோக்ஷசுகத்தைக் கொடுக்கத்தக்கது தவமா? தீர்த்தயாத்திரையா? சாந்திராயண விரதமா? யாகமா? வேதாத்தியயனமா? இவைகளில் எது? அதனைக் கூறும். (1–14)

ஜனகர் கூறுகின்றார் :—மோக்ஷத்தில் விருப்புடையவன் செய்யவேண்டிய கர்மத்தைச் சொல்லுகிறேன் கேளும். விதிப்படி உபநயனஞ் செய்துகொண்டபின், வேதத்தைக் கற்கும் பொருட்டு குருவினிடத்தில் வாசஞ்செய்து, வேதவேதாந்தங்களை நன்றாயத்தியயனஞ்செய்து, குருதக்ஷிணைகொடுத்து, அவரிடத்தில் விடைபெற்று, நல்ல குலத்திலுதித்த கன்னிகையைப் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டு மனைவியுடன் கிருகஸ்தாச்சிரமத்திலிருக்க வேண்டும். அதில் நியாயவழியாய்ப் பொருள்தேடி, அதிக ஆசையையொழித்து, கிடைத்தமட்டில் சந்தோஷிப்பதும் அக்கினிஹோத்ரம் முதலிய கர்மங்களை வழுவாமற் செய்து முடிப்பதும், புத்ரோற்பவ தானஞ்செய்து, சிலகாலம் வசித்திருப்பதும் தருமமாகும். பின்னர், வானப்பிரஸ்தாச்சிரமத்திற் பிரவேசித்து, கடுமையான தவத்தினாற் காமாதி அறுகுணங்களையும் ஜயித்து, மனைவியைப் புத்திரனிடத்தி லொப்புவித்துவிட்டு, அக்கினிகளையெல்லாம் தன்னிடத்தி லாரோகணஞ் செய்துகொண்டு, பின்னர், நான்காவது ஆச்சிரமமாகிய சந்நியாசத்தில் பிரவேசிக்க வேண்டும். அந்தத் துரீயாச்சிரமத்தில் சாந்தனாயும், சுத்தனாயும், வைராக்கியத்தோடு கூடினவனாயும் இருக்கவேண்டும். சந்நியாச ஆச்சிரமத்துக்கு ஆசையற்றவன் அதிகாரியாவனன்றி, ஆசையோடு கூடினவன் ஒருபோது மதிகாரியாகான். இது வேதத்திற் கூறிய விதி. இதிற் சிறிது தவறு நேரிடினும் பயனில்லை. ஓ சுகமுனிவரே! நாற்பத்தெட்டு ஸம்ஸ்காரங்கள் வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றன. அதில் நாற்பது கிருகஸ்தனுக்கும், ஏனைய சமதமாதி எட்டும் மோக்ஷகாமிக்கும் விதிக்கப்பட்டிருக்கின்றன. இதனால் இந்த நாற்பத்தெட்டு ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்டவன்றான் மோக்ஷத்துக்குரியவனாகின்றானென ஸ்பஷ்டமாகின்றபடியினால்

ஒவ்வொரு ஆச்சிரமம் தோறுஞ் சென்று, தர்மங்களை விதிப் படிச் செய்யவேண்டுமென்று பெரியோர் கூறுவர். (15–22)

சுகர் கூறுகின்றார் :—ஜனக மகாராஜனே ! ஜனித்த பொழுதே ஞான விஞ்ஞானேற்பந்தமான வைராக்யம் இருதயத்தில் பலமாய் வேரூன்றி இருப்பவன் கிருகஸ்தாதி ஆச்சிரமங்களிலெல்லாம் பிரவேசித்தே தீரவேண்டு மென்பதுஅவசியமா? அல்லது, சந்நியாச ஆச்சிரமமொன்றே அவசியமா? என்று வினவினர். ஜனகர் கூறுகின்றார் : சுகரே ! இந்திரியங்கள் வலுப்பெற்றிருக்குங் காலத்தில், அதை அடக்குவதும் ஒருவராலு முடியாது; அசாத்தியம். இந்திரியங்கள் பரிபாகமில்லாதவனைத் தாம் செல்லும் வழியெல்லாம் ஈர்த்து ஆசையை எழுப்பி, அறிவை ஆகர்ஷித்துக்கொண்டு பலவிதமாய்க் கெடுத்து விடுகின்றன. (எப்படி யென்றால்) ஆகார இச்சையிலும், சுகேச்சையிலும், சயனேச்சையிலும் எண்ணமுண்டாக்கிக் கெடுக்கின்றன. ஆகையால், இந்திரியங்களை வைத்துக்கொண்டு, யதியாகச் சென்றாற் பயனென்னை ? பிராரப்த வாசனாபலத்தைச் ஜயிப்பது மிகவுங் கஷ்டம். அது ஒரு பொழுதுஞ் சமனமடைகிறதில்லை. ஆதலால் கிரமமாய் ஒவ்வொரு ஆச்சிரமத்திலு மீடுபட்டு அவைகளைப் பற்றறத் தொலைக்க வேண்டும். சுகரே ! உன்னதமான பிரதேசத்தில் தூங்குகிறவன் கொஞ்சஞ் சலிப்பானாயின் கீழே வீழ்ந்தே தீருவன் ; கீழே தூங்குகிறவன் எவ்வளவு சலித்தாலும் விழமாட்டான். அதுபோலச் சந்நியாச ஆச்சிரமத்தை யடைந்தபின் சபலபுத்தி யுண்டாகுமானால் பிரஷ்டனாகப் போய்விடுவான். மீண்டும் அவனீடேற வழியில்லை. சுகரே ! எறும்புகள், ஒரு பழமுள்ள விருக்ஷ மூலத்தை ஆம்ரயித்து மெல்ல வூர்ந்து உச்சியிலேறி சுவையுள்ள கனிகளைச் சிறிது சிறிதாய்ச் சுகமாய்ச் சாப்பிடுகின்றன. பக்ஷிகளோ அக் கனிகளைச் சாப்பிடுவதற்கு வேகமாய் ஒரே பாய்ச்சலில் கனிக்குச் சமீபத்திற் சென்றும் அங்கு நேரிடுஞ் சில இடையூறுகளால் மொத்துண்டு சிரமப்பட்டும் பயனற்றுப் போகின்றன. எறும்புகளோ அப்படியன்று. அங்கங்குச் சிரமத்தைப் பரிகாரஞ்செய்து கொண்டும் யாதொரு இடையூறில்லாமலும், அந்தப் பழத்தை யனுபவிக்கின்றன. ஆதலால், எவருக்கும் மனத்தை வெல்ல முடியாது. ஏனென்றால், மனத்தைக் காமம் விடாது. ஆதலான் அம்மனத்தை ஆச்சிரமந்தோறுஞ் சிறிது சிறிதாய் அடக்கிவர வேண்டும். சாந்தனையும், ஞானவானையும், ஆத்மவிசார முடையவனையுமுள்ள புருஷன் கிருகஸ்தாச்சிரமத்தி லிருப்பவனை யிருந்தபோதிலும் இலாபத்திற் சந்தோஷமும், அலாபத்திற் றுக்கமும் அடையமாட்டான். இவ்விரண்டிலும் சமபுத்தியுள்ளவனாக விருப்பான். ஆதலால் எவனையிலும் வேதத்தில் விதித்த கர்மங்களைச் செய்து அதன் பலனை விரும்பாமல் ஈஶ்வரார்ப்பணஞ் செய்கின்றானோ அவன் ஆத்மானுபவத்தை யடைந்து ஆனந்தமூர்த்தியாய், ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபடுவன். இதிலையமில்லை. என்னைப் பாரும், யான் ராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டு, யதேச்சை

யாய்ச் சஞ்சரித்துகொண்டிருக்கிறேன். எனக்கொன்றிலும் சுக துக்கமென்பது சிறிதுமில்லை. அப்படி நான் பற்றற்றிருக் கின்றமையால் ஜீவன்முக்தனுய் விளங்குகின்றேன். யான் அநேகவிதமான போகங்களை யனுபவித்துக்கொண்டும் ராஜ்ய விவகாரங்களை நடத்திக்கொண்டும், எப்படி அவைகளில் விருப்பமற் றிருக்கின்றேனே, அப்படியே, நீரும் கிருகஸ்தாச் சிரமத்தைக் கைக்கொண்டு எல்லாக் கர்மங்களையுஞ்செய்து, அதன் பயனை விரும்பாம லென்னைப்போல் ஜீவன்முக்த னுகவிரும். எது காணப்படுகிற விஷயமோ அது பந் தத்தை விளைவிக்கும். காணப்படாத பொருள் பந்தத்தை விளைவிக்காது. இவ்விரண்டனுள் பஞ்ச பூதங்களும், அதனதன் குணங்களும், த்ருச்யரூபமாகிய விஷயரூபங்களாகும். இவ்விஷ யங்களைச் சுட்டியறிவதாகிய மனமே, சுகதுக்கங்களுக்குக் காரண மாக விருக்கின்றது. காணப்படாத பொருளாயிருப்பது பரமாத்மா; அஃது அப்பிரத்தியக்ஷமாயும், நிர்விகாரமாயும், மலமற்றதாயு மிருப்பது. அதனை அடைவது அநுமானத்தினுலேயேயன்றி, பிரத்தியக்ஷத்தினுல் ஒருபொழுதும் அடைய முடியாது. அந்தப் பரமாத்மாவைப் பந்தப்படுத்தாது. பந்தப்படுத்துவதாகிய மனம் நிர்மலமாய் விளங்குமாயின் எல்லாம் நிர்மலமாகவேயாகிவிடும். மனம், மலம் நீங்காதவரைக்கும் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தாலும் அது பிராந்தியாகவும், பயனற்றதாகவும் முடியும். ஜீவாத்மாக்க ளடையவேண்டிய பந்தமோக்ஷங்களுக்குக் காரணம் தேகமுமன்று, ஜீவாத்மாவுமன்று, இந்திரியங்களுமன்று ; மனமே யாகும். பரமாத்ம சம்பந்தப்பட்ட ஆத்மாவானவன், சுத்தனுயும் முக்தனுயும் விளங்குவான். அவன் ஒருபொழுதும் பந்தப்படான். ஆகையால் ஒருவன் மனேசம்பந்தத்தினின்று நீங்குவானுயின், பற்றுதல் விடுதலென்கிற விகற்பமின்றிச் சாந்தனுவான். சத்ருமித்ர உதாசீனுதிபேதங்க ளெல்லாம் மனத்தின் கண்ணே யிருக்கின்றன. ஒரே வஸ்துவினிடத்தில் பேதம் எப்படியுண்டாகு மெனின், மனம் விகற்பப்பட்டு இரண்டாய்ப் பார்ப்பதனுலேயாம். விகற்பப்படுத்துவதாகிய மனேசம்பந்தம் எனக்கில்லை. யான் ஜீவனுகவிருந்தும் ஸதா பிரம்மமாகவே விளங்குகிறேன். இதிற் சிறிதுஞ் சந்தேகிக்கவேண்டாம். பேதபுத்தி நிகழும்வரையில் ஸம்சாரத்தில் பிரவிருத்தியுண்டாகிறது. இஃது அவித்தை யெனப் பெயர்பெறும். அதனை நீக்குவது வித்தையாம். இந்த வித்தியா வித்தைகள் இரண்டினையும் பண்டிதன் இடையருது சிந்தித்தறிய வேண்டும். சுகரே! வெயிலின் கடுமை இல்லாமற்போனுல் நிழலினது சுகம் எப்படி யறியப்படும்? அதேபோல அவித்தை யின் துக்கமில்லாமல், வித்தையின் சுகம் எப்படி யறியப்படும்? குணங்கள் அவ்வக்குணங்களினிடத்தில் இருக்கின்றன. பூதங்களும் அந்தந்தப் பூதங்களினிடத்தில் இருக்கின்றன. இந்திரியங்கள் அவ் வவ்விந்திரியங்களினிடத்தில் இருக்கின்றன. இங்ஙனமிருக்க அதில் ஆன்மாவுக்கு என்ன தோஷமிருக்கிறது? இதுநிற்க, உலகிலுள்ள

எல்லாவற்றையுங் காப்பாற்றும் நிமித்தமே வேதங்களில் அதற்குத் தக்கவாறு அங்கங்கள் பலவாருக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இப்படி ஏற்படுத்தியது தர்மத்தின்பொருட்டாகும். ஆகவே இதனை யதிக்கிரமிப்பது தர்மமாகுமா? தர்மம் நாசமடையுமாயின் வருணுச்சிரமங்களுங் கெடும். ஆதலால் வேதத்தில் வரையறுக்கப் பட்ட மார்க்கத்தில் பிரவிர்த்திக்கின்றவர்களுக்கே சுகமுண்டாகும் என்றனர். (23–47)

அரசன் மொழியைக்கேட்ட சுகர் கூறுகின்ருர்: ஜனகமகா ராஜாவே! நீர் இதுகாறுங்கூறிய விஷயங்களைக் கேட்டும், எனக் குண்டாயிருந்த சந்தேகம் எதுவோ அஃது அப்படியேயிருக்கின்ற தன்றி, அதிற் சிறிதும் நீங்கவில்லை. வேதத்தில் விதித்தவைக ளெல்லாம் தர்மத்தின் பொருட்டாயின் ஜீவஹிம்சையைக் கூறியிருக் கின்றதல்லவா? அது தருமமாகுமா? அதர்மம் நிறைந்துள்ள தென்றல்லவா சொல்லவேண்டும்? அது எப்படி முக்திப்பிரதமான தருமத்தையுடையதாகும்? ஓ ஜனகரே! சோமபானஞ் செய்வதும் பசுக்களைக் கொல்லுவதும் அதனைப் பக்ஷிப்பதும் பிரத்யக்ஷமான அதர்மமும் அநாசாரமுமல்லவா? சவுத்திராமணி என்னும் வேத பாகத்தில் சுராபானக் கிரஹணமும், சொக்கட்டாடுவதும், நானுவித கோரங்களான அநுஷ்டானங்களும் பிரத்தியக்ஷமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. பூர்வத்தில் சசிபிந்து என்னும் அரசன் நாடோறும் அநேக யாகங்கள் செய்தவனும், தர்ம நிஷ்டனும், தானசீலனும், சத்யசாகரனும், பிறருடைய தருமங்களைப் பாதுகாக்கின்றவனும் துஷ்டர்களை தண்டிக்கிறவனும் இருந்தன னெனவும், அவன் எண்ணிறந்த வேள்விகளைச் செய்து தனத்தை யெல்லாந் தக்ஷிணையாகக் கொடுத்தனனெனவும், அவன் செய்து வந்த யாகங்களில் இறந்துபோன பசுக்களின்றேல் விந்தியபர்வதம் போல் ஆயிற்றெனவும், அதன் மேதையிலிருந்து பெருகியநீர் சர்மண்வதி என்னும் பெயருடைய ஆருயோடிற்றெனவும், பின்னர் அவன் சுவர்க்கத்தை யடைந்தானெனவும், அவன் கீர்த்தி யுலக மெங்கும் பரவியதெனவும் ஒரு கதை கேட்டிருக்கின்றேன். இத்தகைய யாக தருமங்கள் வேதம் கூறுகின்றமையால் அவை என் புத்திக்குச் சரியானதாகப் புலப்படவில்லை. அன்றி வேதத்தில் விதித்தவண்ணம் பாணிக்கிரஹணஞ் செய்துகொண்டு ஸ்திரீயோடு கூடினவனுய் எப்போதுஞ் சிற்றின்பத்தை யனுபவிக்கின்றவன் அது கைவயப்படாத காலத்தில் பெருந்துன்பத்தை யடைகிருன். இப்படிச் சிறிய வின்பத்தைக்காட்டிப் பெரிய துக்கத்தை அனுப விக்கச்செய்வது வேத விதியால் வரும் பயன். இச்சுக துக்கத்தில் இருக்கின்றவன் எப்படி ஜீவன்முக்தனுவன்? ஜனகர் கூறுகின்ருர்: ஓ சுகமுனிவரே! வேதத்தில் யாகப் பிரகரணத்தில் எந்த ஹிம்சை பிரத்யக்ஷமாய்க் கூறப்பட்டிருக் கின்றதோ அது ஹிம்சையன்று. அஃது உபாதி சம்பந்தத்தினுல் உண்டாகிய தென்றறிவீர்! இஃது உண்மை. எங்ஙன மெனின், அக்னியிடத்தில் உண்டாகும் புகை விறகின் சம்பந்தத்தினுல்

உண்டாவதன்றி அக்னியினிடத்திலுண்டாவதா? விறகினுடைய வுபாதி நீக்கத்தில் அக்னியிடத்தில் புகையின்மை விளங்குகிற தல்லவா? அதுபோலவே வேதத்திற்கூறிய ஹிம்சை, ஹிம்சை யில்லாததாகவே விளங்குகிறது. ஹிம்சையாருக்கெனின், தற்பிர யோசனத்தை நாடிச்செய்யும் காமிகளுக்கேயாம். ஈச்வரார்ப்பண மாகச்செய்யும் நிஷ்காமிகளுக்கு அஹிம்சையேயாம். இவ்வுண்மை யுணர்வீராக. காமமில்லாமலும் அகங்காரமில்லாமலும் எந்தக் கருமஞ் செய்யப்படுகின்றதோ அது செய்துஞ் செய்யாத தென்றே மேதாவியரான பண்டிதர் கூறுகின்றார்: (எனவே செய்துஞ் செய்யாதவரென்றபடி.) கிருகஸ்தர்களுக்கு யஜ்ஞத்தில் விதிக்கப் பட்ட ஹிம்சை எதுவோ அதுவே ராகமில்லாமலும் அகங்கார மில்லாமலுஞ் செய்கிற முமுக்ஷுக்களுக்கு அஹிம்சையாம். (48–62)

ஓம் காமேச்வர விலாஸிந்யை நம:

## 19. சுகர் திருமணம்

சுகர் கூறுகின்றார் :—ஓ ஜனகராஜனே! இப்பொழுது கூறி வந்த ஹிம்சை அஹிம்சைகளின் நியாயம் பின்னர் விசாரிப்போம். நீர் கிருகஸ்தன் ஜீவன் முக்தனுவா னென்றீரே அதுபற்றி என் மனதில் மேன்மேலும் சந்தேகம் உதித்துக்கொண்டேயிருக்கிறது. மாயாமயமான வலைமத்தியில் இருக்கின்ற புருஷன் எவ்வாறு ஆசை யில்லாதவனுவான்? அவன் சாஸ்திரஞானத்தையடைந்து நித்யா நித்தியவஸ்துவிசாரஞ் செய்தவனுனாலும் அவன் மனம் மோகத் தினின்றும் நீங்குவதில்லை. அவன் எப்படி முக்தனுவான்? அந்தக் கரணத்தில் (இருதயத்தில்) பற்றியிருக்கும் அஞ்ஞான இருளைப் போக்குவதற்குச் சாஸ்திரஞானம் என்ன உதவிசெய்யும்? தீபம் என்கிற சொல்லினுலேயே இருளானது நாசமடையுமா? எப் பொழுதும் யாவரிடத்துந் துரோக சிந்தனை யில்லாமலிருக்க வேண்டுமல்லவா? அது கிருகஸ்தனுக்கு எப்படி வாய்க்கும்? ஓ அரசனே! உமக்குப்பொருளாசை தொலைந்ததா? தொலையவில்லை. அவ்வாறே ராஜ்ய சுகானுபவவாசையும் போகவில்லை. அன்னிய ராஜ்யத்தை ஜயிக்கவேண்டுமென்கிற ஆசையும் நீங்கவில்லை. இப் படியிருக்க நீர் எவ்வாறு ஜீவன்முக்தராவீர்? அன்றி நீர் சோரர்களிடத்தில் சோரபுத்தியுடையவராகவும், தபஸ்விகளிடத் தில் சாது புத்தியுடையவராகவும் இருக்கின்றீர். இது என் னுடையது, அது உன்னுடையது என்கிற பேத புத்தியும் உமக்கிருக்கின்றது. நீர் விதேகராக எப்படியாவீர்? அறுசுவை யாகிய ரசங்களையும் நன்மை தீமைகளையும் அறிகிறீர். உமது மனம் நன்மையிற் களிப்பையும் தீமையிற் சோகத்தையும் அடை கின்றது. ஜாக்ர ஸொப்ன ஸஷுப்திகளாகிய மூன்றவஸ்தைகளும் உமக்குத் தவருது நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. துரீய அவஸ்தை யடைந்தவராக எப்படியாவீர்? ரதகஜதுரகபதாதிகளெல்லாம் என்

வசத்திலிருக்கிறது. யான் எல்லாவற்றிற்கும் அதிபன் என எண்ணுகின்றீரா, இல்லையா? நன்மை தீமைகளையறிந்து சுகதுக்கங்களையடைகின்றமையால் உம்மை மனமில்லாதவராக எப்படிச் சொல்லலாம்? எப்பொழுதும் சந்தோஷ சித்தனும், புஷ்பமாலையிலுஞ் சர்ப்பமாலையிலுஞ் சமதிருஷ்டி உடையவனன்றோ மனமில்லாதவன். பொன்கட்டியையும் மண்கட்டியையும் சமமாய்ப் பார்ப்பவனன்றோ ஜீவன் முக்தனென்று கூறப்பட்டிருக்கின்றது. எல்லாவற்றிலும், ஏகாத்மபுத்தியைப் படைத்தலும், எல்லா ஜந்துக்களுக்கும் ஹிதத்தைச் செய்வதன்றோ ஜீவன் முக்தி லக்ஷணம்? ஆதலால் என் மனமானது இல்லறத்தில் ஒருசிறிதும் ரமிக்கவில்லை. ஏகாங்கியாயும், ஒன்றிலும் பற்றில்லாதவனுயும், இருக்கவேண்டுமென்பதே என் கருத்து. (1–12)

ஸங்கவர்ஜிதனுகவும், அகங்கார மமகாரம் இல்லாதவனுகவும், கந்தமூலபலாசனனுகவும் துவந்த புத்தியில்லாதவனுகவும், விவாகம் இல்லாதவனுகவும், மிருகம்போல் ஸஞ்சரிக்கப்போகின்றேன். ஆசையில்லாதவனுயும், குணுதீதனுயும் இருக்கின்ற எனக்கு வீட்டினுலும் தனத்தினுலும் அழகான மனைவியினுலும் ஆக வேண்டியது என்னவிருக்கின்றது? நீர் நானுவிதமான ஆசைகளுக்கு மூலமாயுள்ள ராஜ்யசிந்தையை அடிக்கடி செய்கின்றீர். இப்படியிருந்தும் நான் முக்தனென்று சொல்லுகிறீர். இதனை டம்பமென்று சொல்லவும் வேண்டுமோ? உமக்குச் சிலகாலம் சத்துருக்களைப்பற்றிய சிந்தையும், சிலநேரம் பொருளைப்பற்றிய சிந்தையும், சிலநேரம் சேனை பரிவாரங்களைப் பற்றிய சிந்தையும் இடைவிடாமலிருக்கின்றதே. நீரெப்பொழுது தான் சிந்தையற்றவராக இருப்பீரோ அறிகிலேன். வைகானசரும் முனிகளும் மிதமான ஆகாரமுடையவர்களாயும் ஜிதேந்திரியர்களாயும் இருக்கின்றனர். அவர்களும் ஒருகாலத்தில் இச் சம்சார சுகத்தை அசத்தியமென்று அறிந்தவர்களாக இருந்தும் ஒரு காலத்தில் மயக்கமுறுகின்றனர். உமது வம்சத்தில் ஜனித்தவர்களுக்கெல்லாம் விதேகர்களென ஒரு பெயர் வழங்கப்பட்டுவருகிறது. அப்பெயரை வஞ்சகமென்று சொல்ல வேண்டுமேயன்றி வேறுவிதமாய்ச் சொல்ல ஒருபொழுதும் இயலாது. ஏனெனில், உமது வமிசத்தினுதித்த ஒருவருக்கு வித்யாவரரென்கிற பெயர். அவர் மூர்க்கசிரோமணியாக விருந்தனர். ஒருவருக்குத் திவாகரர் என்று பெயர்; அவர் பிறவிக்குருடர். ஒருவருக்கு லக்ஷ்மீதரர் என்று பெயர். அவர் பரம தரித்திரராகவேயிருந்தனர். ஆதலால் உமது வமிசத்தில் பிறந்தவர்கள் இதுபோலவே பெயருக்குரிய அர்த்தத்தையுடையவரல்ல ரென்பது நிச்சயம். இதுபோலவே உமது குலத்தில் எவரெவர் பூர்வத்தில் பிறந்திருந்தனரோ அவர்களுக்கெல்லாம் விதேகர்களெனப் பெயர் மாத்திரமேயன்றி அது செய்கையினுலன்று. ஜனகமகாராஜனே! இதற்கோர் கதையுளது. (13–20)

உமது குலத்தில் பூர்வம் நிமி என்னும் பெயருடைய ஓர் அரசனிருந்தான். அவன் யாகம் செய்வதற்காக வசிஷ்ட முனிவராகிய

தனது குல குருவைப் பிரார்த்தித்தனன். அதற்கு முனிவர், யான், நீர் சொல்வதற்கு முன்னர் தேவேந்திரன் இப்பொழுதுதான் தனது யாகத்துக்கு என்னையிருக்க வேண்டுமென்று கோரினன். அதனை யான் அங்கீகரித்துவிட்டேன். இனி யான் அதனைத் தடுக்கவல்லவனன்று. ஆகையால் அவ்வேள்வியை முடித்துவிட்டுப் பின்னர் உன் வேண்டுகோளின்படி உன் யாகத்திற்கு வருகின்றேன், சந்தேகமில்லை. நீ அதுவரையில் யாகத்துக்கு வேண்டிய சாமக்கிரிகளைத் தினேதினே சாவதானமாய்ச் சேர்த்து வருவாயென்று விடை தந்து இந்திரனுடைய யாகத்தை நிறைவேற்றிவைக்கச் சென்றனர். பின்னர் நிமி, வசிஷ்டர் தன் யாகத்துக்கு முன்னர் வராமையால் சினங்கொண்டு வேறொருவரைக் குருவாகக்கொண்டு யாகத்தைச் செய்து முடித்தனன். அதனைக்கேட்ட வசிஷ்டமுனிவர், அதிக கோபங்கொண்டு அரசனை நோக்கி, ஓ குருத்துரோகியே! உனது தேகம் அதப்பதனம் (கீழே விழக்கடவது) என்று சபித்தனர். அரசனும் கோபித்து என்சரீரம் அதப்பதனம் ஆவதுபோல் உமது சரீரமும் அதப்பதனமாகக் கடவது என்று பிரதிசாபமிட்டனன். இவ்வாறு இருவரும் சாபத்தில் பதிதராயினர் என்பதைக் கேட்டிருக்கிறேன். உமது குலத்தவர் விதேகர்களென்கிற பெயருக்குரியவராய் இருப்பின் அவர் எப்படிச் சபிக்கப்படுவர்? இது என் மனதுக்கு அதிக வியப்பை உண்டுபண்ணுகிறது என்று கூறினர். ஜனகர் சுகரைப்பார்த்துக் கூறுகின்றார்: ஓ சுகரே! நீர் இப்பொழுது சொல்லிவந்ததெல்லாம் சத்தியம். இதில் ஒரு சிறிதும் பொய் இல்லை. ஆயினும் நான் கூறுவதைச் சற்று சாவதானமாகக் கேட்பீராக. உமது தந்தை எனக்குப் பூஜ்யராயும் குருவாயும் இருக்கின்றவர். அத்தகைய நும் பிதாவை விட்டு விட்டு வனவாசஞ் செய்யவிருப்பங் கொண்டவராக நீர் இருக்கின்றீர். அப்படி நீர் செய்வீராயின் அவ்வனத்திலுலாவும் மிருகங்களெல்லாம் உமக்கு நெருங்கின பந்துவைப்போல் ஆய்விடுமென்பதில் ஐயமில்லை. தந்தை சங்கமம் பந்தத்தை விளைவிக்குமென்றெண்ணி ஆரண்யமடைந்த உமக்கு அங்கும் மிருக சங்கமம் உண்டாகின்றமையால் நீர் சங்கமமற்றிருப்பது எப்படி? இதுவன்றி உணவின் பொருட்டாகவாவது கவலையுண்டாகுமாதலால் கவலையற்றிருப்பது எப்படி? நீர் வனத்தில் வசித்தபோதிலும் தண்டம், மான்தோல் முதலியன வேண்டுமென்று கவலையுண்டாகு மல்லவா? அதுபோல் எனக்கும் ராஜ்யத்தில் விவகாரார்த்தமாய்க் கவலையுண்டாகிறது. இருவருக்கும் கவலை பொதுவே அன்றோ? இதனை யுணராது என்மேலும் என்னுடைய மூதாதைகள் மேலும் பெருங்குறையெல்லாங் கொள்ளை கொள்ளையாகக் கூறினீர். (21–31)

நீர் மனக்குழப்பமடைந்து தூரதேசமிருந்து வந்தவர். அது எனக்கில்லாமையால் எப்பொழுதும் நான் நிர்விகல்பனாயிருக்கிறேன்; சுகமாய் உறங்குகின்றேன்; புசிக்கின்றேன். நான் பந்தனென்கிற புத்தியை யடையாமையால் எப்பொழுதும் சுகரூபியாய் இருக்கின்றேன். நீர் பந்தனாயிருக்கின்றேன் என்கிற புத்தியைக்

கொண்டிருப்பதால் எப்பொழுதும் துக்கரூபியாய் இருக்கின்றீர். அந்த பந்தம் என்கிற புத்தியை விட்டுவிட்டுச் சுகியாயிரும். பந்தத்துக்குக் காரணம் தேகமாதலால் அது நானல்லவெனச் சிந்தித்தலே முக்தியாம். அதுபோலவே கிருகம் தனம் ராஜ்யம் முதலியன எனதல்லவென்கிற நிச்சயம் உண்டாகுமாஞல் அதுவே முக்தியாம். சுகமுனிவர், ஜனகர் வாக்கியத்தைக் கேட்டுச் சந்தோஷித்தவராய் விடைபெற்றுத் தன் பிதாவாகிய வியாசரிடஞ் சென்றனர். வியாசமுனிவரும் புத்திரனுடைய வரவைக்கண்டு அதிகபிரேமையோடு தழுவி வுச்சிமோந்து ஜனக ராஜாவினுல் தனக்குவந்த ஞானவிசேஷத்தை அவர் கூறக்கேட்டு மகிழ்ந்தனர். பின்னர் சுகர் தம் பிதாவினிடத்தில் வேதாத்தி யயனஞ் செய்து ஸர்வசாஸ்திர பாரங்கதராய் ஜனகராஜன், ராஜ்யத்தில் இருந்துகொண்டே விரக்தியடைந்திருந்ததுபோல் தாமும் மனேபந்தமே பந்தமன்றி ஸம்சாரம் பந்தமன்றென்று தெளிந்து விரக்தியடைந்து சுகியாய் வசித்திருந்தனர். பின்னர், பிதாவினுடைய இச்சையின்படி பிதுர்தேவதைகளுக்குப் புத்திரி யாகிய பீவரியென்னும் சுந்தர மங்கையை விவாகஞ் செய்து கொண்டு இல்லறவொழுக்கத்தினின்று கிருஷ்ணன், கௌரப்ரமன், பூரிதன், தேவ ஶ்ருதன் என்கிற நான்கு புத்திரர்களையும், கீர்த்தி என்கிற ஒரு பெண்ணையும் பெற்று அப்பெண்ணை விப்ராஜ புத்திரனுகிய அணுவென்னும் மகானுக்குக் கொடுத்தனர். அந்த அணுவென்பவர் பிரமதத்த னென்னும் புத்திரனைப் பெற்றனர். அவர் சௌரிய பல பராக்கிரமத்தினுல் அரசனுகித் தமது விருத்த வயதில் நாரத முனிவருடைய உபதேசத்தினுல் யோகமார்க்கத்தையும் பிரம்மஞானத்தையும் உடையராய்த் தனது புத்திரனிடத்தில் ராஜ்யபாரத்தை விட்டு, பதரிகாச்சிரமத்தை யடைந்து அங்கு முன்போலவே நாரத முனிவரால் மாயா பீஜ மந்திரம் உபதேசிக்கப் பெற்று சத்திய ஞானத்தையடைந்து முக்தி யடைந்தனர். பின்னர், சுகமுனிவர் தன் பிதாவை விட்டு நீங்கி, கயிலாய பர்வதஞ்சென்று தியான நிஷ்டராய், சங்கவர்ஜிதராய் அணிமாதி சித்திகளையடைந்து அப்பர்வதத்திலிருந்து உதய கிரியினின்றெழும் சூரியனைப்போல் ஆகாயத்தில் எழும்பினர். அப்பொழுது ஸ்ரீ கயிலாயம் இரண்டு சிகரமுடையதுபோல் ஆயிற்று. அன்றியும் இவரெழுந்த வேகத்தாற் சிறிதசைந்தது. அதனுற் பிறரெல்லாம் இஃதென்ன உத்பாதமென்று எண்ணவும் வந்தது. சுகர் வாயுவைப்போலும் எப்பொழுதும் ஆகாய ஸஞ்சாரியாய் ரிஷிகளால் துதிக்கப்பெற்றவராய் விளங்கி யிருந்தனர்.

சர்வஜ்ஞராகிய வியாசமுனிவர் புத்திர சோகத்தால் அடிக்கடி ஓ புத்திரனே! புத்திரனே! என்று கதறிக்கொண்டே சுகர் எந்த மலையை நோக்கிச் சென்றனரோ அந்த மலையை யடைந்து அங்குங் காணுமல், புத்திரா என்ற சொல்லையே பெருங்கூச்சலோடு

இடைவிடாமற் சொல்லிக்கொண்டே சிந்தாகுலத்தோடும் அம்மலையைச் சுற்றிக்கொண்டிருந்தனர். அவர் கூறிய அச்சொல்லோசை அம்மலையில் வியாபித்து இவரைப்போலவே அதுவும் ஓயாது எதிரொலி செய்துகொண்டிருந்தது. இவ்வாறு வியாசர் துயரப்பட்டுக்கொண்டிருப்பதைப் பரமசிவனார், சகியாதவராய்ச் சுகரைப்போல் எதிரொலி கொடுத்தனர். அன்று முதல் அப்பருவதத்தையாரொருவர் துயரமுற்றடைகின்றாரோ அவர்களுக்கு அவரது துன்பம் அகலுமாறு அது எதிரொலி கொடுத்துக்கொண்டிருக்கின்றது. பின்னர் சிவனார், புத்திரசோகத்தால், சுகனே! சுகனே! அப்பனே! அப்பனே! என்று கூவிக்கூவிக் கதறியழும் வியாசரருகில் வந்து, ஓ வியாசனே! நீ சோகமடைய வேண்டாம். உன் புத்திரன் யோகாப்பியாசத்தில் பரமோத்கிருஷ்டத்தையடைந்து ஒருவராலும் அடையக்கூடாத ஆகாச ஸஞ்சார சாமர்த்தியத்தையடைந்திருக்கின்றான்; ஆதலால் நீ துயரத்தையடையவேண்டாம். சுகனால் உனது புகழ் எங்கும் பரவியிருக்கின்றது என்று அனுக்கிரகஹஞ் செய்தனர். அப்பொழுது வியாசர், ஹே பரமசிவா! தேவரீர் எவ்வளவு சொல்லியும், அடியேனுக்குச் சமாதானம் பிறக்கவில்லை; புத்திரசோகமுஞ் சிறிதும் நிவர்த்தியாகவில்லை; இப்பாசத்திற்கு யான் என் செய்வேன்? ஹே சங்கரா! அடியேன் கண்களால் காணப் பெறாத தேவரீரைக் காணப்பெற்றும் திருப்தியடையாமல் புத்திரனைக்காணவேண்டுமென்கிற விருப்பத்தையே மேலாகக்கொண்டிருக்கின்றேனே, அறிவிலியாகிய யான் என்செய்வேன்? அடியேன் பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்றனர். சிவனார், ஓ வியாசனே! நீ புத்திரனையே பார்க்கவேண்டுமென்று விரும்பியிருக்கின்றபடியால் சுகனை உனது பக்கத்தில் சாயா ரூபமாய்த் தோன்றும்படி அனுக்கிரகஞ் செய்கின்றேன். அந்தச் சாயையைக்கண்டு உனக்குண்டாயிருக்கும் புத்திரசோகத்தை நிவிர்த்தித்துக் கொள்வாயென்று வரந்தந்து மறைந்தனர். வியாசரும் தமது ஆச்சிரமத்தையடைந்து சாயாரூபமாய்த் தோன்றிய புத்திரனைக் கண்டனர். கண்டுந் திருப்தி யடையாமல் முன்போலவே புத்திர சோகத்தால் தஹிக்கப்பட்டு துக்காக்கிராந்தராயினர். "மக்கண்மெய் தீண்டல் உடற்கின்ப மற்றவர், சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு" என்று மெய்ம்மொழியிற் கூறியவாறு செவிக்கின்பமாகிய மழலைச்சொற் கேட்கப் பெற்றோமில்லை. மெய்க்கின்பமாகிய மெய்தீண்டப் பெற்றோமில்லை. "குழலினிது யாழினிது என்ப தம் மக்கள், மழலைச்சொற்கேளாதவர்" என்று கூறியவாறு மகவின் மழலைச் சொல்லை இனிதென்று கூறப்பெறாது, குழலோசையும் யாழோசையும் இனிது இனிதென்று கூறப்பெற்றோமென்று எண்ணுந் தோறும் துன்பமே பெருகி புத்திரசோகந் தகிக்கத் துக்காக்கிராந்தராயினர். (32–59)

ஓம் காமேஶ்வர தபஸ்ஸித்யை நம:

## 20. திருதராஷ்டிராதியர் உற்பத்தி

தவத்திற் சிறந்த சௌனகாதி முனிபுங்கவர், சூதமுனிவரைப் பணிந்து, ஓ ஸர்வஜ்ஞராகிய சூதரே! சுகமுனிவர் தெய்வத்தன்மை யடைந்து ககனஸஞ்சாரியான பின்னர் வியாசர் யாது செய்தனர்? அதனைச் சொல்லுமென்று கேட்க, சூதர் கூறுகின்றார்: வியாசர் தம் முடைய ஆச்சிரமத்தையடைந்து வசிக்குங்காலத்தில் அஸிதர், தேவலர், வைசம்பாயனர், ஜைமிநி, சுமந்து முதலிய தபோதனர் அவரிடத்தில் வேதாத்யயனஞ்செய்து கொண்டுவந்து சிஷ்யத் துவத்தையடைந்து விடைபெற்றுத் தங்கள் தங்களிடம் போய்ச் சேர்ந்தனர். வியாசர் அங்கிருப்பதற்கு மனமில்லாமல் தம்மிடத்தில் அத்யயனஞ் செய்துபோன தபோதனர் இடந்தோறுஞ் சென்றனர். புத்திரசோகத்தால் அங்கும் இருக்கமனமில்லாதவராய் மீண்டுந் தமது தபோவனத்தையடைந்து ஐபாதிதியான விசேஷத்தாலும் சாஸ்திரசிந்தனை விசேஷத்தாலும் சிலநாள் கழித்திருந்தனர். பின்னர் புத்திரசோகமுற்று மனம்பொங்கி பெருமூச்செறிந்து இனி நாம் எங்கேயாயினும் போய்விடுவோமென்று எண்ணினர். அப் பொழுது கங்காதீரத்தில் தம்மை நினைத்துத் *துக்கித்திருக்க, விட்டுவந்த வலைஞர் பெண்ணாகிய சத்யவதி என்னுந் தமது தாயை நினைத்து அவ்விடஞ்சென்று தாயைக்காணமல் அங்கிருக்கும் வலை ஞர்களைப்பார்த்து, ஓ வலைஞர்களே! இவ்விடத்தில் அதிக சுந்தரி யாய் ஓரம்மணி யிருந்தனளே அவ்வமணி எங்குச் சென்றனள்? என்றுகேட்க, அவர்கள் எங்கள் அரசனிடஞ் சென்றனள் என்ன, அதைக்கேட்டு, அங்கு சென்றனர். வலைஞர் குலதிலகனாகிய தாசரத னென்னும் அம்மன்னவன், இவரது வரவைக்கண்டு மகிழ்ந்து அன் போடு அர்க்கிய பாத்தியாதிகள் தந்து கைகூப்பி நின்று விநயத் துடன், ஓ வியாசபகவானே! இப்பொழுது தேவரீரது வரவால் எனது ஜன்மம் ஸபலமாயிற்று; எங்கள் குலமும் பரிசுத்தமடைந் தது; தேவர்களுக்குங் கிடைத்தற்கரிதான உமது தரிசனம் எனக் கிப்போது கிடைத்தமையால் எனது பாக்கியத்தை என்னவென்று சொல்லுவேன்? என் பாக்கியமே பாக்கியம். என்பால் கருணை கூர்ந்து எழுந்தருளியது யாதுகாரணமோ? அதனைத் தயை செய் தருளும். யானும் என்னுடைய மனைவி முதலிய ஸர்வ பதார்த்தங் களும் உம்முடையன. ஆகையால் உமக்கு வேண்டியவை எவையோ அவைகளை யடைவதற்கு யாது தடையுளது என்றனன். (1–10)

தனது தாயாகிய சத்தியவதி, சந்தனு என்னும் அரசனுக்கு இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருக்கின்றாளென்பதைச் சிலரால் அறிந்தவராய் அவ்வலைஞரரசனை ஒன்றுங்கேட்க மனமில்லாமல்

* தம் மகனாகிய சுகன் தம்மைத் துக்கத்திலிருக்கவைத்துச் சென்ற படியால் தம்மைப்பிரிந்த துக்கத்தால் தம்தாயாராகிய சத்யவதி எவ்வாறிருக் கின்றனளோ வென்றெண்ணி அங்குச்செல்ல நினைத்தாரென்க.

திரும்பி, இனிநாம் வனத்திற்சென்று அங்கு தவஞ்செய்து காலங் கழிப்பதே நலமென்று நினைத்து ஸரஸ்வதிநதி தீரத்தில் மனோகர மான ஆச்சிரமமொன்று அமைத்துக்கொண்டு அங்கு தவம் புரிந்து வந்தனர். இவர் செய்தி இங்ஙனமிருக்க, சந்தனு என்னும் அரச னுக்கு முதல் மனைவியாகிய தர்மபத்தினிக்கு காங்கேயன் (பீஷ்மன்) என்னுந் தவசீலனாகிய ஒரு மகன் பிறந்தான். அவ்வரசனது காமக்கிழத்தியாகிய சத்யவதி என்னும் வியாசரது தாயாகிய இரண் டாவது மனைவிக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். அவருள் மூத்தவன் சித்திராங்கதன், இளையவன் விசித்திரவீரியன். இவர் கள் சர்வ லக்ஷணங்களோடும் சர்வ சுகுணங்களோடும் மஹாவீர பலங்களோடும் தந்தையாருக்குவேண்டும் சுகங்களைக் குறிப் பறிந்து செய்கின்றவராயும் இருந்தனர். இம்மூன்று புத்திரர்களும் உயர்வு தாழ்வின்றி எல்லா விஷயங்களிலும் சமானதருமம் உடைய வர்களாய் இருப்பதையறிந்த சந்தனு, இறுமாந்து நம்மைத் தேவர் களாலும் வெல்லமுடியாதென்கிற நினைவோடு வயோதிகப்பருவமள வுந்தீரனாய் வாழ்ந்திருந்து சுவர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனன். இவனது சீமந்த புத்திரராகிய பீஷ்மர் அவனுக்குச் செய்யவேண் டிய உத்தரக்கிரியைகளை விதிப்படிச் செய்துமுடித்தனர். (11-18)

பின்னர் பீஷ்மர் தனது சகோதரனான சித்திராங்கதனை அரசா க்ஷிக்குரியனாக்கி ராஜ்யபரிபாலனஞ் செய்துவரும்படி கட்டளையிட் டுத் தான் விரதசீலனாயிருந்தனர். சுதந்தரத்தை யடைந்த சித்தி ராங்கதன் தன் தந்தையைப்போல் தானும் தனக்குச் சமானமான பலிஷ்டன் உலகில் ஒருவருமில்லையென்று இறுமாந்து மக்களுயிர்க் குத் தீராத்துயரத்தைச் செய்துவந்தனன். ஒருநாள் வேட்டையாடும் நிமித்தம் அநேக சேனைகளுடன் அரண்யஞ்சென்று அவ்விடத்தி லுள்ள துஷ்டமிருகங்களைக் கொலைசெய்துகொண்டுபோகும் பொழுது அங்கிருந்த கந்தர்வ ராஜனொருவன் இவனுடைய கொடு மைக்கஞ்சி தனது விமானத்தை அப்புறஞ்செலுத்திச் சென்றனன். சித்திராங்கதன் அஞ்சிச் செல்கின்ற அக்கந்தர்வனைப் பார்த்து, நாம் வருகின்ற மார்க்கத்தில் இவன் அஞ்சாது போகின்றானல்லவா வென்று அகங்காரங்கொண்டு அவனை விமானத்தோடு பிடித்திழுத் தனன். கந்தர்வராஜன் கோபங்கொண்டு மூன்றுவருஷங் கொடு மையான யுத்தஞ்செய்து முடிவில் சித்திராங்கதன் கந்தர்வனால் கொல்லப்பட்டு இந்திரலோகஞ் சேர்ந்தனன். பீஷ்மர் அதைக் கேட்டுக் கவலையுற்று அவனுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியை களை முடித்துப் பின்னர் மந்திரர்களை வரவழைத்து, ஓ அமைச் சர்காள்! இனி யாரை யரசாளச்செய்யலாமென் றாலோசித்துத் துணிந்து, அவன் தம்பியாகிய விசித்திரவீரியனை அரசனாக்கி அரசாளச்செய்தனர். சித்திராங்கதன் இறந்துபோன செய்தியைச் சத்தியவதி கேட்டுப் பெருந்துயரத்தில் மூழ்கிப் பின்னர் தனது இளைய பிள்ளைக்குப் பட்டமானசெய்தியைக் கேள்வியுற்று, அத்துயரத்தை யொழித்துச் சந்தோஷமடைந்தனள். இச் செய்தியை வியாசருங் கேட்டுமகிழ்ந்தனர். பீஷ்மர், அரசாக்ஷி

புரியும் விசித்திரவீரியன், யௌவன தசையோடுங்கூடி யிருப்பதைக் கண்டு கலியாணஞ் செய்விக்கவெண்ணி ஆலோசித்திருக்கும் பொழுது, காசிராசன் தனது புத்திரிகளான அம்பா, அம்பிகா, அம்பாலிகா, என்னும் மூன்று பெண்களுக்கும் விவாகஞ் செய் விக்கும் உத்தேசியமாய்ச் சுயம்வரம்நாட்டி, சகல தேசத்தரசரும், அரசபுத்திரரும் வந்துசேரும்படித் தெரிவித்தனன். அச்செய்தியை பீஷ்மர் கேள்வியுற்று ரதாரூடராய்ச்சென்று, அங்கு வந்திருந்த அரசர்களையும், அம்மூன்று பெண்களையுங் கைப்பற்றியிருந்த சாளுவதேசத்து அரசனை வெற்றிகொண்டு அவ்வரசனைக் கீழே தள்ளிவிட்டு அம்மூன்று பெண்களையுந் தன் தேரிலேற்றிக்கொண்டு அம்மூவரையும் முறையே, தாயாகவும், தங்கையாகவும், புத்திரி யாகவும் பாவித்து, வெகுவீரியத்தோடு அஸ்தினபுரத்தை வந் தடைந்து, சத்தியவதியை வரவழைத்து, என் தாயே! இப்பெண் களைப் பார்த்தனையா? ஒருத்தி என் தாய், ஒருத்தி என் தங்கை, ஒருத்தி என் புத்திரி என்று அவளிடத்தில் ஒப்புவித்துப் பின்னர், அப்பெண்களைப் பார்த்து ஓ பெண் சிகாமணிகளே! சத்தியவதி யாகிய இவ்வம்மை என் சிறிய தாய்; ஆகையால் நீங்கள் மூவரும் இவள் சொற்படியே கேட்டு நடக்கவேண்டுமென்று கட்டளையிட்டுப் பின்னர் அப்பெண்களைத் தன் சகோதரனை விசித்திரவீரியனுக்கு விவாகஞ்செய்விக்கவெண்ணி பிராமணர் களையும், சோதிடர்களையும் வருவித்து முகூர்த்தம் நிச்சயஞ் செய்து விவாகத்துக்கு வேண்டிய சாமக்கிரிகளைச் சேகரித்து விட்டனர். (19-34)

இச்செய்திகள்யாவும் மூத்தவளாகிய அம்பா என்பவள் கேள்வியுற்று, பீஷ்மரிடம்வந்து நாணத்தோடு நின்று கூறு கின்றாள்: ஓ கங்காபுத்திரனே! இந்தக்குருவம்சத்தில் நீர் மூத்தவ வர். எல்லா தருமங்களையும் அறிந்தவர். இந்தக் குலத்தை விருத்தி செய்விக்குங் கடமையை மேற்கொண்டவர். இத்தகைய நீர், சாளுவதேசாதிபதியினால் கைக்கொள்ளப்பட்ட என்னைக் கைக் கொண்டு மனசினால் அங்கீகரித்துக் கையைப்பிடித்துக்கொண்டவர். இப்பொழுது அவைகளை மறந்து, என்னை வேறொருவருக்குக் கொடுப்பதாக நிச்சயித்தீரே! இச்செய்கை இந்தக் குருவம்சத் திற்குத் தக்கதுதானா? முன் என்னைக் கைப்பற்றிய பொழுது உம்மையே பர்த்தாவாக நிச்சயித்துவிட்டேன். எல்லா தருமங் களையும் உணர்ந்த நீரும் அப்பொழுது அப்படியே நினைத்தீர். அவையெல்லாம் இப்பொழுது சொல்வதிற் பயனென்னை? நீரோ பலிஷ்டர்; உம்முடைய மனதில் எச்சமயத்தில் எவ்விதமாய்த் தோன்றுகிறதோ அவ்விதமாய் யாவையும் ஒழுங்குபடச்சொல்லி சரிசெய்யும் ஆற்றலும், சொற்சாதுரியமும் உடையவர். உம்முடைய இஷ்டப்படியே செய்யும் என்றனள். (35-39)

அவ்வார்த்தையை பீஷ்மர் கேட்டு, தருமசாஸ்திரம் உணர்ந்த விருத்தப்பிராமணர்களையும், சிறியதாயாகிய சத்தியவதியையும், மந்திரிகளையும் வரவழைத்து அவர்களிடம் அப்பெண் கூறிய நீதி

கூறி இதற்கு யான் செய்யவேண்டியது என்ன? யானோ எப்பொழுதும் விவாகஞ் செய்துகொள்வதில்லை என்று பிரதிக்ஞை பண்ணிக் கொண்டிருக்கின்றேன். இவ்விஷயத்தில் உங்களுக்குத் தோன்றுகின்றதனைச் சொல்லுங்கள் என்றனர். அப்பொழுது அவர்களும் அப்பெண்ணினுடைய அபிப்பிராயப்படியேகூறி, மறுபடி அப்பெண் மற்றொருவருக்கு உரியவளாகாளென்றுங் கூறினர். அதைக் கேட்ட பீஷ்மர், தாம் கொண்ட விரதத்தை விடுவதற்கு எண்ணமில்லாதவராய் அப்பெண்ணையழைத்து, நீ பூர்வத்தில் சாளுவதேசத் தரசனால் வரிக்கப்பட்டமையால் எனக்கு உரியவளாகாய். ஆகையால் இனி உன்னிஷ்டப்படி எவர்பாற் செல்லவேண்டுமோ அவர்பாற் செல்லலாம். ஒருகணமும் இவ்விடத்தில் நில்லாதேயென்று கடிந்துத் துரத்திவிட்டனர். அவள் அதிக துயரத்தோடு தன்னைப் பூர்வத்திற் கைபிடித்த சாளுவதேசாதிபதியினிடஞ்சென்று, தனக்குநேரிட்ட ஆபத்தைக்கூறி கூ கூவென்றலறி, என்நாயகனே! இனி என்னை உன்னிஷ்டம்போல் பாணிக்கிரஹணஞ்செய்து கொள்ளும், யானும் உம்மிஷ்டம்போல் நடந்து கொள்ளுகிறேன்; நீரும் என்னைப் பூர்வத்தில் விவாகஞ்செய்து கொள்ளுகிறதாகச் சுயம்வரத்தில் வந்தவர்தானே? ஆகையால் இப்பொழுது என்னை அநாதரணை செய்யாமல் அங்கீகரித்துக்கொள்ளும் என்று பிரார்த்தித்தனள். அவ்வரசன் அவளைப்பார்த்து, ஓ பெண்மணியே! நான் உன்னைக் கைப்பற்றியிருந்த அக்காலத்தில் யாவருங்காணப் பீஷ்மர் பலாத்காரமாய் உன்னை வரித்துத் தன்னுடைய ரதத்தில் ஏற்றிக்கொண்டு போய்த் தானும் வைத்துக்கொள்ளாமல் தள்ளி விட்டபடியால் யானும் உன்னைப் பாணிக்கிரஹணஞ் செய்து கொள்ளமாட்டேன். பிறர் கைப்பற்றித் தள்ளிவிட்ட பெண்ணை எந்த மூடன்தான் கைக்கொள்வான்? ஆகையால், பீஷ்மரால் பரிகரிக்கப்பட்ட உன்னை யான் வரிக்கமாட்டேன். இனி நீ எனக்குத் தாய் ஆவாய் எனக்கூறி நிக்ரஹித்துவிட்டான். பின்னர், அவள் பெருந் துக்கத்தில் மூழ்கிக் கதறிக் கதறி ஓ வென்றழுதுகொண்டே மீண்டும் பீஷ்மரிடம் வந்து, ஓ பீஷ்மரே! யான் உம்மால் வரிக்கப் பட்டவளானபடியினால் பாணிக்கிரஹணஞ் செய்துகொள்ள மாட்டேனென்று சாளுவனுந் தள்ளிவிட்டான்; இனி நீர்தான் பாணிக் கிரஹணஞ்செய்து கொள்ளவேண்டும். வேறு எனக்குக் கதியாவார் யார்? சகல தருமங்களையும் அறிந்த நீர் என்னை அநியாயஞ் செய்வது நீதியன்று; இனி என் வேண்டுகோளை மறுப்பீராயின் பிராணஹானியை யடைவேனென்பதில் ஐயம் வேண்டாமென்றனள். பீஷ்மர், ஓ பெண்ணே! இவ்வார்த்தையை முன்னமே சொல்லலாகாதா? வேறு புருஷனிடத்தில் எண்ணம் வைத்திருந்த படியினாலல்லவா யான் வேண்டாமென்றவுடனே, இது நல்ல காலந்தானென்று சென்றுவிட்டாய்; அங்கு உன்னெண்ணம்போல் முடிவு பெறாமையினாலல்லவா மீண்டும் என்னிடம் வந்து சேர்ந்தனை. வீணாய் ஏனழுகிறாய்? இப்படிப்பட்ட கெட்ட வெண்ணமுடைய வுன்னை அங்கீகரிக்கமாட்டேன். ஆகையால் உன் தந்தையிடம்

போய்ச் சேர்வாய் என்றனர். பீஷ்மரால் மறுக்கப்பட்ட அம்பா இனி ஒருவருடைய முகத்தையும் பார்ப்பதில்லை என்று நெருங்கிய வனம்புகுந்து மனுஷ்ய சஞ்சாரமில்லாத ஓரிடத்திற்றங்கிப் பரிசுத்தமான ஓர் தீர்த்தக் கரையில் தவம்புரிந்து கொண்டிருந்தனள். (40–50)

விசித்திரவீரியன், மிகரூபவதிகளான அம்பிகா அம்பாலிகா என்கிற இரண்டு பெண்களையும் விதிப்படி விவாகஞ்செய்து கொண்டு அப்பெண்களோடு கிருகத்திலும் வனத்திலும் உத்தியான வனத்திலும், நானாவிதமான காம ரசங்களை ஒன்பது வருடமளவும் போகித்துப்பின் க்ஷயரோகத்தாற் பீடிக்கப்பட்டு மரணமடைந்தனன். இச்சேதியை யறிந்துகொண்ட சத்தியவதி பெருந்துக்கமடைந்து, அவனுக்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை மந்திரிகளைக்கொண்டு முடித்து, பின்னர் பீஷ்மரை யழைத்து ஏகாந்த ஸ்தானத்தில் வைத்துக்கொண்டு பெருந்துயரத்துடன், ஓ புத்திரனே! உன் பிதாவினால் சம்பாதிக்கப்பட்ட அகண்ட ராஜ்யத்தையும், உன் சகோதரருடைய மனைவிமார் இருவரையும் வைத்துக்கொண்டு வம்சத்தையும் அரசாக்ஷியையும் விருத்திசெய்வாயாக; யான் சொல்லியவாறு நீ செய்யாமற் போவாயானால் யயாதி மகாராஜாவினுடைய இந்த வம்சமானது க்ஷீணதசையை யடைந்துவிடும் என்றனள். பீஷ்மர் ஓ தாயே! என் தந்தை நிமித்தம் யான் செய்திருக்கும் பிரதிக்ஞை நீ யறியாயோ? அறிந்திருந்தாலும் அறியாதிருந்தாலும் யானிப்பொழுது சொல்லுகிறேன். என்னை யெனில், நான் இராஜ்ய மாளுகிறதில்லை என்றும், விவாகஞ் செய்துகொள்ளுகிறதில்லை என்றும் பிரதிக்ஞை செய்திருக்கிறேனென்றனர். சத்தியவதி மகாதுக்கத்தையடைந்தவளாய், இந்த வம்சமானது எப்படி விருத்தியடையப்போகின்றது? அரசன் இல்லாமற் போனால் ராஜ்யத்தில் நீதி தப்பிப்போமே? என்று பலவாறான குறைமொழிகளைக் கூறும்போது பீஷ்மர், ஓ அம்மணி! நீயேன் வீணாக வியசனப்படுகிறாய்? விசித்திரவீரியனுடைய மனைவியினிடத்தில் நல்லகுலத்திற் பிறந்த பிராம்மணனை யழைத்துவந்து புணரும்படிச் செய்து புத்திரோற்பத்தி செய்துகொள்ளலாம். குலம் நாசத்தை யடையவருந் தருணத்தில் இவ்வண்ணஞ் செய்வது தோஷமன்று. வேதத்திலும் இவ்வாறே கூறியிருக்கின்றது. ஆகையால் நீ பௌத்திரனை உண்டுபண்ணிக்கொண்டு அவனுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்து விடுவாய். அதுவரையில் உன்னுத்தரவின் பேரில் யானாண்டு வருகிறேன் என்று கூற, சத்தியவதி, அவ்விதியைக் கேட்டு, கானீனனும், தனக்குப் புத்திரனும், துவைபாயனனுமான வியாசபகவானை நினைத்தனள். அவர் ஞானதிருஷ்டியினாலறிந்து அந்த க்ஷணமே வந்து தாயை வணங்கி நின்றனர். அப்பொழுது பீஷ்மரும் வந்து பூஜித்தனர். சத்தியவதி அக்கினி தேவனைப்போல் தேஜோநிதியாய்ப் பிரகாசிக்கின்ற வியாசரைப் பார்த்து, ஓ புத்திரா! நீ விசித்திரவீரியனுடைய மனைவியினிடத்தில் உன்னுடைய வீரியத்துக்குத் தக்கவாறு புத்திரனை யுண்டு

பண்ணக்கடவாயென்றனள். வியாசர் அதனைக்கேட்டு பிரண வோச்சாரணை செய்து மாதுர்வாக்கியத்தை மறுக்கக் கூடாதென்கிற நீதிவாக்கியத்தை யெண்ணி அங்கீகரித்து விசித்திரவீரியனுடைய மனைவியாகிய அம்பா என்பவளுக்கு மாதந்தோறும் வரும் ருது ஸ்நானத்தை எதிர்பார்த்திருந்து அவளோடு சங்கமஞ்செய்து அந்தகனாகிய ஒரு புத்திரனைப் பெற்றனர். பிறவிக் குருடனாகப் பிறந்த அப்பிள்ளையை சத்தியவதி பார்த்து, தீராக்கவலையடைந்து அவனது இரண்டாம் மனைவியாகிய அம்பாலிகையை யழைத்து, ஓ பெண்ணே! நீயாவது அந்த வியாசரோடு சேர்ந்து நல்ல புத்திரனைப் பெறுவாயென்று கூற, அவள் அச்சொல்லைக்கேட்டு உடன்பட்டவளாய் வியாசரைப் புணர்ந்து பாண்டு என்னும் வியாதியோடு கூடிய ஒரு புத்திரனைப் பெற்றனள். வெண்குஷ்டத் தோடு கூடிய பிள்ளைபிறந்தானென்று சத்தியவதி கேள்வியுற்று இவனும் அரசியலுக்கு உரியவனல்லவே என்று மாறாத் துயர மடைந்து ஒரு வருடமான பின்னர் மறுபடியும் மருமகளை யழைத்து, பெண்ணே! இரண்டு பிள்ளைகளும் அரசியல்செலுத்துந் தன் மைக்கு உரியராகாமற்போயினரே; உன்னை வியாசனோடு கூடும்படி வேண்டிக்கொண்டதும் அதற்கேயன்றோ? நீ மனம்வேறுபட்டு இப்படிச் செய்து விட்டனையே; இனியேனும் மனம் ஒருமித்து அந்த வியாசனோடுகூடி ஒரு நல்லபிள்ளையைப் பெறுவாயென்று வேண்டிக்கொண்டனள். பின்னர் வியாசரையும் வரவழைத்து அவரையும்வேண்டிக்கொண்டு அன்றிரவில் அதிக அலங்காரத் தோடுகூடி யிருக்கின்ற பள்ளியறையைப் போய்ச்சேரும்படி செய் தனள். மருமகள் சத்தியவதிக்கு உடன்பட்டவள்போல் நடித்து, விடை பெற்றுச்சென்று படுக்கையறையைப்போய்ச் சேராமல் தனக் குப்பதிலாகத் தாதியை யனுப்பினாள். அவள் அந்த வியாசரை இன்பமாய்க்கூடி இயமனுடைய அம்சமான ஸத்வகுண ஸம்பன்ன ராகிய விதுரனைப் பெற்றனள். இந்தப்பிரகாரம் கௌரவ வம்ச விருத்தியின் பொருட்டு சத்தியவதியானவள் வியாசராலே வீரர்க ளாகிய திருதராஷ்டிரன் முதலிய மூவரையும் உண்டாக்கிய முறை மையைக் கூறினேன். (51–74)

முதல் ஸ்கந்தம் முற்றிற்று.

# இரண்டாம் ஸ்கந்தம்

**कंचन काञ्चीतिलकं करधृतकोदण्डबाणसृणिपाशम् ।**
**कठिनस्तनभरनम्रंकैवल्यानन्दकन्दमवलम्बे ॥ २ ॥**

**கஞ்சன காஞ்சீதிலகம் கரத்ருத கோதண்டபாண ஸ்ருணிபாஶம்**
**கடின ஸ்தனபர நம்ரம் கைவல்யானந்த கந்த மவலம்பே.**

ஓம் காமேஶ்வர மநப்ரியாயை நம:

## 1. மச்சகந்தி உற்பத்தி

சவுனகர் சூதமுனிவரைப் பணிந்து வினவுகின்றார் : ஸர்வ புராணப் பிராஜ்ஞரே ! இப்பொழுது தேவரீர் கூறிவந்தவைகளிற் சிற்சில சந்தேகங்கள் தோன்றி என் மனத்தையும் இங்குள்ளாராகிய முனி கணங்களுடைய எண்ணங்களையும் பிரமிக்கச் செய்கின்றன. அவற்றை மாற்றியருளல் வேண்டும். திருதராஷ்டிரராதியருடைய உற்பத்திகள் சத்தியவதியினுடைய ஆணையின்படி வியாசரால் ஆயினவென்றும், அந்தச் சத்தியவதியை வியாசருடைய தாயென்றும், சந்தனுராஜன் அந்தச் சத்தியவதியை மனைவியாகக் கொண்டானென்றும், இவளுக்கு விசித்திரவீரியன், சித்திராங்கதன் என்கிற இரண்டுபிள்ளைகள் பிறந்தார்களென்றும் கூறினீரல்லவா? சத்தியவதி, வியாசரை திருதராஷ்டிரராதியருடைய விருத்தியின் பொருட்டுப் பரஸ்திரீகளைப் புணரும்படிச் செய்யவேண்டிய காரணமென்ன? வியாசருக்குத் தாயாயிருக்கின்ற சத்தியவதியே சந்தனுவுக்கு மனைவியானால் வியாசருக்குப் பிதா சந்தனுவா? சந்தனு பிதாவாகாமற் போனால் இவருக்குப் பிதா யார்? இவருக்குப் பிதா வேறொருவரென்றால் சத்தியவதிக்குக் கணவர் இருவரா? சத்தியவதிக்கு இரண்டு பிள்ளைகளென்றீரே, அவர்கள் வியாசருடைய தந்தையாருக்குப் பிறந்தவர்களா? சந்தனுவுக்குப் பிறந்தவர்களா? சூதர், தருமார்த்த காம மோக்ஷங்களைக் கொடுக்கின்றவளாயும், ஆதி சக்தியாயும் இருக்கின்ற பராசக்தியை * "யாதொரு தேவியினுடைய மந்திர பீஜாக்ஷரத்தைப் பக்திஹீனமாக வுச்சரித்த போதிலும் அழிவில்லாத இஷ்ட காமிய சித்தியுண்டாகுமோ அத்தேவி போக மோக்ஷ காமிகளாகிய யாவராலும் எவ்விதத்திலாயினும் ஸர்வாபீஷ்டங்களையுங் கொடுக்கின்றவளாக எப்பொழுதும் ஸ்மரிக்கத்தக்கவள்" என்று தியானித்து, யாவரும் தேவியினுடைய தியானபரராயிருக்க புராணப் பிரசித்த

* "யஸ்யோச்சாரண மாத்ரேண ஸித்திர்ப்பவதி ஶரஶ்வதீ, வ்யாஜேநாபிஹி பீஜஸ்ய வாக் பவஸ்ய விசேஷத:" 'ஸம்யக் ஸர்வாத்மநாஸர்வைஸ்ஸர்வகாமார்த்த ஸித்தயே, ஸ்மர்த்தவ்யா ஸர்வதாதேவி வாஞ்சிதார்த்தப்ரதாயிநீ'.

மாய் விளங்கும் பரிசுத்தமான கதையைச் சவுனகாதியருக்குக் கூறத்தொடங்கினர் : (1–7)

ஓ அனுக்கிரஹ சீலராகிய முனி கணங்காள் ! சேதிதேசத்தில் உபரிசரன் (மேலே ஸஞ்சரிக்கின்றவன்) என்னும் அரசன் தர்மிஷ்டனுயும், சத்யசாகரனுயும், பிராம்மண பூஜையிற் சிறந்தவனுயுமிருந்தனன். அவன் இந்திரனை நோக்கித் தவஞ்செய்ய அவ்விந்திரன் மகிழ்ந்து அவ் வரசனுக்குப் பரிசாக ஸ்படிக மயமாயிருக்கின்ற ஒரு விமானந் தந்து ஆசிபுகன்று போயினன். அன்று முதல் அவ்வரசன் அவ்விமானத்தில் ஆரோகணித்தவனுய் எப்பொழுதும் ஆகாச ஸஞ்சாரியாய் அஷ்டவசுக்களில் இவனும் ஒருவனென்று சொல்ல உலாவி, பின்னர் கிரிகா என்கிற மங்கையை மணம் புணர்ந்து ஐந்து பிள்ளைகளைப்பெற்று, அவ்வைவரும் வீர பராக்கிரமசாலிகளா யிருத்தலைக்கண்டு, தன்நகரைச் சூழ்ந்திருக்கும் ஐந்து தேசங்களைத் தனித்தனியே அவர்களை அரசாளவைத்துத் தான் தன்நகரத்தை யாண்டு வந்தனன். அக்காலத்தில் ஒரு நாள் பிதிர்தேவதைகள் வந்து, ஓ அரசனே ! உன் நகரத்தில் மிருகங்கள் மிகுந்திருக்கின்றன. ஆகையால், நீ இன்று வனஞ் சென்று வேட்டையாடி வருவாயென்று போயினர்; அம்மொழியைக் கேட்ட அரசன், இன்று நம்முடைய மனைவியானவள் ருதுஸ்நான முடையவளா யிருக்கின்றனளே; நாமெப்படி வனம்போகிறது என்று அடியில்வருமாறு சிந்தாகுலனுய்ச் சிந்திக்க லாயினன் : ருது ஸ்நான காலத்தில் மனைவியைப் புணராதவன் பசுவின்கன்றைக் கொலைசெய்தவனுவான் என்றும், பிதுர் வாக்கியத்தைக் கடந்தவன் மஹா பாதக னுவா னென்றும் தரும சாஸ்திரம் கூறுகின்றதே ; இவ்விரண்டில் நாமிப்போது எந்தப்பாதகத்துக்கு ஆளாவது? ஒன்று கெட்டு ஒன்றுதானே முடியும்? இவற்றில் எது விடத்தக்கது! எது செய்யத்தக்கது ? இவ்விரண்டில் பிதுர்வாக்யமே மேலானதென்று கூறியிருக்கின்றபடியால் அதுவே செய்யத்தக்கதென்று துணிந்து வேட்டையாடச் சென்றனன். (8–15)

அவ்வேட்டை, அன்று அரசன் அரண்மனை சேராவண்ணம் பொழுதைப்போக்கி அவனை இரவில் அவ்விடத்திற்றனே தங்கியிருக்கச்செய்தது. அப்பொழுது அரசன், தன்மனையாளை நினைத்து இன்று நம்முடைய மனையாட்டி ருதுஸ்நான முடையவளா யிருந்தும் அவளைக் கூடுதற்கில்லாமல் போயிற்றே என்றும், அவளைக் கூடவேண்டிய நாளி லொருநாள் வீணுயிற்றே என்றும் ஏங்கி அவளுடைய அங்கங்களை எல்லாம் ஒவ்வொன்றுக நினைத்து நினைத்து மயங்கியிருக்கும் பொழுது அவனது வீரியம் வெளிப்பட்டது. அதனை அரசன் பூமியில் வீணுய்ப்போக விடாது ஓரிலையிலையிற் பிடித்துவைத்துக்கொண்டு, அந்தோ ! இந்த வீரியம் வீணுய்ப் போகத் தக்கதன்று. இஃது * அமோகம் ; சிசு உற்பத்திக்

* மோகம் - கெடுதியடையத்தக்கது. அமோகம் - கெடுதியடையத் தகாதது.

கேதுவா யுள்ளது ; ஆகையால் இஃது இன்று எவ்விதத்திலாவது நமது மனைவியினுடைய கர்ப்பத்திற்போய்ச் சேரவேண்டும் என்று மனதில் நிச்சயிக்கும் பொழுது தன்னருகில் ஒரு கழுகிருக்கக் கண்டான். அக்கழுகைப் பார்த்து, ஓ பக்ஷிராஜனே ! உன்னால் எனக்கொரு உபகாரம் ஆகவேண்டும் ; அதனைத்தட்டாமல் நீ செய்யவேண்டும். என்னையெனின், இந்த வீரியத்தை வாங்கிக்கொண்டு என்னுடைய கிருகத்தை யடைந்து கிரிகா யென்னும் என் மனையாளிடத்திற் சேர்த்துவிட வேண்டும் என்று கூறி, தொன்னையிலுள்ள வீரியத்தை எதனாலுங் கெடுதி நேரிடாவண்ணங் காத்தற் பொருட்டு அபிமந்திரித்து அதனிடம் கொடுத்தனுப்பினன். அப்பக்ஷிராஜன் தன் மூக்கினாற் கௌவி எடுத்துக்கொண்டு அதிவேகமாக ஆகாயத்திற் பறந்து போகும் பொழுது மற்றொரு கழுகானது இதனை மாமிச துண்டமென்றெண்ணி, அதிவேகமாய்ப் பின்றொடர்ந்து இறகினாலும் மூக்கினாலும் அடித்துங்குத்தியும் பிடுங்கிக்கொண்டு போகப் பிரயத்தினப்பட்டது. அதனாற் கவர்ந்துகொண்டு போவதற்கு இடங்கொடாமல் இக்கழுகு அதனைப் பாதுகாத்துவரும் பொழுது தெய்வகதியாய்த் தவறி அது பெருவெள்ளமாய்வரும் யமுனா நதியில் விழுந்தது. பக்ஷிகளிரண்டும் போராடிக்கொண் டோடிப் போயின. (16-27)

நதியில் விழுந்த வீரியமானது அவ்வெள்ளத்தில் மிதந்து கொண்டுவர, அதனை ஒரு மச்சம் விழுங்கிவிட்டது. ஓ முனிவர்காள் ! இனி அம்மச்சத்தின் வரலாற்றைக் கூறுகின்றேன், கேளுங்கள்: அந்த மச்சம் அத்ரிகை என்கிற தேவமங்கை. அவள் அந்நதியில் ஸ்நானஞ்செய்து கிரீடித்துக் கொண்டிருக்கும்பொழுது ஒரு பிராம்மணன் சந்தியாவந்தன நிமித்தம் அந்நதியிலிறங்கினன். அப்பிராம்மணன் காலை அந்த அப்ஸர ஸ்திரீயானவள் பிடித்திழுத்தனள். பிராம்மணன் திடுக்கிட்டு நமதுகாலைப் பிடித்திழுப்பது ஜலஜந்துவோ, அரக்கனோ என்றாலோசித்து ஞான திருஷ்டியால் நோக்கித் தனது தவத்தைக்கெடுக்கவந்த ஓர் அப்ஸர ஸ்திரீ என்றறிந்து கோபங்கொண்டு நீ நீரில்வாழுமுயிரைப்போல் என்னுடைய காலைப்பற்றி யிழுத்து சந்தியாவந்தனத்துக்கு இடையூறு செய்தமையால் மச்சமாகக்கடவாய் என்று சபித்தனர். இந்தச் சாபமேற்ற மச்சந்தான் அந்த வீரியத்தை விழுங்கியது. பின்னர் தேவமங்கையாகிய இந்த மச்சம்கர்ப்பமாகி யுலாவிக்கொண்டிருக்க, ஒரு நாள் ஒரு வலைஞன்வந்து வலைவீச, அவ்வலையிற் சிக்கிக் கொண்டது. அப்பொழுது அதற்குக் கர்ப்பமாசம் * பத்து. வலையிற் சிக்குண்ட அம்மச்சத்தை வலைஞன்கண்டு ஆச்சரியமடைந்து அதன்வயிற்றை இரண்டாகப் பிளந்தனன். அதில் ஓர் ஆண்குழந்தையும், ஒரு பெண்குழந்தையும் இருக்கக்கண்டு இதுவென்ன விந்தையினும் விந்தையாக விருக்கின்றதே என்று அந்த இரண்டு குழந்தைகளையும் உபரிசரனாகிய அரசனிடத்திற் கொண்டுபோய்க்

* உண்டது மானிட வீரியமாகையால் ஜலசரங்களுக் குரியனபோலாகாது மாசம் பத்தாயிற்று.

கொடுத்தனன். அவன் அக்குழந்தைகள் தன் வீரியத்திற்குப் பிறந்தனவாமென்றறிந்து, ஆண்குழந்தையை வைத்துக்கொண்டு, பெண்குழந்தையை அவ் வலைஞனிடத்திலேயே கொடுத்து இக்குழந்தையை காளி, அல்லது மத்ஸ்யகந்தி என்றழைக்கக்கடவாய் என்று கட்டளையிட்டனுப்பினன். அவ்வலைஞன் அப்பெண்குழந்தையை வீட்டுக்குக்கொண்டுபோய் அன்போடு வளர்த்துவருநாளில் அக் குழந்தைமேனியில் மச்சநாற்றம் வீசத்தலைப்பட்டது. அதுகண்ட யாவரும் அவளை காளியென வழைக்காமல் மச்சகந்தி என்றே யழைத்துவந்தனர் என்று சூதமுனிவர் கூறும்பொழுது, சவுனகர், இவள் தாயாகிய அத்ரிகை என்ன கதியடைந்தனள். அதனைச் சொல்லவேண்டும் என்ன, சூதர் ஓ முனிவர்களே ! அப்ஸரஸ்திரீ யாகிய அந்த அத்ரிகை தனக்குச் சாபமிட்ட அப் பிராமணரை அப்பொழுதே யடிபணிந்து, ஓ அந்தணரே ! நீர் யாவரிடத்துங் கருணை யுடையவராயிற்றே ! அதனிற் சிறிது என்பால்வைத்து ஒரு விமோசனஞ் செய்யக் கூடாதாவென்று பிரார்த்திக்கும் பொழுது மனமிரங்கினவராய், ஓ சுந்தரமுடையவளே ! சிறிது காலஞ்சென்றபின் நீ கர்ப்பவதியாய் இரண்டு பிள்ளைகளைப் பெறுவாய். அக்காலத்தில் சாப விமோசனமுண்டாய்ச் சுவர்க்கலோக மடையக்கடவாய் என்றனுக் கிரகஞ்செய்தனர். ஆகையால் ஓ முனிவர்களே ! அதுபோல பிள்ளைகளைப் பெறவேண்டிய பத்தாவது மாசத்தில் வலைஞன் கைப்பட்டிறந்து சுவர்க்கமடைந்தனளென்று அறிமின். பின்னர், வலைஞனால் வளர்க்கப்பட்ட மத்ஸ்யகந்தி யானவள் தன்னை வளர்த்துவந்த தாய்தந்தையர் மனமகிழ நடந்து வந்தனள். (28–48)

ஓம் காமேச்வர ப்ராணநாதாயை நமः

## 2. வியாசர் உற்பத்தி

சூதர் கூறுகின்றார் : ஓ முனிவர்களே ! முனிவரிற் சிறந்த பராசரமுனிவர் ஒரு காலத்தில் தீர்த்தயாத்திரை செய்து வரும் போது காளிந்தி என்னும் உத்தமமாகிய யமுனா நதிக்கரையில் வந்து அந்நதியைக் கடத்தற்கு அங்கிருந்த ஓடக்காரனாகிய தாசன் என்னும் வலைஞனைப் பார்த்து, என்னை ஓடத்திலேற்றிக் கொண்டு போய் அக்கரையில் விடுவாயா வென்று கேட்க, அவனப்போது ஆகாரங்கொள்ளும் சமயமாயிருந்தபடியால் அம்முனிவரை நோக்கி, ஓ சுவாமிகாள் ! யான் ஆகாரமுண்ட பின்னர் உம்முடைய இஷ்டம் போல் விடுகிறேனென்று கூறினன். முனிவர், அப்பா யான் அது பரியந்தம் இருக்கமுடியாது ; சீக்கிரமாய்ப் போகவேண்டு மென்ன, அவன் அப்படியானால் இதோ என்னருமை மகளிருக்கின்றாள் ; அவளை யனுப்புகிறேன் என்று உபசாரத்தோடுகூறி, தனக்குப் பிரியமாகத் தன்னால் வளர்க்கப்பட்ட மச்சகந்தியைப் பார்த்து, ஓ ! குழந்தாய் ! இம்மஹானுபாவரை ஓடத்திலேற்றிக்கொண்டு அக்

கரையில் விட்டுவருவாயென்று கூற, மச்சநாற்றமுடைய அப்பெண் அவ்வலைஞனை வணங்கி உம்முடைய கட்டளையின்படியே தவசிரேஷ்டராகிய முனிவரை விட்டு வருகின்றேனென்று விடைபெற்று அம்முனிவர்பாற் சென்று, ஐயா தர்மாத்மாவே! தவசிரேஷ்டரே! விரதசீலரே! இதோ ஓடங்கொண்டுவந்துவிட்டேன் வாரும், இதிலேறும், ஏறும்; உமது ஆகாரத்திற்குக் குறைவின்றிக் கொண்டு போய்விடுகிறேன் என்று பல மதுரமொழிகளைக்கூறி அவரை ஏற்றிக்கொண்டு ஓடத்தை விட்டனள். (1–5)

முனிவர் அவ்வோடம் போகும்போது அவள் அசைந்தசைந்து ஒய்யாரமாய்ப் போவதையும் அவளுடைய ரூபலாவண்ய சௌந்தரியங்களையும் நன்றாய்க் கவனித்துப்பார்த்து ஊழ்வகையால் காம வெள்ளத்தில் மூழ்கிக் கரையேறமாட்டாது, இனி நாம் என் செய்வோம்? நமக்கு யாதொரு பற்றுக்கோடு மில்லையே என்றெண்ணி ஏக்கமுற்றுத் தள்ளாடித் தள்ளாடி அவள் சமீபத்தில் சென்று அவளுடைய வலக்கரத்தைப் பிடித்துக் கொண்டெழுந்தனர். இதனைக்கண்ட மச்சகந்தி தன்கையைப்பிடித்த முனிவரைப் பார்த்து இஃது என்ன கொடுமை! உம்முடைய புத்தி இப்படியும் மோசம் போகலாமா? என் கையைப் பிடித்தது எற்றுக்கு? நல்ல குலத்திற் பிறந்தவராயும், ஆசாரசீலராயும் ஞான வைராக்ய முடையவராயுமிருக்கின்ற நீர் இப்பொழுது அவைகளை மறந்து குலம் முதலியவற்றிலிழிந்த என்னுடைய கரத்தை எப்படிப் பிடிக்கத் துணிந்தீர்? மன்மதனுடைய வேதனைக்குள்ளானீரே! உலகில் மானிடப் பிறப்புவருவது அரிது; அதனினுமரிது பிராம்மணனாகப் பிறத்தல்; அதனினு மரிது பிராம்மணத்துவ முண்டாதல் என்று வேதங்கள் கூறுகின்றனவல்லவா? அவ்வேத மொழியையும், கைவிட்டீரே! ஓ விப்பிரேந்திரரே! என் சமீபத்திலெப்படி யிருக்கின்றீர்? என் சரீரத்தில் மச்சநாற்றம் வீசுகிறதே; அது உமக்கு வீசவில்லையா? உலகில் ஸ்திரீ புருஷாளிருவரும் குலத்திலும் ஆசாரத்திலும் அழகிலும் ஒத்திருந்து கூடுவாராயின் அவர்களுக்குச் சுகமுண்டாகுமேயன்றி இவை மாறுபட்டவர்களுக்குச் சுகமெப்படி யுண்டாகும்? ஆகையால் நீர் என்னைக் கைப்பற்றியதும் என் சமீபத்திலிருப்பதும் ஆகிய இச்செய்கைகள் எனக்கு அருவருப்பைத் தருகின்றன. அருவருப்படைந்திருக்கிற என்னிடத்தில் உமக்கு எப்படிச் சுகமுண்டாகும்? மந்தபுத்தி யுடையவரே! பின் வருவதை ஆலோசியாமல் திடீரென்று என்கையைப் பிடித்தீரே! அப்பொழுது நான் பயந்தாவது அல்லது நம்முடைய கையை இவர் பிடிக்கலாமா என்றெண்ணியாவது இவ்வோடத்தைக் கவிழ்த்துவிடுவேனாயின் நீர் என்ன செய்வீர்? என்னையுமிழந்து உம்முயிரையுமிழந்து விடுவீரே! உம்மால் வஞ்சனையில்லை. மன்மதனுடைய பஞ்சபாணங்களினா லடிபட்டவர்களில் யாவர் பிழைத்தனர் என்று கூறிய மொழியை முனிவர் கேட்டுச் சிறிது திடுக்கிட்டனர். அது கண்ட மச்சகந்தி, ஓ முனிவரே! என்ன திகிற்படுகின்றீர்? நான் ஓடத்தைக் கவிழ்த்து விடுவேனென்றால் நான் கவிழ்ப்பேனா? நீர்

அஞ்சாதிரும் என்று கூறினள். இம்மொழிகளைக் கேட்ட முனிவர் இவளுடைய சாகசக்யமாயிருக்கிற ஹிதமொழிகளை யூகித்து இவள் வலைஞர் மகளாயினும் அறிவிற் சிறந்தவளே என்று தன்னுள்ளே மகிழ்ந்து கூறுகிறார் : (6-14)

ஓ பெண்மணியே! என்னை மந்த புத்தி யுடையவனென்றும், மன்மத பாணத்தால் வருந்துகின்ற அறிவிலியென்றும், இழித்துக் கூறினையாயினும் யான் உன்பாற்கொண்ட மோகத்தைவிடக் கூட வில்லை என்று அவள் கையைவிட்டு மனதிற்சில எண்ணுமளவில் அப்பெண் கரைசேர்ந்தனள். முனிவர் கரைசேர்ந்தவுடன் அப் பெண் எங்கு போய்விடுவாளோ வென்று மீளவுங் கையைப் பிடித் துக்கொண்டு, ஓ சுந்தரீ! உன்சரீரம் மச்சநாற்றம் வீசுகின்றதென் றல்லவா கூறினை. இப்பொழுதே அந்நாற்றம் பரிமள நாற்றமாக வீசச்செய்கிறேனென்று தன் தபோபலத்தினால் அவ்வாறே செய்து சத்யவதி யென்று பெயரிட்டு, ஓ சத்தியவதீ! என்றழைத்து நீ முன் மச்சகந்தியா யிருந்தபடியால் எனக்கு நீ ஒத்தவளன்றென்று கூறினாய். இப்பொழுது பரிமளகந்தியானதால் இனி யெனக்கு நீ ஒத்தவள்தானே; இனி காமசுகமுண்டாவதற்குத் தடையென்ன? உன் பரிமளமானது ஒரு யோசனைதூரம் மிருக மதம்போல் வீசுகின்றது என்று சரசமொழிகளைக்கூற அப்பெண் இனி யான் உம்மிஷ்டம்போ லிணங்கத் தக்கவளாயினும் இப்போது பகற் காலமாயிருப்பதனால் சங்கமஞ்செய்கிறதெப்படி? காலம் நோக்காது சங்கமஞ்செய்வது மிருகங்களினுடைய தருமமல்லவா? இது மானிட தருமமாகுமா? இம்மார்க்கத்திற் செல்கின்றவர்கள் நம்மைக் காண்பாராயின் பழிப்பார்களல்லவா? ஆகையால் இராப்பொழுது வருமளவும் மன்மதவேதையைச் சிறிது பொறுத்திருப்பீராயின் அப்பொழுது ஒழித்து விடுகிறேன் என்று கூறினள். முனிவர் அதற்குடன்பட்டவராகி அந்த யமுனைதீர்த்தத்தைக் கையிலள்ளி மந்திரித்து ஆகாயத்தில் வீசினர். உடனே இருள் எங்கும் மூடியது. அப்பொழுது முனிவர், ஓ சத்யவதி! இதோ இருள் வந்துவிட்டது! என்ன சொல்கிறாய் என்று கேட்க, அவள், ஐயா, உமக்குக் காம மிகுதியினால் உண்டாயிருக்கும் வீரியம் அமோகம்; என்னைப் புணர் வீராயின் புத்திரோற்பத்தி உண்டாவதற்கும், புணர்ந்த பின் நீர் சார்த்தூலம்போல் என்னைவிட்டு வேகமாய்ப்போவதற்கும் யாதொரு சந்தேகமுமில்லை. யான் உம்மைவிட்டுப் பிதாவையும் விட்டுக் குழந்தையும் பெற்று இவ்வாற்றங்கரையே கதியாகக் கிடந்து இம் மார்க்கத்தில் செல்கின்றவர்களால் சோர ஸ்திரீயென்றிகழப்பட்டு இவ்விகழ்ச்சியைக் கேள்வியுறும் பந்துக்களால் தள்ளப்பட்டுப் பாழ் பட்டுப் போவதா உமக்குண்டாகிய காமநோயைப் பரிகாரஞ் செய்யு மெனக்கு நீர் செய்யு முபகாரம்? என்று வினவினள். முனிவர் இரக்கமுற்றவராய், ஓ சத்தியவதீ! இப்போது நீ அடைந்திருக்கும் சௌந்தரியமான மங்கைப்பருவம் என் சுகத்தின் பொருட்டே யாகும். நான் சென்ற பின்னர், நீ முன்போலக் கன்னிகையாகவே யிருப்பாய் என்று கூறினர். இவள் முன்போலவே யென்றதனால்

மச்சகந்தியாக ஆவோமோ என்றையமுற்றவளாய் முனிவரைப் பார்த்து, முன்போல் கன்னிகையாவதிற் சந்தோஷமாயினும் மச்ச நாற்றம் வீசுவதில் அருவருப்புடையவளா யிருக்கின்றேன் என்ன, முனிவர், உனக்கிடையிடையே எந்த சந்தேகமும் தோன்றுவதற் கிடமில்லாமல் உனக்காக வேண்டிய யெல்லா நன்மைகளையும் இப் பொழுதே கூறுகின்றேன் : (15–26)

என்னையெனில், நீ கன்னிப்பருவமுடையவளாயும், மச்சகந்தி என்கிறபேர் வழங்குவதொழிந்து எப்பொழுதும் பரிமளகந்தி சத்தியவதி என்கிற பெயரா லழைக்கப்பட்டவளாயும், சோரஸ்திரீ என்ற இகழுரை வெளிப்படாமல் கற்பிற் சிறந்த மங்கையென்று யாவராலும் புகழப்பட்டவளாயும், இனி உன்னால் விரும்பப்பட்ட புருஷனே உனக்குக் கணவனாக வரும் பாக்கியசீலமுடையவளாயுமா வாய். அன்றியும் இப்பொழுது என்னால் உனக்குண்டாகப்போகிற புத்திரன், விஷ்ணுவினுடைய அம்சபூதனையும், சுசியுடையவனையும், சகலவேதங்களையும் ஓதாதுணர்பவனையும், அவைகளின் பொரு ளுணர்ந்து முறையாக வியாபகப்படுத்தும் ஞானமுடையவனையும், அதுபோலவே வேதார்த்தங்களை மலைவுபடுத்தா துணர்த்தவல்ல புராணங்களை வகைப்படுத்தும் கர்த்தாவாயும், மூன்றுலகத்திலும் பிரசித்தி யுடையவனையும் விளங்குவான். (இச்செய்தி யிங்ஙன மிருக்க.) (27–30½)

ஓ சுந்தரீ! எனக் கெப்பொழுதும் மோகமுண்டானது கிடையாது. ஆனால் நான் ஸ்திரீகளைப் பார்ப்பதில்லையா? அதிக ரூபலாவண்யத்தோடுங் கூடியிருக்கின்ற அரம்பை முதலிய ஸ்திரீகளைப் பார்ப்பதுண்டு. அப்பொழுதெல்லாம் தைரியம் (வைராக்கியத்தை) வகித்திருந்தேன். அப்படிப்பட்ட நான் உன் னிடத்தில் காமநோய் கொண்டு பரிதவிப்பது ஒரு காரணத்தா லென்று நீ யறிந்துகொள்வாய். அக்காரணமாவது விதி. அவ்விதி கூட்டிய காரணத்தால் உன்னைப்பார்த்தவுடனே மன்மதன்வசமாயி னேன். விதியைக் கடப்பதற்கு ஒருவராலும் முடியாது. இதற் கொரு நியாயம் கூறுகிறேன், கேட்பாயாக. நீயோ சுந்தரியா யினும் சமீபிப்பதற்குக் கூடாத துர்க்கந்தத்தோடுங் கூடின வள். நானோ அதிபரிசுத்தத்தோடுங் கூடினவன். இப்படிப்பட்ட நான் உன்னைப் பார்த்தவுடன் துர்க்கந்தமே தோன்றாமல் எப்படி மோகத்தை யடைந்தேன் என்று முனிசிரேஷ்டராகிய பராசரர், தன் சுவாதீனமாயிருக்கிற சத்தியவதியினிடத்தில் கூறிப் பின்னர் அவளுடைய சுகானுபோகத்தையடைந்து, காளிந்தியாகிய யமுநா நதியில் ஸ்நானஞ் செய்து அதிசீக்கிரமாய் அரண்யத்தை நோக்கிச் சென்றனர். பதிவிரதையாகிய சத்தியவதி பராசுர முனி வரைக் கூடியபொழுதே கர்ப்பவதி யாயினளாகையால் பராசர முனிவர் சென்றவுடன் அந்நதிக்கரையில் இரண்டாவது மன்மதனே இவனென்று கண்டோர் சொல்லும்படி மஹாதேஜஸோடுங் கூடிய ஒரு பிள்ளையைப் பெற்றனள். அப்பிள்ளை பிறந்தவுடன் தாய் முகத்தைப் பார்த்து, ஹே மாதா! ஹே மஹானுபாவிநீ! உனக்கு

மிகவும் உத்தமமான காலம் எப்பொழுதுண்டாகுமோ அப்பொழுதும், நீ நினைக்குங் காலத்திலும் உன்னிடம் வந்து சேருவேன்; உனக்கு மங்களம் உண்டாகுக; உன்னிஷ்டப்படி போகுமிடத்திற் போகக்கடவாய்; நானும் போகின்றேன்; என்னைப் பிரிவதில் நீ சிந்தனைப்படுவதை விட்டுச் சுகமாக வசித்துக் கொண்டிருப்பாய் என்று சொல்லிவிட்டு மிகுந்த தபோபலத்தினுற் பிறந்தவராதலால் தவமியற்றுவதில் மனவூக்கமுடையவராய்த் தவத்தையே புரிய வனத்தை நோக்கிச்சென்றனர். அவர் தாயாகிய சத்தியவதியும் தன் பிதாவினிடம் போய்ச்சேர்ந்தனள். பின்னர் இந்த * த்வைபாயனர் தீர்த்தங்கடோறுஞ் சென்று ஸ்நானஞ் செய்து மேலான வேத கர்மங்களை யெல்லாம் விடாது அநுஷ்டித்து இனி வரப்போகிற கலியின் கொடுமையை எண்ணி வேதசாகைகளை வரையுறை செய்து அதனுல் வேதவியாசரெனப் பெயர்பெற்று வேதங்களை வகுத்துப் பின்னர் புராண ஸம்ஹிதைகளையும், மஹா பாரதத்தையுஞ் செய்தருளினர். அன்றியும் தம்மால் விபாகஞ் செய்யப்பட்ட வேதம் முதலிய கலைகளைச் சுமந்து, ஜைமினி, பயிலர், வைசம்பாயனர், அசிதர், தேவலர், தமது குமாரராகிய சுகர் ஆகிய மஹரிஷிகளுக்கு அத்யயனம் முறையாக உபதேசஞ் செய்து வந்தனர்.

இவ்வாறு கூறிய சூதமுனிவரை சவுனகாதியர் பணிந்து, ஓ போதகாசிரியரே! கல சம்பன்னராகிய வியாசரது தவநிலை முதலிய நெறிகளைக் கேட்கும் பொழுது ஆனந்தகரமும், அவரது தாய் தந்தையருடைய வரலாற்றைக் கேட்கும்பொழுது அதிருப்தியும் எங்களுக்குண்டாகின்றன; ஏனெனில், ஆசாரசீலர்களால் அருவருக்கத்தக்க மச்சநாற்றத்தோடு கூடிய ஒரு பெண்ணை, தர்மஜ்ஞராகிய பராசரமுனிவர் கண்ட மாத்திரத்தில் எப்படி அவர் மனங் காம நோயையடைந்து அவிவேகிகளால் செய்யப்பட்ட செயலைச் செய்யத் துணிந்தது? இவரோடு புணர்ந்த மச்சகந்தி பரிமளகந்தத்தையும், சத்தியவதி என்கிற பெயரையும் பெற்ற பின்னர் சந்தனு என்கிற அரசனுக்கு மனைவியாயிருக்க எப்படித் துணிந்தனள் என்றனர்.

சூதர் கூறுகின்றுர்: ஓ முனிவர்களே! மஹத்துக்கள் சரிதங்களில் குணங்களே கிரஹிக்கத் தக்கவை. இவ்வியாசர் அம் மச்சகந்தி கர்ப்பத்திற் பிறக்க விதி என்கிற காரணமொன்றிருந்தபடியினுல் பராசரர் காமவசத்தராயினர். இந்த நியாயம் சத்தியவதிக்குப் பராசரர் கூறியதை முன்னங் கூறியிருக்கிறேன். அந்த நியாயத்தை நீங்களும் ஆராய்ந்து தெளிவீர்களாக. வியாசர் சத்தியவதிக்குப் பிறந்தவராயினும், அவருடைய அவதாரம் மிகவும் மங்களகரமுடையது. இதிற் சந்தேகங்கொள்ளாதீர்கள். காரணத்தோடு கூடியதாகியும், கேட்கின்றவர்களுக்கு ஆச்சரியத்தைக்

* நதிக்கரையில் பெற்று அவ்விடத்தில் வைக்கப்பட்டவர். த்வீபம் - கரை.

**கொடுக்கிறதாயுமுள்ள இவரது அவதாரத்தை வேதசம்பன்ன ருகிய எந்த மானிடன் கேட்கின்ருனே, அவன் அந்தக்கணமே ஸகலபாபங்களினின்றும் விடுபடுகிருன். அவனெப்பொழுதும் துர்க்கதியடைகிறதில்லை. இவ்வுலகிலும் அவ்வுலகிலும் சுகத்தையே அனுபவிப்பான்.** (31-51½)

ஓம் காமேஶ்வர விமோஹிந்யை நம:

# 3. கங்கை சாபம் பெற்றது

**சவுனகாதியர் வினவுகின்றனர்:** ஓ சர்வஜ்ஞராகிய சூத முனிவரே! இதுவரையில் சத்தியவதியினுடைய உற்பத்தி முதலிய வற்றையும், வியாசருடைய உற்பத்தியையும் விரிவாய் அனுக்ரகஞ் செய்தீர். யாங்கள் முன் வினவிய விருக்களிற் சிலவற்றிற்கு விடை வராமையால் மீளவுங்கேட்கத் தொடங்கினோ மென்றனர். என்னை யெனில், வியாசருடைய தாயாகிய சத்தியவதி சந்தனுமஹா ராஜாவை எப்படியடைந்தாள்? இவ்வரசன் தர்மஜ்ஞனும், நல்ல குலத்திற் பிறந்தவனுமாக விருக்க, அவன் குலஹீனையாகிய இவளை மனைவியாக எப்படி வகித்துக்கொண்டான்? சந்தனு சத்தியவதியை வகித்துக் கொள்வதற்குமுன் அவனுக்கிருந்த தர்ம பத்தினி என்ன கதியாயினுள்? அஷ்டவசுக்களுடைய அம்சமாகிய பீஷ்மர் இவ்வரசனுக்கு எப்படி மகனுகப் பிறந்தனர்? சந்தனுவைச் சேர்ந்த சத்தியவதிக்குச் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என்று இரண்டு பிள்ளைகள் பிறக்க, அவ்விரண்டு பிள்ளைகட்கும் முறையே முன்பின் னுகப் பட்டாபிஷேகஞ் செய்ய எப்படித் தர்மசாஸ்திரம் இடங்கொடுத் தது? பீஷ்மர் ஜேஷ்டராக விருக்கத் தாம் அரசுக்குரிமையாகாமல் அவ்விருவரையுமே உரிமையாக்கி அரசாளும்படிச் செய்ததற்கு யாது காரணம்? இந்த இரண்டு பிள்ளைகளும் மாண்ட பின்னராவது பீஷ்மருக்கு ஏன் ராஜ்யத்தைக் கொடுக்கவில்லை? இந்தபீஷ்மர் ஏன் பாணிக்கிரகணஞ் செய்து கொள்ளவில்லை? இவையெல்லாம் ஒரு பக்ஷமிருக்க, சத்தியவதி சந்ததி விருத்தி செய்விக்கத் தனது புத்திரராகிய வியாசரை சித்திராங்கதன் விசித்திரவீரியன் என்பவர் களுடைய மனைவிகளைப் புணரும்படி ஏவிய காரணமென்னை? வியாசர் எல்லா தருமத்தையு முணர்ந்தவராயிருந்தும் உலகத்தார் மூர்க்கரென்று சொல்லும்படியாகத் தன் தம்பிமாருடைய பத்னி களிடத்தில் புணர்ச்சி செய்து இரண்டு புத்திரர்களை உற்பத்தி செய்யத் துணிந்ததென்னை? இவர் புராணகர்த்தாவாயும் தர்மாத் மாவாயும் யஜ்ஞங்களைச் செய்கின்றவராயுமிருக்க இவருக்குப் பரதாரகமனஞ் செய்வது தோஷமென்று கூறும் அறிவிலியி னுடைய அறிவும் இல்லையாயிற்றே! அந்தோ! இவர் தம் சகோதரர் களுடைய மனையாட்டிகளிடத்திற் சிறிதேனும் நாணத்தையும்,

பாபத்தையும், பிறர்பழிக்கவரும் பழிப்புரையையும், பாராட்டாது இவ்விழிதொழிலை ஏன் செய்தனர்? வேதத்தில் விதித்திருக்கும் விதியாவது, சிஷ்டாசாரமென்றும், அந்த ஆசாரத்தைக் கைவிடாமல் நடத்திக்கொண்டு வருபவரே பெரியோரென்றுங் கூறுவதல்லவா! * வேதம் பிரமாண மென்பதற்கும் இது பெரிய சாக்ஷியல்லவா? இம்முறைமைகளெல்லாம் இவரிப்படிச் செய்ததனுல் இனி என்னகும்? இனி சிஷ்டாசாரம் வேதத்திற்கு அவிரோதமென்பது போய், வேதத்திற்கு விரோதமென்பது பெறப்பட்டது. ஓ மேதாவியரான சூதமுனிவரே! நீர் அந்த வியாசமுனிவருக்குச் சீடராகையினுல் எங்களுக்குண்டாகிய இந்தச் சந்தேகங்களை நிவிர்த்தி செய்தருளும். நாங்களனைவரும் இத்தன்மையான தர்மங்களைத் தெரிந்துகொள்வதற்கே இந்தத் தர்ம க்ஷேத்திரத்தில் வசித்திருக்கின்றோம் என்றனர். (1-14)

சூதர் கூறுகின்றார்: ஓ முனிவர்களே! இக்ஷ்வாகு வம்சத்தில் மஹாபிஷன் என்னும் அரசன் உற்பவித்து ஆயிரம் அச்வமேதம், நூறு வாஜபேயம் முதலியன வியற்றி இந்திரபதத்தை யடைந்து வாழும் நாளில் ஒருநாள் பிரம்மசபைக்குப் போயினன். அவ்விடத்தில் சகல தேவர்களும் பிரம்மதேவனுடைய தரிசன நிமித்தமாக வந்திருந்தனர். மஹாநதீஸ்வரூபிணியாகிய கங்காதேவியும் வந்திருந்தனள். இவ்வாறு யாவருங்கூடியிருக்கின்ற சமயத்தில் பெருங்காற்றென்று வீச அதனுல் கங்காதேவியினுடைய வஸ்திரமானது விலகிப்போயிற்று. அதனை அச்சபையி லுள்ளார் யாவருந் தெரிந்துகொண்டு கங்காதேவியைப் பாராமல் கீழ்நோக்கிய முகமாகவே யிருந்தனர். மஹாபிஷன் மாத்திரம் அவளங்கத்தைப் பார்த்தவண்ணமாகவே யிருந்தனன். கங்காதேவியும் மஹாபிஷன் தன்னைப் பார்க்கின்றா னென்கிற லஜ்ஜையில்லாமல் அவனைப் பிரியமுற்றுப் பார்த்திருந்தனள். இவ்வாறு இருவரும் காமமுடையவராய்க் கண்ணிமைகொட்டாது பார்த்திருக்கும் பார்வையைப் பிரமன் கண்டு கோபங்கொண்டு, ஓ அரசனே! ஓ கங்கையே! நீங்களிருவரும் சிற்றின்பத்தை விரும்பியபடியால் பூலோகத்திற் சென்று அவ்வின்பத்தை யனுபவித்து சில புண்ணியங்களியற்றி முன்போல் உங்கள் பதத்தை வந்தடையக் கடவீர்களென்று சபித்தனன். அச்சாப மொழியைக்கேட்ட அவ்விருவரும் மனோவருத்தமடைந்து அச்சபையைவிட்டுத் தங்கள் தங்களிடம்போய்ச் சேர்ந்தனர். (15-22½)

மஹாபிஷன் நாம் பூலோகத்திற் போகும்படி சாபம் வந்துவிட்டபடியால் நாம் யாருக்கு மகனுகப் பிறப்பது என்று பூலோகத்திலுள்ள அரசரையெல்லாம் எண்ணி எண்ணிக் கழித்துத் தர்மிஷ்

டனுகிய புரூரவவம்சத்திற் றோன்றிய பிரதீபனென்கிற அரசனைச் சிந்தித்திருந்தனன். இவன் செய்தி யிங்ஙனமிருக்க, அஷ்டவசுக்கள் தங்கள் தங்கள் பத்னிகளோடுங் கூடி பூலோக சஞ்சாரமாய் வரும்பொழுது வசிஷ்டருடைய ஆசிரமத்தை யடைந்து அங்கு உல்லாசமா யுலாவிக்கொண்டிருந்தனர். அப்பொழுது பிருது முதலான அஷ்ட வசுக்களுக்குள் ஒருவரான தியா என்கிற வசுவினுடைய மனைவியானவள் அங்குலாவும் நந்தினி என்கிற பசுவைப் பார்த்து மோகித்தவளாய்த் தன் கணவனைப்பார்த்து, இந்த உத்தமமாகிய பசு யாருடையதென்று கேட்டனள். அவ்வசு, ஓ சுந்தரீ! இது வசிஷ்டருடையது; இதனுடைய பிரபாவம் இப்போது சொல்லி முடியுமோ? அதனதுபாலை புருஷராவது ஸ்திரீகளாவது உண்பார்களாயின் நரைதிரை மூப்பின்றி பதினாயிரம் வருஷம் சுகமாக வாழ்வார்கள்; இவ்வருமையுடைய இந் நந்தினியை வசிஷ்டர் தமக்குப் பெருந்தனமாகக்கொண்டு பூஜித்து வாழ்கின்றனர் என்று கூறக் கேட்ட சுந்தரி மகிழ்ந்தவளாய்த் தனக்குப் பிரியையாகிய உசீனருடைய மகளுக்கு இப்பாலை உண்பித்துப் பூலோகத்தில் இவ்வொருத்தியையாவது நரைதிரைமூப்பின்றி வாழச்செய்து அதன் பெருமையை விளக்கவேண்டு மென்றெண்ணி மீளவுங் கணவரைப் பார்த்து, ஓ என் பிராணநாதரே! பூலோகத்தில் உசீனருடைய மகளுக்கு இப்பாலை உண்பிக்க இப்பசுவை எவ்விதத்திலாவது கொண்டுபோக ஆசைப்படுகிறேன்; அதனை நீர் எவ்வுபாயத்திலாவது முடிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனள். இதனைக்கேட்ட தியா என்னும் வசு பெண்புத்தி தீமையைப் பயக்குமென்பதையும், இத்தீச்செயலால் தபசிரேஷ்டராகிய வசிஷ்டரிடுஞ்சாபம் தம்மைப் பற்றிவிடாதலைக்கு மென்பதையும் மறந்தவராய் மனையாட்டியின் சொற்படி அப்பசுவைக் கன்றுடன் முனிவரில்லாச் சமயத்திற் கவர்ந்துகொண்டு ஏனைய வசுக்களுடன் தம்மிடம் போய்ச் சேர்ந்தனர். (23–32)

பின்னர் வசிஷ்டர் தனதாச்சிரமம் வந்து தனது யஜ்ஞாதி கிருத்தியங்களுக்கு இன்றியமையாத நந்தினியைக் கன்றுடன் காணமல் சுற்றுமுற்றும் பார்த்து ஏக்கமுற்று, அந்தோ! இந்த நந்தினியைக் கொண்டுபோன தீமையாளர் யாவர்? இக்கொடுஞ் செயலைச் செய்யநமக்குப் பகையாயுள்ளவர் யாவர்? இந்நந்தினியில்லாமல் நமது கர்மானுஷ்டானங்களை எப்படி முடிப்பது? இவ்வஞ்சகச் செயலை யறியவேண்டுமென்று ஞானதிருஷ்டியாற் பார்க்க, வசுக்க

மரில் தியா என்பவன் பசுவைக் கவர்ந்துபோனவ ஞகையால் அவன் நெடுங்காலம் தெய்வத்தன்மை நீங்கி மனிதனு யிருக்கக் கடவன்; அவனது கொடுஞ்செயலை மறுக்காது நீங்க ளுடன்பட்ட வர் போன்று பின்றெடர்ந் தமையால் ஒரு வருஷம் மானிடஜன்ம மெடுத்திருந்து தெய்வத்தன்மை யடையக் கடவீர்களென்று அநுக்ரஹஞ் செய்ய, அதனைப்பெற்று கங்காதீர மார்க்கமாய் வரும்போது பிரம்மலோகத்தில் சாபமேற்ற கங்கையானவள் எதிரே வரக்கண்டு, ஓ கங்கையே! நாங்கள் வசிஷ்டருடைய சாபத்தால் மானிடப் பிறப்பை அடையும்படி வந்தது; அதனுல் யாங்களெல்லாம் யாருக் குப் புத்திரராய்ப் பிறப்போமென்கிற ஏக்கத்துடன் வருகின்ருேம்; உன் கிருபை யிருக்குமாஞல் அவ்வருத்தமொழியப்பெறுவோம்; என்னெயெனில் நீ எங்கள் பொருட்டாக மானிடப் பிறப்படைந்து சந்தனுவென்னும் அரசனுக்குப் பத்தினியாய் எங்களைப்பெற்று அப்போ தப்போது இக்கங்கா தீர்த்தத்தில் விட்டுவிடுவையாயின் யாங்கள் சாபவிமோசனத்தைப் பெறுவோம் என்றனர். அது கேட்ட கங்கை உடன்பட்டவளாய் விடைகொடுத்து மறைந்தனள். (34–44)

பின்னர் குருவம்சத் தரசனுகிய பிரதீபன் ஒரு நாள் தான் நாடோறும் கங்கையில் ஸ்நானம் முதலிய நித்திய கர்மாநுஷ்டானங் களை முடித்து சூரியநமஸ்காரஞ் செய்துவருவதுபோல் செய்து கரையிலிருக்கும்பொழுது கங்கையானவள் அதிக சுந்தரியான ஒரு பெண்ணுருக்கொண்டு அவ்வரசனது வலது தொடையில் உட் கார்ந்து அவ்வரசனைப் பார்த்துப் புன்னகையரும்பி அவனைத் தழுவுவாள்போன்றிருக்க, அரசன் அவளைப்பார்த்து, நீ யார்? நீ சிறிதும் அஞ்சாது எனது தொடையி லுட்கார்ந்து என்னைத் தழுவ எண்ணுவது என்ன முறை என்ன, கங்கை, நான் உன்னைத் தழுவுங் காரணம் உனக்கு விளங்கவில்லையா? நான் உனக்கு மனைவியாக இருக்கவே இவ்வாறு செய்தேனென்றனள். அரசன், அந்தோ! இஃதுவென்ன கொடுமை! நான் பரதாரகமனஞ் செய்வதில்லையே, அன்றியும் வலதுதொடையில் உட்காரத்தக்கவர் புத்திரன், புத்ரி மருமகளேயன்ருே! இதனை நீ அறியாயா! புத்திராதியர்களுக்குரிய தொடையில் உட்கார்ந்தமையால் நீ என் மகனுக்கு மனைவியாவா யன்றி எனக்காகாய் என்ன, இஃது உண்மை என்றுணர்ந்த கங்கை மகிழ்ந்து விடைபெற்று மறைந்தனள். அரசன் தன் அரண்மனை யடைந்து கங்கைக்கரையில் நடந்த செய்திகளை எண்ணி நமக்குப் புத்திரன் எப்போதுண்டாகப்போகின்ருன், இவ்வாக்யபரிபாலனம் எப்போது நடக்கப்போகிறது; என்ருலோசித்து வரும் நாளில் பிரம்மலோகத்தில் சாபமேற்ற மஹாபிஷன் என்னுமரசன் இவனது மனைவி வயிற்றில் கருக்கொண்டு பத்தாமாதத்திற் பிறந்து வளர்ந்து சகல சிறப்புடன் யௌவனதசையை யடைந்தகாலத்தில் பிரதீபன் தன் மகனைப்பார்த்து, முன் தனக்கும் கங்கைக்கும் நடந்த செய்தி களைச் சொல்லி, ஓ குழந்தாய்! அந்தக் கங்கையானவள் உன்னை யபேக்ஷித்தவளாகக் கங்கைக்கரையில் எச்சமயத்திலாவது வந்

தடைவளேயாளுல் அந்த மனோரம்யமான ஸ்திரீயைத் தர்ம பத்னி யாகக் கொண்டு அவளுடன் சுகமாக வாழ்வாய். அவளை நீ வரித் துக்கொள்வது என்னுடைய ஆஜ்ஞை யாகையினுல் அவளுடைய குலமுறை முதலியவற்றை நீ விசாரிக்கவேண்டிய அவசியமின்று என்று கூறித் தனது ராஜ்யசம்பத்தையும் செங்கோலையும் அவன் வசமாக்கித் தான் அரண்யம் போய்ச்சேர்ந்து அரிய தவானுஷ் டானங்களைக் கைக்கொண்டு இராஜ ராஜேஷ்வரித்தியானபரவச னயிருந்து தேகாந்தத்தில் தேஜோரூபியாய்ச் சுவர்க்கலோகமடைந் தனன். இப்பால் அவன் மகனுகிய சந்தனுமஹாராஜன் அகண்ட சாம்ராஜ்ய பட்டாபிஷேகனுய் அரசியல் நடாத்தி மன்னுயிர் களைத் தன்னுயிர்போற் காத்துவந்தனன். (45–59½)

ஓம் காமேஶ்வர ப்ரஹ்ம வித்யாயை நம:

## 4. காங்கேயர் உற்பத்தி

சூதமுனிவர் கூறுகின்ருர்: ஓ முனிவர்களே! பிரதீபனென் னும் அரசன் அரண்யஞ் சென்று தேவி அனுக்ரகத்தினுற் சுவர்க் கலோக மடைந்ததையும், அவன் மகனுகிய சந்தனு மஹாராஜன் அரசாண்டு வந்தமையுங் கூறினேமன்ருே? இனி அச்சந்தனு கங்காதேவியைக் காண்டலாதியாகிய சரித்திரங்களைக் கூறுகின் றேன் கேட்பீர்களாக. சந்தனுமஹாராஜன் செங்கோல் செலுத்தி வருநாளில் ஒருநாள் துஷ்டமிருக நிவாரணுர்த்தம் வேட்டையாட வெண்ணி ஆரண்யஞ்சென்று புலி, கரடி, கட்கமிருகம் முதலிய மிருக பேதங்களை யெல்லாம் வேட்டையாடி கங்காதீர மார்க்கமாய் வரும் பொழுது கங்கையானவள் முன் இவன் தந்தையாருக்குத் தோன்றி யதுபோல் பெண்ணுருக்கொண்டுலாவி யிருந்தனள். அக்கங்கை யைக் கண்ட சந்தனு மதிமயங்கி இப்படியும் ஒரு பெண்ணிருப் பாளோ! இவளொரு பூங்கொம்போ! மின்னற்கொடியோ! அறி யேன்; இவ்வழகியை நமது புயமலை அணையப்பெறுமோ, பெருதோ? பெருதாயின் நமதுயிர் வாழுமோ? என்று பித்தனைப்போற் பல வாருய்ப் பிதற்றி, யௌவன சம்பன்னையாய் லக்ஷ்மியைப் போல் பிரகாசிக்கும் அவளைச் சமீபித்து இவள் நம்முடைய பிதாவினுல் சொல்லப்பட்ட ஸ்திரீயா யிருக்குமோ வென்றையுற்று, அவளைப்பார்த்து, ஓ என்னுயிருக்கொப்பானவளே! நீ தெய்வ லோக மங்கையா? நாகலோக மங்கையா? நீ எவ்வுலகிலுள்ளவள்? உன்னுடைய முகவிலாசம் என் கண்ணைக் கவர்ந்தது; உன்னு டைய இளமுலை என்னுடைய புயமலையைத் துளைக்கின்றது; உன் னுடைய பேரழகு என்னறிவைக் கொள்ளை கொண்டது; உன்னு டைய தொடைகளில் என் மனம் புகுந்தது. அது எவ்வழிச் சென் றதோ அறியேனென்று மதியிழந்து நின்றனன். (1–10)

கங்கை, அரசன் கூறிய காமவார்த்தைகளைக் கேட்டுக் கோபங் கொள்ளாது, இவன் பிரம்மலோகத்தில் நம்மைக்கண்டு மோகித்தவ

னல்லவா? அக்காரணத்தால் இவ்வுலகில் அரசனாக வந்திருக்கின்றானென்று தன்னுள்ளே மகிழ்ச்சியடைந்து, அரசனைப் பார்த்து, ஓ இராஜபுத்திரனே! நீ என்னைப் பார்த்தவுடன் அறிவு கெட்டு வாயில்வந்தவாறெல்லாம் பிதற்றுகின்றனை. யான் இன்னாளென்பதையும், என் குலம் முதலியன இவை என்பதையும், என் மனோபாவம் இவ்வண்ணமிருக்கு மென்பதையும் அறிந்தல்லவா என்னைவிரும்பவேண்டும்? ஒன்றையும் அறிந்துகொள்ளாமல் என் பேரில் மோகங்கொள்வது முறையாகுமா என்றனள். அரசன் கூறுகின்றான்: ஓ அழகிய தொடை யுடையவளே! உன் குலம் முதலியவற்றை நான் விசாரிக்கவேண்டியதில்லை. என்னுடைய தந்தை, அப்பா குழந்தாய்! நீ கங்கா நதிக்குப் போகுங்காலம் வரும்; அப்பொழுது அக்கரையின்கண் ஒப்புச் சொல்லக்கூடாத பெண்ணொருத்தி வருவாள்; அப்பெண்ணை நீ யாதொருகேள்வியுங் கேளாமல் தர்மபத்தினியாகக்கொண்டு வாழக்கடவாயென்று சொல்லி யிருக்கின்றனர்; அவள் நீதானென்பதிற் றடையென்னுளது? அக்காரணத்தினாலேயே எனக்கும் உன்னிடம் காமமுண்டாயிற்றென்றாகிக்கிறேன். ஆகையால் இனி நீ என் மனைவியாவதிற் றடையென்னை? என்றனன். கங்கை, அரசனே! அஃது உண்மையாயின் யான் உன்னிடத்தில் தெரிவித்துக் கொள்ளவேண்டியவை சிலவுள; அவைகட்கு நீ வேறுபடாது ஒப்புக்கொள்ளுகிற பக்ஷத்தில் நான் உன் மனைவியாவதிற் றடையில்லை என்றனள். அரசன், ஓ சுந்தரி! நீ என்பிராணநாயகி யாகும்பக்ஷத்தில் உன்னால் கேட்கப்படுபவைகட்குத் தடையுமுளவோ? தடை கூறுவேனாயின் நானரசனாவேனோ, நீதியுடையவனாவேனோ என்றனன். கங்கை, ஓ அரசனே! நான் நல்ல காரியத்தைச் செய்தாலும், தீய காரியத்தைச் செய்தாலும் நீ என்னை நிஷேதிக்கக்கூடாது; என்னிடத்தில் வெறுப்புண்டாய்ப் பிரியமில்லாத வார்த்தைகளைச் சொல்லக்கூடாது; என்னுடைய வார்த்தையை எப்பொழுது நீ அங்கீகரிக்காமற் போகின்றனையோ நானப்பொழுது உன்னைவிட்டு எனக் கிஷ்டமானவிடம் போய்ச் சேருவேன் என்றனள். அரசன், ஓ மாதரசியே! நானொருபொழுதும் உனக்குப் பிரியமில்லாத சொல்லைச் சொல்லமாட்டேன்; நீ சம்மதித்து எந்தத்தொழிலைச் செய்தபோதிலும் அஃது எனக்குச் சம்மதமே; என்னை நீ உன்னாஜ்ஞையின்படி நடந்துகொள்ளும் ஏவலாளியென் றெண்ணுவாய்; இதிற் சந்தேகமில்லை என்றனன். கங்கை, ஓ அரசனே! என்னை நீ இன்னாளென்று விசாரிக்காமற் போனபோதிலும் யான் கூறுகிறேன்: யான் கங்கை; அஷ்டவசுக்களுடைய சாப நிவிர்த்தியின்பொருட்டு இவ்வுருக்கொண்டு உன் மனைவியாய் உன்னோடு வாழவந்தே னென்றனள். அரசன் புளகாங்கிதங்கொண்டு கங்கையின் கரத்தைப்பற்றி யழைத்துக் கொண்டுபோய்த் தன் நகரஞ் சேர்ந்து விதிப்படி விவாகஞ்செய்து கொண்டு உத்யானவனத்தில் அவளை யொருகணமேனும் பிரியாமல் காமநூலுக் கிலக்காய் இரதியும் மன்மதனும்போலும், இந்திராணியும் இந்திரனும்போலும், லக்ஷ்மியும் நாராயணரும்போலும்

உல்லாசமாய் கிரீடித்திருந்தனன். இவ்வாறு அநேகநாள் கழிந்த பின்னர் கங்கை கர்ப்பவதியாய் அஷ்டவசுக்களில் முதல் வசுவைப் புத்திரனாகப்பெற்றனள். அப்பிள்ளையைத் தீர்த்தத்திற் கொண்டு போய் விட்டனள். இந்தப்படி ஏழு வசுக்களையும் புத்திரராகப் பெற்று அவ்வப்பொழுதே கங்காதீர்த்தத்தில் விட்டுக்கொண்டு வந்தனள். இவ்வண்ணம் புத்திரரெல்லாம் இறந்துவரும்பொழுது சந்தனுராஜன் அடியில்வருமாறு துக்காக்கிராந்தனாய்ச் சிந்திக்க லாயினன் : (11–22)

நம்முடைய வம்சமானது பூமியில் நீடூழியாய் வளர்ந்து வருவ தெப்படி? நாமிப்பொழுது என்ன செய்கிறது? பாபிஷ்டையா யிருக்கிற இவளால் ஏழு பிள்ளைகள் நாசமாய்ப் போனார்களே, இது மிக ஆச்சரியம், இப்பொழுது இவளைத் தடுப்போமானால் இவள் நம்மைவிட்டுப் போய்விடுவாளே; இவளே இப்பொழுது நம் முடைய மனத்துக்குச் சுகத்தைக் கொடுக்கும்படியான கர்ப்பத்தை யுடையவளா யிருக்கின்றாளே; ஆகையால் இக்குழந்தையை முன் குழந்தைகளைச் செய்ததுபோற் செய்யாமற் றடுக்கவேண்டும். தடுக்காமற் போவோமானால் இவள் பெரும்பாலும் ஜலத்திற் போட்டுவிடுவாள். தடுத்தோமானால் அக்குழந்தை நம்மால் காக்கப் பட்டுப் பிழைத்திருக்குமோ? இறந்துபோய்விடுமோ? இது நமக்குச் சந்தேகமாயிருக்கிறது. இந்தத் துஷ்டையானவள் இனிப் பிறக்கப் போகிற பிள்ளையினிடத்திலாவது இரக்கமுடையவளாய் ரக்ஷிப் பாளோ? முன்போல் பக்ஷிப்பாளோ? நமக்கு எதுவுஞ் சந்தேகமா யிருக்கிறது. நம்மாலே செய்யத்தக்கது என்ன விருக்கின்றது? இனி எட்டாவது பிள்ளை பிறக்கப்போகிறது அவசியந்தானே? நாமென்செய்வதென்று அப்பொழுது சும்மாவிருப்போமானால் நம் முடைய வம்சம் எப்படி உத்தாரணமாகும்? ஆகையால் அதற்குத் தக்க பிரயத்தினஞ் செய்யவேண்டியது அவசியமே என்று பலவாறு யெண்ணி யிருக்கும்பொழுது, ஸ்திரீவசப்பட்டு வசிஷ்ட ருடைய நந்தினி என்கிற பசுவை அபகரித்த வசுவானவன் இந்தக் கங்கைக்கு எட்டாவது பிள்ளையாகப் பிறந்தான். அப்பிள்ளை பிறந்த வுடன் சந்தனு மிகவும் மகிழ்ச்சி யடைந்தவனாய்த் தனது பத்தினி யாகிய கங்கையின் பாதத்தில் வீழ்ந்து சொல்லுகிறான் : (23–28)

மந்தகாசத்தோடு கூடியிருக்கிற பெண்மணியே! நானுனக் கடிமையாளாய்ப் பிரார்த்திக்கின்றேன். இந்த ஒரு புத்திரனை நான் காப்பாற்றிக் கொள்ளுகிறேன். இதுவரையில் ஏழு பிள்ளைகளைக் கொன்றுவிட்டாய். இவ்வரிய பிள்ளையையுங் கொல்லுவையே யானால் நானு முயிரிழப்பேன். ஆகையினால் என்னுயிரோடு பிள்ளையைக் கொடுப்பாய். ஓ அழகிய நிதம்பத்தை யுடையவளே! எட்டாவதாகிய இந்தக் குழந்தையையாவது ரக்ஷிப்பாய். நானுன் காலில் விழுகிறேன். உனக்கெவ்வகைப் பொருள் வேண்டுமோ அவையெல்லாம் அரிய பொருளா யிருந்தபோதிலும் நான் கொண்டு வந்து இப்பொழுதே கொடுக்கிறேன். நீ என்னுடைய வம்சத்தை ரக்ஷிக்க வேண்டியவ ளல்லவா? வேதவித்துக்களான பெரியோர்கள்

புத்திரனில்லாதவருக்குக் கதியில்லை என்று சொல்லுகிருர்கள். ஆகையால் இப்பொழுது பிறந்த இப்பிள்ளையைக் கொடுத்துவிடுவா யென்று பிரார்த்திக்கிறே னென்றனன். கங்கையானவள், அரசன் பலவாறுய்ப் பிரார்த்தித்தும் சிறிதும் இரங்காதவளாய்க் குழந் தையை எடுத்துக்கொண்டு போவதற்குப் பிரயாணப்பட்டாள். அதைப்பார்த்து அரசன் திடுக்கிட்டுக் கூறுகின்றுன்: அந்தோ நமக்கு ஏழு பிள்ளைகள் பிறந்தன. அவைகளில் ஒரு பிள்ளையேனும் நாம் கண்டு களிப்பதற்கில்லாமற்போயிற்று. இப்பொழுது பிறந்தது எட்டாவது பிள்ளை. இதையும் கொன்றுவிடுவாளாகுல் இனி நமக் குப் பிள்ளைபிறக்கு மென்பது என்ன நிச்சயம்? நம்முடைய சந்ததி நம்மோடன்ருே போய்விடும்? இந்தப் பாவி நமக்கெங்கிருந்து வந் தாள்? இவளை இப்பொழுது தடுப்போமாகுல் மீளவும் இவளைக் காணப்போகிறதில்லை. தடுக்காமற் போவோமாகுல் பிள்ளையைக் காணப்போகிறதில்லை என்று சிந்தாகுலமடைந்து, இவள் தொலைந் தாலும் தொலையட்டும். சந்ததிவிருத்தியாதற்குரிய பிள்ளையைப் பாதுகாத்தலே முக்கியமான தருமமென்று துணிந்து அவளைச் சமீபித்து ஓ பரமாத்மாவே! இப்பொழுது நானென்ன செய்வேன்? உனக்கு நரகமுண்டென்கிற பயமில்லையா? உன்னைப் பாபிஷ்டா ளுடைய புத்திரியாக நினைக்கின்றேன். இல்லாவிட்டால் பாவ கிருத்தியத்தில் ஆசையுடையவளா யிருப்பாயா! இக்குழந்தையை என்ன செய்யப் போகின்ருய்? கங்கையில்விட மனம் எவ்வாறு துணிகின்றது? பிள்ளையைப் பேயும் வளர்க்குமென்று உலகினர் கூறுகின்றனரே. நீ அப்பேயினும் இரக்கமென்பதறியாத வொரு பெரியபூதமோ! ராக்ஷசியோ! யாவளோ அறியேன். இவ்வொரு பிள்ளையாயினும் எனக்கிருக்கும்படி மனமிரங்கிக்கொடுப்பாய். நீ இருந்தாலும் இரு, இல்லாமற் போனுலும் போ; இவ்விடத்தில் என் னுடைய புத்திரன் மாத்திரம் இருக்கவேண்டும். வம்சநாசஞ் செய்யவந்த உன்னேடு நானென்ன சொல்லப்போகிறேனன்றனன். அவ்வாறு சொல்லுகிறபொழுது, கங்கை குழந்தையை எடுத்துக் கொண்டு அதிககோப முடையவளாய் அரசனைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிருள்: நான் முன்னர் உன்னிடஞ் சொன்ன வார்த்தையை மறந்து விட்டாயாகையால் நான் போகிறேன். நான் குழந்தைகளைக் கொல்லுகின்ற கொலையாளியா? என்னுடைய காரணமறியாமற் பேசினுய். நான் தேவகாரியார்த்தமாக வந்தவ ளென்றறிவாய். அஃதாவது மஹாத்மாவான வசிஷ்டராலே அஷ்ட வசுக்கள் மானிடராகப் பிறக்கக் கடவீர்களென்று முன் சபிக்கப் பட்டார்கள். அவர்கள் சிந்தாகுலராய் வழியில் வரும்பொழுது தெய்வகதியாய் நானெதிர்ப்பட்டேன். என்னைப்பார்த்து அந்த அஷ்டவசுக்களும், ஓ பரிசுத்தையாகிய கங்காதேவியே! எங்க ளுக்கு நேரிட்ட சாபம் நிவாரணமாகும்வண்ணம் நீ தாயாகவேண் டும் என்று பிரார்த்தித்தார்கள். அவர்களுக்கு அப்படியே அனுக்ரஹஞ்செய்து உனக்குப் பத்னியானேன். அவர்கள்தான் ஏழு பிள்ளைகளாகப் பிறந்தார்கள். அவர்கள் அப்பொழுது

வேண்டியபடியே தீர்த்தத்திற் கொண்டுபோய் விட்டு சாபவிமோசனஞ் செய்வித்தேன். கையிலிருக்கின்ற இவன் எட்டாவது வசு. இவன் பூமியில் சிலகாலம் உன்னுடைய புத்திரனென்று யாவருஞ் சொல்ல மஹா வீரனுயிருந்து பின்னர் சாபநிவிர்த்தியடைய வேண்டியவன். ஆகையால் ஓ அரசனே! நீ வேண்டியவண்ணமே இவனைக்கொடுக்கிறேன். இவனைப் புத்திரனுகக் கிரஹித்துக் கொள்ளக் கடவாய். இவனைச் சாதாரணமான குழந்தை யென்றெண்ணுமல் வசுக்களில் ஒருவனுகிய தெய்வத்தன்மை யுடையவனென்றறிந்து புத்திரசுகத்தை யடையக்கடவாய். ஓ மஹானுபாவனே! இவனுக்குக் காங்கேயனென்று பெயர். இவன் அதிக பலமுடையவனுய்ப் பிரசித்தி பெற்றிருப்பான். இவனை நாமிருவரும் சுகித்திருந்த அஸ்திஞபுரத்திற்கு அனுப்பமாட்டேன். இவனுக்கு யௌவனதசை வருகிறவரையில் நான் ரக்ஷித்திருந்து நீ இவ்வனத்திற்கு வரும்பொழுது கொடுக்கிறேன். என்னையும் பார்க்கலாம். ஏனென்ருல் தாயைப் பிரிந்தபிள்ளை பிள்ளையன்று. அது நலமுடன் வளராது; வளர்ந்தாலும் சுகமடையமாட்டாதென்று கூறிக் குழந்தையுடன் மறைந்துபோயினள். (29–52½)

அரசன் புத்திரனையும் மனைவியையும் காணப்பெருமல் புத்திர சோகத்தையும், விரகதாபத்தையும் ஏககாலத்தில் அடைந்தவனுய்த் தன்னுடைய கிருகம்போய்ச் சேர்ந்து அரசியல் நடாத்திவந்தனன். சிலகாலங் கழித்தபின்னர் வேட்டையாட வெண்ணி வனஞ்சென்று காட்டெருமை, காட்டுப் பன்றி முதலிய கொடிய மிருகங்களைப் பாணங்களால் துவம்சஞ்செய்து மஹாராஜாவாகிய சந்தனு கங்கைக் கரையை யடைந்தான். அப்பொழுது கங்கை பெருவெள்ளங்கொண் டெழுந்தது. அக்கரையில் பெரிய தனுசொன்றை நாட்டி அநேக பாணங்களைவிட்டு விளையாடிக்கொண்டு ஒரு சிறுவனிருந்தனன். இவ்விரண் டதிசயத்தையும் பார்த்து ஆச்சரியமடைந்து, மனுஷ்ய சாத்திய மில்லாத அஸ்திரசஸ்திரப் பிரயோகங்களால் விளங்கும் இவனது வீரதர்மத்திற்கும், கண்டவர் மனத்தைக் கிரஹிக்கவல்ல இவனது ரூபலாவண்யத்திற்கும் ஒப்பு எவை? இவன் கங்கையின் கர்ப்ப சம்பவனுகிய நமது குமாரனுயிருக்க வேண்டும்; அன்றி வேறெந்த வீரனுடைய குமாரனே வென்றையுற்று, அவன் சமீபத்திற் சென்று, நீ யாருடைய குமாரனென்று கேட்டனன். அவன் பாணங்களைவிட்டு விளையாடிக்கொண்டிருந்தனனே யன்றி இவன் கேட்ட கேள்விக்கு விடை தந்தவனுமன்று; இவனை லக்ஷியஞ்செய்து பார்த்தவனுமன்று. சிலநேரம் விளையாடிக்கொண்டிருந்து கங்கையில் மறைந்துபோயினன். போகவும் அரசன் ஆச்சரியமடைந்து இவன் இன்னுருடைய குமாரனென்று அறிவதற் கில்லாமற்போயிற்றே; இவனை எவ்விடத்திற் றேடுவது, என்றெண்ணி ஏகாக்ரசித்தனுய்க் கங்கையை நினைத்தனன். கங்கை முன்போல் திவ்ய ரூபத்தோடும் அவன் காணத்தோன்றினள். அரசன் கண்டு மகிழ்ந்து, ஹே கங்கே! என் குமாரனெங்கே? எவ்விடத்திற்குப்போயினன்? அவனை

இப்பொழுது எனக்குக் காட்டவேண்டுமென்ன, கங்கை கூறு கின்ருள் : ஓ எனது பிராண நாயகனே! உன் மகனே உனக்குக் கொடுப்பதில் எனக்கென்ன ஆக்ஷேபம்? உன்னுடைய குமாரன் இதுகாறும் வசிட்டரிடத்திலிருந்து ஸகல வேதசாஸ்திரங்களு முணர்ந்தான். இவனைப் பிரகஸ்பதி எப்படியோ அப்படியே கற்றுணர்ந்தவனென்று சொல்லலாம். தனுர் வித்தையில் ஜமதக்கினியினுடைய குமாரன் எவ்வளவு பண்டிதனே அவ்வளவு பண்டிதனென்று இவனைச் சொல்லலாம். ஆகையால் ஓ ராஜசிரேஷ்டனே! உன்னுடைய வம்சத்திற்குக் கீர்த்தியை யுண்டுபண்ணி உனக்கு என்றும் அழியாத புகழைக் கொடுக்கத் தக்கவன் இவனேயாவன். இவனை இதுவரையில் யான் பாது காத்துவந்தேன். இப்பொழுது இதோ உன்னிடம் ஒப்புவித்து விட்டேன்; நீர் பெற்றுக்கொள்ளும் என்று காங்கேயரைக் கொடுத்து, இனி நீர் உம்முடைய நகரத்தையடைந்து புத்திரனேடு சுமகாய் வாழ்ந்திருமென்று வாழ்த்தி மறைந்துபோயினள். (53–60)

பின்னர், அரசன் சகல வித்யாபாரங்கதனும் அதிபரிசுத்தனும் மஹா வீரனுமாய்ப் பிரகாசிக்கும் அரிய மகனை ஆலிங்கனஞ் செய்து கொண்டு உச்சிமோந்து பெரு மகிழ்ச்சியடைந்தவனுய் நான் தன்யனுயினேன், தன்யனுயினேன் என்று கூத்தாடிப் பிள்ளையை ரதத்தி லேற்றிக்கொண்டு அஸ்தின புரத்தை யடைந்து சோதிடர்களை வரவழைத்து நல்ல சுபமுகூர்த்தம் பார்த்து மந்திரிப் பிரதானிகளோடு அனேக தேசத் தரசரெல்லாம் புடைசூழ்ந்திருக்கக் கங்கா புத்திரனுகிய தன் மகனுக்கு இளவரசுப் பட்டங்கட்டி மங்களங்கொண்டாடி ஆனந்தக் கடலில் மூழ்கினன்.

தர்மாத்மாவாகிய சந்தனு, தன் மகன் யுவராஜ்ய பட்டத்துக் குரியவனுன் ஆதலால் ராஜ்ய விசாரமற்றும், சகல சற்குண சம்பன்ன னுதலால் காமாதி குணவர்ஜிதனுய் மனைவியை மறந்தும் சுகமாய் வாழ்ந்திருந்தனன். ஓ முனிவர்களே! இதுவரையில் வசுக்களுக்கு நேரிட்ட சாபகாரணமும், கங்காதேவி சந்தனு மஹா ராஜாவுக்கு மனைவியாய் வந்தகாரணமும், காங்கேயருடைய பிரபாவமும் சொல்லப்பட்டன. இந்தப் புண்ணியகரமான சரித் திரங்களை எந்த மானிடன் கேட்கிருனே அவன் சகல பாபத்தி னின்றும் விடுபடுகிருன். இதிற் சந்தேகமில்லை. நானுவிதமான புண்ணிய சரித்திரங்களுடையதாயும் பஞ்ச லக்ஷணமுடையதாயும் வியாசருடைய வாக்கினின்றும் வெளிப்பட்டதாயும், கேட்போர்க்குப் பாபங்களைப் போக்கி, இகபரலோக சுகானுபவங்களைக் கொடுப்ப தாயுமுள்ள இப்பாகவதத்தை எப்படி வியாசரிடத்தில் கேட் டேனே அப்படியே சொன்னேனென்று அறிமின்கள். (61–69)

ஓம் காமேச்வரக்ருஹேச்வர்யை நம:

# 5. சத்தியவதி சந்தனு சம்வாதம்

*சீவுனகாதியர் வினவுகின்றார்:* ஓ சூதமுனிவரே! அஷ்ட வசுக்களுக்குச் சாபகாரணத்தினால் நேரிட்ட ஜன்ம விவரணமும் அவருள் காங்கேயருடைய வீரப்ரதாப விசேஷமும் எங்களுக்குப் புளகாங்கிதம் கொள்ளுமாறு எடுத்துரைத்தீர். நல்ல விரதானுஷ்டான முடைய சூத பகவானே! இனி வியாசபகவானுக்கு மாதாவாகியும், திவ்ய லக்ஷண சம்பன்னையாகியும், பரிமள கந்தியாகியும் விளங்கும் சத்தியவதியானவள், வலைஞனாகிய தாசனிடம் போய்ச் சேர்ந்து வாழுநாளில் சர்வதர்மஜ்ஞனாகிய சந்தனு மஹாராஜன், அவளை எவ்வாறடையப்பெற்று மனைவியாகக் கொண்டான்? அதனைச் சொல்லவேண்டும். அதைக்கேட்பதில் மிகவும் விருப்பமுடையவர்களா யிருக்கின்றோம். அதில் எங்களுக்குள்ள சந்தேகத்தை நிவிர்த்தி செய்தருளு மென்றனர். (1–3)

சூதர் கூறுகின்றார்: ஓ முனிவர்களே! இராஜரிஷியாகிய சந்தனு மஹாராஜன், மஹாதேவர் சுப்பிரமணியக் கடவுளோடு எவ்வாறு ரமித்திருப்பாரோ அவ்வாறு தன் மகனாகிய காங்கேயனோடு நான்கு வருஷம் ரமித்திருந்து அரசாக்ஷி செய்துவருநாளில் ஒருநாள் மான், காட்டெருமை, சிறுத்தை முதலிய மிருகங்களை வேட்டையாடுவதில் பிரியமுடையவனாய் அரண்யஞ் சென்று நாள்தோறும் அவ்வாறே செய்துவந்தனன். ஒருநாள் வேட்டையாடி கட்கம் காட்டுப்பன்றி முதலிய கொடிய மிருகங்களையும், பாணப்பிரயோகஞ் செய்து கொன்று வரும்பொழுது நதிசிரேஷ்டமாகிய கங்கைக் கரையைத் தெய்வாதீனமாய் வந்தடைந்தனன். அப்பொழுது இந்த வாசனை இதுவாகுமென்று மதித்தறியக்கூடாததாகிய பரிமளத்தோடு கூடிய காற்றொன்று வீசியது. அந்த உத்தமமாகிய சுகந்தத்தை ஆக்கிராணித்து ஆச்சரிய மடைந்து இஃதுவென்ன வாசம், இந்த வாசனை தேவமந்தார புஷ்ப வாசனையுமன்று, சண்பகத்தினுடைய வாசனையுமன்று, மல்லிகையினுடைய வாசனையுமன்று, தாழம்பூவினுடைய வாசனையுமன்று, மிருகமதத்தினுடைய வாசனையுமன்று. இந்தச் சுபகரமாகிய சுகந்தத்தை நாம் முன்னெப்பொழுதும் ஆக்கிராணித்தது மின்று. இவ்வரிய சுகந்தம் எவ்விடத்தினின்றும் எழுந்து வீசுகின்றது? இதனுற்பத்திஸ்தானத்தை யறியவேண்டும். இந்தக்கந்தமானது நம்முடைய மனத்தைக் கவர்ந்து மேன்மேலும் மோரவேண்டுமென்கிற அவாவையே விளைவிக்கின்றது; ஆகையால் இச்சுகந்தம் இவ்வனத்துக்குள் எங்குநின்று தோன்றுகிறதோ அவ்விடத்தைச் சுற்றிப் பார்ப்போமென் றெண்ணி அதிமோக முடையவனாய் அதிவேகமாய் அப்பரிமளம் வரும் வழியே இலக்காக யமுனை

நதிக்குச் சென்றனன். செல்லும் பொழுது அங்கு ஓரிடத்தில் பார்ப்பதற்கு அழகுள்ளவளாயும், ஆபரண விசேடங்க ளில்லாதவ ளாயும் அழுக்கடைந்த ஆடை யுடுத்தவளாயும் மனத்தை வசீகரஞ் செய்கின்ற யௌவனத்தோடு கூடினவளாயும் பிரகாசிக் கின்ற ஒரு பெண்ணைக் கண்டான். (4–11)

கருத்தவிழியோடு கூடிய கடைநோக்கமுடைய அப்பெண்ணைப் பார்த்து, நாம் அருமையாக மோந்த சுகந்தம் இவளுடைய சரீரத்தி னின்றும் வீசுகிறதாகவே தெரிய வருகிறது ; இதிற் சந்தேகமில்லை என்று நிச்சயித்துக் கூறுகின்றான்: ஆஹா! இஃது வென்ன ஆச்சரியம்! இப்படியும் ஒரு பெண்ணுக்கமையுமோ! இவளுடைய அங்க விசேஷங்களைப் பார்க்கும்பொழுது ஒவ்வொன்றும் உவ மானப்பொருள்களி லடங்கியதாகவில்லை. சௌந்தரிய விசேஷமும் அப்படியே யமைந்திருக்கின்றது. பருவமும் இப்பொழுது ஒத்திருக்கின்றது. அப்பருவத்துக்குத் தக்க யௌவன விசேஷமும் எவரிடத்துங் காணக்கூடாததாக விருக்கின்றது. இவ்வாறு ஒன்றுக்கொன்று மேன்மேலாக அமைந்திருக்கும் சௌந்தரியாதி விசேஷங்களே யன்றிப் பரிமளமொன் றமைந்திருக்கின்றதல்லவா? இதனை யாவரிடத்தே காணப்பெறுவோம்? யாவர்தான் காணப் பெற்றார்கள்? இனி யாவர்தான் காணப்பெறுவார்கள்? இஃது எவ்வுலகிலுள்ள மங்கையர்க்கும் அமையப்பெறாத அதிசய முடைத்தானது. இந்தக் கந்தத்தை எந்தப்புருஷனாவது எந்தத் தேவராவது மோரப் பெறுவாராயின் அவர் பிரமிப்பரேயன்றி பிரமிக்காமற் போவாரா என்று சந்தனு மஹாராஜன் அளவிறந்த வியப்புடையவனாய், இவள் யார்? இவளிப்போது எங்கிருந்து வந்தவள்? இவள் தெய்வமங்கையோ, பூலோகமங்கையோ, கந்தர்வமங்கையோ, நாகமங்கையோ? பரிமள மிகுதியோடு கூடியிருக்கின்ற இவளை யாரென்று யான் தெரிந்து கொள்வே னென்று சிந்தித்துக் காமாதுரனாய் மதிமயங்கி முன் தான் கண்ட கங்கையோவென் றையுற்று அது தெளிய அப்பரிமள கந்தியைப் பார்த்துக் கேட்கத் தொடங்கினன்: (12–15)

பரிமளத்தோடு கூடியிருக்கின்ற ஓ மங்கையே! நீ யார்? நீ என்ன குலத்தவள்? யாருடைய மகள்? ஓ அழகுள்ள தொடையை யுடையவளே! மனித சஞ்சார மில்லாத இவ்விடத்தில் நீ தனியே யிருக்கின்றனையே! யாது காரணம்? காமத்தை விளைவிக்கும் நேத் திரத்தை யுடையவளே! நீ விவாக முடையவளா, இல்லாதவளா? நீ எத்தொழில் செய்கின்றவள்? உன் விருத்தாந்தங்களைச் சொல்லு வாயாக. மாவடுவகிர்ந்தன்ன கண்ணியே! மனோகரமாயும் யௌவன முடையவளாயும் இருக்கின்ற உன்னை நான் பார்த்தபொழுதே காமவெள்ளத்தில் மூழ்கிக் கரையேறப்பெறாது அலமருகின்றேன். ஆகையால் நான் காமக்கரையேறுமாறு கேட்டவைகட்கெல்லாம் விடை கூறுவாயென்று புன்னகையோடு வினாவினான். பரிமள கந்தியானவள், தன்பாலுள்ள விருப்பத்தைப் புன்னகையினாற்

காட்டும் அரசனை நோக்கிக் கூறுகின்றாள்: ஓ அரசனே! நீர் என்னைப் பரிமளகந்தியாகவும், வலைஞர் பெண்ணாகவும், தாசனுடைய மகளாகவும், பிதாவினுடைய ஆக்ஞையினால் இவ்விடத்திற்றனியே இருக்கின்றவளாகவும், கன்னிகையாகவும், இந்நதியில் தருமநிமித்தமாக இந்த வோடத்தைத் தள்ளிச் செலுத்துகின்ற தொழிலுடையவளாகவும் அறிந்துகொள்ளக்கடவீர் என்று விடைகூறி, பரிமளகந்தி சும்மாவிருந்தனள். காமாதுரனாகிய அரசன் அவளைப்பார்த்து பின் வருமாறு கூறத்தொடங்கினன்: ஓ மான் போலுங் கண்களை யுடையவளே! உன்னுடைய யௌவனத்தை வீணாய்க் கெடுத்துக்கொள்ளாதே, கௌரவகுல வீரனாகிய என்னை நாயகனாகக் கொள்ளக்கடவாய். எனக்கு வேறு மனைவி யுண்டென்று நீ நினைக்கவேண்டாம். எனக்கு இப்பொழுது பத்தினி யில்லை. ஆகையால் உன்னை மனைவியாகக் கொள்கின்றேன். ஆனால் காமக்கிழத்தியாகக் கொள்வேனென்று சந்தேகிக்க வேண்டாம். தர்மபத்னியாகவே கொள்வேன். மனோரம்ய மானவளே! மனோபவனாகிய மன்மதன் நான் உன்னைப் பார்த்ததுமுதல் என்னை வாட்டுகிறான். ஓ பாலையே! எனக்குப் பிரியையான பத்னியானவள் என்னை விட்டுப்போயினாள். அவள் போனபின்னர் நான் விவாகஞ் செய்து கொள்ளவில்லை. நான் ஸம்சாரமில்லாதவனாகவே இருக்கிறேன். எல்லா அவயவங்களும் ரம்யமா யிருக்கின்ற உன்னைப் பார்த்த என் மனம் சிறிதேனும் என் சுவாதீனத்திலில்லை. நான் துணையற்றவனா யிருக்கின்றேன். ஆகையால் எனக்கு நீ துணைவியாக வேண்டும். ஆவையேல் உனக்கு நான் சுவாதீனனாகவும் அடிமையாளாகவு மாகிறேன். இதற்குச் சந்தேகமில்லை என்றனன். தாசன் மகளாகிய பரிமளகந்தி அமிர்தம் போலும் சுவையையும் மனதுக்கு இன்பத்தையும் விளைவிக்கின்ற சந்தனு மகாராஜனுடைய வார்த்தையைக்கேட்டுச் சாந்தகுணத்தோடுங்கூடினவளாய்த் தைரியத்தோடும் அரசனைப்பார்த்துச் சொல்லுகின்றாள்: ஓ அரசரே! நீர் என்னிடத்தில் எந்த அபிப்பிராயத்தை வெளிப்படுத்தினீரோ அந்த அபிப்பிராயம் நானும் உம்மிடத்தில் கொண்டவளாயிருக்கின்றேன். அன்றியும் உம்முடைய வரலாறு எவ்வண்ணமோ அவ்வண்ணமே என்னுடைய வரலாறு மிருக்கின்றது. இருவருடைய வாலாறும் எண்ணமும் இவ்வண்ணம் ஒத்திருந்தபோதிலும் இப்பொழுது நான் சுதந்தரையா யிருக்கின்றவளல்லளென்று நீர் தெரிந்து கொள்ளலாம். என்னை உமக்குக் கொடுக்க வேண்டியவர் என்னுடைய தந்தையார். நான் தந்தை சொற்படி நடக்கும் நியமமுடையவள். நான் வலைஞர் மகளாயினும் விபசாரியாகத்தக்கவளல்லள். என் பிதாவானவர் மிகவும் பிரசித்தியானவர். அவர் சம்மதித்து என்னை உமக்குக்கொடுக்கிற பக்ஷத்தில் நீர் பாணிக்கிரகணம் பண்ணிக்கொள்ளலாம். என்றாற் சிறிதுந் தடையில்லை. நான் என்றும் உம்முடைய வசமாகவே இருப்பேன். ஏனென்றால் மன்மதன் உம்மை எப்படி வாட்டுகின்றானோ அப்படியே யௌவனத்தோடு கூடினவளாகிய என்னையும் வாட்டுகிறான்.

நம்மை விதி கூட்டும். அப்படியிருந்தபோதிலும் குலாசார பரம்பரைகளைக் காப்பாற்றவேண்டுமென்பது அறிவுடையார்க் கியல்பன்றோ? ஆகையால் என்னுடைய பிதாவானவர் இப்போது தான் வீட்டுக்குப்போயினர்; வீட்டிலேயே யிருப்பர். அவரெங்கும் போயிரார். ஓ தனுட்டியரான வள்ளலே! உம்மிடத்தில் சிறி தேனும் பொய் சொல்லேன். சத்தியத்தையே சொல்லுகிறேன். நீர் அதிசீக்கிரமாகச்சென்று கேட்பீராக என்றனள். அவ்வமைதி யான வார்த்தைகளைக் காமத்தினுற் பீடிக்கப்பட்ட அரசன் கேட்டு அவள் கூறிய முறையைக் கடத்தற்கஞ்சி அதுபோற் சம்மதித்து அவளைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்ள விரும்பி யிருக்கிறே னென்று அந்த தாசனைக்கேட்க அவன் கிருகத்துக்குச் சென்றான். (16–27)

அந்த தாசன் தன் வீடுநோக்கி வருகின்ற அரசனைப் பார்த்து இவ்வளவென்று சொல்லக்கூடாத ஆச்சரியமடைந்து அனந்தமுறை தெண்டனிட்டுக் கைகூப்பிநின்று அடியில் வருமாறு சொல்லத்தொடங்கி ஓ அரசனே! நான் தேவரீருக்குத் தாசனு யுள்ள தாசன்; உம்முடைய வரவால் இன்று நான் தன்யனுயி னேன். எந்த நிமித்தமாகத் தாங்கள் இங்குவர நேர்ந்ததோ அதனைக் கட்டளையிட்டருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அரசன், ஓ ஒழுக்கமுடைய தாசனே! உன் மகளை நான் பாணிக் கிரகணஞ் செய்துகொள்ளப்போகிறேன்; நீ சம்மதிப்பையே யானுல் நான் தர்மபத்னியாகக் கொள்வேன். இது சத்தியம் என்று கூறத் தாசன் கூறுகின்றான்: ஓ அரசனே! நீர் என் சுவாதீனையா யுள்ள கன்னியாரத்தினத்தை விரும்பியது என்னுடைய பாக்கியமே யாயினும் கொடுக்கக்கூடியதா யிருந்தாற் கொடுக்கிறேன்; கூடாமையா யிருந்தால் நான் எப்படிக்கொடுக்கத் துணிவேன்? ஓ மஹாராஜனே! என் வேண்டுகோள் சிலவுள; அவற்றைக் கேட்டருளுக. உமக்குப் பின் என் மகளுக்குப் பிறக்கும்மகன் அரசனுக எவ்விதத்தினுலுந்தடை யின்றிப் பட்டாபிஷேக முடையவனு யுலகாளவேண்டும். உம்முடைய வேறுபிள்ளைகட்குப் பட்டாபிஷேக மாகக்கூடாதென்று பணிந்தனன். அரசன் தாச னுடைய வார்த்தையைக்கேட்டுச் சீமந்த புத்திரனுகிய காங்கேயன் பட்டாபிஷேகத்துக் குரியவனுயிருக்க அவனை மாற்றுவது அறமாகுமா? அதனை எண்ணி இவனை மறுப்போமாயின் இவ் வலைஞன் பரிமளகந்தியைத் தருவானு? இதற்கென்செய்வோ மென்றேங்கி காங்கேயரைப் பலகால் நினைக்குஞ் சிந்தனையாற் பீடிக்கப்பட்டவனு யொன்றுந்தோன்ருது அவனுக்கு விடை கூருமல் தன் அரண்மனைசேர்ந்து காமநோயாலும் பட்டாபிஷேக சிந்தனை யாலும் மதிமயங்கினவனுய்ச் சோர்ந்து ஸ்நானஞ்செய்வ தொழிந்தும், ஆகாரங்கொள்ளுவ தொழிந்தும், நித்திரை பண்ணுவ தொழிந்து மிருந்தனன். (28–34)

புத்திரராகிய காங்கேயர் சிந்தா குலனுயிருக்கும் தந்தையைப் பார்த்துச் சமீபித்துநின்று கூறுகிருர்: நீர் சந்தோஷமற்றிருப்ப

தற்குக் காரணமென்ன ? உமக்கு எந்தச் சத்துருவானவன் ஜயிக்கக்கூடாதவனு யிருக்கிறுன் ? அவனை நான் ஜயித்து உம்முடைய அடிமையாளாகச் செய்கிறேன். ஓ இராஜ சிரேஷ்டரே ! உமக்கு என்ன சிந்தனை யுண்டாயிருக்கிறது ? உண்மையைச் சொல்லும். என்னையாவே ! எந்தப் புத்திரன் பிதாவினுடைய துக்கத்தை யறியாமலிருக்கின்றுனே, எந்தப் புத்திரன் துக்கத்தை தெரிந்து கொண்டு அந்தத் துக்கத்தை நிவிர்த்தி செய்யாமலிருக்கின்றுனே அந்தப் புத்திரன் பிறந்ததனு லென் ? இறந்ததனுலென் ? அவன் யாரென்றுல் பூர்வஜென்மத்தி லுண்டாகிய ருணத்தைத் தீர்த்துக்கொள்வதற்கு வந்தவன். இதில் விசாரிக்கத்தக்க தொன்றுமில்லை. ஓ பூமண்டலாதி பதியே ! ரகு வம்சஸ்தனுயும் தசரத குமாரனுகியு மிருந்த இராமன் பிதாவினுக்ஞையினுல் தானடையவேண்டிய இராஜ்ய சம்பத்தைவிட்டு லக்ஷ்மணன் சீதை இவர்களோடு சித்ரகூடத்தை யடைந்து ஆரண்ய சஞ்சாரஞ் செய்தனன். லோகிதாசன் தன் பிதாவாகிய அரிச்சந்திரனுல் கடைவீதியில் அடிமையாளாக விற்கப் பட்டனன். சுனஸ்சேபன் என்று பிரசித்திபெற்ற பிராமணன் ஆணிகர்த்தரென்கிற ரிஷியாகிய தன் பிதாவினுல் தனத்துக்கு விற்கப்பட்டு யூபஸ்தம்பத்தில் கட்டுப்பட்டுப் பின்னர் விஶ்வாமித் திரரால் விடுவிக்கப்பட்டான். பரசுராமன் முன்னொரு காலத்தில் தந்தையாருடைய ஆக்ஞையால் தாயாருடைய சிரசை வெட்டியும் பின்னர் அவருடைய ஆக்ஞையினுலே அவளை யெழுப்பியும் விட்டனன். இவ்வாறு தந்தையின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்த புண்ணிய சீலர் பலர். இவர்கள் ஒவ்வொருவரும் செய்த காரியங்களை எண்ணிப்பார்க்குங்கால் நடத்தக்கூடியவைகளா ? இவைகளெல்லாம் யாருமறிந்த விஷயமே. ஓ பூபதியே ! என்னுடைய சரீரம் உம்முடையது. நான் என்ன செய்ய வேண்டும் ? அதனைச் சொல்லும். அது செய்வதற்கு நானரு கனல்லவா ? நானிருக்கின்ற பொழுது நீர் துக்கிக்கவேண்டிய காரண மென்னை ? ஆகையால் நீர் அபேக்ஷித்திருக்கிறது எதுவோ அது சாத்தியப் படாததாயினும் அதை நான் கூட்டிவைக் கின்றேன். ஓ அரசனே ! உம்முடைய சிந்தையானது என்ன ரூபமாயிருக்கிறது ? விவரமாய்ச் சொல்லும். சத்துருக்களைப் பற்றிய சிந்தனையாயிருக்குமாயின் இப்பொழுதே தனுசைத் தாங்கிக்கொண்டு அந்தச்சத்துருவைப் போக்கடிக்கிறேன். என் னுடைய தேகச்சிரமத்தால் எதுவும் நடத்தக்கூடும் பக்ஷத்தில் உம்முடைய அபிப்பிராயமானது வியர்த்தமாய்ப் போகாது. உம்முடைய ஏக்கத்தை வாய்விட்டுப்பகரும். எந்தக்குமாரன் பலவிதத்திலும் யோக்கியனுயிருந்த போதிலும் பிதாவினுடைய ஆக்ஞையைப் பரிபாலனஞ் செய்யாமற்போகிறுனே அவனைப் புத்திரனென்று நினைக்கக் கூடாது; பிதாவினுடைய மனக்கவலையை யறிந்து தீர்க்க வறியாத பிள்ளை பிறந்திருப்பதினுற் பிரயோஜன மென்ன என்றனன். சந்தனுமகாராஜன் புத்திரனுடைய வாக்கியங்

களைக் கேட்டு மனதில் லஜ்ஜையுடையவனாய் அந்தக்குமாரனைப் பார்த்து அடியில் வருமாறு கூறுவானாயினான் :—ஓ புத்திர சிகாமணியே ! எனக்கு நீ ஏகபுத்திரனாயிருக்கிறாய். மேலும் சூரனாயும் அதிபலிஷ்டனாயும், சத்துருக்களிடத்தில் கோபிஷ்டனாயும், யுத்தத்தில் புறங் காட்டாதவனாயுமிருக்கின்றாய். ஆகையால் உனக்குச் சத்துருக்கள் பலருண்டாவர் என்கிற சிந்தனை என்னை மிகவும் பாதிக்கின்றது. ஓ என்னப்பனே ! ஏக புத்திரவானாகிய என் பிழைப்பு வியர்த்தமல்லவா ? எவ்விடத்திலாவது யுத்தத்தில் நீ மரணமடையும் பக்ஷத்தில் நானென்ன செய்யப்போகிறேன் ? நான் நிராதரவாக ஆவேனல்லவா ? ஓ புத்திரா ! எந்த விசாரத்தை இப்பொழுது உன் முன்னே சொன்னேனோ அந்த விசாரந்தான் எனக்குப் பெரிய சிந்தனையாயிருக்கின்றது. அந்தக் காரணத்தினாற்றான் துக்கித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு வேறு சிந்தையில்லை. (35–48)

பிதாவாக்கியத்தைக்கேட்ட காங்கேயர் இஃது உண்மையான மொழியல்ல வென்றெண்ணி, வயதில் முதிர்ந்த மந்திரிகளைப் பார்த்துத் தொன்றுதொட்டுள்ள அமைச்சர்களே ! என்னுடைய பிதா என்னிடத்தில் உண்மையைச் சொல்லவில்லை ; ஆகையால் அரசனுடைய அபிப்பிராயத்தை நீங்கள் நிச்சயமாய்க்கேட்டு என்னிடத்தில் அந்த அபிப்பிராயத்தைச் சத்தியமாய்ச் சொல்ல வேண்டும். சொல்லும் பக்ஷத்தில் அந்த அபிப்பிராயத்தை இப்பொழுதே செய்து முடிக்கிறேனென்று சொல்லியனுப்பினார். உடனே அந்த மந்திரிகள் அரசனிடத்திற்போய் அந்த விஷயத்தைப்பற்றிக் கேட்டுச் சோக காரணத்தையும், அதுபற்றிப் பலவாறுகச் சிந்திக்கும் சிந்தனையையும் உண்மையாயறிந்துகொண்டு காங்கேயரிடத்திற் தெரிவித்தனர். காங்கேயர் அதைக்கேட்டு இதுதான் உண்மையான சங்கதி யென்றெண்ணி ஆலோசிக்கவேண்டிய அளவும் ஆலோசித்து அப்பொழுதே அந்த மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு துரிதமாகத் தாசனுடைய வீட்டுக்குப் போய்த் தாசனைக்கண்டு நாணத்தோடும் அதிக விநயத்தோடும் அடியில் வருமாறு சொல்லத் தொடங்கினார் : ஓ தாசனே ! இப்பொழுது உன்னுடைய புத்திரியை என்னுடைய பிதாவுக்குக் கொடுப்பாயாக. இந்தப் புத்திரியானவள் என்னுடைய தாயாக வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். இவள் தாயாகும் பக்ஷத்தில் நான் புத்திரனாவதுமன்றித் தாசனுமாகிறேனென்றனர். தாசன், குருவம்சத்திற்றோன்றிய அரசரே ! தேவரீர் விதிக்குங் கட்டளையை மறுக்குந் தன்மைய னல்லனாயினும் என் மகள்பாலுள்ள பாசத்தினாற்றோன்றும் ஓராசையை மறுக்கும் வலியில்லாதவனா யிருக்கின்றேன்; தாசனாகிய யான் என் செய்வேன், அஃதென்னை யெனில், தேவரீரிருக்கும்பொழுது இவளுக்குப் பிறக்கப்போகிற புத்திரன் சிம்மாசனாதிபதி ஆவனா ? ஆகமாட்டான். ஆகையால் ஓ மஹானுபாவனே ! என் மகளைத் தேவிரீர் பத்தினியாகக் கொள்ளும் என்றனன். காங்கேயர் ; ஓ தாசனே ! நீ ஆலோசனையிற் சிறந்தவன் ; காரியத்

திலே கண்ணுடையவன், "உன் மகளை என் வாக்கினால் எனக்குத் தாயாக ஆகவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்" என்றமையால் இனி நான் பத்தினியாகக்கொள்ளேன்; அவள் எனக்குத் தாயேயாவள்; நான் சிம்மாசனாரூடனாவதில்லை, இவளுக்குப் பிறக்கப்போகிற பிள்ளையே ராஜ்யத்தை எவ்விதத்திலும் நடத்துவதற்குரியவனாவான்; இதிற் சந்தேகமில்லை என்றனர். தாசன், ஐயா தருமசீலரே! சத்தியமாகிய உம்முடைய வார்த்தையைத் தெரிந்துகொண்டேன்; ஆயினும் உமக்கு எப்படியும் புத்திரப்பேறுண்டாகுமல்லவா? அப்பிள்ளை பலவானவானேயானால் அந்தக் குமாரன் தன்னுடைய பராக்கிரமத்தினால் ராஜ்யத்தைக் கிரகித்துக்கொள்ளாமலிருப்பானா? அதற்குச் சந்தேக முண்டா? நீர் பொழுது என்செயவல்லீர்? என்றனன். காங்கேயர், ஓ வலைஞனே! நீ வலையை வீசி அக்கண்ணியில் ஜலசரங்களைப் பிணித்து எப்படி ஆட்டிப்பிடிக்கின்றனையோ அப்படியே என் பிதாவையும் என்னையும் உன் சொல்வலையிற் பிணித்து விழிக்கும்படிச் செய்து உன்னெண்ணத்தை முடித்துக்கொள்ளத் துணிந்தாய். அதற்கு நானஞ்சேன்; நான் எவ்விதத்திலும் விவாகஞ் செய்துகொள்வதில்லை; இது நிச்சயம். அப்பா! இப்போது நான் இந்தப் பீஷ்ம (பயங்கரமான) விரதத்தை அநுஷ்டித்துக்கொண்டேன், இந்த வார்த்தை சத்தியம் என்றனர். மச்சியஜீவனஞ்செய்யும் அந்தத் தாசன் பீஷ்மர் செய்த பிரதிக்ஞையைக் கேட்டு அச்சமுற்றவனாய் இனித் தர்க்கிப்போமாயின் தீங்கு நேரிடுமென்றெண்ணி அதிக சௌந்தர்யவதியாகிய தன் மகளைக் காங்கேயரிடம் ஒப்பிவித்து விட்டனன். காங்கேயர் மகிழ்ந்து அவளைத் தன் பிதாவினிடங்கொண்டுபோய்ச் சேர்த்து அவரது கவலையை மாற்றினர். சந்தனு மகாராஜன் தன் மகனது அரியசெயலைக் கேட்டு அதிசயமுடையவனாக மகிழ்ந்து பரிமளகந்தியை விதிமுறைப்படி தர்மபத்தினியாகக் கொண்டு அவளது இன்பநலத்தை உண்டு வாழ்ந்திருந்தனன். அந்நாள்வரையில் சந்தனு மகாராஜன் இந்தச் சத்தியவதிக்கு முன் வியாசர் பிறந்த செய்தியை யறியான்.

ஓம் காமேச்வராஹ்லாதகர்யை நம:

## 6. பாண்டவர் பிறப்பு

சூதமுனிவர் கூறுகின்றார்: சந்தனு சத்தியவதியை விவாகஞ் செய்தபின் சித்ராங்கதன், விசித்திரவீரியன் என்னும் பிள்ளைகளைப் பெற்றனன். அவ்விருவரும் சிலகாலம் அரசாண்டுப் பின்னர் தெய்வலோகஞ் சென்றனர். சத்தியவதி தன் மக்களிருவரும் இறந்துபோனபடியால் சந்ததிவிர்த்தியின் பொருட்டு வியாசரைப் பிரார்த்தித்து மூத்த மருமகளிடத்தில் சம்போகிக்கச் செய்து திருதராஷ்டிரனையும் இளையமருமகளிடத்தில் பாண்டுவையும் உற்பத்தி

செய்வித்தனள். இருவருள் ஒருவன் குருடனாகவும், மற்றவன் வெண் குஷ்ட முடையவனாகவும் பிறந்த காரணம் என்னையெனின் மூத்தவள் வியாசருடைய சடைமுடியையும் நகரோமம் முதலியவையுங் கண்டு அச்சமுற்றவளாய்க் கண்களை மூடிக்கொண்டாள்; அதனால் நீங்காத குருடனாயினன். இளையவளும் அச்சத்தினாலும், நாணத்தினாலும் தன்னுருவத்தைக் காட்டாமல் ஒரு வெள்ளை வருணத்தைப் பூசிக்கொண்டாள்; அதனால் நீங்காத வெண்ணிறமுடைய வியாதியாளனாயினான். இவ்வண்ணம் வியாசருடைய கோபத்தினாற் பிறந்த பிள்ளைகளிருவரும் குருடனும் வியாதியாளனுமாய்ப் போனபடியினால் சத்தியவதி இவ்விருவரும் அரசுரிமைக்குரியரல்லரே என்றெண்ணி மறுபடியும் இளையவளை யழைத்து அவளுக்கு வேண்டிய நயவுரைகள் கூறி மீண்டும் வியாசரைப் புணரும்படி ஏவினள். அவள் தான்போகாமல் தன்னேவலாளியாகிய ஒரு தாதியை யனுப்பினள். அவள் மனங்களித்து முனிவர்பாற் செல்ல அவரும் இவளுடைய சுந்தர நலங்களைக் கண்டு அன்புடையராய்க் கிரீடித்தனர். அதனால் தருமாத்மரும், சாந்தரும், ஆசாரசீலரும், ஞானமுடையவரும், யமனுடைய அம்சருமான விதுரர் பிறந்தனர். ஓ முனிவர்களே! பின்னர் சத்தியவதி பீஷ்மர் அனுமதியினால் பாண்டுவுக்கு மந்திரிகளால் முடிசூட்டிவைத்து விதுரரை மந்திரியாக நியமித்து பீஷ்மருடைய ஆணையின்படி அரசியல் நடத்திவரச் செய்தனள். திருதராஷ்டிரன் மூத்தவனா யிருந்தும் குருடனாகையினால் அவன் அரசியலுக் குரியனாகானாயினான். இவ்வந்தகனுக்கு ஸௌபலை, காந்தாரி என்று இரண்டு மனைவியர். அவருள் காந்தாரி துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகளைப் பெற்றனள். வைசியப்பெண்ணாகிய ஸௌபலை யுயுத்ஸு என்கிற பிள்ளையைப் பெற்றனள். பாண்டுவுக்குச் சூரசேனன் மகளாகிய குந்தி, மாத்திரி என்று இரண்டு மனைவிகள். குந்திதேவியானவள் விவாகத்துக்கு முன் கன்னிகையாயிருந்தபொழுது சூரியபகவானால் மனோகரமாகிய கர்ணனைப் பெற்றனள் என்றனர். சவுனகாதியர் சந்தேகமுற்று, ஓ முனிபுங்கவரே! இஃது வென்ன மிக ஆச்சரியமாக விருக்கின்றது! நீர் கூறிய இச்செய்தி மிக நன்றாயிருக்கின்றது!! முதலில் கன்னிகையாயிருந்த காலத்தில் சூரியனால் புத்திரனெப்படிப் பிறந்தான்? பிள்ளையைப் பெற்றவளைப் பாண்டு எப்படிக் கலியாணஞ்செய்துகொண்டான்? என்றனர். சூதமுனிவர், ஓ! முனிவர்களே! குந்திதேவியின் வரலாற்றைக் கூறுகின்றேன், கேட்பீர்களாக: வேதவித்துக்களாகிய மஹரிஷிகளால் பாண்டு மகாராஜாவுக்கு முதற் பத்தினியென்றழைக்கப்பட்ட குந்திதேவி தன் தந்தையாகிய சூரசேன மகாராஜனிடத்திலிருக்கும் பொழுது குந்திபோஜனென்னும் அரசன் அங்குவந்து உமது புத்திரியாகிய குந்தியைப் பூஜாபரிசார நிமித்தம் என் வசம் ஒப்புவிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனன். பின்னரவன் தனது புத்திரியாகப் பாவித்துத் தான் செய்யும் சூரியபூஜைக்குரிய பணிவிடைகளுக்குரியவளாக வைத்துக் கொண்டான். (1–14)

ஒரு நாள் குந்தி போஜன்பால் துர்வாசமுனிவர் வந்து சாதுர்மாஸ்ய விரதபூர்த்தி உன்னுலாக வேண்டுமென்றனர். அவன் மகாபாக்கியமென்று சம்மதித்து அவருடைய பணிவிடைகளுக்குக் குந்திதேவியை நியமித்தனன். அவள் அம்முனிவருக்குரிய ஏவற் பணிகளிற் சிறிதும் வழுவின்றி அவர் குறிப்புணர்ந்து செய்து வந்தனள். துர்வாசர் விரதபூர்த்தியானவுடன் குந்தியினிடத்தில் மிகவுஞ் சந்தோஷமுடையவராய், ஓ குழந்தாய்! உன் வழிபாட்டிற்கு மகிழ்ந்தேன். உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும் என்று ஆசிபுகன்று சில திவ்ய மந்திரங்களை உபதேசித்து இம்மந்திரங்களை எப்பொழுது உச்சரிக்கின்றனையோ அப்பொழுது அம்மந்திரங்களுக்குரிய தேவதைகள் பிரசன்னமாவர் என்றனுக்கிரகஞ்செய்து போயினர். சில நாள்கழிந்த பின்னர் குந்திதேவி தனக்குபதேசித்த மந்திரங்களின் மகிமை தெரிந்துகொள்ள அம்மந்திரங்களிலொன்றை யெண்ணி யுச்சரித்தனள்; உடனே அம்மந்திரத்திற்கதிதேவதையாகிய சூரியமூர்த்தி மானிடவடிவங்கொண்டு வந்து நின்றனர். குந்தி அவருடைய பேரழகைக்கண்டு அதிசயித்துக் காமங்கொண்டு ருது தோஷத்தை யடைந்து நாணமுடையவளாய்க் கைகூப்பி, ஓ சுவாமிகாள்! உம்மைத்தரிசிக்க எண்ணினேன், தரிசனமாய்விட்டது. உம்முடைய மண்டலத்துக்கெழுந்தருளலாம் என்ன, சூரியமூர்த்தி, ஓ குந்தி! உன்னிடத்தில் மந்திரசித்தி யுண்டானபடியினுற்றுன் நானிவ்வளவு எளிதில் வந்தேன். நீ என்னுல் ஒரு பிரயோஜனமுமடையாமற் போவென்று சொல்லுவது அழகன்று. இதற்கா எனது மந்திரத்தை உச்சரித்தது? நான் உன்னைப்பார்த்தவுடன் மன்மதனுல் பீடிக்கப்பட்டு காமவெப்பமுடையவனுயினேன். அவ்வெப்பத்தை உன்னுல் போக்கிக்கொள்ளாமல் நானெப்படிப் போவேன் என்றனர். குந்தி, யான் கன்னிகையையாயிருத்தலால் நீரிப்போது கொண்ட அபேக்ஷை எப்படி நிறைவேறும்? அதற்குரியவளாயிருப்பின் உம்முடைய ஆக்ஞைக் கிரண்டாவது செய்யேன்; இப்போது உடன்படுவேனுயின் யாவரும் பழிப்பார்களல்லவா என்று சொல்ல சூரியமூர்த்தி, ஓ பெண்ணே! என்னோடு கூடுவதனுல் உன் கன்னிகை விரதத்திற்குப் பங்கம் வரமாட்டாது; யாவரும் உன்னைப் புகழ்வார்கள். என் அபீஷ்டத்தை நீ தடுப்பையாயின் உன்னைச் சபிப்பேன். இம்மந்திரத்தை யுபதேசித்த குருவையுஞ் சபிப்பேன்; என்ன சொல்லுகிறுயென்றுகேட்க, குந்திதேவி சிறிது அச்சமுற்றவளாய் நம்மால் நமது ஆசிரியருக்குச் சாபம் நேரிடும்படிச் செய்வதுதானு நாம் செய்யும் பிரதியுபகாரமென்றெண்ணி, ஓ சூரியபகவானே! சாபமிடுவேனென்பதை விட்டுவிடும், உம்முடைய பிரியத்திற்கு நானுரியவளாயிருக்கிறேனென்று கூற, சூரியன் மனமகிழ்ந்தவனுய்க் குந்தியினுடைய இன்ப நலத்தைக் குறைவின்றி யனுபவித்துக் காமவிடாயகன்று அவளுக்குப்பல ஆசிகள்புகன்று தனது மண்டலம்போய்ச் சேர்ந்தனன். பின்னர் குந்தி தாய்தந்தை முதலிய ஒருவருக்குந் தெரியாமல் கர்ப்பவதியாய்க் கவசகுண்டலத்தோடு

இரண்டாவது சூரியனென்று கண்டோர் சொல்லக்கூடிய ஒரு குழந்தையைப்பெற்று அக்குழந்தையைக் கையிலேந்திக்கொண்டு துக்கித்திருக்குஞ் சமயத்தில் அவளுயிருக்கொத்த தாதி யொருத்தி நானிருக்கும்போது நீ ஏன் விசனப்படுகின்றாய்? இவ்வற்பகாரியங் களுக்கெல்லாம் துக்கிப்பவருண்டோ? நீ ஒன்றுக்கும் கவலையுற வேண்டாம் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, குந்தி ஒரு மரப்பெட்டியில் தனது களங்கமுள்ள சேலையைப்பரப்பி அதில் வளர்த்தி அம்பிகையைத் தியானித்து குழந்தையின் திருமுக மண்டலத்தைப்பார்த்து, அப்பா குழந்தாய்! உன்னைப் பெறும் பாக்கியத்தைப் பெற்றேனேயன்றி உன்னைச் சீராட்டித் தோளிலும் மார்பிலுங் கிடத்திப் பாலூட்டித் தொட்டிலில் வளர்த்தி ஊசலாட்டப்பெறும் புத்திரானந்தத்தை யடையும் பாக்கியத்தைப் பெறுதொழிந்தேன். அந்தோ இது கஷ்டம்! கஷ்டம்!! சர்வாபரண சம்பன்னையாயும், பகவதியாயும், சர்வேஸ்வரியாயும், விஸ்வஜநநி யாயும், காத்தியாயினியாயும் விளங்கும் அம்பிகையே உனக்குப் பசிவராமல் பாலூட்டி வளர்க்கவேண்டும். அவ்வம்பிகையே உனக்குத்துணையாயிருப்பாள். உன் முகாரவிந்தத்தை நான் எப் பொழுது காண்பேன்? நான் உன்னைப் பெற்றெடுத்து வளர்க்குந் தாயாகாமல் உன்னைக்கொல்லும் கொலையாளியாயினேன். என்னைப் போலும் பாவி ஒருத்தி உலகிலுண்டோ? இப்பொழுது பெட்டியைப் பூட்டி மானிடசஞ்சாரமில்லாத விடத்திற்கொண்டுபோய்ப் போட வுத்தேசித்திருக்கிறேன். நான் ராஜஸ்திரீயாயிருந்தும் சோர ஸ்திரீயைப்போல் இக்கொடுந் தொழிலைச் செய்தற்காயினேன். இப்பாவந் தேவியைத் தியானித்துப் பூஜித்து வாழ்த்தாமையினால் வந்ததேயன்றி வேறில்லை. இனி நான் என்செய்வேன் என்று அப் பெட்டியைப் பூட்டித் தன்னைப் பாதுகாப்பவளாகிய தோழியிடத்திற் கொடுத்து, ஓ பாங்கியே! என்னுயிரை மாய்க்கத்துணியாது இவ் வருமை மகனது உயிரை மாய்க்காது மாய்க்கத் துணிந்தேன்; ஆகையால் என்பால் அன்புடையவளாய் இப்பெட்டியை ஒருவரும் அறியாவண்ணஞ் செய்துவிடென்று கொடுத்துவிட்டு ஸ்நானஞ் செய்து பரிசுத்தையாய்த் தன் பிதாவினுடைய கிருகஞ்சென்று மிகவும் பயத்தோடு கூடினவளாய் வாழ்ந்திருந்தனள். அத்தோழி அப்பெட்டியை அப்படியே செய்ய, அப்பெட்டி அதிரதனென்னும் தேர்ப்பாகன் கையிற் கிடைத்தது. அவன் அப்பெட்டியைத் தன் மனையாட்டியாகிய ராதைக்குக் காண்பித்து இது பெறுதற்கரிய பெருஞ் செல்வமென்று கானீனனாகிய அக்குழந்தையைப் பாது காத்துவந்தனன். (15–38)

அப்பால் சூரசேனன் குந்திக்கு மங்கைப்பருவம் வருதலைநாடி சுயம்வரம் நாட்ட, பாண்டு மகாராஜன் வந்து அக்குந்தியை விவாகஞ் செய்துகொண்டு, பின்னர் மாத்திரையையும் இரண்டா வது மனைவியாக்கிக்கொண்டு வாழுநாளில் ஒரு நாள் வேட்டை நிமித்தமாய் வனஞ்சென்று மிருகங்களைக் கொன்றுவரும்பொழுது அங்குக் குந்தமனென்னு முனிவர் தானும் மனைவியும் மானுரு

வெடுத்து லீலாவிநோதமாய்ப் புணர்ந்திருப்பதை யறியாது மிருக மென்றெண்ணி பாணப்பிரயோகஞ் செய்தான். அது முனிவர் மேற்பட அவர் மரணவஸ்தை யடைந்து கோபங்கொண்டு அரசனைப் பார்த்து, ஓ மதி கேடா ! உன் சரீரம்போல் உன்னறிவும் வெள்ளையாயிற்றே ! அடமூடா ! இனி உன் மனைவியை எப்போது புணருகின்றனையோ அப்போது நீ மரணமடையக் கடவாயென்று கொடுஞ்சாபமிட்டனர். அதை அரசன் கேட்டுத் துக்காக்கிராந்த னாய் நடுக்கமுற்று இனி என் செய்வோமென்றேங்கி அரசாட்சியை வெறுத்து வனத்திற்றானே நாள் கழிக்கவெண்ணித் தன் மனைவி யரைப்பார்த்து, என்னிருகண்மணிகளே ! எனக்கு நேரிட்ட சாபத்தைக் கேட்டீர்களல்லவா ? இனி நான் உங்களோடு கூடி வாழ் வதற்குரியவனாவனா ? ஆகையால் நீங்கள் நகரம்போய்ச் சேருங்கள். நானிங்குள்ள தவசிகளோடு ஒருவனாக விருந்து காலங்கழிக் கின்றேன் என்றான். மனைவியர் நாங்கள் உம்மைப் பிரிந்திருப்பது எங்கள் கற்புக்கு அழகாகுமா ? நாங்களும் உம்மைப்போலவே காமாதிகுணங்களைவிட்டுப் பரிசாரகிகளாய்க் காலங்கழித்து வருகிறோம் என்று அரசன் தடுக்காவண்ணங் கூறி அவனுடன் அவ்வனமே நகரமாக வாழ்ந்திருந்தனர். ஒரு நாள் அரசன் கங்கைக்கரையின் வழியே மனைவியருடன் செல்லும்பொழுது அங்குள்ள ஓராச்சிரமத்தில் முனிவரெல்லாங்கூடித் தருமசாஸ்திர விசாரஞ்செய்யும் பாகத்தில் "அபுத்ரஸ்யகதிர்நாஸ்தி" என்கிற வாக்கியத்தைச் சொல்லிப் புத்திரனில்லாதவர்க்குக் கதியில்லை யாகையால் அவர் எவ்விதத்திலேனும் அம்சஜன், கோளகன், குண்டகன், கானீனன் என்பவரைக் கொண்டாவது புத்திரோற்பத்தி செய்துகொள்ளல் வேண்டும் என்று உபந்நியசித்துக் கொண்டிருக்க அதைக்கேட்டு மனக்கவலை யடைந்து குந்தியைப் பார்த்து, ஓ சொற்றிரம்பாத கற்பிற் சிறந்த நங்காய் ! இப்பெரி யோர் கூறிய தருமத்தைக் கேட்டனையா ? என்னாலெப்படி உங்களுக்குப் புத்திரப்பேறுண்டாகும் ? ஆகையால் நீ இங்குள்ள முனிவரிடஞ் சென்று புத்திரப்பேறு பெற்று வருவாய் ; இது என் னுடைய ஆணையா யிருக்கும்பொழுது உனக்குத் தோஷமுண்டாக மாட்டாது ; பூர்வத்தில் மஹாராஜகிய கவுதாசனனென்கிற அரசன் வசிஷ்டமுனிவரால் புத்திரோற்பத்தி செய்துகொண்டன னென்று எனக்குக் கேள்வி என்றான். குந்திதேவி, ஓ அரசனே ! எச்சமயத் திலேயும் பலிக்கத்தக்கதாயும், இஷ்டபூர்த்தி செய்வதாயுமுள்ள மந்திரங்கள் முன்னொரு சமயம் துர்வாசர் எனக்குபதேசித்திருக் கின்றார் ; புத்திரபாக்கியத்தை விரும்பிய எந்நாயகனே ! எந்த மந் திரத்தைக்கண்டு எந்தத் தேவதையை விரும்புகின்றேனோ அந்தத் தேவதை என் பக்கத்தில் நிச்சயமாகவரும் ; அந்தத் தேவதையினா லேயே புத்திரப் பேறுண்டாகுமென்றனள். அரசன் அம்மொழிகேட்டு மிகவும் மகிழ்ந்து அப்படியே செய்வாயென்று விடைகொடுத்தனன். குந்திதேவி கணவனுடைய அநுக்ஞைபெற்று தேவ சிரேஷ்டனாகிய யமதருமராஜனைத் தியானித்து அவன் மந்திரத்தைச் ஜபிக்க

அவன் வந்தனன். அவனுடன் புணர்ந்து தருமரையும், அப்படியே வாயுபகவானுக்கு *விருகோதர (வீம)னையும், இந்திரனுக்கு அர்ச்சுனனையும், வருடத்துக்கொருவனாக மூன்று வருடத்துக்கு மூன்று பிள்ளைகளைப் பெற்றனள். குந்திதேவி புத்திரப்பேறுபெற்ற மகிமையைக்கண்டு மாத்திராதேவி அரசனை நோக்கி, என் நாயகனே! நான் புத்திரப்பேறு பெறவறியாத பாவியாயினேன் என்செய்வேன் நீர் எனக்குப் புத்திரப்பேறுண்டாகும் வகையைத் தேடவேண்டுமென்று மிக விரக்கத்தோடும் பிரார்த்தித்தனள். அரசன் குந்தியே இதற்கு வழிகாட்டத் தக்கவளென்றெண்ணி அவளை யழைத்து மாத்திரியினுடைய வேண்டுகோளைத் தெரியப்படுத்தினன். அந்த உத்தமி தயையுடன் மாத்திரியையழைத்து அச்வினி தேவதைகளினுடைய மந்திரத்தை யுபதேசித்தனள். மாத்திரி நமக்கு இந்தக் குந்திதேவி ஒரு மந்திரத்தைத்தானே உபதேசித்தாள், இதற்கு ஒரு பிள்ளைதானே பிறக்கும் என்கிற மனக்குறை யுடையவளாய் அரசனிடம் தெரிவிக்க அரசன் ஒரு பிள்ளையிருந்தாற் போதுமென்றனன். பின்னர் மாத்திரியும் சித்தசமாதானமுடையவளாய் வாழுநாளில் ஒரு நாள் அச்வினி தேவதைகளைத் தியானிக்க அத்தேவதைகள் பிரத்தியக்ஷமாய் வர அவர்களைப் புணர்ந்து நகுல சகாதேவரைப் பெற்றனள். இவ்வாறு இருவருக்கும் பிறந்த ஐவரும் பாண்டு புத்திரரென்றே வழங்கப்பெற்றனர். (39–58)

ஒரு நாள் அந்த ஆச்சிரமத்தில் ஒருவருமில்லாமற்போக மாத்திரியானவள் மலர்பறித் திருக்கும்பொழுது பாண்டுவுக்கு மரணகாலஞ் சமீபித்த படியினால் அவளைக்கண்டு என்றுங் கொள்ளாத காமவெறிகொண்டு அவள் கையைப் பற்றியிழுத்தனன். அவள் என்னைத் தொடவேண்டாம் தொடவேண்டாமென்று அனேக விதமாய்த் தடைசெய்தும் இவன் தடைப்படாது அவளைக் கட்டியணைத்துச் சுகிக்கும்பொழுது பூமியில் வீழ்ந்திறந்தனன். மாத்திரி ஒரு விருக்ஷத்திற் படர்ந்தகொடி அவ்விருக்ஷம் முறிந்த காலத்தில் அவ்விருக்ஷத்தின்மேல் வீழ்வதுபோல் பாண்டுவின்மேல் ஓவென்றலறி அழுதுகொண்டே விழுந்தனள். அக்குரலொலியால் குந்தியும் ஓடிவந்து இருவரையும் பார்த்து இஃதுவென்ன கொடுமையென்று தீராத்துயரம் கொண்டழத் தொடங்கினள். இவ்விருவருடைய அழுகையோசையைக் கேட்டுப் பாண்டவரும், வைதிக நிஷ்டரான முனிகணங்களும் ஓடிவந்து பார்த்துத் தாங்களும் வருந்தி பின்னரவர்களைத் தேற்றி அப்பாண்டு மகாராஜன் நாடோறும் வளர்த்திவந்த காருஹபத்திய முதலிய அக்கினிகளால் அவனைக் கங்கைக்கரையிற் கிடத்தி, செய்யவேண்டுவனவாயுள்ள தஹனாதி கருமங்களைச் செய்துவைத்தனர். மாத்திராதேவியானவள் வீரபதிவிரதைகளுடைய சத்தியவொழுக்கத்தைப் பரிபாலிக்க வேண்டுமென்கிற தருமத்தில் ஆசையுற்றவளாய் நகுல சகா

---

* செந்நாயைப்போலும் வயிறுடையவன்.

தேவரைக் குந்தியினிடத்தில் ஒப்புவித்துத் தான் தனது நாயக னுடன் சககமனமாயினள். முனிவர்கள் யமமூர்த்திக்குக் கொடுக்கத் தக்கதாகிய அருக்கியதான முதலியவைகளைச் செய்து முடித்துப் பாண்டவரோடும், குந்தி தேவியோடும் அஸ்திநபுரமடைந்தார்கள்.

அவர்களைக் காங்கேயர், விதுரர், நகரத்தார் முதலாயினோர் கூடி அழைத்துக்கொண்டுபோய்த் திருதராஷ்டிரனிடம் விட்டு, பாண்டுவுக்கு நேர்ந்த சாபந்தெரிந்தவர்களாதலால் சந்தேகித்து இக்குழந்தைகள் யாருடைதென்றனர்? குந்திதேவி இவ்வாறு கேட்கலாயிற்றே என்று சிறிதேங்கி இயமன் முதலிய ஐவரையும் நினைத்தனள். அவ்வைவரும் ஆகாயமார்க்கத்தில் வந்து அந்த ஐந்து பிள்ளைகளும் தேவாம்சத்தினற் குருகுலத்திற் பிறந்தவர் களே, இவர்களுக்குக் காரணர் நாங்களேவரே என்றனர். அவர் வாக்கியத்தைப் பீஷ்மர் முதலாயினர் கேட்டுச் சத்தியம் சத்திய மென்று கொண்டாடினர். பீஷ்மர் அக்குழந்தைகளிடத்தில் மிகவும் பிரீதியுடைய மனமுடையவராய் எல்லாவற்றுனும் குறைவு வராவண்ணம் திரவியங்களைச் செலவழித்துக் கண்ணிமைபோற் பாதுகாத்து வந்தனர். (59–65)

ஓம் காமேஶ்வர மஹேஶ்வர்யை நம:

# 7. பாண்டவர் சரிதம்

சூதர் கூறுகின்றார்: ஓ முனிபுங்கவர்காள்! மேற்கூறிய பாண்டவர் ஐவருக்குத் திரௌபதி என்னும் அழகிய சுந்தரி பொதுவான மனைவியாயிருந்தனள். பொதுவா யிருந்தபோதிலும் அவள் மஹா பதிவிரதை. அப் பதிவிரதைக்குப் பிள்ளைகள் ஐவர். பாண்டவருள் அருச்சுனன் கிருஷ்ணமூர்த்தியினுடைய உடன் பிறந்தவளாகிய சுபத்திரையை விரும்ப, ஜயசீலனாகிய அவன் விரும்பியபடியே கிருஷ்ணமூர்த்தி சம்மதித்து அவனுக்கு அச்சுபத் திரையை விவாகஞ் செய்து வைத்தனர். அவளுக்கு அபிமன்யு என் கிற ஒரு புத்திரனிருந்தான். அவனுக்கு மனைவி விராடராஜ னுடைய பெண்ணாகிய அதி சுந்தரியான உத்தரை; இவன் பாரத யுத்தத்திலிறந்தனன். திரௌபதியினுடைய பிள்ளைகளும் இறந்து போயினர். இவ்வாறு பாண்டுவினுடைய குலம் க்ஷீணமாய் வந்த அந்தக்காலத்தில் அபிமன்யுவினுடைய மனைவியாகிய உத்தரை ஒரு புத்திரனைப் பெற்றனள். அப்பிள்ளையும் அஶ்வத் தாமனுடைய பாணத்தினல் மரணமடைந்தனன். அற்புத சாமர்த்திய முடையவனாகிய அபிமன்யுவினுடைய பிள்ளை இறந்து விட்டானென்கிற செய்தியைக் கேள்வியுற்ற கிருஷ்ணமூர்த்தி தாபத்தை யடைந்தவராய் அப்பிள்ளை பிழைத் தெழுந்திருக்கும் வண்ணஞ்செய்ய, அவனும் எழுந்திருந்தனன். இவன் குலம்

க்ஷீணமாகுங்காலத்திற் பிறந்தானுகையால் அக்காரணமாக "பரீக்ஷித்" என்று உலகமெல்லாமறிய நாமகரணஞ் செய்து மங்களங் கொண்டாடினர். (1–6)

* திருதராஷ்டிரன் யுத்தத்தில் தன் பிள்ளைகளிறந்துபோக அதனுல் மிகவுந்துக்கத்தை யுடையவனுயும், பீமனுடைய வார்த்தை என்கிற பாணத்தில் ஒரு கணமேனும் ஓயாமல் பீடிக்கப்பட்டவனுயும், பாண்டவர்களுடைய அதிகாரத்திற் குட்பட்டவனுயும் இருந்தனன். இவனைப்போலவே காந்தாரியும் பிள்ளைகளுடைய துக்கத்தினுல் மிகவும் பீடிக்கப்பட்டவளாய்க் கண்ணீர் விட்டுக் கொண்டேயிருந்தாள். தருமபுத்திரர் இந்த இரண்டு பேருடைய துக்கத்தைப் பார்க்குந்தோறும் சகிக்கக் கூடாத பெருங் கவலையுடையவராய் அவர்களுக் குண்டாயிருக்கும் புத்திரசோகம் நீங்குமாறு அவர்களுக்குரிய பணிகளெல்லாம் இரவும் பகலும் ஓய்வில்லாமல் தாமே செய்து வந்தனர். ஞானதரும சீலராகிய விதுரர் யுதிஷ்டிரருடைய சம்மதப்படி அந்தகனுகிய அத்திருதராஷ்டிரன் பக்கத்திற்றுனே யிருந்தனர். திருதராஷ்டிரன் விதுரர் தன்னைவிட்டு நீங்கா திருப்பதினுலும், தருமர் மனஞ் சலியாது தனக்குச் செய்யும் ஏவலினுலுங் புத்திரசோகம் நீங்கினவன் போலிருந்தனன். (7–10)

தருமருடைய உபசரிப்பினுல் திருதராஷ்டிரன் சோகம் நீங்கினவனு யிருப்பதைப்பார்த்த பீமன் சகியாதவனுய் அடங்காத கோபங்கொண்டு யாவருங்கேட்க மிகவும் கிழவனுயிருக்கின்ற திருதராஷ்டிரன் உயிர்விட்டிறக்கும்படியாக அடியில் வருமாறு வாக் பாணங்களைப் பிரயோகஞ் செய்யலாயினன்: ஓ கண்ணில்லாத குருடனே! உன்னுடைய பிள்ளைகளெல்லாம் யுத்தத்தில் என்னுல் கொல்லப்பட்டார்கள். அவருள் உனக்கும் துரியோதனனுக்கும் மிகவும் பிரியனுயிருந்த துச்சாதனனுடைய உதிர வெள்ளத்தைத் தண்ணீரைப்போற் பருகி ஏப்பமிட்டேன். ஓ சபையோர்களே! இந்தக் கிழக்குருடன் வெட்கமென்பது சிறிதுமில்லாமல் என்னுல் கொடுக்கப்பட்ட பிண்டத்தைக் காக்கையைப் போலும், நாயைப் போலும் வெறுப்பில்லாமல் தின்று வருகின்றுன். இவன் பிழைப்பும் ஒரு பிழைப்பா? இவன் உயிரோடிருப்பதனுல் யாருக்கென்ன பிரயோஜனம்? இவன் விருதாவாக ஜீவித்திருகின்றுன் என்று பலவாறுன இழிவுரைகளால் வைதனன். வைவதைக் கேட்ட திருதராஷ்டிரன் தருமரைப்பார்த்து, ஓ தருமனே! இந்த பீமன் பேசுகிற பேச்சை எத்தனை நாள் கேட்டிருப்பேன்! என்னுல் கேட்க முடியவில்லை என்றனன். தருமர், ஓ என்னையாவே! அந்த வீமனுடைய வார்த்தையை நீர் ஒரு பொருளாக எண்ண

* தரிக்கப்பட்ட ராஜ்யத்தையுடையவன், யுத்தத்தில் முன் வைத்த காலைப் பின்வாங்காதவன்.

வேண்டாம். அவன் மூர்க்கன் ; அவன் யார் சொல்லையுங்கேளான் என்று வேண்டிய சமாதானங்களைச் சொல்லிவந்தனர். இவ்வண் ணம் தருமருடைய இனிய வார்த்தைகளையும், பீமசேனனுடைய கடுஞ்சொற்களையுங் கேட்டுப் பதினெண்ணுயிர வருஷம் துக்க ஜீவியாய் வாழ்ந்திருந்த திருதராஷ்டிரன் ஒரு நாள் தருமரை யழைத்துக் கூறுகின்ருன் : குழந்தாய் ! நான் இனி ஆரண்யவாசம் செய்ய விரும்புகிறேன் ; நீ விடைதரல் வேண்டும். அன்றியும் ஓ தருமனே ! நீ மிகவுந் தயாளகுணமுடையவன். இப்பொழுது நானென்று விரும்பியிருக்கிறேன். என்னையெனில், இறந்துபோன என்னுடைய பிள்ளைகள் பொருட்டு விதிபூர்வகமாய்த் திலோ தகம் (தர்ப்பணுதிகள்) செய்யவெண்ணியிருக்கிறேன். அதற்கு வேண்டிய பொருளுதவியை நீ செய்யவேண்டும். ஏனென்ருல் யுத்தத்திலிறந்துபோன என்னுடைய பிள்ளைகளுக்கெல்லாம் செய்யவேண்டிய பரலோகக்கிரியைகளை இந்த பீமன் பூர்வ துவேஷத்தையே மனதி லெண்ணிக்கொண்டு நன்ருகச் செய்யவே யில்லை. அவர்களை இங்கு வாழவொட்டாமற் செய்ததுபோல் அங்கும் வாழவொட்டாமற் செய்யவே விதிப்படிச் செய்யா தொழிந்தன னென்றறிவாய். நீ நான் கேட்டவண்ணந் தருவை யாயின் என் பிள்ளைகளெல்லாம் சுவர்க்கலோகப் பிராப்தியடையு மாறு என்னிஷ்டம்போற் செய்து முடிப்பேன். இதனை யோசிப்பா யென்றனுப்பிவிட்டுப் பின்னர் விதுரரை யழைத்துத் தன் குறை களெல்லாம் எடுத்துக் கூறிப் பிரபுவாயும், பரிசுத்தனுயு மிருக்கின்ற தருமபுத்திரரிடத்தில் ஏகாந்த சமயம் பார்த்து நான் தனம் வேண்டியவனுக விருக்கின்றே னென்பதைத் தெரிவித்துக் கொடுக்கும்படிச் செய்வாயென்றனுப்பினன். அவரும் அவ்வாறே தருமருக்கறிவிக்க, அவர் மிகவிரக்க முடையவராய்த் தம் சம்பந்த மாயிருக்கிற யாவரையு மழைத்து, ஓ பூஜ்யமானவர்களே ! இப் பொழுது என்னுடைய பெரிய தந்தையாகிய திருதராஷ்டிர மஹாராஜா தம்பிள்ளைகளுக்குச் சுவர்க்கலோகப் பிராப்தி யுண்டாமாறு திலோதகஞ்செய்ய உத்தேசித்திருக்கிறபடியால் அதற்கு வேண்டிய பொருளுதவியைச் செய்யச் சித்தமாயிருக் கின்றே னென்றனர். (11–20)

அபார பராக்கிரமத்தை யுடையவர்களான ஐவருக்குள் மூத்தவராகிய தருமர் கூறிய வார்த்தையை அவருடைய சகோ தரனும், வாயு புத்திரனுமாகிய பீமன்கேட்டுக் கோபங் கொண்டவனுய் மிக ஆவேசத்துடன் தமையனைப் பார்த்துப் பேசு வான் : ஓ அண்ணுவே ! நீர் தருமராஜாவென்பதை இப்பொழுது நானறிந்தேன். உம்மைப்போலுந் தருமமறிந்து செய்யத்தக்கவரை இவ்வுலகின்கண் காண்டல் மிகவும் அரிது. ஹா ! ஹா ! நீர் கூறிய வார்த்தை மிக நன்று நன்று. துரியோதனுதிகளுடைய பரலோகத் தைக் கருதி திரவியங்கொடுக்கவா வேண்டும் ? நீர் கொடுக்குந் திரவியத்தினுலேயே இந்தக் குருடன் திருப்தியடைவானு ? இஃது வென்ன மூடத்தனம் ? உம்முடைய யோசனை ஒவ்வொன்றையும்

எண்ணிப் பார்க்கும்பொழுது எவ்வளவு சந்தோஷத்தை விளைவிக்கின்றது! முன்னும் உம்முடைய ஆலோசனையினாலன்றோ நாங்கள் துக்கத்தை யுடையவர்களாய் வனத்தில் வசிக்கலானோம். திரௌபதியும் துஷ்டனாகிய சடாசூரனென்கிற அசுரனாலேகொண்டு போகப்பட்டாள். நல்ல நியாயந்தெரிந்த புண்ணிய புருஷரே! முன் கூறியது மாத்திரமா, உம்முடைய அனுக்கிரஹத்தினால் நாங்கள் பிழைக்க வகையற்றவர்களாய் விராடராஜனுடைய கிருஹத்தில் வசிப்பும், அவனுடைய ஏவற்றொழிலும் கிடைக்கப்பெற்றோம். நீர் சொக்கட்டாடினீரே, அஃது ஆடாமற்போவீரானால் நாங்கள் பரதேசியாய்ப்போக வந்தகாலம் எப்படி விருத்தியடையும்? விராடபூபதிக்கு நானெப்படி சமையலாளாக ஆவேன்? புஜபல பராக்கிரமத்திற் சிறந்தவனும், இந்திரகுமாரனுமான அருச்சுனன் வேடதாரியைப்போற் பேடிவடிவங் கொள்வதற்கும், சிறுபிள்ளைகளுக்கு நிருத்தங் கற்பிக்கின்றவனைப்போல் பிருஹன்னளையென்கிற பேருடையவனாய் ஆடல் கற்பிப்பதற்கும் எப்படி யுரியவனாவான்? அன்றியும் ஆண்மகனாகப் பிறந்து வீரனென்று காண்டீபத்தைத் தாங்கி அழகுபெற்ற அவனுடைய முன்னங்கைகள் வளையல்களால் அழகு பெறும்படியான செல்வத்தைப் பெறுமா? இதைக்காட்டிலும் வியசனகரமான சந்தோஷம் வேறொன்றுண்டா? இதுமட்டோ! முடியணியும் அவன் தலையில் பெண்முடியையும், அவனுடைய ராஜதிருஷ்டியில் மையையுங் கண்டேனே, இன்னும் நான் பார்க்க வேண்டியவை என்னவிருக்கின்றன? இனி நான் உன் முகத்தில் விழிக்கமாட்டேன். வாளைக் கையிற் பிடித்து வெட்டிக்கொள்ளுகிறேன். இதைவிட வேறு சுகம் எனக்கில்லை. எங்களுயிரைச் சூறையிட முன்வந்த ஓ அண்ணாவே! நம்மையெல்லாங் கொல்லுவதற்கு அரக்குமாளிகை கட்டிக் கொளுத்துவதற்குப் புரோசனனை ஏற்படுத்தி வைத்தானே, அந்த நீதிக்கோ நீரிப்போது பொருள் கொடுக்கத் துணிந்தது? அவனை நான் அநியாயமாய்க் கொன்றல்லவோ விட்டேன்! அவனிப்போதிருப்பானாயின் நீர் அவனைப்பார்த்து ஓ துரியோதனா இந்த பீமன் உன்னேவலைச் செய்யாமற் போயினான், அது குற்றமாகும், ஆகையால் இப்பொழுது இந்த பீமனை ஏவலாளியாக வைத்துக்கொள்ளென்று நீதிமொழிகூறி என்னை அடிமையாளாக்கி வேண்டியவளவில் பொருளையுந் தானமாகக் கொடுப்பீர். ஓ! ஹோ! உம்முடைய மதி என்ன துன்மதி! அந்தோ! துரியோதனனைக் கொல்லவேண்டிய முறையில் ஒன்றல்லவோ தவறினேன். நானுனைக் கேளாமலே கீசகர்களை அவர்கள் மனைவியரோடு எவ்வண்ணங் கொன்றேனோ அவ்வண்ணங் கொல்லாமலன்றோ போயினேன். அதனை நினைக்குந்தோறும் எனக்குக் குறையாயிருக்கின்றது. உனக்குக் கீசகர்களை நம்மைக்கேளாமல் கொன்றுவிட்டானே, நம்மைக் கேட்டிருப்பானாயின் அப்படிச் செய்ய இடங் கொடுப்போமா என்ற குறை இருக்குமென்றெண்ணுகிறேன். ஏனிப்படிச் சொல்லுகிறேனென்றால் வனத்தில் கந்தருவன் துரியோ

தனனைத் தேரிற் கட்டிக்கொண்டு போகிறபோது அவனை மீட்பிப்பதற்குக் கந்தர்வனுக்கு மூர்க்கமான சபதத்தைச் சொல்லி, ஏமாற்றி அத்துரியோதனனை நகருக்குப் போகும்படிச் செய்த தயாளுவல்லவா ? இவ்வாறெல்லாம் துரியோதனனுக்குச் செய்வதெல்லாம் நன்மையே ; உன்னுடன் பிறந்த எங்களுக்குச் செய்வதெல்லாந் தீமையே. நாங்கள் அந்தத் துரியோதனனுக்கே சகோதரராகப் பிறந்திருப்போமானால் உனக்கு எங்களிடத்தில் விசுவாசமுண்டாயிருக்கும். அவனுடன் பிறக்கும் பாவம் ஏன் செய்யாமற்போனோமென்று இப்பொழுது மிகவும் யோசிக்கிறேன். நீ தருமனென்று பேர்பெற்றது அவர்களுக்கே ; எங்கட்கு நீ தருமனன்று. இனி உன்னோடு போராட என்னால் முடியாது. துரியோதனனுடைய நன்மைக்கோ, தீமைக்கோ, புண்ணியத்துக்கோ, பாவத்துக்கோ, நான் ஒரு காசளவுங்கொடேன் கொடேன் ; நீ கொடுப்பேன், கொடுப்பேனென்று எனக்குக் கேட்கும்படிப் பெருங்கூச்சலிடவேண்டாம். உன்னை அண்ணாவாகப் பெற்றது போதும், போதும் என்று திருதராஷ்டிரனாகிய குருடன் மனம் புண் படும்படியாய் வாய்சலிக்க வந்தவாறெல்லாம் பேசித் திரும்பிப் பாராமற்போயினான். அவன் போனவுடன் தருமர் பெருஞ்சனி விட்டதென்றெண்ணினவராய் இனி நம்மைத் தடைசெய்வாரொருவருமில்லையென்று தீரங்கொண்டு யாவருங் கேட்க முன் கூறியவாறு திருதராஷ்டிரன் மகிழும்படியாக அளவிறந்த திரவியங்களைக்கொடுத்து அக்குருடனிஷ்டப்படியே துரியோதனனாதியருக்குப் பரலோகக்கிரியைகளை வேதவிதிப்படிச் செய்வித்து பிராம்மணோத்தமர்களுக்குத் தானங்கொடுத்து இப்படி ஒருவருக்குஞ் செய்யவேயில்லையென்று அந்தகன் அகமகிழும் படியாகச் செய்துமுடித்தனர். (21–34)

அந்தகன் ஒருவாறு தெளிந்து வனம்போக வெண்ணி, சஞ்சயனால் யாவுந் தெரிந்துகொண்டு குந்தி தேவியும், விதுரனும் தன்னுடன்வர, காந்தாரியோடு ஆரண்யஞ் செல்லத் தொடங்கும் பொழுது குந்திதேவி தன் பிள்ளைகள்பால் விடை கேட்டனள். பாண்டவர்க ளுடன்படாது தடைசெய்தனர். அத்தடைக்குட் படாது அவள் தன்னுடன்வரத் தலைப்படவும் அழைத்துக்கொண்டு சென்றனன். பீமசேனன் தாயாரைப் பிரிந்திருப்பதற் காற்றாது அழுதுகொண்டே சென்றனன். ஏனைய குரு வம்சத்தாரும் துக்காக்கிராந்தராய்ச் சிலதூரஞ் சென்று வீமனை யழைத்துக் கொண்டு கங்கைக் கரையைக் கடந்து அஸ்தினாபுரத்தை வந்தடைந் தார்கள். திருதராஷ்டிரன் முதலியோர் கங்கைக்கரையே சென்று சதயூபருடைய ஆச்சிரமத்தையடைந்து அங்குப் பர்ணசாலை யமைத்துக்கொண்டு தவசீலராய் ஆறுவருஷம் வாழ்ந்திருந்தனர். அதுவரையில் திருதராஷ்டிராதியருடைய க்ஷேமாதிசயங்களைச் சொல்லத்தக்க ரிஷிகள் அஸ்தினாபுரத்திற்கு வராமையால் தருமர் அவர்கள்மேல் ஏக்கமுடையவராயிருக்க ஒரு நாள் குந்திதேவியைக் கனவிற் கண்டு மனக்கவலையுடையவராய்த் தம்பிமார்களை யழைத்து, அப்பா தம்பிமார்களே ! நான் நம்முடைய தாயைக்

கனவில் கண்டேன்; மிகவும் இளைத்திருக்கிருள்; பெரிய தந்தையும் அப்படியே. ஆகையினுல் நாம் போய்ப் பார்த்து வரவேண்டும்; என் மனம் மிக ஏக்கங்கொண்டிருக்கிறது. பூஜ்யராகிய விதுரரும், மிகுந்த அன்புடைய சஞ்சயரும் எப்படியிருக்கின்ருர்களோ தெரியவில்லை. நான் போகவிருக்கிறேன், உங்களுக்கும் பார்க்க வேண்டுமென்கிற எண்ணமிருந்தால் வாருங்களென்ருர். (35–41)

இந்த வார்த்தையைக் கேட்ட சகோதரர்களும் சுபத்திரா தேவியும், திரௌபதியும், மஹாபூஜ்யனுகிய விராடராஜன் புத்திரியாகிய உத்தரையும், நகரத்தாரும் புறப்பட்டார்கள். பாண்டவர்கள் தாயார் முதலானேரைப் பார்க்கப் போகிருேமென்கிற சந்தோஷத்தோடு கூடினவர்களாய் சதயூபருடைய ஆச்சிரமத்தையடைந்து யாவரையுங்கண்டு களித்தார்கள். அப்பொழுது தருமர் விதுரரைக் காணுமல் திருதராஷ்டிரனைப் பார்த்து எங்கள் விதுரரெங்கே என்றனர். அவனிங்கு எங்கிருக்கின்ருன்? அவன் சங்கற்ப ரஹிதனுய், ஒருவருடைய அபேக்ஷயற்றவனுய் விரக்தியுடையவனுய்த் தனித்தவனுய் எந்தவிடத்திலோ புராணபுருஷனுகிய ஸர்வேஸ்வரனைத் தியானித்துக்கொண்டிருக்கிருன் என்றனன். தருமர் மறுநாள் கங்கைக் கரையே ஆரண்யஞ்சென்று, சரீரம் இளைத்தும் தவத்தில் ஊக்கமுடையவராயும், அசைவற்று யோகத்திலிருக்கின்ற விதுரரைப் பார்த்து, யான் தருமன் உம்மைத் தரிசிக்க வந்தேன்; இதோ நமஸ்கரிக்கின்றேன் என்றனர். அவர் இவையெல்லாங் கேளாதிருக்கும் நிலையில் நின்றனராதலால் மரம் போலிருந்தனர். அதுகண்டு தருமர் மயங்கி நிற்கும் அந்த க்ஷணத்துக்குள் அவ்விதுரருடைய முகத்திலிருந்து அதிசயிக்கத்தக்க ஜோதியொன்று வெளிப்பட்டு தருமருடைய முகத்தில் பிரவேசித்தடங்கிற்று. ஓ முனிவர்களே! இருவரும் யமதருமனுடைய அம்ச பூதராகையால் விதுரர் உடனிங்குங் காலத்தில் யமாம்சராயிருக்கின்ற தருமரிடத்தில் அவரம்சம் கலந்ததென்றறிமின். இதுபோலவே இத்தருமரும் யமதருமனிடத்தில் ஒடுங்குவரென்றறிமின். விதுரருக்குப் பிராணன் நீங்குஞ் சமயத்தில் பிராணன் முதலிய பஞ்சவாயுக்களும் நீங்கின. அது கண்ட தருமர் அவரைத் தகனஞ் செய்வதற்குரிய கிருத்தியங்களிற் பிரவேசிக்கும்பொழுது, ஓ அரசனே! இந்த விதுரன் விரக்தனுதலால் தகனஞ்செய்யத் தக்கவனன்றென்று அசரீரிவாக்கொன்றுண்டாயது. அந்த வாக்கைத் தருமரேயன்றி, பின்வந்த தம்பிமார் முதலிய யாவருங் கேட்டு நாம் செய்யுங் கடனென்றுமில்லை என்று தெளிந்து கங்கையில் ஸ்நானஞ்செய்து அவ்விடம் விட்டுத் திருதராஷ்டிரன் முதலியோ ரிருக்குமிடத்தை யடைந்து விதுரருடைய நிர்யாணத்தைத் தெரிவித்து அவ்விடத்திலேயே யாவருமிருந்தனர். அச்சமயத்தில் வியாசமுனிவரும், நாரதமுனிவரும் வந்தனர். அப்பொழுது நல்ல நோக்கமுடைய குந்திதேவி வியாசரைப் பார்த்து, தவத்தையே தனமாகப் படைத்த பூஜ்யராகிய பிரபுவே! கர்ணன்

என் மகனல்லவா? அவனைப் பிறந்தபோது பார்த்தேனேயன்றி வேறில்லை. ஆகையால் அவனையும் ஏனையோரையும் பார்க்கவேண்டு மென்று என் மனந்தவிக்கின்றதென்றாள். காந்தாரி என் மகனாகிய துரியோதனனை யுத்தத்திற்குப் போகிற காலத்திற் கண்டேனே யன்றி அவன் மீண்டுவரப் பார்த்ததில்லை; ஆகையால் அவனையும் ஏனைய பிள்ளைகளையுங் காண்பிக்க வேண்டுமென்றாள். சுபத்திரை, ஓ முனி சிரேஷ்டரே! என்னுடைய பிராணனைக்காட்டிலும் மிகுந்த பிரியமுள்ள என் மகனாகிய அபிமன்யுவைக் கண்டேனா? ஆகையால் அந்த மஹா வீரனை எனக்கு இப்பொழுது காண்பிக்கவேண்டு மென்றாள். இவ்வண்ணம் ஒவ்வொருவரும் சர்வஜ்ஞராகிய வியா சரைப் பிரார்த்தித்தனர். வியாசர் இவர்களுடைய பரிதாப விண் ணப்பங்களைக் கேட்டு மனமிரங்கினவராய்க் கங்கைக் கரையை யணுகிக் காலத்தை நோக்க அப்பொழுது சந்தியாகாலம் சமீபித்த தனால் மகிழ்ந்து திருதராஷ்டிரன் முதலிய யாவரையும் அழைத்து ஸ்நானாதி கிருத்தியங்களை நியமமாகச் செய்துகொள்ளும்படி நிய மித்துத் தான் சகல பாவங்களையும் போக்கடிக்கிற கங்கையில் ஸ்நான சந்திகளை முடித்துக்கொண்டு பிராணாயாமஞ்செய்து சநா தனியாகிய தேவியைத் தியானஞ் செய்யத் தொடங்கினர். (42–59)

காரணியாயும், பரமாத்மாவுக்குச் சுகஞ் செய்கின்றவளாயும், ஸகுண நிர்க்குண ரூபியாயும், மஹாதேவியாயும், பிரம்ம சொரூ பிணியாயும், மணித்வீபத்தில் வசிக்கின்றவளாயும் பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்களாலும் இந்திரன் அக்கினி யமன் தருமன் வருணன் முதலியோராலும் அறியப்படாதவளாகிய உனக்கு நமஸ்காரம். வாயு ஆகாயம் குணங்கள் இந்திரியங்கள் மனம் புத்தி சந்திரன் என்று சொல்லப்பட்ட இவைகளாலும் அறியப்படாதவளாகிய உனக்கு நமஸ்காரம். இப்பொழுது இங்குள்ள இவர்கள் வேண்டுகோளின்படி கர்ணன் முதலிய வீரபுருஷர்கள் இங்குவரும்படி அனுக்ரகஞ்செய்ய வேண்டும். அவர்களுக்கெல்லாம் தூலசரீரம் போனபோதிலும் கற் பாந்தமளவும் அழியாததாகிய சூக்ஷ்ம சரீரம் இருக்கின்றபடியினால் அவர்களெந்த உலகத்திலிருந்தபோதிலும் உன் ஆஜ்ஞையுண்டாகு மானால் வருவார்கள். இவ்விஷயத்தில் என்னை மன்னிக்க வேண்டும் என்று பிரார்த்திக்க, தேவி கருணைபுரிந்தனள். தேஜோரூபியாகிய வியாசர் குந்திதேவி, காந்தாரி, சுபத்திரை முதலிய யாவரையும் பார்த்து, நீங்கள் காணவேண்டுமென்று விரும்பிய யாவரும் வந்து விட்டார்கள், பார்க்கலாம், பார்க்கலாமென்று கூற, யாவருங் கண்டு களித்தவுடன் அவரெல்லாம் மறைந்து போயினர். ஓ முனிவர்காள்! தேவி தன்னுடைய கருணைவிசேஷத்தால் இந்திரஜாலம்போல் காட்டி மறைத்தனள். பின்னர் யாவரும் வியாசரைப் புகழ்ந்து கொண்டாட அவர்களிடத்தில் அவர் விடைபெற்றுச் செல்லப் பாண்டவர்கள் யாவரையும் அழைத்துக்கொண்டு அஸ்தினாபுரம் சேர்ந்தனர். (60–63)

ஓம் காமேஸ்வர்யை நம:

## 8. பரீக்ஷித்தின் புன்மை

சூதர் கூறுகின்றார்: பின்னர் திருதராஷ்டிரன் ஆரண்யஞ் சென்று தனது மனைவி சகிதமாய்க் குந்திதேவியுடன் காட்டுத்தீயில் பிரவேசமாயினன். சஞ்சயன் அரசனை விட்டுவிட்டுத் தீர்த்தயாத்திரையாகப் போயினன். தருமபுத்திரர் நாரதரால் தன் பெரியதந்தை யிறந்ததைக் கேள்வியுற்றுத் துக்கத்தையடைந்தனர். கௌரவ வம்சம் க்ஷயித்து முப்பத்தாறுவது வருடம் வந்தபோது பிரபாச தீர்த்தக்கரையில் சகலமான யாதவர்களும் பிராம்மணசாபத்தால் நாசத்தை யடைந்தார்கள். பலராமர் கிருஷ்ணர் பார்த்துக்கொண் டிருக்க மகாபலசாலிகளாகிய அந்த யாதவர்கள் மதுபானஞ்செய்து வெறிமேலிட்டவர்களாய் ஒருவருக்கொருவர் போர்புரிந்து நாசத்தை யடைந்தார்கள். பலராமரும் தேகத்தை விட்டார். செந்தாமரைக் கண்ணராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் முன் நேர்ந்த சாபத்தின் படியே வேடனுடைய பாணத்தினால் பீடிக்கப்பட்டிறந்தார். வசுதேவன் பிள்ளைகளிறந்ததைக் கேட்டுப் புவனேஸ்வரியைத் தியானித்துப் பரிசுத்தாத்மாவாய்த் தேகவியோகமடைந்தனன். அதன் பிறகு அருச்சுனன் மிகவுந் துக்கமுடையவனாய்ப் பிரபாச தீர்த்தக் கரையை யடைந்து அவ்விடத்திலிறந்துபோன யாதவ ரனைவர் களுக்குஞ் செய்யவேண்டிய ஸம்ஸ்காராதிகளை அவரவ ரனுஷ் டானப்படிச் செய்துமுடித்தனன். பின்னர் கிருஷ்ணமூர்த்தியி னுடைய தேகத்தைப் பார்த்து அவருடைய மனைவிமார்களாகிய ருக்மிணி, சத்யபாமை, சாம்பவதி முதலிய எட்டுப் பேர்களுடன் அவரைத் தகனஞ்செய்துவிட்டுப் பின்னர் பலராமருடைய சரீரத்தையும் ரேவதி என்னும் அவருடைய மனைவியுடன் தகனஞ் செய்து விட்டுத் துவாரகாபுரிக்குப் போய் அங்கிருந்த யாவரையும் அந் நகரத்தினின்றும் வெளிப்படுத்தினான். உடனே கடல் ஜலத்தினால் அத்துவாரகை மூழ்கிப் போயிற்று. பின்னர் அருச்சுனன் துவாரகையினின்றும் வெளிப்படுத்திய சர்வ ஜனங்களையுமழைத்துக் கொண்டு வரும்பொழுது கிருஷ்ணருடைய லீலாவிநோதத்துக்குரியவராயிருந்த கோபிகாஸ்திரீகள் கள்வரால் பல துன்பமுற்று ஆபரணாதிகளு மிழந்து இறந்து போயினர். (1–10)

மிக்க காந்தியையுடைய பார்த்திபன் இந்திரப்பிரஸ்தத்தை யடைந்து அனிருத்தன் மகனாகிய வஜ்ரனென்பவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து அவனை அவ்விடத்தில் அரசாளச் செய்து வைத்தான். அப்பொழுது வியாசர் அவ்விடம் வர அவரைக்கண்டு எல்லாருடைய மரணங்களையுங் கூறித் துக்கித்தனன். வியாசரும் மிகவும் துக்காக்கிரந்தராய் அருச்சுனனைப் பார்த்து, ஓ அருச்சுனா! நீயும் கிருஷ்ணபகவானும் எப்பொழுது அவதாரம் பண்

ணைப் போகிறீர்கள்? நீங்க ளொருவரை யொருவர் பிரிந்திருந்த தில்லையே என்று பலவாறான உபசார வார்த்தைகள் கூறி ஓ அருச்சுனா! உன்னுடைய அதியுக்ரமாகிய வீர தேஜஸானது மறு படியும் கலியுகத்தில் உண்டாகப் போகின்றது என்று சொல்லிச் செல்ல, அவ்வார்த்தையை அருச்சுனன் கேட்டு அஸ்தினாபுரம் வந்து தருமராஜாவைப் பார்த்து அடங்கப்பெறாத துக்கத்தை யடைந்தவனாய் நடந்த செய்திகளையெல்லா மெடுத்துக் கூறினான். தருமர், பலராமர் கிருஷ்ணனுடைய மரணங்களைத் கேட்டுத் தீராத் துயரத்தில் மூழ்கி ஒருவாறு தெளிந்து இதுகாறும் தம்பிமாரோடும் திரௌபதியுடன் முப்பத்தாறு வருஷம் அஸ்தினாபுரத்தில் ராஜ்யபரி பாலனஞ் செய்து பின்னர் முப்பத்தாறு வயதுள்ள உத்தரா தேவியினுடைய குமாரனாகிய பரீக்ஷித்துக்கு இராஜ்ய பட்டாபி ஷேகஞ்செய்வித்து இமயமலைச் சாரலிலுள்ள வனத்தை யடைந்தார். இமாசலம் போன ஆறும் வருஷத்தில் குந்திதேவி புத்திரர்களாகிய பாண்டவர்கள் அவரவரடையவேண்டிய கதியை முறைப்படி யடைந் தார்கள். பின்னர் ராஜ ரிஷியாயும் தர்மானுஷ்டான பரனாயு மிருந்த பரீக்ஷித்து பிரஜைகளைப் பரிபாலித்து வந்தனன். (11–18)

அந்தப் பரீக்ஷித்து ராஜநீதிப்படி அறுபது வருஷம் செங் கோல் செலுத்தி வருநாளில் ஒருநாள் மிருகவேட்டை யாடுவதில் பிரிய முடையவனாய்ப் பெரிய ஆரண்யத்திற் சென்று அங்கிருக்குங் காலத்தில் வேட்டையாட வெழுந்து மிருகங்களைத் தேடும்பொழுது உச்சிப் பொழுதாயிற்று. அப்பொழுது மிகவும் பசிதாகமுற்று இளைப்புடையவனாய் உஷ்ணமிகுதியினால் மிகவும் தகிக்கப்பட்டுப் போகும்பொழுது நிஷ்டைகூடி யிருக்கின்ற ஒரு யோகியைக் கண்டு அவரைத் தாகந்தணியத் தண்ணீர் கேட்டனன். மௌன நிலை நீங்காதிருந்த அந்த யோகி ஒரு வார்த்தையுஞ் சொல்லாதிருக்க, அதனை யோகநிலையென் றுணராது அகங்காரி யென்றெண்ணிக் கோபித்து அங்கு இறந்து கிடந்த ஒரு பாம் பினைத் தன் வில் நுனியிலெடுத்து அவர் கழுத்திற் சுற்றிவிட்டான். அப்பொழுதும் அவரதனை யறிந்தவரல்லர். மீண்டும் அரசன் மூர்க்கங்கொண்டு முனிவர் கீழே விழுமாறு சுற்றிய பாம்பினைப் பற்றியிழுத்தனன். இழுத்தும் அவர் சமாதியினின்றும் சலனப் பட்டாரில்லை. அரசனலுத்துத் தன் னிருக்கையை யடைந்தான். மஹாதபஸ்வியும் பசுவின் வயிற்றிற் பிறந்தவருமாகிய மகாசத்தர் என்னும் அவருடைய புத்திரர் வனத்தில் விளையாடிக்கொண்டிருந் தனர். அப்பொழுது அரசனால் தம் தந்தையினுடைய கண்டத்தில் பாம்பு சுற்றப்பட்டுத் தொங்கியிருத்தலைக் கேள்வியுற்றவராய்க் கோபித்துச் சலத்தைக் கையிலேந்திப் பிதாவினுடைய கண்டத்தில் எவன் இறந்துபோன சர்ப்பத்தைச் சுற்றினானோ அவன் ஏழு நாளைக்குள் தக்ஷனென்கிற சர்ப்பராஜனால் கடிக்கப்பட்டு மரண மடையக்கடவன் என்று சபித்தனர். அந்த ரிஷியினுடைய சீடர்களில் ஒருவன் அரசனிடஞ் சென்று சிவயோகியாருடைய புத்திரரிட்ட சாபத்தைத் தெரிவித்தான். அபிமன்யுவினுடைய புத்திரனாகிய

பரீக்ஷித்து பிரம்மரிஷியினால் கொடுக்கப்பட்ட சாபத்தைக் கேட்டு மணிமந்திர ஔஷதங்களாலும் அது தடைப்படாதென்றெண்ணி விருத்தராகிய மந்திரிகளைப் பார்த்து, வேதார்த்த பரிஜ்ஞானமுள்ள ஓ மந்திரிகளே ! ரிஷியை நான் செய்த கொடுமையைக் கேட்ட அவ ருடைய குமாரரால் சபிக்கப்பட்டேனே என்றான். அதற்கு அவர்கள் இப்பொழுது ஏற்பட்ட இந்த மிருத்யு ஒருவராலுந் தடுக்கப் படாதது என்ன, அரசன் கூறுகின்றான் : இதற்கென் செய்வது ? இவ்விஷயத்தில் உபாயத்தை யோசிக்க வேண்டியது அவசிய மல்லவா ? உபாயந் தெரிந்த புத்திமான்களாகிய சிலர் ஒருவராலுந் தடுக்கக்கூடாததா யிருந்தபோதிலும் பண்டிதர்களைக்கொண்டு சாஸ்திரயுக்தமான பிரயத்தனம் அநேக விதங்களால் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறார்கள். அப்படிச் செய்யும் எத்த னங்கள் புத்திமான்களுடைய உபாயத்தினால் சித்தியாகின்றன. மூடர் உபாயம் அறியாராகையால் அவர் செய்யும் எத்தனங்கள் சித்தியாகாமற் போகின்றன. மணி மந்திர ஔஷதங்களின் மகிமை புத்திக்கெட்டியதன்று. நன்றாய்ச் செய்யப்பட்டிருக்கின்ற மணிமந்திரங்களால் சித்தியுண்டாக மாட்டாதென்பது இல்லை. பூர்வத்தில் ஒரு ரிஷிபத்தினி விஷந்தீண்டி இறந்துவிட்டாள் ; உடனே பிழைத்தாள். எப்படியென்றால் இறந்துபோன அந்த அப் சர ஸ்திரீயினுடைய கணவனாகிய ருரு என்னும் மஹரிஷி அவ ளுக்குத் தனது ஆயுளிற் பாதியைத் தத்தஞ்செய்யப் பிழைத் தெழுந்தாள். இவ்வாறு ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய நன் மையைக் கருதிப் பண்டிதர்கள் உபகரித்து வருகின்றார்கள். ஓ ! மந்திரிகளே ! உபகரிக்கிறதாகிய அந்த விஷயத்தில் இது பிரத்யக்ஷ மாய் நடந்த சங்கதியாகும். இப்படி ஆயுளைக் கொடுக்கிற புருஷன் சுவர்க்கலோகத்திலாவது இவ்வுலகத்திலாவது மற்றெவ்வுலகத்தி லாவது காணக்கூடுமா ? எவன் முயற்சி செய்து நன்மையைத் தேடிக்கொள்ள அறியாமல் யாவுந் தெய்வ சங்கற்பத்தின் வழி நடக்குமென்று விரக்தனாய்ச் சோம்பி யிருப்பானோ அவனே அரசனாயிருந்தபோதிலும் பிக்ஷாந்தேஹி என்று திரியும் நிலைமைக் குரியவனாவான். கிருகஸ்தனா யிருக்கின்றவனுக்கு வேண்டியவை கிடைக்கப் பெறுதல் தனக்கு அறிந்த ஒருவனைக் கொண்டாயினுந் தானறியாத ஒருவனைக் கொண்டாயினும் ; தெய்வங் காட்டுமே யன்றித் தெய்வந் தானேவந்து வாயிலூட்டுமா ? ஒருவனுக்கு உண்ணத்தக்கபொருள் வாயினிடத்தே வந்தபோதிலும் அதனை விழுங்குவதாகிய முயற்சி செய்யாமற் போவானானால் அது எப்படி உள்ளே செல்லும் ? ஆகையால் முயற்சியைக்கொண்டு ஏதேனும் பிரயத்தனஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யப்பட்ட பிரயத் தனம் எப்பொழுது சித்திக்காமற் போகிறதோ அப்பொழுது பண்டி தனா யிருக்கிறவன் இது தெய்வத்தின் செயலென்று கொள்ளல் வேண்டுமென்றனன். மந்திரிகள், ஓ அரசனே ! இறந்துபோன ஸ்திரீயைத் தன்னாயுளிற் பாதி கொடுத்துப் பிழைப்பித்தாரென்று சொன்னீரே அந்த ரிஷி யார் ? அந்த ஸ்திரீ எப்படி இறந்தாள் ?

இந்தச் செய்தியை எங்களுக்கு விவரமாய்ச் சொல்ல வேண்டு மென்று கேட்டனர். (19–41)

அரசன் கூறுகின்றான்: ஓ மந்திரிகளே! பிருகு மஹா ரிஷியினுடைய பத்தினியாகிய புலோமை என்பவளுக்கு யவன ரென்கிற ஞானவானாகிய குமார ரொருவ ருண்டாயினர். அவ ருக்குச் சர்யாதி என்கிற அரசன் மகளாகிய சுகன்யை என்பவள் மனைவியாயினள். அவளுக்குப் பிரமாதி என்பவர் பிறந்தார். அவருடைய மனைவி பிரதாபி என்பவள். அவளுக்கு ருரு என்பவர் பிறந்தார். அவர் அடியில்வரும் மேனகையின் பெண்ணைத் தூல கேசருடைய ஆச்சிரமத்திற் கண்டு காமாதுரராயினர். யாவராலு மதிக்கத் தக்கவளும் எல்லா வுலகங்களிலுஞ் சுந்தரி என்னப் பட்ட வளுமாகிய மேனகை என்னும் அப்ஸரஸ் ஸ்திரீயானவள் நதிக் கரையில் விசுவாவசு என்னுங் கந்தர்வனோடு கிரீடித்துக் கர்ப்பத்தை யடைந்து அவ்விடத்தைவிட்டு வெளிப்பட்டு மஹாதபஸ்வியாயும், சத்யசந்தராயும், தர்மாத்மாவாயும், மகாப் பிரசித்தராயு மிருந்த ஸ்தூலகேச ராச்சிரமத்தையடைந்து மூன்றுலகத்தாருங் கண்டு வியக்கத்தக்க பேரழகோடு கூடிய ஒரு பெண்பாவையைப் பெற்றுத் தன்னுலகம் போய்ச் சேர்ந்தாள். தூலகேசர் அநாதையா யிருக்கின்ற அக்குழந்தையைப் பார்த்து எடுத்துக்கொண்டு பிரமத் வரை யென்று பெயரிட்டுக் காப்பாற்றி வந்தார். சர்வ லக்ஷணங் களோடு கூடிய அந்தக் குழந்தை காலக்கிரமப்படி யௌவனத்தை யடைந்தனள். இவள்தான் ருரு என்பவருக்கு மோகத்தை விளை வித்தவள் என்றறிவீர்களாக. (42–49)

ஓம் காமகோடி நிலயாயை நம:

## 9. பரீக்ஷித்தின் பெருமுயற்சி

சூதர் கூறுகின்றார்: ருருவென்கிற மஹரிஷியானவர், தூல கேசருடைய ஆச்சிரமத்திற் பிரமத்வரைக் கண்டு மோகித்து தன்னுடைய ஆச்சிரமத்திற் சென்று மன்மதனாற் பீடிக்கப்பட் டினைத்துச் சோர்ந்துறங்கும்பொழுது அவரது பிதாவாகிய பிரமதர் அவரை நோக்கி, ஓ ருரோ! நீ யாது காரணத்தினால் பிரஜ்ஞை யற்றவனாய்க் கிடக்கின்றனை என்று வினவினர். ருரு தன்னுடைய பிதாவைப் பார்த்து, என்னையனே! தூலகேசருடைய ஆச்சிரமத் தில் வசித்துக்கொண்டிருக்கிற பிரமத்வரை என்னும் பெயருடைய கன்னிகை எனக்கு மனைவியாக வேண்டுமென்னும் சிந்தனையுடை யவனா யிருக்கின்றே னென்றனன். அது கேட்ட பிதா தனது மகனது மனோபீஷ்டத்தை முடிக்கக் கருதித் தூலகேசரை அதி சீக்கிரமாயடைந்து அம் முனிபுங்கவரை நமஸ்கரித்து உமது மகளாக வளரும் அழகிற் சிறந்த பிரமத்வரையை என் அருமை மக னுக்குத் தரல்வேண்டு மென்று முகமலர்ச்சியுடன் கேட்டனர்.

அதற்குத் தூலகேசரென்கிற மஹரிஷி உமதெண்ணப்படி நல்ல சுபதினத்தில் தருகின்றேனென்று உறுதிமொழி கொடுத்தனுப்பிப் பின்னர் விவாக நிமித்தம் சேகரிக்கவேண்டிய சாமக்கிரிகளையுஞ் சேகரித்திருந்தனர். குறித்த நன்னுள் குறுகியபடியால் மீளவும் பூஜ்யர்களாகிய பிரமதர் தூலகேசர் என்னும் இரண்டு மஹரிஷிகளுநங் கூடினுர்கள். (1–5)

அச்சமயத்தில் பன்னசாலை முற்றத்தில் விளையாடிக்கொண்டிருந்த அழகுபொருந்திய கண்களையுடைய பிரமத்வரை யானவள் அங்கு ஒரு பாம்பானது வளையமிட்டுப் பேருறக்கங்கொண்டிருந்ததைப் பாராமல் மிதிக்க அப்பாம்பாற் கடியுண்டிறந்தனள். அங்கு வந்திருந்த முனிவர்களெல்லாம் அதுகண்டு ஹா! ஹா! வென்று பேரிரைச்சலிட் டழுதனர். அவ்வொலியைக் கேட்ட தூலகேசர் என்ன தீங்குவிளைந்ததென் றோடிவந்து பூமியில் வீழ்ந்து கிடக்குந் தன் மகளைப்பார்த்து, அந்தோ! அந்தோ! தெய்வமே! தெய்வமே! என்று பிரலாபித்து அழத் தொடங்கினர். அச்சமயத்தில் கன்னிகைக்குக் கணவனுகவேண்டிய ருரு வென்பவர் அவளைக் காணு நிமித்தம் வரும்பொழுது அழுகைக்குரலோசையும் கன்னிகை மரித்தாளென்னும் ஓசையுங் கேட்டு அழுதுகொண்டே அவ்விடம் வந்து தனக்குப் பிராணநாயகியாய் வரவெண்ணிய கன்னிகை உயிருள்ளவள்போல் வீழ்ந்து கிடப்பதையும், அக் கன்னிகையின்மேல் அவள் பிதா வீழ்ந்து புரண்டலறுவதையும், அவரைச் சூழ்ந்து முனிவர்களெல்லாம் பதறிப் பதறிப் புலம்புவதையும் பார்த்து அங்கிருப்பதற்குச் சகியாமல் அப்புறம்போய்க் காமாக்கினியாற் பீடிக்கப்பட்டவராய், அந்தோ! இவளிறந்தது மிகவும் ஆச்சரியம்! ஆச்சரியம்!! இவ்விடத்தில் இந்த ஆச்சரியமான பாம்பு தெய்வத்திஞல் ஏவப்பட்டதேயன்றி வேறன்று; இது கஷ்டம் என்றழுதனர். (6–11)

மீண்டும், என்னுடைய பிராண நாயகியாகிய இவள் மரணமடைந்தது எனக்குச் சுகத்தை நாசமாக்கும் பொருட்டும், துக்கத்தை யுண்டுபண்ணும் பொருட்டுமே யன்றி வேறென்ன? இனி யான் என் செய்வேன்? எவ்விடம் போவேன்? இவ்வழகியைப் பிரிந்திருக்கப்பெற்ற நான் இனி உயிருடனிருக்க இச்சிக்க மாட்டேன். ஏனெனில், இவள் என்னுலடையப்படும் ஆலிங்கனத்தையும் முக சும்பனத்தையும் பெற்றுளல்லள். நான் யாவருங்கண்டு களிப்புறுமாறு பாணிக்கிரஹணஞ் செய்யப் பெற்றதுமில்லை; இவளுடனிருந்து ஓமாக்கினியில் பொரியிடும் பாக்கியத்தைப் பெற்றதுமில்லை. இங்ஙனமாக அற்ப பாக்கியமுடைய யான் இருந்தாவதென்? அந்தோ! இந்த மானிட சம்பந்தமான ஆசையைச் சுடவேண்டும். இந்தப் பொழுதே என்னுடைய பிராணன் செல்லக்கடவது என்றெண்ணிப் பின்னர் துக்காத்தை அனுபவிக்க வேண்டியவன் இறப்பனுயின் அது சுகமாகுமாதலால் அவனை மிருத்தியு அடைகிறதில்லை. ஆகலான் நாம் பிராணனைவிடத் துணிந்தபோதிலும் மிருத்தியு உண்டாக மாட்டாது. ஆனல் நாம் இவ்வுலகிலிருந்து இச்சிக்கத் தகுந்த மனோரம்யமான சுகத்தை

எப்படி யடையப் போகின்றோம்? ஆகையால் பயங்கரமான மடுவிலாவது, அக்கினியிலாவது விழுவோம். அது கூடாதாயின் விஷத்தையாயினும், அக்கினியையாயினும் விழுங்கியாவது, கண்டத்தில் கயிற்றைக் கட்டிக்கொண்டாவது பிராணனை விடுவோம்; என்றிவ்வாறு ருரு வென்கிற மஹரிஷியானவர் சொல்லிச் சொல்லி அழுது மறுபடியும் அடியில் வருமாறு மனதில் சிற்சில ஆலோசிக்கலாயினர்: (12–17)

நாமெண்ணியபடி நமக்கு மரண முண்டாகுமாயின் அதனால் நமக்கு வரும் பலன் யாது? அன்றியும் அந்தத் துர்மரணத்தினால் வருவது பாவம். அதனை நம்முடைய ஆன்மா கடக்க முடியாதன்றோ? இதுவுமன்றி நம்முடைய பிதா துக்கத்தையடைவர்; தாயோ அவரினும் அதிக துக்கத்தை யடைவாள். நம்முடைய பிராணநாயகியைக் கொன்ற தெய்வந்தான் நம்மைப் பார்த்துச் சந்தோஷமடையும். இதுபோலவே நாய் நரி முதலிய ஜீவ சமூகங்கள் சந்தோஷமடையும்; இதிற் சந்தேகமில்லை. அன்றியும் நாம் மரண மடைவதனால் நம்முடைய நாயகிக்குப் பரலோகத்தில் ஏதேனும் உபகார முண்டாமோவென்றால் என்ன உபகாரம் உண்டாகப் போகிறது? (ஒன்றுமில்லை). இங்கு நாம் துர்மரணத்தையடைந்து அங்கு நாயகியோடு கூடுவோமென்றாலோ நம்மை அவள் கூடாள். ஏனெனில் மன்மதனாற் பீடிக்கப்பட்டுத் துர்மரணத்தை யடைந்தவனென்றசூயை கொண்டொழிப்பாள். ஜீவித்திருப்போமாயின் இந்தத் தோஷம் நமக்கில்லையல்லவா? என்றிவ்வண்ணமான ஆலோசனைகள் ஆற்றங்கரையி லிருந்தவண்ணம் செய்துப் பிராணனை விடும் எண்ணத்தை விட்டு அந்த ஆற்றில் ஸ்நானஞ் செய்து ஆசமித்துப் பரிசுத்தராயிருந்து கையில் ஜலத்தை யள்ளி வைத்துக்கொண்டு அடியில் வருமாறு கூறிப் பூமியில் விட்டனர்: (18–23)

என்னை யெனில், என்னால் பக்தியுடன் சத்கிருத்தியமான (கிஞ்சித்) ஈச்வராராதனையும், ஆசாரியர் பூஜையும், ஓமங்களும், ஜபங்களும், தவங்களும், சகலவேத அத்யயனங்களும், காயத்திரி ஜபங்களும், சூரிய ஆராதனையுஞ் செய்யப்பட்டிருந்தால் அவை காரணமாக என்னுடைய பிராணநாயகி உயிர்பெற் றெழுந்திருக்கக் கடவள். இக்காரணங்களால் அவளெழுந்திராமற் போவாளாயின் இப்பொழுதே பிராணனை விடுகிறேனென்று சொல்லி இஷ்டதெய்வங்களை மானசிகமாகப் பூஜித்து ஜலத்தை பூமியில்விட்டு அழுது கொண்டிருக்கும்பொழுது யமதூதனொருவன் சமீபத்தில் வந்து அந்த ருரு மஹரிஷியைப் பார்த்து, ஓ அந்தணனே! நீ இந்தச் சாகசமான காரியத்தைச் செய்யாதே, இறந்துபோனநாயகி எப்படிப் பிழைப்பாள்? இறந்தவள் இறந்தவள்தானே? அன்றியும் இவள் உன்னால் விவாகம் பண்ணப் பட்டவளா? அல்லவே. ஆகையால் நீ அழகுள்ள அங்கங்களோடுகூடிய வேறொரு கன்னிகையை இச்சிப்பாயாக. மிகவுந் துர்ப்புத்தி யுடையவனே! ஏன் வீணாயழுகிறாய்? இறந்துபோன இவளிடத்தில் உனக்கென்ன பிரீதி என்று

கூறிய தூதனை ருரு மஹரிஷி பார்த்து, ஹே காலதூதனே! நான் வேறு ஸ்திரீயை வரிக்கமாட்டேன் (பாணிக்கிரகணஞ் செய்து கொள்ளமாட்டேன்). இவள் இப்பொழுது என்னால் கூறப்பட்டுள்ள பிரதிக்ஞையினால் பிழைப்பாளாயின் யானும் பிழைத்திருக்கின் றேன். பிழைக்காமற் போவாளாயின் யானும் மரணமடைவேன். நீ என்னுயிரைக் கொண்டுபோவாயென்றான். காலதூதன் ருரு மஹ ரிஷியினுடைய பிடிவாதத்தையறிந்து சந்தோஷசித்தனாய் அடியில் வருமாறு கூறுகின்றான்: (24–30)

ஓ பிராமணோத்தமனே! உன் விஷயத்தில் என் மனம் மிக வும் பரிதாபத்தை யடைகிறது; ஆகையால் நானொரு உபாயங் கூறுகிறேன். அவ்வண்ணஞ் செய்வாய். அது சாத்தியமாயும் மனோகரமாயும் பூர்வத்தில் தேவர்களால் செய்யப்பட்டதாயு முள் ளது. என்னையெனின், உன்னுடைய ஆயுளிற்பாதி தத்தஞ் செய் வையாயின் அவள் சீக்கிரத்தில் எழுந்திருப்பாள் என்றனன். அது கேட்ட ருரு மஹரிஷி, ஓ தூதனே! இறந்து கிடக்கும் இவள் பொருட்டு ஜலத்திலும் அக்கினியிலும் வீழ்ந்து உயிரை மாய்க்கத் துணிந்த யான் இப்பொழுது என்னாயுளிற்பாதி இவளுக்கு ஒப்பிப் பதில் சந்தேகமு முண்டோ? நன்று கூறினாய்! ஓ தூதனே! இப்பொழுதே நீ கூறியவாறு தத்தஞ் செய்தேன். எவ்விதத்திலா வது என் பிராணநாயகி உயிருடையவளா யெழுந்தாற் போதும் என்று ஆவலுடன் கூற, அப்பொழுது விசுவாவசு என்கிற அவ ளுடைய பிதாவாகிய கந்தர்வன், சுவர்க்க லோகத்தினின்றும் சீக்கிரமா யவ்விடம்வந்து பிரமத்வரை என்கிற தனது புத்திரி இறந்து கிடத்தலைப் பார்த்து மனம்புழுங்கி அவளைப் பிழைப்பிக்க வெண்ணி அங்கு நிற்கின்ற காலதூதனையும் அழைத்துக்கொண்டு யமபுரஞ்சென்று இயமனைக் கண்டனன். அப்பொழுது தூதன், ஓ தருமராஜனே! யானொரு விண்ணப்பஞ் செய்துகொள்ளு கிறேன்; அதனைக் கேட்டருளுக. இந்த விசுவாவசு என்கிற கந்த ருவனுடைய புத்திரியும் ருரு வென்கிற மகரிஷிக்குப் பத்தினியா கத்தக்கவளுமாகிய பிரமத்வரை என்கிற கன்னிகையானவள் சர்ப் பத்தினால் தீண்டப்பட்டு மரித்தாள். (31–30)

சூரிய புத்திரனாகிய ஓ தருமனே! அவள் மரித்ததைக் கண்ட ருரு மஹரிஷி பட்டபாட்டை என்னென்று கூறுவேன்! இரக்க மென்பதறியாத என் மனமும் இரங்கிற்று. பின்னர் அம்முனி புங்கவர் தம்முடைய விரதானுஷ்டான மகிமையினால் தனது ஆயு ளிற்பாதி தத்தஞ் செய்தனர். ஆகையால் இனி அக்கன்னிகை எழுந்திருக்கும்படி ஆஜ்ஞை செய்வீராக வென்று பணிந்தனன். தருமராஜனும் மனமிரங்கி, ஓ தூதனே! உன்னிச்சைப்படி செய் வாயாக; யான் மறுக்கிலன். நீயே போய் இந்த விசுவாவசுவினு டைய பெண்ணாகிய அக்கன்னிகையை அந்த ருரு மகரிஷி மகிழும் படி எழுப்பிக் கொடுத்துவிட்டு வாவென்றனன். காலதூதன் தருமனிடத்தில் விடைபெற்றுக் கந்தர்வனோடு அதிக விரைவுடன் வந்து பிரமத்வரை உயிர்பெற்றெழுந்திருக்கச் செய்து ருரு மஹ

ரிஷியினிடத்தில் ஒப்புவித்தனன். அந்த மகரிஷி, ஓ தூதனே! நீ இக் கன்னிகையைக் கொண்டுபோகவந்த தூதனன்று. இவளை எனக்குக் கொடுக்கவந்த தூதனுமென்று பல இன்னுரை பகர்ந்து விடைகொடுத்துப் பின்னர் நல்ல சுபதினத்தில் அக்கன்னிகையை விதிமுறையாக விவாகஞ் செய்துகொண்டு மகிழ்ந்து வாழ்ந்திருந் தனன். விசுவாவசு என்கிற கந்தர்வனும் கண்டு களித்துத் தன் னுலகம் போய்ச் சேர்ந்தனன். (36–39)

ஓ மந்திரிகளே! மரித்துப்போன கன்னிகை இவ்வண்ண மான உபாயவழியினால் பிழைப்பிக்கப்பட்டாளன்றோ? ஆகையால் நாமும் சகலசாஸ்திர சம்மதமாகிய உபாயவகைகளை இப்பொழுது நன்றாய்த் தேடவேண்டியதென்று கூறி உத்தராதேவியினுடைய குமாரனாகிய பரீக்ஷித்து அந்த க்ஷணமே தன்னை இரக்ஷிப்பதற் குரிய மணிமந்திர ஔஷதங்களினாலேயும், தன்னைக் காப்பாற்று வதில் கண்ணுங் கவசமும் போன்ற மந்திரிகளினாலேயும் செய்து கொள்ளற்பாலனவெல்லாம் எண்ணி அடியில் வருமாறு ஏற்படுத் திக்கொண்டு ஏழுமதில்களோடு கூடிய கோட்டையொன்று அமைத்து அதில் மந்திரிப் பிரதானிகளுடன் குடிபுகுந்து அரசாண்டிருந்தனன். எங்ஙனமெனின், கோட்டைக்கு உட்புறம் பான விடங்களில் ஔஷதங்களில் வல்ல சூரர்களைவைத்தும், கௌர முக ரென்கிற மகரிஷியை மேற்கூறிய சூரர்க ளனைவரும் தத்தந் தொழிலில் பிறழாதிருக்கச் செய்தலாகிய அதிகாரத்தை மேற் கொண்டிருத்தல் வேண்டுமென்றும், இவ்வாறேவிய என்பாலுள்ள குற்றங்களை மன்னித்தருளல் வேண்டுமென்று அவரை யடிக்கடி பிரார்த்தனைசெய்து ஏவியும், மந்திரசித்தியுடைய பிராமணனைத் தமர்களை அங்கங் கிருக்கின்றவரைப் பரீக்ஷிக்கும்படி ஏவியும், மந் திரி குமாரனைக் காவலோடு கூடிய உப்பரிகையின்மேல் ஒருவருஞ் செல்லா திருத்தற்கும் கோபுரத்துவாரத்தில் மதத்த யானைகளைக் கட்டும்படி ஏவியும் அந்த யானைகள் தங்கள் காதசைவினாலேயே வேறெவ்விடத்துஞ் செல்லுவதற் கிடனின்றி அவ்வழியாகவருங் காற்றைத் தடைப்படுத்த வேண்டுமென்று அவைகளுக் கறிவுறுத்தி நிறுத்தியும், ஸ்நான சந்தி முதலிய நித்திய கருமங்களையும், அறு சுவையோடு கூடிய உணவை உண்ணுதலையும், அவ்விடத்திற் றானே நிறைவேற்றிக்கொண்டும், தன்னருகில் மந்திரிகளை இடை விடாது வைத்துக்கொண்டும் நாட்களை எண்ணியும், சகல ராஜ்ய காரியங்களையுஞ் செய்து வந்தனன். (40–49)

அப்பொழுது மந்திர வித்தையை நன்றாய்க் கற்றுணர்ந்த வனும் வேதபண்டிதனும் முனிசிரேஷ்டனும் திரவிய ஆசை யுடைய வனுமான கஶ்யப னென்னும் பெயருடைய ஒரு பிராமணன் பூஜ்யனாகிய அரசன் சாபமேற் றிருப்பதைக் கேட்டு, அரசன் பிராம்மணர்களுடன் கூடி எவ்விடத்தி லிருக்கின்றானோ அவ்விடத் திற்கு நாம் போகலாமென்று தன்னுளெண்ணித் தன் வீட்டினின் றும் புறப்பட்டு வீதிவழியே வந்தனன். (50–50½)

ஓம் காங்க்ஷிதார்த்ததாயை நம:

# 10. பரீக்ஷித்தின் மரணம்

கச்யபனென்கிற மஹரிஷி, கருணை யுடையவனாய் அரசன் பால் போகப் புறப்பட்ட அந்நாளிலேயே நாகலோகவாசியாகிய தக்ஷகனென்னும் சர்ப்பராஜனும் கவிஜாத ரென்கிற மஹரிஷியி னுடைய சாபப் பிரேரணையினால் போகவெண்ணித் தன்னிருக் கையை விட்டுப் பூலோகத்தை நாடி வெளியே சீக்கிரமாக வந்து விருத்தப்பிராமண வேஷங்கொண்டு புருஷரிற் சிறந்தவனாய்ப் போகும்பொழுது அவ்வழியே செல்லும் மந்திரவாதியாகிய கச்ய பனைப்பார்த்து, ஓ பிராமணரே, நீர் யார்? அதி சீக்கிரமாக எவ் விடத்திற்குப் போகின்றீர்? நீர் போகுமிடத்தில் என்ன இச்சித் திருக்கின்றீர்? என்று கேட்டனன். யான் பரீக்ஷித் என்னும் அரச னிடத்திற்குப் போகின்றேன்; அந்த மஹாராஜனை தக்ஷகனென் கிற சர்ப்பங் கடிக்கப்போகிறது; அதன் விஷத்தை நாசம்பண்ணத் தக்க மந்திரசித்தி என்னிடத்தி லிருக்கிறது. ஆகையால் அந்த வரசன் அந்த விஷச் சுவாலையினாற் பீடிக்கப்படாமற் பிழைத்திருக் கும் வண்ணம் செய்வதே நான் கொண்ட இச்சை என்றனன். தக்ஷகன் அந்த கச்யபரைப்பார்த்து, ஓ அந்தணரே! யான்தான் தக்ஷகன். யான் போவது அந்த அரசனைக் கடிப்பதற்கே. அவனைச் சாகச் செய்வதே என்னிச்சை. ஆகையால் அவனைப் பிழைப் பிப்பதற்கு நீர் சக்தியுடையவ ராவீரா? நீர் வந்தவழியே திரும்பி விடும் என்றனன். (1–6)

கச்யபன், ஓ சர்ப்பராஜனே! கவிஜாதராலே சபிக்கப் பட்டாலும் உன்னாற் கடிக்கப்பட்டாலும் அந்தவரசனை நான் மந்திர பலத்தினால் பிழைப்பிக்கப் போகிறவன். சிறிதும் சந்தேகமில்லை என்ன, சர்ப்பராஜன், நிர்மலனான ஓ பிராமணனே! என்னால் கடிக்கப்பட்டவரசனை நீர் பிழைப்பிக்கச்செய்வீராயின் இப் பொழுது இதோ இந்த ஆலமரத்தை என்னுடைய விஷப்பற்களால் கடித்துப் பஸ்மீகரப்படுத்துகிறேன். அதனை உம்முடைய மந்திர சக்தியினால் உண்டாக்குவீரா பார்ப்போம். இதில் உம்முடைய வல்ல மையைக் காண்பிப்பீ ரென்ன, கச்யபன், அப்படியே இந்த மரத் தைக்கடித்துவிடு, நானதை உண்டுபண்ணுகிறேன். இதனால் என் னுடைய மந்திர சித்தியை நன்றாய்த் தெரிந்து கொள்ளலாமென்ற னன். சர்ப்பராஜன் அந்தக்ஷணமே அந்த மரத்தைக்கடித்து விஷாக் கினியினால் சாம்பராக்கி, ஓ பிராமணரே! இதோ நீர் உண்டு பண்ணு வதை நானறிகிறே னென்றனன். கச்யபன் சாம்பராய்ப்போன அந்த மரக்குப்பையை ஒன்றாகச் சேர்த்து, ஓ சர்ப்பராஜனே! நீ பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இதனைப் பிழைப்பிக்கிறேன்; என்னுடைய மந்திரபலத்தையும் ஆலமரத்தின் செழிப்பையும் பார்ப்பாயாக வென்று தன்னுடைய கையினால் ஜலத்தை யள்ளிக் கொண்டு அபிமந்திரித்து அந்தச் சாம்பர்மேற் புரோக்ஷித்தனன்

(தெளித்தனன்). உடனே அந்தச் சாம்பர் முன்னிருந்ததுபோல் மரமாய் அநேகமான கிளைகளோடும், பத்திர புஷ்ப பலாதிகளோடும் வளர்ந்தோங்கியது. சர்ப்பராஜன் அதனைக்கண்டு அளவுபடாத ஆச்சரியமடைந்து இவன் அவ்வரசனைப் பிழைப்பிப்பதில் என்ன தடையென்று தன் மனதிலெண்ணி அந்தக் கஶ்யபனைப் பார்த்துக் கூறுகிறான் : (7–14)

ஓ கஶ்யபரே! யான் உம்முடைய மந்திர வல்லபத்தைக் கண்டேன். நீர் முன்னே அரசனைப் பிழைப்பிப்பதுதான் என்னுடைய இச்சையென்று சொன்னீரல்லவா? அவனைப்பிழைப்பிப்பதனால் உமக்கு வரும் லாபமென்ன? உலகில் லாபத்தை எண்ணாமல் ஒருவரும் ஒரு காரியத்தையும் செய்யமாட்டார்கள். ஆகையால் நீர் அந்த அரசனால் அடையவிரும்பிய அபீஷ்டம் யாது? அதைச் சொல்லும். நானதை முடிவுசெய்கிறேனென்றனன். கஶ்யபன், ஓ சர்ப்பராஜனே! யான் கவிஜாதரால் அரசனுக்கு நேர்ந்திருக்கும் சாபத்தைக்கேட்டுத் திரவியத்தி லாசையுடையவனாய் அவனைப் பிழைப்பித்து வேண்டிய தனங்களைப் பெறலாமென்றுதான் வந்தேனென்று உண்மையைக் கூற, சர்ப்பராஜன், ஓ அந்தணரே! நீர் அரசனால் எவ்வளவு தனம் பெறலாமென் றாசைப்பட்டீரோ அவ்வளவு பொன் இதோ கொடுத்துவிட்டேன். நீர் எடுத்துக்கொண்டு சந்தோஷ சித்தராக வீட்டுக்குப்போம். என்னுடைய மனோரதமும் இனி நிறைவேறுவதிற் றடையில்லை என்றனன். கஶ்யபன் தக்ஷகனுடைய வார்த்தையைக்கேட்டு எண்ணுகிறான் : இந்த தக்ஷகன் கொடுக்கும் திரவியத்தைப்பெற்று அரசனைப்பிழைப்பிக்காமற் போவோமேயானால் நமக்கென்ன கீர்த்தியுண்டாகும்? இந்தத் தனத்தாசையை விட்டு நாம் திரும்பாமலும் இந்தத் தக்ஷகனுடைய வார்த்தையைக்கேளாமலும் அரசனுடைய துர்மரணத்தைப் போக்குவமேயானால் நமக்கு வரும் புண்ணியமும் கீர்த்தியும் தனமும் இவ்வளவின வென்று சொல்லி முடியுமா? அவையழியுமா? (15–20)

பூர்வத்தில் ரகுமகாராஜாவென்ன, அரிச்சந்திரமகாராஜாவென்ன, கர்ணமகாராஜாவென்ன இவர்களெல்லோரும் தனத்தையா பெரிதாகப் பார்த்தார்கள்? தனத்தை வாரியிறைத்துக் கீர்த்தியையன்றோ பெருந்தனமாகத் தேடினார்கள். ஆகையால் இந்த அரசனை நாம் எப்படிக் கைவிட்டு விடுவது? அரசன் பிழைப்பானானால் சகலஜனங்களுக்கும் நன்மையுண்டாகும். இதிற் சந்தேகமேயில்லை. அரசனுக்கு மரணத்தினாலுண்டாகும் பாவமும், அவன் மரணத்தினால் ஜனங்களுக்குண்டாகும் பாவமும் நம்மை வந்தடைவதிலுஞ் சந்தேகமில்லை என் றெண்ணினன். அப்பொழுது ஒரு சிந்தனை யுண்டாயிற்று. அஃதாவது, இந்த அரசனுக்குச் சாபத்தினாலுண்டாகும் மரணம் தீரத்தக்க மரணமா, தீரத்தகாத மரணமா? இதனை யறிவோமென்று ஞான திருஷ்டியினால் பார்க்கும்பொழுது தீரத்தகாத மரணமென்று தெளிந்து விதிப்பயனை வெல்வதற்கு ஒருவராலும் முடியாதென்னு முண்மையை யறிந்தவனாய்ச் சர்ப்பராசனாகிய தக்ஷகனைப்பார்த்து, ஓ தக்ஷகனே! நீ எனக்குத் தத்தம்

பண்ணிய தனத்தைத் தந்துவிடு என்று கேட்கத் தக்ஷகன் அந்தக் கஶ்யபன் போதும் போதுமென்று சொல்லுமளவும் தனந் தந்தனுப் பினன்; கஶ்யபனும் தன்னிடம் போய்ச் சேர்ந்தனன். (21–26)

கஶ்யபனை அரசனிடஞ் செல்லவொட்டாது திருப்பிய தக்ஷகன், பரீக்ஷித்து தனக்கு வரும் மரணபய நிவர்த்தியின் பொருட்டு நூதனமாய்ப் புதுக்கி யிருக்கும் நாகசமென்னும் பட்டணத்தைக் குறித்து அதி வேகமாய்ச் சென்று அரசன் உப்பரிகையின்மே லிருப்பதையும், மணிமந்திர ஔஷதங்களினுல் இடைவிடாமல் ரக்ஷிக்கப்பட் டிருப்பதையும், என்ன விதத்தில் என்ன தீங்கு வருமோவென்று அதிக ஜாக்கிரதையோடுங் கூடிச் சோம்பலில்லாம லிருப்பதையுங் கேள்விப்பட்டு, அந்தோ! இந்த அரசனுக்குக் கவிஜாதருடைய சாபம் எப்படித் தவிரப்போகிறது என்று சிந் தாகுல முடையவனுய் இந்த உப்பரிகையின் மீது நாமெப்படிப் போவது? அந்தோ! இவன் அந்தக் கவிஜாதருக்குச் செய்த ஒரு தீங்கினு லல்லவா பாபத்தொழிலைச் செய்தவனு மானுன்; அவர் சாபாக்கினியினுலே தகிக்கப்பட்டவனு மானுன். பிராம்மணனை உபத்திரவித்ததனுல் விப்பிர பீடாகரனுமானுன், சடனுமானுன், இவனை நானெவ்வண்ணங் கொல்லுவேன்? பாண்டவர்களுடைய வம்சத்தி லிவனைப்போ லொருவருந் தோன்றவில்லை. எவன்தான் தபசியாகிய பிராம்மணருடைய கழுத்தில் செத்துப்போன பாம்பை எடுத்துப்போடத் துணிவான்? இப்படிப்பட்ட துர்புத்தியுந் தோன்றுமா? பாவம்! பாவம்! இவ்வாறுன இழிதொழிலைச்செய்து விட்டுப் பின்வரும் கதியையும் நாடாது அநேக காவலாளிகளை நிய மித்து இந்த வுப்பரிகையின்மீதிருக்கின்றுனே, மந்திர சித்தி பெற்ற வர்களுடைய காவலுக்குள் நாமிருக்கின்றோ மாகையினுல் நமக்கு எப்படி மரணம் வரும் என்று கலக்கமில்லாத நெஞ்ச முடையவனுயு மிருக்கின்றுனே! இவனுடைய மூடபுத்தியை என்னென்று சொல்லுவேன். மரணத்தை வஞ்சிக்க இவனுல் முடியுமா? மணி மந்திர ஔஷதங்கள் தெய்வத்தினுல் விதிக்கப்பட்ட மிருத்தியுவை ஒருகணநேரமாவது நிறுத்துவதற்கு முடியுமா? அல்லது திருப்பு வதற்கு முடியுமா? பாண்டவர்களுக்குத் தாயாதிகளாயிருந்தவ ரெல்லாம் இருக்கவேண்டு மென்று எண்ணியிருந்தவர்களே யன்றி இறக்க வேண்டுமென் றெண்ணியிருந்தார்களா? அவர்களெல்லாம் இப்பொழு திருக்கிறுர்களா? இறந்தவர் இறந்தவர் தானே; இது பிரத்தியக்ஷமாகத் தெரிந்திருந்தும் இவ் வரசன் பிழைத்திருக்கலா மென்று சந்தோஷ சித்தனு யிருக்கின்றுனே; கவிஜாதருடைய சாபத்தினு லேவப்பட்ட நான் இவனை இறக்கச் செய்யாமற் போவேனு? தானதரும முதலிய சத்கருமங்கள் அளவில்லனவாகச் செய்வதற்கு அரசன் யோக்கியன். அந்தச் சத் கருமங்கள் வியாதி முதலிய மரணங்களைப் போக்கடிக்க முடியுமோ? ஒரு நாளும் முடி யாது. அப்படிப் போக்கடிக்கமுடியுமானுல் ஆயுள் நிலைபெற்றிருக்கு மல்லவா? ஆயுள் நிலை பெற்றிருக்கின்றவர்களை இவ்வுலகில் யாரைக் கண்டோம்; ஆகையால் ஸ்நானம் முதலிய தருமங்களைச் செய்து

மரணமடைந்தால் சுவர்க்கலோகத்தை யடையலாம். அத் தருமங்களைச்செய்யாது மரணமடைந்தால் நரகத்தை யடையலாம். இந்த நியாயங்களைச் சமீபத்திலிருக்கிற ஒரு பிராமணனாவது எடுத்துச் சொல்லக்கூடாதா ? அந்தோ ! பிரமனால் விதிக்கப்பட்ட மிருத்தியுவானது ஒருவராலுந் தடுக்கமுடியாததென்று ஒரு வேதியனாவது தெரிவிக்கவில்லையா ? யாவருங் கூட்டமாகக்கூடி மரணபயமில்லையென்பதைத் தாங்கள் செய்யும் செய்கையினால் உணர்த்தி அவனை மகிழச் செய்துகொள்ளத் துணிந்திருக்கிறார்களே ! இந்த அரசன் அந்த ப்ராம்மணனுக்குச் செய்த பாவம் விட்டுப்போமோ ? அது பாவமா ? வேறா ? என்றிவ்வாறு எண்ணித் தன்னருகிலிருக்கும் தன்னினமான நாகங்களைத் தவவேடங்கொண்டு வரும்படிச்செய்து அவைகளைப் பார்த்து, ஓ நாகங்களே ! நீங்களனைவரும் பார்ப்பதற்கு அதிரம்யமாயிருக்கிற பலாதிகளைக் கையிலேந்திக்கொண்டு பரீக்ஷித்திருக்கும் அரண்மனையை நோக்கிச் செல்லுங்களென்று தன்னெண்ணத்தைக் குறிப்பிட்டுத் தான் அப்பழங்களில் கிருமிரூபமாய்ப் பிரவேசித்தான். (27–42)

பின்னர் தபோரூபிகளாகிய நாகர்களெல்லாம் பழமேந்திய கைகளோடு அதி வேகமாய் அரசன் மாளிகையையடைந்து அங்குள்ள வாயிற் காவலரைப்பார்த்து, ஓ காவலர்களே ! நாங்கள் தபோவனத்தினின்றும் அரசனைப் பார்க்க வந்தோம். ஏனெனில், இவ்வரசன் மஹாவீரனையும் அழகுள்ள பார்வையுடையவனையும் பாண்டு குலத்திற்குச் சூரியனைப் போன்றவனையும் விளங்கியிருந்த அபிமன்யு மகாராஜனுடைய புத்திரன். இவனுடைய தீர்க்காயுளை யுத்தேசித்து அதர்வண மந்திரங்களினால் மந்திரோச்சாரணை செய்து, தீர்த்தங்களில் அபிமந்திரித்து அந்த மந்திர தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்து இந்தப் பழங்களையுங் கொடுத்து ஆசீர்வாதம் செய்து அவனிடத்து நல் விடைப்பெற்றுப் போகவந்தோம். ஆகையால் எங்கள் வரவை அரசனுக்குத் தெரிவியுங்களென்ன, காவலாளிகள், ஓ ஐயன்மீர் ! யாவராயிருந்த போதிலும் உள்ளே விடுவதற்கு அரசனுடைய ஆணை யில்லை என்றனர். வஞ்சவேடங்கொண்டு வந்த முனிவர், ஓ காவலாளிகளே ! இதுவரையில் இப்பரத வம்சத்தில் எங்களையொத்த முனிவர்களைத் தடைசெய்யும்படியான உத்தரவு பிறந்ததாகக் கேட்டதுமில்லை, கண்டதுமில்லை. இது புதுமையினும் புதுமையே ! எங்களைத் தடைசெய்யும் பக்ஷத்தில் நாங்கள் அரசனை யுத்தேசித்துக் கொண்டுவந்த இந்தப் பழங்களும் அபிமந்திரிதமான தீர்த்தங்களும் வீணாய்ப்போம். அப்படிப் போக்கத்தக்கவைகளன்று இவை. ஆகையால் நீங்களே பெற்றுக் கொண்டு அரசனிடஞ் சேர்த்து விடுங்களென்றனர். காவலாளிகள் இவர் வஞ்சவுரையை அறியாதவர்களாய் இவர்கள் மெய்யான பிராம்மணோத்தமர்கள், இவர்களைப்போன்ற அந்தணர்களைக் காண்பதரிதென மனமிரக்க முடையவர்களாய், ஓ முனிவீர்காள் ! எங்கள் ராஜாதிராஜன் கவிஜாதருடைய சாபத்தினால் மிகவும் பயமுற்றவனாய்க் கடுங்காவலோடு கூடிய இக்கோட்டையில் வசிக்

கின்றான். இப்பொழுதிருக்கின்ற காவற்றிறத்தை என்னவென்று கூறுவோம்! பிராம்மணனொருவரும் மேலுப்பரிகையில் போகக் கூடாது; ஒருவரும் ஒரு பண்டத்தை வெளியேயிருந்து கொண்டு வந்து கொடுக்கவுங்கூடாது. நாளையதினங் காலையில் மந்திரோச் சாரணை செய்கின்றவர்களா யிருக்கின்ற சகல முனிவர்களும் வரப் போகின்றார்கள். ஆகையால் நீங்களும் அச்சமயம் வருவீர்களாயின் அரசனைக் காண்பதிற் றடைகிடையாது என்றனர். வஞ்சவேடத் தவராகிய அந்தணர்கள் நாளைக்கு நாங்கள் வருவதாயிருந்தாலும் அரசனை உத்தேசித்துக் கொண்டுவந்த இக்கனி முதலியவைகளை உங்கள்பால் வைக்கின்றோ மென்றனர். காவலாளிகள், ஆனால் அரசனுக்குத் தெரிவித்துப் பின்னர் அவனாணையின்படி செய் கின்றோ மென்று கூறி அரசன்பா லோடி அடிபணிந்து விண் ணப்பஞ் செய்ய, அரசன் கேட்டு மிகுந்த பக்தியுடையவனாய் ஓ காவலாளிகளே! நீங்கள் அவர்கள் கொடுப்பனவற்றை ஏற்றுக் கொண்டு, இன்றுபார்க்க முடியாதென்று கூறி நாளையதினம் அவர் கள் தரிசனந்தரும்படிப் பிரார்த்தித்து அவர்களுக்கு என்னாலாக வேண்டுவன எவைகளோ அவை இவைகளென்பதும் நன்றாய்த் தெரிந்துகொண்டு எனது வந்தனத்தையுங் கூறக்கடவீர்க ளென்றனன். காவலாளிகள் விடைபெற்று முனிவர்களிடம் வந்து அரசன் கட்டளையைக்கூற முனிவர்கள் நாம் வந்த காரியம் முடிந்த தென்று மனதி லெண்ணிக் கனி முதலியவற்றைக் காவலாளிகளிடம் கொடுத்துவிட்டுப் போக, காவலாளிகள் அவைகளை அரசனிடம் கொடுக்க அரசன் அதிக பய பக்தியுடனேற்று மந்திரிகளைப் பார்த் துக் கூறுகின்றான்: (43–56)

ஓ அன்புள்ள மந்திரிமார்களே! இன்று வந்த அந்தணர் களால் கொடுக்கப்பட்ட இப்பழங்களைப் பார்த்தீர்களா? எவ்வளவு அருமையாக விருக்கின்றன! இதில் பெரிதான பழத்தை நான் சாப்பிடுகிறேன். மற்றைப்பழங்களை நீங்க ளனைவரும் பக்ஷியுங்க ளென்று அவரவருக்குங் கொடுத்துத் தானுண்ண வெண்ணிய பழத்தை இருபிளவாகப் பிளந்தனன். அதில் கருத்த கண்ணும் சிவப்புநிறமுமுள்ள அதி சூக்ஷ்மமான ஓர் புழுவைக் கண்டு அதி சயித்து உடனே மந்திரிகளைப்பார்த்து, இப்பொழுது சூரியன் அஸ்த மிக்கப் போகிறான்; விஷத்தினால் ஒருபயமும் வராது என்று சொல்லி அந்தப்புழுவைப்பார்த்து, இது புழுவா? அன்று இது சாபரூபமே. ஆகையால் கவிஜாதராலே கொடுக்கப்பட்ட சாபத்தை அங்கீகரிக் கின்றேன். கிருமிரூபமாகிய இது என்னைக் கடிக்கட்டும் என்று சொல்லி அதனைத் தன் கண்டத்தில் வைத்துக் கொண்டனன். சூரியன் அஸ்தமிக்கும் அப்பொழுது புழுவாயுள்ள தக்ஷகன் கால ரூபமாயும் பயங்கர ரூபமாயும் இருக்கிற தன்னுருவங்கொண்டு கவிஜாதருடைய சாபத்தின்படி கண்டத்தை சூழ்ந்து கடித்தான். அதுகண்ட மந்திரிமார்களும், மந்திர சித்தியுள்ள புருஷர்களும் முனிவர்களும், ஆஹா! வென்று பெருங்குரலிட் டழுதனர். அவ் வோசை அக்கோட்டை முற்றும் நிறைந்தது. உத்தரா தேவி பேசவு

***மில்லே. தக்ஷகன் தன் முகத்தினின்றும் வெளிப்படும் விஷாக்கினி யினுல் அரசனேச் சீக்கிரமாகத்தகித்து ஆகாய மார்க்கமாகச் சென்றனன். அவனேக் கண்டவர்களெல்லாம் உலகத்தை யழிக்க வந்த காலனென்றெண்ணித் தூரத்தே விலகி நடுங்கி நின்றுப் பின்னர் விஷத்தினுல் கொளுத்தப்பட்ட விருக்ஷம் போல் வீழ்ந்திருக்கும் அரசனேப் பார்த்துத் துக்கித்தனர் என்றனர்.*** (57–68)

ஓம் லகாரிண்யை நம:

## 11. ஸர்ப்ப யாகம்

சூதமுனிவர் சவுனகாதியர்களே நோக்கிக் கூறுகின்றுர் : ஓ ! முனிபுங்கவர்களே ! பின் மந்திரிக ளெல்லா மொன்றுகூடி அரசன் மாண்டிருப்பதையும், அவன் மகனுகிய ஜனமேஜயன் குழந்தையாயிருப்பதையும் பார்த்து மனம் புழுங்கி, ஐயோ ! தெய்வமே ! இப்படியும் விதியிருந்ததாவென்று கூக்குரலிட்டழுது நெடுநேரம் மூர்ச்சையாகக்கிடந்து பின்னர் தெளிந்து, இனித் துக்கிப்பதனுலாவதென் ? செய்யவேண்டுவனவற்றைச் செய்து முடித்தலே கடனென்றெழுந்து, கங்காதீரத்தில் சந்தனம் அகில் முதலிய கட்டைகளேப் பரப்பி அதில் அரசனேக் கிடத்திப் புரோகிதர்களால் வேத முறைப்படி தகனுதி உத்தர கிரியைகளும் துர்மரணப் பிராயச்சித்தாதிகளுஞ் செய்துமுடித்துப் பின்னர் குழந்தையாகிய ஜனமேஜயனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்யவெண்ணி நல்ல சுப முகூர்த்தத்தில் அந்தணர்களுக்கு கோதானம் சுவர்ணதானம் முதலிய மஹா தானங்களேயும், அவர்கள் விலாப்புறம் வீங்க அறுசுவையோடு கூடிய அன்ன தானங்களேயும், இவர்களந்தணர்களல்லர் அரசராவாரென்று வியக்கப் பொன்னுடைகளேயுங் கொடுத்துச் சிங்காதனத்தில் அக்குழந்தையை ஏற்றிப் பொன்முடி சூட்டினுர்கள். நகரத்தாரும் அடிபணிந்து வாழ்த்தினர். பின்னர் ஜனமேஜயன் செவிலித்தாயர்களால் நாளொருமேனியாய் வளர்க்கப்பட்டு ராஜ லக்ஷணங்களெல்லாம் நிறையப்பெற்று வாழ்ந்து வருநாளில் புரோகிதர் பதினுேராண்டு ஆனமைகண்டு வேதசாஸ்திரம் முதலிய கலேஞானங்களேக் கற்பித்து வந்தனர். அந்த ஜனமேஜயனும் பூர்வபுண்ணிய விசேஷத்தால் முன் கற்றுணர்ந்தவன், பின்னர் அதனே ஞாபகஞ் செய்து கொள்வதுபோலும், துரோணுசாரியரிடம் அருச்சுனனும், பரசுராமரிடம் கர்ணனும் கற்றுணர்ந்தது போலும், சகல வேதாத்யயனத்தோடு சாஸ்திரங்களிலுள்ள உண்மையான பகுதிகள் இது இதுவென்று அதி நுட்பமாகவும், யாவரையும் வெல்லுதற்குரிய தனுர் வித்தையை அதிக சாகசமாகவும், உயிர்களேப் பாதுகாக்கு முறைமையை யுணர்த்தவல்ல நீதி நூல்களேத் தனக் குயிர்த்துணேயாகவுங் கசடறக் கற்றுணர்ந்து பொய்மையைக்கடிந்து, பஞ்சேந்திரியங்களேத் தன் வசப்படுத்தித்,

தருமராஜன் அறநெறி வழாது ஆண்டு வந்ததுபோல் உலகை ஆண்டு வந்தனன். (1–11)

காசி தேசாதிபதியாகிய சுவர்ண வர்ணகரனென்கிற அரசன் ஜனமேஜயனுடைய கல்வி, நீதி, அறிவொழுக்கம் முதலியவற்றைக் கேள்வியுற்று அவனுக்குத் தனது மகளாகிய வபுஷ்டையைக் கலியாணஞ் செய்வித்தான். ஜனமேஜயன் பூர்வத்தில் தன் மூதாதையாகிய விசித்திரவீரியன் அம்பை முதலியவர்களோடு எப்படி இன்புற்றிருந்தானோ, அருச்சுனன் சுபத்திரையோடு கூடி எப்படி லீலாவினோதனாயிருந்தானோ, அப்படியே காசிராஜன் மகளாகிய வபுஷ்டையோடு கூடிச் சசியும் இந்திரனும் போல் சிங்காரவனங் கடோறுஞ் சென்று காமகலா விநோத லீலைகளைப் புரிந்தும், தன் குடையின்கீழ் வாழ்கின்ற குடிகள் எவ்வகையானுந் துன்பமென்பதறியாமல் வேண்டிய சுகங்களோடு கூடி வாழச்செய்தும், மிகவுஞ் சமர்த்தர்களான மந்திரிமார்களுடன் எவ்விதத்தும் பகையென்பதணுகாவண்ணம் அரசியல் நடத்தி வந்தனன். (12–16)

இவ்வாறு வாழுநாளில் உத்துங்க ரென்னும் மஹரிஷி பரீக்ஷித்தென்னு மஹாராஜா தக்ஷகனென்னும் சர்ப்பராஜனாலல்லவா இறந்தானென்று மிகவுங் கிலேச மடைந்து அந்தத் தக்ஷகனை விரோதியைக் கொல்லவேண்டும்; அவனை எவன் கொல்லப் போகிறான் என்று யோசித்துக் கொண்டே அஸ்தின புரத்தை யடைந்து அந்தப்பரீக்ஷித்து மகாராஜாவின் புத்திரனாகிய ஜனமேஜயன் அரசாண்டு வருதலைக் கண்டு இவன் தான் அவனைக் கொல்லவேண்டுமென்று நிச்சயித்து அவ்வரசனிடஞ் சென்று ஹே! மஹாப்பிரபோ! ராஜாதி ராஜனே! நீ சமயோசிதமாகத் தெரிந்து கொள்ளவேண்டிய காரியா காரியங்களைத் தெரிந்து கொள்ள வில்லையே! செய்ய வேண்டியதைச் செய்யாமலும், செய்வதல்லாததைச் செய்தும் வருகின்றனையே; கோபமில்லாமலும் பிரயத்தன மில்லாமலும் இருக்கின்றனையே; உன்னை இப்பொழுது எதைக் குறித்துப் பிரார்த்திப்பேன்? என்னையெனில், நீ சத்துரு இன்னானென்று அறிந்தாயல்லை; அச் சத்துருவை வெல்லுந் தந்திரம் இதுவாமென்று யூகித்தாயல்லை. சிறுபாலரைப்போல் சிங்கார வனங்கடோறும் லீலா விநோதமாய்க் காலங்கழித்து வருகின்றனை; யான் உனக்கு யாது புகல்வேனென் றிரங்கிக் கூறினர். (17–20)

ஜனமேஜயன் அம்முனிவரைப் பணிந்து, ஓ மகானுபாவரே! எனக்கு யார் சத்துரு? அவனை நான் இந்நாள்காறும் அறிந்தவனன்று. அவன் யாவன்? அவனை நான் செய்யவேண்டிய வகை யாது? அதனை யருள் செய்வீராயின் அவ்வாறே செய்கின்றேனென்ன, உத்துங்க மஹரிஷி, ஓ மகாராஜனே! உன் பிதா இயல்பாக மரணமடைந்தவனன்று; தக்ஷகனென்னும் சர்ப்ப ராஜனால் கடிக்கப்பட்டிறந்தான். அதன் வரலாற்றை உன் மந்திரிமார்களைக் கொண்டு தெரிந்து கொள்வாயென்றார். உடனே மந்திரிமார்களை வினவ, அவர்கள், ஓ அரசனே! கவிஜாதரென்னும் ரிஷியினுடைய சாபத்தினால் தக்ஷகன் கடித்தானேயன்றித் தக்ஷகன் உன் பிதாவை

பகைமை கொண்டு கடித்தவனன்றென்றும் சாபம் நேரிட்ட காரணத்தை வரன் முறையாகக் கூற, ஜனமேஜயன் கேட்டுத் தக்ஷகனிடத்தில் குற்றமில்லாமையைக் கண்டு உத்துங்க மஹரிஷியைப் பார்த்து, ஐயா! கருணாமூர்த்தியே! தக்ஷகன் என் பிதாவுக்குச் சத்துருவாகத் தோன்றவில்லையே என்றான். மஹரிஷி, அவனு சத்துரு வாகான்? மாந்திரீக சாஸ்திரத்தில் வல்லவரான கஶ்யபர் அத் தக்ஷகனுக்குத் தன் மந்திர வல்லபத்தை ஒரு ஆலமரத்திற் காட்டிப் பரீக்ஷித்தை நானெழுப்புவேனென்று சொன்னபோதே அத் தக்ஷகன் கஶ்யபரை உன் பிதாவினிடம் வரவொட்டாமல் அளவிறந்த தனத்தைக் கொடுத்துத் திருப்பி விட்டானே; அவன் சத்துருவா, சத்துருவல்லவா? நீயே யோசித்துப்பார். (21–24)

பூர்வத்தில் ருரு என்கிற மஹரிஷி தன் மனசினால் நிச்சயிக்கப் பட்ட பத்தினி சர்ப்பத்தினால் கடிக்கப்பட்டிறக்க அவளைத் தான் தபோ மகிமையினால் பிழைப்பித்துக் கலியாணஞ் செய்து கொண்டனர். அப்படிச் செய்து கொண்டும் தன்பத்தினியைக் கொன்றது சர்ப்பமாகையால் அந்தச் சர்ப்ப ஜாதிகள்மேல் பெரும் பகைகொண்டு எந்தெந்தச் சர்ப்பங்களை நான் எங்கெங்கு பார்க்கின்றேனோ அவைகளை ஆயுதத்தினால் அங்கங்கே கொல்லுகிறேனென்று அதிபயங்கரமான பிரதிஜ்ஞை செய்துகொண்டு ஆயுதத்தைக் கையிலேந்தினவராய் உலகமெங்குந் திரிந்து அங்கு மிங்கு முழல்கின்ற சர்ப்பங்களை யெல்லாம் விடாமல் கொன்று வரும் பொழுது ஒரு பயங்கரமான காட்டில் பால்போன்ற நிறமும் இரு பக்கந்தலையுமுள்ள ஒரு கிழத்தன்மையுடைய "டுண்டுபம்" என்னும் சர்ப்பத்தைப் பார்த்துக் கையிலுள்ள தடியைத் தூக்கிக் கொண்டு மிகுந்த கோபத்தோடு அடிக்க, அச் சர்ப்பம் அந்த ருருவைப் பார்த்து, ஓ மஹரிஷியே! யான் உமக்கொரு அபராத முஞ் செய்யாதிருக்க என்னை என்ன காரணத்தினால் அடித்தீரென்று கேட்டது. அதற்கு அந்த ருரு, ஓ டுண்டுபமே! என்னுடைய பத்தினியானவள் உன் இனத்தவரால் கடிக்கப்பட்டிறக்க அச்சமயத்தில் நான் மகா துக்காக்கிராந்தனாய்ச் சர்ப்பங்களை யெல்லாங் கொல்லுகிறேனென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டு அதுபோல் செய்து வருகிறேனென்றார். அந்த டுண்டுபம் அம்முனிவரைப் பார்த்து, உம்முடைய பத்தினியைக்கொன்ற சர்ப்பத்தை மாத்திரமல்லவா கொல்லவேண்டும், அதைவிட்டு எல்லாவற்றையுங் கொல்ல வேண்டுமென்று கொலைசெய்து வந்து சர்ப்பரூபமாக விருக்கின்ற என்னையும் இப்பொழுது அடித்தீரே; யான் சர்ப்பமா? என்னைக் கொல்ல உம்மாலாகுமா என்ன, மகரிஷி மானிட வார்த்தையும் மனதைக் கவர்வதாயுமுள்ள அந்தச் சர்ப்பத்தின் வாய்மொழியைக் கேட்டு, நீ யார்? யாது காரணத்தால் இச்சரீரம் பெற்றனை என்ன, ஓ மஹரிஷியே! நான் பூர்வஜன்மத்தில் பிராமணன்; எனக்கு மேககன் என்று ஒரு தோழனிருந்தான்; அவன் தருமவான்களுக்குள் சிறந்தவன், சத்யவாதி, இந்திரியங்களைச் செயித்தவன்; அவனிடம் என் மந்த மதியினால் அஞ்சத்தக்க சில விளையாடலை

விளையாடி வருவேன். ஒரு நாள் அவன் அக்னி ஹோத்திரஞ் செய்யும் கிருகத்திலிருக்கும்பொழுது சர்ப்பத்தைப்போல் ஒன்றைச் செய்து அக்கிருகத்திற் போட்டு இதோ பாம்பு பாம்பென்று அலறினேன்; அவனும் அது கண்டு பிரஜ்ஞை தெரியாதவனாய் மிகவும் பயந்து நடுநடுங்கிப் பின்னர் பொய்ப்பாம்பென்று தெளிந்து என்னைப் பார்த்து, அடா மூடா! என்ன செய்தாய்! நானெவ்வளவு பயந்து விட்டேன்! இப்படியுஞ் செய்யலாமா? என்னைப் பொய்ச் சர்ப்பத்தைக் காட்டிப் பயப்படுத்தியபடியால் நீ மெய்யான சர்ப்ப சொரூபமாகவே ஆகக் கடவாயென்று சபித்தனன். அச் சாபமேற்ற நான் அச்சமுற்று அந்தச் சிநேகனாகிய மேககனென்னும் பிராம்மணனைப் பணிந்து சிநேக முறைமை பாராட்டிச் சாப விமோசனங் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தேன். அவனுங் குரூரத்தினின்றுஞ் சிறிது நீங்கிக் கருணையுடையவனாய் ஓ சிநேகனே! பிரமதருடைய புத்திரராகிய ருரு மஹரிஷியினால் இச்சாபம் நீங்கப் பெறுவா யென்றனன். அதுபோலவே உம்மால் எனக்குச் சாபம் நீங்கும்படியான காலம் வந்துவிட்டது. இப்பொழுது உமக்கொன்று சொல்லுகின்றேன் கேளும். என்னையெனின், அந்தணர்களுக்குக் கொல்லாவிரதமே மேலான விரதம்; எந்தச் சீவ ஜந்துகளிடத்திலும் தயையிருக்க வேண்டும். யக்ஞத்திற் கொலை இல்லையோவெனின், அதை யாகத்திற் செய்யத்தகும் யாக முகத்தினன்றி வேறெந்தவிடத்திலுஞ் செய்யக் கூடாது. மனத்தினும் நினைக்கக்கூடாது. இவ்விஷயத்தில் சந்தேகம் வேண்டாம், என்று சொல்லிச் சர்ப்ப வடிவத்தினின்றும் நீங்கிப் பிராமணவடிவ முடையவனாயினான். ருரு மஹரிஷியும் அவ் வேதியனது சாப விமோசனத்தைக் கண்டு மகிழ்ந்தவனாய்ச் சர்ப்பங்களைக் கொல்லுந் தொழிலை அன்று முதல் செய்யாது விட்டு மனைவியோடு சுகமாக வாழ்ந்திருந்தனர். (25–41)

ஓ ஜனமேஜயனே! ருரு என்பவர் தன் பத்தினியைச் சர்ப்பங் கடித்ததென்று சர்ப்ப ஜாதிகள்மேல் துவேஷங்கொண்டு கொலை செய்யத் துணிந்தாரென்றால் க்ஷத்திரியனாகிய நீ உன் பிதாவை மரிக்கச்செய்த சர்ப்ப ஜாதிகள்மேற் சிறிதுந் துவேஷங் கொள்ளாதிருப்பது என்ன வீரமோ? ஓ பரத சிரேஷ்டனே! உன் பிதா இருப்பதற்கிடமில்லாமல் ஆகாயத்தி லலைந்து கொண்டிருக்கிறான். நீ எவ்வளவுகாலம் சர்ப்பங்களைக் கொல்லாமலிருக்கின்றனையோ அவ்வளவு காலமும் உன் பிதாவுக்குத் துர்க்கதிதான். ஆகையால் நீ சகல சர்ப்பங்களையுங் கொன்று அவன் வீரத்தைப் பூர்த்திசெய்வாய். எவன் பிதாவினுடைய சத்துருவை யறியாமலிருக்கின்றானோ அவன் செத்தவனுக்குச் சமான மாவன். அரசனே! நீ அம்பிகையை யுத்தேசித்து உன் பிதாவின் வைரிகளாகிய சர்ப்பங்களைக்கொல்ல சர்ப்பயாக மொன்று சங்கற்பித்துக் கொண்டு அந்த யாகத்தைச் செய்தல் வேண்டுமென்றார். ஜனமேஜயன் தன் பிதாவினுடைய துக்கத்தைக்கேட்டு மிகவும் வியசனமுற்றவனாய்க் கண்ணீராறாய்ப் பெருகவிட்டு, என் பிதா சர்ப்பத்

திஞல் கடிக்கப்பட்டுப் பயங்கரமான கதியையா அடைந்தனர்! இப்பொழுது நான் சர்ப்பயாகத்தைச் செய்து என் பிதாவுக்குச் சுகஞ் செய்கிறேனென்று கூறி சர்ப்பங்களைக் கொல்ல வேண்டுமென்கிற துவேஷ முடையவஞய் மந்திரிகள் யாவரையும் அழைத்து, ஓ மந்திரிமார்களே! யாகத்துக்குவேண்டிய திரவியங்களைச் சேகரித்து, கங்கா தீரத்தில் நல்ல மங்களமான விடத்தில் அந்தணர்களைக் கொண்டு யாகசாலையை ஏற்படுத்தி அதில் அநேக ஸ்தம்பங்களோடு கூடின யாகமண்டபத்தை நிர்மாணஞ்செய்து அம்மண்டபத்துக்குள் யாகவேதிகைகளை விதிப்படியமைத்து அந்தச் சர்ப்பயாகத்திற்கு அங்கபூதமாயுள்ள யஜ்ஞங்களை முன்னே செய்து, பின்னர் தக்ஷகனைப் பசுவாகவும், உத்துங்க மஹாமுனியை ஹோதா (ஓமஞ் செய்கின்றவர்) ஆகவும், முற்று முணர்ந்தவர்களாயும் வேத பாரகர்களாயு முள்ள பிராம்மணோத்தமர்களை ஏனைய கிருத்தியங்களுக்கு உரிமையுடையவர்களாகவும் இருக்கச் சீக்கிரமாக ஏற்படுத்த வேண்டியதென்று ஆஜ்ஞை செய்தனன். அரசனுதத்தரவின்படியே கங்காதீரத்தில் யாகசாலையை ஏற்படுத்தி யாகத்தை நடத்திவரும்பொழுது தக்ஷகனைவன் தேவேந்திரனிடத்தி லோடி அபயம் அபயமென்று அவனடியில் வீழ்ந்து புலம்பினன். இந்திரன் அவனது துன்பத்தைக்கண்டு, ஓ தக்ஷகா! நீ யஞ்சற்க! என்று கூறித் தன்னுசனத்தில் அவனைப் பயமற்றிருக்கும்படியாகச் செய்தனன். இச்செய்தியை யாகத்துக்கு ஹோதாவாக விருக்கிற உத்துங்கமஹரிஷி யறிந்து இந்தத் தக்ஷகன் யாரைச் சரணமடைந்தபோதிலும் விடுவேனு வென்று மிகவும் துவேஷ முடையவராய் அதிக விரைவுடன் தமது மந்திர சக்தியினுல் இந்திரன் தக்ஷகனேடு யாகசாலைக்கு ஓடி வந்து சேரும்படிச் செய்தனர். அப்பொழுது தக்ஷகன் யாயாவர குலத்தி லுதித்தவரும் ஜரத்காரு மகரிஷியினுடைய புத்திரரும் தருமாத்மருமாகிய ஆஸ்தீக ரென்னும் முனிவரைச் சிந்தித்தனன். அம்முனிவர் அக்கணமே அந்த யாகசாலையையடைந்து ஜனமேஜயனை மிகவும் புகழ்ந்து கொண்டாடினர். அரசன் அவர் கூறும் புகழுரையையும், அவரது கல்வித்திறத்தையும், இளம் பருவத்தையுங்கண்டு அகமகிழ்ந்தவனுய் அவருக்கு அருக்கிய பாத்யாசமனுதிகள் தந்து அதிக சிறப்புடன் பூஜித்து, ஓ முனிபுங்கவரே! என் மனம் உம்முடைய விஷயத்தில் மிகவும் சுவாதீனப்பட்டிருக்கிறது. தேவரீர் இப்பொழுது வந்தகாரண மென்ன? என்னுல் தேவரீருக்கு ஆகவேண்டிய காரியம் யாது? அதைச் சொல்லி யருளுமென்றனன். ஆஸ்தீகரிஷி, ஓ ஜனமேஜயனே! நீ கூறியது உண்மையாயின் இந்த யாகத்தை நிறுத்தல்வேண்டுமென்றனர். சத்திய சந்தனுகிய அரசன் அதனைக்கேட்டு அந்தோ! இதற்கென்னசெய்வேனென்று துயரமுற்று முனிவருக்குச் சொன்ன மொழியை மறுக்கமாட்டாது சர்ப்ப யாகத்தை நிறுத்தினன். அப்பொழுது இந்த அரசனது கோபந்தணியுமாறு வைசம்பாயன முனிவர் மஹாபாரதத்தைக் கூறினர். அதனைக்

கேட்டும் அரசன் மனவுபசாந்தி யடையாதவனுய் வியாசரை நோக்கிக் கூறுகிறுன் :—ஐயா! என் மனத்துக்குச் சாந்தி எப்படி யுண்டாகும்? என் மனம் மிகவுந் தகிக்கப்படுகின்றது. இதற்கு யான் என்செய்வேன்? அர்ச்சுன மஹாராஜாவுக்குப் பேரனும் எனக்குப் பிதாவுமாகிய பரீக்ஷித் மஹாராஜா சர்ப்பத்தினுல் கடிக்கப்பட்டிறந்தாரே. இதுவென்ன மரணம்! க்ஷத்திரியனுக்கு யுத்தத்தில் மரணம் நேரிட்டால் அது மிக விசேஷமான மரணம். அதுவன்றி கிருகத்தில் நேரிட்டால் அது விதியான மரணம். இந்த விரண்டுமல்லாத துர்மரணமா என் பிதாவுக்கு நேரிடுவது? ஆஹா! இதை எண்ணுந்தோறும் எனக்குண்டாகுங் கஷ்டம் இவ்வள வென்று சொல்லிமுடியாது. இனி எண்ணி ஆவதென்? என் பிதா மிருத்யுவுக்குச் சுவாதீனராய் ஆகாயத்தி லலைந்துகொண் டிருக்கிறுர். அதற்கு நான் என்ன சாந்தி செய்யவேண்டுமோ அதனையும், அவர் இந்த துக்கத்தினின்றும் நீங்கி எவ்வண்ணம் சுவர்க்கத்தை யடைவாரோ அதனையும் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனன். (42–66)

ஓம் லப்த ரூபாயை நம :

## 12. ஸ்ரீ தேவீ பாகவதப் பெருமை

சூதமுனிவர் கூறுகின்றுர் :—வியாசபகவான் ஜனமேஜயன் கூறிய வார்த்தையைக்கேட்டு விளம்புகிறுர் : ஓ அரசனே! அதி கோப்யமாயும், கேட்குந்தோறும் ஆச்சரியகரமாயும், புண்யகரமா யும், மங்களகரமாயும் அநேக சரித்திரங்களுடன் கூடினதாயுமுள்ள புராணமொன்றுளது. அதனைக் கேட்பையாயின் உனக்கு மனவுப சாந்தியும், உன் பிதாவுக்குச் சுவர்க்கலோகப் பிராப்தியும் உண்டா கும். இதனை முன்னர் என் குமாரனுகிய சுகமுனிவனுக்கு உபதேசித் திருக்கின்றேன். அதன் பெயர் தேவீ பாகவதம். ஓ அரசனே! இப் பாகவதம் தருமார்த்த காம மோக்ஷமாகிய சதுர்வித புருஷார்த் தங்களுக்குக் காரணமாயுள்ளது. இதைச் சிரவணஞ் செய்த மாத் திரத்தில் பரம சுகத்தையும் நித்தியத்வத்தையும் சர்வ சம்பத்தையுங் கொடுக்கு மென்றனர். (1–4)

அரசன், ஓ வியாச முனிவரே! தேவரீரால் சொல்லப்பட்ட பாகவத புராணத்தைக் கேட்கவேண்டு மென்று ஆவலுடையவ னுயினும் இப்பொழுது யாகத்தைக் கெடுப்பதற்கு அதி வேகமாய் வந்த இந்த ஆஸ்தீகரிஷி யாருடைய பிள்ளை? என்ன நிமித்தம் இந்த யாகத்தைக் கெடுக்க வந்தார்? இந்தச் சர்ப்பங்களைக் காப் பாற்றுவதனுல் இவருக்கு வரும் பிரயோசன மென்ன? இவற்றை முன்னர் கேட்கவேண்டுமென்று என் மனம் என்னைத் தூண்டு வதால் அவற்றைக் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனன். வியாசர் கூறுகின்றுர் : ஓ அரசனே! ஜாத்காரு என்று ஒரு மஹரிஷி யிருந்தார். அவர் கிருகஸ்தாச்சிரமத்தை விரும்பாமல் பிரமசரிய

ஆச்சிரமத்திற்குனே இருந்தனர். அவர் ஒருநாள் ஒரு வனத்தின் வழியாகப் போகும்பொழுது அவருடைய பிதுர்க்கள் ஒரு கிணற்றில் தலைகீழாய்த் தொங்கிக்கொண் டிருப்பதைப் பார்த்தனர். அப்பிதுர்க்கள் இந்த ஜரத்காருவைப்பார்த்து, ஓ குழந்தாய்! எங்களை நீ இப்பொழுது பார்ப்பதனால் என்ன திருப்தியுண்டாகும்? நீ ஒரு கன்னிகையை விவாகஞ் செய்துகொண்டு ஒரு புத்திரனைப்பெற்று அவன் சதாசாரத்தோடு கூடியிருப்பானேயானால் நாங்கள் படும் இந்த யாதனையை விட்டுச் சுவர்க்கத்திற்குப் போவோம் என்றனர். அதுகேட்ட ஜரத்காரு, ஓ பிதுர்க்களே! எனக்கு வரப்பட்ட கன்னிகை என் பேருடையவளாயும், என் மனோரதம்போல் நடக்கப்பட்டவளாயும், என்னாலே தேடப்படாதவளாயும் வருவாளானால் நான் விவாகஞ்செய்து கொள்ளுகிறேன் என்று சொல்லிவிட்டுத் தீர்த்தயாத்திரைக்குச் சென்றனர். (5–10)

ஓ அரசனே! இவர் செய்தி இங்ஙனமிருக்க, காசிப மகரிஷி பத்தினிகளாகிய கத்துரு, விநதை என்பவர்கள் ஒரு நாள் சூரியன் குதிரையைப் பார்த்தனர். அவருள் கத்துரு விநதையைப் பார்த்து, ஓ விநதையே! இக்குதிரை எந் நிறமுடையது? உண்மையாய்ச் சொல்வாயென்றாள். அதற்கு அவள் இந்த நிறமென்று சொல்லாமல் குதிரைகளில் வெண்ணிறமுடையதுதான் சிரேஷ்டமென்று கூறினாள். அது கேட்ட கத்துரு, இக்குதிரை எந்த நிறம் என்றாள். இது வெண்ணிறந்தான் என்றாள். பின்னர் விநதை கத்துருவைப் பார்த்து, நீயும் இந்தக்குதிரையின் நிறம் இந்த நிறமென்று உண்மையாய்ச் சொல்லவேண்டும். நான் கூறியபடி வெண்ணிறமாக வில்லாவிடில் உனக்கு நானடிமையாகின்றேன் என்றாள். அப்பொழுது கத்துருவானவள் வஞ்சமன முடையவளாய் விநதையைப்பார்த்துக் கூறுகின்றாள்: ஓ விநதையே! இக் குதிரை கறுப்பு நிறமுள்ளதாக நினைக்கிறேன். அப்படியேதானிருக்கும். எனக்கு நீ வேலைக்காரியாய் ஆகவேண்டியதுதான். இதற்குச் சந்தேகமில்லை என்று சொல்லிவிட்டு, அப்புறம்போய்த் தன்னுடைய புத்திரர்களாயிருக்கின்ற சர்ப்பங்களைக் கூப்பிட்டு, நீங்கள் இந்த க்ஷணமே சூரியனுடைய குதிரையைச் சமீபித்து உங்களுடைய விஷச்சுவாலையினால் அதனுடைய ரோமங்களெல்லாம் கறுப்பாகத் தெரியும்படிச் செய்யவேண்டுமென்று கட்டளை யிட்டனள். அம்மொழிகேட்ட சர்ப்பங்களுட்சில அப்படிச்செய்ய எங்களால் முடியாதென்று சொல்லிற்று. அவ்வார்த்தையைக்கேட்ட கத்துரு கோபித்தவளாய், முடியாதென்ற நீங்களெல்லாம் ஜனமேஜயன் செய்யப்போகிற சர்ப்பயாகத்தில் வீழ்ந்திறக்கக் கடவீர்களென்று சபித்தனள். ஏனைய சர்ப்பங்களெல்லாம் தாய்சொற்றுறக்கக் கூடாது, அவளுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணவேண்டு மென்றெண்ணி ஆகாயத்திற்றாவி சூரியனுடைய குதிரையின் வாலைச்சுற்றிக் கொண்டு தங்களுடைய தேககாந்தியினாலே கறுப்புநிறமாகத் தோன்றச் செய்தன. அதுகண்ட கத்துரு, மனமகிழ்ந்தவளாய் விநதை

பால் சென்று, ஓ! விநதையே ! நீ சூரியனுடைய குதிரையை வெண்ணிற மென்றாய் ; யான் கறுநிற மென்றேன். இப்பொழுது நாமிருவரும், அந்தக் குதிரையைப் போய்ப் பார்ப்போம் வாவென்றழைத்துக் கொண்டு குதிரையினிடஞ் சென்று, எந்த நிறமென்றாள். விநதை என் செய்வாள் ? அதிக துக்கமுடையவளாய், கத்துருவே ! உன் வார்த்தை மெய்யாயிற்று, என் வார்த்தை பொய்யாயிற்று; ஆகையால் நான் சொல்லியபடி உனக்கு இப்பொழுதே அடிமையாயினேன் என்றாள். கத்துரு தன் சபதம் முற்றியதென்றிறுமாந்து அந்த விநதையை இவ்வண்ணஞ் செய்யலாமென்பதின்றி எல்லாச் சிறுமைகளும் அவள் பாலாக்கிச் சிறைப்படுத்தினள். (11–18)

இவ்வாறு விநதையானவள் சிறையிடப்பட்டுத் துயருறுங் காலத்தில் சர்ப்பங்களை ஆகாரமாகவுடைய மஹாபலிஷ்டனாகிய கருடன் இந்த விநதையின் மகனாதலால் ஒரு நாள் தன் தாய் படுங் கஷ்டத்தைப்பார்த்து மனமாற்றாது ஒரு வார்த்தை கூறுகிறான்: ஓ என் அன்னாய் ! நீ மிகவுந் தீனையாய் அழுகின்றவளாய்க் காண்கின்றனை ; நானும், சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணனும் ஜீவித்துக்கொண்டிருக்கும் பொழுது நீ துக்கப்படவேண்டிய காரணமென்ன ? புத்திரரிருக்கத் தாய் துக்கிப்பாளேயானால் அப் புத்திரராலென்ன பயன் ? இனி எங்களைச் சுடவேண்டும். ஓ ! மாதாவே ! உனக்குத் துக்கம்வந்த காரணத்தைச்சொல். அதனை நான் நிவிர்த்திக்கிறே னென்றனன். அவன் தாயாகிய விநதை கூறுகின்றாள் : குழந்தாய் ! உன் பெரியதாயாகிய என் சக்களத்திக்கு நான் அடியாளாயினேன். அவளால் நானடையும் சிறுமை என்னென்று சொல்லுவேன்? இதற்கு நீ என்செய்வாய் ? நீ எடுத்துக் கொள்ளும் கஷ்டம் வீணாகும். இப்பொழுது அவளை நான் தூக்கிக் கொண்டு, யாவருங்காண, அவள் எங்குபோகச் சொல்லுகிறாளோ அவ்விடத்துக்குப் போகவேண்டுமாம். இந்த அவமானத்துக்கு நான் என்செய்வேன் ? இதுதான் என்னை இப்பொழுது அழச்செய்கின்றது என்றனள். கருடன், என்னுடைய பெரிய தாய் எவ்விடத்துக்குத் தன்னைத் தூக்கிக்கொண்டுபோக ஆசைப்படுகின்றாளோ அவ்விடத்துக்கு நான் தூக்கிக்கொண்டு போகிறேன். இதற்காக துக்கிக்கவேண்டாம். உன்னைச் சீக்கிரத்தில் இந்தச் சஞ்சலத்தினின்று நீக்கி நிச்சலபுத்தி யுடையவளாயிருக்கச் செய்கின்றேன் என்றனன். விநதை கருடனை யழைத்துக்கொண்டு தன்னுடைய சக்களத்தியாகிய கத்துருவினிடத்திற் போாய் நின்றனள். கருடன் கத்துருவை வணங்கி, தாயே ! என்தாய் உன்னை எவ்வளவு தூரந் தூக்கிக்கொண்டு போகுஞ் சக்தியுடையவள் ? அப்பணியை யான் விரும்பி வந்தேன் ; கட்டளை யிடவேண்டுமென்றனன். உடனே பிள்ளைகளாகிய சர்ப்பங்களுடன் அக்கருடன்மீதேறிக் கடற்கரைக்குப் போவாயென்றனள். அவளெண்ணப்படியே அரைக்கணப் பொழுதில் கடற்கரையை யணுகினன். கத்துரு மகிழ்ந்தாள். அப்பொழுது கருடன் இதுதான் நல்ல தருணமென்றெண்ணி கத்துருவினுடைய தாளைப்பணிந்து, இரக்கத்திற் சிறந்த தாயே !

என்னுடைய தாயானவள் எது செய்தால் இந்த அடியாளா யிருக்குந் தன்மையினின்றுந் தடையின்றி விடுபடுவாளென்றனன். அந்தக் கத்துரு கருடனைப்பார்த்து, ஓ கருடனே! அவளொன்றுஞ் செய்யவேண்டாம். மஹாபலிஷ்டனாகிய நீ சீக்கிரமாய் இந்திர லோகம்போய் அங்கிருக்கிற அமிர்த கலசத்தைக் கொண்டுவந்து உன்னுடைய தாயைச் சிறையினின்றும் விடுவித்துக்கொள்; இதிற் சந்தேகமில்லை என்றனள். உத்தமனான கருடன் கத்துருவை நோக்கி, நீ விரும்பிய அமிர்த கலசத்தை இதோ கொண்டுவந்து விட்டேனென்று இந்திரலோகம்போய் யாவரையும் வென்று அமிர்த கலசத்தை இதோகொண்டுவந்து விட்டேன் என்று தர்ப்பையைப் பரப்பி அதன்மேல் வைத்து, தன் தாயை அடியாள் தன்மையி னின்று நீக்கிப் பின் யாதொரு சந்தேகத்திற்கு மிடமில்லாமல் அழைத்துக்கொண்டு போயினன். (19–29)

பின்னர் சர்ப்பங்க ளெல்லாம் அமிர்தங் கிடைத்த தென்று மகிழ்ந்து அதைப் பானம் செய்ய ஸ்நானத்துக்குச் சென்றன. அத்தருணத்தில் தேவேந்திரன் அந்த அமிர்த கலசத்தைக் கொண்டுபோயினன். ஸ்நானஞ் செய்துவந்த சர்ப்பங்கள் கலசத்தைக் காணாது வருந்தித் தர்ப்பைகளிற் சிதறிக்கிடந்த சிறிய திவலைகளை நாவினால் நக்கின. அப்போது தர்ப்பையினுடைய கூர்மையால் நாவிரண்டாகப் பிளவுபட்டன. இந்தச் சர்ப்பங்களுடைய செய்தி யிருக்க, இந்தக் கத்துருவினிடத்தில் சாபமேற்ற ஏனைய வாசுகி முதலிய சர்ப்பங்கள் தங்களுக்கு நேர்ந்த சாபத்தை நிவிர்த்தி செய்துகொள்ளப் பிரமனிடஞ் சென்று சரணமடைந்து, ஓ சிருட்டி கர்த்தரே! நாங்கள் ஜனமேஜயனுடைய சர்ப்ப யாகத்தில் இறந்துபோகும்படி எங்கள் தாய் சபித்திருக்கின்றாள். இதற்குப் பரிகாரம் தேவரீர் அனுக்கிரகிக்க வேண்டு மென்று பிரார்த்தித்தன. பிரமன், ஓ சர்ப்பங்களே! ஜரத்காரு என்கிற மகரிஷிக்கு வாசுகியினுடைய தங்கையைக் கலியாணஞ் செய்து வையுங்கள். அவருக்கு ஆஸ்தீகனென்று ஒரு புத்திரனுண்டாவான். அவனால் இந்த மரணபயம் உங்களுக்கு நீங்குமென்றனன். வாசுகி பிரமன் கூறிய மங்கள வார்த்தையைக் கேட்டுக் கவலை நீங்கின வனாய் ஜரத்காரு என்னும் மகரிஷி இருக்கும் வனத்தைத் தேடிவந்து அவரைக்கண்டு தன் அபீஷ்டத்தைச் சொல்ல, அவர் தன்னுடைய பிதுர்க்களுக்குச் சொல்லிய வார்த்தையை எண்ணி அப்படியே யாகுகவென்று வாசுகிக்குச் சொல்லிவிட்டுப் பின்னர் அந்தக் கன்னிகைக்குத் தன் பெயரிட்டிருப்பதையுந் தெரிந்து மகிழ்ந்து மறுபடியும் அந்த வாசுகியைப் பார்த்து, ஓ வாசுகீ! இந்தக் கன்னிகை எப்பொழுது எனக்கு அப்பிரியத்தைச் செய்வாளோ அப்பொழுது இவளை விட்டுவிடுவேன்; இதுவேதான் பிரமாணமென்ன, வாசுகி அதற்குடன்பட்டவனாய்த் தன் தங்கையைக் கலியாணஞ் செய்து கொடுத்து சீதனம் முதலியனவுஞ் சிறப்பாகக் கொடுத்துத் தன் னிடம் வந்து சேர்ந்தனன். (30–37)

சத்துரு காதகனாகிய ஓ ஜனமேஜயனே! பின்னர் ஜரத்காரு

அதி பயங்கரமான அந்தக்காட்டில் ஒரு பர்ணசாலை அமைத்துத் தன் பத்தினியோடு லீலா விநோதராய் வாழ்ந்து வந்தனர். ஒரு நாள் பகற்பொழுது போஜனஞ் செய்தபின்னர் சுகமாய் நித்திரை செய்யவேண்டு மென்கிற எண்ணமுடையவராய்த் தன் சமீபத்தி லிருக்கும் மனைவியைப் பார்த்து, ஓ பெண்கள் நாயகமே! இன்று எனக்கு நித்திரையில் அதிக விருப்பமிருக்கிறபடியால் என்னை எழுப்பவேண்டியதாக எந்தக் காரியம் வந்தபோதிலும் நீ என்னை எழுப்பி நித்திரையைப் பங்கஞ் செய்யவேண்டாமென்று சொல்லி விட்டு அசைவின்றி நித்திரை செய்தனர். சந்தியா காலம் வந்தது; அதனைக்கண்ட மனைவி சந்தியாவந்தனஞ் செய்யுங் காலம் வந்து விட்டதே; இப்பொழுது எழுப்பாமற் போவோமானால் மஹாபாதகம் உண்டாகுமே. இவரோ நித்திரையில் அதிக பிரியமுடையவரா யிருக்கின்றே னென்றாரே; எழுப்புவோமானால் இவரது பிரியத்தைக் கெடுத்தவளாவோமே; அப்படி யாவோமானால் நம்மை நீக்கிவிடுவா ரல்லவா? இந்த வார்த்தையை நம்முடைய தமையனிடத்தில் பிரமாணமாகச் சொல்லியுமிருக்கிறாரல்லவா என்று பலவிதமாக ஆலோசித்துத் தருமத்தைக் கெடுப்பதில் பயந்தவளாகிய அப் பெண்மணியானவள் சந்தியாகாலம் வீணாய்ப்போவதாகிய தரும நாசத்துக்கு நாம் ஆளாயிருப்பதைப் பார்க்கிலும் அவருடைய பிரியத்துக்கு விரோதியாய் நாம் அவரால் விலக்கப் பட்டுப்போவது பாதகமன்று, மேலாகும்; நமக்குப் பிரிவுவந்த காலத்தில் மரண மடைந்து போவது அதனினும் மேலாகும்; தரும ஹானியானது மனிதருக்கு நரகத்தை யுண்டுபண்ணத் தக்கது என்று தருமங்களை எண்ணி தனது நாயகனை எழுப்புவதே சரியென்று, ஓ விரதா னுஷ்டானசீலரே! சந்தியாகாலம் வந்துவிட்டது; எழுந்திருமென்று எழுப்பினள். (38–44)

அம் மகரிஷி அதிக கோபத்துட னெழுந்து அக்கன்னிகையைப் பார்த்து, நீ என் சொற்றவறி நித்திராசுகத்தைக் கெடுத்தபடியினால், இனி என்னுடனிருக்கத் தகுதியுடையவளாகாய்; உன் தமைய னிடஞ் செல்லக்கடவாய்; நான் போகின்றேனென்ன; அக்கன்னிகை நடுக்கமுற்று, அளவிறந்த தேஜஸோடுங்கூடிய பிரபாவத்தை யுடையவரே! என் தமையன் என்ன பயனை விரும்பி என்னை உமக் குக் கொடுத்தாரோ அந்தச் சந்தானப் பிரயோசனம் இப்பொழுது எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே யென்றனள். அதுகேட்ட மஹரிஷி வேறொன்றுஞ் சொல்லாது "*அஸ்து" என்று சொல்லிவிட்டு மனையாட்டியின் பிரிவை ஒரு சிறிதும் எண்ணாது வனத்தை நாடிச் சென்றனர். அக்கன்னிகை தன் தமையனாகிய வாசுகியினிடம் போய்ச்சேர, வாசுகி அவளைப் பார்த்து உன் நாயகர் உனக்கு என்ன சொல்லி உன்னைவிட்டுப் பிரிந்து போயினரென்ன, கன்னிகை, என் நாயகர் "அஸ்து" என்ற சொல்லைச் சொல்லி விட்டுப் போயின ரென்றாள். வாசுகி அச்சொல்லைக் கேட்டுத் தன் தமக்கையை மிகவும் பிரியத்தோடு காப்பாற்றி வருங்காலத்தில்

* அஸ்து - இருக்கிறது

மாதத்துக்கு மாதம் கர்ப்ப சின்னங்களெல்லாம் மேலிட்டுப் பத்தா மாதத்தில் இந்த ரிஷியைப் பெற்றனள். ஓ குருவம்ச திலகனே! இந்த மஹரிஷியினுடைய பிதா சொல்லிய "அஸ்து" என்கிற சொல்லே இவருக்கு நாமகரணமாக "ஆஸ்தீகர்" என்று பிரசித்தி பெற்றிருக்கின்றனர். (45–50)

இம் மகரிஷி தன் தாய்வர்க்கம் சர்ப்பங்க ளாதலால் தன் தாய் நிமித்தம் உன் யாகத்தில் வீழ்ந்திறக்கவேண்டிய சர்ப்பங்களைக் காப்பாற்றினரென் றறியக்கடவாய். ஓ அரசனே! உன் யாகத்தில் சில சர்ப்பங்கள் வீழ்ந்திறந்ததற்குக் காரணம் காசிப ரிஷியினுடைய மனைவியாகிய கத்துருவானவள் தன் சொல்லைக் கடந்தன வென்றிட்ட சாபமெனவும், சில சர்ப்பங்கள் இறவாமல் பிழைத்ததற்குக் காரணம் பிரமதேவனுடைய அனுக்கிரகமென்றும் அறி. இக்காரணங்களை அறிந்த நீ இந்த ஆஸ்தீகரிடத்தில் குரோதம் வைப்பதற்கிடமேது? ஆகையால் இவரை நீ நன்ருய்ப் பூஜிக்க வேண்டும்; உனக்கு க்ஷேமம் உண்டாகுக. (51–52)

ஓ பூபாலனே! ஒரு வார்த்தை சொல்லுகிறேன், அதனை யூகிக்கக்கடவாய். இதுவரையில் பாரதமாகிய ஐந்தாம் வேதத்தைச் சாங்கோபாங்கமாகக் கேட்டனை. அநேக தானங்களைச் செய்தனை. அநேகம் பெரியோர்களை வழிப்பட்டனை. இதுபோன்ற அநேக புண்ணியகிருத்தியங்களைச் செய்துவந்தனை. இவையாவுஞ் செய்தனுயிருந்தும் உன்னுடைய பிதா சுவர்க்கத்தை யடைந்தானில்லை. உன்னுடைய குலமும் பவித்திரத்தை யடையவில்லை. ஆகையால் பக்தியோடும் மஹாதேவிக்குப் பெரிய ஆலயமொன்று உண்டாக்கி அதில் தேவியைப் பிரதிஷ்டைசெய்து பேரன்போடு அருச்சனையாதிகளை உபசாரத்தோடு செய்வையே யானுல் உனக்குச் சகல சித்தியையும், சகல சம்பத்தையும், எப்பொழுதும் மங்களத்தையும், குலவிர்த்தியையும், அழிவில்லாத ராஜ்ய சம்பத்தையும் அவள் உண்டாக்குவாள். தேவியைக் குறித்து யாகஞ் செய்வதனுல் எந்த பலனுண்டாகுமோ அந்தப் பலனை கொடுக்கத்தக்க உத்கிருஷ்டமாகிய ஸ்ரீமத் தேவீ பாகவத மென்னும் புராணத்தைக் கேட்பாயாக. அது மிகவும் பரிசுத்தமாயும் ஜனனமரண துக்கங்களைப் போக்குவதாயும் திவ்யமாயும் அநேக விதமான ரசங்களோடு கூடினதாயுமுள்ளது. அக்கதைகளைக் கேட்க நன்ருய்ச் சொல்லுகின்றேன்.

உலகில் இப்புராணமே கேட்கத்தக்கது; இதர புராணங்கள் கேட்கத்தகாதவை. தேவியினுடைய மலர்போன்ற திருவடியே ஆராதனைக்குரியது; ஏனையவெல்லாம் ஆராதனைக்குரியவையாகா; எவனுடைய பக்தியினுல் நிறைந்திருக்கின்ற சித்தத்தில் தேவி வாசஞ்செய்யப்பெற்ருளோ அவன்தான் நல்ல பாக்கியத்தையும் நல்ல ஞானத்தையு முடையவனுவன். ஓ பரதவம்ச திலகனே! எவன் மகா மாயாசொரூபியான அம்பிகையை ஆராதிக்கவில்லையோ அவன் மிகவும் துக்கமுடையவனுய் உலகில் காணப்படுகிருன். பிரம்மாதி சகலதேவரும் தேவியை ஆராதிக்க வேண்டு

மென்ற எண்ணத்துடனிருக்கிற ரென்றால் தேவியை எவன்தான் வழிபட மாட்டான்? ஓ அரசனே! தேவியினால் விஷ்ணுவுக்கு உப தேசிக்கப்பெற்றதும், உத்தமமான இப்புராணத்தை எவனொருவன் கேட்கிறானோ அவன் அழிவில்லாத எல்லா மங்களங்களையும் அடை கிறானென்று கூறியிருப்பதால் நீ இப்புராண சிரவண மொன்றி னாலேயே சித்தசாந்தி யடைவாய். உன்னுடைய பிதுர்க்களும் அழி வில்லாத சுவர்க்கபதத்தை யடைவார்கள். நீ அஞ்சற்க என்றனர். ஓ முனிவர்களே! எவனொருவன் இந்த உபாக்கியானத்தை நாடோறும் சிரவணஞ் செய்கின்றானோ அவன் எல்லா மனோரதங் களையுமடைகிறானென்று சூதமுனிவர் கூறியருளினர். (53–64)

இரண்டாம் ஸ்கந்தம் முற்றிற்று.

# மூன்றும் ஸ்கந்தம்

**चिन्तितफलपरिपोषणचिन्तामणिरेव काञ्चिनिलया मे ।**
**चिरतरसुचरितसुलभा चित्तं शिशिरयतु चित्सुधाधारा ॥ ३ ॥**

*" சிந்தித பலபரிபோஷண சிந்தாமணிரேவ காஞ்சிநிலயா மே*
*சிரதரஸுசரித ஸுலபாசித்தம் ஶிஶிரயது சித்ஸுதாதாரா "*

ஓம் லப்த தியே நம:

## 1. தேவீ சொரூப நிர்ணயம்

சூதர் கூறுகின்றூர்: ஓ! ஸர்வகலா ஸம்பன்னர்களாகிய சவுனகாதி மஹரிஷிகாள்! ஜனமேஜயமஹாராஜன் வியாசரை வணங்கி, தேவரீர் அம்பாபிதம் (தேவியைக்குறித்த யாகம்) ஒன்று செய்வாயென்று கட்டளையிட்டீர். அந்தயாகம் எவ்வண்ணமுண்டா யிற்று? அது யாது? எதனிடத்தினின்றும் எவ்வண்ணமுண்டா யிற்று? அதனுடைய குணமென்ன? அது எப்படிப்பட்டது? அத னுடைய சொரூபமெப்படிப்பட்டது? அது செய்யவேண்டிய விதி எப்படிப்பட்டது? நீர் தயாநிதியாயும் சர்வஜ்ஞராயு மிருப்பதால் இவற்றைச் சாங்கோ பாங்கமாகச் சொல்லியருளல்வேண்டும். இதுவன்றியும் பிரமாண்டவுற்பத்தியை விஸ்தாரமாய் எவ்வண்ணங் கேட்டறிந்திருக்கின்றீரோ அதனையும், ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரம் என்னு முத்தொழிலுடையவராயும், ஸகுணசொரூபராயுமிருக்கிற இந்த பிரம விஷ்ணு ருத்திரர் ஸ்வதந்திரரென்றும், மகாத் மாக்களென்றும் தேவர்களிற் சிறந்தவரென்றும், ஸச்சிதானந்த சொரூபிகளென்றுங் கேட்டிருக்கின்றேன். கேட்டவனேயாயினும், அவர்கள் மரண தருமத்தோடு கூடினவர்களல்லவா? ஆத்யாத்மிகம் ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம் முதலிய துக்கங்களோடு கூடினவர் களல்லவா? காலதத்துவத்துக்கு சுவாதீனப்பட்டவர்களல்லவா? சுக துக்கங்களோடு கூடினவர்களல்லவா? நித்திராலயங்களோடு கூடினவர்களல்லவா? உதிரம் முதலிய ஸப்த தாதுக்களோடு கூடிய சரீரத்தையுடையவர்களல்லவா? இவைகளெல்லா முடையரா, அல்லரா? இவர்வேறு எவ்வித குணமுடையவர்? எந்த இந்திரியங் களோடு கூடினவர்? அவர்களுடைய போகம் எப்படிப்பட்டது? ஆயுள் பிரமாணம் எவ்வளவு? வசிக்குமிடமெது? அவர்களுடைய லீலாவிபூதி என்ன? இவையனைத்தும் இப்பொழுது யான் கேட்க வேண்டுமென்கிற ஆவலுடையவனு யிருக்கின்றேனுகையால் தேவரீர் சொல்லியருளல்வேண்டுமென்று ஜனமேஜய மஹாராஜன் விண்ணப்பஞ்செய்தனன். வியாசபகவான்கேட்டு மகிழ்ந்தவராய்க் கூறுகின்றூர்: (1-10)

ஓ! நுண்ணிய அறிவுடைய அரசனே! இப்பொழுது உன்னுலே கேட்கப்பட்டவை எவையோ அவையெல்லாம் மிகவும் அருமை

யானவை. யாவருக்கும் புலப்படாதவை. இக்கேள்விகளையே பூர்வத்தில் நான் பிரம்மபுத்திரராயும், மஹா மேதாவியராயும் விளங்கும் நாரத முனிவரைக் கேட்டேன்; அவர் நகைத்து சில சொல்லிப்போயினர். பின்னர் ஒருகால் கங்கா நதிக்கரையில் சாந்தராயும் சர்வக்ஞராயும் வேதவித்துக்களுட் சிறந்தவராயுமிருக்கின்ற அந்த நாரதர் வரக்கண்டு மனக்களிப்படைந்து அவரை யணுகி திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவருடைய ஆஜ்ஞையின்பேரில் ஓர் அரிய ஆசனத்திலிருந்து க்ஷேமாதிசயங்களை வினவிப் பின்னர் என்னுடைய சந்தேகங்களெல்லாம் வினவலுற்றனன். ஓ அரசனே! இன்னும் உனக்குச் சந்தேகம் ஏதேனுமுளவேல் அதனையுங் கூறுவாயாகவென்ன, அரசன், ஓ முனிவரே! எனக்குள்ள சந்தேகம் இவ்வளவினவென்று சொல்லிமுடியாது. தேவரீர் கட்டளையிட்டபடியால் விண்ணப்பிக்கிறேன். யான் மிகவும் விஸ்தாரமாகிய ஸம்ஸாரத்தில் விகற்பகோடிகளைச் செய்து கரையேறமாட்டாது தடுமாறுவதுபோல் சந்தேகமென்கிற கடலில் மூழ்கி நிலைகாணாது மயங்குகிறேன். அதனைப்போக்கிக் கரையேற்றவேண்டும். என்னையெனில் எதனிடத்திலிருந்து பிரமனுதியருடைய உற்பத்தி? இப்பிரமாண்டம் எங்கிருந்துண்டாயிற்று? விசாலமாகிய இப்பிரமாண்டத்துக்கு முக்கியமான கர்த்தா யார்? இஃது ஒரே கர்த்தாவையுடையதா? அநேக கர்த்தாக்களையுடையதா? கர்த்தாவே இல்லாததா? காரியப்படுவதா? காரியப்படாததா? இது நித்தியமா? அநித்தியமா? (இதுவன்றியும்) சிலர் ஸதாசிவமாயும், மஹாதேவனுயும், சங்கரனுயும் விளங்கும் சிவபெருமானை, காரண அகாரணனுகவும், உற்பத்தி நாசமில்லாதவனுகவும், சுரேசனுகவும், திரிகுணசொரூபனுகவும், நிர்மலனுகவும், ஹரனுகவும், ஸம்ஸாரதாரகனுகவும், நித்யனுகவும், சிருஷ்டி ஸ்திதி, லயங்களுக்குக் காரணனுகவுஞ் சொல்லுகின்றூர்கள். சிலர் விஷ்ணுமூர்த்தியை, எல்லாருக்கும் பிரபு வென்றும் ஈஶ்வரன், பரமாத்மா, நாசமில்லாதவன், சர்வசக்திகளோடு கூடினவன், போக மோக்ஷ பதங்களைக் கொடுக்கின்றவன், சாந்தன், எல்லாவற்றிற்கும் ஆதியானவன், எங்கும் பார்வையுடையவன், வியாபகன், பிரபஞ்சத்தினுல் சரணமடையத்தக்கவன், அநாதியானவனென்று கூறுகின்றனர். சிலர் பிரம்மாவை, "தத்" என்கிற பதத்துக்குரிய பரமாத்மசொரூபன், சிருட்டிகாரணன், ஸர்வவேத்தா (எல்லாமறிந்தவன்), ஸர்வ பூதப்பிரவர்த்தகன், சதுர்முகன், சுரேசானன், நாபீபத்மபவன், விபு, ஸர்வலோக சிருஷ்டா, ஸத்தியலோகவாசி என்று கூறுகின்றனர். வேதவித்துக்களான இன்னுஞ் சிலர் சூரியனை சர்வேஶ்வரனென்று காலை மாலைகளிற் சோம்பலில்லாதவர்களாய்த் தோத்திரமும் கானமும் செய்கின்றூர்கள். சிலர் சதகிருது (நூறு யாகஞ் செய்தவன்) ஆகிய இந்திரனை ஆயிரங்கண்ணன், தேவதேவேசன், யாவருக்கும் பிரபு, யஜ்ஞங்களால் பூஜிக்கத்தக்கவன், தேவர்களால் பூஜிக்கத்தவன், திரிலோகாதிபதி, யஜ்ஞபோக்தா, சோம்ப என்றும் யாகஞ் செய்கின்றவர்களிடத்தில் பிரீதியுடையவன் என்று

யாகமுகத்தில் துதிக்கின்றனர். சிலர் அவ்வண்ணமே வருணனையும், சோமனையும், அக்கினியையும், வாயுவையும், தனத்தைக் கொடுக்கிற குபேரனையும், சிலர் சர்வகாரியசித்தியை யுண்டுபண்ணத் தக்கவராயும், நினைத்த மாத்திரத்தில் அணிமாதி சித்திகளைச் சித்தி பண்ணுகிறவராயும், எல்லாராலும் விரும்பப்பட்டவராயும், விரும்பின பொருளைக் கொடுப்பவராயும், விரும்பினவருள்ளத்தை யடைகிறவராயும், யானை முகத்தையுடையவராயும் விளங்கும் விநாயகரையும், பரம்பொருளென்று சொல்லுகின்றனர். சில பெரியோர்கள் பவானியைச் சகல சம்பத்தையும் கொடுக்க வல்லவ ளென்று சொல்லுகின்றனர். பலாபேக்ஷையுடைய சிலர் ஆதிமாயை யாகிய மகாசக்தியே பிரகிருதி ஜீவர்களை அநுசரிக்கின்றவள், பிரம்மைக்கியமா யிருக்கின்றவள், அவளே சிருஷ்டி திதிலய காரணி, சர்வ பூதகாரணி, சர்வபூதங்கட்கும் மாதா, அநாதியான வள், நாசமில்லாதவள், பரிபூரண வியாபினி, ஸர்வலோகங்கட்கும் ஈச்வரி, நிர்க்குணை, ஸகுணை, சிவை, வைஷ்ணவி, சங்கரி, பிராம்மி, வாஸவி (இந்திராணி), வாருணி, வராஹி, நாரசிம்மி, மஹாலக்ஷ்மி, வேதமாதா, ஏகை, வித்தை, பவதரை (பிறவியை நிவிர்த்திசெய்கின்றவள்) சாச்வதை, ஸர்வதுக்கங்களையும் போக்கடிக்கிறவள், போககாமிகள் ஸ்தோத்திரஞ் செய்தமாத்திரத்தில் ஸர்வபோகங்களையும் கொடுக்கிறவள், மோக்ஷகாமிகளுக்கு மோக்ஷத்தைக்கொடுப்பவள், யார் எந்தப் பலனை யபேக்ஷிக்கின்றார் களோ அந்தப்பலனை யுண்டுபண்ணுகிறவள், திரிகுணாதீதரூபை, அநேக குணங்களை யுடையவள், நிர்க்குணை, ஸகுணை என்று தியானஞ்செய்கின்றார்கள். முனீச்வரர்கள் பிரம்மத்தை, நிரஞ்ஜனம், நிராகாரம், நிர்லேபம், நிர்குணம், அரூபம், வியாபகம், என்று சொல்லுகிறார்கள். சிலர் வேதோபநிஷத்துக்களில் தேஜோ மயமாயுள்ளதே பரமென்று சொல்லப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். சிலர் அந்தப் பரமபுருஷன் அநேக சிரசுகள், அநேக முகங்கள், அநேக கண்கள், அநேக காதுகள், அநேக கைகள், அநேக கால்க ளோடு கூடினவனென்றும், உத்தமமான விஷ்ணுபதமென்றும், விராஜம் (பிரகாசமுள்ளதென்றும்), ரஜோகுணமில்லாததென்றும், சாந்தமுள்ளதென்றும், சொல்லுகிறார்கள். பெரியோரான சிலர் புருஷோத்தமனே என்று சொல்லுகிறார்கள். சிலர் பிரபுவாகிய ஈச்வரன் ஒருவன்தானென்றும், சிலர் இந்தப் பிரமாண்டமெல்லாம் ஈச்வரனையுடையதல்ல வென்றும், சிலர் மனத்துக்கு எட்டாததாகிய அந்த ஜகத்து ஈச்வரனிடத்திலிருந்துண்டானதென்றும், இந்த ஜகத்து ஈச்வரனைக் கர்த்தாவாகவுடையதன்று என்றும், இந்த ஜகத்து தனக்குத்தானே உண்டானது என்றும், ஜகத்துக்குப் புருஷனும் கர்த்தாவன்று, பிரகிருதியும் கர்த்தாவன்று என்றும், சாங்கியரும் கபிலர் முதலிய ரிஷிகளும் சொல்லுகிறார்கள். இவை களும் இவைபோன்ற சில பக்ஷங்களும் சந்தேகங்களை பலவாக உண்டு பண்ணுகின்றன. (11–45)

ஓ! முனீச்வரரே! என் மனம் இவ்விதமான வேற்றுமைகளால்

நாசத்தை யடைகிறது, என்ன செய்வேன்? இது வன்றி என் மனம் தர்மாதர்ம விசாரத்திலும் ஸ்திரத்தையடையவில்லை. தர்மம் எது? அது எப்படிப்பட்டது? தர்மத்தினுடைய லக்ஷணம் எப்படி? யாதொரு அடையாளமுங் காணப்படவில்லை. ஏனென்றால் சர்வகுண சம்பன்னராயும், சத்தியதர்ம குணங்களை யுடையவராயுமிருக்கின்ற தேவர்களும் பீடிக்கப்படுகின்றார்கள். பாபோத்பந்நராயும், அதர்ம மார்க்கத்தி லிருப்பவராயுமிருக்கின்ற தானவர்களும் பீடிக்கப்படுகின்றார்கள். என்னுடைய வம்சத்திலுண்டானவராயும், தருமமார்க்கப் பிரவர்த்தகராயும், ஸதாசாரத்தோடுங் கூடினராயுமிருந்த பாண்டவர்களும் அநேகவிதமான துக்கத்தை யடைந்தனர். இவ்வாறு யாவரும் துக்கத்தையே யடைந்தவர்களாகக் காணப்படுகையால் தருமம் என்ன சிறப்புடையது? அதர்மம் என்ன இழிவுடையது? ஆகையால் என்னுடைய மனது இவ்விதமான சமயத்தில் மிகவும் அலைகிறது. ஓ முனிவரே! நீர் சமர்த்தராகையால் என்னுடைய மனதிற் றோன்றியிருக்கும் இச்சந்தேகங்களெல்லாம் சிறிது மில்லாமற் செய்யும். அஞ்ஞானமென்கிற கலங்கிய ஜலமயமாகிய ஸம்ஸாரஸாகரத்தில் மக்னனாய் வீழ்ந்து கிடக்கின்ற என்னை ஞானமாகிய தெப்பத்தி லேற்றிப் பிழைக்கச்செய்வீர் என்றனர். (46–50)

ஓம் லப்த வாஞ்சிதாயை நம:

## 2. பிரம்மாதியர் பயணம்

வியாசர் கூறுகின்றார்: ஓ பெருந்தோளனே! நீ எந்தெந்தக் கேள்விகளை இப்பொழுது கேட்டனையோ, அவையெல்லாம் நான் முன்னர் நாரதரைக் கேட்டிருக்கின்றேனென்றேனல்லவா? அவர், ஓ வியாசரே! இப்பொழுது உமக்கு என்ன சந்தேகங்கள் தோன்றிக் கவலைக்கிடஞ் செய்கின்றனவோ, அவைகள் பூர்வத்தில் எனக்குந் தோன்றிப் பெருவெள்ளமாய் என்னை யலமறச்செய்தன. அவற்றைப்போக்க பிரமலோகமடைந்து என்னுடைய பிதாவாயும், மஹாதேஜஸ்வியாயும் பிரகாசிக்கும் பிரம்மாவைப் பணிந்து, ஓ பிரபஞ்ச சொரூபியே! ஜகந்நாயகனே! இப்பிரமாண்டம் எங்கிருந்து தோன்றியது? இது உம்மால் உண்டாக்கப்பட்டதா? விஷ்ணுவினு லுண்டாக்கப்பட்டதா? அல்லது ருத்திரராலே உண்டாக்கப்பட்டதா? உங்கள் மூவருள் பூஜிக்கத் தக்கவரும் ஸர்வசிரேஷ்டரும், ஸர்வ வியாபகருமாயுள்ளவர் எவர்? இவற்றுக்கு விடை கூறும். கூறுவதிலெனக்குச் சந்தேகந் தோன்றுதிருக்க வேண்டும். யான் துக்கரூபமாயும் பொய்யானதாயுமிருக்கின்ற ஸம்சாரபந்தத்தில் மூழ்கினவனுகை விருக்கின்றேன். என் மனமோ சந்தேகமென்கின்ற ஒரு சிவிகையின் மேலேறி நிலைபெருது தெப்பம்போ லலைகின்றது. நாடோறுஞ் செய்வதாகிய தீர்த்த ஸ்நாநங்களாலேயும் வேதாத்தியயனங்களாலேயும், இதுபோன்ற

பல சத்கருமாதிகளாலேயும், உபசாந்தியடைகிறதில்லை. ஏனென்ருல் என் மனமானது யாரைத் தியானிக்கின்றது, யாரைச் சரணுகதியடைகிறது? யாரைப் பத்திர புஷ்பங்களால் அருச்சிக்கிறது, யாரைத் தோத்திரஞ் செய்கிறது, ஜகத் காரணர்களாயிருக்கின்ற கர்த்தாக்களுக்கு ஈஶ்வரனுகவிருக்கின்றவர் யார் என்று நானுத்வமாய் விரிந்து ஒன்றிலுந் தெளிவின்றி ஒன்றைப்பற்றிச் செய்யுஞ் செயலுமின்றி வருந்துகின்றது, என்று கேட்டேன். ஓ சத்யவதியினுடைய புத்திரரே! நான் கேட்டதாகிய இக் கேள்விகள் சாமான்யர்களால் சொல்லக்கூடியவையா? அன்று. ஸர்வலோக சிரேஷ்டராகிய பிரம்மாவானவர் என்னைப் பார்த்து விடை கூறத் தலைப்பட்டனர் : (1–10)

ஓ நாரதா! இந்த உத்தமமாகிய கேள்விகளினுடைய நிச்சயார்த்தம் என்னுலும் விஷ்ணுமூர்த்தியாலும் அறியக்கூடாததாயிருக்க இது விஷயத்தை உன்னுலே அறியக்கூடியதா? அதனுண்மையை நான் என்ன சொல்லப்போகிறேன்! ஆயினும் ஒருவாறு தெரிந்தவளவிற் சொல்லுகிறேன். ஓ அறிவிற் சிறந்தவனே! ஸம்ஸாரத்தில் ஆசையுடையவன் இவ்வுண்மையை யறியமாட்டான். ஆனல் அறியத் தக்கவன் யாவனென்ருல் தாபத்திரயமில்லாதவனும், பற்றற்றவனும், விரக்தனுமா யுள்ளவனெவனே அவனே யறியத்தக்கவன். பூர்வத்தில் வெள்ளமாகத் தோன்றிய ஓர் ஜலப்பிரளயத்தில் தாவர ஜங்கமங்களெல்லாம் நாசத்தை யடைந்தன. அப்பொழுது கமலத்திற் பிறந்த நாஞெருவன்தானிருந்தேன். சந்திர சூரியர்களையும் விருக்ஷசமூகங்களையும் பர்வதாதிகளையும் பார்க்கவில்லை. அச்சமயத்தில் நான் அக்கமலப் பொகுட்டிலிருந்து மனதிலொருவிதமாகச் சிந்தித்தேன். மஹார்ணவமாயிருக்கின்ற இவ்வெள்ளத்தில் நாம் யாவராலுண்டாக்கப்பட்டோம்? நம்மை இவ் வெள்ளத்தில் காக்கின்றவர் யார்? யுகமுடிவில் நம்மை யொடுக்கிக் கொள்ளுகிற பிரபு யார்? பூமியானது இப்பொழுது தோன்றவேயில்லை; இவ்வெள்ளம், எதனை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது? நமக்காதாரமாயுள்ள இந்தப் பங்கஜமும் எதனை ஆதாரமாகக் கொண்டு தோன்றியது? பங்கஜத்துக்கு மூலம் சேரல்லவா? அதற்கு மூலம் பூமியல்லவா? ஆகையால் நாம் பூமியைக் கண்டு பிடிப்போமானல் சேற்றையுங் காணலாம். நாமிதனைக் கண்டு பிடிக்கவேண்டியது அவசியந்தானே என்று நிச்சயித்துப் பூமியினெல்லையைக் காணவேண்டி அவர்களால் அவ்வெள்ளத்தைத் தாண்டித்தாண்டி அநேக ஆண்டாகச் சென்றும் பூமியைக் காணுமற்போயினேன். அப்பொழுது ஆகாயத்தில் நீ தவஞ்செய்யக் கடவாயென்று ஒரு வாக்கெழுந்தது. அதுபோலவே நான் இத் தாமரைக் கமலத்திலேயே ஆயிரம் வருஷந் தவஞ் செய்துவந்தேன். அப்படித் தவஞ்செய்து வரும்பொழுது மீளவும்முன்போல் ஆகாயத்தில் நீ சிருஷ்டிசெய் என்று ஒரு வாக்குண்டாயது. அதனைக் கேட்ட நான் எதனைச் சிருஷ்டிக்கிறது, ஒன்றையுங் காணேமே, என்ன செய்கிறதென்று மயங்கினேன். அப்பொழுது அதிபயங்கர

ரூபிகளான மதுகைடபரென்கிற அசுரர்கள் அதிசீக்கிரத்தி லென்னைச் சமீபித்தார்கள். அவ்வெள்ளத்தில் யுத்த நிமித்தமாய்ப் பீடிக்கப்பட்டேன். பின்னர் நான் தாமரையின் நாளத்தைப் பிடித்துக் கொண்டு வெள்ளத்திலிறங்கினேன். அவ்விடத்தில் பரமாற்புதனையும், மேகஶ்யாமள வர்ணனையும், பீதாம்பரதாரியாயும், சதுர் புஜராயும், சேஷ சயனராயும், துளபமாலை யணிந்தவராயும் சங்குசக்ரகதாபத்மதாரியாயும், ஜகந்நாதராயு மிருக்கின்ற விஷ்ணுமூர்த்தியைக் கண்டேன். அம்மகாபுருஷர் சேஷனாகிய படுக்கையில் யோகநித்திரையோடு கூடினவராய், அதில் அசைவில்லாதவராய், அதைவிட்டு நீங்காதவரா யிருக்கின்றதைப் பார்த்து, ஓ நாரதனே! அப்பொழுது எனக்கு இது செய்ய வேண்டுமென்று ஓர் அற்புதமாகிய சிந்தனை உண்டாகி நித்திரா சொரூபிணியாகிய தேவியைத் தியானித்தேன். (11–25)

சிந்திப்பதற்குக் கூடாததாயுள்ள திவ்ய தேஜஸ்வினியாயும், திவ்ய மங்களையாயுமுள்ள அந்தத் தேவியானவள் விஷ்ணு மூர்த்தியினுடைய திருமேனியினின்றும் வெளிப்பட்டு ஆகாயத்தில் பிரகாசித்து நின்றனள். அப்பொழுது திருமால் அச்சக்தியினின்றும் விடுபட்டவராய் திவ்யதேஜஸோடுங் கூடி எழுந்திருந்து மதுகைடபரோடு ஐயாயிர வருஷம் யுத்தஞ்செய்து பளபளப்போடு கூடிய கட்கத்தினாற் சங்கரித்தனர். அவர்களிறந்துபோன பின்னர் நானும் நாராயணருமாக விருந்தோம். எங்கள் மத்தியில் ருத்திரமூர்த்தியும் தோன்றினார். அப்பொழுது எங்கள் மூவராலே பார்க்கப்பட்டவளாயும், நின்மலையாயும், மனோகரையாயும், துதிக்கப்பட்டவளாயுமுள்ள மகாசக்தியாகிய தேவியானவள் சந்தோஷ சித்தர்களாயிருக்கின்ற எங்களைக் கருணைகடாக்ஷம் செய்து, ஓ பிரமவிஷ்ணு ருத்திரர்களே! இவ்வசுரர்கள் சங்கரிக்கப் பட்டார்களல்லவா? இனி நீங்கள் முயற்சியுடையவர்களாய் உங்களுக்குரிய சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களை நடத்தி, உங்களுடைய பதவிகளில் சுவஸ்த சித்தர்களாக வசியுங்கள். நீங்களே எல்லாப் பிரஜைகளையும் சராயுஜ முதலிய நான்கு பிரகாரமாகச் சிருஷ்டித்து கன்மங்களைப் போக்குங்கள் என்றனுக்கிரகஞ் செய்தனள். அந்த மஹாதேவியினுடைய சுகப்பிரதமாயும் மிருதுவாயும் ஸ்பஷ்டமாயுமுள்ள அந்த வார்த்தைகளைக் கேட்டு, ஹே அம்ப! விஸ்தாரமாயிருக்கின்ற பூமியோ காணப்படவில்லை. இந்த ஜலந்தானெங்கும் விஸ்தரித்திருக்கின்றது. பிரஜைகளெங்கே? நாங்களெப்படி சிருஷ்டிப்போம்? சிருஷ்டிப்பதற்கும் சாமர்த்தியமில்லாதவர்களாயிருக்கின்றோம் என்று அத்தேவியைப் பார்த்துச் சொன்னோம். எங்களுடைய வார்த்தையைக் கேட்டு தேவி புன்சிரிப்புடையவளாய் திவ்யப் பிரகாசத்தோடுங் கூடிய ஒரு விமானம் ஆகாயத்தினின்றும் வரச்செய்து எங்களைப் பார்த்து, நீங்கள் மூவரும் பயமில்லாதவர்களாய் இந்த விமானத்தில் நன்றாயுட்காருங்கள். இப்பொழுது சில அற்புதங்களைக் காட்டுகிறேனென்றாள். நாங்கள் மூவரும் அத்தேவியின் வார்த்தையைக் கேட்டு பிரணவாத்மகமா

யிருக்கின்ற அப்பகவதியைத் தியானித்து இரத்னகசிதமாயும், முத்துமாலைகளோடு கூடினதாயும், கண்டாமணிகளால் சப்திக்கப்பட்டதாயும் தெய்வக்கிரகம் போலுள்ளதாயும், ரமணீயமாயுமிருக்கின்ற விமானத்தில் சங்கையில்லாமல் இந்திரிய நிக்ரஹமுடையவர்களா யுட்கார்ந்தோம். அப்பொழுது தேவி தன்னுடைய சக்தியினால் ஆகாயத்தில் விமானத்தைத் தூண்டினாள். (26–40)

ஓம் லப்த பாபமநோ தாராயை நம:

## 3. புவனேஶ்வரீ தரிசனம்

வியாசர் கூறுகின்றார்: ஓ அரசனே! இனி புவனேஶ்வரியாகிய அத்தேவி அவர்களுக்குக் காட்சி கொடுத்த மஹிமாதிசயங்களைக் கூறுகிறேன், கேட்பாயாக.

மனோவேகத்தையுடைய அவ்விமானத்தைத் தூண்டவும் அது ஓரிடத்திற்போய்ச் சேர்ந்தது. அவ்விடத்தில் ஜலத்தைப் பார்க்க முடியவில்லை. விஸ்தாரமாய்ப் பரவியிருக்கின்ற பூமியையும், அதில் பத்திரபுஷ்ப பலங்களோடு கூடினதாயும், குயில்களுடைய ஓசைகள் நிறைந்துள்ளதாயும், செழுமையோடு கூடினதாயுமுள்ள விருக்ஷங்கள், பர்வதங்கள், வனங்கள், உத்யானவனங்கள், நதிகள், கானாறுகள், நடபாவிகள், கிணறுகள், தடாகங்கள், குட்டைகள் முதலியவற்றையும், மிருகங்களையும், புருஷர்களையும், ஸ்திரீகளையும், திவ்யப்பிராகாரங்களா லலங்கரிக்கப்பட்டும் அநேக கிருகங்களால் அழகுசெய்யப் பெற்றும் யக்ஞசாலைகளால் நிறையப் பெற்றும் பிரகாசிக்கின்ற, பார்ப்போரது மனத்தைக் கிரகிக்கும் ரம்யமாகிய, நகரத்தையும் அங்கு வேட்டையாடி வருகிற தேவசமானனாகிய ஓர் அரசனையும் பார்த்து, அந்தோ! ஜலமன்றி வேறறியாத நாம் இவ்வற்புதங்களை எவ்வாறு காணப்பெற்றோமென்கிற அடங்காத வதிசயமும், நாம்கண்ட இந்நகரம் மஹாற்புதமாகிய சுவர்க்கமல்லவா? இது யாராலே நிருமிக்கப்பட்டது என்கிற ஐயமும் எங்கள் மனதிற்றோன்றியது. அப்பொழுது எங்களுக்கெதிரில் அந்தரத்தில் முன் காட்சிகொடுத்த தேவி மீளவும் யாங்கள் காணக் காட்சி கொடுத்தனள். அத்தேவியைப் பார்ப்பதற்கு முன் ஆகாயத்தில் வாயுமண்டலத்தில் ஸஞ்சரிக்கின்ற எங்கள் விமானம் ஒரு முகூர்த்த காலத்துக்குள் மிகவும் மனோகரமாகிய மற்றோரிடத்திற் சென்றது. அந்த விடத்தைப் பார்த்தோம். (1–7)

அவ்விடத்தில் நந்தவனமொன்றும், அவ்வனத்தில் பாரிஜாத விருக்ஷ நிழலில் காமதேனுவும், அக்காமதேனுவினுடைய சமீபத்தில் நான்கு தந்தங்களோடு கூடிய ஐராவதமும் அவ்விடத்திலேயே ஆடல் பாடல் அபிநயங்களோடு கூடிய நாட்டிய விசேஷங்களால் கிரீடித்துக்கொண்டிருக்கிற மேனகை முதலிய அப்ஸர

ஸ்திரீகளுடைய சமூகங்களும், மந்தார விருக்ஷத்தின் மத்தியில் பாடிக்கொண்டு ரமித்திருக்கிற அநேக யக்ஷ வித்யாதர கந்தரு வரும், அவ்விடத்தில் சசி சமேதனாயிருக்கின்ற இந்திரன், வருணன், குபேரன், யமதருமன், சூர்யமூர்த்தி, அக்னி மற்று முள்ள தேவர்கள் முதலியோரும் இருக்கப்பார்த்து ஆச்சரிய முடையவராயினோம். அப்பொழுது அந்த திவ்யாலங்காரத்தோடு கூடிய சுவர்க்கத்தினின்றும் இந்திரனைப்போல் மகாதீரனாகிய ஒரு அரசன் வெளிப்பட்டு மானிடர் சஞ்சரிக்கும் பூமியில் நின் றனன். அவனை இன்னானென்று அறிவதற்குமுன் எங்கள் விமானம் மகாவேகத்தோடு மற்றோரிடஞ் சென்றது. அங்கு பிரமனுலகமும், பிரமன் சபையும், அச்சபையில் சர்வதேவதை களால் நமஸ்கரிக்கத்தக்கவனாயிருக்கின்ற பிரமனும் இருக்கக் கண்டோம். அவனைச்சூழ்ந்து வேதங்களும் வேதாங்கங்களும், தெய்வ வடிவங்கொண்டிருந்தன. இவைகளேயன்றி கடல்கள், நதிகள், பர்வதங்கள், தேவசர்ப்பங்கள், அஷ்டநாகங்கள் முதலியவைகளும் உருக்கொண்டிருந்தன. அப்பொழுது அர னாரும், அரியும் அந்தச் சபையையும், பிரமனையும் பார்த்து அதிசயமடைந்து என்னைப் பார்த்து சதுர்முகத்தோடிருக்கின்ற இந்தப் பிரம்மா யாரென்றார். அப்பொழுது சிருஷ்டி கர்த்தா வாகிய இவர் யாரோ நானறியேனென்றேன். பின்னர் நான் என்மனதில் நாமார், நமக்கு மேற்பட்டவர்களாய் நம்முட னிருக்கின்ற இந்த அரி அரர் யார்? இந்தப் பிரமனும் இவனுக்கு முன்கண்ட இந்திரனும் இவருலகமும் நமக்குத் தோன்றுகின்றன வல்லவா? இது சித்தப்பிரமையோ அல்லது உண்மையோவென்று சிந்தித்திருக்கும்பொழுது விமானம் மற்றோரிடஞ் சென்றது. (8–18)

அவ்விடம் அநேக யக்ஷர்களாலே வசிக்கப்பட்டதாயும், கிளி குயில் முதலிய பக்ஷி ஜாதிகளால் சப்திக்கப்பட்டதாயும், வீணை மிருதங்கம் முதலிய வாத்தியங்களால் கோஷிக்கப்பட்டதாயும், சுகப்பிரதமாயும், மங்களகரமாயும், ரமணீயமாயுமிருக்கின்ற ஸ்ரீ கைலாயங் காணப்பட்டது. நாங்கள் போன அச்சமயத்தில் திவ்யமங்களமாகிய ஆலயத்தினின்றும் திரிநேத்திரதரராயும், பஞ்சமுகத்தோடுங் கூடினவராயும், தசக்கரங்களை யுடையவராயும், சந்திரசேகரராயும், வியாக்ரசர்மத்தை அந்தரீயம் (இடையில்) உடுத்தவராயும் கஜசர்மத்தை உத்தரீயமாக வுடையவராயும் பிரகாசிக்கின்ற பகவானாகிய சம்பு விருஷபாரூடராய் வெளி வந்தனர். அவரது வலமிடங்களில் மகாவீரராகிய கஜானனரும் ஷடானனருமாகிய இரண்டு புத்திரரும் வந்தனர். பின்புறத்தில் நந்திதேவர் முதலிய பிரமதகணங்கள் ஜயஜய வென்று கோஷித்துக் கொண்டு வந்தனர். ஓ நாரதனே! அந்தச்சங்கரரை நாங்கள் மூவரும் பார்த்து ஆச்சரியமடைந்தோம். பின்னர் அவ்விடத்தில் பராசக்தியின் அம்சபூதங்களா யிருக்கின்ற சக்திபேதங்களைக் கண்டு ஸம்சயசித்தராயிருந்தோம். அப்பொழுது வாயுவேகத் தோடுங் கூடிய எங்கள் விமானம் அப்புறஞ்சென்றது. (19–25)

அவ்விடமோ வைகுண்டம். ஓ நாரதனே! நாராயணருடைய ஆஸ்தானமாகிய அவ்வைகுண்டத்தில் மனசினுல் இத்தன்மைத் தென்று யூகித்தற்கும் அரிதான சம்பத்துக்கள் காணப்பட்டன. ஸர்வசிலாக்கியமாகிய வைகுண்டத்தில் விமானத்திலிருந்த நாரா யணரைப்பார்த்து ஆச்சரியமடைந்தோம். அச்சமயத்தில் அங் கிருந்த கமலாக்ஷராகிய விஷ்ணுமூர்த்தி எழுந்தருளி அங்குள்ள மகாமண்டபத்தின் முன்னேவந்தனர். சாயாம்பு வண்ணராயும், பீதாம்பரதாரியாயும், சதுர்ப்புஜராயும், திவ்யாபரணலங்கிருத ராயும், கருடவாகனரூடராயும், லக்ஷ்மிதேவியினுல் சாமரை வீசப்பட்டவராயும், ஆதியாயுமிருக்கின்ற அவ்விஷ்ணு மூர்த்தியைக் கண்டோம். கண்ட நாங்கள் ஆச்சரியமடைந்து அவ்விமானத்தி லிருந்தவண்ணமாகவே ஒருவரையொருவர் பார்த்து இப்படியும் உண்டோவென்றெண்ணும்பொழுது வாயுவேகமாய் எங்கள் விமானம் மோதுகின்ற அலைகளோடு கூடினதாயும் அநேகவித மான ஜலசரங்களால் நிறைந்துள்ளதாயுமுள்ள திருப்பாற்கடலை யடைந்தது. (26–30)

அக்கடல் நடுவில் ஒரு த்வீபம் எங்களுக்குத் தூரத்தில் காணப்பட்டது. அது மந்தாரம், பாரிஜாதம், மகிழம், மருதாணி, தாழை, சண்பகம் முதலிய விருக்ஷங்களால் சூழப்பட்டதாயும், அவ்விருக்ஷங்களில் மலர்ந்த புஷ்ப கந்தங்களால் நிறையப்பெற்ற தாயும், வண்டுகளுடைய ரீங்காரத் தொனியும் குயிலோசையும் நீங்கப்பெற்றிலதாயும் விளங்கிற்று. அச்சோலையின் மத்தியில் கட்டிலொன்று காணப்பட்டது. அக்கட்டில் பரமாற்புதமாயும், மங்கள சொரூபமாயும், ரமணீயமாயும், ரத்னங்களா லிழைக்கப் பட்டதாயும் அநேகவித ரத்னமாலைகளா லலங்கரிக்கப்பட்டதா யும், ஆஸ்தரணம் (நானுவித மெத்தைகளால்) அடுக்கிடப்பட்ட தாயும் அநேகவிதமான சித்ரங்களால் சித்திரிக்கப்பட்டதாயும், இன் னும் சொல்வதற்கெட்டாத அலங்காரவகைகளால் நிறைந்துள்ள தாயும் இந்திர தனுசைப்போல் மேற் கட்டினை யுடையதாயும், நானுவிதமான திரைச்சீலைகளோடு கூடினதாயும் கோடி சூர்யப் பிரகாசமாகப் பிரகாசித்தது. (31–36)

சிலாக்கியமாகிய அக்கட்டிலில் மகாபூஜ்யையாகிய தேவீ வீற்றிருந்தனள். நாங்கள் எவ்வாறு வீற்றிருக்கக் கண்டோ மென்றால் சிவந்த நிறமுள்ள வஸ்திரமும், சந்தனப்பூச்சும் உடை யவளாயும், சிவந்த நேத்திரங்களுடையவளாயும், கோடி மின்னல்கள் மின்னுவதுபோல் பளபளப்புடன் பிரகாசிக்கின்ற தேஜோரூபியாயும், சிவந்த தந்தவரிசையோடுகூடிய அதரத்தை யுடையவளாயும், ஆநந்தகரமாகிய முகமண்டலத்தையுடைய வளாயும், கோடி லக்ஷ்மிகளை ஒப்பிடுவதற்குக்கூடாத மங்களத்தை யுடையவளாயும், சூரியபிம்பம் போலொளிவிடுகின்ற காந்தியை யுடையவளாயும், அபயம் வரதம் பாசம் அங்குசம் இவற்றை தரித்தவளாயும், ஹ்ரீங்காரமாகிய சக்திபீஜத்தை உச்சரிக்கின்ற பக்ஷிசமூகங்களோடு கூடினவளாயும், சிவந்தநிறமுடைய கருணை

மூர்த்தியாயும், பாலையாயும், புதிய யௌவனத்தை உடைய வளாயும், சர்வாலங்காரத்தோடு கூடினவளாயும், புன்னகை யோடுகூடிய முகபங்கஜத்தை உடையவளாயும், சுவர்ணமய மாகிய அங்கதம் கேயூரம் கிரீடம் முதலியவைகளால் அழகுபெற்ற வளாயும், பருத்திறுமாந்து தாமரை யரும்பைவென்று பிரகாசிக் கின்ற தனபாரங்களை யுடையவளாயும் நானாவிதமான ரத்னா பரணங்களால் பிரகாசிக்கின்றவளாயும், ஸ்ரீ சக்ரரூபமாயிருக் கின்ற தாடங்கமாகிய காதோலையினால் பிரகாசிக்கின்ற முகார விந்தத்தையுடையவளாயும், ஹ்ருல்லேகை புவனேசி என்கிற நாமங்களை யுச்சரிப்பதில் அன்புடையவர்களாயிருக்கின்ற ஹ்ருல் லேகை முதலிய நாமங்களைப்பெற்ற தேவகன்னிகைகளாலும் அனங்கசூக்ஷ்மை முதலியவர்களாலும் சூழப்பட்டவளாயும், புன்ன கையினா லலங்கரிக்கப்பட்ட வாக்குடையவளாயும், சுந்தரவதியா யும், எப்பொழுதும் யாவராலும் கண்டறியாதவளாயுமுள்ள தேவி யந்திரராஜமாய் அஷ்டகோணவடிவமாய் விளங்கும் ஸ்ரீ சக்ரமாகிய பீடத்தின்மேல் வீற்றிருக்கக் கண்டோம். அப்பொழுது நாங்கள் அந்த மகாதேவியைப் பார்த்து ஆச்சர்யமடைந்தவர்களாய் தேவி யென்றறியாது, இந்த ஸ்திரீ யார்? இவள் என்ன பேருடையவள்? ஒன்றுந்தெரியவில்லையே! அன்றியும் இந்த ஸ்திரீ ஸ்திரீயாகத் தோன்றவில்லை. அநேகமுகங்களை யுடையவளாயும் அநேக நேத்தி ரங்களை யுடையவளாயும் அநேக கரங்களையுடையவளாயும் தூரத்தில் பிரகாசிக்கின்றாள். இதிற்சந்தேகமில்லை. ஆகையினால் அவள் அப்சரஸ்திரீயுமல்லள்; கந்தர்வஸ்திரீயுமல்லள்; தேவ ஸ்திரீயுமல்லள்; இவள் யாரோவென்று சந்தேகத்தை யடைந்தவர் களாயிருந்தோம். ஓ நாரதனே! அப்பொழுது இந்த விஷ்ணு பகவான் புன்னகையோடு கூடிய அந்தத் தேவியைப் பார்த்துத் தன்னுடைய ஞானவிசேஷத்தினாலே ஜகன்மாதாவென்று நிச்ச யித்து எங்களைப் பார்த்து அத்தேவியின் பெருமையைச் சொல்லத் தொடங்கினார்: (37–50)

எங்கும் நிறைந்தவளாயும், அற்பமதியுடையவர்களால் அறிந்தடையப்படாதவளாயும், யோக நிஷ்டையினால் அறிந் தடையத் தக்கவளாயும், நம்மாலறியக்கூடாத அநுக்ரஹ சாமார்த் தியத்தை யுடையவளாயும், நித்யா நித்ய பதார்த்த ஸ்வரூபிணி யாயும், புண்ணியக் குறைவுடையவர்களால் ஆராதிப்பதற்குக் கூடாதவளாயும், தேவியென்கிற சொல்லுக்குப் பொருளாயுள்ள வளாயும், ஜகந்நாயகியாயும், நித்யமங்களையாயும், வேதங் களுக்கு உற்பத்தி ஸ்தானமாயும், விசாலமாகிய நேத்திரங்களோடு கூடினவளாயும், எல்லாப்பொருள்களுக்கும் ஆதியானவளாயு முள்ள இந்த ஈச்வரியானவள் ஜகத்பிரளயத்தில் சமஸ்தமாகிய பிரபஞ்சத்தைச் ஸம்ஹரித்து எல்லா வான்மாக்களுடைய சூக்ஷ்ம சரீரங்களைத் தன்னிடத்தி லொடுக்கிக்கொண்டு விளையாடுகிறாள். ஓ பிரமருத்திரர்களே! சர்வபீஜாட்சர சொரூபிணியாகிய இந்தத் தேவியானவள் இப்பொழுது நாம்காணப் பிரகாசிக்கின்றாள்.

தேவியினுடைய பக்கங்களில் திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டனவளாயும், பல சக்திகள் காணப்படுகின்றார்களல்லவா? அவர்களெல்லாம் அந்தத் தேவியினுடைய அம்சங்களாகும். நாம் தேவியினுடைய இந்த சொரூப தரிசனம் கிடைக்கப்பெற்றோமாகையால் தன்யராயினோம்; மஹானுபாவராயினோம்; கிருதகிருத்யராயினோம். இவ்வாறாவதற்கு நாம் பூர்வத்தில் நீங்காத முயற்சியினாலே தவஞ் செய்திருப்போம். அந்தத் தவத்தினுடைய உத்தமமான பலன் இந்த சொரூப தரிசனம் கிடைக்கச்செய்தது. இல்லாவிட்டால் இவ்வளவு பிரேமையுடன் இந்தத் தரிசனம் எப்படிக் கிடைக்கப்பெறுவோம்? ஏனென்றால், புண்ய சமூகத்தையுடையவர்களாயும், பண்டிதர்களாயும், விரதானுஷ்டான பரராயும் இருக்கின்றவர் ஒருகால் ஆசையின் வசப்படுவாரானால் அவர்கள் திவ்ய மங்கள சொரூபியாகிய இத்தேவியைத் தரிசிக்கப் பெறுவாரா? பெறார். பரசிவத்தோடு கூடியிருக்கிற இம்மகாதேவி மூலப்பிரகிருதி (காரணமாயுள்ளவள்) ஆகையினால் பிரமாண்டங்களைச் சிருஷ்டித்துப் பரமாத்மாவுக்குக் காண்பிக்கிறாள். ஓ பிரம சங்கரரே! எந்தப் பகவான் எல்லாப் பிரமாண்டங்களையும் தேவ சமூகங்களையும் படைத்துப் பார்க்கின்றாரோ அந்தப் பரமேஸ்வரருக்கு ஸர்வ சொரூபிணியாயும், மகாமாயா சொரூபிணியாயும், எல்லாவற்றிற்குந் தலைவியாயும், சர்வான்மாக்களுக்கும் மங்களத்தை நினைப்பிக்கின்றவளாயு மிருப்பவள் இந்த தேவியே. இவளுடைய பெருமையைச் சொல்ல நானெவ்வளவினன்? மற்றைய தேவர்கள்தா னெவ்வளவினர்? ஸ்ரீ தேவீ முதலிய தேவஸ்திரீகள்தா னெவ்வளவினராவர்? இந்தப் பரமேஸ்வரியினுடைய லக்ஷம் பாகத்தில் ஒரு பாகத்திற்கேனும் ஒப்பிடும் அளவினையுடையே மல்லோம். மகா சமுத்திரத்தில் நாம் முன் கண்ட சிரேஷ்டமாகிய ஸ்திரீ வடிவமுள்ள இந்த மகா தேவியே வலிமை யுடையதா யசைவற்றுக் கட்டில்போலுள்ள ஆலிலையில் முன் நான் சயனித்தவனாய்க் காற்பெருவிரலைக் கையாற் பிடித்து வாயில் வைத்துச் சுவைத்து மகிழ்கின்றவனாய் இதுபோலும் பாலப் பருவ விளையாட்டோடுங் கூடினவனாய் மிருதுவாகிய சரீரத்தை யுடையவனா யிருந்தபொழுது என்னைப் பெற்றெடுத்த தாய்போற் பார்த்து யான் கண்ணுறங்குவதற்குரிய ஊசல் முதலிய பாடல்களைப் பாடுகின்றவளாயும் ஆலிலையாகிய தொட்டிலை ஆட்டுகின்றவளாயு மிருந்தவளாமென்றறிமின். ஓ பிரமருத்திரர்களே! இப்பொழுது நிச்சயித்த ஞானமானது எனக்குத் தரிசனமாத்திரத்தாலுண்டாயிற்று. ஆகையால் இந்தத் தேவியானவள் நமக்கன்னையாவாள். இன்னமும் என்னால் முன்னனுபவிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன், கேளுங்கள் என்றனர். (37–50)

ஓம் லப்தாஹங்கார துர்க்கமாயை நம:

## 4. புவநேஸ்வரி ஸ்துதி (1)

ஓ மஹரிஷிகாள்! இதுகாறுந் தேவியினால் தூண்டப்பட்ட விமானமானது பிரமன், விஷ்ணு, ருத்திரமூர்த்தி இவர்களுடைய உலகங்களுக்குச் செல்ல அவ்விமானத்திலிருந்த பிரமன் முதலிய மூவரும் அங்கங்குள்ள அற்புத விசேஷங்களையும் பிரமாதியரையுங் கண்டதிசயித்ததும் பின்னர் தேவி பிரத்தியக்ஷமாய் வர, அவளை யறியாது மயங்கி நிற்குங்கால் விஷ்ணுமூர்த்தி அத்தேவியினுடைய பிரபாவத்தைச் சொல்லியதும் ஒருவாறு எடுத்துச் சொன்னோம். இனி அவ் விஷ்ணுமூர்த்தி அத் தேவியினுடைய புகழை எடுத்துக் கூறியதாகிய அற்புதத்தைக் கூறுகிறேன், கேட்பீர்களாக.

பகவானும் ஜகன்னாதனுமாகிய அந்த விஷ்ணுவானவர் இவ் வண்ணம் சொல்லிப் பின்னர், ஓ பிரம ருத்திரர்களே! நாமிந்தத் தேவியினுடைய பக்கங்களிலிருந்து அடிக்கடி நமஸ்கரிக்கின்றவ ராக சந்நிதானத்தை யடைவோம். பின்னர் பாதசமீபத்தில் பயமற்றவர்களாய் நின்று ஸ்தோத்திரஞ் செய்வோம். செய்வோ மாயின் மகாமாயா சொரூபிணியாகிய இந்தத் தேவியானவள் நமது அபீஷ்டங்களை நிறைவேற்றுவள். ஒரு சமயம் துவாரபாலகிகளா யிருக்கின்ற பாங்கியர்கள் நம்மை திருவடி சமீபத்திலிருக்கவொட் டாது தடுப்பார்களாயின் நாம் போகாமல் அவ்விடத்திற்றனே இருந்து ஏகாக்ரசித்தமுடையவர்களாய்த் தேவியினது ஸ்தோத் திரங்களைப் படிப்போமென்றார். பின்னர் ஆனந்தக் களிப்புடன் ஏகாக்ர சித்தமுடையவராயும் தேவியினுடைய சாமீப்யத்தை யடை வதில் மேன்மேல் சந்தோஷம் பொங்கப் பெற்றவராயும் பிரண வோச்சாரணை செய்து மூவரும் விமானத்தினின்றும் போவதற்குத் தீவிரங் கொண்டனர். அப்பொழுது தேவியானவள் தான் வீற் றிருந்த கட்டிலினின்றும் வெளிவந்து துவாரத்தை யடைந்து புருஷ ரூபமாயிருக்கின்ற எங்களைப் பார்ப்பதற்குத் திருவுளத்தில் மிகவும் சங்கையடைந்து புன்னகையோடு எங்கள் மூவரையும் ஸ்திரீ ரூப மாக்கினாள் என்று மீண்டும் கூறுகின்றார் :— (1–6)

நாங்கள் சௌந்தர்ய முடையவர்களாகவும், திவ்யாபரணாலங் கிருதராகவும், யௌவனவதிகளாகவும் ஆயினோம். பின்னர் மூவரும் ஒருவரையொருவர் பார்த்து ஆச்சரியமடைந்து தேவியி னுடைய சந்நிதானத்தைச் சங்கையில்லாமற் சமீபித்து அஞ்சலி செய்து திருவடிநோக்கமாக நின்றனம். எங்களைத் திவ்யத் திரு மேனியோடுங் கூடியிருக்கின்ற தேவி கருணை நிறைந்திருக்கின்ற கடைக்கண்ணால் கடாக்ஷித்தனள். அக்குறிப்பறிந்து நமஸ்காரஞ் செய்தோம். அப்பொழுது திருவடியைத் தாங்கியிருந்த கோடி சூர்யப் பிரகாசமா யொளிவீசும் ரத்ன பாதுகையைக் கண் டெழுந்து அப்பாதுகை நோக்கமாகவே யிருந்தோம். அப்பொழுது அங்குகண்ட அதிசயங்களைக் கூறுகின்றேன், கேட்பாயாக :—

ஓ நாரதனே! அநேகந்தோழிகள் அவ்விடத்தில் சிவந்த ஆடைகளை யுடையவர்களாயும், சிலர் நீல ஆடைகளை யுடையவர் களாயும், சிலர் பீதாம்பர ஆடைகளை யுடையவர்களாயும், சிலர் அழகுடைய சரீரங்களை யுடையவர்களாயும், சிலர் விசித்திரமாகிய ஆபரண பூஷிதர்களாயும், சிலர் சீலமுடையவர்களாயும், சிலர் அந்தத் தேவியினுடைய பணிவிடைகளை அன்புடன் செய்கின்றன வர்களாயும், பக்கங்களில் சூழ்ந்து விளங்கினர். இவர்களன்றி சில வகையான பாங்கியர் பாடுகின்றனவராயும், ஆடுகின்றவராயும், வீணை புல்லாங்குழல் முதலியவற்றை வாசிக்கின்றவராயும், ஆனந்தமேலிட்டவராயுமிருந்தனர். இவர்கள் செய்தி இங்ஙனம் நிற்க, பாதுகையோடு கூடியிருந்த தேவியின் பாதத்தில் கண்ணுடி போற் பிரகாசிக்கின்ற நகமத்தியில் அநேக கோடி பிரமாண்டங் களும், அவைகளிலுள்ள சராசரங்களும் பிரம்மாதி மூவரும், வாயு, அக்கினி, யமன், சூரியன், குளிர்ந்த வருணன், துவஷ்டா, குபே ரன், இந்திரன் முதலியோரும், மேரு முதலிய மலைகளும், விசுவா வசு, சித்திரகேது, சுவேதன், சித்திராங்கதன், ஆஹா ஊஹு முதலிய கந்தருவர்களும், அப்ஸர ஸ்திரீகளும், தும்புரு, நாரதர், அஸ்வினி தேவதைகள், வசுக்கள், சாத்தியர்கள், சித்தர்கள், பிதுர் தேவதைகள் முதலியோரும், ஆதிசேஷன் முதலிய மகா நாகங் களும் மற்றுமுள்ள ஸர்ப்பங்களும், கின்னரரும், அசுரர்களும், வைகுண்டம், பிரம்மலோகம், மஹா கைலாசம் முதலியவைகளும் சிருஷ்டியுட்பட்ட ஏனையவுங் காணப்பட்டன. இவைகளேயன்றி எனக்குற்பத்தி ஸ்தானமாகிய பங்கஜமும் காணப்பட்டது. இதில் சதுர்முகனுகிய நானும், சேஷசாயியும் ஜகந்நாதனுமாகிய நாரா யணனும், மதுகைடபரு மிருக்கக் கண்டோம். இவைகளையெல்லாம் பார்த்து மிகவும் சந்தேகமுடையவராய் ஆச்சரியமடைந்து இத் தேவியே எல்லாவற்றுக்கும் ஆதாரமாக விருக்கின்ருளென்றறிந் தோம். அதுவரையில் வருஷம் எனக்கு நூருயிற்று. அவ்வளவு காலம் தேவியினுடைய நகமத்தியிலுள்ள அற்புத விநோதங்களைப் பார்த்துக்கொண்டே அந்த அமிர்தமயமாயும் சுபகரமாயுமிருக்கின்ற அந்தத் த்வீபத்திலேயே விளையாடிக்கொண்டிருந்தேன். அப் பொழுது எங்கள் மூவரையும் தேவியினுடைய பாங்கிமார்கள் ரூப லாவண்ய சௌந்தர்யத்தோடு என்றும் அங்கிருக்கின்ற பாங்கிமார்க ளென்றே எண்ணி வேற்றுமையில்லாமல் உறவாடினர். நாங்களும் ஸ்திரீரூபத்தில் அருவருப்பில்லாதவர்களாகவே இருந்தோம். ஏனெ னில் தேவியினுடைய தரிசன விசேஷங்களும் அவ்விடத்திலுள்ள சிருங்காரமான அற்புத விசேஷங்களும் எங்களுக்குப் பெண் ணுருவம் வராமற் போகுமாஞல் காணப் பெறுவோமா? ஆகலான் மிகவும் ரமணீயமாகக் கிடைத்த பெண்ணுருவத்தில் மோஹமுடைய வர்களாகவேயிருந்தோம். இவ்வண்ணமிருக்குநாளில் ஒருநாள் விஷ்ணுபகவான் மஹாதேவியாயும் ஸ்ரீ புவனேஸ்வரியாயு மிருக் கின்ற தேவியைத் துதிக்கத் தொடங்கினர். (7–26)

நமோ தேவ்யை ப்ரக்ரித்யைஸ்ச விதாத்ர்யை ஸததம் நம: ।
கல்யாண்யை காமதாயைச வ்ருத்யை ஸத்யை நமோநம: ॥ (27)
ஸச்சிதானந்த ரூபிண்யை ஸம்ஸாராயை நமோநம: ।
பஞ்சக்ருத்ய விதாத்ர்யைதே புவனேஶ்யை நமோநம: ॥ (28)
ஸர்வாதிஷ்டான ரூபாயை கூடஸ்தாயை நமோநம: ।
அர்த்தமாத் ரார்த்தபூதாயை ஹ்ருல்லேகாயை நமோநம: ॥ (29)

ஞாதம்மயாகிலமிதம் த்வயிஸந்நிவிஷ்டம்
த்வத்தோஸ்ய ஸம்பவ லயாவபி மாதரத்ய ।
சக்திச்சதேஸ்யகரணே விததப்ரபாவா
ஞாதாஸ்துனம் ஸகலலோக மயீதிநூனம் ॥ (30)
விஸ்தார்ய ஸர்வமகிலம் ஸதஸத்விகாரம்
ஸந்தர்சய ஸ்ய விகலம் புருஷாய காலே ।
தத்வைச்ச ஷோடசிபிரேவச ஸப்தபிஸ்ச
பாஸீந்த்ர ஜாலமிவந: கிலரஞ்ஜநாய ॥ (31)
நத்வாம்ருதே கிமபிவஸ்து கதம்விபாதி
வ்யாப்யைவ ஸர்வமகிலம் த்வமவஸ்திதாஸி ।
சக்திம்விநா வ்யவஹ்ருதௌ புருஷோப்யஶக்தோ
பம்பண்யதே ஜனனிபுத்தி மதாஜநேந ॥ (32)
ப்ரீணாஸிவிஶ்வ மகிலம் ஸததம் ப்ரபாவை:
ஸ்வைஸ்தேஜ ஸாசஸகலம் ப்ரகடீகரோஷி ।
அஸ்த்யேவதேவி தரஸாகில கல்பகாலே
கோவேததேவி சரிதம்தவ வைபவஸ்ய ॥ (33)
த்ராதா வயம் ஜனனி தே மது கைடபாப்யாம்
லோகச்சதேஸுவிததா: கலுதர்ஶிதாயை ।
நீதா: ஸுகஸ்ய பவனேபரமாம்ஶகோடிம்
யத்தர்ஶனம் தவபவானி மஹாப்ரபாவம் ॥ (34)
நாஹம்பவோநச விரிஞ்சிவிவேத மாத:
கோன்யோஹி வேத்தி சரிதம் தவதுர்வி பாவ்யம் ।
கானீஹஸந்தி புவநாநி மஹாப்ரபாவே
ஹ்யஸ்மின் பவாநி சரிதேரசநாகலாபே ॥ (35)
அஸ்மாபிரத்ர புவனே ஹரிரன்ய ஏவ
த்ருஷ்டஶ்ஶிவ: கமலஜ: ப்ரதிதப்ரபாவ: ।
அன்யேஷு தேவி புவனேஷு நஸந்தி கிந்தே
கிம்வித்ம தேவிவிததம் தவஸுப்ர பாவம் ॥ (36)
யாசேம்ஸபதேஸங்க்ரி கமலம் ப்ரணிபத்ய காமம்
சித்தே ஸதாவஸதுரூப மிதம்த வைதத் ।
நாமாபி வக்தர குஹரே ஸததம் தவைவ
ஸந்தர்ஶனம் தவபதாம் புஜயோ: ஸதைவ ॥ (37)
ப்ருத்யோய மஸ்தி ஸததம்மயி பாவநீயம்
த்வாம் ஸ்வாமிநீதி மனஸானநு சிந்தயாமி ।
ஏஷா வயோரவிரதாகிலதேவி பூயாத்
வ்யாப்தி: ஸதைவ ஜனனீ ஸுதயோரி வார்யே ॥ (38)
த்வம் வேத்ஸி ஸர்வமகிலம் புவனப்ரபஞ்சம்
ஸர்வஜ்ஞதா பரிஸமாப்தி நிதாந்த பூமி: ।
கிம்பாமரேன ஜகதம்ப நிவேதனீயம்
யத்யுக்தமாசர பவாநி தவேங்கிதம் ஸ்யாத் ॥ (39)

ப்ரஹ்மா ஸ்ருஜத் யவதிவிஷ்ணு ருமாபதிஸ்ச
ஸம்ஹாரகாரக இயந்துஜனே ப்ரஸித்தி: ।
கிம்ஸத்யமேத தபிதேவித வேச்சயாவை
கர்தும்க்ஷமா வயமஜேதவ சக்தியுக்தா: ॥ (40)
தாத்ரீ தராதர ஸ்ூதேன ஜகத்பிபர்த்தி
ஆதாரசக்தி ரகிலம்தவ வைபிபர்த்தி ।
ஸூர்யோऽபி பாதிவரதே ப்ரபயாயுதஸ்தே
த்வம்ஸர்வ மேததகிலம் விரஜாவிபாஸி ॥ (41)
ப்ரஹ்மாஹ மீஶ்வரவர: கிலதேப்ரபாவாத்
ஸர்வேவயம் ஜநியுதானய தாதுநித்யா: ।
கேऽன்யேஸுரா: சதமக ப்ரமுகாஸ்சநித்யா
நித்யாத்வமேவ ஜநநீப்ரக்ருதி: புராணு ॥ (42)
த்வம்சேத்பவாநி தயஸே புருஷம்புராணம்
ஜானேऽஹ மத்யதவஸந் நிதிக:ஸதைவ ।
நோசேதஹம் விபுரநாதி ரனீஹஈமோ
விஶ்வாத்மதீ ரிதிதம: ப்ரக்ருதி:ஸதைவ ॥ (43)
வித்யாத்வமேவ நனுபுத்தி மதாம் நராணும்
சக்திஸ்த்வமேவ கிலசக்தி மதாம்ஸதைவ ।
த்வம்கீர்த்தி காந்திகமலா மலதுஷ்டிரூபா
முக்திப்ரதா விரதிரேவ மனுஷ்யலோகே ॥ (44)
காயத்ர்யஸி ப்ரதமவேத கலாத்வமேவ
ஸ்வாஹா ஸ்வதாபகவதீ ஸகுணர்தமாத்ரா ।
ஆம்நாயஏவ விஹிதோ நிகமோபவத்யா
ஸஞ்ஜீவநாய ஸததம்ஸுர பூர்வஜாநாம் ॥ (45)
மோக்ஷார்த்தமேவ ரசயஸ்ய கிலம்ப்ரபஞ்சம்
தேஷாம்கதா: கலுயதோ நனுஜீவபாவம்
அம்ஶாஅனுதி நிதனஸ்ய கிலாநகஸ்ய
பூர்ணர்ணவஸ்ய விததாஹி யதாதரங்கா: ॥ (46)
ஜீவோயதாது பரிவேத்தி தவைவக்ருத்யம்
த்வம்ஸம்ஹரஸ்ய கிலமேததிதி ப்ரஸித்தம் ।
நாட்யம் நடேனரசிதம் விததேऽந்தரங்கே
கார்யேக்ருதே விரமஸே ப்ரதிதப்ரபாவா ॥ (47)
த்ராதா த்வமேவ மமமோஹமயாத் பவாப்தே
ஸ்த்வாமம்பிகே ஸ்ததமேமி மஹார்த்திதேச ।
ராகாதிபிர் விரசிதேவித தேகிலாந்தே
மாமேவபாஹி பஹுதுக்க கரேசகாலே ॥ (48)
நமோதேவீ மஹாவித்யே நமாமி சரணௌதவ ।
ஸதாஞான ப்ரகாசம்மே தேஹஸர் வார்த்ததேசிவ ॥ (49)

தேவியாகிய உனக்கு நமஸ்காரம் ; மூலப்பிரகிருதியாகிய உனக்கு நமஸ்காரம் ; சிருஷ்டிகர்த்ரியாகிய உனக்கு நமஸ்காரம் ; சர்வாபீஷ்டங்களையுங்கொடுக்கின்றவளாகிய உனக்கு நமஸ்காரம் ; சித்விருத்தி ரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம் ; ஸம்ஸார ஸாகரத்துக்குத் தோணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம் ; பஞ்ச கிருத்தியங்களையும் நடத்துகின்றவளாகிற உனக்கு நமஸ்காரம் ; ஸர்வாதிஷ்டான ரூபிணியாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம் ;

கூடஸ்தையாய் (எல்லாவற்றிலும் கலந்திருப்பவளாய்) இருக்கின்ற உனக்கு நமஸ்காரம்; அர்த்தத்துக்கு அர்த்தமாயிருக்கின்ற உனக்கு நமஸ்காரம்; (ஹ்ரில்லோக) இருதயத்தில் பிரகாசிக்கின்றவள் ஆகிய உனக்கு நமஸ்காரம்; சித் சொரூபிணியாகிய உனக்கு நமஸ்காரம்; ஹே அம்ப! இவ்வுலகமெல்லாம் உன்னிடத்திலிருக்கின்ற தென்பதும், என்னுடைய உற்பத்தி லயம் உன்னிடத்திலேயே என்பதும் உன்றிருவடியிற் கண்டேன். உன்னுடைய பாதத்தில் கண்ட காக்ஷியினலேயே நீ அகண்டமான மகிமையையுடையவளாயும், ஸர்வப் பிரபஞ்ச ஸ்வரூபிணியாயுமிருக்கின்றாயென்பதும் நான் நன்றாய்த் தெரிந்து கொண்டேன். இது நிச்சயம். ஜீவகோடிகணிமித்தம் சிருஷ்டி காலத்தில் பிரபஞ்சத்தை ஸதஸத்விசாரத்தோடு விஸ்தாரமாய்ப் படைக்கின்றாய். * பதினறு ஏழு என்கிற தத்துவசொரூபிணியாய் எங்களுடைய சுகானுபவ நிமித்தம் திருவுருவங்கொண்டு பிரகாசிக்கின்றாய். எந்த வஸ்துவும் அடைவதற்கு உன்னைத்தவிர வேறொரிடமுமில்லை. நீயோ எல்லா வஸ்துவிலும் நிறைந்தவளாயிருக்கின்றாய். எந்தப் புத்திமானுகிய புருஷனும் விவகார தருமத்தில் உன்னைவிட்டு ஒன்றுஞ் செய்யவறியான். ஹே தேவீ! உன்னுடைய பிரபாவத்தினல் எல்லாவுலகங்களையும் சந்தோஷிப்பிக்கின்றாய்; உன்னுடைய ஒளியினலே எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கின்றாய்! கற்பாந்தத்தில் நீ அழியாமலே யிருக்கின்றாய்; வேதம் முதலிய கலைகளெல்லாம் ஒருங்கே யறியவல்ல பண்டிதன் உன்னுடைய வைபவமான சரித்திரத்தையும் சீக்கிரத்தில் அறிந்துகொள்ளலாமென் றெண்ணுவானயின் அவனலறியக்கூடுமானதோ? எந்த வித்வான்தா னறிய வல்லவனுவான்? (27–33)

ஹே அம்ப! மதுகைடபர்களால் பயந்திருந்த நாங்கள் விரிந்திருக்கின்ற உலகங்களைக் கண்டோமல்லவா? அவை உன்னலே காணப்பட்டனவேயன்றி எங்களால் காணப்பட்டனவா? ஒருவராலும் அடையப்பெருத பரமானந்தத்தை யடைந்தோ மல்லவா? அதுவும் எங்களாலன்று; உன்னலேயாம். ஹே பவாநி! உன்னுடைய தரிசனம் மஹாப்பிரபாவமுடையது. ஹே மாதா! சிந்திப்பதற்குக் கூடாத உன்னுடைய சரித்திரத்தையும் நீ செய்கின்ற சிருஷ்டி சமூகத்தி லகப்பட்ட புவனகோடிகளையும் நானு மறியமாட்டேன். ருத்திரரும் அறியார்; பிரமனு மறியான். யாங்களே யறியாமற்போவோமாயின் மகா மகிமையோடுங் கூடிய மற்றெவர்தா னறியவல்லார்? இதுவரையில் நாமே திரிமூர்த்திகளென்று பிரசித்தி பெற்றிருக்கின்றோமென் றிருந்தோம். இப்போது நாங்கள் பார்த்து வந்த புவனங்கடோறும் பிரசித்தி பெற்றவர்களான மும்மூர்த்திகளுநங் காணப்பட்டார்கள். ஹே தேவீ! இதுபோலு முள்ள புவனங்களிலும் இப்படியே திரிமூர்த்திக ளிருப்பார்களல்லவா? ஸர்வ

* பதினறு ஏழு என்னும் தத்துவங்களுடைய விவரங்கள் பின்னர் வரும்.

சாஸ்திர பிரதிபாதிதமா யிருக்கின்ற உன்னுடைய திவ்ய மஹிமையை என்னவென்றறிந்தபடி. ஹே அம்ப! இப்போது உன்னுடைய பாதாரவிந்தத்தை நமஸ்கரித்து என்னுடைய இஷ்டத்தைப் பிரார்த்திக்கின்றேன்: உன்னுடைய உருவம் என் மனத்தில் எப்பொழுதும் நீங்காம லிருக்கவேண்டும்; உன்னுடைய நாமம் என்னுடைய வாக்காகிய குகையிலுலாவிக்கொண்டிருக்க வேண்டும்; உன்னுடைய பாதாரவிந்த தரிசனம் என்னுடைய கண்களில் எப்பொழுதும் நீங்காதிருக்கவேண்டும். ஹே தேவீ! உன்னுடைய திருவுளத்தில் நம்முடைய அடிமையாகிய இவனொருவ னிருக்கின்றானென்கிற பாவனை நீங்காதிருக்க வேண்டும். அவ்வண்ணம் நீ சிந்திப்பையேயானால் யான் நம்மை ரக்ஷிப்பதற்குரிய ரக்ஷகி இருக்கின்றாளென்று சிந்திப்பவனாவேன். ஹே தேவீ! தாயானவள் பிள்ளைகளிடத்தி லியல்பா யன்புடையவளாயிருத்தல் போல் என்னிடத்தும் என் மகனாகிய பிரமனிடத்தும் இடைவிடாமல் இப்போதிருப்பதாகிய இந்தச் சம்பந்தமானது எப்பொழுது முண்டாக வேண்டும். ஹே ஜகதம்பா! நீ எல்லா அண்டகோடிகளையும் அறிவாய்; சர்வஜ்ஞத்துவாதி குணங்களுக்கெல்லாம் இடமாயுள்ளவள்; அறிவிலியாகிய யான் உன்னிடத்தில் விண்ணப்பஞ் செய்துகொள்ளற்பாலது யாது? ஹே பவானி! எது என்னால் விண்ணப்பஞ் செய்துகொள்ளப்படுமோ, அதனை அப்படியே அநுக்கிரகிக்கவேண்டும். ஏனெனில் பிறருடைய அபிப்பிராயத்தை உள்ளத்திற்கொண்டு முடிப்பதாகிய இங்கிதம் உனக்கிருக்க வேண்டு மல்லவா! (34–39)

பிரம்மா சிருஷ்டிக்கிறார்; விஷ்ணு ரக்ஷிக்கிறார்; உமாபதியாகிய ருத்திரர் சங்கரிக்கிறார் என்று சொல்வது உலகப் பிரசித்தி. ஹே துஹினஜே! (ஹிமாசலன் மகளே!) இதனுடைய உண்மையாதென்றால், அம்மூவரும் உன்னுடைய இச்சையினால், உன்னுடைய சக்தி யுக்தர்களாய் முன்கூறிய தொழில்களைச் செய்வதற்குரியவராகின்றனரேயன்றித் தாங்களே செய்யுஞ் சுதந்தரரல்லர். ஓ தராதரன் புத்திரியே! இந்த பூமியை பூமிதேவி தாங்குகின்றாளென்றார்; அன்று உன்னுடைய ஆதாரசக்திதான் தாங்குகின்றது. ஹே வரதே! சூரியனும் உன்னுடைய தேஜஸுடனே கூடினவனாய்ப் பிரகாசிக்கின்றானேயன்றி வேறன்று; ஆகையினால் எல்லாப் பிரபஞ்சமும் நீயே; நீ விராட்சொரூபமாய்ப் பிரகாசிக்கின்றாய். உன்னுடைய மகிமையினாலே நானும் பிரமனும் ருத்திரரும் எப்பொழுது பிறப்புடையவர்களாயினோமோ அப்பொழுதே எங்கட்கு நித்தியத்துவ மில்லாமற்போயிற்று. இந்திராதியர்களாகிய மற்றெந்த தேவர்கள்தாம் நித்தியராகப் போகிறார்கள்? ஆகையால் நீயே நித்யையாகவும் பிரகிருதியாகவும் ஆதியாகவுமிருக்கின்றாய். ஹே பவானி! இப்பொழுது நான் உன்னுடைய சந்நிதானத்தை யடைந்த விசேஷத்தால் புராணபுருஷனாயிருக்கிற என்னை நீ கடாக்ஷிப்பையேயானால் நான் பிரபுவென்றும், அநாதியானவனென்றும், சர்வவியாபி என்றும், ஈசனென்றும், அகண்ட ஞானியென்றுந் தெரிந்துகொள்ளுகிறேன். நீ கடாக்ஷஞ் செய்யாமற்

போவையேயானுல் நான் எப்பொழுதும் அஞ்ஞான சுபாவ முடையவனென்று தெரிந்துகொள்ளுகிறேன். நீ இவ்வுலகில் ஞான வான்களுக்கு ஞானமாயும், சக்திவான்களுக்குச் சக்தியாயும், கீர்த்திமான்களுக்குக் கீர்த்தியாயும், காந்தியுடையவர்களுக்குக் காந்தியாயும், ஸ்ரீமான்களுக்கு ஸ்ரீ தேவியாயும், நிர்மல சந்துஷ்டி யுடையவர்களுக்குச் சந்துஷ்டியாயும், முமுக்ஷுக்களுக்கு மோக்ஷ சொரூபியாயும், விரக்தியுள்ளவர்களுக்கு விரக்தியாயுமிருக்கின்றாய். நீயே பிரமகாயத்திரியாயும், ஸ்வாஹா ஸ்வதா வென்கிற மந்திர சொரூபிணியாயும், பகவதியென்கிற நாமஸரூரூர்த்த மாத்திரைக்கு யோகரூட சொரூபிணியாயும் ஆகிறாய். தேவர் முதலியோருடைய இகபர சாதனத்தின் பொருட்டு உன்னாலே வேதமும் ஆகமமும் விதிக்கப்பட்டன. அகண்டாகாரமாகிய சமுத்திரத்தினின்றுந் தோன்றிய அலைகள் அச்சமுத்திரத்திற்றனே அடங்குவதுபோல் ஆதியந்த மில்லாத பரமாத்மாவினிடத்திற்றேன்றி அவ்விடத்திற் றனே லயப்பட்டிருக்கிற ஆத்மகோடிகள் ஜீவபாவத்தைப்போக்கி சிவபாவத்தைக் கூடுதலாகிய மோக்ஷநிமித்தமாகவே எல்லாப் பிரபஞ்சங்களையும் உண்டுபண்ணுகிறாய். ஜீவன் எப்பொழுது உன்னுடைய தொழிலுக்குரியகாரணந் தெரிந்துகொள்ளுகிறானே அப்பொழுது அவனை இந்தப் பிரபஞ்சத்தினின்று நிவிர்த்திசெய்து, பின்னர் இளைப்பாற்றுகிறாய் என்பது ஸர்வசாஸ்திர நிச்சயம். எப்படியென்றால், நாட்டியத்தை விரும்பினவருக்கு ஒரு நாடகன் அந்த நாட்டியத்தைக் கற்பித்து அதனாற் பெறும் பயனை அவர் பெற்றபின்னர் அந்த நாடகன் அத்தொழிலைக் கைவிட்டது போலாம். இவ்வண்ணம் சிற்றின்பத்தை விரும்பிய ஆன்மகோடி களுக்குப் பிரபஞ்ச நாடகத்தைக் கற்பித்து அவ்வின்பவொழிவில் அவன்பாற் புரியும் படைப்பாதிதொழிலை நீக்கி அவனை முக்திக் காளாக்கி விடுகின்றவள் நீயே. ஹே அம்பிகே! உன்னையே சரண மாக அடைகிறேன். மஹா வுபாதிகரமாயும், காமக்குரோதாதிகளால் நிறையப்பெற்றதாயும், தடைப்படாது மேன்மேல் வருவதாகிய துக்கப்பிரதமாயுமுள்ள அந்திய காலத்தில் என்னைக் காக்கவேண் டும். ஹே தேவீ! நமஸ்காரம். ஹே மஹாவித்யே! உனக்கு நமஸ்காரம். உன்னுடைய பாதங்களைச் சரணுகதி யடைகிறேன். ஸர்வாபீஷ்டங்களையுங் கொடுக்கின்ற ஹே சிவே! எப்பொழுதும் அகண்டஞானத்தைக் கொடுத்தருள்வாய் என்று துதித்தனர். (40-49)

ஓம் லப்த சக்தியை நம:

## 5. புவனேஶ்வரி ஸ்துதி (2)

இவ்வாறு தேவர்களுக்கெல்லாம் தலைவராகிய நாராயணர் துதித்து, ஆனந்தபரவசராய் மௌனமுற்றிருக்கும்போது ருத்திர மூர்த்தி, தேவி சந்நிதானத்திலிருந்து வணக்கத்துடன் துதிக்கத் தொடங்கினர்: ஹே தேவீ! ஹே சிவே! விஷ்ணுவும், பிரமனும்

உன்னுடைய சங்கற்பத்தினின்றுந் தோன்றினவர். யான் உன்னுடைய ஸத்குணரூபி. ஹே ஜநநீ! நீ பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் முதலிய பூதரூபமாகவும், மனம் புத்தி சப்த அகங்காரம் முதலிய காரணரூபமாகவும் ஆயினுய். உன்னுலே படைக்கப்பட்டவர்களாகிய நாங்கள் மூவரும் சராசர ரூபமாகிய உலகினைப் படைத்தும் காத்தும் அழித்தும் வருகின்றோம். இவைகளை அறிவதற்கும் சொல்வதற்கும் எங்களுக்கே கூடாதிருக்கும்போது ஏனையோர் உன்னுடைய பிரபாவத்தை எவ்வாறு அறிந்துசொல்ல வல்லவராவர்? பஞ்சபூதங்களாலும் பஞ்ச தன்மாத்திரைகளாலும் முக்குணங்களாலும் பிரபஞ்சகாரிய முண்டாகிறதென்றுல் எப்படி உண்டாகும்? அவைகள் உன்னுடைய கலையின்றி உண்டாகாதென்பது இப்போது பிரகாசமாயிற்று. ஹே அம்ப! நீ உன்னுல் படைக்கப்பட்ட சராசரமாயிருக்கின்ற இவ்வுலகமாகவும், பிரம விஷ்ணு ருத்திரராகவும் இருக்கின்றுய். அன்றியும் உலகில் காணப்படும் பலவிதமான அலங்காரங்களாலும் விலாசங்களாலும் அவைகளாலுண்டாகும் குதூஹலங்களாலும் இஷ்டப்படி ரமிக்கின்றவளாயும் ரமிக்காதவளாயு மிருக்கின்றுய். ஹே தேவீ! பிரமன் முதலாக வெண்ணப்பட்ட நாங்கள் மூவரும் சிருஷ்டியாதிகளைச் செய்ய எப்போது உத்தேசஞ்செய்கின்றோமோ அப்பொழுது உன் பாதரேணுவை நாங்கள் சிரமேற்கொண்டுதான் செய்கின்றோம். ஹே மநோன்மணீ! நீ தயையினுல் குளிர்ந்த மனத்தை யுடையவளாய் இல்லாமற் போவாயாயின் நாங்கள் மூவரும் ஸத்வ ரஜஸ் தமோகுண ஸம்பந்நர்களாக எப்படியுற்பவமாவோம்? ஹே கருணு கடாக்ஷி! விகற்பரூபமான பலசங்கற்பங்களை நீ சங்கற்பிக்காமல் போவாயாளுல் இவ்வுலகம் அரசன் மந்திரி சேவகர் முதலானவர்களால் சூழப்பட்டதாகவும் தனிகர் நிர்தனர்களால் நிறையப்பெற்றதாகவும் காணப்படுகின்ற பின்னு பின்ன ரூபங்களாக எப்படியாகும்? நாங்கள் மூன்று தொழிற்குரியவைகளா யிருக்கின்ற உன்னுடைய மூன்று குணங்களோடு கூடியதும் முத்தொழிலையுஞ் செய்தற்குரியவராகிய படியினுலன்றோ மூவுலகிலும் எங்களை இவ்வுலக காரண கர்த்தர்களென்று கூறுகிருர்கள்! காரணர்கள் நாங்களன்று; ஏனெனில் விமான மூர்ந்துவரும் வழியில் எங்களால் பார்க்கப்பட்ட புதிதாகிய புவனங்களை நாங்களா படைத்தோம்? நாங்கள் கண்டதேயில்லை. இவை யாவரால் செய்யப்பட்டன? ஹே பவாநீ! நீயே சொல்வாயாக. (1–11)

உன்னுடைய கலையினுலே எவ்வளவு உலகை படைக்கின்றனேயோ காக்கின்றனேயோ அவ்வளவையும் நீ அழிப்பதற்கு இச்சிப்பாயல்லவா? யான் வேண்டுமா? உன்னுடைய நாயகனுகிய பரமசிவத்தை இந்த விளையாட்டால் எப்பொழுதும் களிக்கச் செய்கின்றுய். ஹே சிவே! ஜகதம்பிகே! இவ்வாறுன உன்னுடைய பிரபாவத்தை யறியோம். ஹே ஜநநீ! ஹே யுவதி! உன்னுடைய பாகவதாளாகிய எங்களுக்குப் பதாம்புஜ சேவையைக்கொடுப்பாயாக. ஸ்திரீரூபத்தோடு கூடியிருக்கின்ற நாங்கள் புருஷ

ரூபத்தையடைவோமாயின் உன்னுடைய பதாம்புஜ சேவை எங்களுக்குண்டாமா ? அது உண்டாகாமற்போனால் அந்தப் புருஷ வடிவத்தால் நாங்கள் அடையப்போகிற பிரயோசனமென்ன ? ஹே அம்பா ! ஹே சிவே ! உன்னுடைய பாதாரவிந்தத்தை விட்டு நான் இவ்வுலகில் புருஷ ரூபத்தை யடைவதற்கும் திரிலோகாதி பத்தியத்தை யடைவதற்கும் விரும்பவில்லை. ஹே ஸுதந்தி ! (நல்ல தந்தவரிசைகளை யுடையவளே) உன்னுடைய சந்நிதானத் திற் கிடைத்த இப்பெண்ணுருவம் என்னுடைய கண்களுக்கு உன்னுடைய பாததரிசனம் கிடைக்கச்செய்தமையால் இதில் வெறுப்புண்டாகவில்லை. கிடைக்கச் செய்யாமற்போகுமானால் இதிற் சிறிதும் விருப்பமுண்டாகமாட்டாது. இனிப்புருஷ வடிவம் சுகமுடையதென்று எப்படித் தோன்றப்போகிறது ? ஏ அம்பிகே ! நான் ஸ்திரீ உருவத்தை யடைந்து ஜனனபந்தத்தை நிவிர்த்தி செய்வதாகிய உன்னுடைய பதாம்புஜசேவை கிடைக்கப்பெற்றே னென்கிற நிஷ்களங்கமாகிய இக்கீர்த்தியானது மூன்றுலகத்திலும் விளங்கவேண்டும். இவ்வுலகில் ஆத்மகோடிகளுக்கு உன்னுடைய பாதாரவிந்த தரிசனப்பிராப்தி இல்லாமற்போகுமானால் அந்த ஆத்மகோடிகளுக்கு யுகந்தோறும் இந்தத் தாபத்திரயத்தோடு மிருக்கின்றகாலம் இப்படியே நடந்து உன்னுடைய சந்நிதான சேவையை விட்டு அகண்ட ராஜ்யாதிபத்யத்தை அபேக்ஷிப்பனு, அபேக்ஷியான். (12–17)

ஹே ஜநநீ ! நிர்மலராகிய முனிவர்கள் உன்னுடைய பாதார விந்த பூஜையைவிட்டு வேறாகிய தவத்தில் பற்றுள்ளவராயிருப்பின் அவர்கள் தெய்வத்தினுல் வஞ்சிக்கப்பட்டவர்களாவரன்றே ? ஏனென்றால், வேறாகிய தவத்தினுல் வருவதாகிய பிரபுத்துவம் முதலியவைகள் பின்னர் துக்கத்தையே விளைவிக்கின்றனவன்றே ? ஓ அநாதியானவளே ! உன்னுடைய ஸ்ரீ பாததீர்த்தத்தில் ஒரு சிறிது ஒருவனுட்கொள்ளுவானுயின் அவன் பிறவிப்பெருங் கடலினின்றும் நீந்துகிருன். அதைவிட்டுச் செய்வதாகிய தபோயக்ஞங்களாலும், சம தமாதி நிஷ்டைகளாலும், பிறவி நீக்கமாகிய முத்தியுண்டாகமாட்டாது. ஆகையால் என்னிடத்தில் உனக்குத் தயையிருந்தால் நானெண்ணியிருக்கும் வகையாக அற்புதமாயும் அநாதியாயுமுள்ள நவாக்ஷரமந்திரத்தை எனக் குபதேசஞ் செய்வாய். செய்வையாயின் நிர்மலமாயும் உத்த மோத்தம மாயுமுள்ள அம்மந்திரத்தை நான் ஜபித்து நித்தியாநந்த முடையவனுவேன். பூர்வ ஜன்மத்தில் என்னுலே இம்மந்திரம் அநுஷ்டிக்கப்பட்டது. இப்பொழுது எனக்கு மறதியாயிருக்கிறது. ஆகையால் அம்மந்திரத்தையே உபதேசம் செய்யவேண்டும். ஹே ஜநநீ ! ஹே பிரணவஸ்வரூபிணீ ! என்னைக் கரையேற்றுவாய், கரையேற்றுவாய். ஓ நாரதனே ! அற்புத தேஜோரூபியான ருத்திரர் இவ்வண்ணம் பிரார்த்திக்கவும் அந்தத்தேவி அவர் வேண்டியவாறே நன்ருயுபதேசித்தனள். ருத்திரர் உபதேசம் பெற்றவராய் பேரானந்தமடைந்து தேவி பாதங்களை வணங்கி

அவ்விடத்திலேயே நவாக்ஷரசொரூபமாயும் சர்வாபீஷ்டங்களைக் கொடுப்பதாயும் மோக்ஷத்தைத்தருவதாயுமுள்ள அம்மந்திரத்தைப் பீஜாக்ஷர சகிதமாய் விதியுக்தமான உச்சரிப்புடன் ஜபித்திருந்தனர். ஓ நாரதனே! அப்பொழுது தேவீ பாதசந்நிதானத்திலிருக்கின்ற நான் ருத்திரமூர்த்தி எல்லா வுலகங்கட்கும் சுகத்தைச் செய்கின்ற பரமாத்ம சொரூபியாய் அந்த ஜபநிஷ்டையிலிருப்பதைப் பார்த்து அதிசயித்தவனாய் மகாமாயா சொரூபிணியாகிய தேவியை நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்யலாயினேன். (18–25)

சர்வஜ்ஞையாகிய ஹே அம்ப! மூன்றுலகிலும் ஸர்வாபீஷ்டங்களைக் கொடுக்கின்றவளாயும், சகலயஜ்ஞ ஹோமங்களில் ஸ்வாஹா என்கிற மந்திரரூபிணியாயும் இருக்கின்ற நிஷ்களமாகிய உன்னை இந்த ருத்திரமூர்த்தி ஸர்வாத்மஸ்ருஷ்டி கர்த்ரியாக அறிந்தெடுத்துச் சொன்னதுபோல் வேதங்கள் சொல்லவில்லை. எப்பொழுது அவ்வண்ணஞ் சொல்லவில்லையோ அப்பொழுதே இவ்வண்ணம் ஸ்தோத்திரஞ்செய்வதற்கான நிறைந்த சக்தி யுடையனவாக எனக்குத் தோன்றவில்லை. இவ்வேதம் போலவே உன்னுண்மை யறியாத நானும் ஜகத்கர்த்தா நானே என்றும், விசித்திரமாய் அகண்டாகாரமாய் விரிந்திருக்கும் பிரமாண்டத்தைச் சிருஷ்டிக்கின்றவன் நானே என்றும்,சராசராத்மகமாகிய இம்மூன்று புவனத்தில் என்னைக்காட்டிலும் வேறு சமர்த்தனாகிய புருஷன் எவனிருக்கின்றானென்றும், எப்பொழுது பிரமனாய் விட்டேனோ அப்பொழுதே தன்யனாய் விட்டேனென்றும், எல்லாவுலகங்களையுங் கடந்தவன் நானே என்றும், இதிற்சம்சயமேதென்றும் அகங்கரித்திருந்தேன்; அக்குற்றத்தினால் அளவிடற்கரிய பிறவிக் கடலில் மூழ்கினேன். அந்தோ, இஃதுவென்ன பாவம்! இஃதுவென்ன கொடுமை! இதுவரையில் நான் கொண்டிருந்த அகங்காரமும் அதுகொண்டு கூறிய கூற்றுக்களும் பொய். இப்பொழுது உன் பாதாரவிந்தத்தினுடைய ரேணுஸ்பரிசத்தாலுண்டாகிய அகங்காரத்தால் இப்பொழுது தன்யனாய்விட்டே னென்று கூறுங் கூற்றுதான் உண்மை. அதுபொய், இது மெய்யென்று தெரிய வந்ததும் உன்னுடைய அநுக்கிரகத்தினாலன்றி வேறில்லை; ஆகையால் ஸம்ஸார பந்தத்தைப் போக்கடிப்பதில் ஸமர்த்தையாகிய உன்னிடத்திலொன்று யாசிக்கின்றேன்: என்னையெனில், உன்னுண்மையறியாத அஞ்ஞானத்தினா லடையப்பெற்ற பெருந்துன்பமாகிய விலங்கை விடுவித்து உன்னிடத்தில் நீங்காத பக்தியுடையவனாயிருக்க அனுக்கிரகித்தல் வேண்டும். அனுக்கிரகிக்காமற் போவாயாயின் அநிர்வசனம் (இன்னவிடத்தினின்று உற்பத்தியானதென்றறிவதற்கில்லாத) தாமரை மலரினின்றும் உன்னுடைய கிருபாவீக்ஷிண்யத்தினால் உண்டாகிய நான் அஞ்ஞானத்தினின்றும் எவ்வண்ணம் விடுபட்டவனாவேன்? அன்றியும் ஹே சிவே! நான் உன்னுடைய ஆக்ஞையைச் செலுத்துகின்ற சேவகனா யிருக்கின்றபொழுது பிறவிக் கடலில் மூழ்கியிருத்தலழகாகுமா? ஆகையால் என்னைக் காப்பாய். ஹே சாம்பவி!

என்னிடத்தில் சில அபராதங்களுண்டாயிருக்கின்றன. என்னை யெனில், ஆதியாயும் பரிசுத்தமாயுமுள்ள உன்னுடைய சரித்திரத்தை அறியாதவர் யாரோ, அவர்கள் என்னை பிரமனைச் சொல்லுகிறார்கள். அதை நான் கேட்டு மகிழ்ந்ததாகிய அபராதமும், சந்ததமும் உன்னாலே சிருஷ்டித்தொழிலில் ஏற்படுத்தப்பட்ட நான் சராயுஜம் முதலிய நால்வகைத் தோற்றமாகிய சிருஷ்டியைச்செய்யும் சதுர்ப்பாட்டை நானொருவனே யறிவேனென்றும், வேறு எவனறிவானென்றும், அகங்காரத்தினு லெண்ணுவதாகிய அபராதமும், இன்னும் இதுபோன்ற எண்ணத்தொலையாத அபராதங்களுமுள. ஹே ஆதிமாயே! அவையெல்லாம் பொறுத்தருள்வாய்!

அந்தோ! உலகில் சுவர்க்க காமிகளாய் யஜ்ஞத்தை விரும்பிச் செய்வதிலும், தேக காமிகளாய் அஷ்டாங்க யோகமார்க்கத்தில் பிரவிர்த்தித்திருப்பதாகிய சமாதி அவஸ்தையிலும், எந்த மானிடர் உழல்கின்றனரோ அவர் வீணராகி, மூடர்போன்று எப்பொழுதும் உன்னுடைய மகிமையையும் மோக்ஷப் பிரதமாகிய உன்னுடைய நாமமாகிய மந்திரத்தையும் ஒரு காலுச்சரித்த போதிலும் ஸகலலோக ஸாம்ராச்சியத்தைக் கொடுக்குமென்கிற நாமோச்சாரணையின் பெருமையையும் அறியமாட்டார். ஹே பவாநீ! (பரசிவகுடும்பிநீ) பந்த நிவிர்த்தியாகிய மோக்ஷத்தைக் கொடுக்கிறவள் நீயேயாயிருக்க உன்னை ஸ்தோத்திரஞ் செய்வதாகிய தொழிலையொழித்துச் சிவதத்துவ ஞானிகள் பிருதிவி முதல் நாதாந்தம் வரை தத்துவ விசாரஞ் செய்து அத்தத்துவங்களை நானன்றென்று நியதிசெய்வதே மேலான ஞானமார்க்கமென்றெண்ணுகின்றனர். அவரெல்லாம் சிவா, அம்பிகா, சக்தி, ஈசா என்கிற பவித்திரமாகிய நாமாவளிப் பிரபாவத்தை அறிந்து ஒரு கணப்பொழுதேனு முச்சரித்து அதன் பயனையடையாமல் அஜ்ஞானிகளைப்போல் பிறவிக்கடலில் மூழ்கிக்கிடக்கின்றவராவர். ஹே அம்பிகே! நீ நான்கு பிரிவினை யுடைய ஸர்வப்பிரபஞ்சத்தையும் உன்னுடைய நேத்திர வீக்ஷிண்ய மாத்திரத்தினால் ஒரு கணப்பொழுதில் செய்வதற்குச் சாமர்த்திய முடையவளல்லவா? அங்ஙனமிருக்க, ஆதிசிருஷ்டிகாலத்தில் என்னைச் சிருஷ்டிகர்த்தாவாகச்செய்தது உன்னுடைய இச்சாமாத்திரமாகிய லீலை யென்றெண்ணுகிறேன். என்னைப்போலவே விஷ்ணுவும் ருத்திரரு மாவாரென்றெண்ணுகிறேன். ஏனெனின் அவ்விருவரும் காக்கின்றவரென்பதும் சங்கரிக்கின்றவரென்பதும் எப்படி? மதுகைடபர் சமுத்திரமத்தியினின்று யுத்தஞ்செய்த காலத்தில் விஷ்ணு தனக்கு மரணம் வரவொட்டாமல் காத்துக் கொண்டனரா? ருத்திரர் அவர்களைச் சங்கரித்தனரா? இல்லையே! நீயேயன்றோ அவர்களைச் சங்கரித்து என்னையும் விஷ்ணுவையும் காத்தனை. இன்னமும் உன்னுடைய பிரபாவத்தை யெண்ணும்போது உனக்கு எவ்விடத்திலாவது ஜனனமுண்டென்று காணப்படவில்லை, கேட்கப்படவுமில்லை. இதனால் நீ

ஜனனமரண ரஹிதையாயிருக்கின்ற ஆதிசக்தி யென்று யாவரா லும் அறிந்து கொள்ளத்தக்கவளா யிருக்கின்றனை. அதுமட்டோ, சர்வசுதந்தரத்துவ, சர்வஜ்ஞத்துவ, சர்வ வல்லபத்துவாதி குண விசேஷங்களெல்லாம் உன்னுடையனவாகவே காணப்படுகின்றன. இவையெல்லாம் சிற்றறிவின ரெங்ஙனமறிவார்? உன்னுடைய கடா க்ஷத்திற்கு நானும் விஷ்ணுவும் ருத்திரரும் பாத்திரங்களாவோ மானால் சிருஷ்டிக்கவும் காக்கவும் சங்கரிக்கவுமான சாமர்த்திய முடையவர்கள்தான். உன்னுடைய கடாக்ஷ வீக்ஷண்ய மில்லாமல் போகுமானால் இம்முத்தொழிலும் செய்வதற்கு எங்ஙனமுரிய ராவோம்? நாங்கள் மூவரும் ஏனையோரும் உன்னைவிட்டு முன் னுண்டானவர்களு மல்லர்; இப்போது நிலையாக இருக்கின்றவர் களுமல்லர்; இனி உண்டாகப் போகின்றவர்களு மல்லரெனவும், அற்பவறிவுடையவர்களுக்கு விவாதத்திற்கிடமாய்த் தனக்கு மேலொரு கடவுளில்லாதவராயும் சர்வஜ்ஞத்துவாதி குணங்களாற் பிரகாசிக்கின்றவராயும் சிருஷ்டிக்கு முதன்மையா யிருக்கின்றவ ராயும் தாபத்திரயமில்லாதவராயும் மாயோபாதியில்லாதவராயும் நித்யானந்தராயு மிருக்கின்ற பரசிவம் உன்னாலுண்டாகின்ற லீலா விநோதங்களைச் சுகமாய்ப் பார்க்கின்றன ரெனவும், ஸர்வசாஸ்திர சம்பன்னராகிய மெய்ஞ்ஞானிகள் கூறுகின்றனர். ஏனெனில் ஓ முனிவர்களே! காணப்பட்ட பிரபஞ்சரூபத்தில் மாயாசொரூபிணி யாகிய உன்னைக் காட்டிலும் அதீதராயிருக்கின்றாராகையால் சாக்ஷி யாயிருக்கின்றவராயினர். நன்றாய் நூல்களை ஆராய்ச்சி செய்யப் புகுங்கால் மாயா சொரூபிணியாகிய நீயும் மாயாதீதராகிய பரசிவ மும் ஆகிய உங்களிருவருக்கும் அன்னியமாக மூன்றாவது புருஷன் இல்லையென்று நானறிகிறேன். ஆயினும் நானிப்போது அபிப் பிராயப்பட்டது வேதவாக்கியத்திற்கு விரோதமானதென்றும், வேத வாக்கியத்தை விபரீதார்த்தமாகச் செய்யக்கூடா்தென்றும், என் இதயத்தில் நீங்காமல் ஒரு சங்கை இருந்துகொண்டிருக் கின்றது. என்னையெனில், பரசிவமானது "ஏகமேவாத்வித்யம்" என்று வேதங்களிற் சொல்லுகின்ற தல்லவா? அத்தன்மையுடை யது நீயா? அப்பரசிவமா? என்பதும், நீங்களிருவரும் ஏகமா, துவிதமா என்பதும் அறியப்படவில்லை. இச்சந்தேகத்தை நிவிர்த்திசெய்ய வேண்டும்.

இவற்றில் என் மனம் ஸம்சயமில்லாமலும் சங்கை யடையா மலுமில்லை. ஆனால் என் மனம் புண்பட்டுப் போகின்றது. நீ சந்தேகத்தை நிவிர்த்திசெய்கின்றவளா யிருக்கின்றனை. ஆகை யினால் உன்னுடைய வாக்கினால் விடை தரவேண்டும். நான் உன் னுடைய பாதங்களிற் சரணாகதியடையவும் பெற்றேன். இதுவும் என் புண்ணிய விசேஷந்தான். நீ இந்த ஸ்திரீயா யிருக்கின் றனையா? புருஷனாயிருக்கின்றனையா? எனக்கு விவரமாய்க் கூறி யருளல் வேண்டும். சத்தியமாகிய உன்னுண்மையைத் தெரிந்து கொள்வேனேயாகில் ஸம்ஸாரஸாகரத்தி னின்றும் விடுபட்டவனாவே னென்றனன். (26–46)

ஓம் லப்த தேஹாயை நம:

## 6. ஸ்ரீ தேவி நிஜரூப உபதேசம்

பிரமதேவர் கூறுகின்றார் :—ஓ நாரதனே! அதிவிநயத் தோடும் வணங்கி விஜ்ஞாபனஞ் செய்துகொண்ட என் விண்ணப் பத்தை ஆதியாயும் பகவதியாயுமுள்ள தேவி திருச்செவியேற்று ரமணீயமாய் விடை கூறத்தொடங்கினள். ஓ பிரமனே! எனக் கும் பரசிவத்துக்கும் எப்பொழுதும் ஏகத்துவமே (ஒன்றாயிருக்குந் தன்மையே), பேதமிருப்பதில்லை. யாதொரு பரசிவமிருக்கின்றதோ அச்சிவமே நான். நானே அப்பரசிவம். எங்களைப் புத்திப்பிரம முடையவன் பேதமாகக் காண்பான். எங்களிருவருடைய சூக்ஷ்ம மாகிய சமயபேதத்தை எந்த ஞானவானறிகின்றானோ அவன் ஸம் சார பந்தங்களினின்றும் விடுபடுகிறான். இதிற் சந்தேகமில்லை. நித்யமாயும் அநாதியாயுமிருக்கின்ற பரப்பிரம்ம மானது "ஏக மேவா" என்றும் "அத்விதீயம்" என்றும் சொல்லப்பட்டிருக்கிற ருக்குக்குத் தாத்பரியமென்னையென்று கேட்டனையன்றோ? ஒன்றா யிருக்கின்ற பரப்பிரம்மமானது துவிதபாவத்தை யடைந்தது எப் படியென்றால், கண்ணாடியின் மத்தியில் உபாதி சம்பந்தத்தினால் ஒரு தீபம் இரண்டாகவும், ஒருவனுடையவுருவம் இரண்டாகவும் பிரதிபிம்பிப்பதுபோல் பிரமஸ்வரூபமாகிய எங்களிருவருடைய உருவம் இரண்டாகத் தெரிகின்றது. விதாதா! புனருற்பவகாலத் தில் சிருஷ்டி நிமித்தமா யிரண்டென்கிற பேதமுண்டானதை எந்த விதத்தினாலெடுத்துச் சொன்னபோதிலும் அது த்ரிஸ்யம் அத் ரிஸ்யம் என்கிற பேதத்தை யுடைத்தானதேயன்றி வேறன்று. ஸர்வ சங்காரகாலத்தில் நான் ஸ்திரீயுமன்று, புருஷனுமன்று, அலியு மன்று; புனருற்பவகாலத்தில் புத்தி, சம்பத்து, தைரியம், கீர்த்தி, நினைவு, ஸ்ரத்தை, தீர்க்காலோசனை, தயை, நாணம், பசி, தாகம், பொறுமை, தேஜஸ், சாந்தி, பானஞ்செய்ய வேண்டுமென்னு மிச்சை, நித்திரை, சோம்பல், நரைதிரைமூப்பு, படுத்வம், ஞானம், அஜ்ஞானம், ஆசை, அபேக்ஷை, பலம், பலவீனம், உதிரம், மச்சை, சர்மம், நேத்ரம், வாக்கு, பொய், மெய், நானாவிதமான நாடிகை என்று புத்தியினாற் கற்பிக்கப்பட்ட பேதரூபமாயிருக் கின்ற இவைகளெல்லாம் நானாகவேயிருந்து அதனதன் செயலையும், அதனதன் பயனையும் செய்பவளாயிருக்கின்றேன். இந்த விவ காரத்தில் என்னைவிட்டுப் பிரிந்திருக்கிற வஸ்து ஏதேனுமொன்று முண்டோ? இல்லையல்லவா? ஆகையால் எல்லாப்பொருளும் நானென்றே நிச்சயஞ் செய்து யோசிப்பாய். எல்லாம் நானாகுங் காலத்தில் அவ்வப்பொருளின் வண்ணமாக நான் ஏன் ஆகமாட் டேன், சொல்வாய். முன் நான் புனருற்பவகாலத்தில் தேவசமு கத்தி லெண்ணப்பட்ட கௌரி, பிராம்மி, ரௌத்ரி, வராகி, வைஷ் ணவி, சிவா, வாருணி, கௌபேரி, நாரசிம்மீ, இந்திராணி என்கிற நானாவிதமான நாமங்களைத் தரித்தவளாயும், அந்தந்தச் சக்தி

சொரூபியாயும், அந்தந்தச் சக்திக்குரிய சாமர்த்தியங்களைச்செய்து வருகிறேன். உற்பவமாகிய சகல பதார்த்தங்களும் தொழிற்படுங் காலத்தில் அவைகளை நிமித்தமாய் வைத்துச் சகல காரியங்களையும் நானே செய்கின்றேன். எங்ஙனமெனில், ஜலத்தில் தண்மையாயும், அக்னியில் உஷ்ணமாயும், சூரியனிடத்தில் பிரகாசமாயும், சந்திர னிடத்தில் பனியாயுமிருந்து அவ்வக்காரியங்களைச் செய்து வரு கின்றேன். பிரபஞ்ச விவகாரத்தில் ஜீவகோடிகள் என் சம்பந் தத்தை விட்டுச் சிறிதும் அசைவதற்குச் சாமர்த்திய முடையன வாகமாட்டா. இது நிச்சயம். (1–16)

உன்னிடத்தி லோருண்மை கூறுகின்றேன். இக்கணம் ருத்ரர் தைத்தியர்களைச் சங்கரிப்பதற்கு என்னை விட்டிருப்பாராயின் சங் கரிக்கும் தன்மையுடைவ ராவரா ? உலகத்தில் பலஹீனமாயிருக் கின்ற ஒருவனைப் பார்த்துச் சக்திஹீனனென்று சொல்லுகின்றுர் களல்லவா ? அதமனுயிருக்கின்றவனும் மற்ற யாவரும் சக்திஹீன னென்று சொல்லுவதுபோல் விஷ்ணுஹீனனென்றும் ருத்திரஹீன னென்றும் சொல்லுகிறதில்லை. கீழே விழுந்தவன், தடுக்கப்பட்ட வன், பயந்தவன், மந்தன், சத்துரு வசப்பட்டவன் இவர் போன்ற வர்களை அசக்தர்களென்று சொல்லுகின்றுர்களேயன்றி அருத்திரன் அவிஷ்ணுவென்றுஞ் சொல்லுகிறதில்லை. நீ எவ்வாறெல்லாம் சிருஷ்டிக்கின்றனையோ அதற்கெல்லாங் காரணம் சக்தி. நீ எப் பொழுது சக்தியோடு கூடினவனுகின்றனையோ அப்பொழுது எல்லாவற்றையுஞ் செய்கின்றவனுகின்றுய். உன்னைப்போலவே அரி அரன் இந்திரன் அக்னி சந்திரன் சூரியன் யமன் துவஷ்டா வருணன் வாயு முதலியோரு மென்றறிவாய். இப்பூமி எப்பொழுது சக்தியோடு கூடுகின்றதோ அப்பொழுது எல்லாவற்றையுந் தரித் திருக்கும் நிலைமையுடையதாகின்றது. சக்தியீனமாகின்றபோது ஒரு பரமாணுவையேனும் தரிப்பதற்குக் கூடாத அசக்தியை யடை கிறது. இதுபோலவே ஆதிசேஷன், கூர்மம் மற்றுமுள்ள திக் கஜம் முதலியவைகளும் என்னுடைய அம்சத்தையடைகிற பக்ஷத் தில் அதனதன் காரியங்களைச் செய்வதற்குச் சாமர்த்திய முடையவைகளாகும். நான் ஒருகால் தத்துவங்களுக்குள்ளே ஜல ரூபமாகிய சர்வதீர்த்தங்களையும் பானம் பண்ணவேண்டு மென நிச்சிப்பேனுயின் பானம் பண்ணுவேன். எல்லாவற்றையும் அழிக்கிற அக்னியை யழிக்க எண்ணுவேனுயின், அழித்து விடு வேன். எல்லாவற்றையும் அசைப்பிக்கின்ற வாயுவை அசைய வொட்டாமல் நிறுத்த நினைப்பேனுயின் அப்படியே நிறுத்துவேன். இவ்வாறு எந்தெந்த பூதங்களை எப்படி எப்படி நடத்த வெண்ணு கின்றேனே அப்படி அப்படி நடத்துவேன். ஓ பிரமனே ! இவ் வுண்மை யறியாத *அசத்துக்களுடைய சந்தேக ரூபமான அபிப் பிராயத்தை நீயொருகாலும் மனதிற்கொள்ளாதே. அணுவணுவாய்ப்

---

* பிராகபாவம், பிரத்வம்சாபாவம் என்பன உலகமொடுங்கு முறை மைக்குக் காட்டிய இலக்கணங்களாகவிருக்க இவ்வுண்மை யறியாத வேதாந்

பிரித்துப் பரமாணுவாகப் பார்ப்பதாகிய "ப்ராகபாவம்" (முன் அபாவம்) எனவே, கடம் மிருத்திகையிலும் ஒட்டிலும் முன் எப்படி யில்லையோ அப்படியே பிரபஞ்சமு மில்லையாகும். ஆயின் இப் பிருதிவியானது எவ்வாறு சூனியமாய்ப் போய்விட்டது என்ருராயின் மண்மயமாகிய பிண்டத்தினின்றும் பிரத்வம்சா பாவமாகப் போயிற்றென் றறியத்தக்கது. ஓ பிரமனே! ஶாம்வதம், க்ஷணிகம், சூனியம், நித்யம், அநித்யம், கர்த்தாவோடு கூடியது, அகங்காரம் என ஏழு பேதங்களாகத் தத்துவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளில் முதன்மையானது அகங்காரதத்துவம். இது மமகார தத்துவத்தினின்றுந் தோன்றியது. நீ அவ்வகங்காரதத்துவத்தைக் கொண்டு எல்லாப் பூதங்களையும் முன்போல் சிருஷ்டி செய்யக் கடவாய். (17–30)

இனி நீங்கள் என்னிடம் விடைபெற்றுப் போய் உங்களுக் குரிமையாகிய பதங்களைச் சிருஷ்டித்து அதிலிருந்து தெய்வத்தை மறவாமல் உங்களுக்குரிமையான காரியங்களைச் செய்து வருவீர் களாக. ஓ பிரமனே! நல்ல செளந்தரியத்தையும், புன்சிரிப்பையும், வெள்ளாடையையும், திவ்யாபரணங்களையு முடையவளாயும், ரஜோகுணத்தோடு கூடினவளாயும், சிறந்த ஆசனத்தில் வீற்றிருக் கின்ற மகா ஸரஸ்வதி என்னும் பெயருடைய சிரேஷ்டமான இந்தச் சக்தியை உன்னுடைய கிரீடார்த்தம் மனைவியாகக்கொள்வாய். இந்த மகாசக்தி உன்னைவிட்டு எப்பொழுதும் பிரியாள்; என்னுடைய அம்ச பூதையாயும், எல்லாராலும் பூஜிக்கப்பட்டவளாயும் இருக் கின்ற இவளை நீ நமக்கு மனைவியாயிருக்கின்ருளென்று அலக்ஷியஞ் செய்யாதே. இவளுடன் நீ சத்தியலோகஞ்சென்று சீக்கிரமா யுற்பத்தி காரணமாயிருக்கின்ற சராயுஜம் முதலிய நான்கு விதமா யுள்ள பீஜங்களை யுண்டுபண்ணிக்கொண்டு கன்ம சகிதமாயிருக் கின்ற ஆன்மகோடிகளுடைய முன்னுள்ள சுபாவகுணங்களை யறிந்து அவைகளுக்குத் தக்கவாறு காலகன்ம சுபாவங்களை நியமனஞ்செய்து லிங்காங்க பகாங்கங்களுடையனவாக முன்போல் சிருஷ்டித்து வருவாய். மஹாபலிஷ்டராகிய இவ்வுருத்திரர் உனக் குச் சகாயமாக விருப்பார். நீ சுகமுற்றிருப்பாயாக வென்று

---

திகளென்றழைக்கப்படுஞ் சிலர் இவ்வாக்கியங்களைக் கொண்டு பிரபஞ்ச மென்பது ஏது? சூன்யம்; உண்டென்பது பிராந்தி; ஆகையால் ஒரு பொழுதுங் கிடையாது என்று துர்ப்போதங்களைச் சொல்லுவது இயல்பாக லின் அப்போதங்களை உண்மையென்று கொள்ளாதிருத்தற்பொருட்டு "அசத்துக்களுடைய சந்தேக ரூபமான அபிப்பிராயத்தை நீ ஒருகாலும் மனதிற் கொள்ளாதே" என்று தேவி கூறியருளினரென்க. உண்மை யாதெனின், "மண்ணிலுண்டாகிய பாண்டங்கள் எப்படி மண்ணினிடத் தில் காணப்படவில்லையோ அப்படி மாயையினிடத்தில் ஸர்வசக்தியாகிய தேவி பூதபவுதிகங்களை யுண்டாக்குவதற்கு முன் சராத்சராத்மகமாகிய பிரபஞ்சம் காணப்படவில்லை" என வுணர்த்தியதென்க. இதனுல் பாண்ட முதலிய ரூபவபேதங்கள் மண்ணினுடைய காரியமே யாயினும் அவை குலாலன் சக்தியினலன்றி யாகாததுபோல் சிவசக்தியினலன்றி யாகா தென்று விளக்கியதென்க.

எனக்காசி புகன்றனர். பின்னர், விஷ்ணுமூர்த்தியை நோக்கி, ஓ விஷ்ணுவே! மநோகரையாயிருக்கின்ற இந்த மஹாலக்ஷ்மியை நீ வரித்துக்கொள்வாய். என்னால் கொடுக்கப்பட்ட ஸர்வஸம்பத்தையுங் கொடுக்கின்ற மங்களகரையாகிய இச்சக்தி உன்னுடைய மார்பில் எப்போதும் வீற்றிருப்பாள். இதிற் சந்தேகமில்லை. இவள் உன்னால் மனைவியென்றெண்ணப்பட்டு இகழத்தக்கவளல்லள், மதிக்கத்தக்கவள். இனி நீ லக்ஷ்மி நாராயணனென்னும் பெயருடையவனுவா யென்றவருக் காசிபுகன்றனர். மீண்டும் என்னைப் பார்த்து, ஓ பிரமனே! இந்த லக்ஷ்மிநாராயணன் உன்னால் மதிக்கத் தக்கவன். பூஜிக்கத் தக்கவன். சத்துவகுணப் பிரதானனுகையால் உன்னிலு மேம்பட்டவன். இவன் எவ்வக்காலங்களில் அசுரருபத்திரவமும், உலகில் யாவராலுஞ்செய்தற் கரியனவாகிய காரியமும் உண்டாகுமோ அவ்வக்காலங்களில் மானிடயோனிகளிலாவது திரியக்யோனிகளிலாவது பிறந்து உபத்திரவத்தைப் போக்கிக் காரியத்தைச் செய்து முடிப்பான் என்று கூறிப் பின்னர் மூவரையும் பார்த்து உங்களுக்கும் ஏனைய தேவர்கட்கும் போஷணை நிமித்தம் யாகங்களை ஏற்படுத்தி யிருக்கின்றேன். ஆகையால் முதல் மூவருணத்தவரும் பரிசுத்த முடையவராய் வேதவிதிப்படி தக்ஷிணையோடு யாகாதிகளியற்றி ஆராதித்து வருவார். அந்த யாக அவிர்ப்பாகங்களை நீங்களேற்கும் பொழுது என்னுடைய நாமத்தையுச்சரித்துத் திருப்தி யடைந்து சந்தோஷ சித்தராயிருப்பீர்களாக வென்று கூறி என்னையும் அரியையும் பார்த்து அயனரிகளாகிய நீங்களிருவரும் இந்திராதிதேவரும் எந்த யஜ்ஞத்திலுந் தமோகுணப் பிரதானராகிய ருத்திரருக்கு எந்த விதத்திலும் பிரயத்தினப்பட்டு முதலில் அவிர்ப்பாகத்தைக்கொடுத்து ஜாக்கிரதையாய்ப் பூஜித்துவரவேண்டும். அவரெந்த விதத்திலும் மதிக்கத்தக்க மேம்பாடுடையவர். இதுநிற்க, விஷ்ணுமுதலாக வெண்ணப்பட்ட உங்களால் வெல்லக்கூடாத அசுரர்கள் மேலிடுங் காலம் வருமாயின் அக்காலத்தில் என்னிடத்தினின்றும் வராகி, வைஷ்ணவி, கௌரி, நாரசிம்ஹி, ரௌத்ரி முதலிய சக்திக் கூட்டங்கள் தோன்றி அவர்களைச் சங்கரித்து விடுவார்கள். ஆகையால் எப்பொழுதும் தியானிக்கத் தக்க பீஜாக்ஷரத்தோடு நவாக்ஷர மந்திரத்தை ஜபித்து சகல காரியங்களையுஞ் செய்து வருவீர்களாக. இம் மந்திரமானது மந்திரங்களுக்குள் உத்தமமானதென்று நீங்களும் அறிந்திருக்கின்றீர்களன்றோ? ஆகையால் சர்வகாம சித்தியின் பொருட்டு அது எப்பொழுதும் மனதில் தியானிக்கத் தக்கது. நீங்கள் மூவரும் அவிரோதமுடையவர்களாக விருக்கக் கடவீர். என்னுடைய முக்குணத்தினின்றுந் தோன்றினவராதலால் யாவராலும் மதிக்கப்பட்டவராய் பூஜையேற்குங் கடவுளர்களாக ஆவீர்கள். இதிற்சந்தேகமில்லை. (31–53)

இவ்வுண்மையறியாமல் எவராயினும் உங்களை அவமதிப்பாராயின் நரகத்தையடைவர். ஓ விஷ்ணுவே! உனக்குள்ள முக்

குணங்களில் முக்கியமான ஸத்துவகுணம் பரமாத்ம சிந்தனையிலும், ரஜோகுணம் லக்ஷ்மியோடு கூடி கிரீடிப்பதாகிய லீலா விலாசங்களிலும், தமோகுணம் அசுரசங்காரங்களிலும் இருப்பதாக வைத்து அவ்வப்பிரயோஜனங்களை யடைந்து வருவாய். வாக்பீஜம், காமபீஜம், மாயாபீஜமென்று சொல்லப்படும் மூன்று பீஜாக்ஷரங்களோடு கூடினதாயும் பரமார்த்தத்தைக் கொடுப்பதாயுமுள்ள மஹாமந்திரம் உனக்குபதேசித்திருக்கின்றேனன்றோ? அம்மந்திரத்தை இரவும் பகலும் இடைவிடாது ஜபித்துக்கொண்டுவருவாய். அவ்வண்ணஞ்செய்து வருவை யாயின் உனக்கெப்பொழுதும் பயங்கரமான அகால மரணம் வரமாட்டாது. ஆகையால் இனி நீ வைகுண்டத்தை யுண்டுபண்ணி அதிலிருந்து முன்கூறிய ஜபத்தினாலே உலகைக் காக்கின்றவனாய் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பாயாக வென்று விஷ்ணுமூர்த்திக்கனுக்கிரகஞ் செய்தனர். (54–64)

பின்னர் ருத்திரமூர்த்தியைப்பார்த்து மிக இனிய வார்த்தையோடு நீர் மஹேசுவரியும் மஹாகாளியுமாகிய கௌரியை வரித்துக் கொண்டு ஸ்ரீ கயிலாயத்தை யுண்டுபண்ணி அதில் எப்படியிருந்தாற் சுகமோ அப்படியிரும்; நீரெப்பொழுதும் *தமோகுணப்பிரதானராகவேயிரும்; உமக்கு முக்கியம் தமோகுணம்; ஸத்வரஜோ குணங்கள் கௌணம் (இரண்டாம்பக்ஷம்). அங்ஙனமாயினும் சிருங்கார லீலையிலும், அசுரஸம்ஹார லீலையிலும் ரஜோகுணதமோ குணங்களையும், தவத்திலும் பரமாத்மசிந்தனையிலும் ஸத்வ குணத்தையும் கொள்ளல்வேண்டும். உலகத்திலுள்ள சராசரங்களெல்லாம் முக்குணவசப்பட்டவைகளேயன்றி அவைகட்கு வேறுயுள்ளனவன்று. காணப்படும் வஸ்து எதுவோ அது முக்குண சம்பந்தமுள்ளதே. என்னிடத்தினின்று தோன்றியபொழுதும் முக்குணரகிதமாக எதுவும் தோன்றியதின்று; இப்பொழுதுந் தோன்றுவதில்லை. ஆகையால் அவைகளைத்தொழிற்படுத்துங்கால் அக்குண வசத்தராயிருந்தே செய்யவேண்டியது அவசியமானதென்று ருத்திரமூர்த்திக்கனுக்கிரகஞ்செய்து பின்னர் மூவரையும் நோக்கி, ஓ பிரம்ம விஷ்ணு ருத்திரர்களே! நீங்கள் ஒவ்வொருவரும் முக்குணங்களைச் செலுத்த வேண்டிய முறைமைகளைக் கூறினேம். ஆயினும் நீங்கள் மூவரும் சிருஷ்டிஸ்திதி ஸம்ஹார மென்னு முத்தொழிலுக்குத் தனித்தனி கர்த்தர்களாகையால் அவ்வத்தொழிலுக்குரிய குணங்களையே பிரதானமாகக் கொண்டு வாழ்வீர்களாக. நான் சராசராத்மகமாகிய சகலப்பிரபஞ்சங்களையும் எப்பொழுது சங்கரிக்கின்றேனோ அதுவரையில் உங்களுக்கு விதித்த சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரமாகிய என்னுடைய லீலைகள் குறைவின்றி நடந்துவரும். அச்சங்காரகாலத்தில் அவைகளுங்கெடும்; நீங்களும் என்னிடத்தில் ஒடுங்குவீர்கள். நான் ஒடுங்கத்தக்கவளல்லள். ஏனெனில், நான் குணங்களோடு

---

* ஆன்மாக்களுடைய தமசை (அஞ்ஞானத்தைப்) போக்கடித்தலாகிய குணத்தில் முற்பட்டிரும்.

கூடுகின்ற காலத்தில் ஸகுணையாயும், அக்குணங்களுக்கு வேறுகின்ற காலத்தில் நிர்க்குணையாயும் இருக்கின்றவளாகையால் குண ரூபங்களாகிய யாவும் ஒடுங்குவதற்கும் உதிப்பதற்கும் காரணமாக விருக்கத்தக்கவளாகும்; அழிவதற்கும் ஆவதற்கும் ஏதுவாகிய காரியப்பொருளாவதில்லை. காரியப்படும் பொருள் களெவையெனின், மகத்தத்துவம், அகங்காரதத்துவம், குணங்கள், சப்தாதிகள் முதலியன. இவைகள் ஒன்றுக்கொன்று முதலாகுங் காலத்தில் அதுவது காரணமெனவும், தத்துவங்கள் காரியப்படுங் காரணங்களெனவும் அறியற்பாலன.

எங்ஙனமெனின், அகங்காரம் முதலாகக்கூறிய தத்துவங்களுக் கெல்லாங்காரணம் மகத்தத்துவம்; அதற்குக்காரணம் சிவ ஸ்வரூப மாகிய யான்; காரணமாகிய நான் ஆதியில் காரியப்படுத்தியது அகங்காரதத்துவத்தை. அதினின்றும் ஸத்துவம் முதலிய மூன்று குணங்களும், மகத்தத்வாத்மகமாகிய புத்தி தத்துவமும் ஏனையவுந் தோன்றின. ஆகவே மகத்தத்வம் அகங்கார தத்துவத்திற்குக் காரணம். மகத்தத்துவத்தினின்றுங் காரியப்பட்ட இந்த அகங்கார தத்துவம் தன்மாத்திரைகளுக்குக் காரணம்; தன்மாத்திரைகள் பஞ்சபூதங்களுக்குக் காரணம். ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்காரணமாகச் சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகம், வாக்காதி கன்மேந்திரிய பஞ்சகம், மனமொன்று ஆகிய இப்பதி னாறுங் காரிய காரணமாகத் தோற்றப்பட்டுவரும். இவ்வாறு ஆதி சிருஷ்டியில் உற்பத்தியாகின்ற யாவும் இப்பொழுது சொல்லி வந்த முறைப்படியேதான் சிருஷ்டியாகுங் கிரமம். இச்செய்தி இங்ஙனமிருக்க ஆதி பரம புருஷராகிய பரமாத்மா (பரசிவம்) காரணமுமன்று; காரியமுமன்று. இந்தப் பரமாத்மா காணப்படு பொருள்போல் காணப்படார்; நிர்க்குணமாய் ஸர்வவியாபகமா யுள்ளவர். நான் எல்லாவற்றிற்குங்காரணமாயிருக்கின்ற அக் காரணத்தால் சகுணையாகவும், ஜீவர்களுடைய இருதயத்தில் நிர் குணையாகவும் இருக்கின்றேன். இதனுண்மை எடுத்துச் சொல்லப் புகின் இப்பொழுது முடிவதன்று. சிலவற்றைச் சங்கிரகமாகச் சொல்லி முடித்தேன். இனி நீங்கள் என்னுடைய காரியார்த்த மாக இந்த விமானரூடராய்ப் போகக்கடவீர்கள். உங்களுக்கு ஏதேனுந்துன்பம் வந்தணுகுமாயின், அக்கணமே என்னை நினையுங் கள். அப்பொழுது நான் தரிசனங்கொடுக்கிறேன். நானும் பர சிவமுமே தியானிக்கத்தக்கவர்கள். உமாமஹேஸ்வரராகிய எங்களைத் தியானித்தால் சர்வ காரியசித்தியும் சந்தேகமில்லாமல் உண்டாகு மென்று அநுக்ரஹித்தனள். ஓ நாரதனே! இவ்வாறு தேவியா னவள் கருணையுடையவளாய் எங்கள் மூவருக்கும் தத்துவோற் பத்தியையும், சிவதத்துவ சக்திதத்துவவுண்மைகளையும் அனுக் கிரஹித்து கலைவாணி முதலிய சக்திகளையுஞ்சேர்த்து நவாக்ஷர மந்திரத்தால் ஸம்ஸ்காரமுஞ்செய்து விடைகொடுத்தனள். நாங்கள் மூவரும் அவரவருக்குரிய மஹா ஸரஸ்வதி முதலிய சக்திகளோடு பிரயாணப்பட்டு தேவீ சொரூபத்தைத் தியானித்து சந்நிதானத்தை

விட்டு வெளிவந்து ஸ்திரீரூபத்தினின்றும் நீங்கி புருஷ ரூபத்தை யடைந்து விமானரூடராய் வரும்பொழுது அந்தத்வீபமும் தேவியும் சமுத்திரமும் நாங்களேறிவந்த விமானமும் மறைந்துபோயின. அப்பொழுது அதிசயித்துப் பார்க்கும்பொழுது முன் மதுகைடபர் எங்கு யுத்தஞ்செய்தார்களோ அங்கு நாங்களிருக்கக் கண்டோம் என்றனர். (65–85)

ஓம் லப்தைஸ்வர்ய ஸமுந்நதத்யை நம:

## 7. தத்துவ நிரூபணம்

ஓ முனிகணங்காள்! மும்மூர்த்திகள் தரிசிக்கப்பெற்ற அற்புதத்தைப் பிரமன் கூறக்கேட்ட நாரதர் பரமானந்தமடைந்து வினவத் தொடங்கினர் :—ஆதியாயும் கெடுக்கப்படாதவராயும், நாசமில்லாதவராயும், குணரகிதராயும், நிஷ்கல்மஷராயுமிருக்கின்ற புருஷன் (பரமாத்மா) ஒருவனுளனென்று தேவி கூறியதாகச் சொன்னீரன்றோ; அவர் எப்பொழுதாவது தரிசிக்கப்பட்டிருக்கின்றனரா? அநுபவிக்கப்பட்டிருக்கின்றனரா? என் தந்தையாகிய ஓ பிரமதேவரே! முக்குணங்களோடு கூடிய சக்தியானவள் காணப்பட்டனளேயன்றி நிர்க்குணையென்று சொல்லிய அச்சக்தி காணப்படவில்லை. அவள் எப்படிப்பட்டவள்? அவ்வுண்மை தெரியவில்லை. ஆகையால் முன் சொல்லிய பரம புருஷனுடைய நிர்க்குண சொரூபத்தையும், நிர்க்குணையா யிருக்கின்ற சக்தியினுடைய சொரூபத்தையும் எனக்குச் சொல்லவேண்டும். நான் முன்னோர் நிமித்தத்தினால் சுவேதத்வீபத்தில் ஓர் அரிய தவஞ்செய்தேன். அப்பொழுது கோபத்தை ஜயித்தவர்களாயும், சித்தபுருஷாளாயும், மஹாத்மாக்களாயுமிருக்கின்ற முனிவர்கள் தரிசனமாயினர். அக்கூட்டத்தில் நீர் சொன்ன பரமாத்மாவானவர் என்னுடைய திருஷ்டிக்கு அவர்களைப்போலும் விஷயமாகக் காணப்படவில்லை. நான் அந்த சுவேதத்வீபத்தில் அடிக்கடியும் தீவிரமாகிய தவத்தைச் செய்திருக்கின்றேன். அப்பொழுதெல்லாம் என்றந்தையே! குணசகிதமாகிய சிவமும், அத்யந்தம் மனோரமையாகிய சக்தியுந்தரிசிக்கப்பட்டனரேயன்றி நிர்க்குணையாகிய சக்தியும், நிர்க்குணராகிய பரமாத்மாவுந் தரிசிக்கப்பட்டார்களில்லை. அவ்வரிய பெரியோருடைய சொரூபங்களைச் சொல்லுமென்று கேட்க, பிரமன் புன்சிரிப்புடன் விடைகூறத் தொடங்கினன். ஓ நாரதனே! குணரகிதராயிருக்கின்ற பரமாத்மாவினுடைய ரூபமானது திருஷ்டிக்குக் கோசரம் ஆகவே மாட்டாது. ஏனெனில், எது த்ருஸ்யமோ, அது நஸ்யம். ஆகையினாலே அத்ருஸ்யமானது எப்படி காணப்படும்? குணரகிதமாயிருக்கின்ற சக்தியும் சிவமும் அறிவதற்குக் கூடாதவர்; அறியவேண்டுமாயின் மஹரிஷிகள்போல் ஞானத்தினாலுணர்ந்து தியானித்தல் வேண்டும். (1–10)

ஓ நாரதனே! ஆதியந்தமில்லாத அந்தப்பிரகிருதி புருஷர் (சக்திசிவங்கள்) அன்பினாலடையத்தக்கவர்; அன்பற்றவர்களா

லடையக்கூடாதவர். சொல்லுக்கு அர்த்தமாய்த் தெரிந்துகொள்ளத் தக்கவர்; தோஜோரூபியாயுள்ளவர்; அவருடைய தேஜஸானது சரம் அசரமாகிய எல்லாப்பொருளிலும் வியாபகத்தையடைந்து நித்யமா யிருக்கின்றபடியால் சிவமும் சக்தியும் எல்லாப் பொருளிலும் வியாபகமாயிருக்கிறதென்று கூறப்பட்டதென்றறியக்கடவாய். ஜகத்தில் சிவசக்திகளைப் பிரிந்திருக்கிற வஸ்து வொன்றுமில்லை. எப்பொழுதும் நாசரகிதர்களாயும், ஒரே வடிவமாக விருக்கின்றவர் களாயும், சித்சொரூபிகளாயும், நிர்க்குணர்களாயும், நிர்மலர்களா யும், இருக்கின்ற அச்சிவசக்திகள் தேகமாகிய ஆலயத்தில் தியானிக்கத் தக்கவர்கள். ஓ நாரதனே! பரசிவந்தான் சக்தி, சக்திதான் பரசிவம். இந்தச் சிவசக்திகளுக்குள்ள அபேதத் தைச் சிறிதேனும் எவனும் அறியமாட்டான். வேதங்களைச் சாங்க மாக அத்யயனஞ்செய்தாலும் அந்தச் சிவசக்திகளா லுண்டாகும் சுகானந்தத்தை யறியலாமேயன்றி அவர்களை எவ்வாற்றானும் அறியமுடியாது. ஸ்தாவரஜங்கமமாகிய ஸர்வப்பிரபஞ்சமும் அகங் காரதத்துவத்தினின்றுந் தோன்றியது. இந்த அகங்காரதத்துவத் திற்கு வேறாகிய சிவசக்தி சொரூபமானது அநேக கற்பங்களாலும் எப்படி காணப்படுவதாகும்? ஏனெனில், குணத்தோடு கூடினவன் நிர்க்குணமான வஸ்துவை நேத்திரத்தினால் எவ்வண்ணம் பார்ப்பான்? ஆகையால் குணமூர்த்தியை நீ அறிவுடன் தியானஞ் செய்வாய். பித்த நீரால் வியாபிக்கப்பட்ட நாவானது உறப்பு முதலிய சுவையையும் உருவம் முதலியவற்றையும் அறியவுங் காணவுங்கூடுமா? அதுபோல், முக்குணங்களால் சூழப்பட்டிருக் கின்ற மனமானது நிர்க்குணமான பரமாத்மாவை எப்படித்தெரிந்து கொள்ளும்? குணங்கள் அகங்காரத்தினின்றுண்டானவை; அதனால் அதன் சம்பந்தமுடையவை. அந்தப் பரமாத்மாவோ அகங்காரத் துக்கு அப்பாற்பட்டவர். எதுவரையில் குணசூனியமாகவில்லையோ அதுவரையில் அந்தப்பரமாத்மாவினுடைய தரிசனம் எப்படி கிடைக் கும்? எப்பொழுது சித்தத்தில் அகங்கார நிவிர்த்தியுண்டாகின்றதோ அப்பொழுது அந்தப்பரமாத்மாவைத் தரிசிக்கலாம். அவர் தூல சூக்ஷ்மாதி பேதங்களால் இரண்டுருவமுடையவரென்று சொல்லப் படுவர். இரண்டில் சூக்ஷ்மமென்று சொல்லப்படும் உருவம் ஞான ரூபம். எப்பொழுது சித்தத்தில் அகங்கார நிவிர்த்தி யுண் டாகின்றதோ அப்பொழுது அந்தப் பரமாத்மாவைத் தரிசிக்கலாம். ஆகையால் குணமூர்த்தியை அறிவுடன் தியானஞ் செய்துவருவாய் என்றனர். (11–21)

நாரதர், மூன்று குணங்கள் இதுஇதுவென்றும், அகங்காரம்-ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்கிற மூன்று பிரிவினையுடைத்தென் றுங் கேட்டிருக்கின்றேன்; அவைகளுடைய சொரூபங்களிவை யிவை யென்று தனித்தனியே சொல்லுவதுமன்றி நான் எதனைத் தெரிந்து கொண்டால் பந்தத்தினின்றும் விடுபடுவேனோ அந்த ஞானாத்மக மான விஷயத்தையும், பலபலவாய் விரிந்திருக்கிற குணங்களையும், விவரமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தனர். பிரமன்,

ஓ பரிசுத்தனே ! சக்தி—ஞானசக்தி, கிரியாசக்தி, திரவிய சக்தி என மூன்றுவகைப்படும். இந்த மூன்று சக்திகளும் முறையே ஸாத்விகம் முதலிய மூன்று குணசம்பந்த முடையவைகளாயிருக்கும். தாமஸ குண சம்பந்தமுடைய திரவிய சக்தியினின்றும் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள் தோன்றும். இவ்வைந்தினையுந் தன் மாத்திரைகளென்று சொல்லப்படும். இவற்றிற்கு அதிதேவதைகள் - வாயு, சூரியன், வருணன், அசுவினி தேவதைகள். இந்த சப்தம் முதலிய வைந்தில் தனித்தனியே சப்தகுணாத்மகமான ஆகாசமும், ஸ்பரிச குணாத்மகமான வாயுவும், ரூபகுணாத்மகமான பிரிதிவியுந் தோன்றும். சப்தம் முதலிய தன்மாத்திரையைந்தும், ஆகாசம் முதலிய பூதமைந்தும் ஆகப்பத்தும் இவைகளை யனுசரித்துத் தோன்றுமவைகளும், திரவிய சக்தியாகிய தாமச அகங்காரத்தினின்றுந் தோன்றுபவைகளாம். சுரோத்திராதிகளைந்தும், வாக்காதிகளைந்தும் ராஜஸ அகங்காரத்தினின்று முண்டானவைகளாம். இவை ஞானேந்திரிய கன்மேந்திரியங்களெனப் பெயர் பெறும். இந்திரிய பஞ்சகங்களும், பிராணாதி வாயுபஞ்சகமும் ஆகப் பதினைந்தும் ராஜஸ அகங்கார சிருஷ்டி என்று சொல்லப்படும். இவையெல்லாங் கிரியாசக்தி சொரூபங்கள். இந்தக்கிரியாசக்தியே உபாதானம் ; இதனுடைய விருத்திகள் மேலே கூறிய தத்துவங்கள். மனம் முதலிய அந்தக்கரணங்கள் ஸாத்விக அகங்கார சிருஷ்டியென்று சொல்லப்படும். இவற்றிற்கு அதிதேவதைகள்—சந்திரன், பிரமன், ருத்திரர், க்ஷேத்ரஜ்ஞர். இனி பஞ்சீகரணமுறையாவது, முதலில் ரசதன்மாத்திரையை எடுத்து அப்பு பூதத்தை யுண்டாக்கி அது போலவே ஏனைய தன்மாத்திரைகளினின்றும் தனித்தனியே புத்தி தத்துவத்தினால் ஏனைய பூதங்களையுமுண்டாக்கி எல்லாவற்றையுஞ் சல தத்துவத்திலடக்கிப் பின்னர் ஜீவனைப் பிரவேசிக்கச் செய்கிற பொழுது நான் என்கிற அகங்காரஞானம் சிறிதுண்டாகிறது ; இவ்வாறான பூதபஞ்சீகரணஞ் செய்து பிண்டமாக்கி அதில் ஜீவப் பிரவேசம் செய்வதாகிய சிருஷ்டியைச் செய்பவன் யான். ஆத்மகிருகமாகிய அந்தத் தேகத்தத்துவத்தை ரக்ஷிக்கின்றவர் பகவானாகிய ஆதிநாராயணர். இவரால் தநுகரணாதிகள் குறைவின்றி நிரம்பி வரும்பொழுது ஒவ்வொரு தத்துவத்தினுடைய குணங்கள் விருத்தியடைகின்றன. அவற்றில் ஓரம்சம் கூறுகின்றேன் : ஆகாசத்தில் ஸத்வகுண விருத்தியொன்றும், வாயுவில் சத்தமும் பரிசமும், அக்னியில் அவ்விரண்டினோடு ரூபமும், அப்புவில் அம்மூன்றினோடு ரசமும், பிருதிவியில் அந்நான்கனோடு கந்தமும் ஆகிய குணங்கள் விருத்தியை யடைகின்றன.

இவ்வாறு குணவிருத்திகளாவதற்கு இடமாயுள்ள சரீரதாரிகளாயுள்ள ஆத்மகோடிகள் எண்பத்துநான்கு லக்ஷம் பேதங்களாகவிருக்கும். இப்பொழுதுகூறிவந்த அண்டபிண்டங்களாகிய உருவங்களெல்லாம் பரமாத்மாவினுடைய ரூபங்களென்று சொல்லப்படும். இந்த விசாரம் வருமிடத்திற் கூறுகின்றேன். இவ்விடத்தில் பிரமாண்டவுற்பத்தி கூறிவந்தேனாகையால் அதனையே விரிவாயெடுத்

துச்சொல்லவேண்டியது அவசியம். ஆயினும் அந்தப் பரமாத்மா ஸ்தூலசூக்ஷ்மாதி பேதங்களால் இரண்டுருவுடையவராகச் சொல்லப் படுகின்றது. இரண்டில் ஒன்ருகிய சூக்ஷ்மமாகிய ஞானரூபம் நிரா காரமாகவும், நிதானம் (எல்லாவற்றிற்கும் ஆதிகாரணம்) ஆகவுஞ் சொல்லப்படுகின்றது. மற்ருென்ருகிய ஸ்தூல ரூபம் உபாசக ருடைய தியானுதிகளில் வருகிற ஸகுண ரூபமாகும். அச்சகுண ரூபம் தூலரூபமென்று சொல்லப்படுமேயன்றி உண்மையில் காணக் கூடாத சூக்ஷ்மரூபமேயாம். எங்ஙனமெனின், அந்தப் பரமாத்மாவி னுடைய சகுண ரூபம் என்னை முதலாயினருடைய சூத்திர ரூபமா யுள்ள சரீரங்களை யசைப்பிக்கக்கொள்ளும் உருவமேயன்றிக் கன்ம சம்பந்தத்தினுல் வரும் உருவமன்ரும். எனவே சிருஷ்டி முதலிய தொழில்களுக்குக் கர்த்தாக்களாயிருக்கிற பிரம்மாதியர் சூத்திரம். சூத்திரம் போன்றவராகிய பிரம்மாதியர் வழியில் சராசராத்மகமாகி ஆன்மகோடிகள் பதுமைபோன்று நிற்பவர்கள். பரமான்மா, ஆன்ம கோடிகள் ஜனனமரண மென்கிற சலிப்பினை யடைய, பிரம்மாதியராகிய சூத்திரங்களை யசைப்பிக்க உருவங்களைக் கொள்ளும். ஓ நாரதனே! நீ "எதையுணர்ந்தால் பந்தத்தினின் றும் விடுபடுவேனே அந்த ஞானுத்மகமான விஷயத்தையும் சொல்லவேண்டும்" என்று கேட்டனையாதலால் அஃது இவ் விஷயந்தானென்று சூசிப்பிக்க ஈண்டெடுத்துக் கூறினே னென்றனர். (22–52)

ஓம் லப்தருத்யை நம:

## 8. ஸத்வ-ரஜ-தமோ குணங்கள்

ஓ அப்பனே! இதுவரையில் நீ கேட்டவைகளுள் சிலவற்றிற்கு விடைகூறிவந்தேன். இனிக் குணங்களுடைய சொரூப லக்ஷணத் தைச் சொல்லுகின்றேன். ஒருமைப்பட்ட மனமுடையவனுய்க் கேட்பாயாக. ஸாத்விகம், ராஜசம், தாமசமென்று சொல்லப்பட்ட மூன்று குணங்களில் ஸத்வகுணமானது வெண்ணிறமுடையதாய்ப் பிரீதிவடிவமாய்ச் சுகத்தை யாதாரமாகவுள்ளது; அந்தச் சத்துவ குணத்தினின்றுந் தோன்றுவன - மாறுபடாமை, சத்தியம், ஆசாரம், சிரத்தை, பொறுமை, தைர்யம், தயை, நாணம், சாந்தம், சந்தோஷம், தர்மானுஷ்டானத்தில் பிரியத்தைச் செய்தல், எப்பொ ழுதும் சத்விஷயத்தில் சிரத்தையை யுண்டுபண்ணுதல், அசத்விஷ யத்தில் சிரத்தையை யுண்டுபண்ணுமை முதலியன. இவைகள் அச்சத்துவத்தில் நீங்காதிருப்பன. இவற்றுள் சிரத்தை மூன்றுவித மென்று தத்வஞானிகள் கூறுவர். அவை ஸாத்விக சிரத்தை, ராஜஸ சிரத்தை, தாமஸ சிரத்தை என்பன. ரஜோகுணமானது சிவந்த நிறமுடையதாய் அப்பிரீதி வடிவமாய்த் துக்கத்தை யாதார மாயுள்ளது. அந்த ரஜோகுணத்தினின்றும் தோன்றுவன-அதிகத் துவேஷம், துரோகம், மாச்சரியம், டம்பம், பேராசை, நித்திரை, அசிரத்தை, மானம், அடங்காமை, கர்வம் முதலியன. தமோகுண

மானது கருமை நிறமுடையதாய் பிரமிக்கச்செய்யு மியல்பா யுள்ளது. இந்தத் தமோ குணத்தினின்றுந் தோன்றுவன—துக் கத்தை விளைவித்தல், பிறருக்குத் தாபத்தை விளைவித்தல், ஆலஸ் யம், அஞ்ஞானம், நித்திரை, தீனபாவம், விவாதம் (சண்டை), கார்ப்பண்யம், கபடம், ரோஷம், வைஷம்யம், நாஸ்திகபுத்தி, புறங் கூறுதல், தமோரூப விஷயங்களில் சிரத்தை முதலியன. ஆகையால் புண்ணியத்தை விரும்புகின்றவன் ஸத்துவகுண விருத்தியை விருத்திசெய்து, ரஜோகுணவிருத்தியை யடக்கி யாண்டு, தமோகுண விருத்தியை யொழித்தல்வேண்டும். இம் மூன்று குணங்களுடைய விருத்திக ளொன்றுக்கொன்று பொருத்த முடையனவாகக் காணப்படாமையால், ஓ நாரதனே! விரோதப் பட்டவைகளாகவே யிருக்கும். இம் மூன்று குணங்களும் பிரியாம லிருக்கின்ற மிதுனராசியைப்போல் ஜீவர்களைவிட்டிருப்பதில்லை. ஆகவே குணங்கள் ஒன்றைப்பற்றியிராம லிருக்கத்தக்கனவன் றென்று அறியற்பாலன. ஜீவர்களைப்பற்றியிருப்பதாகிய முக் குணங்களும் தனித்தனி யிருப்பன அன்று; மூன்றும் சேர்ந்தே யிருப்பன. இவைகளுடைய விருத்திகள் மாத்திரந் தனித்தனி யிருப்பன; இதனைப் பின்னர் கூறுகின்றேன். ஒருவனிடத்து ஸத்வகுணவிருத்தி மேலிட்டிருக்குமாயின் ஏனைய இரண்டு குண விருத்திகளும் அடங்கியிருக்கும். அப்படியே ரஜோகுண விருத்திமேலிட்டிருக்குங் காலத்தில் ஸத்துவ தமோகுணவிருத்தி களும், தமோகுணவிருத்தி மேலிட்டிருக்குங் காலத்தில் ஸத்வ ரஜோகுண விருத்திகளும் அடங்கியிருக்குமென் றறிவாய். ஓ நாரதனே! இப்பொழுது என்னுலே சொல்லப்பட்ட குணரூப விசாரத்தை உணரக்கடவாய். மறுபடியும் சந்தேகம் வைத்துக் கொள்ளவேண்டாம். இவ்வுண்மைகளும், இக்குணங்களும் அனு பவத்திற்கு வருங்காலத்தில் நன்று யறியப்படும். அவ்வனுபவ காலமன்றிக் கேட்பதனுலும், சாத்திரங்களைப் பார்ப்பதனுலும், ஸத்கர்மானுஷ்டங்களை யனுஷ்டிப்பதனுலும், அவை அறியமுடியா. (1–17)

எப்படியென்றுல், பரிசுத்தமாகிய தீர்த்தமகிமையைக்கேட்ட ஒருவன் ரஜோகுண சம்பந்தமாகிய சிரத்தை யுடையவனுய் அத் தீர்த்தத்தை யடைந்து அதன் தன்மையைப்பார்த்து நீராடி, அவ் விடத்திற் செய்யவேண்டிய தீர்த்த சிராத்தாதிக ளியற்றி, தான முங் கொடுத்து, சிலகாலம் வசித்து, பின்னர் முன்னிருந்தது போலவே ரஜோகுணத்தோடு கூடினவனுகவும், ராகத் துவேஷங் கள் நீங்காதவனுகவும் காமக்குரோதங்களாற் சூழப்பட்டவனுகவும் தன்னிடம் வந்து சேருவனுயின் அவனுக்குத் தீர்த்த ஸ்நானுதி களால் வரும் பலன் வந்தனவோவென்றுல் வந்தனவன்று. ஏனெ னில், பயிரிட வெண்ணங்கொண்ட வொருவன் விளை நிலமல்லாத களர்நிலம் முதலியவைகளில் மிகவுங் கஷ்டப்பட்டு உழுதும், விதை விதைத்தும், களைபறித்தல் முதலிய சீர்ப்பாடுகள் செய்தும், மாடு முதலிய மிருகங்களால் கெடுதிவராவண்ணம் இராப்பகல் காத்தும்,

உண்டாக்கிய பயிர் பிரயோசனப்படுங்காலத்தில் பூச்சிகளால் பக்ஷிக்கப்படுமாயின் அவன் வருத்தமுற்றவ னுவனேயன்றிப் பலன் பெற்றவனுவனு? அவ்வுழவனைப் போலவே ரஜோகுண சம்பந்தமாகிய சிரத்தையுடையவனுய்த் தீர்த்த ஸ்நானத்திற்குச் சென்ற இவனும் வருத்தமுற்றவ னுவனே யன்றிப் பலன்பெற்றவ னுகான்; இவ்விருவரும் பெற்றது கஷ்டமொன்றே. ஏனெனில், விதைவிதைக்கத் தொடங்கினவனும் நிலத்திலுள்ள குற்றங்களை யாராயாது விதைத்தவன்; ஸ்நானஞ்செய்யத்தொடங்கினவனும் தன்னுள்ளத்திலுள்ள குற்றங்களை யாராயாது செய்தவன்.

ஆகையால் நிலத்திலுள்ள குற்றங்களை யாராய்ந்தொழித்து, செய்யவேண்டுவனயாவும் முறைப்படிச்செய்து, முடிவில் பிரயோசனமாகிய தானியத்தைப்பெற விரும்பும் உழவன் பலன்பெற்றுச் சுகமுறுவன். தீர்த்தபலனைப்பெற விரும்பினவனும் குணபேதங் களையும், குணங்களின் விருத்திபேதங்களையும் ஆராய்ந்து ஒழிக்க வேண்டுவனவற்றை யொழித்து, கொள்ளவேண்டுவனவாகிய குணங்களைக் கொண்டு, பின்னர் செய்யத்தகுவனவாகிய சத்கர்மங் களைச் செய்து அவற்றின் பிரயோஜனத்தை ஆரம்பத்திற்றுனே பெறவிரும்பாது முடிவிற்பெற விரும்புவானுயின் அவன் அவற் றின் பலன்களைப் பெற்றுச் சுகமுறுவனென்றறிக. (18–32)

சத்வகுண அடையாளம் :—புத்தியானது தர்மானுஷ்டானத் தில் பிரவிர்த்தித்திருக்கச்செய்தலும், தனக்குத் துன்பந்தரும் பாபார்த்தமல்லாத திரவியத்தைத் தேடச்செய்தலும், யஜ்ஞாதி வேதகருமங்களை விரும்பச்செய்தலும், ஸாத்விகமாகிய போகங் களிலே காமத்தைச் செலுத்தச்செய்தலும், மோக்ஷசாதனங்களிற் சிந்தனை யிருத்தச்செய்தலும், ஆன்மலாபத்திற்கு உதவியாகாத ரஜோகுண தமோகுணப் பிரவிருத்திகளிற் செல்லாதிருக்கச் செய் தலும் ராஜஸ தாமஸ குண ரூபிகளிடத்தில் சேராதிருக்கச் செய்த லும், அக்குணவிருத்திகளை வெற்றிகொள்ளச்செய்தலுமாம்.

ரஜோகுண அடையாளம் :—சாஸ்திரசம்பந்தமாயிருக்கின்ற தருமங்களை விட்டுவிடுவதும், ராஜஸ சம்பந்தமாயிருக்கின்ற சிரத்தையடைந்து அசாஸ்திரீயமான தருமங்களைத் செய்வதும், புண்ணியம் பாவமென்னும் பகுப்பின்றி திரவியத்தைச் தேடுவதும், ரஜோகுண சம்பந்தமாகிய போகங்களை விரும்புவதும், ஸாத்விக தருமத்தை வெறுப்பதுமாம்.

தமோகுண அடையாளம் :—வேதத்தினிடத்தும், வேதார்த் தத்தை விளக்கவல்ல சாஸ்திரங்களிடத்தும் அவிச்வாசமும், தமோ குணசிரத்தையடைந்து திரவிய நாசஞ்செய்வதும், எல்லாரிடத்தும் துரோக சிந்தனை யுடைத்தாயிருப்பதும், சாந்தியில்லாதிருப்பதும், கோப மேலிட்டிருப்பதும், மூர்க்கமடைந்திருப்பதும், தன்னிஷ்டம் போல் நடப்பதுமாம்.

இவைகளேயன்றி, இம்முக்குணங்களுக்கும் வேறு குணங் களுஞ் சிலவுள. என்னையெனில், ஸத்வகுணமானது சாஸ்திர ஆராய்ச்சியினுலே விருத்தியடையின் அது பிரகாசமுடையதாய்

ராஜஸ தாமஸ விருத்தி சம்பந்தமான கிருத்தியங்களில் வைராக்கியத்தைச் செய்து ரஜோகுண தமோகுண விருத்திகளையும் நீக்கிவிடும். ரஜோகுணமானது—உலோபசம்பந்தத்தினால் விருத்தியடைவது சத்துவதமோகுண விருத்திகளை நீக்கிவிடும். தமோகுணமானது—அஞ்ஞான சம்பந்தத்தினாலே விருத்தியடைந்து ஏனைய இரண்டு குண விருத்திகளையும் நீக்கிவிடும். இவ்வண்ணம் ஸத்வ முதலிய மூன்று குணங்களில் ஒன்று பிரதானமாகும்பொழுது அது ஏனைய விரண்டு குணங்களையும் நீக்கிவிடும்.

இப்பொழுது கூறிவந்த முக்குண வடையாளங்களும் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொருகுண வடையாளங்களிருப்பதன்று; யாவரிடத்தும் மிதுனதர்மம்போல் மூன்றுவித வடையாளங்களாகச் சொல்லப்பட்ட செய்கைகள் யாவுமிருக்கும். ஏனெனில், ரஜோகுணத்தைவிட்டு ஸத்துவகுணமும், ஸத்வகுணத்தைவிட்டு ரஜோகுணமும், இவ்விரண்டு குணங்களைவிட்டுத் தமோகுணமு மிருப்பதன்றென்றும், இம்முக்குணங்களும் ஜீவர்களை விட்டிருப்பதில்லை என்றும் முன்னமே கூறியிருக்கின்றேனாகையால் அம்முக்குண வடையாளங்களும் ஜீவர்களை விட்டிருப்பனவன்று. ஆகையால் ஜீவர்கள் முயலும் காரியப்பாடுகள் எவ்வெச்சமயங்களில் எவ்வெவ் விதமாய் வருமோ அவ்வக்காரியப்பாடுகளுக்கேற்றவாறு அவ்வக் குணவடையாளங்களுண்டாகும். ஏனெனில் இம்முக்குணங்களும் * பிரசவ (தாயாகும்) தருமம் உடையவை. ஸத்வகுணப் பிரதானனாகவேயிருக்கின்ற ஒருவனிடத்தில் ரஜோகுண தமோகுணங்களும், அப்படியே ரஜோகுணப் பிரதானனிடத்தில் ஸத்வகுண தமோகுணங்களும், தமோகுணப் பிரதானனிடத்தில் ஸத்துவகுண ரஜோகுணங்களும் மண்ணினிடத்தில் கடகலசாதிகள் தோன்றும் வகைபோற்றோன்றுகின்றன. ஆகையால் அறிவுடையவன் தானெடுத்த சரீரத்தைப்பார்த்து இது பாபகர்மத்தினால் வந்ததல்லவா வென்றாராய்ந்து இப்பாவம் புத்தியின்கணிகழ்வதாகிய குணகன்மங்களாலென்றாகித்து இவைகளொழிக்கற்பாலனவாமென் றெண்ணி அந்தோ! இவைகள் தேவதத்தர், விஷ்ணுமித்திரர், யஜ்ஞதத்தர் முதலான பேருடையவரைப்போலும், ஆண்பெண்ணுருவமா யிருக்கின்ற மிதுனராசியைப்போலும் இருப்பனவாகலான் நீங்குவதரிதென்று தெளிந்து சரீரசம்பந்தமுள்ளவரையில் நீங்காதனவாகிய காமம், குரோதம், லோபம், மோகம், ஆசை, துவேஷம், மதம், அசூயை, ஈரிஷை, பொறுமை, மனக்களிப்பு முதலாயினவற்றைத் தினேதினே புத்தியின்கணிகழாவண்ணஞ் செய்து, சரீரத்தையும் சரீரசம்பந்தியாயிருக்கின்ற ஆத்மாவையும் பரிசுத்தஞ் செய்தல் வேண்டும். ஓ நாரதனே! இதுவரையில் ரஜோகுணத்துக்கு ஸத்வகுணசம்பந்தமும், ஸத்வகுணத்திற்கு ரஜோகுண சம்பந்தமும், தமசுக்கு இவ்விரண்டு குணசம்பந்தமும் உண்டென்று

---

* ஒன்றிலொன்று தோன்றுவது. அஃதாவது பின்றோன்றும் பொருளுக்கு முன்தோன்றிய பொருள் தாயாயிருப்பது (காரணமாயிருப்பது).

கூறினேனென்றனர். ஜனமேஜயன், ஓ வியாசரே! நான் இவைகளை யெல்லாம் கேட்டவனாயிருந்தும் மறுபடியுங் கேட்க வேண்டியவனாகவேயிருந்து கேட்டேனென்றனர். (33–51)

ஓம் லப்த லீலாயை நம:

## 9. முக்குணங்களின் தன்மை

நாரதர் பிரமதேவனைப் பார்த்து, ஓ தந்தையே! தேவரீருடைய வாக்கினின்றும் அதிரசமாய்ப் பெருகிய குணலக்ஷணம் முதலியன வற்றைச் செவி என்கிறவாயினாற் பருகியுந் திருப்தியடைந் தேனில்லை; ஆகையினால் எனக்குத் திருப்தியுண்டாகும் வண்ண மாயும், எந்த விஷயத்தினால் யான் மேலாகிய சாந்தியை யடை வேனோ அந்த விஷயமாயுள்ள குணங்களுடைய விசாரஞானமாயு மிருத்தலால் அந்த ஞானத்தைக் கூறவேண்டுமென்றனர். (1–3)

பிரம்மா கூறுகின்றார்:—ஓ நாரதனே! யான் குணங் களுடைய சொரூபம் இத்தன்மைத்தாமென்று நன்றாயறிந்தவ னன்றாயினும் ஒருவாறு என்னறிவுக் கெட்டிய வளவில் கூறுகிறேன்: முக்குணங்களிற் சிறந்த ஸாத்விககுணமே யாவரிடத்திலுஞ் சிறந் திருக்குமென்று நினையற்க. அப்படி ஒருவரிடத்திலும் இருப்பதாகக் காணவில்லை. ஏனெனில், அம்மூன்று குணங்களும் ஒன்றோடொன்று கலந்திருக்குந் தன்மையுடையனவாகையால் எவரிடத்திலும் கலந்தேயிருக்கும். இதற்குச் சில திருஷ்டாந்தங்கள் கூறுகின்றேன்.

சர்வாலங்கார சம்பன்னையாயும் அபிநயபண்டிதை யாயுமிருக் கின்ற ஒரு ஸ்திரீயானவள் தன் புருஷனுக்குத் தாய் தந்தை முதலிய பந்துவர்க்கங்களுக்கும் பிரீதியுடையவளாகவிருக்கின்றாள். அவர்களல்லாத ஏனையோர்க்கும் அவள் நன்னடையும், நல்ல நயமு முடையவளென்றும், கற்பிலக்கணமறிந்து தருமநெறியில் நிற்கும் ஸாத்விககுணமுடையவளென்றும் எண்ணச்செய்து இன்பத்தை விளைவிக்கின்றாள். அவளே சககளத்தியருக்கு மாத்திரம் துக்கத் தையும், அஞ்ஞானமாகிய விபரீதச் செயல்களையும் விளைவித்தற் குக் காரணமாகின்றாள். சககளத்தியருக்கு விளைவித்த துன்பம் ஏனையோர்க்கு விளைவிக்கின்றனளா? அன்றியும், அக்கற்புடைய வளே கள்வருக்குப் பயந்து சிலர் ஓடிவருவாராயின் அவர்களுக்கு உபசாரஞ் செய்கின்றவளாகவும், அக்கள்வருக்குத் துன்பஞ்செய் யும் உபாயங்களைத் தேடுகின்றவளாகவும், தன் புருஷனுக்குப் பரிவாரமாயிருக்கின்ற பரிசனங்களை ரோதனம் பண்ணுகின்றவளா கவும் ஆகின்றாள். எவ்வாறெனின், மேகக்கூட்டங்களாலே சூழப் பட்ட துர்த்தினமானது மின்னல் இடிமுதலியவைகளோடு கூடின தாயும், இருளா லடையப்பட்டதாயும், எங்கும் பெருகிவரும் பிரவாகமுடையதாயும், தாமசரூபமென்று சொல்லப்பட்டதாயும், ஒருவரையும் வெளிவரவொட்டாமற் றடைசெய்வதாயும், சிதிலமான மேற்கூரை யுடையவர்களுக்கும் ஏழைக்குடிகளுக்கும், வைக்கோல் விறகுமுதலிய பொருள்களைக் கொள்ளுகின்றவர்களுக்கும் துன்

பத்தை விளைவிப்பதாயு மிருக்கின்றது; அதுவே பயிரிடும் உழவர்கட்குச் சுகத்தை விளைவிக்கின்றது. அதுபோலும் ஓ நாரதனே! ஸத்துவகுணமானது ரஜோகுண தமோ குணங்களுக்குத் துன்பத்தையும், தன்னினமான விருத்திகட்கு இன்பத்தையுஞ் செய்து கூடிவாழ்ந்துதான் பிரகாசமாகவே யிருக்குமென்றறிவாயாக. (4-19)

ஓ புத்திரனே! இன்னமும் அக்குணங்களுடைய லக்ஷணங்கள் சில கூறுகின்றேன் :—ஸத்துவ குணமானது, பிரகாசமுடையதாய், களங்கமற்றதாய், நேத்திரம் முதலிய இந்திரியங்களுக்கு மனம் எப்பொழுதும் எப்படி விஷயங்களைத் தெளிவாய்த் தெரிவிக்கின்றதோ அப்படி நிர்மலமாயிருக்கின்ற அநேக பரமார்த்தங்களை அறிவிற் கறிவிப்பதாய் விளங்குவது. ரஜோகுணமாவது, கொட்டாவியையும், ஸ்தம்பம்போலசைவற்று அறிவற்றிருத்தலையும் சோம்பலையும் சித்த சலனத்தையும் உண்டு பண்ணுவதாய் ஊருக்குப் போகவேண்டிய ஒருவன் போகும்வழியை எவ்வண்ணந்தேடுவானோ அவ்வண்ணம் பாபந்தேடும் வழியை நன்றாய்த் தேடச் செய்வதாயுள்ளது. தமோகுணமாவது, ஞானத்தை மறைத்துச் சித்தத்துக்குச் சலனமுண்டாக்கிப் போர்புரிவதில் ஆவேசங்கொண்டு தலைப்பட்டிருக்கச் செய்வதாய், இந்திரியங்களுக்குச் சுகத்தைச் சூனியப்படுத்துவதாய், மனம் முதலிய கரணங்களைச் சுவாதீனப் படுத்தாததாய், ஓய்ந்துறங்கவுஞ் செய்யாததாயுள்ளது. ஓ நாரதனே! குணங்களுடைய லக்ஷணங்களை இம்முறையாகவும் அறியவேண்டுமென்றார். நாரதர், ஓ தந்தையே! முன் கூறிய திருஷ்டாந்தங்களால் ஒன்றே சிலவற்றிற்குத் துன்பமாயும், சிலவற்றிற்கு இன்பமாயுமிருப்பதுபோல், குணங்களிருக்குமென்று அறியலாயிற்று. இப்பொழுது கூறிய லக்ஷணங்களை யோசிக்குங்கால் ஒன்றுக்கொன்று பெருஞ் சத்துருத்துவமாகவே காணப்படுகின்றன. இவைகள் ஒன்றாகக்கூடியிருந்து விவகாரங்களை எவ்வண்ணம் பிரகாசமாய் நடத்தும்? அதை விளங்கச் சொல்லவேண்டுமென்று வினவ, பிரமதேவர், ஓ புத்திரனே! முற்கூறிய குணங்கள் தீபவிருத்தியைப்போலிருப்பன. எப்படியென்றால், தகளியும், திரியும், தைலமும் வெவ்வேறாயும், வெவ்வேறு குணங்களை யுடையனவாயும் இருந்தபோதிலும் தீபம் பிரகாசிக்கும்பொழுது அம்மூன்றுமின்றிப் பிரகாசிக்கின்றதா? அதுபோல் ஒரு குணம் பிரகாசிக்கும்பொழுது ஏனைய குணங்கள் தகளி முதலியனபோலிருக்கின்றனவென்றறியற்பாலது என்று கூறவும், நாரதர் அதுவரையில் தான் கேட்டுவந்த வினாக்களுக்கெல்லாம் விடைபெற்று மகிழ்ந்தவராயினார். ஓ மஹரிஷிகாள்! பின்னர் நாரதர் தாம் பிரமதேவரை வினவியதுபோலுந் தம்மை வினவிய வியாசரைப் பார்த்து, ஓ வியாசரே! நீர் என்னை வினவிய வினாக்களுக்கு என் பிதா எனக்குச் சொல்லிய வண்ணஞ் சொன்னேனென்றார். வியாசர் நாரதரிடத்தில் தெளிந்த வண்ணம் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகின்றார் :— (20–32)

ஓ அரசனே! இதுவரையில் தேவி பிரமனுக்குச் சொல்லியதும், பிரமன் நாரதருக்குச் சொல்லியதும், நாரதர் எனக்குச்

சொல்லியதும் முறையாகச் சொல்லிவந்த வகையினால் நீ என்னைக் கேட்ட சந்தேகங்கள் நிவிர்த்தியாயிருக்கலாம். ஆயினுஞ் சில கூறுகின்றேன். யாவராலும் பூஜிக்கப்பட்ட பராசக்தியாகிய பரதேவதையானவள் காரியபேதத்தினால் சகுணையாகவும், நிர்க்குணையாகவும், தனக்கு மேலொரு கடவுளும், துன்பமுமில்லாமல் ஸர்வவியாபகராய், நாசரகிதராய், பராபரராயிருக்கின்ற புருஷனை (சிவரூபமாக) வும் இருக்கின்றாள். இந்த மஹாமாயா சொரூபிணியாகிய தேவியே ஸதஸத் சொரூபமாகிய ஆன்மாக்களைப் படைக்கின்றாள். விநாயகர், சுப்பிரமணியர், பிரமன், திருமால், ருத்திரர், மற்றுமுள்ள தேவர்கள், சூரிய சந்திரர்கள், இந்திராதி திக்பாலகர், அச்வினி தேவதைகள், அஷ்டவசுக்கள், துவஷ்டா முதலாகக் கூறப்பட்ட இவர்களெல்லாரும் சக்திசம்பூதர்களாக விருந்தாற்றான் தங்கள் தங்கள் காரியங்களைச் செய்வதற்குச் சக்தியுடையவர்களாவார். சக்தியம்சம் இல்லாமற் போமாயின் சலிப்பதற்கும் முடியாதவர்களா யின்னமும் கடவுளராகவிரார். ஓ அரசனே ! அந்தப் பரமேச்வரிதான் ஜகத்துக்குக் காரணம். ஆகையால், அந்தத் தேவியை நன்று யாராதனஞ் செய்யக்கடவாய். அத்தேவியினுடைய தந்திரத்தை யனுசரித்துச் சிறந்த பக்தியுடன் தேவி பூஜாத்மகமா யிருக்கின்ற யாகத்தைச் செய்வாய். அந்தச் சக்தியே மஹாலக்ஷ்மி, மஹாகாளி, மஹாஸரஸ்வதி, சர்வ பூதங்களுக்குந் தலைவி, ஸர்வ காமார்த்தங்களைக் கொடுக்கிறவள் ; சாந்தை, சுக முண்டாகும் பொருட்டுச் சேவிக்கத்தக்கவள் ; தயையோடு கூடினவள் ; நாமத்தை யுச்சரித்த மாத்திரத்தில் அபீஷ்டபலன்களைக் கொடுக்கின்றவள் ; ஜிதேந்திரியர்களாய் மோக்ஷத்தை யபேக்ஷித்து முனிகணங்களால் ஆராதிக்கப்பட்டவள் ; புலி முதலிய துஷ்டமிருகங்களால் பயகம்பனுதிகளடைந்து தேவி திருவுருவத்தைப் பார்த்து ஹே தேவீ ! என்று முற்றுஞ் சொல்வதற்கு நாவெழாமல் ஏ ஏ என்று குளறுபடியாய்ச் சொன்னபோதிலும் அடைதற்கரிய அபீஷ்டங்களை அளிப்பவள் ; மந்திர பீஜாக்ஷரத்தைப் பிந்துஹீனமாகச் சொன்னபோதிலும் இஷ்டசித்தியைக் கொடுக்கின்றவள். இதற்குச் சத்தியவிரதனுடைய சரித்திரமே உதாரணமாக விருக்கின்றது. ஓ அரசனே ! வைதிக நிஷ்டராய்ப் பிரமபாவனையிற் சிறந்த எங்களுடைய பிராம்மணக் கூட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிற சத்தியவிரதனுடைய சரித்திரத்தை வரன்முறையாகச் சொல்லக் கேட்டிருக்கிறேன். எங்ஙனமெனில், சத்திய விரதனென்பவன் பிராம்மணனும், எழுத்தென்பதே யறியாத மூர்க்கனும். அவன் பன்றியினுடைய வாக்கினின்றுமெழுந்த தொனியில் தொனிக்கும் எழுத்தைக்கேட்டு அதைத் தான் உச்சரிக்கும்பொழுது பிந்துஹீனமாக ஐகாரத்தை உச்சரித்தனனும். அதற்குத் தயாவதியாயும் பாவபேதினியாயுமிருக்கின்ற பரமேச்வரியானவள் சந்தோஷமடைந்தவளாய் அந்தப் பிராம்மணனைக் கவிராஜனாக்கினளாம். இவ்வற்புதத்தை என்ன சொல்லுவேன், அரசனே ! என்றனர். (33–48)

ஓம் லப்த யௌவனசாலிந்யை நம:

## 10. சத்தியவிரதன் கதை (1)

ஜனமேஜயன் வியாசரை வணங்கி, ஓ தயாநிதியே! சத்திய விரதனென்கிற பிராம்மணன் யார்? எத்தேசத்திற் பிறந்தவன்? எப்படிப்பட்டவன்? பன்றியினுடைய சப்தத்தை எவ்வண்ணம் கேட்டான்? அது எப்படி மந்திர சித்தியை யுண்டு பண்ணிற்று? எங்கும் நிறைந்தவளாயும் சர்வஜ்ஞையாயும் இருக்கின்ற அத்தேவி எப்படிச் சந்தோஷமடைந்தாள்? இவ்வற்புதமாகிய சரித்திரத்தை விரிவாய்க் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனன். (1–3)

வியாசமுனிவர் அரசனுடைய வினாவைக் கேட்டுக் கம்பீர மாயும், கேட்பதற்கு இன்பமாயும் உள்ள விடைகளைச் சந்தேகத்துக் கிடமில்லாத சொற்களால் கூறலுற்றனர். ஓ அரசனே! யான் மஹரிஷிகளுடைய கூட்டத்தில் எவ்வண்ணங்கேட்டிருந்தேனோ அவ்வண்ணமே புராணபத்ததியாயுள்ள அச்சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஓ அரசனே! நான் முன்னொரு காலத்தில் தீர்த்தயாத்திரை செய்து வரும்பொழுது முனிவர்கள் வசிக்கப்பட்டதாயும், பரிசுத்தமாயும் விளங்குகின்ற நைமிச வனத்தை யடைந்து அங்குள்ள ரிஷிகளை வணங்கி அவ்விடத் திற்றானே தங்கியிருந்தேன். அங்கு மஹாநியமத்தை யுடையவர் களும், ஜீவன்முக்தர்களுமான பிரம்மபுத்திரர்களுமிருந்தனர். அப் பொழுது அவ்விடத்தில் கதாப் பிரசங்கம் நடந்தது. அச்சமயத்தில் ஜமதக்னி என்னும் மஹரிஷி சபையோரைப் பார்த்து, மஹானு பாவர்களான ஓ மஹரிஷிகாள்! என்னுடைய மனதில் ஒரு சந்தேக மிருக்கின்றது; அது மகத்துக்களாகிய உங்கள் கூட்டத்திற்றான் தெளியவேண்டும். பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், இந்திரன், வரு ணன், அக்கினி, குபேரன், வாயு, துவஷ்டா, சூரியன், அஸ்வினி தேவதைகள், பகன் என்கிற சூரியன், பூஷா என்கிற சந்திரன், ஏனைய கிரகங்கள் ஆகிய இவர்களுக்குள் பூஜிக்கத்தக்கவரும், அபீஷ்டத்தைக் கொடுக்கின்றவரும், சுகத்தின் பொருட்டுச் சேவிக் கத்தக்கவரும், சீக்கிரத்தில் சந்தோஷித்து அருள்செய்யத்தக்க வரும் யாவர்? விரைவில் கூறுங்களென்றனர். (4–13)

அப்பொழுது அங்கிருந்த லோமசமுனிவர், ஓ ஜமதக்னி முனிவரே! நீர் கூறியவைகட்கெல்லாம் உரியவர் பராசக்தியாகிய தேவியே யாவள். அவளைத்தன்மையாளெனின் பரா (எல்லா வற்றிற்கு மேலானவள்) பிரகிருதி காரணம் ஆகி ஸர்வவியாபினி, ஸர்வதாசிவா (நித்தியமங்களை); தேவர்களிற் சிறந்த பிரமன் முதலிய முத்தேவருக்குந் தாயாயுள்ளவள்; தியானித்தாலும் துதித்தாலும் இஷ்டார்த்தத்தைக் கொடுப்பவள்; எப்பொழுதும் இரக்கமுள்ள சித்த முடையவள்; வரமளித்தற் பொருட்டுச் சேவிக்கத் தக்கவள். அத்தேவிதான் சீக்கிரத்தி லருள் செய்யத்தக்கவ ளென்றறிமின்; இதற்கு அத்தேவி பீஜாக்ஷர மந்திரத்தை ஹீனமாக வுச்சரித்த

அந்தணனுக்குச் சம்பிராப்தமான அற்புதமாகிய ஒரு இதிகாசத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக : (14–17)

கோசல தேசத்தில் தேவதத்தனென்னும் ஓர் பிராம்மணன் புத்திரனில்லாதவனாய் நெடுநாள் வருந்திப் புத்திர சந்தானத்தின் பொருட்டுப் புத்திரகாமேஷ்டி யாகத்தை விதிப்பிரகாரஞ் செய்ய வுத்தேசித்து தமசா என்னும் சிறந்த நதிதீரத்தை யடைந்து சிறப்பாக யாகசாலை மண்டபமமைத்து, சத்கரும விதியுணர்ந்தவர்களாய், வேதாத்தியயன பராளாயிருக்கின்ற அந்தணர்களை வரவழைத்து சாஸ்திர விதிப்படி குண்ட நிர்மாணஞ் செய்து காருஹபத்தியம் முதலிய மூன்றக்னிகளையும் பிரதிஷ்டை செய்து, சுஹோத்ரனென்னும் முனிவரைப் பிரம்மாவாகவும், யாஜ்ஞுவல்கரை அத்வரி (யஜ்ஞத்தை நடத்துவிக்கின்றவர்) ஆகவும், பிரஹஸ்பதியை ஹோதா (ஹோமஞ் செய்கின்றவர்) ஆகவும், பைலரைப் பிரஸ்தோதா (வேதங்களால் தோத்திரஞ் செய்கின்றவர்) ஆகவும், கோபிலரை உத்காதா (சாமவேதகானஞ் செய்பவர்) ஆகவும், ஏனைய முனிவர்களைத் தானப் பிரதிகிரிஹீதா (தக்ஷிணை பெறுதற்குரிய சத்பாத்திரர்) ஆகவும் இருக்கும் வண்ணம் நியமனஞ் செய்து யஜ்ஞம் செய்யத் தொடங்கி யாக கிருத்தியங்கள் தவறாது நடத்திவரும்பொழுது சாமவேதியாகிய கோபிலர் உத்காதாவாயிருந்து சாமகானஞ் செய்கின்றவரானபடியினால் ஸப்தஸ்வரத்தோடுங்கூடிய "ரதந்தர" மென்கிற சாமத்தை ஸ்வரிதத்துடன் கானம் பண்ணும்பொழுது தம்முடைய சுவாசத்தை (மூச்சை) யடக்கிச் சொல்லுவதொழிந்து அடிக்கடி சுவாசத்தை விட்டுவிட்டு ஸ்வரபங்கமாகச் செய்து வந்தனர். தேவதத்தன் அதுகண்டு கோபிலரைப் பார்த்துக் கோபித்து, ஓ முனிசிரஷ்டரே! நான் புத்திராபேக்ஷையினால் நடத்துவதாயிருக்கின்ற இந்த யாகத்தில் நீர் மஹாதேவருக்குப் பிரியகரமாயிருக்கின்ற சாம கானத்தை ஸ்வர ஹீனமாகக் கானம் செய்கின்றீர் ; சுவாசத்தையும் உஸ் என்று விடுகின்றீர். இவ்விரண்டும் அமங்கலக் குறியல்லவா? இதுவென்ன மூடத்தனமென்றனன். இந்த வார்த்தைகளைக் கேட்ட கோபிலர் தேவதத்தரைக் கோபித்து, நீ என்ன கூறினை? உச்வாஸ நிச்வாஸ ரூபமாயிருக்கின்ற பிராணவாயுவானது எந்தப் பிராணிகளாலும் அடக்கக்கூடுமானதன்று. அங்ஙனமிருக்க, சிறிது தளர்வுற்றிருக்கின்ற சரீர தருமத்தாலெனக்குண்டாகிய ஸ்வரபங்க விஷயத்தில் சிறிதும் என்னைத் தூஷித்தல் கூடாது. நீ இதனை ஆராயாது என்னை மூடனென்று கூறியபடியினால் உனக்குப் பிறக்கப்போகிற புத்திரன் மூடனாயும் முறட்டுத்தனமுடையவனாயும், ஊமையாயும் பிறக்கக்கடவன் என்று சபித்தனர். அச்சாப வார்த்தையைக் கேட்ட தேவதத்தன் மிகவும் பயந்து துக்கமெய்தி இனி என் செய்வோமென்றேங்கி மஹாத்மாவாகிய ஓ விப்ரேந்திரரே! நிரபராதியான என்னிடத்தில் நீரேன் வியர்த்தமாய்க் கோபிக்கின்றீர்? பெரியோர்கள் கோபிப்பது அழகாகுமா? பிறரைத் துன்பமுறச் செய்வது அருளுடைமையாகுமா?

இச் சிறு குற்றத்திற்கு இவ்வளவு பெரிய சாபம் இடலாமா ? நான் முன்னமே புத்திரனில்லாதவனாய்த் துக்கத்தில் மூழ்கிக்கிடக்க, இப்பொழுது மேலுந் துக்கத்தையே அதிகரிக்கச் செய்தீர். அந்தோ ! அந்தோ ! இஃது என்ன பாவம் ! வேதவித்துக்கள் மூட புத்திரனை யுடையவன் புத்திரப் பேறில்லாதவனென்று சொல்லுகின்றபடியால் அவன் எல்லாராலும் இகழப்பட்டவன்றானே ? அவன் மிருகத்தைப் போலும், சூத்திரனைப்போலும் விலக்கி வைக்கத் தக்கவன்றானே ? அவன் பூஜ்யனாவனா ? அபூஜ்யன்றானே ? அவன் தானபாத் திரனாவனா ? அவன் வேதகர்மங்களினின்றும் விலக்கப்பட்ட வன்றானே ? இதிற் சந்தேகமு முண்டோ ? என் மகன் ஊமையாய்ப் பிறந்தால் அவன் அத்தியயனத்திற்கும் யோக்கியனாகாமற் போவானல்லவா ? அவனுலகில் வசிப்பானாயின் அவன் அரசனால் சூத்திரனைப்போல் தனக்குப் பகுதி கட்டுகிறவனாக எண்ணப் படுவனேயன்றித் தான் ஆசனமிட்டுத் தானங் கொடுக்கும் சத்பாத் திரனாக எண்ணப்படுவானா ? அப்படியே பிதிர் யஜ்ஞங்களிலும் அந்தணர்களால் பூஜிக்கப்படாதவனா வானல்லவா ? எதற்கும் யோக்கியனாகாத அவன் உழவுத் தொழிலுக்கே உரியவனாவனன்றி வேறெந்த ஸத்கருமங்களுக்குரியவனாவான் ? ஆகான். (18–36)

ஸ்மிருதிகளிலும் வேதாத்யயனமுடைய பிராமணன் கிடைக் காமற்போனால் தர்ப்பை கூர்ச்சம் வைத்து சிராத்தஞ்செய்து கொள்ளலாமேயன்றிப் பிராம்மணனாயிருந்தாற் போதுமென்று மூடப் பிராமணனை வைத்துக்கொண்டு ஒருபொழுதுஞ் சிராத்தஞ் செய்யக்கூடாதெனவும், அவ்வபண்டிதனுக்குப் பசிக்கு அன்னம் மாத்திரம் கொடுக்கவேண்டுமன்றி விசேஷதானஞ் செய்யக்கூடா தெனவும், செய்தால் செய்தவனும், செய்யப்பெற்றவனும் நரகத்தை யடைவார்களெனவும், எந்த நகரத்தில் கல்வியில்லாதவரும் மூடப் பிராம்மணரும் தான சன்மானங்களைப் பெறுதற்குரியவரா யிருப்பவரோ அந்த நகரத்தைவிட்டு நீங்கவேண்டியதெனவும், ஆசனங்கொடுப்பதிலும் மரியாதை செய்வதிலும், மூடர் பண்டித ரென்கிற பேதமில்லாமல் சமமாகச் செய்யுந் தன்மையுடையவர் வசிக்குமிடமும் நிந்திக்கப்பட்டதெனவும், ஆகையால் ஒரு பண்டித னால் இவன் பண்டிதன் இவன் அபண்டிதனென்றறிந்து கொள்ளல் வேண்டுமெனவும், எந்த நகரத்தில் மூடர்கள் தான சன்மானங் களடைவதனால் அகங்காரத்தையடைகின்றார்களோ அந்த நகரத்தில் ஒருபொழுதும் பண்டிதனாயுள்ளவன் வசிக்கக்கூடாதெனவும் கூறு கின்றார்கள். இவ்விசாரங்களை எவனறிவினாலறியாமற் போகிறானோ அவன்தான் துர்ஜனன். அவனுடைய ஆர்ஜித்தாகிய திரவியங்க ளெல்லாம் வேம்பினுடைய பழமானது எப்படிக் காக்கைகளுக்கே உபயோகப்படுமோ அப்படி அசத்துக்களுக்கே உபயோகப்படும். சத்துக்களாவார் யாரெனின் வேதாத்தியயனத்தில் வல்ல பிராம் மணர்கள். அவர்கள் சத்துக்களென்பதற்குப் பிரமாணமென்னை யெனின் முற்கூறிய அந்தணர்கள் எவனுடைய அன்னத்தைப் புசித்துப் பின்னர் வேதபாராயணஞ் செய்வாராயின் அப்புண்ணிய

விசேஷத்தால் அவ்வன்னங் கொடுத்தவனுடைய மூதாதைகள் சுவர்க்கலோகத்தில் சந்தோஷசித்தர்களாய்க் கிரீடித்திருப்பார்க ளென்பதேயாம். ஓ கோபிலரே! பிராம்மண பண்டிதனுடைய பெருமை இவ்வாறெல்லாமிருக்க, எனக்கு நீர் என்ன சொன்னீரையா! ஸம்ஸாரத்தில் புத்திரனில்லை என்கிற சோகத்தை யனுபவிப்பதைப் பார்க்கிலும் மூடனைப் புத்திரனைப் பெற்றுவைத் திருப்பது அதிக துன்பம். ஆகையால் ஓ மஹானு பாவரே! சாபநிவிர்த்தி யுண்டாகும் வண்ணம் ஓரனுக்கிரக வார்த்தை சொல்லும். நீர் தீனர்களை ரக்ஷிப்பதில் சாமர்த்தியரென்று நான் அறிந்தவனாகலான் என்னை ரக்ஷியுமென மிகவும் தீனபாவத்தை யுடையவனாய்க் கண்ணீர்விட்டழுது அவர் பாதங் களில் வீழ்ந்து வணங்கித் தோத்திரஞ் செய்து புலம்பி நிற்ப, கோபிலர் துக்காக்கிராந்தனாய்ச் சரணாகதியடைந்த அத்தேவ தத்தன்பால் கருணைகூர்ந்து, ஓ தேவதத்தனே! பெரியோர்களுக்குக் கோபமுண்டாகுமாயின் ஒரு க்ஷணகாலமிருக்குமே யன்றி நெடுங்கால மிருக்கமாட்டாது; பாவிகளுக்கு மாத்திரம் நெடுங்கால மிருக்கும். ஆகையால் எனக்கு உன்மேலுண்டாகிய கோபாக்கினி, இயற்கையில் குளிர்ச்சியடைய தண்ணீரானது நெருப்பு வெய்யில் முதலிய உஷ்ண சம்பந்தங்களால் உஷ்ணமாய்த் தோன்றுவது போற்றோன்றி பின்னர் உடனே முன்னிருந்த குளிர்ச்சியையே எப்படி யடைகிறதோ, அப்படித் தணிந்துவிட்டது. இனி நீ துக்கிக்கவேண்டாம். என்னுடைய சாபத்தின்படி மூடனாகப் பிறந்திருந்து பின்னர் நல்ல வித்துவானாவானென்று அனுக்கிரகஞ் செய்தனர். (37–49)

தேவதத்தன் அதிக சந்தோஷத்தையடைந்து யஜ்ஞத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்றெண்ணி முன்போல் ஏனைய சடங்கு களையும் விதி முறையாகச் செய்துமுடித்துப் பிராம்மணர்களுக் கெல்லாம் சந்தோஷமுண்டாகும் வண்ணங் கொடுப்பனவாகிய எல்லாப்பொருளுங் கொடுத்தனுப்பி வாழ்ந்து வருநாளில், அழகிற் சிறந்த ரோகிணியைப்போல் அழகுடைய ரோகிணி என்னும் அவன் மனைவியாகிய பதிவிரதை கருப்பமடைந்தனள். அதுகண்ட தேவதத்தன் அடங்காத ஆனந்தமடைந்து விதிமுறையே கர்ப்பா தானம், பும்சவனவிதானம், சிருங்கார கரணம், சீமந்தோந்நயனம் முதலியவற்றை அவ்வக்காலங்களில் குறைவின்றி நடத்தித் தானம் முதலியவைகளும் தந்து நாம் செய்த யாகம் இப்பொழுதுதான் பிரயோசனமுடையதாயிற்று என்றெண்ணிப் புத்திரனை எப் பொழுது பார்ப்போமென்று நாளை எண்ணிக்கொண்டிருந்தனன். அழகில் ரோகிணியாய் பெயரிலும் ரோகிணியாயுள்ள அந்த கர்ப்பிணி ரோகிணி நக்ஷத்திரங்கூடிய சுபதினத்திலேயே புத்தி ரனைப் பெற்றனள். அப்புத்திரனுக்கு வேதமுறையாக நல்ல சுப தினத்தில் சுபலக்கினத்தில் ஜாதகரணமும், "உதத்தியன்" என்று நாமகரணமும் கர்ப்பாதானந்தொட்டெண்ணத்தக்க எட்டாவது

வயதில் உபநயனச் சடங்கும், அதிகச் சிறப்பாக நடத்தினன். உபநயன விரதத்திலிருக்கின்ற அக்குமாரனுக்கு முன்னர் கற்பிக்க வேண்டிய சந்தியாவந்தனத்துக்குரிய அத்தியயனத்தைக் கற்பிக்க அவன் அதனைக் கற்கும் அறிவில்லாதவனுய் மூடனுயிருந்ததலைக் கண்டு தன்னுடைய கஷ்டத்தை நோக்காது அநேகப் பிரகாரங்களாலும் கற்பித்து வந்தனன். அங்ஙனங் கற்பித்தும் அவன் புத்தி அதிற் பொருந்தாமல் மூடத்தன்மையே அடைதலைக்கண்டு மிகவும் மனம் வருந்தி அப்புத்திரனை அத்தியயனத்தினின்று விடுவிக்கவுந் துணியாதவனுய் இன்னமும் பார்ப்போமென்று பன்னிரண்டு வருஷம் இரவும் பகலும் இடைவிடாது அத்தியயனஞ் செய்வித்து வந்தனன். அவ்வளவு காலம் செய்வித்தும் அந்த உதத்தியனுக்குச் சந்தியாவந்தன விதியேனுங் கிரமமாய்ச் செய்வதற்குரிய பாடமும் வரவில்லை. இனி தந்தை என் செய்வான்? அதனுல் அவனுக்கு பிராம்மண குலத்தாராலும் ஏனைய குலத்தாராலும் இவனைப்போல் ஒரு மூடனும் இருக்கமாட்டானென்கிற இழிந்தசொல் பெரும்பாலும் உண்டாயிற்று. அதுவுமன்றி அவ்வனத்தின் வழியாகப் போகின்றவரும் வருகின்றவரும் இவனைப்பார்த்து நகைத்து ஏளனஞ் செய்வார்கள். அதைக்காணும் தாய் தந்தையரும் பந்து வர்க்கங்களும் அவர்கள்பேரில் கோபித்து நிந்திக்காமல் தங்கள் பிள்ளையைப் பார்த்து, அடா! அடா! ஏன் வெளியிலே வந்து உலாவுகின்றுய்? உள்ளே யிருக்கலாகாதாவென்று பயமுறுத்திக் கண்டனஞ் செய்து வருவரேயன்றி இவனை வித்துவானுக்க வேண்டுமென்கிற எண்ணமில்லாமல் வெறுப்படைந்திருந்ததுமன்றி, பிள்ளை குருடாயிருந்தாலும் முடமாயிருந்தாலும் கல்வியறிவொன்றமைந்திருக்குமாயின் அவன்தான் சிலாக்கியமானவன்; கல்வியறிவில்லாதவன் அழகுள்ளவனு யிருந்தபோதிலும் பிரயோசனமென்னவென்று அவனைப் பார்க்குந்தோறும் நிந்தித்தும் பயப்படுத்தியும் வந்தனர். அப்பிள்ளை அவ்வவமானத்தை ஒருநாளெண்ணி யாவரையும் வெறுத்து வைராக்கியமுடையவனுய் அந்த வனத்தை விட்டு வேறொரு வனத்துக்குப்போய் கங்காதீரத்தை யடைந்து தன் மனதுக்குச் சுகமான ஓரிடத்தில் மிகவுஞ் சிரேஷ்டமாகிய ஆச்சிரமத்தை யுண்டுபண்ணிக்கொண்டு இவ்விடத்தில் நாம் ஆகாரமாகக் கொள்ளவேண்டியது கந்தமூல பலங்களென்றும் நமக்கு விரதமாகவிருக்க வேண்டியது பொய்சொல்லாமை என்றும் நியமம் வைத்துக் கொண்டு வாழ்ந்திருந்தனன். (50–65)

ஓம் லப்தாதிசய ஸர்வாங்க ஸௌந்தர்யாயை நம:

## 11. சத்தியவிரதன் கதை (2)

அசத்தியஞ் சொல்லுகிறதில்லை என்கிற விரதத்தை மாத்திரம் மேற்கொண்டிருந்தனனேயன்றிப் பிராம்மண தருமத்துக்குரிய வேதாத்தியயனமும், தேவதைகளைத் தியானஞ் செய்யு முறைமையும், அவர்களைப் பூஜிக்கு முறைமையும், மந்திர ஜபமும், அந்த

ஜபத்துக்கங்கமாகிய ஆசனம், பிராணயாமம், பிரத்யாஹாரம், பூதசுத்தி, மந்திரம், கீலகம், காயத்திரி முதலிய இந்த முறைமைகளில் ஒன்றும் அறியான். இவைகளையறியாமற் போனாலும் காலையில் எழுந்தது முதல் இன்றியமையாமற் செய்யத் தகுவனவாகிய சௌசம், ஸ்நானம், ஆசமனம், ஸந்தி, அக்னிஹோத்திரம், பலிதானம் (பலிகொடுத்தல்), அதிதிபூஜை முதலியவற்றை விதிமுறையறிந்து செய்யவாவது அறிந்துகொண்டவனோ வென்றால் ஒன்றுமறிந்தானல்லன். அவற்றில் அவையாவுமறியா தொழியினும் அக்னிஹோத்திரஞ் செய்கின்றவர்களுக்கு வேண்டுவனவாகிய சமித்துக்கள் இது விதுவென்றுவது, அக்னிஹோத்திரமென்பது இத்தன்மைத்தென்றுவது அறிந்தனனோவென்றால் அவையு மறிந்தானல்லன். இவ்வறிவிலியாகிய பிராம்மணச் சிறுவன் காலையிலெழுந்திருந்து அசத் சூத்திரனைப்போல் தந்தசுத்தி செய்யவும், உடம்பிலுள்ள அழுக்குப்போக நீரில்மூழ்கி எழுந்திருக்கவுங் கற்றுக்கொண்டவனாய் உச்சிப்போதில் தான் தேடாமற் கிடைப்பதாகிய கனிவகைகளை எடுத்துப் புசிக்கத்தக்கது இது புசிக்கத்தகாதது இதுவென்றறியும் பான்மையின்றி எல்லாவற்றையும் உண்ணும் வகையில் தெளிவுடையவனாயும் நித்திரை செய்வதில் வெறுப்பில்லாதவனாயு மிருந்தான்.

இத்தன்மையனாயினும் ஒருவரிடத்தும் பொய்யான வார்த்தையைக் குறிப்பிட்டுச் சொல்லாதவனாய், மெய்யான வார்த்தையையே குறிப்பிட்டுரைப்பவனாயிருந்தான். அதனால் "சத்தியதபன்" என்று அவனை யாவரும் அழைக்கலாயினர். "பொய்யாமை" என்கிற அவ்வொரு நன்மையன்றிப் பிறருக்கு நன்மை செய்யுங் காரியம் இதுவெனவும் தீமைசெய்யுங் காரியம் இதுவெனவும் அறிந்து ஒருவருக்கு ஒரு நன்மையாவது தீமையாவது செய்வதில்லாமல் அந்த அரண்யத்தில் நிர்ப்பயனாய் உலாவி வாழ்ந்திருந்தனன். இவ்வளவு அறியாமையிற் பிறந்த சத்தியதபன் ஒரு நாள் தனக்குத்தானே தன்னுடைய தீனதசையைப்பற்றி எண்ணலாயினன். (1–8)

எவ்வாறெனின், நமக்கெப்பொழுது மானம் வருமோ என்பதும், நாம் இந்தக்காட்டில் மிருகத்தைப்போல் எவ்வளவு காலம் உலாவிக் கொண்டிருப்போமென்பதும் தெரியவில்லை. இப்படிச் சீவித்திருத்தல் மூடர்களுடைய கஷ்டஜீவனமல்லவா? இந்த மூடப்பிழைப்பும் ஒரு பிழைப்பாகுமா? இவ்வண்ணமான பிழைப்புடைய என்போலிகளுக்கு நன்மையாவது யாதெனில், சீக்கிரத்தில் மரணம் வருவதுதானன்றி வேறன்று. நமக்கு இந்த மூடத்தன்மை வந்தது நம்முடைய புத்தி பூர்வத்தினாலன்று; தெய்வத்தின் செயலினாலேயென்று தோன்றுகிறது. வேறுகாரணந் தோன்றவில்லை. ஏனென்றால், நாம் உத்தமமாகிய ஜன்மமெடுத்தும் நல்ல ரூபவதியானவள் மலடியாய்ப் போனதுபோலும், தழைத்திருக்கும் விருக்ஷம் பழம்கொடாததுபோலும், செழிப்புடைய பசு பால் கொடாததுபோலும் வீணாய்ப்போயிற்று. ஓ மகரிஷிகாள்!

பின்னரும், அந்தச் சத்தியதபன் நாம் ஏன் தெய்வத்தை நிந்திக்க வேண்டும்? நாம் செய்த கன்மம் இவ்வாறாகவிருந்தால் என் செய்யலாம்? அதனை யோசிக்குங்கால் நாம் பூர்வ ஜன்மத்தில் உத்தமமான பிராம்மணரிடத்தில் மறுபடியுங் கொண்டுவந்து கொடுப்பதாகப் புத்தகத்தைப் பெற்றுக்கொண்டு கொடாமலிருந் திருக்கலாம்; வித்தையை விரும்பி நம்மைக் கேட்டவர்க்கு நாம் வஞ்சனையோடு சொல்லியிருக்கலாம். இந்தப் பாவங்களால் மூடமும், பிராம்மணதர்ம ஹீனமும் உண்டாயிற்றென்று அறியற் பாலது. (9–13)

இந்தப் பாவகன்மம் செய்ததுபோல் இதற்குப் பரிகாரமா யுள்ள புண்ணியதீர்த்த ஸ்நானமாவது, மந்திர ஜபாதிகளாவது, மகத்துக்களுடைய தரிசனமாவது, திரவியங்களால் திருப்தி யுண்டாகும் வண்ணம் பிராம்மண பூஜையாவது செய்திருப்போ மாயின், இந்த மூடத்துவமாகிய துர்ப்புத்தி நீங்குவதற்கு ஒரு பரிகாரம் நேரிடும். நாம் பரிகாரமான புண்ணிய கிருத்தியங்களுஞ் செய்யவில்லை: பரிகாரமு முண்டாகவில்லை. அந்தோ! அந்தோ! நம்மைப்போன்ற முனிபுத்திரர்களெல்லாம் சகல சாஸ்திர சம் பன்னராக விருக்கின்றார்கள். நாம் மூடப்பிரசன்னனாக விருக் கின்றோம் என்று தனது பூர்வஜன்ம கன்மத்தையும், இந்த ஜன்மத் தில் நேரிட்ட மூடத்தின் கொடுமையையும் பலவாறாக எண்ணி எண்ணி ஏக்கமுற்று இனியாவது பரிகாரந் தேடிக்கொள்ளலா மென்றாலோ பரிகாரமாயுள்ள தவமும், அதற்குரிய விதிமுறையும் ஒரு சாதனமும் அறியாத நாம் என் செய்வோம்? இப்பொழுது நாம் எண்ணுவதெல்லாம் அப்பிரயோசனமே. நமக்குப் பூர்வ புண் ணியம் நன்றாயில்லை; நமக்குத் தெய்வந்தான் துணைசெய்யவேண் டும்; அதுதான் மேலானது; அந்தத் தெய்வப் பிரயத்தினமில்லாமல் மானிடன் செய்யும் பிரயத்தினமும் ஒரு பிரயத்தினமாமா? சீ! சீ!! மானிடப் பிரயத்தினத்தினாற்செய்யுங் காரியத்திற்குத் தெய்வ சகாயம் இல்லாமற்போமாயின் அது வீண் சிரமமாய் முடியும். பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், இந்திரன் முதலியோரெல்லாம் தேவர்களா யிருந்தபோதிலும் உருவத்தோடு கூடினவராகலின் அவர்களெல்லாம் கால தத்துவத்தினுடைய சுவாதீனத்தில் அகப் பட்டவர்களேயன்றி அதனைக் கடக்கும் ஆற்றலுடையவராகார் என்றெண்ணிக்கொண்டே உறங்கி நித்திரை செய்தனன். பின் விழித்தெழுந்ததும் முன்னெண்ணிய வெண்ணத்தை மறவாமல் இர வும் பகலும் அதனையே மனதில் தர்க்கித்துக்கொண்டு மகா பரிசுத்த மாகிய கங்காதீரத்தில் மானிட சஞ்சாரமில்லாத தனியிடத்தில் விரக்தனாய் ராகத்துவேஷமற்றவனாய் பதினான்கு வருஷ காலங் கழித்து வந்தனன். (14-20)

அந்தப் பதினான்கு வருஷ காலத்தைக் கழித்தும் அவனுக்கு வைதீக தர்மமாகிய பூஜையுமில்லை, ஜபமுமில்லை. மேலாகிய காயத்திரி இதுவென்றறியத்தக்க அறிவுமில்லை. இவ்வாறான வைதீக தர்மஞ் சிறிது மில்லாதவனாயினும் பொய்சொல்லா நெறியிற் றவறா

திருந்தானுகையால் இவனைக்காணும் யாவரும் இகழாமல் இவர் பொய் சொல்லாதவர் என்கிற புகழையே கொண்டாடினுர்கள். இவன்பால் ஒரு நாள் ஒரு பன்றியானது ஒரு வேடனுல் அதிவேக மாகவிட்ட பாணத்தினுல் அடிக்கப்பட்டு ஓட்டமெடுத்து நடப் பதற்கும் சக்தியற்றுப் பயமுற்று வந்து விழுந்தது. அதனைச் சத்தியதபன் கண்டு ஆ! ஆ!! இந்தப்பன்றி என்ன நடுங்குகிறது; உதிரம் எப்படிப் பெருக்கெடுத் தோடுகிறது; என்ன வேகமாய் ஓடிவந்தது; உடம்பெல்லாம் ரத்தமயமாயிருக்கிறது என்று மிகவும் இரங்கிய மனமுடையவனுய் அடிக்கடி பார்த்து சரீரம் நடுங்கின வனுய் ஊமையாகையால் நன்ருய்ச் சொல்லளவையாற் கூச்ச லிடுவதற்குக் கூடாமல் "ஹ்ரு - ஹ்ரு" என்கிற தொனியோடு பயந்து கூச்சலிடத்தொடங்கினன். தொடங்கும்பொழுது எக்கா லத்திலுந் தன்னுவினுல் உச்சரிக்கக்கூடாததாயும் காதினுல் கேட் கப்படாததாயும் உள்ள ஸ்ரீவித்யா மந்திரசம்பந்தமாகிய பீஜா க்ஷர உச்சரிப்பு பூர்வ புண்ணியவசத்தாலோ தேவியினுடைய கருணு விசேஷத்தாலோ தெய்வகதியாய் வந்துவிட்டது. அது வந்ததும் அந்தச் சத்தியதபன் அது தேவீ பீஜாக்ஷரமென்றும், அதன் சொரூபம் இத்தன்மைத்தென்றும், அறியப்பெற்றிலனுய் பன்றியைப் பார்த்து அப்போ துண்டாகிய கோபத்தோடு தனக் குள்ள மூடநிலைமையையும் எண்ணித் துக்கித்திருந்தனன். அப் பொழுது அந்தப்பன்றியும் எந்தப்பக்கமும் ஓடிப்போவதற்குக் கூடாமல் பாணத்தால் உடம்பெல்லாம் புண்பட்டு மிகவும் துக்க முடையதாய் அங்குள்ள ஒரு புதரிற்போ யொளித்திருந்தது. ஒளித்துக்கொண்ட ஒரு க்ஷணத்துக்குள் அந்தப் பன்றியைப் பாணத்தினுற் புண்படுத்திய வேடன் அதைத் தேடிக்கொண்டு காலனைப்போலங்கு வந்தனன். அவன் எத்தன்மையனெனில் கடினமாகிய குரூர தேகத்தையும் வேட்டையாடுவதில் அதிக பிரியத் தையும் கண்டோர் யமனென்று அஞ்சத்தக்க பயங்கரத்தன்மையை யும் தனுசும் பாணமும் நீங்காத கையும் விசாலமாயுள்ள வன மெங்குந் திரிந்துலாவி எவ்வுயிரையுங் கொலைசெய்வதில் மிகுந்த சாமர்த்தியமும் உடையவன். அந்த மகா மூடனுகிய வேடன் அறங்களிற் சிறந்த பொய்யாமையையே மேற்கொண்டொழுகும் ஒப்பில்லாத சத்தியதபனென்கிற முனிபுங்கவனைத் தர்ப்பாசனத் தில் வீற்றிருக்கக் கண்டு நமஸ்கரித்து எதிரில் நின்று, ஓ பிராம் மணரே! ஒரு க்ஷணத்துக்குமுன் இவ்வழியாய் என்னுடைய பாணத்தினு லடிபட்டுவந்த பன்றி எவ்வழிபோயிற்று? உம்மை நான் சத்திய விரதரென்றறிவேன்; பொய்சொல்லவேண்டாம்; என் னுடைய குடும்பமானது பசியினுல் மிகவும் வாட்டத்தை யடைந் திருக்கிறபடியால் நான் அதை ரக்ஷிக்கவேண்டியவன். எனக்குப் பிரமன் இவ்விதமான விருத்தியை ஏற்படுத்தி யிருக்கின்ருன். ஜீவிப்பதற்கு வேறு விதமான விருத்தியில்லை. இனி நானொரு உண்மை சொல்லுகிறேன். என்னையெனில், புண்ணியகரம், பாபகரம் என்கிற எவ்விதமான விருத்தியினுலாவது தன்னுடைய

குடும்பத்தை ரக்ஷிக்கவேண்டியது முக்கியமென்று சொல்லியிருக்கிறது. ஆகையால், என்னாலே போஷிக்கத்தக்க குடும்பமானது தவித்துக்கொண்டிருக்கிறது. இது பொய்யென்று எண்ணவேண்டாம்; நான் பொய் சொல்லமாட்டேன்; நீரும் பொய் சொல்லமாட்டீர். ஆகையால் என்னுடைய பாணத்தினால் அடியுண்டு வந்த பன்றி எங்கேயிருக்கிறது? உம்மை நான் மிகவும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன். சீக்கிரமாகச் சொல்லுமென்று ஒரு முறைக்கிருமுறை கேட்டனன். (21–33)

அவ்வேடன் வாய்மொழியைக் கேட்ட ரிஷிபுத்திரன் ஆலோசிக்கலாயினன். என்னை யெனில், இந்த வேடன் குடும்பத்தைப் போஷிப்பதே முக்கிய தருமமென்றும் அதற்காகத் தனக்கமைந்த தொழில் கொலைத்தொழிலென்றும், அதுதான் தனக்கு விதித்த விதி என்றும், இது பொய்யல்ல மெய்யென்றுங் கூறுகின்றான்; இஃதுவுண்மையே. நாம் அவன்கூறும் உண்மையை நாடி நீ தேடிவந்த பன்றி இதோவிருக்கின்றது என்று சொல்லிவிடுவது தான் உண்மை நெறி யென்று சொல்லி விடுவோமாயின் அது உண்மையாகமாட்டாது; பொய்மையேயாகும். ஏனென்றால், சத்தியம் அசத்தியம் (மெய் - பொய்) என்பது அஹிம்சை, ஹிம்சை என்று சொல்லப்படும் விஷயங்களெவைகளோ அவைதான். எனவே உயிர்களுக்குச் சௌக்கியம் செய்வது (துன்பஞ் செய்யாதிருப்பது) எதுவோ அது அஹிம்சை; அசௌக்கியம் செய்வது (துன்பஞ்செய்வது) எதுவோ அது ஹிம்சை. இந்த ஹிம்மைதான் அசத்தியம்; அந்த அஹிம்சைதான் சத்தியம். சத்தியா சத்தியங்களுக்கு இப்பொழுது சொல்லிவந்த நியாயத்துக்கு வேறாக ஒரு நியாயமுங் கிடையவே கிடையாது. நாம் இப்பொழுது பன்றியிருக்கிறது என்று சொல்வோமானால் பன்றிக்கு ஹிம்சையும் வேடனுக்கு அஹிம்சையும் செய்தவனாகிறோம். பன்றியைக் காட்டிக் கொடுக்காமலிருந்தால் பன்றிக்கு அஹிம்சையும் வேடனுக்கு ஹிம்சையும் செய்தவனாகிறோம். இந்தப் பன்றிக்கும் வேடனுக்கும் அஹிம்சை செய்யாதவிதம் எப்படி? சத்தியதப னென்கிற நம்முடைய பெயரையுங் காத்துக்கொள்ளும் விதம் எப்படி? இது விருத்த தரும (மாறுபட்டதரும)மா யிருக்கின்றதே என்று தோன்றிய தரும சங்கடமாகிய சங்கைகளில் மிகவும் மூழ்கினவனாய் வேடன் கேட்ட கேள்விக்கு யுக்தமான வார்த்தை சொல்ல வறியாமல் பன்றியிருக்கும் புதருக்குச் சமீபத்திற்போய் அதைப் பார்த்து இரங்கிய மனத்துடன் முன்போல் தேவியினுடைய வித்யா பீஜோச்சாரணையைச் செய்ய, தேவி கருணைகூர்ந்தவளாய் எழுந்தருளிவந்து யாவராலும் அடையவொண்ணாத வித்தையை அனுக்கிரஹம் செய்து மறைந்து போயினள்.

இவ்வாறு தேவியால் அனுக்கிரகிக்கப்பெற்ற ரிஷிபுத்திரன் அப்போதே ஸகல சாஸ்திர பாரங்கதனாய் பூர்வத்திலுள்ளவராகக் கேள்விப்படுகிற வான்மீகியைப்போல் கவீச்வரராய்த் தன்னெதிரில்

நின்ற வில்லாளியாகிய வேடனைப் பார்த்து *"யா பஶ்யதி" என்கிற சுலோகஞ் சொல்லியருளினர். அந்தச் சுலோகார்த்தமாவது, "எவன் பார்க்கின்றானோ அவன் சொல்லுகின்றானில்லை, எவன் சொல்லுகின்றானோ அவன் பார்க்கின்றானில்லை, தேகப் பிரயோஜனத்தையே கருதியிருக்கிற ஓ வேடனே! அடிக்கடி என்ன கேட்கின்றாய். ஆ! ஆச்சரியம்!" என்பதாம். இந்த அர்த்தமுடைய சுலோகத்தைக் கேட்ட வேடன் அந்த அருள்வாக்காகிய சுலோகத்தைக் கேட்கப்பெற்ற புண்ணிய விசேஷத்தால் அப்பன்றியினிடத்தில் ஆசையற்றவனாய் ஒரு வார்த்தையுஞ் சொல்லாது வீட்டுக்குப் போயினான். தேவியினுடைய அனுக்கிரக சீலராய் விளங்கிய ரிஷிபுத்திரர் சத்தியத்திலேயே பிரியமுடையவராய் தர்மாத்மாவாய், சர்வஜீவ தயாபரராய், இரண்டாவது வால்மீகி என்னக் கவீஶ்வரராய்ச் கங்கா தீரத்திலிருந்து ஸ்ரீ வித்தையை விதிமுறையாக ஜபித்து நிறைந்த கல்விக் களஞ்சியமாய் எங்கும் மஹா பண்டிதரென்று பிரசித்திபெற்றனர். இவரது மகிமையைக் கேள்வியுற்ற மஹரிஷிகளெல்லாம் இவருடைய கீர்த்திகளைப் புண்ணியகாலங்கடோறும் பாராயணம்போலெடுத்துப் பாடுகின்றவராயும் இவருடைய சரித்திரத்தை விரிவாயெடுத்து ஸ்தோத்திரரூபமாகச் செய்து ஸ்தோத்திரஞ் செய்கின்றவராயு மிருந்தனர். இவ்வற்புதத்தைத் தாய்தந்தையர்களும் கேள்வியுற்று அதிசயித்தவர்களாய் மிக்க ஆவலோடு அவராச்சிரமத்தை யடைந்து தமது புத்திர சிகாமணியைக் கண்டு அதிக மரியாதையுடன் அழைத்துக்கொண்டு தங்களாச்சிரமம் போய்ச்சேர்ந்தனர். (34-46)

ஓ அரசனே! பன்றி மொருவிய ஒலிக்குறிப்பைக் கண்டு தானும் மொருவ அவ்வொலியைத் தேவியானவள் தன்னுடைய மந்திரபீஜாக்ஷரத்தை யுச்சரித்ததாகத் திருவுளத்திலெண்ணி அவனைக் கவிவாணனுக்கி யாவரும் புகழும் வண்ணம் செய்தாளென்றால், அவள் கருணையை என்னவென்று சொல்லலாம்! ஆகையால் அக்கருணைமூர்த்தியாகிய பரதேவதையே எப்பொழுதும் சேவிக்கத்தக்கவளும், பக்தியுடன் பூஜிக்கத் தக்கவளுமாவள். ஓ அரசனே! எல்லா உலகங்களுக்கும் ஆதிகாரணியாயிருக்கின்ற அந்தத் தேவியின் யஜ்ஞத்தை வேதவழியாகச் செய்வாயாயின் அது எப்பொழுதும் அன்பர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களையுங்கொடுக்கும்; இது சத்தியம். அந்தத் தேவி மனதால் நினைக்கப்பட்டவளாகவும், பக்தியுடனே பூஜிக்கப்பட்டவளாகவும், தியானிக்கப்பட்டவளாகவும், உச்சரிக்கப் பட்டவளாகவும், துதிக்கப்பட்டவளாகவும், வேண்டுவார் வேண்டும் அபீஷ்டங்களைக் கொடுக்கத் தக்கவளாகவும் இருக்கின்றாளாகையால் அத்தேவியைப் பண்டிதர்கள் "காமதா" என்று துதிக்கின்றார்கள். அத்தேவியைத் துதித்தல், உச்சரித்தல், தியானித்தல், பூஜித்தல், நினைத்தல் முதலியன

---

* யா பஶ்யதி நஸாப்ரூதே யாப்ரூதே ஸா நபஶ்யதி ।
அஹோ வ்யாத ஸ்வகார்யார்த்தின் கிம ப்ருச்ச்ஸி புந: புந: ॥

செய்யாதவர்கள் யாரோ அவர்கள் ரோகமுடையவராயும், அன்ன மில்லாமற் பசித்தவராயும், ஏற்போருக்குக் கொடுக்கும் பொரு ளில்லாதவராயும், அறிவில்லாதவராயும், பிறராற் பீடிக்கப்பட்டவ ராயும், சாஸ்திரவுணர்ச்சி யில்லாதவராயும், ஸத்ரூபத்தை யுணரும் உணர்ச்சி யில்லாதவராயும், ஏவலாளிகளுக்கு ஏவலாளராயும், அற்பபுத்தி யுடையவராயும், அங்கஹீனராயும், மந்தபுத்தி யுடையவ ராயும், போஜனத்திலும் போகத்திலும் திருப்தி பெறுதற் கில்லாதவ ராயும், இந்திரியங்கள் போகுமார்க்கத்தைத் தடுப்பதற்குக் கூடாத வராயும், பேராசை யுடையவராயும், அஜ்ஞானத்தாற் பீடிக்கப் பட்டவராயும் இருப்பர். தேவியினுடைய தியானம் முதலியவற் றோடுங் கூடினவர்கள் வேதாத்தியயனம் முதலிய பாண்டியத் திறமையோடும், தேக காந்தியோடும், புத்திர சம்பத்தோடும், ஐஸ்வர்யத்தோடும், திருப்தியான போகத்தோடும், ராஜலக்ஷ்மி யோடும், சூர பராக்கிரமத்தோடும், ஜன வாச்சல்யத்தோடும், சூழ்ந்த பந்துக்களோடுங் கூடியிருப்பர். ஓ அரசனே ! இவ்வாறுன ஐஸ்வர்யங்களைக் கொடுக்கின்ற தேவியைப் பூஜிக்காதவர்கள் யார் ? மஹா தாபரூபமாகிய இந்த ஸம்ஸாரத்தில் தேவியினுடைய அனுக் கிரஹம் பெற்றவர்கள்தாம் சுகமாக விருக்கின்றவர்க ளென்றும் அனுக்கிரகம் பெருதவர்கள்தாம் முன் கூறியவாறு ரோகம் முதலிய வற்ருல் பீடிக்கப்பட்டு ஸம்ஸாரத்தில் துக்கமுற் றிருக்கின்றவர்க ளென்றும் அனுமானிக்கற் பாலது, என்று வியாசமுனிவர் தாம் நைமிச வனத்திற் போயிருந்தபொழுது அங்கிருந்த முனிவர் கூட்டத்தில் உரோமச முனிவர் தேவியினுடைய மகிமையை எடுத் துரைத்ததாக ஜனமேஜயனுக்குக் கூறினர். (47–58)

ஓம் லப்த விப்ரமாயை நம:

## 12. தேவீ யக்ஞ முறை *

ஜனமேஜயன் வியாசமுனிவரைப் பணிந்து, ஓ வியாச பகவானே ! தேவியினுடைய யக்ஞவிதியில் கூறப்பட்டுள்ள பூஜா விதியையும், மந்திரங்களையும், ஹோமசாதனத் திரவிய விசேஷங் களையும், பிராம்மண சங்கியையும், தக்ஷிணை சங்கியையுமாகிய இவைகளில் ஒன்றேனும் விடாமல் பூர்த்தியாகச் சொல்லல் வேண்டும். அங்ஙனஞ் சொல்லுவீராயின் நான் அந்த விதிகளைக் கேட்டு என்னுடைய சக்திக்கேற்றவாறு செய்கிறேன் என்று விண்

* தேவியானவள் தனதருளை மிக வெளிமையாக வழங்கும் திறத்தை இதுகாறுங் கூறியதாகும். இனி இந்த மூன்ருவது ஸ்கந்தம் முதலத்தி யாயத்தில் ஜனமேஜயன் வியாசபகவானை "அம்பாபிதம்" என்கிற தேவீயஜ்ஞத்தைப் பற்றிய விதி முறைகளை வினவிய வினக்களுக்கு அவர் அருளுடையராய் அந்த யஜ்ஞத்தின் உண்மைப் பொருளையும் அதன் விதி முறையையும் சிவசக்தியின் பிரபாவத்தையும் மேன்மேலுஞ் சிரவணஞ் செய்ய அவாவி நிற்கும் அந்தணர்களாகிய நைமிசாரண்ய முனிவர் களுக்குச் சூதமுனிவர் எடுத்துக்கூறிய வரலாறு வருதல் காண்க.

ணப்பஞ்செய்ய, வியாசர் ஜனமேஜயனை நோக்கி, ஓ அரசனே ! நீ கேட்டவாறு தேவியினுடைய யஜ்ஞத்தை விதி முறையாகச் சொல்லுகிறேன். (1–3)

அந்த யஜ்ஞவிதியானது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூன்று விதமா யுள்ளதென்று நூல்களில் சொல்லப்பட் டிருக்கிறது. அவற்றுள் அந்தணர்களுக்கு ஸாத்விக யஜ்ஞமும், க்ஷத்திரியர் களுக்கு ராஜஸ யஜ்ஞமும், அசுரர்களுக்குத் தாமஸ யஜ்ஞமும், இம் மூவருமல்லாத ஞானிகளாகிய முக்தாத்மாக்களுக்குக் குண ரஹித மாகிய ஞானயஜ்ஞமும் விதித்திருக்கின்றன. இந்தப் பேதங் களை விவரமாய்ச் சொல்லக் கேட்பாயாக : (4–5)

ஸாத்விக யஜ்ஞமாவது :—தேசம், காலம், திரவியம், மந்திரங் கள், பிராம்மணர்கள், சிரத்தை ஆகிய இவைகளோடு கூடியதாகும். இவற்றுள் திரவியமும், கிரியையும், மந்திரமும் சுத்தமாயுள்ள பக்ஷத்தில் அதற்குரிய பலன் குறைவின்றி வரும். இம் மூன்றில் திரவியம் சுத்தமற்றதாகிய அன்யாயார்ஜ்ஜிதமாயுள்ள பக்ஷத்தில் இம்மையிலும் மறுமையிலும் கீர்த்தியுண்டாக மாட்டாது. ஆகை யால் இம்மையில் சுகத்தின்பொருட்டும் மறுமையில் பரலோகத்தின் பொருட்டும் இந்தச் சாத்விக யாகத்தை நியாயார்ஜிதமாகிய திரவியத்தினலேயே செய்யவேண்டும். ஓ அரசனே ! நியா யார்ஜியத்தாற் செய்வது எதுவோ அதுதான் இகத்திற்கும் பர லோகத்திற்கும் நன்மையாகும். (6–9)

அன்னியாய ஆர்ஜிதம் ஆகாதென்பதற்குச் சில வரலாறு கூறுகின்றேன் : ஓ ஜனமேஜயனே ! குறைவற்ற தக்ஷிணை யோடு கூடினதாயும், யஜ்ஞ சிரேஷ்டமாயும் விளங்கும் இராஜ சூய யாகத்தை உன்னுடைய வம்சத்தவராகிய பாண்டவர்கள் மிகவும் பிரசித்தமாய் நடத்தினர்களல்லவா ? அந்த யாகத்தில் சுத்தாத்மாவும், யாதவ சிரேஷ்டரும், ஸாக்ஷாத் நாராயணருமாகிய கிருஷ்ணமூர்த்தியும், சாங்கமாக அத்தியயனஞ் செய்த பரத்வாஜர் முதலிய பிராம்மணர்களும் பிரவர்த்தகர்களாக விருந்தன ரல்லவா ? இவ்வண்ணம் எவ்விதத்திலுங் குறைவின்றி முடித்த ஒரு மாதத்திற் குள் மஹா கஷ்டமும், வருத்தமாகிய வனவாசமும் அடையப் பெற்றனர். அந்தோ ! அவர்களுக்குச் சொக்கட்டானடுவதில் அபஜயமும் திரௌபதியினுடைய மானபங்கமும், கஷ்டதரமாகிய வனவாசத்தில் விராடராஜனுடைய சேவகா விருத்தியும், திரௌ பதிக்குக் கீசகனல் மிகவுங் கிலேசமும் வந்துவிட்டதல்லவா ? அச் சமயங்களில் யாகபலனும், சுத்தமாகிய இருதயமுடைய பிராம்மண ருடைய ஆசிர்வாதமும், கிருஷ்ணரிடத்திலிருந்த பக்தியும் எப்படிப் போயின ? ஓ தருமசீலனகிய அரசனே ! திரௌபதியினுடைய நீண்ட கூந்தலைத் துச்சாதனன் பிடித்திழுத்தன னல்லவா ? அக் காலத்தில் எந்தப் பலனுந் துணைசெய்ய வில்லையே ! தெய்வத் தன்மையுடைய கிருஷ்ணமூர்த்தியும், தருமப் பிரபுவாகிய தருமரும் இருந்தார்களே ! இவர்களிருக்கிறபொழுது தருமத்துக்குக் குறைவு வந்த காரணம் எதுவென்று யோசிக்கற் பாலது. ஆனல் நடக்க

வேண்டியது எதுவோ அது நடந்தது என்று உலகத்தார் சொல்லு வது போல் சொல்லும் பக்ஷத்தில் சாஸ்திரம் நிஷ்பிரயோஜன மாகிறது. வேதமந்திரங்களும், ஏனைய விதிகளும் வீணாகவே முடிகின்றன. இதிற் சந்தேகமில்லை. சந்தேகமில்லையாயின் புண்ணியார்ஜிதங் களுக்குரிய சாதனங்களையும், அவ்வப் புண்ணியங்களுக்கு விதித்த விதிகளையும் எடுத்துக் கூறும் சாஸ்திரங்களெல்லாம் அப்பிரமாணமாய் அபலமாவதிற் றடை யில்லை. அபலமாகும்பொழுது சுவர்க்க நிமித்தமாகச் செய்யுந் தவம் முதலியவைகளும், வர்ணதருமங்களும் பயனற்றனவாய் முடியும். இதுபோலவே எல்லாப் பிரமாணங்களும் வீணென்று சொல்லுவ தற்கே வரும். ஆகையால் தெய்வப் பிரயத்தினமும் சிந்திக்க வேண்டும். இதற்குப் பண்டிதர்கள் கூறுவது என்னையெனின், ஒருவன் கர்மானுஷ்டானஞ் செய்யும்பக்ஷத்தில் அதனால் அவனுக்கு வரும் பிரயோஜனம் மாறுபாடாக முடியுமாயின் அதனை அவன் செய்யுந் தொழிலிலுண்டாகிய தவறினாலென்று கூறுவரேயன்றிச் சாஸ்திரங்கள் தவறுடையனவென்று கூறார். ஆனால் கன்மகாண்ட மாகிய ஸ்மிருதிகளைச் செய்திருக்கின்ற வித்வான்களாலே சத் கர்மங்களை அநேக விதமாய்ச் சொல்லப்பட்டிருப்பானேனெனில், செய்கிறவனுடைய குற்றத்தினாலும், மந்திர தோஷத்தினாலும், திரவிய தோஷத்தினாலும், செய்கையுற அதனால் விளைவதாகிய சுகதுக்கரூபமான பிரயோஜனங்களும் பலவகையாய் முடிதலால் அங்ஙனஞ் சொல்லப்பட்டன வென்க. (10–22)

எங்ஙனமெனின், முன்னொருகாலத்தில் இந்திரன் யஜ்ஞஞ் செய்யு நிமித்தம் விஸ்வரூப னென்பவனைக் குருவாகக் கொண்டான். அவன் தேவர்களுடைய சுகத்தின் பொருட்டுச் செய்யத்தொடங்கிய அந்த யாகத்தில் அசுரர்கள் திதியினுடைய புத்திரர்களாதலால் அந்தத் திதியினுடைய சுகத்தையும் உத்தேசித்து "அசுரர்களுக் கும், தேவர்களுக்கும் மங்களம் உண்டாகுக" வென்று அடிக்கடிச் சொல்லிச் செய்துவந்தனன். அதனால் அசுரர்கள் முன்னிலும் விசேஷமான வலியுடையவராயினர். அதனைக் கண்ட இந்திரன் கோபமுடையவனாய் அந்த விஸ்வரூபனுடைய தலையை வெட்டி னான். அதனால் அந்த யாகம் விபரீதமாகப் போயிற்று.

துருபதமஹாராஜன் அதிகமான குரூரத்துடன் துரோணாச் சாரியரைக் கொல்வதற்கும், புத்திரோற்பத்திக்கும் யாகம்செய் தனன். அவனெண்ணியவாறே த்ருஷ்டத்யும்னனும், யாகாக்னியில் திரௌபதியும் உண்டாயினர். புத்திரஹீனனாகிய தசரத மஹா ராஜன் புத்திர காமேஷ்டி யாகஞ்செய்தான். அதனால் நான்கு பிள்ளை களும் பிறந்தார்கள். இங்ஙனம் கூறிவந்த இவர்களெல்லாம் யாகங் களைச் செய்தவர்களாகவும், அதனதன் பலனைப் பெற்றவர்களாக வும் இருப்பினும் குற்றம் விளைவித்தவர்களேயாவர்.

எங்ஙனமெனின், விஸ்வரூபன் அசுரர்களுக்கும் மங்களம் உண்டாகுகவென்று கூறியதை எண்ணுங்கால் அவ்வெண்ணம் தேவர்களுக்கு மங்களம் உண்டாக வேண்டுமென்று எண்ணிய

தாகுமா? ஆகலான் எண்ணம் வேறுபட்டவனை அதில் வைத்த தனால் அவனும் அவன் சொல்லிவந்த மந்திரத்தினும் தோஷ முண்டாயிற்று; தருமபுத்திரரை யோசிக்குங்கால் அவர் சத்திய வாதி; அவருடைய தம்பிமார்களும் அத்தன்மையாளர்; பத்தினியோ மகாபதிவிரதை; இவர்களெல்லாம் அத்தன்மையராயிருந்தும் அவர்கள் சொக்கட்டாடிய காலத்தில் தோல்வியடையவும், அதுகாரணமாக வனவாசம் முதலிய அநேக கஷ்டங்களை அனுபவிக்கவும் நேர்ந்ததற்குக் காரணம் ராஜசூய யாகத்திற்கு ஆர்ஜித்த திரவியதோஷ சம்பந்தத்தால் அங்ஙனமாக விபரீதமாகிய பலங்கள் உண்டாயின; தசரதனும், துருபதனும் பின்வருங்கெடுதிக்குப் பரிகாரம் யுக்தியினற் றேடிக்கொள்ளாமற் போனதனால் துக்கங்கள் விளைந்தனவென்று அறியற்பாலன. (23–32)

ஓ ஜனமேஜயனே! முன்கூறிய யக்ஞத்தை அதி துர்லபமாகவும், க்ஷத்திரியர் முதலியோரால் செய்யப்பட்ட ராஜஸ யக்ஞாதிகள்போல் தோஷமுடைய தல்லாததாகவும், வைகாநசர் முதலியோரால் யுக்தமாக அங்கீகரிக்கப்பட்டதாகவும், வனத்திலே யுண்டாக்கப்பட்ட பரிசுத்தமாகிய திரவியங்களோடு கூடினதாகவும் நினைக்கவேண்டும்.* புரோடாசபரமாயும் மிகுந்த யூபஸ்தம்பமுள்ளதாயும், மிகுந்த விதி பூர்வகமான மந்திரங்களோடு கூடினதாயும் உள்ள யாகங்கள் எவைகளோ அவைகளையும் ஸாத்விக யக்ஞங்களென்றே கொள்ளல்வேண்டும். இந்த ஸாத்விக யக்ஞத்தைச் செய்யும் மஹரிஷிகள் நாடோறும் ஸாத்விக போஜனத்தையே செய்வார்கள். (33–36)

இனி ராஜஸ யக்ஞமாவது திரவிய மிகுதியை யுடையதாயும், பொறாமையோடு கூடினதாயும், பக்ஷபாதத்தோடு கூடினதாயும், க்ஷத்திரிய வைசியர்களால் செய்யப்பட்டதாயு முள்ளதெனவும், தாமஸ யக்ஞமாவது கோபத்தோடும், அகங்காரத்தோடும், குரூர பாவத்தோடும் கூடினதாயும் உள்ளதெனவும் பெரியோர் கூறுவர். இம்மூவகை யக்ஞங்களன்றி மானசிக யக்ஞமொன்றுளதென்று கூறுவர். அது, விரக்தர்களாய் மோக்ஷாபேக்ஷிகளாயுள்ள மகத்துக்களாகிய மஹரிஷிகள் மனோதர்மத்தினால் ஸர்வஸாதனத்தோடுஞ் செய்வதாகும். இந்த மானசிக யக்ஞமல்லாத மற்ற யக்ஞங்களில் திரவியத்தினாலாவது, சிரத்தையினாலாவது, கிரியா விதியினாலாவது அந்தணர்களாலாவது, தேச காலங்களினாலாவது, வெவ்வேறுயுள்ள சாமக்கிரியைகளினாலாவது சிறிதானுங் குறைபாடுண்டாகும். மானசிகமாகிய அந்தர்யாகமானது யாதொரு குறைவின்றி நடக்கும். அதுபோல் புறம்பே செய்வதாகிய முன்கூறிய பகிர் யாகங்கள் குறைவின்றி நடக்கமாட்டா. ஆனால் அந்தர்யாகத்தை யபேக்ஷித்த அதிகாரியானவன் முன்னர் முக்குணங்களுடைய விருத்திகள் தோன்றுவண்ணம் மனோசுத்தியைச் செய்யவேண்டும். மனம் சுத்தத்தையடையுமாயின் தேகமும் சுத்தியை யடைந்ததேயா

* புரோடாசம் என்பது அவிசுவோமத்தில் ஒருவிதமான பாகம்.

கும். இதிற் சந்தேகமில்லை. இந்திரியங்களுக்குப் பிரயோஜனமான விஷயங்களினின்றும் நீங்குவதாகிய மனோசுத்தி எவனுக்கு எப்பொழுதுண்டாகிறதோ அப்பொழுதுதான் அந்தர்யாகத்துக்கு அவன் அதிகாரியாவானென்று பெரியோர் கூறுகின்றனர். (37–42)

இனி யக்ஞவிதியைக் கூறுகிறேன். எங்ஙனமெனில் பிரம்மத்தியானமுடைய பிராம்மணன் தன்னுடைய இருதயத்தில் யக்ஞத்துக்குரிய விருக்ஷத்தினின்றும் நீண்டதாயும் அழகாயும் எடுத்துக்கொண்ட ஸ்தம்பங்களால் அநேக யோசனை விஸ்தீரணமாக மண்டபத்தைச் கற்பித்துக்கொண்டு அதில் நிர்மலமாகிய குண்டத்தையும், அக்குண்டத்தில் அக்னியையும் ஸ்தாபித்து, அப்பொழுது வேதமூர்த்திகளாகிய அந்தணரனேகர் தன்னுள் வந்ததாகவெண்ணி அவரவரதிகாரத்துக்கேற்றவாறு * அத்வரி, ஹோதா, பிரஸ்தோதா, உத்காதா, பிரதிஹர்த்தா, மற்றுமுள்ள சபிகர் முதலானவர்களாக நியமித்து விதிப்படி பூஜித்து, பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்கிற பஞ்ச வாயுக்களை முறையே காருகபத்தியம், ஆஹவனீயம், தக்ஷிணைக்கினி, அவஸத்யகம், ஸப்யம் என்னும் நாமங்களையுடைய அக்னிகளாகப் பாவித்து அந்த ஓமகுண்டத்தில் பிரதிஷ்டை செய்யவேண்டும். ஏனைய ஓமத்திரவியங்களையும் தோஷமில்லாத தாகவும், மிகவும் பரிசுத்த முள்ளதாகவும், மனதை எஜமானனுகவும், குணரஹிதமாகிய பரமாத்மாவை யஜ்ஞத்துக் கதிதேவதையாகவும் பாவித்து, எப்பொழுதும் ஸர்வ பலத்தையும் சகல சந்தோஷத்தையும் கொடுக்கின்றவளாய், நித்ய மங்களையாய், வேதசொரூபிணியாய் எல்லாவற்றிற்கும் ஆதார பூதையாய், ஸர்வ வியாபினியாயிருக்கின்ற யாதொரு பராசக்தியோ அந்தச் சக்தியை உத்தேசித்துப் பிராணனுகிய அக்னியில் முன்சொல்லிய திரவியங்களைக் கொண்டு குண்டலி முகமாக ஹோமஞ்செய்தல் வேண்டும். பின்னர் சித்தத்தையும், பிராணுதி வாயுக்களையும் சுத்தமாக்கிச் சுவானுபூதியில் தன்னுத்மாவோடு அத்வைதமாயிருக்கிற ஸாக்ஷாத் பராசக்தியைத் தியானித்து அவ்வருணைக்கத்தோடு சமாதியோகத்தையடைதல் வேண்டும். ஸமாதியோகமாவது:—பராசக்தியோ டத்வைதமாயிருக்கிற பரமாத்மா எல்லாப் பூதங்களிலும் நிறைந்திருக்கிறதாகவும், எல்லாப் பூதங்களும் அப்பரமாத்மாவினிடத்தி லிருக்கிறதாகவும் காண்பதுவாயிருத்தலாம். எவன் சர்வ பூதாத்மாவாகக் காண்டலாகிய நிலையை எப்பொழுது சிந்திக்கின்ருனே அப்பொழுதுதான் சச்சிதானந்த சொரூபிணியாகிய அந்தத் தேவியைத் தரிசித்தவனுவன். அவன்தான் பிரமவித்தென்று சொல்லப்படுவான். அவன் தான் மாயாவிலாசத்தைச் சுட்டெரித்தவனுவன்.

---

* அத்வரி - நடத்துவிக்கின்றவர். ஹோதா - ஓமஞ் செய்துகொண்டிருக்கிறவர். பிரஸ்தோதா - அக்காலத்தில் வேத மந்திரங்களைத் தோத்திரஞ் செய்கின்றவர். உத்காதா - சாமகானம் பண்ணுகிறவர். பிரதிஹர்த்தா- பிராயச்சித்தத்திற் கிடமில்லாமல் நடத்துவிப்பிக்கின்றவர். சபிகர்- கோஷ்டிகளாயுள்ளவர்.

ாளளவும் பிராரத்தானுபவத்தை யனுபவிப்பவனு
ப்பவனுயினும் அவனே ஜீவன்முக்தனென்றே
தேகாந்தத்தில் இனிப்பிறவா நெறியாகிய
டைகிருன். இதனுல் எவனெருவன் ஜகன்மாதா
ியைப் பஜிக்கிருனே அவன் கிருதகிருத்தியனுய்
ியற்பாலது. (43–57)

எவ்வித பிரயத்தினத்திஞலாவது ஸ்ரீ புவநேஸ்வரி
ரஞ் செய்யத்தக்கவள். ஆகவே அவளது மந்திரம்
மாய்க்கேட்டு ஜபிக்கத்தக்கது. ஓ பூபாலகனே!
றிவந்த தேவியினுடைய யக்ஞமுறையில் ஸாத்விக
சமாதியுக்தமான தியான சாக்ஷாத்கார தரிசன
மாயின் அந்த யக்ஞம் மோக்ஷத்தைக் கொடுக்
த்திற் சந்தேகமில்லை. இதுவல்லாத ஏனைய யக்ஞங்
ௐ கூடினவைகளாயும், நாசமடைவதற்கிடமாயும்,
சித்தி கொடுப்பதாயும், அது இலதாயின் சித்தி
இருக்கின்றன. ஆனுல் பண்டிதர்கள் சுவர்க்கா
ன் சாஸ்திரத்திற் சொல்லியவண்ணம் அக்னிஷ்
ஞம் செய்யவேண்டுமென்று வேதங் கூறுவதாகச்
களே என்ருல், சுவர்க்காபேக்ஷையுள்ளவன்
ிய முறைப்படி யக்ஞத்தைச் செய்ய அப்
ஷத்தால் சுவர்க்கத்தையடைவது உண்மையே.
க்ஷீணத்தையடையுந் தன்மைத்தாகலின் அங்
டையுங்கால் முன்போல் பூலோகத்தையடைவன்.
ர் செய்யற்பாலனவாகிய புண்ணிய பாவங்களுக்
ா சமயத்திலுதிக்கு மனேசங்கற்பப்படி மீண்டும்
களை யடைவன். இதனுல் ஸாத்விக மல்லாத ராஜஸ
ளுக்கு மூலங் காமமெனவும், அந்தக் காமம் நாசரூப
ாரணமாகச் செய்யும் யக்ஞமும் அதனுல் விளையும்
அப்புண்ணியத்தால் அடையுங்கதியும் நாசத்தை
னவும், மானசிகமாகிய சாத்விக யக்ஞம் காமமற்ற
த யக்ஞம், புண்ணியமும் முத்தியாகிய கதியும்
ாய் நித்தியமாய் விளங்குகின்ற தெனவும் அறிய
றல் மானசிகயாகம் சாதிப்பதற் கெளிதானதன்று.
க்ஷித்திருக்கிற ஓ அரசனே! முன் உன்னுல் செய்
பாகமும் தாமஸமென்றே சொல்லப்படும். ஏனெ
கத்தில் துராத்மாவாகிய தக்ஷகனிடத்தில் வைரங்
நகம் சர்ப்பங்கள் உன்னுல் கொல்லப்பட்டன.
ாகத்தில் வைரமும் கொலையுங் காரணமாயிருந்ததே
. இந்த இரண்டு குணமும் தாமஸகுணங்களாகை
கூறியதென்க. (58–63)

லனுகிய அரசனே! இனி உனக்குச் சிருஷ்டிக்கு
ஞம்செய்யப்பட்டதோ அந்தத் தேவியினுடைய
முறையாகச் சொல்லுகிறேன். நான் சொல்லப்

போகும் அந்த விதி தவருமல் நீ செய்யவேண்டும். தேவீ யக்ஞத்தை விதிவழி யறிந்தவர்களாயும் மந்திர மார்க்கத்தில் சமர்த்தர்களாயும் வேத பண்டிதர்களாயும் உள்ள அந்தணர்கள் இப்பொழுதுமிருக்கின்ருர்கள். அவர்கள் உன்னுடைய யாகத்தை நடத்திவைப்பதற்குரியவராவர் ; நீயும் அந்த யாகத்திற்குத் தக்கவனே. ஆகையால் சாஸ்திர முறையாக அந்த யக்ஞத்தைச் செய்து அதனுலுண்டாகத் தக்க புண்ணியத்தை நரகத்தை யடைந்திருக்கிற உன் பிதாவுக்குத் தத்தஞ்செய்து அவனை அதினின்றுங் கரையேற்றுவாய்.

இதுவரையில் உன்னுடைய வம்சத்தில் உன் பிதா செய்த பாவத்தைப்போல் ஒருவருஞ் செய்ததில்லை ; அவன் அடைந்த துர் மரணம்போல் ஒருவரு மடைந்ததில்லை. ஓ அரசனே ! பிரபஞ்சத் தோற்றமில்லாமல் பிரம்ம நிஷ்டையிலிருந்த பிரம்ம ஞானிகளுக்கு மானஹானியுண்டாகும்படிச் செய்தால் விளையும் பாவம் சகிக்கக் கூடுமானதா ? அன்று. அங்ஙனஞ் சகிக்கக் கூடாததாய்க் கொடிய நரகத்தைக் கொடுக்கத்தக்கதாயுள்ள வலிய சாபத்தை அந்தப் பிரம்மரிஷியினுலேற்று மாயாவிசித்திரமான சர்ப்பத்திருற் றீண்டப்பட்டு மரணமடையுங்காலத்திலிருக்கத்தக்க தர்ப்பசயனம், யுத்தமுகம், கங்காதீரம் முதலிய விடங்களி லோரிடத்திலாவதிருந்து நல்ல மரணத்தை யடையாமல் மேலுப்பரிகையில் ஸ்நானதான சூன்யனுய்த் துர்மரணத்தையடைந்தான். இதற்குக் காரணம் யோசிக்குமிடத்து, ஒன்றுந் தெரியவில்லை. பிராணிகள் எந்த எந்த விடங்களில் இருந்தபோதிலும் அவர்கள் தங்களுக்கு நிர்வாண காலம் வருவதை முன்னரறிந்துகொண்டு அதற்குரிய பிராயச்சித் தாதி கருமங்களைச் செய்துகொள்ளல் வேண்டும். அதற்குரிய சாதனங்களுக்குக் குறைவும், பராதீனனுய்ப் பரிதவிக்கவும் வருமாயின் ஆத்மானுத்மவிசாரஞ் செய்தல் வேண்டும். செய்வானுயின் பிராயச்சித்தாதிகள் செய்துகொண்டவனேயாவன். அவ் விசாரம் யாதெனின், "இந்தத் தேகம் பிருதிவி முதலிய பஞ்ச பூதாத்மகமாயுள்ளதெனவும், துக்கமுடையதெனவும், இத்தேகக் கூட்டிலுள்ள தத்துவங்களெல்லாம் நாசமுடையன எனவும், இத் தேகம் பூர்வகர்மத்தின்படி நம்மைவிட்டுப் போகட்டும் எனவும், இந்தத் தேகத்தில் நமக்குச் சம்பந்தமே யில்லை, நாம் இந்தத் தேகமுமன்று, இந்தத் தத்துவங்களுமன்று, நாம் வேருயுள்ளோம், குணங்களுக்கும் வேருயுள்ளோம் எனவும், நாம் நாசமடையமாட்டோம் எனவும், நாசமடையாத நாம் ஏன் துக்கிக்கவேண்டுமெனவும் எண்ணி, நிர்மலமாயிருக்கின்ற சித்தத்தினுல் சுகத்தை யடைந்து, பின்னர் நாம் ஸம்ஸாரியல்ல, எப்பொழுதும் முக்தத் தன்மை யுடையோம் ; அநாதியாயுள்ளோம் ; பிரம்ம சம்பந்த முடையோம் என்று தெளிந்து, நமக்கு இந்தத் தேகம் கன்மத்தினு லுண்டாகியது ; அது உண்டாகவே இதாகிதந் தோன்றியது ; அது தோன்றவே புண்ணிய பாவப் பலனுகிய சுகதுக்கானுபவம் வந்தது ; இப்பொழுது அதிகோரமாய்ச் சம்சார சங்கடமாயுள்ள அக்கன்மானுபவத்தினின்றும் விடுபட்டோம்" என்று எண்ணுவ

தாகும். இவ்வித எண்ணத்தோடு கூடிய சிந்தனையுடன் மரண மடைந்தவன் ஜன்ம துக்கத்தினின்றும் விடுபடுவான். (64–79)

ஓ தருமசீலனாகிய அரசனே! உன் றந்தையோ பிராயச்சித் தாதி கருமமறிந்து செய்துகொண்டதுமில்லை. ஆத்மானாத்ம விசா ரஞ் செய்ததுமில்லை. வீணான விசாரமும், பிரயோஜனப்படாத செய்கையும் செய்து துர்மரணத்தை யடைந்தான். அவனெண்ணி யதும் செய்ததும் என்னையெனின், பிராம்மண சாபம் நேரிட்ட வுடன் தேகம் போய்விடுமேயென் றேங்கித் தேகாபிமானங்கொண்ட வனாய் என்னுடைய தேகம் இச்சாபரோகத்தை அடையாதிருத்தல் வேண்டுமே! என்னுடைய ராஜ்யம் சத்ருபயமில்லாதிருத்தல் வேண்டுமே! நானெப்படிப் பிழைப்பேன்? ஐயோ! மந்திரிக ளெங்கே? மாந்திரிகர்களெங்கே? மணிமந்திர ஔஷதங்களெங்கே? அவைகளைத் தேடவில்லையா? என்று மேலுப்பரிகையில் கதறிக் கதறி அலைந்திருந்தனனேயன்றி, ஸ்நான சந்தியாதிகள் செய்த வனுமன்று, தேவியை ஸ்மரணை செய்தவனுமன்று. தெய்வமே துணையென்று பூமியிற் சயனித்தவனுமன்று. இவ்வாறு ஒன்றுஞ் செய்யவொட்டாது தடைப்படுத்திய சாபவசத்தனாய்க் கோரமாகிய அஞ்ஞான சமுத்திரத்தில் மூழ்கினவனாய் ஒருவராலும் அழிக்கக் கூடாத மேலுப்பரிகையி லிறந்துபோயினன். இவ்விதமான மரணத்தால் அவனுக்கு நரகமுண்டாய்விட்டது. ஆகையால் உன் தந்தையை அந்த யமபயத்தினின்றும் கரையேற்றுவாயென்று வியாசமுனிவர் கூற, ஜனமேஜயன் தன் தந்தையின் பரிபவத்தைக் கேட்டுத் துக்கத்தால் பீடிக்கப்பட்டுக் கண்ணீராறாய்ப் பெருக்கி நம்முடைய தந்தை நரகத்திலாழ்ந்து கிடக்க நாமிங்கு வாழ்ந்திருப் பது ஆஹா! நல்லவாழ்வு! நம்முடைய பிழைப்பும் நல்லபிழைப்பு! என்றிகழ்ந்து இனி நான் என்றந்தை சுவர்க்கம் போய்ச் சேரும் மார்க்கத்தைத் தேடுவேனென்று புலம்பிக் கூறினான். (80–87)

ஓம் லப்த ராகாயை நம:

## 13. விஷ்ணு செய்த தேவீ யக்ஞம்

தந்தையைக் கரைசேர்க்க வெண்ணிய அரசன் வியாசரை வணங்கி, ஓ பிதாமகராயுள்ள பெரியோரே! ஜகத்காரண ரூபியாய், ஒப்பிகந்தவராய், பிரம்ம தேஜோவாசராய், ஸர்வ வியாபகராய் விளங்கும் நாராயணமூர்த்தி முன்னர் தேவீயக்ஞம்செய்தா ரென்றீரே, அவர் எவ்வண்ணஞ் செய்தனர்? அவரந்த யாகம் செய்யத்தொடங்கிய காலத்தில் அதற்குச் சகாய பூதர்களாய் வேத தத்வார்த்தமுணர்ந்தவர்களாய் ருத்விக்குகளாயிருந்த அந்தணர்கள் யாவர்? இவற்றை நன்றாயெடுத்துக் கூறுவீராயின் நானவற்றைக் கேட்டு நின்மல சித்தனாய் சாஸ்திரத்திற் கூறியவண்ணம் அந்த யக்ஞத்தைச் செய்கிறேன் என்று விண்ணப்பஞ்செய்ய, வியாச பகவான் அந்த ஜனமேஜயனை அன்புடனே நோக்கி, ஓ மஹானு பாவனே! விஷ்ணு மூர்த்தியினால் விதிமுறையாகச் செய்த

அந்த அற்புதமாகிய யக்ஞப்பிரபாவத்தைக் கூறுகிறேன், கேட்பா யாக.

* முன்னர் பிரம்மா விஷ்ணு ருத்திரர்களாகிய மூவரும் பராசக்தியை ஒரு த்வீபத்தில் ஸ்திரீ ரூபங்கொண்டு தரிசித்தார்க ளென்றும், அவர்களுக்கு அத்தேவி சரஸ்வதிமுதலிய மூன்று சக்திகளை அவரவர் தொழிலுக்கேற்றவாறு தந்து விடைகொடுத் தனுப்ப அவர்கள் முன்போல் புருஷரூபிகளாய் தெய்வத்தன்மை யுடைய விமானரூடராய்க் கண்டோர்க்குப் பயத்தை யுண்டு பண்ணத்தக்க மஹாப்பிரவாகத்தோடு முன்னிருந்த சமுத்திரத்தை யடைந்தனரென்றும், பின்னர் வெள்ளமாறிப் பூமியைக்கண்டு அதில் நின்று தங்கள் தங்களுக்குரிய சத்யலோகம் முதலிய உலகங் களைப்படைத்து அவரவரும் அவ்வவ்வுலகங்களில் வீற்றிருந்து சிருஷ்டியாதி தொழில்களைச் செய்யத் தொடங்கின ரென்றுங் கூறியிருக்கின்றேன். அவற்றுள் சிலவற்றை ஈண்டெடுத்துக்கூற வேண்டியவனுயிருக்கின்றேன். அம்முறையைக்கேட்டு வருவையே யாயின் பின்னர் நீ கேட்க விரும்பிய தேவீயக்ஞவிதியை எடுத்துக் கூறுகிறேன். என்னையெனின், திரிமூர்த்திகளும் பூலோகத்திற்கு வந்தபொழுது தேவியினுடைய ஆணையினல் நிச்சலையாகிய ஆதார சக்தியானவள் அவர்களுடன் வந்தனள். அந்தச் சக்தி எல்லாப்பொருளையுந்தரிப்பதனுல் "தரை" என்றும், அகண்டமா யிருப்பதனுல் "பிருதிவீ" என்றும் ஆதிசேஷனுடைய மத்தகத்தில் தரிக்கப்பட்டிருக்கிற சக்தியினுடைய சிரேஷ்டத்தன்மையை அடைந்திருப்பதனுல் "மகீதலம்" என்றும், மதுகைடபருடைய மேதையோடு கலந்திருப்பதால் "மேதினி" என்றும் பெயர் பெற்ற இந்த மேதினியிற் கலந்து பூமிசொரூபமாய் விட்டாள். ஓ பூபாலனே! பின்னர் இந்தப்பூமி அசையாமலிருத்தற்குப் பர்வதங்களை யுண்டுபண்ணி அப்பர்வதங்களை மரத்துக்கு இருப் பாணிவைத்தடித்திருப்பதுபோல் அதில் ஆழ்ந்திருக்க வைத் தனர். அதனுல் அம்மலைகளைப் பண்டிதர்கள் "மகீதர" மென்று கூறுவர். அம்மகீதரமாகிய மலைகளுக்குள் மேருமலை மிகப்பெரி தாயும், பொன்மயமாயும், இரத்தினமயமாயிருக்கின்ற அநேக சிகரங்களால் பிரகாசமாயும், பரமாத்பதமாயுமுள்ளது.

பூமியின்செய்தி இங்ஙனமிருக்க, மரீசி, நாரதர், அத்திரி, புலஸ்தியர், புலகர், கிருது, தக்ஷன், வசிஷ்டர் என்று சொல்லப் பட்ட இவர்களனைவரும் பிரம்மாவினுடைய பிரசித்தரான புத்திர ராவர். இவருள் மரீசி காசிபரைப் பெற்றூர். அவருக்கு மனைவியா யுள்ளார் தக்ஷனுடைய பதின்மூன்று பெண்கள். அப்பெண்கள் வழியாகவே தேவாசுரர்களுண்டாயினர். ஏனைய மானிடர், மிருகங் கள், சரபங்கள் முதலிய பலவகைச் சாதிபேதங்களாயுள்ள உயிர்க ளெல்லாமுமுண்டாயின. பிரமனுடைய சரீரத்தில் வலப் பாதியில்

* மூவரும் தேவியைக்கண்ட விவரம் 3-வது ஸ்கந்தம் 3-வது அத்தி யாயத்திற் காண்க.

" ஸ்வாயம்புமநுவும் " இடப்பாதியில் " சதரூபி " என்கிற பெண்ணும் உண்டாயினர். சதரூபி என்பவளுக்குப் பிரியவிரதன் உத்தானபாதன் என்கிற இரண்டு பிள்ளைகளும், அதிக சுந்தரிகளாயுள்ள மூன்றுபெண்களும் பிறந்தார்கள். இவ்வண்ணம் பிரமவம்ஶம் விருத்தியானபிறகு பிரம்மா மேருபர்வதத்தினுச்சியில் தன் பெயரால் பிரம்மலோகமொன் றுண்டாக்கிக்கொண்டு அதிலிருந்தனன். பகவானுகிய விஷ்ணுமூர்த்தியானவர் லக்ஷ்மிதேவியினுல் விரும்பத்தக்கதும், எல்லா வுலகங்களுக்கும் மேலுள்ளதுமான வைகுண்டத்தைக் கிரீடார்த்தமாக உண்டுபண்ணிக்கொண்டு அதிலிருந்தனர். ருத்திரதேவரும் கைலாச மென்கிற திவ்யமாகிய ஸ்தானத்தையுண்டாக்கிக்கொண்டு அதில் நந்தியாதி பிரமதகணங்களோடு உல்லாசமாய் உலாவிக்கொண்டிருந்தனர். மேருவினுடைய சிகரத்தில் நானுவித ரத்னமயமாயுண்டுபண்ணப்பட்ட சுவர்க்கம் தேவாதிபதியாகிய இந்திரனுக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸ்வர்க்கத்தில் முன் பாற்கடலைக் கடைந்தகாலத்தில் தோன்றினவைகளா யிருக்கின்ற விருக்ஷங்களுக்குள் சிரேஷ்டமாகிய பாரிஜாதமும், நான்கு கொம்புகளோடு கூடிய ஐராவதமும், உச்சைஶ்ரவமென்கிற குதிரையும், காமதேனுவும், அரம்பை முதலிய தேவஸ்திரீகளும் பூஷணமாக அமைக்கப்பட்டுள்ளன. அவைகளை இந்திரன் பரிபாலித்துக்கொண்டு அதில் சுகித்திருக்கின்றனன். அந்தச் சுவர்க்க லோகத்திலேயே, பாரிஜாதம் முதலியவைகள் பாற்கடலிற் றேன்றியபொழுது தோன்றினவர்களான தன்வந்திரியும், சந்திரனும் பிரகாசித்து வருகின்றனர். பிரம்மா விஷ்ணு ருத்திரர் நீங்கலாக ஏனைய சராசரங்களெல்லாம் நானுவித பேதங்களாய்க் கற்பிக்கப்பட்டுள்ள தேவ திரியக் மானிடமென்னு மூன்று விதமாய்ச் சிருஷ்டிக்கப்பட்டுக் கன்மபேதங்கட்கீடாய் சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பீஜம் என்னும் நால்வகை யோனி வாய்ப்பட்டு வெளிவருகின்றன. (1–27)

திரிமூர்த்திகளும் தத்தமிடத்திலிருந்து இவ்விதமான சிருஷ்டி பேதங்களைச் செய்துகொண்டு வரும்பொழுது அவருள் ஒருவராகிய விஷ்ணுபகவான் தம்மிடமாகிய வைகுண்டத்தில் லக்ஷ்மிதேவியோடு கிரீடித்திருக்குஞ் சமயத்தில், முன் பாற்கடலிற்கண்ட இரத்தின வகைகளா லலங்கரிக்கப்பட்டிருக்கின்ற த்வீபத்தையும் அதில் மஹாமாயா சொரூபிணியாகிய எந்தத்தேவியைத் தரிசிக்க ஸ்திரீரூபத்தையடைந்து மந்திரோபதேசஞ் செய்யப்பட்டதோ அதனையும் நினைத்து, அத் தேவியையுந் தியானித்து வைகுண்டத்தைவிட்டுக் கைலாயத்துக்குச் சென்று மஹாதேவரை யழைத்துக்கொண்டு தேவி சம்பந்தமாகிய யக்ஞத்தை நடத்துவதற்கு உத்தேசித்து, பிரமன், வருணான், இந்திரன், குபேரன், அக்னி முதலிய தேவர்களையும், வசிஷ்டர், காசியபர், தக்ஷப்பிரஜாபதி, வாமதேவமுனி, பிரகஸ்பதி முதலிய தேவரிஷி பிரம்மரிஷிகளையும், பூசுர ஶ்ரேஷ்டர்களையும் வரவழைத்து வைத்துக்கொண்டு, மஹாவைபவத்தோடு கூடின

தாயும், ஸாத்வீகமாயும், ரமணீயமாயும், யக்ஞப் பிரயோஜனங் களாயுமுள்ள திரவியங்களை மிகவும் விசேஷமாக ஏற்படுத்திக் கொண்டும், சிற்பிகளால் யாகசாலையை விஸ்தாரமாகச்செய்தும், நல்ல அனுஷ்டானபரராளாயும் நல்ல இருதயத்தோடும் இருக்கின்ற ருத்விக்குகளை வரவழைத்து மண்டலங்களையும் குண்டலங்களையும் அலங்காரஞ் செய்வித்தும், யக்ஞம்செய்ய ஆரம்பித்துத் தேவியி னுடைய மந்திரங்களைப் பீஜாக்ஷரங்களோடும் ஜபிக்கத் தொடங்கி னர். முன்கூறிய அனைவரும் அவரவர் செய்யவேண்டிய விதிகளை முறைதவறுமற் செய்துவந்தனர். அந்தணர்களும் விதிமுறை யாய்ப் பிரதிஷ்டைசெய்திருக்கிற அக்னிகளில் அவிசுகளை விசேஷ மாக ஓமஞ் செய்துவந்தனர். அச்சமயத்தில் நல்ல சுரத்தோடும், தெளிவான அக்ஷர விளக்கத்தோடுங்கூடிய அசரீரி வாக்கொன் றெழுந்தது. அதுவருமாறு :—ஓ விஷ்ணுவே ! நீ தேவர்களுக்குள் சிரேஷ்டனுயிருக்கக் கடவாயென்று முன்னர் மங்கலமொழி யொன்று கூறி மீளவும் இனி யாவராலுங் கொண்டாடத்தக்கவனுயும்,ஆராதிக் கத் தக்கவனுயும், தேவர்களுக்குள் சமர்த்தனுயும், பிரமன் இந்திரன் முதலிய எல்லாத் தேவராலும் பூஜிக்கத்தக்கவனுயும், இவ்வுலகின் கண் நான்கெல்லைக் குட்பட்டவர்களால் உன்னிடத்தில் பக்திசெலுத் தத் தக்கவனுயுமாவாய். அங்ஙனம் செய்கின்றவர்களுக்கு நீ வரம் கொடுக்கின்றவனுமாவாய் ; எல்லாத் தேவர்களுக்கும் வேண் டிய வேண்டியாங்கருள் செய்பவனு மாவாய் ; இதுவேயு மன்றி சிரேஷ்டரென்று அழைக்கப்படுவோரில் சிரேஷ்டத்துவமும், சகல ஐஸ்வர்ய சம்பன்னத்வமும், சகல யக்ஞங்களில் முக்கிய கர்த்துருத்வமும், யஜ்ஞம்செய்வோரால் பூஜ்யத்துவமும் உடைய வனுவாய். அன்றியும் எல்லாஜனங்களும் ஆத்மார்த்தமாகப் பூஜிக்கவும், அங்ஙனம் வழிபடுவோருக்கு வேண்டியாங்கருள் புரியவும், அசுரர்களால் பாதிக்கப்பட்ட அமரர்கள் உன்னை அடைக்கலம் புகுங்கால் அவர்களுக்குச் சுகத்தைக் கொடுக்கவும் உரியவனுவாய். இங்ஙனங் கூறிவந்த விசேஷணங்களமை வதனுல் ரக்ஷகமூர்த்தி என்றும் பேர்பெறுவாய். இப்படியே சர்வ புராணங்களாலேயும் வேதாகமங்களாலேயும் பூஜிக்கப்பட்டவனு வாய். அவைகளா லுனக்குண்டாகுங் கீர்த்திக்களவேயில்லை. அன்றியும் உலகின்கண் எப்பொழுதெப்பொழுது தருமத்துக்கு ஹானிவருகின்றதோ அப்பொழுதப்பொழுது உன்னுடைய ஓர் அம்சத்தினுலே பூமியிலவதரித்துத் தர்மரக்ஷணஞ் செய்துவருவாய். அவ்வவதாரங்கள் சிறுமையுடையனவாயிருந்தபோதிலும் அவை யெல்லாம் இகழப்படாமல் மிகவும் புகழப்பட்டவைகளாகவும், மகத்துக்களால் கொண்டாடத் தக்கவைகளாகவுமிருக்கும். (28–43)

ஏனெனில், நீ எந்த அவதாரங்க ளெடுத்தபோதிலும் அவ்வவதாரங்களில் என்னுடைய அம்சம் கலந்திருப்பதால் அந்த அவதாரங்களில் செய்யுங்காரியங்கள் சித்தியாய்ப் புகழப்படு கின்றன. என்னுடைய அம்சத்தினின்றும் ஜனிக்கின்ற சக்திக ளெவையெனின், வாராஹி, நாரசிம்ஹி முதலிய பல பேதங்களா

யுள்ள சக்திகளாகும். அச்சக்திகள் உன்னுடன் கலந்திருந்து எல்லாவற்றையுஞ் செய்து உனக்கே புகழையுங் கொடுக்கப் போகின்றபடியால் நானுவிதமான இழிந்த யோனிகளிற் பிறந்த போதிலும் அவை உனக்குப் பிரசித்தமான புகழையே கொடுக்கு மென்பதைச் சிறிதுஞ் சந்தேகிக்க வேண்டாம். ஓ விஷ்ணுவே! முன் கூறிய வாராஹி முதலிய சக்திகளுடைய ரூபலாவண்ய முதலியவற்றைக் கேட்டு அந்தச் சக்திகளுடைய பலத்தால் எல்லாக் காரியங்களையும் செய்து முடிப்பாய். அச்சக்திகளை ஒருவராலு மதிக்கக்கூடாத ரூபலாவண்யத்தோடுங் கூடினவர்களாயும், சர்வாபரணலங்கிருதர்களாயும், அநேக ஆயுதங்களை யுடையவர் களாயும் தியானித்து அவர்களுடைய கலப்பினுல் சாதிக்கப்படாத தேவகாரியங்களையும் எளிதிற் சாதித்துவிடுவாய். இவை யாவும் நான் உனக்குக் கொடுத்த வரங்களாகும். நீ எப்பொழுதும் சிறிதேனும் அகங்காரத்தை யடைந்து அந்தச் சக்திகளை அலக்ஷிய மாய் நினையற்க. பரதகண்டத்தில் அந்தச் சக்திகள் சர்வாபீஷ்டங் களையுங் கொடுக்கத் தக்கவர்கள். அவர்களே எவ்வித பிரயத்தினத் தினுலும் பூஜிக்கத்தக்கவரும், கொண்டாடத் தக்கவருமாவர். இது நிச்சயம். ஓ திருமாலே! உனக்கும் அந்தச் சக்திகளுக்கும் பேத மில்லை. ஆகையால் அந்தச் சக்தி விக்ரஹங்களையும் உன்னையும் ஸப்த த்வீபங்களிலேயும் த்வீபாந்தரங்களிலேயுமுள்ள மானிடர்கள் பிரசித்தமாய் நானுவிதமான இகபோகத்துக்குரிய கோரிக்கைகளின் பொருட்டுப் பூஜித்து வருவார்கள். அவ்வண்ணம் பூஜிக்கும் சுவர்க் காதி புவனுபேக்ஷிகளாகிய அவர்கள் தங்களபீஷ்ட சித்தியின் பொருட்டு விசேஷமான வேதமந்திரங்களாலும், ஸஹஸ்ரநாம ஜபங்களாலும், ஆராதிக்கற் பாலராவர். அன்றியும் பூலோகத்தா ராலும் சுவர்க்கலோகத்தாராலும் உனக்குச் செய்யப்பட்ட பூஜையி னுல் மகிமை விருத்தியடையும், என்றிவ்வண்ணம் ஆகாயத்தி லெழுந்த வாக்கு அனுக்கிரகஞ்செய்து நின்றுவிட்டது. பகவானுகிய அந்த விஷ்ணுமூர்த்தி அந்த வரங்களைக்கேட்டு ஆனந்த பரவசராய் யக்ஞத்தை விதிப்படி நிறைவேற்றித் தேவ சமூகங்களையும் பிரம்ம புத்திரர்களாகிய முனிவர்களையும் ஏனைய அந்தணர் முதலியோரையும் அவரவரிடம்போய்ச் சேரும்படி விடை கொடுத்து நாராயணர் தம்முடைய பரிவாரங்களுடன் வைகுண்டம் போய்ச்சேர்ந்தனர். விடைபெற்றுப் போகத்தொடங்கிய அனை வரும் ஒருவருக்கொருவர் அசரீரிவாக்கை எண்ணி எண்ணி அதிசயித்து அவற்றைப் பலமுறை எடுத்துச் சொல்லிக்கொண்டும் தங்களுக்கு இந்த யக்ஞத்தி லிருக்கவந்த புண்ணியத்தையும், அதனேடு அசரீரிவாக்கைக் கேட்டு மகிழவந்த பாக்கியத்தையும் புகழ்ந்துகொண்டும், இந்த வாக்கைக் கேட்டதற்கு வரும் புண்ணி யம் எவ்வளவோவென்று கூத்தாடியும், கேட்பதற்கு ரம்மியமாயும் நல்ல விளக்கமாயுமெழுந்த இந்த வாக்கைப்போல் இதுவரையில் யாராவது கேட்டிருப்பார்களாவென்றும், கேட்டிருந்தபோதிலும் அத்தேவி விஷயத்தில் பக்தியுண்டா யிருக்குமாவென்றும் சொல்லிச்

சொல்லித் தேவியினுடைய பக்தி யுடையவர்களாய்ச் சகல பலன் களையும் கொடுக்கின்ற அந்தப் பராசக்தியினுடைய பூஜையைச் செய்துவருவோமென்று சென்று அவ்வண்ணமே யாவரும் செய்து வந்தனர். (44–59)

ஓம் லப்த பதயை நம:

## 14. துருவசிந்து வரலாறு

ஜனமேஜயன் வியாசரைநோக்கி, நாராயணராலே செய்யப் பட்ட யக்ஞத்தில் அவருக்குத் தேவி வரமளித்த பிரபாவத்தைத் தேவரீர் விரிவாய்க் கூற, அதனால் எனக்கு இன்னமும் தேவியி னுடைய மகிமையைக்கேட்க ஆவலுண்டா யிருக்கிறது. ஆதலால், தேவரீர் அத்தேவியின் மஹிமையைச் சரித்திரரூபமாய்க் கூறியருள் வீராயின் அதனைக்கேட்டுப் பின் சிலாக்கியமாகிய அத்தேவி யக்ஞத்தை உமது அநுக்கிரகத்தினாற் செய்து பரிசுத்த னுவேனென்று அன்பாளனாய்க்கேட்க, வியாசபகவான், ஓ அரசனே! நீ விரும்பிய வண்ணம் உத்தமமாகிய தேவியின் சரித்திரத்தைக் கர்மகாண்டப் பிரதிபாதகமாகிய இதிகாச சம்மதமாகவும் ஞான காண்டப் பிரதிபாதகமாகிய புராண சம்மதமாகவுங் கூறுகின்றேன், கேட்பாயாக, வென்றருளிய உண்மையை இதிகாசாதி புராண சாரங்களை யுணரவல்ல மஹரிஷிகாள்! உங்களுக்கு எடுத்துச் சொல்லுகிறேனென்று சூதபகவான் கூறத்தொடங்கினர்: (1–3)

கோசல தேசத்தில் சூரியவம்சத்திற் றோன்றினவனும், புண் ணிய புத்திரனும், மிக்க தேஜோரூபியாயும், தருமாத்மாவாயும், சத்திய சந்தனும், நல்ல அநுஷ்டான பரனும், வருணாச்சிரம தருமங்களில் அவரவரைத் தவருது நடப்பிக்கின்றவனுயு மிருந்த துருவசிந்து என்னும் அரசன் எல்லா வளங்களும் நிறைந்த அயோத்தியில் அரசாண்டு வந்தனன். அவனிடம் அந்தணர் முதலிய நால்வரும் ஏனைய ஸங்கரஜாதியருந் தங்கள் தங்களுக்கு விதித்த விருத்தியிலிருந்து தவருதிருந்தனர். பொய் கொலை களவுகள் காமம் முதலியவற்றில் உழலவல்லவரும் தூர்த்தருமாகிய யாவரும் அப்பொய் முதலானவற்றை யொழித்துச் சாதுக்களாகவே யிருந்தனர். அன்றியும் டம்பம், மூர்க்கம், நன்றிமறத்தலாகிய தீயகுணங்களை யொருவருமறியார். இவ்வாறு செங்கோல் செலுத்தி வரும் அவ்வரசனுக்கு நல்ல ரூபலாவண்ணியத்திலும் சாமர்த்திய குணத்திலும் சிறந்த மனோரமை, லீலாவதி என்னும் இரண்டு ஸ்திரீகள் முறையே தருமபத்தினியாயும், * காமக்கிழத்தியாயுமுள்ள வர்கள். அவர்களோடு அரசன் அரண்மனையிலும், உப்பரிகை களிலும், உத்யான வனங்களிலும், மாளிகைகளிலும், நடபாவி

---

* அரச பத்தினிகளுள் முதலாயுள்ளவளே அரசியலுக்குரிய தரும பத்தினி என்றும், ஏனையரெல்லாம் காமக்கிழத்தியரென்றுங் கூறுவது விதியாம்.

களிலும் அநேகவிதமான விநோதங்களுடன் கிரீடித்திருக்கும் நாளில் லீலாவதி நல்ல சுபமுகூர்த்தத்தில் அரச லக்ஷணத்திலும் அரசியல்செலுத்தும் முறைமையிலுஞ் சிறந்த ஒரு புத்திரனையும் அப்புத்திரனைப்போலவே எல்லா லக்ஷணங்களும் வாய்ந்த ஒரு புத்திரனை முப்பதாநாளில் மனோரமையும் பெற்றார்கள். இருவரிய மக்களைப் பெற்றதனால் அரசன் பேரானந்தப் பெருக்கடைந்து அப்புத்திரர்களுக்கு ஜாதகன்மம் முதலிய சடங்குகளை விதிமுறை யாகச் செய்து மனோரமையினுடைய பிள்ளைக்குச் சுதர்சனன் என்றும், லீலாவதியினுடைய பிள்ளைக்குச் சத்ருஜித்தென்றும் நாமம் வைத்து அந்தணர்களுக்குச் சுவர்ணதானம் முதலிய பல தானங்களுங் கொடுத்து அகமகிழ்ந்து அவன் தர்மபத்தினி யினுடைய மகனென்றும் அவன்பால் மிக்க அன்பும், இவன் காமக் கிழத்தி மகனென்று இவன்பால் அன்பின்மையுங்காட்டாது இரு மக்களிடத்தும் எக்காலத்தும் வேற்றுமை சிறிதுமின்றி அன்பு பாராட்டி வளர்த்துவந்து சௌளகர்மம் முதலியவற்றையும் அதிகச் சிறப்புடன் நடத்திவர, அவ்விருமக்களும் தந்தை மேன்மேல் மகிழ அழகிய உருவத்தாலும் உருவத்துக்கேற்ற சத்குணங்களாலும், அக்குணங்களுக்கேற்ற நன்னடைகளாலும், மேன்மையையே விளை வித்து வந்தனர். தந்தைக்கேயன்றி ஏனையோர்க்கும் அவ்வாறே சந்தோஷத்தை விளைவிக்கின்றவர்களாகவே யிருந்தனர். (4–16)

இவருள் இளையவள் குமாரனாகிய சத்ருஜித் மிகவும் சாதுர்ய வானாகவும் மிருதுவான இனிய சொல்லுடையவனாகவும் பார்ப் பதற்கு மிகவும் அழகுடையவனாகவும் மந்திரிகளுக்கும் குடி களுக்கும் இஷ்டனாகவும் இருந்த சிறப்பால், அரசனும் அவன்பால் மிக்க அன்புடையவனாகவும், சுதர்சனனுடைய அதிர்ஷ்ட ஹீனத் தால் அவன்பால் மிகுந்த பிரியமில்லாதனாகவு மிருக்குங்கால் ஒரு நாள் வேட்டையாடுவதில் பிரிய முள்ளவனாய்ப் பயங்கரமான வனமத்தியிற் சென்று சிறுத்தை, காட்டுப்பன்றி, முயல், காட் டெருமை, சரபப்பக்ஷி, மான் முதலியவைகளை வேட்டையாடும் பொழுது ஒரு சிங்கம் மிகுந்த கோபத்தோடும் ஒரு புதரிலிருந்து பாய்ச்சலாகவர அரசன் அதனைக்கண்டு பாணத்தினாலடிக்க அது மிகவும் கோபத்தோடும் மேகம்போற் கர்ச்சித்து வேகமாய்வந்து அரசனைப்பார்த்து உறுத்து தன் வாலைமேலே யுயர்த்தி முகத்தைச் சூழ்ந்திருக்கின்ற ரோமங்களைச் சிலிர்த்து அதிக பராக்கிரமத்தோடும் பாயும்பொழுது அரசன் அது பாய்வதற்கு முன் வலக்கையிற் கத்தியையும் இடக்கையிற் கேடயத்தையும் தாங்கி அதைக் கொல்ல எத்தனித்தனன். அவன் சேனைத்தலைவர்களும் அச்சிம்மத்தைச் சூழ்ந்து பாணங்களை விசேஷமாக விடுத்தனர். விடுத்த அப் பாணங்களின் ஓசையும், விடுக்கும்பொழுது சேனைகள் கூச்சலிடும் ஓசையும் இவ்வளவிற்றென்று சொல்லிமுடியாது. அரசன் சேவகத் தையும் சேனைகளின் ஆரவாரத்தையும் பாணப்பிரயோகங்களின் ஓசையையுங் கேட்ட அச்சிங்கம் சிறிதும் அஞ்சாது பாய அரசன் கத்தியினால் வெட்டினான். வெட்டும்பொழுது அச்சிங்கம் தன்நகங்

களினுல் அவனைப் பூரியது. அரசனும் மாண்டனன். அதனைச் சேனைகள் நகரத்திலோடி மந்திரிகளிடம் கூற, அவர்கள் வசிஷ்டர் முதலானவர்களையும் பந்து ஜனங்களையும் அழைத்துக்கொண்டு வனத்திற்குப்போய் அரசனைக்கண்டு துக்கித்து அவன் பரலோக சுகத்தையடைய, அபரக்கிரியைகளை விதிமுறையாக நடத்திப் பின்னர் வசிஷ்டரும் மந்திரிமார்களும் எந்தப் பிள்ளைக்குப் பட்டங் கட்டலாமென்று யோசிக்கும்போது மந்திரிகள் சுதர்சனன் தரும பத்தினியின் பிள்ளையாயிருத்தலாலும், அரசியலுக்குரிய சாந்த குணம் முதலிய குணங்களிலும் நல்ல ரூபத்திலும் சிறந்திருத்தலாலும், அவனுக்கே பட்டாபிஷேகஞ் செய்யலாமென்று கூறி, பின் அதுபோல் செய்வதற்கு யோசித்திருக்கும் சமயத்தில் உஜ்ஜயினி என்னும் பட்டணத்திற்கரசனும் லீலாவதிக்குப் பிதாவுமாகிய யுதாஜித் என்பவன் கேள்விப்பட்டுத் தன் பேரனுகிய சத்ருஜித்துக்கும், கலிங்க தேசத்துக்கரசனும் மனோரமைக்குப் பிதாவுமாகிய வீரசேனன் தன் பேரனுகிய சுதர்சனனுக்கும் பட்டங்கட்டி வைக்க வந்துசேர்ந்தனர். அவ்விருவர் சேனைகளும் எண்ணிறந்தனவாய் மிக்க வைரங்கொண்டு அவர்களுடன் அயோத்திக்கு வந்தன. இவ்விரண்டரசர்களும் யாருக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதென்று ஒருவரை யொருவர் வினவினர். யுதாஜித் தென்பவன் இருவரில் மூத்தவன் எவனே அவன்தான் ராஜ்யத்தை யடைவானன்றி இளையவன் எப்படி யடைவானென்றனன். வீரசேனன் யுதாஜித்தைப் பார்த்து, உன்னால் சொல்லப்பட்டவனு பெரியவன்? பண்டிதர்களால் நான் கேட்டிருக்கின்றபடி, தருமபத்தினியின் குமாரனே ராஜ்யத்தையடையத் தக்கவன் என்றனன். அதைக் கேட்ட யுதாஜித்து மீளவும், நீ கூறியவன் தருமபத்தினியின் புத்திரனுயிருந்தபோதிலும் ராஜலக்ஷணமாகிய ஸாமதான பேத தண்டங்களாகிய சதுர்வித உபாயங்களைச் செலுத்தும் மேன்மையாளனுகக் காணப்படவில்லை. ஆகையால் அவன் பட்டத்துக்குரியவனுகான் என்றனன். இவ்வாறு ஒருவருக்கொருவர் தங்கள் தங்கள் பேரனுக்குப் பட்டாபிஷேகமாக வேண்டுமென்று கலகம் விளைக்க அப்பொழுது சபையோர்கள் இக்கலகத்தை நிவிர்த்திசெய்யவல்லவர்கள் யாவரென்று யோசிக்குஞ் சமயத்தில் யுதாஜித்து மந்திரிகளைப் பார்த்துக் கூறுகின்றுன்: இவ்வீரசேனனுடைய எண்ணம் எப்படியோ அப்படியே உங்களுக்கு மிருக்கிறதல்லவா? ஆஹா! நன்றுயிருக்கின்றது! நீங்கள் சுயலாபத்திலேயே ஆசையுடையவர்களாதலால் அறிவில்லாதவனுகிய சுதர்சனனுக்குப் பட்டங்கட்டி ராஜ்யசம்பத்தைக் கொள்ளைகொள்ள இச்சித்திருக்கின்றீர்கள். அதனை இப்பொழுது உங்களிடம் விளங்கும் கண்காட்டல் முதலிய இங்கிதச் செயல்களால் நன்றுய்த் தெரிந்துகொண்டேன். வீரசேனைகளோடு கூடி யிருக்கின்றவனுகிய நான் உயிருடனிருக்கும்பொழுது குணத்திலும் பராக்கிரமத்திலுஞ் சிறந்த பெரியவனை விட்டுச் சிறியவனுக்குப் பட்டங்கட்ட எவனுவது வருவானுயின் நான் யுத்தம் நடத்துவதிற் சந்தேகமில்லை. என் வாள்முனையினுல்

இப்பெரிய பூமி இரண்டு பிளவாகப் பிளக்கப்படுமாகுல் நீங்களனே வரும் இவ்வாளுக்கு என்ருவீர்கள், என்ருன். அதுகேட்ட வீரசேனன் யுதாஜித்தைப் பார்த்து, வார்த்தை சொல்வதிற் சதுர்ப் பாடுடைய ஓ அரசனே! இப்பிள்ளைகள் குணத்திலும் ராஜலக்ஷணத்திலும் சமான மானவர்களாகவே இருக்க அவர்களிடத்தில் நீ எப்படிப் பேதம் கண்டனே யென்ருன். இவ்வாறு இரண்டரசரும் மேன்மேல் வைரங்கொள்ளும் வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் அங்குள்ள பெரியோர்களும் ஏனைய நகரத்தார்களும் வியாகுலமடைந்த மனமுடையவர்களாக விருந்தனர். இவர்கள் கலகங்களை முன்னமே யறிந்தவர்களும் அளவிறந்த சைனியங்களை யுடையவர்களும் எந்த நகரத்திலாவது கலகமுண்டாயிருக்குமாயின் அச்சமயமறிந்து சண்டையை விரும்பி இச்சமயத்தில் நானொருவனே வென்று விடுவேன், நீ வேண்டுமா வென்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளும் வஞ்சகச் சொற்களை யுடையவர்களுமான பகையரசர்களாகிய சிருங்கபேர புரத்திலுள்ள வேடர்குல மன்னவரும், அரசன் இறந்து போனமையைக் கேட்டு அவனுடைய திரவியத்தைக் கொள்ளைகொள்ள வந்து சேர்ந்தனர். இவர்களேயன்றிப் புத்திரர்கள் பால்யராயிருப்பதையும் அவர்களுடைய பாட்டன்மார்கள் பட்டாபிஷேக விஷயத்தில் கலகப்பட்டிருப்பதையும் கேள்வியுற்ற தேசாந்தரங்களிலுள்ள வஞ்சகக் கள்வர்களும் வந்துசேர்ந்தனர். இவ்வாறு கூடிய யாவரும் யுத்தம் ஆரம்பிக்கும் சமயத்தில் யுதாஜித்தும் வீரசேனனும் அச்செய்தி யறிந்து தங்களுடைய பேரன்மார்களைக் குறித்த பட்டாபிஷேக விவாதத்தை மறந்து அவர்களோடு யுத்தஞ்செய்து வெற்றி கொண்டனர். (17–53)

ஓம் லப்தாநாநா கமஸ்திதயை நம:

## 15. யுதாஜித் வீரசேன யுத்தம்

பின்னர் ஒருவருக்கொருவர் பேசுஞ்சொல்லிற் கோபமுடையவராயும், ராஜ்யத்தைக் கொள்ளை கொள்ளவேண்டுமென்கிற பேராசையுடையவர்களாய் போரை மேற்கொண்ட சர்வாயுத பாணிகளாயுமுள்ள யுதாஜித்து வீரசேனனென்கிறவர்களுடைய சேனைகள் தடிகளைச் சுழற்றிச் சுழற்றி மேன்மேலும் விட்டு எங்குந் தடிமயமேயாக்கினர். அப்பொழுது யுதாஜித்து வில்லைத்தாங்கினவனாய்த் தான் ஜயமடையத்தக்கவனென்கிற அடையாளத்தைக் காட்டுவதாகிய கொடியை முன்னுயர்த்தி நடத்தி, அதன்பின்னர்த் தான் வரவழைத்திருக்கிற திரண்ட சேனைகளைக் கொண்டு போரைச் செய்வித்து ஜயத்தையடைய வேண்டுமென்கிற எண்ணமுடையவனுதலால் அவர்களை முன்னேபோக்கித் தான் அவர்களுக்குப்பின்னே நின்று யுத்தஞ்செய்யத் தொடங்கினான். இந்திரனுக்குச் சமானமாகிய வீரதேஜஸையுடையவனுகிய வீரசேனன் யுதாஜித்தோடு யுத்தஞ்செய்ய வேண்டுமென்னு மெண்ண

மில்லாதவனுயிருந்தும் அவன் சொற் போரையொழித்து விற் போருக்கு வந்தனனுதலால் எதிர்த்தவனோடு எதிர்த்துப் போர் செய்வது க்ஷத்திரிய தருமமென்பதையும், தன் பேரனுக்குரிய க்ஷேமத்தைத் தேடுவது தருமசீலமென்பதையும் நீதியாகவெண்ணி யுத்தஞ்செய்யத் தலைப்பட்டு மகா கோபமுடையவனும் ஒருவ ராலும் கெடுக்கப்படாத பராக்கிரமத்தை யுடையவனும் சிங்கம் போல் கர்ஜித்து யுதாஜித்தைப் பார்த்துச் சிறிதுமஞ்சாமல் மேகங்கள் மலைமேல் நீரைப் பொழிவதுபோல் பாணங்களை அமோகமாகப் பொழிந்தும், கூர்மையாயும் அதிவேகமாய்க் குறி தவருமல் கொல்லத்தக்க ஆற்றலையுடையதாயுமுள்ள விசிகமென்கிற ஒருவகைப் பாணங்களை ஒன்றிரண்டு பலவாக விட்டும் அசையாமற் கட்டினன். அவைகளை யுதாஜித்தென்பவன் அதிவேகமாய்ப் பாயத்தக்க சிலீமுகபாணங்களால் வெட்டினன். இவர்களிவ்வா றிருக்க, பார்ப்பதற்கு அதிபயங்கரரூபிகளாயிருக்கின்ற யானைவீரர் களோடு யானை வீரர்களும், குதிரை வீரர்களோடு குதிரை வீரர் களும், தேர் வீரர்களோடு தேர் வீரர்களும் சமயுத்தஞ் செய்தனர். இவ்வாறு அவ்விரு அரசரும் செய்வதாகிய போர்த்திறத்தையும், அவர் சேனைகள் செய்வதாகிய போரின் சதுர்ப்பாட்டையும் எங்குங் கண்டிலோமென்று ஆகாயத்தில் தேவர்களும் போர்க்களத் தைச் சூழ்ந்து ரிஷிகள் மானிடர் முதலியோரும் அதிசயித்துப் பார்க்கவும், மாமிசங்களைப் பக்ஷிக்கவேண்டுமென்கிற கழுகுகள் எங்கும் வட்டமிட்டுலாவுதலுமாயிருந்தன. (1-6)

அப்போர்க்களத்தில் பாவமிகுந்த பிராணிகளுடைய கண் களுக்குப் புலப்படுவதாயும், மகா பயங்கரமாயுமுள்ள யமலோகத் திற்குப் போகும் வழியில் வெள்ளங்கொண்டோடும் வைதரணி நதியைப்போல் நால்வகைச் சேனைகளுடைய உதிரவெள்ளம் பெருக்கெடுத் தோடிற்று. மயிரினல் நரவீரர்களுடைய தலைகள் அங்குள்ள மணற்குன்றுகளில் பரவியிருக்க அவைகளை அவ்வுதிர வெள்ளம் அடித்துக்கொண்டு போயிற்று. அதைப் பார்க்குங்கால் நதிக்கரையின்கண் விளையாடும் சிறுவர்கள் அக்கரையிலுள்ள தும்பீபலமென்னும் பழத்தைப் பறிக்கும்பொழுது அவை அந்நதி யிற்றவறிவீழ்ந்து ஒன்றோடொன்றடிபட்டுப் புரண்டுபுரண்டு செல் வதுபோலிருந்தன. தேரினின்றும் பூமியில்வீழ்ந்திறந்துபோன ஒரு வீரனை ஒரு கழுகானது மாம்சபக்ஷண நிமித்தம் அவன்மேற்றங்கி அவனங்கமுற்றும் உலாவித்திரிந்து மயங்கிற்று. அதனைநோக்குங் கால் அவ்வுடம்பை விட்டுப்போன வீரன் வீழ்ந்து கிடக்குந் தன் சரீரத்தைப் பார்த்து இவ்வுடம்பைவிட்டு எப்படிப்போவ தென் றெண்ணி மீளவு மவ்வுடம்பில் எவ்வழியாய்ப் பிரவேசிப்பதென்று பார்ப்பதுபோலிருந்தது. ஓ அரசனே! இதுவென்ன ஆச்சர்யம்! போரி லிறந்துபோன ஒரு வீரன் விமானு ரூடனுய் ஒரு தேவஸ்திரீ யுடன் ஆகாயத்திற் போம்போது தன் மடியிலிருக்கின்ற அவளைப் பார்த்துப் பாணத்தா லடிபட்டுப் பூமியில் வீழ்ந்து கிடக்கின்ற ரம ணீயமாகிய என்னுடம்பைப் பார்ப்பாயாகவென்று தன் மனத்திற்

றேன்றும் தன் சரீரத்தின் அழகுகளை யெல்லாஞ் சொல்லத்தொடங்கினன். ஒருவீரன் சத்துருக்களா லடிக்கப்பட் டிறந்து ஒரு தேவஸ்திரீயோடுகூடி வீரசுவர்க்கத்தை யடைந்தனன். அவனைப் பிரிந்திருக்க அறியாத அவன் மனைவி அக்கினியில் அவனை வளர்த்தித் தானுஞ் சககமனஞ் செய்து அவ்வுலகிலுந் தன் கணவனோடு கூடிப்பிரியா திருந்தனள். அப்போர்க்களத்தி லிறந்துபோன இரண்டுவீரர்கள் சுவர்க்கலோகத்தை யடைந்தபொழுது அவர்களை நோக்கி ஓர் அப்சரஸ்திரீ வர அவளைக்கண்ட அவ்விருவரும் எனக்குனக்கென்று வாதிட்டுக் கலகங்கொண்டு ஆயுதங்களேந்தி அங்குமிங்கு முலவிப் போர்புரியத் தலைப்பட்டனர். ஒரு வீரன் உருவத்திற் சிறந்தவளாயும் மகா குணவதியாயுமுள்ள ஒரு அப்ஸரஸ்திரீயை யடைந்து மிகவும் பிரியமுடையவனாய்த் தன்னிடத்தில் மோகங் கொள்ளத் தன்னுடைய இயற்கையான குணங்களை விரிவாய்ச்சொல்ல முயற்சி யெடுத்துக்கொண்டனன். ஒரு வீரன் சுவர்க்கத்தை யடைந்தகாலத்தில் அவனைநோக்கி நல்ல சுந்தரவதியாயும் நல்லன்புள்ளவளாயுமுள்ள ஒரப்சரஸ்திரீயானவள் அடைந்தும் அவன் அவளை அங்கீகரிக்காமல் தான் யுத்தத்தில் ஜயமடைய வெண்ணிய வெண்ணம் பழுதுபட்டமையால் இவளால் வரும் சுகம் நமக்கென்ன பிரயோஜனமாமென்று மோகங்கொள்ளாது கிலேசங்கொண்டிருந்தனன். வீரர்கள் செய்தி இங்ஙனமிருக்க, அப்போர்க்களத்தினின்று மெழுந்த தூசுகள் ஆகாயமளாவிச் சூரியன் தோன்றுதவண்ணம் மிருளாக்கின. பின்னர் தெய்வகதியாய் அவை சமுத்திரத்தில் விழ அது கண்ட சூரியன் ஆனந்தமுடையவனாய் முன்னையிலும் அதிகமாகப் பிரகாசித்தனன். இவ்வண்ணமான அரியபோரில் யுதாஜித்து மூன்றுபாணங்களால் வீரசேனனைத் தலையில் மோத அவன் தலை யுடைபட்டுப் பூமியில் வீழ்ந்திறந்தனன். அவனைச் சேர்ந்த சேனைகளும் நடுக்கமுற்றுப் போர்செய்யும் பலமற்று நான்கு பக்கங்களிலு மோடிப்போயின. (7–17)

இச்செய்தியை இவன் மகளாகிய மனோரமை கேட்டு, அந்தோ! அந்தோ! என்றேங்கி யேங்கி இப்பொழுது நம்பிதாவைக்கொன்ற யுதாஜித்து கெட்ட எண்ணமுடையவன்; பாபாத்மா; இவன் ராஜ்யாபேக்ஷையினால் நமது புத்திரனையும் நமது பிதாவைக் கொன்றதுபோல் கொன்றுவிடுவா னென்பதிற் சந்தேகமுமுண்டோ? இதற்கு நாமென்செய்வோம்! எவ்விடத்துக்குப்போவோம், நமக்குப் பிதாவும் போயினர்; பர்த்தாவும் போயினர்; புத்திரனோ மிகவும் பாலனாயிருக்கிறான். இந்த யுதாஜித்து நம்முடைய புத்திரனுக்குப் பட்டமாகக் கூடாதென்று கொண்ட லோபகுணமானது மிகவும் நீசமானதல்லவா? அந்த நீசகுணமானது எவனுக்குத்தான் கெடுதியையுண்டாக்கமாட்டாது? அஃது எந்தப் பாவத்தொழிலைத் தான் செய்வதற்குத் துணியச்செய்யாது? அந்த லோபகுணமுடைய மானிடர்கள் தந்தைதாயார்களையும் உடன்பிறந்தாரையும் பந்துஜனங்களையும் ஆசாரியனையும் தன்னிடம் அடைக்கலம் புகுந்தவர்களையும் கொலைசெய்ய ஏன் துணியார்கள்? இதில் நாம்

என்ன யோசனை செய்யவேண்டிய திருக்கிறது? ஒன்றுமேயில்லை யென்று சிந்தாகுலமுற்று மீண்டும் சிந்திக்கத் தொடங்கினள் :—

இந்தப்பாவியாகிய யுதாஜித்து லோபகுண முடையவனாயிருத் தலினால் இவன் புசிக்கக் கூடாதவற்றைப் புசிப்பான். புணரக் கூடாத ஸ்திரீயைப் புணர்வான். தருமத்தையு மிழப்பான். இந்த நகரத்தில் நமக்குப் பலிஷ்டனாகிய சகாய புருஷனெவனிருக் கின்றான்? நாம் எவனுடைய ஆதரவிலிருந்து புத்திரனை ரக்ஷிக்க லாம்? அவனால் புத்திரன் கொல்லப்படுவானானால் நாமென்ன செய்யலாம்? இப்போது நம்மைக் காக்கத்தக்கவர் ஒருவரு மில்லையே! அந்தச் சககளத்தியாகிய லீலாவதியும் இனி எப்பொழு தும் விரோத முடையவளாய்ப் பெரும்பாலும் பகையாளியாகவே யிருப்பாள். அவள் நமது புத்திரனிடத்தில் தயையுடையவளா யிருப்பாளா? அந்த யுதாஜித்து போர்க்களத்திலிருந்து நகரத் துக்குவருவானேயானால் நம்மை இவ்விடத்தில் வைப்பானா? துரத்தியே விடுவான். குமாரனையாவது பரிபாலிப்பானோ வென் றால் அவனைப்பாலனென்று நினைத்துச் சிறையிற்றான் வைப்பான்.

நாம் பூர்வத்தில் தாயார் கருப்பத்திலிருந்த சிசுவானது இந்திர னால் ஏழுதுண்டங்களாகக் கண்டிக்கப்பட்ட தென்றும் பின்னர் அத்துண்டங்களும் ஸப்த மருத்துகளா யிற்றென்றும் கேட்டிருக் கின்றோம். சிலரால் அவ்விந்திரன் தான் கருப்பத்திற் பிரவேசித்து வச்சிராயுதத்தைக் கையில் சூக்ஷ்மமாய்த் தாங்கி அங்கிருந்த சிசுவைப் பலதுண்டங்களாக வெட்ட அத்துண்டங்கள் நாற்பத் தொன்பது மருத்துக்களாக ஆயிற்றென்றும் கேட்டிருக்கின்றோம். சிலரால் சககளத்தியாகிய ஒரு ராஜஸ்திரீ கர்ப்பத்திலிருக்கும் சிசு நாசமடையும் பொருட்டு விஷத்தைக் கொடுத்தா ளென்றும் அக்குழந்தை அதனாற் சாகாமல் அந்த விஷச்சுவாலையுடன் பிறக்க அவன் *சகரனென்கிற பெயருடையவனாய்ப் பிரசித்தி பெற்றிருந் தானென்றும், ஒரு ராஜஸ்திரீயால் பெரிய குமாரனாகிய இராமன் வீட்டைவிட்டுப்போக அவன் பிதாவாகிய தசரதன் இறந்தானென் றும் கேட்டிருக்கின்றோம். இவ்வாறான துர்மரணங்களும் கஷ்ட மான அநுபவங்களும் சககளத்தியருடைய போராட்டத்தினால் வருவதல்லவாவென்று பலவாறாக வெண்ணித் துக்க சாகரத்தில் மூழ்கினவளாய் நம்முடைய நாயகன் இறந்தகாலத்திலும் நம்மு டைய பிதா யாருக்குப் பட்டங்கட்டுகிறதென்று கேட்டகாலத்திலும் சுதர்சனனுக்கே கட்டவேண்டுமென்று சொல்லிய மந்திரிகளெல்லாம் இப்பொழுது இந்த யுதாஜித்தினுடைய சுவாதீனர்களாயும் சுதந்தர மற்றவர்களாயு மிருக்கின்றனரல்லவா? நமக்கிந்தக் கஷ் டம் தெய்வகதியாய் நேரிட்டதன்றிவேறில்லை. ஆயினும் நாம் ஏங்கி யிருக்கக் கூடாது. எந்தவிதமான பிரயத்தனத்தையாவது முயற் சிக்கவேண்டும். அதன்மேல் நமக்கு வரவேண்டிய சித்தியானது தெய்வகடாக்ஷத்தா லுண்டாகும். நாம் தீவிரமாக புத்திரனை

* கரம் - விஷம். சகரன் - விஷத்துடன் பிறந்தவன்.

ரக்ஷிக்கவேண்டிய பிரயத்தனத்தைத் தேடல் வேண்டுமென்று அந்த மனோரமையானவள் தன் மனதுக்குள் ஆலோசனைகளைச் செய்து அதனை ஆலோசித்தற் குரியார் யாவரென்று யோசிக்கும் பொழுது நமக்குப் பிதாவு மில்லை இந்தக்கஷ்டத்தை நிவிர்த்தி செய்யத்தக்க சூரனாயிருக்கின்ற ஒருபகார புருஷனு மில்லை. இது கஷ்டம்! கஷ்டம்!! ஆயினும் எல்லாக்காரியங்களிலும் சமர்த்தனையும் யோசனையிற் சிறந்தவனையுமுள்ள ஒரு மந்திரியை வரவழைப் போமென் றெண்ணி அதுபோலொருவனை யழைத்து அவனை ஏகாந்தத்தில் வைத்துக்கொண்டு வெகு துக்கத்தோடுகூடின வளாய்ப் புத்திரனைக் கையிற் பிடித்துக்கொண்டு குன்றிய மனத் தோடுஞ் சொல்லத் தொடங்கினள்: ஓ மந்திரி! போரில் என்னுடைய தந்தை இறந்துபோயினர். புத்திரனோ மிகவும் பால்யன். என் னுடைய பிதாவைக்கொன்று என் மகனைப்பரிதபிக்கச் செய்யவந்த யுதாஜித்தோ மிகவும் பலவானா யிருக்கின்றான். ஆகையால் யான் செய்யத்தக்கது இதுவென்று நீ சொல்லவேண்டுமென்றனள். மந்திரி அந்த மனோரமையைப் பார்த்து, ஓ அம்மணி! நீ இவ்விடத் தில் இருக்கக்கூடாது; காட்டுக்காவது காசிக்காவது போகவேண் டும். அக்காசியில் மஹா பலிஷ்டனையும், சமயத்துக்கேற்ற காரியங்களை அறிந்துசெய்ய வல்லவனையுமுள்ள ஸுபாஹு என்கிற என்னுடைய அம்மானிருக்கின்றான். நீ அவனிடம் போவாயாயின் அவன் உன்னை ரக்ஷிக்கத்தக்கவனாவான். இப் பொழுது நீ வெளியே போவதற்கு ஒருபாயம் செய்யவேண்டும். என்னையெனில், நீ உன்னுடைய சககளத்தியினிடஞ் சென்று உன்னுடைய பிதாவாகிய யுதாஜித்தை யான் பார்க்கவேண்டு மென்றுசொல்லிவிட்டு அவனைப் பார்ப்பதற்கு வெளியே போவது போல் அரண்மனையை விட்டு வெளிப்பட்டு தேரிலேறிக்கொண்டு போகவேண்டும். போவாயாயின் உனக்கு நன்மை யுண்டாவதிற் சம்சயமில்லை என்றான். மனோரமை அந்த மந்திரியின் சொல்லின் படியே லீலாவதியினிடத்திற் சொல்லிவிட்டு விதல்லனென்கிறவனை யும் தனக்கொத்த ஒரு தாதியையும் அழைத்துக்கொண்டு மகனோடு தேரிலேறி நகரத்தைவிட்டு வெளியே வந்து மிக்க துயரத் தோடு நாம் வனத்துக்கு எவ்வாறு போவதென்று பயந்து துக்கித் தும், மனம் புழுங்கித் தீன தசையை யடைந்தும், பிதா சோகத்தில் மூழ்கியும், இவ்வாறு ஒன்றின்மேலொன்றாக வியாகுல மேலிட்டு ஒருவருக்குந் தெரியாமல் கபடமா யுத்தகளத்திற்குப்போய் யுதாஜித்தைப் பார்த்து அப்புறம்போய் வீழ்ந்துகிடக்குந் தன் பிதாவைக்கண்டு அலறித் தகனாதிகளை விரைவாய் நடத்தி அவ்விடம் விட்டு வனத்தை நோக்கிச் செல்லும்பொழுது கள்வர் களில் தலைமைபெற்ற துஷ்டர்களாகிய வேடர்கள் கண்டு வழி மறித்து அவளிடத்திலிருந்த ஆபரணம் முதலிய சகல திரவியங்களை யும் பறித்துக்கொண்டு தேரையும் பிடுங்கிக்கொண்டு உயிரை மாத்திரங் கொல்லாது விட்டு ஓட்டினர். ஓ அரசனே! அந்த ராஜஸ்திரீயானவள் உயிர் தப்பியது போதுமென்று தன் மகனையும்

காவலாளிகளையும் அழைத்துக்கொண்டு கங்காநதிக்குப் போகும் மார்க்கத்தை நாடித் தேம்பித் தேம்பி யழுது ஓராடையுடனடந்து இன்னமும் அக்கள்வர்கள் எவ்வழியாய் வருவார்களோவென்று பயத்துடன் அதிவேகமாய் ஓடும்பொழுது தாதியானவள் அவ ளுடைய பரிதாபத்தைக் கண்டு, அம்மணீ ! நீ பயப்படாதே என்று அணைத்துக் கொண்டுவர, இரண்டு நாளில் கங்கைக் கரையை வந்தடைந்து தெப்பத்திலேறி மஹா பரிசுத்தமாகிய அக்கங்கை யைக் தாண்டித் திரிகூட பர்வதத்திற்குப் போய் பரத்துவாசர் ஆச்சிரமத்தைக்கண்டு ஆங்குள்ள முனிகணங்களைப் பார்த்துப் பயமற்றவளாய் நின்றனள். (18–45)

பரத்துவாசர், அந்த மனோரமையைப் பார்த்து, ஓ கமலக் கண்ணுளே ! நீ யார் ? தேவமங்கையா ? பூலோக மங்கையா ? யாருடைய மனைவி ? உனக்கு எந்தவிதமான நஷ்டம் நேரிட்டதனல் இந்தப் பாலனை யழைத்துக்கொண்டு இக்கானகத்துக்கு வந்தனை ? உன்னைப் பார்த்தால் ராஜ்யத்தினின்றும் விடுபட்டு வந்தவள் போல் காண்கின்றாய் ? உன்னுடைய சரித்திரமென்ன ? உண்மை யைச் சொல்வாயென்று கேட்டனர். அந்த மனோரமையானவள் ஒன்றுக்கும் விடைகூறாமல் அவர் பாதத்தில்வீழ்ந்து புலம்பித் தேம்பித் தேம்பிப் பெருங்குரலிட்டழுது ஒருவாறு தெளிந்து ஒன்றையும் விடாது சொல்லவல்ல தோழிக்குச் சொல்லும்படிச் சொன்னாள். அவள் அம் மகரிஷியைப் பார்த்து, எங்களுக்குத் தெய்வம்போல் வீற்றிருக்கின்ற ஓ தவசிரேஷ்டரே ! சூரிய வம்சஸ்தனும், மஹா பலிஷ்டனுமான த்ருவசிந்து என்னும் ஓர் அரசனுடைய தருமபத்தினியாகும் இந்த அம்மணி. இவள் மனோ ரமை என்னும் பெயருடையவள். இவளைப்போலும் அந்த அரச னுக்கு லீலாவதி என்கிற வேறொரு மனைவியு முண்டு. இவள் நாயக னாகிய அந்த அரசன் வனத்தில் வேட்டையாடச் சென்று சிங்கத்தா லிறந்தனன். இந்தப் பாலன் அவன் மகனாகும். இவன் சுதர்சன னென்கிற பெயருடையவன் ; இவனுடைய பாட்டன் நல்ல தரு மாத்மா. அவன் தன் பேரனாகிய இவனுக்குப் பட்டங் கட்டவந்து யுத்தத்தில் மரணமடைந்தனன். அச் செய்தியைக்கேட்ட இந்த மனோரமை இனி நாமும் நம்முடைய மகனும் பிழைத்திருப்பது கஷ்டமென்று பயந்து மானிட சஞ்சாரமில்லாத வனத்தின்வழியாக உம்முடைய ஆச்சிரமத்தை வந்தடைந்து தானடைந்திருந்த கவலையை யொழித்துத் தேவரீருடைய சரணமே கதியென்று இப் பொழுது அடைக்கலம் புகுந்திருக்கின்றாள். ஆகையால் தேவரீர் இவ்வம்மணியைக் காக்க வேண்டும். ஏனெனில் தீனதசை யடைந் திருப்பவரையும், எந்தக்காரணத்தினலாவது பயந்திருப்பவரையும் காப்பது யஜ்ஞம் செய்யும்புண்ணியத்தைக் காட்டிலும் மேலான தென்று சொல்லப்பட்டிருக்கின்றதல்லவா, என்றனள். அவள் வாய்மொழியைக்கேட்ட மஹரிஷி மிகவும் இரக்கமுடையவராய் மனோரமையைப் பார்த்து, ஓ கற்புடையாளே ! இனி நீ பயமற்ற வளாய் என்னுடைய ஆச்சிரமத்தி லிருக்கலாம் ; சத்துருவாகிய

யுதாஜித்தென்பவனாலுண்டாகிய பயத்துக்கு நீ சிறிதும் அஞ்ச வேண்டாம். அதி சுந்தரனாகிய உன்னுடைய குமாரனை நன்றாய்ப் பாதுகாத்து வருவாய். அவன்தான் அரசனாகப் போகிறான். இது விஷயத்தில் நீ சந்தேகித்துத் துக்கிக்கவேண்டாம். இப்பொழு துண்டாகிய வருத்தம் போல் எப்பொழுதும் உனக்குண்டாக மாட்டாது. இன்பமேயுண்டாகுமென்றனர்.

அவரது வாய்மையாகிய வார்த்தைகளை மனோரமை கேட்டுச் சிந்தாகுலமற்றவளாய் அந்த மஹரிஷியினாலே ஏற்படுத்தப்பட்ட பர்ணசாலையில் யாதொரு துக்கமுமின்றித் தாதியோடு சுகமாய் வசித்திருந்து தனது அரிய குமாரனைப் பாதுகாத்துவந்தனள். (46–61)

ஓம் லப்த போகாயை நம:

## 16. யுதாஜித் பரத்வாஜாச்ரமம் போதல்

வியாஸ முனிவர் ஜனமேஜயனைப்பார்த்து, ஓ பூபாலனே! மகாபலிஷ்டனாகிய யுதாஜித்து போர்க்களத்தைவிட்டு அயோத்தி நகரத்துக்குப்போய் மனோரமையினுடைய குமாரனாகிய சுதர்சனனைக் கொல்லவேண்டு மென்னுந் துர் அபிப்பிராயத்தினால் மனோரமை எங்கே? அவளெங்குப் போயினள்? என்று அடிக்கடிப் பலமுறையுங் கேட்டு அவ ளெங்கில்லாமையை யறிந்து பின்னர் திக்குகள்தோறும் தூதர்களை யனுப்பி எவ்விடத்து மில்லாமையை யறிந்து, தன் பேரனாகிய லீலாவதியினுடைய குமாரனை நல்ல சுப தினத்தில் வசிஷ்டரால் உச்சரிக்கப்பட்ட அதர்வண சம்பந்தமாகிய மந்திரங்களால் ஜபிக்கப்பட்டு தீர்த்தங்கள் நிறைந்திருக்கின்ற கும்பங்களை மந்திரிகளைக்கொண்டு அபிஷேகஞ்செய்வித்துச் சிங்காதனத்திலேற்றிச் செங்கோலளித்துப் பின்னர்ப் பேரிகைகள் கொட்டச், சங்கங்கள் முழங்க, மற்றுமுள்ள பலவாத்தியங்கள் கோஷிக்க நகர்வலம் வருதலாகிய பட்டாபிஷேக மஹோத்ஸவத்தை நடாத்தினான். அந்த மஹோத்ஸவ சமயத்தில் எழுந்த அந்தணர்களுடைய ஆசீர்வாத வசனங்களாலும், கட்டியக்காரர்களுடைய ஸ்தோத்திரங்களாலும், மங்களகரமாகிய ஜய சப்தங்களாலும் எழுந்த பேரோசையை நோக்குங்கால் அயோத்திமா நகரம் தன்னிடம் நூதனமாக அரசன் ஏற்பட்டபடியால் தானுந் திருப்தியடைந்து மகிழ்ந்து சோபனம் பாடியதுபோலிருந்தது. அன்றியும், அரசன் புதிதாய்த் தோன்றிப் பிரகாசிப்பதால் அவனுக்கொற்றுமையாகத் தானும் வீணை வேணு மிருதங்கம் முதலிய வாத்தியங்களோடும் கூடித் தானும் புதிதாய் விளங்கியது போலிருந்தது.

இவ்வாறான அரிய சிறப்புடன் நகரம் விளங்கிய போதிலும் அந் நகரவாசிகளும் சில பெரியோர்களும் நமதரசனுடைய மூத்த மகனாகிய சுதர்சனன் எவ்விடஞ்சென்றானோ! அவன்தாய் எங்குச் சென்றாளோ! புத்திரனோடுதான் போயினளோ! ஒன்றுந் தெரிய

வில்லையே ! இவள் பிதாவாவது இருக்கின்றானோ வென்றால், அவனும் ராஜ்யாபேக்ஷையோடுங் கூடிய சத்துருவினால் போர்க்களத்திலிறந்து போயினான், என்று தங்கள் தங்கள் வீடுகடோறுந் துக்கத்தையே கொண்டாடுகின்றவர்களாக விருந்தனர். இவர்களெல்லாம் அந்த யுதாஜித்தினுடைய சுவாதீனத்திலிருப்பவர்களே ஆயினும் தருமபுத்தி யுடையவர்க ளாதலால் மேற் கூறியவாறெல்லாம் எண்ணித் துக்கிக்கலாயினர். (1–9)

இவர்கள் செய்தி இங்ஙனமிருக்க, யுதாஜித்து தன் பேரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தபோதிலும் அவன் அரசியல் செலுத்தும் பருவமுடையவ னல்லனாகலின் அரசாக்ஷியை அமைச்சர் வசமாக்கித் தான் தந்நகரம்போய்ச் சேர்ந்தனன். சில நாள் சென்றபின்னர், சுதர்சனன் தன் தாயுடன் பரத்துவாஜருடைய ஆச்சிரமத்தி லிருப்பதாகக் கேள்வியுற்று அவனைக் கொல்ல வேண்டுமென் றெண்ணிச் சிருங்கபேரபுரத்துக் கதிபதியாயும் மஹா சூரனாயுமுள்ள துர்த்தரிகன் என்னும் பெயருடைய வேடராஜனைச் சேனைகளுடன் அழைத்துக்கொண்டு சித்திரகூடம் போய்ச் சேர்ந்தனன். அச்செய்தியை மனோரமை கேள்வியுற்றுப் பயமுடையவளாய்க் கண்ணீர்விட்டழுது இனி நான் என் செய்வேன் ? எவ்விடம் போவேன் ? என்று மனங்கலங்கி நடுக்கமுற்றுப் பரத்துவாசரிடஞ் சென்று பணிந்து, ஓ சுவாமிகாள் ! சத்துருவாகிய யுதாஜித்து என் தந்தையைக் கொன்றபின்னர் தன் பேரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தன்மகளை வாழ்வித்து இப்பொழுது என் மகனைக்கொன்று என் வாழ்வைத் தொலைக்க வெண்ணித் திரண்ட சேனைகளுடன் சித்திரகூடம் வந்திருக்கின்றான். இன்னும் ஒரு கணத்துக்குள் இவ்விடம் வந்து சேருவான். சேர்ந்தவுடன் என்னைப் பலாத்காரமாக அபகரித்துத் தீங்குசெய்வதிற் றடையில்லை என்று மீண்டும் கூறுகின்றாள்: ஐம்புலன்களை வென்ற ஓ மகரிஷியே! என்னை எவ்விதம் பாதுகாக்க வல்லீராவீர் ? பூர்வத்தில் பாண்டவர்கள் வனவாசத்திற்குச் சென்றபொழுது அங்கு ரிஷிகளுடைய ஆச்சிரமத்திற் றங்கியிருந்த திரௌபதிக்கு அந்த மகரிஷிகளையே காவலாகவெண்ணி வெளியேபோவதும் வருவதுமாக விருந்தார்களென்றும், அவ்வண்ண மிருக்குங்காலத்தில் ஒருநாள் தருமனுதியர் வேட்டைக்குப்போக அந்தப் பாஞ்சாலி தனது தோழியருடன் தௌமியர்-அத்திரி-காலவர்-பைலர்-ஜாபாலி-கௌதமர்-பிருகு - அத்திரிகோத்ரர் - கண்ணுவர் - ஜதுக்ருது - வீதிஹோத்ரர் - சுமந்து-யக்ஞதத்தர்-ராசாசனர்-வத்ஸலர் ககோடர்-யவக்கிரீர்யர்-யக்ஞகிருது-சைவரிஷியாகிய பாரத்துவாசர் முதலிய மகரிஷிகளும், வேதபாராயணஞ் செய்கின்ற ஏனையரிஷிகளுங் கூடியிருக்கும் அவ்வாச்சிரமத்தில் சைனியத்தோடுங்கூடி வழியே போகின்றவனாகிய சைந்தவனென்னும் அரசன் அங்கெழுந்த வேதகோஷத்தைக்கேட்டு அப்புறஞ்செல்லத்துணியாது தேரைவிட்டிறங்கிச் சமீபித்து மகாமுனிவர்களாகிய அப்பெரியோர்களுடைய வேதத்தொனியை நன்றாய்க்கேட்டு இரண்டு தூதர்களுடன்சென்று அங்கு வீற்றிருக்கும்

பெரியோர்களை யெல்லாம்பார்த்து மிகுந்த பக்தியுடையவனாய் அவர்கள் சந்நிதானத்தில் அஞ்சலியஸ்தனாய் நின்று, வேதசொரூபிகளா யிருக்கின்ற ஓ மகரிஷிகாள்! உங்களடிவயனாயிருக்கின்ற யான்ஜயத்திரதன் என்னும் நாமமுடையேனென்று பணிந்து மகிழ்ந்திருந்தனனென்றும், அப்பொழுது அவ்வாச்சிரமத்திலிருந்த ரிஷிபத்தினிகள் அவ்வரசனுடைய வந்தனை வழிபாடுமுதலிய வொழுக்கங்களைச் சிலரால் கேள்வியுற்று அந்த ராஜன் யார் ? என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு அவனைப்பார்க்க யாவரும் புறப்பட்டார்களென்றும், அப்பொழுது மகாபதிவிரதையாகிய திரௌபதியும் அவ்ரிஷிபத்தினிகள் மத்தியில்வந்தனளாமென்றும், இவர்கள் வருகையைப்பார்த்த ஜயத்திரதன் ரிஷிபத்தினிகள் மத்தியில் லக்ஷ்மியைப்போல் பிரகாசிக்கின்ற பாஞ்சாலியைப்பார்த்து இவள் ரிஷிபத்தினிகளோடு சேர்ந்தவளல்லள் ; இவள் தேவகன்னிகையைப்போலுங் காணப்படுகின்றாள். இந்த ஐயத்தை யொழித்துக் கொள்ள வேண்டுமென்று தமியரைப்பார்த்து, இந்திராணியே பூமண்டலத்தை யடைந்தாள்போலும் யௌவனத்தோடு ரூபலாவண்ணியத்தையு முடையவளா யிருக்கின்ற இந்த ஸ்திரீ யாருடைய மகள் ? யாருடைய மனையாட்டி ? இவள் பெயரென்னை ? அரம்பையைப்போலும் பிரகாசிக்கின்ற இத்தேவமங்கை ராக்ஷஸ அம்சங்களை யடைந்திருப்பவள் போலுஞ் சிறிது உருவ பேதத்தை யடைந்திருக்கின்றாள். மகானுபாவரே ! உங்களினத்தவராகிய ரிஷிபத்தினிகளைப்போல ஒரு ரிஷிபத்தினியென்று எண்ணத் தக்கவளன்று. ராஜபத்தினி என்றே எண்ணத்தக்கவள். நீர் உண்மையைச் சொல்லுமென்று வினவினனென்றும், அதற்கு அத்தவமியர், ஓ அரசனே ! இவள் பஞ்சாலதேசத்தரசன் மகள் ; பாண்டவர்களின் பத்தினி ; திரௌபதை என்னும் பெயருடையவள். இப்பொழுது நேரிட்ட சமயபேதத்தால் இவ்வனத்தில் வசிக்கின்றாள் ; இவளுக்கு எங்களுடைய ஆதரவு கிடைத்திருப்பதால் பாண்டவர்கள் மனவருத்தமில்லாதவர்களாய் வனசஞ்சாரிகளா யிருக்கின்றனரென்று கூறினரென்றும், அப்பொழுது அந்த அரசன் பாண்டவர்களைப் பார்க்கவிரும்பி இப்பொழுது எவ்விடம் போனார்களென்று கேட்கத் தவமியர் அவர்கள் தேரேறி வேட்டையாடப் போயிருக்கிறார்கள் ; பின்னர் மிருகங்களை எடுத்துக்கொண்டு உச்சிப்பொழுதுக்கு இவ்விடம் வந்துசேருவார்களென்று கூறினரென்றும், அவ்வார்த்தையைக்கேட்ட அரசன் எழுந்திருந்து திரௌபதி சமீபத்திற்போய் வந்தனஞ்செய்து, ஓ பதிவிரதையே ! நீ க்ஷேமந்தானா ? மகாவீரர்களான உன் பர்த்தாக்கள் எங்கே போயினர் ? நீ வனவாசஞ்செய்யும்படி ஏற்படுத்திய பன்னிரண்டு வருஷத்தில் பதினொரு வருஷம் ஆய்விட்டதல்லவா ? என்று க்ஷேமலாபங்களை விசாரித்தனன். (10–37)

திரௌபதி இவனது நன்னடையைக்கண்டு சந்தோஷித்து, ஓ ராஜகுமாரனே ! உனக்கு மங்களமுண்டாகுக வென்றாசீர்வதித்து நீ சிறிதுநேரம் இவ்விடத்தில் இளைப்பாறியிருப்பாயாயின் ஒரு

கணப்பொழுதில் பாண்டவர் வருவார்களென்று சொன்னுளென்றும், அதனை யங்கீகரித்த அரசன் அந்தத் திரௌபதியை நன்ருய்ப் பார்க்க நேரிட்டபடியால் காமாந்தகனுய் நீதியை மறந்து அங்கிருந்த மஹா பெரியோர்களையும் அலக்ஷியஞ்செய்து அவளை யபகரித்தானென்றுங் கேட்டிருக்கிறேன். ஓ முனிவரே! ஒருத்தி ஐந்துபேரைக் கணவர்களாகப் பெற்று அவர்களுடைய வீரக்காவலை யுடையவளாயிருந்தும், அவர்களையன்றி அநேக மகரிஷிகளுடைய நீங்காத காவலைப் பெற்றவளாயிருந்தும், ஒரு சிறிய அரசனுல் அபகரிக்கப்பட்டாளென்ருல் எனக்குள்ள ஒரு கணவனுமற்று, உம்முடைய காவலிலிருக்கின்ற நான் என் பகையாளியால் பங்கமடைவே னென்பதற்குச் சந்தேகமுமுண்டோ? ஆகையால் பெண்களுக்குக் காவலாகவுள்ள பண்டிதர்களாகிய புத்திமான்கள் அப்பெண்களிடத்தில் புருஷர்களாயிருக்கின்றவர் யாவராயினும் அவர்களை ஒருகணமும் நெருங்கி விசுவசிக்காவண்ணஞ் செய்தல்வேண்டும். அவ்வண்ணஞ் செய்யாராயின் இருவருக்குந் துக்கமுண்டாகும். இந்த நியாயத்தை என்னைக் காக்கவல்ல தேவரீர் ஆலோசித்து யுதாஜித்து இவ்விடம் வருவாறுயின் அவனை விசுவசித்து நீர் இடந்தரவேண்டாம். அன்றியும் ஓ ஞானசீலரே! அறிவிலியாகிய எனக்குத் தோன்றும் சில நியாயங்களைத் தேவரீரே அறிந்துகொண்டு என்னைக் காக்கவேண்டும். என்னையெனின், உலகின்கண் பெண், மண், பொன் என்கிற முப்பொருளிடத்தும் ஆசைகொள்ளாதவர்கள் ஒருவருமில்லை. அதனுல் வஞ்சகச் செயலையும் அதற்கேற்ற பாவச்செயலையும் செய்யத் துணிகின்ருர்கள். இவ்வித காரியங்களில் திருமால் முதலியோரும் தன்பொருட்டே யன்றிப் பிறர்பொருட்டும் செய்ததாகக் கேட்டிருக்கின்றேன். அவற்றுள் இப்பொழுது வேண்டிய சிலவற்றை விண்ணப்பஞ் செய்கிறேன், கேட்டருள்வீராக :—

மகாபலி, பிரகலாதன் மகனுகிய விரோசனனுடைய குமாரனல்லவா? அவன் மகா தர்மாத்மா; சத்தியசந்தன்; விசேஷ சாம்ராஜ்ய முடையவன்; எப்போதும் யாகங்களைச் செய்கின்றவன்; கொடையாளி; எவரையும் காப்பவன்; பெரியோர்களுக்கெல்லாம் பிரியமானவன்; அதர்மத்தில் எக்காலத்திலும் மனங்கொள்ளாதவன். இத்தன்மையனுகிய மகாபலிச் சக்ரவர்த்தி விசேஷ தக்ஷிணைகளோடுங் கூடிய தொண்ணூற்றென்பது யாகங்களைச் செய்துமுடித்து நூருவது செய்யத்தொடங்குங்கால் பத்துவருணமுள்ளவரும், யோகிகளால் சேவிக்கப்பட்டவரும், பகவானுமாகிய நாராயணன் அவனிடம் ஒரு விரோதமில்லாதவரா யிருந்தும் தேவர்கள் பொருட்டு காசிபருடைய புத்திரராகிக் கபடம் நிறைந்த வாமனரூபராய் வந்து உலகமுழுவதையும் ஒரு போக்குக்காட்டித் தானமாகப் பெற்றுக்கொண்டனர். சக்கரவர்த்தியோ சத்திய வாக்கொன்றையே எண்ணிக் கீழடங்கினவனுயினன். கபடமற்றுக் காக்கவேண்டிய மஹாவிஷ்ணுவே இவ்வாறு கபடஞ்செய்தாரென்ருல் மற்றெவர்கள் எவ்வாருன வஞ்சனையைச் செய்யத்

துணியார்கள்? ஆனால் இவரைப்போலும் ஒருவருஞ் செய்யத் துணியாரென்று மெண்ணுகிறேன். ஓ மஹரிஷியே! குணங்களிற் சிறந்த ஸத்வகுணமூர்த்தியென்று யாவராலுங் கொண்டாடப்பட்ட திருமால் யாகத்தைக் கெடுக்கவெண்ணி குணங்களில் மிகச்சிறிய தென்று பெரியோர்களா லிகழப்பட்ட வஞ்சகத்தை மேற்கொண்டு வாமனமூர்த்தி யாயினரல்லவா? இது பிறர்பொருட்டுக் கொண்ட மண்ணாசையினாற் செய்ததல்லவா?

ஓ முனிவரே! யாவருக்காயினும் மனதில் லோபகுண முண்டாகுமாயின் பயத்தைக் கொடுப்பதாகிய பாவம் எம்மாத்திரம்? ஆகவே, அவர்கள் பாவஞ்செய்யத் துணிகிறார்கள். அவர்களுக்குப் பரலோகமில்லாமற் போகுமே என்கிற பயமு முண்டாகிறதில்லை. அவர்கள் பிறருடைய பொருள்களை யபகரிக்க வேண்டுமென்றே மனவாக்குக் காயங்களால் முயற்சிக்கின்றவர்களாகலான் அவர்க ளெவ்விதத்துங் கெடுதியடைவார்கள். இவர்களேயன்றித் தெய்வத்தை வழிபடுகின்றவர்களுக்கும் பொருளாசை விட்டு நீங்காமல் அப்பொருளுக்கே தெய்வத்தை வழிபடுவதினால் அத்தெய்வமும், வர்த்தகஞ் செய்வோனுக்கு வர்த்தக மூலத்தினாலும், தானமாக ஏற்பவனுக்குத் தானமூலத்தினாலும், நாயகமற்ற பொருள்களுக்கு நாயகமாகுங் காரணத்தாலும், பிறரைக்கொண்டு பிறருடைய பொருளையே அவர் வேண்டியவாறு கொடுப்பதல்லாமல் தான் கொடுப்பதில்லை. ஏனெனில் பொருளாசை யுடையவர்களுக்குப் பிறரிடத்தில் விசுவாச முண்டாகிறதில்லை. அஃது உண்டாகாதவர் களிடத்தில் தெய்வங்களுக்கு விசுவாச முண்டாகிறதில்லை. பொருளாசையுடையவர்களுக்கு விசுவாச முண்டாகிறதில்லை என்பதற்குச் சில நியாயங் கூறுகின்றேன். என்னையெனில், வைசியர்கள் வியாபாரஞ் செய்யுநிமித்தம் அநேக வஸ்துக்களைச் சேகரித்துக் கொண்டு, ஓ கடவுளே! எனக்கு இவைகளால் விசேஷ லாபமும் சாம்ராஜ்யமும் உண்டாக வேண்டுமென்று வேண்டுகின்றனர். அவ்வண்ணம் பிரார்த்திக்கின்றவர்கள், ஓ கடவுளே! நீ எனக்கு லாபங் கொடுக்கும்பொழுது பிறரை வஞ்சித்தாவது, வருத்தியாவது கொடுக்கவேண்டுமென்று வேண்டுவதுண்டா? பொருளைச் சம்பாதிக்கும் சமயம் கூடும்பக்ஷத்தில் பிறர்பொருளைக் கொள்ளும் ஆசை யுண்டாகாமற் போகிறதா? அப்பொழுதுதான் அதிகவிலை கூறி எவ்விதத்தினாலாவது பிறர்பொருளைக் கொள்வதற்கு விரும்புகின்றார்கள். இவ்வண்ணம் விரும்புவது ஒரு சமயமன்று, எப்பொழுதுமேயாம். ஓ ஆசையற்ற முனிவரே! இவர்களுக்குப் பிறரிடத்தில் விசுவாசம் எங்கே யுண்டாயிற்று? நிலையில்லாத பொருளில் ஆசையும், பரகதியை விரும்பாத அஞ்ஞானத்தையுமுடைய இவர்கள் தீர்த்தயாத்திரை செய்வதும், தான தருமங்களைச் செய்வதும், வேதாத்தியயனம் முதலியவற்றைச் செய்வதும் வீணாகமுடியுமேயன்றிப் பயன்படமாட்டா. ஆகையாலிவர்கள் மேற்கூறிய தீர்த்தயாத்திரை முதலியவற்றைச் செய்தாலும் செய்யாதிருந்தாலு

மென்ன பிரயோசன முண்டாகுமோ அந்தப் பிரயோசனந்தா னுண்டாகும். ஓ சாந்தகுணமுடைய பெரியோரே! இதுவரையில் நான் கூறிவந்த ஆசையுடையவர்களில் இப்பொழுது வரப்போகிற யுதாஜித்து முதன்மை யானவனுகும். ஆகையால், ஓ மகானு பாவரே! அவன் வருவானுயின் நீர் அவனைப் போகும்படி செய்ய வேண்டும். நான் புத்திரனேடு உம்முடைய ஆச்சிரமத்திற்றனே சீதாதேவியைப்போல் வசிக்கிறேனென்று பிரார்த்தித்தனள். பரத்துவாஜர் அவளெண்ணப்படி நடக்கவிருக்கும்போது யுதாஜித் தும் வர, அவன் வருகையைக்கண்ட முனிபுங்கவர் எதிரேசென்று அவனைச் சமீபித்து, அரசனே! நீ எண்ணி வருவதை நானறிவேன்; நான் சொல்வதை நீ நம்புவாயாக. மனேரமை என்னுடைய ஆச் சிரமத்துக்கு வரவேயில்லை; நீ உன்னிடம் போகலாமென்று சொல்ல, யுதாஜித்து, ஓ முனிவரே! ஏன் பொய் சொல்லுகின்றீர்? மனேரமை உம்மிடத்திற்றனிருக்கின்றுள். நீர் அவளிடம் தாக்ஷிண் யப்படாமல் கண்டிதமா யென்னிடம் துறத்தாமற் போவீராயின் யான் பலாத்காரமாகக் கொண்டுபோவேனே யன்றி அவளை விட்டுப் போகேனென்றனன். தவசிரேஷ்டராகிய பரத்துவாஜர் முன் விஸ்வாமித்திரன் வசிஷ்டருடைய பசுவை எப்படி யபகரித்தானே, அப்படியே உனக்குச் சக்தியிருக்குமாயின் மனேரமையை அபகரித்துப் போகலாமென்றனர். (38–60)

ஓம் லப்த ஸுகாயை நம:

## 17. சுதர்சனன் காமபீஜம் பெறுதல்

மகரிஷியினுடைய வீரமொழியை யுதாஜித்து கேட்டும் மனே ரமையைக் கொண்டுபோவதற்கே ஊக்கமுள்ளவனுய்ப் பெரிய மந்தி ரியை யழைத்து, ஓ மந்திரி! புத்திரனே டிருக்கின்ற மனேரமையை இம் மகரிஷி யனுப்புவதாகத் தோன்றவில்லை. ஆகையால் அவ ளைப் பலாத்காரமாகக் கொண்டு போகலாமென்றெண்ணுகிறேன். புத்திமானுகிய நீ இதற்கென்ன செய்யத் தக்கதோ அதைச் சொல் வாயாக. எதையு மெண்ணிச்செய்ய வேண்டியது அவசியமாக லானும், க்ஷேமத்தை யடைய அபேக்ஷையுள்ளவன் அதற்கு விரோ தமான பகை அற்பமாயிருந்தபோதிலும் அதனை அலக்ஷியம் செய் யக்கூடாதாகலானும், செய்வானுயின் அது க்ஷயரோகம்போல் விருத்தியடைந்து முடிவில் தான் சாகுந் துயரத்தைத் தருமாக லானும், பகையைச் சிறிதாகவெண்ணிப் போகக்கூடாதென்பதே என் அபிப்பிராயம். ஆகையால் என் பேரனுக்குச் சத்ருவாகி இவ் வாச்சிரமத்திலிருக்கின்ற சுதர்சனனைக் கொல்லவேண்டும். கொல் வேனுயின் எவன் என்னை இங்குத் தடுக்கக்கூடியவன்? அவனுக் குச் சேனை முதலியவையிருந்தாலல்லவோ யுத்தஞ் செய்ய வரு வார்கள்; ஒருவருங் கிடையாது. ஒருவருமற்ற அவன் மரித்தால் என்னுடைய பேரன் பயமற்று ராஜ்யத்தைச் சுகமாக ஆள்வான்.

ஆகையால், அதனையே செய்ய எத்தனிக்கிறேன்; நீ என்ன சொல்லுகின்றாயென்று மீண்டும் கேட்டனன். (1–5)

மந்திரி, ஓ அரசனே! நீ இச்சாகசமான செயலைச் செய்ய வேண்டாம். மகரிஷி சொல்லியதை நீ யோசித்தவனாகத் தோன்ற வில்லை. அவர் திருஷ்டாந்தமாக வெடுத்துக்கூறிய விஶ்வாமித்திரனுடைய செய்தி நீ யறிந்திலாய்போலும். பூர்வத்தில் விஶ்வாமித்திரனென்பவன் காதிராஜனுடைய குமாரனாயும் அரசர்களிற் சிறந்தவனாயுமிருந்தவன். அவன் ஒருகால் வசிஷ்டராச்சிரமத்தையடைந்து அவரைப்பணிந்து அவர் கொடுத்த ஆசனத்திலிருந்தனன். மகாத்மாவாகிய வசிஷ்டர் அவனை நோக்கி இன்று உன் சேனைகளுடன் போஜனஞ் செய்து போகவேண்டுமென்று சொல்லிக் காமதேனுவை யழைத்து அதனால் அவரவர் விருப்பத்துக்குத் தக்கவாறு அறுசுவையோடு கூடிய உண்டிகளை யுண்டாக்கி அவரவரையு முண்பித்துத் திருப்தி செய்வித்தனர். விஶ்வாமித்திரன் இவை யாவும் காமதேனுவின் பிரபாவமென்றறிந்து வசிஷ்டரை நோக்கி, ஓ சாந்தகுணமுள்ள சீலரே! கும்பம்போலும் மடிபடைத்த ஆயிரம் பசுக்களை உமக்குத் தானமாகக் கொடுக்கின்றேன்; நீர் இக் காமதேனு ஒன்றை மாத்திரம் கொடுமென்று பிரார்த்தித்தனன். வசிஷ்டர், ஓ அரசனே! இக்காமதேனு எனது ஹோமார்த்தமாக வுள்ளதாகையால் அதனை யொருபொழுதுங் கொடுக்கமாட்டேன். நீ எனக்குக் கொடுக்க வுத்தேசித்த ஆயிரம் பசுக்களெனக்கு வேண்டாம்; நீயே வைத்துக்கொளென்றார். விஶ்வாமித்திரன் அவர் கூறிய வுண்மையை யறியாது மறுபடியும் உமக்காயிரம் பசு போதாதென்றிருக்குமாயின் பதினாயிரமோ லக்ஷமோ, இவ்வளவன்றி உம்முடைய மனதிற் றோன்றுகின்ற அவ்வளவும் கொடுக்கின்றேன். நீர் இக்காமதேனுவை மாத்திரம் தடையில்லாமற் கொடும். அப்படி நீர் கொடாமற் போவீரானால் யான் பலாத்காரமாகக் கொண்டு போவதிற் றடையில்லையென்றான். வசிஷ்டர், ஓ அரசனே! என்னிடத்திலிருக்கும் பசுவை என்னுடைய மனப்பூர்த்தியாகக் கொடுக்கமாட்டேன். நீயே உன்னிஷ்டப்படி கொண்டுபோகக் கூடுமானால் கொண்டுபோகலாமென்றார். உடனே விஶ்வாமித்திரன் மகா பலசாலிகளாகிய தன் சேனைகளைப் பார்த்து இக்காமதேனுவை நீங்கள் பிடித்துக்கொண்டு போங்களென்று கட்டளையிட, அவர்கள் காமதேனுவை இலேசாகவெண்ணிப் பிடிக்கத் தொடங்கியபொழுது, அது கண்ணீர் விட்டழுது நடுக்கத்தோடும் வசிஷ்டரை நோக்கி, ஓ முனிசிரேஷ்டரே! எந்தக் காரணத்தினால் என்னை இவர்களிடம் விட்டுவிடத் துணிந்தீர்? இவர்களோ என்னையிழுக்கின்றார்கள்; உம்முடைய சம்மதம் யாதென்று கேட்டது. வசிஷ்டர், யான் ஏனுன்னை விடுகிறேன்? மனதினாலும் விடுவதற்கு இச்சை கொள்ளேன்; இந்த விஶ்வாமித்திரன் என்னால் செய்யப்பட்ட உபசாரத்தை யேற்றுப் பின்னர் அவ்வுபசாரத்திற் கெல்லாம் காரணம் நீயென்றுணர்ந்து உன்னைப் பலாத்காரமாகக் கொண்டுபோகப் பிரயத்தனப்பட்டிருக்கிறான்;

யானென் செய்வேனென்றூர். அவரது கருணைமொழிகளைக் கேட்ட காமதேனு ஓர் ஹுங்காரத்தொனியை யாவரு மஞ்சச் சப்தித்தது. உடனே மகாகோரரூபத்தோடுங்கூடிய இராக்ஷசர்கள் கவசம் பூண்ட சரீரமுடையவர்களாயும், ஆயுதங்களேந்திய கரங்களை யுடையவர்களாயும் அக்காமதேனுவின் சரீரத்தினின்றும் வெளிப்பட்டுச் சூழ்ந்திருக்கின்ற சைனியங்களை யுறுத்துப்பார்த்து, நில்லுங்கள் நில்லுங்களென்று சொல்லிக்கொண்டே யாவரையுங் கொன்று மறைந்தார்கள். காமதேனுவும் பயமற்று வசிஷ்டரிடத்தில் சுகமாகத் தங்கிவிட்டது. விஸ்வாமித்திரன் இஃது என்ன ஆச்சரியமென்று மனவருத்தமுற்று அக் காமதேனுவினிடத்தில் பயபக்தி யுடையவனாய்த் திரும்பிச் சேனைகள் மாண்டதை யெண்ணிக் கலக்கமுற்று க்ஷத்திரியருடைய மந்திரசக்தி என்ன வன்மை யுடைத்தென்று நிந்தித்துப் பிரமரிஷிகளுடைய மந்திரசக்தியே வன்மையுடைத்தென்று புகழ்ந்து, அந்தமந்திர வீரியத்தைத் தானடையவெண்ணிப் பின்னரது கைகூடுத லரிதென்று நினைத்து, அரிதாயினும் அதனையே தேடவேண்டுமென்று மீண்டுங் கருதி நகரத்துக்குச் செல்லாது அநேக காலம் வனத்திலேயே கடினமாகிய தவத்தைச் செய்து க்ஷத்திரியருடைய * தேஜோபலத்தை யொழித்து பிரம்ம தேஜோபலத்தை யடைந்தான். (6–24)

ஆகையினால், ஓ அரசனே! தவசிகளை இலேசாக நினைத்து அவர்கள் விரோதத்தைக் கொள்ளவேண்டாம். அவர்களை வெற்றி கொள்ள ஒருவராலும் முடியாது. அவர்களுடைய கோபம் குல நாசத்தை யுண்டுபண்ணும். இதனை யாலோசித்து மஹாதபஸ்வியாகிய பரத்துவாஜரை நமஸ்கரித்து இனியமொழி கூறி உன்னுடைய நகரை யடையும் வழியைத் தேடுவாய். நீ பகையாளியாக நினைக்கும் பாலனாகிய சுதர்சனனுக்குத் தனமிருந்தாலல்லவா அவன் உனக்கு வருத்தத்தை யுண்டாக்குவான்? அவனிடத்திலென்ன விருக்கின்றது? அவனென்ன செய்யப்போகின்றான்? நாதனில்லாதவனும் பலஹீனனுமிருக்கின்ற அவனிடத்தில் நீ வைரங் கொள்வது வீண்தானே. யாவரிடத்திலும் தயையிருக்கவேண்டும். யாவரும் ஒரு தெய்வத்தின் அதீனத்திலிருக்கின்றவர்களே யன்றி வேறில்லை. ஒருவரை யொருவர் ஏதேனுஞ்செய்வதற்கு முடியுமா? ஒருவருக்கு எது வரத்தக்கதோ அது அவசியம் வந்தே தீருமல்லவா? அதனைத் தடுக்கமுடியுமா? ஆகவே ஒருவர் சுகத்தைப்பார்த்துப் பொறாமைப் படுவதினால் வரும் பிரயோஜனமென்னை? தெய்வபலமிருந்தால் ஒரு சமயம் வஜ்ராயுதமும் ஒரு புல்லுக்கொப்பாகும்; அற்பமாகிய முயலும் புலியைக்கொல்லும். அதுபோலவே சிறியவோர் மசகமும் யானையைக்கொல்லும்; அஃதில்லையாயின் திரணமாகிய ஒரு புல்லும் வஜ்ராயுதமாகும். ஏனையவும் அப்படியேயாகும். புத்திமானாகிய ஓ அரசனே! எனது இதமாகிய சொல்லை அங்கீகரித்துக் கோபத்தைத் தணித்துச் சுதர்சனன் இங்குச் சுக

* தேஜோபலம் – மந்திர வீரியம்.

மாக வசிக்கவிட்டு நாம் போவோமென்று கூற, யுதாஜித்து ஒருவாறு கோபந்தணிந்து மந்திரி வார்த்தையின்படி பரத்துவாஜரை வணங்கித் தன் நகரம்போய்ச் சேர்ந்தனன். (25–31)

பின்னர் இச்செய்தியெல்லாம் மனோரமை யறிந்து தனது புத்திரனுடன் வாழ்ந்திருக்கும்போது சுதர்சனன் யாதொரு பயமுமில்லாமல் ஐந்துவயதளவும் அங்குள்ள முனிபுத்திரர்களோடு விளையாடிக்கொண்டிருந்தான். ஒருநாள் ஒரு முனிபுத்திரன் மனோரமையோடிருக்கின்ற பேடியைப்பார்த்து, ஓ க்லீபனே! (நபும்ஸகனே) இங்கு வாவென்றழைத்தனன். அப்போது சுதர்சனன் அப்பதத்தின் முதலெழுத்தைத் தனக்கு விவரமாயும் நன்றாயுந் தெரியும்வரையிற் கேட்டு அதனை மிகவும் பிரியத்துடன் அடிக்கடி * அநுஸ்வாரத்தோடுச்சரித்து வந்தனன். காமராஜ மென்கிற பீஜாக்ஷரம் அதுவாதலால் அதனையுச்சரித்துவந்த பால்யனாகிய சுதர்சனனுக்குப் பூர்வ புண்ணியவசத்தால் அதனை யுச்சரிப்பதில் மனதுக்கோராதரவும், அதன் பயனை அடையவேண்டிய சம்பந்தமில்லாமல் ஒருவருடைய ஏவுதலில்லாமல் இயல்பாகவே அதனை மறவாதிருத்தலாகிய திறமும், மந்திரத்துக்குரிய ரிஷி-சந்தஸ் - தியானம் – நியாசமுதலியன உணர்ந்திலனாயினும் அது சாரமுள்ளதென்றுணர்ந்த அறிவும் உடையனாய் அவ்வக்ஷரத்தை மாத்திரம் இடைவிடாது பதினொரு வயதளவும் ஜபித்து வந்தனன். அப்பருவத்தில் பரத்துவாஜ முனிவர் உபநயனஞ் செய்துப் பின்னர் வேதாத்தியயனத்தையும் தனுர்வேதமுதலிய சகலகலைகளையுங் கற்பித்துவர, அவன் ஜபித்துவரும் மந்திரபலத்தால் விதிப்படி யாவையு மெளிதிலுணர்ந்து மற்றோரிடத்திற் சென்று அங்குள்ள முனிவர்களிடத்தில் இன்ன நூலைக் கற்றுணர வேண்டுமே என்கிற ஏக்கமுமற்று இருந்த விடத்திற்றனே ஸர்வ சாஸ்திர பண்டிதனாய்த் தன் தாயை மறவாது அவளுக்குரிய பணிவிடைகளைச் செய்து நதிக்கரையில் சஞ்சரித்துக்கொண்டிருந்தனன். ஒரு நாள் தேவி அவன் முன்னே சிவந்த வஸ்திரத்தோடு கூடினவளாய், சிவந்த நிறமுடையவளாய், சிவந்த ஆபரணம் பூண்டவளாய், கருட வாகனத்தி லெழுந்தருளியிருக்கின்ற அற்புதமாய் விளங்கும் விஷ்ணு சக்தியாகிய மகாலக்ஷ்மி சொரூபிணியாய்த் தரிசனந்தந்து தனுசையும், மிகவுங் கூர்மையாகிய அநேக பாணங்களையும், அம்பறாத்தூணியையும், வச்சிர கவசத்தையுங் கொடுத்து மறைந்தனள். அச்சமயத்தில் அவ்வழியாய் வந்த காசிராஜனுடைய தூதர்களிற் சிலர் சுதர்சனனுடைய பேரழகைக்கண்டு தங்கள் அரசன் மகளாகிய சர்வலக்ஷணங்களோடுங் கூடிய சசிகலை என்னும் கன்னிகையிடத்திற்சென்று அவனுடைய அங்கவிசேஷங்களையும், இரண்டாவது மன்மதனென்று சொல்லும்படி யமைந்துள்ள சௌந்தரியத்தின் பெருமையையும், வீரபராக்கிரமத்தி

---

* அநுஸ்வாரம் என்பது • இக் குறியுடையது. அதனைத் தமிழில் மகர வொற்றாக வுச்சரிக்கப்படும்.

னுடைய மிகுதிப்பாட்டையு மெடுத்துக் கூறினர். அக்கன்னிகை அவர்களால் சொல்லப்பட்டன வெல்லாங்கேட்டு அப்பொழுதே அவனைக்கண்டவள்போலு மகிழ்ந்து அவனைத் தனக்குக் கணவனுக மனதினுல் நிச்சயித்து மன்மதனுடைய பாணத்துக் கிலக்காயினள். உலகமாதாவாகிய தேவி ஒரு நாளிரவில் அக்கன்னிகையின் சொப்பனத்தில் பிரஸன்னையாய், ஓ பெண்ணே ! நீ கேள்விப்பட்ட சுதர்சனனென்கிற ராஜபுத்திரன் என் பக்தன் ; அவனைப் புருஷனுக நீ வரித்துக்கொள்வாயாயின் அவனே உனக்குச் சர்வா பீஷ்டங்களையுங் கொடுக்குங் கடவுளாவனென் றனுக்கிரகஞ்செய்து மறைந்தனள். சசிகலை தேவியினுடைய மனேகரமாகிய திருவுருவத் தைச் சொப்பனத்தில் தரிசிக்கப் பெற்றமையும் அவள் தன் னெண்ணம்போல் அநுக்கிரகித்தமையும் நினைத்து விழித்து நம தெண்ணம் முடிந்ததென்று சந்தோஷித்தெழுந்து என்றுமில்லாத முகமலர்ச்சியுடையவளாய் உள்ளே அடங்கப்பெருத ஆனந்தத் தோடு முலாவிக்கொண்டிருந்தனள். அதுகண்ட அவளன்னை பார்த்து, நீ இவ்வளவு சந்தோஷத்தோடுங் கூடியிருப்பதற்குக் காரணமென்னவென்று கேட்கக் கன்னிகையானவள் நாண முடையவளாய் அக்காரணத்தைச் சொல்லாமல் தான் கண்ட சொப்பனத்தை அடிக்கடி எண்ணிச் சந்தோஷித்துத் தனக்குத் தானே சிரித்துக்கொண்டு தன்னுயிர்த் துணையாயுள்ள ஒரு தோழியைப் பார்த்துச் சொப்பனத்தைக் கண்டவண்ணம் சொல்லி விட்டுப் பின்னர் தோழிகளோடு விளையாடுதலையெண்ணி யழைத்துக்கொண்டு சண்பகமரங்களால் பிரகாசிக்கின்ற உத்யான வனத்தை யடைந்து அங்கொரு சண்பகவிருக்ஷத்தின்கீழ் நின்று அம்மரத்திலிருக்கும் புஷ்பங்களைப் பறித்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில், ஒரு பிராமணன் அம்மார்க்கத்தில் அதிவேகமாய் வர, அவனை நமஸ்கரித்து, ஓ மகானுபாவரே! நீர் எந்த தேசத்திலிருந்து வருகின்றீரென்று இனியமொழிகளாற் கேட்டனள். அதற்கந்தப் பிராமணன், ஓ யௌவனவதியாகிய கன்னிகையே ! நான் பாரத்து வஜராச்சிரமத்திலிருந்து ஒரு காரியத்தை யெண்ணி வருகின் றேன். நீ ஏன் என்னை யாரென்று கேட்கின்றாய் ? அதனைச் சொல் லென்ருன். (32–57)

சசிகலை தனக்குத் தேவி யநுக்கிரகஞ்செய்த கணவன் அந்த ஆச்சிரமத்தி லிருப்பதாகக் கேள்வியுற்றிருக்கின்ருளாதலால் அவன் பெருமையை அந்தப் பிராமணனுல் நன்ருயறிந்து கொள்ளலாமென்றெண்ணி, ஓ மகானுபாவரே ! நீர் சொல்லிய அந்த ஆச்சிரமத்தில் கண்களால் அதிசயித்துக் காணத்தக்கதாயும், உலகத்தி லில்லாததாயுமுள்ள விசேஷங்களேதேனுமிருக்கக் கண்ட துண்டோவென்ருள். அந்தப் பிராமணன், ஆ ஹா ! அவ்விடத்தில் நான்கண்டதொன்றுண்டு. ஆனுல் அஃது அஃறிணைப் பொரு ளன்று. உயர்திணைப்பொருளாகிய ஒரு மகாபுருஷனுகும். அவன் யாரெனின், துருவசிந்துவென்னும் அரசனுடைய புத்திரன் ;

* சுதர்சனனென்னும் பெயருடையவன். அந்த ஸ்ரீமானுடைய நாமமெப்படியோ அப்படியே ரூபலாவண்யம் முதலியனவும் அவனுக்கு அமைந்திருக்கின்றன. ஓ கன்னிகையே! புருஷ சிரேஷ்டனாகிய அந்தச் சுதர்சனனை எந்த மானிடனுடைய கண்கள் காணவில்லையோ அக்கண்கள் பிரயோசன மற்றவையாம். ஆண் மக்களுக்கே இந்த கதியாயின் பெண்களுக்கு நான் வேறு சொல்ல வேண்டுமா? ஏனிவ்வண்ணஞ் சொல்லுகின்றே னென்றால் சிருஷ்டியிலாசையுடைய பிரம்மா குணங்களிற் சிறப்பாகச் சிலரையும் உருவங்களிற் சிறப்பாகச் சிலரையும், இவ்விரண்டிலும் ஈனமாகப் பலரையும் எண்ணாது படைப்பதுபோல் இவனைப் படைக்காமல் எல்லாம் இவனிடத்திலேயே அமைந்திருக்க வெண்ணிச் சிருஷ்டிக்கப்பட்டவனாய் அவன் விளங்குகின்றான். ஓ சுந்தரியே! இப்பொழு தொன்றெண்ணுகிறேன். என்னையெனின், குணங்களுக் கெல்லாம் இடமாயிருக்கின்ற அந்த மகாபுருஷனைச் சந்தோஷத்துடன் நீ பார்க்கவேண்டுமென்பதேயாம். யோக்யனாகிய அந்த ராஜ புத்திரன்றான் உனக்குத் தலைவனாதற்குரியவன். நீதான் அவனுக்குத் தலைவியாதற்குரியவள். புருஷரிற் சிறந்த சுதர்சனனைப் பிரமன் படைக்கும்பொழுது புருஷருக்குரிய எல்லா லக்ஷணங்களும் அவனிடத்திலேயே அமைந்திருக்கச் செய்தானென்று சொல்லியதுபோல், பெண்களிற் சிறந்த உன்னைப் படைக்கும்பொழுதும் பெண்களுக்குரிய சகல லக்ஷணங்களும் உன்னிடத்திலேயே யமைந்திருக்கச் செய்தானென்றே சொல்ல வேண்டியதா யிருக்கின்றது. ஆகையால் உங்களிருவருக்கும் சம்பந்தம் உண்டாகுமானால் அது சுவர்ணமும் மாணிக்கமும் ஒன்றாகக் கலந்து அழகு செய்வது போலாகுமென்று கூறினான். (58–62)

ஓம் லப்த ஹர்ஷாபிபூஜிதாயை நம:

## 18. சசிகலை சுயம்வரம்

யுவதியாகிய சசிகலையானவள் முன் வந்த பிராம்மணன் வார்த்தையைக்கேட்டுச் சுதர்சனன்பால் முன்னையினும் மிகுந்த பிரேமை யுடையவளாய் மயங்கி நிற்ப அந்தப் பிராம்மணன் இராப்பொழுது வந்துவிட்டபடியால் கோரங்கிக் குச்சியைக் கொளுத்தி விளக்கொளியாகக் கையிற் கொண்டு தன்னூருக்குப் பிரயாணப்பட்டுப் போயினன். மயங்கி நின்ற சசிகலையானவள் காமவிகாரங் கொண்டவளாய்ச் சரீர வாட்டமடைந்து தன் னெண்ணத்தைக் குறிப்பாலறிந்து முடிக்கவல்ல தோழியைப் பார்த்துக் கூறுகின்றாள்: ஓ தோழி! இங்கு அந்தணனால் சொல்லப்பட்ட புருஷனுடைய ரூபலாவண்யாதி விசேஷங்களை நான் உன்னிலும் அதிரசமாக நன்றாய்க் கேட்டவளாயிருந்தும் அவைகளை ஒருவமானங்காட்டி உனக்கு எடுத்துச்சொல்ல வேண்டுமென்

* சுதர்சனன் - பார்ப்பதற் கழகுள்ளவன்.

றெண்ணமுடையவளாயிருந்தும் அவனுடைய ரூபலாவண்ணியங்களுக்கேற்ற பொருள் இதுவாமென்று எடுத்துச்சொல்லக் கூடாதவளா யிருக்கின்றேன். இதனால் நீ அவன் என்னால் பார்க்கப் பட்டவனென்று எண்ணற்க. இப்பொழுது இந்த அந்தணன் சொல்லக் கேட்டேனே யன்றி வேறில்லை. ஆனால் இப்பொழுது என் மனம் என்னவிதமா யிருக்கிறதென்று கேட்பாயாயின், அவனைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டதுபோல சபலத்தை யடைகிறது. மன்மதனும் நாயகனைப் பிரிந்த நாயகியை வருத்துவது போலவே என்னைக் காமத்துக் குள்ளாக்கி வருத்துகின்றான். நான் கண்ணுற் கண்டறியாத அந்தச் சுதர்சனனும் இரண்டாவது மன்மதன்போல் என் கனவில் வரத்தலைப்பட்டான். நானென்ன செய்வேன்? எங்கே போவேன்? என் மனமும் காமலீலையில் ஆகுலத்தை யடைந்து தவிக்கிறது. என் தேகத்தில் இப்பொழுது சந்தனத்தை அப்பியிருப்பது, விஷத்தை அப்பியதுபோலும்; பூமாலைகளசைவது, சர்ப்பங்க ளூருவதுபோலும்; சந்திரகிரணம் வீசுவது, அக்னியானது சுவாலை வீசுவதுபோலு மிருக்கிறது. உப்பரிகை உத்யானவனம் நடபாவி பர்வதம் முதலிய விடங்களில் பகற்பொழுது மிராப்பொழுது மிருந்து மிருதுவான படுக்கைகளாலும் தாம்பூலம் முதலிய சுகவாசங்களாலும் கானம் முதலிய வாத்தியங்களாலுஞ் செய்து கொள்ளற்பாலன வெல்லாஞ் செய்தும் அவைகளெல்லாம் என் மனத்தையும் கண்ணையும் திருப்தி செய்யவில்லை. (1–8)

என்னை இவ்வாறு காமத்தால் பீடிக்கச் செய்கின்ற சுதர்சனன் எந்த வனத்திலிருக்கின்றானோ அந்த வனத்திற்கு இனி நான் போகின்றேன். போவதற்குங் கூடவில்லை. ஏனெனில் குல தருமமாகிய வெட்கமும், தந்தையினுடைய காவலும் என்னைப் பயப்படுத்தி ஒருவழியிலும் தெளிய வொட்டாமற் செய்கின்றன. என் தகப்பனாராவது என்னெண்ணமறிந்து சுதர்சனனாகிய ராஜ புத்திரனுக்குக் கொடுக்கின்றே னென்று சுயம்வரம் நாட்டுவாரா? அது செய்யார். ஏனெனில், நிறைந்த சாம்ராஜ்யமுடையவர்களாகிய அரசர்கள் அநேகரிருக்க அவர்களை யெல்லாம் விட்டு ராஜ்ய மில்லாமலிருக்கின்ற சுதர்சனனுக்கு எப்படி என்னைக் கொடுக்க நினைப்பார்? நினையார். எனக்கோ சுதர்சனன் ராஜ்ய ஹீனனா யிருந்தபோதிலும் அவன் தான் எனக்கு இஷ்டனாயிருக்கிறான். மற்றயலாரெல்லாம் எனக்குப் பிரியப்படவில்லை. இதற்கு நான் என்ன செய்வேனென்றாள். ஓ அரசனே! சுதர்சனன் ஜபிப்பதாகிய வாக்பீஜத்தினுடைய ஜபசித்தியினால் அந்தச் சசிகலையானவள், ஒருவனாயும் தன மில்லாதவனாயும் உபபல மில்லாதவனாயும் வனத்தில் வசிக்கின்றவனாயும் கந்த மூலபலங்களைப் புசிக்கின்றவனாயு மிருந்தபோதிலும் அவனையே தன்னுடைய மனதிலெண்ணிக் கொண்டிருப்பவளாயின ளென்றறிவாய்.

இவள் செய்தி யிங்ஙனமிருக்க, அச்சுதர்சனன் தேவியினுடைய தியானபரனாய் உத்தமமாகிய மந்திரத்தை இடைவிடாமல்

ஜபித்து வரும்போது ஒரு நாள் எங்கும் நிறைந்தவளாயும், உலக மாதாவாயும், சிந்திப்பதற்குக் கூடாதவளாயும், ஸர்வ ஸம்பத்தையும் கொடுக்கின்றவளாயுமுள்ள மஹாதேவி விஷ்ணுமாயா சொரூபிணியாகிய லக்ஷ்மிதேவியாக சொப்பனத்தில் வரக்கண்டனன். மறுநாள் சிருங்கபேரபுரத்துக்கு அரசனாகிய வேடராஜன் அந்தச் சுதர்சனன்பால் வந்து ஜயசாலியாகத் தெரிந்து அவனுக்குத் துவஜங்களையும் பதாகைகளையும் நான்கு குதிரைகள் பூட்டி சர்வ சாதனத்தோடுங் கூடிய சிரேஷ்டமாகிய தேரையும் சில திரவியங்களையும் கொடுத்தான். சுதர்சனனும் அவ்வேடனிடத்தில் சிநேக பாவங் கொண்டவனாய் அவனைத் தழுவி அன்புபாராட்டி வனத்திலுள்ளனவாகிய கந்தமூல பலங்களினால் உபசரிக்க அவன் அதனை மிக மகிழ்ச்சியோடு ஏற்று விடைபெற்றுப் போயினன். பின்னர் அங்கிருந்த முனிவர்கள் இவைகளைப் பார்த்துச் சந்தோஷித்து அச்சுதர்சனனை நோக்கிக் கூறுகின்றார் :—ஓ ராஜகுமாரனே ! சிறிது நாட்களில் உனக்குண்டாகும் பிரதாபத்தினால் உன்னுடைய ராஜ்யமுற்றும் அடையப் போகின்றாய். இதிற் சம்சயமில்லை. பிரபஞ்ச மோகினியாகிய தேவியானவள் உன் விஷயத்தில் பிரசன்னையா யிருக்கின்றாளாதலால் இவ்வேடன் சகாய புருஷனாகக் கிடைத்தான். இதுபோலவே எல்லாம் கைகூடும். இனி நீ சிந்தாகுலப்பட வேண்டியதொன்றுமில்லை என்று சொல்லிப் பின்னர் மனோரமையைப் பார்த்து, உன் குமாரன்றான் பூபதியாகப் போகிறான் என்று மகிழ்ந்து கூறினர். மனோரமையானவள் அவர்களைப் பணிந்து கூறுகின்றாள் :—ஓ மஹரிஷிகாள் ! உங்களுடைய ஆசீர்வாதப்படியே நல்ல பலத்தைத் தரல்வேண்டும். இந்தக் குழந்தையானவன் சத்துக்களாகிய உங்களுக்குத் தாசனாய் உங்களை யுபாசிக்கின்றவனாயிருக்கும் பொழுது ராஜ்ய சம்பத்து கிடைப்பதில் ஆச்சரியமென்னவென்று பிரியவார்த்தைகள் கூறி, ஓ சுவாமிகாள் ! என்னுடைய குமாரனுக்குச் சேனைகளும் மந்திரிப் பிரதானிகளும் அகண்ட செல்வமும் பிறருடைய சகாயமுமில்லையே; இவனுக்கு எந்தச் சம்பந்தத்தால் ராஜ்யம் வரும் ? ஆனால் நீங்கள் மந்திர சித்தியுடைய மூர்த்திகளாயிருக்கின்றவராதலால் உங்கள் வாக்கினால் சொல்லிய ஆசீர்வாதப்படியே தவறாமற் சித்தியாகுமென்று நம்புகின்றேன் ; இனிச் சந்தேகமில்லை என்றனள். புத்திமானாகிய சுதர்சனன் வேடனால் கொடுக்கப்பட்ட தேரிலாரோகணித்தவனா யுலாவத் தலைப்பட்டு எந்தெந்த விடத்திற் போகின்றானோ அந்தந்த விடங்களிலெல்லாம் அவனைச் சூழ்ந்து ஓர் அக்ரோணி சேனைகள் போவதுபோல் அவன் அன்போடு செய்யும் மந்திரப் பிரயோகத்தினால் காணப்பட்டது.

ஓ ஜனமேஜய மகாராஜனே ! சுதர்சனன் அவ்வளவு சிறப்புடன் காணப்பட்டது எதனாலென்றால், அந்த மந்திர பீஜத்தினுடைய பிரதாபத்தினாலென்றறிவாய். ஆகையினால் எந்தப் புருஷன் குருமூர்த்தி ஸ்வரூபிணியாகிய மஹாதேவியினுடைய பீஜாக்ஷரமாயும் அற்புதமாயுமுள்ள காமராஜமென்கிற

மந்திரத்தை யுபதேசிக்கப்பெற்று ஜபிக்கின்ருேே அவன் பரிசுத்தருகி மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் அடையக் கூடாத காமரூபமாயிருக்கின்ற வஸ்துக்களெல்லாம் பிரசன்னே யாகிய மகாதேவி கடாக்ஷத்திஞல் கிடைக்கப்பெறுவான். ஆகலான் அத்தேவியால் அடையக்கூடாதாகிய பொருளொன்றுமில்லே என்பது திண்ணம். எந்த மானிடர்களுக்குத் தேவிபரமாகிய உபாசனேயில் பிரீதியில்லேயோ அவர்கள் தான் புத்தியீனர்களாயும் தரித்திரர்களாயும் வியாதிகளிஞல் பீடிக்கப்பட்டவர்களாயும் பிறந் துழல்கின்றவர். ஏனெனில், தேவியானவள் எல்லா ஆத்மாக் களிடத்தும் புத்தி ரூபமாகவும் கீர்த்தி ரூபமாகவும் தைரிய ரூபமாக வும் சம்பத் ரூபமாகவும் சக்தி ரூபமாகவும் சிரத்தை ரூபமாகவும் ஞான ரூபமாகவும் ஸ்மரணே ரூபமாகவும் பிரத்தியக்ஷமானவள் போல் பிரகாசித்துக் கொண்டிருக்க அவளே உபாசியாராயின் அவர்கள் என்ன கேட்டைத் தானடையார்கள்? எந்தத் தேவியை வேதங்கள் சிருஷ்டிகாலத்தில் சர்வ தேவதைகளுக்கும் உற்பத்தி ஸ்தானமாகச் சொல்லுகின்றதோ, அந்தக் காரணம் விளங்க அந் தப் பராசக்தியை ஆதி மாதாவென்றுஞ் சொல்லுகின்றன. எந்த மானிடர்கள் மகாமாயையிஞல் இவ்வுண்மையையறியாது தர்க்கம் பண்ணுகிருர்களோ அவர்கள் லோகநாயகியாகிய மஹேஸ்வரியை உபாசனே செய்யார்கள். மும்மூர்த்திகளும் அஷ்டதிக் பாலர்களும் துவஷ்டாவும் சூரியனும் அசுவினிதேவதைகளும் பகனும் எண் கோடி வசுக்களும் பதினொருகோடி ருத்திரர்களும் பன்னிரு கோடி ஆதித்யர்களும் இரண்டு கோடி விஸ்வதேவர்களும் இவர் களுக்குக் கீழ்ப்பட்ட தேவாம்சமுடையவர்களான யக்ஷகின்னர ராதியர்களும் முத்தொழிலேச் செய்கின்ற அந்தப் பரமாத்ம ரூபமாகிய தேவியைத் தியானிக்கிருர்கள். புத்தியிற் குறைந்த பருவத்திற் சிந்தித்த சுதர்சனனுக்கே ராஜ்ய சாம்ராஜ்யத்தைக் கொடுத்தாளென்று அவன் சரித்திரத்தால் தெரிகின்ற பொழுது சகலப் பிரயோஜனங்களேயுங் கொடுக்கின்றவளாய் விளங்கும் பரமாத்ம சொரூபமாகிய அம்மஹேஸ்வரியைப் புத்தியிற் சிறந்த எவன்ருன் சிந்தித்து வணங்காதிருப்பான்? (9–35)

அத்தேவிதான் "ஏகமேவா" என்று சொல்லப்பட்ட பிரமப் பொருளாயும், வேருகவறிந் தடையக் கூடாதவளாயும், வித்யா சொரூபிணியாயும் மோக்ஷத்தை யபேக்ஷிக்கின்றவர்களுக்கு யோக மார்க்கத்தால் அடையக் கூடியவளாயும், பராசக்தியாயும் பிரகாசிக் கின்ருள். யாதொரு மஹேஸ்வரியானவள் சிருஷ்டியாதி முத்தொழி லேச் செய்து ஸர்வவியாபியாகிய பரசிவத்துக்குக் காண்பிக்கின் ருளோ அவளேத் தவிர பரமாத்ம சொரூபமாகிய அப் பரசிவத்தை அறிவதற்கு எவன்தான் சமர்த்தனுவன்? அப்படிப்பட்டதேவியை மனதிஞல் தியானித்தலே ராஜ்யலாபத்தைக் காட்டிலும் மேலான இலாபமென் றெண்ணி வனத்திலிருக்கின்ற சுதர்சனனே நினேத்து அந்தச் சசிகலே மன்மதபாணத்தால் பீடிக்கப்பட்ட மனத்தோடும் அத்துன்பம் நீங்குமாறு செய்யும் உபசாரங்களிஞல் மிகவும் வருத்

தப் பட்டுக் கொண்டிருக்கிற சரீரத்தோடுங் கூடினவளா யிருந்தனள். (36-40)

அதனை அவளுடைய பிதாவாகிய சுபாகுவானவன் தெரிந்து கொண்டு அவளபிப்பிராயத்தைப் பூர்த்திசெய்வதில் மிகுந்த தீரமுடையவனாய்ப் பண்டிதர்களால் சொல்லப்பட்ட மூவகைச் சுயம்வரத்தில் இச்சா சுயம்வரத்தை நாட்டினான். ஓ அரசனே! சுயம்வரம் இச்சா சுயம்வரம், பந்தயச் சுயம்வரம், வீர சுயம்வரம் என மூவகைப்படும். அவை அரசர்களுக்கு யோக்யமாக விதித்தவைகளே யன்றி ஏனையோருக்கு விதித்தவைக ளன்று. இவற்றுள் இச்சா சுயம்வரம் தமயந்தியைப்போல் கன்னிகையினால் விரும்பப்பட்ட புருஷனுக்கு மாலையிடுவது. பந்தயச் சுயம்வரம், ஸ்ரீராமரைப்போல் கன்னிகையைக் கொள்வதற்குக் குறித்த பந்தயத்தை முடித்து அக்கன்னிகையைக் கொள்வது. வீரசுயம்வரம், பீஷ்மரைப்போல் வீர தருமத்தினால் கன்னிகையை வரிப்பதென்றறிவாய். (41-43)

இச்சா சுயம்வரத்தை நாட்டிய சுபாகு பின்னர் சிற்பிகளைக் கொண்டு சபா மண்டபங்களும் அம் மண்டபங்களில் அவரவர்களுக்குரிய முறைப்படி உயர்ந்த பட்டாடை முதலியவற்றால் மெத்தென் றமைக்கப்பட்டுள்ள பலவிதமான சிங்காதன வகைகளும் மற்றுஞ் செய்யவேண்டு வனவாகிய அலங்காரங்களும் அழகாகச் செய்துவரும்போது சசிகலை துயரமுற்றுத் தன்னைப் பிரியாத தோழியைப்பார்த்துக் கூறுகின்றாள் :—ஓ தோழி! துருவசிந்துவின் குமாரனாகிய சுதர்சனன்றான் என் சித்தத்தில்வரனாக அமைந்தானே யன்றி வேறொருவரும் அமையவில்லை. இதனை என் தாய் தனித்திருக்குஞ் சமயத்தில் தெரிவிப்பாய். அவனையே பராசக்தியாகிய தேவியும் கணவனாகக் கொள்ளும்படிக் கட்டளையிட்டிருக்கின்றாள். ஆகையால் நீ இப்பொழுதே சென்று சொல்வாயென்றேவினள். அவள், விதர்ப்பதேசத்தரசன் மகளாகிய அவள் தாயிடஞ் சென்று தனியேயழைத்துக் கூறுகின்றாள் :—ஓ அன்னாய்! உன்மகளாகிய சசிகலை உன்னிடம் சில மதுரமான தன்னெண்ணத்தைக் கூறும்படி ஏவினள் ; நீ அந்த இதமான விஷயத்தைக் கேட்டு அப்படியே செய்யத் தீவிரமுடையவளாயிருத்தல்வேண்டும். என்னையெனில், பரிசுத்தமாகிய பரத்துவாஜ ராச்சிரமத்தில் துருவசிந்துவினுடைய குமாரனிருக்கின்றான் ; அவனைத்தான் உன்மகள் கணவனாகக் கொள்ளப் பலகாரணங்களால் நிச்சயித்திருக்கின்றாளே யன்றி வேறொருவனைக் கொள்ள இச்சை யில்லாதவளா யிருக்கின்றாள். ஆகலான் நீ அவனே அவள் கணவனாக வருவதற்குரிய முயற்சியைத்தேடுவாயென்று கூறிச் சென்றாள். பின்னர் அன்னை தன் நாயகனை வரவழைத்துத் தன் மகளுடைய எண்ணத்தை உண்மையாய்த் தெரிவித்தாள். அதனைக் கேட்ட அரசன் அடிக்கடி சிரித்து மனைவியைப் பார்த்துக் கூறுகின்றான் :—ஓ சௌந்தரியவதியே! உன் மகளெண்ணியதும் அதனை யருமை பாராட்டித் தோழி உன்னிடத்திற் சொன்னதும் அதைக்கேட்ட நீ உன் மகளால் விரும்பி

யிருக்கப்பட்ட அந்த ராஜபுத்திரனுடைய செய்தியின்னதென்று தெரிந்து கொள்ளாமலே எனக்குச் சொல்லவந்ததும் எண்ணுங்கால் விளையும் ஆச்சரியத்தை என்னவென்பேன்! அந்தோ! உன் மகளுடைய புத்தி இப்படியும் போகுமோ! அந்த ராஜபுத்திரன் நகரத்தைவிட்டு வனத்தில் தன் தாயுடனிருக்கின்றான். அவனுக்கு ஆதரவாகவுள்ளா ரொருவருமில்லை. அவன் தந்தை சிங்கத்தினு லிறந்தபிறகு இந்தச் சுதர்சனன் பொருட்டுப் பாட்டனாகிய வீரசேனனும் யுதாஜித்தினால் கொல்லப்பட்டு யாதொரு திக்கு மில்லாம லிருக்கின்றான். அவனெப்படி நம் மகளுக்குக் கணவனாகலாம்? நாளையதினம் சுயம்வரத்தில் மகாபிரபுக்களாகிய அரசர்க ளெல்லாம் வரப்போகிறார்கள். அந்தச் சமயத்தில் உன் மகளுக்கும் உனக்கும் என்ன தோன்றுகின்றனவோ அவற்றைச் சொல்லுங்களென்றான். (44–55)

ஓம் ஹ்ரீங்கார மூர்த்தயே நம:

## 19. சுதர்சனன் சுயம்வரத்திற்கேகல்

சுபாகுவின் சொல்லைக்கேட்ட அவன் மனைவியானவள் கணவன் சொல்லிய வார்த்தைகளை எண்ணிப்பார்த்துப் புன்னகையுடைய மகளையழைத்து மடியில்வைத்துக்கொண்டு முத்தமிட்டுக் கொண்டாடிச் சில இனியவார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள்: நீ என்னிடத்திற்பிரியமில்லாத வார்த்தைகளைச் சொல்லத் தோழியை யனுப்பினாய்; அவளாலெல்லாமறிந்தேன். இஃது வென்ன வீணான வார்த்தை? இந்த வார்த்தையினால் உன் பிதாவும் நானும் துக்கமடைந்தோம். ஏனெனில், உன்னால் குறிக்கப்பட்ட சுதர்சனன் கெட்டதசையடைந்து ராஜ்யாதி சகல சம்பத்தையு மிழந்து சேனைகளையும் பந்துக்களையும் கைவிட்டுத் திக்கில்லாதவனாய்த் தாயுடன் வனத்தில் கந்தமூலபலங்களைப் புசித்துக் கொண்டு சரீர போஷணையற்று மிக வெளியனாய் வனத்திலேயே வசிக்கின்றான். அவனா உனக்குக் கணவனாக வரத்தக்கவன்? ஓ புத்திரியே! விவேகத்தில் மேலானவராயும் உருவத்தி லழகமைந்தவராயும் செல்வத்தில் ராஜ சின்னத்தோடுகூடிய சிறப்புடையவராயும் மதிப்பில் யாவராலும் குறைகூற வியலாத ஆண்தன்மையுடையவராயுமுள்ள ராஜகுமாரர்கள் உன்னருமைக்குரியவர்களா யிருக்கின்றார்கள். அவர்களெல்லாம் உனக்குப்பிரியப்படாமற் போவாராயினும் அச்சுதர்சனனுக்குத் தம்பியாகிய சத்ருஜித்து ராஜ்ய பட்டாபிஷிக்தனாயும் ரூபவானாயும் கோசலதேசத்தை ஆள்கின்றவனாயு மிருக்கிறான். அவனையாவது கணவனாகக் கொள்வாய். (1–6)

ஓ அறிவிற்சிறந்தவளே! உன்னால் விரும்பப்பட்ட சுதர்சனனே உனக்குக் கணவனாவானென்பது எனக்குச் சந்தேகம். ஏனெனில், அவனுடைய செய்திகள் உன் தந்தை சொல்லக் கேட்டி

ருக்கின்றேன். என்னையெனில், யுதாஜித்தென்பவன் தன் பேர னுக்கு அரசாக்ஷி வரும்பொருட்டு வீரசேனனோடு மஹா யுத்தம் செய்து அவனைக் கொன்று மந்திரிகளோடு யோசித்துத் தன் பேரனுக்கே பட்டங்கட்டி அரசாளவைத்துப் பின்னர் சுதர்சனன் பாரத்துவாச ராச்சிரமத்திலிருப்பதை அறிந்து அவனைக்கொல்ல அவ்விடத்துக்குப்போய் அம்முனிவரால் தடுக்கப்பட்டுத் தன் நகரம்போய்ச் சேர்ந்தனன்; அன்றுமுதல் மரணகாலத்தை எதிர் பார்த்திருக்கும் இயமனைப்போல் நெடுநாளாய்ச் சமயம் பார்த்துக் கொண் டிருக்கின்றானென்று சொல்லக்கேட் டிருக்கிறேன். ஆகையால் யுதாஜித்து அவனைக் காண்பானாயின் கொல்வதிற் சந் தேகமில்லை என்றாள். சசிகலை கூறுகிறாள் :—ஓ அம்மணி! என்ன சொன்னபோதிலும் என் மனதுக்கு சுதர்சனன்தான் பிரியமானவனா யிருக்கிறான். ஆகையால், நான் சரியாதிராஜ னுடைய புத்ரியாகிய சுகன்னி சவன ரென்கிற ரிஷியைக் கணவ னாகக்கொண்டு அவருடைய பணிவிடையில் எப்படி அன்புள்ளவ ளாயினளோ அப்படி ஆவேனென்று நீ நினைப்பாயாக. ஏனெனில், மகாதேவி என் சொப்பனத்தில் அவனை வரனாகக்கொள்ள ஆக்ஞா பித்ததேயன்றி என் சித்தமாகிய சுவரில் எழுதியும் விட்டாள். இனி நான் அவனைத் தவிர வேறொருவனை எப்படி வரனாக நினைப்பேன்? அந்த இஷ்டனாகிய புருஷனைவிட்டு வேறொருவனை விவாகஞ் செய்து கொள்ளமாட்டேன். அல்லாமலும் ஸ்திரீகள் தங்களால் பதியாகக் கொண்டபுருஷனுக்குக் கபடமில்லாமல் பணிவிடை செய் வாராயின் அதுதான் அவர்களுக்கு இம்மையிற் சகல சம்பத் தையும் மறுமையில் மோக்ஷத்தையுங் கொடுத்துச் சுகத்தைச் செய் வதாகும். இது நிச்சயம். ஓ அம்மணி! இனி நீ ஒன்றுஞ் சொல்லவேண்டாமென்றாள். இவ்வாறு அநேக திருஷ்டாந்தங் களுடன் சசிகலை பிரதிமொழி கூறியதை அவள் தாய்கேட்டுத் தன் கணவனிடத்தில் யாவும் விடாதுசொல்ல இருவரு மாலோசித் திருந்தனர்.

அப்போது சசிகலை புத்திமானாகிய ஓரந்தணரைக் கூவிக் கூறுகிறாள் :—ஐயரே! என்பால் தயவுசெய்து என் பிதாவுக்குத் தெரியாமல் பரத்துவாஜ ராச்சிரமத்திலிருக்கும் சுதர்சன மகாராஜ னிடத்திற் போய் நீர் சொல்லவேண்டியவை சிலவுள. என்னை யெனின், என் நிமித்தமாய் என் தந்தை சுயம்வரம் நாட்டப் போகின்றாரென்றும் அக்காலத்தில் சதுரங்க சேனைகளோடு அநேக அரசர்கள் வரப்போகிறார்க ளென்றும், ஆரண்யவாசியாகிய அவனும் அவசியம் வரவேண்டுமென்றும், வரவேண்டுமென்கிற அபிப்பிராய முடையவள் நானென்றும் சொல்லும். சொல்லும் பொழுது அந்த ராஜகுமாரனுக்கு இடையிற் சந்தேகங்களுண்டா கும். அவைகட்குச் சில உறுதிமொழி கூறுகிறேன். அவைகளை மறவாமற் சொல்லல்வேண்டும்; என்னையெனின், என் சுயம்வரத் துக்கு அநேக அரசர்கள் வந்தபோதிலும், நான் மனதில் நீங்காத பிரியத்துடன் வரனாக வரித்துக்கொண்ட சுதர்சனனை யன்றி வேறொ

ருவனை வரனாகக் கொள்ளேனென்றும், என் எண்ணப்படியே என் சொப்பனத்தில் தேவியும் ஆக்ஞை செய்திருக்கிறாளென்றும், ஒருக் கால் என்னுடைய உறுதியும் அவளுடைய ஆக்ஞையும் தவறுமா யின் விஷத்தைப் புசித்தாயினும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அக்னியில் விழுந்தாயினும் இறப்பேனென்றுங் கூறுவீர். இப் பொழுது நான் கூறிவந்த உறுதிமொழி சொல்லளவாகக் கூறிய தன்று; மனப்பூர்த்தியாகக் கூறியதாகும். இஃது உண்மையா மென்று நீர் கொள்வதற்கு நான் சரீரவாட்டமுற்றுச் சகலசுகங் களுந் துன்பமாய்ப் பரிதவிப்பதொன்றே போதும். இதனையும் அவனுக்குக் கூறுவீர். இவையாவுங் கேட்டு அந்த ராஜகுமாரன் ஒருக்கால் நீ கூறுவதெல்லாஞ் சரியே, அவளுடைய தாய் தந்தையர் வேறொருவனை வரனாகக் கொள்ளத் தூண்டுவாராயின் அவளென்ன செய்வாளென்று வினவுவானாயின் பகவதியாகிய அன்னை சொப் பனத்தின்கண் வந்துதூண்டிய அநுக்கிரகம் பொய்த்துப் போயி னாலன்றோ இவர்களுடைய தூண்டுதல் பொய்யாகாது மெய்யாகும். ஒருநாளும் அநுக்கிரஹமும் பொய்யாகாது; அவளுக்கு நீ கணவ னாவதும் பொய்யாகாதென்றுங் கூறுவீர். அப்பொழுதும் சந்தேகிப் பானாயின் தெய்வபலமே பெரிதானதென்று தீர்மானித்து நீ சுயம் வரத்துக்கு வரவேண்டுமென்றும் சராசராத்மகமா யிருக்கின்ற ஆத்ம கோடிகளும் பகவதியின் சுவாதீனமாயிருப்பன; இந்திராதி யரும் அத்தன்மை யராயிருப்பவர்; ஆகையால் அவளுடைய ஆணைக்கு அன்னியமாக ஆகுங் காரியங்களும் உளவோ? ஆக்குங் கர்த்தாக்களுமுளரோ என்றும் சில ஞானமொழிகள் கூறுவீர். ஓ அந்தணரே! அவனும் இந்த ஞான உண்மையை யறியத் தக்கவன். ஆனால் நீர் இவைகளையெல்லாம் அதி ரகசியமாய்ச் சொல்லவேண்டுமேயன்றிப் பிறரறியச் சொல்லப்போகின்றீர்! நீர் தாமதஞ் செய்யவேண்டாம். என்னுடைய உத்தேசத்தை முடிக்க வல்லவரும் அறிவுடையவரும் நீரே என்று பலவுபசார நயமொழி களைக்கூறி வேண்டிய தக்ஷிணையுங் கொடுத்தனுப்பினாள்.

அந்தப் பிராமணன் அவளிடத்தில் விடைபெற்றுப் பரத்து வாஜ ராச்சிரமம்போய்ச் சுதர்சனனைக்கண்டு சசிகலை சொல்லிய வண்ணம் யாவும் விடாதுசொல்லி அவனிசைவுபெற்றுத் திரும்பி னான். பிறகு சுதர்சனன் யாவையும் ஆலோசித்து இதற்குத் தெய்வ பலம் இருப்பதை நன்றாயறிந்து பரத்துவாசரிடம்போய்த் தேவி கடாக்ஷித்த செய்திகளைக்கூறி அவரது அநுக்கிரஹமும் ஆணையும் பெற்றுப் பிரயாணப்பட்டுப் போவதற்கு நிச்சயித்தனன். பிர யாண முயற்சியை யறிந்த மனோரமை நடுக்கமுற்றவளாயும் பீடிக் கப்பட்ட மனவருத்த முடையவளாயும் மிகுந்த பயத்தை யடைந் தவளாயும் கண்களில் தாரை தாரையாய் நீரைவிட்டு, அப்பா குழந் தாய்! நீ எங்கே போகத் தலைப்பட்டாய்? சுயம்வரத்தை நாடிவரு கிற மகா ராஜசபையில் நீ போவதற்குத் துணியலாமா? தனியாயும் விரோதத்திற்குப் பாத்திரமாயுமிருக்கின்ற உன்னுடைய நிலையை மறந்து என்ன யோசனை செய்துகொண்டு பிரயாணப்பட்டாய்?

உன்னைக் கொல்லவேணுமென்கிற கருத்துள்ள யுதாஜித்து அந்த ராஜசபைக்கு வராமற் போவானு? அந்தோ! அவன் உன்னைப் பார்த்தால் கொல்லாமல் விடுவானு? அந்தக் கூட்டத்தில் உனக்குச் சகாய புருஷன் எவன்? ஆகையால், ஓ! என்னிரு கண்மணியே! நீ போகவேண்டாம்; உனக்கு மனையாட்டி யில்லாமற் போனுலும் போகட்டும். நான் ஏகபுத்திரனையுடையவளாகிய துர்த்தசை யுள்ளவள். நீ மரண மடைந்தால் எனக்கு ஆதரவாயுள்ளவர் யாவர்? நான் எல்லாச் செல்வங்களையு மிழந்தவளா யிருந்தும் உன்னெருவனுல் எல்லா முடையவள்போ லிருக்கிறேன். என் னருமைச் செல்வனே! இப்பொழுது சொல்லிய தசையி லிருக் கின்ற என்னை ஆசையற்றவளாகப் பண்ணுவதற்கு நீ ஆசைப் படாதே. உன்னுடைய சத்துருவாகிய யுதாஜித்து உன்னுடைய பிதாவைக் கொன்றுன்; அந்தத் துஷ்டன் தனியே போகிற உன்னை அந்தச் சபையில் கொல்லப்போகிருன். ஓ சுதர்சனு! நீ போக வேண்டா மென்றனள். தாயினுடைய பரிபவத்தைக் கண்ட சுதர் சனன், அம்மா! நீ அஞ்சவேண்டாம்; நடக்கவேண்டியது எப்போ தும் நடந்தே தீரும்; இவ்விஷயத்தில் விசனப்படுவது அழகன்று; அன்றியும் உலக மாதாவாகிய தேவியின் ஆஜ்ஞையால் இப்போது நான் சுயம்வரத்துக்குப் போகிறேனென் றறிவாய்; க்ஷத்திரிய ஸ்திரீயா யிருக்கின்ற நீ துக்கப்படுவது முறையாகுமா? தேவியி னுடைய அனுக்கிரகத்தினுல் நான் எப்போதும் பயப்படமாட்டே னென்று சொல்லிவிட்டுத் தேரின்மேலேறிக்கொண்டு அதிவேக மாய்ப் போகவேண்டுமென்கிற அபேக்ஷையுட னிருக்கும்போது மனோரமை புத்திரனுடைய தீர வார்த்தையையும் பிரயாணத்தில் தீவிரத்தையும் பார்த்துத் தீனசுபாவ மொழிந்தவளாய்ச் சந்தோஷத் துடன் தேவியைத் தியானஞ்செய்து அத்தேவி அவனை முற்றும் காக்கு நிமித்தம் * கவசத்தைச் சொல்லத் தொடங்கினள்: (7–33)

"ஓ புத்திரனே! உன்னை அம்பிகையானவள் முன்னும் பார் வதி யானவள் பின்னும் இரக்ஷிக்கட்டும். வராகி யிடர் செய்வதாகிய மார்க்கங்களிலும், துர்க்காதேவி அடைவதற்குக் கூடாத காரியங் களிலும், மகாகாளி கோரமாகிய யுத்தத்திலும், பரமேஸ்வரி மகா சபையிலும், மாதங்கி சுயம்வரத்திலும், பவானிதேவி ராஜ மத்தி யிலும் சம்சார துக்கத்தை நிவிர்த்திபண்ணுவதிலும், கிரிஜை பர்வதங்களிலுள்ள குகை வழிகளிலும், சாமுண்டி நாற்சந்தி களிலும், அனுதியா யுள்ளவளாகிய காமகை காடுகளிலும்,

---

* அக்ரதஸ் தேம்பிகாபாது பார்வதீ பாதுப்ருஷ்டத: | வராஹீவிஷமே மார்கே துர்கா துர்கேஷு கர்ஹிசித் | காளிகாகலஹேகோரே பாதுத் வாம்பரமேஶ்வரீ. மண்டபே தத்ரமாதங்கீ ததாசவும்யாஸ்வயம்வரே,–பவாநீ பூபமத்யே துபாதுத்வாம்பவமோசநீ | கிரிஜா கிரிதுர்கேஷு சாமுண்டா சத்வரேஷுச | காமகாகாநநே ஷ்வேவம் ரக்ஷதுத்வாம்ஸநாதநீ | விவா தேவைஷ்ணவீ சக்தி ரவதாத்வாம் ரகூத்வஹ | பைரவீசரணேசவும்ய சத்ருணும்வை ஸமாகமே. | ஸர்வதா ஸர்வதேஶேஷு பாதுத்வாம்புவநேஶ் வரீ | மஹாமாயாஜகத்தாத்ரீ ஸச்சிதானந்த ரூபிணீ.

வைஷ்ணவி விவாத காலத்திலும், பைரவி சத்துருக்களுடைய யுத்தத்திலும், மகாமாயா சொரூபிணியாயும் ஜகத்தைப் படைத்தவளாயும் சச்சிதானந்த சொரூபிணியாயுமுள்ள ராஜ ராஜேஸ்வரி எல்லாத் தேசங்களிலேயும் மற்றெப்போதும் ரக்ஷிக்கட்டும்'' என்னும் பொருளமைந்துள்ள கவசமாகிய ஆசிகூறிப் பின்னரும் மகளைப் பிரிந்திருக்க ஆற்றளாகிச் சுயம்வரத்தில் என்ன விளையுமோவென்கிற பயத்தால் மனங் கலங்கி நடுக்கமுற்றுத் தன் அருமை மகளைப்பார்த்து, என்னை வாழ்விக்க வந்த வாழ்வே! நானு முன்னோடு வருகிறேன்; உன்னைவிட்டு அரைநிமிஷமும் இங்கிருக்கேன்! உனக்கு எங்கே போகவேண்டு மென்று மனமிருக்கிறதோ அவ்விடத்துக்கு என்னையும் அழைத்துக்கொண்டு போவாயென்று சொல்லித் தாதியுடன் பிரயாணப்பட்டாள். மகரிஷிகளும் ஏனையோரும் மங்கள முண்டாகுக வென்று ஆசீர்வதித்து அடங்காத ஆனந்தத்துடன் புறப்பட்டனர். சுதர்சனன் யாவரையுந்தடுக்காது அழைத்துக்கொண்டு ஒரு தேரோடு காசி நகரத்தையடைந்தனன். இவன் செய்தியை தூதர்களால் சுபாகு அறிந்து, எதிர் சென்று அர்க்கிய பாத்யா சமனங்கள் கொடுத்துபசரித்து ஒரு விடுதியமைத்து அதனுள் அறுசுவையோடு கூடிய வுணவுகளை வகுத்துச் சேவகர் முதலிய பரிசனங்களையுஞ் சூழவைத்துப் போயினன். அச்சமயத்தில் கருஷ தேசத்தரசன், மத்திர தேசத்தரசன், சிந்து தேசத்தரசன், யுத்தத்தில் சிறந்த மாகிஷ்மதி தேசத்தரசன், மலை நாட்டிலுள்ளவனும் சௌந்தர்ய முடையவனுமுள்ள பாஞ்சால தேசத்தரசன், கர்னடக தேசத்தரசன், சோழ தேசத்தரசன், பலிஷ்டனாகிய விதர்ப்ப தேசத்தரசன், என்றெண்ணப்பட்ட சகல தேசத்தரசர்களும் வந்து சேர்ந்தனர். யாவரினும் மேம்பாடுடையவனாகிய யுதாஜித்துத் தன் பேரனுடன் வந்து சேர்ந்தனன். இங்ஙனங் கூறிவந்த அரசர்களுடைய சைனியங்கள் ஒரக்குரோணியாகத் திரண்டும், சுயம்வரத்தைப் பார்க்கவந்த நகரத்தவர்கள் வெள்ளங்களாகக்கூடியும் நகரமுற்றுஞ் சூழ்ந்தனர்.

இவர்களுள் தேசாதிபதிகளா யிருந்த அரசர்கள் சுதர்சனனைப் பார்த்து வியாகுலத்தோடிருக்கவேண்டிய இவன் வியாகுல மற்றவனாய்த் தாயாரோடு தனியனாய்த் தேரிலேறிக்கொண்டு விவாக நிமித்தமா யிவ்விடம் வந்திருக்கிறான்; இஃதுவென்ன புத்தி! ராஜபுத்திரியானவள் பலசேனைகளோடும் பல ஆயுதங்களோடும் கூடியிருக்கின்ற ராஜ குமாரர்களை விட்டுப் பரதேசியைப்போலிருக்கின்ற இவனையா வரிப்பாளென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டிருக்கும்போது யுதாஜித்து அவ்வரசர்களைப் பார்த்து, ஓ வீரர்களே! கன்னிகை நிமித்தமாய் வந்திருக்கிற இந்தச் சுதர்சனனை நானடிக்கிறேன், இதிற் சம்சய மில்லையென்று கூறினான். (34–53)

அப்போது நீதியிற் சிறந்த கேரளதேசத்தரசன் கூறுகிறான்:— கன்னிகையினுடைய இச்சையினால் வரித்துக்கொள்வதாகிய இச்சா சுயம்வரத்தில் யுத்தஞ் செய்வதுண்டா? தங்களுக்குள்ள வன்மை

யினால் அபகரிப்பதாகிய வீர சுயம்வரம் இவ்விடத்தில் ஏற்பட வில்லை. அது இல்லாதபொழுது விவாத மென்ன விருக்கிறது? பூர்வம் நீ இச்சுதர்சனனைத் துரத்திப் பலாத்காரமாக உன் பேரனுக்கு அரசியலைக் கொடுத்தனை. ஓ மகானுபாவனே! இப்பொழுதும் கோசலபதியின் புத்திரனாகிய இந்தச் சுதர்சனன் நிர பராதியாயிருக்க, அவனை நீ யடிப்பேனென்றது தருமமாகுமா? உனக்கிப்போதிருக்கும் சரீர பலத்தினால் விளையும் பாவவிளைவை யறியாமல் ஏன் அகங்காரத்தை யடைகின்றாய்? அஃது அநீதியால் வரும் பாவபலத்தை உனக்குக் கொடுக்குமேயன்றிப் பிறருக்கு எள்ளளத்தனை தீங்குங் கொடுக்க முடியாது. யாரையும் காக்கின்ற ஜகதீச்வர ரொருவர் பல்லாண்டு பல்லாண்டா யிருக்கிறார். அவர் தர்மம், சத்யம் என்கிற இரண்டை ஏற்படுத்தி அவ்விரண்டையு முடையோர்க்கு ஜயத்தையும் அவ்விரண்டையும் விட்டவர்க்கு அப ஜயத்தையும் தருகிறார். ஆகையால் அதர்ம புத்தியினாற் செய்வ தாகிய பாவத் தொழிலை விடு. ரூபவானையும் ராஜ்யத்தோடு கூடினவ னையும் ஸ்ரீமானையு மிருக்கின்ற உன் பேரனும் சிரேஷ்டர்களாகிய மற்றுமுள்ள ராஜ புத்திரர்களும் ஒன்று மில்லாதவனாயிருக்கின்ற சுதர்சனனும் இங்கு வந்திருக்கின்றனர். சுயம்வரத்தில் ராஜகன் னிகை வருவாளானால் இவர்களுள் ஒருவனைத்தான் விரும்பி மாலை சூட்டி ஸ்வீகரிப்பாளேயன்றி யாவர்க்கும் மாலை சூட்டி யாவரையுமா விரும்பி ஸ்வீகரிப்பாள்? அன்றியும் மாலை சூட்டுவது கன்னிகை யினுடைய இச்சையா யிருக்கிறபொழுது உன்னிச்சையாவது மற்ற யாருடைய இச்சையாவது நுழைவதற்கிடமுண்டா? இவைகளை யெல்லாம் எண்ணிப் பாராமல் நீயேன் சண்டையைத் தேடுகிறாய்? ஓ அரசர்களே! இப்பொழுது நான் சொல்வதில் ஏதேனும் பிழை யிருந்தால் சொல்லுங்கள்; நீங்களெல்லோரும் அறிவாளிகளே யன்றி வேறல்லர்; அறிவாளிகள் ஒருவருக்கும் விரோதமுண்டாகும் படிச் செய்கிறதில்லை என்று கூறினான். (54–62)

ஓம் ஹ்ரீங்கார ஸௌத ச்ருங்க கபோதிகாயை நம:

## 20. ராஜசபையில் சுதர்சனன்

கேரள தேசத்தரசன் இவ்வாறு கூறியபிறகு யுதாஜித்து அவனைப் பார்த்துக் கூறுகிறான்: இப்போது நீ கூறிய காரணத் தால் நீ தருமமுஞ் சத்தியமுமுடையவனாகவும் நானில்லாதவ னாகவுமேற்பட்டது. அவை என்னிடமில்லையாயினும், நீ யுடைய வனைப்போலெண்ணி யிருக்கின்றனையாதலால் இச்சபையில் அந்த நீதியை எடுத்துக் கூறினாய். இது நிற்க, கன்னிகை நிமித்தமாய்ச் சுதர்சனன் வந்தது அநீதியென்று நான் சொல்லவந்தேன்; நீ நீதி யென்று சொல்ல வந்தனை. அது எப்படியாகும்? மிருகராஜனாகிய சிம்மத்தினுடைய உணவுக்கு நரி யோக்கியமாகுமா? அதுபோல் இந்த ராஜகன்னிகையை அனுபவிப்பதற்குச் சுதர்சனன் யோக்ய

ளுவானு? வேதமானது அந்தணர்க்குப் பலன் கொடுக்குமேயன்றி அரசர்களுக்குப் பலன் கொடுக்குமா? அதுபோல், நம்மையொத்த அரசர்களுக்குக் கன்னியாரத்தினமாகிய அவள் பலன் படத்தக்க வளே யன்றி இந்த அயோக்கியனுக்குப் பலன்படத்தக்கவளா? இந்த நீதியை நானெண்ணிப் பார்த்துக் கூறியதனை நீ அநீதியென்று கூறியது நியாய விரோதமாகும். நீ கூறிய நியாயம் உனக்குத் தான் சரியாயிருக்குமன்றி ஏனையோர்க்குச் சரியாயிருக்குமா? ஆகையால், நான் உன்னுடைய நீதியை அநீதியென்று துணி வாய்க் கூறுவேன். இதுவன்றியும் இவ்விடத்தில் நாட்டியது இச்சா சுயம்வரமென்றனை; அது அரசர்களுக்கு அவ்வளவு முக்கியமான தென்று நான் சொல்லேன். வீர சுயம்வரமே முக்கியமானதென் பேன். ஆகையால், இப்பொழுது யாவருங்கூடி அதனை ஏற் படுத்தி இந்தக் கன்னிகையைப் பலஹீனனு யிருக்கின்றவன் கிரகிக்கக் கூடாதென்று நியமித்தல் வேண்டும். இதுதான் நீதி; இப்படிச் செய்யாவிட்டால் அரசர்களுக்குள்ளே மிகுந்த கலக முண்டாய் விடுமென்ருன். இவனைப்போலவே சில அரசர்கள் ஒரு வருக்கொருவர் பேசிக்கொண்டு கலகஞ்செய்யத் தலைப்பட்டுச் சுபா குவை அழைத்துச் சபைநடுவிலிருக்கச் செய்து கூறுகிறுர்: ஓ அரசனே! நீரிப்பொழுது ஏற்படுத்திய சுயம்வரம் எங்களுக்கு யுக்த மாகத் தோன்றவில்லை. ஆகையால் நீதிக்கு விரோதமில்லாமல் நாங்களனைவரும் யோசித்து உமக்கொன்று சொல்லத் துணிந்திருக் கிறேம். உம்முடைய அபிப்பிராயம் எதுவோ அதனைச் சொல்லும். நீர் இச்சா சுயம்வரமென்று நாட்டினீரே அது இனிக் கன்னிகையா லிச்சிக்கப்படும் புருஷனுக்கென்ரு? அல்லது முன்னமே யுத்தேசித் திருக்கும் ஒரு புருஷனுக்கென்ரு? அல்லது நீ ருத்தேசிக்கும் புருஷ னுக்கென்ரு? இவ்வுண்மையைக் களங்கத்திற்கிடமின்றிக் கூறு மென்ருர்கள். சுபாகு கூறுகிருன்: என் புத்திரி சுதர்சனனை முன் னமே மனத்தால் வரனுக நினைத்திருக்கிருள்; நான் உங்களைப் போல் அவன் கூடாதென்று தடுத்தும் என் சொல்லைச் சிறிதுங் கொள்ளவில்லை. அவளுடைய மனமும் என் சுவாதீனத்திலடங்கி யிருக்குமென்று தோன்றவில்லை. அரசியல் இத்தன்மைத்தாமென் றறியக்கூடாத வனத்திலிருந்த சுதர்சனனும் தனித்து வந்தவனு யிருந்தும் நங்கூட்டங்களைப் பார்த்து நாமென்ன செய்வோ மென்று வியாகுல மடைந்தவனுகவுந் தோன்றவில்லை. இனிப் பகவதியின் செயலெவ்வாருமோ அறியேன் என்ருன். (1–12)

இவ்வார்த்தையைக் கேட்ட அரசர்களெல்லாம் சாந்தனுய்த் தனித்திருக்கிற சுதர்சனனையழைத்துக் கூறுகிருர்கள்:—ஓ ராஜ புத்திரனே! இச்சுயம்வரத்துக்கு நீயே வந்தனையா? யாராவது அழைக்கவந்தனையா? வந்த நீ தனியனுயிருக்கிருய். அங்ஙன மிருந்தபோதிலும் சைனியங்களும் மந்திரிப் பிரதானிகளும் அள விறந்த செல்வமும் சகாய புருஷரு மிருப்பாராயின் ஒருவாறு வந்த காரியத்தை முடித்துக்கொண்டு போவாயென்று நினைக்கலாம். ஒன்றுமில்லாமல் வந்திருக்கின்றனை. நீ என்ன செய்ய நினைத்

திருக்கிறாய் ? உண்மையைச் சொல். மிகவும் பலமுடையவனுயும் அதிசூரனுயு மிருக்கிற உன் தம்பியும் இந்தக் கன்னிகையினிடத்தில் ஆகா மோஹியாய்த் தானே அவளைக் கொண்டுபோக வந்திருக்கின்றான். யுதாஜித்தும் அவனெண்ணத்தை முடித்தற்குரிய சகாயங்கள்செய்ய அந்தக்கன்னிகை அவனையே சேரும்படிச் செய்வானேயன்றி உன்னைவந்து சேரும்படிச் செய்யான். அதற்கிடையூறுவரும் பக்ஷத்தில் யுத்தம் செய்யவும் சித்தமாயிருக்கிறான். ஏனையோரும் அந்த நோக்கமாகவே யிருக்கின்றனர். உனக்காக யுத்தஞ்செய்வோரும் அல்லது வேறு சகாயஞ் செய்வோருமில்லை ; இஃது உண்மையான செய்தி. இதனை யாங்கள் உன்பாலிரக்கமுற்றுச் சொல்லவந்தோம். இனி உனக்கிருக்கும் பலாபலத்தை நாடி எங்களைப்போல் இவ்விடத்தி லிருக்கலா மென்றிருந்தாலிருக்கலாம் ; இல்லையாயின் இப்பொழுதே போனாலும் போகலாமென்று கூறினர். (13–18)

சுதர்சனன் அவர்களைப்பார்த்துக் கூறுகிறான் :—நீங்கள் கூறியதெல்லாம் உண்மையே ; எனக்குப் போர்செய்யும் வன்மையும், இளைத்தகாலத் துதவிசெய்யும் சகாய புருஷரும், யாவருமென்னை விரும்பச் செய்யவல்ல திரவியமும், பகைவர் வருதற் கிடந்தராத கோட்டையும், பகைத் திறத்தைக் கூறவல்ல சிநேகரும், இடுக்கண் வருங்காலத்துப் பரிபவப்படத்தக்கவரும், ரதகஜதுரக பதாதிகளை உதவியாகக் கொடுக்கவல்ல அரசருமில்லை. இவைகளொன்று மில்லாத யான் கன்னிகையைக் கொண்டுபோக நீங்களனைவருமெண்ணுவதுபோ லென்ன ஆதரவிருக்கிறது ? ஆகையால் சுயம்வரத்தைக் கேள்விப்பட்டு வேடிக்கை பார்க்க வந்திருக்கும் அநேகருள் நானும் ஒருவனுக வந்திருப்பவனேயன்றி வேறல்லன். அங்ஙனமாயினும், என்னிஷ்ட தெய்வமாகிய பகவதி எனக்குச் சில அபிப்பிராயங்களைச் சொல்லி இங்கு வரும்படி பிரேரித்தபடியால் அதனைப் பார்க்கவேண்டு மென்கிற அவாவினுல் வந்திருக்கிறேன். அத்தேவியி னேற்பாடு எதுவோ அதுதா னுண்மையாக நடக்கும் ; இதிற் சந்தேகமில்லை.

ஏனெனின், தேவர்கள் பஞ்சபூதங்கள் மானிடர்கள் முதலியோருடைய சாமர்த்தியங்களெல்லாம் அத்தேவியினுல் செய்யப்பட்டனவேயன்றி வேறில்லை. பொருளில்லாதவனுயிருக்கின்ற ஒருவனை அரசனுகச்செய்ய வெண்ணுவாளாயின் அவனை அவ்வண்ணமே யாக்குவாள். அதனை மாற்றுதற்குப் பிரம விஷ்ணு ருத்திரரும் சக்தியற்றவராவர். இதனுல் ஒவ்வொருவரிடத்தும் நாம் காணும் செயல்களெல்லாம் அவளால் நடத்தப்படுகின்றன வென்று கொள்ளத்தக்கதே யன்றி, அச்செயல்களைச் செய்கின்றவரால் நடத்தப்படுகின்றனவென்று கொள்ளத்தக்கதன்று. இவ்வுண்மையறிந்தவன், எது நடக்கவேண்டியதோ அது நடக்கப்போகிற தென்றும், அதனையிப்போது ஒருவராலும் மாறுபடுத்த முடியாதென்றும், அது விஷயத்தில் சிந்திக்கவேண்டிய தொன்று

மில்லை யென்றும் எண்ணிச் சிந்தாகுலமற்றிருக்க வேண்டியது. ஓ அரசர்களே ! மகாராஜ்ஞையா யிருக்கின்ற பரமேஶ்வரியையே எவரிடத்திலும் எத்தொழிலிலும் நான் பார்க்கின்றவனா யிருக்கின்ற படியால் இவ்வுலக விவகாரமாகிய ஸம்ஸாரத்தில் எனக்குச் சத்ருவா யிருக்கின்றவன் ஒருவனுங்கிடையாது. என்னிடம் எவனாவது சத்ருபாவத்தைக் கொள்வானாயின் அவனைத் தண்டித்தற்கு மஹா வித்யா சொரூபிணியாகிய பரமேஶ்வரியே தலைப்படுவாள். ஆகவே எனக்குச் சத்ருவேது ? நான் தண்டிப்பதே கிடையாது. இப் பொழுதும் இச்சுயம்வரத்தில் வந்திருக்கிற நான் இக்கன்னிகையைக் கொள்ளவேண்டு மென்றாவது விடவேண்டு மென்றாவது எண்ணி யிருக்கின்றவனல்லன். என்னுடைய தேவி எதனைச்செய்ய அபேக்ஷித் திருக்கின்றாளோ அதனைச் செய்யட்டும். அவள் செய்கைக்கு நான் சக்தனா யிருந்தாலென், அசக்தனா யிருந்தா லென் ? நான் அவள் செய்யும் லீலையைக் கண்டு மகிழ்கின்றவனே யன்றி அதிற் சிந்தாகுலப்படத்தக்கவனல்லன். அதுபோலவே, நீங்களும் சக்தர்களா யிருந்தாலென், அசக்தர்களா யிருந்தா லென் ? உங்களுடைய சக்தமும் அசக்தமும் யாதொருபயனும் படத் தக்கதன்று. இதனால் நீங்களும் சிந்தாகுலப்படத் தக்கவரல்லர். இதுதான் என்னுடைய உண்மையான எண்ணம். ஓ அரசர்களே ! நானெப்பொழுதும் தேவியினுடைய சுவாதீனனா யடிமையா ளாகவே யிருக்கின்றவனாதலால், இப்பொழுது எனக்கு ஜயமுண் டாகாமல் அபஜயமுண்டானாலும் அதனால் வரும் அவமதிப்பு எனக்கில்லை. அது தேவிக்கே யாகுமென்று கூறினன். (19–30)

அரசர்கள் அந்தச் சுதர்சனனுடைய உண்மையான வார்த்தை களைக்கேட்டு வேறொன்றுஞ்சொல்ல அறியாதவர்களா யொருவரை யொருவர் பார்த்து இதுதானுண்மை, இதுதானுண்மை; இது பொய்யாகாது, இது பொய்யாகாது என்றுண்மையறிந்தவர்களாய் அந்தச்சுதர்சனனைப் பார்த்து, வேண்டுதல் வேண்டாமையற்ற ஓ மகானுபாவனே ! நீ கூறியவை உண்மையேயாயினும் யுதாஜித் தென்பவன் உன் விஷயத்தில் ஒரு சிறிதும் இரக்கமின்றி உன்னைக் கொல்வதற்கே எண்ணங்கொண் டிருக்கிறானாகையால் நாங்களனை வரும் துன்பப்படத் தக்கவர்களாயிருக்கின்றோம்; அதற்கு நீயே ஏதேனும் ஓர் ஆலோசனையை யாலோசித்துச் செய்யவேண்டு மென்றனர். அதற்குச் சுதர்சனன் கூறுகிறான் :—ஓ அரசர்களே ! நீங்க ளென்பால் மிக்க இரக்கமுள்ளவர்களாயும் சிநேக முறை யுள்ளவர்களாயு மிருக்கின்றபடியா லிந்த வுண்மையைச் சொன்னீர் கள்; இதற்கு நானோருண்மை கூறுகின்றேன். தாவர ஜங்கம ரூபமாயிருக்கின்ற உலகம் தம்மால் செய்யப்பட்ட கர்மத்தின் சுவா தீனமாயுள்ளது. அது ஆகாமியம் ஸஞ்சிதம் பிராரப்தமென மூவிதப்பட்டுத் தெய்வத்தின் சுவாதீனமாயுள்ளது. அத்தெய்வம் காலதத்துவத்தைக் கொண்டு அவரவர்கள் கன்மத்துக்கீடா யவர வரை ஜனன மரணப்பட்டுழலச் செய்கின்றதேயன்றி அக்கால அளவையைவிட்டுத் தான் சிருஷ்டிப்பதுமில்லை, சங்கரிப்பது

மில்லை. ஆகவே தெய்வத்துக்குத் துணைக்காரணமாயுள்ள அநாதியாகிய காலதத்துவமே ஒரு நிமித்தத்தால் அவரவரை வாழவுமிறக்கவுஞ் செய்யுமேயன்றி ஒருவனால் ஒருவனுக்கும் மிருத்யு வருமென்பதில்லை; இஃதுண்மை. இதற்கு என்னனுபவமாயுள்ள சில திருஷ்டாந்தங்களைக் கூறுகின்றேன். என்னையெனில், சத்துருசங்காரஞ்செய்வதில் சமர்த்தராகிய என்னுடைய பிதா சிம்மத்தினுலிறக்கத் தக்கவரா? அவர் அதனாலிறந்தார். என் பாட்டனாரும் தனக்கபஜய முண்டாகாவண்ணம் கோடி எத்தனங்களைச் செய்தவராயிருந்தும் யுதாஜித்தினால் அபஜயப்பட்டிறந்தார். ஆகையால் ஒரு மனிதன் தனது பூர்வகன்மத்தையும் மறந்து காலதத்துவத்தையு மெண்ணாது தெய்வத்தையுங் கைவிட்டுத் தற்கால மெண்ணுவதாகிய எண்ணத்தாலும் செயலாலும் தன்னை ரக்ஷித்துக்கொள்ள நினைப்பானாயின், அவன் ரக்ஷிக்கப்படுவானா? படான். ஆகலான் இவன் கன்மத்தையறிந்து காலத்தையெண்ணிச் செய்யத்தக்க தெய்வத்தைக் கைவிடா திருப்பானாயின் அத்தெய்வ மிவனைக் கைவிடாது காக்கும். அதனால் வெகு காலம் உலகில் வாழ்வான். ஆகலான் நான் பரமேஸ்வரியின் ஸ்மரணத்தை விடாது இரவும் பகலும் செய்துகொண்டிருக்கின்றேனாகையால் அந்த லோகமாதா எனக்கு மங்களத்தையே செய்துவருகின்றாள். அதனால் நான் யுதாஜித்துக்கு ஒருபோதும் பயப்படமாட்டேன்.

பூர்வஜன்ம கன்மார்ஜிதம் சுகத்துக்கேதுவா யிருந்தாலும் துக்கத்துக் கேதுவாயிருந்தாலும் அதனை அனுபவிக்கவேண்டி வரும் அனுபவகாலத்தில் அறிவாளிகள் சுகத்துக்கு வேறுபடாதிருந்து துக்கத்துக்கு வேறுபடுவாராயின் பிரயோஜன மென்னை? அறிவிலி தன்னைத் துக்கம்வந்தடைந்தகாலத்துப் பூர்வகன்மமென்றெண்ணாது அத் துக்கத்துக்கு முன்னிலையாயிருந்த ஒருவனை விரோதம் பண்ணுகிறான். நான் ஒருவரையு முன்னிலையாகக் கொள்ளாதவனாகலான் விரோதத்தையும் துக்கத்தையும் பயத்தையும் அறியேன். எப்பொழுது இவைகளை யறியாதவனாயினனோ அப்பொழுதே களங்கமில்லாதவனாயினேன். களங்கமற்ற என்னை இந்த ராஜசபையில் நடத்தப்படும் சுயம்வரத்தைப் பார்க்கவேண்டுமென்னும் ஓரெண்ணத்தினால் வந்தவனாக எண்ணவேண்டுமேயன்றிப் பிரயோஜனத்தை யெண்ணிவந்தவனாக எண்ணுதல் கூடாது. பகவதியின் ஆக்ஞையால் எது வரத்தக்கதோ அதுவரப்போகிறது. அவளுடைய ஆக்ஞையே எனக்குப் பிரமாணம். அவளுடைய ஆக்ஞைக் குட்பட்டவனாகிய நான் வேறெதனையும் பிரமாணமாக அறியமாட்டேன். முன் கூறியவாறு சுகமும் துக்கமும் யாவருக்கும் அவளாலேயே வருகின்றன. தங்களால் வரச்செய்து கொள்வதன்று. ஆகையால், ஓ அரசர்களே! யுதாஜித்து சுகத்தையேயடையட்டும்; அதனால் எனக்கு விரோதமில்லை. என்பொருட்டு எவன் விரோதத்தைச் செய்கின்றானோ அதன்பலத்தை அவனேயடைகிறானென்றனன். இவ்வாறு அச்சுதர்சனன் சொல்லக்கேட்ட அரசர்கள் சந்தோஷித்துத் தங்கள் விடுதிக்குப் போயினர். (31–49)

மறுநாள் குறித்த சுபமுகூர்த்தத்தில் சுபாகு அரசர்களை யெல்லாம் அதி விசித்திரமாயிருக்கின்ற மண்டபத்தில் வரும்படி யழைக்க அவர்களெல்லாம் மங்களகரமான அலங்காரத்தோடு கூடினவர்களாய் அச்சபைக்குவந்து அங்கு அதிக சிறப்புடனமைத் திருக்கிற மஞ்சங்களில் விமானத்தின்கண் திவ்யாலங்காரத்தோடும் வீற்றிருக்கின்ற தேவர்களைப்போல் ஜ்வலிக்கின்ற தேஜோரூபி களாய்ச் சுயம்வரம் பார்க்கவேண்டுமென்னு மிச்சையுடனிருந்து, எப்போது ராஜகன்னிகை வந்து நூல்களிற் சிறப்பாகக் கூறும் புண்ணியவானையும் பாக்கியவானையுமுள்ள எந்த ராஜபுத்திரனை வரிக்கப் போகிறாளென்றும், ஒரு சமயம் தெய்வச்செயலாய்ச் சுதர் சனனுக்கு மாலையிடுவாளாயின் அப்பொழுது ராஜாக்களுக்குள் கலகமுண்டாவதிற் சந்தேகமில்லையல்லவா வென்றும் எண்ணிக் கொண்டிருந்தனர். அரசர்களெல்லாம் சுயம்வர மண்டபத்தில் கூடினவுடன் வாத்தியங்களிற் சிறந்த வீணைவேணு மிருதங்காதி களுடைய கோஷங்களுண்டாயின. அப்பொழுது மணக்கோலத் துக்குரிய மங்கள ஸ்நானஞ்செய்து வெண்பட்டாடையுடுத்து ஸர்வா பரண லங்கிருதையாய் இலுப்பமலர் மாலையணிந்து மற்றுமுள்ள மணக்கோலத்துக்குரிய அலங்காரங்களெல்லாம் நிரம்பப்பூண்டு வாருணீ தேவிக்குச் சமானமானவளாய்ச் சிறிது சிந்தாகுலத் தோடும் அலங்கார மண்டபத்தில் வீற்றிருக்கின்ற மகளிடம் சுபாகு வந்து கூறுகின்றான்: லக்ஷ்மியைப்போல் விளங்குகின்ற ஓ சௌந்தரவதியே! நீ ஏன் சிறிதுவாட்டமாயிருக்கின்றனை? கலியாண மாலிகையைக் கையிலேந்திச் சுயம்வரமண்டபத்திற் சென்று அங் குள்ள அரசர்களைப் பார்த்து அவருள் ரூபவானையும் குலஸ்தனை யும் குணவானையுமுள்ள எந்த அரசன் உன்னுடைய மனதில் எண்ணத்தக்கவனாகின்றானோ அவனை நீ கணவனாகக்கொள்வாய். ஆனால் அச்சபையிலுள்ள அரசர்கள் ஒரு தேசத்தவரன்று; அநேக தேசங்களிலிருந்து வந்திருக்கின்றவர்; அவர்களுள் நீ கணவனாக வெண்ணிய அரசன் எந்தத் தேசத்தரசனோ, அதனையறிந்து அவ னுக்கு மாலையிட்டு உன் வாட்டத்தைத் தவிர்த்துக் கொள்வா யென்றனன். (50–60)

சசிகலை மாலையிடும் வகையையுணர்த்தும் பிதாவைப் பார்த்துக் கூறுகிறாள்:—தருமயுக்தமாயும் இனிமையாயுமுள்ள தனைக் கூறுகின்றேன், கேட்பாயாக. சபையில் வந்திருக்கிறவர்க ளெல்லாம் என்னிடம் காமிகளாதலால் அவர்களுக்கு முன்னே நான் வரமாட்டேன். இதுவரையில் ராஜஸ்திரீகளெல்லாம் சுயம் வரத்துக்கு வரவில்லையா? அவர்களை அரசர்கள் பார்க்கவில்லையா? அதனாலவர்கள் குற்றமுடையவ ராயினரா வென்றால் அவர்கள் வரு வார்கள்; அதற்கெல்லாம் நான் நியாயமுணர்ந்து சொல்லவந்தவ ளல்லன். நானொரு தருமங் கேட்டிருக்கிறேன். அதுதானெனக்குப் பிரியமாயிருக்கின்றது. என்னையெனின், ஸ்திரீயை ஒரே புருஷன் தான் பார்க்கத்தக்கவனென்றும், ஏனையரெல்லாம் பார்க்கத் தகாதவ ரென்றும், ஒரு ஸ்திரீ பல புருஷர்கள் தன்னைப்பார்க்க வேண்டு

மென்று போவாளாயின் அவளுக்குப் பதிவிரதாதருமம் போய் விடுமென்றும் கேட்டிருக்கின்றேன். அஃது உண்மையே. ஏனெனில், இவளைப் பார்க்கின்ற ஒவ்வொருவரும் இவள் நமக்கு மனைவியாக வரவேண்டுமென்று எண்ணுவார்களல்லவா? அன்றியும், மாலையைக் கையிற்றரித்து எப்பொழுது சுயம்வரமண்டபத்திற் போகின்றுளோ அப்பொழுதே அந்தக்கன்னிகை நாடகப்பெண்ணுக் கொப்பானவளல்லவா? தாசியானவள் கடைத்தெருவிற் போய் அங்குள்ள புருஷர்களைப்பார்த்து அவரவர்களுடைய குணுகுணங் களை யெல்லாம் மனதிலெண்ணி ஆலோசித்து அவர்களில் ஒரு செல்வனைத் தன்மனதில் அபேக்ஷித்து ஏனையோரையெல்லாம் விசுவாசமில்லாமல் பாராட்டுவதுபோல நானும் சுயம்வர மண்டபத்துக் குப்போய் அவளைப்போற் செய்யவேண்டியவளல்லவா? முன்னுமுள்ள ராஜஸ்திரீகளாலே செய்யப்பட்டது தருமமா யிருந்தபோதிலும் நான் செய்யமாட்டேன். நான் பத்தினி விரதத்தை மிகவும் அநுஷ்டிக்க வேண்டுமென்றிருக்கின்றேன். சாமானியமாகிய ஸ்திரீ ஜாதிகள் முன்னே அனேகரை உத்தேசஞ் செய்துகொண்டு சுயம்வர மண்டபத்துக்குப் போய் அங்கு ஒருவனை வரித்துக் கொள்ளுகிறுர்கள். அதுபோல் நானெப்படி வரிப்பேன்? முன்னமே நான் சுதர்சனனைக் கணவனுக எல்லாவிதத்தாலும் வரித்திருக்கிறேன். இன்று அவனைத்தவிர வேறெருவனை சபையிற் கொள்வதற் கிச்சிக்க மாட்டேன். ஆகையால், அரசனே! எனக்கு மங்களத்தை இச்சிப் பாயானுல் கல்யாணவதியாகச் சுதர்சனனுக்கு என்னைக் கொடுத்து கன்னிகாதானமுஞ் செய்வாயாக வென்றுள். (61–71)

ஓம் ஹ்ரீங்காரதுக்தாப்தி ஸுதாயை நம:

## 21. சுபாகுவின் கவலை

சுபாகுவானவன் சசிகலை நீதி யுக்தமாய்ச் சொல்லியதைக் கேட்டு இனி நாம் செய்யத்தக்கது எதுவென்று சிந்தாகுலமுடையவனுயினுன். என்னையெனின், இச்சுயம்வர மண்டபத்துள் மகா பலவான்களாயும், அநேக திரவிய சாதனங்களோடு சைனியங்களை யுடையவர்களாயும் வீற்றிருக்கின்ற அரசர்களெல்லாம் ஒன்று சேர்ந்து யுத்தஞ்செய்ய வெண்ணியிருக்கிறுர்கள். இச்சமயத்தில் அவர்களிடத்தில் நம்முடைய மகள் சொல்லியதைச் சொல்லுவோமாயின் அப்பொழுதே துர்ப்புத்தியுடையவர்களாகிய அந்த அரசர் களெல்லாங் கோபித்து முன்பலி கொடுக்க நம்மை யடிப்பார்கள். இவர்களைப்போல நமக்கவ்வளவு சைனியமும், மலை முதலிய நால் வகையரணேடு கூடிய கோட்டையுமில்லை. நாம் எந்த ஆதரவினுல் நம்முடைய மகள் சொல்லிய விடையைச் சொல்லத் துணிவோம்? சுதர்சனனைவது எல்லாப் பலங்களுமுடையவனே வென்றுல், ஒன்று மில்லாத வொற்றையாளாயும் ஒருவருடைய சகாயமில்லாதவனுயும் பொருளில்லாதவனுயும் பாலப்பருவ முடையவனுயு மிருக்கின்றுன்.

இதற்கென்ன செய்யலாம்? நம்முடைய அளவையும் அவனுடைய அளவையும் எவ்வளவு யோசித்தபோதிலும் துக்கசாகரத்தில் மூழ்க இடமாக விருக்கின்றதேயன்றிச் சுகத்துக்கிடமில்லை. இனித் தெய் வந்தான் துணையென்று சிந்தாகுலத்தோடும் அரசர்களுடைய சமீபத்திற் சென்று வணக்கத்தோடு நமஸ்கரித்துக் கூறுகிறான்:—ஓ அரசர்களே! நானும் என் மனைவியும் என்னுடைய மகளை இந்தச் சுயம்வர மண்டபத்துக்குக் கொண்டுவர எவ்வளவோ முயற்சிகள் செய்தோம்; அவ்வளவும் வீணாய்ப் போயின. அவளிந்தச் சபையில் உங்களைப் பார்க்க வருவதில்லையாம். ஓ மன்னர்கள்! நீங்களனைவரும் மகா பாக்கியவான்களாயும், மகா பராக்கிரமசாலிகளாயு மிருந்தும் என்னிடத்தில் மிகவும் இரக்கமுள்ளவர்களாக விருக்கின்றீர்களாகலான் நான் உங்களுடைய தாசனாய்ப் பாதங்களில் வீழ்ந்து வணங்கி என்னந்தரங்கமான சில வெண்ணங்களைச் சொல்லுகிறேன். அவற்றைக் கேட்டுக் கோபங் கொள்ளாது என்னைப் புனிதனாக்கல் வேண்டும். உங்களுக்கு அநேக இரத்தினங்களையும் யானைகளையும் தேர்களையும் கொடுக்கிறேன். அவைகளை அங்கீகரித்து என்னிடம் கிருபை வைத்து உங்களுடைய கிருகங்களுக்குத் தயை செய்யவேண்டும். என்னுடைய மகள் என் சுவாதீனத்திலிருப்பவளாக எண்ணவேண்டாம். அவளிப்பொழுதிருக்கும் நிலையைப் பார்த்தால் சுதர்சனனுடைய துக்கத்தினாலேயே மரணமடைவாள் போலிருக்கின்றது. அப்போது நான் தீராத் துயரத்திலாழ்ந்துவிடுவேன். அத்துக்கத்துக்கு நீங்களெல்லாம் வந்தவர்களாவரேயன்றிச் சுயம்வரத்துக்கு வந்தவர்களாகீர். இதுவுமன்றி, மந்தபுத்தியுடையவளாயும் வணக்கமில்லாதவளாயு மிருக்கின்ற என் மகளால் வேறு விசேஷம் என்ன உண்டாகப்போகிறது? உங்களுக்கு எவ்விதத்திலும் தாசனாயிருக்கின்ற நான் சொல்லியதை உண்மையென்றெண்ணிப் பிரயாணப்படுவீர்களாயின் என்னை உயிரோடிருக்க அநுக்கிரகஞ் செய்தவராவீர்கள். என் மகளையும் இதுவரையிலெண்ணி யிருந்தது போலெண்ணாமல், உங்கள் புத்திரியென்றெண்ணுங்கள் என்று மிகவும் பயந்தவனாய்ச் சொல்ல, எல்லா அரசர்களும் பதில் சொல்லாதிருந்தனர். யுதாஜித்து மாத்திரம் கோபித்துச் சுபாகுவைப் பார்த்துக் கூறுகிறான்: ஓ அரசனே! நீ என்ன மூடனாயிருக்கின்றாய். இதுவரையில் அரசர்கள் செய்யும் வழக்கம்போல் சுயம்வரத்தை நாட்டி இப்பொழுது முன்னே உன் கன்னிகை சாவாளென்றும், பின் நீ சாவாயென்றும், எங்களைச் சாவுக்கு வந்தவர்களென்றும், ஆண் தன்மையில்லாத பேடியைப்போல் வாயில் வந்தபடி பிதற்றுகின்றனை. இஃது என்ன வார்த்தை! உன் மகள் விஷயத்தில் உனக்கு முன்னமே சம்சயமிருக்கிறபொழுது இந்தச் சுயம்வரத்தை எப்படி ஏற்பாடு செய்தனை? இங்கு வந்திருக்கும் அரசர்களெல்லாம் உன்னாலழைக்கப்பட்டவர்களாக விருக்க அவர்களை இப்போது பார்த்துக் கள்ளக் கும்பிடிட்டுக் குழைந்து குழைந்து நீங்களனைவரும் வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போகலாமென்று கூறு

கின்றனை. ஆஹா! நீ நல்ல குழையுங் கள்ளன்! வந்த காரியம் முடியாமல் ஒருவரும் போதற்குடன்படார்கள். நீ எவ்வளவு குழைந்து சொன்னபோதிலும் நான் உன் வார்த்தையை நம்ப மாட்டேன். நீயே வந்திருக்கும் எல்லா அரசர்களையும் அவமானஞ் செய்யச் சுதர்சனனுக்கு உனது புத்திரியைக் கொடுக்கும் அசங்கத மான இச்சையுடையவனு யிருக்கின்றனை. உன்னைப்போலும் மூடனைக் கண்டதில்லை. உலகில் சுபகாரியத்தை யபேக்ஷிக்கின்ற வொருவன் முன்னரே நடக்கவேண்டிய காரியத்தை யோசித்து ஆரம்பிக்கின்றனன்; நீ மூடனுகையால் அவ்வண்ணம் ஆலோசனை செய்யாமல் அவமானஞ் செய்தனை. அந்தோ! சைனியங்களோடு கூடியிருக்கின்ற இவர்களையெல்லாம் விட்டு அழைப்பதற்கோராளு மில்லாத சுதர்சனனை வரனுகக் கொள்வதற்கு எப்படி இச்சை கொண்டனை? ஓ மூடனே! நான் முன்னரவனைக் கொல்ல உத்தேசித்திருந்தேன். இப்பொழுது முன்னர் உன்னையும் பின்னர் அவனையும் சாகவடிக்கப்போகிறேன்; அப்பொழுது என்ன சொல்ல விருக்கின்றாய்? (1–7)

நானிருக்கிறபொழுது, மற்றொருவன் உன்னுடைய கன்னிகை யைக் கொள்வதற்கிச்சிப்பானு? வருவானு? அச்சுதர்சனன் எவ்வளவினன்? தனத்திற் சிறந்தவனு? பலத்தில் மிகுந்தவனு? வயதிற் பெரியவனு? அவனை நான் பரத்துவாஜராச்சிரமத்திற் போனபொழுதே கொன்றிருப்பேன். அப்பொழுது முனி நிமித்த மாய் விட்டுவிட்டேன். இப்போது சிறுவனுகிய அவனை உயிரோடு விடமாட்டேன். உன்னிடத்தில் இன்னும் ஒரு பிழை பொறுக் கிறேன். நான் சொல்லியதுபோல் என் பேரனுக்கு அழகுள்ள வளாகிய உன் மகளைக் கொடுக்கும்படி உன் மனையாளோடு நன்றுயாலோசித்துவந்து யாவருமறிய மனதை இரமிக்கச் செய்ய வல்ல உன் புத்திரியைக் கொடுத்து எனக்குச் சம்பந்தியாய் விடுவாய். அப்படி ஆவையாயின், எப்பொழுதும் மேன்மேல் சுகத்தை இச்சிக்கின்றவனுயும், கண்டோரால் மிகவும் அதிசயிக்கத் தக்க சிறப்புடையவனுயுமிருப்பாய். என் பேரனைவிட்டு மங்களவதி யாகிய அவளை சுதர்சனனுக்குக் கொடுத்து என்ன சுகத்தை யடைவாய்? அவன் சேனைகளோடும் ராஜ்யாதிகாரத்தோடு மிருந்தாலல்லவா உனக்குச் சுகமுண்டாகும்? ஆகையால் உன் சுகத்தையும் சுயம்வரம் நாட்டியதற்குரிய தருமத்தையும் நெடுங் காலமாய்வரும் நீதியையும் ஆலோசித்து யாவரும் மதிக்கத்தக்க யோக்யமான காரியத்தைச் செய்வாய். அறிவீனத்தாலுண்டாகும் வித்தியாசமான காரியத்தைச் செய்ய வேண்டாம். நீ எனக்கு மிகவும் சிநேகனுயிருக்கின்றபடியால் இந்த இதமான வார்த்தை களைச் சொல்லுகிறேன். நீ என் சொல்லைத் தவருது நீராடு மண்டபத்தில் தோழிகளோடிருக்கும் உன் மகளை இந்தச் சுயம்வர மண்டபத்திலழைத்து வந்து என் பேரனுகிய சத்துருஜித்துக்கு மாலைசூட்டும் வண்ணம் செய்விப்பாய். இல்லையாயின் சுதர் சனனைத் தவிர ராஜசெல்வத்தோடுங் கூடியிருக்கின்ற வேறெந்த

அரசனுக்காவது மாலை சூட்டும்படிச் செய்வாய். இவ்வண்ணஞ் செய்கிறபக்ஷத்தில் எனக்கும் மற்றையோருக்கும் விரோதமில்லை.

ஏனெனின், சுதர்சனனொருவன்றான் எனக்குப் பகையாளியே யன்றி, மற்றையரெல்லாம் குலம் பலம் செல்வம் முதலியவற்றில் மேம்பாடுடையவர். இப்பொழுது நான் சொல்லுவதை விட்டு உன் மகள் வார்த்தைக்குக் கோணலில்லாமல் அவனுக்குக் கொடுப்பா யாயின் உனக்கு நியாயஞ் சொல்லுவதில்லை. பின்னர் உனக்கும் எனக்கும் நீங்காத விரோதமுண்டாய்விடும். ஓ அரசனே! உன் மகளிடத்திற் போய்வருவாயென்றனுப்பினன். (8–29)

சுபாகு துக்கத்தோடு பெருமூச்செறிந்து பேதிக்கக் கூடாத வருத்தத்துடன் மனைவியிடத்திற் சென்று, தரும சூக்ஷ்மந்தெரிந்த நங்காய்! இப்போதுண்டாயிருக்குங் கலகம் என்னால் கூற முடியாது; இதற்கு நானென்ன செய்யத்தக்கது? ஒன்றுந் தோன்றவில்லை. நான் யுதாஜித்து முதலிய அரசர்களுடைய சுவாதீனனாயிருக்கின்றேன்; எனக்கென்றோரறிவில்லை என்றனன்.

அதுகேட்ட அவன் மனைவி மகளிடம் போய்க் கூறுகிறாள் :— ஓ குழந்தாய்! உன் பிதா துக்கமுடையவராயிருக்கிறார். அரசர்களோ உன் நிமித்தமா யுத்தஞ்செய்யத் தயாராயிருக்கின்றனர். நீ சுதர்சனனைத் தவிர வேறொருவனை வரித்துக்கொள்வாயானால் ஒரு கலகமுமில்லை. தாய் தந்தைகளாயிருக்கின்ற எங்களைத் துன்பப்படுத்த வேண்டாம். எங்களனுமதியை விட்டு நீ சுதர்சனனைப் புலாத்காரமாய் வரிப்பாயானால் யுதாஜித்து சேனைகளோடுங் கூடிவந்து உன்னையும் எங்களையும் சுதர்சனனையுங் கொல்லுவதிற் சந்தேகமில்லை. அந்த யுதாஜித்து பலத்திலும் பிரதாபத்திலும் சிறந்தவன். அவன் கலகஞ்செய்கிற பக்ஷத்தில் நாமெல்லோரும் இறக்கவே வேண்டும். அல்லது உனக்கு வேறொரு கணவனாவது வருவான். ஆகையினால் சுதர்சனனைவிட்டு வேறெவனையாவது வரித்துக்கொள்வையேயானால் ஒரு கலகமுமில்லையென்று மீண்டும் கூறினாள். அப்பனும் வந்து வேண்டிய வளவில் போதித்தான். (30–36)

தாய் தந்தையர்களுடைய வார்த்தைகளைக் கேட்ட சசிகலை பயமற்றவளாய், ஓ அம்மையப்பர்காள்! நீங்கள் சொல்லியதெல்லாம் உண்மையே; என் விரதத்தை நீங்களறிந்தவர்களாயிருந்தும் அதனை மறந்து அறியாதவர்கள் போல் இருவரும் மாறி மாறிப் பேசுகிறீர்கள். நீங்கள் மாறுபட்டாலும் நான் சுதர்சனனைத் தவிர இதர புருஷனை வரிக்கமாட்டேன். ஓ தந்தையே! நீர் இந்த ராஜாக்கள் செய்யுங் கலகத்தைக் கண்டு மருட்சியடைந்தவராய்ப் பயப்படுகின்றபடியால் என்னைச் சுதர்சனனுக்குக் கொடுத்து ஒருவருமறியாமல் எங்களிருவரையும் நகரத்துக்கு வெளியில் கொண்டுபோய் விட்டுவிடும். பின்னர் அந்தச் சுதர்சனன் என்னைத் தேரில் வைத்துக் கொண்டு எவ்விடத்துக்குக் கொண்டுபோக வேண்டுமோ அவ்விடத்துக்குச் சுகமாய்க் கொண்டுபோய் விடுவான். போகும்பொழுது எங்களுக்கு இடையில் எது வரவேண்டியதோ அது வரும்; வராமற்

போகாது; இதிற் சந்தேகமில்லை. அது விஷயத்தில் நீர் சிந்தனையோடு செய்யத்தக்க தொன்றுமில்லை.

தந்தை சசிகலை கூறிய வார்த்தையைக் கேட்டு, ஓ விவேக ரத்தினமே! இப்போது நீ சொல்லியது புத்திமான்களாலும் வேதார்த்தம் தெரிந்த பெரியோர்களாலும் செய்யத்தக்கதன்று. கன்னிகாதானஞ் செய்கின்ற காலத்தில் அனேகருடைய விரோத முண்டாயிருக்குமாயின் அவைகளைப் போக்கிச் செய்யத்தக்கதே யன்றி விரோதங்களை வைத்துக்கொண்டு செய்வது அழகன்று. கன்னிகாதானஞ் செய்து உங்களை நகரத்தில் வாழவைக்காமல் எப்படி நான் ஓட்டிவிடுவேன்? ஒரு சமயம் உன்னிஷ்டம்போலச் செய்தாலும் விரோதத்தோடு கூடியிருக்கின்ற அயோக்கியர்க ளாகிய இந்த ராஜாக்கள் என்ன தீங்கைச் செய்வார்களோ அறி யேன். ஓ குழந்தாய்! நீ என்னபிப்பிராயம்போல் இணங்கும் பக்ஷத்தில் பூர்வத்தில் ஜனகமகாராஜன் சீதைக்குச் சுயம்வரம் வைத்ததுபோல் நானும் ஒருவராலுஞ் சாதிக்கக்கூடாத பந்தயச் சுயம்வரத்தை வைக்கின்றேன். அப்படிச் செய்யும் பக்ஷத்தில் அரசர் களுக்குள் வந்திருக்கிற இந்த விவாதம் சாந்தமடையும். எவனொரு வன் நான் வைத்த பந்தயத்தைப் பரிபாலிக்கிறானோ அவன் உனக் குக் கணவனாகிறான். அவன் சுதர்சனனாயிருந்தாலும் சரி, பலவா னாகிய அவன்றம்பியா யிருந்தாலுஞ் சரி; இஃது ஒருவருக்கும் விரோதத்தை யுண்டுபண்ணாது. வெற்றியடைந்தவன் இன்னா னென்று ஏற்பட்ட பின்னர் நான் சுகமாய் உனக்கு விவாகஞ் செய் வேன். அப்படியல்லாமல் நீ சொன்னதுபோற் செய்தால் அது மூட கிருத்தியமாகும். எது செய்யத்தக்கதென்று தெளியாமல் சந்தே கத்தில் மூழ்கியிருக்கும் எனக்கு ஒரு வழி சொல்வாயென்றனன். (37–48)

சசிகலை, ஓ தந்தையே! உம்முடைய மனம்போல் பந்த யத்தை ஏற்படுத்துகிற விஷயத்தில் நான் யாவருக்கும் சுவாதீனை யாய் விட்டவள் தானே? அப்படியானாலும், பந்தயத்தைப் பரிபா லிக்க வருகின்றவன் வஞ்சகத்தால் ஒருவராவது, இருவராவது, அநேகம் பேராவது, நான் நீ என்று வருவார்களேயானால் அப் போது விவாதமுண்டாகுமே, அதற்கென்ன செய்வீர்? ஆகையால் நீர் அவ்வஞ்சகருடைய சொல்லைக் கேட்டுச் செய்யுங் காரியத்தை விடும். அது ஸம்சயத்திற் கிடமாயிருக்கிறது. அதில் என் புத்தி யைச் செலுத்தமாட்டேன். நீர் இதனைச் சிந்திக்கவேண்டாம். நான் முன்னர் எந்த சுதர்சனனை மனதிற் றரித்தேனோ அவன்றான் மனதிலிருக்கின்றான். அவனை வஞ்சிப்பேனாயின் பாவத்துக் காளா வேன். நான் சொல்வதைக் கேளும். புண்ணிய பாவங்கட்குக் காரணம் மனது; அந்த மனதினால் எப்படி நினைக்கின்றோமோ, அப் படித்தான் பாவபுண்ணியங்கள் வரும். ஆகையால் சுதர்சனனை விட்டு மற்றொருவனை எப்படி வரனாகக் கொள்வேன்? ஒருபோதுங் கொள்ளேன். ஆகையால் நீர் சுயம்வர மண்டபத்திற்குச் சென்று அஞ்சலியஸ்தராய் நின்று, ஓ அரசர்களே! இன்றுபோய் நாளைய

தினம் காலையில் இச்சுயம்வர மண்டபத்துக்கு வரவேண்டியது. வந்தால் உம்முடைய இஷ்டம்போல் செய்விக்கிறேனென்று சொல்லி விட்டு இவ்விடம் வந்து, இன்றிரவிலேயே வேதோக்தப்படி விவாகத்தை நடத்திக் கன்னிகாதானத்தை யுக்தப்படி செய்து அனுப்பி விட்டு, நீர் கிருகத்திலேயே யிருக்கலாம். சுதர்சனன் என்னை வரித்துப் போகிறான். ஒருசமயம் அந்த ராஜாக்கள் இதனை யறிந்து கோபித்தவர்களாய் யுத்தம் நடத்த முயற்சியுள்ளவர்களாய் வருவாராயின் அப்போது பகவதி எங்களுக்குச் சகாயம் பண்ணுவாள். சுதர்சனனும் அந்த ராஜபுத்திரர்களோடு யுத்தத்தைப் பண்ணுவான். ஊழ்வகையால் சுதர்சனன் மரணமடைவானாயின் நானும் மரணமடைவேன். அந்தச் சுதர்சனனோடு ரமிக்க வேணுமென்கிற இச்சையால் போகப்போகிற எனக்கு அந்த அமங்களம் உண்டாகமாட்டாது; மங்களமே யுண்டாகும். நீர் போய்வாருமென்றனுப்பினாள். அரசன் மகளுடைய உறுதிமொழியைத் தடுத்தற்கஞ்சி விசுவாசமுடையவனாய் மகள் சொல்லியது போல நடத்துவதற் குத்தேசித்தான். (49–60½)

ஓம் ஹ்ரீங்கார கமலேந்திராயை நம:

## 22. சுதர்சன–சசிகலா விவாகம்

சுபாகு தன்னுடைய மகள் கூறிய வார்த்தையைக் கேட்டு அதனால் அவளுடைய பதிவிரதா தர்மத்தை மதித்து இனி நாம் அவளுடைய அபிப்பிராயப்படியே செய்வோமென்கிற நல்லெண்ணமுடையவனாய் ராஜசபைக்குப்போய் முடிமன்னர் முதலாயினரைப் பார்த்து, ஓ அரசர்களே! இன்று செய்ய உத்தேசித்த விவாகம் நாளையதினம் நடத்துவதாக உத்தேசித்திருக்கிறேன். நீங்களனைவரும் இப்போது தாகசாந்தி முதலியவை பெறாது போதல் நலமன்று. ஆகையால், இப்பொழுது என்னிடத்தில் சந்தோஷமுடையவர்களாய் என்னால் கொடுக்கப்படும் பக்ஷியங்களையும் பரமான்னம் முதலிய பானவர்க்கங்களையும் அங்கீகாரமாய்ப்பெற்றுத் தாகசாந்தி செய்துபோய் இன்றுபோலவே இம் மண்டபத்தில் நாளையதினம் யாவரும் வந்திருந்து விவாககாரியங்களை நடத்திவைக்கவேண்டும்; இனி உங்கள் விடுதிக்குப் போய் வாருங்கள். (1–3)

ஓ அரசர்களே! இன்று என் மகள் இச்சுயம்வர மண்டபத்துக்கு வரமாட்டாள். இது முதல் அவளுக்குச் சொல்லவேண்டிய புத்திமதிகளையெல்லாஞ் சொல்லிப் புத்ரியைச் சமாதானப்படுத்திக் காலையிலழைத்துக்கொண்டு வருகிறேன். உங்களிடத்தில் விதேயனாயிருக்கத்தக்க என்னிடத்தில் புத்திமான்களாகிய நீங்கள் இப்பொழுது சண்டையை யுத்தேசிக்காமல் மிகவுங் கருணைசெய்ய வேண்டும். பெண்ணைச் சமாதானப்படுத்தி இவ்விடங் காலையில் அவசியம் அழைத்துவந்து உங்களிஷ்டப்படி இச்சாசுயம்வரமாவது

பணயச் சுயம்வரமாவது, அவள் மனதுக்குச் சம்மதியானதனை முன்னுலோசித்துப் பின்னர்வந்திருக்கிற உங்களிடத்திலுங் கலந் தாலோசித்து அவரவ ரபிப்பிராயங்களை நன்றுய்த்தெரிந்து கொண்டு அதனை யாவரும் வாய்மொழியாகச் சொல்லும்படியாகவுஞ் செய்து சுயம்வரத்தைநாட்டி விவாகத்தை நடத்துகிறேன். இப் பொழுது யாவருந் தயைசெய்து விடுதியைப்போய்ச் சேருங்க ளென்று மீளவும் விநயத்துடன் சொன்னுன். அதுகேட்ட அரச ரெல்லாஞ் சிறிது சந்தேகமடைந்து நகரத்தினுடைய நாற்பக்கங் களிலும் தங்கள் காவலாளிகளைக் காவலாகவைத்து மத்தியானஞ் செய்யவேண்டிய அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு இனிச் சுயம்வரம் எவ்விதமாய் நடக்க விருக்கிறதோவென்று ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டிருந்தனர். (4–6)

சுபாகு இவர்களை அனுப்பிவிட்டுத் தன் மகளுக்கு விவாகத்தை நடத்திவிடவேண்டு மென்றெண்ணி வேதவித்துக்களை அழைத்து அவர்களோடு தன் மகளபிப்பிராயப்படி நடத்தவேண்டிய அதி ரகசியமான விவாக காரியத்தைச்சொல்லி அவர்களிசைவு கொண்டு அதுபோல் நடத்தத்தொடங்கி ஒருவருக்கும் புலப்படாத அந்தரங்க மான வோரிடத்தில் சுதர்சனனையும் சசிகலையையும் வரவழைத்துக் கங்கை முதலிய புண்ணியதீர்த்தங்களால் மங்களஸ்நானமும் மணக்கோலத்துக்குரிய அலங்காரமும் அதிகச் சிறப்புடன் செய் வித்துக் கலியாண மண்டபத்திற் கழைத்துக்கொண்டுபோய் ரத்ன பீடத்திலிருக்கச்செய்து அர்க்கிய பாத்திய ஆசமனுதிகள் கொடுத்துப் பின்னர் க்ஷத்திரிய தருமப்படி இரண்டு வஸ்திரமும் குண்டலங்களும் பசுவுங்கொடுத்துபசரிக்கச் சுதர்சனன் அவைகளை யேற்றுத் தேவியினுடைய கருணையை எண்ணியிருக்கும்பொழுது மனோரமை தன் மகனுடைய மணக்கோலத்தைக்கண்டு சிந்தை மகிழ்ந்து இன்றுதான் நாம் மக்கட்பேறுபெற்ற பாக்கியசீலமுடைய சிரேஷ்டத்தன்மையை அடைந்தோமென்று மகிழ்கூர்ந்திருந்தனள். மந்திரிப்பிரதானிகளும் பயமில்லாதவர்களாய்ச் சந்தோஷித்து அவ்வரனைக் கலியாணமண்டபமத்தியில் அழைத்துக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது கலியாணச்சடங் கறிந்தவர்களாகிய ஸ்திரீகள் ஸர்வாலங்காரத்தோடு மிருக்கின்ற ராஜகன்னிகையைச் சிவிகையிலேற்றிக்கொண்டுவந்து மண்டபத்தி லிருக்கும் வர னுடைய பக்கத்திலிருக்கச் செய்தனர். (7–12)

பின்னர், புரோகிதர் கலியாணமேடையில் பிரதிஷ்டை செய் திருக்கிற அக்னியில் விதிப்படி செய்யத்தகும் ஹோமத்தையும், மணக்கோலத்துடன் மகிழ்ந்து அதிகப்பிரேமையோடிருக்கும் வதூவரர்களாகிய மணவாளனையும் மணவாட்டியையும் அக்னி முகமாயிருக்கும்படி ஞாபகஞ்செய்து விதிப்படிச்செய்யத்தகும் பொரிஹோமத்தையும் பின்னர் அத்தம்பதிகளுக்குச் செய்யத்தகும் ஏனைய சடங்குகளையும் விதிமுறையாகச் செய்துமுடிக்கும் அச்ச மயத்தில் குலாசாரத்துக்கும் சாஸ்திரத்துக்கும் விரோதமில்லாமல் சிறப்பாகக் குதிரைகள் பூட்டியிருக்கிற, இருநூறு தேர்களையும்,

சுபாணங்கள் நிறைந்துள்ளதாகிய ஒரு தூணீரத்தையும், மலை போன்ற வடிவத்தோடு மதச்செருக் குடையனவாகிய சுவர்ணுபர ணத்தா லலங்கரிக்கப்பெற்ற நூறு ஆண் யானைகளையும், மனோகர மாகிய நூறு பெண்யானைகளையும், சிந்துதேயத்திற் பிறந்த சிரேஷ்டமாகிய இரண்டாயிரம் குதிரைகளையும், எவ்வளவு பாரத்தை யும் சுமக்கவல்ல முந்நூறு ஒட்டைகளையும், பொன்னுபரணம்பூண்ட நூறு தாசிகளையும், அநேகவிதமான ஆயுதங்களினால் நிறைந் திருக்கின்றவர்களாயும் சேவகச் சின்னத்தில் குறைவில்லாதவர்க ளாயுமுள்ள நூறு தாசர்களையும், விலையுயர்ந்த மாணிக்கங்களையும், அன்னப் பக்ஷிகளுடைய உரோமங்களா லமைக்கப்பட்ட அலங்கா ரத்தோடுங் கூடிய ஆசனங்களையும், இந்த வகையன்றி விசாலமா யும் விசேஷமான அலங்காரத்தோடுங் கூடியதாயும் வசித்தற்கு மனோகரமாயுமுள்ள அரண்மனைகளையும், தானியங்களோடு கூடிய இருநூறு வண்டிகளையும், தக்ஷபுத்திரிக்குச் சமானமான தன் மக ளுக்கு அளவிறந்த சந்தோஷத்துடன் கொடுத்தனன். (13–20)

பின்னர் அரசன் இச்சீர்களையெல்லாம் நடத்தி மனோரமையை நமஸ்கரித்து எதிரில் அஞ்சலியஸ்தனாய் நின்று, ஓ ராஜபுத்திரியே! உன் தாசனாகிய என்னால் செய்யப்பட்ட இந்தக் கலியாண மகோற் சவத்தில் ஏதேனுங் குறைபாடுகள் உன்னுடைய மனதில் தோன்றி யிருக்குமாயின் அதனையொளிக்காமற் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க, மனோரமை, என்னுடைய ஐஸ்வர்யமாயிருக்கின்ற ஓ அரசனே! மகத தேசத்தரசன் மகளாயும் இப்போதுனக்குச் சம் பந்தியாயுமிருக்கின்ற நான் உனக்கும் உன்னைச் சேர்ந்த பந்து ஜனங்களுக்கும் அளவிடப்படாத இனிய உபசார வார்த்தைகளைச் சொல்லி ஸ்தோத்திரஞ் செய்யாது யானென்ன கைம்மாறு செய்யப் போகிறேனென்று சொல்லவேண்டியவள். அப்படி நான் சொல்வ தற்கு முன், நீ என்னைப் பார்த்து ஏதேனுங் குறையுளதோவென்று கேட்டதற்கு நானென்ன சொல்லவறிவேன்?

நகரவாசத்தைவிட்டு வனவாசியாயும், தனபதியாயிருப்ப தொழிந்து தந்தையில்லாதவனாயும், பரிஜனங்கள் சூழ விருப்பதின் றித் தனியனாயும், அறுசுவையோ டுண்பதொழிந்து கந்தமூலபலங் களை யுண்பவனாயும், யாவருக்கும் பிரயோசனமாயிருக்குந் தன்மை யொழிந்து நிஷ்பிரயோஜனனாயு மிருந்த என் குமாரனுக்குக் குண வதியாயும், ரூபவதியாயுமுள்ள கன்னிகையை எவன்றான் கொடுப் பான்? உலகில் அரசர்கள் தங்கள் மகளைக் குலத்திலும் பலத்திலும் திரவியத்திலும் தங்களுக்குச் சமானமாயிருக்கின்றவர்களைப் பார்த் துக் கொடுப்பதேயன்றிப் பாராது கொடுப்பதில்லை. அங்ஙன மிருக்க நீ யாவராலுங் கொண்டாடத்தக்க உன்னுடைய கன்னிகா ரத்தினத்தைச் சிறந்த பலமுடைய மகா அரசர்களெல்லாம் தங்கள் வசமாக்கிக்கொள்ள பற்பல முயற்சிகள் செய்தும் வீராவேசத்தோடு யுத்தத்திற்குத் தலைப்பட்டும் நீ அவர்களையெல்லாம் பகைத்து அஞ் சாது என் மகனுக்கே கொடுத்து ரத கஜ துரக பதாதிகளாகிய அரசச்செல்வமுந் தந்து மேருபர்வதம்போல் யாவரினும் மேலோங்கி

யிருக்கச் செய்தனே. இவ்விஷயத்தில் உனக்குண்டாகிய தைரியத்தை என்னவென்று சிலாகிப்பேன்? இது மிக ஆச்சரியம்! இது மிக அதிசயம்! ஓ அரசனே! என் மகனேயும் என்னேயும் வாழ்வித்த உனக்கு மங்களம் உண்டாகுக! உன்னுடைய வம்சமும் வளர்ந்தோங்குக என்று பலவாசிகள் மனமகிழ்ந்து கூறிய பொழுது கைகூப்பி நின்ற சுபாகு, ஓ அம்மணி! நானொரு விண்ணப்பஞ் செய்கிறேன்; என்னெயெனில், என்னுடைய ராஜ்யத்தை உனக்கொப்புவித்து நான் சேனைபதியாயிருந்து அரசியல் நடத்துகிறேன்; இல்லையாயின் உன் மகனுக்கே கொடுத்துவிடுகிறேன். நீ உன் மகனோடு வாழ்ந்திருப்பாயாக. நான் இந்தக் காசியைவிட்டு அரண்யம் போகிறேன். இந்த நகரவாசத்தைக் காட்டிலும் அரண்யவாசமே எனக்கு மேலானது. ஆகையால் என் விண்ணப்பத்தை யங்கீகரித்தல் வேண்டுமென்று சொல்லிவிட்டு, இனி நான் அரசரெல்லாம் கோபித்திருக்கின்றபடியால் அவர்களிடத்திற் சென்று நால்வகை யுபாயத்தில் முன்னர் ஸாமத்தைச் செய்கின்றேன். அதனைக் கேளாராயின், தானபேதங்களைச் செய்கிறேன். அதற்கும் வழிவிடாராயின் தண்டமாகிய யுத்தத்தைச் செய்கிறேன். அதில் வரும் ஜயாபஜயங்கள் தெய்வாதீனம். அது சொல்ல முடியாது. அப்படியிருந்தாலும், தரும மார்க்கத்தில் நிற்போர்க்கு ஜயமும், அதர்ம மார்க்கத்தில் நிற்போர்க்கு அபஜயமுமாகையால் அதர்மிஷ்டர்களாகிய அவர்களுக்கு ஜயமுண்டாவது அரிதென்று மனோதைரியத்தோடும் சந்தோஷத்தோடும் சொல்லினன். சுபாகுவினுடைய வார்த்தையை, அந்த அரசனால் பெருமையும் புகழுமடைந்து மகிழ்ந்திருக்கும் மனோரமை கேட்டு, ஓ அரசனே! நீ எதனை எதனை எண்ணிச் செய்கின்றனேயோ, அதனாலெல்லாம் உனக்கு ஜயமும் மங்களமு முண்டாகக் கடவது! நீ பயப்பட வேண்டாம். என் மகனுக்குக் கொடுப்பதாகச் சொன்ன உன்னுடைய ராஜ்யத்தை நீ உன் புத்திரனோடுமிருந்து நடத்திச் சுகமாக வாழ்ந்திருப்பாயாக!

எங்கள் வனவாசத்தை யொழித்த நீ வனத்துக்குப் போதல் நன்றன்று; என் குமாரன் அயோத்தி நகரத்திற்குப்போய் ராஜ்ய சம்பத்தை யடையப் போகிறபடியால் யாங்கள் போய்வர நீ விடை தருவாய். மஹேஸ்வரியை யிடைவிடாமல் தியானித்துக் கொண்டிருக்கிற எங்களுக்கு ஒரு சிந்தையும் வரமாட்டாது. நீயும் மகேஸ்வரியைத் தியானஞ்செய்து சிந்தையற்றிருப்பாய் என்றிவ்வாறு அமிர்தமயமாகிய வார்த்தைகளை ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு இராப்பொழுது கழித்தனர். விடிந்தவுடன் சுயம்வரத்துக்கு வந்திருந்த அரசர்கள் இரவில் நடந்த விவாகத்தைக் கேள்விப்பட்டு எப்படி நடந்திருக்குமென்று சந்தேகித்து ரோஷத்தோடு பட்டணத்துக்கு வெளியேவந்து முற்றுகைசெய்து எங்களுக்கு அவமானஞ் செய்த அந்த சுபாகுவை இப்பொழுதே துவம்சஞ்செய்து சுதர்சனனைச் சின்னபின்னப்படுத்தி லக்ஷ்மிதேவிக்குச் சமானமாகிய சசிகலையைக் கிரகிப்போம். இது செய்யாமல் நம்முடைய நகரங்

களுக்குப் போவோமாயின் நாணமற்றவர்களாவோமல்லவா என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, வாசிக்கிற வாத்யகோஷங்களும் சங்கநாதங்களும் நானுவிதமாகிய சப்த கானங்களும் வேதகோஷங்களுங் கடலொலி போலெழுந்தன. அவ் வோசையைக்கேட்ட அரசர்கள் மருண்டு, ஆ! ஹா! இஃதுவென்ன வாச்சரியம்! விவாகம் நடப்பதாகத்தெரிகின்றதே! மிருதங்கங் களுடைய சப்தங்கள் நம்மைத் தோல்வியடைந்தவரென்று சொல்லி அவமானப்படுத்துவதாகத் தெரிகின்றது. ஓ அரசர்களே! அந்த சுபாகு நம்மைப் பிரிய வசனங்களால் வரவொட்டாமற் செய்தனுப்பி விட்டுச் சுதர்சனனுக்கு விதிமுறையாகப் பாணிக்கிரகணத்தைச் செய்துவிட்டான், இதில் சந்தேகமில்லை. இப்போது நாம் என்ன செய்யத்தக்கது? அதனை யோசித்து அவரவர்கள் புத்திசாதுர்யத் தைத் தெரிவியுங்களென்று சொல்லிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் சுபாகு சமீபத்தில் வந்தனன். அரசர்களெல்லாம் ஒன்றுங் கேளாது கோபத்தால் மௌனமாயிருக்க, சுபாகு அவர்கள் குறிப் பறிந்து நமஸ்கரித்து அஞ்சலிசெய்து, இன்று என் கிருகத்தில் யாவரும் போஜனஞ்செய்து போகவேண்டுமென்று பிரார்த்தித்து, ஐயா! உங்களுக்கெல்லா மோர் விண்ணப்பம்; என்னுலும் வஞ்சனை யில்லை; சுதர்சனனுலுங் கெடுதியில்லை; என்னுடைய கன்னிகையே அவனைவரித்துக்கொண்டாள். பிரமன் விதித்த விதி அப்படியிருக்கு மாயின் என் செய்வேன்? இது விதியின் பயனென்றுணர்ந்து பொறுத்துக்கொள்ளவேண்டும். பெரியோர்களா யிருக்கின்ற நீங்க ளெல்லாம் தயையுடையவர்களா யிருத்தல்வேண்டுமென்று பிரார்த் தித்தனன். அவனது உபசார வார்த்தைகளைக்கேட்ட அரசர்கள், ஓ சுபாகுவே! நீர் எங்களை வரவழைத்து எங்களிஷ்டப்படி எல்லாக் காரியங்களையும் நடத்தி விட்டீராகையால் இனி நாங்களனைவரும் போஜனஞ்செய்து போகாத குறையொன்றுதானிருக்கின்றது. அக்குறையுமில்லாமற் செய்யத்தான் இப்போது வந்தீர்போலும்; மிகவுஞ் சந்தோஷமாயிற்று. எங்களுக்கு எல்லாம் நடந்ததுபோல் போஜனமும் நடந்து விட்டது. இனி அவரவரிடம்போய்ச் சேர வேண்டியது தான்; வேறென்னவேலை யிருக்கிறது? இதுவரையில் எங்களுக்காக நீர் மிகவும் சிரமமெடுத்துக் கொண்டது போதும், போதும். இனி உம்முடைய ஆஸ்தானம் போய்ச் சேர்ந்து மற்றும் நடத்தவேண்டிய காரியங்களையெல்லாம் குறைவில்லாமல் நடத்தும் என்று அதிக கோபத்தோடுங் கூறினர்கள். சுபாகு இவையாவுங் கேட்டு அச்சமுற்று இவர்களெல்லாம் மிகவும் கோபமுள்ளவர் களாயும், மனவருத்த முடையவர்களாயு மிருப்பதால் இனி என்ன செய்யப் போகின்றார்களோ நாமறியோமென்று சந்தேகங் கொண்ட வனுய் அரண்மனையைப் போய்ச் சேர்ந்தான். பிறகு அரசர் களெல்லாம் சுதர்சனன் எவ்வழியாவது வருவானல்லவா? வருவானு யின் அவனை வழிமடக்கி யடித்து கன்னிகையைக் கொண்டு போவோ மென்று சமயத்தை எதிர்ப்பார்த்திருந்தனர். ஒருவராவது இந்த சுதர்சனனோடு நமக்கென்னபோரென்று சொன்னாரல்லர்.

இனி நடக்கும் மங்களத்தைப் பார்த்துப்போங்களென்று ஒருவரை யும் வெளியேபோக விடாமல் தடுத்துக்கொண்டு சுதர்சனனை எதிர் பார்த்திருந்தனர். இவர்களிவ்வாறிருக்க சுபாகு மருமகனுக்கு நடத்தவேண்டிய விருந்து முதலியவற்றைச் சிறப்பாகச் செய்யத் தொடங்கினன். (21–48)

ஓம் ஹ்ரீங்கார மணிதீபார்ச்சிஷே நம:

## 23. சுதர்சன–யுதாஜித்து யுத்தம்

சுபாகு அரசர்களைவிட்டுத் தன்னரண்மனைக்குவந்து சுதர்சன னுக்கு விருந்திடவெண்ணி அதுபோல அதிகச்சிறப்புடனும் அதிக பிரேமையுடனும் ஆறுதினம் திருப்தியுண்டாகும்படி நடத்தி அப் பொழுது செய்யவேண்டிய பாரிபர்ஹம் (மரியாதைகளையுஞ்) செய்து மந்திரிகளையழைத்து நாம் மருகனுக்குச் செய்யவேண்டியவை யெல்லாம் இதுவரையில் செய்தாய்விட்டது. இனித் தம்பதிகளை யனுப்பலாமென்ருல் அரசர்கள் நம்முடைய கோட்டை வழியைச் சேனைகளால் முற்றுகைசெய்திருப்பதாக நம்முடைய சேவகர்களால் கேள்விப்படுகிரேம். இதற்கென்ன செய்யலாமென்று மனவருத்த மடையும்போது தேவி அநுஷ்டானபரனுகிய சுதர்சனன் மாமனு ரைப்பார்த்து, நீரேன் துயரப்படுகின்றீர் ? எங்களைச் சீக்கிரத்தி லனுப்பும். நாங்களந்தவரசர்களுக் கஞ்சாமற்போய்ப் பரிசுத்த மாகிய பரத்வாஜராச்சிரமத்தையடைந்து அவ்விடத்தில் சந்துஷ்டர் களாக வசித்திருப்போம். இதற்கோரிடையூறும் வரமாட்டாது. நீர் சிறிதும் விசாரப்படவேண்டாம். விசாரப்படத்தக்கதொன்றுமில்லை. ஜகன்மாதாவாகிய மகேஸ்வரி உமக்கும் ஒரு வருத்தம் வரவொட் டாமல் சகாயஞ் செய்யப்போகிருளென்றனன். சுபாகு மருமகப் பிள்ளையின் அபிப்பிராயத்தை நன்ருயறிந்தவனுய் வேண்டிய திரவி யங்களையும் சேனைகளையுங் கூட்டியனுப்பச் சுதர்சனனும் விடை பெற்று வரிசையாகவந்த ரத கஜ துரக பதாதிக ளெல்லாஞ் சூழ்ந்து வரச் சசிகலை சமேதனுய் ரதத்திலாரோகணித்து மிகவும் விரை வாய்ப் புறப்பட்டு அரசர்கள் சூழவிருக்குமார்க்கத்தில் பயமற்றுப் போகும்போது ராஜாக்களுடைய சைனியங்கள் அணியணியாய்த் திரண்டு வருவதைப்பார்த்துத் தன்னுடைய ஹ்ருதயவாசியாயிருக் கின்ற தேவியை சித்தத்தாலெண்ணி நானுன் னடைக்கலமென்று ஆனந்தமாகச் சரணமடைந்து இந்த அரசர்களை எவ்வாறு ஜயிக் கப்போகிரே மென்கிற பயமுமில்லாமல் பிராணஹானி வருமே என்கிற விசனமுமில்லாமல் சிரேஷ்டமாகிய காமராஜமென்னும் ஒரக்ஷரமாகிய மந்திரத்தை ஜபித்திருந்தான். வழிவிடவந்த சுபாகு மாத்திரம் சிந்தாகுலமடைந்திருந்தான். அரசர்களெல்லாம் சுதர் சனன் சசிகலையோடு வருவதைப் பார்த்துச் சேனைகளைக்கூட்டிக் கொண்டு கோலாகலஞ்செய்து கன்னிகையைக் கொள்ளைகொள்ளும் இச்சையுடையவர்களாகக் கிளம்பினர்கள். சுபாகு அவர்களைப்

பார்த்து யுத்தஞ்செய்யவேண்டுமென்றெண்ணும்பொழுது ஜயத்தை யடைய வேண்டியவனாகிய சுதர்சனன் தடுத்தனன். தடுத்தும் அவன் தடைப்படாது சைனியங்களோடெதிர்த்துவர அவர்களும் இவனோடெதிர்த்து ஒருவரையொருவர் வெற்றிகொள்ளவேண்டு மென்னும் அவாவுடன் சங்கம் பேரிகை துந்துபி முதலிய வாத்தியங் களை முழங்கும்படிச் செய்தனர்.

சத்துருஜித்தென்கிற சுதர்சனனுடைய சகோதரன் தன் தமையனை ஜயிக்கவேண்டுமென்கிற எண்ணமுடையவனாய்த் தனது பாட்டனாகிய யுதாஜித்தைத் தன்னோடு துணையாகவரும்படி யழைத்துக்கொண்டு வந்தனன். வரும்பொழுது சிலவரசர்கள் அவர்களைப்பார்த்து, இவர்கள் மஹாபலசாலிகளாகையால் இவர் களே வெற்றியடைவார்க ளென்றெண்ணி அவர்களுடன் கலந்து சைனியங்களையும் கூட்டிக்கொண்டு யாவரும் சுதர்சனனை எதிர்க் கச் செல்லும்பொழுது இடையே கூட்டமாயிருந்த சேனைகளைக் கண்டு மகாகோபங்கொண்டு அவைகளைத் துவம்சம்செய்யும் பொருட்டு பாணசமூகங்களை ஒன்று நூறு ஆயிரமாக ஒன்றின்பின் ஒன்றாகவிட்டு எங்கும் பாணவருஷங்களாக்கினர். அதுகண்ட சுபாகு நமது மருகன் நமக்குத்துணையாக வருவானானால் இவர்களை வெல்லலாமென் றெண்ணித் தன்னுடைய பரிவாரங்களாயுள்ள யாவரையு மழைத்துக்கொண்டு சுதர்சனனைச் சமீபித்து, ஓ தேவித் தியானத்திலிருக்கின்ற மஹாபுருஷனே ! இப்பொழுது அதிபயங் கரமாயும் மகாவீரர்களுக்கும் உடல் நடுங்கும்படியாயுமுள்ள யுத்தம் நடந்து வருகின்றது. ஆகையால் என்னுடன் நீ துணையாக வரவேண்டுமென்று சொல்லும்பொழுது அந்தச் சுதர்சனனுக்குத் துணையாயுள்ள மஹாதேவி திவ்ய வஸ்திரந் தரித்தவ ளாயும், மந்தாரபுஷ்பமாலை சூடிக்கொண்டிருக்கிறவளாயும், திவ்யாபரண அலங்கிருதையாயும், நானாவிதமான ஆயுதங்களைத்தரித்தவளாயும், சிங்கவாகனாரூடையாயும் பிரசன்னையாயினள். (1–19)

அத்தேவியை அரசர்களெல்லாங்கண்டு இதுவென்ன ஆச் சரியம் ! சிம்மத்தின்மேலிருக்கிற இவள் யார் ? எங்கிருந்துவந்தாள்? நமக்கொன்றுந் தெரியவில்லையே என்று தயங்கி ஏங்கியிருக்கும் பொழுது சுதர்சனன் அந்தத் தேவியைத்தரிசித்து சுபாகுவைப் பார்த்து, ஓ மாமா ! நம்முன் பிரசன்னையாய் அற்புதமாகிய காட்சி யைத் தருகின்ற தேவியைத் தரிசனம்பண்ணும். எனக்கிப்போது வேண்டியவற்றை அனுக்கிரகஞ் செய்யக் கருணையுடன் வந்திருக் கிறாள் ; மிகுந்த பயத்திலிருந்த நான் அந்தப் பயத்தினின்றும் இப் பொழுது விடுபட்டவனாயினேனென்றான். சுபாகுவும் நானும் அப்படியே ஆயினேனென்றான். இவ்வண்ணம் இருவரும் தேவி யைப் பயமற்றவர்களாய்ப்பார்த்து நமஸ்காரஞ்செய்து நாங்கள் கிருதார்த்தராயினோம் என்று கூத்தாடி நிற்கும்பொழுது தேவியினுடைய வூர்தியாகிய சிம்மமானது ஓர் ஹுங்காரஞ் செய் தது. அந்தத் தொனியால் பெருஞ்சேனையாயிருந்த யானைக் கூட்டங்களெல்லாமுயிரிழந்தன. பின்னர் அச்சிங்கம் ஒரு பெருமூச்

சேறிந்தது. அது மகாகோரமாகிய பெருங்காற்ருய் மற்றப்படைகளையெல்லாம் அதாகதப் படுத்தித் திக்குகளில் ஒதுக்கியது. (20-25)

இவ்வண்ணம் சிம்மமானது படைகளை நாசஞ்செய்கிற பொழுது சுதர்சனன் தனது சேனுதிபதியைப்பார்த்து, ஓ சேனுபதி! என்பேரில் கோபமுள்ளவர்களாயும் துர்ப்புத்தியுள்ளவர்களாயும் வந்த அரசர்களெல்லாம் இப்போது எவ்விடத்திலிருந்து என்ன செய்கிருர்கள்? அந்தவிவரத்தைத் தெரிந்துவருவா யென்றேவ, அவனஞ்சி நின்ருன். அவனைப்பார்த்து, நம்மை ரக்ஷிக்கும் நிமித்தம் தேவியானவள் வந்திருக்கிறபோது இந்த அரசர்கள் நெருங்கியிருக்கின்ற இந்தமார்க்கத்திற் போக நீ ஏன் அஞ்சுகிருய்? நான் இந்தப் போர்முகத்தில் வந்து அஞ்சி நினைத்தவுடன் எழுந்தருளி வந்து என் பயமகற்றியதை நீ யறியவில்லையா? நீ அஞ்சாமற் போவென்ருன். சேனுதிபதியும் பயமற்றுப் போய்வரத் தலைப்பட்டு அரசர்கள்நெருங்கி யிருக்கும் மார்க்கத்திற் போனுன். அப்பொழுது யுதாஜித்து மிகவுங் கோபங்கொண்டவனுய் அரசர்களைப்பார்த்து, ஓ அரசர்களே! சிம்மத்தின்மேலுட்கார்ந்திருக்கிற ஒரு பெண் பிள்ளையைப்பார்த்து நடுக்கமுற்று ஏன் பயப்படுகிறீர்கள்? இவள் நம்மை என்ன செய்வாள்? நாம் இவளைப்பார்த்து மருண்டிருப்போமாயின், இப்பொழுது அதிக பலமுள்ளவனுய் நம்மை அவமானப் படுத்தி ராஜகன்னிகையைக் கிரகித்து அவளோடு பயமற்றவனுய் வேகத்துடன் போகத் தலைப்பட்ட அந்தப் பலஹீனனுகிய சுதர்சனனென்னும் பாலன் நம்மை மதிப்பானு? அவன் நம்மால் உதாசீனமாகப் போக்கத்தக்கவனு? அவன் எவ்வளவு பெரிய வேலை செய்திருக்கிருன்? ஆகையால் அவனை நாம் அடித்துத் திவ்யாபரணவதியாய் விளங்கும் கன்னிகையை கிரகிப்போம். அவன் அவளைக் கொண்டுபோகத் தக்கவனு? சிம்மத்தினுல் கொள்ளத்தக்க ஒரு ஆகாரத்தை இடையே ஒரு நரியானதுவந்து தடுத்துத் தான் கொண்டுபோவதற்கு யோக்கியமுடைய தாகுமா? இவ்வாறெல்லாஞ் சொல்லி அதிககோபமுள்ளவனுய்த் தன் சேனைகளோடு சத்ருஜித்தையுமழைத்துக் கொண்டு யுத்தஞ்செய்யவேண்டு மென்கிற எண்ணத்துடன் அகங்காரத்தோடெழுந்து பூண்கள்கட்டியிருக்கும் தனுசைக்கையிலெடுத்துக் காதளவுமிழுத்து வளைத்துக் கூர்மையுள்ள சிலீமுகம் விசிகம் என்கிற பாணங்களைச் சுதர்சனனைக் கொல்லும்படி மாறி மாறி விட்டான். அவைகளைச் சுதர்சனன் கண்டு இவைகள் தன்னைக் கொல்லவேண்டுமென்கிற துன்மதியுடைய யுதாஜித்தினுல் விடப்பட்ட பாணங்களென் றுணர்ந்து அவைகட்கு மாருனவைகளைவிட்டு அப்பொழுதப்பொழுது வெட்டி வந்தனன். இவ்வண்ணம் இருவரும் போர்செய்யும் பொழுது அநேக ஆயுதங்களைத் தரித்தவளாய் வந்திருக்கிற உலக மாதாவாகிய மகாதுர்க்கையானவள் மிகவுங்கோபாவேசங்கொண்டு அநேக உருவங்கொண்டு யுத்தஞ்செய்கிறவள் போல்காட்டி யுதாஜித்தையும் சத்ருஜித்தையும் கொன்றனள். மாண்ட இருவரும் ரதங்களிலிருந்து யாவருமறியப் பூமியில் விழுந்தனர். உடனே சுதர்சன

னுடைய சேனைகள் வெற்றிச்சங்கங்களை முழக்கி ஜய ஜய வென்கிற சப்தத்தை யுண்டாக்கின. இவ்வொலியைக்கேட்ட அரசர்களெல்லாம் அவ்விருவர் வீழ்ந்ததைப் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தனர்; சுபாகுவும் துர்க்கதியை நாசம்பண்ணுகிறவளாகிய துர்க்காதேவியை மிகுந்த சந்தோஷத்துடன் அடியில்வருமாறு தோத்திரஞ் செய்தனன்.

" நமோதேவ்யை ஜகத்தாத்ர்யை ஶிவாயை ஸததம்நம:
துர்க்காயை பகவத்யைதே காமதாயை நமோநம:"
" நமஶ்ஶிவாயை ஶாந்த்யைதே வித்யாயை மோக்ஷதே நம:
விஶ்வவியாப்த்யைஜகன்மாத ஜகத்தாத்ர்யை நமஶ்ஶிவே " என்றும்;

குணசகிதனுகிய நான் குணரகிதையாயிருக்கின்ற உன்னுடைய நிலையை என்னுடைய புத்தியினால் எண்ணிப்பார்த்தும் எட்டவில்லை. ஓ உலகமாதாவே! சகலவேதங்களிலும் பிரகாசிக்கின்றவளா யிருக்கின்ற தத்பதலக்ஷ்யார்த்தமாகிய பரப்பிரமம் நீ யன்றி வேறில்லையென்றறிதலாகிய நிச்சயமென்னும் பக்தியுடையவர்களுக்கு வருந்துன்பத்தைப் போக்கடிப்பதில் மிகுந்த அன்புள்ளவளாகிய பராசக்தியே! உன்னை நானென்சொல்லி நமஸ்கரிக்கப் போகின்றேன்? வாக்தேவதையாகிய ஸரஸ்வதி சொரூபிணியாயிருக்கின்றவளும் நீயே; எல்லாருடைய புத்தீந்திரியமாயிருக்கின்றவளும் நீயே; மனோரூபிணியா யிருக்கின்றவளும் நீயே; சகல ஆத்மாக்களும் அந்தத்திலடையும் இடமாயிருப்பவளும் நீயே; எல்லாருடைய மனோ விகற்பங்களைப் போக்கடிக்கின்றவளும் நீயே; இவ்வண்ணமிருக்கின்ற உன்னை என்னவென்று தோத்திரஞ்செய்யப்போகின்றேன்? இந்திரிய கோசரமாகாத உன்னுடைய ஆத்ம சொரூபத்தை எப்படி நான் தோத்திரஞ் செய்வேன்? பிரமவிஷ்ணுருத்திரர்களும் ஏனைய தேவர்களும் எப்பொழுதும் வேதம் முதலிய கலைகளால் ஸ்தோத்திரஞ் செய்கின்றவர்களாயினும் அவர்களே உன் குணங்களுடைய சொரூபம் இப்படிப்பட்டதென்று தெரிந்துகொள்ளவில்லையென்றால் பேதபுத்தியுள்ளவனும் குணபேதங்களுடையவனும் பெரியோர்களால் ஒருண்மையு மறியப்படாதவனும் இருக்கின்ற நான் உன்னுடைய மகிமையைத் தோத்திரம் பண்ணுவதற்கு எப்படியோக்கியனுவேன்? இவ்வளவு சிறியனுகிய எனக்குச் சத்துக்களா லடையத்தக்க கதி எப்படியுண்டாகும்? என்னுடைய சித்தமானது உன்னுடைய பிரபாவத்தை விசேஷமாகச் சொல்லவேண்டுமென்கிற ஆவலுடையதாயிருந்தும் அதற்கு அதுசெய்யும்படியான சக்தி யமையவில்லை. இப்பொழுது இந்த மருமகன் காரணமாக உன்னுடைய அற்புதமாகிய இந்த தரிசனங் கிடைக்கப்பெற்றேனேயல்லாமல் என்னுடைய புண்ணியத்தால் கிடைக்கப்பெற்றவனல்லன். பிரமனுதி மும்மைத் தேவரும் இந்திராதிதேவர்களும், முனிவர்களுமாகிய அவர்கள் தத்வார்த்தங்களையறிந்தவர்களாயிருந்தும் அவர்களுக்கு நீ தரிசனமானுயில்லை. ஓ தாயே! உன்னுடைய தரிசனமானது சமதமாதி குணங்களாலல்லாமல் அடைவதற்குக்கூடாது. அந்தத்தரிசனம் நான் கிடைக்கப்

பெற்றேன்: அறிவிற்சிறியனுகிய நான் எவ்வளவினன்? எனக்குக்கிடைத்த ஜனனமரண வியாதிக்கு மருந்தாயும் ஒப்பிடக்கூடாததாயுமுள்ள உன் காக்ஷியானது எவ்வளவு அருமையையுடையது! அவரவரெண்ணத்தோடு கூடினவளாயும் பக்தர்களுக்கனுக்கிரகஞ் செய்வதில் ஆசையுடையவளாயும் தேவர்களால் பூஜிக்கப்பட்டவளாயுமுள்ள ஓ தேவி! நீ எல்லாமறிந்தவள்; உன் பிரபாவமாகிய இதனை நான் என்னவென்று சொல்வேன்? ஓ தேவி! பலிஷ்டர்களாகிய இந்த இரண்டரசர்களும் உன்னுல் கொல்லப்பட்டு இந்தச் சுதர்சனன் இந்த ஆபத்திலிருந்தும் ரக்ஷிக்கப் பெற்றுன். அடியாரிடங் கருணையுள்ளவளே! உனது மகிமையானது மிகவும் வேதசம்மதமாயுள்ளது. ஹே தேவி! இங்கு நடந்த அற்புதத்தை யோசிக்கும் விஷயத்தில் இஃது ஒரு ஆச்சரியமாகவுந்தோன்றவில்லை. எப்பொழுதும் தாவர ஜங்கமங்களையெல்லாம் ரக்ஷிப்பதை எண்ணுமளவில் ஒன்றுக்கொன்று ஆச்சரியமாகவேயிருக்கிறது. அவற்றில் எது ஆச்சரியமானதன்று? ஆச்சரியமொன்றிருக்கின்றது: என்னையெனின், எந்த மானிடனுக்காவது உன்னிடத்தில் பக்தி வருமாயின் அதனை நீ பெரிய வாச்சரியமாக வெண்ணி வெளிப்பட்டு வந்து அவனை யாவரும் புகழ்ந்து கொண்டாடும்படியாகச் செய்கின்றனையே இதுதானுச்சரியம். ஹே பவானி! உன்னை எப்போதும் துதிப்பதில் இச்சையுள்ள இந்த துருவசிந்து மகாராஜனுடைய குமாரனுகிய சுதர்சனனை வாழ்விக்க அவனுக்கு ஜன்மசத்துருவாயிருந்த யுதாஜித்தைக் கொன்று இப்பொழுது யாவரும் புகழும்படியாகச் செய்தனையே. இதனுல் இவன் புகழ்வெளிப்பட்டதா? உன்புகழ் வெளிப்பட்டதா? இப்படி நீ தயையினுல் வராமற்போவையேயானுல் இச்சுதர்சனன் என் மகளைக் கூட வைத்துக்கொண்டே வந்தெதிர்த்த அரசர்களோடு யுத்தத்தைச் செய்து அழிவில்லாத கீர்த்தியையும் க்ஷேமத்தையம் எப்படியடைவான்? உன்னைத் தியானிக்கும் அன்பர்களுடைய ஜனனமரணங்களைப்போக்கிப் பேரின்பத்தைக் கொடுக்கும் சாமார்த்தியமுள்ள உனக்கு இப்பகைவர்களை யொழித்துச் சசிகலையோடு இவனைவாழ வைத்தது ஓராச்சரியமா? ஹே ஜனனி! உன்னை உன்னடியார்கள் அளவைப்பிரமாணங்களால் அளவிட்டறியக்கூடாதவளென்றும், கர்மபந்தமில்லாதவளென்றும், சகுணையென்றும், நிர்க்குணையென்றும் ஸ்தோத்திரஞ்செய்கிருர்கள். அப்படிப்பட்ட புவனேஶ்வரியாகிய உன் தரிசனத்தினுல் நான் சுகிர்தமுடையனுயும் கிருதார்த்தனுயும் தன்யமாகிய சரீரத்தைப்பெற்றவனுயுமாயினேன். ஹே அம்பா! இவ்வளவு பிரயோஜனத்தைப்பெற்ற நான் உனது பீஜாக்ஷர மந்திரத்தையேனும் தோத்திரத்தையேனும் அறிந்தவனோவென்ருல், ஒன்றுமறியாதவன். ஒன்றுமறியாத எனக்கு உன் தரிசனங்கிடைத்ததனுல் உனது பிரபாவமாகிய மகிமை பிரசித்தியாயிற்று என்று தோத்திரஞ்செய்கின்ற அரசனைப் புன்னகையோடு கூடிய சிவை பார்த்து, ஓ நல்லொழுக்கமுடையவனே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக வென்றனள். (26–55)

ஓம் ஹ்ரீங்காரதரு சாரிகாயை நம:

# 24. ஸ்ரீ தேவி மஹிமை

சுபாகுவானவன் அந்த மகேஸ்வரியினுடைய திருவாக்கைக் கேட்டு மிகுந்த அன்புடையவனாய், ஹே தேவி! தேவலோக ஸம்பத்தை எண்ணினாலும் அதுவுஞ் சிலகாலவனுபவமா யிருக்கின்றது; பூமண்டல ராஜ்ய ஸம்பத்தை யெண்ணினால் அதுவுஞ் சில காலவனுபவமா யிருக்கின்றது; உன்னுடைய தரிசனமாகிய ஸம்பத்தை யெண்ணினால் எப்பொழுதும் நீங்காத அனுபவமா யிருக்கின்றது. ஆகையால் உன்னுடைய தரிசனத்துக்குச் சமானமான ஸம்பத்து மூன்றுலோகத்திலு மிருப்பதாக வெனக்குத் தோன்றவில்லை. ஆகவே எவ்வுலகத்திலும் இல்லாததாகிய உன்னுடைய தரிசனமாகிய ஸம்பத்துக் கிடைக்கப்பெற்றபொழுது வேறெந்த வரத்தைக் கேட்கப்போகின்றேன்? உலகில் நான் கிருதார்த்தனாய் விட்டேன். ஆயினும், ஹே அம்பா! சலனமில்லாமலும் பங்கமில்லாமலு மிருக்கின்ற உன் பக்தியானது எனக்கெப்பொழுது முண்டாகவேண்டும். இந்த மனோரதமாகிய வரத்தைத்தான் கேட்பதற்கிச்சித்திருக்கிறேன். ஹே அம்பா! இவ்வரத்தைக் கொடுப்பதுண்மையாயின் அடியேனது கிருகத்தில் நீ எப்போது மெழுந்தருளி துர்க்கா தேவியென்னும் பெயருடையவளாய்ப் பிரகாசிக்க வேண்டும். ஹே தேவி! சுதர்சனன் சத்துரு சமூகத்தினின்றும் உபாதியில்லாதவனாக எப்படிக் காக்கப்பட்டானோ அப்படியே நானெப்போதும் இந்த நகரத்தில் சத்துரு பயமில்லாமல் உன்னால் காக்கப்பட்டவனா யிருக்கவேண்டும். ஏ அம்பிகே! பூமியில் எவ்வளவு காலம் இந்தக் காசி அழிவில்லாம லிருக்கின்றதோ அவ்வளவு காலமும் நீ இந்தக் காசியைக்காக்குந் தெய்வமாக விருக்கவேண்டும். ஹே துர்க்கே! ஹே கருணாகடாக்ஷீ! நானிந்த நகரத்துக்கு அரசனாகவிருப்பதால் அதற்கேற்ற ஐஸ்வரியங்களுள் எதுவெது கொடுக்கலாமென்று திருவுளத்தில் தோன்றுகின்றதோ அவைகளை யெல்லாங் கொடுத்தனுக்கிரகஞ் செய்வாய். அவைகட் கிடையூறு வாராவண்ணம் என் சத்துருக்களை நிவிர்த்திசெய்வாய். சத்துருக்களல்லாத துஷ்டர்களையும் நிக்கிரகஞ் செய்வாயென்றனன். இவ்வாறு பிரார்த்திக்குமரசனைச் சகலபாவங்களையும் போக்கவல்ல துர்க்காதேவி கருணைகூர்ந்தவளாய்க் கடைக்கண்ணாற்பார்த்துக் கூறுகின்றாள்: ஓ அன்பனே! உனக்குச் சகலசம்பத்துகளும் உண்டாகுக. இப்பூமியானது எவ்வளவுகாலம் வரைக்கு மிருக்கின்றதோ அதுவரையில் எல்லாவுலகினையுங் காக்குநிமித்தமாய் விளங்குகின்ற முக்தி நகரமாகிய இங்கு நான் உன் வேண்டுகோளின்படி வசிக்கின்றேனென் றனுக்கிரகித்தனள். (1–5)

பின்பு சுதர்சனன் சந்நிதியிற் சென்று சந்தோஷ சித்தனாய் சமீபித்து நமஸ்கரித்து மிகுந்த பக்தியுடன் தேவியைத் தோத்திரஞ் செய்தனன். உன் கருணை மிக ஆச்சரியமானது; நானென்ன சொல்லப்போகிறேன்! எந்தக் காரணத்தால் பக்தியீனனாகிய என்

னைக் காத்தனே? இதனால் பக்தியீனர்களா யிருந்தபோதிலும் அவர்களைக் காப்பதே உனக்குள்ள வழக்கமென்பது தெரியவந்தது. அது தெரியவரவே நீ பக்தர்களிடத்தில்தான் தயையுள்ளவளென்பதேது? ஹே தேவி! நீதான் எல்லாப் பிரபஞ்சத்திலும் சிருஷ்டிக்கப்பட்டதைப் பரிபாலிக்கின்றாயென்றும், பரிபாலிக்கப்பட்டதை ஒடுக்கிக்கொள்ளுங் காலத்தில் சங்கரிக்கின்றாயென்றுங்கேட்டிருக்கின்றேன். இதனைப் படைத்தழிக்குந் தொழிலேயல்லாமல் காத்தற்றொழிலையு முடையவளென்று தெரியவந்தது; வரவே, நான் எப்போதும் உன்னால் காக்கப்பட்டவனென்றாயிற்று. ஆகவே இப்பொழுது தான் என்னைக்காத்தா யென்றுச்சரியப்படுவது சரியமல்ல. என்னை எப்பொழுதும் காத்த உனக்கு நான் வேண்டிய பணிவிடை இது வரையில் செய்யாதிருந்ததுதான் ஆச்சரியம்; இனியாவது உனக்கு நான் செய்யத்தக்க பணிவிடை யாது? என்னபணி செய்ய வேண்டும்? எங்கே போகவேண்டும்? அதனைச் சீக்கிரமாக அநுக்கிரகஞ் செய்வாய்; உனக்குச் செய்யவேண்டிய பணிவிடையைச் செய்யாத தரித்திரனாயிருக்கிறேன்; நான் உன் கட்டளையினால் போகிறேன், இருக்கிறேன், விளையாடுகிறேன்; உன்னையன்றி யாதொரு செயலும் இங்குச் செய்வதில்லை என்று துதிக்கும் சுதர்சனனை தயாமூர்த்தியாகிய தேவி பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றாள்: (1–10)

ஓ மகனீயனே! நீ அயோத்திக்குச் சென்று உனது குல தருமத்துக்கு யுக்தமாகிய ராஜதருமத்தை நடத்திவருவாய். எப்போதும் என்னை மறவாமல் அவசியமாய்த் தியானித்தும் நாடோறும் பூஜித்தும் வருவாயாயின் உன்னுடைய ராஜ்யத்துக்கு வேண்டிய சுகத்தைச் செய்து வருகின்றேன். எனக்கு விசேஷ தினங்களாயுள்ள கிருஷ்ணபக்ஷ அஷ்டமியிலும், நவமியிலும், சதுர்த்தசியிலும், பலிதானம் முதலியவற்றோடு விதிமுறையாய் என்னுடைய பூஜையைச் செய்து வருவாய். இவ்வண்ணம் உன்னுடைய அயோத்திமா நகரத்தில் நித்தியம் மூன்றுகால பூஜையும், பக்திபூர்வகமாய் மிகமுயற்சியோடு நடத்தும்படி ஏற்படுத்துவாய். சரத் ருதுவில் வரும் நவராத்திரியிலும், சைத்ரம், ஆஷாடம், ஆஸ்வீஜம், மாகம் என்னும் இம்மாதங்களிலும், கிருஷ்ணபக்ஷ அஷ்டமி, சதுர்த்தசி என்னுந் தினங்களிலும், என்னிடத்தில் அன்புள்ளவர்கள் என்னுடைய ஆகமத்திற் கூறியிருக்கும் பூஜையை அவசியமாய் அந்தந்தக் காலத்திற்கு விதித்திருக்கும் விதிப்படி விசேஷமாய்ச் செய்துவர நீ விதிக்க வேண்டுமென்றனுக்கிரகித்து அந்தர்த்தானமாயினள். மறைந்துபோன அந்தத் தேவியைத் தரிசித்த அரசர்களெல்லாம் சுதர்சனனைச் சமீபித்து இந்திரனைத் தேவர்களெல்லாம் நமஸ்காரஞ் செய்வது போல் நமஸ்கரித்தார்கள். மாமனாகிய சுபாகுவும் அந்தச் சுதர்சனனை வணங்கிச் சந்தோஷ சித்தனா யெதிரிலிருந்தனன். (11–25)

அரசர்களெல்லாம் சுதர்சனனை நோக்கிக் கூறுகின்றார்: நீயே எங்களுக்குப் பிரபு, நீயே ரக்ஷகன். யாங்களனைவரும்

உனக்கு அடிமையாளா யிருக்கத் தக்கவர்கள் ; இனி அயோத்தியில் செங்கோல் செலுத்தி எங்களைப் பரிபாலனஞ் செய்ய வேண்டும். ஓ மகாராஜனே ! உன்னுடைய அநுக்கிரகத்தால் புருஷார்த்தங்களாகிய அறம், முதலிய நான்கையுங் கொடுக்கின்றவளாயும் ஆதி சக்தியாயும் பிரபஞ்ச நாயகியாயு மிருக்கின்ற மகேஸ்வரியானவள் தரிசனமானாள். எந்தக் காரணத்தினாலோ இவ்வுலகின்கண் ஆதி சக்தியாகிய பரமேஸ்வரியை நீயுந் தரிசனஞ் செய்து எங்களையுந் தரிசிக்கச் செய்தபடியினால் நீயே தன்யன். நீயே கிருதகிருத்தியன். நீயே வெகு புண்ணியமுடையோன். ஆனால் அந்தப் பரமேஸ்வரி யாதுகாரணத்தினாலுனக்குப் பிரஸன்னை யானாளோ அறியோம். ஓ ராஜனே ! தேவியினுடைய மாயையில் மோகிக்கப்பட்டுத் தமோ குண முடையராயிருக்கிற நாங்களுன்னுடைய பிரபாவத்தை எப்படி யறிவோம் ? நாங்களெல்லாம் பொன்னிலும் பெண்ணிலும், பிள்ளையிலும், சிந்தனையும், ஆசையு முடைவர்களாய்க் காமக் குரோத லோப மோக மத மாச்சரியமென்னு மிவைகள் நிறைந்துள்ள கோரமாகிய இந்த ஸம்ஸாரத்தில் மூழ்கிக்கிடக்கின்றோம். ஓ மகாநுபாவனே ! ஞானவானே ! நீ சர்வஜ்ஞனாகின்றாய் ; நீயறியாததொன்றுமில்லை. ஆகையால் இந்தச் சக்தியானவள் எங்கிருந்து வந்தவள் ? எவ்விதமான மகிமையுடையவள் ? என்ன பிரபாவ முடையவள் ? எவ்விதமான சொரூபமுடையவள் ? எதிலிருந்து ஜனித்தவள் ? இவை முழுவதுங் கேட்பதற்கு இச்சையுடையவர்களா யிருக்கின்றோம். நீ சொல்லவேண்டும். ஸம்ஸார ஸாகரத்தில் வீழ்ந்து கிடக்கும் எங்களுக்கு நீ ஓரோடம் போலிருக்கின்றனை. அன்றியும் நீ மகாபெரியோன். ஆகவே, தயைகூர்ந்து சிரேஷ்டமாகிய தேவீ மான்மியத்தைச் சொல்ல வேண்டுமென்று மீளவும் பிரார்த்தித்தனர். (26–39)

துருவசிந்துவின் குமாரனாகிய சுதர்சனன் அந்த அரசர்கள் மிகவும் வணக்கத்தோடு கேட்பதற்கிரங்கித் தேவியை மனதில் தியானித்து சந்தோஷ சித்தனாய்ச் சொல்லத் தொடங்கினன். ஓ அரசர்களே ! அத்தேவியின் சரித்திரத்தை என்ன வென்று சொல்லப்போகிறேன் ? பிரமதேவர் முதலிய தேவர்களும் அறிய மாட்டார்கள். எல்லாவுலகங்களுக்கும் ஆதியாய், மேலாயிருக்கின்ற பராசக்தியானவள் திரிகுணாதீதமாகிய சுத்ததத்துவகுணப் பிரதானையாய் அழிவில்லாத மோக்ஷ சம்பத்தையும், முக்குணத்துளொன்றாகிய ரஜோகுணப் பிரதானையாய்ச் சிருஷ்டியையும், ஸத்வ குணப் பிரதானையாய்ப் பரிபாலனத்தையும், தமோகுணப் பிரதானையாய்ச் சங்காரத்தையுஞ் செய்துவருகின்றாள். இவ்வாறு அவரவர் வேண்டியாங்கருள் புரிந்து நிர்க்குணமாகிய பராசக்தியாய்ப் பிரமனாதியருக்குக் காரணமா யிருக்கின்றாள். ஓ அரசர்களே ! தேவியினுடைய நிர்க்குண சொரூபத்தைப் பெரும்பாலும் யோகிகளாலு மறிவதற்குச் சாத்தியமாகாது. ஆனால் பண்டிதர்களாகிய ஞானிகள் எப்போதும் தேவியைச் சகுணையாகவே தியானித்துச் சுகமாய் வணங்குவரென்று சொல்லியதைக்கேட்ட அரசர்கள், ஐயா ! நீர்

பால்யத்தில் யுதாஜித்துக்குப் பயப்பட்டு வனத்தை யடைந்திருந்த காலத்தில் இந்தப் பாராசக்தியை எப்படியறிந்து உபாசித்து வந்தீர்? அவளெப்படிப் பிரசன்னையானாள்? இவ்வளவு சீக்கிரத்தில் எப்படி சகாயஞ் செய்யவந்தனளென்று வினவினர். சுதர்சனன், ஓ அரசர்களே! பால்யனாயிருந்தபோது அந்தத் தேவியினுடைய சாஸ்திர ஸம்பந்தமாகிய காமபீஜமென்கிற மந்திரத்தைத் தெய்வீகமாய்க் கேட்கப்பெற்று ஜபித்துத் தியானித்துக்கொண்டிருந்தேன். பின்னர் ரிஷிகளால் அம்மந்திர அதிதேவதையாகிய மகேஸ்வரியினுடைய பெருமையைச் சொல்லக்கேட்டு மிகுந்த பக்தியுடன் அஹோராத்திரம் தேவியைத் தியானித்து ஜபித்துக் கொண்டிருந்தேன். அதனால் அவள் கருணை கிடைக்கப்பெற்றேனென்றான். அரசர்கள் மிகுந்த பக்தியுடையவர்களாய் அந்தச் சுதர்சனனுடைய வாக்கைக்கேட்டுப் பராசக்தியைப் பரப்பிரம்மரூபிணியாக நினைத்துத் தங்களுடைய கிருகங்களுக்குப் போயினர். சுபாகு சுதர்சனனைக் கொண்டாடிக் காசிநகரத்தை யடைந்தான். தருமாத்மாவாகிய சுதர்சனனும் கோசலதேசத்தை யடைந்தான்.

மந்திரிமார்களும், மற்றுமுள்ள நகரவாசிகளும், சுதர்சனன் தன்னோடு யுத்தம் செய்யவந்த யுதாஜித்தையும், சத்ருஜித்தையும் வென்று வருவதைக் கேள்வியுற்று ஆனந்தக்கடலில் மூழ்கினவர்களாய்ப் பூரணகும்பம் முதலியவற்றைச் சிறப்புடனெடுத்துக் கொண்டு சென்றார்கள். அரசர்களெல்லாம் துருவசிந்து குமாரனென்று தெரிந்துக்கொண்டு நானாவிதமான முத்தாரம் முதலியவற்றைத் தாங்கள் செய்யத்தகுங்கையுறையாகக்கொண்டு சென்றார்கள். இவ்வாறு யாவரும் எதிர்கொள்ளச் சுதர்சனன் சசிகலை சமேதனாய் அயோத்தி நகரத்தையடைந்து யாவரையும் நன்மொழியினாற் கொண்டாடி ஆஸ்தானத்தையடைந்து கட்டியக்காரர்கள் புகழெடுத்துப் பாடவும், மந்திரிகள் வணங்கவும், மங்களப்பெண்கள் ஆலஞ் சுற்றி மலர்களை மாரியாகப் பொழியவும் வீற்றிருந்தனன். (40–50)

ஓம் ஹ்ரீங்கார பேடக மணயே நம:

## 25. சுதர்சனன் அரசாக்ஷி

ராஜாதி ராஜனாகிய சுதர்சனன் அயோத்தியை யடைந்து தனது இஷ்டஜன குடும்ப சமேதனாய்த் தன் தந்தையிருந்தவிடத்திற்குப்போய்த் தந்தையை நினைந்து அந்தப்புரம் சென்று மிகுந்த துக்கமுடையவளாகிய சத்துருஜித்தின் தாயை நமஸ்கரித்துக் கூறுகின்றான்: ஓ அம்மணி! உன் குமாரனும் பிதாவும் யுத்தத்தில் துர்க்காதேவியினால் இறந்தார்களேயல்லாமல் என்னால் கொல்லப்பட்டவர்களல்லர். உன் பாதங்களிலாணையிடுகிறேன்; இவ்விஷயத்தில் என்னால் ஒரு குற்றமும் நடந்ததில்லை. அனுபவிக்க வருவதை ஒருவன் கஷ்டமென்றறிந்துகொண்டு அதனை யனுபவிக்காமல் நிவிர்த்தி செய்யவேண்டுமென்றெண்ணுவானாயின் அது நிவிர்த்தியாகுமா? ஆகாது. ஓ அம்மா! இறந்துபோன உன் புத்திரனு

டைய விஷயத்தில் நீ துக்கப்படவேண்டியதொன்றுமில்லை. ஆன்மாக்கள் தாந்தாம் செய்த வினைக்கீடாயெடுத்த சரீரசுகங்களை யனுபவிக்கின்றார்கள். என் தாயாகிய மனோரமைக்கு நானெப்படியோ அப்படியே உனக்குப் புத்திரனாயும் தாசனாயுமிருக்கின்றேன். எனக்கு உங்களிருவரிடத்திலும் சிறிதும் பேதமில்லையென்று சொல்லுந்தோறும் லீலாவதிக்குண்டாகுந் துயரத்தைப் பார்த்து, ஓ என் தாயே! புண்ணியபாவங்களாகிய வினையை யனுபவிக்கவேண்டிய தவசியமாகையால் ஒருபொழுதும் சுகதுக்கங்களைக் குறித்து இன்ப துன்பங்களடையவுங் கூடாது; அவைகளிற் புத்தியைச் செலுத்தவுங் கூடாது; செலுத்தினால் *துக்கத்தில் அதிக துக்கத்தையும் சுகத்தில் அதிக சுகத்தையும் பார்க்க வேண்டுமேயன்றிச் சத்ருத்தொந்தமாயிருக்கின்ற அவைகளில் புத்தியைச் செலுத்தக்கூடாது. தாயே! நான் வனத்தில் வசித்திருந்த காலமளவும் அந்தவிடத்தில் எது அநுபவிக்கவேண்டுமோ அது அநுபவிக்கவேண்டுமென்ற அறிவுடனிருந்தேனேயன்றி இந்த ராஜ்ய சுகத்தை யெண்ணித் துக்கித்தவனன்று.

இந்தச் சராசரமாயுள்ள உலகமெல்லாம் தெய்வாதீனமாயிருப்பதல்லாமல் ஒருபோதும் ஜீவர்களுடைய அதீனமாயிருப்பதல்ல. இவ்வுண்மையறிந்த புத்திமான் ஆத்மாவைச் சுகதுக்கமாகிய க்ஷேபத்தினால் தபிக்கச்செய்யமாட்டான். மரத்தினாற்செய்த பெண்பாவையானது தன்னை ஆட்டிவைக்கின்றவனால் எப்படியாடுகிறதோ அப்படி ஜீவராசிகளை அவர்கள் கன்மமானது ஆட்டிவைக்கின்றது. இப்பொழுது என் வினை என்னை யாட்டிவைத்தது, நீயு மறிந்ததுதானே. ஆயினும் சொல்கிறேன்: (1-9)

இங்கு என் தாயாரைப்பெற்ற பாட்டனாரிறந்து போய் விட்டபொழுது என் தாய் துக்கித்துப் பயந்தவளா யென்னை அழைத்துக்கொண்டு மகாரணியத்தி னுழைந்து போயினாள்; போகும் அவ்விடத்தில் திருடர்கள் புரட்டிப் புரட்டியடிக்க வஸ்திரஹீனையாய் வழிச்செலவுக்குள்ள பொருளுமிழந்து அவ்வளவு துன்பத்திலும் பாலனாகிய என்னைக் கைவிடாமல் ஆதரவற்றவளாய்ப் பரத்துவாஜ ராச்சிரமத்தை அடைந்தனள். என் தாயுடன் சகாயமாய் பேடியும் தாதியும் வந்தனர். யாங்களனைவரும் கருணைசீலர்களாகிய முனிவர்களும் முனிபத்தினிகளும் கொடுத்துவந்த கந்தமூலங்களாலுஞ் செந்நெல் முதலிய தானிய வகைகளாலும் உயிரைப் பாதுகாத்து இவ்வளவுகாலமும் அங்கேயே யிருந்தோம். அது வரையில் நான் வரும் துக்கத்தைப் பார்த்து அதை யனுபவித்து

---

* துக்கத்தில் அதிக துக்கத்தைப் பார்த்தலாவது—இப்போது வந்த துக்கத்துக்கு ஏதுவாயிருந்தது பூர்வஞ்செய்த பாவமல்லவாவென்று எண்ணிப்பார்த்தல்; அதுபோலச் சுகத்துக்கேதுவாயிருந்தது பூர்வஞ் செய்த புண்ணியமல்லவா வென்று எண்ணிப்பார்த்தல். இவ்வாறெண்ணுங் கால் பாவத்தில் அதிக துக்கமும், புண்ணியத்தில் அதிக சுகமுந் தோன்றுமென்க.

வந்தேனேயல்லாமல் துக்கமடையவில்லை. அது போலவே ராஜ்யத்துக்கு வந்த இப்பொழுதும் வரும் சுகத்தைப் பார்த்து அதை அநுபவிப்பனேயல்லாமல் சந்தோஷ மடையப்போகிறதில்லை. இதனால் என் சித்தத்தில் விரோதமும் பொறுமையும் சுகமும் துக்கமும் உண்டாவதில்லை. வனத்தில் செந்நெல்லைப் புசித்திருந்ததை இப்போது எண்ணுங்கால் இந்த ராஜ்ய போகத்தைக் காட்டிலும் அது சிறந்ததென்று தோன்றுகிறது. இந்திரிய சமூகத்தை வென்றவன் எப்படி நரகத்தை அடையமாட்டானே, அப்படி செந்நெல்லைப் புசித்தவன் நரகமடையமாட்டான். (10–19)

இவ்வண்ணம் சுதர்சனன் சொல்லக் கேட்ட லீலாவதி மிகுந்த வெட்கமடைந்து புத்திரசோகத்தை விட்டுக் கண்ணீர்விட்டழுது சுதர்சனனை நோக்கிக் கூறுகின்றாள்: ஓ குழந்தாய்! யுதாஜித்து உன் பாட்டனைக்கொன்று ராஜ்யத்தை அபகரித்தான். அச்சமயம் என் பிதாவையும் என் குமாரனையும் தடுப்பதற்கும் சக்தியில்லாதவளா யிருந்தேனுகையால் நானும் அந்த அபராதத்தையுடையவளானேன். ஆனால் அவர்களெண்ணியதுபோல் நானெண்ணங்கொண்டவளன்று. யுதாஜித்துச் சிறிது மெண்ணாது செய்த தீவினைக்கீடாக அவனும், சகோதரத்துரோக முண்டாகுமே என்றஞ்சாததனால் என் குமாரனும் மரணத்தை அடைந்தார்களே யன்றி நீ அவர்களைக் கொன்றவனல்லவென்பது எனக்கு நிச்சயந்தான். என் புத்திரனிறந்தானென்று துக்கிக்கவில்லை. அவன் சென்ற துர்மார்க்கத்தைக் குறித்துத் துக்கிக்கின்றேன். ஓ சுதர்சனா! நீ தான் எனக்குப் புத்திரன். உன் தாய்தான் என்னுடன் பிறந்தவள். உன்னிடத்தில் எனக்குச் சிறிதேனும் கோபமும் வருத்தமும் கிடையாது. இனி நீ தேவியினுடைய அநுக்கிரகத்தால் சத்துரு பயமில்லாமல் கிடைக்கப்பெற்ற இந்த ராஜ்யத்திலிருந்து செங்கோல் செலுத்தி அந்தணர்களைப் பரிபாலித்து ஏனையோரையும் காத்துவருவாயென் றுசிபுகலச் சுதர்சனன் லீலாவதியை நமஸ்கரித்து முன் தன் தாயிருந்த விடத்துக்குப் போயினன். (20–26)

பின்னர் எல்லா மந்திரிகளையும் சோதிடர்களையும் வரவழைத்து ஒரு சுப முகூர்த்த தினத்தைக் கேட்டுப் பின்னரவர்களைப் பார்த்து, ஓ பெரியோர்களே! நான் சுவர்ணமயமாயும் மணிமயமாயுமுள்ள சிங்காதனமொன்றைச்செய்வித்து அதில் தர்மார்த்த காம மோக்ஷங்களைக் கொடுக்கின்ற தேவியைப் பிரதிஷ்டைசெய்து ஸர்வோபசாரத்தோடும் பூஜித்துப் பின்னர் ராமனுதியர்களால் நடத்தியிருக்கப்பட்ட இந்த ராஜ்யத்தைப் பரிபாலிக்கின்றேன். என்னைப் போலவே நகரவாசிகளனைவரும் தேவியைப் பூஜித்துவரவேண்டும். அவள்தான் ஸர்வ காமார்த்த சித்திகளைக் கொடுப்பவளென்று சொல்லவும். மந்திரிகள் அரசர் ஆணையைக் கடத்தற்கஞ்சி அவனிஷ்டம்போல் சில்பிகளால் மனோகரமாகிய மண்டபத்தையுண்டாக்கி நல்ல சுபதினங்கூடிய சுபமுகூர்த்தத்தில் தேவியினுடைய திருவுருவத்தைச் செய்வித்துச் சோதிடர்களையும் பிராமணர்களையும் வரவழைத்துத் தேவியினுடைய மந்திரப்படி பூஜித்து

யஜ்ஞம் முதலியவற்றையும் விதிப்படி நடத்தி மண்டபத்தில் சுதர்சனனைக்கொண்டு ஸ்தாபனஞ் செய்தனர். அப்பொழுது பிராமணர்களுடைய வேத கோஷங்களும், வாத்தியகோஷங்களும், நானாவிதமான கான கோஷங்களும், அவ்விடத்திலொன்றாய் கடலோசைபோற் கோஷிக்க வேதவித்துக்களாகிய பிராமணர்களால் விதிப்படி பரமேஸ்வரிக்குச் செய்யவேண்டிய திருவிழாவாகிய மஹோற்சவம் செய்வித்துத் தேவிபூஜையைக் கொண்டாடினர். (27–30)

அதன்பின்னர் சுதர்சனன் பிதுரார்ஜிதமாகிய ராஜ்யாதிகாரத்தைச் செலுத்திச் சந்தோஷ சித்தனாயிருந்தான். ஜகன்மாதாவாகிய பரமேஸ்வரியும் கோசலதேசத்தில் மிகவும் பிரசித்தியாயிருந்தனள்; தருமமார்க்கத்தினால் ஜயசாலியாயிருந்த சுதர்சனன் சத்ருக்களையெல்லாம் தன்னாணையில் நிற்கச்செய்து பூர்வத்தில் ரகு மகாராஜன், திலீபன், ராமமூர்த்தி முதலாயினார் அந்தணர் முதலாயினார்க்கு எப்படி சுகமுண்டாக்கினரோ அப்படியே சுகமும் சத்தியமும் மரியாதையும் வருணாச்சிரம தருமங்களும் வளர்ந்தோங்கும்படிச் செய்தனன். உலகில் யாவரும் அதர்மத்தில் பிரவேசியாமலிருந்தனர். எல்லாவரசர்களும் தங்கள் தங்களிடங்களில் தேவிக்கு ஆலய நிர்மாணஞ் செய்து அயோத்தியில் எவ்வண்ணம் பூஜையாதிகள் நடந்து வருகின்றனவோ அவ்வண்ணம் நடத்திவந்தார்கள். சுதர்சனன் மாமனாராகிய சுபாகுவும் தன்னுடைய நகரத்தில் தேவியினுடைய விக்கிரஹத்தைச் செய்வித்துப் பக்தியுடன் பிரதிஷ்டை செய்து ஆராதித்து வந்தனன். அந்த நகரவாசிகளும் மிகுந்த அன்போடு விசுவநாதருக்கு எவ்வாறு பூஜையாதிகளை நடத்திவருகின்றனரோ அவ்வாறே மகேஸ்வரிக்கும் நடத்திவந்தனர். ஓ ஜனமேஜய மகாராஜனே! அரசர்களெல்லாம் மஹேஸ்வரியினுடைய பூஜாதுரந்தரர்களாக விருந்தபடியால் இப்பூமண்டலம் முற்றும் மஹேஸ்வரியே பிரசித்தமாயிருந்தனள். அவளுடைய பக்தியும் அவ்வாறே பிரசித்தியடைந்திருந்தது. அத்தேவியைப் பூஜிக்காத வருணத்தவரும் ஆச்சிரமிகளுமில்லை; அப்படியே யோகிகளும் தேவிபக்தியுள்ளவர்களாய் அவளுடைய ஆகமங்களிற் சொல்லப்பட்ட ஸ்தோத்திரங்களோடு ஜபம் தியானம் முதலியவற்றை அன்போடு செய்துவந்தனர் என்றனர். (31–46)

ஓம் ஹ்ரீங்காராதர்ஶபிம்பிகாயை நம:

## 26. நவராத்திரி பூஜாவிதி

ஓ முனி சிரேஷ்டரே! சரத் காலத்தில் நவராத்திரி வருகிறபோது என்ன செய்யவேண்டும்? அதை விதிப்படிச் சொல்லும். அந்தப் பூஜை செய்வதனால் என்னபயன் வரும்? இவற்றைக் கருணையுடன் சொல்லவேண்டுமென்று அரசன் வினவினன். ஓ அரசனே! விசேஷமாகச் சொல்லப்பட்ட சரத்காலத்தில் பரிசுத்தமாய் நடத்தவேண்டிய நவராத்திரி விரதத்தைச் சொல்லுகிறேன்,

கேட்பாயாக. அந்த நவராத்திரி பூஜையை வஸந்த காலத்திலும் அன்புடன் செய்யவேண்டுமென்று வியாசர் கூறுவார் :—

வஸந்தருது சரத்ருது என்னு மிரண்டு ருதுக்களும் யமனுடைய இரண்டு கோரப்பல்லுக்குச் சமானமாயுள்ளன. அந்த இரண்டும் மானிடர்களுக்குத் தெய்வானுக்கிரகத்துக் கிடங்கொடாமற் றடைசெய்யும் பகையாய் ரோகத்தைச் செய்து நாசம் பண்ணுவதாகும். ஆகையால் பண்டிதர்கள் இம்மை மறுமை யின்பங்களை வேண்டி மானிடர் இவ்விரு ருதுக்களிலு முண்டாகும் சரீர தருமமா யிருக்கின்ற இடையூறுகளுக் கிடங்கொடாமல் தேவியைப் பூஜித்தல் வேண்டுமென்று கூறுவர்.

நவராத்திரி பூஜைக்கு விதித்திருக்குஞ் சகலத்திரவியங்களையும் அமாவாசை தினத்திலேயே சேகரித்துக்கொண்டு அன்று ஒருவேளை போஜனத்துடன் உபவாசியாயிருந்து மறுநாள் பிரதமை முதல் பூஜைக் காரம்பித்தல் வேண்டும். அப்பூஜைக்குரிய மண்டப வேதிகைகளுடைய அளவைப்பிரமாணம் முதலியன எத்தன்மைத்தெனின், மண்டப ஸ்தானமானது சமமாயும், பார்ப்பதற்குச் சுகமாயும், பசுவின் கோமயத்தால் மெழுகிச் செம்மண்ணிட்டதாயும், நான்கு மூலைகளிலும் பதினறு முழமுள்ள நான்கு ஸ்தம்பங்களைத் துவஜத்தோடு நாட்டப்பட்டதாயும் இருக்க மேற்கட்டோடுகூடியதாய் விசித்திரமான தோரணங்களா லலங்கரிக்கப் பெற்றதாய் மண்டபமிருத்தல் வேண்டும். அதன் மத்தியில் நான்கு முழநீளமும் ஒருமுழ உயரமுமுள்ள சமானமான வேதிகை யொன்றமைத்தல் வேண்டும். (1–38)

வேதிகை யமைத்த பின்னர் பராசக்தியாகிய தேவியினுடைய பூஜா மந்திரங்களையும், தத்துவார்த்தங்களையும், உண்மையாயுணர்ந்தவர்களாயும், ஆசாரநிஷ்டர்களாயும், சாதுக்களாயும், விதிமுறையாக வேத மந்திரங்களைச் சொல்லத் தக்கவர்களாயுமுள்ள அந்தணர்கள் ஒன்பதின்மராவது, ஐவராவது, மூவராவது, ஒருவராவது பிரதமை முதல் பூஜாந்தம் வரையில் நாடோறும் வரும்படியாகப் பிரார்த்தித்து அவர்களலங்கார பூஷணத்தோடிருக்க திரவியமுடையவனு யிருப்பானுயின் விசேஷமாயும், இஃதின்றுயின் தன்னளவுக் கேற்றவாறும், உலோபமில்லாமல் அவர் மனமகிழும்படியாய் வஸ்திராபரணங்கள் தந்து *மனமகிழ்ந்து வந்திருக்கச் செய்து பிரதமைமுதல் சாஸ்திரோக்தமாய் ஐந்து நாழிகைப்பொழுதி லெழுந்திருந்து சௌசாதிகளை முடித்துக்கொண்டு நதியிலாவது தடாகத்திலாவது நடபாவியிலாவது கிணற்றிலாவது கிருஹத்திலாவது விதிப்படி ஸ்நானஞ்செய்து நித்திய கன்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு பூஜார்த்தமாய் முன் வரித்திருக்கிற அந்தணர்களுக்கு மதுசம்பந்தமான அர்க்கிய

* அந்தணர்கள் மனமகிழ்ச்சியில்லாமல் எது செய்தாராயினும் அதனல் வரும் பயன் சித்தியாகாமற் போகுமாதலான் அவர் எவ்விதத்திலாவது மனமகிழ்ந்திருக்கச் செய்தல் வேண்டும்.

பாத்தியா சமனங்கள் தந்து அவர்களுடன் பூஜா மண்டபஞ் சென்று அவ்வந்தணரெல்லாம் வேதகோஷஞ் செய்ய வேதிகையின் மேல் வெண்பட்டிட்டிருக்குஞ் சிங்காதனத்தை ஸ்தாபித்து அதன் மேல் சங்கு சக்ர கதாபத்மங்களைத் தாங்கியிரா நின்ற சதுர்ப்புஜத் தோடு கூடிய தேவி ரூபமாகவாவது, பதினெண் கரத்தோடிரா நின்ற தேவி ரூபமாகவாவது, திவ்யமாகிய வஸ்திர வகைகளாலும், ரத்நா முத்தார முதலிய ஆபரண வகைகளாலும், மலர்மாலை முதலிய மாலை வகைகளாலும், அலங்காரஞ் செய்து எழுந்தருளச் செய்தல் வேண்டும். பின்னர் கும்ப பூஜை நிமித்தமாய்ச் சிங்காதனத்தின் பக்கத்தில் கலசஸ்தாபனஞ் செய்து அதில் புண்ணிய தீர்த்தத்தை நிரப்பி சுவர்ணம் ரத்தினம் முதலியவைகளையிட்டு மாவிலை முதலிய ஐந்துவகைத் தளிர்களை மேலே வைத்து வேத மந்திரங் களாலே மந்திரித்து மங்கல வாத்தியங்கள் கோஷிக்கப் பூஜாத் திரவியங்களைக் கொண்டு பூஜித்தல் வேண்டும்.

அதன் பின்னர், ஹே அம்பா! சிரேஷ்டமாகிய நவராத்திரி விரதத்தைச் செய்கிறேனென்றும், எனக்கு யாதொரு இடையூறும் வராமல் வேண்டிய சகாயஞ் செய்யவேண்டு மென்றும், இந்தப் பூஜையை என்னுடைய சக்தியளவாகச் செய்கிறே னென்றும் ஸங்கற்பித்துக்கொண்டு, சந்தனம் அகில் பச்சைக் கற்பூரங் கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்களாலும், மந்தாரம் சண்பகம் ஜாதி மல்லிகை முதலிய வாசனையுள்ள மலர் வகைகளாலும் வில்வ பத்திரங்களாலும், உலக மாதாவாகிய தேவியைத் தூபதீபங் களோடு மந்திர பூர்வகமாய் விதிப்படி பூஜித்து நவாவரண பூஜை யுஞ் செய்து, நானாவிதமாகிய பழ ரசங்களால் அர்க்கியங் கொடுத்து இளநீர் மாதுளை வாழை பலா மா முதலிய பழவகைகளை விசேஷமாக வைத்து மிகுந்த அன்போடு அன்ன நிவேதனஞ் செய்தல் வேண்டும். பூஜிப்பவர் மாம்ச போஜனஞ் செய்பவரா யிருப்பின் மகிஷ பலி, மேஷ பலி, வராகபலி முதலியவைகளைத் தந்து அதன் பின்னர் தஹாமார்த்தமாய், ஒரு முழ நீளமும் அகலமுமுள்ள திரிகொய்தல் வேண்டும்.

ஓ ஜனமேஜய மகாராஜனே! மஜேகரமாகிய நவராத்திரி பூஜையை அநேகத் திரவியங்களால் முன் சொல்லியவாறு நிர்த்த கீத வாத்தியத்தோடு சிறப்புடன் மூன்று காலமுஞ் செய்தல் வேண்டும். அந்த ஒன்பது நாளும் விரதமிருப்போன் உபவாசியா யிருந்து பூஜித்த பின்னுண்டு சயன சுகாதிகளைவிட்டுத் தரையிற் படுத்தல் வேண்டும். பிரதமை திதியில் ஹஸ்த நக்ஷத்திரங் கூடுமாயின் அது விசேஷவென்றும், அத்தினத்தில் தேவியைப் பூஜித்தால் சகலாபீஷ்டங்களையுங் கொடுப்பா ளென்றும் பெரியோர் கூறுவர்.

ஓ அரசனே! தேவியை யுத்தேசித்துப் பலி கொடுக்கும் மகிஷம் முதலியவைகள் சுவர்க்கத்தை யடையுமேயன்றி நரகத்தை யடையா. அதனைக் கொன்றவர்களும் அக் கொலையால் அடையத் தகும் நரகத்தையடையார். ஏனெனில், ஜீவபரமாக எதைச்

செய்யினும் அது பாபத்தை விளைவிக்குமென்றும், அருட்பரமாக எதனைச் செய்யினும் அது புண்ணியத்தை விளைவிக்குமென்றும் பிராமணங் கூறுகின்றது. அது அப்பிரமாணமோ வெனின் ஆகாது. ஜீவன் அஞ்ஞானியாதலால் அஞ்ஞான சம்பந்தத்திற்குச் செய்வதெல்லாம் அஞ்ஞான விளைவாகிய பாவத்தைக் கொடுக்கு மன்றிப் புண்ணியத்தைக் கொடுக்கமாட்டா; அருள் இரக்கமுடைய தாதலால் அருட் சம்பந்தத்திற்குச் செய்வதெல்லாம் அருள் விளை வாகிய புண்ணியத்தைக் கொடுக்குமேயன்றிப் பாபத்தைக் கொடுக்க மாட்டா. ஆகையால் அந்த அருட்சொரூபிணியாகிய தேவிக்குச் செய்வது அஹிம்சையாகிய பரம தருமமாமென்றும் ஹிம்சையை யடையும் அந்த உயிர்களும் பரமபதத்தையே யடையுமென்றும் அறிவாயாக.

இது நிற்க, கும்ப பூஜை முதல் ஹோமாந்தம் செய்யத் தகுவன வெல்லாஞ் செய்து முடித்துப் பின்னர் கன்னிகைகளைப் பூஜித்தல் வேண்டும். இந்த பூஜைக்குரிய கன்னிகைகள் யாவ ரெனின், சுகந்தம் முதலியவைகளை யறியத்தக்க இரண்டு வயது முதல் பத்து வயதளவுள்ள கன்னிகைகளாகும். இக்கன்னிகை களுக்கு முறையே குமாரி, திரிமூர்த்தி, கல்யாணி, ரோகிணி, காளிகா, சண்டிகா, ஸாம்பவி, துர்க்கா, ஸுபத்திரா என்று கன்னிகைக்குப் பெயராகும். அப் பெயர்களால் அவர்களை ஸ்ரீரஸ்து, ஸ்ரீயுக்தம் என்கிற பதங்களை முதலாகவுடைய வேதமந் திரங்களாலும் அது அறியாதான் பீஜமந்திரங்களாலும் பூஜித்தல் வேண்டும். இவர்களன்றி ஒரு கந்தமும் அறியப்பெறாத ஒரு வயதுள்ள கன்னிகையும், பத்து வயதுக்கு மேற்பட்டவர் களும் பூஜைக்கு யோக்கியமாகார். குமாரி முதலாகச் சொல்லப் பட்ட ஒன்பதின்மரில் தினம் ஒவ்வொரு கன்னிகையாவது அல்லது முதல்நாள் ஒரு கன்னிகையும், இரண்டாம் நாள் இரண்டு கன்னிகையுமாக ஒவ்வொரு நாளுக்கு ஒவ்வொரு கன்னிகையை அதிகமாக வருவித்து வைத்துப் பூஜையை நடத்தல் வேண்டும். ஓ ஜனமேஜயனே! இந்தப் பூஜையில் தனக்கமைந்திருக்குஞ் செல்வத்திற்கேற்ப விசேஷமாகச் செய்ய வேண்டுமே யன்றி லோப குணத்தால் லோபமாகச் செய்தல் கூடாது. (38-43)

இனி அந்த ஒன்பது கன்னிகைகளையும் பூஜிப்பதால் வரும் பலனைக் கூறுகின்றேன். ஓ பூமண்டலாதிபனே! குமாரியைப் பூஜித்தால் தரித்திர நாசமும், சத்துரு ஜயமும், ஆயுள் விருத்தி, தன விருத்தி முதலிய பல விருத்திகளு முண்டாகும். திரிமூர்த்தி யைப் பூஜித்தால் தர்மார்த்த காமியமும், தனதானிய விருத்தி, புத்திர பௌத்திராதி விருத்தியுமுண்டாகும். கல்யாணியைப் பூஜித் தால் வித்தை ஜயம் ராஜ்ய சுகம் இவைகளுண்டாகும். ரோகிணி யைப் பூஜித்தால் ரோக நாசமுண்டாகும். காளியைப் பக்தியுடன் பூஜித்தால் சத்ருநாசமுண்டாகும். சண்டிகையைப் பூஜித்தால் ஐச்வரியமுண்டாகும். ஸாம்பவியை நாடோறும் பூஜித்தால் யுத் தத்தில் விஜயமும் துக்க ஹேதுவா யிருக்கின்ற தரித்திர நிவிர்த்தி

யும் ராஜசம்போகமுமுண்டாகும். துர்க்கையைப் பூஜித்தால் குரூர மாகிய சத்துரு நாசமும், நடத்துவதற்குக் கூடாத கிருத்தியத்தை நடத்தும் ஆற்றலும், பரலோக சுகமுமுண்டாகும். ஸுபத்திரையைப் பூஜித்தால் மனோரத சித்தியுண்டாகும்.

இவ்வண்ணம் அவரவர் வேண்டும் பலன்களைக் கொடுக்கவல்ல குமாரி முதலிய திருநாமங்களால் கன்னிகைகளைப் பூஜித்தலென்றால் அந்த நாமங்களுக்கு மூலகாரணியாயுள்ள பரதேவதையை அடியில்வரும் தியான சுலோகங்களால் தியானித்தலாகும். (44–52)

குமாரஸ்யச தத்வானி யாஸ்ருஜத்யபி லீலயா
காதீநபிச தேவாம்ஸ்தாத் குமாரீம் பூஜயாம்யஹம். (1)

சத்வாதிபி ஸ்திரிமூர்த்தியர்த்திர்யா தௌர்ஹிநாநாஸ்வரூபிணீ
த்ரிகால வ்யாபிநீ சக்தி ஸ்திரிமூர்த்திம் பூஜயாம்யஹம். (2)

கல்யாணகாரிணீ நித்யம் பக்த்தானும் பூஜிதாநிசம்
பூஜயா மிசதாம்பக்த்யா கல்யாணீம் ஸர்வகாமதாம். (3)

ரோஹயந்தீச பீஜாநி பிராக்ஜன்ம ஸஞ்சிதாநிவ
யாதேவி ஸர்வபூதானும் ரோஹிணீம் பூஜயாம்யஹம். (4)

காளீகாலயதே ஸர்வம் பிரஹ்மாண்டம் ஸசராசரம்
கல்பாந்த ஸமயேயாதாம் காளிகாம் பூஜயாம்யஹம். (5)

சண்டிகாம் சண்டரூபாஞ்ச சண்டமுண்ட விநாசிநீம்
தாம்சண்ட பாபஹாரிணீம் சண்டிகாம் பூஜயாம்யஹம். (6)

அகாரணாத் ஸமுத்பத்திர் யந்மயை: பரிகீர்த்திதா
யஸ்யாஸ்தாம் ஸுகதாந்தேவீம் சாம்பவீம் பூஜயாம்யஹம் (7)

துர்க்காத்ராயதி பக்தம்யாஸ தா துர்க்கார்த்தநாயினீ
துர்ஜ்ஞேயா ஸர்வதேவானும் தாம் துர்க்காம் பூஜயாம்யஹம் (8)

ஸுபத்திராணிச பக்தானும் குருதேபூஜிதாஸதா
அபத்ரநாசிநீம் தேவீம் ஸுபத்ராம் பூஜயாம்யஹம். (9)

(இ - ள்.) சிசுவினுடைய கிரீடா விநோதங்களைப் போலும் எவள் செய்கின்றனளோ, பிரமனாதி தேவர்களை எந்தச் சக்தியின் லீலையினால் சிருஷ்டிக்கின்றனளோ, அந்தக் குமாரியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; ஸத்துவம் முதலிய முக்குணங்களால் அநேக ரூபிணியாய்ச் சிருஷ்டிஸ்திதி சங்காரமென்கிற மூன்று காலங்களிலும் அன்றி காலை, உச்சி, மாலை என்கிற மூன்று காலங்களிலும் எந்த சக்தியினால் வியாபித்திருக்கின்றனளோ அந்தத் திரிமூர்த்தியாகிய சக்தியை நான் பூஜிக்கின்றேன்; பக்தகோடிகளால் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டு அவர்களுக்கு எந்தச் சக்தியினால் மங்களத்தைச் செய்கின்றனளோ, அந்தக் கல்யாணியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; எண்பத்து நான்கு லக்ஷம் பேதமாயுள்ள சகலப் பிராணிகளுடைய பூர்வஜன்ம ஸஞ்சிதங்களாகிய பாப வித்துக்களை எந்தச் சக்தியினால் நிவிர்த்தி செய்கின்றனளோ அந்த ரோகிணியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; பிரளய காலத்தில் சராசராத்மகமாகிய சகல பிரமாண்டங்களையும் எந்தச் சக்தியினால் சங்கரிக்கின்றனளோ அந்தக் காளியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; சண்டமுண்டர்களைச் சங்கரித்து

மகாபாதகங்களை எந்தச் சக்தியினால் நிவிர்த்தி செய்கின்றனளோ அந்தச் சண்டிகையாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; யாதொரு தேஜோரூபியாகிய பரமாத்மாவினிச்சைப்படி எந்தச் சக்தியினால் திருவுருவங்களைத் தருகின்றனளோ அந்தச் சாம்பவியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன்; துர்க்கதியைப் போக்குகின்றவளாய்த் தேவ சமூகங்களாலறியக் கூடாதவளாய்ப் பக்தர்களை ரக்ஷிக்கின்றவளாய் எந்தச் சக்தி விளங்குகின்றனளோ அந்தத் துர்க்கா தேவியாகிய சக்தியை நான் பூஜிக்கிறேன். தன்னைப் பூஜிக்கின்றவர்களுக்கு மங்களங்களைச் செய்து அமங்கலங்களை எந்தச் சக்தியினால் போக்கடிக்கின்றனளோ அந்தச் சுபத்திரையாகிய சக்தியை நான் பூஜிக்கிறேனென்று இவ்வாறு பண்டிதர்கள் கன்னிகைகளைத் தியானித்து கந்த புஷ்ப வஸ்திராதிகளால் அதிகச் சிறப்பாகப் பூஜித்து வருகின்றனர். (53–62)

ஓம் ஹ்ரீங்காராயை நம:

## 27. நவராத்திரி மாஹாத்மியம்

அங்கஹீனமுடையவளையும், குஷ்டம் பிடித்தவளையும், புண்ணுள்ளவளையும், துர்வாசனையுள்ளவளையும், கட்டுப்பாடில்லாத குலத்திற் பிறந்தவளையும், பிறவிக் குருடியையும், குரூபியையும், தேகத்தில் ரோமமுடையவளையும், சிவந்த புஷ்பங்களைத் தரித்தவளையும், குண்டகியையும், கோளகியையும், கானீனையையும் எல்லா பூஜைகளிலும் விலக்கல் வேண்டும். (1–3)

ரோகமில்லாதவளாயும், நல்ல அழகுள்ளவளாயும், அவயவ லக்ஷண முடையவளாயும், புண்ணில்லாதவளாயும், ஒரே வம்சத்திற் பிறந்தவளாயுமுள்ள கன்னிகையையே பூஜிக்க வேண்டும். எவ்விதமான இஷ்ட சித்திகளுக்கும் பிராமண கன்னிகை விசேஷமாகும். அன்றி ஜயத்தை விரும்பினவர்களுக்கு க்ஷத்திரிய கன்னிகையும், லாபம் வேண்டியவர்களுக்கு வைசிய கன்னிகையும், சூத்திர கன்னிகையும் விசேஷமாகும். ஆகையால் எவர்கள் எதனை விரும்புகிறார்களோ அவர்கள் அதற்குரிய கன்னிகையைப் பூஜித்தல் வேண்டும்.

அங்ஙனமாயின், ஒருவன் ஜயம் முதலியவற்றை விரும்புவானாயின் தனக்குக் கீழுள்ள குலத்தினரைப் பூஜித்தலடுக்குமோவெனின், அடாது. ஆகையால் பிராமணன் எதை விரும்பின போதிலும் பிராமண கன்னிகையையும், க்ஷத்திரியன் தன்னினத்திலுள்ள கன்னிகையையும், தனக்கு மேலுள்ள பிராமண கன்னிகையையும், வைசியன் தன்னினத்திலுள்ள கன்னிகையையும் தனக்குமேலுள்ள இரண்டு குலக் கன்னிகைகளையும், சூத்திரன் தன்னினத்திலுள்ள கன்னிகையையும் தனக்கு மேலுள்ள மூன்று குலக் கன்னிகைகளையும் பூஜித்தல் வேண்டும். அங்ஙனம் பூஜிக்கப்படுவோர் நல்ல வம்சத்திலுற்பத்தியானவர்களா யிருத்தல் வேண்டும்.

ஒருவன் நவராத்திரியில் நியமமாய்ப் பூஜை பண்ணுவதற்கு அசக்தனாயிருப்பானாயின் அஷ்டமிதினம் அவசியம் பூஜை செய்ய வேண்டும். ஏனெனின், பூர்வம் தக்ஷயாகத்தை அழித்தவளாகிய பத்ரகாளியானவள் அநேக கோடி யோகினிகளோடும் தோன்றிய தினமாகையால் அன்று கந்த புஷ்பங்களாற் பூஜித்து அநேக விதமான அன்னங்களையும், பாயசம் பழம் முதலியவைகளையும் நிவேதனஞ் செய்து ஹோமாக்கினியில் ஓமமும் நடத்திப் பின்னர் பிராமண சந்தர்ப்பணை செய்வித்து தேவியைத் திருப்தி செய்தல் வேண்டும். (4-7)

அசக்தர்களாயுள்ளோர் நவராத்திரி விரதத்தில் சப்தமி அஷ்டமி நவமி ஆகிய இம்மூன்று தினங்களில் முன் சொல்லியவாறு உபவாசத்தோடிருந்து பூஜிப்பாராயின் அவர்களுக்கு ஒன்பது நாளுஞ் செய்த பலனுண்டாகும். ஓ அரசனே! அந்த நவராத்திரி யில் தேவிக்குப் பூஜைகளாலும், ஹோமங்களாலும், கன்னிகா பூஜைகளாலும் பிராமண சந்தர்ப்பணைகளாலும், திருப்தி செய்தலே விரத பூர்த்தி என்று சொல்லப்படும். இதர விரதங்களும் அநேகவித தானங்களும், சகல சம்பத்தையும் கொடுக்கும்படியான நவராத்திரி விரதத்துக்குச் சமானமாக மாட்டாது. எக்காலத்திலும் இவ்விரதமானது தனதானியங்களையும் நல்ல ஸந்தானங்களையும் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் வித்தையையும் அரசாக்ஷியையும் சுவர்க்க மோக்ஷங்களையும் கொடுப்பது.

இந்த மகிமையறிந்து எவரெவர் எதை எதை விரும்பிச்செய் கின்றனரோ அதை யதை அவர்களுக்குக் கொடுக்குந் தன்மை யுடைய இவ்விரதத்தை நடத்தல் வேண்டும்; எவர்கள் பூர்வ ஜன்மத்தில் உத்தமமாகிய இவ்விரதத்தைச் செய்யவில்லையோ அவர்கள் இந்த ஜன்மத்தில் வியாதி யுடையவர்களாயும், தரித் திரர்களாயும், புத்திரனில்லாதவர்களாயும் இருப்பர். அன்றியும் மலடியாகவும் விதவையாகவும் இருக்கின்ற ஸ்திரீகளும், தனமில்லா தவர்களும் இந்த விரதத்தைச் செய்யவில்லையென்று யூகிக்க வேண்டியவர். எவன் இவ்வுலகில் பிரசித்தமாகச் சொல்லப்பட்ட நவராத்திரி விரதம் செய்யவில்லையோ அவன் இம்மையில் சம்பத்தையடைந்து எப்படி சந்தோஷத்தை யடைந்து வாழ்வான்? மறுமையிலும் எப்படிப் பரலோகத்தை யடைவான்? செந்நிற முடைய சந்தனத்திற்றோய்த்த மிருதுவாகிய வில்வ பத்திரங்களால் எவன் மஹேஸ்வரியைப் பூஜிக்கின்றானோ அவன் பூமியில் அரசனாக வாழ்ந்திருப்பான். உலகில் சிரேஷ்டையாயும், ஸர்வ சித்திகளையுங் கொடுக்கின்றவளாயும், துக்கங்களையெல்லாம் போக்கடிக்கின்ற வளாயும், ஆதியாயுமிருக்கின்ற மகேச்வரியை எவன் ஆராதிக்க வில்லையோ அவன் இவ்வுலகில் துக்கமுடையவனாகவும் சத்ரு சம் பந்த முள்ளவனாகவும் தரித்திரனாகவும் அலைந்துலாவுவன்; இது நிச் சயம். தேவியைப் பிரமவிஷ்ணுருத்திரரும் இந்திரன் அக்கினி குபேர வருணா அரக்கரும் தியானம் செய்து சிருஷ்டியாதி சகல பாக்கியங் களையும் அடைந்து ஆனந்தித்திருக்கின்றாரென்றால் அந்த மகேச்

வரியை மானிடராயுள்ளார் ஏன் உபாசிக்க மாட்டார்கள்? தேவரா யுள்ளாரும், பிதுர்த்தேவராயுள்ளாரும், ஸ்வாஹா, ஸ்வதா என்கிற மந்திரப் பிரபாவங்களாலே திருப்தி யடைகிருர்கள். யஜ்ஞங்களில் மகரிஷிகள் வேதோச்சாரணையோடு தேவியினுடைய அந்த இரண்டு நாமங்களை உபாசிக்கின்றுர்கள். யாதொரு தேவியி னிச்சையினுல் பிரம்மதேவன் இச் சகத்தை சிருஷ்டிக்கின்றுரோ, விஷ்ணுமூர்த்தி அநேக அவதாரங்களைச் செய்கின்றுரோ, ருத்திர மூர்த்தி ஜகத்தை பஸ்மமாகச் சங்கரிக்கின்றுரோ, அவ்வண்ணந் தன் தொழிலைத் தந்து அவரவர்க்குச் சுகத்தைக் கொடுக்கிற தேவியை மானிடன் ஏன் உபாசிக்கமாட்டான்? எந்த புவனங் களிலேயும் தேவமானிட மிருக பக்ஷி ஸர்ப்பங்களாக எவனிருந் தாலும், கந்தர்வ ராக்ஷஸ பைசாச முதலிய யோனி பேதங்களாய் எவனிருந்தாலும், அவனெல்லாம் அந்தச் சக்தி சம்பந்த மில்லா மல் தன்னிஷ்டப்படி சக்தியுள்ளவனுய்ச் சலிப்பதற்கு முடியாது. ஆகவே ஸர்வ காமியார்த்தங்களையும் கொடுக்கின்ற அந்த மகேஶ் வரியை எவன் சேவிக்கமாட்டான்? தருமார்த்த காம மோக்ஷங் களை இச்சித்தவன் அந்தத் தேவியின் நவராத்திரி விரதானுஷ் டானத்தை ஏன் செய்யமாட்டான்? அந்த விரதானுஷ்டான முடையவன் மகா பாதக முடையவனுயினும், அவன் பாதகங்க ளினின்றும் ஏன் விடுபடமாட்டான்? (8–29)

ஓ ஜனமேஜயனே! பூர்வத்தில் கோசல தேசத்தில் சுசீல னென்கிற ஒரு வைசியன் தனஹீனனுயும், அதனுல் துக்க முடையவனுயும், ஸந்ததிவிருத்தி யுடையவனுயு மிருந்தான். அவ னுடைய பிள்ளைகளெல்லாம் அன்னமில்லாமல் மிகுந்த பசியினுல் வாடி அந்திப் பொழிதிலேதேனும் பிறராற் கிடைக்கும் சிற்றுண்டி களைப் புசித்துக் காலத்தைக்கழித்து வருவார்கள். அந்த வைசிய னும் ஜீவிக்கும் நிமித்தம் தனக்குக் கீழ்ப்பட்ட குலத்தவரிடத்து ஊழியஞ்செய்து தன் வயிற்றை வளர்த்துக்கொண்டு தன்னு லியன்ற வளவில் குடும்பத்தையும் பாதுகாத்து வருவான். இவ் வளவு வறுமையுடையனுயினும் தருமத்தி லாசையுள்ளவனுயும், ஸதாசார முடையவனுயும், சத்தியவாக் குள்ளவனுயும், கோப மில்லாதவனுயும், குரோதமில்லாதவனுயும், பொருமை யில்லாதவ னுயும், நாடோறும் தேவர்கடன் பிதுர்க் கடன்களைக் கழித்து அதிதி பூஜையை நடத்திப் பின் போஜனம் பண்ணுவதாகிய நிய மத்தில் தவருதவனுயு மிருந்தனன்.

குணசாலியாகிய அச் சுசீலன் அவ்வாறு வாழுநாளில் ஒரு நாள் ஒன்றுங் கிடையாமல் மிகவும் பசித்தவனுய் தரித்திரத்தை எண்ணி வாட்டமுற் றிருக்கிற பொழுது சாந்தனுகிய ஒரு பிரா மணர் அங்கு வந்தனர். அவரைக் கண்டு பணிந்துநின்று, ஓ அந் தணரே! இத்தரித்திரம் எப்படிப்போகும்? அவ்வுண்மையைத் தயவுசெய்து சொல்லும். ஆனுல் நான் பணக்காரனுக வேண்டு மென்பதுமன்று; திரவியத்தை யபேக்ஷித்து அதனையே தேடி என்னுடைய ஆயுளைக் கழிக்க வேண்டுமென்னு மெண்ணமுடை

யவனுமன்று ; குடும்ப போஷணை நிமித்தம் அதனை வேண்டுகின்றேனே யல்லாமல் வேறல்ல. இன்று எனது பாலியனாகிய பிள்ளையும் பெண்ணும் புசிப்பதற் கொன்றுமில்லையே யென்று ஓயாமல் அழுகின்றனர். அன்னம் இருக்கிற பக்ஷத்தில் ஒரு பிடி யன்னமாவது கொடுப்பேனல்லவா? அவ்வளவு கூடவில்லை. இப்படியே மற்றொரு குழந்தையழ அவனையும் துரத்திவிட்டேன். அவனழுதுகொண்டே போயினன். இவைகளை எண்ணியெண்ணி என் மனம் மிகவும் வாட்ட மடைகின்றது. இதற்கெல்லாம் பணமில்லாமல் என்ன செய்வேன்? மற்றொரு பெண்ணுக்கோ கலியாணஞ் செய்யும் சமயம் வந்திருக்கின்றது; பணமோயில்லை. என் செய்வேன்? எங்கள் குலத்தில் பத்து வயதுக்கு மேற்பட்டால் கலியாணத்துக்கு யோக்கியமில்லை. காலம் தவறிப்போகிறது. ஓ பிராமணரே! இவைகளால் மிகவுந் துக்கிக்கிறேன். நீர் எல்லாந் தெரிந்தவராகையால் இவ்வறுமை விட்டொழியத் தவமாவது தானமாவது விரதானுஷ்டானமாவது மந்திர ஜபமாவது சொல்லும் ; என்றால் போஷிக்கவேண்டிய குடும்பத்தை நான் போஷிக்கவேண்டும். அது மேற்கூறியவற்றுள் எது செய்தாலாகும்? தனத்தை அதிகமாக அபேக்ஷிக்கவில்லை. குடும்ப போஷணைக்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவே நான் விரும்புவது. ஆகையால் எதனையாவது சொல்லுவீராகில் உம்முடைய அநுக்கிரகத்தால் என் குடும்பம் சுகத்தை யடைந்ததாக வேற்படும்; நன்றாய் யோசித்து நானெது நடத்தத் தக்கதோ அதைச் சொல்லுமென்று பலவாறு இரங்கிக் கேட்டனன். (30–43)

இவ்வாறு அந்த வைசியன் சொல்லக்கேட்டவராகிய பிராமணோத்தமர் மிகவும் சந்துஷ்டராய் அந்த வைசியனைப் பார்த்து, ஓ வைசிய சிரேஷ்டனே! நீ தவம் முதலியவற்றிலொன்றுஞ் செய்யவேண்டாம். மங்களப் பிரதமாகிய நவராத்திரி விரதத்தை யநுஷ்டித்து தேவியினுடைய பூஜையும், ஹோமமும், பிராமண போஜனமும், தேவீமந்திர ஜபமும், அந்த ஜபம் சித்தியாவதற்கு ஹோமமும் தர்ப்பணமும் உன் சக்தியளவாக நடத்துவாயாயின் நீ உத்தேசித்த காரியமாகிய தனலாபமுண்டாகின்றது. இதைக்காட்டிலும் வேறு விரதம் இப்பூமண்டலத்திலில்லை. இந்த விரதம் மகிமையுடையதும் சுகத்தைக்கொடுப்பதுமாயுள்ளது. எவனாவது நவராத்திரி விரதத்தை விடாது அநுஷ்டிப்பானாகில் அவன் ஞானத்தை விரும்பினாலும் சத்துரு நாசத்தை விரும்பினாலும் கொடுக்கும் பெருமையுடையது.

முன் ராமமூர்த்தி ராஜ்யத்தை யிழந்து அரணியஞ்சென்று அவ்விடத்திற் சீதையையுந் தொலைத்துக் கிஷ்கிந்தையையடைந்து காமபீடிதராய் அவ்வக்கினியால் கொளுத்தப்பட்டு மகாதுக்கத்தை யடைந்திருக்கும்சமயத்தில் நவராத்திரி விரதத்தை யநுஷ்டித்து விதிமுறையாகத்தேவியைப் பூஜித்து அவளுடைய அநுக்கிரகத்தைப் பெற்றுத் தீரமுடையவராய்ச் சேதுபந்தனஞ்செய்து மண்டோதரித் தலைவனாகிய ராவணனையும், மகாபலிஷ்டனாகிய கும்பகர்ணனை

யும் அவர்களுடைய மக்கள் முதலிய யாவரையும் சங்கரித்து விபீஷணனை ரக்ஷித்து அயோத்தியை வந்தடைந்து அகண்ட ராஜ்யாதிபதியாய் இவ்வுலகைச் சுகமாக ஆண்டுவந்தனர். ஓ வைசியனே! ராமமூர்த்திக்கு நேரிட்ட மகா துக்கத்தைப்போக்கி மிக்க சந்தோஷத்தைக் கொடுத்ததாகும் இந்த நவராத்திரி விரத மென்று சொல்ல, அதைக்கேட்ட வைசியன் அவரையே தன்னுடைய குருவாகக்கொண்டு மாயாபீஜ சகிதமாகிய தேவீமந்திரத்தை யுபதேசஞ் செய்யப்பெற்று மிகுந்த பக்தியோடும் நவராத்திரி விரதத்தை மேற்கொண்டு தேவீபூஜையை நானாவித திரவியங்களால் திருப்தியாகச் செய்யத்தொடங்கி ஒன்பது வருஷம் அந்த மாயாபீஜ ஜபத்தைச் செய்துவந்தனன். ஒன்பதாவது வருஷம் மஹாஷ்டமி திதியில் அர்த்தராத்திரியில், மகேச்வரி வெளிப்பட்டுத் தரிசனங் கொடுத்து அவன் வேண்டிய வரங்களெல்லாந்தந்து அவனை என் றும் வறுமை யணுகாவண்ணம் கிருதகிருத்தியனாக்கிச் சென்றனள். (44–57)

ஓம் ஹ்ரீங்காராஸ்தான நர்த்தக்யை நம:

# 28. ஸ்ரீராம சரிதம் (1)

ஓ மகரிஷிகாள்! இதுகாறும் நவராத்திரி விரதபூஜையில் கன்னிகைகளைத் தியானித்து வழிபடுதலாதியாகிய விரதபூர்த்தி யின் விதிமுறைகளையும், சுசீலனென்கிற வைசியன் ஸ்ரீ ராமமூர்த்தி நவராத்திரி விரதத்தை யநுஷ்டித்த பின்னரே இழந்த சீதையை யும், ஒழிந்த ராஜ்யத்தையும் பெற்று அகண்டமண்டலாதிபதியாய் வாழ்ந்திருந்தாரென்கிற சரித்திரத்தை ஓரந்தணரால் கேள்வியுற்றுத் தானும் அவ்விரதத்தை யனுஷ்டித்துத் தன்னைவிட்டுப் பிரியா திருந்த வறுமைக்கு விடைகொடுத்துத் தன்னிடம் வருவதற் கஞ்சி யிருந்த செல்வம் தன்னைவிட்டு நீங்காதிருக்கத் தேவி யனுக்கிரகம் வரப்பெற்றுய்ந்த வரலாற்றினையும் சொல்லி வந்தோம். இனி, ஸ்ரீ ராமமூர்த்தி இந்த விரதத்தை யனுஷ்டித்ததற்குக் காரணமும், அனுஷ்டித்த பின்னர் அவர் சீதையையும் ராஜ்யசெல்வத்தையும் பெற்ற வரலாறும் கூறுகிறோமென்று சூதபகவான் சொல்லத் தொடங்கினர்.

ஜனமேஜயன் வியாசமுனிவரை நோக்கிச் சுகத்தைக் கொடுப்பதாகிய தேவீவிரதத்தை ஸ்ரீ ராமமூர்த்தி எவ்வாறு அனுஷ் டித்தார்? எவ்விதமாக ராஜ்யத்தை இழந்தார்? என்ன காரணத் தால் மனைவியாகிய சீதையை இழந்தார்? இவற்றைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, வியாசமுனிவர் சொல்லத்தொடங்கினுர்.

பூர்வம் சூரியவம்சத்திற் பிறந்தவனும், தெய்வபக்தி பிரா மண விசுவாசம் முதலியவற்றில் மறவாத அறிவுடையவனும், அயோத்தியாபுர வாசியாயும், ஸ்ரீமானுயுமுள்ள தசரதனென்னும் ஓரரசனிருந்தான். அவ்வரசனுக்கு உலகமெல்லாம் பிரசித்தி

யாய்ப் புகழ ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்களென்று நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களில் கோசலை குமாரன் ஸ்ரீ ராம மூர்த்தி ; கைகேயி குமாரன் பரதன் ; சுமித்திரை குமாரர்கள் இரட்டைப்பிள்ளைகளாகிய லக்ஷ்மண சத்ருக்னர்கள். அந்நால்வருங் குணத்திலும் ரூபத்திலும் சமானர்களாய்த் தனுர்வித்தை முதலிய நாலுவித்தைகளில் தந்தை மகிழத்தக்க சமர்த்தர்களாய் உபநயன ஸம்ஸ்காரம் பெற்றவர்களாய் வாழும் நாளில் விஶ்வாமித்திர முனிவர் வந்து தசரதனைப் பார்த்து உன்னுடைய மூத்த குமாரனாகிய ராமனை என்னுட னனுப்பவேண்டுமென்று காரணத்துடன் சொல்லத் தசரதன் அவரை யனுப்புவதற்குடன்படாது மனம் நொந்து பின்ன ரவருக்கஞ்சி அவர் வேண்டியபடியே பதினாறு வயதுள்ள ராமனை லக்ஷ்மணனுடன் கூட்டி விஶ்வாமித்திரர் வசம் ஒப்புவித்து விடைகொடுத்தனர். முனிவரும் இவர்களை யழைத்துக்கொண்டு போகும்போது மார்க்கத்தில் கோரரூபிணியாயும் ரிஷிகளுக்குத் துக்கத்தை விளைவிக்கின்றவளாயுமுள்ள தாடகை என்கிற ராக்ஷசியை ஸ்ரீராமமூர்த்தி ஒரே பாணத்தால் சங்கரித்து ஸுபாகு என்னும் ராக்ஷசனை யடித்து மாரீசனைத் தன் பாணவேகத்தினால் இறந்துபோனவனைப்போ லாக்கினர்.

இங்ஙனமான பெரிய கிருத்தியங்களை ராமலக்ஷ்மணர்கள் செய்து யாகத்துக்கோ ரிடையூறில்லாமல் நடத்தி, விஶ்வாமித்திரரோடு மிதிலைக்குப் போகும்போது ராமர் மார்க்கத்திலிருந்த முனிபத்தினியாகிய அகலிகையைச் சாபத்தினின்று விடுவித்து, அவளைப் புனித மங்கையாக்கி, மிதிலாநகரத்திற்குப்போய் ஜனக மகாராஜாவினால் பந்தயமாக நியமிக்கப்பட்டதும் ருத்திர மூர்த்தியினா லெறியப்பட்டதுமான தனுசை முறித்து, லக்ஷ்மி அம்சமாயும் ஜனக புத்திரியாயுள்ள சீதையை விவாகஞ் செய்துகொண்டனர். பின்னர் ஜனகமகாராஜன் தான்பெற்ற பெண்ணாகிய ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், தன் சகோதரனாகிய குசத்துஜனுடைய இரண்டு பெண்களை அழகுள்ளவர்களாகிய பரதர் சத்ருக்னர்களுக்குங் கொடுத்துக் கலியாணம் செய்துவைத்தான். பின்னர் தசரதன் ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய வசிஷ்டர் முதலியோரிடம் ஆலோசித்து அதற்குரிய ஸம்பாரங்களைச் சேகரிக்கின்றபொழுது கைகேயி அவைகளைப் பார்த்துத் தன் சுவாதீனத்திலிருக்கின்ற தசரதனை நோக்கி, முன் உம்மால் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள இரண்டு வரங்களை இப்போது கொடுக்கவேண்டும் ; அவை யென்னையெனில், என் குமாரனாகிய பரதனுக்கு ராஜ்யமும், ராமனுக்குப் பதினான்கு வருஷகாலம்வரை வனவாசமுமா மென்றாள். (1–18)

அச்செய்தி யறிந்த ராமமூர்த்தி சீதாலக்ஷ்மணரோடு அரக்கர்கள் சஞ்சரிக்கின்ற தண்டகாரணியத்தையடைந்து வனசஞ்சாரியாயிருந்தனன். தசரதன் புத்திரனை விட்டுப் பிரிந்ததனால் துக்கித்து முன் தனக்கு நேரிட்ட சாபத்தையும் சிந்தித்துப் பிராணனைவிட்டான். இச்செய்தி அறிந்த பரதன் தாயாரால் இவ்வளவு தீங்கு

நேரிட்டதென்று மனம்நொந்து பின் தமையனாகிய ஸ்ரீராமமூர்த்தி யிடஞ்சென்று அவர் சந்தோஷிக்கும்வண்ணம் அரசாங்கத்தைத் தாளை வெண்ணுதை குறிப்பை நன்ருய்க் காட்டிப் பின் அவராணை யால் அயோத்தியை யடைந்து அரசாண்டுவந்தனன். பரதன் செய்தி இங்ஙனமிருக்க, வனவாசியாய்ப் பஞ்சவடியில் வசித்துக் கொண்டிருந்த ஸ்ரீராமமூர்த்தியினிடத்தில் ராவணன் தங்கையாகிய சூர்ப்பனகை காமமிகுதிகொண்டுவர, அவளை மூக்கறுத்து அங்க ஹீனையாக்கித் துரத்த, அவளங்கங் குலைந்திருப்பதைக் கரன் முத லானவர்கள் பார்த்து அளவிறந்த தேஜசோடும் விளங்குகின்ற மகாவீரராகிய ஸ்ரீராமமூர்த்தியோடு யுத்தஞ்செய்யத்தலைப்பட்டார் கள். அது கண்ட சத்தியபராக்கிரமசாலியாகிய ஸ்ரீராமமூர்த்தி, மக ரிஷிகளுக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணு மெண்ண முடையவராய், மகா பலசாலிகளாகிய அவர்களைக் கொன்று சூர்ப்பனகையையும் அங்கிராவண்ணம் ஓட்டினர். அவளோடி இலங்கையை யடைந்து கரதூஷணுளை ராமன்கொன்ருனென்று ராவணனிடஞ்சொல்ல, அவன் அவர்களிறந்தாரென்று கேட்ட மாத்திரத்தில் அடங்காத குரோதமுடையவனுய் ரதத்திலேறி மாரீசனிடஞ்சென்று, ஓ மாரீ சனே! நீ உன் மாயையினுல் சீதைக்கு ஆசைவிளையும் வண்ணம் ஒரு பொன்மானுகப் போவாயென்று சொல்லியனுப்ப,அதுபோலவே அம்மாரீசன் பொன் மானு யுருவங்கொண்டு மகா மாயனுய் ஆச்சரி யப்படத்தக்க அவயவத்தோடும் சீதை கண்களாற் காணுமாறு அவன் முன் வந்து சமீபத்தி லுலாவினன். (19–28)

சீதை யூழாற் றூண்டப்பட்டு நாயகனைப் பார்த்து, ஓ என் நாயகனே! அந்த மானினுடைய தோல் என்ன காந்தியா யிருக் கிறது! அதனை நீ என் சுவாதீனப்படுத்த வேண்டுமென்று மிகுந்த ஆசையுடன் கேட்க, ராமரும் ஆலோசனையற்றுத் தன் தம்பியாகிய லக்ஷ்மணரைச் சீதைக்குக் காவலாக வைத்து வில்லையும் பாணத் தையு மெடுத்துக்கொண்டு அந்த மானை நோக்கிச் செல்ல, அஃது அவரது கண்ணுக்குத் தோன்றுவதுபோற் காட்டிப் பின் மறைத லும், மறைந்துபோயிற்றே என்று பார்க்கும்போது தோன்றுதலு மான மாயவித்தைகளைக்காட்டி நெடுந்தூரம்போய் அங்கு இவர் கைக்கு அகப்படுவதுபோல் நின்றது. உடனே ராமமூர்த்தி கோபங்கொண்டு தன் கைவசப்பட்டதுபோல் நினைத்துக் கபடமா கிய அந்த மானைக் குரூரமாகிய பாணத்தாலடிக்க மாயாவியாயும் இறக்கத்தக்கவனுயும் துஷ்டனுயுமுள்ள மானுருவங்கொண்ட மாரீ சன் அந்த ராமர் அடித்த அடியால் நொந்து அதிக துக்கத்தோடு ஹா! லக்ஷ்மணு!! நானிறக்கிறேன். ஹே! சீதே!! நானிறக்கிறே னென்று ராமர் கூச்சலிடுவதுபோல் ஹீனஸ்வரத்தோடும் பெருங் கூச்சலிட்டான்.

அவ்வோசை சீதையினுடைய காதிற்புக, அவள் அவ்வோசை யைத் தன்நாயகனேசையே யாமென நினைத்து மனவருத்த முற்றவளாய், லக்ஷ்மணனைப் பார்த்து, ஓ லக்ஷ்மணு! உன் தமையன் உன்னை யழைக்கும் ஈனஸ்வரத்தோடு கூச்சலிட்டு

இறக்கின்ற செய்தி யறிந்தலேயா ? சீக்கிரத்திற் போவாய். அதோ கேட்டாயா ? இனி நில்லாதே ; நீ அவருக்குத் தம்பியல்லவா ? அதிவேகமாகச் சென்று வேண்டிய சகாயஞ்செய்வாயென்று மனங் கலங்கிச் சொல்ல, லக்ஷ்மணர், ஓ அம்மணீ ! இவ்வுலகில் ராமனை அடிக்கும் புருஷனுமிருக்கின்றானே ? அவன் ஒருவனடிக்க இறப் பானே ? நானெண்ண வில்லை. நீ தைரியத்தைவிடாதே ; இஃது இங்குவந்த பொன் மணி மானினுடைய மாயவஞ்சனையென் றெண்ணுகிறேன். அன்றியும் இந்த ஆச்சிரமத்தில் சகாயமில்லாம லிருக்கின்ற உன்னைவிட்டு நான் போகக்கூடாது. என்னுடைய அண்ணனும் இவ்விடத்திலேயே இருவென்று ஆக்ஞைசெய்திருக் கின்றார் ; நானவ ராக்ஞையைக்கடக்க அஞ்சுகிறேன். அந்த மாயமானால் நேரிட்ட வஞ்சனையைப் பெரிதாகவெண்ணி உன்னைத் தனியாகவிட்டுப்போகேன். உன்னுடைய சமீப ஸ்தானத்திலேயே யிருப்பேன் ; இதைவிட்டு ஓரடியேனும் எடுத்து வைக்கமாட்டேன். அவரிருவென்ற ஆணையைக் கடவேன், கடவேனென்றனன். ஸர்வ லக்ஷணத்தோடுங் கூடிய சீதை சாந்த குணமுடையவளாயிருந்த போதிலும் ஊழினுடைய பிரேரேபணையால் அழுது புலம்பி ஏங்கி லக்ஷ்மணரை நோக்கி அடியில் வருமாறு சில குரூரமான வார்த்தை களைச் சொல்லத்தொடங்கினாள் :

ஓ லக்ஷ்மணா ! இவ்விடத்திற் காவலிருக்கிறதுபோல் இருக் கின்ற உன்னை உன் தமையனுக்குத் துணையாக வந்தவனென்றும், பரதனும் அவ்வண்ணமாக அனுப்பினானென்றும் எண்ணவில்லை. வேறென்ன வெண்ணுகிறேனென்றால், என்னிமித்தமாகவே அந்தப் பரதனு மனுப்பினானென்றும், நீயுமதுபோலவே என்னிடத்தி லாசையுள்ளவனாய் வந்திருக்கிறாயென்றும் எண்ணுகிறேன். ஓ துர்ப்புத்தியுடையவனே ! நான் அப்படிப்பட்ட விபசாரியல்லள். ராமமூர்த்தி இறந்திருப்பாரானால் பிராணனை விடுவேனேயல்லாது அவரிறப்பை எதிர்பார்த்திருக்கின்ற உன்னைக் காமத்தினாற் பர்த்தா வாகக்கொள்ள அபேக்ஷிப்பேனோ ? ஒருக்காலும் அபேக்ஷிக்க மாட்டேன். நான் ஜீவித்திருப்பேனா ? இரேன் என்று விதிர் விதிர்த்து மிகவும் துக்கித்து மீண்டும், ஓ லக்ஷ்மணா! நீபோனாற்போ; இருந்தாலிரு. உன்னுடைய அபிப்பிராயம் எதுவோ தெரியவில்லை ; தருமாத்மாவாகிய தமையனாரிடத்தில் நீ வைத்திருந்த சிநேகம் எப்படிப் போய்விட்டதோ அறியேனென்று வாய் பேசா திருந்தனள். (29–44)

லக்ஷ்மணர் சீதையின் வார்த்தையைக்கேட்டு மனவருத்த முடையவராய் சீதையைப்பார்த்து விக்கி விக்கி அழுது, ஹே சீதா ! என்னிடத்தில் மிகவும் கர்ண கடூரமாயுள்ள வார்த்தையைச் சொன்னாயல்லவா ? இஃது ஏதோ பின் விளைவைத் தெரிவிக் கின்றது ; அது இப்போதறியக் கூடவில்லை ; அது விளையும் போதறிவேன். நீ இப்போது சொல்லக்கூடாத மிகவும் குரூரமான வார்த்தையெல்லாம் சொல்லுகிறாயென்று மிகவும் அழுது,இருப்பதற் கஞ்சிச் சீதையை விட்டுப் போயினார். லக்ஷ்மணர் போனவுடனே

கபடரூபம்வகித்த ராவணன் ஸந்நியாசி வேஷம்பூண்டவ்விடம் வந்தான். சீதை அந்த ராவணனைச் ஸந்நியாசியென்றே நினைத்து அன்புடன் அர்க்கியபாத்தியம் கொடுத்து கந்த மூல பலங்களாகிய பிக்ஷையளித்து நிற்க, துஷ்டனாகிய ராவணன், ஹே சீதா! நீ யார்? உன் பிதா யார்? உன் புருஷன் யார்? இவ் வனத்தில் மூடஸ்திரீகள்போல் ஏன் தனியே யிருக்கின்றாய்? தேவ ஸ்திரீக்குச் சமானமாய் நீ உப்பரிகையில் வாசஞ்செய்ய வேண்டி யவள். அதை விட்டு இந்தப் பர்ணசாலையில் ரிஷி பத்னியைப் போல் யாருமில்லாத காட்டில் ஏன் வாசம் பண்ணுகின்றாயென்று மிக்க விநயத்துடன் மிருதுவான வார்த்தையோடு கேட்க, ஜானகி கபட ஸந்நியாசி யென்றறியாமல் தெய்வகதியால் நேரிட்ட ஸந்நியாசியென்று நினைத்து, அந்த ராவணனைப் பார்த்து, ஓ முனிஸிரேஷ்டரே! என் பிதா ஜனகமகாராஜன்; என் பெயர் சீதை; என் நாயகன் தசரதனென்கிற ராஜாவினுடைய நான்கு குமாரர் களில் மூத்தவராகிய ஸ்ரீ ராமமூர்த்தி; கைகேயி நிமித்தமாய் லக்ஷ்மணரோடு காட்டில் பதினான்குவருஷம் இருக்கவேண்டி வந்த காரணத்தால் வனத்தில் வந்திருக்கின்றேன். எனது நாயகனுடைய தோள்வலியால் பயமில்லாமல் தனியே இருக்கின்றேன். என் வேண்டுகோளால் அவர் ஒரு பொன்மானைப் பிடித்துவர வெளியே போயிருக்கின்றார். அவர் தம்பியாகிய இலக்ஷ்மணரும் தமையனா ருடைய தொனியைக்கேட்டு இப்போதுதான் போயினர். அவ் விருவருடைய தோள்வலி யிருக்கும்போது எவ்விடத்தில் நான் தனியே வசித்தாலும் பயமில்லை. என் கற்புநிலை கெடாது நீர் அவர்களைப் பார்க்கவேண்டும். இதோ வந்துவிடுவார்கள். அவர் களும் உம்மைக்கண்டால் மிகவும் பிரியத்துடன் உமக்கு விதிப்படி பூஜை நடத்துவார்கள்.

உம்மைப் பார்த்தால் ஸாக்ஷாத் விஷ்ணுஸ்வரூபம்போலிருக் கின்றது. அதனால் நானும் பூஜித்தேன். கோரமாகிய ராக்ஷஸர்கள் நெருங்கியிருக்கின்ற இந்த வனத்தில் முனிவர்களுடைய ரக்ஷணை யின்பொருட்டு இவ்வாச்சிரமம் முக்கியமா யேற்படுத்தியதால் சற்றிரும். பயமில்லாமல் உம்மையொன்று கேட்கிறேன்: திரிதண்ட தாரியாய் வந்திருக்கிற நீர் யார்? என் முன்னிலையில் உண்மையைச் சொல்லுமென்றனள். (45–61)

நான் ராவணன்; ஸ்ரீமானாயும் மண்டோதரிக்கு நாயகனாயு முள்ள லங்காதிபதி. உன்நிமித்தமாய் இவ்வடிவத்தோடு வந்திருக்கிறேன். என் தங்கையாகிய சூர்ப்பனகையால் ஜனஸ் தானத்தில் என் தம்பிமாராகிய கரதூஷணர்க ளிறந்தார்களென்று கேள்விப்பட்டு அவளுடைய பிரேரேபணையால் யான் இவ்விடம் வந்தேன். ஓ சீதையே! நீ ராஜ்யமிழந்தவனாயும், தரித்திரனாயும், பலஹீனனாயும், வனவாசியாயும், மானிடனாயுமுள்ள ராமனைவிட்டு என்னைப் புருஷனாக வரித்துக்கொள். கொள்வாயாயின், மண்டோ தரிக்குமேல் நீ பட்டஸ்திரீயாக விருக்கலாம். நானவளுக்குநாயகனா யிருப்பதுபோல உனக்குத் தாசனாகவிருப்பேன். நீ எனக்கு எஜ

மானியாக இருக்கலாம். திக்பதிகளை ஜயித்தவனாகிய நான் உன் பாதங்களில் இதோ விழுகிறேன். என்னைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்வாய். ஓ ராஜஸ்திரீயே! பூர்வத்தில் நான் உன் பிதாவினிடத்திலேயே உன்னை யாசிக்க, அவர் பணயச்சுயம்வரம் செய்திருக்கிறேன், அது உன்னால் கூடும்பக்ஷத்தில் நீ சீதையைப் பெறலா மென்றனர். நான் சிவதனுசென்கிற பயத்தினால் சுயம் வரத்திற்கு வரவில்லை. அதுமுதல் என்மனம் விரகதாபமடைந்திருக் கிறது. இங்கிருப்பதாகக் கேள்விப்பட்டு முன்கொண்டிருந்த ஆசையைப் பூர்த்திசெய்துகொள்ளவந்தேன். இனியேனும் என் சிரமத்துக்குக் கூலி கொடுப்பாயென்றனன். (62–69)

ஓம் ஹ்ரீங்கார ஶக்திகா முக்தாமணயே நம:

## 29. ஸ்ரீராம சரிதம் (2)

இவ்வாறு ராவணன் கூறியதைச் சீதாதேவி கேட்டுப் பயந்து இந்த ராக்ஷஸன் என்ன செய்வானோவென்று நடுங்கிச் சிறிது மனத் தைத் திடஞ்செய்து ராவணனைப் பார்த்து, ஓ பௌலஸ்தியனே! நீ காமமோகிதனாய்ப் பிரயோஜனமற்ற வார்த்தைகளைச் சொல்லு கிறாய். இதுவென்ன மடைமை! ஜனக வம்சத்திற் பிறந்தவளாகிய நான் விபசாரத்தொழிலுக்கு வருவேனா? இப்போது ஸ்ரீராமர் வருவாராயின் உன்னைக் கொன்றுவிடுவார். என் வார்த்தையைத் தடுத்திங்கிருப்பையாயின் என்னிமித்தமா யுனக்கு மரணம் வருவதிற் சம்சயமில்லை என்று சொல்லிக்கொண்டே பர்ணசாலைக் குள்ளே நுழைந்து ராமருடைய நித்தியாக்கினியைத் துணையாக நினைத்து அவ்வக்கினி சந்நிதானத்தினின்று ராவணனை நோக்கி, ஓ ராவணா! நீ போய்விடு என்றுசொல்ல, ராவணன் தன்னுடைய நிஜமான ரூபத்தைத்தாங்கி, உள்ளத்திற்பயந்து கண்ணீர்விட்டழு கின்ற அந்தச் சீதையைச் சமீபித்துப் பலாத்காரமாய்க் கிரகித்து வெளியேவர, அச்சீதை ராமா ராமாவென்றும், லக்ஷ்மணா லக்ஷ்மணா வென்றும் அடிக்கடி கூச்சலிட்டுப் புலம்பினள். அந்தப் பாபிஷ்டன் சிறிதும் மனமிரங்காது தேரில்வைத்துக்கொண்டு அதிவேகத்துடன் போகின்றபொழுது மார்க்கத்தில் அருணன் குமாரனாகிய ஜடாயு கண்டு இதுவென்ன மோசமென்று தடுக்க, ராவணனுமெதிர்த்து ஜடாயுவோடு அந்தவனத்தில் யாவரும் கண்டஞ்சும்படியான பெரும்போர்செய்து ஜடாயுவினுடைய சிறகு முறிய அடித்துச் சீதையைக் கைவிடாமல் தன்னுடைய லங்காபுரிக்குப்போய் அசோக வனத்தில் எண்ணிறந்த வசுரர்கள் சூழ்ந்திருக்க அவர்கள் மத்தியில் சீதையை இருக்கச்செய்தனன். அவளென்செய்வாள்? அந்தோ! அந்தோ! என்று குருவிபோல் கூவிக்கொண்டிருந்து ராவணன் தன்னிடம்வந்து தன் காமத்தை வெளியிடுந்தோறும் ஸாமதானம் முதலியவைகளால் அவனைத் தடுத்துத் தன்னுடைய பதிவிரதா தருமத்தைக் கைவிடாமல் கொஞ்சமேனுஞ் சலிக்காமல் அவ்வசோக வனத்தில் வாழ்ந்துகொண்டிருந்தனள். (1–9)

இவள் செய்கை இங்ஙனமிருக்க, ராமர் அந்த மானையடித்து இந்த மான்றேல் சீதைக்குச் சந்தோஷத்தை விளைவிக்குமல்லவா என்று மகிழ்ந்து அத்தோலை எடுத்து வரும்போது, மார்க்கத்தில் எதிரே லஷ்மணர் வருதலைப் பார்த்து, ஓ தம்பீ! ஏனிப்படிச் செய்தனை? மாரீசன் செய்த மாயவோசையைக் கேள்வியுற்று என்னைப் பாதுகாக்க சீதையைத் தனியேவிட்டு வந்தனை என்று சொல்லிக்கொண்டே விரைவாய் வர, சீதையினுடைய வாக்பாணத்தால் மிகவும் நொந்திருக்கிற லக்ஷ்மணர், ஹே! ராமப் பிரபோ! ஏதோ ஒரு தீங்கானகாலம் சமீபித்திருக்கிறபடியால் நான் வந்துவிட்டேனேயல்லாமல், நான் வருவேனோ? என்று சொல்லிக்கொண்டே தாமும் விரைவாய்ப் பர்ணசாலையை நோக்கி வந்தனர். அங்கு இருவரும் சீதையைக்காணமல் மிகுந்த வருத்தமுடன் வரும்போது அவளைத் தேடித்தேடி ஜடாயு சிறிது பிராணனுடைய னாய்ப் பூமியில் வீழ்ந்திருப்பதைப் பார்த்து வருந்த, அவன், ஓ ராமா! சீதையை இப்பொழுதுதான் ராவணன் கொண்டுபோகக் கண்டு நான் கூடியவரையில் தடுத்து யுத்தஞ்செய்தும் அவனை வெல்வதற்குக் கூடாமல் விழுந்துவிட்டேன். அவனிதோ போகிறுன். அவனைப் பாருங்களென்று சொல்லிவிட்டு உயிர்விட்டனன். ராமமூர்த்தி அவன் யுத்தஞ்செய்ததை எண்ணி ஏக்கமுற்று அவனுக்குச் செய்யவேண்டிய தஹனதி கிரியைகளையெல்லாம் குறைவற நடத்தி மார்க்கத்தில் நேர்ந்த கபந்தாசுரனைச் சங்கரித்து அவனைச் சாபத்தினின்றும் விடுவித்து அக்கபந்தன்சொல்லிய வார்த்தையினுல் கிஷ்கிந்தையில் சுக்ரீவனைச்சிநேகித்து அவன் வேண்டுகோளால் மகாவீரனுகிய வாலியைக்கொன்று சிரேஷ்டமாகிய கிஷ்கிந்தையினுடைய ராஜ்யஸம்பத்தைத் தன்னைச்சரணடைந்த சுக்ரீவனுக்குக் கொடுத்து அந்த வனத்திலேயே லக்ஷ்மணருடன் மழைக்காலமாகிய நான்கு மாதங்களையும் சீதையை நினைத்துநினைத்துப் போக்கினர். (10–19)

ஒரு நாள் சீதாவிரகத்தினுல் வருத்தப்படும் ராமமூர்த்தி லக்ஷ்மணரைப்பார்த்து, ஓ! லக்ஷ்மண! கைகேசி, தன்னெண்ணம் பூர்த்தியாயிற்றென்று மகிழ்ந்திருப்பாள். ஏனெனில் ராவணன் கொண்டுபோன சீதை இவன் கைக்கு அகப்படுவாளா? அவளகப்படாமற்போனுல் அவன் பிழைப்பான? பிழைத்திருப்பதற்கெண்ணம் இறக்கத்துணிபவன் இந்த அயோத்திக்கு வருவானே வென்று எனக்குண்டாகப்போகும் துக்கத்தையெல்லா மெண்ணுவாளல்லவா? அவளெண்ணப்படியே எனக்கு ராஜ்யம்போய் வனத்தில் வாசம் நிலேத்தது. ராஜ்யம் வரவேண்டுமென்றெண்ணிய தந்தையோ இறந்துபோய்விட்டார்; மனைவியோ வெளிப்பட்டு துஷ்டனுகிய ராவணனுல் மானஹானியடைந்திருக்கிருள்; இன்னமும் ஸர்வேஶ்வரன் என்னசெய்யப்போகின்ருரோ அறியேன். மேல்வரப்போகிறதை மானிடர்களால் எப்படி அறியக்கூடும்? ஆகையால் ராஜகுமாரர்களாகிய நம்மிருவருக்கும் இன்னமும் துக்ககரமாகிய கதி என்னவரப்போகின்றனவோ தெரியவில்லை. நாம் மனு வம்சத்

திற் பிறந்து வனத்தில் துக்கத்தை யனுபவிக்கின்றோமே, இது முன்செய்த வினையல்லவா ? நீயும் ஊழ்வகையால் போகங்களை விட்டு என்னோடு வெளிப்பட்டுவந்து சகிப்பதற்குக் கூடாமையாகிய என் துக்கத்தை யனுபவிக்கிறாய்; நம்மைப்போலும் நம்முடைய குலத்தில் ஒருவரும் அனுபவித்திரார். இதுவரையில் என்னைப் போல துக்கத்தை யடைந்தவராகவும், தரித்திரராகவும், எதற்கு முதவாதவராகவும், விசாரம் பிடித்தவராகவும் முன்னெவருமிருந் திருக்கமாட்டார்; பின்னொருவரும் வரவுமாட்டார். ஹே லக்ஷ்மணா ! துக்கசாகரத்தில் மூழ்கிவிட்டேன். நானென்ன செய்வேன் ? சகாயமில்லாமலிருக்கிற எனக்குக் கரையேறுமுபாய மில்லை. எனக்குச் சகாயன் நீ ஒருவன்றான். (20–25)

என்றால் செய்யப்பட்ட வினையின் பயனை நானனுபவிக்கிற விஷயத்தில் யாரிடத்தில் கோபிக்கிறது ? இந்திர சபையினுஞ் சிறந்த ராஜ்யம் என் கைவசப்படுகிற சமயத்தில் தவறிப்போய் இந்த வனவாசம் கைவசப்பட்டு நிலைத்துப்போய்விட்டதே. தெய்வ நிர்மாணத்தை எவனறிவான் ? நம்மிருவருடைய பால்யதசையில் யௌவனவதியாகிய சீதை தவறிப்போகவும், அவள் துக்கத்தை யனுபவிக்கவும் வந்தது காலத்தின் கொடுமையா, வேறா ? ராவண னால் மேன்மேலும் விரும்பத்தக்க யௌவனவதியாயும் நல்ல ஆசார முடையவளாயு மிருப்பதால் அவன் காவலிலிருக்கின்ற அவளுக்கு என்னவிதமான துக்கங்களுண்டாகுமோ, அறியேன். ஓ லக்ஷ் மணா ! அவ்வசுரன் எவ்வளவு பலாத்காரஞ் செய்தாலும் என்னிடத் தில் மிகவும் பிரீதியுள்ளவளாதலால் பதிவிரதா தருமத்தைவிட மாட்டாள்; அவனுக்குச் சுவாதீனமுமாகமாட்டாள். அவள் ஜனக னுடைய புத்திரியாதலால் விபசாரியுமாகாள். அவன் நிர்ப்பந்திப்பா னாயின் பிராணனை விட்டுவிடுவளேயல்லாமல் சுவாதீனமாகமாட்டா ளென்பது என்னுடைய மனோநிச்சயம். சீதை மரணமடைவாளே யானால் நான் பிராணனை வைக்கமாட்டேன். சீதைபோனபின் இந்தத் தேகத்தினால் என்ன பிரயோஜனம்? என்றிவ்வாறு பிரலாபிக் கின்ற ராமரைப் பார்த்துத் தருமாத்மாவாகிய லக்ஷ்மணர் சத்திய மாகிய சிலசொற்களால் சமாதானப்படுத்துகிறார். (26–35)

ஓ மகாவீரரே ! மருட்சியைவிட்டுத் தைரியத்தைக் கொள்ளும். நான் அந்த நீசனாகிய ராக்ஷசனைக்கொன்று சீதையை யழைத்துக் கொண்டு வருகிறேன். அறிவாளியாகிய புருஷர்கள் தைரியத்தினால் ஆபத்திலும் ஸம்பத்திலும் ஸமபாவமுள்ளவர்களாய்த் தீரமாகவே யிருப்பார். மூடபுத்தியுள்ளவர்கள் அவ்விரண்டிலும் ஏகதேசப் பட்டு அதிலதில் மூழ்கினவர்களாயிருப்பார். ஒருவரோடொருவர் கூடியிருப்பதும் பிரிந்துபோவதுமாகிய இந்த இரண்டும் தெய்வத்தி னுடைய சுவாதீனமாயிருக்கும்போது சோகமெப்படியுண்டாகும் ? அன்றியும், கூடுதலும் பிரிதலும் தேகத்தினிடத்திலன்றி ஆத்மாவி னிடத்திலில்லை. தீயகாலம்வந்தபோது ராஜ்யத்திலிருந்த நமக்கு வனவாசம் எப்படி சித்தித்ததோ, சீதாவியோகம் எப்படி நேரிட்டதோ, அப்படியே நல்லகாலம் வருகிறபோது ராஜ்ய

லாபமும், சீதாதேவியின் வரவுமுண்டாகுமல்லவா? சுகமனு பவித்தல் அனுபவியாதிருத்தல், துக்கம் அனுபவித்தல் அனுபவியா திருத்தலாகிய அனுபவம் வரும்போது அவைகளை அனுபவித்தே தீரவேண்டும். இவை ஒருபொழுதும் மாறுபடுவனவல்ல. ஓ அண்ணா! சீதையின் சோகத்தை விடு. இப்பொழுது நமக்கு வான ரர்கள் பெருங்கூட்டங்களாக விருக்கின்றனர். அவர்கள் நாலு திக்கிலும் சென்று சீதையைக்கண்டு பிடித்து அவளுடைய க்ஷேம சமாசாரத்தையுந் தெரிந்துக்கொண்டு, நாம் போகவேண்டிய மார்க் கத்தையும் அறிந்துகொண்டு வருவார்கள். பின்னர் நாம் அந்த விடம்போய் மகா பாபிஷ்டனாகிய ராவணனைச் சங்கரித்து சீதை யைக் கொண்டு வருவோம். இன்னும் நமக்குச் சகாயம் வேண்டு மானால் பரதனைச் சைனியத்தோடு வரவழைத்து யாவரும் ஒன்றாகச் சேர்ந்து சத்துருவாகிய ராவணனை அடிப்போம். வீணாக ஏன் துக்கிக்கிறீர்? பூர்வத்தில் ஒற்றைத்தேருடைய ரகுமகாராஜன் அஷ்டதிக்கிலுஞ் சென்று யாவரையும் ஜயித்திருக்கிறார். அவர் வம் சத்திற்பிறந்த நீர் ஏன் பயத்தையடையவேண்டும்? தனிமையா யிருக்கின்ற நானொருவனே தேவாசுரர்களையெல்லாம் ஜயிப்பதற் குச் சமர்த்தனாயிருக்கின்றேன். அண்ணன்மாராகிய நீரும் பரத னும் தம்பியாகிய சத்ருக்னனும் வானரரும் எனக்குத்துணையாய் வரும் பக்ஷத்தில் நீசனாகிய ராவணனை ஜயிப்பதற்கு என்ன ஆக்ஷேபமிருக்கின்றது? இன்னமும் சகாயம்வேண்டுமானால் ஜனக மகாராஜனையும் வரவழைப்போம். எவ்விதத்தினாலாவது ராவணனைக் கொல்வது நிச்சயம். சுகமும் துக்கமும் சகடக்கால் போற் சுழன்று வருவதேயல்லாமல் ஒன்றாவது நிலைத்திருப்பதல்ல. எவனுக்குச் சுகதுக்கங்க ளுண்டாகிய விஷயத்தில் மனமருட்சி யுண்டாகிறதோ அவன் சோகமென்கிற சாகரத்தில் மூழ்கவேண்டியவனேயன்றி ஒருக்காலும் சுகமடையான். பூர்வத்தில் தேவர்களெல்லாங் கூடி நகுஷனுக்கு இந்திர பட்டங்கட்டிய பொழுது அவனுக்கு முன் னிருந்த இந்திரன் விசனமுற்றுப் பயந்து தன்னுலகைவிட்டுத் தாமரை நாளத்தில் அநேக நாள் ஒளிந்திருந்தனன். பின்னர் அந்த நகுஷன் இந்திராணியை யபேக்ஷித்து மகரிஷிகளை யவமதிக்க அகஸ்தியர் கோபித்து ஸர்ப்பமாகெனச் சபிக்கவும் அவ்வுலக வாழ்க்கையையிழந்து அவன் மலைப்பாம்பாய் பூமியில் வீழ்ந்தனன். ஒளிந்திருந்த இந்திரன் முன்போல் தன்னுலகடைந் தனன். இவ்விருவரும் சுகத்தையாவது துக்கத்தையாவது ஒரு படித்தா யனுபவித்தார்களா? இதனால் இந்திரனாயிருப்பினும் சுகதுக்கம் மாறிமாறி வருமென்பது நிச்சயம். ஆகையால் வருத் தம் வந்தபோது துக்கப்படாது அது நீங்குதற்குரிய முயற்சியில் புத்திவைத்திருக்க வேண்டும். ஓ மகாநுபாவரே! சர்வக்ஞரா யிருக்கின்ற நீர் அறிவில்லாதவர் போல் சித்தத்தில் சோகம் ஏன் கொள்ளுகிறீரென்றிவ்வண்ணம் லக்ஷ்மணர் கூறிய ஞானமொழி களைகேட்டு ராமர் துக்கத்தைவிட்டு மிகவும் நிர்மலசித்தத்தை யுடையவராயினார். (36–55)

ஓம் ஷ்ரீங்கார போதிதாயை நம:

## 30. ஸ்ரீராம சரிதம் (3)

ஓ ஜனமேஜயனே! இவ்வண்ணம் ஞான விசாரத்தால் கவலைப்படுகிறதில்லை யென்கிற பிரதிக்ஞையோடு எப்போது ராமர் செயலற்றிருந்தனரோ, அப்போதே ஈச்வராக்ஞையால் நாரதர் மகதி யென்கிற வீணையைத் தடவி பிரஹத்ரதம் என்கிற ஸாமத்தைக் கானம் பண்ணிக்கொண்டு ராமரிடத்தில் வர, ஸ்ரீராமர் அவரைப் பார்த்து எழுந்திருந்து பரிசுத்தமான ஆசனங்கொடுத்து நமஸ்கரித்து நின்றனர்.

நாரதர் அவரைப் பார்த்து சமீபத்திலிருக்கலாமென் றுக்ஞாபிக்க அப்படியே யிருந்தனர். நாரதர், ஓ ராமமூர்த்தி! நீயும் உன் தம்பியும் மனவருத்தத்தோ டிருப்பதாகத் தெரிய வருகின்றது. உங்களுடைய க்ஷேமம் யாது? ஹே ராகவா! அறிவற்றவரைப் போல் ஏன் துக்கப்படுகின்றாய்? சீதையைத் துராத்மாவாகிய ராவணன் அபகரித்ததை யானுமறிந்தேன். யான் சில காரிய நிமித்தமாய் சுவர்க்கலோகம் போனபொழுது அங்கு நடந்த சில காரியங்களைத் தெரிந்துகொண்டு உன்னிடம் வந்தேன். என்னை யெனின், ராவணன் தனக்கு நேரும் மரணவகை யறியாமல் அக்ஞானத்தால் சீதையை யபகரித்தானென்றும், நீ அவதரித்தது அவனைச் ஸம்ஹரிக்கும் பொருட்டென்றும், அது சமீபித்த படியால் சீதையை ராவணன்கொண்டு போனானென்றும், ராவணனுக்குச் சீதையினிடத்திலுண்டான மோகம் பூர்வ ஜன்ம சம்பந்தமென்றும், அதாவது முன் ஜன்மத்தில் சீதை தவத்திற் சிறந்த ஒரு முனிமகளாய் வனத்தில் தவஞ் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் ராவணன் கண்டு மோகித்து நீ என் மனைவியாக வேண்டுமென்று பிரார்த்திக்க, அவளிணங்காமல் கோபித்தலைக் கண்டு அவன் பலாத்காரமாய் அவளுடைய கையைப் பிடித்திழுத்தனனென்றும், அந்த க்ஷணமே அவனைப் பார்த்து, ஓ துராத்மாவே! உன்னைக் கொல்லும் நிமித்தம் அயோநிஜையா யிவ்வுலகில் வந்து பிறப்பேனென்று கடுஞ்சாபமிட்டு இவனால் தொடப்பட்ட இந்தத் தேகத்தையும் வைத்திரேனென்று அக்கினியிற் பிரவேசித்துத் தேகத்தை விட்டனளென்றுங் கேள்வியுற்றேன்.

அதுபோலவே பாம்பையெடுத்துத் தன் கழுத்திற் போட்டுக் கொண்டதுபோல் அந்த ராவணன் தன் குலமெல்லாம் நாசமடையச் சீதையைக் கொண்டுபோயினான். நீயும் தேவர்களுடைய பிரார்த்தனையால் விஷ்ணுமூர்த்தியினுடைய அம்சத்தோடும் அஜ மகாராஜன் வம்சத்திற் பிறந்தனை. இனி ராவணன் ஸம்ஹாரமாவதிலென்ன சந்தேகமிருக்கிறது? ஓ ராமா! பதிவிரதையாயும், தரு மத்தி லூக்கமுள்ளவளாயுமுள்ள சீதை அசோகவனத்தில் இராப் பகல் உன்னையே தியானித்துக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு ஆகாரமாக இந்திரன் காமதேனுவின் பாலை ஒரு பாத்திரத்தில்

விட்டு அனுப்பியிருக்கிருன் ; அவள் அதை உண்டு பசிதாக மில்லா மல் சுகமாய் வாழ்ந்துகொண்டிருக்கிருள். நானும் பார்த்தேன். நீ அவள் பொருட்டாகக் கவலைப்படவேண்டாம் ; தைரியமாயிருப் பாய்.

ஓ ராகவா ! அந்த ராவணனைச் சங்கரிப்பதற் கேதுவாகிய உபாயத்தை இனிச் சொல்லுகிறேன். இப்போது நடப்பது ஆஸ் வீஜமாதமாகையால் இம்மாதத்தில் பகவதியினுடைய பிரீதியாக நவராத்திரி விரதத்தை நடத்துவாய் ; அந்த ஒன்பது ராத்திரியும் உபவாசமாயிருந்து மஹேஶ்வரியினுடைய பூஜையும், ஜபமும், ஹோமமும் செய்து வருவையேயாயின் அது எல்லாச் சித்திகளை யும் கொடுக்கும். அன்றியும் அந்தப் பூஜையில் அஜபலியும், பலிக்குப் பத்து ஹோமமும் செய்யும் பக்ஷத்தில் வீர பராக்கிரம சாலியாவாய். இந்த விரதத்தைப் பூர்வத்தில் திரிபுரத்தைச் சங்க ரிக்க ருத்திரரும், மதுவைச் சங்கரிக்க மேருபர்வதத்தில் விஷ்ணு வும், விருத்திராசுரனை வதைக்க இந்திரனும், ஏனைய தேவர்களும், விஶ்வாமித்திரர், பிருகு, வசிஷ்டர், காசிபர், மனைவியையிழந்த பிரகஸ்பதி முதலிய முனிவர்களும் அனுஷ்டித்து அவரவர் வேண்டி யவுற்றைப் பெற்றனர்.

ஹே ராமா ! சுகத்தை அபேக்ஷித்தவன் மங்களகரமாகிய இவ் விரதத்தை யநுஷ்டிக்க விரும்புவான் ; கஷ்டத்தையே யபேக்ஷித்த வன் விரும்பான். ஆகையால் ஓ ராமா ! ராவணனை வதை செய்வதற்குரிய ஊக்கத்தோடு முயற்சியுள்ளவனுய் விதிப்படி விர தத்தை நடத்துவாயென்றனர். ராமர் நாரதரைப் பணிந்து, அந்தத் தேவியானவள் யார் ? என்ன மகிமையுள்ளவள் ? எவ்வா றுருவங் கொண்டவள் ? என்ன பெயருள்ளவள் ? அவளுடைய விரதம் எப் படிப்பட்டது ? தேவரீர் சர்வக்ஞராகையால் கூறியருள வேண்டு மென்றனர். (1–29)

ஓ ராமா ! என்னுல் சொல்லப்பட்ட தேவி யாரெனின், எக்கா லத்தும் நித்தியமாயிருக்கின்ற ஆதிசக்தி. அவள் மகிமை யென்னை யெனின், துக்கங்களைப் போக்கடிப்பவள் ; சகல காமங்களையுங் கொடுப்பவள் ; யாவராலும் பூஜிக்கத் தக்கவள் ; பிரமன் முதலிய சேதனர்களுக்கெல்லாம் காரணமாயுள்ளவள் ; யாவரும் அவளு டைய சக்தியை விட்டுச் சலிப்பதற்குச் சக்தியில்லாதவர் ; பிரபஞ் சத்துக்கு அதிதையாகிய அந்தப் பரமேஶ்வரி யாவரிடத்தும் எவ்வா றிருக்கின்ருளெனின், என் தந்தையினிடத்தில் சிருஷ்டிக்கிற சக்தி யாயும், விஷ்ணுவினிடத்தில் பரிபாலிக்கின்ற சக்தியாயும், ருத்திர ரிடத்தில் சங்கார சக்தியாயும், சத்அசத்தாயிருக்கிற பதார்த்தங்கள் எவைகளோ அவைகளிடத்தில் அவைகட்குரிய சத்தாகிய சக்தி வடி வாகியு மிருக்கின்றனள். இவ்வாறு பிரம்மாதி பிபீலிகாந்தம் நிறைந்துள்ள சக்திபேதங்களெல்லாம் அந்தப் பராசக்தியினின்று தோன்றிய சக்திகளாகும். ஆகவே அப்பராசக்தியை விட்டு எது வும் வேறு எவ்விடத்தினின்று தோன்றும் ? தோன்றுதற்கிடமில்லை. அதனுடைய வியாபகமில்லையாயின் பிரமனேது, திருமாலேது,

ருத்திரரேது, இந்திரனேது, தேவர்களேது, பூமியேது, பர்வத மேது? எவையுமில்லை; எவருமில்லை. சர்வசக்தி மயமாயிருக்கின்ற அந்தப் பராசக்தி பரமாத்மாவாகிய பரசிவத்தோடு கூடிக் கிரீடித் திருப்பாள். இன்னும் அவளுடைய மகிமை பலவுள.

இனி அவளுருவங் கொள்ளும் வகையென்னையெனின், பர சிவத்தோடு அபின்னையாகக் கூடியிருக்கும் அப்பராசக்தி பிரபஞ் சோற்பத்தி காலத்தில் ஸகுணையாய் முன்போல் மூன்று புவனங் களையும் சிருஷ்டித்துப் புவன கர்த்தராகிய பிரம்மாதியரைப் படைத்து அவர்களிடம் தன் சக்திகளைப் பதிவித்துத் தனது சிருஷ் டியாதி கிருத்தியங்களைச் செய்விக்கின்றனள். அவளே வேதத்துக் கெல்லாம் ஆதியாயும் வேதமாதாவாயு முள்ளவளென்று யாவ ராலுந் தியானிக்கத் தக்கவள்; பிரம்மாதியரும் அந்த மகேஶ்வரியி னுடைய அருட் குணங்களையும், அருட் செயல்களையுங் குறித்து அகாரமுதல் க்ஷகாரம் வரையில் கூடியிருக்கிற அக்ஷரங்களால் கணக்கிடமுடியாத அநேகவித நாமங்களைக் கூறி யிருக்கின்றனர். அவைகளெல்லாம் இவ்வளவினவென்று நான் எவ்வாறெடுத்துச் சொல்லத்தக்கவனென்று கூறினர். (30–37)

ராமமூர்த்தி நாரதரை நோக்கி, ஓ மகரிஷியே! உம்மாற் சொல்லப்பட்ட தேவீ விரதத்தின் விதியை விரிவாய்ச் சொல்வீ ராயின், அதனை இவ்வருஷமே அநுஷ்டித்து அவளனுக்கிரகத்தைப் பெற்றுய்யலாமென்று தீவிர வெண்ணத்தோடு மிருக்கின்றேன். விரைவாய்ச் சொல்லியருளல் வேண்டுமென்றனர்.

நாரதர் அவரது அதிதீவிர பக்குவத்தைப் பார்த்து, ஓ ராமா! இப்பூஜையை முடிக்க நானே ஆசாரியனாக விருந்து தேவர்களுக் கனுகூல சித்தியுண்டாகுமாறு உனக்கு உற்சாகத்தை விளைவித்துப் பூர்த்தி செய்விக்கின்றேன் என்று கூற, ராமமூர்த்தி சத்தியமாக நம்பி அவரால் பூஜாவிதிகளை யெல்லாம் நன்று யுபதேசஞ் செய்யப்பெற்று சகலத் திரவியங்களையுஞ் சேகரித்துக்கொண்டு அந்த மால்யவான் பர்வதத்தில் நித்யகன்மாநுஷ்டான மியற்றிப் பின் தேவிக்கு விதிமுறையாகப் பூஜை செய்யத்தொடங்கி, சமமான பூமியில் மங்களகரமான பீடத்தை ஸ்தாபனஞ் செய்து மஹேஶ் வரியை ஸ்தாபித்துப் பூஜை ஹோமம் பலி முதலியவைகளைக் குறை வின்றியும், நாரதர் சம்மதப்படியும், உபவாசத்தோடிருந்து பிரதமை முதல் நடத்தி வரும்போது தேவி மகிழ்ந்தவளாய் அஷ்டமி தினம் நடு இரவில் அம்மலையி னுச்சியில் சிம்மவாகனத்தி லெழுந்தருளி வந்து தரிசனங் கொடுத்து ராமரைப் பார்த்து மேகந் தொனிப்பதுபோலும் கம்பீரமாக அடியில் வருமாறு கூறத் தொடங்கினள்: (38–45)

ஓ ராம! நீ செய்த இவ்விரதத்துக்கு நான் சந்தோஷித்தவ ளாயினேன்; உனக்கு வேண்டுவனவற்றைக் கேட்பாயாக. பூர்வத் தில் மச்சமாகப் பிறந்து குரூரனாகிய ராக்ஷசனைச் சங்கரித்து வேதங்களை ரக்ஷித்தனை; கூர்ம உருவமெடுத்து மந்தர பருவதத்

தைத் தூக்கி மத்தாக நாட்டித் தேவர்களைக் காத்தனை. வராக உருவ மெடுத்துக் கோர தந்தத்தால் பூமியைத் தூக்கினை. நரசிம்மமாக வெளிப்பட்டு இரணியகசிபனைக் கொன்று உனக்கு அன்பனுகிய பிரகலாதனைக் காத்தனை. இந்திரனுக்குச் சகோதரனுய் தேவர் களுக் கநுகூலியாய் வாமனனுகப் பிறந்து பலிச்சக்கரவர்த்தி யைப் பாதலத்தி லடக்கினை. ஜமதக்கினி ரிஷிக்குப் புத்திரனுகப் பிறந்து க்ஷத்திரியருடைய பூமியெல்லாம் காசிபருக்குத் தான மாகக் கொடுத்தனை. இப்போது தசரதனுக்குப் புத்திரனுகப் பிறந்து ராவணனைச் சங்கரிக்கப் போகின்றனை. நீ விஷ்ணு அம்ச மாக வந்ததுபோல் இந்த வானரக் கூட்டங்களும் தேவர்களுடைய அம்சங்களாகும். உனக்குச் சகாயமாயிருக்க என்னுடைய சக்தி அம்சத்தைக் கொடுக்கின்றேன். உன் தம்பி ஆதிசேஷனுடைய அம்சம். அவன் இந்திரஜித்தையும் நீ ராவணனையும் வசந்த காலத் தில் சிரத்தையுடன் வென்று சுகமாய் அயோத்திக்குப் போய் பதி னுயிர வருஷம் ராஜ்யபரிபாலனஞ் செய்து, பரமபதத்தை யடைவா யென்று அனுக்கிரகஞ் செய்து மறைந்துபோயினள். (46–59)

பின்பு ராமர் சந்தோஷித்து விரதத்தைப் பூர்த்தி செய்து அநேக தானங்களைக் கொடுத்து நாரதரைப் பணிந்து, ஐயா! நீர் எனக்கு ஆசிரியராய் எழுந்தருளியபடியினு லல்லவா விரதபூர்த்தி யும் தேவி அனுக்கிரகமும் கிடைக்கப்பெற்றேன். இனிச் சீதையை யுங் கிடைக்கப் பெறுவேன். இவ்வரிய உதவி செய்த தேவரீருக்கு அடியேன் என்ன கைம்மாறு செய்ய வல்லேனென்று வணக்கத் துடன் சொல்ல, நாரதர் மகிழ்ந்து, ஓ ராமமூர்த்தி! உனக்கு வெற் றியும் மங்களமு முண்டாகுகவென்று ஆசீர்வதித்துப் போயினர். ராமர் சந்தோஷ சித்தராய் தசமிதினம் பிரயாணப்பட்டு யாவ ராலும் துதிக்கப்படும் கீர்த்திபெற்றுத் தம்பியினிடத்தில் மிகுந்த இஷ்டமுடையவராய் மகா சக்தியாலனுக்கிரகிக்கப்பட்ட வானர சைனியங்கள் சூழ்ந்துவரக் கடற்கரையை யடைந்து சேதுபந் தனஞ் செய்து லங்காபுரிக்குப்போய் தேவசத்துருவாகிய ராவ ணனைச் சங்கரித்துச் சுகமுற்றனர். எவன் பரமேஸ்வரியினுடைய அனுக்கிரக விசேஷத்தை வளர்க்கும் பக்தியோடு இந்த சிரேஷ்ட மாகிய சரித்திரத்தைக் கேட்கின்றனே, அவன் சகலமான போகத் தையும் அனுபவித்துத் தேகாந்தத்தில் பரமபதத்தை யடைவான். ஓ ராஜனே! மிகவும் பெரிதாய் அநேக புராணங்களிருந்த போதி லும் இந்த பாகவதத்துக்குச் சமானமாகா வென்பது என் அபிப்பி ராயமென்று வியாசமுனிவ ரருளியவாறு சூதபகவான் மகரிஷி களுக்கெடுத்துக் கூறினர். (60–62)

மூன்றும் ஸ்கந்தம் முற்றிற்று.

# நான்காம் ஸ்கந்தம்

कुटिलकचं कठिनकुचं कुन्दस्मितकान्ति कुङ्कुमच्छायम् ।
कुरुते विहृतिं काञ्च्यां कुलपर्वतसार्वभौम सर्वस्वम् ॥

குடிலகசம் கடினகுசம் குந்தஸ்மித காந்தி குங்குமச் சாயம்
குருதே விஹ்ருதிம் காஞ்ச்யாம் குலபர்வத ஸார்வபௌம ஸர்வஸ்வம்.

ஓம் ஹ்ரீங்காரமய ஸௌவர்ண ஸ்தம்ப வித்ரும புத்ரிகாயை நம:

## 1. பிறவிக்குக் காரணமென்ன ?

ஓ பரசிவசக்தி சொரூப விசாரத்திற் றெள்ளிய மனதுடைய எங்களையராகிய சூதமுனிவரே! நாங்கள் முன்னர் மூன்றும் ஸ்கந்தம் சொல்லியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்த வண்ணம் கிருபைகூர்ந்து ஜனமேஜயன் தேவீ சொரூபத்தை வினவியதும், பாகவதவுற்பத்தியும், திரிமூர்த்திகள் தேவியைக் கண்டதும், பின்னர் அம்மூவரும் ஸ்தோத்திரஞ் செய்ததும், அதன் பின்னர் பிரம்மாண்டவுற்பத்தி, முக்குணங்களின் சொரூபம், அவற்றுள் தமோ குணவிசேஷம் முதலியனவும், அதன்பின்னர் தேவீ மந்திர மகிமையை விளக்குவதாகிய சத்தியவிரதனுடைய சரித்திரம், சுதர்சனனுடைய சரித்திரம் முதலியனவும், அதன்பின்னர் தேவியினுடைய யஜ்ஞவிதிகளும், தேவியினுடைய மஹிமாதி வர்ணனமும், நவராத்திரி பூஜாவிதியும், அந்தப் பூஜையைச் செய்து வேண்டிய சித்திகளைப்பெற்ற ஸ்ரீராமர் முதலானோருடைய திவ்ய சரித்திரங்களும் அடங்கியுள்ளனவாகிய மூன்றுவது ஸ்கந்தத்தை நன்றுயருளிச் செய்தீர். அதனால் எங்களுடைய உள்ளத்தில் பராசக்தியினுடைய சொரூபம் முதலியன நிலைக்கப்பெற் றுய்யலானோம். இனி அப்பர தேவதையினருளால் ஏனையவும் கேட்டு மகிழத் தேவரீருடைய அனுக்கிரஹத்தை எதிர்ப்பார்க்கின்றவர்களா யிருக்கின்றோமென்று சவுனகாதியர் பிரார்த்திக்கச் சூதபகவான் நான்காவது ஸ்கந்தத்திலடங்கியுள்ள அற்புத சரித்திரங்களைச் சொல்லத் தொடங்கினர்.

ஜனமேஜய மகாராஜன் வியாசரைநோக்கி, ஓ சர்வக்ஞமூர்த்தியே! எங்களுடைய குலத்தை விருத்தி செய்தவரே! இன்னமும் தேவரீருடைய வாக்கினுல் பூர்வத்தில் நடந்த திவ்ய சரித்திரங்களையே கேட்கும் இச்சையுடையவனு யிருக்கிறேன்.

சூரசேனனுடைய குமாரராகிய ஆனகதுந்துபி என்கிற வசுதேவர் ஸ்ரீமானும், தருமத்தினிடத்தில் அபேக்ஷை யுள்ளவராயும், அதனால் பிரதாபமுடையவராயும், தேவர்களால் கொண்டாடத்தக்கவராயும், தேவகி தேவியை மனைவியாக வுடையவராயுமிருந்தாரென்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இதுவுமன்றி, இவ்வருஞ் சிறப்பினையுடைய இவரையும் இவர் மனைவியையும் யயாதி வம்சத்திற் பிறந்த கம்சன் விலங்கு பூட்டிக் காராக்கிருகத்தி லடைத்தனனென்றும், அவனே அந்தக் காராக் கிருகத்தில் அவர்களுக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும் வாளி னால் வெட்டினனென்றும், பின்னர் ஏழாவது பெண்பிறந்த தென்றும், அப்பெண் குழந்தையை அந்தக் கம்சன் ஒரு கற்பாறை யின் மீது மோதும்போது அது ஆகாயத்திற்போய் அஷ்ட புஜத் தோடும் கன்னிகையாய் நின்றதென்றும், அதன்பின்னர் விஷ்ணு மூர்த்தி எட்டாவது பிள்ளையாகப் பிறந்தாரென்றும், பின்னர் அவர் யாதவ குலத்தில் வளர்ந்தாரென்றும், அதன்பின்னர் யௌவன தசையில் அநேகம் கோபிகாஸ்திரீகளுடன் அநேக லீலைகள் செய்தாரென்றும், அதன்பின்னர் மரண மடைந்தாரென்றும் கேட்டிருக்கின்றேன்.

ஓ வியாசமுனிவரே ! வாசுதேவராகிய நாராயணருக்குக் கர்ப்ப வாசம் வரவேண்டிய காரணமென்னை ? பிறக்கவந்தவர் வசுதேவ ருக்கும் தேவகி தேவிக்கும் மகனாகவருதற்கும், வந்தபின்னர் யாதவ குலத்தில் வளர்வதற்கும், வளர்ந்தபின்னர் அநேகம் கோபிகா ஸ்திரீகளிடத்தில் லீலை புரிவதற்கும் காரணமென்னை ? இவருக்கு வசுதேவரும் தேவகி தேவியும் தாய்தந்தையராதற்கும், இவரைப் பெறும் புண்ணியமுடைய அவர்கள் காராக்கிருகத்தி லிருத்தற்குங் காரணமென்னை ? இவைகளெல்லாம் எனக்கு நன்றாய்ச் சொல்லுவ தோடு கிருஷ்ணமூர்த்தி அவதரித்து நடத்திய லீலாவிபூதியையும் நடந்த வண்ணம் எடுத்துரைப்பீரென்று பிரார்த்திக்கிறேன். நீரெடுத்துச் சொல்லுவதனால் விஷ்ணுமூர்த்தி பிறந்து அநேக ஸ்திரீகளோடு லீலை புரிந்தாரென்கிற விஷயத்தில் உண்டாயிருக்கிற புத்திப்பிரமை தெளிதல் வேண்டும். (1–10)

இப்பொழுது வினவிய வினாக்களேயன்றி, இன்னமும் சில வினாக்களுள. என்னையெனில், பழமையானவர்களாயும், ரிஷி சிரேஷ்டர்களாயும், தர்ம தேவதையினுடைய புத்திரர்களாயும், மகாத்மாக்களாயும், விஷ்ணுவினம்சபூதர்களாயு மிருந்த நர நாராயணர்கள் மோக்ஷார்த்தமான தபஸ்ஸித்திகளை யுடையவர் களாய் உலகக்ஷேம நிமித்தம் பதரிகாச்சிரமத்தில் ஆகாரசூன்யர் களாய் ஆசையற்றுக் காமக்குரோதாதிகளை யொழித்து அநேக வருஷகாலம் உத்தமமான தவத்தைச் செய்தார்களென்றும், மகா பலிஷ்டராகிய அந்த நர நாராயணர்களே கிருஷ்ணார்ச்சுனர்களா கப் பின்னர் அவதரித்தார்களென்றும் நாரதாதி மகரிஷிகளால் நன்றாய்ச் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ஓ வியாசமுனிவரே ! அநேககாலம் பிரமரிஷிகளாகவேயிருந்து யோகசித்திகளைப்பெற்று தேஜோரூபிகளாய்ப் பிரகாசித்த அவர்கள் வேறு தேகத்தை யடைந்து கிருஷ்ணார்ச்சுனர்களாக க்ஷத்திரிய குலத்திற் பிறக்கவேண்டிய காரணமென்னை ? சூத்திரன் தன் குலாசாரத்திற் றவராம லிருப்பானாயின் அவன் மறுபிறப்பில் க்ஷத்திரியனாகவும், க்ஷத்திரியகுலத்திற் பிறந்தவன் தன் குலாசாரத்

தில் தவறுதிருப்பாறுயின் அவன் மறுபிறப்பில் பிராமணறுயும், பிராமணறுகப் பிறந்தவன் ஆசையற்றவறுயும் ராகத்துவேஷ மில்லாதவறுயு மிருப்பாறுயின் அவன் ஜனனமரண ரகித றுவா னென்றுஞ் சொல்லியிருக்க, இந்த நர நாராயணருடைய ஜனன விசேஷம் விபரீதமாகவன்றோ விருக்கின்றது, ஐயா? தவத்திறுல் வலிய சரீரத்தை யுடையவர்களாயும் சாந்தர்களாயுமிருந்த அந்த நர நாராயணர்கள் எந்தச் சாபத்திறுல் க்ஷத்திரியராகப் பிறந் தார்கள், பிராம்மணர்களான அவர்கள் க்ஷத்திரியராகப் பிறந்த காரணத்தைச் சொல்லும்; இன்னமுஞ் சில கேள்விகளும் சந் தேகங்களு மிருக்கின்றன. (11–20)

முனிவரே! யாதவருடைய குலம் நாசமடைதற்குக் காரணம் பிராம்மணசாபமென்றும், கிருஷ்ணருடைய குலக்ஷயத்துக்குக் காரணம் காந்தாரியினுடைய சாபமென்றும், பிரத்யும்னன் சம்பரா சுரறுலே கொல்லப்பட்டானென்றுங் கேள்வி. அவன் அந்த வசுர றுல் எவ்வண்ணங் கொல்லப்பட்டான்? தேவசிரேஷ்டராகிய வசு தேவகுமாரராகிய கிருஷ்ணர் பிரசவக் கிருகத்திலிருக்கிறபொழுது அவருடைய அபஹரணமானது, மிகவும் கஷ்டமென்று கேட்டிருக் கிறேன்; இவையன்றி அந்தக் கிருஷ்ணர் துவாரகாபுரியில் போவ தற்குக்கூடாத கோட்டை மத்தியிலுள்ள கிருகத்தில் நடந்த செய்தியை ஏனறியாமற்போயிறுர்? பிறராவது சொல்லி யிருப்பார் களே! அவர்கள் சொல்லாமற் போனபோதிலும் தம்முடைய யோக திருஷ்டியிறுலாவது தெரிந்துகொள்ளலாமே! ஓ பிராம்மணரே! இந்தச் சந்தேகங்கள் மிகப் பெரியவையாயிருக்கின்றன. (21–26)

இன்னமும் கிருஷ்ணருடைய பத்தினிகள் திருடரா லடிக்கப்பட் டுக் கொள்ளையிடப் பட்டார்களாம். தேவதேவேசராகிய கிருஷ்ண மூர்த்தி சுவர்க்கமடைந்தபொழுது இவைகளெல்லா மெப்படி நடந்தன? இவையாவும் நினைக்கின்றபொழுது என் சித்தத்துக்குக் கலக்கமுண்டாகிறது. விஷ்ணுவினுடைய அம்சமே பூபாரம் போக் கக் கிருஷ்ணராய் இப்படி வந்ததென்று சொல்லுகிறுர்கள். அப்படி யாறுல், அந்த விஷ்ணுவாகிய கிருஷ்ணர் பயத்திறுல் மதுரா நகரத்தைவிட்டுத் துவாரகையில் சைனியங்களோடும் சிநேகர்க ளோடும் போய்ச் சேர்ந்தாரென்கிறுர்களே, இது எவ்வளவு குறை வானது? அன்றியும், அந்தக் கிருஷ்ணமூர்த்தி பாவத்தைப் போக் கடிக்கவும், தருமஸ்தாபனஞ் செய்யவும் அவதரித்தாரென்கிறுர்கள். அப்படியாறுல் அவர் ஸர்வஜ்ஞரும் ஸத்யஸந்தருமாயிற்றே! அவர் தன்னுடைய பத்தினிமார்களை மானபங்கஞ் செய்யத்தக்கவர் களான அக்கள்வரைப் பாரதயுத்தத்தில் யாவரையுங் கொன்ற பொழுது ஏன் கொன்றிருக்கக்கூடாது? கொல்லத்தக்கவர்களாகிய கள்வரைக் கொல்லாது கொல்லத்தகாதவர்களாகிய பீஷ்மர், துரோணர் முதலாயிறுரைக் கொன்று சமாதானங்கூறி யிருக் கின்றுரல்லவா? உத்தமர்களாகிய பாண்டவர்கள் யாவராலுங் கொண்டாடத்தக்க பிரசித்தியுடையவர்களென்றும், தருமத்திலா ஸக்தி யுடையவர்களென்றும், எப்பொழுதும் கிருஷ்ணரையே

ஆஶ்ரயித்து அவரிடத்தில் பக்தியுள்ளவர்களா யிருந்தார்களென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. அவர்கள் யஜ்ஞ ஶ்ரேஷ்டமாகிய ராஜசூயத்தை விதிப்படிச்செய்தும், பிராம்மணர்களுக்கு அவர்கள் கேட்ட அளவன்றி அதிகமாகத் தானங்கொடுத்தும், சகிப்பதற்குக் கூடாததான துக்கத்தை ஏன் அடைந்தார்கள்? அந்தப் புண்ணியம் எங்குப்போய்விட்டது? இவர்களுக்கு அது ஏன் சித்திக்கவில்லை? அவர்கள் புண்ணியத்தைக் கீழ்ப்படுத்திய அந்தப் பாவம் எத்தன்மையது? எந்தக்காரணத்தினுல் அத்தன்மையாகிய துன்பத்தை யடைந்தார்கள்? (27–34)

இவர்கள் நிற்க, திரௌபதியோ மஹாநுபாவிநி; அக்னி குண்டத்தி லவதரித்தவள்; லக்ஷ்மியினுடைய அம்சீபூதை; நல்லொழுக்கத்திற் சிறந்தவள்; கிருஷ்ணரிடத்தில் பக்தியுள்ளவள் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அவ்வளவு மகிமையோடு கூடிய திரௌபதியானவள் *ரஜஸ்வலையாய்த் தனிவஸ்திரத்தோடிருக்கிறபொழுது துச்சாசனன் கூந்தலைப் பிடித்திழுத்துவந்து சபையில் மிகவும் பயத்துடன் நிற்கச்செய்து சேலையை யிழுத்தானென்றும், விராடதேசத் தரசனிடத்தில் ஊழியஞ் செய்தாளென்றும், அவ்விடத்திற்றானே கீசகனுல் இம்சிக்கப்பட்டுக் கூக்குரலிட்டழுதாளென்றும், ஒரு சமயம் ஜயத்ரதனுல் அபகரிக்கப்பட்டுப் பின்னர் பலிஷ்டர்களாயுள்ள பாண்டவர்களால் விடுபட்டாளென்றும், இதுபோலும் அனுபவிக்கக்கூடாத பலவிதமான பங்கங்களையும், அதிகோரமான பல துக்கங்களையும் அடிக்கடி யடைந்தாளென்றுங் கேட்டிருக்கிறேன். (34–38)

இப்படிப்பட்ட துன்பங்களெல்லா மவளனுபவிப்பதற்குப் பூர்வ ஜன்மத்திற்செய்த பாவங்களுடைய சொரூபம் எப்படிப்பட்டதோ தெரியவில்லை. என்னுடைய முன்னோர்களாகிய தேவாம்சமுடைய பாண்டவர்கள் யஜ்ஞசிரேஷ்டமாகிய ராஜசூயத்தைச் செய்து அநேகமான துக்கத்தை யனுபவிக்கவந்தது பூர்வ ஜன்ம பாவ சம்பந்தத்தினுல் உண்டானதென்கிற விஷயத்தில் எனக்கு அதிக சந்தேகமுண்டா யிருக்கின்றது. நல்லொழுக்கமுள்ள குந்தி புத்திரரும் ஞானமுள்ளவருமான பாண்டவர்களால் துரியோதனுதியர் கொண்ட பொருளாசை நிமித்தமாகக் கபடத்தினுல் பீஷ்மத் துரோணுதிகளெல்லாம் ஹிம்சிக்கப்பட்டிருக்கிறுர்கள். இன்னமும் அநேக ராஜாக்களெல்லாம் நாசத்தை யடைந்தார்கள். இவர்களெல்லாம் இவ்வாறு ஹிம்சையடையவும் ரணகளத்தி லிறக்கவும் குலநாசமாய்ப் போகவும், பரமாத்மாவென்று சொல்லப்பட்ட வசுதேவ குமாரராகிய கிருஷ்ணர் பிரேரக கர்த்தாவா யிருந்தாரென்றும் கேட்டிருக்கிறேன். உலகில் பெரியோர்களுக்கு ஜீவனுேபாயமானது பிக்ஷான்ன போஜனமென்றும், அது கூடாதபக்ஷத்தில் செந்நெல் விளைவித்துண்ண வேண்டுமென்றும், அதுவும் கூடாதாயின் பொருளாசையினுல் ஒருவரைத் துன்பப்படுத்தாமல் ஏதேனு மொரு

* மாதவிடாய்

தொழில் செய்துண்ணவேண்டுமென்றும் சொல்லப்பட் டிருக்கிறது. இந்தக் கிருஷ்ணர் இந்தவிதங்களில் ஒன்றினுல் ஜீவித்து நாள் கழிக்கக் கூடாதா? நாசத்தை யடைந்துபோன இந்த வம்சமானது உத்தாரண மாகவேண்டுமென்று கோளகர்களாகிய மகா வீரமுடைய திருதராஷ்டராதியரை நீருண்டாக்கிக் காத்தீரல்லவா ? அந்த வம்ச மானது இந்தக் கிருஷ்ணமூர்த்தியினுலே நாசத்தையடைந்து அதிற்றப்பிப்பிழைத்த உத்தரா தேவியினுடைய குமாரராகிய பரீக்ஷித்து சிலகாலத்துக்குமுன் மகரிஷியினுடைய கண்டத்தில் ஸர்ப்பத்தைப்போட்டுத் துர்மரணத்தை யடைந்தார். என் தந்தையாகிய அவர் மோனநிலையிலிருந்த மகரிஷி விஷயத்தில் என்ன தீங்கு செய்தார் ! இஃதுவென்ன வாச்சரியம் ! க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்த எவனும் பிராமணனைத் தூஷிக்கமாட்டான். இப்படிப்பட்ட சந்தேகங்களால் என் மனது சிறிதும் சுகமடையவில்லை. ஓ தயாநிதியே ! நீர் ஸர்வஜ்ஞராகையால் என் மனத்தைச் சுகப் படுத்து மென்று பிரார்த்தித்தனன். (39–48)

ஓம் ஹ்ரீங்கார வேதோபநிஷதே நம:

## 2. கர்மமே காரணம்

ஓ முனிகணங்காள் ! புராணம் முதலிய நூல்களின் உண்மை யைச் சொல்வதிற் சதுர்ப்பாடுடைய வியாசர் பரீக்ஷித்தென்னும் மகாராஜனுடைய குமாரனும், இந்திரிய நிக்ரஹனுமான ஜனமே ஜயனுடைய சந்தேகங்களெல்லாம் நிவிர்த்தியாம் வண்ணம் விடை கூறத் தொடங்கினுர் :

ஓ அரசனே ! கர்மத்தினுடைய பலப்பிராப்தியானது அளவி டக் கூடாததாயிருக்கின்றது. அதனை நானென்னவென்று சொல்லு வேன் ! இப்பிரமாண்டம் முக்குணசம்பந்தமா யுண்டானது. அது எப்பொழுது முக்குணசம்பந்தமாக உண்டாயிற்றோ, அப்பொழுதே தேவமானிடராதியாயுள்ள சகல ஆன்மாக்களும் கன்மகதியிலகப் பட்டவைகளே. அந்தக் கன்மகதியை அறிவதற்குக் கூடாம லிருக்கிறது. ஆகவே நீ சொல்லிவந்தவர்களுடைய கன்மகதியைப் பற்றி என்ன விசாரஞ் செய்வதற்குக்கூடும் ? எவருடைய தேகோற் பத்தியும் கன்மத்தைவிட்டாவதில்லை. இதிற் சந்தேகமில்லை. ஜீவ கோடிகளோ ஆதியந்தமில்லாதன. இவைகள் கன்ம பீஜத்தினுல் பலமுறை அநேகவிதமான யோனிகளிலே பிறக்கின்றன ; மரண மடைகின்றன. கன்ம சம்பந்தமில்லாமல் உற்பத்திநாசங் கிடையா. ஜகத்துற்பத்திக்குக் காரணமாகிய நல்வினை தீவினை ரூபமான புண் ணியபாவ மிச்ரமாயுள்ள கன்மங்கள் சஞ்சிதம் ஆகாமியம் பிரா ரப்தமென மூன்றுவிதமா யிருக்குமென்று தத்வார்த்தந் தெரிந்த வர்களாகிய பண்டிதர் சொல்லுவர். இம்மூன்ருேடுங் கூடியதே தேகம். ஆகவே தேகதாரிகளாகிய பிரமன் முதலிய யாவரும் அந் தச் சஞ்சிதாதிகளுக்கு உட்பட்டவராவரேயன்றி அவைகளுக்கு அப்

புறப்பட்டவராகார். எப்படியென்ருல், அவர்களிடத்தில் சுகம், துக்கம், மூப்பு, மரணம், சந்தோஷம், பிறரைப்பற்றிய சோகம், ஆகிய இவைகளுண்டாயிருத்தலைக் காண்கிருேம். ஓ அரசனே ! காமக்குரோதலோபங்களும் மற்றுமுள்ள குணங்களும் சரீரதாரிகளாயிருக்கிற யாவரிடத்தும் காலவசத்துக்கீடாயுண்டாகின்றன. இந்தக் குணங்களுக்குரிய செய்கைகளை இவ்வுலகில் எப்படிக் காண்கின்ருேமோ அப்படியே இராகத்துவேஷாதிகளுடைய செய்கைகளெல்லாம் சுவர்க்காதி லோகபேதங்களிலு மிருக்கின்றன. இதனுல் தேவயோனி மானிடயோனி திரியக்யோனிகளாயுள்ள எந்த யோனிகளிலும் தேகமுண்டாகிறபொழுதே, இப்பொழுது சொல்லிவந்த குணவிகாரங்களெல்லாம், உண்டாகத் தக்கவைகளென்று அறியற்பாலது. அதற்குச் சில வனுபவம் கூறுகின்றேன் : முன் ஜன்ம சம்பதத்திலுண்டாகிய துவேஷத்துக்கீடாகவும், சிநேகத்துக் கீடாகவும், இந்த ஜன்மத்தில் அவரவர்க்கவை யுண்டாகின்றன. இவ்விதமான கன்மசம்பந்த மில்லாமல் பிராணிகளுக்கு உற்பத்தி யுண்டாகிறதில்லை. சூரியன் உலகைச் சுற்றிவருவதும், சந்திரன் க்ஷயரோகியா யிருப்பதும், சாஶ்வதமா யிருக்கின்ற தாவர ஜங்கமமாகிய சகலப் பிரபஞ்சமும் அசைதலும் அசைவில்லாதிருத்தலும் கன்மமே. இதனுல் யாவும் கன்மசம்பந்தமாகவே யுள்ளனவென் றறியற்பாலது. இவைகளுடைய நித்தியாநித்திய விசாரத்தில் முனிவர்களும் மூழ்கிக்கிடக்கின்ருர்கள். ஏனெனில், பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகிற மகாமாயையினுல் அநித்தியத்தையுடைய ஜகத்தே நித்தியமாய்க் காணப்படுகிறது. அதனுல் நித்தியமானது இன்னதென்றும், அநித்தியமானது இன்னதென்றும் அறிவதற்கில்லை. ஆயின் நித்தியமெது, அநித்திய மெதுவெனின், மாயையுங் கன்மமும் நித்தியம். கன்மத்துக்கீடாய் மாயையினின்றுங் காரியப்படும் ஜகத்து அநித்தியம். இந்த நித்தியமாகிய மாயையைக் காரணமென்றும், அநித்தியமாகிய ஜகத்தைக் காரியமென்றுங்கூறுவர். பண்டிதர்களால் எப்பொழுதும் சிந்திக்கத்தக்கதாகிய நித்தியமாகிய கன்மமானது பீஜமா (காரணமா) யிருக்கின்றபொழுது காரியத்துக்கு அபாவ (இல்லாத) லக்ஷணம் எவ்வாறு சொல்லக்கூடும்? (1–17)

ஓ அரசனே ! அளவிறந்த தேஜசோடுங் கூடிய விஷ்ணுமூர்த்தியானவர் தருமநிமித்தமாய் யுகங்கடோறும் அவரிச்சைப் படியே நானுவிதமான இழிந்த யோனிகளில் ஜனித்தனரே, அது நானுவிதமான கன்மப் பிரேரேபணையினுலல்லவா ? அந்தப் பிரேரேபணையில்லையாயின் வைகுண்டத்திலுள்ள அநேகமாகிய சுகபோகங்களையும், அவ்விடத்தில் தானும் பத்தினியுமாய்ச் சென்டாடுவதையும் ஜலக்ரீடை செய்வதையும், சுகாசனத்தில் வீற்றிருப்பதையும் விட்டு ஈனயோனிகளில் பயந்தவராய், மலமூத்திரமயமாகிய கர்ப்பத்திலேன் பிறக்கவேண்டும்? அந்தோ ! அதிலெவன்ருன் வசிப்பான் ? தேவசிற்பியினுல் மிகவும் மிருதுவாக நிர்மிக்கப்பட்ட அம்சதூளிகா மஞ்சத்தைவிட்டுக் கர்ப்பமாகிய கிருகத்

தில் வசிப்பதற்குப் புத்திமானுயுள்ளவ னெவன்றான் அபேக்ஷிப்பான்? எவன் நானாவிதமான சிருங்கார பாவங்களோடு கூடிய கானத்தையும் நாட்டியத்தையும் விட்டு நரகஸ்தானத்தில் தலை கீழா யிருத்தலாகிய அதோமுகவாசத்தை அபேக்ஷிப்பான்? எவன் அற்புதமா யெண்ணத்தக்க இனிமையாகிய பாற்கடலில் வசிப்பதைவிட்டு நரகத்தில் வசிக்க இச்சிப்பான்? எந்தப் புருஷன் மலமூத்திர சம்பந்தமான ஸ்தன்னியபானத்தை இச்சிப்பான்? இந்த மூன்றுலகத்திலும் கர்ப்பவாசத்தைக் காட்டிலும் வேறான நரகமுமுண்டோ? இதையறிந்தன்றோ முனிவர்கள் கர்ப்பவாசத்திற்குப் பயந்து ராஜ்யத்தையும் போகத்தையும் விட்டு வனத்திற்குப் போய் திடசித்தர்களாய்ச் செய்தற்கரிய தவத்தைச் செய்கின்றார்கள். எந்த முழுமூடன்றான் பயத்தை விளைவிக்கத்தக்க கிருமிகள் துளைக்கவும், ஜாடராக்கினி கொளுத்தவுமாயுள்ள கர்ப்பஸ்தானமாகிய துக்கவாசத்தை எந்தக் காரணத்தினால் ஆச்ரயிப்பதற் கிச்சிப்பான்? ஓ அரசனே! அந்த கர்மஸ்தானமானது ஒரு சிறிய பையிலிருக்கப்பட்டதுபோல் மிகவும் நெருக்கத்தை யுண்டாக்குவதாகலான் அது என்ன சுகத்தைக்கொடுக்கும்? இதிற் கட்டுப்பட்டிருப்பதைப் பார்க்கினும் விலங்கைக் காலிற் பூட்டிக்கொண்டுலாவுவது சுகமென்று நீ நினைக்கத்தக்கது. இதனினும் யமலோகத்தில் வசிப்பது மிகவும் சுகம். ஆகையால், இக் கர்ப்பவாசம் ஒருபொழுதும் சுகத்தைக்கொடுப்பதன்று. அதில் வசிக்கும் ஒரு கணப்பொழுதை ஒரு கர்ப்பகாலமாகக் கூறல் வேண்டும். இவ்வளவு கஷ்டமாகவிருக்கும் அதில் பத்துமாதம் வசிப்பதென்றால் அது எவ்வளவு பெருந்துன்பம்! அதனினும் அச்சிறிய யோனித் துவாரத்தினின்றும் வெளிப்படுவது மிகவுங் கஷ்டமாம். (18–28)

இவ்வளவு கஷ்டத்தோடும் பிறந்த பின்னராவது சுகமுண்டோ வெனின், சிசுப்பிராயத்தில் பேசவறியாமல் அஜ்ஞானமயமாயிருப்பதாகிய துக்கமும், பசி தாகம் முதலியவற்றைத் தெரிவிக்கக்கூடாத துக்கமும், தன்னறிவால் செய்துகொள்ளற்பாலன சிறிதுமின்றிப் பரதந்திரமாய் மாதா பிதாக்களுக்கு மிகவும் பயந்திருத்தலாகிய துக்கமும், இதுவுமன்றி அந்தக் குழந்தைப் பருவத்தில் பசியினால் அழுகிறபொழுது தாய் பசியினாலென்றறியாமல் நோய்வந்துவிட்டதென்று சிந்தாகுலமுடையவளாய் மருந்து கொடுப்பதற்குத் திடமாகித் துணிந்து அதை உண்பிக்குங்காலத்தில் படுந்துன்பமும், இதுபோலும் அவ்வப்பருவங்களில் மேன்மேலும் விளைவதாகிய துக்கங்களும் எண்ணத்தொலையா. இவ்விதமான துன்பத்துக்கு நிலைக்களமாகிய பிறப்பில் என்ன சுகமிருக்கிறதென்று தேவர்களாயுள்ளவர்கள் இதனை யபேக்ஷிப்பார்கள்? பிறவித்துன்பத்தையும் மறந்து தேவர்களோடு கூடியிருக்கின்ற சுகத்தையும் விட்டுத் துன்பத்தைக் கொடுப்பதாயும், சுகத்தைக் கெடுப்பதாயுமுள்ள யுத்தத்தைச் செய்வதற்கு எந்த மூடன்றான் இச்சிப்பான்? ஓ அரசனே! பிரம்மாதி தேவர்களெல்லாம் தாங்கள் தாங்கள் செய்த

கன்மப் பகுதிகளுக்கீடாகச் சுக துக்கங்களை யனுபவிக்கின்றார்கள். புண்ணியகர்ம சுகானுபவம் எப்படி அனுபவிக்கின்றோமோ அப்படியே பாவகர்ம துக்கானுபவமும் அவசியமா யனுபவித்துத் தீரவேண்டியதாகும். எப்படியென்றால், மானிடனாயுள்ளவன் அரிய தவங்களையும் தானங்களையுஞ்செய்து இவ்வுலகவாழ்வை விட்டு இந்திரப்பட்டத்தை யடைகிறான். அவ்வுலகில் இந்திரனா யிருந்தவன் புண்ணியக்ஷயமுண்டாகுங் காலத்தில் அவ்வுலக வாழ்வைவிட்டுக் கருமபூமியில் வந்து வீழ்கிறான். இதில் சந்தேகம் வைத்துக்கொள்ளவேண்டாம், உண்மையே. இதற்குச் சில திருஷ்டாந்தங் கூறுகின்றேன். ராமாவதாரத்தில் தேவர்களெல்லாங் குரங்குகளாகப் பிறந்தார்கள் ; அதுபோலவே கிருஷ்ணாவதாரத்தில் யாதவர்களாகப் பிறந்தார்கள். இவ்வண்ணமே யுகந்தோறும் நாராயணர் தருமபரிபாலன நிமித்தம் பரமேஸ்வரனால் பிரேரேபிக்கப் பட்டவராய், நானாயோனிகளில் தசாவதாரமும் ஏனைய அவதாரங் களும் அடிக்கடி தேருருளையைப்போல் ஆச்சரியகரமாகப் பல முறையு மெடுத்து வருகின்றார். ஆனால் மகாத்மாவாகிய விஷ்ணு வினுடைய அம்சங்கள், அவதார புருஷர்களாகப் பூமியிற்பிறந்து வருவதெல்லாம் அசுரர்களைச் சங்கரிக்கும் பொருட்டேயாகும். அஃது அவரது காவற்றொழிலுக்கு முக்கியமான தருமமென்றறிதல் வேண்டும். (29–39)

ஓ அரசே ! இனி க்ஷேமகரமாகிய கிருஷ்ணாவதார வைபவத் தைச் சாங்கமாகச் சொல்லுகிறேன், கேட்பாயாக. பகவானாகிய அந்த விஷ்ணுவே கிருஷ்ணமூர்த்தியாக யாதவ குலத்தில் அவதரித் தனர். வசுதேவர் காசிபருடைய அம்சம். அவருக்கு முன் நேரிட்ட சாபத்தால் பசுக்களை மேய்த்தலாகிய தொழில் வந்தது. அந்தக் காசிபருடைய பத்தினிகளாகிய அதிதியும் சுரசையும் வருணனால் கொடுக்கப்பட்ட சாபத்தால், அதிதியானவள் தேவகி என்றும், சுரசையானவள் ரோகிணியென்றும், பூமியிற் பிறந்தனர். (40–43)

வியாசமுனிவர் இவ்வாறு சொல்லவும், அரசன் அவரைப் பார்த்து, ஓ ஸர்வஜ்ஞரே ! மகரிஷியாகிய காசிபர் எவ்விதமான பாவஞ்செய்து யாவரால் சாபமேற்றுத் தன் மனைவிகளுடன் எப்படி பூமியிற் பிறந்தார் ? அதனைச் சொல்லவேண்டும். வைகுண்டத்தில் வசிக்கின்றவராயும் லக்ஷ்மீ நாயகராயும் அகண்டிதராயும் பகவா னாயுமுள்ள விஷ்ணுமூர்த்தியானவர் அந்தக் கோகுலத்தில் எப்படி யுண்டாயினர் ? நாசமில்லாதவராயும் ஸர்வவியாபியாயும் எல்லாவற் றையுந்தரித்திருக்கின்றவராயும் சிருஷ்டிக்காதியாயும் தேவஶ்ரேஷ்ட ராயும் பகவானாயுமிருக்கின்ற நாராயணரானவர் யாருடைய ஆஜ்ஞையினாலிருக்கின்றார் ? ஒருவருடைய ஆஜ்ஞையி லில்லாதவ ராயின் தன்னுடைய ஆஸ்தானத்தைவிட்டுக் கர்ப்ப சம்பந்தமுடைய மானிடன்போல யோனியில் எந்தக்காரணத்தால் ஜனனமெடுத்தார்? இவ்விஷயத்தில் எனக்கு மிகவும் சம்சயமாயிருக்கிறது. மானிட தேகத்தை எப்பொழுது படைத்தனரோ அப்பொழுதே பிறவிக்

கேற்ற தொழிலைச் செய்திருப்பாரல்லவா? துஷ்டஜன்மமாகிய மானிட ஜன்மத்தில் நானாவிதமான குணபாவங்களையுடையவரா யிருப்பாரல்லவா? காமம், குரோதம், அசூயை, துக்கம், வைரம், ப்ரீதி, சுகம், பயம், சோகம், தீனத்வம், சொல்லியவண்ணமிருத்தல், பாவவசனம், புண்ணியவசனம், கொல்லுதல், பாதுகாத்தல், புத்தி சலனப்படுதல், தாபம், நம்பகம், ஓயாமல் வீண்வார்த்தையாடல், ஆசை, டம்பம், அஞ்ஞானம், கபடம், பிறருக்கு வருத்தமுண்டு பண்ணுதல் இவைபோலுமுள்ள அநேக குணபாவங்கள் மானிட ஜன்மத்திலுண்டாகின்றன. அந்த மானிட ஜன்மத்தை அந்தப் பக வானாகிய விஷ்ணுமூர்த்தி சாஸ்வதமாகிய சுகத்தைவிட்டு ஏனெடுத் தனர்? ஓ முனீஸ்வரரே! அந்த மனிதப் பிறப்பையடைந்து என்ன சுகத்தைக் கண்டனர்? சாக்ஷாத் நாராயணர் எந்த நிமித்தமாய் ஒரு சுகமுங் காணப்பெறாத இந்தப் பிறப்பை எடுத்தற்குக் கர்ப்ப வாசத்தை யடைந்தனர்? கர்ப்பதுக்கம், ஜனனதுக்கம், பாலப் பருவத்திலுண்டாகும் அஞ்ஞான துக்கம் என்று சொல்லப்பட்ட இவைகளுக்கெல்லாம் யௌவனமுடையவனாய்க் கிருகஸ்தாஸ்ரமத் திலிருக்கும்போதுண்டாகும் காம துக்கம் அதிகமான துக்கமாகும்.

பகவானாகிய விஷ்ணு மானிடயோனியில் அவதாரங்களைச் செய்து இத்துக்கங்களை ஏனடைந்தனர்? அந்தோ! வேதமூர்த்தி யாகிய நாராயணர் ராமாவதாரத்தில் மிகவும் பயங்கரமான வனங் களில் அதிக துக்கத்தையடைந்தார். அதாவது, சீதையை விட்டுப் பிரிந்தபோதும் அடிக்கடி யுத்தம் நேரிட்ட காலத்தும், அதனால் ராக்ஷச விரோதமுண்டாய் மனைவியைக் கொண்டுபோன காலத் தும் உண்டாகிய துக்கங்களாகும். இந்த அவதாரந்தானிப்படிப் போனபோதிலும், கிருஷ்ணாவதாரத்திலாவது சுகமுண்டோ வெனின், பிறந்தது க்ஷத்திரியர் வீட்டில்; வளர்ந்தது இடையர் வீட்டில்; விளையாடியது மாடுகளிடத்தில்; கம்சனைக் கொன்றது கஷ்டப்பட்டு; மதுரையை விட்டுக் குடிபுகுந்தது துவாரகையில் இவ்வாறெல்லாம் பகவானாகிய அவர் நானாவிதமான இந்த ஸம்ஸார துக்கத்தை ஏன் அனுபவித்தார்? ஞானவானாயும் முக்தாத்மாவாயு முள்ளவன் தன்னுடைய இச்சையினாலே துக்கங்களை அபேக்ஷிப் பானா? ஓ ஸர்வஜ்ஞரே! என்னுடைய சித்தந் தெளியும் வகை யாகச் சந்தேகங்களை நிவிர்த்தி செய்யவேண்டுமென்று ஜனமே ஜயன் வியாசபகவானை வினவியதாகச் சூதமுனிவர் சௌனகாதி யருக்குக் கூறினார். (44–60)

ஓம் ஹ்ரீங்காராத்வர தக்ஷிணாயை நம:

## 3. வசுதேவன் பிறந்த காரணம்

வியாசமுனிவர் ஜனமேஜயனை நோக்கி, விஷ்ணுவினுடைய அவதாரத்திற்கும் ஏனையோருடைய அவதாரங்கட்குங் காரணங்கள் அநேகமிருக்கின்றன. அவையெல்லாம் நிற்க, இப்பொழுது வசு

தேவர், தேவகி தேவி, ரோகிணி என்று சொல்லப்பட்டவர்களுடைய அவதார காரணத்தைச் சொல்லுகிறேன் என்றருளியதைச் சூதபகவான் மகரிஷிகளுக்குக் கூறத் தொடங்கினார் :

ஒரு காலத்தில் மகானுகிய காசிபர் யாகநிமித்தமாய் வருணனுடைய பசுவை அபகரித்தனர். பின்னர் அவ்வருணன் காசிபரையடைந்து பலவிதமாய்க் கேட்டும் யாசித்தும் அவர் கொடுக்காதிருக்கப் பிரமனிடம்போய் நமஸ்கரித்து தீன பாவத்தோடும் நின்று ஓ ஐயா! காசிபர் என்னுடைய பசுக்களை அபகரித்தனர். அதை நானறிந்து அவரிடம் சென்று கேட்டேன். கேட்டும் கொடுப்பதில்லை. இனி நானென்ன செய்வேன்? இனி நானவரைச் சபிக்கப் போகிறேனென்று சொல்லிவிட்டு அக்காசிபர் மானிடயோனியில் யாதவனுய்ப் பிறக்கக் கடவரென்று சபித்தனன். பின்னருங் கோபந் தணியாது அவருடைய மனைவியரையும் மானிட ஜன்மத்திற் பிறந்து தாயைப் பிரிந்த கன்றைப்போல் அளவுபடாத துக்கத்தையடையக் கடவர்களென்று சபித்தனன்.

ஓ அரசனே! இருவரில் இவ்வுலகில் அதிதியானவள் பிறந்தவுடன் துர்மரணத்தை யடையத்தக்க குழந்தைகளை யுடையவளாகவும், அதிக துக்கத்தை விளைவிக்கும் காராக்கிருகத்தில் வசிப்பை உடையவளாகவுமாயினள். ஓ பூபாலனே! பிரமதேவன் அந்த வருணனுடைய சாபத்தைக் கேட்டுக் காசிபரை வரவழைத்து, ஓ மஹானுபாவனே! எந்தக் காரணத்தினுல் நீ திக்பாலகனுகிய வருணனுடைய பசுக்கூட்டங்களை யபகரித்தனை? மறுபடி கேட்கும் போதும் ஏன் கொடுக்கவில்லை; இஃதுவென்ன அநியாயம்? நீ நீதி தெரிந்தவனுயிருந்தும் பரதிரவியாபகரணத்தை எப்படிச் செய்யத் துணிந்தனை? இது மிகவும் அநீதியானது. மேலும் நீ எல்லாமறிந்தவன். அந்தோ! இந்த லோபத்தினுடைய குணம் ஆச்சரியம்! ஆச்சரியம்!! இதுவல்லவா நரகத்தைக் கொடுப்பதாகிய பாபரூபமாய்ப் பெரியோர்களுக்கு அசம்மதமாயுள்ளது. இது எவரையும் விடுகிறதில்லையல்லவா வென்றெண்ணி, இக்காசிபனும் அந்த லோபகுணத்தை விடுவதற்குக் கூடாதவனுயிருக்கிறுன், நாமென்ன செய்கிறது? எந்த விதத்திலும் லோபகுணமானது யாவராலும் விடுவதற்குக் கூடாமையா யுள்ளதென்று நிச்சயிக்கிறேன். சாந்த சித்தத்தை யுடையவர்களாய்ப் பிறரிடத்தில் யாசிக்காதவர்களாயிருக்கின்ற வைகானசர் முதலிய பெரியோர்களே இந்த லோபகுணத்தை ஜயித்தவராகையால் அவர்கள்தான் தன்யர்களென்றும் சாந்தர்களென்றுஞ் சொல்லப்படுவர். ஸம்ஸாரத்தில் பலிஷ்டமாகிய சத்துருவானது லோபகுணமே; அசுத்தத்திற்கு முதன்மையானதும் அதுவே. இக்காசிபன் துஷ்டத் தொழிலைச் செய்தானல்லவா வென்று கோபித்துப் பின் புத்திரனல்லவாவென்று சிறிது மனமிரங்கிக் காசிபனைப் பார்த்து, நீ பூமியில் ஓரம்சமாக யாதவகுலத்தில் உன் மனைவியரோடு ஜனித்துக் கோக்களை மேய்த்துக் காத்துவருவாய் என்று, ரக்ஷிக்கவேண்டு மென்கிற வெண்ணத்துடன் சபித்தனர். காசிபர் வருணனுலும் பிரமனுலும் பூபார

நிவிர்த்தியின்பொருட்டு அவ்வாறு சபிக்கப் பட்டவராயினர். அவ் வண்ணமே அவருடைய பத்தினிகளாகிய திதியையும் அதிதியை யும் சபித்தனர். அவருள் அதிதியை நோக்கி, உனக்குப் புத்திரர் எழுவருண்டாவர். அந்த எழுவரும் பிறந்து பிறந்து அப்பொழு தப்பொழுதே இறந்துபோகக் கடவார்களென்றனர். அதைக் கேட்ட ஜனமேஜயன், ஓ வியாசரே! இந்திரனுடைய மாதாவாகிய திதிக்குத் தங்கையாகிய அதிதியானவள் எந்தக் காரணத்தினல் சோகமேலிட்டிருப்பதாகிய கர்ப்பத்தைப் பெறலாயினள், அதனைச் சொல்லல் வேண்டுமென்று கேட்க, வியாசர் மனவெழுச்சியுடன் அதன் காரணத்தை அடியில் வருமாறு சொல்லத் தொடங் கினர் : (1–20)

ஓ ஜனமேஜயனே! உத்தமர்களாகிய திதி அதிதி என்கிற இரண்டு ஸ்திரீகளும் தக்ஷப்பிரஜாபதியினுடைய பெண்களாகும். இவர்கள் காசிபருக்கு மனைவியரானர்கள். அதிதிக்கு இந்திரன் மகனைப் பிறந்து அதிபராக்கிரம சாலியாயுலாவினன். அவனைக் கண்ட திதியானவள் அவனைப்போலும் ஒரு புத்திரன் தனக்குண் டாகவேண்டுமென் றபேக்ஷித்து ஒருநாள் தன் நாயகனைப் பார்த்து, எனக்கு மேன்மையைத் தரத்தக்க நாயகனே! இந்திரனுக்குச் சமானமான பராக்கிரமத்தையுடையவனும், மகாவீரனும், தர்மாத்மாவாயுமுள்ள ஒரு புத்திரனுண்டாகவேண்டுமென்று விண் ணப்பஞ் செய்தனள். காசிபர் கருணை யுடையவராய், ஓ என்னன் புடையாளே! உனக்கு நானெரு விரதத்தைச் சொல்லுகிறேன். அந்த விரதத்தை என்னுணை கடவாமல் நடத்துவையாயின் அந்த விரதபூர்த்தியில் உன் வேண்டுகோளின்படி இந்திர சமானனுகிய புத்திரன் உனக்குண்டாகிறனென்று அனுக்கிரகஞ் செய்தனர். அது கேட்ட திதியானவள், தேவரீர் சொல்லுகிறபடியே செய்கிறே னென்று சொல்லி அவரால் விதிக்கப்பட்டபடியே பரிசுத்த முடைய வளாய்த் தியான நிலையினின்று ஆகார நிவிர்த்திசெய்து பாலருந்தி உறங்கும்போது பூமியிற் கிடந்துறங்கி வேறு சிந்தனை யின்றி விரதத்தை முடித்தனள். அவ்விரத பலத்தால் மனேகரமாகிய கருப்பமுண்டாய் அது நாளுக்குநாள் மிக்க வீரியத்தோடு வளர்ந்து வர, திதியானவள் ஒளிவீசும் அழகிற் சிறந்தவளாய்க் கர்ப்ப சின்னங்களெல்லாம் நிறையப்பெற்றுலாவுவதை அதிதி பார்த்து துக்கமடைந்து, இந்த திதிக்குப் பிறக்கப்போகிற பிள்ளை மகா பலவானுயும் இந்திர சமானனுயு மிருப்பான். அப்பொழுது நம் முடைய பிள்ளை சிறுமை யடைந்திருப்பானல்லவா என்று சிந்தா குலமடைந்து, தன் மகனுகிய இந்திரனைப்பார்த்து, உனக்கொரு சத்துரு உண்டாகப்போகிறன். அவன் அதி பராக்கிரமமுடைய வனுய்த் திதியினுடைய கர்ப்பத்தில் இப்பொழுது வசிக்கிறன். ஆகையால் அவனை நாசஞ்செய்வதற்கு ஏதேனும் ஒருபாயத்தை ஆலோசனையோடு தேடல்வேண்டும். அந்தவுபாயமானது என்னை யெனின், திதிக்குண்டாயிருக்கும் கர்ப்பத்தை அழித்தலே யாகும். அதுவன்றி வேறுபாய மென்ன விருக்கின்றது? சகளத்தியாகிய

அவனை நான் பார்க்கும்போதெல்லாம் என் சித்தத்தில் சந்தோஷ மென்பது சிறிதும் தோன்றுமல் சிந்தாகுலமானது பெரிதுந் தோன்றி என்னை வாட்டுகின்றது. கர்ப்பத்தில் வசிப்பவனுகிய உன்னுடைய சத்துரு கர்ப்பத்திலேயே நாசமடையாமற் போவானு யின் பின்னரவன் க்ஷயரோகம்போல விருத்தியடைந்து உன்னை நாசஞ் செய்வான். உலகிலறிவுடையவன் சத்துருத்துவம் அங் குரிக்கும் பொழுதே அதனை அழித்துவிடுவதியல்பு. ஓ இந்திரனே! திதியினுடைய கர்ப்பமானது என்னுடைய வயிற்றில் சிலாகையைச் செருகியிருக்கிறதுபோ லென்னுள்ளத்தை வாட்டுகின்றது. ஆகை யால், எவ்விதத்திலாவது கர்ப்பத்தை அழித்துவிடுவாய். ஓ மஹாநுபாவனே! தாயாகிய எனக்கு இஷ்டபூர்த்தி செய்விக்க வேண்டுமென்றுனக்கு இஷ்டமிருக்கும் பக்ஷத்தில் சாமபலத்தினு லாவது வேறு எவ்விதமான உபாயத்தினுலாவது அவனை நீ சுவா தீனப்படுத்தி சிசுவை நாசம்செய்தல் வேண்டும். என்ன சொல்லு கிருயென்றனள். (21–34)

இவ்வாறு கூறக்கேட்ட இந்திரன் தாயாருடைய வார்த்தையை யங்கீகரித்தவனுய் அதற்குரிய ஆலோசனையைத் தன்னு ளெண்ணி விடைபெற்று, ஓ அரசனே! பாவ புத்தியுள்ளவனுகிய இந்திரன் பெரிய தாயாருடைய சமீபம்போய் அதிக வினயத்துடன் வணங்கிப் பகையாளிகளுடைய வார்த்தை வெளியே மிகவினிமை யாயும் உள்ளே விஷமாயுமிருப்பதாகலான் அதுபோலும் சில வார்த்தைகளை அடியில் வருமாறு கூறத் தொடங்கினுன்: ஓ தாயே! நீ விரதத்தினுலிளைத்த தேகத்தையுடையவளாயும், பலஹீனையாயு மிருக்கும் புண்ணியசாலியாகையினுல் உன்னுடைய பாதசேவை செய்வது எனக்குப் பெரும்பாக்கியமென்று நினைத்துவந்தேன். உனக்கு நான் என்ன செய்யவேண்டுமோ அதைக் கட்டளையிட வேண்டும். ஓ பதிவிரதையே! நான் உன்னுடைய பாதத்தைவருடு கிறேன். தந்தையாருடைய பணிவிடையைப் பார்க்கிலும் தாயா ருடைய பணிவிடை மிகவும் புண்ணியமானது. அது கிடைக்கப் பெற்றவன் நாச ரகிதமாகிய பரகதியை அடைகிருன். எனக்கு உன் விஷயத்தி லொருபேதமுமில்லை; உனக்கென் பேரிலேதேனுஞ் சந்தேகமிருக்கும் பக்ஷத்தில் என் தாய்பேரிலாணைவைக்கிறே னென்று சொல்லி அவளுடைய காலைத் தன் தொடையின் மேல் வைத்துக்கொண்டு பிடித்தனன். (35–39)

வீரபதிவிரதையாகிய அவள் இவன்பால் விசுவாசமும் பிரியமு முடையவளாய் அவன் பாதம்பிடிப்பதை மறுக்காமையான் விரதத் தினுல் மெலிந்திருந்த சரீரத்தி லாரோக்கியமுண்டாய் நித்திரை செய்தனள். அச்சமயம்பார்த்து இந்திரன் இதுதான் நல்ல சமய மென்று தீவிரங்கொண்டு ஆயுதபாணியாய் சூக்ஷ்ம சரீரமெடுத்து யோகபலத்தினுல் கர்ப்பத்திற் பிரவேசித்து வச்சிராயுதத்தினுல் சிசுவை * ஏழு துண்டங்களாய்க் காரணந் தெரியாமலே வெட்டி

* ஏழு துண்டங்களாக வெட்டினுனேயல்லாமல் ஏழாகவெட்டுவதற்குக் காரணமறிந்தவனல்லன்.

ளுன். அப்பொழுது அக்குழந்தையழ அதைப் பார்த்து அழாதே யென்று மெதுவாகச்சொல்லிப் பின்னர் ஏழாகவெட்டிய ஒவ்வொரு துண்டத்தையும் எவ்வேழாக வெட்டினுன். அத்துண்டங்க ளெல்லாம் நாற்பத் தொன்பது மருத்துக்களாயின. திதியும் விழித்துக்கொண்டு இது வஞ்சனையோடும் வந்திருந்த இந்திரன் செய்த கொடுந் தொழிலென் றறிந்தவளாய் அளவிறந்த துக்கத் தோடும் மனவேகங்கொண்டு இவனிவ்வாறு செய்வதற்குக் காரணம் தங்கையினுடைய போதனையா மென்றறிந்து மகா கோபத்தோடும் அதிதியையும் இந்திரனையும் சபிக்கத்தொடங்கி இந்திரனைப்பார்த்து நீ உன் தாயினுடைய கெட்டவார்த்தையைக் கேட்டுப் பரிகாரத்துக் கிடமில்லாத சூதான பாவத்தைச் செய்தாயாகையால் நீ திரிலோ காதிபத்தியத்தை யிழக்கக்கடவாய். ஓ அதிதி! உன்னுடைய குமாரனுல் என்னுடைய கர்ப்பமானது எப்படிச் சேதிக்கப்பட்டு நான் துக்கத்தை யடைந்திருக்கின்றேனே அப்படியே பாபிஷ்டை யாகிய நீ வேருெரு ஜன்மமெடுத்து காராக் கிருகத்திலடைக்கப்பட்டு அவ்விடத்தில் பிறப்பனவாகிய பிள்ளைகள் பிறந்துபிறந்து அப் பொழுதப்பொழுது சேதிக்கப்பட்டு மரணமடைந்துபோக, நீ சோக முற்றிருக்கக் கடவாயென்று சபித்தனள். (40–50)

இவளிட்டசாபத்தை காசிபர்கேட்டு அவளைச் சமீபித்து இப்படிச் சபிக்கலாமாவென்று கேளாமல், நீ கோபிக்கவேண்டாம்; மகாபலமுடைய உன்னுடைய புத்திரரனைவரும் மருத்துக்களாய் இந்திரனுக்குச் சமானமாகப் பிரகாசிப்பார்கள். ஓ திதியே! இப்போது அதிதிக்கு நீ இட்ட சாபம் இருபத்தெட்டாவது சதுர் யுகத்தில் வரும் துவாபரத்தில் நடக்கப்போகிறது. ஓ பெண்ணே! எனக்கும் வருணனுலும் பிரமனுலும் ஒரு காரணத்தாற் சாபம் நேரிட்டிருக்கிறது. ஆகையால் அதிதியானவள் ஓரம்சத்தினுல் மானிடப் பிறப்பை யடைந்து சாபத்தின் பலனையனுபவிப்பாள். நானும் அந்த சாபத்தின்படியே மானிடனுகப்பிறந்து அதன் பிரயோஜனத்தை யடையப்போகிறேன். எங்களிருவருக்கும் சாபத்தினனுபவம் விடாது என்று சொல்லவும், திதியானவள் ஒரு வாறு சமாதானப்பட்டவளாய் சந்தோஷமடைந்து அதிதியினிடத்தி லிருந்த கோபம் மாறி எப்பொழுதும் சிறிதும் பிரியமில்லாத வார்த்தை சொல்லாதவளாய்க் கலந்திருந்தனள். ஓ ஜனமே ஜயனே! பூர்வத்தில் நடந்த சாபவரலாற்றை இப்போது உனக்குச் சொன்னேன். இதனுல் தேவகி தேவியானவள் அதிதியினுடைய அம்சபூதையென்று அறியத்தக்கவளாகுமென்று வியாசபகவான ருளியவாறு சூதமுனிவர் முனிகணங்கட்குக் கூறினுர். (51–55)

ஓம் ஹ்ரீங்கார நந்தன ராம நவகல்பக வல்லர்யை நம:

## 4. அதர்மத்தில் நிலைத்த உலகம்

சூதர் கூறுகின்ருர்: ஓ முனிகணங்காள்! ஜனமேஜயன் வியாச முனிவரைப் பார்த்து, ஓ ஸர்வக்ஞ மூர்த்தியே! இப்

பொழுது கூறிவந்த சரித்திரத்தைக் கேட்டு ஆச்சரியப்படுகின்றேன். பாபரூபமாகிய ஸம்ஸாரபந்தமானது எப்படி விடுதலையாகும்? அந்தோ! காசிபருடைய குமாரனாகிய இந்திரன் திரிலோக சாம்ராஜ்யமுடையவனாயிருந்தும் அவன் சிசுச்சேதமாகிய கொடுந்தொழிலை எவ்விதமாய்ச் செய்யத் துணிந்தனன்? இச்செய்கையை எவ்வளவு தாழ்ந்த தன்மையுடையவனும் நினைவினாலும் செய்ய நினையான். தாயாரிடத்திற் சென்று உனக்கு நான் பணிவிடை செய்கிறேனென்று வஞ்சனையாற் சில இனிய வார்த்தைகளைச் சொல்லி நம்பத்தகுந்ததாகிய ஆணையுமிட்டு அவளுறங்குஞ் சமயத்தில் கர்ப்பத்திற் பிரவேசித்துச் சிசுவதை செய்யத் துணிந்தானல்லவா? இதனினுங் கொடியது உலகத்திலென்ன விருக்கின்றது? இந்திரன் தேவராஜாவா யிருக்கும்பொழுது தருமங்களைப் பாதுகாத்து அதர்மஞ் செய்வோரைத் தண்டிக்க வேண்டியவன். அன்றியும் திரிலோகத்திற்கும் அதிபதி; இவன் இந்த நீசகாரியத்தைச் செய்யலாமா? இந்த அயோக்கியமான காரியத்தை எவனுஞ் செய்யான். இவன் செய்தி இங்ஙனமிருக்க, ஓ முனிவரே! என்னுடைய பாட்டன்மார்கள் குருக்ஷேத்திரத்தில் மிகவும் பயங்கரமாகிய யுத்தத்தையும் மிகவும் ஆச்சரியப்படத் தக்கதாகிய அதி குரூரமான செய்கைகளையுஞ் செய்திருக்கின்றார்கள். இவர்களே யன்றி பெரியோர்களாயிருந்த பீஷ்மர், துரோணர், கிருபர் முதலாயினோரும் கிருஷ்ணராலே தூண்டப்பட்டவர்களாய் கர்ணர் தர்மபுத்திரராதியரோடு கலந்து அதர்மமான பல காரியங்களைச் செய்திருக்கிறார்கள். இவர்களெல்லாம் கனவான்களாயிருந்தும் அப்படி ஏன் செய்யவேண்டும்? தேவரிற் சிறந்த இந்திரனும் தரும நீதியிற் சிறந்த தருமனாதியரும் தெய்வத் தன்மையிற் சிறந்த பீஷ்மராதியரும் எந்தக் காரணத்தினால் அதர்மத்திற் பிரவேசித்தனர்? இனித் தர்மத்தினிடத்தில் பிரமாணம் எவ்வாறு நிச்சயிக்கக் கூடும்?

ஓ வியாச முனிவரே! இதுகாறும் தங்களால் சொல்லக் கேட்டு வந்தவைகளினால் எனக்குச் சித்த சலன முண்டாயிற்றேயன்றிச் சித்தோபசமன முண்டாகவில்லை. ஆனால் இவை ஆப்தனாகிய கிருஷ்ணமூர்த்தியின் வாக்கியத்தைக் கொண்டு தருமனாதியர் செய்தார்களென்று சொல்லுவீராயின், அந்த ஆப்தனென்று சொல்லுகிற கிருஷ்ணன் வனிதாதி விஷயங்களில் ஆசையுடையவனாயும் பெரும்பாலும் பாரபக்ஷம் செய்யும் ராகமுடையவனாயுமிருந்தானென்று அவனுடைய சரித்திரத்தால் வெளியாகின்றது. அன்றியும் அவன் இவர்களுடைய வம்சத்தவனுமல்லன். அவனெவ்விதத்தால் ஆப்தனானான்? பொருள் நஷ்டத்தை விளைவிப்பதாகிய ராகமும், அசத்திய வார்த்தையை விளைவிப்பதாகிய த்வேஷமும் எவனிடத்திலிருந்தபோதிலும் அவை அவனுக்கு அவ்விரண்டையுமுண்டாக்குமல்லவா? நீர் ஆப்தனென்று கூறிய கிருஷ்ணனிடத்தும் அவன் வாக்கியத்தை நம்பினவனிடத்தும் அவ்விரண்டு குணமும் நிலைபெற்றிருந்தமையைக் கூறுகின்றேன். என்னையெனின், ஜராசந்தனைக் கெடுக்கவேண்டிய நிமித்தம் ஸத்துவமூர்த்தி என்கிற

கிருஷ்ணன் கபடமாகப் பிராமண வடிவத்தை யெடுத்தானே, அது ஸத்துவ குணசாலியா யிருக்கின்றவனுக் குரியதா? இப்படிப்பட்ட குணமுடையவனெப்படி ஆப்தனுவான்? இப்படியே அருச்சுனனும் யாககாரியார்த்தமாய்க் கபட வடிவங் கொண்டானல்லவா? அது ஸாத்விக தருமமாகுமா! ஸாத்விக தருமமல்லாத யாகமும் ஒரு யாகமாகுமா! அந்தோ! இதுதானு தருமம்? தருமம் நான்கு பாதமா யுள்ளதன்றோ? அதில் முதற்பாதம் சத்தியம், இரண்டாம் பாதம் ஆசாரம், மூன்றும் பாதம் தயை, நான்காம் பாதம் தானம் என்று வேதங்களால் பலமுறை சொல்லப்பட்டதென்று உண்மையுணர்ந்த பௌராணிகர்க ளெடுத்துக் கூறுகின்றனர். இவர்கள் செய்த யாகத்தில் இந்நான்கு தருமமுமில்லை. இந்த யாகம் பெரியோர் களுக்கெவ்வண்ணம் சம்மதமாகும்? தருமசூனியமாகிய அந்த யாக கிருத்தியத்தில் தருமத்தின் பலன் எப்படி வரும்? யோசிக்கும் பொழுது இவர்களுக்குள் ஒருவருக்காயினும் தருமத்தினிடத்தில் நிச்சயமான புத்தி யிருந்ததாகக் காணப்படவில்லை. (1–16)

இப்படியே ஜகத்துக்கெல்லாம் பிரபுவாகிய விஷ்ணுமூர்த்தி கபடமாய் வாமன உருவங்கொண்டு பலிச்சக்கரவர்த்தியை வஞ் சித்து மூன்றுலகத்தையுங் கொண்டனரே, அவரென்ன அநீதிமானு? பலிச்சக்ரவர்த்தியோ இந்திரனை வெல்லும்படியான பராக்கிரமத்தை யுடையவன்; வேத விதியாயிருக்கின்ற யாகங்களை நடத்துகின் றவன்; தர்மாத்மா, இல்லையென்னுது கொடுக்கும் வள்ளல், சத்திய சந்தன், இந்திரிய வசீகரன். இந்த மகானுபாவனை எந்தக் காரணத் தினுல் ஸ்தானப்பிரஷ்டம் பண்ணினுர்? ஓ வியாசரே! அந்த விஷ்ணு மூர்த்தி பலியை வஞ்சித்தபோதிலும் ஜயத்தை யடைந்தவர் யாவர்; விஷ்ணுமூர்த்தி கபடத்தினுல் வஞ்சித்து ஜயித்தவராகத் தெரிய வருகிறது. நானிவ்விதமான அளவிறந்த சந்தேக முடையவனுக விருக்கிறேன். நீர் புராணகர்த்தராகவும், சகல தருமங்களையு மறிந்தவராகவு மிருக்கின்றீர். ஆகையால் உண்மையைச் சொல்ல வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, வியாசர், ஓ அரசனே! எந்தக் காரணத்தினுலாவது பலிச்சக்ரவர்த்தியே கொடுத்தவனு யிருக்கின்றபடியினுல் அவனே ஜயமுடையவன்; விஷ்ணுவோ வாமனுவதாரங்கொண்டு போனுர்; திரிவிக்ரமராக வளர்ந்துவந்தா ரென்கிற சொல்லளவில் பிரசித்தி யடைந்தவரேயன்றி வேறில்லை. ஆனுல் மகாபலியை விஷ்ணுமூர்த்தி வைகுண்டத்தில் துவார பாலகனுகவிருக்க வருளினுர். இது நிற்க.

ஓ அரசனே! சத்தியம் தருமத்துக்கு அன்னியமானதல்ல; அது சத்தியத்துக்கு மூலமாயுள்ளது. ஆனுல் மானிடர்களுக்குச் சத்தியமாயிருப்பதென்றுல் மிகவும் கஷ்டம். ஏனென்றுல், இந்த உலகம் மாயையால் நிருமிக்கப்பட்டது. அந்த மாயையோ முக்குண மாயும் அநேக விதமான வடிவங்களாயும், கெடாத வலியுள்ளதாயும், ஆன்மாக்களுடைய பேதங்களுக்குத் தக்கவாறு விளங்கும். அவ் வவ்வறிவை வஞ்சித்தலாகிய வஞ்சச் செயலையுடையதாயுள்ள தாகையால் தருமத்தையும் சத்தியத்தையும் விளக்கும் தருமத்தை

அது உடையதாயிருத்தல் எவ்விதத்துங் கூடாது. ஆனல் இந்த உலகமெவ்வாறு நடக்குமெனின், வஞ்சகச் செயலுடைய மாயையும், முக்குணங்களுங் கூடியிருத்தலால், சத்தியத்தில் அசத்தியமும் அசத்தியத்தில் சத்தியமும் கலந்து நடப்பதே அநாதியாயுள்ள வழக்கு. இவ்வுண்மையுணர்ந்த வைகானசர் முதலிய சில மஹ ரிஷிகள் தாம் மாயைக்குங் குணதிகட்கும் வன்மை செய்வதாகிய ராக துவேஷாதிகளை விட்டவர்களாய்ப் பிறரிடத்திலொரு பொருளும் வேண்டுவதொழிந்து சத்தியமும் தருமமுமே பொரு ளெனக்கொண்டு அவாவுக்கிடஞ்செய்யாமல் மாயாதீதராயும் குண தீதராயும் வாழ்கின்றுர்கள். அவர்கள்தாம் உய்யுநெறி யிதுவா மென்று உலகினரறிய நிருமிக்கப்பட்டிருக்கின்றவர்கள். அவர்கள் நீங்கலாக ஏனையோரெல்லாம் முன்கூறிய குணதிகளால் ஆவரிக்கப் பட்டே யிருப்பார். ஆகையினற்றுன் வேதங்களிலும் உபப் பிராம் மணங்களாகிய புராணங்களிலும் ஒரே வழியாய்க் கூருமல் பலவழி யாய்க் கூறியிருக்கின்றது. அதுபோலவே குணசம்பந்திகளால் செய்யப்பட்டிருக்கிற தர்ம சாஸ்திரங்களிலும் குணங்களோடு கூடினவன் குணத்தோடு கூடிய கிருத்தியத்தையே செய்வான், நிர்க்குண பரமாயிருக்கிறவன் ஒரு கிருத்தியத்தையும் செய்யா னென்று கூறியிருக்கின்றது. ஆகவே ஒன்ருேடொன்று கலந் திருப்பனவாகிய குணங்களைக் கலந்திராத ஜீவகோடிகளெங்கு மில்லை. ஆகையால் கபடமற்றதாயும் குணசூன்யமாயும் ஸ்திர மாயும் வேதங்களிலும் வேதோபப் பிராம்மணங்களாகிய புராணங் களிலும் சுருத்யர்த்த ஸ்மாரகமாகிய ஸ்மிருதிகளிலும் சொல்லப் பட்டிருக்கிற தருமங்களுக்கு வேறுபடாமலுள்ள தர்மத்திலறிவு நிலைபெற்றிருத்தலரிதாகும். (17–30)

ஓ ஜனமேஜயனே! மாயையினல் ஸம்ஸாரத்தில் மோகத்தை யடைந்திருக்கிற ஜீவனை இந்திரியங்கள் தங்கள் வசமாக்கி யாளு கின்றன. மனமோ இந்திரியங்கள் போகும் வழியே போகுந் தன்மையையுடையது. ஜீவனே அந்த மனம் முதலிய குணங் களாலே பிரேரேபிக்கப்பட்டவனுய் அநேகவிதமான எண்ணங்களை மாறி மாறி எண்ணும் நிலைமையினன். இவ்வண்ணம் பிரம்மாதி ஸ்தம்பபரியந்தமுள்ள ஸ்தாவர ஜங்கமங்களாகிய சகல ஜீவர்களி டத்தும் பார்க்கலாம். இதனல் மாயைக்குட்பட்ட ஜீவர்களிடத்து அம் மாயையானது விளையாடிக்கொண்டிருக்கிறது. அதாவது, யாவரையும் வெவ்வேறு விதங்களாக மோகப்படுத்திக்கொண்டிருக் கிறதென்றறியற்பாலது.

ஓ அரசனே! பிராணிகள் மாயை விளையாடுதற் கிடமாயிருக் கின்றபடியால் அவர்கள் சத்தியத்தை யறியாமல் அசத்தியத்தில் பிரவர்த்திக்கின்றனர். பிரவர்த்தகராய் வெளிவந்தபின் இந்திரியப் பிரவர்த்தங்களுண்டாய் விஷயாதிகளைச் சிந்திக்க வருகின்றனர். சிந்தனையுண்டானபோது அதற்குரிய பொருள்கள் கைகூட, முயலுகின்றனர். அப்பொருள்கள் கைகூடாதபொழுது அவை

கூடும் வண்ணம் கபடம் முதலியவைகளை மேற்கொண்டு பாவத் தொழிலில் பிரவேசிக்கின்றனர். அதிற் பிரவேசிக்கின்றபொழுது காமக்குரோத லோபாதிகளாகிய பகைமைக்குணங்கள் ஓயாமல் அவருள்ளே புகுந்து அவர்களைச் சுவாதீனப்படுத்தி இது செய்யத் தக்கது இது செய்யத் தகாதது என்றறியும் அறிவினை மறைக் கின்றன.

இவர்களுக்கு ஐச்வர்யம் அதிகப்படுங்கால் அகங்காரம் மேலிட்டு அவ்வகங்காரத்தால் அஞ்ஞானத்தையடைந்து அதனால் இம்மை மறுமைப் பிரயோஜனங்களை யிழந்து மரணத்தையடை கிறார்கள். மரணப்பிரயோஜகராகிய இவர்கள் மரணத்தை மறந்து அநேக ஸங்கற்பங்களை ஸங்கற்பிக்கிறார்கள். அச்சங்கற்பங்கள் நிறைவேறாமற் போமாயின் ஈரிஷை, அசூயை, துவேஷம், ஆசை, பேராசை, தீனபாவம், டம்பம், அதர்மபுத்தி இவைக ளெல்லாமுண்டாகின்றன. இவை நீங்கும் பொருட்டே யாகம், தானம், தீர்த்தஸ்நானம், விரதாதிகளாகிய நியமங்கள் நியமிக்கப் பட்டிருக்கின்றன. இவைகளையும் முன்சொன்ன ஈரிஷை முதலியவைகளையும் விடாமல் அகங்கார வெண்ணத்தோடு கூடித் தினந்தோறுஞ் செய்து வருவாராயின் அவை பெரியோரால் நிந்திக் கப்பட்டு பலத்தைக் கொடுக்கமாட்டா. (31–40)

ஆசையினாலும் லோபத்தினாலும் செய்யப்பட்ட சத்கருமங்க ளனைத்தும் சுத்தியாகமாட்டா. அறிவாளிகளாயுள்ளவர்கள் தாம் செய்யத்தொடங்கும் தர்மகருமங்களுக்குரிய திரவியங்கள் சுத்தி யுள்ளனவா, இல்லனவாவென்று முன்னர் ஆராய்தல் வேண்டும். பிறருக்குத் துரோகஞ்செய்யாமல் ஆர்ஜிக்குந் திரவியமே சுத்தி யான திரவியம். அந்தத் திரவியந்தான் தர்ம கருமங்களுக்கு முக்கியமானதென்று சொல்லப்படும். துரோகஞ்செய்து வருவது எதுவோ, அதுவே அசுத்தியுடையதாகும். அதனைக்கொண்டு ஒருவன் தர்மகருமங்களைச் செய்வானாயின் அவை அவனுக்குப் பிரயோஜனமாகுங் காலத்தில், விபரீதமான பலத்தைக் கொடுக்கும். எந்தப் புருஷனுடைய மனமானது துரோகமற்று எவ்வளவு நிர்மலமாயிருக்கிறதோ அவ்வளவு அவன் நல்ல பலனைப் பெறு வான்; எவனுடைய மனமானது நிர்மலத்தையடையவில்லையோ அவன் செய்யுங்கருமங்களால் வரும்பலன் சாஸ்திரத்திற் சொல்லிய வாறுண்டாகாது. திரவியமெப்படி சுத்தியாயிருத்தல் வேண்டு மென்றேனோ அப்படியே சத்கருமங்களைச் செய்கின்ற ருத்விக்கு முதலாகிய ஆசாரியர்களும் சுத்தமான மனமுடையவராயிருப்பா ராயின், அந்தச் சத்கருமம் பூரணபலனைக் கொடுத்துவரும். ஆகையால் தேசமுங் காலமும் கிரியையும் திரவியமும் செய்கின்ற வரும் மந்திரங்களும் அவ்வவற்றிற்குக் கூறிய சுத்தியோடுங்கூடி யிருக்க வாராய்ந்து எந்த ஸத்கருமத்தையாவது நடத்துவாராயின் அது பூரண பலத்தைத்தரும். அந்தப் பலத்தால் நல்ல சுகத்தைக் கர்த்தா வடைவான். இவ்வாறன்றிச் சத்துருக்களுக்கு நாசத்தை யுத்தேசித்தும் தனக்கு மாத்திரம் விசேஷ விருத்தியை யபேக்ஷித்

தும் எவராவது ஸத்கருமத்தைச் செய்வாராயின் அது விபரீத பலனைத்தான் கொடுக்கும். எவர் தற்பிரயோஜனத்தை விரும்பிச் செய்கின்றாரோ அவர் எப்பொழுதும் நன்மையறியமாட்டார். எவர் தெய்வாதீனராய் ஸத்கருமங்களைச் செய்கின்றாரோ அவரெப் பொழுதுந் தீமையையறியார். அங்ஙனமாயினும் ஒருவரும் தெய்வாதீனமாய்ச் செய்யார். (41–47)

ஓ அரசனே! ஸகல தேவரும் அசுரரும் பிரமனிடத்திலிருந்தே உற்பத்தியானார்கள். எவ்வாறெனில், பிரமன் ஸத்வகுணத்தினின்று தேவர்களையும், ரஜோகுணத்தினின்று மானிடர்களையும், தாமஸ குணத்தினின்று அசுரர்களையும் திரியக்குகளையு முண்டாக்கினன். அவ்விருவரும் தவம் யாகம் முதலியவற்றைச் செய்தவர்களா யினும், தீமையை விளைவிப்பதாகிய துவேஷாதி குணங்களைக் கொண்டு செய்தனரேயன்றி நிர்மலமனத்துடன் தெய்வாதீனமாய்ச் செய்தவர்களன்றி, தியக்சாதிகளுக்கும் அந்தத் துவேஷாதிகள் விட்டனவோவென்றால் அவைகளுக்கும் விட்டனவல்ல. இஃது வென்னவாச்சரியம்! இஃதுவென்ன கொடுமை! யாவரினுந் தேவர்கள் சிறிதேனும் நன்மைக் குணத்தோடு கூடினவரல்லர். அவர்கள் எப்பொழுதும் துவேஷசிந்தனை யுடையவர்களாய் யார் தவஞ்செய்தபோதிலும் அவர்கள் தவத்துக்கு விக்னஞ்செய்வதே தொழிலாகக் கொண்டிருக்கிறவர்கள்; சந்தோஷம் சிறிதுங் கிடை யாது, எப்பொழுதும் துவேஷமுடையவர்கள்; ஒருவருக்கொருவர் விரோத வெண்ணமேவுடையவர்கள். ஓ அரசனே! இந்த ஸம்ஸார மானது அகங்காரத்தினின்றுண்டானதென்று சொல்லப்படும் பொழுது அதிலிருப்பவர்கள் எப்படி துவேஷம் நீங்கினவர்களாக விருப்பார்கள் என்றனர். (48–52)

ஓம் ஹ்ரீங்கார ஹிமவத் கங்காயை நம:

## 5. நரநாராயணர் தவம்

வியாசர் மீண்டும் கூறுகின்றார்: ஓ அரசனே! இச்சம்ஸார விஷயத்தை விவரித்துரைப்பதனாற் பலனென்னை? துரோகபுத்தி யுள்ளவன் எப்படித் தர்மாத்மாவாவன்? உத்தமர்களாகிய ஸத் புருஷர்களுக்கு கிருதயுகம் உரித்தானதென்றும், அதர்மர்களாகிய அசத் புருஷர்களுக்குக் கலியுகம் மிகச் சிறந்ததென்றும், இவ்விரு வருமல்லாத மத்திமர்களாகிய ஏனையோர்களுக்குத் தருமா தருமப் பிரவர்த்தகமாயுள்ள இரண்டு யுகங்களும் உரித்தென்றும், கலியில் ஒருகால் ஒருவன் சத்யதர்மத்தை யனுசரித்தவனாகவிருப்பானாயின் அவன் உலகத்தவரால் பரிகாசஞ்செய்யப்படுவனன்றி மேன்மையா கக் கொண்டாடத் தக்கவனன்றென்றும் பெரியோர் கூறுகின்றனர். அஃதுண்மையேயாயினும் கிருதயுகத்திலும் தாவர ஜங்கமங்களா யுள்ள எல்லாப் பிரபஞ்சமும் ராகதுவேஷத்தோடுகூடி விவரிக்கப் பட்டிருக்கின்றமையைக் கேட்டிருக்கின்றோம். ஆகவே சகலதோஷங்

களுங்கூடியுள்ள இக்கலியுக சமயத்தில் அக்குணங்கள் தாண்டவ மாடுவதற்கு என்ன விசாரமிருக்கின்றது ? தேவர்களுடைய குணுதிசயங்களை இன்னும் விசாரிக்கப் புகுமளவில் அசூயையோடும் துரோகசிந்தனையோடும் கூடினவர்களாயு மிருக்கின்றார்கள். இவர்களே இவ்வாறிருப்பாராயின், அசுரர்களுக்கும் மானிடர்களுக்கும் என்ன நியாயம் சொல்லலாம் ? உலக நடையில் துரோக சிந்தனையுடையவரிடத்தில் துரோக சிந்தனை யுடையவராயிருத்தல் நியாயம்; துரோக சிந்தனையில்லாத சாந்தகுணமுடையவரிடத்தில் துரோக சிந்தனையெண்ணுவது தூர்த்த சுபாவமல்லவா ? அங்ஙனமிருக்க யாரோ ஒரு ரிஷி ஜபத்திலும் தியானத்திலும் ஆஸக்தியுடையவராயும் இராகத் துவேஷாதிகளை நிக்கிரகஞ் செய்வதில் வைராக்கியமுடையவராயுமிருக்க அவருக்குத் தேவர்களென்று சொல்லப்படுவோரும் தேவேந்திரனும் மிகவும் விக்கினத்தைச் செய்தனர்களாம். இஃதுவென்ன கொடுமை ! (1–7)

ஓ அரசனே ! எப்பொழுதும் தருமம் விளங்குவதற்குக் காரணம் பூர்வஜன்ம வாசனையாகும். அந்தப் பூர்வஜன்ம வாசனை, மலினப்படும் பக்ஷத்தில், தருமமும் நாசத்தையடையும். ஆனால் அந்த வாசனை மலினப்படுவதற்குக் காரணம் தருமத்தினாலடைய வேண்டியவற்றை யடைவதற்குரிய பிராப்தியில்லாமையினாலேயாம். இதனால் பூர்வஜன்ம வாசனையும் பிராரப்தமும் ஒருவனுக்கு ஒத்திருக்கின்ற பக்ஷத்தில் அவன் எந்த யுகத்தில் பிறந்தாலும் தருமத்தை விடானென்றறிதல் வேண்டும்.

ஓ ஜனமேஜயனே ! பிரமனுடைய இருதயத்திலிருந்து தருமனென்று ஒரு புத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரன் சத்தியசம்பன்னனும் எப்பொழுதும் தருமத்தினிடத்தில் ஆஸக்தியுள்ளவனுமிருந்தான். சத்தியவான்களில் மேலானவனுயிருந்த அவன் தக்ஷப் பிரஜாபதியினுடைய பெண்களில் பதின்மரை விதிமுறையே விவாகஞ் செய்துகொண்டு கிருகஸ்தாச்சிரமியாய் மனைவிமாரைக் கூடிக்கலந்தின்ப நலனுகர்ந்து புத்திரப்பேறுடையவனுமானான். அப்புத்திரருக்குள் அரி என்றும், கிருஷ்ணரென்றும் இருவருளர். அவ்விருவரும் நரநாராயணர்களென்று பெயர் பெற்று மஹரிஷிகளாய் உலகத்தில் பிரசித்தி பெற்றிருந்தனர். அவ்விரண்டு பேரும் யோகாப்பியாசத்திலேயே யிருக்கும் இச்சையுடையவராய் இமோத் பர்வதத்தை யடைந்து கங்கைக் கரையிலுள்ள பதரிகாச்சிரமத்தில் சதாகாலமும் யோகப்பியாசத்திலிருத்தலாகிய உத்தமத் தவத்தைச் செய்துவந்தனர். அவர்கள் செய்த தவத்தின் திறம் எத்தன்மைத்தெனின், எல்லாப் பொருட்கும் வேறு பட்டதாயும் ' தத் ' என்னும் பதத்துக்கு அர்த்தசொரூபமாயுமுள்ள பரமான்மாவினிடத்தில் ஒன்று பட்டிருத்தலாகிய சதுர்ப்பாட்டையுடையதாம். அவர்கள் விஷ்ணுவினுடைய அம்சீ பூதர்களாதலால் அவ்வரிய தவத்தில் ஆயிர வருஷகாலம் நிலைபெற்றிருந்து முனிவர்களுக்குள் சிறப்புடையவராய்ச் சகல சித்திகளையும் பெற்று அக்கவக்கையே

அந்தத் தவாக்கினியினுல் சராசராத்மகமாகிய ஸர்வ பிராணிகளும் தாபத்தையடைந்தன. அதைக் கண்ட இந்திரன் கலக்கத்தையடைந்து சிந்தாகுலமுற்றுத் தருமனுடைய புத்திரர்களாகிய நரநாராயணரை நாமென்ன செய்யலாமென்று யோசித்தனன். என்னேயெனில், இவர்களுடைய தவம் நிறைவேறுகிறபக்ஷத்தில் நம்முடைய சிம்மாசனத்திலிருக்க வருவார்கள். ஆகையினுல் இவர்களுடைய தவம் எவ்விதத்திலாவது கெடுக்கத் தக்கதே; அதனே எப்படிச் செய்யலாமென்று தனக்குளெண்ணி மிகவுங் குரூரமாகிய காமத்தையும் கோபத்தையும் லோபத்தையும் அடைந்து ஐராவதத்தின்மேலாரோகணித்து அதிவேகமாய் இமோத்பர்வதத்துக்கு வந்து அங்குள்ள அவர்களாச்சிரமத்திற் பிரவேசித்துத் தவத்தினுல் வன்மை பெற்றிருக்கிற சரீரத்தை யுடையவர்களாயும் இரண்டு சூரியர்களுதித்தது போலும் இரண்டக்கினிகள் கொழுந்துவிட்டெரிவன போலும் பிரகாசிக்கின்ற தேஜஸையுடையவர்களாயும் காணப்படுகின்ற அந்த நரநாராயணரைப் பார்த்து இவர்கள் பிரம்ம விஷ்ணுக்களோவென்றையுற்று இவர்கள் தவம் செய்யவேண்டிய காரிய மென்னேயோவென்ருலோசித்து அவர்களிடத்தில் அடியில் வருமாறு வார்த்தை சொல்லத் தொடங்கினுன்: (16–22)

மஹானுபாவர்களாயும் தருமனுடைய புத்திரர்களாயுமிருக்கின்ற ஓ மகரிஷிகாள்! நீங்களெண்ணியிருக்குங் காரியத்தை எனக்குத் தெரிவியுங்கள். உங்கள் தவத்திற்கு மிகவும் சந்தோஷமுற்றுக் கொடுக்கக்கூடாத வரங்களாயிருந்தபோதிலும் கொடுக்க வேண்டுமென்றிச்சை கொண்டு வந்திருக்கிறேன். ஆகையால் உங்களெண்ணத்தை வெளியிட்டு வேண்டிய வரங்களேக் கேட்பீர்களாகவென்று அவர்களெதிரே நின்றவனுயடிக்கடி வினுவினன். திடசித்தமுடையவர்களாய் யோக மார்க்கத்திலிருக்கின்ற அந்த நரநாராயணர்கள் ஒரு வார்த்தையும் சொல்லாதிருந்தனர். சொல்லாதிருக்கவே, இந்திரன் அவர்கள் பயந்து பிரமிக்கத்தக்கனவாகிய சில மாயைகளேச் செய்யத் தொடங்கினன். என்னேயெனில், ஓயாமல் மழை பெய்யவும் காற்றடிக்கவும் அக்கினி நாற்புறமும் சூழ்ந்தெரிக்கவுஞ் செய்து பின்னர் ஸர்ப்பம், நாய், ஸிம்மம், புலி முதலியவற்றை யுண்டுபண்ணி அவைகளே அடிக்கடி தூண்டி அவர்கள் பயந்து நடுங்கத்தக்க மாயைகளேச் செய்தனன். செய்தும் தருமனுடைய புத்திரர்களாகிய அவ்விருவரும் அஞ்சாதவர்களாய் அவன் வசப்படாதிருந்தனர். (23–27)

அது கண்ட இந்திரன் நரநாராயணருடைய திடத்தைப்பார்த்துத் தன்னுலகம் போய்த் தனியிடத்திலிருந்து, அந்தோ! அவ்விருவரும் ரிஷிகளாகவிருந்தும் தேவராஜனுகிய நம்மைப்பார்த்து மதிக்காமற் போயினர்; அதுவுமன்றி நாம் எவ்வளவோ ஆசைப்படுவதற்குரிய விஷயங்களே யெடுத்துச்சொல்லியும் ஒரு பொருளிலும் ஆசைப்படவில்லே; அஞ்சத்தக்க அநேக காரியங்களேச் செய்தும் அவைகட்கு அஞ்சவில்லே; அவர்களஞ்சாமற் போனபோதி

லும், நாம் ஏவிய புலி சிங்கம் முதலிய துஷ்டமிருகங்களாவது அவர்களை ஏதேனும் துன்பம் செய்ததோவென்றால் ஒன்றும் செய்யவில்லை; அவர்களாவது நம்முடைய தவத்துக்கு இடையூறு வந்துவிட்டதென்றெண்ணி யோகநிலையினின்றும் சிறிது நீங்கி அந்த ஆச்சிரமத்தைவிட்டுப் போயினாரில்லை, என்றாலோசனையி லிருந்தனன். ஓ அரசனே! அந்த நரநாராயணர்களுடைய நிலையை நானென்ன வென்று சொல்லுவேன்? என்றாற் சொல்ல வெளிதானதன்று. இந்திரன் செய்த மாயை அவர்களிடத்தில் செல்லாமைக்குக்காரண மென்னை யெனின், ஸர்வலோகங்கட்கும் மாதாவாயும் அநாதியாயும் திவ்யமங்களையாயும் மகாவித்தியா சொரூபிணியாயும் மூலகாரணியாயு மிருக்கின்ற பராசக்தியைத் தியானித்தும் அவளுடைய வாக்பீஜ காமபீஜ மாயாபீஜமாயுள்ள மந்திரங்களை யுச்சரித்தும் வருகின்றவராதலின் அவர்களை யாருடைய மாயைதான் என்னசெய்யக்கூடும்? உலகத்தில் அநேகவித மாகப் பரவியிருக்கும் மாயாவிசேஷங்களும், தேவர்களாலும் அசுரர்களாலுஞ் செய்யப்பட்ட சகலமாயைகளும் எந்த வஸ்துவை மூலமாக வுடையனவோ அந்த வஸ்துவைத் தியானஞ்செய்கின்றவர்களுக்கு இடையூறு செய்ய எவன் யோக்கியமுடையவனாவான், சக்தி யுடையவனாவான்? அவர்கள்தான் எப்படித் துன்பத்தை யனுபவிப்பவராவர்? ஓ அரசனே! இதனால் பாபரகிதனாகிய எவனுடைய உள்ளத்தில் பராசக்தியினுடைய மந்திரங்கள் ஸ்புரிக்கின்றனவோ அவனுக்கிடையூறு செய்வோருமில்லை, இடையூறு வருவதுமில்லை என்றறியற்பாலது. (28–33)

இந்திரன் மாயையினால் அறியாமையுடையவனாய் அவர்களுக்கு மறுபடியும் வேறு இடையூறுகளைச் செய்வதற்கெண்ணி மன்மதனை வரவழைத்து, ஓ மன்மதா! நீ வஸந்தகாலத்தில் ரதி தேவி சமேதனாய் அரம்பையர் கூட்டத்துடன் இமோத் பர்வதத்துக்குப் போய் அங்குப் பதரிகாச்சிரமத்திலுள்ள நரநாராயணரென்கிற முனிவர்கள் ஏகாந்தமாகத் தவஞ்செய்கின்றார்க ளாகையால் அவர்கள் சமீபத்திற்சென்று உன்னுடைய பாணங்களாலே மோகத்தை யுண்டாக்கிப் பின்னர் உச்சாடனஞ் செய்து அவர்கள் காமத்தில் மூழ்கும் வண்ணம் உன்னுடைய பாணங்களை அதிவேகமா யடிக்கடி விட்டு அடித்து அவர்களை உன் சுவாதீனஞ்செய்வாய். இப்பொழுது நீ எனக்குச் செய்யத்தக்க காரியம் இதுவன்றி வேறில்லை. ஓ மஹானுபாவனே! இவ்வுலகத்தில் தேவனா யிருந்தபோதிலும், அசுரனா யிருந்தபோதிலும், உன்னுடைய பாணங்களாலடிபட்டு உன்னுடைய சுவாதீனமாகாமற் போனவன் யார்? பிரம்மாவும், விஷ்ணுவும், சந்திரனும், அக்கினியும், நானும் உன்னால் மோகிக்கப்பட்டிருக்கிறோமல்லவா? நாங்களே மோகிக்கப்பட்டிருக்கிறபொழுது, ஓ மன்னவனே! உன்னுடைய பராக்கிரம மாகிய பாணங்களுக்கு இவர்களெவ்வளவினர்? நீ அவர்களை ஜயிக்கக்கூடாதவனென் றெண்ணவேண்டாம். ஆகையால் நீ என்னுடைய ஆணையைக் கடவாதவனாகப் போகவேண்டும்.

இதோ இருக்கின்ற அப்ஸர ஸ்திரீகளைச் சகாயார்த்தமா யழைத்துக் கொண்டு போ. அவ்விடத்திற்கு அரம்பை முதலியவர்களுக்குள்ளே சிறந்த அழகுள்ளவளாயும், அந்த அரம்பை செய்யவேண்டிய காரியமெதுவோ அதைத்தான் சாதிக்கும் யோக்கிய முடையவளாயு மிருக்கின்ற திலோத்தமையும் வருவாள். இந்தக் காமசாதனங் களைக்கொண்டு காமத்தை விளைவிப்பதற்கு நீ தான் தகுந்தவன். ஓ மஹானுபாவனே! என்னுடைய காரியத்தைச் சீக்கிரமாய்ச் செய்வாய். உனக்குவேண்டிய அபீஷ்டத்தைக் கொடுக்கிறேன். நான் முன்னர் தபசிகளாகிய அந்த நரநாராயணர்களிடத்திற் போய் வரந்தருகிறேனென்று மிகவும் ஆசைகாட்டி யிருக்கிறேன். அவர்கள் வெறுப்பு விருப்பற்றவர்களா யிருப்பதால் தங்கள் நிலை யினின்றும் தவறவில்லை. என்னுடைய கஷ்டம் வீணுய்ப்போயிற்று. வேறொருவராயின் நான்செய்த விசேஷமாகிய மாயைக் கஞ்சித் தேகரக்ஷணையில் ஆஸக்தி யுடையவர்களாய் அவ்வாச்சிரமத்தை விட்டு எங்கேயாயினும் போய்விடுவர். அவர்களோ அவ்விடத்தி னின்றும் எழுந்திருக்கவேயில்லை என்று கூறிய இந்திரனுடைய வார்த்தையை மன்மதன்கேட்டு, ஓ இந்திரனே! இப்பொழுது சொல்லிவந்த இந்தக் காரியந்தவிர வேறு உனக்கிஷ்டமான காரிய மேதேனு மிருந்தாற் சொல்லுவாய், அதனை நான் செய்கிறே னென்று சொன்ஞன். (34–46)

காமசாதனங்களால் விஷ்ணுவையும் பிரம்மாவையும் சூரியனை யும் உன்னையுஞ் சுவாதீனஞ்செய்வதற்கு நான் சக்தன்தான். நர நாராயணர்கள் உங்களைப்போலும் சுவாதீனப் படுகின்றவர்களா? ஏனென்ருல் காமராஜ மென்கிற மஹா பீஜாக்ஷரத்தை மானசிகமாக எப்பொழுதும் ஜபிக்கின்றவர்களாயும் அம் மந்திர அதிதேவதை யாகிய பராசக்தியைத் தியானிக்கின்றவர்களாயும் இருக்கிற பொழுது அந்தப் பகவதியினுடைய பாகவதர்களை வெல்லுவதற்கு நான் சக்தனுவேனே? ஒருபொழுதுமாகேன்; என்னுடைய பாணங் கள் அவர்களை யொன்றுஞ் செய்யமாட்டாவென்று மன்மதன் சொல்ல, ஓ மஹானுபாவனே! நீ ஒன்றுஞ் சொல்லாதே; உனக்கு வேண்டிய உபகரணங்களோடும் போவாய்; சாதிப்பதற்குக் கூடாத வற்றைச் சாதிப்பதுதான் எனக்குச் சந்தோஷத்தையும் சிறப்பையுந் தரும். இந்தக் காரியத்தைச் செய்யவேண்டியவன் நீயே யென்று இந்திரன் சொல்ல, மன்மதன் அதைத் தடுப்பதற் கஞ்சித் தரும குமாரர்களாகிய அந்த நரநாராயணர்கள் எந்த விடத்திற் செய்வதற் கருமையாகிய தவத்தைச் செய்கிருர்களோ அந்தவிடத்தில் யாவருடனும் சென்றனன். (47–51)

ஓம் ஹ்ரீங்காரார்ணவ கௌஸ்துபாயை நம:

## 6. நரநாராயணுஶ்ரமத்தில் வஸந்தம்

ஓ மஹரிஷிகாள்! இந்திரன் நரநாராயணர்களால் அவமதிப் படைந்து மன்மதனையேவிய பின்னர் நடந்தசெய்திகளை எம்

முடைய ஆசிரியர் கூறியவாறு கூறுகின்றேன், கேட்பீர்களாக வென்று சூதமுனிவர் சொல்லத் தொடங்கினுர் :—

ஓ அரசனே! மன்மதன் ஆச்சிரமத்துக்கு வருவதன் முன்னம் அந்த இமோத்பர்வதத்தில் வஸந்தருது பிரவேசித்தது. அது பிரவேசித்தமாத்திரத்தில் சகல விருக்ஷங்களும் புஷ்பித்து அவைகளில் வண்டுக்கூட்டங்கள் நெருங்கின. மா, மகிழம், முருக்கு, திலகம், தேக்கு, பனை, இலுப்பை முதலிய மரங்கள் புஷ்பித்தன. அம்மரங்களின் நுனியிற்றங்கியிருந்த குயில்கள் மனோகரமாகக் கூவின. கொடிவகையான மலர்களெல்லாம் விகசித்தன. இன் னும் அநேகவிதமான விருக்ஷங்களெல்லாம் மலையைச்சூழ்ந்து பிர காசித்தன. அங்குள்ள பிராணிகளெல்லாம் தங்கள் தங்கள் மனைவிகளிடத்தில் காமவிகாரங்கொண்டவைகளாய் மோகித்து மதத் துடன் கூடிக்கிரீடித்திருந்தன. நறுமணங்கமழ்ந்து நற்பரிசத்தைக் காட்டும் காற்றுகள் பலமுகத்திலும் மெல்லென வீசின. அங்குள்ள முனிவர்களுடைய இந்திரியங்களும் கலக்கமுறத் தொடங்கின. (1–5)

அதன்பிறகு ரதிதேவிசமேதனுகிய மன்மதன் பதரிகாச்சிர மத்தில் அதிவேகமாய்ப் பிரவேசித்துத் தனது பஞ்சபாணங் களைத் தொடுக்கத் தலைப்பட்டனன். கானத்திற் சமர்த்தர்களா கிய அரம்பைமுதலிய அப்ஸர ஸ்திரீகள் அந்த ஆச்சிரமத்தை யடைந்து ஸ்வரத்தோடுங்கூடிய கானத்தைச் செய்தார்கள். அந்த நரநாராயணர்கள் மதுரமாகிய கானத்தையும் குயில் களுடைய நாதத்தையும் வண்டுகளுடைய ரீங்காரத்தையும் கேட்டு அகாலத்திலுண்டாகிய வசந்த ருதுவையும் புஷ்பங்க ளோடு கூடிய வனத்தையும் பார்த்து ஆலோசிக்கத் தொடங்கினர்: சிசிர ருதுவினுடைய பூர்த்திசமயமாயிருக்க அஃது இப்பொழுது முடிந்ததெவ்வண்ணம்? எல்லாப் பிராணிகளும் காமத்தினலே பீடிக்கப்பட்டுப் புத்தி சுவாதீன மற்றவைகளாய்க் காணப் படுகின்றன. இந்தக் காலதருமத்தினுடைய வித்யாச மெவ்வா றுண்டாயிற்று? இந்தக் காமவிகாரம் இப்பொழுது வரப்பட்ட கால மல்லவே யென்று நாராயணரென்கிற ரிஷியானவர் கானவிலாசங் களை யெல்லாம் ஆச்சரியமாய்ப் பார்த்து நரனென்கிற ரிஷியை நோக்கி, ஓ சகோதரனே! இங்குள்ள விருக்ஷங்களெல்லாம் புஷ் பித்திருப்பனவாயும் குயில்களெல்லாங் கூவுகின்றனவாயும், வண்டு களெல்லாம் நெருங்கி ரீங்காரஞ் செய்கின்றனவாயுங் காணப்படு கின்றன. இவைகளை நீயும்பார். இப்போது நல்ல வஸந்த ருதுவென் கிற சிம்மமானது சிசிரருதுவென்கிற பயங்கரமுடைய யானையை முருக்கமலராகிய நகங்களால் கீரியதாகத் தோன்றுகிறது. ஓ தேவ ரிஷியே! இந்த ஆச்சிரமத்தில் சிவந்த நிறமுள்ள அசோக விருக்ஷங்களே கைகளாகவும், கலியாண முருக்கமரங்களே பாதங் களாகவும், நீலநிறமுள்ள அசோகவிருக்ஷங்களே கூந்தலாகவும், மலர்ந்த தாமரைகளே முகமாகவும், கருநெய்தல்களே கண்களாக வும், வில்வபலங்களே தனங்களாகவும், குருக்கத்திமலர்களே தந்த வரிசைகளாகவும், பூங்கொத்துக்களே காதுகளாகவும், கோவைப்

பழங்களே உதடாகவும், செந்நெற்கதிர்களே நகங்களாகவும், ஆண் குயில்களுடைய ஓசையே த்வனியாகவும், கடப்பமரங்களே ஆடையாகவும், மயிற்கலாபங்களே ஆபரணவகைகளாகவும், மல்லிகை விருக்ஷங்களே ஒட்டியாணமாகவும், மதத்த அன்னப்பட்சிகளே நடையாகவும், புத்திர ஜீவாம்சமென்னும் விருக்ஷங்களே உந்தி முதல் நிதம்பத்தளவு முள்ள ரோமராசிகளாகவும் அமையக்கொண்டு யௌவனவதியாகிய வசந்த லக்ஷ்மியானவள் வந்திருக்கிருள். ஓ தேவரிஷியே! தவத்துக்கு விக்னஞ் செய்கின்றவளாகிய வஸந்த மென்கிற மங்கையானவள் அகாலத்தில் வந்திருக்கிருள். இஃது வென்ன காரணம்? எனக்கு மிகவும் ஆச்சரியமாகவிருக்கிறது. இதனே நீயும் யோசனேசெய்வாய். தியானத்தைக்கெடுப்பதாகிய தேவஸ்திரீகளுடைய இசைகளுங் கேட்கின்றன. இவைகளெல்லாம் நம்முடைய தவத்தைப் பங்கஞ் செய்யும்பொருட்டுத் தேவேந்திரனுல் செய்யப்பட்ட மாயையாகும். இது நிச்சயம். அவன் மாயையாக இல்லாமற் போகுமேயாளுல் வஸந்த ருதுவானது காலமல்லாத காலத்தில் பிரவேசித்து மோகத்தை எப்படி யுண்டுபண்ணும்? முன்னர் நேரில் இடையூறு செய்வதற் கஞ்சிப்போன அசுரவைரியாகிய இந்திரனுலே இந்தவிக்கினம் செய்யப்பட்டதே யன்றி வேறில்லே. இதோ காற்று நல்லவாசனே யுடையதாய்க் குளிர்ந்து மனேகரமாய் வீசிக்கொண்டு வருவதைப் பார்ப்பாய். இவையெல்லாம் இந்திரனுடைய செயலாகுமேயன்றி வேருெருவருடைய செயலாகமாட்டாதென்றறிவாய். (6–22)

மகாத்மாவாயும், திவ்ய தேஜஸுடையவராயும் பிராமண சிரேஷ்டராயுமுள்ள நாராயணர் இவ்வண்ணஞ் சொல்லிக்கொண்டிருக்கிறபொழுது மன்மதன் முதலாகிய யாவருங் கண்களுக்குத் தோற்றமாய்வர, பகவாளுகிய நரனும் நாராயணரும் பார்த்து ஆச்சரியமடைந்த மனதுடையவரா யிருந்தனர். வந்தவர் யாவரெனின், மன்மதன் மேனகை அரம்பை திலோத்தமை புஷ்பகந்தி ஸுகேசி மகாஶ்வேதை மனேரமை பிரமத்வரை கிருதாசி சந்திரப்ரபா வித்யுன்மாலினி காஞ்சலமாலினி அம்புஜாக்ஷி என்று சொல்லப்பட்டவர்களாம். இவர்களே யல்லாமல் மாயையில் வல்லவர்களாயும் புன்னகை நீங்காதவர்களாயும் இசையில் குயில்போன்ற ஓசையுடையவர்களாயுமுள்ள ஏனேய அப்ஸர ஸ்திரீகளும் சமீபத்தில் தோன்றினுர்கள். அவர்களோ பதினுயிரத்து ஐம்பதின்மர். இவர்களேயன்றி மன்மதனுடைய சேனுசமுத்திரங்களும் வந்தன. நர நாராயணர்கள் அடுக்கடுக்காய் வருகின்ற ஸ்திரீசமூகங்களேப் பார்த்து ஆச்சரியமடைந்தனர். திவ்யமாகிய ஆபரணங்களாலும் நறுமணங்கமழும் நல்லமலர்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களாயிருக்கின்ற அந்த ஸ்திரீகளெல்லாம் நர நாராயணருடைய சந்நிதானத்தை வந்தடைந்து நமஸ்கரித்து அவர்களே வஞ்சிக்கவேணுமென்கிற வெண்ணத்துட னெழுந்து தங்களுடைய அங்கங்களெல்லாம் நன்ருய்த் தோன்றும்படியாக அபிநயத்தோடு நடனஞ் செய்து காமாதிகுணங்களே விருத்திசெய்ய வல்ல சங்கீதத்தையும்

பாடத்தலைப்பட்டனர். பகவானாகிய நாராயணரும் உங்களுக்கு அற்புதமாகிய நல்லவிருந்து செய்விக்கிறோமென்று சொல்லிவிட்டு, இந்திரன் நம்முடைய தவத்துக்கு விக்கினம் பண்ணவேண்டுமென் கிற இச்சையினால் ஏவப்பட்டவர்களாகும் இவர்களென்று சிறி தெண்ணிக் கோபத்தை யுடையவராய்த் தன்னுள் அடியில் வரு மாறு எண்ணுகின்றார் :— (23–33)

இந்த அரம்பையர்களை என்ன ரூபலாவண்யமுடைவர்க ளென்று இவ்விடத்துக்கனுப்பினான்? இவர்களினுஞ் சிறந்த அழ குள்ளவர்களை நான் சிருஷ்டித்து என்னுடைய தபோபலத்தைக் காண்பிக்கிறேனென்று நாராயணர் தன்னுடைய தொடையைக் கையினாற்றட்டினார். தட்டியவுடன் ஸர்வாங்க லக்ஷணத்தோடுங் கூடிய ஒரு ஸ்திரீ வெளிவந்தனள். அவள்தான் ஊர்வசியென்னும் பெயருடையவள். அவளைத் தேவதாசிக ளனைவரும் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்து நாணமுற் றிருக்கும்பொழுது முன்வந்த பதினாயிரத்து ஐம்பதின்மராகிய தாசிகளும், சங்கீத கானத்தைச்செய்து புன்னகைகாட்டி காணுதற்கரிய நானாவிதமான பழவர்க்கங்களைக் கையிற்றாங்கிக்கொண்டு அவரைச் சமீபித்து அஞ்சலிசெய்து வணங்கினார்கள். அந்தச்சமயத்தில் நாராயணர், பிரம்மன் திலோத்தமையைப்படைத்துத் தானே மயங்கியதுபோல் மயங்காமல் தாம்படைத்த ஊர்வசிக்கு ஏவற்பணிவிடைசெய்யத் தன்னை நோக்கிவந்த தேவதாசிகள்போல் மறுபடியும் பதினாயிரத்து ஐம்பதின்மராகிய அப்ஸரஸ்திரீகளைச் சிருஷ்டித்தனர். அவர் களைத் தாமரை மலர்போலும் முகசோபை யுடையவர்களாகிய தேவ லோக அப்ஸ்ரஸ்திரீகள் பார்த்து நாராயணருடைய தபோமகிமையா லுண்டாக்கப்பட்ட இவர்கள்தான் காண்போரை மயக்கவல்ல அப்ஸரஸ்திரீகளாவர். இவர்களன்றி, நாமல்லவென்று மிகவும் பிரமை கொண்டு புளகாங்கிதமடைந்து இது செய்யலாமென்கிற வெண்ண மும் தோன்றாமல் அந்த நரநாராயணருடைய தபோமகிமைக்கு வியந்து அவர்களை நோக்கி, ஓ மகரிஷிகளே! உங்களிடத்தில் மகிமையான தவம் எவ்வள விருக்கின்றதோ அவ்வளவு தயையு மிருக்கின்றது. எங்களுடைய கடைநோக்கமாகிய விஷபாணத்தால் எவன்தான் எரிக்கப்படாமற் போயினான்? பூஜ்யர்களாகிய உங்க ளுடைய இருதயந்தான் எங்களால் யாதொருகளங்கத்தையு மடையாமலிருக்கின்றது. மகரிஷிகளாகிய நீங்கள் நரஹரியி னுடைய பரமாம்சீபூதர்களென்று அறிந்திருந்தும் நாங்களனை வரும் இந்திரனுடைய காரியார்த்தமாக வந்தோமேயன்றி உங்க ளுடைய தரிசனநிமித்தம் இங்கு வந்தவர்களல்லர். துர்க்குணமுடை யராய் வந்த எங்களுக்கு உங்களுடைய தரிசனம் எந்த புண்ணிய பாக்கியத்தினாற் கிடைக்கப்பெற்றதோ தெரியவில்லை. அபராத முடையவர்களா யிருக்கின்ற எங்களிடத்தில் உங்களுக்குக் கோப முண்டாகவேண்டும். அதுவுண்டாகாமலும் சபிக்காமலும் எங்களை வேறாக வெண்ணாமலும் உங்களுக்குரிமை யானவர்களே என அங்கீகரித்து விருந்திடவேண்டுமென்று கூறியதை எண்ணுந்தோ

றும் மிகுந்த ஆச்சரியமுண்டாகிறது. மகான்களாகிய பண்டிதர்கள் பாவபலனைக் கொடுப்பதாகிய சாபத்தினால் தாம் செய்யும் தபசுக்கு நாசத்தைச் செய்துகொள்ளமாட்டார்கள். ஏனெனில், சபிக்க வேண்டுமென்கிற எண்ணம் வந்தபொழுதே கோபமுண்டாகின்றது; அஃது உண்டானபொழுதே தவத்துக்கு நஷ்டமுண்டாகின்றது; ஆகையால் சபியார் என்று தங்களைக் கோபத்தினால் அவர்கள் சபிக்காவண்ணம் பலவாருகத் தோத்திரஞ் செய்யும்பொழுது, தபோ விசேஷத்தினுற் பிரகாசிக்கின்ற காந்தியைப்படைத்த சரீரமுள்ள வர்களாயும் காமாதி குணங்களை ஜயித்த வீரர்களாயு மிருக்கின்ற நரநாராயணர்கள் அந்த ஸ்திரீகளுடைய விநயவார்த்தைகளைக் கேட்டுச் சந்தோஷ சித்தர்களாய் முகமலர்ந்து, ஓ அப்ஸர ஸ்திரீகளே! உங்களுக்கு வேண்டிய அபீஷ்டங்களைச் சொல்லுங்கள். நாங்கள் சந்தோஷமாகக் கொடுக்கின்றோம். ரமணீயமாகிய நேத்திரத்தையுடையவளாகிய இந்த ஊர்வசியை உங்களுக்குப் பரிசாகக் கொடுக்கின்றோம். இவளை யழைத்துக்கொண்டு இப் பொழுதே உங்களுடைய சுவர்க்கலோகத்துக்குப் போய்வாருங்கள். அவ்விடத்துக்குப் போனபின்னர் இந்திரனைப் பார்த்து, ஐயா! நரநாராயணர்கள் நீங்கள் செய்தவுபகாரத்துக்கு உங்களுக்குச் சந்தோஷமுண்டாக இந்த ஊர்வசியைக்கொடுத்துத் தேவர்களுக் கெல்லாம் மங்களமுண்டாகுகவென்று கூறினர்களென்று சொல் லுங்கள். ஓ நங்கைமார்களே! இனி உங்களிஷ்டப்படிப் போகலாமென்று விடைதந்தனர். (34-46)

அவர்கள் வாய்மொழியைக் கேட்ட அந்த ஸ்திரீகள், ஓ மஹானுபாவரே! தேவஶ்ரேஷ்டராகிய ஓ நரநாராயணரே! நாங்கள் மிகுந்த பயபக்தியோடும் சந்தோஷத்தோடும் உம்முடைய பாதாரவிந்தத்தை யடைந்தோம். இனி நாங்கள் எவ்விடத்துக்கும் போகமாட்டோம். தேவரீர் உங்களபீஷ்டமென்னவென்று கேட்டீ ரல்லவா? அதுபோல, ஓ நாதரே! மனக்களிப்புடையவர்களாய் நாங்கள் கொண்டிருக்கும் அபீஷ்டத்தைக் கொடுப்பீராகில் அதனைச் சொல்லுகிறோம். ஓ தவசிரேஷ்டரே! என்னையெனில், தேவரீர் எங்க ளுக்கு நாயகராகவேண்டும். நாங்கள் உம்மை அனுபவிப்பதற்குப் பிரீதியுடையவர்களாக விருக்கிறோம். உங்களுக்கு வேண்டிய பணி விடைகளைச் செய்கிறோம். இந்த வரங்களைக் கொடும். எங்களுக்குப் பதிலாக உம்மால் சிருஷ்டிக்கப்பட்ட அழகிய நேத்திரத்தையுடைய இந்த ஊர்வசி முதலிய ஸ்திரீகள் சுவர்க்கத்துக்குப் போகும்படி ஆக்ஞைசெய்யும். தேவலோகத்தி லிருந்துவந்த இப்பதினயிரத்து ஐம்பதின்மர்களாகிய ஸ்திரீகள் இவ்விடத்திற்றனே யிருக்க வேண்டும். ஓ மாதவரே! எங்கள் மனோரதப்படியே அநுக்ரகஞ் செய்யும். முன் எங்களுக்குக் கொடுத்த வாக்கைத்தவறுதல் வேண்டாம். சத்தியத்தில் நில்லும். காமாதுரர்களாயிருக்கின்ற ஸ்திரீகளுக்கு ஆசையைக் காட்டிக்கொடுப்பது பாவமென்று தர்ம வித்துக்களாகிய தத்துவ தரிசிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. நாங்கள் பூர்வ புண்ணிய விசேஷத்தால் சுவர்க்கத்திலிருந்து வந்து

உம்மிடத்தில் அன்புடையவராகவுமிருக்கின்றோம். சமர்த்தரா யிருக்கின்ற நீர் எங்களை விடும்படியான வெண்ணங்கொள்ளக் கூடாதென்று பிரார்த்திக்க, நாராயணர், அழகிற் சிறந்த ஸ்திரீ களே! நான் அநேக வருஷகாலம் நிறைந்த தவத்தைச் செய் துள்ளேன்; இந்திரியங்களை ஜயித்தவனுயுமிருக்கின்றேன். ஆகை யால் இப்பொழுது எவ்வாறு தபோபங்கத்தைச் செய்யத் தக்கவனுவேன்? பரமசுகத்தையும் தருமத்தையுங் கெடுப்பதாகிய காமசுகத்தி லெனக்குப் பிரியமில்லை. பாவசம்பந்திகளாயுள்ள ஆத்மகோடிகளால் ஸகஜமாய் விரும்பப்பட்ட இந்திரிய விஷய சுகத்தை இந்திரிய வர்ஜிதனுகிய புத்திமான் எப்படி விரும்புவா னென்றுகூற, அப்ஸரஸ்திரீகள், சப்தம்முதலாகச் சொல்லப்பட்ட பஞ்ச தன்மாத்திரைகளால் விளையுஞ் சுகங்களில் பரிசசுகமே சிரேஷ்டமான சுகம்; ஆனந்தரசத்தை மூலமாகவுடைய அந்தப் பரிசசுகத்தைக் காட்டிலும் சுகமென்பது வேறெதுவு மில்லையே, ஓ மஹாப்பிரபோ! ஆகையினுல் எங்களுடைய வார்த்தையைப் பெரும்பாலும் அங்கீகரித்தல் வேண்டும். நீர் இந்திரிய சுகங்களை இப்பொழுது பரிகரித்துப் பின் சுவர்க்கத்திலடையப் போவதும் இந்திரிய சுகந்தானே! அந்தச்சுகம் இவ்விடத்திற்றுனே வந்திருக்கும்பொழுது அதனை நன்ரு யநுபவித்து இந்த மலையி லேயே யிருக்கலாமன்றோ? நீர் ஒருகால் சுவர்க்கத்தையே யபேக்ஷிப் பீராயின் அஃது இதற்குச் சமானமானதன்று. ஆகையால் சுககரமாகிய இவ்விடத்தில் இந்த அப்ஸர ஸ்திரீகளோடுமிருந்து நல்ல சுகத்தை யநுபவித்திருமென்று கூறினுர்களென்று வியாசர் அரசனுக் குரைத்ததைச் சூதபகவான் முனிவர்கட்குக் கூறினுர். (47–50½)

ஓம் ஹ்ரீங்கார மந்த்ர ஸர்வஸ்வாயை நம:

## 7. ஸம்ஸார தத்வ விசாரம்

சூதபகவான், ஓ மஹரிஷிகாள்! இதுகாறும் நாராயணருடைய தவத்தைக் கெடுக்குமாறு இந்திரன் மன்மதனையும் அப்ஸரஸ்திரீ களையுமனுப்ப, நாராயணர் அவர்களைப்போல் தான் படைத்து வந்தவர்களை நாணும்படியாகச்செய்ய, அவர்கள் நாணமுற்று உங்களைவிட்டுப் போகோமென்று சொல்லியவரையிற் சொல்லி வந்தோம். இனி நாராயணரால் சொல்லப்பட்ட ஸம்ஸார நிந்தையைக் கேளுங்களென்று சொல்லலுற்றனர்:

வியாசமுனிவர் கூறுகின்றுர்:—ஓ அரசனே! நாராயணர் அந்த ஸ்திரீகள் உங்களைவிட்டுப்போகோமென்று சொல்லிய வார்த் தையைக் கேட்டு நாமிப்பொழுது என்ன செய்யலாமென்று சிந்தித்து, இது நமக்கு அகங்காரத்தினுல் வந்த துக்கம். இதற்கு விசாரமேன்? தீயகுணங்களில் முதன்மையாகக் கூறப்பட்ட அகங்காரமானது தவத்தைக்கெடுப்பதற்குக் காரணமாயுள்ளது.

இதனை மகத்துக்கள் ஸம்ஸாரமாகிய விருக்ஷத்துக்குப்பீஜமென்று சொல்லுகின்றனர். நாம் இந்த ஸ்திரீகளுடைய வரவைப்பார்த்து ஏன் மௌனத்தை யடைந்திராமற் போனோம்? அப்படி இராமை யினால் துக்கங்களுக்கெல்லாம் பாத்திரமாயிருக்கின்ற தாசிகளுடைய கூட்டமானது நம்மைச்சேர்ந்தது. அதுவுமல்லாமல் நாம் ஸ்திரீகளை யுண்டுபண்ணி நம்முடைய தவமாகிய தர்மத்தை நாசமாக்கிக் கொண்டோம். தேவ ஸ்திரீகளோ வென்றால், இப்பொழுது காமபீடிதராய் நம்மைப் பாதை பண்ணுவதற்கு ஏற்பட்டிருக் கின்றார்கள். சிலந்திப் பூச்சியைப்போல் நாம் செய்த இந்த ஜாலம் நமக்கே தீங்கைச் செய்யவும் திண்ணியபாசம்போல் நம்மைக் கட்டுண்டிருக்கச் செய்யவுமாயிற்று. நாம் இனிச் செய்யவேண்டி யது என்ன? அன்றி இவ்வாறு சிந்தாகுலப் படுவதைவிட்டு இந்த ஸ்திரீகளை விட்டுவிடுவோமாயின் இவர்களெல்லாம் தங்களபீஷ்டம் நிறைவேறுமற் போனபடியினால் நம்மைச் சபிப்பார்கள். நாம் கோபஞ்செய்வோமாயின் அது தாபத்தை யுண்டாக்கு மல்லவா? அன்றியும் காமத்துக்கு இரண்டாவது சத்துருவாயுள்ள தல்லவா? ஆகையால், இந்த ஸ்திரீகளிடத்தில் நாம் கோபத்தைக் காட்டாமல் இவ்விடத்தினின்று நீங்கி ஏகாந்தத்திலிருந்து தவத்தை யநுஷ் டிப்போமென்று தம்முளாலோசித்து ஸுகோற்பத்திக்குச் சாதனமா யுள்ள சித்தத்தில் விசாரஞ் செய்தனர்.

உலகத்தில் காமத்தினும் லோபத்தினும் அதிகமான தீங்கை யுடையது கோபம். கோபமுடையவன் பிறருக்குப் பிராணனைப் போக்கடித்துக்கொள்வதாதிய ஹிம்சையை விளைவிப்பான். ஆகை யால் அஃது எல்லாப் பிராணிகளுக்கும் துக்கத்தைக் கொடுப்பது. அன்றியும், நரகமென்கிற உத்தியானவனத்துக்கு நடபாவியாயுள் ளது. மேலும் மரங்களொன்றோடொன்று உராய்தலினாலுண்டாகும் நெருப்பு அந்த மரங்களையே எப்படி எரித்துவிடுகிறதோ அப்படியே கோபம் நம்மிடத்திலேயே தோன்றி நம்மையே சுட்டெரித்துவிடு மென்று மிகவும் வியாகுலமுடையவராயிருக்கின்ற தமையனுக்குத் தம்பியாகிய நரன் சொல்லத்தொடங்கினார் : (1–12)

ஓ ஞானவானாகிய நாராயணரே! கோபத்தையடக்கும்; கெடுக்குந் தீயகுணங்களுக்கெல்லாம் பெரிதாகிய அகங்காரத்தை நிவிர்த்தித்து சாந்தபாவத்தை யடையும்; பூர்வத்தில் அகங்கார தோஷத்தினால் தேவவருஷத்தில் ஆயிரம் வருஷம் பிரகலாத னென்கிற அசுரனோடு யுத்தஞ்செய்து நம்மிருவருடைய தவமும் நஷ்டத்தையடைந்திருக்கிறதல்லவா? ஓ தேவஶ்ரேஷ்டரே! அந்த யுத்தம் நடந்த விஷயத்தில் மிகுந்த துக்கமும் உண்டாய் விட்ட தன்றோ? ஆகையினால் கோபத்தைவிட்டுச் சாந்தராய் விடுமென்று நரனென்பவர் கூறினார். ஜனமேஜயன் வியாசர் கூறியதைக் கேட்டு, ஓ முனிசிரேஷ்டரே! எனக்கிது ஸம்சயமாயிருக்கிறது. விஷ்ணு பக்தனும் சாந்த சித்தனும் மகாத்மாவாயுமிருந்த பிரகலாதன் பூர்வம் இந்த நரநாராயணரிடத்தில் என்ன காரணமாக யுத்தஞ்செய்தான்? இந்த நரநாராயணரென்கிற மகரிஷிகள் தாம்

ஏன் யுத்தஞ் செய்தார்கள்? சாந்தசித்தமுடைய இந்த ரிஷிகளுக்கும் அசுரனாகிய அந்தப்பிரகலாதனுக்குஞ் சந்திப்பு எப்படியுண்டாயிற்று? இவ்விருவரும் என்னவிதமான யுத்தஞ் செய்தார்கள்? பிரகலாதனை விசாரிக்குமிடத்து அவன் மிகவும் தர்மாத்மாவென்றும் ஞானாத்மாவென்றும் விஷ்ணுபக்தனென்றும் தெரியவருகிறது. நரநாராயணரென்கிற ரிஷிகள் அந்தப்பிரகலாதன் போலவே ஸத்வ குணத்திலேயே யிருக்கின்றவர்களென்று தேவரீர் சொல்லிவந்ததனால் தெரியவருகிறது. இவ்விருவருக்குமே விரோதமுண்டாய்ப் போர் நேரிட்டிருக்குமானால் அவர்கட்குத் தவத்தினாலும் தர்மத்தினாலும் சரீரத்துக்குச் சிரமம் உண்டானதேயன்றி வேறென்ன பிரயோஜனமுண்டாயிற்று? அந்தச் சத்தியயுகமாகிய கிருதயுகத்திலும் ஜபமுந்தவமும் நடந்திருக்குமென்பது எப்படி? சாதுவிருத்தியிலிருப்பவர்களுக்குள் யுத்தம் நேரிட்டதென்றால் அப்பொழுது கோபத்தினாலும் அகங்காரம் முதலியவற்றாலுஞ் சூழப்பட்ட சித்த விருத்தியுண்டாயிருக்குமே! தத்துவஞானிகளென்று சொல்லப் படுவோர் ஜயிக்கவேண்டியவைகள் அவைகள் தாமே! அகங்காரமாகிய அங்குரத்தைவிட்டுக் கோபமுதலியவைகள் வளரமாட்டாவல்லவா? அதுபோலவே காமக் குரோதம் முதலியவை அகங்காரத்தினின்றுந் தோன்றியவைதாமே. சூரியோதயத்தில் அந்தகாரமெப்படியில்லையோ அப்படி அகங்கார உதயத்தில் ஆயிரங்கோடி வருஷம் மிகவும் கஷ்டப்பட்டுத் தேடிய தவமாகிய புண்ணியமுமிருக்கமாட்டாதே.

அங்ஙனமிருக்கப் பிரகலாதனும் நரநாராயணரும் யுத்தம் பண்ணினாரென்றால் அவர்கள் இவ்வுலகில் தீர்க்க காலமாய்ச் செய்த புண்ணியங்களெல்லாம் வியர்த்தந்தானே! பிரகலாதனாவது அரசன்; சாந்தர்களாகிய நரநாராயணர்கள் ரிஷிகள்; இவர்கள் தவத்தைவிட்டு எப்பொழுது யுத்தஞ்செய்தார்களோ அப்போழுதே சாந்தமும் செய்த தவமும் எவ்வண்ணம் நிலைத்திருக்கும்? ஸத்வ குணத்தோடு கூடினவர்களாகிய இவர்களாலேயே அகம்பாவத்தை ஜயிப்பதற்குக் கூடாமற்போகுமானால் நம்மையொத்தவர்கட்கு அகங்காரநாசம் ஆகவில்லை என்பதில் என்ன வாதமிருக்கின்றது? (நம்மால் முடியவே முடியாது.) ஆகவே இம்மூன்றுலகத்திலும் அகங்காரத்தை விட்டவனெவனுமில்லை. அந்த அகங்காரத்தினால் விடப்பட்டவனும் பெரும்பாலுமுன்னுமில்லை, பின்னுமில்லை. தொழுவாகிய விலங்கிலகப்பட்டவனும் ஒரு காலத்தில் விடுபடுகிறான்; அகங்காரமாகிய விலங்கிலகப்பட்டவன் ஒருபொழுதும் விடுபடுகிறதேயில்லை. தாவரஜங்கமாத்மகமாயுள்ள எல்லாவுலகும் அகங்காரத்தினாலேயே மூடப்பட்டிருப்பதனால் மலமூத்திரங்களினால் அருவருக்கத் தக்கதாயிருக்கிற இந்த ஸம்ஸாரத்தில் பிரமித்துக்கொண்டேயிருக்கிறது இயல்பாகவிருக்கின்றது. அது இயல்பாகவே அஞ்ஞானத்தினால் சூழப்பட்ட ஸம்ஸாரத்திலிருப்பவனுக்குப் பிரம்ம ஞானம் எப்படியுண்டாகும்? மகான்களும் காமக்குரோதாதிகளோடு கூடியிருக்கின்றவர்களேயென்பது மீமாம்ஸகருடைய உண்மை

யானமதம். அதுதான் பிரகாசமாய் எனக்குத் தெரிகின்ற வுண்மை. மகான்களுடைய கதியே அப்படியாகுமானால், இக்கலியுகத்தில் நம்மனோருடைய கதியைச் சொல்லவேண்டுமா? ஓ அரசனே! நானொன்றுசொல்லுகிறேன்: காரியமானது காரணத்திலிருந்து எப்படி பின்னப்படும்? படமாட்டாது. (13–33)

எங்ஙனமெனின், கடகமுதலாகிய காரியங்கள் காரணமாகிய பொன்னின்றிக் கெடுமென்பாருமுண்டா? ஆகவே, காரணமாகிய பொன்னிருக்குமளவும் அதன் காரியமாகிய கடக குண்டலாதிகளு முண்டென் றறிவதுபோலும், நூல் மயமாகிய வஸ்திரம் அந் நூலில்லா தொழியின் வஸ்திரமேதென் றறிவதுபோலும், காரண மாகிய அகங்காரங் கெடாதிருக்குமளவும் காரியமாகிய காமக் குரோ தாதிகளிருக்கும். அகங்கார மயமாகிய காமக் குரோதாதிகள் அவ் வகங்காரமில்லாதொழியின் எங்ஙனமிருக்கும்? இதனால் பொன் காரணம், கடக முதலியவைகள் காரியமெனவும்; நூல் காரணம், வஸ்திரம் காரியமெனவுந் தெற்றென அறியவருவதுபோல் அகங் காரம் காரணமெனவும், காமக் குரோதாதிகள் காரியமெனவும் அறிந்து எங்கே காமாதி குணங்களிருக்கின்றனவோ அங்கே அகங் காரமிருக்கின்றதெனவும், எங்கே காமாதி குணங்கள் வெளிப்பட வில்லையோ அங்கே அகங்காரமில்லையெனவும் அறியற்பாலது. இந்த விசாரத்தால் பிரகிருதி குண சம்பந்தமாயிருக்கின்ற திரணம் முதல் ஸ்தம்ப பரியந்தமாயுள்ள ஸகல ஜகத்தும் அகங்காரத்தினின் றுந் தோன்றியதாகலான் அகங்கார காரியமாகிய காமக் குரோதாதி கள் ஒருவரையும் விடமாட்டாவென்றும், அவை விடக்கூடாதன வாகவே, தவம் முதலியன ஒருவர் இயற்றியபோதிலும் காமக் குரோத அகங்காரம் முதலியவைகள் நசித்துப் போயிற்றென்று அறியற்பாலதன்றெனவும், மற்றென்னெனின் தவம் முதலியன வியற்றுங்கால் அவை அடங்கி நின்று அவை தோன்றும் இடம் வந்துழி வெளிப்பட்டு வருவனவெனவும் ஐயமின்றி அறியற்பால தாம்.

ஓ அரசனே! முனிவர்களும் இந்த ஸம்ஸாரத்தில் துன்பத்தை யடைந்தவர்களாய்ச் சஞ்சரிக்கின்றனர்கள். மூன்றுலகத்திலும் இப் படிப்பட்ட மாயா குணங்களினின்றும் விடுபட்டவராயும், சாந் தத்தை யடைந்திருக்கிற மனத்தையுடையவராயும், பேரின்ப ஸாக ரத்தில் நிலைபெற்றவராயும் மிருக்கும் புருஷர் எவருமில்லை. காமக் குரோதாதிகளும் தேகத்தோடு கூடியிருக்கின்றவர்களை விடுகிற தில்லை. ஒருவன் வேதங்களையும் சாஸ்திரங்களையும் அத்தியயனம் செய்து புராணங்களையெல்லாம் ஆராய்ந்தும் வனிதாதி விஷயங் களில் பற்றுள்ளவனாகவே யிருந்து, தீர்த்த யாத்திரை, தானம், தேவதாபூஜை, வேதாத்தியயனம், இதுபோலுமுள்ள கர்மாநுஷ் டானங்களைச் செய்வானாயின் அவன் திருடனைப்போற் செய்கிறவ னாவான். முன்னர், கிருதயுகம் முதலிய மூன்று யுகங்களிலும் ஸர்வசாஸ்திர ஸம்பன்னராயிருந்தவரும் காமக் குரோதம் முதலிய வைகளோடு கூடினவராகவே யிருந்தார்களன்றி, அந்த குணங்களை

யொழித்து சாந்த விருத்தியிலிருந்தவரல்லர். அந்த ஸர்வசாஸ்திர சம்பன்னமான குணங்களெல்லாம் கெட்டுப்போயிருக்கின்ற இக்கலியுகத்தில் இந்த விசார மெற்றுக்கு? இந்தக் கலியுகத்தில் எப்பொழுதுந் துரோகமும் விரோதமும் லோபமும் கோபமும் நிறைந்திருக்குமென்பது சித்தம். எந்த யுகத்திலும் ஸம்ஸார லக்ஷணம் மாத்திரம் இத்தன்மையதாகவே யிருக்கின்றது. இந்த விஷயத்தில் விசாரம் பண்ணுவது யுக்தமாகக் காணப்படவில்லை. குரோதம் விட்டவர்களாயும் பொறுமையற்றவர்களாயும் மாச்சரியமில்லாதவர்களாயும் உலகத்தார்க்குச் சாக்ஷி பூதமாயுமுலாவிக் கொண்டிருந்த மகான்கள் இப்பொழுது தேடத் தக்கவர்களாக விருக்கின்றார்கள். மதம் முதலிய குணங்களை விட்டவர்களாயும் இந்திரிய நிக்ரக முடையவர்களாயும் ஸதாசார ஸம்பன்னர்களாயுமிருக்கிற புண்ணியசாலிகளே தன்யர்கள். அவர்கள் தாம் மூன்றுலகத்தையுஞ் ஜயிக்கத் தக்கவர்கள். இப்பொழுது மகாத்மாவாகிய என் தகப்பனுருடைய பாதகத்தை நினைத்து வருத்தப்படுகின்றேன். தபஸ்வியாகிய மகரிஷியினுடைய கண்டத்தில் ஒரு குற்றமுமில்லாமலே இறந்துபோன பாம்பைச் சுற்றினார். ஓ வியாசரே! அதனால் அவருக்குண்டாகிய பாவத்தைப் போக்க என்றால் என்ன பரிகாரஞ் செய்ய வேண்டுமோ அது என் மனதிற் றோன்றவில்லை. என் பிதா செய்ததை யோசிக்குங்கால், மதுபானஞ் செய்ய அபேக்ஷித்தவன் தனக்கு வரும் அபாயத்தை எப்படியறியானோ அப்படியே அறியாதவராயினார்; அவர் நரகத்துக்குப் பயப்படாமலே நிந்தையான கிருத்தியத்தைச் செய்துவிட்டார் என்று தோன்றுகிறது.

என் பிதாவினுடைய செய்தி நிற்க. நீர் சொல்லிவந்த பிரகலாதனோடு நரநாராயணர்களுக்கு யுத்தமெப்படி நேரிட்டது? அதை விவரமாகச்சொல்லவேண்டும். பிரகலாதன் பாதாளத்திலிருந்து எப்படிவந்தான்? அவனுக்கும் ஸரஸ்வதிநதிக்கரையிலுள்ள பதரிகாச்சிரமத்தில் வசிக்குஞ் சாந்தர்களாகிய நரநாராயணர்களுக்கும் திரவிய நிமித்தமாகவா, ஸ்திரீநிமித்தமாகவா யுத்தம் நேரிட்டது? ஒருபொருளிலும் இச்சையற்றிருக்கிற அவர்கள் ஒரு காரணமுமில்லாமலா பெரிய யுத்தத்தை நடத்தினார்கள்? தர்மாத்மாவாகிய பிரகலாதனுக்கு அவர்கள் மிகவும் பெரியோர்களென்று தெரிந்திருந்தும் அவன் அவர்களோடு எப்படி யுத்தஞ் செய்தான்? ஓ வியாசரே! இவைகளெல்லாம் காரணங்களோடு கேட்க அபேக்ஷித்திருக்கிறேனென்று அரசன் வியாசமுனிவரைப் பிரார்த்தித்ததாகச் சூதபகவான் முனிவர்கட்குக் கூறினார். (34–55)

ஓம் ஹ்ரீங்கார பர ஸௌக்யதாயை நம:

## 8. க்ஷேத்திராடனப் பயன்

சூதர் கூறுகின்றார்:—ஓ மஹரிஷிகாள்! வியாசபகவான் அரசனுடைய விண்ணப்பத்தைக் கேட்டுத் தன்னிருக்கைக்குப் போயினர். அவர் போன பின்னர் தர்மாத்மாவாகிய ஜனமே

ஜயன் தன் பிதாவாகிய பரீக்ஷித்தினுடைய சித்தத்தைப் பாவரூப மாகவெண்ணி மிகவும் துக்கத்தையடைந்து நம்முடைய பிதா பிரமரிஷிக்குச் செய்த அவமானத்தால் விளைந்த சாபத்தினால் சர்ப் பத்தீண்டப்பட்டு விஷமேறி ஸ்நானதான முதலியன வொன்று மின்றி உப்பரிகையிலிறந்து யமலோகத்துக்குப்போய் அங்கும் இங்குண்டாகிய பாவவிளைவால் நரகத்தை யடைந்தனரல்லவா! அவரை நாம் கரையேற்றவேண்டும். ஏனென்றால், எந்தப் புத்திரன் புத் என்கிற நரகத்தினின்றுந் தன் தகப்பனைக் கரையேறச் செய் கின்றானோ அந்தப் புத்திரனுக்குத்தான் புத்திரனென்கிற பேரானது உண்மையாகச் சொல்லக்கூடுமென்று பெரியோர் கூறுகின்றன ரென்று பிதாவினுடைய கதியைக் குறித்து மனக்கவலையையும், பயகம்பனத்தையு மடைந்து துக்கித்திருக்கும் சமயத்தில் வியாசர் கிருகத்தினின்றும் வருவதைப்பார்த்து எதிர்சென்று வணங்கி ஆசனமளித்து நரநாராயணருடைய சரித்திரத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, வியாசர் சொல்லத் தொடங்கினர். அதனைச் சொல்லுகிறேன், கேளுங்கள். (1–6)

குரூரனாகிய இரணியகசிபு என்கிற அசுரன் நரசிங்கமூர்த்தி யினாலெப்பொழுது கொல்லப்பட்டானோ, அப்பொழுது அவனுடைய குமாரனாகிய பிரகலாதன் பட்டாபிஷேகமுடையவனாய்த் தேவர் களாலும் அந்தணர்களாலும் கொண்டாடப்பட்டு வாழ்ந்திருந் தனன். அப்பொழுது உலகில் அரசரெல்லாம் நீதியை சிரத்தை யோடு நடத்திவர, அந்தணர்கள் தவம் சத்கருமானுஷ்டானம் தீர்த்தயாத்திரை முதலியவற்றில் தவறாமலும், வைசியர் பிறர் பொருளுந் தம்பொருள்போ லெண்ணிச் செய்தலாகிய வாணிபத்தி லும், சூத்திரர் மூன்று வருணத்தாருக்குரிய பணிவிடைகளிலுந் தவறாதிருந்தனர். பின்னர், நரசிங்க மூர்த்தியினால் பாதாளலோகத் தில் தாபிக்கப்பட்டு அவ்விடத்திலிருந்தே பிரஜைகளைக்காத்து அரச பரிபாலனஞ் செய்து வந்தனன்.

பின்னர், ஒருசமயம் பிருகு புத்திரராகிய சவனர் புண்யப்ர தமாய் விளங்கும் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வதற்கு யாத்திரையாகப் போகும்போது ரேவாநதியைப்பார்த்து அதில் ஸ்நானஞ்செய்து அந்தநதியைத் தாண்டுகிற சமயத்தில் பயங்கர மாகிய விஷத்தோடுங்கூடிய ஒரு ஸர்ப்பமானது கௌவிப் பாதாள லோகத்தை யடைந்தது. அப்போது அந்தச் சவனர் திகிலடைந்து தேவசிரேஷ்டராகிய நாராயணரை, ஓ ஜனார்த்தனா! தேவதேவா! புண்டரீகாக்ஷா! இந்த விஷத்தைப் போக்கடிக்கவேண்டு மென்று தோத்திரஞ் செய்தமாத்திரத்தில் விஷச்சுவாலை யடங்கிப்போனது மல்லாமல் பாதாளலோகபரியந்தம் போனதனா லுண்டாகிய துக்க மும் நீங்கிப்போயிற்று. அப்பொழுது அந்த ஸர்ப்பமானது இனி இந்த ரிஷி நம்மைச் சபிப்பானென்று பயந்து விட்டுவிட்டது. பின் னர் அந்தச்சவனர் அங்குள்ள நாகராலும் அசுரராலும் நாககன்னி கைகளாலும் பூஜிக்கப்பட்டு வாழ்ந்திருந்தனர்.

ஒரு நாள் அந்த ரிஷியைத் தர்மசிந்தனையுள்ள பிரகலாதனுகிய அசுரேந்திரன் பார்த்து, அர்க்கிய பாத்தியாதிகள் தந்து பூஜித்து அவரைநோக்கி, நீர் இவ்வுலகில் எப்படி வந்தீர்? அசுரத் துவேஷி யாகிய இந்திரன் என்னுடைய ராஜ்யத்தைப் பார்க்கவேண்டு மென்கிற இச்சையாலனுப்ப நீர் வந்தீரா? உண்மையைச் சொல்லு மென்று கேட்க, மகரிஷி, ஓ அரசனே! இந்திரனுல் எனக்காக வேண்டிய காரியமென்ன? நான் அவனுக்கு ஏவலாளியா? உன் னுடைய நகரத்தில் தூது வருவதாகிய தொழிலேயா செய்ய வந்தேன்? ஓ அசுரேந்திரா! என்னைப் பிருகுவம்சஸ்தனுகவும், தர்மாநுஷ்டான பரனுகவும், என்னுடைய இச்சையினுல் வந்தவ னுகவும் அறிந்துகொள்வாய். என்னிடத்தில் வேறு சந்தேகங் கொள்ளவேண்டாம். ஆனுல் என்னுடைய விருத்தாந்தம் ஒன் றுளது. யான் ஸ்நானநிமித்தமாக நதியை யடைந்தபொழுது, ஸர்ப்பத்தினுல் பிடிக்கப்பட்டு இவ்விடம் வந்தேன். அப்பொழுது யான் செய்த விஷ்ணு தோத்திரத்தினுல் அந்த ஸர்ப்பமானது விஷமில்லாத தாயிற்று. நானும் அந்த ஸர்ப்பத்தினின்றும் விடுபட்டேன். ஓ ராஜேந்திரனே! இவ்விடத்தில் விஷ்ணுபக்த னுகிய எனக்கு அந்த விஷ்ணுபக்தனுகிய உன்னுடைய தரிசனமும் கிடைத்ததென்று கூறியபொழுது, பிரகலாதன் அவருடைய மதுர மாகிய வார்த்தைகளைக் கேட்டு மிகுந்த அன்புடனே, ஐயா முனி சிரேஷ்டரே! தீர்த்த மகிமையைக் கேட்க விரும்பியிருக்கின்றே னுகையால் பூமியிலும் பாதாளத்திலும் அந்தர மார்க்கத்திலும் உள்ள புண்ணிய தீர்த்தங்களெவைகளோ அவைகளையெல்லாம் விரி வாகச் சொல்லவேண்டுமென்று கேட்டனன்.

ஓ அரசனே! மனம் வாக்குக் காயமென்கிற மூன்று கரணங் களுஞ் சுத்தமாக விருக்கப்பெற்றவர்களுக்குச் சுத்தமாயுள்ள தீர்த்த மானது ஒவ்வோர் காலடிதோறுமிருக்கிறது. அந்த மூன்று கரணமுஞ் சுத்தமில்லாதவர்களுக்குக் கங்கையும் புழுக்களோடு கூடி அசுத்தமுடையதேயாகும். முன்னர் பாவமில்லாமலிருக்கிற சுத்தமான மனம் ஒருவருக்குண்டாகுமேயானுல், அவர்கட்கு எந்தத் தீர்த்தங்களும் பரிசுத்த முடையவைகளாகவே யிருக்கும். கங்கா தீரத்தில் நகரங்களும் அநேக கிராமங்களும் ஆயர் முதலி யோர் பாடிகளும் சிற்றூர்களு மிருக்கின்றன. அதுவுமன்றி வேடர் வலேஞர் ஊணர் மிலேச்சர் முதலியோருடைய குடிகளுமிருக் கின்றன. அவர்கள் சிவசொரூபமாகிய கங்காதீர்த்தத்தில் எப் பொழுதும் ஸ்நானமும் எப்பொழுதும் பானமுஞ் செய்கிருர்கள். ஓ அரசனே! அவர்களெல்லாம் ஒருகாலமன்றி மூன்றுகாலமும் ஸ்நானம் முதலியவற்றைச் செய்தவர்களாயிருந்தபோதிலும் அவர் களில் ஒருவனுவது மனுேசுத்தம் பெற்றிருப்பனுேவென்ருல், ஒருவ னும் பெற்றிருக்கமாட்டான். ஆகையால் பிரபஞ்ச விஷயங்களால் கெட்டிருக்கும் மனமுடையவர்களுக்குத் தீர்த்தத்தினுடைய பல னேது? இந்திரிய விஷயங்களில் மயங்கிக்கிடக்கும் அவர்களுக்குத் தீர்த்த பலன் கிடையாதென்பதாம். (7–23)

ஓ அரசனே! இந்த விஷயத்தில் மனேசுத்தியே காரணமாயுள்ளது. அதற் கன்னியமானது இல்லையென்று யோசிக்க வேண்டும். எப்பொழுதும் சுத்தியை அபேக்ஷிக்கிறவன் மனே சுத்தியை முன்னர் தேடவேண்டும். தீர்த்தக்கரையில் வசிக்கிறவன் பிறரை வஞ்சித்தல் முதலிய தீத்தொழிலைச் செய்வானுயின் அவன் புண்ணியவானுய் விடுவானே? ஆகலான், புண்ணிய தீர்த்தக் கரையிற் செய்யப்பட்ட பாவம் தினே தினே விருத்தியடையும். பரி சுத்தமாகிய தீர்த்தஸ்நானஞ் செய்கின்றவன் மனேசுத்தி யில்லா திருப்பானுயின் அவனை அது சுத்திசெய்கிறதில்லை. தீமையான வெண்ணம் படைத்தவன் புண்ணிய தீர்த்தத்தில் கோடி முறை ஸ்நானம் செய்தபோதிலும் அவன் சுத்தனுகமாட்டான். ஆகையால், சுத்தியை அபேக்ஷிக்கிறவன் மனேசுத்தியை முன்னர்ச் செய்து கொள்ளவேண்டியது. மனமானது சுத்தமாயிருக்குமேயானுல் உபகரணங்களும் சுத்தியடையும்; வேறுவிதத்தால் சுத்தியை யடைகிறதில்லை. ஆசாரசுத்தி என்பதும் அதுவேயாகும். அந்த மனேசுத்தி யுடையவர்களாற்றுன் தீர்த்தங்களும் மகிமை கெட்டுப் போகாமல் பிரசித்தத்தை யடைகின்றன. மனேசுத்தியீனமாய்ச் செய்யும் வேறுவிதமான அநுஷ்டானங்களெல்லாம் சீக்கிரத்தில் வியர்த்தத்தை யடையும்; முக்கியமான மனேசுத்தியாவது தன் னுடைய புத்தியினுலும் செய்கையினுலும் பிறரஞ்சத்தக்கவை செய்யாதிருத்தலேயாகும். (33–39)

ஓ அரசனே! மகிமை பொருந்திய தீர்த்தங்களைக் கேட்ட படியினுல் அவைகளிற் சிலவற்றைச் சொல்லுகிறேன்; மிகவும் சிறப்புடைத்தாகிய நைமிசாரணியத்தில் சக்கரதீர்த்தமெனவும், புஷ்கர தீர்த்தமெனவு மிருக்கின்றன. அதுபோல் பூமியில் அள வில்லனவாகிய தீர்த்தங்களும், க்ஷேத்திரங்களு மிருக்கின்றன வென்று கூறப் பிரகலாதன் அவருடைய வார்த்தையைக்கேட்டு நைமிசாரணியத்தை யடைவதற்குப் பிரயத்தனஞ்செய்து, தன்னுள் அடக்கக்கூடாத சந்தோஷத்தை யுடையவனுய் அசுரர்களைப் பிர யாணப்படுத்தி அவர்களைப்பார்த்து, ஓ மஹானுபாவர்களே! எழுந் திருங்கள்; இப்பொழுது நைமிசாரணியத்தை யடைவோம்; அங்குப் பீதாம்பரதாரியாய் கமலலோசனராய் வீற்றிருக்கின்ற விஷ்ணு மூர்த்தியைத் தரிசிப்போமென்று சொல்ல, மஹாபலிஷ்டர்களாகிய அசுரர்களும் தானவர்களும் ஒன்றுகக் கூடிப் பாதாளலோகத்தி லிருந்து மிகுந்த சந்தோஷத்துடன் விஷ்ணுபக்தனுகிய அந்தப் பிரகலாதனுேடு பிரயாணப்பட்டு நைமிசாரணியம்போய் மிகுந்த பக்தியோடு ஸ்நானஞ் செய்தார்கள்.

பிரகலாதன் அந்த அசுரர்களோடு கூடி அங்கங்குள்ள புண்ணிய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ்செய்து பின்னர் மகா புண்ணிய சொரூபமாகிய நிர்மலமான தீரத்தையுடைய ஸரஸ்வதி என்கிற நதியைத் தரிசித்தான். ஓ ஜனமேஜயனே! அந்த தீர்த் தத்தைப் பார்த்தபொழுது மகாத்மாவாகிய பிரகலாதனுடைய புத்தியிலோர் தெளிவுண்டாய் சாஸ்திர முறைப்படி ஸ்நானமும்,

ஸ்நானார்த்தமாயுள்ள தானமுதலியவும் செய்தானென்று வியாச முனிவர் கூறியதைச் சூதபகவான் முனிவர்களுக்குக் கூறினர். (40–47½)

ஓம் ககாரரூபாயை நம:

## 9. பிரகலாத நரநாராயண யுத்தம்

சூதர் கூறுகின்றார் :—ஓ மஹரிஷிகாள்! பின்னர் பிரகலாதன் நரநாராயணரைச் சந்தித்து யுத்தம் செய்த வரலாற்றை வியாச பகவான் அரசனுக்குக் கூறியதைச் சொல்லுகிறேன்; கேளுங்கள் :

வியாசமுனிவர் அரசனை நோக்கி, ஓ ஜனமேஜயனே! பிரகலாதன் ஸரஸ்வதி நதியில் விதிப்படி ஸ்நானமுதலியன செய்து எதிரில் நிழலோடுங்கூடிய ஆலமரமொன்றையும், அதில் கழுகின் சிறகுகளோடு கூடியதாய் அதிவேகத்தைக் காட்டும் நானுவிதமான பாணங்களையும் பார்த்துப் புண்ணியப் பிரதமாயும் அதிபரிசுத்தமாயுமுள்ள இச்சிறந்த புண்ணியதீர்த்தக் கரையில் மகரிஷிகளுடைய ஆச்சிரமத்தில் காணப்படும் பாணங்கள் யாருடையதென்று சிந்தித்தான்.

பின்னர் கிருஷ்ணஜின தாரிகளாய் நீண்ட சடைமுடியோடு கூடித் தியான நிலையினிற்கும் தருமருடைய புத்திரர்களாகிய நரநாராயணரையும், அவர்களுக்கு முன்னே ஸர்வலக்ஷண யுக்தமாய் வெண்ணிறத்தோடு பிரகாசிக்கின்ற சார்ங்கம் ஆஜவகம் என்கிற இரண்டு தனுசுகளையும், அக்ஷயமாகிய இரண்டு தூணீரங்களையும் பார்த்து இவர்கள் தர்மவிரோதமாகிய இந்த டம்பமான காரியத்தை ஏன் செய்யவேண்டுமென்று கோபித்து இரண்டு கண்களும் சிவந்து அவர்களைப் பார்த்து இந்தப் பிரபஞ்சத்தில் உங்களைப் பார்த்தால் தவமார்க்கத்தில் தீவிரநோக்கமுடையவர்களாய்த் தெரியவருகிறது. நீங்கள் வில்களைத் தாங்கியிருப்பதேன்? இது தவத்துக்கு விரோதமான அங்கமல்லவா? இவ்வாறு தவத்திலிருப்பவர்களைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இது கிருதயுகத்தில் நடக்கத் தக்கதன்று. இது கலியுகத்துக்குரிய தருமம். யுகதருமங்களுக்கு மாறாக நடப்பது நீதியானதன்று. பிரமரிஷிகளாகிய பிராமணர்களுக்குத் தபசு யுக்தமானதென்று சொல்லப்பட்டிருக்கிறதே தவிர தனுசைத் தாங்கியிருப்பது தவாங்கமென்று சொல்லவில்லை. அங்ஙனமிருக்க, நீங்கள் தாங்கியிருக்குங் காரணமென்னை? யோகபாவத்தையடைந்திருக்கிற உங்கள் சரீரத்தில் ஜடாதாரணமெங்கே, தூணீரமெங்கே? இவ்விரண்டும் ஒரு சரீரத்திலிருக்கத்தக்கதா? எவரெவர்கள் எந்தெந்த நிலைமையிலிருக்கின்றார்களோ, அவரவர்கள் அந்தந்த நிலைமைக்குரியவற்றை ஆச்ரயிப்பது யுக்தம்; அல்லாதது அயுக்தமென்று சொல்லப் பட்டிருக்கிறதென்று பிரகலாதன் கூறினன். (1–10)

அந்த வார்த்தையை நரன் கேட்டு, ஓ அசுரேந்திரனே! இவ்விடத்தில் எங்களுடைய தபசில் உனக்கேன் வீணை விசாரம்? சாமர்த்திய மிருக்கும் பக்ஷத்தில் எவன் எந்தக் காரியத்தைச் செய்த போதிலும் அவனுக்கு அது சுவாதீனப் படுவதில் என்ன ஆக்ஷேப மிருக்கிறது? ஓ மூடனே! உலகப் பிரசித்தியா யிருக்கின்ற நாங்கள் வீரத்திலும் தவத்திலுஞ் சமர்த்தர்கள். நீ என்ன செய்யப் போகிருய்? நீ உன்னிஷ்டப்படி வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போவாய்; இவ்விடத்தில் நின்று வீணை வார்த்தைகளை நீ பிதற்றுவதற் கென்ன காரணம்? நீ எங்கள் முன்னே இருப்பது கூடாது. இருந்தால் எங்களுடைய பிரமதேஜசைச் சகிக்கமாட்டாய். அதன் பெருமையை மூடனுகிய நீ அறியமாட்டாய். உலக சுகத்தை யபேக்ஷிக்கின்ற பிராணியாயிருக்கின்ற நீ பிரமரிஷிகளுடைய தர்மா தர்ம விசாரஞ் செய்ய வந்தது தருமமாகுமா? போ, போ வென்றனர்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட பிரகலாதன் இந்த நர நாராயணர்கள் மந்தபுத்தியுடையவர்கள்; இவர்களிடத்தில் பொய்வார்த்தையும் அகங்காரமும் நிறைந்திருக்கின்றன. இவர்கள் நம்மை அலக்ஷியமாய்ப் போவென்று சொன்னுலும் தருமத்தை நிலை நிறுத்தும் அசுரேந்திரனுகிய நாம் போவது தருமமல்ல. ஏனென்ருல், நாமிருக்கிறபொழுது தீர்த்தக்கரையில் பிரம ரிஷிகளாயிருக்கின்ற இவர்கள் க்ஷத்திரிய தருமத்தை இன்னமும் அநுஷ்டித்திருத்தல் யுக்தமானதன்று. இது பரதர்மம்; இது துக்கத்தை விளைவிக்குமென்றெண்ணி, ஓ முனிவர்களே! உங்களுக்கு யுத்தத்திலும் சக்தியிருக்கிறதென்று கூறினீரல்லவா? அதனை இப்பொழுது காட்டுங்களென்று பிரகலாதன் கூற, நரனென்பவர் உனக்கு யுத்தஞ் செய்யவேண்டுமென்கிற அபிப்பிராய மிருக்கிற பக்ஷத்தில் என்னுட னிப்பொழுதே யுத்தம் பண்ணுவாய். ஓ! அசுரருக்குள் பிரயோசனமற்ற நீசமானவனே! உன்னுலென்ன வாகும்? நான் உனது சிரசை இப்போது பொடியாக்கி விடுகிறேனென்ருர். (11–18)

அதனைக் கேட்ட பிரகலாதன் கோபித்து இவர்களை எந்தவிதத்திலாவது யுத்தஞ் செய்து ஜயிக்க வேண்டுமென்றெண்ணித் தவத்தாற் சரீரத்தை வாட்டிப் பெருமை பெற்றிருக்கும் அந்த நரனைப் பார்த்து, உன்னை ஜயிப்பது எனக்கோர் பெருங்காரியமாவென்று பிரதிக்ஞை செய்து வில்லைக் கையிலேந்தி வளைத்துக் குணத்தொனி செய்தனன். நரனும் வில்லை வளைத்து வேகத்தோடுங் கூடிய அனேக பாணங்களைப் பிரயோகித்தனன். அவைகளைப் பிரகலாதன் பார்த்துக் கோபங் கொண்டவனு யெதிரே நின்று பொன் கட்டுகளோடு கூடிய அநேக பாணங்களை வேகமாய் விட்டு அவைகளையெல்லாம் வெட்டினுன். நரன் தன்னுல் விடப்பட்ட பாணங்கள் வெட்டப்பட்டு முறிந்துபோனமையைக் கண்டு மிகுந்த ரோஷத்தோடும் வேறுபாணங்களைச் சீக்கிரமாய் விட்டனன். பிரகலாதன் அப்பாணங்களையும் கொடிய வேகத்தோடுங் கூடிய பாணங்களால்

வெட்டி அந்த நரனை மார்பிலடித்தான். நரனும் கோபித்தவனை ஐந்து பாணங்களால் பிரகலாதனைத் தோளிலடித்தான். இவ்விருவருடைய யுத்தத்தையும் இந்திரன் முதலிய தேவர்கள் விமானங்களிலேறிக்கொண்டு ஆகாய வீதியில் வந்துபார்த்து இருவருடைய பராக்கிரமங்களையும் மேன்மேலுங் கொண்டாடினார்கள். (14–24)

நரனால் அடிப்பட்ட பிரகலாதன் அதிக வீரத்தோடும் மேக வருஷம்போல் பாணங்களைப் பொழிந்தனன். நரனும் சார்ங்கமென்கிற தனுசை வளைத்துத் தீக்ஷ்ணமாகிய பொன் கட்டுகளோடு கூடிய பாணங்களை விட்டான். ஜயத்தை அபேக்ஷித்திருக்கிற இருவருடைய யுத்தமும் நீங்குதலில்லாமல் அதிகரித்தது. ஆகாயத்திலிருந்த தேவர்கள் சந்தோஷத்தை யடைந்த மனமுடையவர்களாய்ப் புஷ்பங்களை வருஷித்தார்கள். மறுபடியும் இருவரும் மாறி மாறி விடுவதும் ஒருவர் பாணங்களை யொருவர் வெட்டுவதும் முறிப்பதுமாய்ப் போராடிப் பின்னர் இருவருடைய போரையும் பார்த்துக்கொண்டு சுகாசனராய் வீற்றிருக்கின்ற நாராயணர்மேல் பிரகலாதன் நரன்மே லெவ்வாறு பாணப்பிரயோகஞ் செய்தனனோ அதுபோல் பாணப்பிரயோகஞ் செய்தனன். அதுகண்ட நாராயணமுனிவரும் அசுரேந்திரனாகிய பிரகலாதனை எதிர்த்து அவன் திக்பிரமையடையும்படியாயெண்ணிறந்த பாணங்களைவிட்டு ஆகாயமெங்கு மறைத்தனர். அதுவுமன்றி அப்பாணங்கள் ஆகாயத்திலிருக்கின்ற தேவர்களைப் பார்த்து, ஓ தேவர்களே ! வாய் மூடிக்கொண்டிருப்பதற்கா இங்கு வந்தீர்கள் ? நாராயணருடைய ஜயத்தைச் சொல்லுங்களென்று தூண்டுவது போலவர்கள் பேரிற்றைத்து நெருங்கின. அதனால் ஜயகோஷத்தைச் செய்கின்ற தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பகற்பொழுதிற்றானே இராப்பொழுதுக்குச் சமானமான இருள் பரவியது. அப்பொழுது போரைப் பார்க்கவந்த தேவர்கள் அடியில் வருமாறு சொல்லத் தொடங்கினர் : எப்பொழுதும் பார்த்திராத அதி பயங்கரமாகிய யுத்தம் இப்பொழுது நடந்து வருகிறது. இதனைக் காணுநிமித்தம் கந்தர்வர், யக்ஷர், கின்னரர், நாகர், வித்யாதரர், சாரணரென்பவரும் வந்திருக்கின்றனரென்றும், நாரதரும் பர்வதரும் ஆச்சரியமடைந்து பூர்வத்தில் தாரகாசுர யுத்தமும், விருத்திராசுர யுத்தமும் இப்படி நடந்ததில்லை என்றுரென்றும், விஷ்ணுவினால் செய்யப்பட்ட மதுகைடப யுத்தமும் இத்தன்மைத் தானதன்றென்று அதிசயித்தனரென்றுங் கூறினர்.

இவ்வண்ணம் யாவரும் அதிசயிக்கும்படியாகத் தினந்தோறும் பகலேயன்றி இரவிலும் விடாது யுத்தம் செய்துவருங்கால், ஒரு நாள் பிரகலாதனுடைய தனுசை நாராயணர் இரண்டு துண்டமாக்க, அவன் வேறொரு தனுசையெடுத்துப் பாணங்களைப் பிரயோகஞ் செய்ய, அவைகளையும் நாராயணர் ஒரு பாணத்தால் முறித்தெறிந்து அந்தத் தனுசையும் வெட்டினர். இவ்வாறு நாராயணர் வெட்டுந்தோறும் பிரகலாதன் வெவ்வேறு தனுசையெடுத்து யுத்தஞ்செய்து வந்தனன். அவன் வேறுவேறு தனுசை

எடுத்து யுத்தஞ் செய்யுந்தோறும் நாராயணர் கோபங்கொண்டவ ராய் அதிவேகமான பாணங்களால் வெட்டிக்கொண்டே வந்தனர்.

இவ்வாறு எடுக்கும் விற்களெல்லாம் ஒடிந்துபோக மனம் பொருது பிரகலாதன் பரிகமென்கிற ஆயுதத்தையெடுத்து மிகுந்த கோபத்தையுடையவனாய் நாராயணருடைய மார்பில் மோதியடித் தான். பலிஷ்டராகிய அந்த நாராயணர் தன் மார்பிற்றைத் திருக்கிறவதனைப் பிடுங்கியெறிந்து ஒன்பது பாணங்களை விட்டனர். அந்தப் பாணங்களைப் பிரகலாதனும் ஒன்பது பாணங்களால் வெட்டி ஓர் இரும்புமயமாயிருக்கிற கதாயுதத்தை யெடுத்துக் கோஷஞ்செய்து நாராயணருடைய முழங்காலில் வேகமாக அடித்தான். அதற்கவர் சிறிதும் அசையாமல் பர்வதம் போல் திடசித்தராயிருந்து பிரகலாதனுடைய திண்ணிய கதையைப் பாணங்களால் வெட்டினார். அதனை ஆகாயவாசிகள் கண்டு ஆச்சரியமடைந்தனர். பின்னர் சத்துருவம்சனாகிய பிரகலாதன் சக்தியாயுதத்தை யெடுத்து அதிக கோபத்தோடு மிக்க பலங் கொண்டு நாராயணருடைய மார்பில் வேகமாக விட்டான். அதனை நாராயணர் ஒரு பொருளாக வெண்ணாமல் விளையாடுவதுபோல் ஒரு பாணத்தினால் இரு துண்டாக்கினார். அதனைப் பிரகலாதன் ஏழு பாணங்களால் அதிவேகமாய்ப் பொடியாக்கினான்.

ஓ ஜனமேஜயனே! இவ்வாறிருவரும் ஆகாயவாசிகள் பல முறையும் அதிசயிக்கத் தேவமானத்தில் ஆயிரம் வருஷம் அந்த யுத்தத்தை நடத்தி வந்தனர். அப்பொழுது பீதாம்பரதாரியாயும், கதாதரராயும், பத்பநாபராயும், லக்ஷ்மீ பதியாயுமிருக்கின்ற விஷ்ணுவானவர் அவ்விடத்துக்கு வரப் பிரகலாதன் பிரத்யக்ஷராய் வந்த ஸ்ரீமந் நாராயணரை நமஸ்காரஞ்செய்து மிகுந்த பக்தியுடனே அஞ்சலியஸ்தனாய் நின்று அடியில் வருவாறு சொல்லுகின்றான்: ஓ தேவ தேவா! ஜகந்நாதா! பக்தவத்ஸலா! மாதவா! யுத்தத்தில் நான் இந்த ரிஷிகளை ஏன் ஜயிக்காமலிருக்கிறேன்? ஓ தேவனே! நான் நூறு வருஷத்துக்குக் குறையாமல் தேவர்களோடு யுத்தஞ் செய்திருக்கிறேன்.

அங்ஙனமிருக்க என்ன காரணத்தினால் இவர்களிடத்தில் எனக்கு ஜயமுண்டாகவில்லை. இது மிகவும் ஆச்சரியகரமாயிருக்கிற தென்று விண்ணப்பஞ்செய்ய, விஷ்ணுமூர்த்தி, ஓ சத்துரு வம்சகனே! மஹாபல முடையவராயெவராலுஞ் ஜயிக்கப்படாதவ ராய் மஹாதபஸ்விகளாய் சித்புருஷர்களாயிருக்கின்ற நரநாராயணர் களாகிய இவர்கள் என்னுடைய அம்சங்களாயிருக்கின்ற பொழுது அவர்களை நீ ஜயிக்கக்கூடாமலிருப்பதா ஆச்சரியம்? ஓ புத்தி மானே! நீ இந்த ரிஷிகளோடு விரோதஞ் செய்யவேண்டாம். நீ பாதாளத்துக்குப்போய் என்னுடைய பக்தியை ஸ்திரமாகச் செய்வா யென்று கட்டளையிட்டனர். அவராணையின்படி பிரகலாதன் அசுரர்களோடு போய்விட்டான். நரநாராயணரென்கிற ரிஷிகள் மறுபடியும் தவத்தைச் செய்யத் தலைப்பட்டனர் என்று வியாச முனிவர் ஜனமேஜயனுக்குக் கூறினர். (25–56)

ஓம் கல்யாண்யை நம:

# 10. பிருகுமுனிவர் சாபம் (1)

சூதர் கூறுகின்றார் :—ஓ மஹாரிஷிகாள்! நரநாராயணருக்கும் பிரகலாதனுக்கும் நடந்த யுத்தவிசேஷம் முதலியவற்றை எடுத்துச் சொன்னோம். இனி விஷ்ணுமூர்த்திக்குச் சாபம்வந்த காரணத்தை வியாசமுனிவர் அரசனுக்குச்சொல்லிய அற்புதத்தைக் கூறுகிறோம் கேட்பீர்களாக :

ஜனமேஜயன் வியாசரைநோக்கி, ஓ முனிஸ்ரேஷ்டரே! இப்பொழுது தாங்கள் சொல்லிவந்த சரித்திரத்தில் எனக்கொரு பெரிய சந்தேக மிருக்கிறது. என்னையெனில், நரநாராயணர்கள் சாந்தர்களாயும், விஷ்ணு அம்ஶமுடையவர்களாயும், தபஸ்விகளாயும், புண்ணிய தீர்த்தத்தை யடைந்தவர்களாயும், கந்தமூலபலங்களை யாகாரமாகக் கொள்பவராயும், ஸத்வகுணஸம்பன்னராயும், சத்திய சந்தர்களாயுமிருக்கின்றவர்கள். இவர்கள் யுத்தம் நேரிட்டகாலத்தில் அதிலாசையுடையவர்களாய்ச் சிரேஷ்டமாகிய தங்கள் தவத்தைவிட்டு யுத்தத்தை அமோகமாகச் செய்த காரணமென்னை? ராகத்துவேஷமற்று ஒருவருக்குந் தீங்குசெய்யாமல் 'ஸோஹம்' பாவனையாகிய பரமானந்தசுகத்தி லாழ்ந்திருக்கவேண்டியவர்கள் ராகத்துவேஷமுடையவர்களாய்த் தேவவருஷத்தில் ஆயிரவருஷகாலம் தங்களுக்குக் கீழ்ப்பட்டவனாகிய பிரகலாதனிடத்தில் சமமாயுத்தஞ்செய்ய அவசியமென்னை? ஒருவராலும் செய்தற்கருமையாகிய தவத்தைச்செய்து அதனால் மனோலயம்வந்து பரமாத்ம ஐக்கியத்தை யடையவேண்டிய சமயத்தில் தமோகுணப்பிரதானிகளுக்கு வரத்தக்கதாகிய யுக்திபுத்திகள் எப்படி வந்தன?

தவமானது போகமோக்ஷப் பிரதமாயிருக்கின்ற ஸர்வபலத்தையுங்கொடுக்கத் தக்கதாகையால் இவர்கள் தவம் போகார்த்தமாயுள்ள ஸ்திரீமோகத்தை யுத்தேசித்ததா? அதுவன்றி வேறுவிதமான சுக போகங்களையனுபவிக்கவா? அதுவுமன்றிச் சுவர்க்கத்தையடைவதற்கா? இவற்றிலெதனை யுத்தேசித்துத் தவத்தைச் செய்தனரோ தெரியவில்லை. ஆனால் அவற்றிலேதேனும் ஒன்றையாவது அடையப்பெற்றார்களோ, வென்றால் ஒன்றையும் பெறாததாகவே தெரியவருகிறது. ஆகவே இவர்கள்பெற்றது தவத்தினால் மிகவும் மெலிவடைந்திருக்கிற சரீரத்தையும், ஆயிரவருஷகாலம் ஓயாமல் யுத்தமியற்றியதனாலுண்டாகிய கஷ்டத்தையுந்தான். இதுவன்றி ராஜ்ய பலத்தையாவது, ஸ்திரீகளையாவது, கிருகங்களையாவது பெற்றாரின்று. ஒன்றையும்பெறவிரும்பாது சாந்தசித்தர்களாயிருந்த இவர்கள் எந்த பயனைத்தா னடைந்தார்களோ தெரியவில்லை; ஒரு பலனையும் அடைய அபேக்ஷியாதவர்களென்றால் மகாபலிஷ்டர்களாகிய அசுரர்களோடு எதற்காக யுத்தம் செய்தார்கள்? அநாதியாயுள்ள யுத்ததர்மமானது தேகத்துக்குத் துக்கத்தைக் கொடுக்

கத்தக்கதென்று கொண்ட புத்திமான்கள் அதனைவிட்டுச் சுகத்தைக் கொடுப்பதாகிய கிருத்தியத்தையே எப்போதுஞ் செய்துவந்தனர். (1–11)

அங்ஙனமிருக்க, இந்த நரநாராயணர்களை விஷ்ணுவினுடைய அம்சவான்களென்றும், எல்லாமறிந்தவர்களென்றும், அளவிறந்த தவத்தைச்செய்தவர்களென்றும் சொல்லுவதெல்லாம் வீணாகும். உண்மையென்று சொல்லும்பக்ஷத்தில், அவர்கள் அந்தத் துக்கமான காரியத்தைச் செய்யாதிருத்தல்வேண்டும். அங்ஙனமன்று, சொன்னவையெல்லாம் நம்பத்தக்கவைகளே யென்றால் துக்கசம்பந்தமாயுள்ள யுத்தாதிகளை யொழிக்கத்தக்கதாயும், சுகத்துக்கு உத்யானவனம் போன்றதாயும், மோக்ஷத்தைக் கொடுப்பதாயுமுள்ள தவத்தை அநேக காலமாய்ச் செய்துவந்து அப்பொழுது அதனை விட்டுத் துக்கத்தை விளைவிப்பதாகிய யுத்தத்தை ஏன் செய்ய வேண்டும்?

ஓ வியாசரே! பயங்கரமாகிய யுத்தத்தை மூடனும் செய்யான். ஏனெனில் யயாதி என்கிற அரசன் அநேக யாகங்களைச் செய்தவனுயும், கொடையாளியாயும், தர்மாத்மாவாயுமிருந்து ஸ்வர்க்கபதவியையடைந்தும், அகங்காரத்தினால் ஒரு சொல்லைச் சொல்லியமாத்திரத்தில் இந்திரன் அவனைக்கீழே தள்ளிவிட்டானென்று கேட்டிருக்கிறேன். ஆகையால் எவ்விதமான சிறப்புடையவராயினும் அகங்காரத்தோடு எந்தச்சொல்லை சொல்வாராயினும் எந்தத்தொழிலைச் செய்வாராயினும் அவர்கள் கெடுவரென்பது நிச்சயம். ஆகவே மகரிஷிகளாயிருந்த இவர்கள் அகங்காரங்கொள்ளாமல் எப்படி யுத்தஞ் செய்யத் தலைப்பட்டார்கள்? எப்பொழுது அகங்காரங்கொண்டார்களோ அதனால் அவர்களுக்குக் கிடைத்தபலன் புண்ணிய நாசமேயன்றி வேறென்னையுள, என்றிவ்வாறு வினவிய அரசனைநோக்கி வியாசர் கூறுகின்றார்: (12–16)

ஓ அரசனே! தர்மத்தில் நிச்சயமுள்ள சர்வஜ்ஞர்களாயிருக்கின்ற முனிவர்கள் இப்பிரபஞ்சத்துக்கு மூலமாயுள்ளது அகங்காரமென்றும், அது ஸாத்விக அகங்காரம், ராஜஸ அகங்காரம், தாமஸ அகங்காரமென மூன்றுவிதமாயிருக்குமென்றும் சொல்லியிருக்கின்றனர். ஆகையினால் நரநாராயணர்கள் தேகத்தைத் தாங்கியிருக்கின்றவர்கள் தானே? அவர்கள் அந்த அகங்காரத்தை விடுவதற்கு முடியுமா? ஓ அரசனே! காரணமின்றிக் காரிய முண்டாகுமா? இது நிச்சயம். முன்கூறிய மூவகை அகங்காரத்தில் தவம், தானம், தேவயக்ஞம், பிதுர்யக்ஞம் முதலிய ஸத்கர்மாநுஷ்டானங்களை விதிபூர்வமாயும் ஞானபூர்வமாயும் செய்கின்றவர்கட்கு ஸாத்விகாங்காரங் காரணமெனவும், மேற்கூறிய தவ முதலியவைகளை விதியற்றதாயும் ஞானசூன்யமாயும் செய்கின்றவர்களுக்கு ராஜஸாங்காரங் காரணமெனவும், பொய் சொல்வோருக்கும் கலகஞ் செய்வோர் முதலியோருக்கும் தாமஸ அகங்காரங் காரணமெனவுங் கூறுவர். ஓ ஜனமேஜயனே! நல்லனவுந் தீயனவுமாயிருக்கின்ற எந்தக்கிரியையும் இந்த அகங்காரங்களை விட்டு நடவாது. இந்தப்

பிரபஞ்சம் அகங்காரத்தோடு கூடினதேயல்லாமல் அகங்காரத்தை விட்டு இந்தப் பிரபஞ்சம் எப்படியுண்டாகும்? பிரமவிஷ்ணு ருத்திரர்களும் அகங்காரமிலராயின் சிருஷ்டியாதிதொழிலை அவர்க ளெவ்வாறு நடத்தியிருப்பர்? திரிமூர்த்திகளே அகங்காரத்தோடு கூடினவர்களென்றால் மகரிஷிகள் முதலாகச் சொல்லப்பட்டவர்கள் எவ்வாறு அதனை விட்டிருக்கமுடியும்? ஏனெனில், உலகத்தி லெவரெவர் நாமரூபத்தோடு காணப்படுகின்றனரோ அவர்களெல் லாம் பத்த (கட்டுண்ட) ஆன்மாக்களே யாவர்; பந்தமில்லாதவ ரெவருமில்லை. ஆகவே அவரெல்லாம் அகங்காரமயமான சுபாவத் தோடுங் கூடிக் கன்மத்துக்கீடாய்த் தேவதிரியக் மானிடமா யிருக்கின்ற அச்சுக்களில் மாறிமாறித் தேருருளையைப்போல் இறந்தும் பிறந்தும் வருகின்றவரேயாவர். அந்தோ! விஷ்ணு மூர்த்திக்கு அகண்டமாயிருக்கின்ற இச்சகத்தில் உத்தமம் அதமமா யிருக்கின்ற யோனிகளில் நேரிட்ட ஜனனமரணங்களுடைய கணக்கை இவ்வளவென்று எந்தப் புருடன்று னறிவான்? ஒரு சமயம் மச்சமாகவும், ஒரு சமயம் ஆமையாகவும், ஒரு சமயம் பன்றியாகவும், ஒரு சமயம் நரசிங்கமாகவும், ஒரு சமயம் வாமன மாகவும், இவ்வா றனேகவிதமாக யுகந்தோறும் அவதாரஞ் செய்திருக்கிறார். அவருக்கு இப்பொழுது சொல்லி வந்த பிறவிகள்தா னென்று நினைக்கவேண்டாம். இந்த வைவஸ்வத மந்வந்திரத்திலேயே பிருகுவினுடைய சாபத்தாலிவரெடுத்திருக் கின்ற ஜனனங்க ளிவ்வளவென்று சொல்லி முடியாது. அவைகளைச் சொல்லுகிறேனென்று வியாசர் கூறினர்.

அப்பொழுது அரசன், ஓ வியாசரே! விஷ்ணுமூர்த்தி பிருகுவி னுடைய சாபத்தால் அநேக அவதாரங்களெடுத்திருக்கிறரென்று சொல்லிய விஷயத்தில் எனக்குச் சந்தேகம் தோன்றியிருக்கிறது. என்னையெனில், விஷ்ணுவாகிய பகவான் பிருகுவினால் ஏன் சபிக்கப்பட்டார்? அம்முனிவருக்கு அவர் என்ன அபராதஞ் செய்தார்? தேவர்களால் வணங்கத்தக்கவராகிய அந்த விஷ்ணு மூர்த்தியை இம்மகரிஷி எப்படிச் சபிக்கத்தக்கவ ராயினர், என்று வினவ, வியாசர் கூறுகின்றார்: (17–32)

பூர்வத்தில் காசிபருடைய புத்திரனாகிய இரணியகசிப னென்னும் அசுரன் தேவர்களோடு யுத்தஞ் செய்யும்பொழுது இவ்வுலகமெல்லாம் பெருந்துன்பமடைய, அப்பொழுது அந்த விஷ்ணுமூர்த்தி அவனைக் கொன்றனர். அவனுக்குப் பின்னர் அவன் மகனாகிய பிரகலாதன் பட்டத்துக்குரியவனாய் அரசாண்டு வரும்பொழுது தேவர்கள் மிகவும் துன்பமடைய, அப்பொழுது இந்திரனெதிர்த்து நூறுவருஷகாலம் உலகத்தில் ஆச்சரியப்படத் தக்க பயங்கரமாகிய யுத்தத்தைச் செய்து அவனை அபஜயப்படுத் தினன். அபஜயமடைந்த பிரகலாதன் மிகவுந் துக்கத்தையடைந்து பூர்வீகமாயுள்ள தர்மத்தை யாலோசித்து வீரசேனன் மகனாகிய பலிக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டுத் தவஞ்செய்யவெண்ணி கந்தமாதன பர்வதத்துக்குப் போனான்.

ஸ்ரீமானாகிய பலிச்சக்கிரவர்த்தி தேவர்களோடு போரியற்றிக் கலகஞ் செய்யத்தலைப்பட்டான். அதனால் அசுரர்கட்கும் சுரர் கட்கும் மகா பலமான யுத்தம் நேரிட இந்திரனும் விஷ்ணுவும் தேவர் களுக்குத் துணையாயிருந்து அசுரர்களுக்கு அபஜயத்தையுண் டாக்கி அவர்கள் தங்கள் ராஜ்யத்தை இழந்துபோகும்படிச் செய் தார்கள். பின்னர் அசுரர்கள் சுக்ரரைச் சரணாகதி யடைந்து, ஓ பிராம்மணோத்தமரே! தவத்திற் பிரசித்திபெற்றிருக்கின்ற நீர் எங்க ளுக்குச் சகாயமான கிருத்தியத்தை ஏன் செய்யாமலிருக்கின்றீர்? சர்வமந்திரவேத்தாவாகிய தேவரீர் எங்களைக் காப்பதற்குச் சகாய பூதரா யாகாமற் போவீரேயானால் நாங்களிப்பூவுலகிலிருப்பதற்குச் சக்தியில்லாமையான் பாதாளஞ் சேருகிறோமென்றனர். சுக்ரர் அசுரர்களைப் பார்த்து, ஓ அசுரர்களே! நீங்கள் பயப்படவேண் டாம்; என்னுடைய தபோவன்மையால் உங்களைக் காக்கின்றேன். எப்படியென்றால், மந்திரங்களாலும் ஔஷதிகளாலும் உங்க ளுக்குச் சகாயஞ்செய்கிறேன். ஆகையால் மனதில் வருத்தத்தை விட்டுச் சந்தோஷ முடையவர்களாக விருங்களென்று சொல்ல, அசுரர்கள் சுக்ரரை யடைக்கலம் புகுந்ததனால் பயமற்றவர்களா யினர். (33–44)

சுக்ரருடைய மந்திரப்பிரபாவத்தினால் தேவர்களுடைய மனத்திற்கு நிஷ்காரணமாய்ச் சந்தோஷமற்றுத் துன்பமுண் டாயிற்று. அதனைத் தேவர்களெண்ணி இஃது அசுரமாயை யென்று நிச்சயித்துத் தூதர்களால் சுக்ரருடைய செய்தியை யறிந்து கொண்டு இந்திரனிடஞ்சென்று நமக்கிந்த அரசியலிருக்கும் பொழுதே சீக்கிரத்தில் யுத்தஞ்செய்வதற்குப் புறப்பட்டு முன் னோடிப்போனவர்கள்போக விருக்கின்ற அசுரர்களைத் துரத்தி யடித்து ஓட்டிவிட வேண்டுமென்று ஆலோசித்துக் கோபங் கொண்டு ஆயுதபாணிகளாய்த் தங்களைத் தூண்டினவராகிய விஷ்ணுமூர்த்தியோடு அசுரரிடத்திற்போய் அடித்துத் துரத்த, அவ்வசுரர்கள் பயமுற்றவர்களாய் தங்கள் குருவாகிய சுக்ரரைச் சரணாகதியடைந்து எங்களை ரக்ஷிக்கவேண்டும், எங்களை ரக்ஷிக்க வேண்டுமென்று முறையிட்டனர். சுக்ரர் மகாபலிஷ்டராயிருந்த அசுரர்களெல்லாம் தேவர்களால் மிகவும் பீடிக்கப்பட்டு மெலிந் திருப்பதைப்பார்த்து மந்திரமும் ஔஷதமுமிருக்கின்றது, நீங்கள் பயப்படவேண்டாமென்று மிருந்த தொனியோடு சொல்லவும், அந்தத் தொனியை அசுரரைப் பின்றொடர்ந்துவந்த தேவர்க ளெல்லாம் கேட்டுப் பயமடைந்தவர்களாய் வந்த வழியே பார்த்துக் கொண்டு ஓட்ட மெடுத்தார்களென்று அரசனுக்கு வியாசபகவான் கூறியருளினார் என்றனர். (45–50)

ஓம் கல்யாணகுணசாலிந்யை நம:

# 11. பிருகுமுனிவர் சாபம் (2)

சூதர் கூறுகின்றார் :—மஹரிஷிகாள் ! இதுவரையில் விஷ்ணுமூர்த்திக்குச் சாபம் வருவதற் கேதுவான சுராசுரர்களுடைய யுத்த வரலாற்றைச் சொன்னோம். இனி அந்த விஷ்ணுமூர்த்திக்குச் சாபம்வந்த காரணத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீர்களாக.

வியாசர் அரசனைப்பார்த்து, ஓ அரசனே ! பின்னர் சுக்ரர் அந்த அசுரர்களை நோக்கி, ஓ அசுரர்களே ! முன்னர் பிரமனால் சொல்லப்பட்டிருக்கிற செய்தியொன்றுண்டு. அதனைச்சொல்லுகிறேன், கேளுங்கள். விஷ்ணுமூர்த்தி முன் வராகாவதாரஞ் செய்து இரணியாக்ஷனையும், நரசிங்காவதாரமெடுத்து இரணியகசிபனையும் எப்படிச் சங்கரித்தனரோ அப்படியே அசுரர்களை யெல்லாம் சங்கரிக்கும் விஷயத்தில் முயற்சி யுடையவராய்ச் சங்கரிக்கப் போகின்றாராம். இதிற் சந்தேகமில்லை. ஆகையால் விஷ்ணுமூர்த்தியை ஜயிப்பதற்குரிய மந்திரசித்தி இப்பொழுது எனக்கில்லை. என்றால் காக்கப்பட்டவர்களாகிய நீங்கள் இப்பொழுது தேவர்களை ஜயிக்கமாட்டீர்கள். சிலகாலம் பொறுத்திருங்கள். ஓ அசுரர்களே ! நானிப்பொழுது மந்திரோபதேச நிமித்தம் மஹாதேவரிடத்திற்போய் உபதேசம் பெற்றுவருகிறேன். வந்தபின்னர் உங்களுக்கும் அதை உபதேசிக்கின்றேனென்றனர்.

அசுரர்கள், ஓ மகரிஷியே ! நீர் சிவனிடத்துப் போய்வருமளவும் அபஜயப்பட்டவர்களாயும், பலஹீனர்களாயு மிருக்கின்ற நாங்கள் இப்பூமண்டலத்தி லிருப்பதற்குத் தைரியமுள்ளவர்களாவோமா ? ஏனென்றால், எங்களுக்குள் பலமுள்ளவராயிருந்த அசுரர்களெல்லாம் மாண்டுபோயினர் ; இப்பொழு திருக்கின்றவர்களோ மிகவும் பலஹீனர்கள் ; ஒருசமயம் அமரர்க ளெதிர்த்தால் இவர்க ளெதிர்ப்பதற்கு யோக்கியமானவர்களா, என்று கேட்டனர். (1–8)

சுக்ரர் கூறுகின்றார் :—ஓ அசுரர்களே ! நான் சங்கரரிடம் மந்திரோபதேசம் பெற்றுச் சித்தியாய் வருமளவும் நீங்களனைவரும் சாந்தவிருத்தி யுடையவர்களாய்த் தவத்தைச் செய்துகொண்டிருங்கள். ஏனெனில் பண்டிதனும் ஞானவானும் வீரனு முள்ளவன் காலம் தேசம் படைத்துணை தன் சரீரசக்தி முதலியவற்றை யோசித்து அதற்குத் தக்க சமயோசித மறிந்து சாமம் பேதம் முதலியவற்றைச் செய்யவேண்டுமென்று பெரியோர் கூறியிருக்கின்றனர். அறிவாளிகளாகிய வீரர்கள் காலவசத்தால் மெலிவடைந்திருக்கும்பொழுது க்ஷேமத்தை யடையவேண்டுமென்கிற வெண்ணமுதிக்குமாயின் சத்துருவா யிருக்கிறவனுக்கும் பணிவிடை செய்யவேண்டிய சமயத்தில் அதைச் செய்யவேண்டும். தனக்கு வலிமேலிடுங்காலம் வரும்பொழுது அவனையே முன்பின் பாராது கொல்லவேண்டும். ஆகையால், நீங்கள் நன்மையான வார்த்தையோடு கபடமாகிய வினயத்துடன் நான் சொல்லியவாறு சமயத்தை

யறிந்து பகையாளிகளை யெதிர்க்காமல் நான் எப்போது வருவேன் வருவேனென்று எதிர்ப்பார்த்துக்கொண்டு உங்களுடைய வாசஸ் தானத்தில் வாழ்ந்திருங்கள்.

ஓ அசுரர்களே! நான் சொல்லியதுபோல் நீங்களிருப்பீராயின் முன் சொல்லியதுபோல் தேவர்களை யுத்தத்திலே ஜயிக்கும்படியான மந்திரசித்தியை நானடைந்து வருகிறேனென்றுசொல்லி அவர்களை யனுப்பிவிட்டுத் தானெண்ணிய வெண்ணத்தில் நிலையுடையவராய் எண்ணியவாறெய்த மாதேவரிடத்திற் சென்றனர். (9–14)

அவர் சென்றபின்னர் அசுரர்கள் பிரகலாதனைப் பிரார்த்தித்து, நீர் தேவர்களிடத்திற் போகவேண்டும்; தேவர்கள் உம்மை சத்திய வாதி என்றும் மனதில் யாதொரு களங்கமுமில்லாதவரென்றும் மதித்து உம்மிடத்தில் நம்பிக்கை யுடையவர்களா யிருக்கின்ரு ராகையால் நீரெதனைச் சொன்னபோதிலும் நம்புவரென்று சொல்ல, அவ்விண்ணப்பத்தை அவனங்கீகரித்துச் சில அசுரர்களுடன் சுரர்களிடத்திற்போய் மிகவணக்கத்துடன் அவர்களைப் பார்த்துத் தலைவணக்கத்தோடு நின்று, ஓ தேவர்களே! நாங்களனைவரும் இனி ஆயுதங்களெடுப்பதில்லை, மரவுரியெடுத்துத் தவஞ்செய்ய உத் தேசித் திருக்கின்ரேம், இதிற் சந்தேகமில்லை என்று சொல்லவும், தேவர்கள் இவன்சொல்லுவ துண்மையேயென்று அவன் வார்த் தையை நம்பி யுத்தஞ்செய்யும் எண்ணத்தையும் அவர்களிடத்திற் கொண்ட குரோதத்தையும் விட்டுச் சந்தோஷ சித்தர்களாய்த் திரும்பினுர்கள். சிலகாலஞ் சென்றபின்னர் அசுரர்கள் சொல்லி யதுபோ லிருக்கின்ருர்களா இல்லையாவென்று தேவர்கள் போய்ப் பார்க்க, அவர்கள் சொல்லியதுபோல் தவத்திற்றலைப்பட் டிருத்த லைக்கண்டு மிகவும் நம்பிக்கை யுடையவர்களாய்த் தங்கள் தங்க ளிடம்போய்ச் சேர்ந்து, சுகமாய்க் கிரீடித்துக்கொண் டிருந்தனர். அசுரர்கள் மகா டாம்பீகமாகத் தவவேஷம் பூண்டு தவசிகளைப் போல் நியமத்திற் சிறந்தவராகச் சுக்ராசாரியாருடைய வரவை எண்ணிக்கொண்டு காசிபருடைய ஆச்சிரமத்தி லிருந்தனர். (15–20)

இவர்கள் இப்படியிருக்கச் சுக்ரர், ஸ்ரீ கயிலாயத்தை யடைந்து மகாதேவரை நமஸ்கரித்து நிற்க, மகாதேவர், நீ யாதுகாரணமாய் வந்தனையென்று வினவினர். சுக்ரர், ஓ மகாதேவரே! தேவரீரிடத்தில் மந்திரோபதேசம்பெற விரும்பிவந்தேன்; ஆனுல் அம்மந்திரங்கள் சுரர்களுக்கபஜயமும் அசுரர்களுக்கு ஜயமும் விளைவிப்பதாயிருத் தல் வேண்டும்; அன்றியும் தேவர்களுடைய பக்ஷமாயிருக்கின்ற பிரகஸ்பதியினிடத்தில் இதை மாற்றும்படியான மந்திரங்க ளில்லா தனவாயிருத்தல் வேண்டுமென்று கேட்டனர்.

சர்வஜ்ஞரும் சங்கரருமான சிவபெருமான் சுக்ரனுடைய வார்த்தையைக்கேட்டு, இந்தச் சுக்ரன் தேவர்களிடத்திற் துரோக புத்தியும் அசுரர்களிடத்தில் க்ஷேமபுத்தியுமுடையவனுய் வந்திருக் கிருன்; ஆனுல் அசுரர்களுக்கு குருவாகையினுல் அவனெண்ணிய

துஞ் சரியே ; சரியாயிருந்தபோதிலும் தேவர்களுக்குத் துன்பம் விளைவிக்கவெண்ணுவது சரியன்றாகையால் இதற்கென்ன செய்வ தென்றுலோசித்துப் பின்னர் தேவர்களுக்கு க்ஷேமஞ்செய் வதே நமது கடமையாமென்று திருவுளத்தில் நிச்சயித்துச் சுக்ர னைப் பார்த்து, ஒருவராலும் செய்தற்குக் கூடாததாகிய மிக அரிய விரதத்தை நீ செய்தல் வேண்டும் ; என்னையெனில், ஆயிர வருஷம் தலைகீழும் கால்மேலுமாயிருந்து ஓமாக்கினியி லுண்டாகும் புகையை ஆகாரமாகச் சிறிதுகொண்டு தவஞ்செய்து வரவேண்டும்; வருவாயாயின் உனக்குப் பரிபாகமுண்டாகும் ; அதன் பின்னர் மந்திரோபதேசம் பெறலாமென்று சொல்லினர். சுக்ரர் மகா தேவரை நமஸ்காரஞ்செய்து, தேவரீர் ஆணையின்படி அந்த விரதத் தைச் செய்கிறேன். அவ்வாணையை மறுக்கவல்ல னல்லேனென்று விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுத் தூமத்தையே ஆகாரமாகக் கொள்பவராயும், ராகத்துவேஷாதி குணவர்ஜிதராயும், என்ன இடையூறு வந்தபோதிலும் சிவபெருமான் சொல்லியவண்ணம் செய்தே தீரவேண்டுமென்னும் நியதியுடையவராயும், அந்த உத்தம மாகிய விரதத்தைச் செய்துவந்தனர். சிலகாலஞ் சென்றபின்னர், சுக்ரர் செய்யுந் தவத்தை தேவர்களறிந்து இஃது வென்னவாச்சரிய மென்றெண்ணி இவர் இது செய்வது அசுரர்கள் க்ஷேமார்த்தமே யன்றி வேறில்லை. ஆகையினுற்றான் அசுரர்களெல்லாம் மகா தபசிகள் போல் பட்டங்கட்டிக்கொண்டு இவர் வரவை எதிர்பார்த் திருக்கிறதாகத் தெரியவருகிறது. இதற்கு நாமென்ன செய்யலா மென்று ஆலோசித்துப் பின்னர் பல்லயமென்னும் ஆயுதத்தைத் தாங்கித் தவவேடம் பூண்டிருக்கிற அசுரரிடத்தில் யுத்தஞ் செய்யத் தலைப்பட்டனர். அசுரர்கள் தேவர்களெல்லாம் ஆயுதபாணிகளாக நான்கு பக்கமும் சூழ்ந்து வருதலைப்பார்த்து நாமென்செய்வோ மென்று பயமுற்று யாவருமொருங்குகூடிச் செருக்கடைந்திருக்கிற தேவர்களைப் பார்த்து முன் நடந்த செய்தியை அடியில் வருமாறு சொல்லத்தொடங்கினர் : (21–32)

ஓ தேவர்களே ! நாங்களனைவரும் இளைத்து உங்களைச் சரணு கதியடைந்தபோது நீங்கள் இரக்கமுடையவர்களாய் யுத்தஞ் செய் வதில்லையென்று அபயந்தந்து போனீர்களல்லவா ? போன நீங்கள், இப்பொழுது ஆயுதபாணிகளாய் யுத்தஞ்செய்ய வந்திருக்கிறீர் களே. இது தருமமாகுமா ? நாங்களோ அப்பொழுது சொல்லியது போல் ஆயுதங்களைத் தொடாமலே தவத்தி லிருக்கின்றேம் ; எங்கள் ஆசிரியராகிய சுக்ரரும் ஏதோ ஒரு விரதத்திலிருக்கிருர். ஓ தேவர் களே ! உங்களுக்குச் சத்தியம் எங்கே போயிற்று ? அந்தோ ! யுத்ததருமத்தில் நிராயுதபாணிகளா யிருக்கின்றவர்களையும், யுத்தஞ் செய்வதற்கஞ்சி யோடுகின்றவர்களையும், சரணுகதி யடைந் தவர்களையும் கொல்லக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நியாயத்தையும் தெரிந்துகொள்ளாம லிருக்கின்றீர்களே என் றனர். அவ்வார்த்தைகளைத் தேவர்கள் கேட்டு, ஓ அசுரர்காள் ! ஏன் பொய் வார்த்தை சொல்லுகின்றீர்கள் ? சுக்ரரை நீங்களெல்

லோருங்கூடித்தானே இப்பொழுது செய்கிற விரதத்துக்கு அனுப்பி யிருக்கிறீர்கள்? அவரும் எங்களுக்கு அபஜயமும் உங்களுக்கு ஜயமு முண்டாக்கத்தக்க மந்திரசித்தியைப் பெறுதற்குத் தானே போயிருக்கின்றார்? இவ்வளவு வஞ்சகச்செயலை மேற்கொண்டிருக்கிற நீங்களா தவத்திலிருப்பவர்? ஓ அசுரக் கூட்டங்களே! நீங்கள் செய்யும் தவத்தை நாங்களறிவோம்; இனி உங்களை விடுவதில்லை; யுத்தஞ் செய்தே தீருவோம். சத்துருக்களாகிய உங்களிடத்தில் நாங்கள் நீதியைப் பார்க்கவேண்டியதில்லை; இது அநாதியாயுள்ள வழக்கந்தான். ஆகையால், ஓ அசுரர்களே! நீங்களும் ஆயுதபாணிகளா யுத்தஞ்செய்யச் சித்தமாய் வாருங்கள் என்றனர்.

இவ்வாறு தேவர்கள் சொல்லியதை அசுரர்கள் கேட்டு ஒருவருக்கொருவர் ஆலோசனை செய்து ஒன்றுந் தோன்றாமல் பயமடைந்தவர்களாய் நாமனைவரும் ஓடிப்போவதே நல்ல யோசனையென்று பேசிக்கொண்டு ஓடிப்போய் தங்களாசிரியருடைய அன்னையைச் சரணஞ் சரணமென்று சரணாகதியடைந்தனர். அவ்வன்னையானவள் மிகவும் கஷ்டத்தை யடைந்திருக்கிற அசுரர்களைப் பார்த்து, ஓ அசுரர்களே! நீங்கள் பயப்படவேண்டாம். என்னுடைய முன்னிலையில் இருக்கின்றவர்களுக்கு யாதொரு பயமும் வரமாட்டாதென்று அபயந்தந்து இனிப் பயத்தை விட்டுவிடுங்களென்று சொல்லினள். அந்த வார்த்தையை அசுரர்கள் கேட்டு அவ்வாச்சிரமத்தில் அவ்வம்மையின் முன்பாக நிராயுதபாணிகளாகவும், மனக் கலக்க மற்றவர்களாகவும், யாதொரு துன்பமு மில்லாதவர்களாகவு மிருந்தனர். (33–40)

தேவர்கள் அசுரர்களோடுவதைப் பார்த்து இவர்களெங்கே போகின்றார்கள், பார்ப்போமென்று அவர்களைப் பின்றொடர்ந்து போய் அடைக்கலமென்று புகுந்த அந்த விடத்தினுடைய பலாபலத்தை யோசியாமல் இவர்களெந்த விடத்திற்குப் போனால்தான் என்னவென்று பலாத்காரமாக அவ்வாச்சிரமத்துக் குள்ளே நுழைந்து அசுரர்களை யழிக்கத் தலைப்பட்டனர். அதுகண்ட அவ்வம்மை, ஓ தேவர்களே! அடைக்கலம் புகுந்த அசுரர்களைக் கொல்லவேண்டாம், கொல்லவேண்டாமென்று தடுக்கவும், அத்தடைக் குட்படாது மேன்மேலும் அந்த அசுரர்களை யடித்துக்கொண்டே யிருந்தனர். அப்பொழுது அசுரர்கள் சகிக்காமல் அபயந்தந்த அம்மையைப் பார்த்து, ஓ அம்மணி! அந்தோ! அந்தோ!! தேவர்களெங்களை யடித்துக் கொல்லுகின்றார்களே, நாங்களென்ன செய்வோம்? எங்களுக் குன்னைவிட வேறு புகலிடமில்லையே! எங்களை ரக்ஷியென்று பரிதபித்துப் பிரார்த்திக்கின்ற பொழுது, அந்த அம்மை, ஓ அசுரர்களே! நீங்கள் பயப்படாதீர்கள்; நானிப்போது என்னுடைய தவத்தினால் நித்திராதேவியைப் பிரேரேபித்துத் தேவர்களை யெல்லாம் தூக்கத்தில் விழும்படி செய்கிறேனென்று சொல்லி உடனே நித்திராதேவியைத் தூண்டவும், அது இந்திரன் முதலிய சகல தேவர்களிடத்திலுஞ் சென்றது.

செல்லவும், யாவரும் ஊமையரைப்போல் ஒரு வார்த்தையுமின்றி மயக்கமுடையவராயினர்.

அப்பொழுது விஷ்ணுமூர்த்தி அங்குவந்து மயக்கமடைந்திருக்கும் இந்திரனைப் பார்த்து, ஓ தேவராஜனே! நீ என்னிடம் வந்து சேருவையாயின் உன்னை நான் ரக்ஷிக்கிறேனென்று சொல்லவும் இந்திரன் ஒருவாறு மயக்கந்தெளிந்தவனாய் அவர் சொல்லியபடியே சமீபிக்க நித்திரை மயக்கமும் சிறிது நீங்கப்பெற்றுப் பயமற்று அவரால் ரக்ஷிக்கப்பட்டனன். இவ்வண்ண மிருக்கின்ற இந்திரனை அசுர ரக்ஷகியாயிருக்கின்ற அம்மை பார்த்து, ஓ இந்திரா! இவ்விடத்திற் சூழ்ந்திருக்கும் தேவர்களெல்லாம் நித்திரையின் மயக்கத்தால் மயங்கிக்கிடந்தனர்; அவர்களெல்லாம் இப்பொழுது சிறிது இறுமாப்படைந் திருப்பதாகத் தெரியவருகிறது; ஆகையால் உன்னோடு அவர்களையும் இந்த விஷ்ணுவையும் என்னுடைய தபோபலத்தால் விழுங்கிவிடுகிறேன்; என்னுடைய தபோபலத்தை இந்தத் தேவக் கூட்டத்திற் பார்ப்பாயாக; இதனாலேயே எனக்கும் இந்த விஷ்ணுவுக்குமுள்ள வலிமையும் என்னொருத்தியினுடைய தவவலிமையும் நன்றாய் அறிந்துகொள்வாயென்று சொல்லி, முன் தேவர்கள்மேற் பிரயோகித்த நித்திராதேவியை விஷ்ணுவின் மேலும் இந்திரன்மேலு மேவினள்; உடனே அவ்விருவரும் சக்தியற்றவர்களாய் அறிவுமயங்கிக் கம்பம்போல் அசைவற்று நின்றனர். (41–49)

அப்பொழுது தேவர்களெல்லாம் மயங்கித் துன்பத்தோடிருக்கிற இந்திரனையும் விஷ்ணுவையும் பார்த்து உற்சாகமற்றவர்களாக, ஆஹா! ஓஹோ!! வென்று கூச்சலிட்டனர். அவரிடுங் கூச்சலை இந்திரன் சிறிதுணர்ந்தவனாய் விஷ்ணுவை நோக்கி, ஓ மதுசூதனா! உம்மைப் பார்க்கினும் நான் பாதையடைகின்றேனாதலால் இப்பொழுது நம்மைப் பாதைப் படுத்துகின்றவளாயிருக்கின்ற இவள் இனி நம்மைச் சுட்டெரிப்பதற்குமுன் இந்தத் துஷ்டையைச் சங்கரித்துவிடும்; இவளைச் சங்கரிக்கின்ற விஷயத்தில் ஸ்திரீஹத்தி வருமென்றாவது மாமியாயிற்றே யென்றாவது யோசனை செய்யவேண்டாம்; வருத்தப்படுகின்ற என்னைப் பாருமென்று இந்திரன் சொல்லவும், விஷ்ணுமூர்த்தி நீதியைமறந்து தயாளகுணத்தையு மொழித்துத் தன்னுடைய சக்கரத்தை நினைத்தனர். உடனே அச்சக்கராயுதமானது அவர் கையில்வந்து தங்கியது. அதனை இந்திரன் பார்த்து, ஓ ஸ்வாமி! இதோ வந்துவிட்டதே; ஏன் சும்மாவிருக்கிறீர் என்று தூண்ட, அந்த க்ஷணமே கோபமேலிட்டுச் சக்ராயுதத்தினால் அந்த அம்மையினுடைய சிரத்தைச் சேதம் பண்ணினர். அதைக்கண்ட இந்திரனும் தேவர்களும் துன்பமொழிந்தவர்களாய் ஆனந்தத்தோடு ஜய ஜயவென்று விஷ்ணுவைக் கொண்டாடினார்கள். பின்னர் அந்த விஷ்ணுவும் இந்திரனும் நாம் ரிஷிபத்தினியைக் கொன்றோமே, அவரிதனை யறிந்தால் சாபமிடுவரே, இட்டாராயின் நம்மால் மாற்ற முடியாதேயென்று சங்கையுடையவ ராயினரென்று வியாசர்

ஜனமேஜயனுக்குக் கூறினுரென்று சூதபகவான் சௌனகாதியர் கட்குக் கூறினர். (50–57)

ஓம் கல்யாணசைல நிலயாயை நம:

## 12. ஜயந்தியின் ஸேவை

சூதபகவான் மகரிஷிகளைப் பார்த்து விஷ்ணுமூர்த்திக்குப் பின் நேர்ந்ததையும், ஏனையவற்றையும் அரசனுக்கு வியாச முனிவர் கூறியவா றுரைக்கின்றேனென்று சொல்லத் தொடங்கினர்.

வியாசமுனிவர் அரசனைப் பார்த்து, ஓ அரசனே! பிருகு முனிவர் தனது பத்தினி சக்ராயுதத்தால் சேதிக்கப்பட்டுக் கோர மாய் வீழ்ந்திருப்பதைப் பார்த்து அடியில் வருமாறு சொல்லுகின் றூர்: ஓ விஷ்ணுவே! நீ மகா புத்திமானுயுள்ளவன். இது நீக்கத்தக்க பாவம், இது நீக்கக்கூடாத பாவமென்பவற்றை யறியத் தக்கவன். அப்படிப்பட்ட நீ இந்த அகிருத்தியத்தைச் செய்தாயல் லவா? பிராமண ஸ்திரீயினுடைய ஹத்தியானது மனதிலெண்ணு வதற்கும் யோக்கியமல்லவே; ஸ்திரீஹத்தி செய்யுங் குணமுடைய உன்னை ஸாத்விக குணமுடையவனென்றும், பிரமனை ராஜஸ குண முடையவனென்றும், ருத்திரரைத் தாமஸ குணமுடையவ ரென்றுஞ் சொல்லுகின்றனரே, அஃது என்ன விபரீதமோ தெரிய வில்லை. இப்பொழுது நீ மிகவும் நீசமாகிய தொழிலைச் செய்கின்ற வனு யிருக்கிறபொழுது உன்னைத் தாமஸ குணமுடையவனென்று ஏன் சொல்லக்கூடாது? இது நிற்க, உனக்கொரு குற்றமுஞ் செய் யாதவளாயும், உன்னுல் தண்டிக்கத் தகாதவளாயுமுள்ள இவளை நீ எந்த நியாயத்திற் கொன்றனை? துராசார முடையவனே! உன் னைச் சபிக்கிறேன். இதுவன்றி, உன்னை யான் என்ன செய்யப் போகிறேன் தெரியுமா? ஓ பாபிஷ்டனே! இந்திரன்பொருட்டு இவளைக் கொன்று என்னைப் பத்தினிஹீனனுக்கினை. இதற்கு இந் திரன் காரணமென்று அவனைச் சபிக்கமாட்டேன். உன்னையே சபிக்கிறேன். ஓ விஷ்ணுவே! நீ எப்பொழுதும் ஜனன மரணத் தோடு கூடினவனுய் இழிவான யோனிகளிற் கட்டுண்டிருந்து பிறந்து பிறந்து இறந்து இறந்து இப்பொழுது செய்த துஷ்டச் செய்கையையே எப்பொழுதுஞ் செய்துவருவாய். இனி உன்னை எந்த முனிவராவது ஸத்வகுண முள்ளவனென்று சொல்வா ராயின் அவர்கள் முழுமூடராவர். தீய நடத்தை யுள்ளவனுகிய நீ எப்பொழுதும் தாமஸகுண முடையவனுய்த் தாமஸத் தொழிலையே செய்துவருவாயென்று சபித்தனர்.

ஓ ஜனர்த்தனு! உன்னைத் தாமஸனென்று நான் சொல்லியது இப்பொழுது நேரிட்ட கோபத்தினுற் சொன்னதன்று; உன்னிடத் தில் உண்மையிலுள்ள குணமுமதுவே. ஓ விஷ்ணுவே! என் னுடைய சாபத்தினுலுனக் குண்டாகப்போகிற ஜன்மங்களெல்லாம்

மண்ணுலகத்தாரெல்லாமறிய பூலோகத்திலேயே உண்டாகக் கட வது ; அந்த ஜன்மங்கள் வேறு விதங்களால் வருவதன்று ; ஒவ் வொரு ஜன்மமும் மலமூத்திர சம்பந்தமா யிருக்கின்ற கர்ப்ப வாசத்தினின்றே வரவேண்டியது என்றனர். (1–8)

ஓ அரசனே ! பிருகு முனிவருடைய இல்லற தருமத்தை விஷ்ணுமூர்த்தி கெடுத்தனராகையால் அவர் மானிட யோனி முதலிய யோனிகளிற் பிறக்கும்படியாய் வந்தது. ஆனால் ஒவ் வொரு பிறப்பும் உலகத்துக்கு உபகாரார்த்தமாக முடிந்தது என்று சொல்லவும் அரசன், ஓ வியாசமுனிவரே ! விஷ்ணுவினுடைய பிரகாசமாகிய சக்கரத்தினால் அந்த அம்மணி யிறந்துபோன பின்னர் அந்த பிருகுரிஷி எப்படி கிருகஸ்தராயினர் ? அதனைச் சொல்லவேண்டுமென்று கேட்க, வியாசர், ஓ அரசனே ! பிருகு முனிவர் இவ்வண்ணஞ் சபித்த பின்னர் மனைவியை யெழுப்பும் வகையைச் சிந்தித்து வெட்டுண்ட தலையை எடுத்துவந்து சரீரத்தி லொன்றுகச் சேர்த்து ; ஓ பெண்ணே ! நானிதுவரையில் அநுஷ் டித்துவந்த தருமங்கள் விதிவத்தாகவும், அவை பரமேஶ்வரருக்கு ஒப்பாகவுமிருக்கும் பக்ஷத்தில் விஷ்ணுவினால் கொல்லப்பட் டிருக்கிற நீ எழுந்திருக்கலாம். பரமேஶ்வரனுக்குப் பிரீதியாக விருக்குமானால் என்று சொல்லியது சத்தியமானால் அந்த ஒரு சத்தியத்தினாலேயே நீ ஜீவப்பிரவேச முடையவளாகலாம். சத் தியம், ஒழுக்கம், வேதாத்தியயனம், தவவீரியம் என்று சொல்லப் பட்ட இந்த வலிமைகள் என்னிடத்தில் உண்மையா யிருக்குமானால் யான் புரோக்ஷணஞ் செய்யும் இந்தத் தீர்த்தத்தினால் நீ பிழைத் தெழுந்திருப்பாய். என்னுடைய சைவத்தின் பெருமையைப் பசுத் துவமுடைய தேவரெல்லாம் பார்க்கட்டும் என்று தீர்த்தத்தால் புரோக்ஷித்தவுடன் உயிர்பெற்று மிகவும் சந்தோஷ சித்தமுடையவ ளாயும் புன்னகையோடு கூடினவளாயு மெழுந்திருந்து உறங்கி யிருந்து பின்னுறக்கம் நீங்கி எழுந்திருந்து வருகின்றவளைப்போல வந்த அத்தேவியை நான்கு புறத்துஞ் சூழ்ந்திருந்த தேவர்களெல் லாம் பார்த்து இஃது அற்புதம் ! அற்புதம் !! என்று பிருகு முனி வரையும் அவர் மனைவியையும் புகழ்ந்து கொண்டாடினர். (9–16)

பின்னர் இந்திரனும் தேவர்களும் இஃது வென்ன வாச்சரிய மென்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டு மீண்டும் இந்திரன் தேவர்களைப் பார்த்து, ஓ தேவர்களே ! இந்த வீர பதிவிரதை இம் முனிவருடைய தபோ பலத்தினால் எழுந்தனள் ; இது நல்லதே யாயினும் மந்திரவேத்தாவாகிய சுக்ரர் கோரமாகிய தவத்தை முடித்துக்கொண்டு இவ்விடம் வருவாராயின் நாம் செய்த இந்த அனியாயம் தெரியுமல்லவா ? தெரிந்தால் அவரென்ன செய்வாரோ அறியோம் ; முன் இந்த அம்மையாரால் பிரேரேபிக்கப்பட்ட துன்பத்தையடைந்தோம் ; அது போயிற்று ; இப்பொழுது சரீர வேதனையற்று ரோகமில்லாதவர்களாயிருக்கின்றோம் ; இனி வரப் போகிற சுக்கிரனால் என்ன துன்பமடைய விருக்கின்றதோ அறியோம். அவரோ இப்பொழுது மந்திரசித்தியின் பொருட்டு

அதிகோரமான தவஞ்செய்கின்றார்; மந்திரசித்திபெறுங் காரணமும் நாமறிந்திருக்கிறோம். இனி என்னசெய்யலாமென்று ஆலோசித்து யௌவனவதியாய்ப் புன்னகையோடு கூடியிருக்கின்ற ஜயந்தி என்னுந் தன் மகளைப் பார்த்துக் கூறுகிறான்: ஓ சுந்தரீ! உன்னை நான் சுக்கிரருக்குத் தத்தஞ்செய்துவிட்டேன். நீ அவரிருக்குமிடம் போய்ச்சேர்ந்து அவருக்குரிமையாகிய பணிகளைச்செய்து எனக்கு அவர் சுவாதீனராகும் விதஞ்செய்வாய். நான் உனக்குச் செய்யும் உபகாரம் அவரை உனக்குப் பர்த்தாவாக்கியதுதான். அதற்கு நீ செய்யும் உபகாரம் அவரை எனக்குச் சுவாதீனப்படுத்துவதுதான். ஓ பெண்ணே! இன்னமுஞ் சொல்லுகிறேன் கேள். நீ அவருடைய ஆச்சிரமத்துக்குப்போய் அவருடைய மனதுக்குப் பிரியமாயும் அவர் செய்யும் தவத்துக்குரிமையாயுமுள்ள உபசாரங்களைச் சமய மறிந்து ஆலோசனையோடு செய்து விரைவில் நானடைந்திருக்கிற பயத்தை நிவிர்த்தி செய்வாய் என்றனன். இந்திரன் மகளாகிய ஜயந்தி தந்தையின் வார்த்தையைக் கேட்டு அவனாணையைக் கடவாது சுக்கிரரிடத்திற் போய், அவராச்சிரமத்திலிருந்து அவர் தூமத்தை ஆகாரஞ்செய்துகொண்டு தபோமயமா யிருப்பதைப் பார்த்து, இவ்வரிய தவத்திலிருக்கும் சுக்கிரருக்குத் தந்தை சொல்லியபடிச் செய்வதற்கு என்ன காரணமிருக்கின்றது? ஆயினும் நாம் வந்துவிட்டோமாகையால் வந்த காரியத்தை முடித்துத் தீரவேண்டுமென்றெண்ணி, அவரது மெலிந்திருக்கும் சரீரத்துக்கேற்ப வாழைக்குருத்தைக் கொண்டுவந்து விசிறியும், மிகுந்த பக்தியுடன் தாகசாந்தியின்பொருட்டுக் குளிர்ச்சியாயும் வாசனையாயும் தெளிவாயுமுள்ள தீர்த்தத்தைக்கொண்டு வந்து எடுப்பதற்கு இலேசாயுள்ள பாத்திரத்தில் வைத்தும், உச்சிப்போது வந்த காலத்தில் பர்ணசாலை சிதிலப்பட்டு சூரியகிரணம் மேலே படுவதைப் பார்த்துக் கிரணங்களை ஒரு வஸ்திரங்கொண்டு மறைத்து நிழலைச் செய்தும், அவருக்கு ஆகாரநிமித்தம் அற்புதமாயும், புசிப்பதற்குச் சுகமானதாயும், இனிப்புள்ளதாயும், பசிக்கு யோக்கியமானதாயுமிருக்கின்ற பழவகைகளைக் கொண்டுவந்து எதிரில் வைத்தும், அதன்பின்னர் ஹரித் (சீகராம்பொடி) வர்ணமாயும் கிளிநிறமாயுமிருக்கின்ற தர்ப்பைகளைப் பவித்திரத்திற்கும் சங்கற்பத்திற்கும் ஓமாக்கினிக்கு நாற்பக்கத்திலுமிடும் பரிஸ்தரணம் முதலானவைகட்கும் விதித்திருக்கும் அளவாகச்செய்து அதனோடு நல்லமலர்களை எதிரில் வைத்தும், பின்னர் மேன்மேலுண்டாகும் அன்பினால் அவருக்குச் சயனநிமித்தம் இளந்தளிர்களைப் பரப்பிய ஒரு படுக்கையை யமைத்தும், இவையெல்லாம் அமைத்த பின்னர் முன்போல் விசிறி இளைப்பாற்றியும், இவ்வாறு தான்செய்யும் பணிவிடை தருமத்தில் தவறாதிருந்தனளேயன்றி, காமவிகாரத்திற் கேதுவாகிய அபிநயமுதலியவற்றைச் செய்தாளல்லள். அது தவத்துக்கு விரோதமாய்ச் சுக்கிரருடைய சாபத்துக்கிடஞ் செய்யுமாகலின் அச்சாபத்துக்கஞ்சி அவை யொன்றுஞ் செய்யாமல் அவர் தவத்துக்கு விரோதமில்லாமலும் தன்னிடம் பிரியம் வருவதற் கேதுவாயு

மிருக்கின்ற நல்ல சுகஜனிதமாகிய தோத்திரங்களைச் செய்து வருவாள். அப்பொழுது அந்தச் சுக்கிரர் யோக சமாதியினின்று ஜாக்கிரத்துக்கு வருவார். அக்குறிப்பறிந்து ஆசமன பாத்திரத்தில் தீர்த்தத்தைக்கொட்டுவாள். இந்தப்படி அவருடைய மனதுக்கிதமாக எப்பொழுதும் கோபமற்றவளாயும் சிரத்தையுள்ளவளாயும் வைதிகா சாரத்திலேயே ஆசையுள்ளவளாயும் அநேககாலம் பணிவிடை செய்து வந்தனள். (17–35)

சமர்த்தனாகிய இந்திரனும் ஜிதேந்திரியராகிய அந்தச் சுக்கிரருடைய மனோபாவத்தை யறியவேண்டுமென்கிற இச்சையுடையவனாய்த் தூதர்களை யடிக்கடி யனுப்பிக்கொண்டே யிருந்தனன். ஆனந்த பரமாத்மாவாகிய சிவபெருமானார் சொல்லியவாறு ஆயிர வருஷம் பூர்த்தியாகின்ற சமயத்தில் சந்தோஷமடைந்தவராய் அந்தச் சுக்கிரருக்குக் காட்சி கொடுத்துக் கூறுகின்றார்: ஓ பிருகு நந்தனா! எப்பொழுதும் யாருக்குஞ் சொலத் தகாததாகிய மந்திர சமூகங்கள் எவ்வள விருக்கின்றனவோ அவ்வளவையும் ஒருங்கே யறிதலாகிய முற்றுமுணர்தற் றன்மையை நீ யடைவாய். எவராலும் எவையாலுங் கொல்லப்படமாட்டாய். பிராமணசிரேஷ்டனாய்ப் பிரமனுக்குச் சமானனாயிருப்பாய். இவைகளுனக்குண்டாகுமென்பதிற் சந்தேகமில்லை என்றனுக்கிரகஞ்செய்து சிவபெருமான் அவ்விடத்திற்றானே மறைந்தருளினர். அதன்பின்னர் சுக்கிரர் இந்திரன் புத்திரியாகிய ஜயந்தியைப் பார்த்துச் சில வார்த்தை சொல்லத் தொடங்கினர்: ஓ சுந்தரியே! நீ யாருடைய மகள்? யாதுகாரணமா யிவ்விடம் வந்தனை? உன்னெண்ணமென்ன? அதனைச்சொல். நீ வந்த காரியத்தையும் தெரிவிப்பாய். ஓ அழகிய கண்களையுடையவளே! நீ எதை விரும்புகின்றனையோ அது நடத்துவதற்குக் கூடாமையா யிருந்தபோதிலும் நானிப்பொழுதே நடத்துவிக்கிறேன். எனக்குரிய பணிவிடைசெய்வதில் மிகுந்த சிரத்தையுடையவளே! உன் விஷயத்தில் நான் சந்தோஷத்தை யடைந்தவனா யிருக்கின்றவனாகையால் உனக்கு வேண்டியதைக் கேட்பாயாகவென்று சொல்லினர். அப்போது ஜயந்தியானவள் முகமலர்ச்சியுடையவளாய், ஓ பகவானே! என் அபிப்பிராயத்தை உம்முடைய தபோபலத்தினால் நன்றாயறிந்து கொள்ளலாமென்றாள். சுக்கிரர், நீ சொல்லியபடி நானே யறிந்து கொண்டேனாயினும் நீயே வாய்விட்டுச்சொல்லவேண்டும்; எனக்கு நீ அருமையான பணிவிடையைச் செய்திருக்கின்றாயாகையால் உன்னிடத்தில் நான் கொண்டிருக்கும் பிரியத்துக்களவில்லை; உனக்கு மங்களத்தையே செய்கிறேனென்றனர். (36–42)

அதற்கு ஜயந்தியானவள் கூறுகின்றாள்:—ஓ பிராமணரே! நான் தேவேந்திரன் மகள். என்னை உமக்கு அவர் தத்தஞ்செய்து விட்டனர். என் பெயர் ஜயந்தி. ஜயந்தனுக்கு நான் தங்கை. ஓ பிரபுவே! நான் உம்மிடத்தில் காமவிகாரத்தை யடைந்தவளா யிருக்கிறேன். ஆகையால் என் அபிப்பிராயத்தை நீர் நடத்த வேண்டும். ஓ மஹானுபாவரே! பதிவிரதாதருமப்படி நான் உம்

மிடத்தில் பிரீதியுடையவளாய் சுகித்திருக்கவேண்டும் என்றனள். சுக்கிரர் அவள் சொல்லிவந்ததைக் கேட்டு, ஓ நங்காய்! நீ இது முதல் பத்துவருஷ காலம் ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் என்னுடன் கிரீடா விலாசமா யிருவென்று சொல்லி அந்த ஜயந்தியினுடைய கரத்தைப் பிடித்துக்கொள்ளலாகிய பாணிக்கிரகணஞ் செய்து தான் முன்னிருந்த விடத்துக்குப் போய்ப் பத்துவருஷ காலம் தம்முடைய மாயையினுல் எந்தப் பிராணிகளுக்குந் தெரியாமல் கிரீடித்துக்கொண்டிருந்தனர். அசுரர்கள் தங்களாசிரியர் ஸர்வமந்திரங்களையும் அறிந்தவராயும், அறிந்தவண்ணம் அவைகளை ஆளத்தக்க சித்தியுடையவராயு மிருக்கப்பெற்றுத் தம்முடைய ஆச்சிரமத்தை யடைந்திருப்பதைக் கேள்விப்பட்டு அவரைக் காணவேண்டுமென்கிற எண்ணமுடையவர்களாய்ச் சந்தோஷத்தோடுங் கூடி அவருடைய ஆச்சிரமத்துக்கு வந்து அவரைத் தேடிப்பார்க்க, ஜயந்தியுடன் கிரீடித்துக்கொண்டிருக்கிற அவர் இவர்கள் கண்ணுக்குக் காணப்படவில்லை. காணப்படாமற் போகவும் அசுரர்கள் மனக்கலக்கமடைந்து சிந்தாகுலப்பட்டுத் தீனபாவமுற்று அடிக்கடி மருண்டு மருண்டு மயங்கி எந்தக்காரியம் செய்வதற்கும் யோசனையற்றவர்களாய்ச் சத்துருபயத்தை மேற்கொண்டு பலபலவாகச் சிந்தனைசெய்து ஒன்றுந்தோன்ருமல் தங்கள் தங்கள் இடங்களுக்குப் போய்விட்டனர். இந்திரனே தன்மகளுடன் சுக்கிரன் ரமணீயமாய் ரமித்துக்கொண்டிருப்பதை யறிந்துகொண்டு தனது குருவாகிய பிரகஸ்பதியினிடம் சென்று நடந்த செய்திகளைத் தெரிவித்து இனி என்ன செய்யலாமென்று கேட்டனன். இவனுடைய கேள்விக்கு அவர் விடைகூறுவதற்குமுன் இந்திரன் கூறுகின்ருன் :—ஓ ஆசிரியரே! தேவரீர் இப்பொழுது அசுரரிடத்திற்சென்று அவர்களெல்லாம் உம்முடைய சொல்லின்வழி நிற்க ஒரு கபடஞ்செய்து ஏமாற்றல்வேண்டும். இதுவன்றி, அவ்விஷயத்தில் தேவரீருக்கு எதுசெய்தால் காரியசாதகமாகுமென்று தோன்றுகிறதோ அந்தச் சாதகமான காரியத்தை எங்களுக்குச் செய்யுமென்றனன். அவன் சொல்லியதை தேவகுருவானவர் கேட்டு அசுரகுரு ஒருவர் கண்ணுக்குந் தோன்ருமல் ஜயந்திபால் சுகித்திருப்பதையறிந்து அவருருவத்தைத் தானெடுத்து அசுரரிடம் சென்று அவர்களுடைய காரியசித்தியாய் விட்டதென்றுகாட்டும் அபிநயபாவமாகிய பிரியத்துடனழைக்க, அவ்வசுரர் ஆசிரியர் வந்துவிட்டாரென்று யாவரும் ஒருங்குகூடிச் சமீபத்தில் வந்து தங்களுடைய ஆசிரியரை எவ்வண்ணம் உபசரிக்கின்ற வழக்கமோ அவ்வண்ணமே அர்க்கிய பாத்திய ஆசமனுதி உபசாரங்கள் செய்து சுக்கிரராகவே கண்டு களித்துத் தரிசித்துச் சுக்கிரரல்லரென்கிற ஞானம் சிறிதுமில்லாமல் இவரே சுக்கிரரென்கிற ஞானத்தோடுங்கூடி முழுமோசம் போனவர்களாய் வணங்கி எழுந்து கைகூப்பி நின்றனரேயன்றி அவருள் ஒருவனுவது அவர் கபடத்தை யறிந்தவனல்லன். மறைப்பைச் செய்கின்ற மாயையினுல் சுக்கிர வடிவங்கொண்டுவந்த குருவானவர் அசுரர்களை நோக்கி, ஓ அசுரர்காள்! உங்களுடைய க்ஷேமத்தின்

பொருட்டு வந்துவிட்டேன் ; நம்முடைய சீடர்களெல்லாம் க்ஷேமந் தானாவென்று வினவி, ஓ அசுரர்களே ! உங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டு நான் செய்த தவத்தினால் சம்புவானவர் சந்தோஷித்துப் பிரசன்னமாக, நான் அவரால் மாயையற்றமந்திரத்தை உபதேசிக்கப் பெற்றேன் ; அதனை உங்களுக் குபதேசிக்கின்றேனென்றனர். அந்த அசுரர்களுக்குள் சிறந்தவராயிருக்கின்றவர்கள் அவருடைய வார்த்தையைக்கேட்டு மனக்களிப்படைந்து நமது ஆசிரியர் கிருத கிருத்தியராயினரென்று சந்தோஷித்து இனி நமக்குப் பயமேது, மனக்கவலையேது, சல்லியமேது, தேவர்களுடைய துன்பமேது, யாவும் விட்டதென்று மகிழ்ந்து சந்துஷ்டர்களாய் வணங்கினர் என்று சூதபகவான் சௌனகாதியருக்குக் கூறினர். (43–59)

ஓம் கமநீயாயை நம:

## 13. குரு அசுரரை வஞ்சித்தல்

சூதர் கூறுகின்றார் :—ஓ மஹரிஷிகாள் ! இனிப் பிரகஸ்பதி அசுரர்களை வஞ்சித்த விநோதத்தை வியாசபகவான் வினவ, அவர் அரசனுக்குக் கூறியவாறு சொல்லுகிறேன், கேளுங்கள்.

ஜனமேஜயன் வியாசரை நோக்கி வினவுகின்றார் :—புத்திமானாகிய பிரகஸ்பதி சுக்கிரவுருவத்தைத் தாங்கி அசுரர்களிடத்தில் கபடகுருவாய்வந்து ஆசீர்வதித்த பின்னர் என்செய்தார் ? ஐயா ! தேவகுருவானவர் சகல பிரம்மவித்தைக்கும் நிதியாயுள்ளவர். மேலும் அவர் முனிவர்களிற் சிறந்தவராகிய அங்கீரஸருடைய புத்திரர். இவர் எவ்வண்ணங் கபடஞ்செய்யத்தொடங்கினர் ? சகல தருமசாஸ்திரங்களிலும் தருமத்துக்கு மூலம் சத்தியமேயென்று பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தச் சத்தியத்தினாற்றான் பரமாத்மாவாகிய பரமசிவனும் பிரத்யக்ஷமாகின்றனர். அங்ஙனமிருக்க வாக்பதியாகிய தேவகுருவே அசுரர்களைக் குறித்துப் பொய்சொல்லவந்தாரானால் உலகின்கண் ஸம்ஸாரத்திலிருக்கின்ற எவன்தான் ஸத்தியஸந்தனாயிருக்கப் போகிறான் ? உலக வைபவத்தில் ஆகாரத்தைக்காட்டிலும் அதிகமான சுகம் வேறொன்றில்லை. அந்த ஆகாரத்தை வெறுப்பவர் முனிவர்கள். அங்ஙனமிருக்க முனிவர்கள் எப்படிப் பொய்யொழுக்கத்தில் நடக்கத்துணிவார்கள் ? துணியார். ஆகவே இவர் எந்தச் சுகத்தை விரும்பிப் பொய் சொல்லத் துணிந்தனர் ? இவர் இவ்வாறு கபடமான சொற்களைச் சொல்லாராயின் பொய்சொல்லாமை முதலிய ஒழுக்கத்தினின்றுந்தவறுத சிஷ்டாசாரத்தினின்றுந் தவறினவராகவே முடிவரல்லவா ? இவருக்கு வேறு விசேஷமான பாவங்களுண்டாகாமற் போனாலும் சொல்லுஞ் சொல்லளவுக்கேற்ற தோஷம் உண்டாகுமல்லவா ? அதுவேயுமன்றி இந்தக் கபடமார்க்கத்திற் புகுந்ததனால் அவருக்கதுவரையிலுண்டாயிருந்த புகழுரையெல்லாம் பிரயோசனமற்றதாயொழிந்து போமல்லவா ? உற்பத்திக்

காலத்தில் தேவர்கள் ஸத்வகுணத்திலும், மானிடர் ராஜஸகுணத்திலும், திரியக்குகள் தாமஸகுணத்திலும் தோன்றினவர்களென்று பெரியோர் கூறுகின்றனர். ஆகவே ஸத்வகுணப் பிரதானரென்று ஏற்பட்ட தேவர்களுக்கு இவர் சாக்ஷாத் குருவாயுள்ளவர். ஆகவே இவர் எவ்வளவு ஸாத்விகப்பிரதானரா யிருத்தல்வேண்டும்? அங்ஙனமிருக்க இவர் தாமே பொய்சொல்லத் துணிந்தனரேயானல் ரஜோகுண தமோகுணசம்பந்தராயுள்ள ஜீவர்களுக்குள் எவன்றான் பொய் சொல்லாதவனுகவிருப்பான்? இவர் இப்படி நடந்ததற்கு என்ன சமாதான மிருக்கின்றது? இது விஷயம் சந்தேகமே. மூன்றுலகத்திலுமுள்ள விஷ்ணுமூர்த்தி, பிரமன், இந்திரன், அக்கினி, சந்திரன் முதலிய தேவர்களுடைய சரித்திரங்களையும், வசிஷ்டர், வாமதேவர், விஶ்வாமித்திரர், இந்தப் பிரகஸ்பதி முதலிய தபசிகளாகிய முனிவர்களுடைய சரித்திரங்களையும் விசாரிக்குங்கால் காமக் குரோதாதிகளுக்கு வசப்பட்டு அவாமீக்கொண்டு வேறுபட்ட அறிவுடையவராய்ப் பிறரால் காணக்கூடாத கபடத்தொழிலில் சாமர்த்தியம் வகித்துப், பிறர் மனைவிரும்புதல் பொய்கூறுதல் முதலிய கூடாவொழுக்கத்திற் றலைப்பட்டுழன்றவர்களாகவே தெரியவருகின்றனர். இவர்களெல்லாம் இவ்வா றிருப்பாராயின் . ஒழுக்கத்தினின்றும் இழுக்காத நன்னடக்கையை யாரிடத்திற் காண்பது? இனி மானிடர்களுக்குள் இவன் பொய்மையுடையவன், இவன் அஃதில்லாதவன்; இவன் பிறன் மனையாளை விரும்புந் தீயகுணமுடையவன், இவன் அஃதில்லாதவன் என்று யாரை ஆராய்வது? இவர்களுக்கெல்லாம் என்னகதி யுண்டாகும்? இனி யாருடைய வாக்கை உபதேசமாகக் கொள்வது என்றுன். (1–14)

வியாசர் கூறுகின்றுர்:—ஓ அரசனே! விஷ்ணுவாயிருந்தாலென்? பிரமனுயிருந்தாலென்? இந்திரனுயிருந்தாலென்? எப்பொழுது தேகதாரிகளாக இருக்கின்றுர்களோ அப்பொழுது குணவிகாரமுடையவராயிருத்தற்குச் சந்தேகமென்ன? விஷ்ணுமுதலாகச் சொல்லப்பட்ட இவர்களெல்லாம் ஆசையுடையவர்களாகவே இருந்தபோதிலும், தங்களுடைய உபாசகர்களுக்கு உபாசியர்களாயிருந்து வேண்டியாங்கருள் செய்வதாகிய சாமர்த்திய விசேஷத்தால் விதேகியாகிய பரமாத்மாவைப்போல் தோற்றப்படுகின்றனரேயன்றி அவர்கட்குச் சங்கடங்கள் வருகின்றகாலத்தில் குணங்களால் அவர்கள் பாதைப்படாமலிருக்கத்தக்கவரல்லர். ஏனென்றுல், அவர்களுக்கெல்லாம் பிரகிருதி ஸம்பந்தமாகிய குணங்கள் காரணமாயிருப்பதால் அவைகளின் காரியமாகிய உபாதிவசத்தராகவே யிருக்கத்தக்கவராவர். அவர்கட்குச் சரீரமும் இருபத்துநான்கு தத்துவ சமூகங்களேயாகும். அவர்கள் வேறுவிதமான சுத்த மாயாகாரியமாகிய சரீரமுடையரல்லர். அவர்களெல்லாம் எப்பொழுது பிரகிருதி சம்பந்தமான சரீர முடையவர்களாயினரோ அப்பொழுதே காலத்துக்கீடாய் மரணத்தை யடையத்தக்கவர்களே யாவர். ஆனல் பிறருக்குத் தத்துவார்த்தத்தை யெடுத்துச் சொல்லுகின்றுர்களே என்றுல், சொல்லு

கிற விஷயத்தில் நன்றாய்ச் சொல்லத்தக்கவர்களே ; தங்களுக்குரிய காரியங்கள் எதிர்ப்படுகின்றபொழுது அதற்குரிய குணவிகாரங்கள் அப்பொழு தப்பொழுது வெளிப்பட்டுக்கொண் டிருக்குமேயன்றி அவை வெளிப்படாமற்போகா. ஆகையால் இவர்களுக்கெல்லாம் யான் இப்பொழுது சொல்லிய காரணமன்றி வேறு காரணம் விசாரிக்கவேண்டியதில்லை. ஆகவே நீ அவர்களிடத்தில் விசாரிக்குங் குணங்களெல்லாம் அவர்களுக்குள்ள சுபாவ மென்றே யறிவாயாக. தேகதாரியாயிருக்கின்ற எவன்றான் அவைகளை அடக்கவல்லவனாவான்? ஓ ஜனமேஜயனே! இவ்வுலகம் இவ்விதமாகவே இருக்குமென்று நினைக்கவேண்டும். இவ்வுலகில் தேவ மானிடர்களா யிருக்கின்றவர்க ளெல்லாம் சுக துக்கங்களோடு கூடியே யிருப்பார். இவ் விரண்டையும் விட்டிருப்பவ ரொருவருமில்லை. இதற்குச் சில திருஷ்டாந்தங் கூறுகின்றேன் : ஒருசமயம் பகவானாகிய விஷ்ணுமூர்த்தி கடினமான தவத்தையும், ஒருசமயம் அனேக யாகங்களையும் செய்கிறார். ஒரு சமயம் லக்ஷ்மியோடு கூடி அந்தப்புரத்தில் லீலாவிநோதராயும் ஒருசமயம் லக்ஷ்மீ சமேதராய் வைகுண்டத்தில் பக்தானுக்கிரக நிமித்தமா யிருக்கின்றவராயுமிருக்கின்றார். ஒருசமயம் தானவர்களோடு மகாகுரூரமாகிய யுத்தஞ்செய்து அவர்களுடைய பாணங்களால் அபஜயமடைந்தவராயும், ஒருசமயம் தன்னுடைய பாணங்களால் அசுரர்களை வெற்றி கொள்ளுகின்றவராயும், ஒருசமயம் ஆதிசேஷன்மீது பள்ளிகொண்டு சுகதுக்கந்தோன்றாத யோகசமாதியிலிருக்கின்றவராயும், ஒருசமயம் அந்த யோகநித்திரையினின்று வெளிப்படவேண்டிய காலமெதுவோ அக்காலத்தில் ஜாக்ராவஸ்தையை யடைகின்றவராயுமிருக்கின்றார். இதனால் விஷ்ணுமூர்த்தியும் சுகதுக்கானுபவ முடையவராகவே யிருக்கின்றவரென் றறிவாய். இதுவுமன்றி, இந்த விஷ்ணுவும் பிரம ருத்திர இந்திராதியரும் மகான்களாகிய முனிவர்களும் ஆகிய இவர்களுக்கு விதித்த நிர்ணயப்படி அதிகமான ஆயுளையுடையவர்களாய் அவர்களுடைய காலவளவின்படி யுலாவிக்கொண்டிருப்பரேயன்றி அவ் வளவையைக் கடந்திரார். இப்படியே தாவரஜங்கமங்களாயுள்ள யாவும் இயங்கப்பட்டிருக்கின்றன. அந்தத்தையடையுங்காலத்தில் மேற்சொல்லிய தாவரஜங்கமங்களோடு பிரம்மாதி தேவர்களும் நாசத்தை யடைகிறார்கள். இதிற் சந்தேகமில்லை. மீண்டும் பிரமன் முதலிய யாவரு முண்டாகின்றார்கள் ஆகையால் தேகமுடையவர்களெல்லாம் அந்தமாதியை யுடையவராயும் காமாதிகுணங்களை யுடையவராயு மிருப்பாரேயன்றி அவைகளை யொருபோதும் விட்டிரார். (15–30)

ஓ ஜனமேஜயனே! உனக்கிதுகாறுஞ் சொல்லிவந்த நியாய விசாரத்தால் அரி யயன்முதலாகச் சொல்லப்பட்ட யாவரும் பிரபஞ்சிகளென்றும், அந்தப் பிரபஞ்ச தருமமாயிருக்கின்ற ராகத்துவேஷ காமக் குரோத முதலாகச் சொல்லப்பட்ட சகலகுணங்களையு முடையவராய் அவைகளால் வியாபிக்கப்பட்டு அவைகட்குரிய செயல்களோடு கூடியேயிருப்பரென்றும் வெளியாக்கியதாகும்.

இவ்விஷயத்தில் இனி உனக்கு ஒருபொழுதும் ஆச்சரியம் வேண்டாம். அவைகளை ஆன்மவர்க்கங்களினின்றும் வேருக எண்ண வேண்டாம். ஆகையால் காமாதி விஷயங்களைவிட்டுப் பரமார்த்த ஞானத்தை யுடையவராயிருத்தல் யாவர்க்கு மரிது. காமாதிகளுக்கு எவர் பயப்படுகின்றனரோ அவர்கள் அவைகளுக்கு மூலமாயுள்ள ஸ்திரீகளை அங்கீகரிக்கா திருத்தல்வேண்டும். அங்ஙனமிருப்பாராயின் அவர்கள்தான் சர்வசங்க பரித்யாகிகளாய் நிர்மலசித்தரா யுலாவிக்கொண்டிருப்பர்.

ஓ அரசனே! பிரகஸ்பதியின் மனைவியைச் சந்திரன் மோகித்ததையும் அதனால் விளைந்த விளைவையும், பிரகஸ்பதி தன் சகோதரன் மனைவியை விரும்பி அவமதிப்படைந்ததையும் முன்னமே சொல்லியிருக்கிறேன். மேலோர் கீழோரென்று சொல்லப்பட்ட யாவரும் இச் சம்ஸாரமாகிய சக்கரத்தில் காமாதி குணங்களாற் சுழன்றுகொண் டிருப்பரென்பதற்குச் சந்தேகமுமுண்டோ? கிருகஸ்த தருமத்தை எப்போது ஒருவன் அடைகின்றனே, அவன் எப்படி முக்தனுவான்? ஆகையினால் எந்தவிதத்திலும் ஸாம்ஸாரிக தருமத்தைவிட்டுச் சச்சிதானந்த சொரூபிணியாகிய மஹேஸ்வரியை யாராதித்தல் வேண்டும். ஏனெனில், இச் சம்ஸாரமானது பராசக்தியினுடைய மாயாவிலாசத்தினுல் எவருடைய அறிவையும் மறைத்துப் பித்துப் பிடித்தவர்போலும், மதுபானஞ் செய்தவர்போலும், பிரமித்திருக்கச் செய்யும். இந்தப் பிரமையை யறிந்தவன் தேவி ஆராதனத்தினுல் அக்குணங்களை நிவிர்த்தித்து மோக்ஷ சாதனங்களுக்குரியனுய்ப் பேரின்ப வீட்டையடைகிருன். இந்தப் பிரபஞ்ச மயக்கமொழிந்து பேரின்ப வீட்டை யடைதற்குத் தேவியாராதனையன்றி ஆவதில்லை. அந்தத் தேவியை அவளுடைய அநுக்கிரகமுண்டாகுமளவும் ஆராதித்து வரவேண்டும். ஏனென்ருல், அத் தேவியைப்போலுந் தயா சமுத்திரமாயுள்ளவர்க ளெவரிருக்கின்றனர்? அவளுடைய அநுக்கிரகத்தா லுண்டாகும் சுகம்போலும் யாருடைய வனுக்கிரகத்தா லுண்டாகும்? ஆகையால் கருணைக் கடலாகிய தேவியை வஞ்சனையில்லாமல் உபாசித்தல் வேண்டும். எவனும் தேவியினுடைய உபாசனையாற்ருன் ஜீவன் முத்தனுக வேண்டும். கிடைத்தற்கருமையாகிய மானிட தேகத்தை யெடுத்துத் தேவியைப் பூஜிக்காமற் போவானுயின் அவன் உன்னதமான விடத்திலிருந்து கீழே விழுந்தவன் போலாவானென்று தீர்மானித்தல் வேண்டும். முக்குணத்தோடும் அகங்காரத்தோடுங் கூடி அசத்தியத்தினுல் பின்னலிடப்பட்டிருக்கிற இந்த ஜகத்தினுடைய மாயா விலாசமானது அருள்விலாச ரூபிணியாயிருக்கும் தேவீ கடாக்ஷமன்றி வேறெவ்விதத்தினுற் போயொழியும்? ஆகையால் மோக்ஷ காமியானவன் சகல துர்க்குணங்களையும் விட்டுப் புவனேஸ்வரியையே பூஜித்தல் வேண்டும் என்றனர். (31–42)

இவ்வாறு சொல்லியபொழுது அரசன் தேவியினிடத்திற் பக்தியுடையவனுய்த் தியானித்து வியாசபகவானைப் பார்த்து, அசுரரிடஞ்சென்ற பிரகஸ்பதி பகவான் பின்னர் என்ன செய்தார்? அவர்

களிடத்தினின்றும் எப்போது மீண்டனர் என்று கேட்க, வியாசர் கூறுகின்றார் : ஓ அரசனே ! பிரகஸ்பதி அசுரரிடஞ் சென்று அவர்களுக்கிதமாகிய அசுர ஞானத்தைப் போதிக்க, அசுரர்கள் அவர் செய்யும் மோக ஜாலத்தினால் அவரைத் தங்கள் குருவாகவே எண்ணி அவரிடத்தில் அதிக விசுவாசமும் அவர் சொற்படி நடக்க வேண்டுமென்னு முறுதியுமுடையவர்களாய் அன்புடன் அவரிடத்திற் பெறவேண்டிய மந்திரோபதேச நிமித்தம் சரணாகதி யடைந்தனர். (43–46)

ஓ அரசனே! மோக ஜாலத்தால் யார்தான் மோகிக்கப்பட மாட்டார்கள்? இவர் செய்தி யிங்ஙனமிருக்க, சுக்கிரர் ஜயந்தியினிடம் சொல்லியிருந்த பத்து வருஷமும் முடிந்தவுடன் அவர் தன் சிஷ்யர்களாகிய அசுரர்களை நினைத்து, அந்தோ ! அசுரர்கள் நம்மிடத்திலுள்ள ஆசையினால் நம் வரவை எதிர்பார்ப்பார்களல்லவா ? தேவர்களால் பயந்திருக்கிற அவர்களை நாம் பார்க்கவேண்டும்; நம்முடைய பக்தர்களுக்குத் தேவர்களால் ஒரு பயமுமில்லா திருக்கும்படிச் செய்ய வேண்டுமென்று நினைத்து, காமவிகாரத்திற் சென்றிருந்த மனதைத் தன் சுவாதீனப்படுத்தி ஜயந்தியைப் பார்த்துக் கூறுகிறார் : ஓ ஜயந்தீ ! உன்னிடம் சொல்லியிருந்த பத்து வருஷமும் முடிந்துவிட்டது. இப்பொழுது என் சீடர்கள் தேவர்களைச் சந்தித்திருப்பார்கள். ஆகையால் சீடர்களைப் போய்ப் பார்த்து மறுபடியும் சீக்கிரத்தில் உன்னிடம் வருகிறேனென்று சொல்லினர். தருமந் தெரிந்த ஜயந்தி அந்த சுக்கிரரைப் பார்த்துத் தேவரீருடைய தருமத்தைக் கெடுக்கமாட்டேன் ; உம்முடைய இஷ்டப்படி செய்யலாமென்றனள்.

அதன்பிறகு சுக்கிரர் ஜயந்தியிடம் விடைபெற்று, அசுரரிடஞ் சென்று, அங்கு அசுரர் மத்தியில் கபடரூபதாரியாய்த் தேவகுருவிருந்து, ஓ தேவ சத்துருக்களே ! அஹிம்சையே முக்கியமான தருமமென்றும், உயிர்களைக் கொல்வதில் ஆசையுள்ளவர்களைக் கொல்ல வேண்டுமென்னும் சமண தருமமே மேலான தருமமென்றும், அதனையே அநுஷ்டிக்க வேண்டுமென்றும், இதுவன்றிப் போகத்திலாசையுள்ள பிராமணர்கள் தங்கள் நாவின் ருசிக்குத் தக்கவாறு வேதத்தில் பசு ஹிம்சையாகிய யாகத்தைச் சொல்லப்பட்டிருக்கிறதென்று காட்டி அதனைச் செய்யவேண்டுமென்று கூறும் அந்த அறிவில்லாத பிராம்மணர்களையும் அந்த அநுஷ்டானங்களையும் கைவிடவேண்டும் என்றும் சொல்லிக்கொண்டிருக்கிறதைப் பார்த்து ஆச்சரியமடைந்து, நமக்குத் துவேஷியாயிருக்கிற இந்தத் தேவகுருவினால் நம் சீடர்கள் வஞ்சிக்கப்பட்டிருக்கிறார்கள் ; இது விஷயத்தில் ஸம்சயமில்லையென்று சிந்திக்கலாயினர் : இவர் இவ்வாறு வஞ்சனையாக உபதேசிப்பதற்குக் காரணம், பாவத்துக்கு வித்தாயும் நிரயத்துக்கு வழியாயும், ஒருவரையும் விடாததாயுமுள்ள லோபமாகிய ஆசையல்லவா ? சீ ! சீ ! இதுபோலுங் கெட்டது எதுவிருக்கின்றது ? பரமாத்மாவாகிய இந்திரனால் பிரகஸ்பதி தூண்டப்பட்டு இப்

படிப் பொய் சொல்லுகின்றாரே, இதுவென்ன கொடுமை! இப்போது இவர் சொல்லி வருகின்ற வார்த்தையை எவன் பிரமாணமாகக் கொள்ளுகிறானோ அவன் பாஷண்டனுவனல்லவா? தரும சாஸ்திரப் பிரவர்த்தகராயும், தேவர்களுக்கெல்லாம் ஆசிரியராயுமிருக்கின்ற இவர் இப்படிப்பட்ட மலினமான மனமுடையவராயிருப்பாரானால் இவர் எந்த தோஷத்தைத் தானடையார்? உலகத்திலிருக்கின்ற ஏனைய ஆசிரியர்களும் இவர் சொல்லியதைப் பிரமாணமாகக்கொண்டு பாஷண்டர்களாவார்களல்லவா? பிரம்மரிஷியாகிய இவர் நாடகத்தில் வரும் வேஷதாரிகளைப்போல் நடைநொடி பாவனை முதலிய எல்லாவற்றையுமறைத்து மூடர்களாகிய நமது சீடர்களை என்ன மோசஞ் செய்கிறார், என்றெண்ணினர். (47–62)

ஓம் கலாவத்யை நம:

## 14. சுக்கிரரை அசுரர் சேருதல்

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! இவ்வாறு தேவ குருவினுடைய வஞ்சத்தை முன் சொல்லியவாறு சுக்கிரர் மனதிலாலோசித்து அசுரர்களைப் பார்த்து நகைத்துக்கொண்டே கூறுகின்றார் : ஓ அசுரர்களே! என்னைப் போலுருவமெடுத்து வந்திருக்கிற பிரகஸ்பதியினால் மோசம் போய்விட்டீர்களா? அந்தோ! அவனல்ல சுக்கிரன், நான்தான். அவன் தேவர்களுக்குச் சுகத்தை விளைவிக்கின்ற குருவாகும். என் சிஷ்யர்களாகிய நீங்கள் அவனால் மோசம் போனீர்கள். இதிற் சந்தேகம் வேண்டாம். ஓ சீடர்களே! அவன் வேஷக்காரன். அவன் சொல்லும் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளவேண்டாம். ஓ அன்பர்களே! என்னுடன் வாருங்கள். பிரகஸ்பதியைத் துரத்தி விடுங்கள், என்றனர். இவ்வாறு சொல்லிவருவதை அவ்வசுரர்கள் கேட்டு உருவத்திற் சிறிதும் பேதமில்லாமலிருக்கின்ற இருவரையும் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்து தங்களாசிரியரையே ஆசிரியரென்றறிந்தும் சித்தப்பிரமையுடையவர்களாய் மறுபடியும் மயங்கி நிற்கும்பொழுது தேவகுருவானவர் கூறுகின்றார் : ஓ அசுரர்களே! நீங்களேன் மயங்குகிறீர்கள்? இப்பொழுது வந்தவன் தேவகுருவாகிய பிரகஸ்பதி; உங்களை வஞ்சிக்கும் பொருட்டு என்னைப் போலுருவங்கொண்டான். ஓ அசுர சிரேஷ்டர்களே! இவன் உங்களை மோசஞ்செய்து தேவர்களுடைய காரியத்தைச் சித்தி பண்ணுவதற்கு இவ்வாறு சொல்லுகின்றான். ஆகையால் அவனிடம் விசுவாசம் வைக்கவேண்டாம். அவன் சொல்லும் சொல்லில் நம்பிக்கை சிறிதும் கொள்ளவேண்டாம். மஹாதேவரால் எனக்கு மந்திரோபதேசமாயிருக்கிறது. அதை உங்களுக்குபதேசிக்கின்றேன். தேவர்களாலுங்களுக்கு அபஜயம் வராமல் ஜயத்தையுண்டுபண்ணுகிறேன். நான் இப்போது சொல்லிவருவதில்

ஸம்சயங் கொள்ளவேண்டாம் என்றனர். அவ்வசுரர்கள் கேட்டு பிரமையொழிந்து இவர்தான் நம்முடைய உண்மையான குரு வென்று மிகுந்த விசுவாசமுடையரா யினர். சுக்கிரர் மறுபடியும் அநேக உபமானங்களால் அவன் நானல்ல பிரகஸ்பதியென்று எடுத்துக்காட்டியும், அந்த பிரகஸ்பதியினுடைய வாக் சாதுர்ய விசேஷத்தால் அவரையே சுக்கிரனென்றும், சுக்கிரரையே பிரகஸ்பதியென்றும், கால வித்தியாசத்தினால் நிச்சயித்து உண்மையறியாது உண்மையான சுக்கிரரைப் பார்த்து அசுரர்கள் கூறுகின்றனர் :

தருமாத்மாவாயும் ஞானத்திற் பிரதாபராயும் க்ஷேமங்களை யநுக்கிரகிக்கின்றவராயுமுள்ள இவர் எங்களிடம் சொல்லிப்போன படியே தபசு முடிந்தபின்னர் எங்களிடம் வந்து அன்று முதலின்றளவாகிய பத்து வருஷகாலம் எங்களைக் காத்துக்கொண்டு வருகின்றுராகையால் இவர்தான் உண்மையாய் வந்த சுக்கிரர் ; நீர்தான் கபடியாய் வந்த சுக்கிரர். ஆகையால் எங்களுக்கு நீர் ஆசிரியரல்லர்; நீர் போய்வாருமென்றனர். மூடர்களாகிய அசுரர்கள் இவ்வாறு சொல்ல, சுக்கிரர் உங்கள் குரு நான்தானென்று அடிக்கடி முறையிட்டனர். அவர்கள் அதனை நம்பாது, ஏனையா கூச்சலிடுகின்றீர் ? போமையா போமென்று மிரட்டிவிட்டுப் பிரகஸ்பதியைப் பார்த்து, இந்தக் கபடி சொல்லும் வார்த்தையில் நாங்கள் மாறுபடுவோமென்று நீர் குற்றங்கொண்டு கோபிக்க வேண்டாமென்று பலமுறை வணங்கி யுபசரித்தனர். அப்போது சுக்கிரர் பிரகஸ்பதியின் போதனை சக்தியினால் இந்த அசுரரனைவரும் அவர் வசப்பட்டு மோசமடைந்து நம்மைப் பழிக்கின்றுர்களல்லவாவென்று கோபங் கொண்டு அவர்களைப் பார்த்துக் கூறுகின்றுர் : ஓ அசுரர்களே ! இந்த பிரகஸ்பதி எவ்வளவுதான் உங்களுக்குப் போதித்தபோதிலும் நான் நேராக வந்து அவன் கூறிய வஞ்சனைச் சொல்லைத் தடுத்து நானே குருவென்று பலமுறை சொல்லியும் அதையறியாமல் என் கட்டளையை அவமதித்தீர்களாகையால் நீங்களனைவரும் ஞானமின்மையையும் யுத்தத்தில் தோல்வியையும் அடையக் கடவீர்கள். ஓ அறிவிலிகளே ! நானிட்ட இந்தச் சாபம் உங்களுக்கு விரைவில் பயன்தரும். இந்தக் கபடியினுடைய மோசமும் சீக்கிரத்தில் வெளியாகுமென்று சபித்தனர். (1–15)

சுக்கிரர் கோபத்துடன் சபித்துச்சென்ற பின்னர் தேவகுரு அசுரர் கூட்டத்தில் தாம்வந்த காரியம் முடிந்ததென்று சந்தோஷத்துடனிருந்து குரு சாபமேற்ற இவர்களால் தேவர்களுக்கோர் இடையூறும் வரமாட்டாதென்று நினைத்து அவர்களிடம் விடைபெற்றுத் தாம் கொண்டிருந்த பொய்வேஷத்தை மாற்றித் தம்முருவங் கொண்டு இந்திரனிடம்போய்க் கூறுகின்றுர் : நான் போன காரியம் முடிந்துவிட்டது. என்னையெனின், அசுரர்களுக்கு அவர்களுடைய குருவாகிய சுக்கிரரால் சாபம் நேர்ந்துவிட்டது. அதை மாற்ற ஒருவராலும் முடியாது. நானும் வந்துவிட்டேன். ஓ தேவேந்திரனே ! நான் குரு சாபத்தை யேற்கும்படி அசுரர்களைச் செய்து

விட்டேனுகையால் நீ தேவர்களோடு இந்தச் சமயத்தில் நிராதரவா யிருக்கின்ற அவர்களிடத்திற்சென்று யுத்தம்செய்யப் பிரயத்தனப் படுவாய் என்றனர். இவ்வாறு தேவர்களுக்குக்கூறித் தன்னிருப் பிடம்போய்ச் சேர்ந்தவுடன் தேவேந்திரன் முதலிய தேவர்கள் குரு வார்த்தையைக்கேட்டு அவரைக்கொண்டாடி ஆனந்தக் களிப் படைந்து யாவரும் ஒன்ருய்க்கூடி ஆலோசித்து அசுரர்களை நோக் கிச்சென்ருர்கள். அசுரர்கள் பலிஷ்டராகிய தேவர்கள் யுத்தத்திற் குப்பிரயத்தனப்பட்டு வருவதையும், ஆசிரியர் மறைந்திருப்பதையு மெண்ணிச் சிந்தாகுல முடையவர்களாய் ஆலோசிக்கின்றனர் :— ஆஹா! அந்தப் பிரகஸ்பதியினுடைய மாயையினுல் மோசம் போன நம்மால் ஞானவானும் மஹாத்மாவாயுமுள்ள நமது ஆசிரியர் மனதிற் கோபமுள்ளவராய்ப் போய்விட்டார். இதற் கென்ன செய்வோமென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு, அந்தோ! கபடத்திற் பண்டிதனும் பாபிஷ்டனுமுள்ள பிரகஸ் பதி, நம்மை இப்படி மோசம்செய்து போய்விட்டானே! அவ னெப்படிப்பட்டவன், சகோதரனுடைய மனைவியை யனுபவித்தவ னல்லவா! அவனிதுதானு செய்வான்? மனதிலசுத்தமுள்ள அவன் வெளியில் சுத்தமுள்ளவன்போல் நடிக்கின்ருன். நாம் அவன் வஞ் சனையை யறியாமற்போனும். நம்மால் கோபத்தையடைந்திருக்கிற சுக்கிரரைத் தரிசிப்பதற்கு எவ்வாறு போகலாம்? மந்திரப் பிரசன் னராயிருக்கின்ற அவர் நம்மிடத்தில் சந்தோஷமுடையவராய் நமக் காகவேண்டிய சகாயங்களைச்செய்ய நாமென்ன உபாயஞ்செய்ய லாம்? அவரெப்பொழுது வருவாரென்றனர். அசுரர்களெல்லாம் இவ்வாறு ஆலோசித்து பயமுடையவர்களாய் ஒன்றுகூடிப் பிரகலா தனை முன்னிட்டுக்கொண்டு சுக்கிரரிடம்சென்று வணங்கினுர்கள். சுக்கிரர் கோபத்தால் கண்சிவந்து அந்த அசுரர்களை நோக்கிக்கூறு கின்ருர்: ஓ அசுரர்களே! நீங்கள் என்னுடைய சீடர்களென்று அநேக நாளிருந்து ஏகதேசத்தில் பிரகஸ்பதி வந்து செய்த மாயை யினுல் மோகிக்கப்பட்டு அவனுக்குச் சீடர்களாய் அவன் வசப் பட்டு என்னை மதிக்காமல் மதோன்மத்தரா யிருந்தீர்களல்லவா? அப்பொழுதே நீங்கள் பிரஷ்டராய் விட்டீர்கள். அப்படி யிருந்தும் நான் கருணையினுல் கோபிக்காமல் வஞ்சனையின்றி இதமாக அனேக வார்த்தைகளைச் சொல்லியும், அவைகள் உங்கள் காதுக் குள் நுழையாமற் போய்விட்டதல்லவா? அப்பொழுது என்னை அவமானப்படுத்தியதனுல் இப்பொழுது வந்தபலனை அநுபவியுங் கள். என்னிடத்தில் உங்களுக்கு என்னவேலை? கபடவேஷதாரியா கிய குரு எந்த விடத்திலிருக்கின்ருனே அந்த விடத்துக்குப்போகும் வழியைத் தேடுங்கள். தேவர்களுடைய சுகத்தை விரும்பி யுங்களி டம் கபடமாய்வந்த மோசக்காரனுகிய அந்த குருதான் பிரஷ்டர் களாகிய உங்களுக்குச் சரியானவன். நானே அவனைப்போல் மோசக்காரனல்லன் என்றனர். (16–26)

இவ்வாறு அங்கீகாரமுடைமையு மில்லாமையுங் காட்டுஞ் சொற்களைச் சொல்லுகின்ற சுக்கிரரிடத்தில் அசுரர் ஒன்றுஞ்

சொல்லவறியாது மயங்கிநிற்கப், பிரகலாதன் அவருடைய பாதங் களில் வணங்கிக் கூறுகிறான் :—எங்கள் பெருமானாகிய ஓ சுக்கிரரே! இப்போது தேவரீருடைய சீடர்களாயும், விதேயர்களாயும், மன வருத்த முடையவர்களாயும் வந்திருக்கிற அசுரர்களாகிய எங்களை நீர் கைவிடுவது அழகல்ல. உங்களுக்கு நாங்கள் புத்திரர்க ளல்லவா ! தேவரீர் மந்திர நிமித்தமாய்க் கைலாயத்திற்குப் போயிருந்த காலத்தில் வேஷக்காரனும் துராசாரனுமான பிரகஸ் பதி தேவரீரிடத்தில் எங்களுக்குத் துவேஷம் வரும்படி வசனித்து வந்த வசன சாமர்த்தியத்தினால் நாங்கள் மிகவும் மோசம் போனோம். இது எங்கட்கு அபுத்தி பூர்வகமாய் நேரிட்ட தோஷ மாகலான் சாந்த மூர்த்தியாகிய தேவரீர் கோபங்கொள்ளக் கூடாது. ஓ சர்வஜ்ஞரே ! எங்கள் மனம் தேவரீரிடத்தில் ஒற்றுமைப்பட்டிருக்குமேயன்றி வேறு யாரிடத்தில் ஒற்றுமைப் படும் ? அதுவும் தேவரீரறிவீர். ஓ ஞானமூர்த்தியே ! இப்போது சொல்லியவை பொய்யோ மெய்யோ என்பதை உம்முடைய தபோ விசேஷத்தாலறிந்து கோபத்தை விட்டுவிடும். பெரியோர்களாகிய சாதுக்களெல்லாம் சிறிது காலம் கோபமுடையவராயிருப்பரேயன்றி நீண்டகாலம் அதனை யுடையவராயிரார். எங்ஙனமெனில், நீருக்கு இயல்பான குணம் குளிர்ச்சி. அது நெருப்பினுடைய கூட்டுறவால் சுடுகிறது. அக் கூட்டுறவு நீங்குமானால் முன்னிருந்த குளிர்ச்சி யையே யடைகிறது எப்படியோ அப்படிப்போலென்று சொல்லு கிறார்கள். கோபமானது சண்டாள வுருவமுடையதாகலான் அத னைப் பெரும்பாலும் பண்டிதர்கள் கொள்ளார். ஆகையால் நீர் கோபத்தைவிட்டுக் கிருபை செய்யவேண்டும். நீர் கோபத்தை விடாமலிருக்கிற பக்ஷத்தில் மனவருத்தத்தோடிருக்கிற எங்களைச் சீடர்களல்லரென்று விட்டுவிடும். உம்மால் விடப்பட்ட நாங்களும் பாதாள உலகத்தைப் போய்ச்சேருகிறோம். பின்னர் தேவரீர் யாருக்குக் குருவாயிருந்துலாவுவீரோ, அறியேனென்று கூறினன். (27–38)

பிரகலாதனுடைய வார்த்தையைக்கேட்டு சுக்கிரர் யோக திருஷ்டியினால் எதிர்காலச் செய்தியையறிந்து கோபந்தணிந்து நல்ல மனமுடையவராய்ச் சிரித்துக்கொண்டு, ஓ அசுரர்களே ! பயப்படவும் வேண்டாம் ; பாதாளம் போகவும் வேண்டாம். உங்களைத் தடையின்றிப் பிரயோஜனத்தைக் கொடுப்பதாகிய மந்திரங்களால் காக்கிறேன். எனது யோக்யதையின் தருமந் தெரிந்தவர்களே ! நீங்கள் காலவித்தியாசத்தால் தேவர்களால் தோல்வியடைந்து பலமில்லாதவராய் விடுவீர்களென்று பிரமதேவன் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதைச் சத்தியமாய் நம்புங்கள். முன் வரவேண்டிய சுகதுக்க ரூபமாகிய அநுபவம் வரவேண்டிய காலத்தில் வந்தே தீரும். காலத்தைத் தடைப் படுத்துவதற்கு எவ னும் சமர்த்தனாகமாட்டான். இதுவரையில் தேவர்களுடைய சிகை உங்கள் கைவசப்பட்டிருக்கப் பத்து யுகமளவும் நிகரின்றி அரசாண்டு சகல ஸம்பத்தோடுங்கூடி ராஜ்யத்தை யனுபவித்து

யந்தீர்கள். இப்பொழுது சிலகாலம் பாதாள லோகத்திற் போயிருங்கள். இனிவரும் சாவர்ணிக மனுவினுடைய காலத்தில் மறுபடியும் ராஜ்ய ஸம்பத்து உங்களுக்கே வரும். ஓ பிரகலாதனே! அப்பொழுது மறைந்திருக்கின்ற உன் பேரனாகிய பலி மூன்று லோகத்தையும் ஜயித்து ராஜ்யாதிபத்தியத்தை யடையப் போகி றான். ஜயசாலியாகவும் தேவர்களிற் சிறந்தவராயுமிருக்கின்ற விஷ்ணு மூர்த்தி வாமனராய் பலியிடம் மூவுலகங்களையும் தான மாகப் பெற்றுக்கொண்ட காலத்தில் பலியைப்பார்த்து அனுக்கிரக மொன்று செய்திருக்கின்றார். அஃது என்னையெனின், ஓ பலியே! இப்பொழுது தேவர்களுடைய வேண்டுகோளால் எவ்விதத்தினாலோ இம்மூன்று லோகத்தையும் நான் கிரகித்துவிட்டேன். நீயும் எனக்கு நல்ல எண்ணத்தோடு தானஞ்செய்துவிட்டனை. அந்தப் புண்ணியம் வீண் போகக்கூடாதாகையினால் இனி அடுத்து வரப் போகிற சாவர்ணிக மனுவினுடைய காலத்தில் நீயே இந்திரனாவா யென்று சொல்லியிருக்கிறார். ஓ பிரகலாதனே! இப்பொழுது அந்தப் பலியானவன் கண்ணுக்குத் தோன்றாமல் பயந்தவனைப் போல் மறைந்திருக்கிறான். அவனுடைய கால பலத்தைக் கேளுங்கள்: ஒரு சமயம் அவன் இந்திரனுக்குப் பயந்து கழுதை யுருவங்கொண்டு பாழடைந்த ஒரு சுவரின் பக்கலில் மறைந்து கொண்டிருந்தான். அச்சமயத்தில் அவனைத் தேடிக்கொண்டு இந்திரன் அவனிருப்பிடத்திற்காணாமல் அவ்விடத்தில் பார்த்துச் சர்வலோகாதிபத்தியஞ்செய்த பிரபுவாகிய நீ இந்தக் கழுதை உருவம் என்னகாரணத்தினா லெடுத்தனை? மகாவீரர்களாகிய அசுரர்கள் மத்தியி லிருக்கத்தக்க நீ இந்தக் குட்டிச்சுவரின் மத்தியி லிருக்கின்றனையே! பலிசக்கரவர்த்தியென் றழைக்கப்பட்டிருந்த நீ கர்த்தபமென் றழைக்கப்பட்டிருக்கின்றனையே! இவ்வாறெல்லாம் ஏனிருக்கவேண்டுமென்று கேட்கப் பலிகூறுகின்றான்: ஓ இந்திரா! இந்த வடிவமெடுத்ததனால் எனக்குத் துக்கமொன்றுமில்லை. உலகப் பிரசித்தியாயிருக்கின்ற விஷ்ணுமூர்த்தி என்ன காரணத்தினால் மீனானார்? ஆமையானார்? நீ பிரம்மஹத்திசெய்து தாமரை நாளத்தில் ஏன் மறைந்திருந்தனை? அதுபோல நானும் இந்தக் காலத்தில் இந்த உருவமுடையவனா யிருக்கின்றேன். ஓ இந்திரா! விஷ்ணுதானென்ன, நீதானென்ன, நான்தானென்ன, நாமெல்லாம் காலமென்கிற தெய்வத்துக்குச் சுவாதீனப்பட்டவர்களாயிருக் கிறோம். அது நம்மைக் கழுதையாக்கினாலும் ஆக்கலாம்! மீன் முதலிய நீர் வாழ்வனவாகிய ஜந்துக்களாக வாக்கினாலு மாக்க லாம். ஒளித்திருக்கச் செய்தாலுஞ்செய்யலாம், எவ்வண்ணஞ் செய்தாலுஞ் செய்யலாம். அது துக்கமாயிருந்தாலுமிருக்கலாம், சுகமாயிருந்தாலு மிருக்கலாம். அந்தக் காலம் எப்படி இச்சிக் கிறதோ அப்படி நடத்துகிறது. தேவாசுரராயும், மானிடராயுங் காணப்பட்ட இவ்வுலகம் அதன் வசப்பட்டிருக்கத் தக்கதென்று சொல்ல, இந்திரனும் சரியென்றொப்பி இருவரும் நல்ல ஞான விசேஷத்தை யடைந்தவர்களாய்த் தங்களிருப்பிடத்தை யடைந்தன

ரென்று சுக்கிரர் பிரகலாதனுக்குக் கூறினரென்று வியாசர் அரசனுக்குக் கூறியருளினர். (38–52)

ஓம் கமலாக்ஷ்யை நம:

## 15. தேவாசுர யுத்தமும் சமாதானமும்

சூதர் கூறுகின்றார் :—ஓ மகரிஷிகாள்! பிரகலாதன் முதலியோர் செய்த வகையை வியாச முனிவர் அரசனுக்கெடுத்துச் சொன்னதைச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

மகாத்மாவாகிய சுக்கிரர் வார்த்தையைப் பிரகலாதன் கேட்டு அவருடைய ஆலோசனைக்குச் சந்தோஷித்து, காலமானது பலமுள்ளதென்றே மனத்தில் நிச்சயித்து அசுரர்களை நோக்கி, ஓ அசுரர்களே! நாம் இப்போது யுத்தம் நடத்துவோமாயின் ஒருக்காலும் ஜயமுண்டாகமாட்டாது; ஆகையால் பாதாள லோகம் போகலாமென்றான். அப்பொழுது மதகர்வ முள்ளவர்களாயும் தேவர்களை ஜயிக்கவேண்டுமென்னு மெண்ண முடையவர்களாயுமுள்ள அந்த அசுரர்கள் கூறுகின்றனர் :—ஓ ஐயா! யுத்தஞ் செய்வதற்குக் காலம் வேண்டுமென்பதை நாங்களறியோம். முயற்சியில்லாதவர்கள் யாரோ அவர்கள்தான் காலம் வரவேண்டும் காலம் வரவேண்டுமென்று காலத்தைக் கழிப்பார்கள். அவர்களுக்குத்தான் முக்கியமாய்க் காலம் வேண்டும். முயற்சியுடையவர்கள் அதனை எதிர்பார்க்கவேண்டிய அவசியமில்லை. அன்றியும் காலத்தைப் பார்த்தவர் யார்? அது எங்கேயிருக்கிறது? அதனுடைய சொரூபமென்ன? யாவரால் ஏற்படுத்தப்பட்டது? ஓ தைத்ய சிரேஷ்டரே! புத்தியிற் சிறந்த நீர் இதை நம்பவேண்டாம். உம்மெதிரில் இப்போது நாங்களே சேனையோடு சென்று யுத்தஞ் செய்கிறோமென்றனர். அதுகேட்டுப் பிரகலாதன் அவர்களபிப்பிராயத்தை மறுக்க முடியாமல் சேனாதிபதியாய்ச் சென்று தேவர்களை யழைத்தான். தேவர்கள் யுத்த முயற்சியாய் வந்திருக்கிற அசுரர்களைப் பார்த்து, சகல சந்நாதத்தோடும் இந்திரன் பிரகலாதனை எதிர்த்துப், பார்ப்போர்க்குப் பயத்தையும் ஆச்சரியத்தையும் விளைவிக்கும்படியாய் நூறு வருஷம் யுத்தம் நடத்தினன். பிரகலாதன் முதலிய அசுரர்கள் இளைக்காமல் அவர்களோடு போராடி ஜயத்தை அடைந்தனர். அபஜயத்தையடைந்த இந்திரன் தன் குருவினிடத்திற் சென்று குறையிரக்க அவர் சகல துக்கங்களையும் நிவிர்த்தி செய்து போகமோக்ஷப் பிரதமாயிருக்கின்ற சகல ஐச்வர்யங்களையுமெளிதிற்றரவல்ல மகேச்வரியை நீ தியானிப்பையாயின் சகல சித்தியும் பெறுவையென்றனர். அவராணையின்படி இந்திரனும் தேவர்களும் துதிக்கத் தொடங்கினர் :—

"ஹே! மகாமாயா சொரூபிணீ! சூலத்தைத் தாங்கினவளே! சங்குசக்ரகதாபத்மங்களைத் தாங்கியிருக்கின்றவளே! ஹே அம்பிகே! சரணமடைந்தவர்களுக் கபயம் தருகின்றவளே! எங்களுக்கு

ஜயமுண்டாம் வண்ணம் செய்யவேண்டும். ஸர்வ புவனங்களுக்கும் அதிபதியா யிருக்கின்றவளே! ஸர்வ புத்திகளுக்கும் மாதுர் ஸ்தானமாயுள்ளவளே! தசதத்வ சொரூபமாயிருக்கின்றவளே! மகாபிந்து ஸ்வரூபிணியாயிருக்கின்றவளே! சச்சிதானந்த சொரூபிணியாயிருக்கின்றவளே! பிராணாக்னி ஹோமத்தில் தோன்றுகிற மகாவித்யே! தீபசிகைபோல் பிரகாசிக்கின்றவளே! பஞ்சகோசாந்தத்திலிருக்கிறவளே! பரமாத்ம சொரூபமாயிருக்கின்றவளே! ஆனந்த சொரூபமாயுள்ளவளே! ஸர்வ உபநிஷத்துக்களாலு மாராதிக்கப்பட்டவளே! என் விஷயத்தில் சுமுகமாய் அநுக்கிரகஞ் செய்யவேண்டும். ஹே அம்பா! அசுரர்களால் அபஜயமடைந்து பலஹீனர்களாயிருக்கும் எங்களைக் காக்கவேண்டும்! ஸர்வ துக்கங்களையும் போக்கவல்ல சதுர்ப்பாடுடைய ஓ தேவீ! நீ ஸகலபுவன ரக்ஷகியாயிருக்கின்றனை! சகல சங்கடத்தோடுங் கூடினவர்களா யிருக்கின்ற எவர்களுன்னைத் தியானிக்கின்றார்களோ அவர்கள் அந்தச் சங்கடங்களினின்றும் நீங்கிச் சகல சுகங்களையு மனுபவித்துச் சுகிகளாயுலாவுவர். ஸர்வ சங்க பரித்தியாகிகளாய் மோக்ஷத்தை யபேக்ஷிக்கின்றவர் ஸம்ஸாரமாகிய கடலை உன்னைத் தியானித்துக் கடக்கின்றார்கள். ஓ ஜகன்மாதாவே! ஸர்வவேத புராணங்களிலும் பிரசித்தியடைந்திருக்கிற நீ ஆன்மாக்களைக் காக்கின்ற காலத்தில் எட்டுணையும் துன்பம் வராமல் காக்கவல்லவளென்கிற பிரதாபமுடையவளா யிருக்கின்றனை! சங்காரகாலத்தில் மிருத்யு வுருவமாயிருந்து ஒன்றையும் விடாதழிக்கின்றனை. பிரம விஷ்ணு ருத்திரேந்திராதி சகல தேவர்களாலும் வேதபுருஷனாலும் அப்படியே அறிவிற் சிறந்தவர்களாலும் ஒப்பிடக் கூடாத உன்னுடைய பிரபாவமுற்றும் அறிவதற்குக் கூடாமையா யிருக்க அறிவிற்சிறியவர் எவ்வாறறியப்போகின்றனர்? உன்னிடத்தில் பக்தியுள்ளவர்கள் பிரபஞ்சாபிமானம் விட்டு உன்னுடைய தியானானந்தத்தில் மூழ்கித் தன்னியராவர். உன்னிடத்தில் பக்தியில்லாதவர்கள் பிரபஞ்சப் பற்றொழியாதவராய் ஜனன மரணமென்கிற அலைகளில் மொத்துண்டு துக்கஸாகரத்தில் மூழ்கிக் கரையேறாது பரிதபிப்பார்கள். இவ்வுலகின்கண் எவர்கள் சிவிகையூர்ந்து சாமரை யிருபாலுமசைக்க யாவராலும் நன்கு மதிக்கப்பட்டுச் சகல ஸம்பத்தோடும் வாழ்கின்றனரோ அவர்கள் முன் ஜன்மத்திற் சகல திரவியங்களாலு முன்னை யாராதித்தவர்களென்றும், எவர்கள் கஜாரூடர்களாயும் கந்தர்வ உருவமுடையவர்களாய் குணத்திற்சிறந்த அநேக ஸ்திரீகளா லுபசரிக்கப்பட்டவர்களாயும், சத்துருக்களால் வணங்கப்பட்டவர்களாயும், எவ்விடத்திலும் பெருமையுள்ளவர்களாயு மிருக்கின்றார்களோ அவர்கள் முன்ஜன்மத்தில் உன்னை விசேஷமாயாராதித்து வந்தவர்களென்றும் நிச்சயமாய் நினைக்கின்றேன்! என்று துதித்தனர். (1–21)

இவ்வாறு தோத்திரஞ்செய்ய விஶ்வேஶ்வரியாகிய தேவி அதிக

வேகமாய்ச் சங்குசக்கர கதாபத்மங்களைத் தாங்கியிருக்கின்ற சதுர்ப்புஜத்தோடும், சிவந்த ஆடையாபரணங்களாலும் மலர் மாலைகளாலும் அலங்கரிக்கப்பெற்ற திருமேனியோடும் திருமுக மலர்ந்தவளாய்ச் சிங்கவாகனத்தி லெழுந்தருளி வந்து தேவர்களை நோக்கிக் கம்பீரத்தோடும், ஓ தேவர்களே! பயப்படவேண்டாம்; இப்பொழுதே உங்களுக்குச் சுகத்தைச் செய்கிறேனென் றனுக் கிரகஞ் செய்து பலவான்களாகிய அசுரர்களிருக்குமிடத்தை யடைந்து பிரகலாதன் முதலிய அசுரர்கள் முன்னே நின்றனள். அத்தேவியை அசுரர்கள் பார்த்து இனிச்செய்வதென்னென்று பயந்து ஒருவரையொருவர் பார்த்துக் கூறுகின்றனர்: ஓ அசுரர்களே! இந்தத்தேவி மஹா பலசாலிகளாகிய சண்டமுண்டர் களையும், மதுகைடபர்களையுங் கொன்றவளல்லவா? இவளிப் பொழுது தேவர்களுடைய பக்கலில் வந்திருக்கிறபொழுது அவளை நாம் வெல்லுவோமா, அவள் நம்மை வெல்லுவளா? நமக்கு மரணகாலம் வந்துவிட்டது; ஸம்சயமில்லை யென்றனர். அப் பொழுது பிரகலாதன் அவர்களைப்பார்த்து, இனி நாம் யுத்தஞ் செய்யக்கூடாது; ஓடிப்போவதுங்கூடாது என்றான். நமுசி என்னும் அசுரன் ஓடிப்போவதில் முயற்சியாயிருக்கின்ற அசுரர்களைப்பார்த்து, ஓ வீரர்காள்! நீங்கள் ஓடுவீர்களானால் ஜகன்மாதாவாகிய தேவி மிகுந்த கோபங்கொண்டு பாணங்களை விட்டடிப்பாள். ஆகையாலொருவரும் போகவேண்டாம் என்று அவர்களைத்தடுத்து பிரகலாதனைப்பார்த்து, ஓ பிரகலாதனே! நாம் இப்போதே அந்தத் தேவியைத்துதித்து அவளிடம் விடை பெற்றுப் பாதாளம் போய்விடுவோம்; இதுதான் நமக்குச் சுகஞ் செய்யும்; முக்கியமாய் நமக்குத் துக்கம் வராமலிருக்க வேண்டியது தானே என்று சொல்லினன். அதுபோல் பிரகலாதன் அடியில் வருமாறு துதிக்கத் தொடங்கினன்: (22–31)

இவ்வுலகத்தைப் படைத்தளித் தழிக்கின்றவளும், இவ் வுலகுக்குத் தாயாயிருப்பவளும், சரணமடைந்தவர்க்கு ஆபத்தைப் போக்கும் புகலிடமாயிருப்பவளும், யாவரையும் மயக்கவல்ல மாயையை யடக்கியாளும் வல்லபமுள்ள மகா மாயா சொரூபிணியா யுள்ளவளுமான உன்னைத் தோத்திரஞ் செய்கின்றேன். ஹே அம்பா! எப்பொருளுக்கும் அதிஷ்டானமாயிருக்கின்ற உன்னிடத் தில் இந்தத் தாவரஜங்கமங்கள் ஸர்ப்பமாலைகள்போல் பிரகாசிக் கின்றன. அவைகளுள் உன்னால் இயங்குவன இயங்குகின்றன; இயங்காதன இயங்காதிருக்கின்றன. பிரமன் முதலிய மூவரும் உன்னுடைய ஏவலாளிகளா யுள்ளவர்கள். ஹே தேவி! ஹே மகாமாயே! நமஸ்காரம். நீ யாவருக்கும் தாயாயிருக்கின்றவள். நாங்களும் சுரர்களும் உன்னுடைய மக்களாயிருக்கின்றவர்கள். ஆகவே எங்களிருவரிடத்தும் உனக்கென்னபேதம்? நாங்கள் யோக்யரா யிருந்தாலும் அயோக்யரா யிருந்தாலும் நீ எங்களிரு வரிடத்தும் சமபாவனையா யிருத்தல் வேண்டுமல்லவா? ஓ தாயே! உனக்குப் புத்திரர்களாகிய தேவர்களிடத்திற் பிரியமிருந்தால்,

அதுபோல் எங்களிடத்தும் பிரியமிருக்க வேண்டுமல்லவா? புராணங்களிலும் உன்னை ஸர்வலோகத்துக்கும் தாயாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தேவர்களும் சுவப்பிரயோஜனத்தில் ஆசையுள்ளவர்களாக விருக்கிருர்கள். அவர்களைப் போலவே நாங்களுமிருக்கிறோம். பிரயோஜனத்தை யடையாமல் விடுவதற் கிடமில்லை. ஆகவே நீ பேதஞ்செய்ய நினைப்பது நியாயமாகவிருக் கிறதா? ஸம்பத்திலும் ஸ்திரீமுதலிய போகங்களிலும் இரவும் பக லும் நாங்களும் ஆசையுள்ளவர்களாக விருக்கிறோம். அப்படியே தேவர்களுமிருக்கிருர்கள். எங்களுக்குள் நீ பேதம் எவ்வாருகப் பிரித்தனை? இருவரும் காசிபருடைய பிள்ளைகளே. அங்ஙன மிருக்க, ஹே அம்பா! ஒருவரிடத்தில் விரோதமும் ஒருவரிடத்தில் பக்ஷமும் உனக்கெப்படி யுண்டாயிற்று? எல்லா உலகத்துக்கும் உற்பத்தி ஸ்தானமாகிய நீ சிலரிடத்தில் விருப்பும், சிலரிடத்தில் வெறுப்பும் வைப்பதற்கிடமேது? ஹே மாதா! எங்களிருவரிடத்தும் நீ சுமுகமா யிருக்கவேண்டும். நாங்களனைவரும் குணபேதத்தால் தோன்றினவர்களாயும் சரீரத்தோடு கூடினவர்களாயு முள்ளவர் களேயன்றி வேறல்ல.

ஆகவே, காமக்குரோத லோபமோகாதிக ளிருவரிடத்து மிருக் கின்றன. இவ்வாறிருக்கின்ற எங்களில் நீ யாரை அங்கீகாரம் பண்ணுகிறது, யாரை அங்கீகாரம் பண்ணுது விடுவது? ஹே தேவி! உனக்குத் தோன்றிய ஒரு வித உற்சாகத்தால் புத்திரர்களா கிய நாங்கள் யுத்தஞ் செய்யப் பார்க்க வேண்டுமென்னு மிச்சை யால் எங்களை யிப்பொழுது பேதப்படுத்தி விரோதப்படுத்திருய் போலும்! மங்களவதியாகிய ஹே தேவி! அவ்வாறு செய்யா விட்டால் சகோதரர்களாகிய எங்களுக்குள் விரோதம் ஏது? ஹே சாமுண்டே! நீ யுத்தத்தைப் பார்க்க விச்சை கொள்ளாதிருக்கும் பக்ஷத்தில் எங்களுக்குள் விரோதமுண்டாக மாட்டாது. ஸர்வ தரும முந் தெரிந்தவளே! நான் தருமங்களெல்லாம் அறியாதவனுயிருந்த போதிலும் சிறிது தருமந்தெரிந்துள்ளேன். நூறு அஸ்வமேதஞ் செய்தவனுகிய இந்திரனும் சிறிது தருமம் தெரிந்தவனென்றே நினைக்கின்றேன். தருமந்தெரிந்த எங்களுக்குள் விரோதம் வரு வதற்குப் பெரும்பாலு மிடமில்லை. ஹே அம்பிகே! நீயோ யாவ ரிடத்து மிருக்கின்றவள். உன்னைத் தவிர இருக்கின்றவர் எவரு மில்லை. ஆகவே நீ யாவருடைய வேண்டுகோளையும் நிறைவேற்றி வைக்க வேண்டியவள்; உன்னையன்றி எவர் உரிமை யுடையவ ராவர்? இதனை நீ யோசித்தல் வேண்டும். முன் தேவாசுரர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது அதிற்றோன்றிய அமிர்தத்தை யும் கௌஸ்துப மணியையும் அமர சுந்தரியாகிய லக்ஷ்மியையும் விஷ்ணுமூர்த்தி லோப குணத்தாற் கொள்ளை யடித்தனர். இந்திர னும் ஐராவதம் என்கிற யானையையும், உச்சைஸ்ரவ மென்கிற குதிரையையும், கற்பக விருக்ஷம் காமதேனு முதலியவற்றையும் கிரகித்தான். மிகுந்த கௌரவசாலியாகிய விஷ்ணு மூர்த்தி தான் கொள்ளையடித்த தல்லாமல் ஸகல ஸம்பத்தையும் தேவர்கள் பரமா

கச்செய்ய அவர்களும் சிறிதும் நீதியை யோசிக்காமல் அங்கீ கரித்தார்கள். அசுரர்களாகிய நாங்கள் ஒன்றுமடையாமற் பரதேசி களாய்த் திரும்பினோம்.

இப்பொழுது அவர்களுக்காகப் பரிந்துவந்த நீ, அப்பொழுது வந்தனையா? அந்த விஷ்ணுவினிடத்தில் என்ன தர்மானுஷ்டான மிருக்கக் கண்டனை! அவர் செய்த காரியம் ஒன்றாயினும் யோக்ய மாகுமா? அநீதியாய்க் கிடைத்த சொத்தை ஆண்டிருக்கிற தேவர் களைச் சாதுக்களென்று சொல்லலாமா? அந்தத் தேவர்களிடத்தி லுள்ள நீதியைப் பிரத்யக்ஷத்தையே பிரமாணமாகக் கொண்ட மீமாஞ்சகரிடத்தாவது, யுக்தி நயத்தையே கொண்ட தார்க்கிகர்க ளிடத்திலாவது, விதிவாதஞ் சொல்லுகின்ற வைதிகர்களிடத்திலா வது சொல்லலாம். அவர்கள் செய்தியை யார்தான் ஒத்துக்கொள் வார்கள்? முன் சொல்லிய மீமாஞ்சகர் முதலியோர் இவ்வுலகத்தை நடத்த ஒரு கர்த்தா வுண்டென்று சொல்லுகின்றார்கள். அது அறி யாமையாய்ச் சொல்லுகின்ற சொல்லென்று நினைக்கின்றேன். ஏனென்றால், இந்த அகண்டமாகிய ஜகத்துக்குக் கர்த்தா ஒருவ னிருப்பானேயானால் ஒரு காரியத்தை இரண்டுபேர் சமமாகச் செய்திருக்கும்போது அந்தக் கர்த்தாவுக்கு ஒருவரிடத்தில் மாத்திரம் விரோதம் ஏன் வரவேண்டும்? வேதமும் அறிவுடையதா யொன்றை யுஞ் சொல்லவில்லை. அவ் வேதத்தைத் தழுவிய சாஸ்திரங்களும் அந்த வேத சாஸ்திரங்களைத் தெரிந்தவர்களும் ஒரு புத்தியாய்ச் சொல்லவில்லை. ஆகையால், உலக தருமத்தைப் பார்க்குமிடத்துத் தன் தன் சுகத்துக் கேற்றவாறு அப்பொழு தப்பொழுது செய்து கொண்டின்பத்தை யனுபவிப்பதேயன்றி வேறொன்றையும் சிந்திப்ப தாகக் காணப்படவில்லை. எவன் ஆசையற்றிருக்கிறவன்? ஆசை யற்றவன் உண்டானதுமில்லை; உண்டாகப் போகிறதுமில்லை. சந் திரன் எவ்வளவோ தெரிந்தவனாயிருந்தும் குரு பத்தினியைச் சேர்ந் தான். அந்த குருவோ பலாத்காரமாய்த் தன் சகோதரனுடைய பத்தினியைக் கர்ப்பிணியா யிருக்குங் காலத்தில் புணரக் கர்ப்பத்தி லுள்ள சிசு இவர் சேராதிருக்கும்படி விக்னஞ்செய்ய அச் சிசு வைக் குருடாய்ப்போகும்படிச் சபித்தார். கௌதமர் பத்தினியை ஸர்வ தருமங்களுந் தெரிந்த இந்திரன் அபகரித்தான். விஷ்ணு நிரபராதியாகிய ராகுவைச் சக்கரத்தினால் சேதித்தார். ஹே அம்பிகே! ஸத்திய விரதனையும் யாகசீலனையும் தானவ சிரேஷ்டனை யும் சர்வ தருமங்களுந் தெரிந்தவனையும் சாந்தகுணமுள்ளவனையும் எவ்விடத்திலு மதிப்புள்ளவனையும் மகா சூரனையும் ஒரு குற்றமுஞ் செய்யாதிருந்த என் பேரனாகிய பலியினிடத்தில் கபடமாய் வாமன ராய் வந்து தருமந்தெரிந்த சாதுக்கள் மத்தியில் ஸர்வ லோகத்தை யும் மோசமாகக் கிரகித்துக் கொண்டார். இவர்களெல்லாம் இவ்வாறு அதர்மமாக நடந்திருக்கப் பண்டிதர்கள் தேவர்களைத் தருமத்தி லிருக்கின்றவர்களென்று சொல்லுகின்றனர். இவர்கள் தருமத்தி லிருப்பது எப்பொழுதென்று என்னைக் கேட்டால் ஜயமுண்டானால் அப்பொழுது தருமமாக விருப்பதுமன்றி தரும வார்த்தைகளைச்

சுகமாகவும் சாமர்த்தியமாகவுஞ் சொல்லுவர். அபஜயமுண்டானால் அதர்மத்திற் பிரவேசித்து அதர்ம வார்த்தையை நன்றாய்ச் சொல்லுவர். இது பொய்யோ, மெய்யோ நீயே யோசிக்கவேண்டியது. ஓ ஜகன்மாதாவே! உன்னிஷ்டப்படி செய். அசுரர்களாகிய நாங்களனைவரும் சரணாகதி யடைந்தோம். ரக்ஷித்தாலும் ரக்ஷி, பக்ஷித்தாலும் பக்ஷி என்று கூறினன். (32–63)

பிரகலாதன் துதித்ததைக்கேட்ட ஸ்ரீ தேவி, நீங்களனைவரும் பாதாளம்போய் அவ்விடத்தில் இஷ்டப்படி வாசம் செய்யுங்கள். ஓ அசுரர்களே! கோபத்தைவிடுங்கள். ஸம்பத்துக்கும் ஆபத்துக்கும் காலங் காரணமாயுள்ளது. ஆகையால் நீங்கள் க்ஷேமத்தையடைவதற்குக் காலத்தை யெதிர்பார்த்திருங்கள். சாந்த சித்தர்களுக்கெதுவந்தாலும் எவ்விடத்தி லிருந்தாலும் சுகமே. லோபகுணமுள்ளவர்களுக்கு மூன்று புவனத்தை யாளவந்தாலும் சுகமேது? பேராசை பிடித்தவர்களுக்கு எவ்வளவு பிரயோஜனஞ் செய்தாலுந் திருப்தியேது, சுகமேது? ஆகையால், நான் சொல்லிய ஆக்ஞையை அங்கீகரித்து இப்பூமியைவிட்டுப் பாதாளம் போய்ச் சேருங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினள். (64–68)

இவ்வாறு தேவி அநுக்கிரகஞ் செய்த வார்த்தையின் திருக்குறிப்பை அசுரர்களுணர்ந்து ஆனந்த சித்தர்களாய் அவ்வாறே செய்கின்றோமென்று சொல்லி நமஸ்கரித்துக் கிருபா நோக்கம் பெற்றுப் பாதாளம் போய்ச் சேர்ந்தனர். மகா தேவியும் மறைந்தனள். அமரர்களும் வயிரத்தைவிட்டுத் தங்களிடம் போயினர். ஓ அரசனே! இந்த உபாக்கியானத்தை யார் கேட்கின்றார்களோ, யார் பாராயணஞ் செய்கின்றார்களோ அவர்கள் ஸர்வ துக்கங்களினின்றும் நீங்கி மேலாகிய பலத்தை யடைவார்களென்று வியாசர் ஜனமேஜயனுக் கருளினாரென்று சூத பகவான் முனிவர்கட்குக் கூறினர். (69–71½)

ஓம் கல்மஷக்ந்யை நம:

## 16. விஷ்ணுவின் அவதாரங்கள்

சூதர் கூறுகின்றார் :—ஓ மகரிஷிகாள்! ஜனமேஜயன் பின் வியாச முனிவரை வினவியதைச் சொல்லுகிறேன், கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர்.

ஜனமேஜயன் வியாச பகவானைப் பணிந்து, வினவுகின்றார் : ஓ ஐயா! முனிஸ்ரேஷ்டரே! அற்புதமான கிருத்தியங்களைச் செய்ய வல்ல விஷ்ணு மூர்த்திக்குப் பிருகு சாபத்தினால் வரவேண்டிய அவதாரங்கள் எந்த மன்வந்தரத்திலுண்டாயின? அதனையும், ஓ தர்மஜ்ஞரே! சகல பாவங்களையும் போக்கிச் சகல சுகங்களையுங் கொடுக்கும் அவ் விஷ்ணுவினுடைய பிரசித்தியான அவதார சரித்திரங்கள் எத்தன்மையனவோ அவற்றை

யும், விரிவாய்ச் சொல்லும் வண்ணம் பிரார்த்திக்கின்றே னென்றனன். வியாசர் கூறுகின்றார் : ஓ ஜனமேஜயனே ! விஷ்ணு வுக்கு எந்தெந்த மன்வந்தரத்தில் எந்தெந்த யுகத்தில் அவதா ரங்க ளுண்டாயிற்றோ அவைகளேயும் சுருக்கமாய்ச் சொல்லு கிறேன், கேட்பாயாக. சாக்ஷுஷ மன்வந்தரத்தில் முதல் சதுர்யுக கிருதயுகத்தில் தருமரென்பவ ரவதரித்திருந்தார். அவருக்கு விஷ்ணுமூர்த்தி நரநாராயணர்களாகப் பிறந்து பிரசித்தி பெற்றிருந்தனர். பிறகு வைவஸ்வதமன்வந்தரத்தில் முதல் சதுர் யுக கிருதயுகத்தில் அத்திரி முனிவருடைய பத்தினியாகிய அநசூயை தனக்குப் புத்திரர்களாய்த் திரிமூர்த்திகளும் வரப் பிரார்த் திக்க, நாராயணர் புத்திரராகப் பிறந்து தத்தாத்திரேயராகவும், நான்காவது சதுர்யுக கிருதயுகத்தில் இரணியகசிபனேச் சங்கரிக்கு நிமித்தம் ஆச்சரியகரமான நரசிங்கராகவும் தோன் றினர். (1–10)

அதற்கு மறுயுகத்தில் காசிபருக்கு வாமனராகப் பிறந்து பலிச்சக்ரவர்த்தி யாகம் செய்யும் சமயத்திற் சென்று ராஜ்யத்தை வஞ்சனேயா லபகரித்து அவனேப் பாதாளத்திலமுத்தினர். பத் தொன்பதாவது சதுர்யுகத்தில் வரும் திரேதாயுகத்தில் ஜமதக்கினி மகரிஷிக்குப் பரசுராமராகப் பிறந்து க்ஷத்திரியர்களே எல்லாம் கொன்று சகல ராஜ்யத்தையும் காசிபருக்குத் தானஞ் செய்தனர். அப்பரசுராமாவதாரம் மிகவும் பரிசுத்தமானதென்று சொல்லுகின் றனர். முன்சொன்ன திரேதாயுகத்தில் ரகுவம்சத்தில் தசரதனுக்கு ராமனுகப் பிறந்தனர். இருபத்தெட்டாவது சதுர்யுக துவாபரத்தில் நர நாராயணர்கள் கிருஷ்ணர்ச்சுனர்களாய்ப் பூபாரத்தை யொழிக்கு நிமித்தம் தோன்றிக் குருக்ஷேத்திரத்தில் பயங்கரமாகிய யுத்தத் தைச் செய்தார்கள். இவ்வண்ணம் யுகந்தோறும் விஷ்ணுமூர்த்தி அந்தந்த பிரகிருதிக் கேற்பப் பிறந்து அவ்வப் பிறவிக்குரிய கிருத் தியங்களேச் செய்திருக்கின்றனர். இவரைப்போலவே இவ்வுலகத்தி லுள்ள யாவரும் அவரவர் செய்யவேண்டிய தொழில்களேச் செய்து வருகின்றனர். ஆகவே பிரகிருதி வசப்பட்ட விஷ்ணுமூர்த்தி முத லாகச் சொல்லப்பட்ட யாவரும் அந்தப் பிரகிருதியினுல் பிரமிக்கப் பட்டு வேண்டுதல் வேண்டாமையாயுள்ள விஷய கோடிகளாற் சுக துக்கங்களே யநுபவித்து வருகின்றனர். (11–21)

எல்லா உலகங்களுக்கும் ஆதியாயும், எங்கும் நிறைந்தவ ராயும், மனத்துக்கெட்டாதவராயும், நாசரகிதராயும், ஆதாரமில்லாத வராயும், ரூபமில்லாதவராயும், ஆசையில்லாதவராயும், பராத்பர ராயுமுள்ள பரமாத்மா பிரகிருதியினுடைய உபாதி (முக்குண) பேதத்தால் மூன்றுவிதமாகப் பிரகாசிக்கின்ற மும்மைத் தேவராய் விளங்குகின்றார். சர்வாபீஷ்டப்பிரதையாகிற அத்தேவியும் அந்தப் பிரகிருதியானது சிருஷ்டிகால விசேஷத்தில் பின்ன பின்னமாய் எப்படியெப்படி பிரகாசிக்கின்றதோ அப்படியப்படியே ஜகத்தை நடத்துகின்றாள். அந்த மூன்று ரூபமாயுள்ள ஜகன்மோகினியாகிய தேவி பிரளய காலத்தில் சங்கரிக்கின்றாள். பிரம விஷ்ணு ருத்திர

**ரும் அந்த சங்கார காரணியோடுங் கூடினவர்களாய் ஜகத்தை முத் தொழிற்படுத்தி வருகின்றனர். அந்தச் சக்தியே பூர்வத்தில் ராம மூர்த்தியைச் சிருஷ்டித்துத் தேவர்களைக் காக்கும்பொருட்டு ஓரிடத் தில் அசுரர்களைத் தாபித்தனள். இவ்வாறு ஜகத்தில் சுகதுக்கங்க ளோடு கூடினவர்களாகிய பிராணிகள் விதியினாலும் தந்திரத்தி னாலும் கட்டுப் பட்டவர்களா யுண்டாகின்றனர் என்றனர். (22–27½)**

ஓம் கருணாம்ருதஸாகராயை நம:

## 17. சில பிரச்னைகள்

சூதர் கூறுகின்றார் :—ஓ மஹரிஷிகாள் ! இனி கிருஷ்ணருடைய அவதாரம் முதலியவைகளைப் பற்றி ஜனமேஜயன் வியாசரை வினவிய வரலாற்றைக் கூறுகிறேன் கேளுங்கள்.

ஜனமேஜயன், இவ்வாறு கூறிய வியாசரை நோக்கிப் பதரிகாச்சிரமத்தில் ராகத்துவேஷ ரகிதராகிய நரநாராயணருள் சாந்தமூர்த்தியாகிய நாராயணரை அப்ஸர ஸ்திரீகள் காம மிகுதி யினால் விரும்பினார்களென்றும், அக்குறிப்பை யறிந்த அவர் அவர்களைச் சபிக்க எத்தனித்தாரென்றும், அதனையறிந்த நரன் சபிக்கவொட்டாது தடுத்தாரென்றும், அப்போது நாராயணர் என் செய்வதென்று வியாகுல மடைந்தாரென்றுங் கூறினீரல்லவா ? பின்னர் அந்த நாராயணர் என்ன செய்தார் ? இந்திரன் வேண்டு கோளால் இவரை யபேக்ஷித்த அந்த அப்ஸர ஸ்திரீகளுக்கு என்ன செய்தார் ? இந்தச் சரித்திர விவரங்களைக் கேட்க ஆவலுடையவனா யிருக்கிறேனாகையால் தேவரீர் அவைகளை அனுக் கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, வியாசர் கூறுகின்றார்: ஓ தருமந்தெரிந்த ஜனமேஜயனே ! மஹாத்மாவாகிய நாராயண ருடைய சரித்திரத்தை விரிவாகச் சொல்லுகிறேன், கேட்பாயாக. சபிக்கவேண்டு மென்கிற எண்ணமுடையவராயும் நரனால் தடுக்கப் பட்டவராயுமிருந்த நாராயணர் சமாதானமடைந்து கோபத்தை யொழித்துப் புன்சிரிப் புடையவராய் அந்த அப்ஸரஸ்திரீகளைப் பார்த்துக் கூறுகின்றார் : ஓ அப்ஸர ஸ்திரீகளே ! இந்த ஜன்மத்தில் நாங்களிருவரும் ஸ்திரீ சம்பந்தஞ் செய்வதில்லையென்று பிரதிக்ஞை செய்திருக்கிறோம். தருமந் தெரிந்தவர் விரதபங்கம் செய்யா ரல்லவா ? ஆகையால் என் விஷயத்தில் தயைசெய்து சுவர்க்கம் போய்விடுங்கள். காமத்தில் மனஞ்செல்ல வொட்டாது தடுத்தி ருக்கிற வெனக்குப் புணர்ச்சியென்கிற தொழிலில் எவ்வாறு முயற்சி யுண்டாகும் ? புணர்ச்சிக்கு ஆதாரமாகிய காமமில்லாத நான் உங்களை எப்படிக் கூடுவேன் ? காரணமின்றிக் காரியம் நிகழா தென்று பெரியோர்கள் சாஸ்திரங்களில் நிச்சயித்திருக்கின்றன ரல்லவா ? ஸ்திரீ சங்கமமாகிய காரியம் காமமென்கிற காரணமில்லா மலாகுமா ? ஓ ஸ்திரீகளே ! இனி நான் பூமியில் எப்போது பிறக்கப் போகின்றேனோ, அப்போது உங்களுடைய வஞ்சனையற்ற பிரீதிக் குப் பாத்திரனாய் உங்கள் கணவனாகிறேன்; எனக்கப்பொழுது தரு

மங் கெடாது. உங்களை யனுபவிக்கும் பாக்கியத்துக் குரியவனுகவு மிருப்பேன்; ஆகையால் நீங்கள் என்னிடம் இரக்கமுடையவர் களாய் இப்பொழுது என் விரதத்துக்குப் பங்கந்தேடாமல் காக்க வேண்டும். எனக்கு மறுஜன்மம் இருபத்தெட்டாவது சதுர்யுகத் தில் வரும் துவாபரத்திலுண்டாகப் போகிறது. அப்போது நீங் களும் தனித்தனியே அரசர்களுக்குப் புத்திரிகளாய்ப் பிறந்து எனக்கு மனைவிமாராக வருவீர்களென்று மிகவு மினிய சொல்லோடு சமாதானஞ்செய் தனுப்பிவிட்டனர். அந்த ஸ்திரீகளும் மனதில் வருத்த மில்லாதவர்களாய்த் தங்களிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

நாராயணரிடத்தினின்றும் விடைபெற்றுப்போன அந்த ஸ்திரீ கள் சொர்க்கலோகம் போய்ச்சேர்ந்து தங்களரசனுகிய இந்திரனி டத்தில் நடந்த செய்திகள் யாவுந் தெரிவித்தனர். இந்திரன் அந்த நரநாராயணர்களுடைய மகிமையைத் தன்னுடைய அப்ஸரஸ்திரீ களாற் கேள்விப்பட்டு அதிசயமடைந்து அவர்களைப் பார்த்து, நான் அழகிற் சிறந்த அப்ஸரஸ்திரீகளாகிய உங்களை யனுப்ப, அவர்கள் உங்களைக் கண்டு மயங்காமலிருந்தார்களல்லவா? ஆஹா! அவர்களுடைய தைரியமே தைரியம். அவர்களுடைய தபோபலமே தபோபலம் என்று சந்தோஷமடைந்தனன். அங்கு நாராயணரும் ஸ்திரீகளை யனுப்பிய பின்னர் தவத்திலிருந்தனர். (1–21)

ஓ அரசனே! இதுவரையில் மகாமுனிவர்களாகிய நர நாராயணர்களுடைய அற்புதமாகிய சரித்திரங்களை யெல்லா மெடுத்துச் சொன்னேன். இனிப் பிருகுவினுடைய சாபவசத்தால் நரன் அர்ச்சுனனுகவும், நாராயணர் கிருஷ்ணராகவும், மகா வீரர் களாய் அவதரித்த அவ்வரலாற்றைச் சொல்லுகிறேனென்று வியாசர் கூறவும், ஜனமேஜயன் வினவுகின்றுன்: ஓ முனிபுங்க வரே! எனக்கிப்போது சில சந்தேகங்கள் தோன்றியிருக்கின்றன. ஆகையால் நீர் சொல்லத்தொடங்கிய கிருஷ்ணுவதாரத்தின் வர லாற்றை விரிவாய்ச் சொல்லவேண்டும். என்னையெனில், தேவகி தேவியும், வசுதேவரும் மகாபலவான்களாகிய பலராமரையும் கிருஷ்ணரையும் பெறும்படியான பாக்கியம் பெற்றும் கம்சனென் கிறவனுல் காலில் விலங்கிடப்பட்டு அநேக வருஷகாலம் கஷ்டத்தை யனுபவித்தார்களல்லவா? அவ்விருவரும் விஷ்ணுமூர்த்தியி னுடைய அவதாரங்களில் எண்ணப்பட்டவர்களல்லவா? கிருஷ்ணர் மதுரைமாநகரத்திற் பிறந்து உடனே கோகுலத்தவர்க்கிடமாகிய ரேபல்லேயென்கிற விடத்திற்போய் ஏன் வளர்ந்தனர்? இவருக்கு முன் பிறந்த அறுவரும் கம்சனுல் ஏன் இறந்துபோயினர்? தாம் பிறந்த மதுரைக் கதிபதியாயிருந்த கம்சனைக்கொன்ற பின்னராவது தாம் மதுரையில் வாசஞ் செய்யாமல் துவாரகையில் ஏன் வாசஞ் செய்தனர்? அந்த மதுரையோ தன் தகப்பன் முதலிய மூதாதை களால் பரிபாலிக்கப்பட்டு வந்ததாயும், ஸப்தபுரிகளில் ஒன்றுன தாயும், சகல செல்வங்களும் நிறைந்ததாயுமுள்ளது. அந்த அருமையான நகரத்தை விட்டுச் சாமான்யமான துவாரகையில் ஏன் போய்ச் சேர்ந்தனர்? (22–28)

இதுவன்றி அந்தக் கிருஷ்ணருடைய குலமானது பிராமணசாபத்தினால் ஏன் நாசத்தையடைந்தது? பாவிகளுடைய மிகுதியினால் பூதேவி தாங்கப்பெறாது பாரத்தை யடைந்து துக்கிக்க அதை நிவர்த்தி செய்யும் பொருட்டுக் கிருஷ்ண மூர்த்தியா யவதரித்துச் சகல சாமர்த்தியமும் படைத்துப் பின்னர் அருச்சுனனை நிமித்தமாக வைத்துக்கொண்டு அந்தப் பூபாரத்தைப்போக்கி உலகிலுள்ளார் சரீரத்தைப் பூமியில் விட்டு மேலுலகம் போவதுபோல் சரீரத்தை இவ்வுலகில் விட்டுச் சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தனரல்லவா? அவர் போன பின்னர் கள்வரால் அவருடைய பத்தினிமார்கள் அடிபட்டு உதைபட்டு மான பங்கத்தை யடைந்தார்களல்லவா! அப்படிச் செய்யவல்ல கள்வர்களைப் பூபார நிவர்த்தி செய்கிறேனென்று பாபிகளனைவரையு மொழித்தபோது ஏன் ஒழிக்கவில்லை? பீஷ்மர், துரோணர், கர்ணன், பாஹ்லிகன், விராடன், விகர்ணன், திருஷ்டத்யும்னன், சோமதத்தன் என்பவரெல்லாம் தவத்திலும் தானத்திலும் நீதியிலும் தருமத்திலும் சிறந்து பூமிக்குப் பூஷணமாக விருந்தனர். இவர்களையெல்லாம் இவர் பூமிக்குப் பாரமாகவெண்ணித் தொலைத்தனரே! இவர்கள்தானு பூமிக்குப் பாரமாயிருந்த பாவிகள்? இவருடைய மனைவிமார்களைப் புரட்டிப் புரட்டி யடித்தவர்களாகிய கள்வர்தானு பூதேவியினுற்றாங்கப்பட்ட புண்ணிய சீலர்கள்? அதனுற்றான் அவர்களைக் கொல்லாமல் விட்டனரோ? கிருஷ்ணருடைய பத்தினிமார்களெல்லாம் பதிவிரதைகளா யிருக்க அவர்கள் அந்தக் கள்வரால் ஏன் துன்பத்தை யடைந்தார்கள்? இவர் பிதாவாகிய வசுதேவர் புத்திரசோகத்தால் வருத்தமடைந்தவராய் துர்மரணமாக ஏன் பிராணனை விட்டனர்? இவருடைய உடன் பிறந்தாளாகிய சுபத்திரையினுடைய குமாரனாகிய அபிமன்யு யுத்தத்திற்போய் ஏன் மாண்டான்? இந்தக் கிருஷ்ணர் எல்லாவிதத்திலும் சமர்த்தருந் தெய்வத்தன்மை யுடையவருமென்று சொன்னால் தெய்வ சங்கல்பமாய் நடப்பதாகிய செயலை மாற்றுவதற்கு ஏன் முடியாமற் போயிற்று? உக்கிரசேனனுக்கு இவரேன் அடிமையாளாயினர்? இவர் குடிபுகுந்த யாதவர்களுக்குச் சாபமும், பிரபாஸ தீர்த்தக் கரையில் மரணமும், அந்த யாதவ பத்னிகளுக்கெல்லாந் திருடரால் உதையும் ஏன் வந்தன? இவரிடத்திற் பிரீதியுள்ளவர்களாய் இவர் சொல்வழி கோணுது நடந்தவர்களாயிருந்த பாண்டவர்கள் உலகத்தில் ஒருவரும் அநுபவியாததும், மாற்றக்கூடாததுமான பெருந் துன்பங்களை ஏன் அநுபவித்தனர்? லக்ஷ்மியினுடைய அம்சமாயும் அக்னியிற் பிறந்தவளாயும் பதிவிரதையாயுமிருந்த திரௌபதி எந்தப் பதிவிரதையும் அடையாத துக்கத்தை ஏனடைந்தாள்? அந்தோ! அவளடைந்த துக்கத்தை என்னவென்று சொல்லுவேன்! பெருங் கூட்டமாகிய சபை நடுவில் வரலாயினள்; வந்த சமயமோ ரஜஸ்வலையாய் வரக்கூடாத சமயம். வரக்கூடாத சமயத்தில் வந்த போதிலும் மரியாதையுடன் வந்தனளோ வென்றால், துஷ்டனாகிய துச்சாசனன் கூந்தலைப் பிடித்திழுத்துவர வந்தனள். இது நிற்க,

வனவாசத்தில் இந்தப் பதிவிரதையைச் சிந்துபதியானவன் பலாத் காரமாய்க் கையைப் பிடித்திழுத்து தேரிலேற்றிக் கொண்டனன். இப்படியே கீசகனும் துன்பமுற்றிருந்தனன். இவ்வாறான துன்பங்களை ஏனனுபவிக்க வேண்டும்? இவர்களுடைய பிள்ளைக ளாவது க்ஷேமமாயிருந்தாரோ வென்றால் அந்தப் பிள்ளைகளும் பாசறையி லுறங்கிக்கொண்டிருக்கும் பொழுது அஸ்வத்தாமனால் கொல்லப்பட்டனர்.

இன்னமும், இந்தக் கிருஷ்ணர் முன் ஜன்மத்தில் நாராயண ரிஷியாகவிருந்த காலத்தில் எல்லா வுயிர்களிடத்தும் சமமான காருண்ணிய முடையவராயிருந்து இந்தஜன்மத்தில் அக்குணங்க ளெல்லாம் மாறுபடுவதற் கென்ன காரணம்? உலகில் யாவரும் சுகமும் துக்கமும் மாறிமாறி யனுபவிப்பது இயற்கை. ஈஸ்வர னென்று பிரசித்திபெற்ற விஷ்ணுமூர்த்தி ஜீவர்களைப்போலச் சுக துக்கங்களை யனுபவிக்க எப்படி வந்தது?

ருக்மிணியை வீரதர்மத்தால் தாம் கொள்ளுகிற காலத்தில் ஜராசந்தனுடைய பயத்தினால் ஒருவருக்குந் தெரியாமல் துவார கைக்குத் திருடனைப்போற் போயினர். இந்தக் கிருஷ்ணர் செய்த விவகாரங்களெல்லாம் உலக தருமத்துக்கு விரோதமாகவே யிருக் கின்றன. இவருக்கு ஈஸ்வரசக்தி யுண்டென்று பிரசித்தியாய்ச் சொல்லப்பட் டிருக்கிறது. அஃது உண்மையானால் அசுரர்களை அவர்களுடைய ஆயுள் முடிவில் அவர்களை விளையாட்டாகக் கொல்ல முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டுச் சங்கரித்திருக்கின்றனர். (29–49)

ஓ பிராமணோத்தமரே! இவைகட்கெல்லாங் காரணமெதுவோ அதைத் தயைசெய்து சொல்வதோடு அவரிடத்திலெனக்குண்டாகிய சந்தேகங்களெல்லாம் நிவிர்த்தியாம் வண்ணம் அவருடைய சரித் திரங்களை விரிவாய்ச் சொல்லவேண்டும். எல்லாந் தெரிந்தவராகிய ஓ முனிவரே! எனக்குச் சந்தேகங்கள் பலவா யிருந்தபோதிலும் அவற்றுள் ஒன்று மாத்திரம் என் மனத்தைவிட்டு நீங்கவே யில்லை. அதை மாத்திரம் அவசியம் நிவிர்த்திசெய்து என்னை சந்தேக மற்ற வனாய்ச் செய்யவேண்டும். என்னையெனில், திரௌபதி ஐவரைக் கணவனாகக் கொண்ட விஷயத்தில் உலகில் குறைவாக ஏன் சொல்லுகிறதில்லை? சொல்லாத காரணமென்னை? பண்டிதர்கள் ஸத்புருஷர்களுடைய கதாசாரத்தைத்தான் பிரமாணமாகச் சொல்லுகிறார்கள். அங்ஙனமிருக்க ஸர்வ சாத்திரங்களாலும் பிரசித்திபெற்ற பாண்டவர்கள் மிருக தர்மத்தைப்போல் ஒருத்தியை எவ்வாறனுபவித்தார்கள்? இவ்வுலகில் வசுவினுடைய அம்சமாகிய பீஷ்மராதியராகிய கோளகர்களையுண்டுபண்ணி வம்சோத்தாரணஞ் செய்யவேண்டிய காரணமென்னை? வியாசரே! பெரியோர்களால் நியமிக்கப்பட்ட தர்மம் ஒன்றேனும் நன்றாயில்லை. அசங்கதமில்லாத வேறு எந்த விதத்தினாலாவது புத்திரோற்பத்தியைச் செய்து கொள்ளக்கூடாதா, என்று வியாச பகவானை அரசர் வினவின ரென்று சூதபகவான் மகரிஷிகளுக்குக் கூறினர். (50–55)

ஓம் திரிபுரசுந்தர்யை நம:

# 18. அவதார காரணம்

சூதர், வியாசர் கூறியவாறு கூறுகின்றார் :—ஓ அரசனே! கிருஷ்ணனுடைய சரித்திரத்தையும் தேவியினுடைய அற்புத விலாசத்தையுஞ் சொல்லுகிறேன், கேட்பாயாக. பூமிதேவியானவள் அதி பாரத்தினால் சுமக்கலாற்றாது தீன சுபாவத்தையடைந்து புலம்பிப் பசுவுருக்கொண்டு மிக பயத்தோடு சுவர்க்கலோகம் போய் இந்திரன் முன்னே நின்றனள். இந்திரன் அவளைப் பார்த்து, ஓ பூதேவியே! உனக்கு என்ன பயம்? யார் உன்னைத் துன்பப் படுத்துகின்றனர் என்று கேட்கப் பூதேவி கூறுகின்றாள் : ஓ தேவ ராஜனே! என் துயரத்தைச் சொல்லுகிறேன், கேட்டருளுக. மகா பாபிகளான ஜராசந்தன், சிசுபாலன், காசி ராஜன், கம்சன், நரகாசுரன், சாளுவ தேசத்தரசன், கேசிராஜன், தேனுகன், வத்ஸகன் என்று சொல்லப்பட்ட இவர்களெல்லாம் ஸர்வ தர்ம சூன்யர்களாயும் ஒருவருக்கொருவர் விரோதமுடையவர்களாயும் பாப நடத்தையுள்ளவர்களாயும் மதோன்மத்தர்களாயும் யமஸ்வரூபிகளாயும் உலகில் அரசர்களாயிருக்கின்றனராகையால் நான் பாரமுடையவளாய் வருந்துகின்றேன். ஓ பிரபுவே! எங்கே போவேன்? என்ன செய்வேன்? முன் என்னை இரணியாக்ஷன் எந்தக் காரணத்தினாலோ அபகரித்துக்கொண்டு மகா சமுத்திரத்தில் மூழ்கினான். அப்பொழுது விஷ்ணுமூர்த்தி வராக ரூபமெடுத்து அவ்வசுரனைக்கொன்று என்னை மீட்டு இவ்வுலகில் நிலையாக வாழ்ந்துலாவச் செய்தனர். அவரப்படிச் செய்யாராயின் நான் பாதாள லோகத்தில் சுகமாய்ப் படுத்துறங்குவேன். இப்பொழுது துராத்மாக்களுடைய பாரத்தை வகிப்பதற்குச் சக்தியில்லாதவளாய் நான் படும்பாட்டை என்னவென்றெடுத்துச் சொல்வேன்? இப்படிப்பட்ட பெருந் துன்பமும் எனக்கு வருமா? இருபத்தெட்டாவது கலிபுருஷனை துஷ்டன் வந்துகொண்டே யிருக்கிறான்; அவன் வந்து விட்டாலோ நான் பாதாளந்தான் போய்விடுவேன். ஆதலால், தேவேந்திரனே! துக்க சமுத்திரத்தின் கரையைக் காணாது பாவபாரத்தாலாழ்ந்து கிடக்கின்ற என்னைக் கரையேற்றுவாய். உன்னைக் கும்பிடுகின்றேன் என்று புலம்பினாள். இந்திரன், ஓ பூதேவி! உனக்கு நானென்ன செய்வேன்? நீ பிரமனைச் சரணமாக அடைவாய்; நானும் வருகிறேன்; அவர் உன் துக்கத்தைப் போக்குவாரென்றனன். பூதேவி அதைக்கேட்டு வேகமாய்ப் பிரமலோகம் போக, இந்திரனும் சகல தேவர்களோடும் போய்ச் சேர்ந்தான். (1–16)

பிரமதேவன் பூமிதேவியைப் பார்த்து, ஓ பூமிதேவியே! எதற்காக அழுகிறாய்? உனக்கென்ன துக்கம் வந்தது? சொல்வாயென்ன, அவள், வரப்போகிற கலிபுருஷனுக்கஞ்சினவளாய்ப் பயப்படுகிறேனென்று தன் குறைகளைப் பலவாறாக வெடுத்துக் கூறப் பிரமன், ஓ பூமிதேவியே! உன் பாரத்தைப் போக்கும்

சமர்த்தன் நானல்ல; சகல தேவர்களுக்கும் பிரபுவான விஷ்ணுவினிடம் நாமனைவரும் போவோமென்று யாவரையுமழைத்துக் கொண்டு விஷ்ணுலோகஞ் சென்று அடியில் வருமாறு வேத வாக்கியங்களால் மிக்க பக்தியுடனே தோத்திரம் செய்வதாயினன் : (17–24)

நீ ஆயிரந்தலையும் ஆயிரம் நேத்திரமும் ஆயிரங்காலுமுள்ளவன்; நீ வேத புருஷன், நீ அநாதியானவன், தேவர்களுக்குத் தேவன்; எது நடந்ததோ எது நடக்கப்போகிறதோ எது நடந்து கொண்டிருக்கிறதோ அவையெல்லாம் உன்னாலன்றியில்லை. எங்களுக்கு அமரத்துவம் கொடுத்ததும் நீதான். இவ்வளவு சிறந்த மகிமையும் உனக்குண்டு. இம்மூன்று லோகத்தில் உன் மகிமை யறியாதவ னெவனிருக்கின்றான்? சகல லோகங்களையும் சிருஷ்டிக்கின்றவனும் ரக்ஷிக்கின்றவனும் சங்கரிக்கின்றவனும் நீதான். ஸர்வத்துக்கும் ஈஶ்வரன் நீதான் என்று தோத்திரஞ் செய்தனன். விஷ்ணுமூர்த்தி கருடாரூடராய் பிரசன்னராகித் தரிசனந் தந்து மலர்ந்த முகத்தோடு தேவர்களை நோக்கி அவர்களுடைய யோக க்ஷேமங்களை வினவிப் பின்னர் வந்தசெய்தி என்? என்றனர். பிரமன் விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்துத் தேவரீர் பூமிதேவியின் துக்கத்தைக்கேட்டு அதனைப் போக்கும் வகையை எண்ணி இப்பொழுது துவாபராந்தமா யிருப்பதால் பூமியில் ராக்ஷசாம்சங்களாய்ப் பிறந்திருக்கிற துஷ்ட மன்னர்களைக் கொன்று பூபாரத்தைக் கழிக்கவேண்டும் என்றனன்.

விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார் :—ஓ பிரமனே! இவ்விஷயத்தில் நான் சுதந்தரனல்லன்; நீயுமாகாய்; ருத்திரருமாகார்; ஏனைய இந்திரருமாகார். இப்பிரபஞ்சம் யோகமாயா சொரூபிணியாயுள்ள மகாதேவியின் வசமல்லவா? அவள் முதலில் எவ்வண்ணம் செய்யவேண்டுமென் றிச்சிக்கின்றாளோ அவ்வண்ணம் செய்கின்றாள். ஆகவே எனக்கென்ன சுதந்தரமிருக்கின்றது? எனக்குச் சுதந்தரமிருக்கும் பக்ஷத்தில் மகாசமுத்திரத்தில் கூர்மமாகவும் மச்சமாகவும் ஆவேனா? அந்தத் திரியக்யோனிகளில் என்ன சுகம்? என்ன கீர்த்தி? என்ன போகம்? என்ன புண்ணியம்? வராகமாகவும் நரசிங்கமாகவும் எதனாலானேன்? ஜமதக்னிக்குப் புத்திரனாகப்பிறந்த நான் பூமியில் பாவகர்மமென்று சொல்லத்தக்க கொடுஞ்செயலை மேற்கொண்டு க்ஷத்திரிய வம்சமே யில்லாமற் போகும்வண்ணம் கர்ப்பத்திலிருந்த சிசுவையும் ஏன் கொன்று தொலைத்தேன்? ராமனாய்ப் பிறந்து பொன்னுடையிழந்து மரவுரி தரித்து மணிமுடி போக்கிச் சடைமுடி புனைந்து காலால் நடந்து தண்டகவனம் புகுந்து மானிடசஞ்சாரமில்லாத காடெல்லாம் சகாயமில்லாமற்றிரிந்து அன்னமென்பதே யில்லாமல் நாணமென்பது சிறிதுங்கொள்ளாம லுலாவினேன். அதுமட்டோ? மாயையினால் வந்த பொன்மானை மாயையென் றறிந்துகொள்ளும் வகையற்றுச் சீதையைக் குடிசையில்விட்டு அதன்பின் றொடர்ந்து போனேன். லக்ஷ்மணனும் என்னைப்போலவே அந்தச் சீதையை விட்டு மாயாமோகத்தால் வந்து விட்டான். கபடனான ராவண

மும் சன்னியாசி வேஷங்கொண்டு துக்கித்துக்கொண்டிருக்கிற சீதையை எடுத்துக்கொண்டு போய்விட்டான். அதற்கு நான் துக்கிதனுய்க் காடெல்லா மழுதேன். பின் காரிய ஸாதனத்தின் பொருட்டுச் சுக்ரீவனைச் சினேகம் செய்துகொண்டேன். வாலியை அனியாயமாய்க் கொன்று வானரங்களை யெல்லாம் சேர்த்துக் கொண்டு இலங்கைக்குச்சென்று அங்கு நாகபாசத்தால் இருவரும் கட்டுப்பட்டிருக்க வானரங்கள் எங்களைப்பார்த் தாச்சரிய முற்றிருக்குந்தருணத்தில் கருடன் எங்களிருவரையும் விடுவித்தான். அப்போது நான், ராஜ்யத்தைப் பரிகொடுத்தோம், காட்டில் வசித்தோம், பிதா இறந்துபோயினர், இஷ்டையான மனைவியையும் ராக்ஷசன் கவர்ந்துகொண்டனன், யுத்தமோ கஷ்டத்தையே கொடுக்கிறது, இனித் தெய்வமென்னசெய்யப் போகிறதோ தெரியவில்லை என்று மகத்தான சிந்தாகுலமுடையவனுயினேன்.

ஓ தேவர்களே ! முதலில் ராஜ்யமில்லாமல் காட்டுக்குப் போகும்படியான பெருந்துக்க முண்டாயிற்று. அப்பொழுது ராஜபுத்திரியான சீதையுடன் காட்டைநோக்கிப் புறப்படுகிற எனக்குத் தகப்பனர் ஒரு சொத்தைக் காசுங் கொடுக்கவில்லை. கால் நடையாய்ச் சகாயமில்லாமல் தனஹீனனுய்க் காட்டுக்குப் போய் க்ஷத்திரிய தர்மத்தைவிட்டுப் பதினன்கு வருஷம் வேடனைப் போல் காலங்கழித்தேன். தெய்வவசத்தால் ராக்ஷசனுகிய ராவணனைக்கொன்று சீதையை மீட்டு அயோத்திக்குவந்து சில நாள் ஸம்ஸாரசுகத்தைப் பூர்ணமாயனுபவித்தேன். இப்படி யநுபவித்திருக்கும்போது உலகாபவாதத்திற்குப் பயந்து சீதையைக் காட்டில்விட்டு மறுபடியும் மனைவியைப் பிரிந்ததனுலுண்டாகிய துக்கத்தையடைந்தேன். பின்னர், அந்த சீதையும் பூமியைப் பிளந்துகொண்டு பாதாளம்போய் விட்டாள். இவ்வாறு ராமாவதாரத்தில் மகத்தான துக்கத்தை யநுபவித்தேன். இவை யெல்லாம் பரதந்திரத்தால் நேரிட்ட துக்கமல்லவா ? சுதந்தரமுடையவனு யிருப்பேனுனுல் அவ்வாருன துக்கத்தை அநுபவிப்பேனு ? பிறகு காலவசத்தால் சகோதரர்களுடன் சுவர்க்கத்தை யடைந்தேன். இவ்வாறு பரதந்திரனுயிருக்கிற நான் சொல்லத் தக்கது என்னவிருக்கிறது? ஓ பிரமனே ! கேளும். நீரும் அப்படித்தான் ; ருத்திரரும் அப்படித்தான் ; ஸமஸ்ததேவர்களும் அப்படித்தானென்று கூறினர். (25–60)

ஓம் கதம்பகுஸுமப்ரியாயை நம:

## 19. தேவீ ஸ்துதி

இனி விஷ்ணுமூர்த்தி பிரமனை நோக்கித் தேவியினுடைய மகிமையை எடுத்துக்கூறி நாமனைவரும் அந்தத்தேவியைத் துதிப்போமென்று துதித்து அனுக்கிரகம் பெற்ற வரலாற்றைக் கூறுகிறேனென்று வியாசபகவான் கூறத்தொடங்கினர்.

விஷ்ணுமூர்த்தி பிரமனை நோக்கி யாவருஞ் சுதந்தர ஹீன ரென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறார் : ஓ பிரமனே ! மாயை யினால் மோகிதமான ஆன்மாக்களனைவரும் உண்மையை யறிகின்றாரில்லை. நாமும் மாயாக்கிராந்தாளாய்ச் சாந்தராயும் ஸச்சிதானந்த சொரூபராயும் அழிவில்லாதவராயும் ஜகத்குருவாயுமிருக்கின்ற அந்த உண்மையாகிய புருஷரை நினைக்காமல் நான் பிரம்மா, நான் விஷ்ணு, நான் ருத்திரன் என்றெண்ணச்செய்யு மோகமடைந்தவர்களாய் மூலகாரணமாயிருக்கின்ற அவரை அறியாமலிருக்கின்றோமல்லவா ? நான் மூலபுருஷனுடைய மாயையினால் மோகிக்கப்பட்டு அந்த மாயாவியான பரமான்மாவினுடைய சுவாதீனனாய் மரப்பதுமையைப்போலிருந்து கொண்டிருக்கிறேன். கற்பத்தினுடைய ஆதியில் நீயும் நானும் ருத்திர மூர்த்தியும் பாற்கடலில் மந்தார விருக்ஷங்கள் நிறைந்துள்ள மணித்வீபத்தினடுவே விளங்கும் சபாமண்டபத்தில் பரமாத்மா மாயாவிபூதியைச் செய்தற்குச் சக்தியாய்ப் படைத்திருக்கிற பராசக்தியை பார்த்திருக்கிறோமல்லவா ? ஆகையால் மங்களஸ்வரூபிணியாயும் ஸர்வ காமத்தையும் கொடுப்பவளாயும் விளங்கும் அந்த ஆதி மாயாசக்தியை நாமனைவரும் இப்போது ஸ்மரிக்கவேண்டும் என்றனர். விஷ்ணுமூர்த்தி இவ்வாறு சொல்லப் பிரமன் முதலிய தேவர்கள் அநாதியான அந்த லோக மாயாதேவியை மனத்தினால் சிந்தித்துத் தியானித்தனர். தியானித்த மாத்திரத்தில் தேவியானவள் பாசாங்குசத்தையும் அபய முத்திரையையுந் தரித்தவளாய் செம்பருத்திமலர் போலுஞ் சிவந்த நிறமுடையவளாய்த் தரிசனங்கொடுத்தனள். தேவர்கள் அந்த மனோகரமான தரிசனத்தைக்கண்டு ஆனந்தமடைந்தவர்களாய் அடியில் வருமாறு தோத்திரஞ்செய்யத் தொடங்கினர் :—

* சிலந்திப்பூச்சியினின்று நூலானது எப்படி வெளிப்படுகிறதோ, அக்கினியிலிருந்து நெருப்புப்பொறிகள் எப்படிச் சிதறுகின்றனவோ அப்படி இவ்வுலகெல்லாம் எந்தத் தேவி

---

* 'ஊர்ணநா பாத்தியதா தந்தூர் விஸ்புலிங்காத்விபாவஸோ: | ததா ஜகத்யதே தஸ்ய நிர்க்க தந்தாம் நதாவயம் || யந்மாயா சக்திசங்க்லிப்தம் ஜகத்ஸர்வம் சராசரம் | தாமசிதம் புவனாதீசாம் ஸ்மராம: கருணார்ணவாம் || யதஜ்ஞானாத் பவோத்பத்திர் யஜ்ஞானாத் பவநாசனம் | சம்வித்ரூபாஞ் சதாம்தேவீம் ஸ்மராம: ஸாப்ரசோதயாத் || மஹாலக்ஷ்மை சவித்மஹே ஸர்வ சக்தியைச தீமஹீ | தன்னோதேவீப்ரசோதயாத் || மாதர்னதாஸ்மபுவனார்த்தி ஹரேப்ரஸீத சந்நோவிதேஹிகுருகார்ய மிதம் தயார்த்ரே | பாரம் ஹரஸ்வ விநிஹத்ய ஸுராரிவர்க்கம் மஹ்யாமஹேச்வரி ஸதாம்குரு சம்பவானி || யதீயம் புஜாக்ஷிவயஸேன ஸுராந் கதாசித் கிம்தேக்ஷு மாரணமுகேஸி சரை: ப்ரஹர்த்தும் | ஏதத்த்வயைவ கதிதம் நநுயக்ஷரூபம் த்ருத்வாத்ருணம் தஹஹுதாச பதாபிலாபை:

இந்த உவமானத்தை வேதாந்த மயக்குடையார் எடுத்துக்காட்டிப் பிரம்மமே பிரபஞ்சத்துக்கு உபாதான காரணமென்று கூறுவர். அவ்வபிப்பிராயமே கொண்டு ஈண்டுக்கூறியதென்று கொள்ளற்க. வேறுயாதெனின் பிரபஞ்சம் வெளிப்படுமியல்பைக் கூறியதேயன்றி உபாதானமென்று கூறியதில்லை.

யினிடத்திலிருந்து புறப்பட்டதோ அந்தத் தேவியை நமஸ்கரிக்கின்றோம். எந்தத் தேவியினுடைய மாயா சக்தியினால் இந்த ஸ்தாவரஜங்கமமான ஸகலஜகத்தும் கட்டப்பட்டிருக்கிறதோ, எந்தத்தேவி உலகத்துக்கெல்லாம் ஈச்வரியாயும் கருணைக்கடலாயுமிருக்கின்றனளோ அந்தத் தேவியை நமஸ்கரிக்கின்றோம். எந்தத் தேவியை யறியாமலிருக்கின்றதனால் ஸம்ஸாரோற்பத்தி யுண்டாகிறதோ, எந்தத் தேவியை யறிந்துகொள்வதனால் ஸம்ஸாரநிவிர்த்தி யுண்டாகிறதோ அந்த ஞானசொரூபமான தேவியை நமஸ்கரிக்கின்றோம். அந்தத் தேவி எங்களைச் சன்மார்க்கத்தில் செலுத்தட்டும். அவளை மகாலக்ஷ்மியாகவும் ஸர்வசக்தியாகவும் நினைக்கிறோம். அந்தத்தேவி எங்களை நல்லமார்க்கத்தில் பிரேரேபிக்கட்டும். ஓ தாயே! உலகிலுள்ள பீடையை யொழிக்கின்றவளே! உன்னை நமஸ்கரிக்கின்றோம். நீ எங்கள் விஷயத்தில் கருணைவைத்து எங்களுக்கு க்ஷேமமுண்டாகும் வண்ணஞ்செய்வாய்; இரக்கத்தினாலிளகிய மனமுடையவளே! எங்கள் காரியத்தை நடத்துவாய். இராக்ஷசக்கூட்டங்களைக் கொன்று பாரத்தை யொழிப்பாய். ஓ மகேச்வரியே! சாதுக்களுக்குச் சுகத்தைக் கொடுக்கும் தாமரை மலர்போன்ற கண்ணுடையாளே! எங்கள்பாலெப்பொழுதும் கருணையுடைய நீ எங்கள் விஷயத்தில் தயை செய்யாமற் போவாயாயின் போர்க்களத்தில் சத்துருக்களைப் பாணங்களாலடிப்பதற்கு எங்களுக்கு என்ன சக்தி யிருக்கின்றது? நீயே யக்ஷரூபங்கொண்டுவந்து காட்டுத்தீப்போன்ற வார்த்தைகளினால் அசுரர்களைத் திரணமாகச் சொல்லியிருக்கின்றனை யல்லவா? ஓ தேவி! இப்பொழுது கம்சனும், குஜனும், எவனேசனுடைய பிள்ளையான கேசியும், பிரஹத்ரதனுடைய பிள்ளையும், பகாசுரனும், பகி என்னு மசுரனும், கரனும், சாளுவனும், இன்னும் அநேகர்களும் பூலோகத்திற்றுன்பத்தை விளைவிக்கின்றனர்; ஆகையாலவர்களைக்கொன்று பூபாரத்தைச் சீக்கிரத்தில் நிவிர்த்திசெய்ய வேண்டும். எவர்கள் விஷ்ணுவினால் கொல்லப்படவில்லையோ, எவர்கள் திரிபுரதகனராகிய சங்கரரால் சங்கரிக்கப்படவில்லையோ அவர்களெல்லாம் மகா சந்தோஷத்தை விளைவிக்கின்ற உன்றிருமுகத்தைப் பார்த்தவளவில் நீ லீலையாக அவர்களைப் பாணங்களாற் கொன்றிருக்கின்றனை. உன் சக்தியன்றி ஹரிஹராதி தேவர்கள் சரிப்பதற்கும் சமர்த்தராவாரா? சந்திர கலையைச் சிரோபூஷணமாகவுடைய தேவியே! உன் சக்தியல்லாமல் ஆதிசேஷன் பூமியைத் தரிப்பதற்கும், வாக்தேவியின்றிப் பிரமன் சிருஷ்டிப்பதற்கும், லக்ஷ்மியின்றி விஷ்ணுமூர்த்தி காப்பதற்கும், பார்வதியைவிட்டு ருத்திரமூர்த்தி சங்கரிப்பதற்கும், சமர்த்தராவாரா? மூவரும் ஸரஸ்வதி முதலிய மூன்று சக்திகளோடு கூடியே சமர்த்தர்களாயிருக்கின்றனர். அன்றியும் மூன்றுலகத்திலும் செலுத்தத்தக்க பிரபுத்துவமாகிய அரசாக்ஷியை நடத்துவதற்கு உன்னம்சமில்லாமல் அவர்களால் கூடுமா? நீயோ எல்லாச் சக்திக்கும் ஈச்வரியாய்ப் பிரகாசிக்கின்றாயென்று தோத்திரஞ் செய்தனர். (10–20)

தேவி, அத்தேவர்களை நோக்கி வினவுகின்றாள் : ஓ தேவர்களே! உங்களுக்கு நான் என்ன காரியஞ் செய்யவேண்டும்? அதனைச் சங்கடப்படாமல் சொல்லுங்கள். இப்போதே செய்கிறேன். அஃது இவ்வுலகத்திற் செய்வதற்கு அசாத்தியமா யிருந்தபோதிலும் அதனைச் செய்து உங்களிஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன். ஓ தவசிரேஷ்டர்களே! உங்களுடைய அபீஷ்டத்தையும், பூமியிலுண் டாயிருக்குங் கஷ்டத்தையுஞ் சொல்லுங்களென்று கேட்டனள். அப்போது தேவர்கள், பூமிதேவி கொடுங்கோல் மன்னரால் பீடிக்கப் பட்டு அநேகம் பாபிகளால் சிறப்பொழிந்து அழுதுகொண்டே தாழ்ந்தடங்கி வந்திருக்கின்றனள். ஓ புவனேஶ்வரியே! அந்தப் பூதேவியின் பாரத்தை நீக்கவேண்டும்; எங்களுடைய அபீஷ்டமும் அதுதான். ஓ ஜகன்மாதாவே! ஒரு காலத்தில் மகிஷனையும், அவனுக்குச் சகாயமாய் வந்த கோடி கோடி அசுரர்களையும், அப் படியே சும்பன், நிசும்பன், ரக்தபீஜன், சண்டமுண்டன், தூம்ர லோசனன், துஸ்ஸகன், கராளன் என்பவரையுங் கொன்றருளியது போல் இப்போது வந்திருக்கிற அசுரர்களையும் கொன்று எங்களைக் காத்தருளல்வேண்டும் என்று பிரார்த்திக்கத் தேவி சிரித்துச் சொல்லுகிறாள் : ஓ தேவர்களே! பூமியில் மகததேசம் முதலிய விடங்களிலிருக்கிற அரசர்களெல்லாம் ராக்ஷஸ அம்சங்கள்; அவர் களையெல்லாம் என் சக்தியினாற் கொல்லுகிறேன். நீங்களும் பூமியிற் பிறந்து என் சக்தியினால் பூபாரத்தை நீக்க வல்லவராவீர்கள். காசி பனும் தன் மனைவியுடன் யாதவகுலத்தில் ஆனக துந்துபி என்கிற பெயருடையவனாய்ப் பிறப்பான். அப்படியே பிருகு சாபத்தினால் விஷ்ணுவும் தன்னம்சத்தில் வசுதேவனுடைய புத்திரனாகப் பிறக்கப் போகிறான். என்னுடைய மாயாசக்தியும், யசோதை வீட்டில் ஒரு பெண்குழந்தையாய் வரப்போகின்றாள். ஓ தேவர்களே! அப் போது உங்கள் காரியமுழுமையும் முடிந்துவிடும். சிறைச்சாலையில் பிறந்த விஷ்ணுவை என் சக்தியினால் கோகுலத்திற்குக் கொண்டு போகும்படிச் செய்வேன். ஆதிசேஷனும் ரோகிணி கர்ப்பத்திற் பிறப்பான். என் சக்தியோடு கூடிய அவ்விருவரும், இந்திராம்ச மாக அருச்சுனனும், யமனம்சமாக யுதிஷ்டிரனும், வாயுவினுடைய அம்சமாக பீமனும், அஶ்வினி தேவாம்சங்களாக நகுல சகாதேவர் களும், வசு அம்சமாக பீஷ்மரும், துவாபராந்தத்திற் பிறந்து துஷ்ட அரசர்களைச் சங்கரிக்கப் போகின்றார்கள். ஓ தேவசிரேஷ் டர்களே! நான் விஷ்ணு முதலாகச் சொல்லப்பட்டவர்களை நிமித்த மாகச் செய்துகொண்டு என் சக்தியினால் குருக்ஷேத்திரத்தில் முன் சொல்லியவாறு சகல ராஜாக்களையுமழித்துப் பூபாரத்தை யொழிக் கப்போகிறேன். நீங்களனைவருஞ் சுகமாயிருங்கள். பூமிதேவியும் நிலையாகவிருப்பாள்.

யாதவர்கள் அசூசையோடும் கலகபுத்தியோடும் ஆசை யோடும் நாமென்கிற அகங்காரத்தோடும் ஜயிக்கவேண்டுமென்கிற இச்சையோடும் காமத்தோடும் மோகத்தோடும் இன்னுமனேக தோஷங்களோடும் கூடியிருக்கப் போகிறார்கள். அப்பொழுது

பிராமண சாபத்தால் வம்சநாசமுண்டாகப் போகிறது. கிருஷ்ண னும் சாபத்தினால் இச்சரீரத்தை விடப்போகிறான். ஆகையால் நீங்களனைவரும் ஸ்திரீகளுடன் மதுராபுரியிலும் கோகுலத்திலும் பிறந்து விஷ்ணுமூர்த்திக்குச் சரீர சகாயஞ்செய்து கொண்டிருங்க ளென்று சொல்லிப் பரமாத்மாவினுடைய அந்த யோகமாயை யானவள் மறைந்துவிட்டாள். தேவர்களும் பூமிதேவியும் தங்க ளிடம் சென்றார்கள். மாயாதேவியின் வார்த்தையினால் பூதேவி சந்தோஷமாய்ச் சலனமற்றிருந்தாள். அப்பொழுது ஔஷதிக ளெல்லாம் கொழுந்துவிட்டு விருத்தியடைந்திருந்தன. உலகி லுள்ளாரெல்லாஞ் சுகிகளாயிருந்தனர். பிராமணர்களும் முனிவர் களும் விருத்தியாயும் சந்துஷ்டர்களாயும் தருமத்திலாஸக்தி யுள்ளவர்களாயு மிருந்தனர் என்று வியாசமுனிவர் ஜனமே ஜயனுக்குக் கூறியருளினர். (21–46½)

ஓம் கந்தர்ப்பவித்யாயை நம:

# 20. வசுதேவர் வரலாறு (1)

சூதபகவான் சௌனகாதியரை நோக்கி, ஓ மகரிஷிகாள்! இனி வியாசமுனிவர் பிரம்மாதியருக் கிருக்கும் சுதந்திரஹீனத் தையும், அவர்களுடைய நிலையாமையையும் மதுராபுரியின் வரலாறு முதலியவற்றையும் எடுத்து அரசனுக்குப் போதித்ததைச் சொல்லு கிறோம், கேட்பீர்களாக வென்று சொல்லத் தொடங்கினார்.

வியாசர் கூறுகின்றார் :—ஓ ஜனமேஜயனே! பூபார நிவிர்த்தியின் பொருட்டுக் குருக்ஷேத்திரத்தில் யோகமாயையினால் செய்யப்பட்ட அற்புத விநோதங்களைச் சொல்லுகிறேன், கேட்பா யாக. ஓ அரசனே! பிரம்மா விஷ்ணு முதலானவர்களை அந்த மாயா தேவியானவள் உலக சிருஷ்டிஸ்திதி நிமித்தம் அவ்வக்காலத்துக் கேற்றவாறு ஆட்டிவைக்கின்றாளென்பது என்னுடைய நிச்சயம். ஸத்வரஜஸ்தமோ குணமுடைய மற்றவர்களை யாட்டி வைப்பதைக் கேட்கவேண்டுமா? மலமூத்திராதிகளோடுங் கூடின கர்ப்பவாசத்தி லுண்டான துக்கம் லீலாவிசேஷமுள்ள எந்த மாயாதேவியினால் விஷ்ணுவுக்குண்டாக்கப்பட்டதோ அந்த மாயாதேவி மற்றையோரை மோகத்தினால் துன்பப்படுத்தி வைப்பளென்பதைச் சொல்லவும் வேண்டுமா? இன்னமும் அந்தத் தேவியினுடைய லீலையை என்னவென்று சொல்லுவேன்? முன் ராமாவதாரத்தில் வானரங் களைக் கிழத்தனமில்லாமல் செய்தனள். அந்த ராமரை நான் என் னுடைய தென்கிற அகங்கார மமகாரங்களாகிய மாயாபாசத்தால் துக்கத்தையும் மோகத்தையும் அடையச்செய்தனள். ஓ அரசனே! இவ்வாறான அவளுடைய மகிமையை யுணர்ந்த யோகிகளும் முமுக்ஷுக்களும் விம்வேம்வரியான அந்தத் தேவியை யுபாசிக் கின்றார்கள். எந்த ஜந்துவாயினும் பராசக்தியினுடைய பக்தியின்

லேச லேசாம்சத்திற் சிறியதினும் சிறிது அடையப்பெறுமாயின் அந்த ஐந்து முத்தத்தன்மை யடையுமென்ருல், அப்படிப்பட்ட தேவியை எவன் சேவிக்கமாட்டான்? அந்த மாயாதேவியானவள், ஓ புவனேஸ்வரியே! என்று சொன்னமாத்திரத்தில் மூன்று லோகத்தையும் கொடுத்துவிடுகிருள். என்னை ரக்ஷிக்கவேண்டும் என்கிற வார்த்தையைச் சொல்லிவிட்டால், அதற்குக்கொடுக்கத் தருந்ததில்லாமல் கடன்காரியாய் விடுகிருள்.

ஓ அரசனே! அந்தத்தேவிக்கு வித்தையென்றும் அவித்தை யென்றும் இரண்டுருவங்களுள. அவற்றுள் வித்தியா வுருவத்தினுல் ஆன்மாக்களை ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கிருள்; அவித்தியா வுருவத்தினுல் ஸம்ஸாரத்திற் கட்டுண்டிருக்கச் செய்கிருள். ஆகையினுல் பிரம்மாதியரும் கயிற்ருற் கட்டுண்டிருப்பதுபோல் அவித்தியா சொரூபிணியாகிய தேவியினுல் மாயாவசப்பட்டு அதனுற்கட்டுண்டு ஜனனமரணப்பட்டுப் பின் வித்யா சொரூபிணி யாகிய தேவியினுல் அவற்றினின்று நீங்கி விடுகிருர்கள். இதற்குச் சில அனுபவங் கூறுகின்றேன்: விஷ்ணுமூர்த்தியானவர் சில சமயம் வைகுண்டத்திலும் பாற்கடலிலும் சுகத்தை யனுபவிக் கின்றனர். சில சமயம் மிகவும் பெரிதான யாகங்களைச் செய்கின்றனர். சில சமயம் புண்ணிய தீர்த்தங்களில் தீவிரமான தவங்களைச் செய்கின்றனர். சில சமயம் யோக நித்திரை யுடையவ ராய்ச் சயனிக்கின்றனர். இதனுல் விஷ்ணுவானவர் எப்போ தாவது சுவாதீன முடையவரென்று தெரியவருகின்றதா? இவரைப்போலவே பிரமாதிதேவர்களும் ஜனகாதி முனிவர்களும் வசிஷ்டாதி ரிஷிகளும் பிரதிமைபோல் சுதந்தரமற்றவர்களாயிருப் பதுமன்றி எஜமானனுயுள்ளவன் எருதை மூக்காங்கயிறு குத்தி அது செல்லவேண்டும் இடங்களில் இழுத்துக்கொண்டு செல்வது போல் தேவியானவள் ஸகலதேவர்களையும் மாயாபாசத்திற் கோத்து இழுத்துக்கொண்டு போகின்றனள். சுகதுக்காதிகளும் நித்திரை சோம்பல் மந்தத்தன்மை முதலியவர்களும் எப்போதும் சகலதேகங் களிலு மிருக்கின்றன. ஆனுல் தேவர்கள் கிழத்தன மில்லாதவர்க ளென்று நூல்களிற் சொல்லப்பட்டிருக்கிறதேயெனின் அவர்களுக்கு உற்பத்திஸ்திதி நாசங்கள் சொல்லப்பட்டிருக்கின்ற பொழுது கிழத் தனம் ஏனில்லாமற்போகும்? கிழத்தன மில்லையாயின் அவர்களுக் குச் சாவில்லாம லிருக்கவேண்டுமே. அவர்கள் பிறந்தும் வாழ்ந்தும் வரக் காண்கின்றமையான் சாவையுங் கிழத்தனத்தையும் எப்படி யில்லாதவராவர்? கிழத்தனமும் சாவு மில்லாதவர்களாயின் சில வேளையில் அவர்கள் ஆயுள் முடிந்துவிட்டதே, இனி நமக்கு மர ணம் வருமே என்று ஏன் துக்கத்தினுல் பீடிக்கப்பட்டவர்களாயிருக் கின்றனர்? (1–20)

இதுவன்றித் தேவர்களுடைய செயலெல்லாம் கிரீடையென்று சொல்லுவர்; கிரீடையாயிருக்குமாயின் அவர்கள் செய்யுஞ் செய லில் துக்கம் விளைந்து ஏன் துன்பத்தை யனுபவிக்கின்றனர்? அன்றியும் அவர்களிடத்தில் ஒரு கணத்துக்குள் உற்பத்தியும் நாச

மும் காணப்படுகின்றன. இவற்றில் சந்தேகமில்லை. மச்சம் மசகம் கிருமி முதலிய அற்பஜந்துக்களும் அந்தத் தேவர்களும் ஆயுள் முடிவாகும் விஷயத்திற் சமமே. அது சமமாயிக்கும்போது அவர்களெப்படி அமரர்களென்று சொல்லப்படுவர்? அவர்கள் அமரர்களாயிருக்கின்ற பக்ஷத்தில் ஒரு வருஷமிருந்து சாகின்றவர்களும் நூறு வருஷமிருந்து சாகின்றவர்களும் அமரர்களல்லவா? இதனால் பூலோகத்திலிருப்பவரிலும் இந்திராதிதேவர்கள் அதிகநாளிருப்பவர்; அவர்களினும் பிரமதேவர் அதிகநாளிருப்பவர்; அவரினும் திருமாலதிகநாளிருப்பவர்; அவரினும் ருத்திரர் அதிகநாளிருப்பவர்; இவ்வாறு அவரவரும் வரிசைக்கிரமமாகவிருந்து அவ்வாறே முன்பின்னாக நாசத்தையும் விருத்தியையுமடைகின்றவரென்று அறியற்பாலராவர். ஆகவே தேகமுள்ளவனுக்கு நாசமும் இறந்தவனுக்கு உற்பத்தியு முண்மையென் றறியற்பாலது. ஓ அரசனே! சகல ஆன்மாக்களுக்கும் ஜனனமரணங்கள் சக்கரம்போற் சுழன்று வருவதாகும். இதிற் சந்தேகமில்லை. மோகவலையினாற் கட்டப்பட்டிருக்கிற ஆன்மாக்கள் ஒருபொழுதும் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடார். அந்த மோகம் மாயையிருக்கும் பொழுது நாசமடையாது. அம்மோக வலையிலுள்ளார் உற்பத்திகாலத்தில் உற்பத்தியையும் அப்படியே நாசமடையவருங் காலத்தில் நாசத்தையும் அடைகின்றனர். அப்படியே கற்பாந்தகாலத்தில் பிரமாதியரும் நாசத்தையடைகின்றனர். எவரெவர் நாசத்துக்குக் காரணமாகின்றனரோ அவரவர் எவ்விதத்தினாலாவது மரணத்தை யடைகின்றனர். அது தெய்வத்தினால் நியமிக்கப்பட்டதென்றறிதல் வேண்டும். அந்தக் கட்டளைக்கு மாறாக ஒன்றும் நடக்கமாட்டாது. ஜனனம், மரணம், ஜரை, வியாதி, துக்கம், சுகம், காமம் இவைகளெல்லாம் விதிப்படியே நடக்கும்; இதிற் சந்தேகமில்லை. யாவருக்குஞ் சுகத்தைக் கொடுக்குஞ் சந்திர சூரியர்களும் சத்துரு பீடையுடையராயிருக்கின்றனர். அவர்களனுபவிக்கும் பீடைக் கழிவுண்டா? சூரியனுடைய பிள்ளையோ மந்தன்; சந்திரனோ களங்கவுருவத்தோடு கூடியுள்ளவன். ஓ அரசனே! விதித்திருக்கும் கட்டளை மகான்களாலும் தாண்டத்தக்கதன்று. வேதத்தைப் படைத்தவனையும் உலகங்களையெல்லாம் தரித்திருக்கின்றவனையும் ஞானத்தை யுபதேசிக்கின்றவனையுமுள்ள நான்முகனும் தன்னிடத்திற்றோன்றிய ஸரஸ்வதியைப் பார்த்து காமாதுரனயினனன்றோ!

ஆதிபுருஷனையும் சர்வலோக வியாபியாயும் ஞானவானையுமுள்ள விஷ்ணுமூர்த்தி தன்னுடைய சர்வக்ஞத்துவமும் பிரபுத்துவசக்தியும் போனவிடந்தெரியாமற் போனபடியினாலல்லவா பொன்மானாய்வந்த மாரீசனை மாரீசனென் றறியாமற் போயினர். ஓ அரசனே! இன்னமும் மாயாபலத்தைப்பார். அந்த ராமர் காமமோகிதராய் அழுது மரங்களைப்பார்த்துச் சீதை எங்கே போனாளென்றும், அவள் எவனாலாவது பக்ஷிக்கப்பட்டாளா அல்லது தூக்கிக்கொண்டு போகப்பட்டாளா வென்றுங் கேட்டனரல்லவா? அதுவுமன்றி அழுதுகொண்டே, ஓ லக்ஷ்மணா! சீதையினுடைய

விரகதுக்கத்தினால் நான் இறந்துபோய் விடுவேன்! ஓ தம்பீ! நீயும் என் துக்கத்தினாலிறந்து போகப்போகிறாய்; நம்மிருவருடைய மரணத்தைக்கேட்டு என் தாயாரிறந்துபோகப் போகிறாள்; சத்துருக்கனனோ பிராணனை வைத்திருக்கமாட்டான்; நாமனைவரும் இறந்து போனதைப் பார்த்து சுமித்திரையுமிறந்துபோவாள்; கைகேயியொருத்தி மாத்திரந்தான் பிள்ளையோடு கூடி மிகுந்த சந்தோஷ முடையவளாய் வாழ்வாளென்று சொல்லி, மறுபடியும் ஓ சீதையே! மன்மதனால் பாதைப்படுகின்ற என்னைவிட்டு நீ எங்கே போயினை? நுண்ணிய இடையை யுடையாளே! மான்போன்ற கண்களையுடையவளே! ஓடி வா! ஓடி வா! என்னைப் பிழைக்கும்படிச் செய். என்ன செய்வேன், எங்கே போவேன்? என் பிராணன் உன் சுவாதீனமா யிருக்கின்றதே! ஓ ஜனகராஜன் பெண்ணே! தீனமாய்க் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற உன் பர்த்தாவாகிய என்னைச் சாந்தப்படுத்துவாயென்றழுதுகொண்டே காடுகடோறுந் திரிந்து சீதையைக் காணாது மாயாமோகிதராய் வானரர்களைச் சரணாகவடைந்து அவர்கள் சகாயத்தினால் சமுத்திரத்திலணைகட்டி லங்கைக்குப் போய் மகாவீரனான ராவணனையும் அவன் சகோதரனாகிய கும்பகர்ணனையும் அடித்துச் சீதையை யழைத்துவந்து அவளுடைய கற்புநிலை யறியாமல் சந்தேகமுடையவராய் துராத்மாவான ராவணனா லபகரிக்கப்பட்டபடியினால் அக்கினிப் பிரவேசஞ் செய்விக்கவேண்டுமென்று செய்வித்துப் பின்னர் அவளுடன் சிலநாள் காலங்கழித்து வந்தனரல்லவா? ஓ மகாராஜனே! யோக மாயையின் பலமானது மிகப் பெரியது. என்ன சொல்லுவேன்! அந்த மாயா சொரூபிணியால் இப்பிரபஞ்சம் எவ்வாறு சுழற்றப்படுகிறதோ அவ்வாறு சுழலுகின்றதல்லவா? இப்படியே அந்த விஷ்ணுமூர்த்தி நானாவிதமான அவதாரங்களிலும் சாபத்துக்குட்பட்டவராய் நானாவிதமான சேஷ்டைகளைச் செய்தவராய்த் தெரியவருகின்றது. *சர்வ மாயா விமுக்த

---

* சிவனார் ஆதியீறு (உற்பத்தி நாசம்) இல்லாதவரென்றும், நன்று தீது இகழ்ச்சி வேட்கை நட்பு என்னும் இவற்றை விளைக்க வல்லதாயிருக்கிற மாயையை வென்றவரென்றும் வேதங்களெல்லாம் ஆங்காங்குப் பல முறையும் பறையறையும் உண்மையறிந்தவர், சிவனார் காமவேட்கையினாலாவது வேறெவ்விதத்தினாலாவது பல துன்பப் பட்டனரென்றும், பிருகுவினால் சாபமேற்றனரென்றும், ஏனைய தேவர்க்குக் கூறியதுபோல் கூறப்பட்டிருப்பினும் அச்சிவ பெருமானாரை அவ்விகாராதிகளை யெல்லாம் உண்மையிலுடையாரெனவெண்ணி நரகத்திலாழ்ந்திடர்ப்படுவதற்கு வழி தேடார். அச்செய்கை, ஒன்றினைச்செய்கை, செய்யாதொழிகை, வேறொன்று செய்கை ஆகிய பிரபுத்வ சாமர்த்தியமென்று கொள்வர். இதனை வடநூலார் "கர்த்தும் அகர்த்தும் அந்நிதாகர்த்தும்" என்பர். எனவே, விதிமுறையாய்ச் செய்யவேண்டியதொன்றைச் செய்தலும் அதனைச் செய்யாது விடுதலும் செய்யக்கூடாதாகிய ஒன்றைச் செய்தலும் தனக்குமேலொரு கடவுளில்லாக் கடவுளுடைய பிரபுத்துவமாம். ஆகவே பிறப் பிறப்புடையவரும் மாயாவசப்பட்டவருமான ஏனைத் தேவர்கள்போல் இந்தப் பிரபுவும் ஈண்

ராகிய சிவனுருடைய சதி என்கிற சக்தியும் யோகாக்னியால் கொளுத்தப் பட்டாளென்றும், அவளைப் பிரிந்த சிவனுரும் காமாக்னி மேலிட்டவராய்க் காளிந்தி என்னும் நதியில் மூழ்க அதுவுங் கறுத்துப்போய்ப் பின்னர் அமிர்த நடபாவி யொன்றைப் பருகினுரென்றும், அவரைத் தாங்குவதற்கு இந்திரன் விருஷபமாய் வந்தானென்றும், பின்னர் ஒரு காலத்தில் தாருகா வனத்தில் பிக்ஷாடனக் கோலங்கொண்டு சென்றபொழுது அங்கிருந்த முனிவர்களெல்லாம் தங்களுக்கும் தங்கள் பத்தினிமார்களுக்கும் தபோபங்கமுண்டாயிற்றென்று மனங்கொதித்திருக்க அவருள் பிருகு முனிவர் சிவனுரை நோக்கி முனிந்தாரென்றும் சொல்லக் கேட்டிருக்கின்ருேமல்லவா ? இனி இவ்வுலகத்தில் தேவகாரியத்தைச் சாதிப்பதற்காக அவதரித்த கிருஷ்ணனுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன் : (21–53)

காளிந்தி நதியின் மணல்மேட்டில் ஒரு பெரிய மதுவனமிருந்தது. அவ்வனத்தில் லவணனென்கிற மது புத்திரனுன அசுரனிருந்தான். அவன் தான்பெற்ற வரத்தின் வலியால் அகங்கார முடையவனுய் மகரிஷிகளுக்குத் துக்கத்தை யுண்டுபண்ணிக் கொண்டிருக்க, ஒருசமயம் லக்ஷ்மணருக்குத் தம்பியான சத்ருக்னன் அந்த அசுரனை யுத்தத்திற் கொன்று அவ்வனத்தைப் பட்டணமாக்கி மதுராபுரியென்று நாமமிட்டு அதில் தன்னிரு பிள்ளைகளையும் ஸ்தாபித்துச் சுவர்க்கமடைந்தான். சூரிய வமிசம் நசித்தபோது மோக்ஷத்தைக் கொடுக்கும்படியான அம்மதுரா பட்டணத்தில் யாதவர்கள் வந்தடைய யயாதி புத்திரனுன சூரசேனன் பிரபுவாயிருந்து காத்துவந்தான். அந்தச் சூரசேனனுக்கு வருணான் சாபத்தினுல் காசிபர் பிள்ளையாய்ப் பிறந்து வசுதேவரென்கிற பெயருடையவராய்ப் பிரசித்திப் பெற்றிருந்தனர். அந்தச் சூரசேனன் இறந்தபின்னர் அவர் வைசிய விருத்தியில் ஜீவித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது உக்ரசேனனென்பவன் அப்பட்டணத்தை யரசாண்டு வந்தான். அவனுக்குப் பலசாலியான கம்சனென்பவன் பிறந்தான். காசிபருடைய மனைவியாகிய அதிதியும் அந்த வருணனுடைய சாபத்தினுலேயே தேவகனுக்கு மகளாய்ப் பிறந்து தேவகி என்று பெயர் பெற்றிருந்தனள். அவளுக்கும் வசுதேவருக்கும் விவாகம் நடக்கும்போது ஆகாயத்தில், ஓ மகானுபாவனுகிய கம்சனே ! இத் தேவகியினுடைய எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப் போகிறது என்று அசரீரி யுண்டாயிற்று.

அவ்வார்த்தையைக் கம்சன்கேட்டு ஆச்சரியமடைந்து சிந்தாகுலப்பட்டு இப்போது இதற்கென்ன செய்யலாமென் றுலோசித்து இப்பொழுதே கொன்றுவிட்டால் நமக்கு மிருத்யு வில்லையென்றும் இந்த ஸ்திரீயினிடத்திற் பிறக்கும் பிள்ளையினு லுண்டாகும் மரணத்தை மாற்றிக்கொள்வதற்கு வேறுபாயங் கிடையா தென்றும்

---

டுச் செய்தனரென்பதை அந்நிதாகர்த்துத்தவமாகக் கொள்க. இந்நூலில் இக் கருத்தை ஆங்காங்கு நன்கு விளக்கியிருத்தலினுங் காணலாம்.

தீர்மானித்துப் பின்னர் இவள் நமக்குச் சிறந்த அத்தையா யிருக்கின்றாளே, எப்படிக் கொல்வதென்றுஞ் சிந்தித்து மீளவும் மரணமானது நமக்குப் பெரிதாய் நேர்ந்திருக்கிறபடியால் எப்படிக் கொல்லாது விடுவது, என்ன செய்வது, என்று யோசித்து அடியில் வருமாறு சிந்தித்துக் கொல்லத் துணிந்தனன் : அறிவுள்ளவனாகிய பண்டிதன் பாபஞ் செய்தாவது சரீரத்தைக் காத்துக்கொள்ளல் வேண்டுமென்றும் அந்தப் பாபத்துக்குப் பிராயச்சித்தத்தினலாவது வேறெவ்விதத்தினலாவது சுத்தியுண்டாகிற தென்றும் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா வென்று ஆலோசனை செய்து பாவியான அந்தக் கம்சன் கத்தியை யுருவிக்கொண்டு விரைவாய்ப் புதிய மணக்கோலத்தோடிருக்கிற அந்த உத்தம ஸ்திரீயின் தலைமயிரைப் பிடித்திழுத்தான். அப்பொழுது வசுதேவரைச் சேர்ந்த சூரர்களெல்லாம் விடு விடு வென்றுசொல்லி அந்தத் தேவகியை விடுவித்துப் பின்னர் அவர்களும் கம்சனும் மகத்தான யுத்தஞ் செய்தார்கள். அப்போது யாதவகுல திலகராகிய பெரியோரெல்லாம் கம்சனைப் போரினின்றும் விலக்கிக் கூறுகின்றனர் : ஓ வீரனே ! சிறுபெண்ணான இவள் உனக்கு அத்தையல்லவா ? மேலும் விவாஹ மகோற்சவ காலத்தில் கொல்லத்தக்கவளாவளா ? ஸ்திரீஹத்தியானது சகிக்கத்தக்கதா ? கீர்த்தியை நாசஞ்செய்து விடுமே ! பாபத்துக்குள் இது மிகப் பெரிதானதல்லவா ? அசரீரி வாக்கைக் கேட்டமாத்திரத்தில் அதனுண்மை யொன்று மறியாதவனாய் நீ இவளைக் கொல்லலாமா ? இஃது அசரீரி வாக்கன்று, உனக்கும் வசுதேவருக்கும் அனர்த்தத்தை விளைவிக்கும் பொருட்டு உன் சத்துருவினலாவது வசுதேவருடைய சத்துருவினலாவது இவ்வாறு ஒருவருக்குந் தெரியாமல் மறைந்திருந்து சொன்னதாக ஏன் நினைக்கக் கூடாது ? உன் கீர்த்தியைக் கெடுப்பதற்காகவும், வசுதேவர் களத்திரத்தை நாசஞ்செய்வதற்காகவும், மாயாவித்தை யறிந்த ஒரு சத்துருவினல் சொல்லப்பட்டதென்றே துணிவாய். உன் கீர்த்தி முழுமையுங் கெடுப்பதற்குச் செய்த உபாயமென்றே யெண்ணுவாய். நீ மகா வீரனாயிருந்தும் இந்தப் பூதவாக்குக்குப் பயப்படுகின்றாயே ! அத்தை உன்னைக் கொல்லத்தக்கவளல்லவே ; அப்படியிருந்தாலும் விவாகசமயத்திற் கொல்லலாமா ? ஓ மகாராஜனே ! எது நடக்கவேண்டுமோ அஃது உண்மையாய் நடந்தேவிடும். அதனை வேறுவிதமாய் எவ்வண்ணம் மாற்றமுடியும் ? (54–81)

இவ்வண்ணம் யாதவவிருத்தர்கள் போதனை செய்தும் அவன் கொல்லவேண்டுமென்கிற நினைவை விடாதவனா யிருந்தான். அந் நினைவையறிந்த வசுதேவர் கம்சனைப் பார்த்துக் கூறுகின்றார் : ஓ கம்சனே ! நானிப்போது உண்மையாய்ச் சொல்லுகிறேன் ; மூன்று லோகமும் சத்தியத்தை ஆதாரமாகவுடையது. ஆகையால் தேவகி யிடத்திலுண்டாகும் பிள்ளைகளையெல்லாம் பிறக்கும்போதே உன் கையில் கொடுத்துவிடுகிறேன். ஓ பிரபுவே ! பிறக்கும் பிள்ளைகளை நான் கொடாமற் போவேனானல் என் முன்னோர்களெல்லாங் கும்பீபாக நரகத்தையடையக் கடவர் என்றனர். அப்போது அங்

கிருந்த மகாத்மாக்க ளெல்லாம் அந்த உண்மையான வார்த்தையைக் கேட்டு விரைவாய்க் கம்சனை நோக்கி, இதுவே சரி! சரி!! இதுவே நல்லது! நல்லது!! என்று அடிக்கடி சொல்லி, மகா புத்திமானான வசுதேவர் எங்கும் பொய் சொன்னதில்லை; ஓ மகாபாகனே! இந்தக்கஷ்டமான பாவத்தை விட்டு விடு; ஸ்திரீ ஹத்தி மிகவும் பெரிதல்லவா என்றனர். அவ்வார்த்தைகளைக் கேட்ட கம்சன் கோபத்தை விட்டுச் சத்தியவாக்கியத்தினுற் சந்தோஷ மடைந்திருந்தான். பிறகு துந்துபி வாத்தியமும் சங்கீதமும் வாசித்தார்கள். இப்படி வசுதேவர் கம்சனைச் சந்தோஷப்படுத்திக் கலியாணப் பெண்ணுகிய தேவகியை விடுவித்துக்கொண்டு தன்னினத்தவரெல்லாருஞ் சூழ்ந்துவரப் பயமில்லாமல் தன் மனைவியைப்போய்ச் சேர்ந்தனர். (82–88)

ஓம் கந்தர்ப்பஜனகாபாங்க வீக்ஷணையை நம:

## 21. வசுதேவர் வரலாறு (2)

வியாசமுனிவர் அரசனை நோக்கிக் கூறுகின்றுர் :—ஓ ஜனமேஜயனே! பிறகு தேவகியானவள் யௌவனத்தையடைந்து தேவதா ரூபமுள்ளவளா யிருக்கும்போது விதிவத்தாய் வசுதேவர் சங்கமுண்டாய்க் கருப்பமடைந்து பத்துமாதம் முடிந்து பின் மகா ரூபத்தோடு கூடின உத்தமமான வோர் பிள்ளையைப் பெற்றனள். அப்பொழுது வசுதேவர் தாம் சொல்லிய சத்தியவாக்கியத்தை நினைத்துத் தேவகியை தேவமாதாவான அதிதியாகப் பாவித்துச் சொல்லுகிறுர் : உத்தமமான அவயவ இலக்கண முள்ளவளே! நான் பிள்ளையைக் கொடுத்துவிடுகிற விஷயத்தில் செய்திருக்கிற ஏற்பாட்டை நீ அறிந்திருக்கிரு யல்லவா? அவ்வண்ணம் நான் சொன்னது கம்சன் உன்னைக் கொல்வதற்காகப் பிடித்திழுத்துத் துன்பப்படுத்தும் சமயத்தில் உன்னை விடுவித்தற்கல்லவா? ஆகையால் இப்பிள்ளையை உன் மருமகனுக்குக் கொடுத்துவிடுகிறேன். விசித்திரமான கர்மானுபவமானது பிரம்மத்தை யறியாதவர்களால் ஜயிக்கத் தக்கதல்ல. காலபாசத்தை யநுசரித்திருக்கிற சர்வப் பிராணிகளும் தாம் தாம் செய்த நல்வினை தீவினை யென்கிற இவ் விரண்டானும் வருவதாகிய கர்மங்களை ஸர்வப் பிரகாரத்தாலும் அநுபவித்தே தீரவேண்டு மென்றனர். அதுகேட்ட தேவகி கூறுகின்றுள் : ஓ பிரபுவே! ஜன்மாந்தரத்திற்செய்த கர்மத்தை மானிடர் அநுபவித்தே தீரவேண்டுமா? புண்ணியதீர்த்த ஸ்நானங்களாலும் தபசுகளாலும் தானங்களாலும் அக்கர்மம் ஏன் கழியமாட்டாது? ஒ எந்நாயகனே! ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்ட பாபத்தைக் கழிப்பதற்கல்லவா தர்ம சாஸ்திரங்களில் மனு முதலிய மகான்கள் பிராயச் சித்தாதிகள் எழுதிவைத்திருக்கின்றனர்? பிராமணனைக் கொன்றவன், சுவர்ணத்தைத் திருடினவன், சுராபானம் செய்தவன், குருபத்னியைப் புணர்ந்தவன் என்று சொல்லப்

பட்ட இவரெல்லாம் பன்னிருவருஷம் மநுவாதிகளால் விதித்த வண்ணம் விரதமநுஷ்டிப்பாராயின், அவர்கள் அப்பாவத்தி னின்றுஞ் சுத்தி யடைகிறுர்களல்லவா? ஆகையால் மனிதனு யுள்ளவன் பிராயச்சித்தஞ்செய்து பாபத்தினின்றும் விடுவிக்கப் படுவாறு, மாட்டாறு? உண்மையைப் பிரகாசப்படுத்துகின்ற தர்ம சாஸ்திரப் பிரவர்த்தகர்களான யாக்ஞவல்கியர் முதலான முனிவர் கள் பொய் வாக்குடையவர்களா? ஓ பிரபுவே! கர்மானுகுணமாய் நடக்கவேண்டியது நடந்தே தீரவேண்டுமென்பது நிச்சயமாறுல் ஆயுர்வேதமும் மந்திரவாதங்களும் பொய்தானே? எல்லாப் பிரயத் தனமும் வீண்தானே? தெய்வத்திறுல் நியமிக்கப்பட்ட எல்லா சாஸ்திரங்களும், நடக்கிறது நடந்தே தீருமென்றுல், அவை அவலந் தானே? அவ்வாறுயின் ஒருவன் ஒரு காரியத்தில் பிரவிர்த்திப்பதும் வீண்தானே? சுவர்க்கத்தைக் கொடுக்கத்தக்கதான அக்னிஷ்டோ மாதிகளும் பயனற்றவைதானே? தருமத்தைச் சொல்லுகிறசொல் வீறுய்ப் போகுமாறுல் அந்தத் தருமத்துக்கு நாசமுண்டாகாதோ? இதனை மானிடன் விசாரிக்கத்தக்கதல்லவா? ஆகையால் குழந்தை யைப்பாதுகாத்தற்குரிய காரியசித்தியெனக்குப் பிரத்யக்ஷமாய்க் காணப்படுகிறது. அதனை நீர் செய்து என் குழந்தை எவ்விதத் திறுல் க்ஷேமமாய்ப் பிழைத் திருப்பானே அந்த நன்மையை விரும்பி நீ ரவரிடஞ்சொல்லிய வார்த்தையைப் பொய்யாக்கி அதற்குச் செய்துகொள்ளவேண்டிய பரிகாரத்தைச் செய்து கொண்டு, நாம் சுகமுற்றிருக்கவேண்டும். இந்த விஷயத்தில் பண்டிதர்கள் தூஷிக்கமாட்டார்கள் என்றனள். இவ்வாறு சொல் லிய தன் மனைவியைப் பார்த்து, ஓ மஹானுபாவையே! உனக்குச் சத்தியமாகச் சொல்லுகிறேன், கேட்பாயாக என்று வசுதேவர் கூறுகின்றுர்: (1–17)

நீ சொல்லியபடி பிரயத்தனம் அவசியஞ் செய்யவேண்டியது. அதற்குரிய பலனே தெய்வானுகூலமாய்த் தானிருக்கும். முன் னுள்ள பெரியோர்கள் புராணங்களிலும் ஆகமங்களிலும் பத்தான் மாக்களுடைய கர்மங்களை ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தமென மூன்று விதமாகச் சொல்லுகிறுர்கள். அவற்றுள் அநுபவத் துக்கு ஏதுவாயுள்ளது சஞ்சிதம்; அனுபவிக்கவருவது பிராரத்தம். இவ்விரண்டிற்கும் இடமாய்ப் பெரிதாயுள்ளது ஆகாமியம். இந்த மூன்றனுள் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தங்களுக்கிட மாயிருத்தலால் அதன் விவரத்தைச் சொல்லுகிறேன் கேட் பாய். ஆகாமியமானது இன்ப துன்பம், இதம் அகிதம், நல்வினை தீவினை என மூன்று பிரிவினையுடையதா யிருக்கும். இம்மூன் றனுள் புலன்களால் அனுபவிக்க வரும் விஷயங்களைச் செயல் வகையான் அனுபவிக்குங்கால் அவ்வனுபவரூபமாயுள்ளவை இன்பதுன்பங்கள்; அவ்வழியாலுண்டாகும் கருத்துவகையான் சஞ்சிதத்துக்கிடஞ்செய்யும் வகையாயுள்ளவை இதம் அகிதங்கள். அவ்வித மகிதங்காரணமாக அநேக பிறவிகளுக் கிடமாயுள்ளவை நல்வினை தீவினைகள். ஆகவே ஆகாமியமானது சஞ்சிதத்துக்கு

த்தத்துக்கு அதில் விளையும் பலமாய் முக்தியெய்து
ளவுபடாது தொடர்ச்சியாய்த் தொன்றுதொட்டு
டயதாகலான் ஆன்மாவானவன் முற்பிறவிகளில்
க்கீடாய் திவ்யதேகத்தினால் சொர்க்கானுபவத்தை
தேகத்தினால் நரகானுபவத்தையும் அனுபவித்து
ழிவில் பிறவியெடுக்கும் சமயத்தில் அறிகருவியா
மூகமாகிய லிங்கதேகத்தையடைந்து இருவினை
காமிய வினையை மீண்டுஞ்செய்து முன்போல்
ாடு இன்பதுன்பங்களையடைந்து பிராரத்தத்தை
ஓ அழகிய கண்ணுடையாளே! பிராயச்சித்தத்
யவாறு செயல்வகையான கன்மங்கள் நீங்காவாம்.
ற யனுபவித்தே யொழிக்கவேண்டுமென்றறிவாய்;
து குழந்தை எவ்விதத்தினாலுங் கொடுக்கத்தக்கதே.
த உலகத்தில் நிந்திக்கத்தக்கதாகவும் பொய்யாகவு
நிலையில்லாத இச்சம்ஸாரத்தில் மகாத்மாக்க
த்தைத்தான் சாரமாகக் கொள்வார்கள். ஜனன
வாதீனமாயுள்ளது. ஆகலான் இவ்விஷயத்தில்
சோகமடைதல் யுக்தமன்று. எவன் சத்தியத்தை
வனுடைய பிழைப்பு வீணாகும். ஆன்மகோடிக
பிட்டால் அவ்வுலகத்தை யடைவார்கள். இதனை
குழந்தையைக் கொடுப்பாயாயின் நான் கம்சனி
றேன். சத்தியத்தை நினைப்பதால் மேலைக்குச்
சுகம் நேரிட்டாலும் துக்கம் நேரிட்டாலும்
ய செய்யவேண்டும். இவ்வாறு வசுதேவர்
து தடுக்கமாட்டாது துக்கித்து நடுங்கிக்கொண்டே
கொடுத்துவிட்டாள். தருமசீலரான வசுதேவரும்
வாங்கிக்கொண்டு கம்சன் வீட்டைநோக்கிப்
து அவ்வூரிலுள்ளாரெல்லாம் பார்த்துத் துக்கித்து,
ாத்மாவாகிய இந்த வசுதேவரைப் பாருங்கள்,
தாம் சொல்லிய சத்தியவாக்கின்படி குழந்தையை
ாடு கம்சன் வீட்டுக்குப் போகின்றார், பாருங்கள்.
தவராயும் சத்திய சந்தராயு மிருக்கின்ற வசுதேவர்
நக்கின்ற கம்சனுக்குக் குழந்தையைக் கொடுக்கப்;
ங்கள்; இவருடைய தருமத்தையும் ஸபலயமான
விப்பையும் அற்புதத்தையும் பாருங்களென்று
ா வீட்டுக்குப்போய்த் தெய்வரூபமா யிருக்கின்ற
அந்தப் பாதகன் கையிற்கொடுத்தார். கம்சனும்
ந்தைப் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்து
ாங்கிச் சிரித்துக் கொண்டே ஒரு வார்த்தை
(18–37)

ரே! உம்முடைய பிள்ளையை நீரே கொண்டு வந்து
உம்மைப் புண்ணியசாலியென்று இப்பொழுதறிந்
து பிள்ளையல்லவா எனக்கு மிருத்யுவாக அசரீரி

வாக்கினல் சொல்லப்பட்டது? ஆகவே, இது எனக்கு மிருத்யு வல்ல. இது என்னால் கொல்லத்தக்கதுமல்ல. இது உம்முடைய வீட்டில் சுகமாய் வசிக்கட்டும். ஓ அறிவிற் சிறந்த வசுதேவரே! எட்டாவது பிள்ளையை மாத்திரங் கட்டாயமாய்க் கொடுத்துவிட வேண்டுமென்று சொல்லிக் குழந்தையை வசுதேவர் கையிற் கொடுத்துவிட்டான். ஓ அரசனே! இக்குழந்தையை வீட்டுக்குக் கொண்டுபோகலாமென்கிற நல்ல வார்த்தையைக் கம்சன் சொன்ன பிறகு வசுதேவர் அதை யெடுத்துக்கொண்டு தம் வீட்டையடைந்தார். கம்சனும் மந்திரிகளைப் பார்த்து எட்டாவது பிள்ளைதானே எனக்கு மிருத்யுவாகச் சொல்லப்பட்டிருக்கிறது, இந்த முதற் பிள்ளையையும் மற்றைய பிள்ளைகளையும் ஏன் வீணைகக் கொல்ல வேண்டுமென்று சொல்ல, மந்திரிகளும் இதுவே நல்ல யோசனை யென்று சொல்லிப்புகழ்ந்து அவனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள். மந்திரிகள் போன பின்னர் நாரதமுனிவர் வர, அவருக்கு அருக்கிய பாத்யாசமனுதிகள் தந்து யோகக்ஷேமங்களைக் கேட்டபின் வந்த காரணத்தையுங் கேட்டான். அவர் சிரித்துக்கொண்டே கம்சனை நோக்கி, ஓ கம்சனே! நான் மேருமலைக்குப் போயிருந்தேன். அங்குப் பிரமதேவன் முதலாயினேர் கூடித் தேவகியினிடத்தில் அமரசிரேஷ்டரான விஷ்ணுவானவர் கம்சனைச் சங்கரிப்பதற்கு அவதரிக்கப் போகிருரென்று ஆலோசித்திருந்தனர். ஆதலால் இப்பொழுது கொண்டு வந்த பிள்ளையை நீ அறிந்து ஏன் கொல்லாமல் விட்டனை யென்றனர். கம்சன், ஓ நாரதரே! அவர்கள் சொல்லியபடியே அசரீரியாலும் எட்டாவது பிள்ளை எனக்கு மிருத்யுவென்று சொல்லப்பட்டிருக்கிற படியால் அந்தப் பிள்ளையைத்தான் கொல்லப்போகிறேனென்ருன். நாரதர், அரசனே! நீ ராஜநீதியிலறியப்படும் நன்மை தீமைகளை யறியாமலிருக்கிருய்; தேவர்களுடைய மாயா பலத்தையு மறியாமலிருக்கிருய். வேண்டுமானல் சொல்லுகிறேன் கேள்: தனக்குச் சுகத்தைக் கோருகின்றவன் அற்ப சத்துருவையும் அலக்ஷியம் செய்யக்கூடாது. அவ்வெட்டுக் குழந்தைகளையும் ஒன்ருய் சேர்த்துப் பார்த்தால் எல்லாரும் எட்டாவதுபிள்ளை யாவார்களல்லவா? வசுதேவருடைய பிள்ளைகள் சத்துருவென்றறிந்தும் விட்டமையால் நீ சுத்த மூடனென்று சொல்லி விரைவாய்ப் போய்விட்டார். போன பின் கம்சன் நாரதர் சொல்லிய சூக்ஷ்மத்தையெண்ணிக் குழந்தையை வரவழைத்துக் கற்பாறையிலெறிந்து மனம் நிம்மதியடைந்தனன் என்று வியாசர் கூறியருளினர். (38–54)

ஓம் கர்ப்பூரவீடிஸௌரப்ய கல்லோலிதககுப்தடாயை நம:

## 22. தேவர்களின் அம்சோற்பத்தி

ஜனமேஜயன் வியாசரை நோக்கி, ஐயா! பிறந்தபோதே கொல்லப்பட்ட அக்குழந்தை என்ன பாவஞ் செய்தது? முனிச்ரேஷ்டராயும் அறிவுள்ளவராயும் தருமத்தி லாசையுள்ளவராயும் பிரம

ஞானியாயுமிருக்கிற நாரத முனிவரும் இப்படிப்பட்ட துர்ப்போத னையான பாவத்தை ஏன் செய்தார்? பாவத்தைச் செய்கிறவன் செய்விக்கிறவன் ஆகிய இருவரும் சமமான பாவமுள்ளவர்க ளென்று பண்டிதர்கள் சொல்லுகின்றூர்களல்லவா? அந்த நாரத முனிவர் அந்தத் துஷ்டனைச் சிசுஹத்தியில் ஏன் பிரேரேபித்தார்? இவ்விஷயத்தில் எனக்குப் பெரிய சந்தேகமுண்டாயிருப்பதால் அந்தக் காரணத்தை விரிவாய்ச் சொல்லவேண்டும். எந்தக் கர்ம பலத்திஞல் இக்குழந்தை நாசமடைந்தது என்று வினவ, வியாசர் கூறுகின்றூர் : ஓ அரசனே! நாரத முனிவர் வேடிக்கை பார்க்கிறவர்; எப்போதும் கலகத்தில் பிரீதியுள்ளவர். இவ்விரண்டும் தேவ காரியத் துக்குச் சாதகமே. ஆகையால் கம்சனிடத்தில் வந்து சொல்லியதும் தேவகாரியத்துக்குச் சாதகமென்றே அறியற்பாலது. அவர் எக் காலத்தும் பொய் வார்த்தையிற் பிரவேசிப்பதில்லை. அவர் சொல்லும் பொய்யெல்லாம் நன்மை பயப்பனவே. அவர் தேவர்களுக்குரிய சாதகத்தைச் செய்வதே தமக்காசாரமாக வுடையவர். (1–6)

இவர் செய்தி இங்ஙனமிருக்கக் கம்சன் அந்த வசுதேவருக்குப் பின் பிறந்த ஆறு குழந்தைகளையும் பிறந்த அவ்வக்கணங்களி லேயே முன்னுள்ள சாபத்திஞற் கொன்றுவந்தனன். ஓ அர சனே! அச்சாபத்தின் காரணத்தைச் சொல்லுகின்றேன், கேட்பா யாக. சுவாயம்பு மனுவந்திரத்தில் மரீசி ரிஷியினுடைய பத்தினி யாகிய ஊர்ணை யென்பவளிடத்திற் பிறந்த ஆறு பிள்ளைகளும் ஒரு காலத்திற் பிரமதேவன் தன் புத்திரியோடு சங்கமஞ் செய்யப் பிர யத்தனப்படுகிறதைப் பார்த்துச் சிரித்தார்கள். அப்போது பிரமன் அவர்களைப் பார்த்து, நீங்கள் அசுரயோனியில் பிறக்கக் கடவீர்க ளென்று சபித்தனன். அவ்வண்ணமே அறுவரும் முன்னர் கால நேமி என்கிற அசுரனுக்குப் பிள்ளைகளாகப் பிறந்துப் பின்னர் ஹிரணியகசிபுக்குப் பிள்ளைகளாகப் பிறந்துப் பூர்வஜன்ம ஞான முள்ளவர்களாயும், ராக்ஷஸவெண்ணமில்லாமற் சாந்த சித்தமுடை யவர்களாயுமிருந்து மஞேவிகாரமற்றுச் சாவதானமாய்ப் பிரமனை நோக்கித் தவஞ் செய்தனர். பிரமன் சந்தோஷித்தவனுய் அவர் களுக்குப் பிரத்யக்ஷமாய் அவர்களைப் பார்த்து, ஓ குழந்தைகளே! முன் என்னுற் சபிக்கப்பட்ட உங்களிடத்தில் எனக்கிப்போது சந் தோஷமுண்டாயிருக்கிறது. வேண்டிய வரங்களைக் கேளுங்களென் றனன். அவ்வறுவரும் அந்த வார்த்தையைக் கேட்டுக் களிப் படைந்து பிரமனை நோக்கி, ஓ பிரமதேவரே! நீர் எங்களிடத்தில் சந் தோஷமடைந்த துண்மையாஞல் தேவராலும் மனிதராலும் ஸர்ப் பங்களாலும் கந்தர்வராலும் சித்தர்களாலும் எங்களுக்கு மரண முண்டாகாவண்ணம் வரந்தாருமென்று கேட்டனர். பிரமன் அவ்வண்ணமே தந்தனம், உங்களிடம் போய்ச் சேருங்கள்; என் வார்த்தையில் சந்தேகங்கொள்ள வேண்டாமென்று சொல்லிப் போயினன். அறுவருஞ் சந்தோஷமடைந்திருக் கும்பொழுது இதனை இரணியகசிபு அறிந்து கோபங் கொண்டு அவர்களையழைத்துக் கூறுகின்றூன் : நீங்களென்னை

விட்டுப் பிரமனைச் சந்தோஷிப்பித்து அவனிடம் வரம்பெற்று எப் பொழுது வன்மையுடையவர்க ளானீர்களோ அப்பொழுதே என்னை அவமதித்தவர்களானீர்கள். இனி நீங்கள் என்னிடம் இருப்பீர்களாயின் வெட்டிவிடுவேன். பிழைத்திருக்க வேண்டு மாயின் பாதாளம் போய்ச்சேருங்கள். அங்கு ஒரு செயலுமற்று ஒவ்வொருவராய்ப் பிறக்கக்கடவீர்கள். அப்பொழுது உங்களை உங்கள் பிதாவாகிய காலநேமி என்பவன் கம்சனாய்ப் பிறந்து கொல்லப்போகிறான் என்று சபித்தனன். ஓ அரசனே! அச் சாபத்தின் வண்ணமே இப்பொழுது நடந்ததென்றறிவாய். (7–22)

அந்த அறுவரும் இவ்வாறுபோக, ஏழாவது ஆதிசேஷ னுடைய அம்சம் தேவகி கருப்பத்திற் பிரவேசித்து நான்குமாதம் வளர்ந்து ஐந்தாமாதம் யோகமாயா சொரூபிணியினுடைய மாயை யால் ரோகிணி கருப்பத்திற் பிரவேசித்தது. பின்னர் தேவகியி னுடைய கருப்பம் போய்விட்டதென்று பிரசித்தியாயிற்று. அதனைக் கம்சன்கேட்டுச் சந்தோஷமடைந்தனன். எட்டாவது தேவகி கருப் பத்தில் பகவானை விஷ்ணுமூர்த்தி வசித்தாரென்று வியாசர்கூற, அரசன் அவரை நோக்கி, ஐயா! தேவரீரால் சிலருடைய அம்சங்க ளெல்லாந் தெரிந்துகொண்டேன்; இன்னும் ஏனையோருடைய தேவாம்சங்களையும் நன்றாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்க, வியாசமுனிவர் கூறுகின்றார்: ஓ அரசனே! இதுவரையில் சொல்லி வந்த தேவாசுரர்களின் அம்சங்கள்போல ஏனையோருடைய அம்சங் களைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்: வசுதேவர் காசிபரம்சம்; அவர் பத்தினியாகிய தேவகி அதிதியம்சம்; பலதேவர் ஆதிசேஷ னம்சம்; கிருஷ்ணமூர்த்தி நாராயணரம்சம்; அருச்சுனன் நர னம்சம்; தருமர் யமனுடைய அம்சம்; பீமசேனன் வாயுவினுடைய அம்சம்; நகுலசகாதேவர் அச்வினி தேவதைகளினம்சம்; கர்ணன் சூரியனம்சம்; விதுரர் யமாம்சம்; துரோணர் பிரகஸ்பதி அம்சம்; அச்வத்தாமன் ருத்திராம்சம்; சந்தனு சமுத்திராம்சம்; அவன் மனையாட்டி கங்காதேவி அம்சம்; தேவகர் கந்தர்வராஜனுடைய அம்சம்; பீஷ்மர் வசு அம்சம்; விராடன் சப்த மருத்துக்களம்சம்; திருதராஷ்டிரன் அரிஷ்டனுடைய பிள்ளையினம்சம்; கிருபர் மருத் கணம்சம்; துரியோதனன் கலியம்சம்; சகுனி துவாபராம்சம்; சுவர்ச்சாக்கியன் புதனுடைய அம்சம்; திருஷ்டத்தும்னன் அக்னியம்சம்; சிகண்டி இராக்ஷசாம்சம்; பிரத்யும்னன் சனற் குமாராம்சம்; துருபதன் வருணனம்சம்; திரௌபதி லக்ஷ்மி அம்சம்; இளம்பஞ்ச பாண்டவர் விச்வேதேவாம்சம்; குந்தி சித்தி அம்சம்; மாத்ரி திருதி அம்சம்; காந்தாரி மதி அம்சம்; கோபஸ்திரீகள் இந்திரனுடைய அப்ஸரஸ்திரீகளம்சம்; ஏனைய அர சர்கள் அசுராம்சம்; சிசுபாலன் இரணிய கசிபனம்சம்; ஜராசந்தன் விப்ரசித்தியினுடைய அம்சம்; சல்லியன் பிரகலாதனுடைய அம்சம்; கம்சன் காலநேமியினம்சம்; கேசி அயசிரசினுடைய அம்சம்; அரிஷ்டன் பாணாசுரனுடைய அம்சம்; திருஷ்டகேது அநுஹ்லாதனம்சம்; பகதத்தன் பாஷ்கலாம்சம்; பிரலம்பன்

லம்பனம்சம் ; தேனுகன் கரனம்சம் ; சாணு முஷ்டிகன் என்கிற இருவரும் வராஹன் கிசோரனென்கிற இருவருடைய அம்சம் ; அரிஷ்டன் திதிபுத்திரனுடைய அம்சம் ; குவலயன் கஜாசுர னம்சம் ; பகியும் பகனும் பலியினுடைய அம்சம் ; துரோண புத்திரன் யமன் ருத்திரன் காமன் குரோதன் என்னும் நால்வ ருடைய அம்சம் ; அசுராம்சமாகப் பிறந்தவர்களெல்லாம் பின் பிறந்தவர்கள். ஓ அரசனே ! இதுவரையில் சுராசுரர்களுடைய அம்சங்களெல்லாம் பூலோகத்திற் பிறந்தவகையைக் கூறிவந்தேன். பிரமன் முதலியோருடைய பிரார்த்தனைக்கு விஷ்ணுமூர்த்தியால் வெண்கேசமும் கரியகேசமும் கொடுக்கப்பட்டபடியால் கரிய கோசாம்சமாக வந்த கிருஷ்ணமூர்த்தி கரிய நிறமுடையவராகவும் வெள்ளிய கேசாம்சமாகவந்த பலராமர் வெண்ணிறமுடையவராகவு மிருந்தனர். இந்த அம்சங்களுண்டானதனை எவன் பக்தியோடு கேட்கின்றானோ அவன் ஸர்வ பாபத்தினின்றும் விடுபட்டவனாய்ப் பந்துஜனத்தோடுங் கூடிச் சந்தோஷத்தை யடைகிறான் என்று வியாசர் கூறியருளினர். (23–52)

ஓம் கலிதோஷ ஹராயை நம:

## 23. ஸ்ரீ கிருஷ்ணர் பிறந்தார்

வியாசமுனிவர் மீண்டும் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகின் றார் :—ஓ அரசனே ! கம்சன், தேவகிக்குப் பிறந்த ஆறு குழந்தை களையும் நாம் கொன்றுவிட்டோம். ஏழாவது கர்ப்பம் தோன்றியது போற்றோன்றிப் போயிற்று. இனி நாரதர் சொல்லியவண்ணம் எட்டாவது பிள்ளை பிறக்குமல்லவா ? அதுதான் நமக்கு மரண ரூபமாயுள்ளதென் றாலோசித்து அந்த எட்டாவது பிள்ளையைக் கொல்லவேண்டுமென்றெண்ணிக் கர்ப்பத்தைக் காப்பதற்கு வெகு ஜாக்கிரதையாய்ப் பிரயத்தனஞ் செய்திருந்தனன். இவ்வாறிருக்கும் சமயத்தில் விஷ்ணுமூர்த்தி முன்னர் வசுதேவரிடம் பிரவேசித்துக் கிரமமாய்த் தேவகி கருப்பத்திற் பிரவேசித்தார். யோகமாயையும் யசோதையினிடத்திற் பிரவேசித்தாள். பலராமர் ரோகிணி யினுடைய புத்திரனைக் கோகுலத்திற் பிறந்தார். ஓ அரசனே ! கம்சனுடைய பயத்தினாற் பயந்திருக்கிற தேவகி முன்னையினும் காவலோடிருக்கலாயினள். வசுதேவர் அவளிடத்தில் நீங்காத பிரிய முடையவராகையாலும் புத்திரோற்பத்தி சமயமாயிருத்தலாலும் அவளை விட்டிருப்பதற்கஞ்சி அச்சிறைச்சாலையிற்றானே தானு மிருந்தனர். தேவகியினுடைய கருப்பமானது நாளுக்குநாள் விருத்தியடைந்துவந்தது. பத்தாவது மாதமாகிய சிராவணமாதம் கிருஷ்ணபக்ஷ அஷ்டமிதிதியும் ரோகிணி நக்ஷத்திரமுங்கூடிய சுபதினத்தில் கம்சன் நாளையெண்ணிக்கொண்டிருக்கிறவனாகை யால் இன்றுதான் எட்டாவது பிள்ளை பிறக்கவேண்டிய நாளென்று நிச்சயித்துக் காவலர்களைப் பார்த்துக் கூறுகின்றான் : (1–10)

விட்டுப் பிரமனைச் சந்தோஷிப்பித்து அவனிடம் வரம்பெற்று எப் பொழுது வன்மையுடையவர்க ளானீர்களோ அப்பொழுதே என்னை அவமதித்தவர்களானீர்கள். இனி நீங்கள் என்னிடம் இருப்பீர்களாயின் வெட்டிவிடுவேன். பிழைத்திருக்க வேண்டு மாயின் பாதாளம் போய்ச்சேருங்கள். அங்கு ஒரு செயலுமற்று ஒவ்வொருவராய்ப் பிறக்கக்கடவீர்கள். அப்பொழுது உங்களை உங்கள் பிதாவாகிய காலநேமி என்பவன் கம்சனாய்ப் பிறந்து கொல்லப்போகிறான் என்று சபித்தனன். ஓ அரசனே! அச் சாபத்தின் வண்ணமே இப்பொழுது நடந்ததென்றறிவாய். (7–22)

அந்த அறுவரும் இவ்வாறுபோக, ஏழாவது ஆதிசேஷ னுடைய அம்சம் தேவகி கருப்பத்திற் பிரவேசித்து நான்குமாதம் வளர்ந்து ஐந்தாமாதம் யோகமாயா சொரூபிணியினுடைய மாயை யால் ரோகிணி கருப்பத்திற் பிரவேசித்தது. பின்னர் தேவகியி னுடைய கருப்பம் போய்விட்டதென்று பிரசித்தியாயிற்று. அதனைக் கம்சன்கேட்டுச் சந்தோஷமடைந்தனன். எட்டாவது தேவகி கருப் பத்தில் பகவானை விஷ்ணுமூர்த்தி வசித்தாரென்று வியாசர்கூற, அரசன் அவரை நோக்கி, ஐயா! தேவரீரால் சிலருடைய அம்சங்க ளெல்லாந் தெரிந்துகொண்டேன்; இன்னும் ஏனையோருடைய தேவாம்சங்களையும் நன்றாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்க, வியாசமுனிவர் கூறுகின்றார்: ஓ அரசனே! இதுவரையில் சொல்லி வந்த தேவாசுரர்களின் அம்சங்கள்போல ஏனையோருடைய அம்சங் களைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்: வசுதேவர் காசிபரம்சம்; அவர் பத்தினியாகிய தேவகி அதிதியம்சம்; பலதேவர் ஆதிசேஷ னம்சம்; கிருஷ்ணமூர்த்தி நாராயணரம்சம்; அருச்சுனன் நர னம்சம்; தருமர் யமனுடைய அம்சம்; பீமசேனன் வாயுவினுடைய அம்சம்; நகுலசகாதேவர் அஸ்வினி தேவதைகளினம்சம்; கர்ணன் சூரியனம்சம்; விதுரர் யமாம்சம்; துரோணர் பிரகஸ்பதி அம்சம்; அஸ்வத்தாமன் ருத்திராம்சம்; சந்தனு சமுத்திராம்சம்; அவன் மனையாட்டி கங்காதேவி அம்சம்; தேவகர் கந்தர்வராஜனுடைய அம்சம்; பீஷ்மர் வசு அம்சம்; விராடன் சப்த மருத்துக்களம்சம்; திருதராஷ்டிரன் அரிஷ்டனுடைய பிள்ளையினம்சம்; கிருபர் மருத் கணம்சம்; துரியோதனன் கலியம்சம்; சகுனி துவாபராம்சம்; சுவர்ச்சாக்கியன் புதனுடைய அம்சம்; திருஷ்டத்தும்னன் அக்னியம்சம்; சிகண்டி இராக்ஷசாம்சம்; பிரத்யும்னன் சனற் குமாராம்சம்; துருபதன் வருணனம்சம்; திரௌபதி லக்ஷ்மி அம்சம்;* இளம்பஞ்ச பாண்டவர் விஸ்வேதேவாம்சம்; குந்தி சித்தி அம்சம்; மாத்ரி திருதி அம்சம்; காந்தாரி மதி அம்சம்; கோபஸ்திரீகள் இந்திரனுடைய அப்ஸரஸ்திரீகளம்சம்; ஏனைய அர சர்கள் அசுராம்சம்; சிசுபாலன் இரணிய கசிபனம்சம்; ஜராசந்தன் விப்ரசித்தியினுடைய அம்சம்; சல்லியன் பிரகலாதனுடைய அம்சம்; கம்சன் காலநேமியினம்சம்; கேசி அயசிரசினுடைய அம்சம்; அரிஷ்டன் பாணசுரனுடைய அம்சம்; திருஷ்டகேது அநுஹ்லாதனம்சம்; பகதத்தன் பாஷ்கலாம்சம்; பிரலம்பன்

லம்பனம்சம் ; தேனுகன் கரனம்சம் ; சாணு முஷ்டிகன் என்கிற இருவரும் வராஹன் கிசோரனென்கிற இருவருடைய அம்சம் ; அரிஷ்டன் திதிபுத்திரனுடைய அம்சம் ; குவலயன் கஜாசுர னம்சம் ; பகியும் பகனும் பலியினுடைய அம்சம் ; துரோண புத்திரன் யமன் ருத்திரன் காமன் குரோதன் என்னும் நால்வ ருடைய அம்சம் ; அசுராம்சமாகப் பிறந்தவர்களெல்லாம் பின் பிறந்தவர்கள். ஓ அரசனே ! இதுவரையில் சுராசுரர்களுடைய அம்சங்களெல்லாம் பூலோகத்திற் பிறந்தவகையைக் கூறிவந்தேன். பிரமன் முதலியோருடைய பிரார்த்தனைக்கு விஷ்ணுமூர்த்தியால் வெண்கேசமும் கரியகேசமும் கொடுக்கப்பட்டபடியால் கரிய கோசாம்சமாக வந்த கிருஷ்ணமூர்த்தி கரிய நிறமுடையவராகவும் வெள்ளிய கேசாம்சமாகவந்த பலராமர் வெண்ணிறமுடையவராகவு மிருந்தனர். இந்த அம்சங்களுண்டானதனை எவன் பக்தியோடு கேட்கின்றானோ அவன் ஸர்வ பாபத்தினின்றும் விடுபட்டவனாய்ப் பந்துஜனத்தோடுங் கூடிச் சந்தோஷத்தை யடைகிறான் என்று வியாசர் கூறியருளினர். (23–52)

ஓம் கலிதோஷ ஹராயை நம:

# 23. ஸ்ரீ கிருஷ்ணர் பிறந்தார்

வியாசமுனிவர் மீண்டும் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகின்றார் :—ஓ அரசனே ! கம்சன், தேவகிக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும் நாம் கொன்றுவிட்டோம். ஏழாவது கர்ப்பம் தோன்றியது போற்றோன்றிப் போயிற்று. இனி நாரதர் சொல்லியவண்ணம் எட்டாவது பிள்ளை பிறக்குமல்லவா ? அதுதான் நமக்கு மரண ரூபமாயுள்ளதென் றாலோசித்து அந்த எட்டாவது பிள்ளையைக் கொல்லவேண்டுமென்றெண்ணிக் கர்ப்பத்தைக் காப்பதற்கு வெகு ஜாக்கிரதையாய்ப் பிரயத்தனஞ் செய்திருந்தனன். இவ்வாறிருக்கும் சமயத்தில் விஷ்ணுமூர்த்தி முன்னர் வசுதேவரிடம் பிரவேசித்துக் கிரமமாய்த் தேவகி கருப்பத்திற் பிரவேசித்தார். யோகமாயையும் யசோதையினிடத்திற் பிரவேசித்தாள். பலராமர் ரோகிணியினுடைய புத்திரனாகக் கோகுலத்திற் பிறந்தார். ஓ அரசனே ! கம்சனுடைய பயத்தினாற் பயந்திருக்கிற தேவகி முன்னையினும் காவலோடிருக்கலாயினள். வசுதேவர் அவளிடத்தில் நீங்காத பிரியமுடையவராகையாலும் புத்திரோற்பத்தி சமயமாயிருத்தலாலும் அவளை விட்டிருப்பதற்கஞ்சி அச்சிறைச்சாலையிற்றானே தானுமிருந்தனர். தேவகியினுடைய கருப்பமானது நாளுக்குநாள் விருத்தியடைந்துவந்தது. பத்தாவது மாதமாகிய சிராவணமாதம் கிருஷ்ணபக்ஷ அஷ்டமிதிதியும் ரோகிணி நக்ஷத்திரமுங்கூடிய சுபதினத்தில் கம்சன் நாளையெண்ணிக்கொண்டிருக்கிறவனாகையால் இன்றுதான் எட்டாவது பிள்ளை பிறக்கவேண்டிய நாளென்று நிச்சயித்துக் காவலர்களைப் பார்த்துக் கூறுகின்றான் : (1–10)

யாவரும் இன்று தேவகியினுடைய சிறைக்களத்தில் கண்ணிமை கொட்டாமல் சகல ஆயுதத்துடன் ஜாக்கிரதையா யிருக்க வேண்டியது. இப்பொழுது பிறக்கப்போகிற பிள்ளைதானெனக்குச் சத்துருவாகவுள்ளது. அந்தச்செய்தி நீங்களுமறிவீர்களே! ஆகையால் அந்தக் குழந்தை வேறு வஞ்சனையால் மறைந்துவிடப் போகிறது. ஜாக்கிரதையாய்ப் பார்த்திருங்கள். அதைக் கொன்ற பிறகுதான் நான் சுகமாய்த் தூங்குவேன். ஏனென்றால், எட்டாவது பிள்ளையும் என்னைவிட்டு நீங்காதிருக்கிற துக்கமும் நீங்குமாயின் நான் சுகமாய் நித்திரை செய்வதற்கென்ன ஆக்ஷேபம்? ஓ காவற்காரர்களே! கத்தியும் பரசாயுதமும் வில்லும் பிடித்தவர்களாய்த் தூக்கமுஞ் சோம்பலு மில்லாதவர்களாய் நான்கு பக்கத்திலும் கண்ணோடினவர்களாய் ஜாக்கிரதையாயிருங்களென்று பலமுறையும் ஆக்ஞைசெய்து தன்னிருக்கைக்குப்போய் உறக்கமற்று ஏக்கங்கொண்டு பயம் பிடித்து வாட்டமுற்றுப் பலவாறான சங்கடத்தையனுபவித்துக் கொண்டிருந்தனன். கம்சனிவ்வாறிருக்க, நடுராத்திரியில் தேவகியானவள் வசுதேவரைப் பார்த்துக் கூறுகின்றாள்: ஓ நாயகரே! பிரசவகாலம் வந்துவிட்டது; நானென்ன செய்வேன்? பயங்கரரூபிகளான காவலாளிகள் அநேகர் இவ்விடத்திலிருக்கின்றனர். குழந்தை பிறந்தால் பிழைப்பது கஷ்டம் போலிருக்கிறதே. அந்தோ! அந்தோ!! என்றிரங்கி, நானொன்று சொல்லுகிறேன், அதனைக்கேளும்: என்னையெனின், நந்தகோபனுடைய பத்தினியானவள் என்னிடம் வந்து உன்னுடைய எட்டாவது பிள்ளை பிறந்தவுடன் என் வீட்டுக்கனுப்பிவிடு; அப்பிள்ளையை நான் பாதுகாக்கிறேன்; நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம்; கம்சனுக்கு நம்பிக்கை யுண்டாவதற்கு உனக்கு வேறொரு பிள்ளையைக் கொடுக்கிறேனென்று ஒரு சங்கேதஞ் சொல்லிப் போயிருக்கின்றாள். ஓ பிரபுவே! அதுபோல் இப்போது பிறக்கப்போகிற அரிய பிள்ளையைக் கொண்டுபோவதற்கு நீர் எப்படி சமர்த்தராவீர்? நமக்கோ கஷ்ட காலமாயிருக்கிறது. எது செய்யத் தக்கது? சந்ததிக்கு ஆபத்து வந்துவிட்டது. எது செய்வதற்கும் தோன்றவில்லையென்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது கர்ப்ப வேதனை மேலிட்டபடியால் நாயகனைப் பார்த்து, ஓ சுவாமி! நீர் இனி என் முகமாயிருக்கவேண்டாம்; திரும்பித் தூரத்திலிரும்; நானென்ன செய்வேன் என்று பரிபவப்பட்டுக் கொண்டே ஆச்சரியகரமான தேவதாசொரூபமுள்ள புத்திரனைப் பெற்றனள். அந்தப் பிள்ளையைப் பார்த்து தேவகி அதிசயமுற்றுச் சந்தோஷத்தினாற் பூரித்த சரீரமுடையவளாய் கணவனைப்பார்த்துச் சொல்லுகிறாள்: (11–22)

ஓ பிரபுவே! உமது புத்திரனுடைய முகத்தைப்பாரும்! இப்பிள்ளை உமக்குக் கிடைக்கத் தகுந்ததா? அந்தோ! இந்தக் குழந்தையைப் பாவியான கம்சன் கொன்றுவிடப்போகிறானல்லவா என்று சொல்லிப் புலம்பும்பொழுது வசுதேவர் அக்குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு அதிசயத்தை விளைவிக்கும் அதனுடைய முகத்

தைப் பார்த்து, இவ்வரிய குழந்தையை நாம் காணப்போகின்றோமா வென்று மிகவுஞ் சிந்தாகுலப்பட்டு, என்ன செய்வேன்? குழந்தை நிமித்தமாக வுண்டான துக்கத்தை எப்படி அடக்குவேனென்று ஏங்கிக் கண்ணீர்விடும்போது ஆகாயத்தில் அசரீரிவாக்கொன் றெழுந்தது: ஓ வசுதேவனே! நீயொன்று மஞ்சவேண்டாம். காவற்காரர்களெல்லாம் என்னால் மோகிக்கப்பட்டவர்களா யுறங்குகின்றார்கள். சங்கிலிப் பூட்டுகளும் கதவுகளும் திறக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் இந்தக் குழந்தையை நீ யெடுத்துக்கொண்டு சீக்கிரமாய்க் கோகுலத்துக்குப்போய் நந்தகோபனுடைய வீட்டில் விட்டுவிடு. அவ்விடத்தில் பிறந்திருக்கும் பெண்குழந்தையைக் கொண்டுவந்து இங்குவிடுவென்று கூறியதை வசுதேவர் கேட்டு மகிழ்ந்து, அவ்வாக்கின்படியே கதவுகளும் பூட்டுகளுந் திறக்கப்பட்டிருத்தலைக் கண்டு குழந்தையை யெடுத்துக்கொண்டு காவலாளிகளொருவரும் அறியா வண்ணம் வெளியே புறப்பட்டு யமுனைநதி வழியே போக, அது பிரவாகமாய் வருதலைப் பார்த்து மயங்கி நிற்ப, அவ்வெள்ளம் இடுப்பளவாயடங்கியது. அது கண்டு மகிழ்ந்து, அந்நதியைத் தாண்டி மானிட சஞ்சாரமில்லாத வழியைக் கடந்து நந்தகோபனுடைய வீட்டுக்குப்போய் அவனுடைய முற்றத்திலிருக்கும் பசுக்களுடைய ஸம்பத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது யசோதை பெண் குழந்தையைப் பெற்றனள். பெற்றவுடன் தான் வேலைக்காரியைப்போல் வேஷம் பூண்டு அப்பெண்குழந்தையைக் கையிலெடுத்துக் கொண்டு வெளியே வந்து வசுதேவரிடமிருந்த ஆண் குழந்தையைத் தான் வாங்கிக்கொண்டு தான் கொண்டுவந்த பெண் குழந்தையை அவரிடம் கொடுத்தனுப்பிவிட்டாள். அவரும் அப்பெண் குழந்தையை யெடுத்துக்கொண்டு சிறைச்சாலைக்கு வந்து தேவகியினிடத்திலக் குழந்தையைக் கொடுத்துவிட்டு, இனி என்ன தீங்கு நடக்கவிருக்கிறதோவென்று பயந்து சிந்தாகுலமுடையவரா யிருந்தனர். அக்குழந்தையும் அழத்தொடங்கியது. அவ்வோசையைக் காவலாளிகள் கேட்டு விழித்துக்கொண்டு, அதிவேகமா யரசனிடஞ்சென்று, ஓ அரசனே! தேவகிக்குப் பிள்ளை பிறந்து விட்டது. சீக்கிரமாயோடிவாவென்று பெருங்குரலிட்டுச் சொன்னவுடன், கம்சன் அதிவேகமாயோடிச் சிறைச் சாலைக்குட்போய்த் துவாரங்களெல்லாம் அடைபட்டிருப்பதையும் காவலாளிகள் அதிஜாக்கிரதையாயிருப்தையும் பார்த்து வசுதேவரை நோக்கி, அறிவிற் சிறந்தவரே! தேவகியினுடைய குழந்தையைக் கொண்டு வாரும். இஃது எட்டாவது குழந்தையல்லவா? இதுதானே விஷ்ணுவினுடைய அம்சம்; கொண்டுவாருமென்றான். வசுதேவர் கொண்டுவந்தேனென்று சொல்லிக்கொண்டே உள்ளே சென்று பெண் குழந்தையைக் கையிலெடுத்துக்கொண்டு விரைவாக வந்து அழுகிறவர்போல் பாவனையுடன் கொடுத்தார். (23–38)

கம்சன் அப்பெண் குழந்தையைப் பார்த்து, பெண்ணா பிறந்ததென்று கேட்டு ஆச்சரியமடைந்து அசரீரிவாக்கும் நாரதர்வாக்கும் வீணாய்ப்போயிற்றல்லவா? இந்த வசுதேவர் மாறுபடுத்தி யிருப்பா

றென்றெண்ணுவதற்கு, மகா நிர்ப்பந்தத்திலிருக்கிற இவர் எவ்வாறு இப்பொய்யான விவகாரத்தைச் செய்யக்கூடும்? நம்மால் வைக்கப் பட்ட காவலாளிகளெல்லாம் ஜாக்கிரதையாகவே யிருக்கின்றனர். இதிற் சந்தேகமில்லை. அங்ஙனமிருக்க, இவ்விடத்தில் இந்தப் பெண் குழந்தை எப்படி வந்தது? இவ்விடத்திலிருந்த ஆண் குழந்தை எப்படி வெளியே போயிற்று? இது மிகவும் ஆச்சரியம்! வசுதேவர் பொய்யான காரியத்தைச் செய்யார்; இப்படியானது காலத்தினுடைய கொடுமைதான்; அப்படியுமன்று, ஆண் குழந்தை பிறக்கவேயில்லை; இதிற் சந்தேகமில்லை, என்று பலவாறாக நினைத்து அப்பெண் குழந்தையை வாங்கி அதன் காலைப்பிடித்துச் சிறிதுந் தயையில்லாதவனாய் ஒரு கற்பாறையில் மோதத் தொடங் கினான். அப்பொழுது அக்குழந்தை அவன் கையினின்றும் நழுவி ஆகாயத்திற்போய்த் தனது நிஜவடிவமாகிய சக்தி ரூபத்தை யடைந்து, கம்சனைப் பார்த்து, ஓ கம்சனே! நீ என்னைக் கொல்லத் தொடங்கினையே, நான் சாவேனாயின் உனக்கு வரும் மரணம் வராமற்போகுமா? ஒருநாளும் போகாது. ஆகவே, மரணம் வருவதோடு பாவமும் வந்திருக்கும். நான் உன்னால் கொல்லப்பட்ட வளுமல்லள்; நீ என்னால் கொல்லப்பட்டவனுமல்லன். உன்னைக் கொல்வோன் வேறொருவன்; அவன் ஒருவராலும் வெல்லக் கூடாதவன்; மரணத்துக்கு அஞ்சியிருக்கும் உனக்கு அஞ்சாது மரணத்தைக் கொடுப்பவன். ஆகலான் மானிடரில் அதமனை உன்னைக் கொல்லப்போகிறவன் அவனென்றும், அவனே உனக்குப் பலமான சத்துருவென்றும் அறிவாய், என்று இன்னிசையோடு யாவருங்கேட்கச் சொல்லி மறைந்துபோயிற்று. (39–47)

அசரீரியைப்போலும் அப்பெண்குழந்தை கூறிய வாய்மொழி களைக் கம்சன் கேட்டுத் தேனுகன், கேசி, பிரலம்பன், வத்சகன் முதலிய அசுரர்களை யழைத்து, ஓ அசுரர்களே! நீங்களனைவரும் நந்தகோகுலத்துக்குப் போய் அவ்விடத்தில் யாருக்காயினும் பிள்ளை பிறக்குமாயின் அப்பிள்ளையைப் பிறந்தபொழுதே என்னுடைய காரியசித்தியின் பொருட்டுக் கொல்லக்கடவீர்கள். இந்தப் பூதகியும் அவ்விடத்திற்கே போய்ப் பாலூட்டுபவள்போல் ஊட்டிக் கொல்லக் கடவள். ஓ வீரர்களே! நீங்களனைவரும் என்னுடைய வேண்டு கோளின்படி அந்தக் கோகுலத்திற்றானே நீங்காதிருந்து என் சொல்லைப் பரிபாலித்து வாருங்கள். அவ்விடத்தில் ஒருவருக் காயினும் ஆண்பிள்ளை பிறந்து வாழக்கூடாது என்று சொல்லி விட்டுத் தனியே ஓரிடத்திருந்து முன்னெண்ணி ஏக்கமுற்றிருந்தது போல் தனது மரணத்தை எண்ணி எண்ணித் தீனத்மனாய்க் கவலை யுற்றிருந்தனன். (48–51½)

ஓம் கஞ்ஜ லோசனுயை நம:

# 24. ஸ்ரீ கிருஷ்ண லீலைகள்

ஓ மஹரிஷிகாள்! இனி கிருஷ்ணமூர்த்தியினுடைய லீலா விநோத ரசங்களைச் சொல்லுகிறேன் என்று சூதபகவான் சொல்லத் தொடங்கினர்.

வியாசமுனிவர் ஜனமேஜயனைப் பார்த்து, ஓ பூபாலனே! கம்சன், தேனுகன் முதலிய அசுரர்களைக் கோகுலத்துக்கனுப்பி விட்டு அந்தப்புரத்திற்சென்று சிந்தாகுலப்பட்டுச் சிலவற்றை எண்ணத் தொடங்கினன். அந்தச்சமயத்தில் தூதர்கள்வந்து, ஓ பிரபுவே! இன்று காலையில் நந்தனுடைய கிருகத்தில் புத்திரோற்பத்தி மஹோற்சவம் நடந்ததாகக் கேள்விப்பட்டோம் என்றார்கள். முன்னமே நாரதமுனிவரால் வசுதேவருடைய பத்தினி முதலானவர்களும், பசுக்கூட்டங்களும், தாசவர்க்கங்களும், மற்றையர்களும், மற்றவைகளும் நந்தகோகுலத்தில் சேர்ந்திருக்குங் காரணத்தை அறிந்திருக்கின்றவனாகையால் தூதர்கள் சொல்லியதைக் கேட்ட மாத்திரத்தில் மனம்பொருது அன்று நாரதர், வசுதேவரும் அவனினத்தவரும் தேவாம்ச முடையவர்களாதலால் அவரெல்லாம் உனக்குப் பகைவரேயாவரென்று சொல்லியது உண்மையே என்று குலாதமனான கம்சன் அதிக கோபங்கொண்டிருக்கும் பொழுது மீளவும் சில தூதர்களோடிவந்து, ஐயா! நந்தகோகுலத்தில் கிருஷ்ணனுக்குப் பால்கொடுக்கப்போன நமது பூதகி கிருஷ்ணனுக்குப் பால்கொடுத்து யமன்பால் கூலிவாங்கப்போயினாள். கிருஷ்ணன் சிறு குழந்தையாகவா விருக்கின்றான்? அவன்தான் நமது குலநாசகன். மஹாபலாட்டியனான பகனும் வத்ஸாசுரனும் தேனுகனும் பிரலம்பனும் அவனாலே கொல்லப்பட்டார்கள். பலராமனென்பவனும் அவனைப்போலவே கொலைசெய்வதில் வல்லவனாயிருக்கிறான். கோவர்த்தனமென்னும் மலையை அந்தக் கிருஷ்ணன் ஒரு சுண்டுவிரலால் குடைபோல் தூக்கிவிட்டான். நாங்கள் என்ன சொல்லப்போகின்றோம்! அவ்விடத்தில் நம்மவர்கள் படும்பாட்டையும் அவர்கள் ஆடும் ஆட்டத்தையும் என்னென்று சொல்லப்போகிறோ மென்றார்கள். கம்சன் அவைகட்கெல்லாம் பதிலொன்றும் சொல்லாது நமக்கு மரணம்வந்து விட்டது என்று நிச்சயித்துக் கொண்டவனாய் அதற்குத் தப்பித்துக்கொள்ள ஓராலோசனை செய்து, கேசி என்பவன் கொல்லப்பட்டான்; அதற்காகத் தநுர்யாகமொன்று செய்யப்போகின்றேன், அதற்கு ராமகிருஷ்ணர்களாகிய நீங்களிருவரும் வரவேண்டுமென்றுவரவழைத்து அவ்விருவரையுங்கொன்றுவிடுவோமென்று துணிந்து அக்ரூரரென்னும் முனிவரை வர வழைத்து அவர்களிடம் அனுப்பினான். (1–9)

காந்தினீ புத்திரராகிய அந்த முனிவரும் ராமகிருஷ்ணர்களிடத்திற்சென்று கம்சன் அபிப்பிராயத்தைத் தெரிவித்து அவ்

விருவரையும் ரதத்தின்மேலேற்றிக்கொண்டு மதுரையிலிருக்கும் கம்சனிடங்கொண்டுவந்து விட்டனர். அவ்விருவரும் யாகஞ் செய்யும் சாலேக்குட் சென்றனர். கிருஷ்ணமூர்த்தி அங்கு வைத் திருந்த வில்லேயெடுத்து முறித்து யானையையும் சாணூரன் முஷ்டிக னென்பவரையும் சலன் தோசலன் என்பவரையும் கொன்றுவிட்டு ஓர் லீலேயாகக் கம்சனேத் தலேமயிர் பிடித்திழுத்து மோதியறைந்து யமலோகத்துக் கேகச் செய்தனர்.

அவனே யொழித்த பின்னர் தாய் தந்தையரது சிறையைவிடு வித்துத் துக்கமில்லாதவர்களாகச் செய்து உக்கிரசேனனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகஞ்செய்து ராஜ்யத்தை அவன் வசமாக்கினர். வசுதேவர் ராமகிருஷ்ணர்களுடைய வீரத்தைக்கண்டு மகிழ்ந்து அவர்கட்கு மௌஞ்சீபந்தனம் முதலான விரதங்களேச் செய்வித்த னர். பின்னர் அவ்விருவரும் சாந்திபரிடத்திற் போய்ச் சகல வித்தைகளேயுங் கற்றுணர்ந்து அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு மதுரைவந்து சேர்ந்தனர். (10-15)

மகத தேசாதிபதியான ஜராசந்தன் ராமகிருஷ்ணர்கள் பன்னி ரண்டு வயதுக்குள் சகல சாஸ்திரங்களேயும் கற்றுணர்ந்தவராய் மஹா பலசாலிகளாய் வீரர்களாய் மதுரையில் வசிப்பதையும், தனது மருமகனுகிய கம்சனிறந்து போனதையும் கேள்விப்பட்டுப் பொருமையோடு துக்கமடைந்தவனுய்த் தனது சேனேகளேக் கூட்டிக்கொண்டு மதுரைக்கு வந்து கிருஷ்ணமூர்த்தியோடு பதி னேழு நாள் போர் செய்து கிருஷ்ணமூர்த்தியை வெற்றி கொள் வதற்கு முடியாமல் தோல்வியடைந்து தன்நகரம் போய்ச்சேர்ந்து மிலேச்சர்கட்கு அதிபதியான காலயவனென்பவனேத் தன்வசப் படுத்தி மதுராபுரிக்கனுப்பினன். அவன் போருக்கு வருகிருனென் பதைக் கிருஷ்ணமூர்த்தி தெரிந்துகொண்டு யாதவக் கூட்டங்களே யும் பலராமரையும் வரவழைத்து இந்த மதுரையில் நாமிருப்பதனல் நமக்கெப்போதும் ஜராசந்தனல் கஷ்டங்களுண்டாகும். இப் பொழுது யுத்தத்துக்கு மிலேச்சன் வருகிருன். அவனே பலிஷ்டன், துஷ்டன். அவனேடு போர் செய்ய நம்மாலாகுமா? இனி நாம் என்ன செய்யத்தக்கது? நாம் பிராணனேக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். இந்த நகரத்தையும் இங்குள்ள மாடமாளிகையையும் தனத்தையும் பார்க்கக் கூடாது. இவை எல்லாவற்றையும் விட்டு விட்டு எந்தத் தேசம் நமக்குச் சத்துரு பயத்துக்கிடமில்லாமல் சுகங்கொடுக்கிறதோ அதுதான் பூர்வத்தில் நம்முடைய பெரி யோர்கள் தேடிவைத்த ராஜ்யமென்று நினேக்கவேண்டும். இது வொழிந்து, இது நம்முடைய பெரியோர்கள் தேடி வைத்த தாயிற்றே, இந்த நாடுநகரம் முதலிய செல்வங்களே எப்படி விட்டுப் போகிறதென்று எண்ணுவோமாயின் எப்பொழுதும் சத்துருக்களா லுண்டாகின்ற துன்பங்களுக்கு நாம் என்ன செய்வது? எவன் சுகத்தை விரும்புகின்றனே அவன் மலேயிலும் சமுத்திரத்திலும் வாசம் செய்யவேண்டும். அறிவுடையோர்கள் எந்த விடத்தில்

சத்துரு பயமுண்டாகாதோ அந்த விடத்தைத்தான் தமக்குரிய விடமாகக் கொள்ளுவார்கள். (16–24)

சாக்ஷாத் விஷ்ணுமூர்த்தி திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பதையும், மஹாதேவர் கைலாய மலையில் வீற்றிருப்பதையும் யோசித்துப் பாருங்கள். 'சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன் வந்தது வந்தது கூற்று' என்பதுபோல் காலயவன் நம தூரை நோக்கி வருகின்றான். நாம் இனி இங்கிருத்தலடாது. துவாரகைக்குப் போவோம். அதுமிக அழகாயும் மனோகரமாயும் உள்ளதென்று கருடன் சொல்லக் கேட்டிருக்கின்றேன். நான் முன் சொல்லியவண்ணம் பர்வதத்துக்குச் சமீபத்திலும் சமுத்திரக் கரையிலும் உள்ளது என்று சொல்ல, அவரெல்லாம் கிருஷ்ணமூர்த்தி சொல்லுவதெல்லாம் உண்மைதானென்று சொல்லித் துவாரகைக்குப் போகத் துணிந்து தங்கள் தங்கள் குடும்பஸ்தர்களைப் புறப்படும்படியாகச் சொல்லித் திரவியங்களைப் பைகளிற் கட்டி வண்டிகள் மேலும் ஒட்டைகள் மேலும் குதிரைகள் மேலும் கடாக்கள் மேலும் ஏற்றிச் சகல பரிவாரங்களுடனும் ராமகிருஷ்ணர்களை முன்னே போகவிட்டுப் பின்னே சென்று சிலநாள் கழித்துத் துவாரகையைப் போய்ச்சேர்ந்தார்கள். சேர்ந்தவுடன் கிருஷ்ணமூர்த்தி அந்தத் துவாரகையைச் சிற்பிகளாற் புதுமையாகப் புதுக்கி யாதவர்களெல்லாம் அங்கிருந்து வாழும்படியாகச் செய்து, பலராமரை யழைத்துக்கொண்டு பழையபடியே மதுரைக்கு வந்து, பலவானும் யவனாதிபனுமான காலயவன் அங்குத் தனது சேனைகளோடு குடிகொண்டிருத்தலை யறிந்து உள்ளே போகாமல் வெளியிற்றானே யிருந்து பீதாம்பரதாரியாயும் ஸ்ரீமானாயும் யாவருங்கண்டதிசயிக்கப் பிரகாசித்தனர். இவர் வரவையறிந்த காலயவன் வெளியேவந்து பார்க்கக் கிருஷ்ணமூர்த்தி முன்னே போகத் தலைப்பட்டனர். அவனும் பின்றொடர்ந்தான். இவன் பின்றொடரவும் கிருஷ்ணர் அதிவேகமாய் முசுகுந்தரென்கின்ற ராஜரிஷியினுடைய ஆச்சிரமத்துக்குப் போய் மறைந்துபோயினர். பின்னே துரத்திக் கொண்டு வந்த துஷ்டன் அந்த ஆச்சிரமத்துக்குப் போனபோது கிருஷ்ணருடைய வஞ்சனையை யறியாது அங்கிறுமாந்து நித்திரை செய்திருந்த ராஜரிஷியைப் பார்த்து, இவனுக்கென்ன அகங்காரம்? நமக்கு முன்னே வந்த இந்தக் கிருஷ்ணன் பின்னே துரத்தி வருகிற நம்மை ஒரு பொருளாக மதிக்காமல் காலை நீட்டிக்கொண்டு தூங்குகின்றானல்லவாவென்று அதிகக் கோபங்கொண்டு காலாலுதைத்தான். உதைபட்ட அந்த ரிஷி விழித்துத் தன்னை உதைத்தவனைக் கண்சிவந்து பார்த்து எரித்துவிட்டனர். கிருஷ்ணமூர்த்தி அந்த க்ஷணமே தோன்ற, அந்த மதுசூதனரை ரிஷிபார்த்துத் தோத்திரஞ் செய்து அவரது மாயச் செயலையறிந்து வனத்துக்குப் போயினர். (25–38)

கிருஷ்ணமூர்த்தி பலராமரை யழைத்துக்கொண்டு மதுரைக்கு வந்து உக்கிரசேனனை அங்கு அரசனாக நியமித்துத் துவாரகைக்குப் போய்ச் சிலநாள் கழித்துச் சுயம்வரத்தில் ருக்மிணியைச் சிசுபால

னுக்கில்லாமல் தான் கிரஹித்து அவளை ராக்ஷசவிதியாயும், ஜாம்ப வதி, சத்யபாமை, மித்திரவிந்தை, காளிந்தி, லக்ஷ்மணை, நாக்ன ஜிதி, பத்திரை என்கிற எழுவரைத் தனித்தனி விதிமுறையாயும் கலியாணஞ் செய்துகொண்டனர். எண்மருள் ருக்மிணி பிரத்யும்னன் என்னும் பிள்ளையைப் பெற்றாள். கிருஷ்ணமூர்த்தி பிள்ளை பிறந்தது என்றபோதே ஜாதகன்மம் முதலியவைக ளெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க, மகாபலசாலியான சம்பராசுரன் அக்குழந்தையைத் தன் பட்டணத்துக்குக் கொண்டுபோய் மாயா வதியினிடத்திற் கொடுத்தான். பிள்ளை காணாமற் போனதைக் கிருஷ்ணமூர்த்தியறிந்து சோகமேலிட்டவராய் விருத்திராசுரன் முதலிய அசுரர்கள் எந்தத் தேவியினால் லீலையாக அடிக்கப்பட்டார் களோ அந்தத்தேவியைப் பக்தியோடு சரணமடைந்து கம்பீர மாயும் மதுரமாயும் சுககரமாயுமிருக்கிற தோத்திரங்களால் அடியில் வருமாறு தோத்திரஞ் செய்யத் தொடங்கினர். (39–47)

ஓ தாயே! பதரிகாச்சிரமத்தில் தருமபுத்திரனை என்னால் முன் ஜன்மத்தில் சந்தோஷப் படுத்தப்பட்டாய்; புஷ்பங்களா லருசிக்கப்பட்டாய். உன் விஷயமாய் எனக்கிருக்கும் பக்தியை அறிந்திலையா? அந்தோ! என் குழந்தையை எவனோ ஒருவன் துஷ்ட எண்ணத்தினாலோ வேடிக்கையினாலோ என் மானத்தை அபகரிக்கச் சூதிகாக்கிருகத்தி லிருந்து எடுத்துக்கொண்டு போய் விட்டான். தேவியே! உன் பக்தனுக்கு இப்படிப் பட்ட அவமானம் நேரிடுவது யுக்தமல்லவே. கோட்டையோ பெரிதாக விருக்கிறது. கோட்டைக்குள் பட்டணமோ நன்றாய் ரக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அதிலும் என் வீடு நடுவிலிருக்கிறது. அதிலுள்ள அந்த அறை நன்றாய் மூடப்பட்டிருந்தது. அப்படி யிருந்தும் குழந்தையை யெடுத்துக்கொண்டு போய்விட்டானே! இஃது என் தோஷத்தினால் நேர்ந்ததோ? நான் அயலூருக்குப் போகவில்லையே; யாதவர்களும் போகவில்லையே; பட்டணத்தை வெளியே காக்கின்ற மகாவீரர்களும் காக்குந்தொழிலை விட்டுப் போனதில்லையே! ஓ தாயே! உன் மாயைதான் மகாமகிமை யுள்ளதென்று பிரசித்திபெற்றுள்ளது. உன்னிலுஞ் சிறந்த எந்த மாயாவியினால் என் குழந்தை கொண்டுபோகப்பட்டதோ? ஓ தாயே! ஒருவராலும் அறியக்கூடாத இந்த மாயையை நானறியாமற் போவேனேயானால் அற்பபுத்தியுள்ள எந்தப்பிராணி இனி யறிவான்? குழந்தையைக் கொண்டுபோனவன் எங்குப் போய் விடுவான்? என் காவற்காரர்களாற் பார்க்கப்படமாட்டானா? ஆகையால் அந்த மாயை உன்னால் கற்பிக்கப்பட்ட எந்த மாயையோ? ஆனால் இப்பொழுது நீ செய்த மாயாகாரியத்தில் எனக்காச்சரியமில்லை. ஏனெனின், ரோகிணி தேவி பிரசவித்த பலராமனை என்தாய் கர்ப்பத்திலிருந்து இழுத்துவிட்டனையல்லவா? அதைநோக்க இதுவோராச்சரியமா? இதுவுமன்றி, நீ திரிகுண சொரூபிணியாய் உலக சிருஷ்டியெல்லாம் செய்கின்றாய்; ரக்ஷிக் கின்றாய்; சங்கரிக்கின்றாய். இம்முத்தொழிலால் மல பரிபாகம்

வருவிக்கவல்ல உன் சரித்திரத்தை எவனறிகிருன்? ஓ தாயே! இவையெல்லாம் செய்கின்ற நீ தானே இப்பொழுது எனக்குப் புத்திரோற்பத்தியா லடங்காத சந்தோஷத்தையும் புத்திர ஹீனத்தால் துக்கத்தையும் கற்பித்து வேடிக்கையாய் விளையாடு கின்றனை? நீ செய்யாவிட்டால் எனக்குப் புத்திரப்பேறேது? நானடைந்த புத்திரப்பேறு என்னிச்சையா யிருக்குமாயின், ஏனிப்படி நஷ்டமாகும்? ஓ தேவி! நீ எனக்கு இன்னமுஞ் செய்கின்ற துக்கத்தைச் சொல்லுகிறேன் கேட்பாய். நான் துக்கத்தில் ஓய்ந்து விடுவனென்று இந்தச் சிசுவின் தாயை என்பக்கலில் குரளிப்பட்சியைப்போல் எப்போதும் அழுதுகொண் டிருக்க வைத்தனை. ஸம்ஸார துக்கிதர்களுக்கு நீ சரணமா யிருக்கின்றவளாயிருக்க, எனக்கு உன் சரணம் துக்கமாக முடிந்ததற்குக் காரணமென்னை? புத்திர ஜன்மமானது சுபத்துக்கு ஸ்தானபூதமென்றும், புத்திர நாசமானது துக்கத்துக்கு ஸ்தான பூதமென்றும் பண்டிதர்கள் சொல்வது உண்மைதானே. ஓ தாயே! பிரதமபுத்திரன் நஷ்டமானால் யாது செய்வேன்? இனி என் இருதயம் துக்கத்தால் பிளந்துபோகும் போலிருக்கிறதே. ஓ மகாதேவீ! உனக்குச் சந்தோஷகரமான தியானமாவது விரத மாவது பூஜையாவது, நீ எதனை விதிக்கின்றனையோ அதனைச் செய்கின்றேன். செய்தால் சகல துக்கங்களையும் போக்கடிக்கின்றவ ளல்லவா? ஓ தாயே! என் குழந்தை பிழைத்திருப்பானாகில் சீக்கிரத்தில் நான் காணும்படியாகச் செய். ஸகல லோகத்தையும் நாசஞ்செய்யும் வல்லமையுள்ள நீ அந்தப் பாவியிருக்கும் ஊரை நாசஞ்செய்யாயா, என்றிவ்வாறு தோத்திரஞ் செய்யத் தேவி யானவள் வெளிப்பட்டுச் சொல்லுகின்றாள். (48–59)

ஓ கிருஷ்ணனே! இது பூர்வஜன்ப சாபம்; அந்தச் சாப சம்பந்தத்தால் உன் பிள்ளையைச் சம்பராசுரன் கொள்ளை கொண்டு போயினான். ஆதலால் உன்னுடைய பிள்ளை அச்சம்பராசுரனை என்னனுக்கிரகத்தால் நாசஞ்செய்து பதினாருவது வயதில் உன்னிடம் வந்துசேரப்போகிறானென்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனள். கிருஷ்ணமூர்த்தியும் புத்திரசோகம் நீங்கிச் சுகமாயிருந்தனர். (60–62)

ஓம் கர்ம விக்ரஹாயை நம:

## 25. ஸ்ரீ கிருஷ்ணர் சிறுமை

ஜனமேஜய மகாராஜன் வியாசமுனிவரைப் பணிந்து, ஓ முனிஶ்ரேஷ்டரே! தேவரீர் கிருஷ்ணமூர்த்தி விஷ்ணு அம்சம் என்று சொன்னீர். அவர் இத்தன்மைத்தான துக்க மனுபவிப்ப தாக இப்பொழுது கூறக்கேட்க எனக்குச் சந்தேகமுண்டா யிருக் கிறது. என்னையெனின், நாராயணரம்சமாகப் பிறந்த மகாபராக் கிரமசாலியான கிருஷ்ணருடைய குழந்தை எப்படி அபகரிக்கப்

பட்டது? பலராலும் பலகாவலாலும் காக்கப்பட்டுள்ள சூதிகாகிரு கத்தில் அவ்வசுரன் எவ்வாறு பிரவேசித்துக் குழந்தையை யெடுத் துக்கொண்டுபோனான்? அதனைக் கிருஷ்ணமூர்த்தி என்ன காரணத்தினா லறியாமற்போயினர்? ஓ வியாசரே! இது மகத்தான ஆச்சரியத்தை விளைவிக்கின்றது என்று அரசன்கூற, வியாச முனிவர், ஓ அரசனே! மனிதர்களுடைய புத்தியை மோகிக்கச் செய்கிற சாம்பவி மாயையானது ஞானிகளால் நன்றாயறியத் தக்கது. மனுஷ்ய ஜன்மமடைந்த மனிதர்களெல்லாம் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களையடைந்து அஞ்ஞானத்தை ஏனடையமாட் டார்கள்? தேவாசுரர் மனிதர்களாய்ப் பிறக்க வருவாராானால் தேவர் களென்றும் அசுரர்களென்றும் தங்களைத்தாங்கள் அறிவார்களோ? பசியும் தாகமும் சிந்தையும் பயமும் சோம்பலும் ஆசையும் சோகமும் சந்தேகமும் சந்தோஷமும் அபிமானமும் ஜரையும் மரணமும் அறியாமையும் சிரமமும் வைராக்கியமும் பொறாமையும் கோபமும் மதமும் ஆயாசமும் மானிடருக்கடுத்தவைகளன்றோ? அவையுண்டென்பதற்குச் சான்று கூறுகின்றேன். (1–9)

ஸ்ரீராமர் எதிரேயிருந்த பொன்மானையும் சீதையின் கொள்ளை யையும் ஜடாயு மரணத்தையும் பட்டாபிஷேக தினத்தில் வனவாசம் போக வந்ததையும் தன் சோகத்தினால் தகப்பன் மரணமடைவா ரென்பதையும் ஏன் தெரிந்துகொள்ளாமற் போயினர்? மூடனைப் போல் காடுகளிற் றிரிந்துழன்று வாலியை அநீதியாகக் கொன்று சுக்ரீவனைச் சகாயமாக வைத்துக்கொண்டு சமுத்திரத்தில் சேதுபந்தனஞ்செய்து வானரர்களோடும் சமுத்திரத்தைத் தாண்டி லங்கையை யடைந்து நாற்புறமும் வானரச்சேனைகளை யனுப்பிக் கோரமான யுத்தத்தைச் செய்வித்துத் தானும் மகத்தான யுத்தஞ் செய்தனர். அந்த யுத்தத்தில் நாகபாசத்தால் கட்டுண்டு பிறகு கருடனால் விடுவிக்கப்பட்டார். கும்பகர்ணனையும் ராவணனையும் இந்திரஜித்தையும் நிசும்பனையும் அதிகோபத்தோடுங் கொன்றார். சீதையைத் தோஷமில்லாதவளென்று தெரிந்து கொள்ளாமல் அக்னிப்பிரவேசஞ் செய்வித்தார்; பிறகு லோகாபவாதத்துக்கு மிகவும் அஞ்சி வனசரரும் அஞ்சத்தக்க காட்டில் விட்டார். தனக்குப் பிறந்த பிள்ளைகளைத் தன்னுடைய பிள்ளைகளென்று தான் தெரிந்துகொள்வதற்கில்லாமல் சாதுக்களாகிய மஹரிஷிகள் சொல்லக்கேட்டுத்தான் தெரிந்து கொண்டார். சீதை பாதாளம் போனதைத் தெரிந்துகொள்ளாமற் கோபத்தோடும் சகோதரரை அடிக்க எத்தனித்தார். அப்படியே யமன் வருவதை அறிந்து கொள்ளாமற் போயினர்? இவையெல்லாம் மானிடருக்குண்டாகும் அறியாமையும் சேஷ்டையுமல்லவா? ஆகையால் அந்த விஷயம் விசாரஞ் செய்யத்தக்கதல்ல. (10–21)

இதுபோலவே, இந்தக் கிருஷ்ணர் கம்சன் பயத்தால் கோகுலத் தையும், ஜராசந்தன் பயத்தால் துவாரகையையும் போய்ச் சேர்ந் தார். ருக்மிணியைச் சிசுபாலனிடத்திலிருந்து அநியாயமா யப கரித்துவந்தார். சம்பராசுரனா லபகரித்த சிசுவைப்பற்றித் துக்கித்

தார். பின் பிள்ளையின் க்ஷேமத்தையறிந்து சந்தோஷித்தார். சத்யபாமையினுடைய உத்தரவினால் தேவர்களோடு சண்டை செய்தார். தான் ஸ்திரீக்குச் சுவாதீனமா யிருப்பதைப் பிரகாசப் படுத்திக்கொண்டு தேவேந்திரனைத் தோற்கச்செய்து தன் மனைவி யைச் சந்தோஷப்படுத்துவதற்காகக் கற்பக விருக்ஷத்தை யபகரித் தார். இவரைச் சத்யபாமை மரத்திற்கட்டி நாரதருக்குத் தானஞ் செய்துவிட்டாள். பின் பொன்னைக்கொடுத்து அந்தக்கிருஷ்ணரை விடுவித்துவிட்டாள். பிரத்யும்னன் முதலிய பிள்ளைகளை பார்த்து வருத்தப்படுகிற சாம்பவதியானவள் நல்ல புத்திரப்பேறு வேண்டு மென்றுகேட்க அதற்குத் தவஞ்செய்ய வேண்டுமென்று பர்வதத்துக்குப்போய் அவ்விடத்தில் தவமிருந்த தீக்ஷா குருவாகிய உபமன்யுமுனிவரைக் குருவாகக்கொண்டு பாசுபத தீக்ஷையைப் பெற்றுத் தலையை மொட்டை யடித்துக்கொண்டு சிவத் தியானத்திலா ஸக்தியுள்ளவராய்ச் சிவமந்திரத்தை ஜபித்து முதல் மாதங் கனிவர்க்கங்களைப் புசித்தும், இரண்டாவது மாதம் ஜல மருந்தி ஒருகாலில் நின்று தவஞ்செய்தும், மூன்றுவது மாதம் தொடங்கி ஆருவதுமாதம் வரையில் வாயு பக்ஷணஞ் செய்து கட்டைவிரலூன்றித் தவஞ்செய்தும் வந்தனர். அந்த ஆருவது மாதம் பக்தியினுல் தியானிக்கப்பட்ட சிவபெருமான் சந்திர சூடராய், உமா சகாயராய், இந்திரன் முதலிய தேவர்களால் சூழப் பட்டவராய், விருஷபவாகனருடராய், பிரம விஷ்ணுக்களோடு யக்ஷகந்தர்வர்களால் சேவிக்கப்படுகிறவராய் பிரசன்னமாய்க் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்துச் சொல்லுகிறுர்: ஓ கிருஷ்ணனே! நீ செய்த உக்ரமான தவசினுல் யாம் சந்தோஷமடைந்தோம்; ஓ யாதவகுலத்தில் பிறந்தவனே! உனது வேண்டுகோளைச் சொல்லு வாயாக. யாம் நீ வேண்டியவாறு கொடுக்கின்ருேம். ஸகல காமத் தையும் பூர்த்தி செய்கிற யாம் தரிசனமா யிருக்கும்பொழுது உன் வேண்டுகோளுக்குக் குறைவுண்டாக மாட்டாதென்றருள, அந்தக் கிருஷ்ணர் சங்கரரைப்பார்த்து பக்தியோடுகூடினவராய்த் தண்டா காரமாகப் பாதங்களில் வீழ்ந்து மேகசப்தம்போன்ற கம்பீரமான வாக்கினுல் அடியில் வருமாறு தோத்திரஞ்செய்யத் தொடங்கினுர்: (22-38)

தேவதேவனே! ஜகத்துக்கெல்லாம் பிரபுவானவனே! சர்வப் பிராணிகளுடைய பீடைகளைத் தொலைக்கின்றவனே! பிரபஞ்சத் துக்கெல்லாங் காரணனே! அசுரர்களை நாசஞ்செய்கின்றவனே! மூன்றுலோகங்களையும் சிருஷ்டிக்கின்றவனே! ஓ நீலகண்டனே! உன்னை அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். உம்முடைய தரிசனத்தால் யான் புண்ணியசாலியாயினேன். சகல காரியங்களையும் பூர்த்தி செய்தவனுய் விட்டேன். தாமரைபோன்ற உமது பாதங்களை நமஸ் கரித்து என் ஜன்மம் சபலமாய்விட்டது. ஓ ஜகத்குருவே! ஸம்ஸாரத்தில் ஸ்திரீரூபமான பாசங்களால் கட்டுண்டவனு யிருக் கிறேன். ஓ திரிநேத்திரனே! என்னை ரக்ஷிப்பதற்காகத் தேவரீரைச் சரணடைந்தேன். மானிட ஜன்மமெடுத்து நான் துக்கப்படு

கிறேன். துக்கநாசகனே! உம்மைச் சரணமடைந்த என்னை ரக்ஷிக்கவேண்டும். மன்மதனை யெரித்தவரே! கர்ப்பவாசத்தில் மகத்தான துக்கத்தையடைந்தேன். பிறந்த நாள்தொட்டு கம்ச பயத்தால் கோகுலத்தில் வசித்தேன். இடையனுடைய ஆக்ஞை யைச் செய்கிறவனாய் நானும் இடையனாய்விட்டேன். மகாரண்ணிய மாகிய பிருந்தாவனத்தில் மாட்டை ஓட்டித் திரிந்துகொண்டிருக் கும்போது என் தலைமயிர் அழுக்கடைந்துவிட்டது. மிலேச்ச ராஜாவின் பயத்தினால் துவாரகையை யடைந்தேன். பிதுரார்ஜித மான அழகிய மதுரா பட்டணத்தை விட்டேன். யயாதி சாபத்திற் கட்டுப்பட்டுப் பயந்து அவனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டுத் தர்மத்தை ரக்ஷணை செய்யவேண்டு மென்னும் எண்ணமுள்ளவனாய் உக்ரசேனனுக்கு எப்போதும் தாசனாயிருந்தேன். அவனை யாதவர் களுக்கு அரசனாகப் பூர்வீகர்கள் நியமித்துவிட்டார்கள். கிருகஸ்த தர்மமானது மிக்க வருத்தத்தைக் கொடுக்கிறது. ஏனெனின், அந்தக் கிருகஸ்த தர்மம் ஸ்திரீகளால் வசீகரப்பட்டிருக்கிறபடியால் தர்மநாச முண்டாகிறது. எப்போதும் பரதந்திரனாயிருக்கவேண்டி யிருக்கின்றது. பந்தமோக்ஷமென்கிற வார்த்தையே துர்லபமா யிருக்கிறது. ருக்மிணிக்குப் பிள்ளை பிறந்தது என்கிற பொறாமை யினால் ஜாம்பவதி என்னைப் புத்திரார்த்தமாய்த் தவசுக்கு அனுப்பி விட்டாள். புத்திரகாமனாய் இப்போது தவஞ்செய்தேன். உலகத் துக்கெல்லாம் பிரபுவானவரே! உம்மிடத்தில் பிள்ளை வேண்டுமென்று கேட்பதற்கு லஜ்ஜையாயிருக்கிறது. மோக்ஷத்தைக் கொடுக்கின்ற வராயும் பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவராயு மிருக்கின்ற மகாதேவ ரான உம்மைப் பூஜித்துத் துச்சமாயும் காலாந்தரத்தில் நசித்துப் போவதாயுமுள்ள ஸம்ஸாரப் பிரயோஜனத்தை எந்த மூடன் கேட்பான்? நான் மாயாசம்பந்தத்தால் மூடபுத்தி யுள்ளவனாய்ப் புத்திரசுகத்தைக் கேட்கலுற்றேன். ஓ ஸர்வஜ்ஞ மூர்த்தியே! ஸம்ஸாரம் துக்கத்தைக் கொடுப்பதென்றும் அநித்தியமாய் நசித் துப் போவதென்றும் அறிந்தும் விரக்தி யுண்டாகாமல் ஸ்திரீயினால் பிரேரேபிக்கப்பட்டு அதனையே கோருகிறேன். நாராயணனும்சமான நான் சாபத்தினால் பூமியிற்பிறந்து பலவிதமான துன்பங்களை அனுபவிக்க மாயாபாசத்தினால் கட்டுப்பட்டிருக்கிறேன். இவ்வா றான மனவருத்தத்தோடு சொல்லுகின்ற கிருஷ்ணனை மகேஸ்வரர் பார்த்து உனக்கின்னும் பிள்ளைகள் பிறக்கப்போகின்றன. எண்ணூறாயிரம் ஸ்திரீகள் உனக்குப் பத்தினிகளாக வரப்போகின்ற னர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் பலமுள்ள பத்துப்பிள்ளைகள் பிறக்கப்போகின்றன வென்று வரங்கொடுத்து மௌனமுற்றிருந் தனர். அவ்வரமேற்று நமஸ்காரஞ் செய்கிற கிருஷ்ணரைப் பார்வதி பார்த்துச் சொல்லுகிறார்: (39–56)

ஓ கிருஷ்ணனே! நீ கிருகஸ்தர்களுக்கெல்லாம் சிரேஷ்டனா யிருக்கப்போகிறாய். நூறுவருஷத்துக்குப்பின் பிராமண சாபத்தி னாலும் காந்தாரி சாபத்தினாலும் குலக்ஷய முண்டாகப்போகின்றது. உனது பிள்ளைகள் சாபத்தினால் மோகிக்கப்பட்டவர்களாய் ஒரு

வரையொருவர் அடித்துக்கொண்டு யுத்தத்தில் நாசமடையப் போகிறூர்கள். யாதவர்களும் அவ்வண்ணமே மரணமடையப் போகிறூர்கள். அப்போது தேகத்தை விட்டுச் சுவர்க்கத்துக்கு வரப்போகிறுய். நடக்கவேண்டியதைப்பற்றித் துக்கிக்க வேண்டிய தில்லே. கட்டாயமாய் நடக்கப்போகிற விவகாரங்கள் ஒன்றுந் தடைப்படாது. அந்த விஷயத்தில் துக்கம் வைப்பதற்குக் காரணங் கிடையாது. அஃது என் வசமாயுள்ளது. அஷ்டாவக்ரர் சாபத்தால் உன் பத்தினிகள் கள்வரால் அபகரிக்கப்படுவார்கள், என்றிவ்வாறு தேவி கூறியவுடன் சம்புவானவர் தேவர்களோடு மறைந்தருளினர். பின்னர் கிருஷ்ணர் தமதாசிரியராகிய உபமன்யுபகவானே நமஸ் கரித்துச் சிவானுக்ரஹத்தை விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுத் துவாரகையை யடைந்தார். (57–65)

ஓ அரசனே ! இவ்விசாரத்தால் பிரம்மாமுதலான தேவர்களெல் லாம் அனேவர்க்கும் பிரபுக்களாயிருந்தும் மாயாவேகத்தால் கலங் கிய மனமுடையவர்களாய் மாயை விளேயாடும் மரப்பாவை போலாய் அதற்குச் சுவாதீனப்பட்டவர்களா யிருக்கிறூர்கள். பரப் பிரம்ம சொரூபிணியான மாயாதேவி அவிரவர்களுடைய பூர்வ ஜன்ம கன்மானுகுணமாய்த் தேகங்களே யுண்டுபண்ணுகின்றனள். புவனேஸ்வரியாகிய தேவிக்கு உயிர்களிடத்தில் பக்ஷபாதமும் தயை யின்மையும் கிடையா. அவள் எவ்வுயிர்களேயும் ஸம்ஸாரபந்தத்தி னின்றும் விடுவித்து முக்தியை யடைவிக்கும் பிரயத்தன மொன் றையே செய்துவருகின்றவள். அவள் சிருஷ்டிக்காம லிருப்பாளா ஞல் தாவரஜங்கம ரூபமான இப்பிரபஞ்சம் ஜடமாகவே யிருக்கும். தயையை ஆச்ரயித்துச் சேதனுசேதனங்களே ரக்ஷணே செய்கின் ருள். அவைகளே எப்போதும் காரியத்தில் பிரேரேபிக்கிருள். ஆதலால் பிரமன் முதலாயிஞேருடைய மோகவிஷயத்தில் சந்தே கப்பட வேண்டியதில்லே. எல்லாச் சுராசுரர்களும் மாயையில் வீழ்ந்தவர்களாய் அம்மாயைக்குச் சுவாதீனர்களா யிருக்கின்ருர்கள். அந்தத் தேவி ஒருத்தியே ஒருவருக்குச் சுவாதீனமின்றிச் சுதந்தயை யாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறவள். ஓ அரசனே ! புவனேஸ் வரியை மாத்திரம் நமஸ்கரிக்கவேண்டும். அந்தப் புவனேஸ்வரிக்கு மேற்பட்ட வஸ்து மூன்று உலகத்திலுங்கிடையாது. இந்தச்சக்தி யினுடைய அதிகமான ஸ்ரீபாதஸ்மரணே ஜன்மஸாபல்யத்தைக் கொடுக்கத்தக்கது. எந்தக் குலத்துக்குத் தேவி குலதெய்வமல் லவோ அந்தக் குலத்தில் பிறக்கவேண்டாம். நான் தேவியைக் காட்டிலும் வேறுனவனல்லன் ; நான் துக்கமடைகிறவனல்லன் ; இப்படி பேதமில்லாமல் தேவியைச் சிந்திக்கவேண்டும். இவ்வுண் மையைக் குருமுகத்திஞலும் வேதாந்த சிரவணங்களாலும் அறிந்து பரமாத்ம சொரூபிணியான தேவியைத் தியானித்தல் வேண்டும் ; அவன் முக்தனுய்விடுகிருன். அப்படிக்கின்றிக் கோடிதருமஞ் செய்தாலும் முக்தனுகான். நிர்மலமான மனதுள்ள சுவேதாச்வ தரர் முதலான ரிஷிகளெல்லாம் தேவியை ஆத்மசொரூபமாகத் தியானித்து ஸம்ஸார பந்தத்திலிருந்தும் மோக்ஷமடைந்தனர்.

பிரம்மா விஷ்ணு முதலானவர்களும் ஸரஸ்வதி லக்ஷ்மி முதலானவர்களும் சச்சிதானந்த ரூபிணியாகிய அந்தத் தேவியைத் தியானஞ் செய்கின்றனர். ஓ அரசனே! உன்னால் எது எது கேட்கப்பட்டனவோ அவைகட்கெல்லாம் விடை சொல்லப்பட்டன. வேதத்துக்குச் சமமாயும் ஸர்வபாபத்தையும் போக்கடிப்பதாயும் அதியாச்சர்யகரமாயும் இருக்கிற அநாதியான இப்புராணத்தை எவன் நித்தியமாய்க் கேட்கின்றானோ, அவன் ஸர்வபாபத்தினின்றும் விடுபட்டவனாய்த் தேவியினுடைய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான். (66–83)

நான்காம் ஸ்கந்தம் முற்றிற்று.

# ஐந்தாம் ஸ்கந்தம்

पञ्चशरशास्त्रबोधन परमाचार्येण दृष्टिपातेन
काञ्चीसीम्निकुमारी काचनमोहयति कामजेतारम् ॥

*பஞ்சஶர சாஸ்திர போதன பரமாசார்யேண த்ருஷ்டி பாதேந
காஞ்சீ ஸீம்நிகுமாரீ காசந மோஹயதி காமஜேதாரம்.*

ஓம் கர்மாதி ஸாக்ஷிண்யை நம:

## 1. ருத்திரர் மேம்பாடு

*சவுனகாதியர் வினவுகின்றூர்* :—ஸர்வக்ஞ ஸம்பந்தன் பசுபதி யென்றுணர்ந்தும் பரமபோதகராகிய சூதமுனிவரே ! தேவரீர் கூறி வந்த நான்காவது ஸ்கந்தத்தால் கிருஷ்ணஜன்மாதி காரணப் பிரச்னேயும், சகலப் பிரபஞ்சோற்பத்திக்குக் கன்மகாரணங்களே யும், வசுதேவர் முதலியோரது அவதார காரணங்களேயும், ஸம்ஸார நிவிர்த்திக் குபாயத்தையும், நர நாராயணரது தவத்துக்கு இந்திரன் விக்னம்விளேவித்தமையும், அவர்களது ஆச்சிரமத்தில் வசந்தாதிகள் பிரவேசித்தமையும் அவர்களக் காலத்தில் ஸம்ஸார தத்துவ விசாரஞ் செய்தமையும், அங்கு பிரகலாதனும் நர நாராயணருஞ் சந்தித்தமை யும், சந்தித்த சமயத்தில் அவர்கள் யுத்தம் விளேத்தமையும், நாரா யணருக்குப் பிருகுவினல் வந்த சாபகாரணத்தையும், சுக்ராசாரியா ரிடம் ஜயந்தியை யனுப்பினமையும், தேவகுரு அசுரகுருவாய் அசுரரிடம் வந்தமையும், பிறகு சுக்ரர் அங்கு வந்தமையும், தைத் யரது யுத்தத்தில் தேவீ சாந்தஞ்செய்தமையும், விஷ்ணு நாஞவ தாரஞ் செய்தமையும், கிருஷ்ணுவதாரம் முதலியன வந்தமையும், விஷ்ணுவாதியர் தேவியைத் துதித்தமையும், தேவீ மஹிமையை வர்ணித்தமையும், தேவகியினுடைய ஏழு குழந்தைகளேக் கம்சன் வதைசெய்தமையும், ஜராசந்தன் முதலியோர் இன்ஞரின்ஞ ரம்ச மென்பதையும், ஸ்ரீ கிருஷ்ணஜன்மம், அவரது லீலே, அவரிடமஞ் ஞான மிருப்பதற்குக் காரண மிவையாமென்பதையும் நன்கு யறிய லாஞேம். இவைபோலும் இன்னமும் தேவி சம்பந்தமான மஹிமாதி சரிதம் அநேக மிருப்பதாகத் தங்கள் வாய்மொழியிஞல் தெரிய வருகின்றபடியால் அவைகளேயும் கேட்டின்புறுமாறு தேவரீரது சரணகமலங்களே நமஸ்கரிக்கிருேமென்று வணங்க, சூதபகவான் ஐந்தாவது ஸ்கந்தத்திலுள்ள தேவியினது திவ்விய சரித்திரங்களேக் கூறலுற்றனர்.

சவுனகாதியர் தாம் வேண்டியவாறு சூதமுனிவர் அன்புடன் சொல்லத் துணிந்தனராதலால் இதுகாறுங்கேட்டு வந்தவைகளுள் தங்களுக்கிருந்த ஐயங்களே யொழித்துக்கொள்வானெண்ணி வினவு கின்றூர் : ஞானபோதகராய் விளங்கும் எங்களேயரே ! ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய ஸர்வமங்களகரமாயும் சிரேஷ்டமாயுமுள்ள பல அற்புத சரித்திரங்களே விரிவாயெடுத்துரைத்தீர். அதில் எங்களுக்

குப் பல சந்தேகங்கள் தோன்றியிருக்கின்றன. அவைகளுட் சில வினவுகின்றோம். கிருஷ்ணரோ விஷ்ணு அம்சமாயுள்ளவர். அவர் அரண்யத்தில் செய்தற்கருமையாகிய சிவபூஜையைச் செய்தாரென்றும், பராசக்தியாகிய பார்வதியினால் அனுக்கிரகிக்கப் பெற்றாரென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றதல்லவா? அந்த கிருஷ்ணருக்கு என்ன குறைவு வந்தது? அதனைப் போக்கடிக்கத் தக்கவர் சிவனார் தானா? சிவனாராயிருந்தபோதிலும் அவரிடத்தில் இந்தக் கிருஷ்ணர் தாசபாவத்தையடைந்து ஆராதனை செய்துதானா தன் குறையைப் போக்கடித்துக்கொள்ளல் வேண்டுமென்றறற்றொடக்கத் தனவேயாம் என்றனர். அதற்குச் சூதமுனிவர், ஓ மஹரிஷிகாள்! நீங்கள் என்னை வினவியவாறே என தாசிரியராகிய வியாச முனிவரை ஜனமேஜயன் வினவியிருக்கின்றான்; அதற்கவர் விடை கூறியிருக்கின்றார். அவ்வினா விடைகளைக் கூறுகின்றேன், கேட்பீர்களாக.

ஜனமேஜயன் வியாசபகவானைப் பார்த்து வினவுகிறான்: ஓ சகல தத்வார்த்த போதகரே! ஸ்ரீ கிருஷ்ணர் விஷ்ணு மூர்த்தியினுடைய அம்சந்தானே? அவருடைய அம்சமானபொழுது அவ் விஷ்ணு மூர்த்தியினுடைய பிரபாவகுண சீல சுபாவங்களெல்லாம் இவருமுடையவர்தானே? பெரியோர்களும் கிருஷ்ணபகவான் செய்த எல்லாச்செய்திகளையும் விஷ்ணுமூர்த்திக்கே ஏற்றிப்புகழ்ந்துகொண்டாடுகின்றார்கள்ல்லவா? அங்ஙனங் கொண்டாடுவதனால் விஷ்ணு மூர்த்தியே கிருஷ்ணமூர்த்தி என்பதற்குச் சந்தேகமு முண்டோ? ஆயின், விஷ்ணுமூர்த்தியானவர் ஸர்வாத்மாவா யுள்ளவர், ஸர்வ சித்தியையுங் கொடுக்கின்றவர், ஸர்வேஶ்வரனா யுள்ளவர், சிருஷ்டி ஸ்திதிலயமென்கிற முத்தொழிலைச் செய்கின்றவர் என்றற்றொடக்கத்தனவாகிய கடவுட்டன்மைக்குரிய பிரபுத்வ குணாதிசயங்களெல்லாம் உடையரல்லவா? அவர் வனத்தின்கண் சிவனாரைத் தனக்கு மேலொரு கடவுளாகக் கொண்டு சிற்றறிவுடைய சிற்றுயிர்களைப் போல் பூஜித்து வழிபட்டாரென்றும் அருமையான உக்கிரமாயுள்ள தவத்தைச் செய்தாரென்றும் பார்வதியாலனுக்கிரகம் பெற்றாரென்றும் இப்பொழுது தேவரீரால் சொல்லப்பட்ட கிருஷ்ணருடைய உபாக்கியானத்தில் கேட்டே னன்றோ? அந்த விஷ்ணு மூர்த்தியாகிய கிருஷ்ணமூர்த்தி தவமும் சிவபூஜையும் செய்வதற்குக் காரணமென்னை யென்றனன். (1–11)

வியாசர் கூறுகின்றார்:—ஜனமேஜயனே! நீ சொல்லிவந்தனவெல்லாம் உண்மையே. விஷ்ணுவானவர் தேவர்களுடைய காரியங்கட்கெல்லாம் அனுகூலராயிருந்து அசுரர்களைச் சங்கரிக்கின்ற தொழிலுடையவரல்லவா? தேவகாரியமாகவன்றோ கிருஷ்ணராக அவதரித்தது? அவ்வவதாரம் மனுஷ்ய அவதாரமல்லவா? மானிடராய்ப் பிறந்தபொழுது வருணாச்சிரமாதி தருமங்களைக் கைக்கொண்டு ஒழுகுதல் அவசியமான தருமமல்லவா? ஆகலான் கிருஷ்ணமூர்த்தி அனேகம் பெரியோருடைய பூஜையும் குருபாத சேவையும் பிராம்மண சிஶ்ரூஷையும் செய்திருக்கின்றனர். இவையெல்லாஞ் செய்தவர் சிவபூஜையைத் தானா செய்யக் கூடாது?

அன்றியும் விஷ்ணுவானவர் குணரூபரேயன்றி நிர்க்குணரூப ரன்றே. ஆகவே குணரூபரானவர் குணஸம்பந்தமான மானிடராதி சரீரங்களை யடைவதற்குச் சந்தேகமென்ன? அந்தச் சரீரங்களை எடுக்கும்பொழுது அதற்குரிய சுகதுக்காதி பலவிகாரங்களை யடைவதற்குத் தடையென்ன? இத்தனை விகாரச் செயல்கட்கு உரியரானவர் நிர்க்குணராய் நிர்விகாரியாயிருக்கின்ற சிவனுரைத் தாறு பூஜிக்கக் கூடாது? கிருஷ்ணர் பாண்டவர் முதலியோருடைய ஸம்ஸர்க்கத்தில் துக்ககாலத்தில் துக்கித்தும் சந்தோஷ காலத்தில் சந்தோஷித்தும் வாதம் வந்த காலத்தில் வாதங்கள் செய்தும் ஸ்திரீகளைக் கண்ட காலத்தில் காமவிகாரங்கொண்டும் இவ்வண் ணமே குரோதலோபாதிகளுண்டாகுங் காலங்களில் அவ்வச் செயல் களைச் செய்தும் காந்தாரி சாபத்தாலும் பிராம்மண சாபத்தாலும் தனக்கு மரணவஸ்தையும் தன்னைச் சார்ந்த யாதவர்களுக்கு நாச மும் தன் மனைவியர்களுக்கு சோரபயமும் தன்னைத் துணையாய்க் கொண்டிருந்த அருச்சுனனுக்குக் காண்டீபத்தைத்தாங்கிச் சோரர் களைப் போக்கடிப்பதற்குக் கூடாத சக்தியீனமும் தனது கிருகத்தி லிருந்த பிரத்யும்னன் அனிருத்தன் இவர்கள் அபகரிக்கப்பட்டுப் போனமையை யுணராமையும் ஆகிய சிற்றறிவும் சிறுதொழிலு முடைய இவர், பேரறிவாளரும் முடிவிலாற்றலுமுடைய சிவனுரைப் பூஜித்தாரென்பது ஓர் ஆச்சரியமாகுமா? அன்றியும் இவர் நாரா யணரென்னும் ரிஷியினுடைய அம்சமாயுள்ளவர். ஈசரோ பரமாத்ம சொரூபமாகிய மஹேசர்; விஷ்ணு முதலானவர்களைத் தன்னிடத் தில் லயப்படுத்திக் கொள்ளுகின்றவர், தான் லயமாவதற்குத் தனக்கு மேலொரு நாதனில்லாதவர். நாதராகிய தன்னிடத் திருந்தே பலமுறையும் விஷ்ணுவைத் தோற்றுவிக்கின்றவர். இத் தன்மையர் கிருஷ்ணமூர்த்தியால் ஏன் பூஜிக்கப்படமாட்டார்? சிவ னுர் பூஜிப்பதற்குரியராறுற்போலும் பார்வதியார் ஏன் அனுக் கிரகிப்பதற்குரியராகாமற் போவர்? பிரம்மா அகார ரூபமென்றும், விஷ்ணு உகார ரூபமென்றும், ருத்திரர் மகார ரூபமென்றும் மஹேஸ் வரியாகிய பார்வதியார் அம்மூவெழுத்தி னர்த்தமென்றும் சொல்லப் பட்டிருக்கின்ற பொழுது ஒருவர்க் கொருவர் மேலானவரென்று நன்ருய் விளங்குகின்றது. அக்காரணத்தால் ஸர்வசாஸ்திரங்களும் ஸர்வ சிரேஷ்டமாகிய அர்த்த சொரூபமாய்க் காணப்படும் இச் சக்தியையே உத்தமோத்தமராகிய மஹேஸ்வரன் மஹேஸ்வரி என்று தோத்திரஞ் செய்கின்றனர் இங்ஙனங்கூறிவந்த விசேஷத்தால் மஹா ருத்திரராகிய பரமசிவனுரும் பார்வதியாரும் பூஜிப்பதற்கும் அனுக்கிரகிப்பதற்கும் உரிமையராறுரென்பது நிச்சயிக்கப்பட்டது. அன்றியும் பிரமனைக்காட்டிலும் விஷ்ணு அதிகரென்றும், அவரினும் ருத்திரரதிகரென்றும் ஏற்பட்டபடியால் தன்னிலும் அதிகராகிய ருத்திரரைக் கிருஷ்ணர் பூஜித்தா ரென்பதிற் சந்தேகமில்லை. இந்த ருத்திரரே பிரமனுக்கு வரமளிக்கு நிமித்தம் தமதிச்சாமாத்திரத் திறுல் அவனுடைய முகத்திற்றேன்றி அவனுக்கு வேண்டிய வரங் களை அனுக்கிரகஞ் செய்திருக்கின்றனர். (12–26)

ஓ அரசனே ! இனி கிருஷ்ணர் சிவனுரைப் பூஜிக்கலாமா வென்று வந்த சந்தேகத்தை விடுவாய். இனி மஹாசக்தியினுடைய பெருமையைக் கேட்பாயாக. பிரமன் முதலிய மூவருக்கும் அதிகர், நிர்க்குணராகிய மஹாருத்திர ரென்றும், அவரை யுடைமையாக வுடைய யாதொரு சக்தியோ அதுவே மஹாசக்தி என்றும் அறிவாய். அம் மஹாசக்தி தனது கண்ணிமை கொட்டுவதற்குள் பிரபஞ்சத்தை ஆக்கி அளித்து அழிக்கின்ருள். அவளுடைய சங்கற்ப சக்தி இத்தன்மைத்தென்று ஒருவரானும் அறியப்பட்டதன்று. அங்ஙனம் அறியக் கூடாத சங்கற்ப சக்தியையுடைய அத்தேவியே எக்காலத்தும் அவ்வச் சமயங்கட் கேற்றவாறு பிரம்மவிஷ்ணு ருத்திரர்களை அநந்தவிதமாகப் படைத்துத் தனது மாயாயோக பிரபாவத்தால் அநந்தவிதமாக அவர்களை யாட்டுகின்ருள். ஆகலான் அம்மூவருள் ஒருவராகிய விஷ்ணுமூர்த்திக்கு யுகங்கடோறும் பலவேறு அவதாரங் களுண்டாகின்றன. அவற்றுளொன்ருகிய கிருஷ்ணவதாரத்தில் அவரைப் பிரசவ கிருகத்தினின்று ஒருவருமறியாவண்ணம் வெளிவரச் செய்ததும், நந்தகோபனுடைய கிருகத்தில் ரக்ஷித்ததும், மதுரா நகரத்தை யடையச்செய்ததும், பயந்த சித்தத்தை யுடையவ ராக்கித் துவாரகையை யடையச் செய்ததும், தன்கலையினின்று பதிஞயிரத்தைம்பது ஸ்திரீகளையுண்டாக்கி ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொருவனுகவிருந்து அவர்களுடைய லீலாவிநோதங்களுக்குரிய னுகி அவர்களிடத்தில் தாசபாவத்தோடு சுவாதீனனு யிருக்கச் செய்ததுமாகிய இவையெல்லாம் அந்த மஹாசக்தியினுடைய மாயா யோக பிரபாவமென்றே அறிவாய். அதனுடைய பிரபாவமன்ருயின் உலகில் சாமர்த்தியமுடைய ஒரு புருஷனுக்குச் சாமான்யமாகிய ஒரு ஸ்திரீ விலங்குபோன்று அவனைத் தடைப்படுத்தி வேருெருவர் பால் செல்ல வொட்டாது துன்பமுறுத்துகின்றனளே, பூனைவாயி லகப்படும் கிளிபோன்ற கிருஷ்ணமூர்த்தி யொருவர் அந்த அள விறந்த ஸ்திரீகளுக்கு எம்மாத்திரமாவர் ? அந்தப் பிரபாவத்தி னுற்ருன் அத்தனை ஸ்திரீகளாலுந் தானொரு துன்பமு மடையாமல் அவ்வவர்களுக்கும் பிரியராய் அவர்களா லனுபவிக்கப்படுவன வாகிய கிரீடைகளுக்கெல்லாம் தான் ரசிகராயிருந்தனர்.

இதுவரையில் மஹாசக்தியினுடைய மாயாயோகப் பிரபாவத் தால் கிருஷ்ணமூர்த்திக் குண்டாகிய பிரபாவத்தைக் கூறினேன். இனி கிருஷ்ணமூர்த்தியினுடைய குணவிசேஷத்தால் விளைந்த கோலாகல களேபரப் பிரபாவத்தைக் கூறுகின்றேன், கேட்பாயாக.

அனேக தருமானுஷ்டான விதிகளைச் செய்யவேண்டுமென்று பூமியிற் பிறந்த இவர் சிசுபாலன் முதலானோரைக் கொன்றபின்னர் விதர்ப்பத்தேசத் தரசனுகிய வீமன் கன்னிகையை அபகரித்து விவாகஞ்செய்து கொண்டார். அன்னியனுடைய மனைவியை அபகரிப்பது எந்த விதியைச் சாரும் ?

இப்படியே இவரியற்றிய விதிகடந்த அவிதியான கிருத்தி யங்கள் பலவுள. அவைகளை நாமும் முன்னரெடுத்துக் காட்டி

யிருக்கின்றோம்; நீயுங் கேட்டிருக்கின்றாய். இனி ஆங்காங்குங் காட்டுகின்றோம். (27–34)

சரீரமுள்ளவன் அகங்கார வசப்பட்டவனாய் நன்மை தீமைகளைச் செய்கின்றான்; ஏனெனில், அஞ்ஞான சமூகத்தால் அறிவு மூடப்பட்டு அறியாமை மேலிடுவதினால் அவிதியைச் செய்யத் தலைப்படுவனேயன்றி வேறென்செய்யத் தலைப்படுவன்? இப்பிரபஞ்சம் மூலபிரகிருதியினின்றுந் தோன்றிய தாமஸ அகங்காரத்தினின்றும் வெளிவந்துள்ளது. இப்பிரபஞ்ச சம்பந்தமான முத்தொழிலும் அகங்கார சம்பந்தமுள்ளது. அதனால் அத்தொழில் செய்யு மும்மைத் தேவரும் அச்சம்பந்தமுள்ளவர். அம்மூவரும் அச்சம்பந்தமிலராயின் அத்தொழிலைச் செய்ய இயல்புடையராக மாட்டார். எவனொருவன் அகங்காரம் இத்தன்மைத்தென்றுணர்ந்து அதனின்றும் விடுபடுகின்றானோ அவன் முக்தனாகின்றான். முக்தனானேயாயின் புத்திர மித்திர களத்திராதிகளாகிய பந்தத்தினின்றும் விடுபடுவதற்குரியவனாவான். அகங்காரமுடையவனே பந்தன். அது வொழியப் பெற்றவனே முக்தன். ஆகவே பந்தஞ் செய்வது அகங்காரமே. அகங்காரம் என் செய்வதெனின்? நான் கர்த்தா; பலிஷ்டனாகிய என்னால் இது செய்யமுடியும்; நான் மனுஷ்யன்; நானிது செய்திருக்கின்றேன்; இது செய்கிறேன்; இது செய்யப் போகிறேனென்று எவ்வவற்றினும் முற்பட்டு வரச் செய்யும். இவனாலொன்றும் ஆகாதிருப்ப ஆவதுபோற் காட்டி அவற்றில் கட்டுபடச் செய்வதனால் அகங்காரம் பந்தமாயிற்று. மண்ணாகிய காரணமன்றிக் கடாதிகளாகிய காரியம் எப்படி உண்டாக மாட்டாதோ அதுபோல அகங்காரமாகிய காரணமன்றிச் செய்வேன், போவேன், ஆக்குவேன், காப்பேன், அழிப்பேன் என்கிற வாசகங்கள் உண்டாகமாட்டா.

இவ்வண்ணம் விவகரிப்பதற் கிடஞ்செய்வதாகிய பிரபஞ்ச விவகாரத்தில் சுத்தமாகிய அபிப்பிராயமுள்ளவன் தலைப்படுவதற்கு முயல்வானா? விஷ்ணுவானவர் ரக்ஷிக்கிறாரென்றால் நான் ரக்ஷிக்கிறேனென்று அகங்காரத்தை மேற்கொண்டு ரக்ஷகத் தொழிலைச் செய்கின்றாரேயன்றி அகங்காரத்தை விட்டா அதனைச் செய்கின்றார்? அதனை விட்டு அத்தொழிலைச் செய்பவராயின் அத்தொழிலை யுத்தேசித்து ஜனனமாகிய பிரவாகத்தில் மூழ்கி வந்தலைய வேண்டுவதில்லை. அப்படிச் செய்கின்றவர் முன்கூறிய திரிகுணாதீதராகிய மஹாருத்திரரொருவரே. அவரொழிந்த ஏனையரெல்லாம் அகங்காரத்தாற் செய்கின்றவரே. அகங்காரத்திற்கு மூலம் மோகமாகிய அஞ்ஞானம், அதனாலுண்டாவது ஸம்ஸாரம். அகங்காரத்தை விட்டவற்கு மோகமில்லை. அஃது இல்லாதவர்களுக்குச் ஸம்ஸாரமுமில்லை.

தத்துவார்த்த முணர்ந்த பெரியோர்கள், உலகின் கண்ணுள்ள மானிடர்கள் ஸாத்விகர்கள், ராஜஸர்கள், தாமஸர்கள் என்று அழைக்கப்படுவார்களென்றும் அப்படியே மும்மூர்த்திகளும்,

துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி என்றெண்ணப்பட்ட மும்மைத் தேவியரும் மூன்றுலகிலுமுள்ள ஏனைய ஸ்திரீ புருஷர்களும் அப்படியே அழைக்கப்படுவார்களென்றுங் கூறுவர். மாயையினால் ஆவரிக்கப் பட்டவராயும் மந்தபுத்தி யுடையவராயுமிருக்கின்ற பண்டிதர் சிலர் பரவாசுதேவராகிய விஷ்ணுமூர்த்தியானவர் தமதிச்சையினால் அநேக விதங்களாய் லோகரக்ஷணார்த்தம் அவதாரங்களைச் செய்கின்றாரென்று சந்தேகமற்றவராய்க் கூறுகின்றார்கள். அந்தோ! எவ்வளவு மூடனாயிருந்தபோதிலும் துக்க சமூகங்கள் நிறைந்துள்ள அத்தியந்த சங்கடமாகிய கர்ப்பவாசத்தில் புத்தியை வைப்பானா? வைக்கமாட்டான். இந்த வாசத்தில் ஞானமுள்ளவரும் பிரசித்தி பெற்றவருமான விஷ்ணு மூர்த்தியானவர் எப்படிப் புத்தியை வைப்பார்? கோசலை தேவகி இவர்களுடைய கர்ப்பம் ஏனையருக்குள்ளது போல் கேவலம் மலமயமாயுள்ளதேயன்றி சுத்தமாயுள்ளதா? அந்தக் கர்ப்பத்தில் சுயேச்சையினால் அடைந்தாரென்று குருட்டுப் பண்டிதர்கள் சொல்லுகின்றார்களே, இஃதுதென்ன ஆச்சரியம்!

அதிபரிசுத்தமாகிய வைகுண்டபதத்தைவிட்டு துக்கப்பிரதமாயும் அதிக சிந்தனைகளை விளைவிப்பதாயும் விஷத்தினுங் கொடிய விஷமாயும் இருக்கின்ற அபரிசுத்தத்திற் சிறந்த அந்த கர்ப்பகுண்டங்களில் எப்படிப் பிரவேசிக்கத் துணிவார்?

உலகில் அநேகவிதமான தவங்கள் தானங்கள் யக்ஞங்கள் முதலியவற்றைச் செய்து கர்ப்பவாசம் வராவண்ணம் பிரார்த்திக்கின்றார்களே யல்லாமல், அந்த வாசம் வேண்டுமென்று பிரார்த்திப்பாரில்லையே! விஷ்ணுவானவர் தாம் சுதந்தரராயிருப்பாரானால் ஏன் கர்ப்பவாசம் செய்யப் பலமுறையும் வருகின்றார்? சுவாதீன தருமம் அவருக்கிருக்குமேயானால் கர்ப்பவாசத்தில் எப்படி ருசியுண்டாகும்?

ஓ புத்திமானாகிய அரசனே! பிரம்மாதி ஸ்தம்பபரியந்தமாயுள்ள தேவர் மானிடர் திரியக்குகளாகிய இந்தப் பிரபஞ்சம் மஹா சக்தியினுடைய மாயாயோகவசத்தில் கட்டுப்பட்டு ஆடுகின்றதென்று அறியக்கடவாய். பிரம்ம விஷ்ணுவாதியரை மாயைக்கு அதீதப்பட்டவரென்று சிலர் பிரமிக்கின்றார்கள். நீ அவர்களை நான் சொல்லிவந்த முறையால் சிலந்திப்பூச்சி தான் செய்யும் தொழிலால் தானே கட்டுண்டிருத்தல்போல் தங்கள் தொழிலால் தாங்களே கட்டுண்டிருப்பவரென்றறிவாய். (35–54)

ஓம் காரயித்ர்யை நம:

## 2. மகிஷன் உற்பத்தி

அரசன், வியாசபகவான் சொல்லிவந்ததைக் கேட்டு விஷ்ணு மூர்த்திக்கும் மஹேஶ்வரிக்குமுள்ள உயர்வு தாழ்வுகளை நன்குணர்ந்து ஈஶ்வரியினுடைய பிரபாவத்தைக் கேட்பதில் ஆசையு மன்புமுடையனாய், ஓ வியாசபகவானே! தேவியினுடைய சரித்தி

த்தைக் கேட்பதற்கு நான் மிக ஆவலுடையவனுயிருக்கிறேன். இச்சரித்திரத்தைக் கேட்க விரும்பாதவரு முலகிலுண்டோ? தேவியி னுடைய மகிமையை அறிவதை விட்டு அவளிடத்துத் தோன்றிய சராசராத்மகமாகிய உலக விவகாரத்தை அறிவதென்ருல் எவனுல் முடியுமென்று சொல்லக்கேட்ட முனிபுங்கவர், ஓ அரசனே! கேட் பதில் சிரத்தையுள்ளவனுயும் அறிவதில் சாந்தகுண முடையவனுயு மிருப்பவனுக்கு எவன் கேட்பதைச் சொல்லாதொழிகின்ருனே, அவன் மூடனென்று சொல்லப்படுவான். ஆகையால் நீ விரும்பிய வண்ணம் தேவியினுடைய சரித்திரங்களைக் கூறுகின்றேன், கேட் பாயாக என்று கூறுகின்ருர். (1–3)

பூர்வம் மகிஷனென்னும் ஓரசுரன் அரசாண்டு வருங்காலத்தில் சுராசுரர்களுக்கு அதிகோரமாகிய யுத்தம் நேரிட்டது. அதுகண்ட மகிஷன் மேருமலைக்குப் போய்ப் பிரமதேவனை இருதய கமலத்தில் தியானஞ்செய்து யாவரும் அதிசயிக்கத்தக்க வுக்கிரமான தவத்தைப் பதினுயிரம் வருஷஞ் செய்தனன். பிரமதேவன் அவன் தவத்திற்கு மகிழ்ந்து, ஹம்சவாகனுரூடனுய் அவனெதிரே வந்து, ஓ தவச்சிரேஷ் டனே! நீ வேண்டிய வரங்களைக் கேட்பாய். யான் தருகின்றே னென்றனன். அசுரன் அப்பிரமனைக் கண்டுகளித்து எல்லா வற்றையும் படைத்தருளும் வள்ளலே, என்று கூறுகின்ருன்:— யான் மரணமடையாதிருக்க வேண்டுகின்றேன், எப்படியானுல் எனக்கு மரணபயம் வராமலிருக்குமோ அப்படி யனுக்கிரகஞ் செய்வாய். ஏனெனில் ஜன்மமெடுத்தவன் மரணமடைவது நிச்சயம்; ஜனனமெடுத்த யான் மரணமடைய வேண்டியவனுயிருத்தலால் அது வராவண்ணம் நீ அனுக்கிரகஞ் செய்வதுதான் விசேஷம். ஜனன மரணம் யாவருக்கும் உள்ள காரியமே. தவஞ் செய்ததனுல் யானடையும் விசேஷமென்ன,வென்றனன். பிரமதேவன் அசுரனைப் பார்த்துக் கூறுகின்ருன்: உலகில் சரமாயும் அசரமாயுமுள்ள எல்லாப் பிராணிகளும் காலதத்துவமென்னும் ஓரளவையில் நிற் கின்றவர். அக்காலதத்துவமன்றி பிராணிகள் ஓரணுவளவும் அசை தற்கு முடியாது. அக்காலமோ ஜனனகாலம் மரணகாலம் என இருவகைத்தாயிருக்கும். அந்தக்கால வகையை மாற்றுவதற்கு யான் கடவுளாவனு? யானும் அதற்குட்பட்டவனே. ஆதலான் மரணகாலத்தைக் கடத்தலாகிய அந்தவர மொழிந்து மற்றெந்தவரம் வேண்டினுலும் தருகின்றேனென்ருன். அசுரன் கூறுகின்ருன்: ஆனுல் எனக்குத் தேவர்களாலும் மானிடராலும் தைத்தியர்களா லும் மற்றெவராலும் மரணமுண்டாகக் கூடாது. இவரல்லாத எந்த ஸ்திரீ என்னைக் கொல்லப் போகின்ருள்? அதனுல் அவளை நான் குறிக்கவில்லை. நீ ஸ்திரீயினுல் மரணம் எனக்கு வரச்செய். இவ் வுலகில் எந்த ஸ்திரீயானவள் என்னைக் கொல்வதற்கு வருவாள்? எவ்வண்ணம் சாமார்த்திய முடையவளாவாள்? பிரமன் பராசக்தி யாகிய ஒரு ஸ்திரீ இருக்கின்ருளென்பதை யுணராது மகிஷன் கேட்ட வரத்துக்கு மிகவும் மகிழ்ந்தவனுய், ஓ மகிஷாசுரனே! ஒருக்

கால் எப்போதாவது ஸ்திரீயினால் உனக்கு மரணமுண்டாகும், புருஷர்களால் மரணமில்லை என்றனுக்கிரகஞ் செய்து போயினன். அசுரனும் தன்னிடத்தைப் போய்ச் சேர்ந்தனனென்று வியாச முனிவர் கூறியபொழுது அரசன், ஓ சுவாமிகாள்! மகிஷாசுரன் எவன் மகன்? எவ்வண்ணம் பலிஷ்டனாயினன்? அவனுக்கு மகிஷ ரூபம் எப்படி வந்ததென்று வினவினன். (4–16)

வியாசர் கூறுகின்றார்:—ஓ அரசனே! பூமண்டலத்தில் தனு என்பவ னொருவனிருந்தான். அவனுக்கு ரம்பன் கரம்பன் என்று இரண்டு குமாரர்க ளிருந்தனர். அவ்விருவருள் கரம்பனென்பவன் பஞ்சநதமென்னுந் தீர்த்தத்தில் மூழ்கியும், ரம்பனென்பவன் அந்தத் தீர்த்தக் கரையிலுள்ள ஆலமரத்தடியில் பஞ்சாக்னி மத்தியிலு மிருந்தும் நன்மக்கட்பேறுவேண்டி அரியதவத்தைச் செய்துவந்த னர். இவர்களது தவச்செயலை இந்திரனறிந்து துக்காக்கிராந்தனாய் முதலையுருவெடுத்து பஞ்சநதி தீர்த்தத்துட்சென்று கரம்பன் காலை யிழுத்துக்கொன்றான். அவன் மரணமடைந்ததைக்கண்ட தமயனா கிய ரம்பன் மனம் சகிக்கலாற்றாது தன் தலையையரிந்து அக்னியில் ஓமம் பண்ணுவதற்கெண்ணி உக்கிரங்கொண்டு இடக்கையால் தனது சிகையைப் பிடித்துக்கொண்டு வலக்கையால் வாளை எடுத்து சிரசைவெட்டத் தொடங்கியபொழுது அக்னிதேவன் பிரத்தியக்ஷ மாய்வந்து, ஓ அசுரனே! நீ அசுரர்களுக்குள் மூடனாயிருக்கின்றாய். நீ செய்யத்துணிந்த இச்செய்கை ஆத்ம காதமல்லவா? அது பெரும் பாவமல்லவா? இதனைச் செய்ய எப்படித் துணிந்தாய்? சாகாதே; சாவதினா லென்ன காரியமாகப்போகிறது? உன்னபீஷ்ட மென்ன? அதனைக்கேளென்றனன். அப்பொழுது ரம்பனென்பவன் பிடித்த சிகையைவிட்டு அக்கினி தேவனைப்பார்த்து, எனது தவத் துக்கு நீர் மகிழ்ந்திருப்பீராயின் என் மனோரதமாகிய வரத்தைத் தந்தருளும். என்னையெனின், மூன்றுலகத்தையும் வெல்லத்தக்கவ னாயும் சத்துருசங்காரனாயும் தேவர் மானிடர் அசுரராதியரால் வெல்லக்கூடாதவனாயும் காமரூபமெடுப்பதற்குச் சக்திமானாயும் மஹாபராக்கிரமசாலியாயும் யாவரானும் நமஸ்கரிக்கத் தக்கவனாயு முள்ள ஒரு புத்திரனைத் தரல் வேண்டுமென்று கேட்க, அக்னி தேவன், நீ எண்ணியபடியே குமாரனுண்டாவான். நீ மரணமடைய வேண்டாமென்ன, ரம்பனும் அக்கினிதேவனை வணங்கித் தன் னிடஞ் சென்றான்.

ஒருநாள் ரம்பன் யக்ஷர்களால் சூழப்பட்டதாயும் அதிசுககர மாகிய மங்களத்தோடு கூடியதாயுமுள்ள ஓராலமரத்தடியில் மதச் செருக்கும் மிக்க அழகுமுள்ள ஓரெருமையைக்கண்டு வினைவசத் தால் காமவெறிகொண்டு அதனைச் சமீபிக்க அதுவும் இவனிடத் தில் சந்தோஷமும் ஆசையுமுடையதாய்ச் சமீபித்தது. ரம்பன் அக்கணமே அதனைப்புணர அது கருப்பமடைந்தது. பின்னர் ரம்பன் எருமையை அழைத்துக்கொண்டு பாதாளத்தை யடைந்து தான் மனைவியாகக்கொண்ட அந்த எருமையினிடத்தில் வேறொரு

கடாவும் வந்து சேரவொட்டாமற் றடுத்து அதனைக்காத்து வந்த னன். (17–36)

ஒருநாள் ஒரு கடா அந்த எருமையின்மேல் மிக்க காமங் கொண்டு அதைத் துரத்த, அதைக்கண்ட ரம்பன் அதனைத் துரத் தித் துரத்தி நன்றாய் மோதியடித்து ஓட்டினன். அது காமவெறி யோடு கோபவெறியுங்கொண்டு அந்த ரம்பனைத் தனதிருகொம்புக ளாலும் மார்பிற் குத்திற்று. அவன் பூமியில் வீழ்ந்திறந்தனன். அவனிறந்ததைக்கண்ட எருமை மிகவும் பயந்து மருட்சிகொண்டு அந்தப் பாதாளத்தைவிட்டுத் தான் முன்னிருந்த ஆலமரத்தடியில் யக்ஷர்களைச் சரணமடைந்தது. அவ்விடத்திலும் காமக்கடா சென்று எருமையைப் பின்றொடர யக்ஷர்கள் கடாமேற்சென்று வரு வதையும் அதற்கு எருமை இடங்கொடாது தங்கள்மாட்டு வருவ தையும் பார்த்து, அந்தோ ! இந்த எருமையை ரக்ஷித்தல் வேண்டு மென்றிரங்கி அந்தக் கடாவை விலக்கி அதனோடு பெரும்போர் செய்து பாணத்தைவிட்டு அக்கடாவைக் கொன்றனர்.

பின்னரந்த எருமை தன்னாயகனாகிய ரம்பனிறந்துபோனதை யெண்ணித் துயருறுங்காலத்தில் யக்ஷர்கள் பாதாளத்திற் கிடந்த பிரேதத்தைக் கொண்டுவந்து சிதை (பாடை) கட்டி அதிலவனை வளர்த்தியபொழுது அவனோடு அந்த எருமை அக்கினிப்பிரவேச மாவதக்கு எத்தனித்தது. அதனெண்ணமறிந்த யக்ஷர்கள் அத னைத்தடுத்தும் அஃது தடைப்படாது தீப்பற்றி எரிகின்ற கணவன் மேற் பாய்ந்தது. அப்பொழுது அதன் கர்ப்பத்திலிருந்த ரக்தபீஜ னாகிய மகிஷன் என்கிற அசுரன் அச்சிதாமத்தியிலிருந்து வெளிப் பட்டனன். பின்ன ரவ்வசுரன் அநேக அசுரர்களால் சூழப்பட்டு ராஜ்ய பட்டாபிஷிக்தனாய் தேவாசுரர்களாலும் ஜயிப்பதற்குக் கூடாதவனாய் அரசாண்டு வந்தனன். (37–50)

ஓம் கர்மபலப்ரதாயை நம:

## 3. மகிஷன் போர்க்கோலம்

ஓ அரசனே ! மகிஷாசுரன் ராஜ்யபட்டாபிஷிக்தனாய்த் தனது புஜபல பராக்கிரமத்தால் கடல்சூழ்ந்த பூமண்டலத்தைத் தன் கைவச மாக்கித் தன்னொரு குடையின்கீழ் வாழ்வோர் சத்துருபயம் முதலிய பயமற்று வாழச்செய்து சக்ஷுரன், மஹாவீரியன், மதோத்கடன், தனுத்யக்ஷன், தாம்பரன், அசிலோமன், உதர்க்கன், பிடலாக்கி யன், பாஷ்கலன், திரிநேத்திரன், காலன், பந்தகன் என்பவரைச் சேனாதிபதிகளாக்கி தனதாளுகை முற்றும் அவர்களையே நிறைந் திருக்கச் செய்தனன். அங்குள்ள மஹாவீராதி வீரரான எல்லா அரசர்களும் அவனடிக்கீழ்ப்பட்டுத் தத்தமக்குரிய பகுதிகள் கட்டி வாழ்ந்திருந்தனர். அந்தணரெல்லாம் அவனுக்குச் சுவாதீனராய் யக்ஞபாகங்களைக் கொடுக்கின்றவர்களாக விருந்தனர். இவ்வண் ணம் ஏகசக்ராதிபதியாய் வாழ்ந்து வருநாளில் ஒரு சமயம் சுவர்க்க

லோகத்தை வெற்றிகொள்ள நினைந்து ஒரு தூதனை யழைத்து, ஹே வீரா! நீ இப்பொழுது சுவர்க்கலோகம்போய் அங்குத் தேவ சபையிற் பயப்படாமற்சென்று இந்திரனைப்பார்த்து, ஓ இந்திரா! நீ இந்த சுவர்க்கத்தை விட்டுவிடு. உனதிஷ்டப்படி எங்கேனும் போ, அல்லது எங்கள் பிரபுவாகிய மகிஷாசுரனுக்குத் தொண்டு செய்; அப்படித் தொண்டனாகில் ராஜா உன்னை ரக்ஷிப்பார். இல்லா விட்டால் வச்சிராயுதபாணியாய் போருக் கெழுந்திரு. நீ எங்கள் பூர்வீகர்களால் ஜயிக்கப்பட்டவனன்றானே! உனது ஆண்பிள்ளைத் தனத்தை நானறிவேன். அகலிகையிடத்திற் சோரம்போய்ப் பூனையானவனே! உனது பராக்கிரமம் உலகமெல்லாமறியும். யுத்தத்திற்கெழுந்திரு. ஏன் விழிக்கின்றாய் என்று பலவாறாகச் சொல்லி அவனபிப்பிராயத்தைத் தெரிந்துவாவென்று ஏவினான். அத்தூதன் அவ்வாறே இந்திரனிடத்திற் போய்ச் சொல்ல, அவ்விந்திரன்கேட்டு மனம்புழுங்கிப் புன்னகைசெய்து கூறுகின்றான்: ஓ மூடா! கர்வம்பிடித்தவனே! நீ யார்? உன்னை நானிதுவரையிலறியேனே? உன்னுடைய எஜமானனுக்குப் பிடித்திருக்கிற மதகர்வமாகிய ரோகத்துக்கு நான் சிகிச்சைசெய்கிறேன். அதற்குமேல் ராக்ஷஸமூலத்தை வேருடன் பறித்தெறிகின்றேன். ஓ தூதனே! இனி ஒரு வார்த்தையும் சொல்லாமற் போ, என் வார்த்தைகளை உன்னையனுப்பிய கடாவுக்குச் சொல். ஓ கடாவுக்காக வந்த கருங்கடாவே! உன்னை யேவிய எருமைக்குப் பிறந்தவனுக்கு யுத்தஞ் செய்ய விருப்பமுளதாயின் சீக்கிரமா யோடிவரச் சொல். கடா ஓடி வரத்தொடங்கினால் அதனை மடக்க ஒருவராலு முடியாது. அவன் பூனை ஆகிருதியுள்ளவனன்று, கடா ஆகிருதி யுள்ளவன் ஆகலான் அவன் என்னிலும் பெரியவனே! யான் சிறிய அமுதுண்பவன். அவன் சுமை சுமையாய்ப் புல் தின்பவன். யான் சிறிய வச்சிராயுதமுள்ளவன். அவன் நீண்ட கொம்புள்ளவன். அவன் எவ்வாறிருந்தபோதிலும் கடா. நான் ஆயிரங்கண்ணனாயினுந் தேவராஜன். நானோ எக்காலத்தும் அழிவில்லாத தெய்வ பலமுள்ளவன். அவனோ சின்னாளில் அழிவுறும் வரபலமுள்ளவன். நானோ எல்லாந்தரும் கற்பகமுடையவன், அவனோ எல்லாமழிக்குங் கர்வமுடையவன். நானோ மஹாதேவியினால் ரக்ஷிக்கத் தக்கவன், அவனோ அத்தேவியினால் பக்ஷிக்கத் தக்கவன். என்னால் அவனடிபட்டுப் போகப்போகிறான், அவனடியால் நான் எந்நாளும் வாழப் போகிறேன். அடா தூதா, இனி நீ இங்குநில்லாது ஓடிப் பிழை, தூதாகவந்த உன்னைக் கொல்வது தருமமன்றென்று உயிரோடு விட்டேன். ஓடிப்போ! ஓடிப்போ!! என்று அவனைத் துரத்தி விட்டனன். (1–22)

ஓடிப்போன தூதன் மகிஷாசுரனிடத்திற் போய் நமஸ்காரஞ் செய்து கூறுகின்றான்: ஓ அசுரேந்திரனே! தேவேந்திரன் உங்களைச் சிறிதும் மதிக்கவில்லை. தேவசைனியத்தோடுங் கூடியிருக்கின்ற தன்பலத்தையே விசேஷமாக எண்ணியிருக்கிறான். இந்திரனால் எது சொல்லப்பட்டதோ அதை இச்சபையின்கண் எடுத்துச்

சொல்லத் துணியேன். வேறேதேனுஞ் சொல்லச் சொன்னால் சொல்லுகிறேன். க்ஷேமத்தை விரும்பினவன் பிரபுவினுடைய சந்நிதானத்தில் பிரபுவினால் விரும்பத்தக்க இனிய மொழிகளும் பிரபுத்வ விசேஷங்களும் எடுத்துச் சொல்ல வேண்டுமே தவிர அவைகட்கு வேறானவற்றை எடுத்துச் சொல்லுதல் நீதியன்றென்று அரசநீதி கூறுகின்றதல்லவா? ஒற்றுடல் என்கின்ற நீதியை யனுசரித்துத் தேவரீர் விரும்பிக் கேட்கும்பக்ஷத்தில் உமது ஆணைக் கஞ்சிச் சொல்லுகிறேன்; அதனால் குற்றமொன்றுமில்லை. இந்திரன் சத்துருவாதலால் யமன் கொக்கரிப்பதுபோல் விஷத்துக்குச் சமான மாகிய வார்த்தைகளைச் சோனைமாரிபோற் பொழிந்தான். அவற்றி லொன்று சொல்லவும் என்நாவெழவில்லை. அவற்றிலொன்று நீர் கேட்டாலும் உமக்கு என்ன கோபமுண்டாகுமோ தெரியவில்லை. ஆயினும் ஒன்று கூறுகின்றேன் : யான் அசுரேந்திரனனுப்பிய தூதனென்றேன். அதற்கு அவன் அசுரேந்திரனா, அவன் கடாக் களிற் பெரிய கடாவல்லவா? புல்லைத் தின்கிற மாடல்லவா? என் றான், என்று சொல்லினான். சொல்லுவதற்கு முன்னமே மகிஷன் கோபாவேசமுடையவனாய் வாலைத் தூக்கிக்கொண்டு மூத்திரம் பெய்து அசுரச் சேனைகளைக் கூவிக் கூறுகின்றான் : ஓ அசுரர்களே! இந்திரன் யுத்தஞ்செய்யச் சித்தனா யிருக்கின்றானாம். நீங்கள் போர்க்கோலம் கொண்டு முன்னே செல்லுங்கள் ; ஒரு இந்திரனல்ல கோடி இந்திரர் வந்தாலும் அவர்கள் என்முன்னே படப்போகிற பாட்டைப் பாருங்கள். எனக்கு முன்னே சூரனென்று எவன்றான் வருவான்? இனி இந்திரன் எவ்விடத்தில் ஓட்டம் பிடித்தாலும் நான் விடேன். கொல்வதற் கஞ்சேன். இந்திரனுடைய சூரத்வம் எங்கேயென்றால் சாதுக்களிடத்திலும் தவஞ் செய்வோரிடத்திலும் கபடிகளிடத்திலும் விடாளிடத்திலுந்தான் ; சுத்தவீரனாகிய என் போன்றவரிடத்தன்று. அவன் செய்தி யறியீர்களா? பரஸ்திரீகளை அபகரிக்கின்றவனல்லவா? அப்ஸர ஸ்திரீகளைக்கொண்டு தவஞ் செய்வோரைக் கெடுக்கின்றவனல்லவா? ஒரு ஆயுதத்தைப் பிர யோகஞ் செய்வது போற் காட்டி வேறு ஆயுதத்தைப் பிரயோகஞ் செய்கின்றவனல்லவா? எப்பொழுதும் விசுவசிக்கின்றவனைக் கொல்ல நினைக்கிற பாவியல்லவா? அவனைப்போலும் பிரஷ்டனு முண்டோ? துஷ்டனுமுண்டோ? அப்ஸர ஸ்திரீகளுடைய பலத் தினால் சற்றே கர்வத்தை யடைந்திருக்கிறான். நம்மவரில் நமுச்சி என்கிற அசுரன்றான் அக்கள்வனால் கொல்லப்பட்டான். (23–35)

விஷ்ணுவோவென்றால், இவனண்ணன்றா னவனும். கபடத்தில் ஆசார்யபட்டம் வகிப்பவன் ; மகா மோசக்காரன். பொய்ச் சபதத் துக்கு முதலாளியா யுள்ளவன். அநேகவிதமான மாயாரூப மெடுத்து வஞ்சிப்பதில் சமர்த்தன். பலமுள்ளவன்போல் டம்பங் காட்டுவதில் மஹா பண்டிதன். நம்மவரில் இரணியாக்ஷனைப் பன்றியுருவெடுத்துக் கொன்றவன். இரணியகசிபனை நரசிங்க வுருவெடுத்துக் கொன்றவன். இவனுக்கும் அந்த இந்திரனுக் குமா நான் வசப்பட்டவனாவேன்? ஆகேன், இது நிச்சயம்.

தேவர்கள் தேவரென்று பெயருடையவரேயன்றி மஹா வஞ்சகர். அவர்களிடத்தில் எனக்கு ஒருபொழுதும் நம்பிக்கை கிடையாது. யுத்தபூமியில் இவர்களெல்லாரும் என்னை என்ன செய்வார்கள்? ருத்திரரும் என்னை ஜயிப்பதற்குச் சக்தியுடையவராகார். ஏனைய திக்பாலகர் என்னை நினைக்கவேமாட்டார்கள். சுவர்க்கலோகம் எனக்குச் சுவாதீனமாகப்போகிறது. தேவர்களுக்குரிய யக்ஞ பாகங்களெல்லாம் இனி நம்முடையனவேயாம். நம்மினத்தவ ரோடுங்கூடி உல்லாசமாய்ச் சோமபானஞ் செய்யலாம். யான் தேவராலும் மானிடராலும் மற்றெவராலும் சாகாவரம்பெற் றுள்ளேன்; ஆனால் ஒரு ஸ்திரீயினாலுண்டென்று சொல்லக் கேட்டிருக்கின்றேன். அவளால் என்னைக் கொல்லமுடியுமா? அவளால் என்ன யுத்தஞ் செய்யமுடியும்? ஆகையால் நீங்கள் யுத்தத்துக்குப் பின்னிடவேண்டாம். இன்னமும் பாதாளத்திலுள்ள பர்வதவாசிகளாகிய ராக்ஷஸவீரர்களையும் வரவழைத்து, அவர்களை யும் சேனாதிபதிகளாகக்கொண்டு சீக்கிரத்தில் போர்க்குப் புறப்படுங் கள்; நீங்களஞ்சவேண்டாம். நானொருவனே தேவக்கூட்டங்களை வெல்லத்தக்கவன். உங்களை நானழைப்பது அலங்காரார்த்தமே யன்றி வேறன்று. தேவர்களை ஜயிப்பதற்கு எனக்கு அஸ்திரசஸ்தி ரங்கள் வேண்டாம்; என்னிரண்டு கொம்புகளே போதும். யுத்தம் முடிந்தபின்னர் நாமனைவரும் அங்குள்ள நந்தனவனத்திலிருந்து மந்தாரமாலைகளைச் சூடிக்கொண்டு தேவஸ்திரீகளோடு சல்லாபமா யிருப்போம். காமதேனுவின் பாலைப் பானஞ்செய்வோம். மத்திய பானமுஞ் செய்வோம். கந்தர்வருடைய நாட்டிய விசேஷத்தையுங் கண்டுகளிப்போம். ஊர்வசி மேனகை ரம்பை திலோத்தமை கிரகதாசி பிரமத்துவரை மகாசேனை மிச்சிரகேசி மதோத்கடை விப்பிரசித்தை என்பவர் ஆடலிலும் பாடலிலும் வல்லவர்கள்; அவ்விரண்டிலும் அவர்களைப்போலொருவருங் கிடையாது; நாமவைகளை நன்றாய்க் கண்டுகளிக்கலாம். அவர்கள் நமக்கு நானாவிதமான பான வர்க் கங்களை யூட்டுவார்கள். பலவித சந்தோஷகரங்களை விளைவிப் பார்கள். இதுபோலும் எந்நாளும் பலவாறான போகங்கள் நாம் அங்கு அனுபவிப்பதில் சற்றும் சந்தேகங்கிடையாது என்றனன். இவ்வாறு மகிஷாசுரன் வீரப்பிரதாபங்களையும் தனது வரப்பிரதா பங்களையும் யுத்தமுடிவில் விளையப்போகும் சந்தோஷப் பிரதாபங் களையும் பலபலவாக எடுத்துக்கூறி அசுரவீரர்களை யுற்சாகப்படுத்தி சுவர்க்கபுரிக்குப்போகும்படி கட்டளையிட்டுப் பின்னர் தங்கள் குலகுருவாகிய சுக்கிரரை வரவழைத்து அவரை யாராதித்து யுத்தத்தில் பாதுகாக்கும்வண்ணம் வேண்டிக்கொண்டு தானும் அதிக சந்தோஷத்துடன் யுத்தத்துக்குப் புறப்பட்டனன். (36–53)

ஓம் ஏகார ரூபாயை நம:

# 4. சுகதுக்க விமர்சனம்

ஓ ஜனமேஜயனே! இதுவரையில் மகிஷாசுரன் தனது சேனைகளை யுற்சாகப்படுத்தி இந்திரன்மேற் போர்க்கெழும்படிச் செய்த வரலாற்றைச் சொல்லக்கேட்டு வந்தனையல்லவா? இனி இந்திரனுடைய முயற்சியைக் கூறுகின்றேன், கேட்பாயாக என்று வியாசர் கூறுகின்றார்.

தேவேந்திரன் மகிஷாசுரனுடைய தூதன் தன்னிடத்து வந்து போனபிறகு தேவர்களையும் யமன், வாயு, வருணன், குபேரனாதியரையும் வரவழைத்து அவர்களைப்பார்த்துக் கூறுகின்றான்: இப்பொழுது மகிஷாசுரனென்கிற அசுரன்தோன்றி உலகாண்டு வருகின்றானென்பதும், அவன் ரம்பனென்பவனுடைய மகனென்பதும், அவன் வரபலத்தினால் அதிகர்வங்கொண்டுள்ளானென்பதும், அவன் அநேகவிதமான மாயைகளில் வல்லவனென்பதும் நீங்களறிந்தவரன்றோ? அவன் நம்முடைய சுவர்க்கத்தை யபகரிக்கவெண்ணி ஒரு தூதனை யனுப்ப, அவன் என்னைப்பார்த்து அஞ்சாது, அடா இந்திரா! என்று கூறுகின்றான்: நீ இந்த சுவர்க்கத்தை விட்டுவிடு. இஷ்டப்படி ஓடிப்போய்விடு. போனால் உன்னைத் துன்பப்படுத்துவதில்லை. ஓடிப்போகாமல் அவனுக்குப் பணிவிடைசெய்யத் துணிவையாயின் நீ நல்ல க்ஷேமத்தை யடைவாய். எங்களசுரேந்திரன் சரணடைந்தவரைக் காப்பதில் மிக்க தயவுள்ளவன். உனக்கு எவ்விதமான ஜீவனோபாயம் வேண்டுமோ அவ்விதமான உபாய விருத்தியைத் தேடுவான். அடிமையாகிய உன்னிடத்தில் எப்பொழுதுங் கோபங்கொள்ளான். இது உனக்குச் சம்மதமில்லையாயின் யுத்தத்துக்குப் பிரயத்தினஞ்செய். அதில் உனக்கு வெற்றியுண்டாவதில்லை. நான் போவதுதான் தடை, என்னைப் பார்த்தவுடன் மகிஷாசுரன் போருக்கு வருவதிற்றடையில்லை. வந்துவிட்டாரென்றே யெண்ணுவாயென்று சொல்லிப் போயிருக்கின்றான். ஓ தேவர்காள்! இதற்குமேல் நடத்தவேண்டிய யோசனையைச் சொன்மின். சத்துரு துர்ப்பலனாயிருந்தானாயினும் அவனை நாம் துர்ப்பலனையெண்ணுதல் கூடாது. அங்ஙனமென்னாது எப்பொழுதும் பிரயத்தனத்தைச் செய்கின்றவனான் பலவான். அதனைத் தன்புத்தியும் தனக்குள்ள படைத்துணை முதலியவற்றின் பலமுமெண்ணிப் பார்த்தே செய்தல் வேண்டும். அப்படிப் பிரயத்தனஞ் செய்தபோதும் ஜயாபஜயம் தெய்வாதீனமாயுள்ளது. சந்தி செய்யலாமெனின் அசுரன் யுத்தஞ்செய்யு முயற்சியிலிருக்கின்றதனால் அது நடவாத காரியம். அன்றியும் அவன் துஷ்டனானபடியினால் அவனிடத்தில் சந்தியை யுத்தேசிப்பது நிஷ்பலம். சந்தி எல்லாம் சாதுக்களிடத்திற்றான் செல்லும். இப்பொழுது நான் யுத்தத்துக்குப் போவதும் மற்றெவரும் போகாதிருப்பதும் முறையல்ல. போகவேண்டுமவரெவ்வாறிருத்தல்

வேண்டுமெனின், சோம்பலை எக்காலத்துங் கொள்ளாதவரும், போரையே விரும்பிப் பயமின்றிப் பிரவேசிக்கத்தக்கவரும், பிரவேசிக்குங் காலத்தில் எதிரியின் அங்கபாவத்தினாலேயே அவனது மனோபாவத்தை யறியத்தக்கவரும், அறிந்த பின்னர் சிநேகமுறைமையை நோக்காதவரும், அதனோடு மனைவி மக்கள் முதலாயினாரிடத்து ஆசையற்றவரும் ஆசை முதலியன அற்றாலும் சத்தியந் தவறாதவருமாயிருத்தல் வேண்டும். இத்தன்மையான வரை நம்முடைய காரிய சித்தியின் பொருட்டும் ஜயத்தின் பொருட்டும் எவ்விதமாய்ப் பிரயாணப்படுத்த வேண்டுமோ அவ் விதமாய்ப் பிரயாணஞ் செய்தல் வேண்டும். மகிஷாசுரனுக்குரிய வீரர்களுடைய பலாபலங்களும் நம் வீரர்களுடைய பலாபலங்களும் இவ்வளவினவென்று நன்று யறிந்துகொண்டு நீங்களும் சீக்கிர மாய்ப் போய்வாருங்கள். பின்னர் நானும் வரவேண்டுமானால் வருகிறேன். அஃது இல்லையாயின் அவனிங்கு வராவண்ணங் காவலைச் செய்கிறேன். இச்சமயத்தில் நாம் சோம்பலுற்றிருப் போமாயின் துக்கம் விளையும். ஆகையால் செய்ய வேண்டுவன செய்தல் வேண்டும். எதற்கும் பெரியோரைத் துணைக்கோடல் நன் றாகலான் பண்டிதர்களாகிய பெரியோர்களையுங் கலந்து யோசித்துச் செய்யத் தக்கதனைச் செய்வோம். அது பெரும்பாலும் சுகத்தையே கொடுக்கும். பெரியோர்களுக்கு நான்கு விதமான உபாயங்களுந் தெரியும். ஆனால் அசுரரிடத்தில் பேதமென்கிற உபாயஞ் செல்லாது. எனக்கொன்று தோன்றுகிறது. இப்பொழுது நம்மில் சிலரைத் தூதாக அனுப்புவோம். அவரால் தற்காலம் அவனுக்கிருக்கும் பலா பலங்களையறிந்து பின்னர், காரிய பாகம் அறிந்தவர்களைக்கொண்டு நியாய விரோதமின்றி நடத்துவோம். இதுவன்றி வேறுவிதமாய்ச் செய்வோமாயின் அது "நோயொன்றிருக்க மருந்தொன்று கொடுப் பதுபோல்" ஆகுமென்றனன். இந்திரன் மனோபாவத்தை அறிந்த தேவர்கள் தூதரை யனுப்பினர். அவர்கள் அதிவேகமாய்ச் சென்று மீண்டும் தேவேந்திரனைப் பார்த்து அவர்களுடைய பலங்களைத் தெரிவித்தனர். இந்திரன் அவர்களால் அறியவேண்டுவன வெல்லாம் அறிந்து ஆச்சரியமடைந்து உடனே பிரகஸ்பதி பகவானை வரவழைத்துப் பொற்பீடத்திலிருத்தி வந்தனை செய்து கூறுகின்றான் :—ஓ என்னாசிரியரே! ஸர்வஜ்ஞரே! இப்பொழுது எனக்கு நேர்ந்திருக்குந் துன்பம் அறிந்திருப்பீரே! இதற்கு நானென்ன செய்வேன்? என்ன செய்ய வேண்டும்? நீர்தான் துணை. மதத்தோடு கூடினவனும் மகா வீரனுமுள்ள மகிஷா சுரன் அநேக அசுர வீரரோடு என்னுடன் யுத்தஞ்செய்ய வருகின்றானாம். யோசனையறிந்த நீர் அதற்கெப்படி நடத்த வேண்டுமோ, அப்படி நடத்தும். அசுரர்களுக்குச் சுக்கிரர், இடை யூறு வராவண்ணம் காத்தும், வந்தாலொழித்தும், மற்றும் வேண் டிய வற்றை உபகரித்தும் வருகின்றார். அவர்போலல்லவா எனக்கு நீரும்? உம்மைவிட எனக்குப் பிரியமானவர் வேறு யாவரென்று பிரார்த்தித்தனன். (1–25)

பிரகஸ்பதி பகவான் சிலவுபாயங்களைத் தம் மனத்திலெண்ணி ஊக்கமுடையவராய்க் கூறுகின்றார் :—ஓ இந்திரா ! நீ தைரியத்தை வகித்துச் சுசியாயிரு. வியாகுலம் நேரிட்டபோது தைரியத்தை விடக்கூடாது ; ஜயாபஜயம் இருதிறத்தாருக்கும் பொது. அது தெய்வாதீனம். அதனால் போரிற்போகும் புத்திமானுக்குத் தைரியம் நீங்காதிருத்தல் வேண்டும். நடக்க வேண்டுவது நடந்தாலும் தைரியத்தை விடாதிருப்பதனால் வரும் நஷ்டமென்னை ? விடுவதனால் வரும் லாபமென்னை ? ஆகலான் பிரயத்தனம் மாத்திரம் தன் வலிவுக்குத் தக்கபடி நடத்தவேண்டும். மோக்ஷ காமிகளாகிய மகரிஷிகளும் அதற்குரிய சாதனங்களில் முயலுங்கால் எத்தனை இடுக்கண் வரினும் தாம்கொண்ட சாதனப் பிரயத்தனம் விடாமலிருக்கின்றனரேயன்றி அதனை விடுகின்றனரா ? நம் செயலொன்றுமில்லை, எல்லாந் தெய்வச் செயலென்றுணர்ந்தவரும் சும்மாவிராமல் முயற்சி கைகூடச் செய்யுமென்று தியானமாகிய முயற்சியைச் செய்கின்றார். ஆகையினால் போகார்த்தமா யிருக்கின்ற ராஜ விவகாரத்தில் செய்யவேண்டிய பிரயத்தனம் அவசியம் செய்யவேண்டுமல்லவா ? அப்படிச் செய்வதனால் சுகமுண்டானாலும் உண்டாகாமற் போனாலும், துக்கம் மாத்திரம் உண்டாகமாட்டாது. ஓ இந்திரா ! நல்வினை தீவினைப் பயனாகிய சுக துக்கங்களை நாமனுபவிப்பதற்குக் கடவுள் நம்மிடத்தில் கொடுத்திருப்பது முயற்சி யென்றறிவாய். முயற்சியும் கடவுளுடைமையாய் நிற்பதனால் நம் செயலொன்றுமில்லை யென்று பெரியோர் கூறி வருகின்றனர். இந்த உண்மையை யறிந்து முயற்சி செய்வதில் என்ன துன்பம் ? கடவுள் யாவரிடத்துங் கொடுத்திருக்கும் முயற்சியின்றி எவனுக்கு எது சித்திக்கும் ? புருஷன் பிரயத்தனஞ் செய்தும் காரியசித்தி யுண்டாகாமற் போகுமானால் குருடன் போலவும், முடவன் போலவும் சந்தோஷத்துக்கிடமில்லாமலல்லவா போகும் ? தெய்வத்தால் சரீரமும் முயற்சியும் படைக்கப்பெற்று அதுகொண்டு அவன் எத்தொழிலும் செய்யுங்கால் அதனுடைய லாப நஷ்ட விஷயத்தில் அவனைத் தூஷிப்பதில் யாதொரு பிரயோஜனமு மில்லை. தெய்வத்தாற் கூடத்தக்க முயற்சியன்றி சைனியங்களாலும் உன் யோசனைகளாலும் உனக்கு வேண்டியவர்களின் யோசனைகளாலும் ரதகஜ துரகபதாதிகளாலும் காரிய சித்தியாவதில்லை. யாவரும் தெய்வத்துக்குட்பட்டவர்கள். உலகில் பலவானயுள்ளவன் சுகமடைய வேண்டியவனயிருப்ப அவன் துக்கமடைகின்றான். பலஹீனன் துக்கமடைய வேண்டியவனயிருப்ப அவன் சுகமடைகிறான். இவை போலவே புத்திமான் பசியோடிருக்கின்றான் ; மூடன் பசியற்றுத் திருப்தனா யிருக்கின்றான். பேடியா யுள்ளவன் வெற்றி யடைகிறான் ; சூரனயுள்ளவன் தோல்வி யடைகிறான். இவைபோல்வன வெல்லாம் தெய்வத்தின் செயலல்லவா ? இவற்றில் என்ன விசார மிருக்கின்றது ? ஆகையால் விசாரமற்று நடக்கவேண்டிய விதத்தை எண்ணி அதற்குரிய முயற்சியில் சித்தத்தைச் செலுத்த வேண்டுமே தவிர, அதனால் வரும் துக்கத்திலாவது சுகத்திலாவது சித்தத்தைச்

சேர்ப்பித்தலாகாது. சத்துருக்களின் வழியில் எப்படி புத்திமான் சுவாதீனப் படாமலிருக்கின்றானோ அப்படிச் சுகதுக்கமாகிய சத்துருக்களின் வழி அகப்படாமல் சுகமுண்டாகுங் காலத்தில் அதிக சுகத்தையுந் துக்கமுண்டாகுங் காலத்தில் அதிக துக்கத்தையுங் காண்டல் வேண்டும். இந்தவிதமாய் இவ்விரண்டையும் பார்த்தொழித்து முயற்சி செய்தலாகிய தைரியமொன்றனையே கைக்கொண்டிருத்தல் வேண்டும். அந்தோ! ஒருவனுக்கு அதைர்யத்தில் எவ்வளவு துக்கமுண்டாகிறதோ, அதுபோல் தைரியத்தில் ஏன் சந்தோஷ முண்டாகிறதில்லை? இரண்டு முண்டாகிற காலத்தில் அவ்விரண்டிலும் சமமாய்ச் சகித்திருப்பது கஷ்டம். எவனுக்குச் சுகதுக்க முண்டாகிறதில்லையெனின் புத்தி நிச்சயமுடையவனுக்கு. நிச்சயம் யாதெனின்? துக்கமென்பது எது? அது யாருடையது? அது வினையின் குணம்; யான் நிர்க்குணன்; எனவே அந்தக் குணமுடையவன் நானன்று. நான் நாசமில்லாதவனா யிருக்கின்றேன். எனவே அந்தத் துக்கம் நாசமடைகின்றது, நான் நாசமடைகிறதில்லை. நான் தேகேந்திரிய முதலிய மாயா காரியங்கட்கு அப்பாற்பட்டவன். எனவே, அவைகட்கு வேறாக ஆன்மாவை யுணர்ந்தவன். அதனால் துக்கம், சுகம், பசி, தாகம், சோகம், மோகம், மூர்ச்சை முதலிய யாவும் சரீரத்தைச் சார்ந்தனவாகின்றன. என்னுடைய சிந்தனையிலென்ன இருக்கின்றது? எனவே இவை யாவும் சரீரத்திலுள்ளனவாகும். காமக் குரோதம் முதலிய ஷட்பாவ விகாரங்கடந்து ஐஸ்வர்யாதி ஷட்குணத்தோடு கூடிய சிவத்தோடு கூடியுள்ளவனாகிய முக்தன் நான். நானெப்பொழுதும் சிவோஹம் பாவனையிலுள்ளவன். அதனால் நான் தேகமுமல்ல; தேக சம்பந்தியுமல்ல; இருபத்து நான்கு தத்துவங்களுமல்ல; நான் பிரகிருதியுமல்ல; விகிர்தியுமல்ல; நானெதுவு மானவனல்ல. நான் ஸோஹம் பாவனையினால் சுசியாகவே யிருக்கின்றேன் என்பன. இங்ஙனங் கூறிவந்தவாறு அறிவினாலறிந்து அவ்வண்ணமே நிற்பவன்றான் புத்தி நிச்சயமுள்ளவன். ஓ இந்திரா! துக்க நாசத்திற்கு மூலமாகவுள்ள உபாயம் இதுவே. மமதைதான் துக்கம். அதனை விடுவதுதான் சுகம். அதுதான் சுகதுக்கத்துக்கு ஸ்தானம். அதனை விடுவதற்கு ஞானமில்லையாயின், அது வருவதற்குரிய ஞான விசாரணை செய்யவேண்டும். கன்ம நாசமானது போகானுபவத்தா லுண்டாகாது; ஞானானுபவத்தா லுண்டாகும். பிராரப்த கன்மத்தில் எது நடக்கவேண்டி யிருக்கின்றதோ அது நடக்கிறது. அது நடக்குங் காலுண்டாகுஞ் சுகதுக்கங்களிலென்ன சிந்தனை? ஓ இந்திரா! இப்பொழுது யான் சொல்லி வந்த ஞான விசாரந்தான் உனக்குச் சகாயமானதென்றறிவாய். இஃதொழிந்த ஏனையோருடைய யோசனை என் செய்யும்? முடிவாக வொன்று கூறுகின்றேன்: ஒருவனுக்குப் புண்ணிய நாசத்தின் பொருட்டுச் சுகமும், பாவ நாசத்தின் பொருட்டுத் துக்கமுமுண்டாகிறது. ஆகையினால் பாவ நாசத்தோடு புண்ணிய பலனையும் விரும்பாதவர் துக்கத்தோடு சுகத்தையும்

விரும்பார். நினைவில் சுகமொழிய வருமானால், சந்தோஷ மடைவார். அவர்போல் சுகம் வேண்டுமானால், சுக நாசத்துக்கு நீ கவலைகொள்ளாதே. நேரிட்ட யுத்தத்துக்கு விதித்தபடி முயற்சி செய்வாயாயின் நடக்கவேண்டியபடி நடக்குமென்று தேவ குரு இந்திரனுக்குக் கூறியருளினார். (26–50)

ஓம் ஏகாக்ஷர்யை நம:

## 5. தேவாசுர யுத்தம்

ஓ ஜனமேஜயனே! இந்திரன் பிரகஸ்பதி சொன்ன வார்த்தையைக் கேட்டு, என்னையனே! தேவரீர் கூறியவெல்லாம் சுகம். அவை ராஜ்யம், கீர்த்தி முதலியவற்றை வெறுத்தவனுக்கேயாம். யான் அவைகளெல்லாங் கொண்டிருக்கத்தக்க அகங்காரத்தையுடையவனு யிருக்கின்றபொழுது எனதென்னும் மமகாரத்தை விட்டு எவ்வண்ணம் நான் வாழ அறிவேன்?

ஸந்நியாசமாகிய நான்காவது ஆச்சிரமமுடையார்க்குத் தேவரீர் கூறியபடி ஞானம் பூஷணம். அந்தணர்களுக்குச் சந்தோஷமாகிய திருப்தி பூஷணம். ஐச்வர்யாதிகளை விரும்பிய க்ஷத்திரியருக்குச் சத்துரு சங்காரம் பூஷணம். சங்கார மென்கிற பிரயத்தனத்தைவிட்ட க்ஷத்திரியனைப் பிரயத்தனமாத்திரமுள்ள பலஹீனன் அதி சுலபமாய் வென்று விடுவான். ஆகலான், பிரயத்தனமில்லாதவனை அறிவிற் சிறியாருங் கொண்டாட மாட்டார். ஓ ஆசிரியரே! முன்னர் பிரயத்தன மொன்றினாலல்லவா துவஷ்டாவின் குமாரனாகிய விசுவனால் நமுச்சி, பலன் என்கிற வசுரர்கள் கொல்லப்பட்டனர்? அது போலவே இந்த மகிஷாசுரனையுங் கொல்லவேண்டும். தேவரீர் கூறியபடி நடக்க வேண்டியது எதுவோ அது நடப்பதா யிருந்தாலும், எனக்கு உத்தமமாகிய வச்சிராயுதமா யிருக்கவேண்டியவர் தேவாசாரியராகிய நீர்தான், எனக்குச் சகாயமா யிருக்கவேண்டியர் விஷ்ணுமூர்த்திதான். அதற்குமேல் எனக்கு நாசம் வராவண்ணம் காக்க வேண்டியவர் உமாபதிதானென்று சொல்லிவிட்டு, ஓ சுவாமிகாள்! இப்பொழுது "ரக்ஷோக்னம்" என்னும் வேதபாகத்தை என் பொருட்டுப் பாராயணஞ் செய்வீராக. நான் சேனைகளை ஆயத்தப் படுத்துகிறே னென்றனன். அப்பொழுது அவர் புன்னகையோடு கூறுகின்றார்: ஓ தேவராஜனே! இவ்விஷயத்தில் உனக்கு ஜயமாவது அபஜயமாவது ஒன்றுவருமென்று நிச்சயமாகச் சொல்லுவதற்குச் சந்தேகமா யிருக்கிறது. அதனால் நானுன்னை யுத்தத்துக்குப் போகவுஞ் சொல்லவுமாட்டேன்; தடுக்கவுமாட்டேன். சுகமோ துக்கமோ ஒன்றுண்டாகப்போகிறது. எது உண்டானபோதிலும் உனக்குச் சிறிதும் தூஷணமுண்டாக மாட்டாது. வரப் போகிறதாகிய சுகமுந் துக்கமும் என்னால் தெரிந்து கொள்வதற்கு முடியாது. ஓ இந்திரனே! எனக்கு என் மனைவியினால்

நேரிட்ட துன்பத்தை நீ அறிவாயல்லவா? அந்தோ! எனக்கு மாணாக்கனாயும் சிநேகனாயுமிருந்த சந்திரன்றானே என் மனைவியைக் கொண்டு போனான்? அதனால் எனக்கு எல்லாச் சுகங்களும் போகும்படியாகி, துக்க முண்டாயிற்றல்லவா? யான் எல்லா வுலகங்களிலும் புத்திமானென்று பிரசித்தியா யிருக்கின்ற வனல்லவா? புத்தியிற் சிறந்தவனாகிய நான் புத்தியில் அற்பர்களைப் போல் இப்பெண் காமவெறியில் நிற்பவள், இவ்வாண்மகன் காமவெறியில் செல்பவன் என்றறியாமற் போயினனே! காம நெறியில் நிற்கும் பெண்ணாலமுடையார் தன் மகளென்றும் தன் சகோதரனென்றும், இவர்போலும் ஏனைய முறையுடையார் இவ ரென்றும் சகோதரி இவளென்றும் அம்முறையுடையார் இவ ரென்றும் உணராரென்பதையும் நானறிந்து கொள்ளுவது ஒரு கஷ்டமா? தன் மனையாளை அயல்மனையினாக்கும் மதியிலியைப் போல் மதியின்பால் என் மனையாளைப் பார்க்கலாயினனே! அம் மதியின்பால் மதிகெட்ட அம்மாதினழகை மீண்டும் மதிக்க லாயினனே! என் மதியெல்லாம் இவ்வாறு போனவழி தெரியாமற் போயிற்றே! ஆகையால் இவையெல்லாம் ஊழின்வகை யென்றறி வாய். அறிவுடையார் ஒவ்வொரு காரிய சித்தியும் ஊழின் வகை யென்றே மதித்து அறிவின்வழி நிற்பரன்றி அவ்வூழ்வகை யான் வரும் சுக துக்கங்களினில்லார். ஓ வஜ்ரதரனே! இந்த சமயத்தில் ஜயாபஜயங்களை நீ எண்ணவும் வேண்டாம். நீ என்னை எண்ணி சொல்லவுங்கேட்கவும் வேண்டாம். உபாயங்களை மாத்திரம் நீயும் எண்ணலாம். நானும் எண்ணிச் சொல்லலாமென் றனர். ஆசிரியர் சொல்லியபொழுது இந்திரன் அவையெல்லாம் நீதியான உண்மையென்றெண்ணி, அவரை அழைத்துக்கொண்டு பிரமதேவனிடஞ் சென்று அவரைச் சரணடைந்து கூறுகின்றான்: ஓ தேவ சிரேஷ்டரே! மகிஷன் எனது ஆட்சியாயுள்ள சுவர்க் கத்தை அபகரிக்கும் எண்ணமுடையனாய் அநேக விதமான பிரயத் தனங்களைச் செய்து வருகின்றான். அவனுடைய சைனியங்களோ யுத்தஞ் செய்வதிலும் அதற்கு வேண்டிய பராக்கிரமத்திலும் பராக்கிரமத்தைக் காட்டற்குரிய யுத்தவிச்சையிலும் சிறந்தவர்கள். ஆகையினால், நான் மிகவும் பயந்தவனாய்த் தேவரீருடைய சமீபத்தை யடைந்தேன். நீர் என்னிலுஞ் சிறந்த அறிவுடையவர். அவ்வக்காலத்து வரும் துன்பங்களைப் போக்குதற்குரிய உபாயங்க ளெல்லாம் நன்றாயறிவீர். நீர்தான் எனக்குச் சகாயம் அவசியஞ் செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன். (1–17)

பிரமதேவன் இந்திரன் விண்ணப்பத்தைக்கேட்டு இரக்கங் கொண்டவனாய்க் கூறுகின்றான்: ஓ இந்திரா! நாமனைவரும் சீக்கிரமாய்க் கைலாசத்துக்குப் போகவேண்டும். நமக்கெல்லாம் தலைவராயுள்ளவர் ருத்திரமூர்த்தி. அவருடைய அனுக்கிரகத்தை நாம் முன்னர் பெறவேண்டும். பின்னர் திருமாலிடத்திற்குப் போவோம். அவர் அசுரர்களிடத்தில் போர்செய்யும் பலமும் வகையுமுடையவர். ஆகையால் அவரையுங் கலந்து நாம் செய்யத்

தருவனவாகிய காரியத்தை முன்னரெண்ணிப் பின்னர் துணி வோம். ஏனெனின், "செய்யத் தக்கன அல்லனவல்லவற்றைச் செய் தலானும், செய்யத்தக்கனவற்றைச் செய்யாமையானும் கெடும்" என்று நீதிநூல் கூறுகின்றது. செய்யத் தக்கன அல்லவாவன எவை யெனின், பெரிய முயற்சியா யுள்ளனவும் செய்தாற் பயனில்லனவும் அது சிறிதாயினவும் ஐயமாயினவும் பின் றுயர்விளைவிப்பனவு மென இவை. இதன் பொருள் என்னையோவெனின், ஒரு பெரிய முயற்சியைச் செய்ய வெண்ணுங்கால் அம்முயற்சி துயர் விளைவிப்பனவா அல்லவா வென்றெண்ணல் வேண்டும். அதனை எண்ணிய பின்னர் துயர் விளைவிப்பனவாயினும் அது பயனுள் ளனவா இல்லனவா வென் றுணர்தல் வேண்டும். பயனுள்ளன வாயின் பெரிதோ சிறிதோவென்று அதனை மதித்தல்வேண்டும். அம் மதிப்பில் அது பெரிதன்றிச் சிறிதெனவெளிப்படின் அது கிடைப்பதிற் சந்தேகமுள தென்பதும் இலதென்பதும் தெளிதல் வேண்டும். இம்முறையாக எண்ணுதலினும் உணர்தலினும் மதித் தலினும் தெளிதலினும் தன்னறிவைச் செலுத்தி ஒரு முயற்சியைத் துணிவதொழிந்து தன்னறிவை அவற்றிற் செலுத்தாது செய்யத் துணிவதே தகாதன. செய்யத் தக்கன, தன்னறிவை அவற்றிற் செலுத்திச் செய்யத் துணிவதுவே. ஆகவே செய்யத் தக்கனவல்ல வற்றை செய்பவனும் செய்யத் தக்கனவற்றைச் செய்யா தவனும், அறிவு, ஆண்மை, பெருமை யென்னு மூன்றும் அற்ற வனாய்ப் பகைவர்க் கெளியவனுவான். ஓ வஜ்ரதரனே! நான் கூறியபடி சக்ரதரனோடு கலந்து நமக்கும் பகைவர்க்கும் உளவாகக் காணப்படும் வலி, காலம், இடன் என்கிற இவற்றான் அறிய வேண்டுந் திறங்களெல்லாம் முழுவது மெண்ணிப் பகைவர்மேல் போர்க்கெழுவோம். அவ்வண்ணம் எழுவோமாயின் நாம் எய்தற் கரிய பொருள் ஒன்றுமில்லை. இவ்வண்ணம் எண்ணுது சில சாகச வித்தைகளைக் காட்டுவோர் கஷ்டத்தைப் பெற்றும், பெறத்தகும் பயனைப் பெருதொழிவரென்று அறிவித்தனன். பிரமதேவன் அறிவிக்கவே இந்திரன் அதற்குச் சம்மதித்துத் தன்னோடொத்தவ ரான யமன் முதலிய ஏழு திக்கு அதிபதிகளையும் அழைத்துக் கொண்டு பிரமனுடன் ஸ்ரீ கயிலாயத்துச்சென்று ஸ்ரீகண்ட ருத்திர மூர்த்தியைக்கண்டு வணங்கிப்போற்றி அவரருள் பெற்று விடை கொண்டு வைகுண்டத்துக்குப் போய் லக்ஷ்மீ நாதரைக்கண்டு வணங்கிப் புகழ்ந்து மகிஷாசுரனல் நேர்ந்திருக்குந் துன்பங்க ளெல்லாம் எடுத்துக் கூறினன். (18-23)

வைகுண்டநாதர் இந்திரனுடைய துயரத்தைக்கேட்டு யாவரை யும் பார்த்து நீங்கள் துயருறவேண்டாம். யான் காக்குங் கடவு ளல்லவா? வெல்லக்கூடாத அந்த மகிஷனை யான் வென்றுவிடு கிறேன். நீங்கள் யாவரும் யுத்தத்துக்குப் புறப்படுங்களென்றனர். அதுகேட்ட இந்திரன், பிரமன் முதலாயினரைப் பார்த்து, நாமனை வரும் வாகனரூடராய்ப் புறப்படுவோ மென்று சொல்ல, அவ்வாறே அவரனைவரும் அவரவருக்குரிய ஊர்திகளிலேறிக்கொண்டு கணே

சப் பெருமானையும் அறுமுகப்பெருமானையும் எண்ணி விஷ்ணு சகிதராய் இந்திரனுடன் புறப்பட்டனர். தேவர்களுடைய போர் வரவைப் பராக்கிரமத்தோடு எதிர்பார்த்திருக்கும் அசுரர் சைனியங்க ளறிந்து எதிர்ப்பட்டுச் சென்று பானம், கத்தி, பிராசம், முசலம், கோடாலி, கதை, பட்டயம், சூலம், சக்கரம், சக்தி, தோமரம், முத்கரம், பிண்டிபாலம், கலப்பை என்றெண்ணப்பட்ட ஆயுதவகைகளைப் பிரயோகஞ் செய்யு முறையாகப் பிரயோகஞ் செய்து போர்புரியத் தொடங்கினர். அமர சைனியங்களும் அசுரர்விடும் ஆயுத வகைகளையே விட்டு ஒருவரை யொருவர் வெட்டியும் முட்டியும் குத்தியும் அடித்தும் பிடித்தும் பிளந்தும் வரும்பொழுது மகிஷாசுரனுடைய சேனாபதியாகிய சக்ஷுரன் என்னும் மஹாபலிஷ்டனாகிய வீரன் இந்திரனை எதிர்த்து ஐந்து பாணங்களை விட்டடித்தான். இந்திரன் அவன் விட்ட பாணங்களைத் தன் பாணங்களை விட்டுத்துணித்து ஓரர்த்த சந்திர பாணமெடுத்து அவன் மார்பிலடித்தான். அவ் வடியால் அவன் மூர்ச்சையடைந்து தானேறி வந்த யானையின்மேல் விழுந்தான். அதுகண்ட இந்திரன் அந்த யானையின் துதிக்கை முறிந்து போம்படி வச்சிராயுதத்தால் மோதியடிக்கவே அந்த யானை இனி நாமிங்கிருப்போமானால் நாம் சாவதோடு நமது மத்தகத்தின்மேல் வீழ்ந்து கிடக்கும் சேனாதிபதியும் சாகவருமென்றெண்ணி ஓட்டமாயோடி சேனைகளுக்குள் மறைந்துபோயிற்று. அதனை மகிஷாசுரன் கண்டு சேனாதிபதியைக் கடிந்து கோபத்தோடு பிடாலனென்னுஞ் சேனாபதியைப் பார்த்து, ஓ வீரா! நீ போய், மதகர்வங் கொண்டிருக்கிற அந்த இந்திரனையும் அவனுடன் வந்திருக்கிற வருணன் முதலாயினரையும் துவம்சப்படுத்திச் சீக்கிரத்தில் என் பக்கல் வந்து சேருவாயென்றேவினன். பிடாலனுந் தன்னை மகிஷாசுரன் மதித்தானென்று மத கர்வங்கொண்டு ஒரு மதங்கொண்ட யானையின்மேலேறி இந்திரனை எதிர்த்துவரும்போது அவ்விந்திரன் கஜாரூடனாய் வருகின்ற பிடாலனைப் பார்த்து, உனக்கும் பீடைபிடித்ததோ வா, வா, உன்னையும் முன்போன சக்ஷுரனோடு சேர்த்து விடுகிறேனென்று அதிதீக்ஷ்ணமான பாணங்களை விட்டான். பிடாலன் சொற்களும் பாணங்களும் தீக்ஷ்ணமாய் வருதலைக்கண்டு அவற்றினுந் தீக்ஷ்ணமுடைய சில பாணங்களால் அப்பாணங்களை முறித்துத் தள்ளி இந்திரன்மேல் ஐம்பது பாணங்களை விட்டனன். அப்பாணங்களைக் கண்ட இந்திரன் இந்தப் பாணங்கள் எனக்கைம்பதா! ஐந்தன்றோ! இவ்வைந்தும் எனக்கு அஞ்சவேண்டியவைகளேயன்றி இவைகட்கு நானஞ்சேனென்று ஒரு பாணத்தைவிட்டு அவைகளைப் பொடியாக்கி ஒரு கதையை எடுத்து அவனூர்ந்து வந்த யானையின்மேல் மோதினான். அந்த யானை முன் மொத்துண்டு போன யானைக்குப் பின் துணையாகப்போவதற்கு எத்தனப்படுங் குறிப்பைப் பிடாலன் பார்த்து, இது நன்றாயிருந்ததென்று அதன் மீதிருந்தபடியே ஒரு தேரின்மேற் பாய்ந்து, ஓ இந்திரா! முன், யானையோடு போனவனைப்போல் என்னை நினைக்க வேண்டாம்.

இதோ என் வல்லபத்தைப் பார்ப்பாயென்று பாணங்களைச் சோனை மாரிபோற் பொழிந்தான். அவன் பொழியும் சரவேகங்களைப் பார்த்து இந்திரன் சிறிது அஞ்சினவனாய்த் தன் மகனாகிய ஜயந்தனைத் தனக்கு முன்னாக வைத்துக்கொண்டு போர் செய்யத் தொடங்கினான். ஜயந்தன் தன்னை தந்தை முன்னாகக் கொண்டனனாதலால் தான் வாளாவிருத்தல் அழகன்றென்று அதிகுஞ்சரமாகிய ஐந்து பாணங்களை யெடுத்து மகிஷாசுரன் மார்பிலடித்தனன். அவ்வடியால் அவன் மூர்ச்சையடைந்து ரதத்தில்வீழ சாரதி இனி இங்கிருப்போமாயின் பிராணஹானி யுண்டாமென்று ரதத்தை யுத்தகளத்தினின்றுந் திருப்பினான். இரதந் திரும்புதலைக் கண்ட அசுர சேனைகளெல்லாம் ஓவென் றலறியோடத் தலைப்பட்டன. அமர சேனைகள் நமக்கு வெற்றியுண்டாயிற்றென்று ஆனந்தக் களிப்படைந்தன. தேவ வாத்தியங்கள் முழங்கின. முனிவர் இந்திரனைப் புகழ்ந்தனர். அரம்பை முதலாயினார் அப்போரை அபிநயம் பிடித்து நடனமாடினர். இந்த ஆடம்பர கோஷங்களைக் கேட்ட மகிஷாசுரன் கோபங்கொண்டு தாமிரனென்னும் சேனாபதியைத் தூண்டினான். அவன் எண்ணிறந்த சர வருஷங்களைத் தூண்டிக்கொண்டே செல்ல, யமனும் வருணனும் அவனை எதிர்த்துக் கட்கம், முசலம், சக்தி, கோடாலி என்னும் இவ் வாயுதங்களால் கோரமான யுத்தஞ் செய்து பின் யமன் தனது தண்டாயுதத்தால் மோதியடித்தான். தாமிரன் மஹா பலிஷ்டனாகையால் அவ்வடிக் கசங்காது கொடூரமான பலவகைப் பாணங்களை விட்டு இந்திராதியரை ஹதஞ் செய்தனன். அவர்கள் ஹதமாய்ப் போகாது மதமுடையவர்களாய் அசுரர்களை எதிர்த்து ஒருவரையும் விடாதடித்து ஓடிப் போகாதீர்கள் நில்லுங்களென்று மடக்கி மடக்கி யடித்துத் தாமிரனை மூர்ச்சையடையும்படி மொத்தினர். அசுர சைனியங்கள் இனித் தாமிரன் பிழைப்பதரிதென்று ஓவென்று கூச்சலிட்டோடின. (24–57)

ஓம் ஏகாநேகாக்ஷராக்ருத்யை நம:

## 6. மஹிஷன் மாயப்போர்

வியாசர் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகின்றார்: ஓ அரசனே! தாமிரன் பிழைப்ப தரிதென்ற கூச்சலை மகிஷன் கேட்டுக் கூறுகின்றான்: அந்தோ! இது நன்றா யிருந்தது! யக்ஞஞ் செய்யுங் காலங்களில் அவரவர்க்கு வரும் சிற்சில பாகங்களாகிய மாமிசங்களைச் சிறுவாயாற் றின்னுகின்றவர்களாகிய இந்திரன் முதலிய சிற்றினத்தார்க்கு நம்மினத்தார்களை மூர்ச்சை செய்விக்கும்படியான பராக்கிரம முண்டானதும், ஓயாது எக்காலங்களிலும் வேண்டியாங்குப் பெரும்பாகமாகப் பல மாமிசங்களைப் பெருவாயாற் றின்பவர்களாகிய நம் பேரினத்தவர்களுக்கு மூர்ச்சையடையும்படியான துராக்கிரம முண்டானதும் மிக நன்றாயிருக்

கின்றதென்று வீராவேசங்கொண்டு தேவக் கூட்டங்களை இன்றே டொழித்து விடுகிறேனென்று வேகமாய்ப் போய் இந்திரனை யோர் பெருங் கதைகொண்டு தோளின் மேலடிக்க, அவன் தனது வச்சிரா யுதத்தால் அக் கதையைப் பொடிப் பொடியாய்ப் போக்க, மகிஷன் வாளாயுதத்தை வீச இந்திரனும் வாளாயுதத்தை வீச இவ்வண்ணம் பலபல வாயுதங்களை இருவரும் மாறிவிட்டுப் பெரும்போர் செய்தனர். மகிஷாசுரன், இந்திரன் தன்னோடு சமமாகப் போர் செய்து வருதலைப்பொறுது ஒரு மாயவெண்ணத்தை யெண்ணிச் சர்வ லோகங்களையும் துவம்சஞ் செய்யத்தக்கதாயும் சித்திகளில் வல்ல ரிஷிகளெல்லாம் பிரமிக்கத்தக்க மோகத்தைச் செய்வதாயு முள்ள சாம்பரீ என்பதைச் சிந்தித்து மாயையை விளைவித்தனன். (1-7)

அந்த மஹா மோஹச் செய்கையால் மகிஷாசுரனைப்போலும் உருவத்திலும் பராக்கிரமத்திலுஞ் சிறந்த அளவற்ற அசுர கணங் கள் தோன்றி நாற்புறங்களிலுஞ் சூழ்ந்து வளைந்து சுர கணங் களை அடிக்கத் தலைப்பட்டனர். அம்மாயவல்லபத்தை இந்திரன் பார்த்து ஆச்சரியமுற்றுப் போர்செய்ய வேண்டுமென்னும் ஆண் மையுமற்று அக்னி யமன் வருணன் குபேரன் சூரியன் சந்திரன் என்னு மிவர்களோடு ஏனையரையும் கூட்டிக்கொண்டு நடுக்க முற்று வோட்டமா யெங்கும் நில்லாதோடி அசுர கணங்கள் காணக்கூடாத ஓரிடத்தினின்று விஷ்ணு மூர்த்தியை நினைத்த னன். அவர் சக்கராயுதபாணியாய் கருடாரூடராய் எதிரே வந்து அபயந்தந்து மகிஷாசுரன் மாயையைப் பார்த்து சக்கிராயுதத்தை விட்டு அதனொளியால் அம் மாயையையும் அம் மாயையாலுண் டான மாய வசுரர்களையும் பாழ்படுத்தவே தேவர்களெல்லாம் முன்போல் வந்துசூழ்ந்தனர். யாவருஞ் சூழ்ந்ததைக் கண்ட மகிஷாசுரன் பரிகமென்னும் ஆயுதமெடுத்து யாவரையுந் துரத் தத் தொடங்கினன். அப்பொழுது மகிஷன் சக்ஷுரன் உக்கி ரன் உக்கிர வீரியன் யுத்த காமன் அகிலோமன் திரிநேத்திரன் பாஷ்கலன் அந்தகனென்பவர் தேவர்களை நாமே வெல்லவேண்டு மென்கிற மனவூக்க முடையவர்களாய்த் தனுர்ப்பாணிகளாய் ரதாரூடர்களாய் ஏனைய யுத்த சந்நாகங்களெல்லா முடையவர்க ளாய்க் கன்றுக்குட்டிகளைச் சூழ்ந்த செந் நாய்களைப்போலுந் தேவர்களைச் சூழ்ந்து போர் செய்யத் தொடங்கினர். அமரரும் போரிற் கலந்தனர். அவருள் அந்தகனென்பவன் விஷ்ணுமூர்த் தியை எதிர்த்து மிகவுங் கூர்மையாய் விடத்திற் றோய்ந்ததா யுள்ள ஐந்து பாணங்களை யெடுத்துத் தனுசிற் பூட்டி விடுத்தான். அதனை ஹரியானவர் அறுத்துவிட்டார். மீளவும் ஐந்து பாணங் களை விட்டான். அவைகளும் அவரால் அற்றுப்போயின. போகவே கத்தி சக்கிரம் முசலம் கதை முதலிய பல வாயுதங்களை மாறி மாறிப் பிரயோகஞ் செய்து ஐம்பது நாள் யுத்தஞ் செய்தனர். இவரைப்போலவே இந்திரனும் புஷ்கலனும், அக்னிதேவனும் மகிஷாசுரனும், யமனும் திரிநேத்திரனும், வருண தேவனும்

அதிலோமனும், நிதிபதியாகிய குபேரனும் சக்ஷுரனும் இவ் வண்ணம் இருவரிருவராக எதிர்த்துப் போர் செய்து வந்தனர். விஷ்ணுமூர்த்தியை எதிர்த்த அந்தகன் அவரூர்தியாகிய கருடனை யடிக்க அவனடிபட்டுப் பெரு மூச்செறியும்போது விஷ்ணுமூர்த்தி அவனைத் தேற்றி ஓடிப்போகாமல் நிறுத்தத் தனது சார்ங்கத்தை வளைத்துப் பாணங்களைச் சந்தித்துவிட, அந் தகன் அப் பாணங்களெல்லாம் பொடியாய்ப் போகும்படிச் செய்து ஐம்பது பாணங்களெடுத்து அவர் மேலேவினன். அவர் சுதர்சனமென்னுந் தனது சக்கரத்தைப் பிரயோகஞ்செய்ய அதை அந்தகன் தனது சக்கரத்தினால் தடுத்துக் கர்ச்சித்தனன். அந்த கர்ச்சனையைக் கேட்ட சுரரெல்லாம் ஏங்கினர்; அசுரரெல்லாம் ஓங்கினர். விஷ்ணுமூர்த்தி தேவரேக்கத்தைக் கண்டு கௌமோதகி என்னும் கதையை எடுத்து அந்தகனைத் துரத்தித் தலைமேலடிக் கவே அவன் மூர்ச்சையாய் விழுந்தனன். அதுகண்ட மகிஷன் விஷ்ணுமூர்த்தியின் மேல் மிக்க கோபங்கொண்டு இவனை மிரட்டி யோட்டலாமென்றெண்ணிச் சமீபித்தபோது அவர் அவன் குறிப் புணர்ந்தவராய் வில்லைக் குணத்தொனி செய்து பாண வருஷங் களைப் பொழிந்தனர். அவனப் பாணங்களைத் தன் பாணங்களா லொழித்தனன். இவ்வாறு ஒருவர்க்கொருவர் சம யுத்தஞ்செய்த பின்னர், அசுரன் பரிகமென்னும் ஆயுதத்தை எடுத்தோச்சித் தலையிலடித்தனன். விஷ்ணுமூர்த்தி அவ்வடியால் மூர்ச்சித்துப் போகக் கருடன் அவரை உடனே தூக்கிக்கொண்டு ஓடிப் போயினன். தேவரெல்லாம் இனி என் செய்யப் போகிறோமென்று கூக்குரலிட்டுப் புலம்பிக்கொண் டிருக்குங்கால் கடாவாகிய மகிஷன் தனது கொம்பைத் திருப்பிக்கொண்டு அவர்கள்மேற் பாய்ந்து குத்திக் கடாவின் முழக்கத்தைக்காட்டி யுருமியுறுத்துப் பார்த்து மலைகளைக் கொம்புகளாற் குத்திக் குத்தி மேலே வீசி வருங்கால் திருமால் முதலாயினோர் அவன் வீசும் மலைகளைப் பொடிப் பொடி யாகப் போக்க அசுரன் மீளாக் கோபமுடையவனாய் மலைகளைக் கொம்புகளாற் குத்தி யெடுத்தும் வாலாற் சுழற்றி யெடுத்தும் ஓயாது வீசிவரவே விஷ்ணுமூர்த்தியும் உக்கிரங்கொண்டு சக்கிரா யுதத்தைச் சுழற்றிச்சுழற்றி அவைகளைப் பொடிப் பொடியாக்கி அவனையும் மோதியடித்து மூர்ச்சித்து விழும்படிச் செய்தனர். ஒரு க்ஷணத்துக்குள் அவன் மூர்ச்சை தெளிந்து ஒரு பெரிய பர்வதம்போல் மானிட உருவமெடுத்து ஒரு பெரிய கதையைத் தாங்கி மேகம்போலுங் கர்ஜித்து அதிவேகமாய் வந்தனன். திருமால் அசுரன் செய்துவருங் கர்ஜனையைக் கழுதையின் கூச்சலென்று யாவரும் நகைக்கும் வண்ணம் தமது சங்கத்தை எடுத்தூதினர். அந்த சங்கத்வனி அவனது த்வனியைப் பங்கப்படுத்தி பங்கப் படாத அசுரர்களையும் பங்கப்படுத்தி அதுகாறும் பங்கப்பட்டிருந்த அமரர் மனம் பொங்கப் பெற்று வந்து சூழச் செய்தது. (8–55½)

ஓம் ஏதத்ததித்ய நிர்தேஸ்யாயை நம:

# 7. சுரர் சிவனை வேண்டல்

ஓ ஜனமேஜயனே! மானிட வடிவங்கொண்ட மகிஷாசுரன் தன்னுடைய சைனியங்களெல்லாம் மயங்கியிருப்பதும் தேவ சைனியங்களெல்லாம் பொங்கி யிருப்பதுங் கண்டு பொருது போர் முகங்கொண்டு சிங்கரூபனாய்க் கர்ஜித்து முக மண்டலத்தைச் சூழ்ந்த ரோமங்களைச் சிலிர்த்துக் கைகளை விரித்து நீண்டிருக்கிற நகங்களால் சில தேவர்களைப் புரண்டியும் சிலரைக் கடித்தும் ஒரு பாய்ச்சல் பாய்ந்து விஷ்ணுமூர்த்தியையும் அவரது ஊர்தியாகிய கருடனையும் நகங்களினுற் புரண்டியும் எங்கும் உதிரவெள்ளமாக்கிப் பின்னர் மார்பில் கையாலோங்கி யறைந்தனன். விஷ்ணுமூர்த்தி இனி இவனோடு போர்புரிவதேதென்று பறவைமீதேறிப் பறந்து பரமபதம் போயினர். அன்னவாகனன் அன்னத்தைத் தேடி அதன் மீதேறித் தன்னிடம் போய்ச் சேர்ந்தனன். ஏனைய இந்திரன் முதலிய திக் பாலகரெல்லாம் சற்றிருந்து போர்புரிந்து பார்ப்போமென்று ஆயுதபாணிகளாய் எதிர்த்தனர். அவர்களைக் கண்ட சிங்கனுகிய மகிஷன் இந்த அல்பமானவர்களை நாம் சிங்கரூபமாக விருந்தா கொல்லவேண்டும், இவர்களுக்கு நமது கடா வடிவமே போதுமென்று முன்போல் மகிஷ வடிவமெடுத்து கொம்புகளாலும் வாலாலும் பெரிய பர்வதங்களைப் பெயர்த்துப் பெயர்த்து அவர்கள் மேல் மோதி மோதித் துரத்தியும் கொம்புகளாற் குத்தியும் ஓட்ட, அமரரெல்லாம் அவனோட்டிய ஓட்டத்தை நலமென்றெண்ணித் திரும்பிப் பாராது தங்கள் திக்குகளிற் போயொளிந்தனர். (1–17)

மகிஷாசுரன் ஆடுமாடுகளை மிரட்டி யோட்டுவதைப் போல் அமரரை யோட்டி ஐராவதத்தை யோடிப்போக வொட்டாமல் மடக்கி அதன் மேலேறிக்கொண்டு இனி இந்திர லோகத்திலுள்ள உச்சைஸ்ரவ மென்கிற குதிரை, கற்பக விருக்ஷம் முதலிய இந்திர செல்வங்களைக் கொள்ளை கொள்வோ மென்றெண்ணி அங்குச் சென்று, இந்திரனில்லாமையைக் கண்டு, ஓ அசுரர்களே! இந்திரனுக்கு இவ்வுலக வாழ்வு போயிற்று, அவ்வாழ்வு நமக்கு வந்து விட்டது, இனி நாமே வாழ்வோமென்று சொல்லி இந்திர சிங்காதனத்தில் வீற்றிருந்து தனக்குரிய மந்திரிப் பிரதானிகளை அந்தந்த ஸ்தானங்களி லிருக்கச்செய்து வாழ்ந்திருந்தனன்.

ஓ பூபாலனே! இவன் வாழ்வு இங்ஙனமிருக்க, வாழ்வை விரும்பிய வானவரெல்லாம் தாழ்வுற்று தரணியில் மேரு மலைகளின் பக்கத்தில் தத்தம் விதியை நொந்து நந்தமக்கு அவ்விண்ணுலக வாழ்வில்லா தொழிந்ததுபோல் மண்ணுலக வாழ்வு மொழிந்து மலைமுழையில் வாழும் வாழ்க்கையுளதாயிற்றே, இதுபாவமன்றோவென்று அம்மலை முழைகளில் மறைந்து வாழ்ந்து வந்தனர். ஓ சந்திரவம்ச திலகனே! ''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'' என்றாற்போல வாழ்வற்று மண்ணிலும் மலையிலும்

வாழ்ந்த தேவர்கள் சின்னாள் கழித்துப் பிரம்மலோகஞ் சென்று வேத வேதாந்தங்களில் வல்ல அறிவிற் சிறந்த மரீசி முதலிய பெரியோரெல்லாஞ் சூழ்ந்திருக்கப் பத்மாசனனாய் வீற்றிருக்கும் பிரமதேவனைப் பணிந்தெழுந்து கின்னரர் கந்தருவர் சித்தர் சாணரரென் றெண்ணப்பட்டவரோடு தோத்திரஞ் செய்ய சமீபத்திலே நின்று, ஓ கமலோத்பவனே! கமலாசனனே! கலாவல்லி நாதனே! நீர் மகிஷனுடைய யுத்த களத்தினின்றும் வந்த பின்னர் எங்களுடைய கதி இன்னதென் றறிந்தீரா? யாங்கள் படும் பாட்டை இப்படியும் எண்ணு தொழிவாருண்டோ? ஏன் கருணை செய்யா தொழிந்திருக்கிறீர்? யாங்கள் என்ன செய்திருக்கின்றோம்? தந்தையாயுள்ளோன் தனையர்கள் குற்றமே செய்யுங் குணமுடையராயினும் அவர்கள் மீதன்புற்று அவர்களுக்கு வேண்டிய சுகஞ் செய்வதற்று அவர்கள் துன்ப நிலையிலிருக்கப் பார்ப்பனா? நீர் எங்கட்குத் தந்தையா யுள்ளவரன்றோ? எங்களுலக வின்பம் பகைவன் வசமாயிற்று; அவன் செய்யுந் துன்பங்கள் எங்கள் வசமாயிற்று. அந்தணர்கள் கொடுக்கும் அவிர்ப்பாகங்களை அவர்கள் கொள்வராயினர்; நாங்கள் தள்ளப்பட்டவராயினோம். அவர்கள் கற்பக மலர் சூடவும் காமதேனுவின் பாலுண்ணவு மாயினர்; நாங்கள் சூடாதொழியவும் உண்ணாதொழியவும் ஆயினோம். நீரே இன்னமும் அவனடைந்திருக்கும் சுகபோகங்களையும் நாங்களடைந்திருக்கும் துக்க ரோகங்களையும் உம்முடைய ஞான நோக்கால் அறியற்பாலதேயன்றி எங்களால் இப்பொழுது சொல்லி முடியுமோ? மகிஷனும் அவனினத்தவரும் உலவாத விடமில்லை. நாங்களெங்கே உலாவுவது? பாவத் தொழிலிற் சிறந்தவரும் துன்மார்க்கச் செயலிற் றலைவருமான அவர்கள் எங்களைப் பார்ப்பாராயின் பக்ஷிக்கும் பக்ஷணமாகவே யன்றி வேறென்னாவோம்? ஆகையால் நாங்கள் வெளிவருவதற்கின்றி மலைமுழைகளே கதியாகக்கொண்டு வாழ்கின்றனம். இத்துன்பம் நீங்கும் வகை எதுவோ அதனைச் சொல்லும்; அதனை விரைவிற் செய்யும். நாங்கள் உமதடைக்கலம். இப்பொழுது சில தூதரை அங்கங்கும் ஏவி அகப்படும் தேவர்களைப் பிடித்துக் கொண்டுபோய் அவர்களைப் படுத்தும் பாடுகளை இன்னவெனச் சொல்லமுடியா? இந்தச் சமயத்தில் எங்களைக் காக்காமற் போவீராயின் அசுரரென்னுங் காட்டுத் தீயால் தகிக்கப்பட்டிருக்கிற நாங்கள் அன்புள்ளவராயும் ரக்ஷகராயும் ஆதியாயும் சிருஷ்டி கர்த்தாவாயுமுள்ள வேறெந்தச் சிருஷ்டி கர்த்தாவைத் தேடுவோம்? யாரை அடையப்போவோம்? எங்கட்கு யாருளாரென்று பிரார்த்திக்கவே, பிரமதேவன் அவர்கள் ஏக்கமுற்றுச் செய்யுந் தோத்திரங்களையும் வாட்டமுற்றிருக்கும் முகங்களையும் அஞ்சலியாகக் கூப்பியிருக்குங் கரங்களையும் பார்த்து மிகவும் மனமிரக்க முடையவனாய், இவர்களுடைய பீடையைப் போக்கும்வகை நம்மிடத்திலில்லையே என்று தன்னுள்ளே எண்ணி, வெளியே அவர்களுக் கப்பொழுதே சுகத்தை விளைவிக்கின்றவன் போன்று கூறுகின்றான்: (18–35)

ஓ தேவர்காள்! யான் சொல்லும் உபாயத்தைக் கேளுங்கள்:

மகிஷாசுரன் வரத்திலும், பலத்திலும், சைனியத்திலும், மாயையி லும், அஸ்திர சஸ்திரங்களிலும் இன்னும் மிகுந்தனவாகிய வெல்லாவற்றினு மிகுந்தவன். அவனை வெல்லவாவது வெல்லும் உபாயங்களையாவது யோசித்துச் சொல்ல நானொருவனே போது மானவனுவனு? நீவிரே யோசித்துப் பார்மின். நாமனைவரும் முன்போல் ஸ்ரீ கயிலாயத்துக்குப் போய் (துக்கங்களைப் போக்கடிக் கத் தக்கவர் தாமென்பது தோன்ற) ருத்திரனென்னும் நாமத் தைப் படைத்த பெருமானைச் சரண்புகுந்து அவனது திருவருளைப் பெற்றுப் பின்னர் விஷ்ணு மூர்த்தியினிடம்போய் (நமக்கியலும் வினையையும், அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து, அதன்கண் மனமொழி மெய்களை எப்பொழுதும் வைத்துப் பகை மேற் செல்லுவோர்க்கு முடியாத பொருள் இல்லை என்று தருமநூல் கூறுகின்றதனுல்) இவையெல்லாம் எண்ணித் துணிவோம். (இவ்வாறெண்ணித் துணியாது சிலவெண்ணித் துணிவோமாயின் அம் முயற்சியால் வரும்பயன் பழுதாம் என்றுங் கூறுகின்றதனுல்) ஓ தேவர்காள்! அந்த மகிஷன் ஸ்திரீயால் மரணமடையத் தக்கவனு யிருப்பதனை நாமெண்ணித் திண்ணியராய்த் துணிவோமென்ற னன். அமரர்கள் அயனுடைய வார்த்தைகளைக் கேட்டு அப்படியே செய்வோமென்று கைலாயத்துக்கேகினர். இவர் வரவை யறிந்த சிவபெருமானுர் அந்தப்புரத்தைவிட்டு வெளியே வந்து யாவர்க்கும் எளிமையாய்க் காக்ஷிகொடுத்து நிற்க, பிரமனுதியர் மகிழ்ந்து அடி பணிந்து, ஓ மஹாதேவனே! இங்ஙனங் காட்சி தந்த எளிமையை எந்நாளும் மறந்து பாழ்படோம்; எங்கட்கென்றும் கருணையே புரிந் தருளல் வேண்டுமென்று புகழ்ந்து பணியும்பொழுது, அவர்களுக்கு மேலிட்டிருக்கும் துக்கம் நீங்கும்படி தமதருகே வந்திருக்கச்செய்து கருணையோடு வந்த காரணம் என்னென்று வினவினர். (36–44)

பிரமதேவன் அடிபணிந்து கூறுகிறுன்: ஓ ஸர்வஜ்ஞரே! நீர் அறியாதனவு முளவோ? ஆயினுங் கட்டளையிட்டவாறு கூறு கிறேன். சுவர்க்கவாசிகளாகிய இவரெல்லாம் மகிஷாசுரனுல் மிகவும் பயந்தவர்களாய்த் திகிற்பட்டு மலைமுழைகளில் மறைந்து வசித்து வருகின்றனர். அவ்வாசம் அறிவிற் பெரிய பெரியோர் கட்கும் அறிவிற் சிறிய விலங்கினங்கட்கும் சுகத்தை விளைவிக்குமே யன்றி பெரியோர்பாலும் விலங்கின்பாலும் சேரப்பெருது சில பொழுது நிற்கவல்ல சிற்றின்பத்தை விரும்பிப் பலபொழுது பலதுன்ப மனுபவித்தற்குரியராகிய இவர்க்கு அது சுகத்தை விளைவிக்குமா? இவர்கள் படும்பாடு சொல்லி முடியுமா? இவர் களுக்கு யாகத்தில் வரத்தக்கனவாகிய அவிர்ப்பாகங்களையும் அந்த அசுரர்களே கொள்ளுகின்றனர். இவர்களுக்கு வசிக்குமிடத்தோடு உணவும் போயிற்று. இந்திரன் முதலியோர் திக்தேவதைகளா யிருந்தும் இவர்களுக்குத் திக்கு ஒரு தெய்வமுங் காணும். இனித் திக்காக வேண்டியவர் திகந்த மூர்த்தியாகிய தேவரீரே. ஆகையால் உம்மையே சரணமடைந்தனர். தேவரீருடைய கிருபை அவர்களுக் குண்டாக வேண்டுமென்றே யானும் அழைத்துக்

கொண்டு வந்து அடிபணிந்தேன், அருள்புரிக. ஹே சம்போ! சங்கரா! தேவேசா! இவர்கள்விதி எவ்வண்ண மிருக்கின்றதோ, அவ்வண்ணம் அருள்புரிக. யாவராலுந் தியானிக்கப்பட்டு தியானப்பொருளானவரே! தேவரீர்தான் யாவரையும் பரிக்கத்தக்க அபார சக்தியுடையவர்; அருள்புரிக! அருள்புரிகவென்று பல முறையும் பணிந்து பிரார்த்திப்பவே, வேண்டியாங் கருள்புரிய வல்ல பெருமானார் புன்னகையரும்பி, ஓ வாணிகேள்வனே! நீ தானே மகிஷனுக்கு வரங்கொடுத்துத் தேவர்களுக்குத் துன்பத்தை விளைவித்தனை? இப்பொழுது நீயும் அவர்களோடு துன்பப்படுகின்றவன்போற்காட்டி அதற்கு வழிதேடுகின்றனை! என்னைக் கேட்பானேன்? நீயும் ஒரு கர்த்தாவென்று பேருடையவ னன்றோ? உன்னிடத்தில் வரம்பெற்ற அவன் உனக்கிப்பொழுது வேண்டும் வரங்கள் கொடுக்குங் கடவுளாக இருக்கின்றவன்போல் காண்கின்றதே; உனக்கு அவனிடத்தில் போகமுடியாதோ? ஸ்திரீயினால் மரணமென்றனையே! அவனைக் கொல்வதற்கு எந்த ஸ்திரீ இருக்கின்றாள்? அவளை நீ அறிவையா? அந்த ஸ்திரீ உன்னிடத்திருப்பவளா? திருமாலிடத்திருப்பவளா? என்னிடத் திருப்பவளா? அல்லது இந்திராணியா? இவர்களல்லாதவளா? அவனை வெல்லத்தக்க பலமுடைய ஸ்திரீயும் சிருஷ்டியா யிருக் கின்றனளா? உனக்குத் தெரிந்தால் சொல்லுவாய்! இல்லாவிடின் உன் தந்தையாகிய திருமாலைக் கேட்பாய்; மகிஷனை வெல்லும் வகையையுங் கேட்டுத் தெளிவாய். அசுரர்களுக்கு மாயையில் எவ்வளவு வன்மையுண்டோ அவ்வளவு வன்மை திருமாலுக்கு முண்டு. ஆகையால் நீவிர் அவனிடம் செல்மினென்று பிரமனாதி யர்க்கு விடை கொடுப்ப, விடைபெற்றுச் செல்லுவதற்குச் சகுனம் பார்ப்பச் சகுனமும் சரியாய் வரக்கண்டு காரியசித்தி யுண்டா மென்று மகிழ்ந்து ஸ்ரீ வைகுண்டம் போய்ச் சேர்ந்தனர்.

அறிவிற் சிறந்தவனே! அவர்கட்கான சுபசகுனம் யாதெனின் நல்ல சுகந்தத்தோடு கூடிய காற்று வீசியது; பக்ஷிகள் போகும் மார்க்கத்தில் மங்களவொலியா யொலித்தன; ஆகாயமும் திக்கு களும் நிர்மலமாயிருந்தன; இவைகள் தேவர்கட்குச் சுபசகுன மாய்த் தோன்றின. (44–59)

ஓம் ஏகானந்த சிதாக்ருத்யை நம:

## 8. தேவியின் தோற்றம்

வியாசர் கூறுகின்றார்:—சக்ரேஶ்வரா! நவரத்தினங்களா லிழைக்கப்பட்டுத் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கின்றதாயும், அனேக மண்டப பிரகார கோபுராதிகளால் பிரகாசிக்கின்ற தாயும், நதி கூப தடாகாதிகளாலும் சண்பகம் அசோகு மந்தாரம் மாலதி முதலிய பல விருக்ஷாதிகளாலும் சூழப் பெற்றதாயும் சக்ரவாகம் ஹம்சம் முதலிய பட்சி ஜாலங்களுடைய

ஓசைகளால் நிரம்பப்பெற்றதாயும், மயில் குயில் முதலியன உலா வப்பெற்றுள்ள விநோதமான உத்தியானவனங்களால் அலங்கார முடையதாயும் லக்ஷ்மீபதியைத் தனக்கு நாயகமாயுடைத்தான தாயும் விளங்கும் ஸ்ரீவைகுண்டத்தைத் தேவர்களடைந்து அங்கு விஷ்ணுபக்தர்கள் ஸ்தோத்திரஞ் செய்கின்ற தோத்திரவோசைகளை யும், சுநந்தன் நந்தனன் முதலிய பிரதம கணங்களுடைய ஆர வாரங்களையும், கின்னர கந்தர்வாதியர்களுடைய கான வோசைகளை யும், அரம்பை முதலாயினோருடைய நடன ஓசைகளையும், முனி கணங்களுடைய வேத வோசைகளையும், ஏனையோருடைய நமஸ் கார வோசைகளையுங் கேட்டு ஆனந்தமடைந்தவர்களாய், துவாரத்தி லிருக்கும் ஜயவிஜயர்களாகிய துவார பாலகர்களைப் பார்த்து, ஐயன்மீர்! எங்கள் வரவை வைகுண்ட நாதருக்குத் தெரிவித்து வரப் பிரார்த்திக்கின்றோமென்று சொல்லவே, விஜயனென்பவன் அவர்களுக்கு இன்மொழிகூறி நாராயண ரிடத்திற்சென்று அடி பணிந்து, ஹே மஹாராஜா! ரமாகாந்தா! அசுர த்வம்சகா! பிரம ஞதியர் கடைத்தலையில் வந்து சமயத்தை எதிர்பார்க்கின்றனர். திருவுளக்குறிப்பு யாதோ பிரசாதித்தருளல் வேண்டுமென்று விண் ணப்பித்தனன். கருடத்துவஜர் கிருபை யுடையவராய் யாவரையும் வரும்வண்ணமருள, தேவர்கள் வந்தனர். அவர்களுக்கு ஆசனங் கொடுத்து அவர்களைப் பார்த்து கருணை முகங்காட்டி நீங்களனை வரும் வந்த காரணம் என்னையோ? மிகவுஞ் சோகத்தை யடைந் திருக்கின்றவர்களாகவும் காணப்படுகின்றீரென்று மிகுந்த இரக்க முடையவராய்க் கேட்ப தேவர்கள் கூறுவதாயினர் :—ஓ பக்தவத் ஸலரே! யாங்கள் படுந்துன்பம் நீர் அறியீரோ? உம்மையே அந்த மகிஷன் ரத்தப்பிரவாகத்துக்குள்ளாக்கி மூர்ச்சையாய் விழும்படி செய்தானே! கருடனல்லவோ உம்மைத் தூக்கிக் கொண்டுவந்து சேர்த்தான். நீர் இப்படியாவீராஞல் நாங்கள் அவனால் எப்படியா யிருப்போமோ, அதனை நாங்கள் சொல்லவேண்டுமா? இப்பொழுது அந்தப் பாடுகளைப் பேசுவதனால் பிரயோசன மென்ன? எங்கட் குணவாயுள்ள அவியும் அவர்கட்கேயாயிற்று. எங்கட்குணவும் போயிற்று. இனி என்னவிருக்கின்றது? இந்தப் பிரம்மாதான் அந்த துஷ்டனுக்குப் பலிஷ்டமான வரத்தைக் கொடுத்துவிட்டார். அதனால் அவன் தனக்கு நிகரொருவரு மில்லையென்று அகங்கரித் திருக்கின்றான். அவனகங்காரத்துக்கு அன்றுயர்ந்தோங்கி எழுந்த விந்தமலையும் சமானமாகமாட்டாது. இந்த இறுமாப்பாளன் ஒரு ஸ்திரீயினால் மரணமடைவானென்று இந்தப் பிரமதேவர் தான் கூறுகின்றார். இந்த விவரம் எங்கட்குத் தெரிந்ததல்ல. தேவரீர் எங்கட்கு எப்பொழுதும் சகாயஞ் செய்பவராதலால் இப்பொழுதும் அவன் மரணமடையும்வகை எதுவோ அதனைச் செய்யும், அதனைச் சொல்லுமென்றனர். (1–26)

மதுசூதனர் கூறுகின்றனர் :—யான் செய்யத்தக்கதும் நீங்கள் செய்யத்தக்கதும் ஒன்றுமில்லை. நாமனைவரும் செய்யவேண்டிய வெல்லாம் செய்தாயின. நம்முடைய சக்திகளெல்லாம் இவ்வளவு

தான். அவை நன்ருய் விளங்கின. இனி நம்மிடத்திலிருந்து சிருஷ்டி ஸ்திதி ஸம்காரங்களேச் செய்வதாகிய அதிகாரசக்திகளும் ஏனேயோரிடத்திலிருந்து ஏனேய ஏவற்ருெழில்களேச் செய்யும் சக்திகளும் ஒன்ருய்த்திரண்டு ஓருருவாகித் தோன்றும்; அந்தச் சக்தி சமூகமாகிய ஸ்திரீதான் அந்த துஷ்டனேக் கொல்லத்தக்க ஆற்றலுடையவள். அவளேத்தான் தர்மதேவனுஞ் சொன்னதென்றறிமின். இனி அவள் வருகையை நாமனைவரும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும். அந்தச் சக்தி நாம் காணும் எந்தப் பொருளிடத்திருந்து தோன்றினுலும் தோன்றுவாள். இவ்விரண்டிடமன்றி நம்மிடத்திருந்து தோன்றினுலும் தோன்றுவள். எல்லாவிடமும் அவளிடமே. அவள் சொரூபம் தேஜோரூபம். அந்தத் தேஜோரூபந்தான் நம்மிடங்களில் அத்வைதமாய்க் கலந்து பிரகாசிக்கின்றது. அங்ஙனமிருக்கும் தேஜோசக்தி நாம் எண்ணுவனவாகிய இவையெல்லாம் அறியாதா? அது நம்பால் கருணைகூர்ந்து வெளிப்படுமாயின் நாம் வீணே தாங்கியிருப்பனவாகிய நம்முடைய ஆயுதங்களெல்லாம் அச்சக்திபாலே கொடுத்துவிடுவோம்; அவை சக்தியற்ற நம்மிடத்திருந்து ஆவதென்ன? அவையெல்லாம் சக்தியுடையாரிடத்திருந்தாலல்லவோ பயன்படும்? இனி அவளேத் தியானிப்போம். ஓ தேவர்களே! நாமனைவரும் தியானிப்பதனுலும் பயனில்லே. நம்மிடத்திலுள்ள சக்தி வெளிப்பட்டு வரும்படிச் சங்கற்பிக்கவேண்டியவர் சக்திநாதராகிய சங்கரரே ஆகலான் அவர் நமக்கு வெளிப்பட்டுவருவாராயின் அச்சக்தியும் வெளிப்பட்டு வருவாள். அவள் வருவாளாயின் அந்த அசுரனுகிய கடா மாள்வானென்பதில் யாதோரையமுமில்லே யென்றனர். நாராயணர் அவ்வாறு கூறும் பொழுது அவருக்கு பரமான்வராகிய ஹரர் வெளிப்பட்டுவந்தனர். அமரரெல்லாம் ஹரஹரவென்று போற்றி நிற்பச் சர்வதேவதா வியாபினியாகிய மஹாசக்தியானவள், தனித்தனி ஒவ்வொரு தேவரிடத்தினின்றும் வெளிப்பட்டு அகண்ட தேஜோரூபியாய்த் தரிசனந் தந்தனள். தேவரெல்லாம் தொழுவந்த அப்பராசக்தியின் சொரூபத்தைக் கூறுகின்றேன், அன்பனே கேட்பாயாக: (27–32)

பிரமதேவனுடைய முகத்தினின்றுந் தோன்றிய தேஜோராசியானது ரக்தவர்ண முடைத்தாய், பத்மராகம்போன்ற பிரகாசமுடைத்தாய், சீதோஷ்ணங் கலந்த காந்தியுடைத்தாய்ப் பிரகாசித்தது. விஷ்ணுமூர்த்தியினுடைய சரீரத்தினின்றுந் தோன்றிய தேஜோராசியானது சுவேதவர்ணமாய் ஸத்துவகுணத்தை யுடைத்தானதாய்ப் பிரகாசித்தது. சிவமூர்த்தியினுடைய திருமேனியினின்றுந் தோன்றிய தோஜோராசியானது அவ்விருவருடைய தேஜசினுஞ் சிறந்து அற்புதமான வெண்ணிறமுடைத்தாய், இமையா நாட்டத்தானுங் காணக்கூடாத ஒளியுடைத்தாய் மகிஷாசுரனுக்குப் பயத்தை விளேவிப்பதாய், கோரரூபிகளாகிய அசுரக் கூட்டங்கட்கு அச்சத்தை விளேவிப்பதாகிய மஹாகோரரூபமுடைத்தாய், எல்லாருருவத்தினும் மேலோங்கி விளங்கும் பேருருவுடைத்தாய், அன்பர்கட்குக் காணுந்தோறும் ஆச்சரியத்தை விளேவிப்ப

தாய், அசுரருடைய தாமசகிருத்தியங்களைப் போக்கவல்ல தமோ குணத்தை மேற்கொண்டதாய்ப் பிரகாசித்தது. இந்திரனுடைய சரீரத்தினின்றுந் தோன்றிய தேஜோராசியானது எண்ணக்கூடாத சித்திரரூப முடைத்தாய், சர்வகுண சம்பன்னமாய்ப் பிரகாசித்தது. ஏனைய திக்குப் பாலகரினின்றுந் தோன்றிய தேஜோராசிகளானவை பல கிரண சமூகங்களாய் ஜ்வாலைகள் விட்டுப் பிரகாசித்தன. (33–41)

இவ்வண்ணம் தேஜோராசியாய் ஆவிர்ப்பவித்த ஒளிப் பிழம்பை பிரமனாதியர் தரிசனஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில் அவ்வொளிப் பிழம்பினின்றும் வெள்ளிய வொளிவீசும் முக மண்டல முடையவளாயும், கிருஷ்ணவர்ணமுள்ள திருக்கண்களுடையவளாயும், பவழம்போன்ற அதரங்களுடையவளாயும், பதினெட்டாயுதங்களோடு கூடிய பதினெட்டுத் திருக்கரங்களுடையவளாயும், அவை யொழிந்த எண்ணிறந்த திருக்கரங்களுடையவளாயும், ஸர்வாபரணாலங்கிருதையாயும், ஸர்வசம்பத்காரியாயும், ஸத்துவம் முதலிய மும்மைக் குணங்களோடு மும்மை நிறமுடையவளாயும், பிரபஞ்ச மோஹினியாயும், நித்திய சௌந்தரியமுடையவளாயும், காணுந்தோறும் பல அற்புதக் காட்சிகளை விளைவிக்கின்றவளாயும், மனோரம்யமாயும் ஒப்பற்ற தேவி தோன்றியருளினாள் என்றனர். (42–46)

இவ்வண்ணம் வியாசமுனிவர் கூறிவந்தபொழுது ஜனமேஜய மஹாராஜன் வினவுகின்றான் :—ஓ கிருஷ்ணத்வைபாயனரே! தேவரீர் தேவியினுடைய சொரூபத்தைக் கூறி வந்தவராயினும், அச்சோதி சொரூபத்தின் அங்கபேத விவரணங்களை எனக்கு விளங்கச் சொன்னீரில்லை. நீர் பிரமன் முதலாயினோரிடத்துத் தோன்றிய ஒளிகளைத் தனித்தனி சொல்லிவந்தீரே யல்லாது இன்னாரின்னாரொளி இன்னின்ன அங்கங்களாயிற்றென்று சொன்னீரா? அதனை விளங்கச் சொல்லும். அதனைக் கேட்கவேண்டுமென்னும் ஆவல் எனக்கு அதிகரித்திருக்கின்றது. அது எனக்குக் கேட்குந்தோறும் அமிர்தமுண்ணுவது போலுமிருக்கின்றது. இதுபோல் எனக்குத் திருப்தியை விளைவிப்பது மற்றொன்றில்லை. ஆகலான் அத்தேவியினது அற்புத சரித்திரத்தைச் சொல்லியருளுமென வேண்டினன். (47–53)

வியாசமுனிவர் மகிழ்ந்தவராய் அவனுக்கானந்த முண்டாகும் வண்ணம், ஓ குருகுல சிரேஷ்டனே! தேவியினுடைய உண்மைச் சொரூபத்தை எடுத்துச் சொல்ல முக்குண மூர்த்திகளாகிய மும்மைத் தேவராலும் முடியாதென்றால் யான் சொல்லுந் தரமுடையவனோ? யாமெல்லாங் காணுமாறு காட்டுந் திருமேனியின் சொரூபச் சிறப்பை மாத்திரம் ஒருவாறு உன்னிஷ்டப்படி என்னறிவில் விளங்கும் வகையளவாகச் சொல்லுகிறேனென்று கூறுகின்றார் :—தனக் கென்றோ ருருவமில்லா நித்தியையாகிய தேவியானவள் சர்வ தேவஸ்வரூபிணியாயுள்ளவள். அவள் நாடக நடிப்பாளொருவன் ஒரு சபையின்கண் சபையோர் களிக்குமாறு பலவுருவங்கொள்வது

போல் தேவகாரியசித்தியின் பொருட்டு ஒருருவாயும் அநேகவுருவங்களாயுமாகின்றாள். அதுவேயுமன்றி உலகிலுள்ள சர்வான்மாக்களுடைய ஆகாமிய கர்மானுசாரமாக அவரவர்க்குத் தக்கவாறு அனுக்கிரகஞ்செய்வாள். நிர்க்குணையாகிய தான் சகுணையாக அநேகவுருவமாகின்றனள். இம்முறையான் அவள் திருமேனி கொள்ளுங்கால் அந்தந்தச் சகுணரூபங்கட்கேற்பப் பிரவிர்த்தி பரமான பல நாமங்களும், அந்தந்தச் சகுணங்கட்கு நிவிர்த்திபரமான பல நிர்க்குண நாமங்களு முண்டாகின்றன. மகிஷாசுரனுடைய ஸங்கார நிமித்தங்கொண்ட ஜோதியாகிய திருமேனியின் வகை என்னை யோவெனின், திருமுகம் சங்கரருடைய தேஜோராசிகள்; மேக நிறமாயும் நீண்டதாயும் நுனி சுருட்டையாயும் மனோரம்யமாயுமுள்ள கேசங்கள் யமனுடைய தேஜோராசிகள்; கருமையாயும் சிவப்பாயும் வெண்மையாயுமுள்ள மூன்று நேத்திரங்கள் அக்னியினுடைய தேஜோராசிகள்; மன்மதனுடைய விற்போலும் வளைந்து கருத்த அழகிய புருவங்கள் சந்தியாதேவியினுடைய தேஜோராசிகள்; எள்ளின் பூப்போல் குவிந்திருக்கிற மூக்கு குபேரனுடைய தேஜோராசிகள்; சமமான வரிசையுடைத்தாயும் அழுக்கடையாது ஒளிவீசுவதாயும் குருக்கத்தி மலர்போல் அழகுடையதாயுமுள்ள தந்தவரிசைகள் பிரமனுடைய தேஜோராசிகள்; கீழுதடு அருணனுடைய தேஜோராசிகள்; மேலுதடு முருகக்கடவுளுடைய தேஜோராசிகள்; மூங்கில்போன்ற பதினெண்புஜங்கள் விஷ்ணுவினுடைய தேஜோராசிகள்; செந்நிறமுள்ள நகங்கள் அஷ்டவசுக்களுடைய தேஜோராசிகள்; ஸ்தனகும்பங்கள் சந்திரனுடைய தேஜோராசிகள்; திரிரேகையோடுகூடிய இடை இந்திரனுடைய தேஜோராசிகள்; துடைகளும் முழங்கால்களும் வருணனுடைய தேஜோராசிகள்; பிருஷ்டபாகங்கள் பூதேவியினுடைய தேஜோராசிகள்; நிதம்பம் விபுலனுடைய தேஜோராசிகள்; இவ்வண்ணம் யாவரிடத்தும் வாழ்ந்திருந்த தேஜோராசிகளெல்லாம் சர்வாவயவங்களாகத் திருமேனிகொண்ட தேவியைத் தேவர்கள் தரிசித்து ஆனந்தமடைந்திருக்குங்கால் அந்தத் தேவர்களுடைய ஆயுதங்களிலிருந்து தேஜோராசிகளெல்லாம் வெளிப்பட்டன. அவைகளைத் திருமால் கண்டு, ஓ தேவர்காள்! இத்தேஜோராசிகளும் தேவியினுடைய சக்தி சொரூபங்களே யாகலான் அவ்வம்பிகையினிடத்திலேயே கொடுத்துத் தாங்கும்படிச் செய்து நாம் கண்டு களிக்கவேண்டும், கொடுங்களென்று சொல்ல, ஒவ்வொருவரும் அவரவராயுதங்களைத் தேவியினிடத்திற் கொடுத்துப் பணிந்து நின்றனர். (54–76)

ஓம் ஏவமித்யாகமாபோத்யாயை நம:

## 9. தேவி படைகள் பெறுதல்

ஓ ஜனமேஜயனே! தேவர்களனைவரும் ஆயுதங்களைத் தேவிக்குக் கொடுத்தார்களென்று சொன்னேனன்றோ? அந்த வகையையுஞ் சொல்லுகிறேன், கேட்பாயாக என்று வியாசர் கூறுகிறார்:—

சங்கரர் - அசுரத் துவம்சமாயும் சுரபயஹரமாயும் சுகதரகர மாயும் பிரகாசிக்கின்ற சூலாயுதத்தையும், விஷ்ணுமூர்த்தி - அசுர ருடைய சிரங்களை அதிகவிரைவில் அறுக்கவல்ல ஆயிரம் ரேகை களாய்ப் பிரகாசிக்கும் அரியசக்கராயுதத்தையும், வருணதேவன் - திவ்யகோஷமுடைய சங்கத்தையும், அக்னிதேவன் - அசுர வேகத்தை யடக்கவல்ல சதக்னி என்னும் ஆயுதத்தையும், வாயு தேவன் - பாணங்கள் நிறைந்திருக்கிற தூணீரத்தையும், ஒருவ ராலும் வளைக்கக்கூடாததாயும், பார்ப்போர்க்குப் பயத்தைக் கொடுப் பதாயுமுள்ள அற்புதமாகிய தனுசையும், இந்திரன் - குரூர முள்ள வச்சிராயுதத்தையும், யமன் - யாவர்க்கும் மரணம் விளை விக்கும் தண்டாயுதத்தையும், பிரமதேவன் - கங்கையால் நிறையப் பெற்ற கமண்டலத்தையும், வருணன் - பாசத்தையும், மனோகர மாகிய தாமரைமலர்மாலையையும், குபேரன் - மதுவினால் நிறையப் பெற்ற சுவர்ணபாத்திரத்தையும், இவரெல்லாங் கொடுத்தபின்னர் துவஷ்டா - நூறுமணிகளொலிக்கும் கௌமோதகியை (கதா யுதத்தை)யும், பேதிக்கக்கூடாத வச்சிரகவசத்தையும், அநேகவித மான அஸ்திரங்களையும், பாதங்களி லணியத்தக்க நூபுராதி ஆபர ணங்களையும், சூரியன் - தனது காந்திகளையும், விசுவகர்மா - கங் கணங்களையும், நவரத்னமயமாயுள்ள தோள் வளைகளையும், கூர்மையாகிய பரசாயுதத்தையுங் கொடுத்தனர். திருப்பாற்கடல் - நூதனமாயும் அதிநுட்பமாயுமுள்ள உத்தரீயம் அந்தரீய மென்கிற வஸ்திர துவயங்களையும், நிர்மலமாயும் அழகாயுமுள்ள முத்தாரம் முதலிய ஆரவகைகளையும், கோடிசூரியப் பிரகாசமாய்ப் பிரகாசிக்கின்ற ஜடைபில்லையையும், காதணியையும், மஹா சமுத் திரம் தென்கடலாகிய ரத்நாகரம் என்ற இந்த இரண்டு கடல்கள் கண்டிகை வகைகளையும், மோதிர வகைகளையும், மலையரையன் ரத்னக் குப்பைகளையும் பொன்மயமான சிங்கவாகனத்தையும் ஐராவதம், நல்ல த்வனியோடுங்கூடிய மணியையுங் கொடுத்தனன். தேவி தேவருங் கடல் முதலியனவுங் கொடுத்தனவாகிய ஆயுதவகை களையும், ஆபரணாதி மாலை வகைகளையும் அன்புடன் ஏற்றவளாய் இமவான்றந்த சிங்கவாகனத்தின்மேல் ஆரோகணித்து அமர ரெல்லாங் கண்டுகளித்து ஆனந்தக்கூத்தாட அற்புதக் காக்ஷி கொடுத்தனள். அவ்வரிய காக்ஷியைக்கண்ட தேவரெல்லாம், (1-22)

*எங்கட்கு மங்களத்தைச் செய்வாய்; சத்துருக்களால் நாச

---

* நமஶ்ஶிவாயை கல்யாண்யை ஶாந்த்யை புஷ்ட்யை நமோநம:
பகவத்யை நமோதேவ்யை ருத்ராண்யை ஸததம்நம: ।
காளராத்ர்யை ததாம்பாயா இந்த்ராண்யைதே நமோநம:
ஸித்த்யை புத்த்யை ததாவ்ருத்த்யை வைஷ்ணவ்யைதே நமோநம: ।
ப்ருதிவ்யாம் யாஸ்திதா ப்ருத்வ்யா நஜ்ஞாதா ப்ரிதிவீஞ்சயா
அந்தஸ்திதாய மயதி வந்தேதா மீஶ்வரீம் பராம் ।
மாயயாம் யாஸ்திதா ஜ்ஞாதா மாயயா நசதா மஜாம்
அந்தஸ்திதா ப்ரேரயதி ப்ரேரயித்ரீம் நுமஶ்ஶிவாம். ।

மடைந்திருக்கிற எங்களை ரக்ஷிப்பாய்; தனக்கு வாய்த்திருக்கும் பிரகாசமான பெருமையினால் மதங்கொண்டு மஹாபலிஷ்டனு யிருக்கிற மகிஷனைச் சங்காரஞ்செய்வாய்; நினைத்தவண்ணம் பல பல வுருவங்க ளெடுக்கப்பெற்றிருக்கும் வரத்தின் பலத்தினால் அநேக மாயாவுருவங்களெடுத்துச் சகல தேவர்களையும் துக்கத்துக் குள்ளாக்கித் தனக்கு நிகரில்லை என்று கர்வித்திருக்கிற அவன் ஸ்திரீயினால் மரணமடைவானென்கிற விதியிருக்கின்றமையால் அந்தத் துஷ்டனை நீ கொன்றுவிடுவாய்! ஓ பக்தவத்சலே! நீ யொருத்தியே சகல தேவர்கட்கும் புகலிடமாயுள்ளவள்; எங்கட்கு இப்பொழுது மகிஷனாலுண்டாயிருக்கும் பெருந்துன்பத்தைப் போக்குவாய்; உன்னை ஒரு முறையன்றிப் பன்முறையும் நமஸ்கரிக் கின்றோம், என்று வணங்கிப் பிரார்த்தித்தனர். (23–26)

தேவி அவ்விண்ணப்பங்களைக் கேட்டு மகிழ்ந்து புன்னகை செய்து தேவர்களைக் கருணையுடன் நோக்கி, ஓ அண்டர்களே! அறி வாகிய செல்வத்தைப்பெற்று பெறத்தக்க பொருளாகிய செல் வத்தைப் பெறாத வற்பனாய் அந்த மகிஷனிருக்கின்றமையால் அவ னடைந்திருக்கும் மதகர்வம் முதலியவற்றோடு அவனொழிந்து போவ திற் சந்தேகமுண்டோ? எல்லாப் புகழுக்கும் எல்லாப் புண்ணியங் கட்குந் துணைக்காரணமாகிய செல்வத்தைக் காக்கவல்ல பெருங்காவ லாவது அறிவென்பது. அதனை இழந்தவன் வேறான எத்தன்மை யான பெருங்காவல்களை யுடையவனாயினும் அவையெல்லாம் என் செய்யும்? அவை அச்செல்வத்தைக் காக்குமோ? அறிவென்கிற காவலிழந்தவன் செல்வமிழந்தவனே யாவன்; அதனோடு புகழ் புண்ணியம் முதலியயாவு மிழந்தவனுமாவன்; யாவராலும் எள்ளப் படுபவனுமாவன்; அவன் இன்மை என்கிற ஒன்றையே உடையவ னவன். ஓ அறிஞர்களே! நீங்களவனால் அடைந்திருக்கும் துன்பங் கட்கு ஒரு சிறிதும் அஞ்சவேண்டாம். அவன் வாழ்வெல்லாங் கூத்தாட்டவையின் கண்ணே கூடிய கூட்டம்போற் போய்விடும். அறத்தைவிட்டு அகங்காரத்தையும், செங்கோன்மையைவிட்டுக் கொடுங்கோன் முறைமையுங் கைக்கொண்டிருக்கிற அந்த மகிஷா சுரனை நான் சங்கரிக்கின்றேன். இனிக்கவலையை விட்டொழிவீர்; தவநிலையைக் கைக்கொள்வீர். "ஒன்னார்த்தெறலும் உவந்தாரை யாக்கலும் எண்ணிற்றவத்தான் வரும்" என்றனுக்கிரகஞ் செய்து உலக மாதாவாகிய தேவி பிரபஞ்ச வாழ்க்கையைச் சற்று எண்ணி நகைத்தனள். என்னையெனின், இவ்வுலகினர் தோற்றமுடை யனவாகிய பொருள்கள் நிலைத்தலிலவென் றுணராது நிலைத்த லுடையவென்றுணரும் புல்லறிவுடையவராய்க் கூத்தாட்டவைக் கண்ணே குழாங்கள் கூத்தாட்டுக்காரணமாக வருதல்போலும் அக்காரணம் போமாறுபோலும் நல்வினைக் காரணமாக வருவ தும் அக்காரணம் போய்வழித் தானும் போவதுமா யுள்ளது செல்வமென்பதென் றுணராமலும், அச்செல்வத்தை யனுபவித் தற்கிடமாயுள்ள இவ்வுடம்பும் அருவமாகிய காலமென்னும் ஒன் றின் வழித்தாய்நின்று சூரியன் முதலிய அளவைகளான் அக்

காலம் அறுபட்டுப் போய்வழித் தானும் போவதுமாயுள்ள தென்பதுணராமலும், போதல் வருதலாகிய அச்செயலும் கால நீடிப்பின்றி நெருனலுளனுயினுனெருவன் அவனே இன்றில்லை யாயினனென்னும் செயலை மிருதியாகவுள்ள தென்பதுணராம லும் போகின்றார்களல்லவா ? இதுவல்லவோ பெரிய ஆச்சரிய மென்றும், இந்த அயனரி முதலிய இந்திராதியரும் இங்ஙனங் கூறிவந்த இயல்பினையுடையனவாகிய பொருட்செல்வத்தையும் உடம்பினையுமே பல முறையும்வேண்டி வேண்டிப்பெற்று இந்த மகிஷாசுரனால் அந்த விரண்டிற்கும் இடையூறுகளுண்டாக இப் பொழுது துன்பப்படுகின்றார்களல்லவா ? இதுவல்லவோ பிரமை ! என்றும் துன்பமானது இவ்வண்ணம் இவர்களிடத்தில் வந்து இவர்களெண்ணிய இன்பத்தைத் தடுத்தும் இன்னமும் துன்பத் தால் தடைபடும் இன்பத்தையே விரும்புகின்றார்களல்லவா? இது வல்லவோ அஞ்ஞானம் ! இந்தத்தேவர்கள் இவ்வாறான துன்பப்பட அந்த மகிஷனுக்கு அளவிறந்த செல்வத்தையும் அகங்கார மமகா ரங்களையுங் கொடுத்தது காலமல்லவா ? இதுவல்லவோ ஈச்வரனு யுள்ளது ? இவ்வண்ணம் அம்பிகை உலகியலும் உயிரியலும் சிறிதே திருவுள்ளத்தெண்ணி நகைத்தவளாய்ப்பின் தேவர்களு டைய காரியத்தையெண்ணி மகிஷாசுரன் முதலிய அசுரரெல்லாம் மேககர்ஜனையைக் கேட்ட ஸர்ப்பங்களைப்போல் இருந்தாங்கழிவெய் துமாறு அட்டகாசஞ்செய்து கர்ஜனை செய்தனள். அதனால் பரந்த பூமியும், மலைகளும், விரிந்திருக்கும் கடல்களும், மேருமுதலிய பெரியமலைகளும், எண்திக்குகளும் அசைந்து நடுங்கின. இந்த நடுக்கத்தைக்கண்ட அசுரரெல்லாம் அந்தோ ! அந்தோ ! என்றலறி மகிஷாசுரனிடத்திலோடினர். அவனுமதிசயித்து இச்செய்கை செய்தார் யாவர்? இப்பேரோசை யாவரோசை ? என்று சந்தே கித்துக் கோபத்துடன் தூதர்களைப் பார்த்துக் கூறுகின்றான் : ஓ தூதர்களே ! இப்பேரொலி செய்தவர் யாவர் ? அவரெத் திறத்தவர் ? அவரெங்குள்ளார் ? என்பனவற்றை நன்றாய் நீங்களறிந்துவருவதுமன்றி மிகவுக்கிரமாயும் கர்ணகடூரமாயுமிருக் கிற இந்த வொலியைச் செய்தவன் எவனாயிருந்தபோதிலும், அன்றி நம்மினத்தவராகிய அசுரரில் ஒருவனாயிருந்தபோதிலும் நம்பகைவராகிய தேவரில் ஒருவனாயிருந்தபோதிலும் துராத்மா வாகிய அவனைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு என்னிடம் வாருங்கள். நாம் அஞ்சும்வண்ணம் பேரொலியோடு கர்ஜனை செய்த அம்மதகர்வமுடையவனை நான் கொன்றுவிடுகிறேன். எனக்கஞ்சாது இப்பேரொலி செய்தானுகையால் அவனறிவுடைய வனு ? ஆயுளுள்ளவனு ? அவன் அற்பவறிவும், அற்பவாயுளும் உள்ளவனவன். அவனுக்கு மரணம் நெருங்கிவிட்டது. அவனைத் தேவரிலொருவனென்று எண்ணலாமெனின் அவர்கள் என்னால் பய மடைந்து கண்களுக்கும் புலப்படாமல் மலைமுழையில் வசிப்பவரா யினர். ஆதலால், அவர்கள் இதுசெய்யார். அசுரர்களிலொருவ னுயிருக்கலாமென் றெண்ணலாமெனின் அவர்கள் எனக்குப் பகை

வர்களுமன்று; என்னுடைய சுவாதீனத்திலில்லாதவர்களுமன்று. ஆகலான் அவர்களும் இது செய்யார். இவ்வொலி செய்தவனுடைய அறிவை யெண்ணுந்தோறு மெனக்காச்சரியத்தை விளைவிக்கின்றது. இவன் செய்த வொலியால் நான் ஏதாவது அஞ்சுவேனென்றே? அந்தோ! இப்படியும் ஒரு வீணை காரியத்தைச் செய்வானு? பாவம்! பாவம்!! இவனைப்போலும் மூடன் ஒருவனிருப்பானு? ஓ தூதர்களே! அந்தத் துரஹங்காரமுடையவனை அதிசீக்கிரத்தில் பிடித்துவாருங்கள். நான் அவனைக் கொல்வது நிச்சயமென்று சொல்லியனுப்ப, அந்த தூதர்கள் கர்ஜனை தோன்றிய விடத்துக்கு நேரே சென்றபொழுது அவ்விடத்தில் தேஜோரூபியாயெழுந்தருளியிருந்த தேவியைக்கண்டு திக்பிரமைகொண்டு உருண்டு புரண்டு திரண்டு ஓடிவந்து மகிஷனைக்கண்டு கூறுகின்ருர்கள் :— (27–47)

ஓ மகாராஜனே! நாங்களென்னவென்று சொல்லுவோம்! நீர் கேட்ட கர்ஜனை தேவாசுரர்களால் உண்டானதன்று; அது செய்தவள் ஒரு ஸ்திரீ ஐயா! ஆனல் அந்த ஸ்திரீயைப்போலும் நாங்களும் கண்டிருப்போமென்றெண்ணினுலுங் கண்டிருக்கமாட்டோம்; நீரும் கண்டிருக்கமாட்டீர்; இது நிச்சயம். அவளைப் பார்த்து நீ யாரென்று கேட்பதற்கும் எங்கட்கு நாவெழாமற் போயிற்று. நின்று காணலாமென்ருலோ அதிகவுக்கிரமாயிருக்கின்ருள். அவள் கொண்டிருக்கின்ற கோபத்துக் களவேயில்லை. பதினெட்டுக் கைகளோடுங்கூடி யிருக்கின்ருள். ஒருகையேனும் சும்மாயிருக்கவில்லை. எல்லாக் கைகளும் பதினெட்டுவிதமான ஆயுதங்களோடுங் கூடியிருக்கின்றன. திருமேனியினெளியோ பன்னிரண்டு சூரியர்களும் பின்னிடும்படியான அகண்ட சோதியை வீசுகின்றது. அவள் பூண்டிருக்கின்ற ஆபரணங்களோ அந்த அகண்ட சோதியினின்றும் பாய்கின்ற கிரண சமூகங்கள்போல் கிரணங்களை வீசுகின்றன. அந்த ஆபரணங்களைத் தாங்கப்பெற்ற அவயவங்களோ அவ்வொளிகளினுள்ளே ஊடுருவி அவைகளை விளக்கஞ் செய்வனவாகக் காணப்படுகின்றன. இவையாவும் உடைத்தாயிருக்கின்ற உருவத்தினுடைய யௌவனமோ பாலப்பருவத்தினின்றும் வந்ததாகவும், இனி கௌமாரத்தை யடையத்தக்கதாகவுங் காணப்படவில்லை. அவளுடைய யௌவனத்தின் வண்ணம் எவ்வண்ணத்தின் வண்ணமோ அஃது அறியப்படவில்லை. அவ்வழகி ஒரு பானபாத்திரத்தை வைத்திருக்கின்ருள். அதனைத் தேவர்களுக்குக்காட்டி, ஓ தேவர்காள்! இந்தப் பாத்திரத்திற்ருன் அசுரர்களைக் கொன்று அவர்களுதிரவெள்ளத்தை முகந்து என்னுடைய பரிவாரங்களாயுள்ள சாகினி, டாகினி யாதிகள் மதுபானம்போலுண்ண வைத்திருக்கின்றேன் என்கின்ருள். தேவர்களதைக் கேட்டு ஆகாயத்திலிருந்தவண்ணம் ஆனந்த பரவசங்கொண்டு, எங்களன்னையே! எங்களுடைய சத்துருவாகிய மகிஷாசுரனை வெற்றி கொள்ளவேண்டும். அவன் இதுகாறும் தோல்வி என்பது அறியான். நீ எங்களை ரக்ஷிக்கவந்தவளாகையால் அவனைப் பக்ஷிக்கவந்தவ

ளென்பதிற் சந்தேகமில்லை. ஆயினும், நீ எழுந்தருளிவந்தும் இன்னமும் அவனுயிரோடிருக்கின்ருனுகையாலெங்கட்கு மனம் பொறுக்கவில்லையென்று உனது கொடுமைகளை எடுத்தெடுத்துப் பலவாருகக் கூறுகின்றனர். அவளோ, உனது பேரைச் சொல்லும் போதெல்லாம் தனது நன்முகத்தை துன்முகமாகக் காட்டுகின்ருள். அதன் காரணமென்னையோ, அறியோம். ஓ மஹாசூரனே! இப் பொழுது அவளுடைய வீரபராக்கிரமத்தைச் சொல்லுவோமா? அவளுடைய பராக்கிரமத்தைக்கண்டு ஆனந்தமடைகின்ற அண்டர் களுடைய ஆரவாரத்தைச் சொல்லுவோமா? அவள் தாங்கியிருக் கும் ஆயுதங்களுடைய பிரதாபங்களைச் சொல்லுவோமா? இவை யெல்லாம் ஒருவாறு சொல்லக்கூடுமாளுலும், அவளுடைய அடங் காத பேரழகையும் அங்க விசேஷங்களையும் எங்களால் ஒருபொழு துஞ் சொல்லக்கூடுமோ? கூடாது. அம்மம்ம! அவளை யாள்கின்ற கணவன் எப்படிப்பட்டவனே! எவ்வண்ணத்தனே? எந்நிறத்தனே! எவ்விறைவனே? ஒருவனுளனுயினும் அவன் இவளை ஆள்வனே? அவனை இவள் ஆள்வளோ? அறியோம்! இந்தச்சமயம் ஒருவனு லும் ஆளப்பட்டவளாகக் காணப்படவில்லை. பெண்ணுருவா யிருந்து ஆண்தன்மையைப் படைத்திருக்கின்ற இவளை நீர் காணப் பெறுவீராயின் அவளோடு போரைக் காணமாட்டீர். அவள் ஏரை (அழகைத்) தான் காணவல்லீர். அதுவுங் காணவல்லீரோ, வல்லரல் லீரோ? அவளோ உம்மிடத்தில் போரையேகாண வல்லவள். அவளோ இளையாள். அவள் ஒரு சிங்கத்தை ஊர்தியாகக் கொண் டிருக்கின்ருள். ஐயா! அஃது உம்மை அங்குள்ளார் சூரனென்று சொல்லும்பொழுது, அவன் கடாவல்லவா? அவனெப்படிச் சூரனு வான்? அந்தோ! அந்தக் கடாவுக்குமேல் பராக்கிரமுள்ள மிருகங்க ளெத்தனை யிருக்கின்றன? அவைகளைக் கண்டால் நீங்களென்ன சொல்லுவீர்! அந்தக்கடா இங்கு என்முன் வருமாறு செய்வீர்களா? நான் சிங்கமல்லவா? என்னை யானைகள் கனவிற் காணுமாயின் இறக்குமென்ருல் இந்தக்கடா என்முன் வருமாயின் உயிர்பெற் றிருக்குமா? அதனை நீங்களே சொல்லுங்களென்று உறுத்துப் பார்க்கின்றது. அதன் பராக்கிரமும் சொல்லுக்கடங்காது. இந்தச் சிங்கத்தை அவள் வாகனமாகக் கொண்டிருக்கும் கம்பீரமே கம்பீரம்! இவ்வளவு கம்பீரத்தோடும் வந்திருக்கின்ற அவள் இனியென்ன செய்ய எண்ணியிருக்கின்ருளோ, அதனை அறிந்திலோம். ஓ பிரபுவே! அவளிடத்தில் நாங்கள் கண்டனவெல்லாம் சொல்லித் தொலையவில்லையே! அவளிடத்தில் சிருங்கார ரசத்தோடு வீரரசமும் சொட்டுகிறதையா! அந்த ரசங்கள் சொட்டுவதைப் பார்த்து வந்த வர்களாயினமேயன்றி நீவிர் சொல்லியதுபோல் அவளை யீர்த்துக் கொண்டுவரும் தூதுவரல்லராயினேம், பொறுத்தல்வேண்டும். இனி நாங்கள் செய்யவேண்டுவது யாதேனுமுள்ளதாயின் கட்டளையிடு மென்றனர். தூதர்கள் சொல்லியபொழுது மகிஷன் சொல்லத் தொடங்கினன்: (48–54)

ஓ தூதர்களே! இதுவரையில் அகங்காரங்கொண்டேன்;

இப்பொழுது காமவிகாரங்கொண்டேன். உங்களுக்கிடத்தக்க கட்டளையொன்றுமில்லை, நீங்கள் ஏகலாம். ஓ மந்திரி! தூதர்கள் புகன்றனவெல்லாம் உன் புலனுக்கு வந்தனவா? என்னறிவுக்கு வந்தனவெல்லாம் உன்னறிவுக்குப் போந்தனவா? உனக்குப் போந்தனவாயின் அந்த ஸ்திரீயினிடத்தில் போரை யுத்தேசித்து நாம் போதலையொழித்து, அவள் இங்கு வருவதற்கான வுபாயங்கள் ஸாமபேத தானமென்னு மூன்றனுளொன்றோ அல்லது இரண்டோ மூன்றோ அதன் வகையை எண்ணித்துணிந்து அவள் பாற்சென்று துணிந்தவுபாயத்தைச் செய்து அம்மூன்றுபாயத்தாலும் வருவதற்கிணங்காளாயின் நான்காவது உபாயமாகிய தண்டத்தைச் செய்ய நீ எண்ணுது என்னிடம் வந்துவிடுவாய். வரும் பொருளுரைக்கவல்ல ஓ மந்திரி! அவளிடத்தில் முன் தண்டத்தைச் செய்யத்துணிந்து ஒற்றரையனுப்பிய நானே இப்பொழுது அதிற்றுணிவு பிறவாதவனுவேனுயின், நீ அதிற்றுணிவது முறைமையாமா? அவளிடத்தில் அதனைத் துணிவையாயினது அவள் பாற்றுணிந்ததாகாது, என்பாற் றுணிந்ததே யாகும். ஓ மந்திரி! உன்னிற்றாழ்ந்தவர்களாகிய தூதர்கள் என்னுல் வெறுக்கப்பட்டவளாகிய அவளை என்னுலேயே விரும்பப்பட்டவளாகச் செய்தனர். அவர்களினுயர்ந்தவனுகிய நீ என்னுல் விரும்பப்பட்டவளாகிய அவளை வெறுக்கச் செய்யாமல், எனக்கு மகிஷியாகச் செய்வதல்லவோ உன்னுயர்வுக் கேற்றதென்று மகிஷன் சொன்னதை மந்திரி கேட்டு, ஓ ராஜாதி ராஜனே! நீ அந்த ஸ்திரீயினிடத்தில் விற்போரை விரும்பாது அவள் தோளைத் தழுவுதலாகிய மற்போரை விரும்பினீராதலால் அதனை நானவளிடத்திற் சொல்லப்போகும் சொற்போரால் முடித்து வெற்றிகொள்வேன். நீரிதற்குச் சிந்தனைசெய்த லொழிகவென்று அவன்பால் விடைபெற்று சதுரங்க சேனைகளோடும் அதிவேகமாய்ச் சென்று தேவியைக்கண்டு சற்று தூரத்தேநின்று அதிவிநயத்தோடு சொல்வணக்கமுடையவனுய்க் கூறுகின்முன் :—எந்த ஞாலத்துள்ளதுமல்லாத நானலத்துடன் கரும்பினும் இன்சுவை வழங்கத்தக்க பொன்னுரை யுடையாளே! நீ யாரோ? இங்குவந்த காரணம் என்னையோ? தேவர்களைப் போர்முகத்தில் புறங்காட்டி யோடச் செய்தவனும், ஒருவராலுங்கொல்ல எண்ணக்கூடாத பெரிய வரத்தைப் பெற்றவனும், பராக்கிரம சாலிகளாகிய மஹா அசுர வீரர்களுக்கெல்லாம் அரசனுயிருக்கத் தக்கவனும், எக்காலத்தும் எவ்விதத்தானும் இளைக்காதவனும் அழகிலே நிகரற்றவனுமான எங்கள் பிரபுவாகிய மகிஷாசுரன் மனேகரியா யிருக்கின்ற உன்னுடைய அபிப்பிராயம் ஈதென்பது என்முகமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற ஆவலுடையவனு யிருக்கின்முன். சுந்தரங்கட்கெல்லாம் அசுந்தரத்தை விளைவிக்கவல்ல சுந்தரி! ஓ மகாதிரிபுரசுந்தரி! எங்களரசன் மகிஷமுகத்தின னென்றெண்ணி யெள்ளல்வேண்டாம். உனது பெண்ணலத்துக்கேற்ற நல்ல ஆண்மகனுகவே வருவான். அதற்கு நீ ஐயுறல்வேண்டாம். அவன் உன்னுடைய சொரூப

லாவண்யாதிக ளெல்லாங்கேட்டு உன்னிடத்தி லிச்சிக்கவேண்டிய வற்றை யிச்சித்திருக்கிறான். நீ அவனுடைய இச்சைக்கேற்றவாறு உன்னுலெது இச்சிக்கப்படுமோ அதனை நீ அடைவதற்கொருவித ஆக்ஷேபமுமில்லை. அவனுக்கு உன்னுடைய கடைநோக்க மொன்றுதான் வேண்டும். ஓ மானினேர் விழியாய்! அவன் மன்மத லீலையில் வல்லவன். அப்பண்டிதன்பால் நீ வருவதற்கெண்ணமுள தாயின் இந்தப்பொழுதே வரக்கடவாய். அல்லது அவனுன்பால் வருவதற் கெண்ணமுளதேல், இக்கணமே வரும்படியாகச் செய் கின்றேன். இன்னமுமென்னுலாகத்தக்கது எதுவோ அதனையும், செய்யத்தக்கது எதுவோ அதனையும், திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். (55–68)

ஓம் ஏக பக்திமதர்ஶிதாயை நம:

## 10. தேவிபால் அசுர மந்திரி தூது

ஓ பூபதி! மகிஷாசுரனுடைய மந்திரியானவன் அகலாது அணுகாது நின்றுசொன்ன வார்த்தைகளை மகாராணியாகிய தேவி கேட்டு அவனைப்பார்த்துச் சில வார்த்தைகள் சொல்லத் தொடங்கினள் :

சந்தி விக்கிரகங்களில் வல்ல அமைச்சனே! அசுரவம்ச துவம்சினியாகிய என்னிடத்தில் பொருத்தலுக்குரிய வார்த்தைகள் நீ பேசியது பெரும்பிழை. என்னை யின்னுளென்று முன்னறிய வேண்டிய முறையானறிந்து பின்பேசவேண்டிய முறையாற் பேச வேண்டும். இது பிழையாயினும் இதனுல் உனக்கொரு நன்மை யுண்டாயிற்றென்று நினைக்கின்றேன். அஃதென்னையெனின், உன் வார்த்தையினுல் மகிஷனுடைய மனுஷ்யன் நீ என்றெனக்குத் தெரிந்தவுடன் காலாக்கினிக்குச் சமானமான என்னுடைய நேத்தி ராக்கினியினு லெரித்திருப்பேன். அதுவொழிந்து உன்னேடு வார்த்தையாடுவதற் கெண்ணினே னன்றோ? இதுதானென் றறிவாய். ஓ நாநலமுடையோனே! சிருஷ்டியிற்பட்டொழிந் தோர்க்கும், சிருஷ்டியிற் பட்டிருப்போர்க்கும், சிருஷ்டியிற் படுவோர்க்கும் யான் மாதா; என்னுள்வாழும் எனது நாயகனுகிய இறைவனே யாவர்க்கும் பிதா; நான் வெளிப்பட்டு முதல்வியாய் வருங்காலத்தில் என்னுயகன் என்னுள்ளான். அவன் வெளிப் பட்டு முதல்வனுய் வருங்காலத்தில் ஆண்பெண்ணென்கிற இரு பாதியாய் வருவோம். இத்தன்மையளாகிய நான் தனித்திருப் பதைப் பார்த்து அரிய காமுகரைமயக்கவல்ல பூலோகமங்கையருள் ஒருத்தி யென்றெண்ணியோ, அரிய தவமுடையாரை மயக்கவல்ல, சுவர்க்கலோக மங்கையருள் ஒருத்தி எண்றெண்ணியோ உங்க ளசுரரினத்தவரை மயக்கவல்ல மோகினி கணங்களி லொருத்தி யென்றெண்ணியோ மகிஷனுகிய மாட்டுக்கு என்னைப் பொருத்த நினைத்தனை! அந்தோ! நீதி நுட்பமுடைய அமைச்சனு

யிருந்தும், மதிநுட்பமறியாத அந்த மாடுபோலாயினையே! இது பெரும்பாவம்! எதிராளியாய் வந்தாரிடத்துச் சொல்லுஞ் சொல் * 'பிறிதோர் சொல்லால் வெல்லவல்ல தொருசொல் இல்லாமையறிந்தன்றோ சொல்லல் வேண்டும்' நீ யறியத்தக்க தாகிய அதனை யறியாதொழிந்தனையே! மகிஷனால் துன்ப மிகுதியுடையவர்களாயும், உங்களுடைய வர்க்கத்தவரால் தங்கள் உணவாயுள்ள அவிர்ப்பாகத்தை யிழந்தவர்களாயு முள்ள விண்ணவர் என்னைச் சரணடைந்து, எங்கட்குப் பெருஞ் செல்வ மளித்து எங்களை வாழ்வித்த வாழ்வாகிய, ஓ மஹாலக்ஷ்மியே! எங்கள் வாழ்வைக் கொள்ளையடிக்கவந்த மூதேவிக்கு எங்களை யாளாக்கிவிட்டனையே; நீ 'அசுரவம்சத்வம்சனி' என்னும் பிருதா வளியைப் பெற்றவளல்லவா என்று என்னைப் புகழ்ந்து மகிஷாசுர சங்காரத்தை வேண்டினார்கள். அவ் வேண்டுகோளுக்கிரங்கி யாதொரு சைநியங்களுமின்றித் தனியாய் வந்திருக்கின்றேன். சங்காரகாரணியாய் வந்திருக்கிற என்னிடத்தில் ஸம்ஸார ஸாகர காரணிகளாகிய மங்கையர் காமுறும் காமவார்த்தைகளை வழங்கினையே! அவை என்பாற் பயன்படுவனவா? அல்லவே. என்னை எதிரியாயெண்ணிய மகிஷன் இவள் பெண்ணாயிருப்பதால் இவளைக் காமத்தால் மயக்கித் தனக்குரிய பொன்னால் என்னைத் தளைப்படுத்தி வெற்றி கொள்ளலாமென் றெண்ணினனோ? நீயும் அந்த அறிவிலிக்கு அங்கமாயுள்ளவனாகையால் நீ எண்ணிச் செய்ய வேண்டிய 'வினைத்தூய்மையை நாடாது அவன் வேண்டுப வேட்பச்சொலல்' என்பதை நாடி அதனை முடிக்க வந்தனையோ? உங்களிருவரெண்ணமும் நன்று! நன்று!

கண்ணுங் கவசமுமாயிருக்கும் அமைச்சுத் தொழிலுடைய அமைச்சனே! யான் உனக்குரிய நீதியொன்றை யறிவுறுத்திப் பின்னர் நீ உன்னரசன்மாட்டுச் சொல்லவேண்டிய சொற்களைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக:

† "பின்வருங்கேட்டைத் தமது மதி நுட்பத்தாலறிந்து சொல்லினவரது அறிவையுமழித்து, அதனைத் தானும் தன்னறி வானே அறியானேயாயினும் அக்குற்றம் நோக்கி அவ்வரசனை விட்டு நீங்காது அவனுக்குறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை"யென்று கூறிய அமைச்சுக்குரிய நீதியை நீ கைக் கொண்டு பின்னர் நீ உன்னரசனிடஞ் சென்று, ஓ மகிஷாசுரனே! நீ உயிர்பிழைத்துலகில் வாழவேண்டினையாயின் உனக்கிடமாயுள்ள பாதாளத்துக்குப் போய்விடு. இல்லையாயின் பெருங்குற்றத்துக் காளாய்த் துஷ்டனாயிருக்கின்றவுன்னை யுத்தக்களத்திற் கொல்வது

* "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொலச்சொல்லை - வெல்லுஞ் சொலின்மையறிந்து" என வருங்குறளானறிக.

† "அறிகொன்றறியா ளெனினுமுறுதி - யுழையிருந்தான் கூறல் கடன்" எனவருங் குறட்பாவுரையிற் காண்க.

நிச்சயம். இது பொய்யன்று. அது நாளை உன்னுடைய தேகத்தைத் துண்டு துண்டாய்த் துணித்து யமபுரத்துக் கனுப்பும்போது தெரியவரும். அப்படிச் செய்யத்தக்க நான் இப்போது சொல்லியது உன்பால் வைத்த கருணையேயாகும். இது கருணையாமென்றெண்ணுவையாயின் பாதளமாவது கிடைக்கும். அகங்காரம் படைப்பையாயின் அதுவுமிழந்து அழிந்துவிடுவாய். நான் உன்னைக் கொன்று தேவர்கட்குச் சுவர்க்கலோகங் கொடுப்பது மெய். நீ சுவர்க்கலோகம் ஆளலாமென்றெண்ணுவது பொய். இனிச் சொல்லுவதொன்றில்லை. இனி உன்மேல் விடுவது பாணமே; அதனைப் பார்த்துக்கொள். அது வருதற்குமுன் பாதளத்துக்குப் போகும் வழியைப் பார்ப்பாய். என்மேற் பழியில்லை. போவதாயிருந்தாற் போ; இருப்பதாயிருந்தால் போருக்குவா. உன்னுடைய படைகளனைத்துங் கூப்பிடு; நான் சித்தமாயிருக்கின்றேன். உன்னுடைய முன்னோராகிய வீரரெல்லாம் யுகங்கடோறும் என்னாலேயே கொல்லப்பட்டார்கள். எனக்கு உன்னைக் கொல்வது ஒரு பெருங் காரியமன்று. நான் பதினெட்டுக் கரங்களிலும் பதினெட்டாயுதங்களை வீணாகச் சுமந்திருப்பானேன்? உனக்கும் யுத்தத்தினிடத்திலேயே ஆசையுள்ளதாகத் தெரியவருகின்றது. அந்த ஆசையைக் கெடுப்பானேன்? இதுவன்றியும் என்னிடத்தில் நீ காமத்தைக் கொண்டிருக்கின்றாய். அது உன்னை உயிரோடு வாழவையாது; அஃது வுண்மை. அதுவுமன்றியும் நீ எண்ணியபடி உன்னுயிர் என்னுடன் வாழ்ந்தால் வாழுமேயல்லது உன்னோடு அது இங்கு வாழாது, யமபுரத்திற்றான் வாழும். நானோ உன்னுயிரோடு வாழத்தக்கவளல்லள். நான் உயிர்க்குயிரானவரோடு வாழத்தக்கவள். உனக்கு விதியும் என்னுடன் வாழும்படியாயில்லை; என்னால் வாழ்வற்றுப் போகும்படியாகவே யிருக்கிறது. இப்படி எல்லாப் பொருத்தமும் உன் சாவுக்குப் பொருத்தமா யிருக்கின்றதே யல்லது, எப்படி யானும் உன் வாழ்வுக்குப் பொருத்தத்தைக் காணேன். நீ மாத்திரம் தேவர்களைப் புறங்கண்ட யாம் ஒரு ஸ்திரீக்குப் புறங்கொடுப்போமா அல்லது சாவோமா என்று தீரனாய் வந்திருக்கின்றாய். உன் தீரத்தைக் கங்காதீரத்திற் போட்டுவிடு. பிரமன் கொடுத்த வரமாகிய வரத்தை யெண்ணிப்பார். வரத்தின்படியே நான் வந்த வீரத்தையும் நினைத்துப்பார். இம்மண்ணுலகத்தில் வாழவேண்டியவர் வைதிக மார்க்கத்தில் தவறாது வாழ்வராயின் வாழ்வர்; அம்மார்க்கத்தில் வாழாராயின் வாழார். அதனைச் சிந்தித்துப்பார். சன்மார்க்கத்தில் வாழவிரும்பாதவனாகிய நீ சிந்தித்துப் பார்த்து ஸர்ப்பங்கள் வாழுமிடமாகிய பாதாளத்திலாவது உனக்கிஷ்டமான வேறெவ்விடத்திலாவது வாழப்பாரென்று யான் சொல்லியதாகச் சொல்லக்கடவா யென்று தேவியார் சொல்லியருளினர். (1–45)

அதனைக் கேட்டமந்திரி இவள் சொல்லிய வெல்லாம் சரியே. இவள் சொல்லியபடி செய்யத்தக்கவளே யன்றி செய்யத்தகாதவளன்றென்று தன்னுள்ளத்தே எண்ணி மீண்டும் இவள் மானிட

மாதன்றித் தெய்வமாதாயினும் இவள் சொல்லியபடி நமதரசனிடத்திற் சொல்வது நமக்கு முறையாகுமா? ஆகாதாகலான் நாம் தூதாக வந்த * முறையைச் சிறிது காட்டிப் போதலே நமக்கு முறையா மென்று மிருகேந்திர வாகனளூடையா யிருக்கின்ற அம்பிகையைப் பார்த்துச் சில சொல்லத்தொடங்கினுன் : (46–53)

ஓ மாதரசே! நீ என்பால் சில குணங்கள் இருப்பனவாகவும் இன்மையாகவுங் கண்டு இன்மையாகிய குணங்களைக் கொள்ளுமாறு சில கூறினை. அதில் எனக்கொரு தாழ்வில்லை. நின்பால் சிலவுடைமையாகவும் சிலவின்மையாகவுங் கண்டிருக்கின்றேன். அதனைக் கேட்டல்வேண்டும். நீ யுத்தமுகத்தில் வீரமுடையா ரெடுத்துக் கூறும் சில வீரலக்ஷண தருமங்களாகிய சொற்களைச் சாமர்த்தியமாய்ச் சொல்லக் கற்றனையேயன்றி, ஸ்திரீகளுக்குரிய குணதருமங்களைக் கற்ருயல்லை. வீரதீரம் முதலிய எல்லாக் குணங்களும் நீயுடைய ளாயினும் ஆண்மக்கள்பால் அவைகளைச் சிறிதுங் காட்டாது பேதமைத் தன்மையைப் பெரிதுங் காட்டுவதே "மாதர்க் கணிகலம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றபடி நீ காட்டல் வேண்டும்; அது வொழிந்து உனது பேராண்மையைக்காட்டினையே இது உனக்குத் தருமமாகுமா? யான் என்னரசனுடைய வீரதீர குணசீல தருமங்களைக் கூறுகின்றேன், கேட்பாயாக :

எங்கள் அசுரகுல சிகாமணியாய் ராஜாதிராஜமணியாய் வீர தீரமணியாய் திரிலோக சாம்ராஜ்யமணியாய் அமரவம்ச த்வம்ச மணியாய் அகண்ட சாம்ராஜ்யமணியாய் அஷ்டைஶ்வர்ய சம்பன்ன மணியாய் அஷ்டாங்க யோகரசமணியாய் நவமணியாய் விளங்கும் எங்களரசனை நீ யாராக வெண்ணினையோ! யுகங்கடோறும் அசுரர்களை நீ வென்றவளாகக் கூறினையே, இவனும் அவர்களி லொருவனுக வெண்ணத்தக்கவன் ருனே? அவர்களால் உனக்கு வெற்றி வந்தது மெய்மையே. இதனுல் உனக்கு வெற்றி வருமென்பது பொய்யே. ஆனுல் நீ யுத்தஞ்செய்திருப்பது மெய்யாயின் சதுரங்கசேனைக ளுனக்கிருக்கவேண்டுமே! நீ ஒருத்தியாய் வந்திருக்கின்றனையே! எங்களரசனே எப்பொழுதும் போர்மேற் செல்பவனுதலால் நால்வகைச் சேனைகளும் எண்ணிறந்தனவாக விருக்கின்றனன். நீ வைத்திருக்கும் ஆயுதங்களோ பதினெட்டு; அவன் வைத்திருக்கும் ஆயுதங்களோ அளவிறந்தன. உன்னுடைய சரீரமோ

---

* தூது முறைமையாவது - பகை யரசனிடத்துச் சென்றபொழுது அவன்பால் பொருளை விரும்பியாவது வேறு ஸ்திரீ காமங்களை விரும்பியாவது அவன் வசப்பட்டு தன்னரசனுக்கு அவைசேராவண்ணஞ் செய்யாமையாகிய தூய்மையும், நமதரசனது வீரபராக்கிரமங்களை எடுத்துக் கூறுவோமாயின் இவர் நம்மை என் செய்வாரோ வென்று அஞ்சிச் சொல்லாமற் போதலை யொழித்துச் சொல்லுதலாகிய துணிவுடைமையும், தன்னுயிர்க்கு வரும் ஏதத்துக்கஞ்சித் தன்னரசனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய் சோர்ந்தும் சொல்லாமையாகிய திண்மை யுடைமையுமாம். இவற்றை "தூய்மை" எனவும், "விடுமாற்றம்" எனவும் வருந் திருக்குறட்பாக்க

மலரினும் மென்மை; அவன் சரீரமோ வயிரத்தினும் வன்மை. உனக்குள்ள பருவம் போருக்குரிமையல்லாத வாலிபம்; அவனுக் குள்ள பருவமோ போருக்குரிமையுடைய யௌவனம். ஒருத்தியா யும்ஆயுதங்களற்றவளாயும் சேனைகளற்றவளாயும் மென்மையான சரீரமுடையவளாயும் வாலிபமாகிய சிறிய பருவத்தை யுடையவ ளாயு மிருக்கின்ற நீ பலரோடும் பலவாயுதங்களோடும் வன்மையான சரீரத்தோடும் யௌவனமாகிய பெரிய பருவத்தோடுங் கூடியிருக் கின்ற அவனோடு போர்செய்யத் துணிதல் சிறுபிள்ளை விளையாட் டாய் முடிந்து துக்கத்துக் கிடஞ்செய்து சுகத்தைப் போக்கிவிடும். ஒருகால் நீ யுத்தஞ்செய்து பார்ப்போமென்று பேதைமையால் துணி வையாயின் அது மதத்தயானையின்கையில் அகப்பட்ட மலர் மர்த்த னப்பட்டழிந்து போவதுபோல் மர்த்தனப்பட்டழிவாய். இதுவரை யில் நான் நீ வெறுக்கும்படியான வார்த்தைக ளொன்றேனுஞ் சொல்லியிருப்பேனா? இல்லையே. அங்ஙனம் வன்சொல் வழங்காத என்னிடத்து நீ இன்சொல் வழங்காமையை யோசிக்குங்கால் என் னுடைய குற்றமென்றே யெண்ணுகின்றேன். நான் என்னுடைய ஆண்தன்மைக்குரிய வன்சொல்லை வழங்கி யிருப்பேனாயின், நீ உன் பெண் தன்மைக்குரிய இன்சொல்லை வழங்கியிருப்பாய். நான் என் னுடைய அரசன் உன்னிடத்தில் ரசப்பட்டு வசப்பட்டிருக்கின்றா னதலால் அதற்கு மாறாக விரசமான வார்த்தைகளை வழங்கா தொழிந்து சாமோபாயமாகவும் தானோபாயமாகவுமுள்ள வார்த்தை களையே வழங்கி வந்தேன். அரசனுடைய மோக அபிப்பிராயம் உன்னிடத்தி லில்லாத பக்ஷத்தில் ரூபத்தினாலும் யௌவனத்தினாலும் அகங்காரத்தை யடைந்து உன்னுள்ளடங்காத விவகாரங்களை யெண்ணத்தா லெண்ணிக் கொண்டு வாயில் வந்தவா றெல்லா முளறுகிற உன்னை இன்னமு முயிரோடிருக்கச் செய்வேனா? என்னுடைய பாணத்துக் குன்னுயிரை யிரையாக்கிவிடுவே னல்லவோ? உலகத்திலில்லாத உன்னுடைய ரூபலாவண்ணியங் களைக் கேட்டு மோகத்தையடைந்த என்னரசனுடைய மோகமன்றோ வுன்னுயிரை யுடலோடு கூடியிருக்கச்செய்தது? அதுவன்றோ அப்பிரியப்படத்தக்க உனது இழிந்த வார்த்தைகளைப் பிரியவார்த் தைகளாக என்னையுங் கொண்டாடச்செய்தது? ஓ விசாலாக்ஷீ! இனி அதனைப் பேசுவதனாலென்? மகிஷாசுரன் தன் ராஜ்யம் முதலிய சகல செல்வத்தையு முனக்குக் கொடுத்துத் தானு மடிமை யாவதற்குச் சித்தமாயிருக்கின்றான். அவனிடத்தில் நீ கொண் டிருக்கும் ரோஷத்தைக் காட்டுவையாயின் நீ மரணமடைவாய். உன் மரணத்தைக்கண்ட அவனும் மரணமடைவான். இருவரும் மரணமடைவது நலமா? இருவரும் புணரவிருப்பது நலமா? இனி யேனும் நல்ல அபிப்பிராயத்தை அவன்பால் கொள்வையாயின் நானுமுன்பா லன்புள்ளவனா யுன்பாதத்தில் விழுகின்றேன். நான் வீழ்ந்து வேண்டுவதெல்லாம் என் மகிஷனுக்கு மகிஷியாயிருப் பதற்கே. மகிஷனாகிய அவனை நீ மணவாளனாகக் கொள்வையாயின் மூன்றுலகிலுமுள்ள அளவிறந்த செல்வங்களெல்லா முன்பாலனவே

யாகும். கணவனையும் வேண்டாது செல்வத்தையும் வேண்டாது இவ்விரண்டுடன் கூடி வாழத்தக்கதாயிருக்கின்ற ஸம்ஸார நலமும் வேண்டாது போதற்கா நீ பெண்ணுகப் பிறந்தது? பெண்ணுக்குப் பெரு நலம் புருஷனே. புருஷனுக்குப் பெரு நலம் பெண்ணே. இதுவன்றி உலகில் பெறத்தக்க நலன் வேறுண்டோ? நலமெல்லாந் திரண்டுருக்கொண்டிருக்கும் ஓ நல்லவளே! யானிதுகாறும் கூறி வந்த நலங்களை யெல்லாம் சற்று கவனிப்பாயாக, வென்றனன். இவனது புன்மொழிகளைக்கேட்ட பெருந்தவக்கொழுந்தாகிய பெண்ணினல்லாள் மந்திரியைப்பார்த்து, ஓ அமைச்சனே! நீ இதுவரையில் சொல்லி வந்தவையெல்லாம் அசாஸ்திரமும் அயுக்தமுமேயாம். சாஸ்திர சம்மதமாயும் யுக்தி சம்மதமாயும் அநுபவ சம்மதமாயு மிருக்கின்ற சில நியாயங்களை நான் கூறுகின்றேன், கேட்பாயாக:

மகிஷனுக்குப் பிரதானனுயிருக்கின்ற உன்னை மிருகபுத்தியுடையவனென் றிப்போ தெண்ணுகிறேன். மிருகபுத்தியுடைய வுன்னையும் மிருக வுருவத்தையுடைய அவனையுங் கூட்டிவைத்த பிரமனது புத்தி நுட்பத்தை மிகவும் நினைக்கின்றேன். உங்களிருவரையு மொன்ருகக்கூட்டிய வூழையுஞ் சற்றுன்னுகின்றேன். என்னை ஸ்திரீயென்றும் ஸ்திரீசுபாவமெனக் கிருக்கவேண்டுமென்றுங் கூறினையே, உன்னறிவு இதுதானே? மிருகத்திற்கு மிருக குணமிருக்குமேயன்றி அதற்கு மக்கட்குண முண்டாகுமா? மக்கட்கு மக்கட்குணமன்றி மிருக குணமுண்டாகுமா? இஃது வுலகின்கண் கண்டோமில்லையே; மாறுபடக் கண்டோமாயின் அது குணத்தினலன்றி உருவத்தினலல்லவே. உருவம் பெரிதா? குணம் பெரிதா? உருவத்தால் குணம் வருவதா? குணத்தாலுருவம் வருவதா? குணமிகுதிச் செயலைக் கண்டவிடத்து, அக்குணத்தளவா யுருவத்தையும், உருவ மிகுதிச்செயலைக் கண்டவிடத்து அவ்வுருவத்தளவாய்க் குணத்தையுங் கொள்வது சுருதியுக்தியனுபவமுடைய சிறந்தோரது கொள்கை. ஆகவே என்னிடத்துக் காணவேண்டிய குணமிகுதிச் செயலைக்கண்டு அதற்குரிய உருவமுடைமையைக் காணவேண்டுவதொழிந்து உருவமிகுதிச் செயலையுடையாரது குணத்தை யணிவகுத்துக் கூறினையே. ஓ அறிவிலி! நான் சொல்லிவந்ததை நன்ருய் விசாரஞ் செய்வாயாக. நான் உருவத்தால் ஸ்திரீயாயும் குணத்தால் புருஷனுயுமுள்ளவள். என்னுடைய ஸ்திரீயுருவ நலம் வைதிகராகிய தேவருக்கும் எனது புருஷகுண வீரம் அவைதிகராகிய அசுரருக்கும் பயன்படத்தக்கனவென் றறிவாய். வைதிக அவைதிகங்களை யறியத்தக்கவர் யாரோ அவர்கள் என்னைப் புருஷனென்றும் ஸ்திரீ என்றும் அறிவர். அவையறியாத வுன்னைப் போல்வர் ஸ்திரீயே யென்றெண்ணி யிடர்ப்பட்டழிவர். இனி நீ என்னை ஆண்தன்மை யுடைமையால் புருஷனென்றும் மகிஷனை பெண்தன்மை யுடைமையால் ஸ்திரீயென்று மறியக்கடவாய். அவன் ஆண்தன்மையுடையவனுயின் ஆண்தன்மைக்குக் கீழ்ப்பட்ட பெண்ணுல் மரணமென்று

விதி ஏற்பட்டிருக்குமா? இராது. உருவத்தால் ஆணுருவமும் தன்மையால் பெண் தன்மையுமுடைய அவனுக்கு உருவத்தால் பெண்ணுருவமும் தன்மையால் ஆண்தன்மையுமுடைய ஒருத்தியால் மரணமுண்டென்பது துணிந்து விதிக்கப்பட்டதென் றறிவாயாக.

ஆண் தன்மையில்லாத மகிஷனை நீ ஆண்மகனென்று சொல்லுவது பெண்தன்மையில்லாத பேடியைப் பெண்ணென்று நினைத்து அழைப்பது போலுமாம். "பெண்ணால் மரணமென்பது" பிரமனே விதித்ததன்று. மகிஷன் எனக்கு ஸ்திரீயினால் மரணம் வேண்டுமென்று பிரார்த்தித்தானாகையால் பிரமனும் அதுபோலவே ஆகுகவென்றனன். இவன் வேண்டியதை யோசிக்குங்கால் சூரனானவன் ஒரு பேடியை விரும்பினது போலாயிற்று. இவனைப் போலும் அறிவில்லாதவனொருவ னிருப்பானா? ஓ மந்திரி! அவன் வேண்டியபடியே நான் ஸ்திரீ ரூபங்கொண்டு அவனைச் சங்காரஞ் செய்ய வந்திருக்கிறேன். இஃது உண்மையாகையால் நீ கூறியதெல்லாம் தரும சாஸ்திரத்துக்கு விரோதமாமென் றறிவாய்.

நான் சதுரங்க சேனை யில்லாதவளென்றும் அவன் எல்லாமுடையானென்றுங் கூறினையன்றோ? ஒருவனுக்குத் தெய்வ பலமொன்றுண்டாயின் புல்லும் வச்சிராயுதமாகும். அஃதிலதாயின் வச்சிராயுதமும் பஞ்சுபோலாகும். ஆகவே சேனைகளும் ஆயுதங்களும் என் செய்யும்? எல்லாஞ் செய்யவல்லது தெய்வமே. அந்த பலந்தான் வேண்டும். அவனுக்கு மரணம் சமீபித்திருக்கிறபடியால் நானொருத்தியே போதும். என்னால் அவனுக்கு மரணமேயன்றி அவனால் எனக்கு மரணமில்லை. சரீரசம்பந்தமுடையவர்க்கே மரணமன்றி அஃது இல்லாத எனக்கு அஃது உண்டாகாது. சரீர சம்பந்தம் ஜீவர்களுக்கே. அச்சம்பந்தம் எப்போதுண்டாகிறதோ அப்பொழுதே சுகதுக்கமுமுண்டாகிறது. சுகதுக்கானுபவ முடையவர்க்கு அவ்வனுபவ முறையான் மரணதுக்கம் எந்தெந்த வகையான் ஏற்படுத்தப்பட்டிருக்கிதோ அந்தந்த வகையான் வருகின்றதன்றி வேறுவிதமாய் வருவதின்று. இந்த விதி பிரமனாதி சகலருக்குமுண்டு. மந்தபுத்தியுள்ளவர்களே செல்வநிலையாமையையும் யாக்கை நிலையாமையையும் அறியாது யானெனதென்று செருக்கடைந்து மரண பயத்தையு மறந்திருக்கின்றவர்கள். இனி நீ உன்னரசன்பாற் சென்று யான் கூறிய முறைப்படி யாவுஞ் சொல்லி அதற்கவன் என்னவெண்ணி நடத்தச் சொல்லுகிறானோ அதனை நடத்துவாயாகவென்று சொல்லவும், மந்திரியானவன் நமதரசன் இவள்பால் காமங்கொண்டு இவளைத் தன்வசப்படுத்துதற் கேதுவான சாம பேத தானங்களைச் செய்து வருவாயென்று நம்மை யேவியிருக்க, அவை யொன்றுனு மிவள் வசப்படாது வியர்த்தமாய் போயினமையால் அரசனிடம் நாமெவ்வாறு போவதென்றும், இவளுக் கேதேனும் தீங்கு செய்வோமென்றால் அஃது அவனுக்காகாமையால் ஒரு குற்றமுஞ் செய்யாமல் வந்தபடி சீக்கிரமாய்ப் போதலே நலமென்றுந் துணிந்து, பின்னர் நாமிதற்காக வெண்ணி யேங்கவேண்டுவதில்லை யென்றும்,

நமதரசன் புத்தியிற் சிறந்தவனுகையால் இனி நடக்க வேண்டிய காரியத்தில் யோசிக்கவேண்டியவைகளை அவனே யோசிப்பா னென்றும், அந்த யோசனைகட்குச் சகாயம் வேண்டுமாயின் நம்மைப்போன்ற மந்திரிகள் அநேகரிருக்கின்றுர்க ளென்றும் நிச்சயித்து, மீளவும் தன் வீரத்தைக் கருதி இவ்விடத்துப் போர் செய்யலாமா வென்றும், போர் செய்தாலும் அப்போர் இப்போது முடியத் தக்கதல்லவேயென்றும், அதில் வரும் ஜயாபஜயம் அவனைச் சேருவதாயிருப்பதால் நாமேன் வீணு யவதிப்படவேண்டுமென்றும் வெறுத்து, அரசனிடஞ் சென்று சொல்லித் தொலேப்போம், அவனிஷ்டப்படிச் செய்யப்போவதை நாம் பார்ப்போ மென்றெண்ணிச் சென்று, மகிஷாசுரனைக் கண்டு பணிந்து, ஓ அசுரேந்திரனே! உன் ஆக்ஞையின் வண்ணம் நீ விரும்பியுள்ள ஸ்திரீயினிடஞ் சென்று உன் வேண்டுகோளனைத்தையும் யான் விடாது சொல்லியும் அவள் சிறிதும் செவிகொடாமையால் அதனைக் கண்டு, அவள் உன்னுடைய வசமாவதால் வரும் செல்வப்பெருக்கினையும் அதிகாரமேம்பாடுகளையும் பெண்ணலத்துக்குரிய போகநலங்களையு மெடுத்துப் பலபலவாய்ச் சொன்னேன். அதற்கவள் புன்னகைசெய்து என்னைப் பார்த்து, எருமையினுடைய கர்ப்பத்தி லுண்டானவனும் அந்த மிருகத்துக் கிருப்பதுபோல மிகவும் மந்த மதியுடையனும் அசுத்தனுமுள்ள மகிஷனுகிய மிருகனை தேவகாரிய சித்தியின் பொருட்டுப் பலி கொடுக்கிறேன். ஓ மந்தபுத்தியுள்ளவனே! உலகத்தில் எவ்வளவு மூடபுத்தியுள்ளவ ளானுலும் கடாவைக் கணவனுகக் கொள்ள எண்ணுவாளா? அங்ஙனமிருக்க, என்னையா அவனைக் கொள்ளச் சொல்லுகிருய்? அந்தக் கொம்புள்ள கடாவை இச்சிக்கத்தக்கது அந்தக் கடாவைப்போலும் கொம்புள்ள எருமையல்லவா, மோகங் கொண்டுருமி அதனை நாயகனுகக் கொள்ள விரும்பும். ஓ மூடனே! என்னிடஞ் சிறிதேனுமச்சமின்றி இவ்வார்த்தைகளைச் சொன்னுயல்லவா? ஓடிப்போ. இங்கு நில்லாதே! அந்தக் கடாவை என்னிடம் சீக்கிரம் வரும்படிச்செய். தேவர்களெல்லாஞ் சந்தோஷத்தோடு சுவர்க்கம்போக இவனைப் பலிகொடுக்கிறேன் என்றுள். ஆகையால் அந்த மதம் பிடித்தவளோடு என்னுற் பேசமுடியுமோ? நானவளைக் கொல்ல அடிக்கடி துணிந்தும், நீ அவளைக் கொல்லப்போகிருய், என்னிடம் வந்து சேர்ப்பாயென்று நீ சொல்லியதைப் பலமுறையுஞ் சிந்தித்து உயிரோடு விட்டுவந்தேன். உன்னுடைய ஆக்ஞையின்றி வியர்த்தமாய் நானெருகாரியத்தைச் செய்யலாமா? ஓ மகாராஜனே! அந்த ஸ்திரீயை நீர் இலேசாக நினைக்கவேண்டாம். அவள் மகாபலமுள்ளவள். அவளென்ன செய்யவிருக்கின்றுளோ அறியேன். அவள் செய்கையால் என்ன முடியவிருக்கின்றதோ, அதுவுஞ் சொல்லமுடியாது. என் எண்ணம் உமக்கெவ்விதத்திலாவது கீர்த்தியும் இஷ்டகாமமும் வேண்டுமென்பதே. ஆனுல் அது கஷ்டசாத்தியமாக விருக்கின்றது. இவையெல்லாம் நீர் யோசித்து யுத்தம் பண்ணுவது நன்மையா? பாதாளம் போய்ச் சேருவது நன்மையாஎன்றவிஷயத்தை

நீரே நிச்சயித் தறிந்துகொள்ளல் வேண்டும். என்னை ஒன்றுங் கேட்கவேண்டாம். நாரென்றுமறியேன் என்று மந்திரி கூறினன். (54–66)

ஓம் ஏகாக்ரசித்த நிர்த்யாயை நம:

## 11. மஹிஷன் மந்திராலோசனை (1)

வியாசர் கூறுகின்றார் :—ஓ ஜனமேஜயனே ! தூதாகச் சென்ற மந்திரியினுடைய வார்த்தையை மதத்தில் மிகுந்த மகிஷன் கேட்டு வயதிலும் அறிவிலும் பெரிய ஏனைய மந்திரிகளைப் பார்த்துக் கூறுகின்றான் :

ஓ மந்திரிகாள் ! இவன் சொல்லியவெல்லாம் கேட்டீர்கள்லவா ? இனிச் செய்யத்தக்கது யாது ? அதனை நன்றாயோசித்து அதிசீக்கிரத்தில் நான் நம்பத்தகுந்ததாய்ச் சொல்லுவீர்களாயின் அதனைச் செய்யத் துணிவேன். இப்போது வந்திருக்கிற ஸ்திரீ சம்பராசுரனுடைய மகளாகிய மாயை என்பவளைப்போல் தேவர்கள் க்ஷேமார்த்தமாய் வந்ததாகத் தெரியவருகின்றது. அவளிடத்தில் எனக்கு மோகமே வளர்ந்து வருகின்றதன்றி கோபம் சிறிதுந் தோன்றவில்லை. இது தேவர்களுடைய அதிர்ஷ்டமோ! மாயையோ! இல்லாவிடின் அவள் மந்திரியினிடத்தில் என்னைக் கடாவென்றும் மாடென்றும் பலவாறான நிந்தை மொழிகளைக் கூறிவிட்டாளே, அவையெல்லாம் நான் பொறுக்கத்தக்கனவாமா ? இனி அவற்றைப் பேசியாவதென் ? அவள் பெண்ணாயிருப்பதால் அவளைப் பெண்டாட்டியாக்கிக்கொண்டு அவளுடைய சுகத்தைக் கைக்கொண்டு பின்னர் அவள் கொண்டிருக்கும் அகங்காரத்தை யடக்கத்துணிய வேண்டுமேயன்றி இப்பொழுது துணிந்தால் அவளிடத்தில் நான் அனுபவிக்க வேண்டியதா யெண்ணியிருக்கின்ற பெரிய சுகம் வீணாய்ப் போய்விடுமல்லவா ? ஆகையால் மதமுடைய அவள் எனக்குப் பட்டவர்த்தினியாவதற்கான உபாயம் எதுவோ அதனை உபாயிகளிற் சிறந்த நீங்கள் யோசித்துச் சொல்லுங்கள். இந்த அனுகூலஞ் செய்யத் தக்கவர்கள் நீங்களன்றி வேறு யாருளார் ? நீங்கள் மஹா சமர்த்தர்கள். என்பொருட்டு அவளிடத்தில் எது நடத்தவேண்டுமோ அதனை நடத்துங்கள்; எது செய்யவேண்டுமோ அதைச் செய்யுங்கள். உங்களுக்கு எல்லாச் சுதந்தரமுமுண்டல்லவா ? என்றான்.

மகிஷாசுரன் வாய்மொழியைக்கேட்ட மந்திரிகள், தம்மிற் பெரியோராகிய புரோகிதர்களைக் கலந்து ஆராய்ந்து க்ஷேமத்துக் கேதுவான சில நீதிகளை அரனுக்குச் சொல்லத் துணிந்து அரசனைப் பார்த்துக் கூறுகின்றார்கள் : ஓ அரசனே ! ஒருவருக்கு ஒன்றைச் சொல்லுவதென்றால் சத்தியமாயும் நன்மையாயுமுள்ளதைச் சொல்லவேண்டுமேயல்லாமல் அசத்தியமாயும் தீமையாயுமிருப்பதை எப்போதுஞ் சொல்லுதல்கூடாது. ஏனையோரிடத்

தில் சொல்லுவதைப் பார்க்கிலும் உன்னிடத்தில் சொல்லுவது பெரும்பாவம். ஏனெனின், நீ அரசருதலின் மலர்தலை யுலகிற்கு உயிரெனச் சிறந்துள்ளாய். யாவர்க்கும் உயிராயுள்ள நீ சத்திய மாகிய நற்குணத்தையும் நீதிநூல் வழித்தாகிய நற்செய்கையு முடையரு யிருப்பையாயின் உன்னைநோக்கி உன் வழிப்பட்டிருக் கும் குடிகளெல்லாம் சகல செல்வத்தையும் பெற்றுய்யும். நீ அவை யிழந்திருப்பையாயின் அக்குடிகளெல்லாம் எவ்விதத்தினும் துன்ப முற்றழியும். ஆகலான் நாங்கள் உனக்குச் சொல்லப்போவது இப்பொழுது உன் செவிக்குப் பொருததாய் கைப்பதாயிருந்த போதிலும் அதனைச் சொல்லுதலே எங்கள் கடமை. அதனை விரும்பிச் செவி பொறுத்துக் கேட்பதுவே உனது கடமை. ஆனல் உலகவழக்கு எத்தன்மைத்தெனின், பின் க்ஷேமத்தைத் தருவது எதுவோ அது முன்கேட்பதற்கு அப்பிரியமாயும் பின் கேட்டைத் தருவது எதுவோ அது முன்கேட்பதற்குப் பிரியமாயுமிருப்பன. எதுபோலெனின், பின் தேகத்துக்கு ஆரோக்கியஞ் செய்வதாகிய ஔஷதம் முன் உண்பதற்குப் பிரியமற்றும், பின் ரோகஞ் செய்வ தாகிய ஆகாராதிகள் முன் உண்பதற்குப் பிரியமுற்றும் இருப்பக் காண்கின்றேமல்லவா? அதுபோலவே பின் செல்வந்தருவதாகிய சத்தியத்தை முன்னேகொள்ளுவதற்கு அப்பிரியமும், பின்னே கேடு தருவதாகிய அசத்தியத்தை முன்னே கொள்ளுவதற்குப் பிரியமு முடையராயிருக்கின்றனர். சத்தியத்தைக் கேட்கின்றவனும் சொல் லுகின்றவனும் நினைக்கின்றவனும் அரிது! அரிது!! அசத்தியத் தைக் கேட்கின்றவரும் சொல்லுகின்றவரும் நினைக்கின்றவருமே எங்குமுளார். உன்னுடைய நினைவும் நன்னெறிப்படாத தீ நெறி யிற்றலைப்பட்டு அசத்தியத்தில் பிரவேசிக்க முயலுகின்றது. இச் சமயத்தில் நாங்களென்ன வென்று சொல்லுவோம்? இவ்வுலக மன்றி எவ்வுலகினும் வரும் நன்மை தீமைகளை யாவரறிவா ரென்றனர். (1–7)

மகிஷாசுரன் அந்த மந்திரிகளைப் பார்த்துக் கூறுகின்றான்: நீங்களனைவரும் ஒன்றாகக்கூடி ஒரு சொல்லாய்ச் சொல்லுவதில் எனக்கு ஒன்றும் நிச்சயிக்கக் கூடவில்லை. தனித்தனியே அவரவர் அபிப்பிராயங்களைச் சொல்லி வருவீர்களாயின் நான் அவைகளை யெல்லாம் யோசித்துப் பின்னர் பண்டிதர்களாகிய பெரியோரு டைய நீதிகளையும் அறிந்து அதன் பின்னர் என்னறிவால் எது செய்தத்தக்கதென்று துணியப்படுமோ அதனை யுங்கட்குத் தெரி விக்கின்றேன். மேற் செய்யத்தக்கது எதுவோ அதனைச் செய்மி னென்றனன். (8–10)

மந்திரிகளுள் ஒருவனாகிய விரூபாக்ஷ னென்பவன் அரசன் வார்த்தையைக் கேட்டு, அந்தோ! நமதரசன் மிகவுங் கவலைகொண் டிருக்கிறவனாகக் காணப்படுகிறபடியால் நாமவனைச் சந்தோஷிக் கும்படியாகச் செய்வதுவே முதற்காரியமென்றெண்ணி கூறு கின்றான்: அரசனே! இப்போது வந்திருக்கிற ஸ்திரீயானவள் யார்? அவள் மஹா கர்வம் பிடித்தவளாகக் காணப்படுகின்றாள்.

அவள் உன்னுடைய அருமை பெருமைகளை யறியாது வாயில் வந்தபடி உளறுகின்றாள். சிறுபிள்ளைகளுக்குப் பயமுறுத்த ஒரு பூச்சுக் காட்டுவதுபோல் உன்னை மருட்டுகின்றாள். நீ அதனை மருட்சி யென்றெண்ணாது பூச்சுக்காட்டுவதைக் கொண்டே பயப் படுகின்ற இளஞ்சிறார்போல் பயப்படுகின்றனை. இதுவென்னை? ஸ்திரீகளுடைய பொய்யையும் சாகசங்களையும் பார்வை முதலிய வற்றால் செய்யத்தக்க சேஷ்டைகளையும் அறிந்தவன் அவர்கட்குச் சிறிதும் பயப்படான்; நீ அவையொன்றும் அறிந்திலைபோலும்! அறிந்திருப்பையாயின் நமது மந்திரியினிடத்தில் அவள் சொல்லி யனுப்பிய வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்திலேயே இப்படி திகிற் படுவையா? நீ மூன்றுலகத்தையும் வெற்றிகொண்டு இப்பொழுது ஒரு ஸ்திரீக்குப் பயந்தவனாய்த் தீனதசையையடைந்து யோசனைக்கு வந்தது வீரபுருஷனாகிய உனக்குக் கீர்த்தியை விளைவிக்குமா? உனக்கிது பெரியதோர் அபகீர்த்தியாகும். இனி யான் சொல்வதைக் கேளும்: நான் ஒருவனாகவே அஸ்திர சஸ்திரங்களோடும் சதுரங்க சேனைகளோடும் அந்த மதகர்வமுடைய ஸ்திரீயினிடத் திற்போய் என்னுடைய போர்த்திறத்தைக் காட்டி அவள் கோபங் கொண்டிருப்பவள்போலும் வீரபராக்கிரம முடையவள்போலும் காட்டுகின்ற அவளது சேஷ்டைகளையெல்லாம் அடக்கித் தன் னுயிர் பிழைத்தாற் போதுமென்று எண்ணும்படியாகச் செய்கின் றேன். அவள் எங்கே இறந்துபோவாளோவென்று நீ மாத்திரம் பயப்படப்போகின்றாய்! நீ பயப்படுவாயென்று யுத்த முகமாகப் போகாமல் முன்போனவன்போல் நானவளிடத்தில் இதமுகமாய்ப் போகமாட்டேன். முன் இதமாய்ப் போனபடியினாலன்றோ அவள் இவ்வளவு அகங்காரங்கொள்ளுவதற் கிடமாயிற்று? நானவளை நாகபாசத்தாற்கட்டி உன் சமீபத்திற் கொண்டுவந்து விடுகிறேன். என் சாமார்த்தியத்தைப்பாரும். நீ அவளை ஓரடிமையாள்போல் ஆளவல்லவனாவாய். இதுவே என்னுடைய அபிப்பிராய மென்றான். (11–16)

இவ்வாறு விரூபாக்ஷனென்னும் மந்திரி சொல்லியவுடன் துர்த் தரனென்கிற மந்திரி மகிஷனைப்பார்த்துச் சொல்லத் தொடங்கி னன்: ஓ அசுரேந்திரனே! ஸ்திரீகளிடத்தில் இதத்தைக் காட்ட லாகாதென்று விரூபாக்ஷன் சொல்லியது மெய்யே. ஆயினும் நானொரு தருமஞ்சொல்லுகிறேன், சிறிது கேட்பாயாக. சௌந் தரியாதி விசேஷங்களில் சிறிதுங் குறைவில்லாத அந்த ஸ்திரீ அதிகக் காமமுடையவளென்று அவள் சொல்லிய சொல்லால் நினைக் கின்றேன். உன்னிடத்தில் யுத்தத்தை யுத்தேசித்து வந்திருப்பாளா னால் பரிவாரங்களுடன் வந்திருக்கவேண்டும். தனியே வந்திருக் கின்றபடியால் உன்னைத் தன் சுவாதீனமாக ஆக்கிக்கொள்வதற் கென்றே நினைக்கவேண்டும். காமத்திற்சிறந்த மங்கையருடைய சொற்களில் அடங்கியிருக்கும் பாவனைகள் அநேகமுள. அவை யறியவல்லவர் காமநூல் வல்லவரேயன்றி ஏனையோரல்லர். அந்த ஸ்திரீயினுடைய விதண்டா வார்த்தைகளி லெனக்கு அப்படியே

தோன்றுகின்றன. "யுத்த முகத்தில் உன்னைப் பாணங்களால் கொல்வேன்" என்றதை யோசித்துப்பார்த்தால் காமரசமாகவே இருக்கின்றது. இப்பொழுது உன்னிடத்தில் ஏதேனும் போர் செய்த துண்டோ? இல்லையே! அவள் போர் செய்யாமல் உன்னுடைய பராக்கிரமங்களெல்லாம் வாங்கியிருக்கின்றாளா, இல்லையா? இஃது அவள் யுத்தஞ்செய்யாமல் செய்த யுத்தமல்லவா? அவள் சொல்லிய "பாணம்" என்ற சொல்லில் அடங்கிய பொருள் காமபாணமென்றும் அப்பாணமானது தனது கடைநோக்கமென்றும் ஆம். "உன்னைக் கொல்வேன்" என்றது என்னுடைய கடைநோக்கமாகிய பார்வையால் அவன் காமாந்தகனாய் உயிர்விடுந்தன்மையாகச் செய்வேனென்றும், என்னுடைய பார்வையாகிய பாணத்தால் அவன் வருந்தத்தக்கவனேயன்றி ஏனையோர்விடும் பாணங்களால் வரும் வீரங்கொள்ளத்தக்கவனன்றென்றும், அப்பாணங்களும் அவனைக்கொல்லும் வன்மையுடையன வல்லவென்றும், அவையெல்லாம் அவனுக்குப் புஷ்பாஞ்சலிபோலாகுமென்றுமாம்.

கடைநோக்கத்தைப் பாணமென்று யான் உவமித்துக் கூறுவதாக நினையற்க. "பெண்தன்மையையுடைய இப்பேதையாகிய பெண்ணுக் குளவாய கண்கள் தம்மைக் கண்டாருயிருண்ணுந் தோற்றத்துடனே மாறுபட்டிருந்தன." மாறுபட்டிருத்தலாவது பேதமைத்தன்மையுடையாட்குள்ள கண்கள் பேதமையைக் காட்டாது தன்னைப் பார்க்கின்றவருயிரைக் கவர்ந்து துன்பப்படுத்திக் கொடுமையாகக் காட்டுகின்றபடியால் மாறுபட்டிருந்தன வென்றும், இந்தக் கண்ணினுடைய கொடுமையை அதனிடத்துப் பிரியா நட்பினையுடைய புருவங்களறிந்து அப்பார்வையை வளைந்து மறைத்து விலக்கினவாயின் அப்புருவங்களைக் கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்குந் துயரைச் செய்யாவென்று புருவங்களைச் சற்று வெறுத்தும், என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ வென்றும், * காமமுறை கூறுமிடங்களில் வருவனவற்றுற் காண்க.

"அவனுக்கு ஸ்திரீயால் மரணமென்ற விதிப்படி நானே வந்திருக்கின்றேன்" என்றது திருமால் முதலிய தேவரிடத்தில் எனது கட்பார்வை போன்ற பாணங்கள் உளவாயின் இவனை அவற்றால் கொல்லவல்லவராவர். அவரிடத்தில் அஃதின்மையால் எங்ஙனங் கொல்லவல்லவராவாரென்றும், அவர் போலவே ஏனைய ஸ்திரீகளிடத்திலும் இல்லையென்பது நிச்சயமாதலால் நானே என்றுமாம்.

'அவன் பிராணனைவாங்குவேன்' என்றது, பிராணனென்பது வீரியம்; அந்த வீரியம் என்னைக் கண்டபொழுதே அவனுக்கு வெளிப்படுமென்றும், அதுவெளிப்பட்டபொழுதே வேறென்றும் அவன் செய்யவறியாது யான் எதைச் செய்யும்படி விதிக்கின்

* இவற்றை "கண்டாருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் பேதைக் கமர்த்தன கண்" எனவும்—"கொடும்புருவங் கோடா மறைப்பினடுங்கஞர் - செய்யல மன்னிவள் கண்" எனவுங் "கூற்றமோ" எனவும் வருவனவற்றுற் காண்க.

றேனே அவ்விதியைக் கடவாமற் செய்வானென்றும், அந்தச் சமயத்தில் ஏழையர்களாகிய தேவர்களுடைய குறைபாட்டைப் போக்கடிப்பே னென்றுமாம்.

"கடா" என்றது தன்னுடைய வரவையும் தன்னுடைய ரூபலாவண்ணியங்களையும் இவன்கேட்டும், கேட்டுக் காமங்கொண்டும், அந்த ரசத்தை அந்த க்ஷணமே வந்து தன்னிடத்தில் அநுபவிப்பதற்கறியாமல் கடாவைப்போ லிருக்கின்றானே யென்றும், சாந்தி செய்ய வந்தவனாயிருக்கின்ற இந்த மந்திரியும் நம்முடைய வார்த்தையில் அறியவேண்டிய காமரசத்தை யறிந்து அரசனை யழைத்து வந்து விடாமல் அழைத்துவரவா அரசனை என்று கேட்கின்றானே, வீணன வார்த்தைகளைக் கிடஞ்செய்து கொண்டிருக்கின்றானே, இவனும் ஒரு கடா எனப் பொருள்கொண்டு நீயுங் கடாவென்றும், உங்களிருவரையுங்கூட்டிய விதியையும் ஊழையும் மிகவும் வியக்கின்றேனென்றுமாம்.

இவ்வண்ணம் அவள் சொல்லிவிட்ட சொற்களுக்கெல்லாம் காமரசமாகிய காரணார்த்தங்களை ஆராய்ந்தறியும் வகையறியாமல் விபரீதமான பலவர்த்தங்கள்கொண்டு அம்மந்திரி சொன்னது காமநூலாராய்ச்சியில்லாத குறைபாடென்றே கொள்ளவேண்டும்.

அவர் சொல்லியவெல்லாம் விருப்பமான பிரியசூசனை, நீங்கள் கொண்டதெல்லாம் வெறுப்பான அப்பிரியசூசனை. புருஷனை விரும்பிய ஒரு ஸ்திரீ அப்புருஷனிடத்திலுள்ள விருப்பத்தைப் பிறரறிய விளம்புவாளாயின் அவர்க்கு வெளிப்படையாக ஒரு நாளுங்காட்டாமல் வேண்டாமையாகிய விரசமான வார்த்தைகளையே பெரும்பாலுங் காட்டிக்கொண்டேவருவாள். அவளப்படிப் பலமுறையுங் காட்டுவதனாலேயே அப்புருஷனிடத்திற் பற்றுடையாளென்பதை யறியவேண்டுமாறுபோல, இவள் கூறுவனவெல்லாம் நம்மிடத்தில் பற்றுடைமையைக் காட்டுகின்றன வென்றறிய வேண்டும்.

ஓ அரசனே! அவள் முன்னர் விரூபாக்ஷனைக் கடிந்து, நீ நிற்கவேண்டாம் போ போவென்று ஓட்டியதும், இவன் நம்முடைய வார்த்தையிலுள்ள காமரசத்தையறியாத அற்பனாயிருக்கின்றான், ஆகையால் இவன் நாம் சொல்லியபடியே அவனுக்குச் சொல்லும் பொழுது அவனாவது நமது பிரியரசத்தை யறிந்துவருகின்றானா இல்லையா பார்ப்போமென்று உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதனாலேயே.

இனியாவது, ஓ மஹாராஜனே! அவள் சொல்லெல்லாம் அபசவ்யமான பொருளுடையனவென்றறிந்து அவள் இப்பொழுது கொண்டிருக்குங் கோபமும் அகங்காரமு மடங்குமாறு காமரசமாயிருக்கின்ற காமத்தினாலும், அதற்குரிய தானத்தினாலும், அவளை வசப்படுத்தி உன்னிடம் வரும்படியான சாகசமான காரியத்தைச் செய்யவேண்டும். அஃது எனக்குத் தெரியும். இனி வேறுபல பேசுவதனாற் பயனென்னை? நான் சொன்னபடியே சாம தானங்

களால் அவளை வசப்படுத்தி உன்னிடத்திற் கொண்டுவந்து விடுகிறேன். வந்தபின்னர் வீரபராக்கிரமத்தைக் காட்டாமல் மன்மதன் நீதானென் றெண்ணும்படியான காமப் பிரபாவத்தைக் காட்டுவையாயின் அவள் உனக்கு வேலைக்காரியைப் போலாய் விடுவாள். இதிற் சந்தேகமில்லை; இவைதான் என்னுடைய அபிப் பிராயமென்றான். (17–30)

அவன் சொல்லி முடிந்தவுடன் தாம்பரனென்னு மந்திரி சொல்லத் தொடங்கினான்: ஓ அரசனே! நாம் படைத்திருக்குங் கண்கள் பிறரது உள்ளக்கருத்தைக் குறிப்பாலுணரத் துணைக் காரணமாயுள்ளனவேயன்றி வெளியே சாதாரணமாயுள்ள பொருளை யறிதற்கல்ல. அத்துணைச்சிறப்பாய கண்களைக்கொண்டு பிறர் குறிப்பினை யுணரமாட்டாது தன்மனத்துட் டோன்றும் கருத்தையே அவர் மனத்துள்ள கருத்தாகக்கொள்வதற்கா அங்கங்களுட் சிறந்த கண்களைப் படைத்தது? * பிறர் மனக்குறிப்பறியாத கண்களாற் பயனென்னை? அந்தோ! முன் சொன்ன மந்திரி அவளது உருவக் குறிப்புக்குரிய சொற்களையும், இரண்டாவது சொன்ன மந்திரி சொற்குறிப்புக்குரிய சொற்களையும் வழங்கினரேயன்றி அவளது உள்ளத்தினிகழுங் குறிப்பு இவ்வண்ணமென்று அறிந்து கூறினா றில்லை.

எனக்கு நிகழ்ந்த சில ஏதுக்களான் அவள் வந்திருக்குங் குறிப்பை யுணர்ந்திருக்கின்றேன். அது தருமத்தோடொத்ததா யிருக்கின்றது. அந்த ஏதுக்களையும் அவற்றைக்கொண்டு அறிதற் பாலனவாய குறிப்புகளையும் எடுத்துக் கூறுகிறேன். நீ அவற் றையே ரசமுடையனவாகக் கொள்ளல்வேண்டும்.

அந்த ஸ்திரீ காமமுடையவளுமல்லள்; உங்களிடத்தில் எந்த விதமான அபேக்ஷையுமுடையவளுமல்லள். சாஸ்திர தருமங்களெல் லாம் நன்குயுணர்ந்தவள்; காமரசத்தையுட்கொண்ட சொற்கள் அவ ளொன்றுஞ் சொன்னவளல்லள்; அவளுடைய சௌந்தரியங்களை யாவது சாமர்த்தியகுண நயவிசேஷங்களையாவது அவள் தாங்கி யிருக்கும் படைக்கலங்களின் பராக்கிரமங்களையாவது பார்ப்பாரும் சொல்வாரும் பரிப்பாரும் இங்கு யாருளார்? மூன்றுலகினுமில்லை. இவ்வண்ணம் ஒருவருள்ளாரென்று இதுகாறுங் கேட்டதுமில்லை, கண்டதுமில்லை. அவளுடைய சரித்திரங்கள் வாங்மனதீதமாயுள் ளன. அவள் நம்மை நோக்கிவந்தது விபரீதகாலத்துக் கேதுவென் றெண்ணத் தக்கதேயன்றி வேறன்று. நான் ராத்திரி உதயகாலத் தில் கிருகத்தின் முன்புறத்தினடுவில் ஒரு ஸ்திரீயானவள் ரத்த வஸ்திரந் தரித்துக்கொண்டு நின்றழுதுகொண்டிருக்கக் கனவு கண்டேன். இந்தக்கனா துர்நிமித்தமாயிருப்பதால் துர்மரண முண்டாமென்பது நிச்சயம். விநாசகாலத்துக்குத் தக்க விபரீத புத்தியும் உனக்குண்டாயிருக்கிறது; நான் கனவுகண்டு விழித்த

* "குறிப்பிற் குறிப்புணராவாயி னுறுப்பினுளென்ன பயத்தவோ கண்" எனுந் திருக்குறளாற் காண்க.

வுடன் வீடுகடோறும் பக்ஷிகள் கோரமாக வொலித்தன. இது போலவே அநேகவிதமான உற்பாதங்கள் தோன்றின. இந்த உற்பாதங்கட்குத் தக்கபடிவந்த ஸ்திரீயும் யுத்தத்துக்கே யழைக்கின்றாள். அவள் மானிட ஸ்திரீயுமல்ல; கந்தர்வ ஸ்திரீயுமல்ல; அசுர ஸ்திரீயுமல்ல. இவர்களில் ஒருத்தியுமாகாத அவள் தேவர்களால் நியமிக்கப்பட்ட மாயாரூபிணி; அவள் உன்னால் கொல்லப் படமாட்டாள்.

உனக்கு மரணகாலம் சமீபித்துவிட்டபடியால் யுத்தமின்றி நீ சொல்வதாகிய சாமபேத தானங்களொன்றும் நடவா. இனி வேறே எண்ணுவதனாற் பயனென்னை? எது நடக்கவேண்டுமோ அது நடக்கப்போகிறது. அதனைத்தடுக்க ஒருவராலும் முடியாது. அது சுபமானதோ, அசுபமானதோ, ஊழின்பாலதேயன்றி மற்றை யாவர்பாலு மன்று. பண்டிதராயுள்ளார் இவ்வுண்மையை யுணர்ந்து சுபத்தையும் விரும்பாது அசுபத்தையும் வெறுக்காது வருவதாகிய அவ்விரண்டையும் மனத்திற் கொள்ளாது அனுபவிப்பர். பிழைத்திருப்பதைப் பற்றியும் மரணமடைவதைப்பற்றியும் யார் யோசனை செய்யக்கூடும்? அதனை மாற்றத்தக்கவர் மூன்றுலகினுமில்லை. பல பேசுவதனாற் பயனென்? யுத்தத்துக்குப் புறப்பட வேண்டு மென்பது என்னுடைய அபிப்பிராயமென்றான். (31–44)

தாம்பரன் சொல்லிய உண்மைகளைக் கேட்ட மகிஷன் ஏனையோரை அம்பிகையினிடத்தில் விடுவதற்கெண்ணாமல் அவனையே விடுப்பவெண்ணி, ஓ தாம்பிரனே! நீயே அந்த சுந்தர ஸ்திரீயினிடத்திற்சென்று நீ யோசித்தவண்ணமே யுத்தத்தை நடத்தி அவளை என்னிடம் கொண்டுவருவாய். என்னிடம் வருவதற் கிசையாமல் யுத்தத்தையே மேற்கொண்டிருப்பாளாயின் அப்பொழுது கொல்லத் துணிவாய். நான் மன்மதனுடைய வீரப்போரில் தலைப்பட்டுள்ளேனாகையால் அவளைக்கொல்ல எனக்கு மனமில்லை. எனது அவாவெல்லாம் அவளைப் பார்க்கவேண்டுமென்பதே. யுத்தத்துக்குரிய போர் வீரத்தையும், காமத்துக்குரிய சோகவீரத்தையும் நீ அறிந்தவன். போர்வீரங்கொண்டவன் உயிரிழக்கான் என்பதும், சோகவீரங் கொண்டவன் உயிரிழப்பான் என்பதும் நீ அறிந்தவன். உயிரிழக்க வந்திருக்கும் எனது சோகவீரத்தைத் தணியச்செய்து என்னைக் காத்தல் உனது கடமை. எந்தவித வுபாயத்தினாலாவது நானவளைப் பார்க்கும்படிச் செய்யவேண்டும். இனி நீ காலத்தைப்போக்காமல் அவளிடத்திற்சென்று எனது வேண்டுகோளுக் கிடந்தரும் பலவகையான வார்த்தைகளைப்பேசி அவள் அவ்வார்த்தைகளைக் கேட்டுச் சொல்லும் சொற்களை யாராய்ந்து அவளது மனோநிச்சயம் இதுவெனத் தெரிந்து கொள்வாய். நீ அவளிட மறியவேண்டியவை எவையெனின், அவள் யாது நிமித்தமாய் வந்தாள்? காமத்தை யெண்ணி வந்தவளா? போரையெண்ணி வந்தவளா? தானே வந்தவளா? பிறரால் பிரேரேபிக்கப்பட்டு வந்தவளா? மாயா சொரூபிணியா? உண்மையானவளா? இவற்றில் யாதானுமொன்றைத் தெரிந்துகொள்வோமாயின்

பிறகு அதுகொண்டே நாம் அவளெண்ண முற்றுமறிந்து போரை யாவது சந்தியையாவது செய்ய முந்தலாம். ஆனால் நீ வார்த்தையாடும்போது தயையில்லாத வார்த்தையையாவது மருளும்படியான காரியத்தையாவது சொல்லவும் வேண்டாம், செய்யவும் வேண்டாம். அவள் மனதில் என்னவிதமான அபிப் பிராயங் கொண்டிருக்கிறளோ அவ்வபிப்பிராயப்படியே நாம் செய்யவேண்டு மென்றனன். (45–51)

மகிஷனுடைய வார்த்தையைக்கேட்ட மந்திரி அவனை நமஸ் காரஞ்செய்து சேனைகளோடு பிரயாணப்பட்டுப் போகும்போது மார்க்கத்தில் யமபுரஞ் சேரத்தக்க பல துற்சகுணங்கள் நிகழ்வதைக் கண்டு இஃதுவென்ன ஆச்சரியமென்று பயந்து தேவியிருக்குமிடம் போய்ச் சேர்ந்து சிம்மவாகனத்திலெழுந் தருளினவளாயும், அநேக விதமான தெய்வப்படைகளைத் திருக் கரங்களிற்றுங்கினவளாயும், தேவர்களாற் றுதிக்கப்பட்டவளாயும் இருக்கின்ற தேவியைக் கண்டு சிந்திக்கின்றான்: அரசன் சொல்லியபடி இவளிடத்தில் வார்த்தையாடிய பின்னரா அவ ளபிப்பிராயந் தெரிந்துகொள்ள வேண்டும்? இவளைக்கண்ட பொழுதே விளங்கிவிட்டதே! பராக்கிரமத்திற் சிறந்தவளாயும் அதனையே மேற்கொண்டிருப்பவளாயுங் காணப்படுகின்ற இவளா மகிஷனுகிய நமது அரசனை யொருபொருளாக மதித்து அவன்மே லாசைப்படுவாள்? அன்றியும் தெய்வாம்சத்திற் சிறந்த அழகைப் படைத்தவளா விலங்கினத்திற் கடைப்பட்ட மகிஷனை ஓரழகுடைய வனுக மதிப்பாள்? அந்தோ! அந்தோ! வென்றஞ்சி இனி இவ ளிடத்தில் வீணை வார்த்தைகளைப் பேசுவதிலும் அரசனபிப்பிரா யத்தை இவளுக்குத் தெரிவிப்பதே காரியமென்றெண்ணி அம்பிகை யைச் சமீபித்துக் கூறுகின்றான்: ஓ வீரசிகாமணியே! அசுரபதி யாயும் அகண்ட சாம்ராஜ்ய முடையவனுயும் இருக்கின்ற எங்க ளரசன் அமரர்களிடத்தில் சமரை விரும்பினான். உன்னிடத்தில் பாணிக்கிரகணத்தை விரும்பியிருக்கின்றான். அப்படிச் செய்தது உன்னுடைய அழகொன்றேயாம். ஓ பேரழகியே! நீயும் அவன்பால் யுத்தத்தை விரும்பாது அவனது புஜத்தை யணைய விரும்புவாய். அன்றியும் நீயோ போருக்கேற்ற வன்மையான சரீரத்தைப் படைக் காது மென்மையான சரீரத்தைப் படைத்திருக்கின்றாய். இது படைத் தற்கு எங்களரசனைப் பதியாகக்கொண்டு அற்புதமாகிய சிருங்கார வனங்களில் உல்லாசமாய் உலவி வருவதுவே உயர்வாகும். மென் மையான சரீரம் படைக்கப்பெற்றதேயன்றி மேன்மையான அழகை யும் பெற்றிருக்கின்றாய். அது பெற்றதற்கு அதனாலடையவேண்டிய எல்லாச் சுகத்தையும் அடையப் பெறுவதே அரிய சிறப்பாகும். இங்ஙனமான சுகத்துக்கேதுவான சரீரத்தையும், அழகையும் பெற்று பெற்றதற்குரிய பிரயோசனமான காரியங்களை யெண்ணுது அப்பிரயோசனமான இந்தத் துக்கத்துக் கேதுவான யுத்தத்தை விரும்பியது நீ செய்த பாவமோ, எங்களரசன் செய்த துர்ப் பாக் கியமோ அறியேன். அந்தோ! மலர்போன்ற கைகளில் அரும்பும்

மலர்ச்செண்டையுந் தாங்காது இரும்பினாலாகிய ஆயுதங்களைத் தாங்கப்பெற்றது என்ன கொடுமையோ! வீரத்திற் சிறந்த எவரையும் வெல்லுதற்குப் புருவமாகிய இரண்டு விற்களும் கண்களாகிய இரண்டு கணைகளும் அங்கத்திற்றனே அமைந்துகிடப்ப வீணை ஒரு வில்லையும் ஒரு பாணத்தையும் தாங்கியிருப்பது என்ன கருதியோ? புருவங்களும் கண்களும் செய்யாத போரை இந்த வில்லும் கணையும் செய்யப் பெறுமோ? இது விந்தையினும் விந்தை! இதுபோலும் நிஷ்பிரயோசனமான செயல் வேறொன்றுங் கிடையாது.

பிரபஞ்ச காமத்துக் கேதுவாயுள்ள சரீர சுகத்தைப் பெற்றவர்கள் அதற்குரிய இன்பத்தை நாடி அதற்கேற்றவரை யணைந்து ஆனந்தமுற்றிருப்பதைவிட்டு அதற்கு மாறான போரை விரும்பி சுக சரீரத்தைப் புண்படுத்தித் துக்கமடையச் செய்வது போலும் அறிவற்ற செயல் ஒன்றுங் கிடையாது. புத்தியிற் சிறந்த அறிவுடையார் ஒருநாளும் யுத்தத்துக் கிடங்கொடார். அறிவிலிகளும் லோபகுணமுடையவர்களுமே சுகானுபவம் அறிவிப்பதற்கேதுவாகிய செயல்களில் மனதைச் செலுத்தாது துக்கத்துக் கேதுவாகிய செயல்களில் மனதைச் செலுத்துவார்கள்.

நீங்களிருவரும் அத்தகையரல்லரே! அந்தோ! உங்களுக் கமைந்துள்ள இளமை நலத்தைப் பாழ்படுத்திக்கொள்ளவேண்டாம். ஓ மெல்லிய திருமேனியுடையவளே! நீ போரை விரும்பியதுபோலும் எங்களரசனும் விரும்புவானாயின் அவன் விடும் பாணம் உன் மேனி தாங்கப்பெறுமா? உன் மேனியைப் பார்க்கப் பெறுவோர் எவ்வளவு வன்னெஞ்சுடையராயினும் பாணத்தை விட்டு அதனைக் கெடுக்க முயல்வார்களா? ஒருபொழுதும் எண்ணவுமெண்ணார், துணியவுந் துணியார். ஓ தெய்வநாயகமே! உன்னுடைய சரீர சௌந்தரியாதி விசேஷணங்களைக் கேட்ட அக்கணத்திலேயே எங்களரசன் உன்னிடத்தில் போரை விரும்பாது பாணிக்கிரகணத்தை விரும்பினனே, அவனறிவின் விசேஷத்தை நானென்னவென்று சொல்லுவேன்! அவனெண்ணியவாறே நீ அனுக்கிரகஞ் செய்வாய். தேவதா பூஜ்யனான மகிஷாசுரனுக்கு நீ மனைக்கிழவியாவாய். அது உனக்குச் சிறுமையன்று, பெருமையே. உன் மனோரதங்களெல்லாம் மிக வெளிதாய் நிறைவேறும். உன்னை யாவரும் மகிஷனுக்குரிய மஹாராணி என்று மதிப்பார். அதைவிட நீ பெறத்தக்கது இவ்வுலகில் வேறொன்றுண்டோ? இதில் சந்தேகங் கொள்ளவேண்டாம்.

ஓ பெண்ணரசியே! என்னுடைய வார்த்தையை யங்கீகரிப்பாய். நீ என்றும் நீங்காத சுகத்தையடைய விரும்புவாய். இனி யுத்தஞ் செய்வதை வெறுத்துவிடுவாய். யுத்தத்தை வெறுக்காது விரும்புவையாயின் உனக்குக் கஷ்டமாகிய தோல்வியுண்டாகுமேயன்றிச் சுகமாகிய வெற்றியுண்டாகமாட்டாது. சொன்னேன்! சொன்னேன்! இப்போது எங்களரசரிடத்தில் நீ எண்ணிய போரில் தோல்வியுண்டாவது பொய், எங்களரசர் உன்னிடத்தில் எண்ணிய

போரில் உனக்கு வெற்றியுண்டாவது மெய். இதனை எண்ணிப் பார்ப்பாய்.

ஓ சுந்தரீ ! நீ அரச நீதியையும் அரசச் செல்வத்தையும் அறிந்தவளாயுங் காண்கின்றபடியால் யான் வேண்டியவாறு எங்க ளரசனுக்கு மணவாட்டியாகப் பல்லாண்டு பல்லாண்டாய் வாழக் கடவாய். உனக்குப் புத்திர சம்பத்தும் உண்டாகும். அவனுக்கு இந்த ராஜ்ய சம்பத்தும் உண்டாகும். ஆகலான் நீ இந்த யௌவனத்தில் எங்களரசனோடு சரச சல்லாபத்துடன் கிரீடித்திருப் பின் புத்திர சம்பத்தையுங் கண்டு மகிழ்ந்து எந்நாளுஞ் சுகமாக வாழக்கடவா யென்றனன். (52–67)

ஓம் ஏஷ்ணுரஹிதாத்ருதாயை நம:

## 12. மஹிஷன் மந்திராலோசனை (2)

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே ! உலகமாதாவாகிய தேவியானவள் தாம்பரனென்னுமமைச்சன் சொல்லிவந்த முறை பிறழ்ந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிறிதுங் கோபங்கொள்ளாது புன்னகை செய்து அவனைப் பார்த்து மேகங் கர்ஜனை செய்வது போலும், அடா மூடா ! என்றதட்டி, நீ கூறிவந்ததெல்லாம் ஞான சூனியனையும் காமாதுரனையும் அற்பபுத்தி யுடையவனையும் இப் பொழுதே மரணமடைவதற் கருகனையுமுள்ள உன்னரச னபிப்பிராய மாதலால் உன்னைக் கோபிப்பதிற் பயனென்னை ? இனி யான் சொல்வதை மகிஷனிடத்திற் சொல்வாயாகவென்று கூறலாயினள் :

உன்னுடைய தாய் சாக்கிரதை என்பதையும் அசூசை என் பதையும் சிறிதுமுணராத சரீரத்தைப் படைத்த மகிஷி. அவ னுண்ணு முணவோ புல் முதலிய திரணங்கள். நான் உன் தாயைப் போன்ற பெண்ணினத்தைச் சேர்ந்தவளா ? அன்றியும் முன்னே எனக்கு நீண்ட கொம்புகளிருக்கின்றனவா ? பின்னே நீண்டு வீழ்ந்து கிடக்கும் வாலிருக்கின்றதா ? பருத்த வயிறிருக் கின்றதா ? இந்த லக்ஷணங்களில்லாத என்னை நீ எவ்வண்ணம் விரும்பினாய் ? தேவர்களிற் சிறந்த ருத்திர மூர்த்தியையும், பிரமன் விஷ்ணு வருணன் குபேரன் அக்னி என்கிற இவர்களையும் அபேக்ஷிக்க மாட்டாத நானா மிருகவடிவனான உன்னை நாயகனாகக் கொள்ளுவேன் ? அடா மதிகேடா ! உன்னிடத்தில் என்ன குண மிருக்கின்றது ? உன்னை நான் அபேக்ஷிப்பேனானால் உலகம் பழிக்காதா ? நான் உன்னைப் போன்ற ஞான சூனியர்கட்குக் காமத்தை விளைவிக்கின்ற சரீரத்தைப்படைத்தவளாயினும் யாவரை யும் விரும்பத்தக்கதான காமகுணத்தை யுடையவளாவனா ? கற்பிற் சிறந்த நங்கை தனக்கு வாய்க்கப் பெற்ற உருவமுதலிய எல்லாவற் றானும் அடையத்தகும் இன்பம் தருவோனை நாயகனாகக்கொள்வாளே யல்லாமல் புணர்ச்சியின்பம் வேண்டி யாவரையும் விரும்புவாளா ?

கற்பிலக்கணஞ் சிறிதுமுணராத கயவனே! நான் நாயகனில்லாதவ ளல்லள். அவனை நீ யறிவாய். அவன் தன்மையைக் கேட்பாய்: பிரபுவென்கிற பட்டத்துக் குரியவனும், சர்வகர்த்தாவாயும் சர்வ சாக்ஷியாயும் தனக்கு மேலொரு கடவுளை யறியாதவனும், ஆசை யற்றவனும், எக்காலத்தும் அழிவில்லாதவனும், நிர்க்குண நிரஞ் சன நிராமய நிர்விகல்ப நிராஸ்ரயாதி நிஷ்கள சொரூபகுணங்க ளுடையவனும், சர்வபரிபூரண சர்வசாக்ஷித்வாதி பதிலக்ஷணங் களை யுடையவனும், நமக்கிதுவுளது நமக்கிது இல்லாதது என் றெண்ணுதலாகிய பசு லக்ஷணங்களை இல்லாதவனும், எல்லா விடத்தையும் தன்னிடமாகக் கொண்டவனும், வேண்டுதல் வேண் டாமைக்கிடனுகிய குறைபாட்டை யில்லாதவனும், தன்னைச் சரணமடைந்தோர்க்குவேண்டியாங்களிக்கும் நிறைவுடையவனும், அந்தராத்மாவாய் அவரவர் தொழிலைச் செய்விக்கும் ஆற்றலுடைய வனும், நானென்கிற அகங்காரத்தைக் கொண்டே நானென்கிற பாசவிலக்கணத்தைக் கடந்தவனும், பசு பாசவிலக்கணங்களைக் கடந்தார்க்கு வேண்டுவன வெல்லாந் தானே முன்னின் றுபகரிக் கின்றவனும், யாவர்க்குங் கடவுளாயும் உள்ள தன்மையன். அவன் நாமம் யாதெனின் பரமசிவன். இத்தன்மையனுகிய பரம பதியைப் பதியாகவுடைய யான் உன்னிடத்தில் என்னவிதமான தன்மையைக்கண்டு உன்னை நாயகனுகக் கொள்ளவிரும்புவேன்? இனி நீ எனக்கு நாயகனுகவிருக்க வேண்டுமென்கிற வெண்ணத்தை நழுவவிட்டு எனக்கு நாயினுங் கடைப்பட்ட அடிமையாளாக விருப் பதற்கு எண்ணும் எண்ணத்தை மேற்கொள்வாய். இல்லாவிடின் பகைத்திறத்தைக்கொண்டு யுத்தத்துக்கு வெளிவருவாய். வருவை யேயாயின் உன்னை யமனுக்கு இரண்டாவது கடாவாக விருக்க அவனுலகத்துக் கனுப்புவித்தாலும் அனுப்புவிக்கின்றேன்; இல்லா விடின் இங்குள்ள உழவர்களுக் குழுதலைச் செய்யுங் கடாக்களோடு சேர்த்தாலுஞ் சேர்த்துவிடுகின்றேன். இவ்விரண்டிலொன்று செய் வது நிச்சயம்.

நீ மகிஷமாயிருந்தும் மகிஷனென்று அழைக்கப்படாமல் மகிஷாசுரனென்று அழைக்கப்பட்ட அசுரப்பட்டம் உனக்கு நிலையாகவிருக்கவேண்டுமாயின் உன்னினத்தவர்களாகிய அசுரரை யெல்லாம் அழைத்துக்கொண்டு இந்த க்ஷணமே பாதாளலோகம் போகக்கடவாய். மகிஷசரீரம் பெற்றதுபோலும் மகிஷபுத்தியையே பெற்றுள்ள ஓ மகிஷனே! என்னை ஆசைப்பட்டனையே, எனக்கு நீ சமானமானவனு? சமானமான சம்பந்தமிருந்தாலல்லவோ சுகத்தை விளைவிக்கும்? அது மாறுபடுமாயின் துக்கத்தை விளைவிக்கு மல்லவா? லக்ஷணத்தைப் படைத்திருக்கும் நானெங்கே! அவ லக்ஷணத்தைப் படைத்திருக்கும் நீ எங்கே! லக்ஷணத்தோடுங் கூடிய எனக்கும் அவலக்ஷணத்தோடு கூடிய உனக்கும் எவ் வண்ணம் சம்பந்தமுண்டாகும்? இந்த அசம்பாவிதமான துராசையை விடுவாயாக. (1–13)

இந்திரனுக்குரிய யக்ஞபாகத்தையும் அவனுடைய சுவர்க்க

லோகத்தையும் அவன் வசமாக்கிவிடு. நீ பாதாளத்துக்குப்போய் விடு. இவ்வண்ணஞ் செய்வையாயின் நீ வாழலாம். இல்லாவிடில் சாகலாம். நானுன்னைக் கொல்வேனென்பது நிச்சயம். நீ என்னை வெல்வா யென்பது அநிச்சயம். ஓ தாம்பிரனே! நீ போய்ச் சொல்லவேண்டுமென்று பிரளயகாலத்தி லிடிக்கும் இடியைப்போல் பெருந் தொனியோடு கர்ஜித்துக் கூறினாள். அந்தக் கர்ஜனையைக் கேட்ட அமைச்சன் கலங்கி நமக்கழிவு காலம் வந்துவிட்டதென்று பயந்து நமதரசன் உயிருடனிருக்கின்றானோ இல்லையோவென் றேக்கமுற்றோடிப்போய் அவனிடஞ் சேர்ந்தனன். அந்தக் கர்ஜனை யினால் அசுரகர்ப்பிணிகளும் கலங்கி இஃதுவென்ன வோசை? யாருடைய ஓசையென்று திகிற்பட்டு அந்நகரத்தைவிட்டுத் திரும் பிப் பாராமல் ஓட்டம் பிடித்தனர். பூமியும் பர்வதங்களு மசைந்து சலித்தன. அச்சமயம் அம்பிகையினது ஊர்தியாகிய சிங்கமும் கர்ஜித்தது. அந்தக் கர்ஜனையானது ஓடிப்போகின்றவரை ஓட வொட்டாமற் றடுத்தும் இருக்கின்றவரை இருக்கவொட்டாமல் ஓடச் செய்துங் கொன்றன. மகிஷனும் இடிமேற் பேரிடியாயும் ஓசை மேல் பேரோசையாயும் மேன்மேல் வருதலைக்கேட்டு மனதின்கண் சிறிது ஐயுறவுற்றுத் தன்னிடத்தில் வந்த வீரனாகிய தாம்பிரனையும் அமைச்சர்களையும் பார்த்துக் கூறுகின்றான்: ஓ அமைச்சர்களே! இஃது வென்ன வோசை! இஃது வென்ன இடி!! எனக்குச் செவியும் செவிடுபடுகிறது, தைரியமும் அதைர்யத்தை யடைகின்றது. நமது கோட்டை வாசற்கதவை யடைத்துவிடுவோமா? வெளியேயுள்ளவர் உள்ளேவராமலும், உள்ளேயுள்ளவர் வெளியே போகாமலும் செய் வோமா? அன்றி இவ்வளவு கலக்கத்துக் கிடஞ்செய்தவளைக் கொல் வதற்குப் போகலாமா? அவள் சொல்லியபடி நாம் இந்நகரத்தை விட்டு ஓடிப்போகலாமா? எனக்குக் கண்ணாயுள்ள அமைச்சர்களே! நீங்கள் எவற்றினும் முன் வைத்தகாலைப் பின்வாங்காத அறிவிற் சிறந்தவர்கள். அன்றியும் நீங்கள் உங்களுக்குரியனவாக அற நூலிற் கூறியிருக்கும் குணமுஞ் செயலும் நன்றா யாராய்ந் தறிய வல்ல பண்டிதத் திறமையுடையவர்கள்.

(என்னையெனின், தானெண்ணிய தொழில் முடியும் வகையால் அமைச்சியல் நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல்ல வல்லவ னாதலாகிய சொல் வன்மையும், சொல் வன்மையால் முடியுந் தொழில்கள் அறமும் புகழும் பயந்து நன்றாக வேண்டுதற்கு வேண்டுவனவாகிய வினைத் தூய்மையும், அந்த நற்றொழிலை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத் திண்மை என்னும் வினைத்திட்பமும், வினைத்திண்மைகொண்டு செய்யுந் தொழிலில் திறமுடைமையாகிய வினைசெயல் வகையும், அச்செயலின்கண் பொருத்துவித்தல் பிரித்துவித்தலாகிய செயல்களுக்கு எதிரி களின் குறிப்பறிந்து வகுத்துக் கூறவல்ல தூதனும், கூறிய வண்ணம் கூறுவோனாகிய தூதனும் ஆகிய இருவகையினரையும் அவ்வம்முறையறிந்து விடுத்தலாகிய தூது வன்மையினையும், இவ்வன்மை வேந்தனால் விரும்பப்பட்ட பண்புடைமையாக

லான், அப்பண்புடைமை வெளிப்படுதற்கு அரசரைப் பொருந்தி வாழவேண்டியிருத்தலின் மன்னரைச் சேர்ந்தொழுகலும், அரசரோடு அணுகி வாழுங்கால் அவர்கள் கருதுவனவாகிய செயல்களை அவர் கூறுமலறிதலாகிய குறிப்பறிதலும், அரசன் கூறுமலறிந்த குறிப்பினைத்தான் வெளிப்படுத்துங்கால் அரசன் குறிப்பறிதலேயன்றி சபையாரது குறிப்பறிதலாகிய அவையறிதலும், இருவர் குறிப்பையுமறிந்து சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுங்கால் அதற்கஞ்சாமையாகிய அவையஞ்சாமையும், தொழில் செய்யுங்கால் அதற்கு வேண்டியகருவிகளும், அதற்கேற்றகாலமும், அது செய்யும் வகையும், அவ்வகையில் செய்யப்படும் அரிய தொழில்களும் வாய்ப்பவெண்ணுதலும், எண்ணி அதனைச் செய்யுங்கால் அவையிற்றில் அசைவின்மையும், குடிகாத்தலும், நீதிநூல்களைக் கற்றுச் செய்வன, தவிர்வன வறிதலும், அதற்கேற்ற முயற்சியும், அம் முயற்சிகள் பிரிக்கவேண்டினுரைப் பிரித்தலும், தமக்கு வேற்றுனவரைக் கொடையாலும் இன்சொற்களாலும் பொருத்தலும், தம்மினின்றும் தம்மவரினின்றும் பிரிந்தவரை மீண்டும் பொருத்த வேண்டிற் பொருத்தலும், ஒரு செய்கை பலவாற்றுற்றேன்றின் அவற்றுள் ஆவன ஆராய்ந்தறிதலும் அது செய்யுங்கால் வாய்க்குந் திறனுடிச்செய்தலும், சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கிதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும்வகை சொல்லுதலும், அரசனுற் செய்யப்படும் அறங்களை யறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்தமைந்த சொல்லை யுடையவனுய் எக்காலத்தும் தொழில்செய்யுந் திறங்களை யறிதலுமாகிய குணங்களையும், நூன் முறையான் வினைசெய்யுந் திறங்களை அறிந்தவிடத்தும் அப்பொழுது நடக்கின்ற உலக வியற்கையையறிந்து அதனேடு பொருந்தச்செய்தலும், உலக முறையை நடத்துங்கால் அக்காலத்துக் கேற்றதை அறிந்து சொன்னவரது அறிவையுமழித்துத் தானும் அறியாத அரசனுயினும் அக்குற்றம் நோக்கி அவனை யொழியாது அவனுக்குறுதியாயின கூறுதலும், ஆகிய செயல்களையும் நன்றுயறியவல்வர்களல்லவா ?)

ஆகையால் நம்முடைய காரியசித்தியின் பொருட்டு இப்பொழுது செய்யத்தக்கது எது ? அதனையெண்ணிச் சொல்லுங்கள். அரசியலுக்கு மந்திராலோசனை முக்கியமானது. அதனினும் பெரிதானது ஒன்றுமில்லை. அரசனுக்கு வேண்டிய முதற்காரணம் அதுவே. இந்த மந்திராலோசனை செய்யுங்கால் அதனைத் தன்னினத்தவர் அறியச் செய்தலுங் குற்றமாகும். இவ்வரிய மந்திராலோசனை அரசனுக்கிருக்குமாயின் அவன் சுகப்படுவான். அதனையிழந்தவன் தன்னையும் தன்னரசியலையும் தானே கெடுத்துக்கொண்டவனுவான். ஆகையால் ஐச்வர்யத்தை யபேக்ஷித்தவன் பண்டிதத் திறத்திலும் நல்லொழுக்கத்திலுஞ் சிறந்த மந்திரிகளுக்குச் சுவாதீனனுயிருந்து மந்திராலோசனையில் சிரத்தையுடையவனுயும் அது கெடும்விஷயத்தில் பயமுள்ளவனுயுமிருத்தல்வேண்டும். ஓ மந்திரிகளே ! என்று அவர்களை மிகவும் புகழ்ந்து, நீங்கள் இனி தற்கால

மிருக்கும் தேசகால வர்த்தமானங்களை எண்ணிப்பார்த்து நீதிக்கு விரோதமில்லாமலும் நம்மினத்தவருக்கோர் கெடுதியில்லாமலுமா யிருக்கின்ற ஆலோசனையைச் சொல்லுங்கள். நாம் முன்னர் ஒன்று யோசிக்கவேண்டியதாக விருக்கின்றது. இப்பொழுது வந்திருக்கின்ற ஸ்திரீயானவள் பலத்திற் சிறந்தவளாயும், படைத் துணையின்றித் தனித்தவளாயும், சுதந்தரமென்பதைத் தானே படைத்தவளாயும், தேவர்களால் புகழப்பட்டவளாயும், பாலையாயும், ஸ்திரீ தர்மத்துக்கு மாறான யுத்தத்தை வேண்டினவளாயு மிருக்கின்றாள். இஃதுவென்ன ஆச்சரியம்! அவளிஷ்டப்படி நாம் யுத்தத்தில் பிரவேசிப்போமானால் க்ஷேமமுண்டாகுமோ விபரீத முண்டாகுமோ, அதனை எப்படியறியக்கூடும்? அறிவார் மூன்றுல கினுமில்லை. இதுவரையில் நம்மவர்கள் வெற்றியே யடைவார்க ளென்பதுங் கிடையாது. அன்றிப் பகைவர்தானடைவார்களென் பதுங் கிடையாது. தோல்வி வெற்றிகள் தெய்வாதீனமாயுள்ளன. யாவுந் தெய்வாதீனமென்னும் பிரமாணத்தைவிட்டு மனுஷ்யப் பிரயத்தனத்தையே கைக்கொண்டு யாவும் தமது ஆதீனமென்று நினைப்பவர் நாமன்று. அவ்வாறு தமதாதீனமென நினைப்பவர் தெய்வத்தைப் பார்த்தவர் யாவரென்றும், அது இருந்தால் கண்ணுக்குப் புலப்படாதோவென்றும், கண்ணுக்குப் புலப்படாதது நம்முடைய செயல்களறிந்து தோல்வி வெற்றிகளை எவ்வண்ண மறிந்து செய்யுமென்றும், அது செய்வதாயிருந்தால் நாம் முயற்சி செய்ய வேண்டுமென்பது எற்றுக்கென்றும், எண்ணுகின்றவரும் சொல்லுகின்றவருமாவர்.

தெய்வம் வேண்டுமென்பது இல்லையாயின் ஒரு தொழிலைச் செய்து முடிக்கும் வன்மையுள்ளவன் சிலசமயம் பயந்திருப்பதையும் சில சமயம் துணிவுற்றிருப்பதையும் சில சமயம் இரண்டு வகையு மின்றிக் கிடப்பதையும் அவ்வன்மையில்லாதவன் எப்பொழுதும் பயமில்லாதிருப்பதையும் துணிவையே மேற்கொண்டிருப்பதையும் எப்படி எப்படி எண்ணுகின்றாரோ அப்படியப்படி யடைவதையும் காண்கின்றோம். அவையெல்லாம் அவரவர் செயலா? அவரவர் செயலாயின் அவரவர் செய்திக்குத்தக்க திருவையும் மிடியையும் அடைதல் வேண்டும். அங்ஙனமின்றி மிடியுடையானுக்குத் திருவினால் வரத்தக்க சுகங்களும், திருவுடையானுக்கு மிடியினால் வரத்தக்க துக்கங்களும் இவ்வாறன்றித் திருவுடையானுக்கே இன்பங்களும் மிடியுடையானுக்கே துன்பங்களும் இம்முறையான் இயல்பாயும் வேற்றுமையாயும் வருவதற்குத் தெய்வ காரணத்தை வேண்டாத எந்தச் சாமர்த்திய புருஷனாவது காரணத்தைக் கண்டு வெளிப்படுத்தினன்? இதனையெடுத்துப் பேசுவதென்றால் நம்மால் முடியுமா?

இதனுண்மையை, ஜீவனுக்குச் சுதந்தரமற்ற அறிவு உண்டென்பது தோன்ற முயற்சிக்க வேண்டியவனிவனென்றும், சுதந்தரமாகிய அறிவும் அவ்வறிவால் அவரவர் செயலுக்குத்தக்க பயனளிப்பதும் இறைவனுக்குச் சொந்தமென்பது தோன்ற

எல்லாம் அவனுதீனமென்றும் பெரியோர் கூறிவருகின்றனர். ஆகையால், யாவர்க்கும் பிரயத்தனமும் தெய்வபலமும் ஒன்றுகக் கூடியே சுக துக்கானுபவங்கள் அனுபவத்துக்கு வருகின்றன. இதனுல் முயற்சியை வேண்டினவன் தெய்வபலத்தையும், தெய்வ பலத்தை வேண்டினவன் முயற்சியையும் அபேக்ஷித்தல் வேண்டு மென்றறிமின். ஆகவே, இப்பொழுது நடத்தவேண்டிய காரியங்களை நமதறிவால் நன்ருயாலோசித்து முயற்சியுடன் செய்யவேண்டு மென்றனன்.

மகிஷாசுரன் இவ்வாறு சொல்லியபொழுது மஹாபுத்திமானுகிய பிடாலனென்னும் மந்திரி பல வேதுக்களோடும் பல நியாயங்க ளோடும் அரசனெண்ணம் பரவியிருக்கின்றதென்றுணர்ந்து அரசனைப் பணிந்து கைகூப்பி நின்று கூறுகின்ருன்: ஓ அசுரேந்திரனே! இந்த ஸ்திரீ வந்த காரணமென்னே? எங்கிருந்து வந்தவள்? யாருடைய மனைவி? இவ்விடம் இவளே வந்தவளா? பிறர் வேண்டுகோளால் வந்தவளா? இவையனைத்தும் சில மந்திரிகளால் நமக்குத் தெரியவந்திருப்பினும் மீண்டுந் தெரிந்து கொள்வது அவசியம். இதுவுமன்றித் தேவர்கள் ஸ்திரீயாலுனக்கு மரணமுண்டென்பதைத் தெரிந்துகொண்டு தங்களுடைய தவ வன்மையால் ஒரு ஸ்திரீயை யுண்டுபண்ணி யனுப்பிவிட்டுத் தாங்கள் ஆகாயத்தில் மறைந்திருந்து யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு இவளுக்கு வெற்றிவருஞ் சமயத்தில் தாங்களும் வெளிப் பட்டுச் சகாயமாய் வந்து நம்முடைய சைனியங்களையும் நம்மையுங் கொல்வதற்கிருக்கின்றனர். இதுதான் அவர்களபிப்பிராயமென்று நினைக்கின்றேன். ஆனுல் நடக்கப்போகிறதெதுவோ அதை நானறியேன். உன்னை யுத்தஞ்செய்ய வேண்டாமென்று தடுப் பதற்கும் நான் தகுதியுடையனல்லேன். உனக்கும் தேவர்களுக்கும் வெற்றி வேண்டுமென்கிற வெண்ணமொன்றேயன்றி தோல்வி வருமென்கிறவெண்ணம் கிடையாது. இதற்கு நாங்களொருவரும் சாக்ஷியாகமாட்டோம். உன்னுடைய அபிப்பிராயமே அதற்குச் சாக்ஷியாகவேண்டியது. ஊழியக்காரர்களாயிருக்கின்ற நாங்கள் உன்னுடைய சுகத்தையும் உன்ருல் நாங்களடையவேண்டிய சுகத்தை மாத்திரமுமே யெண்ணவேண்டியவர்கள்; எங்கள் சுகத் துக்குக் காரணமாயிருக்கின்ற நீ மரணமடைய வருமாயின் நாங்களுமுன்னுடன் மரணமடைவதுதான் தருமம். இப்போது நேர்ந்திருக்கின்ற சமயத்தை யோசிக்குங்கால் யோசனைக் கிடங் கொடாததாயிருக்கிறது. என்னையெனில், யுத்தத்திற்கு வந்திருக்கிற ஸ்திரீயோ யாதொரு படையுமின்றி வந்திருக்கின்ருள். படையோடு வந்தாலும் தனியே வந்தாலும் நாம் அவளைக் கொல்வோமாயின் ஸ்திரீஹத்தி என்கிற பாபமுண்டாகும். அப்பாபத்திற்கஞ்சி யுத்தஞ் செய்யாதிருப்போமாயின் நாம் பாபத்திற்கஞ்சி யிருக் கின்ருேமென்பதை அவளெண்ணுமல் நம்மைத் தோல்வியடைந்த வராயெண்ணிக் கொல்லத் துணிவாள். நாம் அவளால் கொல்லப் படுவோமாயின் வீர தீர சூரர்களாகிய அசுரர்கள் ஒரு ஸ்திரீயினுல்

கொல்லப்பட்டார்களென்கிற பழிச்சொல்லை உலகஞ் சொல்லும். ஆகையால் இவ்விஷயத்தில் ஆலோசனை செய்யவேண்டியிருக்கிறது. எனக்கு மாத்திரம் யுத்தத்தில் ஐயமுண்டாகுமென்று தோன்றவில்லை. ஏனெனில் காமாந்தகனுயிருக்கின்ற நீ அவளையெதிர்ப்பையாயின் வில்லையும் அம்பையுமெடுக்கத் தோன்றுமா? நீ அங்ஙனமிருக்கின்றபொழுது அவளுடைய புருவமாகிய வில்லில் சந்தித்திருக்குங் கண்களாகிய கணைகள் உனது தோளிற்பாய்ந்து உன்னுடைய உயிரைக் கொள்ளை கொள்ளாமற் போகுமா? நீ காமாந்தகனென்று தெரிந்தே அவள் யாதொரு படைக்கலமுமின்றித் தனியே வந்திருக்கின்றுள். அவளங்கத்திலுள்ள கண்படையொன்றே போதுமானது. இப்போது காமத்தைவிட வல்லையாயின் அவளை வெற்றி கொள்ளவல்லையாவாய். காமத்தைவிடவல்லையல்லையாயின் அவளுன்னை வெற்றிகொள்வதில் வல்லவளாவாள். இந்த உண்மையைவிட்டு வேறு யோசனைசெய்து ஓடிப்போவோமென்றுல், நமது கீர்த்திக்கு ஹானிவரும். இந்திராதியரோடு யுத்தஞ்செய்த காலத்தும் கீர்த்திக்குப் பங்கமான காரியஞ் செய்ததில்லை. அப்படிப்பட்ட வீரர்களாகிய நாம், இப்பொழுது ஒரு பெண்பிள்ளைக் கஞ்சியோடுவோமாயின் அது என்னும்? ஆகையால் பழிக்காளாவதைப் பார்க்கிலும் மரணத்துக்காளாவது புகழாகும். இனி ஐயம் வந்தாலும் அபஜயம் வந்தாலும் யுத்தத்திற்குச் செல்வதுவே முறைமை. எது வரவேண்டியதோ அதுவரட்டும். இவ்விஷயத்தில் சகலமு முணர்ந்த பண்டிதர்கட்குச் சிந்தனை என்னை? மரணமடைவோமானுல் கீர்த்திவரும்; அந்தக் கீர்த்தியை விரும்பாது மரணத்துக்கு அஞ்சி யிருப்போமாயின் தேக சுகமுண்டாகும். இதில் எந்தச் சுகம் வேண்டுமோ அதனைச் சொல்வாய். மரணமிருக்கும் பட்சத்தில் எங்கேயோடிப் போனுலும் விடாது. ஆகையால் மரணம் வருமானு லுயிர்போமே என்கிற துக்கமும், இருந்தால் மானஹானி வருமே என்கிற துக்கமும் இனி வேண்டாமென்றனன். (1–45)

இங்ஙனம் பிடாலன் சொல்லிய வார்த்தையைப் பாஷ்கலனென்கிற மந்திரி கேட்டு அரசனைப்பணிந்து அஞ்சலியஸ்தனுய் நின்று கூறுகின்றுன்: ஓ மன்னவனே! நாம் யுத்தத்தில் விருப்பமுடையவர்களையன்றி வெறுப்புடையவர்க ளல்லர். நமக்கிஷ்டமாகிய யுத்தம் வந்தபோது நாம் ஏன் பயப்பட்டுக் கைவிடவேண்டும்? நானொருவனே சென்று நம்மைப் பார்த்துப் பார்த்துப் புன்னகைசெய்யும் அச்சண்டிகையைக் கொன்றுவிட்டு வருகிறேன். எந்த விஷயத்திலும் எவனுக்கும் உற்சாக மிருக்கவேண்டும். அஃதில்லையாயின் அவன் விலங்கினத்தோ டெண்ணப்பட்டவனுவன். வீரனுயிருக்கின்றவனுக்கு வீரரசம் நிலைத்திருக்கவேண்டுமேயன்றிப் பீதிரசம் நிலைத்திருக்குமானுல் அதுவே சத்துருவாக முடியுமன்றே? ஓ அசுரேந்திரனே! பயப்படுவதைவிட்டுப் பிரபலமாகிய யுத்தத்தைச் செய்து அந்தச் சண்டிகையை யமபுரத்துக் கனுப்பிவிடுகிறேன். இந்திரன் அக்னி யமன் நிருதி வருணன் வாயு

குபேரன் சந்திரன் சூரியன் அரி அயன் இவர்கள் வந்தெதிர்த்த போதிலும் நான் பயப்படமாட்டேன். இவர்களைக் காட்டிலுமவள் பெரியவளா? அந்த நாரி என்னை என்ன செய்யப்போகின்றாள்? நீ அவளோடு சமமாக நின்று போர் செய்வது தகுதியன்று. நீ இவ்விடத்திலேயே நல்ல ஸ்திரீகளோடு கிரீடித்திருப்பாய். நான் செய்யப்போகிற யுத்தத்தில் என் தோள்வலியைப் பாருமென்றனன். (46–51)

இவ்வாறு அவன் சொல்லிவரும்பொழுது துர்த்தரனென்கிற மந்திரி அரசனைப் பார்த்துக் கூறுகிறான்: நீயும் இப்பாஷ்கலனும் போகவேண்டாம்; நானொருவன் போய்த் தேவர்களாலேவப்பட்ட அவளைக் கொன்று விடுகிறேன். அவளை நான் எப்படிக் கொல்வேனென்று ஆலோசிக்க வேண்டாம். அவளை உன்னைப் பயப்படுத்துவதற்குத் தேவர்களால் ஆக்கப்பட்ட ஒரு பயங்கரவுருவ மென்றறியக்கடவாய். அவளாலாகப் போகின்ற தொன்றுமில்லை. அவள் சிறு பாலகர்களுக்குப் பூச்சி காட்டுவதுபோல் நம்மைக் கொல்லுவேன், வெட்டுவேனென்று பூச்சிகாட்டுகின்றாள். யுத்தம் இலேசானதா? இவளதனை யறிக்கத்தக்கவளா? இவள் விஷயத்தில் நீ கொண்டிருந்த ஆசையை விட்டுவிடு. மந்திரியாகிய என்னால் சொல்லப்பட்ட யுக்தியைக் கேள். மந்திரிகளாவார் சாத்விகர்களென்றும் ராஜஸர்களென்றும் தாமஸர்களென்றும் மூன்றுவகையா யுள்ளார். ஸாத்விகர்கள் அமைச்சியலுணர்ந்து தங்களுடைய சாமர்த்தியத்தினால் அரசனுடைய காரியத்திற் கோர் ஹானி யுண்டாக்காமல் அவன் காரியத்தை முடிப்பார்கள். அவர்கள் பொருளிலாசைப்படாத நிர்மல சித்தத்தையும் தருமசிந்தனையையுமுடையவராயிருப்பர். ராஜஸர்கள் நிலையில்லாத புத்தியுள்ளவர்களையும் தங்களுடைய காரியத்திலேயே ஆசையுள்ளவர்களாயும் தெய்வ கதியாய் நேரிடும் அரசனுடைய காரியத்தை நடத்துகின்றவர்களாயுமிருப்பர். தாமஸர்கள் லோப குணம் நிறைந்தவர்களாயும் தங்கள் காரியத்தில் மாத்திரம் ஊக்கமுள்ளவர்களாயும் அரசனுடைய காரியத்தில் தங்கள் லாபத்தை முடித்துக்கொண்டு அவன் லாபத்தைக் கெடுக்கின்றவர்களாயும் தங்கள் வீட்டிலிருந்தபடியே அரசனுக்குப் பகையா யுள்ளவரிடத்திற் கலந்து கபடத்தை மேற்கொண்டு அரசனுடைய குறைபாடுகளைச் சமயம் நேர்ந்தபொழுது தெரிவித்து அவர்களுக்குப் பலமுண்டாக்கி அரசனுடைய காரியங்களை யெப்போதுங்கெடுத்து இருவருக்கும் யுத்தமுண்டாகச் செய்து தன்னரசனுக் கெதிரியின் பலங்களை மிகுதியாகச் சொல்லிப் பயமுண்டாகும்படிச் செய்வார்கள். உனக்கிதுகாறுஞ் சொல்லிவந்தவர்கள் தாமஸர்களோ டெண்ணப்பட்டவர்கள். அவர்களிடம் நீ விசுவாசம் வைத்தலடாது. வைப்பாயாயின் காரியத்துக்கானியும் மேலாலோசனைக்குக் கெடுதியுமுண்டாகும். தாமஸ குணமுள்ளவர்களாயும் பாவத்தொழிலையே செய்கின்றவர்களாயும் அறிவிற் சிறியவர்களாயும் பேராசையுடையவர்களாயு மிருக்கின்ற துஷ்டர்களிடத்தில் விசுவாசம் வைத்தால் அவர்கள் நன்மை செய்ய அறி

வார்களோ ? ஆகையால், ஓ அரசனே ! நீ சிறிதும் சிந்தனை செய்ய வேண்டாம். நானே போர்செய்து வெற்றியடைந்து துஷ்டையாகிய ஸ்திரீயையுமழைத்து வருகிறேன். என் பலத்தையும் தைரியத்தையும் உன் காரியத்தை முடிக்கும் வல்லபத்தையும் பார்ப்பாயாக வென்றான். (52–65)

ஓம் ஏலாஸுகந்தி சிகுராயை நம:

## 13. தேவி புரிந்த பெரும்போர் (1)

வியாசர் கூறுகின்றார் :—ஓ ஜனமேஜயனே ! துர்த்தரன் அந்த ஸ்திரீயை யழைத்துக்கொண்டு வருகிறேனென்றும் என்னுடைய பலத்தையும் தைரியத்தையும் பாரென்று சொல்லி முடித்தபின்னர் தோள்வலியிலும் மதச்செருக்கிலும் அஸ்திரசஸ்திரங்களிற் பயில வேண்டிய பயிற்சியினும் மந்திர சித்தியுள்ள ஆயுதப் பயிற்சியினுஞ் சமர்த்தர்களாகிய பாஷ்கலன் துன்முகனென்னும் இரண்டசுரர்கள் அம்பிகையினிடம் யுத்த நிமித்தம் செல்வார்போற் சென்று அம்பிகையைப் பார்த்து மேககர்ச்சனை செய்து கம்பீரமாகச் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினர் :

தேவஸ்திரீயைப்போற் காணப்படுகின்ற ஓ நங்காய் ! பலிஷ்டனாகிய மகிஷன் இதுகாறும் தேவர்களால் ஜயிக்கக் கூடாதிருப்பானாயின் இப்பொழுதுன்னால் அவன் ஜயிக்கப்படுவனோ? நீ ஜயத்தை வேண்டுவையாயின் அவன் வேண்டியபடி நீ மகிஷியாய் விட்டால் நீ ஜயித்தவளேயாவாய். அசுரர்களுக்கெல்லாந் தலைவனாகிய அவன் உனக்கு நாயகனாகும் பக்ஷத்தில் உனக்கென்ன குறையுளது? நீ ஸ்திரீரூபிணியா யிருக்கிறபடியால் உன்னிடத்தில் வீரத்தைக் காட்டுவானோ ? காட்டினால் அது வீரமாகுமா ? அவன் உன்னைக் காம வழியா லாள்வதுதான் அவனுக்கு வீரமாகும். அவனை நீயும் அக் காமவழியால் அடக்கியாள்வதுதான் உனக்கும் வீரமாகும். இருவருக்கு மிம்முறையால் ஒருவாறு தோல்வியும் வெற்றியுமுண்டாவது பிரத்யக்ஷமாகத் தெரியவந்தும் நீ அதற்கிணங்காதிருப்பது பேதமையன்றோ ? இனியேனும் அப்பேதமையை விட்டு யான் சொல்வதைப் புத்திபண்ணிக் கேட்பாயாக. ஆனால் நீ மகிஷனாயிருக்கின்றவனை நாம் நாயகனாகக் கொள்வது எப்படியென்றெண்ணுவாய். அவன் உனக்கு நாயகனும்பொழுது மாடாக விருக்கமாட்டான். ஸர்வ லக்ஷணத்தோடும் ஸர்வாலங்காரத்தோடும் கோடி மன்மதர்கள் ஒருருக்கொண்டாற்போல் அதிசுந்தரமாய் வருவான். நீ அவனிடத்தில் அன்புள்ளவளாவாயாயின் உனக்கு முப்புவன ஸம்பத்தும் முன்வந்து நிற்கும். அச்சம்பத்தோடு நீ நல்ல ஸம்ஸாரியாய் மனோரதங்களை யெண்ணியவா றனுபவித்து ஆனந்தமடைவாய். ஸம்பத்தையும் திருப்தியையும் அடையக்கூடாத ஸ்திரீகளைப் போல் நீயேனுகின்று யென்றனன். (1–6)

அம்பிகை இருவர் சொல்லையுங் கேட்டுக் கூறுகின்றாள் :—ஓ

கிரீடத்தினால் பிரகாசிக்கும் துன்முகன் சிரத்தைவெட்டி யெறிந்தனள். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்து ஜயஜயவென்று ஆனந்தங்கொண்டு போற்றினர். ரிஷிகள் சித்தர்கள் கின்னரர்கள் முதலிய யாவரும் அசுரமுண்டங்களைப் பார்த்தானந்தக் கூத்தாடினர். (38–50)

ஓம் ஏன:கூடவிநாஶிந்யை நம:

## 14. தேவி புரிந்த பெரும்போர் (2)

ஓ அரசனே! மகிஷன் தூதர்களால் பாஷ்கல துன்முக ரிறந்ததைக் கேள்வியுற்று, கண்சிவந்து மிக்க கோபமுடையவனாய் அசுரர்களைப் பார்த்து, போர்க்களத்தில் இப்பொழுது என்ன நடக்கிறது? என்ன நடக்கிறது? என்று அடிக்கடிகேட்டுப் பின் சபையிலுள்ளாரைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ வீரர்களே! போரில் மிக்க சூரர்களாகிய பாஷ்கல துன்முகர்கள் ஒரு ஸ்திரீயினால் சங்கரிக்கப் படத் தக்கவர்களா? ஆஹா! இது தெய்வச் செயலல்லவோ! நல்வினை தீவினை என்கிற இரண்டினுடைய ஸம்பந்தத்தினால் சுதந்தரமற்றிருக்கிற பிராணிகளுக்குச் சுகதுக்கங்களை யுண்டு பண்ணுவது வினைக்கீடான காலமன்றோ? அந்தக் காலத்துக்குமுன் யாருடைய பலமுஞ் செல்லாதன்றோ? இப்பொழுதனுப்பிய இரண்டசுர சிரேஷ்டர்களும் இறந்துப்போயினரே! இனிச் செய்ய வேண்டிய தெதுவோ, அதை யாவருங்கூடி ஆலோசித்துச் செய்மின். இப்பொழுது நேரிட்ட காரியமோ மிகவுங் கஷ்டமான காரியமா யிருக்கிறதென்றனன். அசுரேந்திரன் சொல்லுங்கால் சிக்ஷுர என்கிற மஹா ரதிகனாகிய சேனாதிபதி மகிஷனைப்பார்த்துச் சொல்லுகிறான்: (1–5)

ஓ அரசனே! ஒரு பெண்பிள்ளையைக் கொல்வதற்கா இவ்வளவு யோசனை? அதனை நான் செய்துவிடுகிறேனென்று சொல்லித் தன்னுடைய சேனைகளை யழைத்துக்கொண்டு தேரூர்ந்தவனாய் மஹா பலிஷ்டனாகிய தாம்பிரனைத் தனக்குப் பக்கவீரனாக வைத்துக் கொண்டு அளவிறந்த சேனைகளோடும் திக்குகளும் ஆகாயமும் செவிடுபடும்படியாகக் கொக்கரித்துக்கொண்டு போயினான். பகவதியாகிய மஹாதேவி தன்னெதிரில் வருகின்ற சிக்ஷுரவைப்பார்த்துச் சங்கநாதத்தையும் நாணோசையையும் வீரகண்டநாதத்தையுஞ் செய்தனள். அவ்வோசைகளால் வந்த பெருஞ்சேனைகளெல்லாம் இதுவென்ன ஒன்றுந் தெரியவில்லையே யென்று வாய்குழறி விதிர் விதிர்த்து நடுநடுங்கிப் பயந்து ஓடிப்போயினர். சேனாதிபதி ஓடுகின்ற அசுரர்களைப் பார்த்து, ஓ அசுரர்களே! உங்களுக்கென்ன பயம் வந்தது? என்றதட்டிக் கோபித்து அவர்களை அழைத்து நானிப்பொழுதே இச் சிறுபெண்ணைப் பாணங்களாலடித்து விடுகிறேன்; நீங்களொன்றுஞ்செய்ய வேண்டாம், சும்மா விருங்களென்று சொல்லி, சேனைகளை யொன்றாகச் சேர்த்து வில்லேந்தி

மரணமுண்டாகு மென்கிற பயமற்றுத் தேவியைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ பெண்ணே! மருண்டோடத் தக்க இந்த அசுரர்களை நீ மருளும்படியாக இந்த நாதங்களைச் செய்தனையோ? ஆ ஹா! இது நல்ல வெற்றி! என்னை என்ன செய்தாய்? இந்த வெளிப்புரட்டலுக்கு நான் ஏதாவது பயந்தேனா? ஓ பெண்ணே! என் மனத்தில் ஸ்திரீயை வதை செய்வோமானால் அபகீர்த்தியுண் டாகுமென்கிற உதாசீனமும் தோன்றியதால் இவ்வளவுகாலம் தாழ்ந் திருந்தேன். உன்னைக் கொல்லவேண்டுமென்றெண்ணி யிருப்பே னாயின் வந்தபொழுதே கொன்றிருப்பேன். ஆனால் உன்போ லொத்த ஸ்திரீகள் உலகத்தில் தங்களுடைய கடைநோக்கத்தாலும் அபிநயங்களாலும் போர்செய்யக் கண்டிருக்கின்றேனேயன்றி ஆயுதங்களால் போர்செய்யக் கண்டதில்லை; நீ ஒருத்திதான் செய்யக் கண்டேன். உன்னுடைய மேனி போர்செய்வதற்கு யோக்கியமோ வென்றால் புஷ்பங்கள் பட்டாலுங் குழையத்தக்கதா யிருக்கின்றது. அத்தன்மையாகிய உன் சரீரத்தின்மேல் எப்படி நான் பாணப் பிரயோகஞ் செய்வேன்? அன்றியும், உன்னையொத்த ஸ்திரீகளு டைய சரீரம் மல்லிகை யிதழ்களுடைய பரிசம்பட்டாலும் நோயைச் செய்யத்தக்கது. இத்தகைய உன்மேனி புருஷர்களால் பிரியங்கொள்வதற்கு யோக்கியமானதாயும் ஆலிங்கனஞ் செய் வதற்கு மிக ரம்யமானதாயு மிருக்கின்றது. அதனை நான் எப்படி வெட்டுவேன்? அந்தோ! உன்னுடைய மேனி தைலாதி ஸ்நானங் களானும் புஷ்ப விசிறியிலுண்டாகும் நறுமணங் கமழும் காற்றி னாலும் இனிய சுவையோடு கூடிய உணவுகளானும் பரிபாலிக் கத்தக்கதாயிருக்க, இப்பொழுது சத்துரு பாணங்களாலடிபடுவ தற்கு யோக்கியமாகுமா? உலகத்தில் யுத்தஞ்செய்து பிழைப்பதா கிய பிழைப்பும் ஒரு பிழைப்பாகுமா? அந்தப் பிழைப்பை நெருப் பிற் சுடவேண்டும். அரசர்கள் தனவான்களாக வேண்டுமானால் கூர்மையாகிய கத்தியினால் வேறொரு அரசனுடைய தலையைவெட்டி அவனது ராஜ்ய செல்வத்தையடைகின்றனர். அந்தச் செல்வம் அவனுடைய பரம்பரையார்க்குத் துக்கத்தை விளைவித்து வந்ததா கலான் இவர்களுக்குப் பின்னர் துக்கத்தையே விளைவிக்கும். ஆகை யால் அப்படிப்பட்ட செல்வத்தையும் நெருப்பிலிடவேண்டும். ஓ பெண்ணே! நீயும் எதனாலேயோ மூடமடைந்தவளாய் யுத்தஞ்செய்ய அபேக்ஷித்திருக்கின்றனை. இதனாலென்ன சுகம்? நீ கட்டிலின் மீதிருந்து புருஷ சம்போகத்தால் விளையும் சுகத்தைவிட்டு இந்த யுத்த பூமியில் எவ்வித சுகத்தையடைய அபேக்ஷித்திருக்கின் றனையோ, தெரியவில்லை. வாளினால் வெட்டுப் பட்டும் யானையினால் மிதிக்கப்பட்டும் பாணங்களால் புண்பட்டும் சாகின்றவர்கட்கு நடத்தப்படும் ஸம்ஸ்காரமாவது நரிகள் வாயினால் கௌவிக் கொண்டு போதலேயாகும். இவர்களை மூடர்களாகிய கவிகள் யுத்தத்திலிறந்தவர்கள் சுவர்க்கலோகப் பிராப்தியை யடைகின்றன ரென்று சொல்லுகின்றனர்; அஃது உபசாரமாகச் சொன்னதாகுமே யன்றி உண்மையாகச் சொன்னதென்று நான் நிச்சயிக்கமாட்

டேன். ஆகையால் ஓ சிறு பெண்ணே! நீ யுத்தஞ்செய்ய விரும்பியதை யொழித்துச் சத்துருவாகிய மகிஷபூபதியை நாயகனுகக் கொண்டு அவனுல் வரும் சுகத்தை விரும்புவாய். அவனிஷ்டமில்லாத பக்ஷத்தில் உன் மனம் எவனிடம் பிரியப்படுகிறதோ அவனிடம் அந்தச் சுகத்தை யனுபவிப்பாய் என்றனன். (13–23)

இவ்வாறு சொல்லும் அசுரனைத் தேவிபார்த்துக் கூறுகிருள்: ஓ மூடனே! நீ புத்திமானுகிய பண்டிதன்போலிறுமாந்து வாயில் வந்தவாறெல்லாம் உளறுகின்றனேயே. இஃது வென்னபுத்தி! உனக்கு உலக தருமமாகிய நீதிசாஸ்திரந் தெரியுமா? மோக்ஷ தருமமாகிய ஞானசாஸ்திரந் தெரியுமா? நீ பெரியோரையடுத்து வழி பட்டிருக்கின்றனையா? நீ ஒன்று மறியாதவனுகக் காண்கின்றனே; ஆகவே உனக்குத் தருமபுத்தியுதிக்கவில்லை. நீ மூடனைச் சேர்ந்தவனுகையால் மூடனுகவே யிருக்கின்ருய். உனக்கு அரச நீதியேனுந் தெரியுமா? தெரியாது. ஒன்றுந்தெரியாத நீ என் முன்னின்று இடக்கான வார்த்தைகளை உளறுகின்றனேயே. ஓ மூடனே! நானெப்படிப்போவேனென்ருல் இந்த யுத்த பூமியில் மகிஷனைச் சங்கரித்து அவனுடைய உதிர வெள்ளத்திஞல் பூமியைச் சேருக்கி அதில் வெற்றியடைந்த கீர்த்தி ஸ்தம்பத்தை நாட்டிச் சுகமாய்ப் போவேன். இப்பொழுது தேவர்களுக்குத் துக்கத்தை விளைவிக்கின்ற துராசாரமுடைய மதகர்விதனுகிய மகிஷனை நான் சங்கரிக்கப் போகின்றேன். நீ இப்போது ஏதேனும் யுத்தஞ் செய்வதாயிருந்தாற் செய், ஓடிப்போகாதே. ஓ அறிவில்லாதவனே! உனக்கும் மகிஷனுக்கும் பிராணனிடத்தில் விருப்பமிருக்கின்ற பக்ஷத்தில் நீங்களெல்லாரும் பாதாளம்போய்ச் சேர்மின். உங்கள் மனத்தில் இறந்து போகவேண்டு மென்கிற எண்ணமிருக்கிற பக்ஷத்தில் யுத்தத்தை நடத்துங்கள். நீங்கள் பாதாளலோகம் போகாத பக்ஷத்தில் யாவரையும் நான் சங்கரிப்பது நிச்சயமென்றனள். (24–30)

பலத்தில் நம்மைப்போலுமில்லை யென்னுங் கர்வமுள்ள சிக்ஷுரன் என்பவன் தேவியினுடைய வார்த்தைகளைக் கேட்டு மேக வருஷம் போலும் பாணவருஷங்களைப் பொழிந்தனன். தேவி அவன் விட்ட பாணங்களைக் கொடுமையாகிய தன் பாணங்களால் வெட்டி யொழித்து விஷத்துக்கொப்பாகிய பயங்கரமான பாணங்களால் அவனை யடித்தாள். இவ்வாறு இருவரும் யுத்தபூமியில் ஆச்சரியகரமாகிய யுத்தத்தைச் செய்துவரும்போது தேவியானவள் தேரிலிருக்கின்ற அவனை கதாயுதத்தாலடிக்க அவன் உணர்ச்சியற்று இரண்டு முகூர்த்தகாலம் மூர்ச்சித்திருந்தனன். அச்சமயத்தில் சத்துரு காதனுகிய தாம்பிரனென்பவன் நெடுநேரம் மூர்ச்சையடைந்திருக்கிற சிக்ஷுரனைப் பார்த்துத் தான் வெற்றி யடையலாமென்கிற துராலோசனை யுடையவனுய்த் தேவியைநோக்கி யுத்தஞ் செய்வதற்கு வர, அவனைத் தேவிபார்த்து நகைத்துக்கூறுகிருள்: ஓ அசுரனே! வருவாய். நான் உன்னை தாமதப்படுத்தாமல் உடனே யமலோகத்துக்குப் பிரயாணப்படுத்துகிறேன். வருகின்ற ஒவ்வொருவரும் அற்பா

யுளுடையவராயும் பலமில்லாதவராயு மிருக்கின்றனரே யன்றித் தீர்க்காயுளும் பலமுமுடையவராக வரவில்லை. நீங்களும் அவர்களைப்போல் அற்பாயுளுடையவர்களேயன்றி வேறல்லர். ஆகவே என்ன யுத்தஞ் செய்யப்போகிறீர்கள் ? மூடனாகிய மகிஷன்வீட்டிலிருந்தபடியே தான் பிழைப்பதற்குச் செய்யும் பிரயத்தனம் இது தானா ? ஆ ஹா ! என்னவிதமாய்ச் செய்கின்றான் ! தேவசத்துருவாகிய அந்தத்துராத்மாவை நான் சங்கரிக்காமல் தீனர்களாகிய உங்களைச் சங்கரித்துக் கொண்டிருப்பது வீண்சிரமந்தானே ? ஆகையால் நீங்களனைவரும்போய் மகிஷனை அனுப்புங்கள். அந்த மூடன் என்னைவந்து பார்ப்பானாக ! (31–39)

தாம்பிரன் இதைக்கேட்டு மிகுந்த கோபங்கொண்டு காதளவும் நாணையிழுத்து வில்லைவளைத்துப் பாணங்களைவிட்டனன். தேவியுங் கண்சிவந்து தேவசத்துருவாகிய தாம்பிரனைக் கொல்லவேண்டுமென்கிற இச்சையுடையவளாய் வேகத்துடன் பாணங்களை விட்டனள். அப்பொழுது பலவானாகிய சிக்ஷுரன் என்பவன் மூர்ச்சை தெளிந்தெழுந்து ஒரு கணத்துக்குள் வில்லேந்திப் பாணசந்தானஞ் செய்து தேவியினெதிரே நின்றனன். இருவரையும்பார்த்து மகாமாயாரூபிணியாகிய தேவிகோபங்கொண்டவளாய்ப் பாணவருஷங்களை வருஷித்து அவ்விருவருமேயல்லாமல் அசுரக்கூட்டங்களுமணிந்திருக்கிற கவசங்கள் கிழிபடும்படிச்செய்ய அவர்களுடைய சரீரங்களில் ரத்தம்பரவி செந்நிறமாய் விளங்கின. அவற்றை நோக்குங்கால் வசந்தகாலத்தில் வனத்தில் மலர்ந்திருக்கின்ற கலியாணமுருக்கமரம் போலிருந்தன. அசுரர்களெல்லாம் அடங்காத உதிரப்பெருக்குடையவர்களாயிருந்தும் அகங்காரத்தைவிடாது பாணசமூகங்களைவிட்டனர். தாம்பிரனும் தேவியை யெதிர்க்க அவளுமெதிர்த்து இருவரும் பெரும்போர்செய்ய ஆகாயத்திலிருந்த தேவர்களதனைக் கண்டதிசயித்தனர். மிக்கவன்மையுடைய தாம்பிரன் இரும்பினாற் செய்த பயங்கரமுள்ள ஓரிருப்புலக்கையை யேந்தி தேவியினுடைய வூர்தியாகிய சிங்கத்தின்மேலடித்துச் சரீரங்குலுங்கநகைத்து மேகம்போற் கர்ஜித்தனன். அதுகண்ட தேவி மிகுந்த கோபமுடையவளாய்க் கர்ஜிக்கின்ற அந்தத் தாம்பிரனுடைய சிரத்தைக் கூரிய வாளினாலறுத்துத் தள்ளினாள். அவனுடலங் கீழேவிழாமல் கையிற்பிடித்திருந்த வுலக்கையுடனே க்ஷணநேரங் கூத்தாடிப் பூமியில் விழுந்தது. (40–50)

பலவானாகிய சிக்ஷுரன் என்பவன் பூமியில் முண்டமாய் வீழ்ந்து கிடக்கின்ற தாம்பிரனைப்பார்த்து மனஞ்சகியாது இவனை முண்டமாய் விழும்படிச்செய்த அவளை யிதோ வெட்டுகிறேனென்று வாளாயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு ஓடிவந்தனன். தேவியும் அவனைப்பார்த்து அவன்வரும் வேகத்தினும் அதிவேகமாக ஐந்து பாணங்களைவிட்டு அவ்வைந்திலொன்றால் அவன் பிடித்துவந்த வாளையும் மற்றொன்றால் பிடித்தகையையும் மற்றைமூன்றால் கண்டத்தையும் அறுத்துத்தள்ளினாள். யுத்தத்தில் *துர்மதமும் குரூரமு

* தனக்கு மேற்பட்டவரிடத்திற் கொள்ளும் மதம்.

முடைய அவ்விருவரும் தேவியினுல் சங்கரிக்கப்பட்டுபோகவும் அவ்விருவருடைய சைனியங்கள் எந்தத்திக்குகளிலுங் கேட்கப் படுந் தேவியினுடைய பாணப்பிரயோக வேகவோசையினுல் தேவியே அங்கங்கு மிருந்து யுத்தஞ்செய்கின்ருளென்றெண்ணிப் பயந்து ஓடிப்போவதற்குத் தோன்ருமல் எங்கெங்கு எப்படியெப் படியிருந்தனவோ அங்கங்கு அப்படியப்படியே மாண்டுபோயின. யுத்தத்திலிறவாத தன்மையையுடைய தாம்பிரனும் சிக்ஷுரவும் அவர்களுடைய சைநியங்களும் இறந்துகிடப்பதை தேவர்கள் பார்த்து ஜய ஜய வென்று வாழ்த்திப் புஷ்பமாரி பொழிந்தனர். முனிவர்களும் கந்தர்வர்களும் சித்த சாரணர்களும் ஹே அம்பிகே! ஹே தேவீ! நீயே யாவரையும் ஜயிக்கவேண்டுமென்று அடிக் கடியும் புகழ்ந்து கொண்டாடினர். வேதாளம் முதலியவைகள் இப் போர் நற்போரென்று கூத்தாடின. (50–56)

ஓம் ஏகபோகாயை நம:

## 15. தேவி புரிந்த பெரும்போர் (3)

ஓ ஜனமேஜயனே! தூதர்களால் மகிஷாசுரன் அந்த இரண்டசு ரருமிறந்தாரென்று கேள்விப்பட்டுப் பதைபதைத்துத் துடிதுடித்து அவர்களா இறந்தார்கள்? ஆ ஹா! வென்ருச்சரிய மடைந்து தேவி யைச் சங்கரிக்கு நிமித்தம் மகா பலசாலிகளாயும் வஜ்ரகவசதாரி களாயும் மிகுந்த சைனியத்தோடு கூடினவர்களாயு முள்ள அசிலோ மன் பிடாலன் முதலிய துர்மதமுடைய அசுரர்களை யனுப்பினுன். அந்த அசுரர்களெல்லாம் சிம்மவாகன ரூடையாயும் பதினெட்டுத் திருக்கரங்களோடு கூடினவளாயும் கட்கம் கேடயம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவளாயும் சுந்தரியாயு மிருக்கின்ற தேவியை யுத்தபூமியிற் பார்த்தனர். அவர்களுள் அசிலோம னென்பவன் அசுரர்களைக் கொல்வதில் மிக வூக்கமுடையவளா யிருக்கின்ற தேவிக்கெதிரே நின்று விநயத்தோடு வணக்கமுடையவனும் சாந்தனும் நகை முகனும் பின்வருமாறு கூறத் தொடங் கினுன்: (1–4)

ஓ சுந்தரியாகிய தேவஸ்திரீயே! நீ யாது காரணமா யிவ்விடம் வந்தனை? உனக்கு யாதொரு குற்றமுஞ் செய்யாத அசுரக்கூட்டங் களை நீ கொலை செய்யுங் காரணமென்னை? அந்தவுண்மையை நீ நிச்சயமாகச் சொல்வாய். ஓ பெண்ணே! பெணகளுக்கு ஆசை யாயுள்ள பொருள்கள் சிலவுண்டு. அவையாவன, பொன்னுலும் ரத்தினத்தாலும் ஆகிய ஆபரணவகைகள், பாத்திர வகைகள் முதலி யனவாம். இவைகளைத்தான் நீயும் இச்சித்திருப்பாய். அஃது உண்மையாயின் மேற்சொல்லிய வகைகளையும் அதுவன்றி நீ இச்சித்திருக்கின்றவை எவைகளோ அவைகளையும் வெளிப்படுத்தி நான் வந்த காரணமிதுவென்றும் சொல்லுவையாயின் அவை யாவையும் நாளை யென்பதில்லாமல் இப்பொழுது நானே கொடுத்து

உன்னைத் திருப்தி செய்துவித்துப் பின்னர் என்னுற் கொடுக்கப் படும் பொன்மணி முதலியவைகளும் மகிஷாசுரனுடைய நட்பும் பெற்று உன்னிடம் உடனே போகலாம். இவ்வாறு உன்னுடைய இச்சையை வெளிப்படுத்தி வேண்டியதைப் பெற்றுக்கொண்டு போவதை விட்டு, அந்தோ! வீணுக யுத்தத்தை யேனபேக்ஷிக் கின்ருய்? இந்த யுத்தத்தாலென்ன சுகம்? ஒருகால் வெற்றியாகிய சுகம் வந்தாலும் வரும். தோல்வியாகிய துக்கம் வந்தாலும் வரும். முன் சொன்னவற்றில் எப்பொழுதுஞ் சுகமன்றித் துக்கமென்பது கிடையவே கிடையாது. ஆனல் இப்பொழுது உனக்கே ஜய முண்டாகிறபடியால் நமக்கே ஜயமுண்டாகிறது, இப்படியே இன்னமுமுண்டாகும், இதுவே நமக்குச் சுகமென்றெண்ணுவாய். அப்படி யெண்ணுவது கூடாது. அபஜயம் வந்தாலும் வருமே, வந்தாலென் செய்வாய்? அப்பொழுது துக்கந்தானே யுண்டாகும்? ஆனல் பெரியோர்கள் யுத்தமே ஸர்வசுகங்களையுங் கொடுப்ப தென்று சொல்லுகிருர்களே யெனின், அதுமிகவும் மிருதுவாகிய மலர் பட்டாலும் தாங்காத மேனியைப் படைத்திருக்கின்ற உனக் கன்று. உன் மேனியில் இந்தப்பாணங்கள் படுமாயின் என்ன கதியாம்? இதனை யோசிக்காம லிருக்கின்றனையே என்று மிகவும் ஆச்சரியப்படுகின்றேன். இது ஒரு சாமர்த்தியமா? சாமர்த்தியத் திற்குப் பிரயோஜன மெதுவென்ருல், சாந்தமாயிருத்தலும், அமைந்த தொழிலில் திருப்தியுற்றிருத்தலுமாம். (5–9)

அது வொழிந்து குரோதத்தோடுங் கூடி துக்கஹேதுவாயிருக் கின்ற யுத்தஞ்செய்து பிராணனையிழப்பதா சுகம்? உலக தரு மம் எதுவென்ருல் சுகத்தைக் கொள்ளலும் துக்கத்தை விடுவதுமாம். அந்தச் சுகம் நித்தியம், அநித்தியமென்றிருவகைப்படும். நித்திய சுகமாவது ஆத்மஞானத்தினு லுண்டாகும் சுகம். அநித்தியசுகமா வது போகத்தினுல் விளையுஞ்சுகம். இவற்றுள் வேதசாஸ்திர தத்துவ சிந்தனையுடையவர்கள் அநித்தியசுகத்தை வெறுத்துவிட்டு நித்ய சுகத்தையே விரும்புவார்கள். அநித்தியசுகத்துக்கு யோக்கிய மல்லாதார் நித்தியசுகத்தையே விரும்புவார்கள். நீயும் இதனையே விரும்பத்தக்கவள். ஆதலின் அதனையபேக்ஷிப்பையேல் நீயடையத் தக்கது யௌவனதசைக்குரிய சிறந்தபோகங்களையனுபவிப்பதே யாம். அதனையனுபவிப்பாய். இகபோகத்தை விரும்புவோமாயின் பரலோகசுகம் போகுமேயென்று சிந்திப்பாய். அதற்கு நானே ருண்மை கூறுகின்றேன். பரலோகத்தி லனுபவிக்கப்போகிற சுகம் இந்த லோகசுகமல்லாமல் வேருயிருக்குமாயின் அப்பொழுது இந்தப் போகத்தை வெறுக்கவேண்டியதே; இதுவே அங்குமாயின் அதற்குத் தவமுதலியன விரும்பித் தேகத்தை வாட்டியொழிப்பது அறிவீன மல்லவா? ஆகலின் அந்தச் சுகத்தைக் கிடைக்கப்பெற்ற இவ்வுலகி லேயே சுகமா யிந்தத் தேகத்தாலனுபவிக்கலாம். ஆனல் இந்தச் சுகத்துக்கு யௌவனம் முக்கிய சாதனமாகலான், அது தேகத்தில் அநித்தியத்தையடையாமல் நித்தியமாய் நன்ருயிருக்கும் பொழுதே

அதற்குரிய போகங்களை யநுபவித்தல்வேண்டும். இந்தவுண்மையை யறியாமல் தேகத்தைவாட்டி உயிரைவருத்த லறமாகுமா? பண்டிதர் களாயுள்ளவர் பிறவுயிரைத் துன்பப்படுத்தக் கூடாது. ஏனெனில், புருஷராலடையத்தக்கது அறம்பொருளின்பம். இன்பமாவதுகாமம். ஒன்றற்கொன்று விரோதமில்லாத அம்மூன்றையும் நடத்தவேண்டு மல்லவா? ஆகையால் காமத்துக்கிடமாயிருக்கிற தேகத்தினிடத்தில் எப்பொழுதும் பிரியமுடையராயிருத்தலே அறமாகும். அங்ஙன மிருக்க, நல்லசரீரத்தைப் படைத்தவர்களைக் கொல்ல நினைத்தல் அறமாகுமா? இந்த நீதியை மறந்து ஒரு குற்றமுமில்லாத அசுரர் களைக் கொல்லுகின்றனையே? ஓ மங்கையே! என்னுடைய மதம் என்னையெனின், சரீரத்தினிடத்தில் பிரியமாயிருத்தலே அற மெனவும், பொய்சொல்லாமையே பிராணனெனவுங்கொள்வதாகும். ஆகையால் பண்டிதர்களாயுள்ளவர்கள் தயையையும், சத்தியத்தை யும் பாதுகாத்தல்வேண்டும். ஓ பெண்ணே! நீ தானவர்களைக் கொல்லவேண்டுமென்கிறதற்குக் காரணமென்னவென்று அசுரன் கேட்க, தேவி, ஓ அசுரா! நீ என்னை என்ன காரணமாய் இங்கு வந்தனையென்றாய். நானிங்கிப்போது வந்தேனென்பதுமில்லை இனிப்போவேனென்பதுமில்லை; எங்குந்தானுள்ளவள்; அதனை நீயறியாய். அதைச் சொல்லவேண்டிய அவசியமு மிப்போதில்லை. அசுரசம்ஹாரத்திலுண்டாகும் பிரயோஜனமென்னையென்று ஒன்று கேட்டனை. நானெத் தன்மையளென்றால் அதனைச் சொல்லுகிறேன்: சகல பிராணிகளுடைய நீதி அநீதிகளை நடுவுநிலைமையாகப் பார்க்கின்ற சாக்ஷிரூபிணி. ஆகலான் நீ சொன்னதுபோலப் போக லோப வைரங்களை விரும்பத்தக்கவளல்ல. எனக்கு இவ் வுலகில் வேண்டியவர் வேண்டாதவரென்பது கிடையாது. ஆனல் நான் அங்கங்குத் தர்மார்த்தமாய் வெளிப்படுகின்றவள். எக் காலத்தும் என் மனதுக்குச் சம்மதமாயுள்ள விரதமொன்றிருக் கின்றது. அஃதாவது சாதுக்களை ரக்ஷிக்கும்பொருட்டு அசாதுக் களைத் தண்டித்தல். அசாதுக்களைத் தண்டிக்காமற்போனல் சாதுக்களை ரக்ஷித்தலென்பது ஏது? ஆகவே அதனையே எப் பொழுதும் பரிபாலித்துவருகின்றவளாதலால் அநேக விதமாய் அவ்வச்சமயங்களுக்கு ஏற்றவாறுருவங்கொண்டு சாதுக்களாகிய தேவர்களை ரக்ஷித்து வருகிறேன். யுகந்தோறும் எவரெவர்கள் அவதரித்து அசாதுக்களைக் கண்டித்து சாதுக்களை ரக்ஷிக் கின்றனரோ அவர்களுடைய உருவங்களும் நானென்றே யெண்ணு வாய். இச்சமயம் மகிஷன் துர்நடத்தையுடையவனும் தேவதை களைச் சங்கரிக்கின்றவனும் இருக்கின்றான். ஓ அசுரனே! நானதைத் தெரிந்துகொண்டிப்பொழுது அவனை வதம்பண்ணும் நிமித்தம் வந்திருக்கிறேன். பலிஷ்டனும் தீய நடத்தையுள்ள வனும் தேவசத்ருவாயு மிருக்கின்ற அவனைச் சங்கரிப்பேன். நீ போனற்போ, இருந்தாலிரு. இப்பொழுது நான் சொல்லிய துண்மை. துராத்மாவாயும் எருமை மகனுயு மிருக்கின்ற அவனிடஞ்சென்று நான் சொல்லியதாகச் சில வார்த்தைகளைச்

சொல்வாய். என்னையெனின், இதரர்களை ஏனனுப்புகிருய்? நீயே யுத்தத்துக்கு வருவாய். என்னுடன் உனக்கு சந்தி பண்ணிக் கொள்ளவேண்டுமென்றிருந்தால் எல்லாவசுரர்களும் தேவர்களிடங் கொண்டிருக்கும் வைரத்தை விட்டுப் பூர்வம் அவர்களிடத்தில் யுத்தஞ்செய்து அபகரித்த திரவியங்களை அவரவர்களிடத்தில் கொடுத்துவிட்டுப் பாதாளத்தில் பிரகலாதனுக்கு வாசஸ்தானமா யுள்ள விடத்தில் நீங்களும் போய்ச் சேருங்களென்று சொல்லுவா யென்று தேவி சொல்லிய வார்த்தையை எதிரே நின்ற அசிலோமன் கேட்டுத் தன்னுடன் வந்த பிடாலனைப் பார்த்து மிகவும் பிரியத் துடன், ஓ பிடாலனே! இந்த தேவஸ்திரீ சொல்லி வந்ததைக் கேட்டாயன்றே? இப்பொழுது நாம் யுத்தஞ் செய்யலாமா? அல்லது சந்தி செய்யலாமா? எது செய்யத்தக்கது? அதனை நீ சொல்வா யென்று கேட்க, அப்பிடாலன், ஓ அசிலோமனே! இப்போது நேரிட்ட யுத்தத்தில் அரசன் தனக்கு மரணம் வருமென்பது தெரிந் திருந்தும் யுத்தஞ் செய்ய வேண்டுமென்றே அகங்காரங் கொண் டிருக்கின்ருன். அதுவுமன்றி யுத்தத்திலிறந்து போனவர்களைப் பார்த்தும் மேன்மேலும் நம்மனேரை யனுப்பிக்கொண்டிருக்கின் ருன். இதுகால பலமல்லவா? அந்தக் காலத்தைக் கடப்பதற்கு எவன் சாமர்த்தியமுள்ளவன்? ஆகையினல் அவனுக்கோ மரணகாலம் வந்திருக்கிறது. நாமோ அவர்களுக்குச் சேவகர்களாயிருக் கின்ருேம். நமக்கு மானமேது? மானத்தை விட்டவர்கள் தானே சேவகாவிருத்திக்கு வரத்தக்கவர்கள்? இப்போது சேவகர் களாயிருக்கிற நாம் அவள் சொல்லிய தருமத்தை யாலோசித்து அதுபோல் செய்வதென்ருல் அது சாத்தியமாகுமா? அவன் சொல்லியபடி செய்வதே நமக்குச் சாத்தியம். ஏனென்ருல் நாம் அவன் ஆக்ஞைக்குட்பட்டவர்களாயும் அவன் திரவியத் தைப் பெற்று அதனலேயே வளர்ந்து சகலசுகத்தையு மநுபவித்த வர்களாயு மிருக்கிருே மாகையால் நாம் சூத்திரத்தா லசைவிக்க அசையும் பதுமையைப் போல் நடிக்கும் யோக்யதை யுடைய வர்களாயிருக்கின்ருேமே யன்றி நாமொன்றைச் சொல்லச் சுதந்தரமுடையோமல்லேம். அவனெதிரிற் போய் நீர் பூர்வத்தில் தேவர்களிடத்தில் கொள்ளையடித்த திரவியம் முதலியவற்றை அவர்களிடத்தில் கொடுத்துவிட்டு பாதாளம்போய்ச் சேருமென் கிற இந்தக் கொடூரமான வார்த்தையை எப்படிச் சொல்லுகிறது? உலகத்தில் யாவருக்கும் மேன்மேல் க்ஷேமத்தைச் செய்வதாகிய வார்த்தை பிரியப்படாது. இதுபோலவே உண்மையான வார்த்தை யும் பிரியப்படுகிறதில்லை. ஆகவே புத்திமான்களாயுள்ளவர்கள் இந்த இதமான வார்த்தையையும் பொய்சொல்லுவதையும் விட்டு மௌனமாயிருத்தலே யுக்தமென்றிருப்பார்கள். வீரர்களாயுள்ள மந்திரிகள் அரசனிடத்தில் குறைவான வார்த்தைகளைச் சொல்லக் கூடாதென்று நீதிநூலிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அரசனிடம் நாம் அன்புடனே இதமானவார்த்தைகளைச் சொல்வோ மென்று போதல் யுக்தமன்று. ஒருக்கால் போய்ச்சொன்னலும்

அவனுக்கு கேட்கும்போதே கோபம்வந்துவிடும். அதனையும் பின் வருவ்னவற்றையும் யோசித்து அவனிடத்திற் போவதையும் பிராணஹானி வரமாட்டாதென்கிற வெண்ணத்தையும் விட்டு மரணத்தைத்திரணமாக நினைத்து தம்மரசனுடைய காரியத்தையே விசேஷமாக நினைத்து யுத்தஞ் செய்ய வேண்டுமென்று இருவரும் யோசித்து ரதத்தின்மேலேறி வில்லைத் தாங்கி சேனைசமுத்திரஞ் சூழ்ந்துவரச் சென்று முன்னர் பிடாலன் ஏழுபாணங்களைத் தேவியின்மீது விட்டனன். (1–36)

அசிலோமனென்பவன் அஸ்திரவித்தையில் வல்லவனாயிருந்தும் சமீபத்திலில்லாமல் தூரத்திற்றானேயிருந்து பார்த்துக்கொண்டிருந்தனன். தேவி பிடாலன்விட்ட பாணங்களைப் பார்த்துத் தான் ஏழு பாணங்களை விட்டுக் கண்டித்து வேறு மூன்று பாணங்களால் பிடாலனை அடித்தனள். அடிக்கவும் அப்பிடாலன் மிகநொந்து மூர்ச்சையடைந்து பூமியில் வீழ்ந்துயிர் மாண்டனன். அசிலோமன் பிடாலனுயிர் மாண்டதைப் பார்த்து யுத்தத்தில் வீரங்கொண்டவனாய் வில்லேந்தி தேவியின் முன்வந்து இடதுகையை மேலே தூக்கி அதிகமான வார்த்தையைச் சொல்லாமல் அடியில் வருமாறு சிலவார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான் : துஷ்டபுத்தி யுள்ளவர்களாகிய இவ்வசுரர்க ளெள்ளாம் மரணமடைவார்க ளென்பதை நானறிந்தவனா யிருந்தும் மகிஷனுடைய சுவாதீனனாயிருப்பதால் யுத்தஞ்செய்ய வேண்டியவனேயாவன். ஏனெனில், மகிஷன் அறிவில்லாதவனாயிருக்கிறபடியால் இது நல்லது, இது கெட்டது என்கிறதை யறியான். அவனெதிரில் நான்நின்று இதமான வார்த்தைகளைச் சொல்லுவதற்குக் கூடுமா ? கூடாது. ஆகலான் இப்பொழுது நான் யுத்தஞ்செய்கிறேன் ; செய்யும் பக்ஷத்தில் ஜயம் வந்தாலுஞ் சரி, அபஜயம் வந்தாலும்சரி ; வீரதர்மத்தைவிடாமல் யுத்தமுகத்திலேயே மரணமடைகிறேன். இதுவரையில் வீரமுடைய அசுரர்கள் உன்னுடைய பாணத்தாலனேகம் பேரிறந்தனர் ; வீரத்தாலொன்றுமில்லை. அதை நெருப்பிற் சுடவேண்டும். எல்லாம் தெய்வத்தின் வல்லபமே. அதற்குமுன் ஒன்றும் நில்லாதென்று சொல்லிப் பின்னர் பாணங்களை அநேகமாய்ப் பொழிந்தனன். தேவியும் அப்பாணங்களையெல்லாம் வெட்டி தேவர்களிடம் கிருபாநோக்கம் வைத்து கோபம்நிறைந்த முகமுடையவளாய் வேறுசிலபாணங்களாலவனை யடித்தனள். அசிலோமன் அப்பாணங்களாலடிபட்டுச் சரீரமுற்றும் உதிரப்பெருக்குடையவனாய் முருக்கமலர்போல் செந்நிறமாய்ப் பிரகாசித்தான். அப்போது செம்பினாற் செய்த ஒரு கதையெடுத்துவந்து கோபத்தோடு சிங்கத்தின் தலைமேலோங்கியடிக்க சிங்கமும் அவ்வடியைப் பொருட்படுத்தாமல் உதாசீனப்படுத்தி அவன் மார்பில் தன்னகங்களாற் கீறியது. மீளவும் அசிலோமன் கதையோ டெழுந்து பாய்ந்து சிங்கத்தின்மேற்குதித்து தேவியைக் கதையாலடித்தனன். ஓ ஜனமேஜயனே ! அவள் அவனடித்ததை லக்ஷியஞ்செய்யாமல் கூரிய வாளினால் அவன் தலையை வெட்டித் தள்ள அசிலோமனும் பூமியில் வீழ்ந்தனன். துராத்மாவாகிய

அவன் சைனியத்தில் ஓ வென்கிற வோசை பெருக்கெடுத் தொலித்தது. தேவர்கள் உலகமாதாவாகிய அம்பிகையை ஜயஜய வென்று ஸ்தோத்திரஞ்செய்து தேவதுந்துபியை முழங்க, கின்னரர் கீதம் பாடினர்.

சிம்மமானது இறந்து போயிருக்கின்ற பிடாலன் அசிலோமனென்கிறவர்களைப் பார்த்து சேனைகளிலுள்ள சிலரை எட்டிய வரையில் பிடித்து அடித்துக்கொன்று பக்ஷித்தது. காயமடைந்த சிலர் துன்பமுற்று மகிஷனிடத்திலோடி, ஓ அரசனே! அசிலோமனும் பிடாலனு மாண்டனர்; எங்களை ரக்ஷிக்கவேண்டும்! ரக்ஷிக்க வேண்டும்! மகா பலசாலிகளான சேனுவீரர்களைச் சிங்கம் பக்ஷித்துவிட்டது; ஒரு வீரனுமில்லையென்று சொல்ல, மகிஷன் கலக்கமுற்று சிந்தாகுலமடைந்து ஒன்றுந் தோன்ருதவனுய்ப் பிரமித்திருந்தனன். (37–57)

ஓம் ஏக ரஸாயை நம:

## 16. தேவீ மகிஷ சம்வாதம்

வியாசர் கூறுகின்ருர்: ஓ அரசனே! தூதர்களால் வீரர்களிறந்ததை மகிஷாசுரன் கேட்டுக் கோபமுடையவனுய்த் தாருகனென்னும் ரதசாரதியைக் கூவி நம்முடைய அதிவிநோதமாகிய ரதத்தைக் கொண்டுவருவாயென்று சொல்ல, அவன் ஆயிரங்கோவேறு கழுதைகள் கட்டியதாயும் வெற்றிக் கொடிகள் அலங்கரிக்கப் பெற்றதாயும் ஆயுதங்கள் நிறைந்துள்ளதாயும் நல்ல வேகத்தோடு கூடிய உருளையை யுடையதாயும் உன்னதமான ஏர்க்காலுடையதாயுமுள்ள அழகிற் சிறந்த ரதத்தைச் சாரதியானவன் அதிவேகத்துடன் கொண்டுவந்து நிறுத்தி, ஓ அரசனே! இதோ ரதத்தைக் கொண்டுவந்தேனென் றறிக்கையிட்டுத் துவாரத்திலிருந்தனன். அதனைச் சர்வாயுதபாணியாய்ச் சிறந்த சிம்மாசனத்திலிருந்த மகிஷன் கேட்டு அக்கணமே புறப்பட்டு நாம் பார்ப்பதற்கு அருவருப்புள்ள நீண்ட கொம்புகளோடு கூடிய கடா ரூபமாய்ச் செல்வோமாயின் நம்மை அந்தத் தேவி பார்க்கும்பொழுதே நம்மிடத்தில் விருப்பங்கொள்ளும் மனமில்லாதவளாய்விடுவாள். உலகின்கண் பெண்களானவர் அழகிற் சிறந்த புருஷனை விரும்புவார்களேயன்றி அரசாக்ஷி முதலிய செல்வங்களைப் பார்த்து விரும்புவாரோ? ஆகையால், நாம் எந்த உருவத்தை யெடுத்தால் அவ்வழகுள்ள ஸ்திரீயானவள் மோகத்தை யடைவாளோ அவ்வுருவத்தை யெடுத்துப் போதல் வேண்டும்; அப்போதுதான் அவளால் நமக்குண்டாகத்தக்க சுகமுங் கிடைக்கும். அதுவன்றி, வேறு வடிவங்கொண்டு போவோமாஞல் சுபமுண்டாகமாட்டாதென்று மகா பாபியாகிய மகிஷாசுரன் ஆலோசித்து சர்வாயுதபாணியாய் திவ்யாம்பரதாரியாய்ப் பிரத்யக்ஷ மன்மதன்போல் நல்ல யௌவன புருஷனுய்த் தோளணி யணிந்து வெற்றிமாலை புனைந்து தனுர்ப்பாணங்

களை யெடுத்து ரதத்திலேறி எவ்வளவு வீரபதிவிரதையா யிருந்த போதிலும் அவள் கண்டமாத்திரத்தில் அதை விடத்தக்க ரூப மெடுத்து நாற்படைகளுஞ் சூழ்ந்துவர மதகர்வத்தோடுந் தேவியை நோக்கிச் சென்றனன். மனத்தினால் இவ்வண்ணமென்று மதிக்கக் கூடாத பேரழகோடும் வருகின்ற மகிஷனைத் தேவி பார்த்து சங்கத் தொனி செய்தனள். சேனைகளுக்கெல்லாம் ஆச்சரியத்தை விளை விப்பதாகிய அந்தச் சங்கத்தொனியை அசுரன் கேட்டுச் சிறிதுமஞ் சாது தேவியினுடைய சமீபம் போய்ப் புன்னகை செய்து சொல்லத் தொடங்கினன் : (1–13)

ஓ தேவமங்கையே! இவ்வுலகிலுள்ள இச் சம்சார சக்கரத்தில் புருஷர்களும் சுகத்தையே பெரும்பாலும் அபேக்ஷிக்கின்றனர். அந்த சுகமானது ஒருவரோடொருவர் கூடுவதனா லுண்டாவதன் றித் தனியாயிருந்தா லுண்டாவதில்லை. அந்தச் சுகமும் கூடும் கூட்டத்தினளவாயும் விவகாரானுசாரமாயும் பலபல விதமாய் விளைகின்றன. அவைகளைச் சொல்லுகின்றேன், கேட்பாயாக. நான் சொல்லப்போகிறது மகா ஆச்சரியகரமாயும் சந்தோஷத்தை விளைவிப்பதற் கேதுவாயும் அவரவர் பிரியத்துக்குத் தக்கவாறு அநேகவிதமான சுகத்தை விளைவிப்பதாயுமுள்ளது. எங்ஙன மெனின், மாதா பிதாக்களுக்குத் தங்களுடைய மக்கண்மெய்தீண் டல் முதலியன நேரிடுங் காலத்திலுண்டாகுஞ் சுகம் நீங்காதிருப்ப தாகலான் அது உத்தம சுகமெனவும், சகோதரர்கள் ஒருவரோ டொருவர் கூடுங்காலத்திலுண்டாகுஞ் சுகம் மத்திம சுகமெனவுங் கூறுகின்றனர். இந்த வேற்றுமைகளை அவரவ ரனுபவத்திலறிய லாம். அநேகவிதமான தொழில்களில் சம்பந்தித்திருக்கிற சித்த முடையவர்களாயும் வீணை பிரசங்க விஷயத்தில் பிரியமுடைய வர்களாயும் இவ்வண்ணமே நூதனமா யப்போதப்போது கூடு கின்றவர்களுக்குண்டாகும் சுகம் அதமமாகவுள்ள தென்று கூறு வர். மேலும், கனிஷ்ட சகோதரனுடைய சம்பந்தத்தாலுண் டாகும் சுகம் மிகச் சிறிய சுகமெனவும், உலகில் சகல சுகத் தையுங் கொடுப்பதாகிய ஸம்யோகத்தாலுண்டாகுஞ் சுகம் மிகப் பெரிய சுகமெனவுங் கூறுகிறார்கள். இந்த உத்தமமான ஸம்யோக சுகந்தான் ஸம்ஸாரத்தில் எப்பொழுதும் சுகத்தைக் கொடுக்கிறது. ஓ சுந்தரவதியே! சமானமான வயதுள்ள ஸ்திரீ புருஷர்களுடைய ஸம்யோகம் உத்தம சுகமென்றும், அதனினும் சாதுர்யம் வடிவம் அலங்காரம் முதலியவைகளும், குலம் சீலம் குணம் முதலியவைகளும் அமைந் துள்ளாருடைய சுகம் அளவு படாத தென்றுங் கூறுகின்றனர். ஓ அன்புடையவளே! நீ ஒன்றுக்கொன்றுயர்ந்தனவாகிய அவையெல்லாம் ஒருங்கேயுடைய வளாயிருத்தலால் என்னோடு கூடுவாய். கூடுவாயாயின் உனக்கு மிகுந்த சுகங் கிடைக்கும். அதிற் சந்தேகமில்லை. நானோ உன்னு டைய சுகத்திற்கேற்றவாறு நானாவித ரூபங்களை எடுப்பதற்கு ஒருவ ருடைய அனுக்கிரமும் வேண்டாம்; என்னுடைய ஸ்வேச்சையினா லேயே எடுத்துக் கொள்வேன். இந்திரன் முதலிய தேவர்கள்

யுத்தத்தில் என்னால் ஜயிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுடைய செல்வங்களெல்லாம் என் வீட்டிலிருக்கின்றன. அவைகளை நீ இஷ்டப்படி அனுபவிக்கலாம். அச்செல்வங்களை நீ மதிக்காது தானஞ்செய்ய வெண்ணினாலும் செய்துவிடலாம். இவையெல்லாம் எனக்குப் பெருஞ் செல்வமல்ல. நீ எனக்கு மகிஷியாய் வருதலே நானடையப் பெறாத பெருஞ் செல்வமாம். நான் உனக்குத் தாசனாய் விட்டேன். நீ என்னைப் பார்த்து உனக்குத் தேவர்க ளிடத்தில் வைரம் வேண்டாமென்று சொன்னாலும் அப்படியே விட்டு விடுகிறேன். உனக்கு எதனைச் செய்தால் சுகமோ அதனைச் செய்கிறேன். ஓ விசாலாக்ஷீ ! எனக்கு என்ன கட்டளை யிடு கின்றாய் ? அந்தக் கட்டளையை நான் கடக்கமாட்டேன். என் னுடைய சித்தமானது உன்னுடைய வடிவத்தில் மோகித்து மயங்கிக் கிடக்கின்றது. நான் உன்னுடைய அழகினால் பீடிக்கப்பட்டவனா யுன்னைச் சரணமடைந்தேன். மன்மத பாணத்தால் வருந்துகிறேன், காப்பாயாக. தருமத்திற் சிறந்த தருமம் சரணாகதி யடைந்தவரைக் காத்தலல்லவா ? ஓ நுண்ணிய இடையை யுடையாளே ! உனக்கு ஏவலாளி நான். ஆதலான் இனி நீ என்னைப் பார்த்து இறந்து போவாயென்று சொன்னாலும் அதைச் செய்வேனே யன்றி, நான் இவள் சொல்லைக் கேட்டு இறந்துபோவதா வென்று அச்செயலைச் செய்யாதிரேன். ஆயுதபாணியாய்ப் போர் செய்யவந்த நான் நிராயுதபாணியாய்ச் சரணம் சரணமென்று உன் சரணம் புகுந்தேனே, இதனையாவது பார்த்திரங்குவாய். அந்தோ ! உன் னிடத்தில் வார்த்தையாடிக்கொண்டிருக்கின்ற போதே என்பேரில் மன்மதன் பாணப்பிரயோகஞ் செய்கின்றானே ! உனக்கு என் மாட்டிரக்க மில்லையே ! தயை செய்வாயாக. ஓ காமரூபிணி ! நான் பிறந்தநாள் தொட்டு மஹாப்பிரமுகர்களாகிய பிரமனாதிய ரிடத்தும் தீனமாகிய வார்த்தையைச் சொன்னதில்லையே! அப்படிப் பட்ட நான் இப்பொழுது ஒரு சிறிய பெண்பாலாகிய உன்னிடத்தில் அதி தீனமான வார்த்தைகளைப் பலகாலுஞ் சொல்லுகின்றேனே. நான் தீனனாய்த் தீனமான வார்த்தைகளைச் சொல்வதனாலேயே என்னை நீ தீனனென்றே எண்ணினை போலும்! அந்தோ ! இதுவும் என்னுடைய காலந்தான். என்னுடைய வீரபராக்கிரமச் செயலையும் சொல்லையும் யுத்த முகத்தில் அறிந்தவர் பிரமனாதிய ரன்றோ! அவற்றை நீ அறிவதற்கில்லாமல் போயிற்றே. நீ அறிய வருமாயின் நான் உனக்குச் சரணமென்றபோதே என்னை நீ சந்தோஷப்படுத்தி யிருப்பாய். இப்பொழுது அதனை யெடுத்துப் பேசுவதனாலென் ! ஓ பூங்கொடி போல்பவளே ! நான் உனக்குத் தாசன். என் முகத்தைப் பாரென்று காமவெறி கொண்டு பிதற்றினன். அசுரனுடைய அவ்வார்த்தைகளை அம்பிகை கேட்டுப் புன்னகை செய்து கூறுகின்றாள் : (14–34)

ஓ அறிவிலரிற் சிறந்த பெரியோனே ! உன் செய்தியை நான் அறியாதவளென்றெண்ணாதே ; எல்லாம் அறிந்தவள்தான். நீ தான் என் செய்தியை அறியாதவன். நீ என்னைச் சரணமடைந்தே

னென்பதும் எனக்குத் தாசனென்பதும் ஓரருமையா ? நான் பரம புருஷனாகிய பரமசிவப் பிரபுவைத் தவிர வேறொரு புருஷனை இச்சியேன். அப்பரமசிவ ஜம்பந்தியான நான் சகல ஜகத்தையுஞ் சங்கரித்து மீளவுஞ் சிருஷ்டிக்கின்றேன். என் முன் நீ தேவர்களைக் கொன்றே னென்றதனாலும் அவர்களுடைய செல்வம் என்பால் உள்ள தென்றதனாலும் எனக்கென்ன ஆச்சரியம் ? நீ இன்றுள்ள வன் ; நான் என்றுமுள்ளவள். என்னைப்பார்க்க உன்னாலாகுமா? என்னைப் பார்க்கக்கூடாத உன்னை நான் பார்ப்பேனா ? என்னைப் பார்ப்பவர் ஸர்வேந்திரியாமியா யிருப்பவர்தாம். நான் அவருக்கு மங்களகரையா யிருக்கின்ற ஆக்ஞாசக்தி யாகும். அவருடைய சாந்நித்திய விசேஷத்தினாலேயே என்னிடத்தில் ஞானம் நிலையா யிருக்கின்றது. நானே பிரகிருதி. பிரகிருதியாகிய நான் அவருடைய ஸம்யோக பலத்தினால் சேதனத்வ முடையவளா யிருக்கின்றேன். எதுபோலெனின், காந்த சந்நிதானத்தில் ஜடமாகிய இரும்பு சேதனத்தை எவ்வண்ணம் அடைகிறதோ அதுபோலென்க. இத் தன்மையளாய சிவசக்தியாகிய என்னை ஸம்ஸாரமாகிய பந்தத்திலுழலும் ஓர் பெண்ணாக எண்ணினை போலும்! நான் ஸம்ஸார சக்தியல்ல, யாவருக்கும் ஸம்ஸார துக்கத்தைப் போக்கடிக்கின்றவளாகும். எனக்குத் துக்கமாகிய ஸம்ஸாரத்தில் ஆசையுண்டாகியதேயில்லை. ஓ மூர்க்கனே ! உன்னைப்போல் மூடனும் மந்தனும் உலகிலுண்டோ ? ஸ்திரீ சுகத்தை ஒரு சுகமாக எண்ணுகின்றனையே ! மானிடனைக் கட்டுவதற்கு ஸ்திரீயைச் சங்கிலியாகச் சொல்லப்பட்டிருக்கின்றதே, அதனை நீ கேட்டதில்லையா ? இருப்புச் சங்கிலி ஒரு சமயம் அறுபட்டாலும் அறுபடும் ; ஸ்திரீ என்கிற சங்கிலி எப்பொழுதும் அறுபடாதல்லவா ? அந்தோ ! துர்க்கந்தமாகிய சிறு நீருக்கிடமா யுள்ள ஸ்தானத்தை என்ன சுகங்கண்டு இச்சிக்கின்றாய் ? சுகம் வேண்டுமாயின் இந்திரிய நிக்கிரகஞ் செய்து அந்த நிக்கிரகத்தால் சுகமடைவாய். ஸ்திரீ சங்கமத்தில் அதிக துக்கமுண்டென்பதை யறிந்திருப்பையாயின், நீ ஏன் என்னைக் கண்டு மோகிக்கின்றாய் ? உனக்குத் தேவர்களிடத்தில் உண்டாயிருக்குந் துவேஷமே மரணத்துக்கு ஹேதுவென்றறிந்தேன். இப்பொழுது என்னிடத்தி லுண்டாகிய மோகம், அது நிச்சயந்தானென்றறிதற்குப் பிரமாண மாக முடிந்தது. ஓ பேதாய் ! இனி நீ பிழைத்திருக்க வேண்டுவை யாயின் தேவர்களிடத்தில் உண்டாயிருக்குந் துவேஷத்தை விடுவாய். அதனைவிட்டு பூலோகத்தில் இஷ்டப்படி சஞ்சரிப்பாய் ; இல்லாவிடில் பாதாளம் போய்ச் சேர்வாய். அப்படிக்கில்லாவிடில் யுத்தஞ்செய். உன்னைக் கொல்லும் பொருட்டுத் தேவர்களால் அனுப்பப்பட்ட நான் பலமுள்ளவளாக விருக்கின்றேன். இப்பொழு தென்னாற் சொல்லப்பட்ட இதனைச் சத்தியமென்றெண்ணுவாய். யுத்தத்தில் நான் சந்தோஷமுடையவளாகவே விருக்கின்றேன். சுகமாய்ப் பிழைத்திருக்க வேண்டுமென்று நீ இப்பொழுது என்னைக் கேட்டாலும் விட்டுவிடுகிறேன். பிழைத்திருக்க வேண்டுமென்கிற உன்னைக் கொல்லுமெண்ணம் எனக்குக் கிடையாது. ஏனெனில்,

சத்புருஷர்களாயுள்ளவர் தம்மிடத்து இனிமையாயுள்ள வார்த்தைகளில் ஏழு வார்த்தையாவது ஒருவன் சொல்வானாயின் அவனிடத்தில் அவர்களுக்குச் சினேகமுண்டாகிறதென்று சொல்லப்பட்டிருக்கின்றது. நீயும் " நான் உனக்குத் தாசன், நீ சொல்லுஞ் சொல்லைத் தடுக்கமாட்டேன் " என்கிற சில இரக்க மொழிகளைக் கூறியிருக்கின்றாயாகையால் உன்னைக் கொல்லாது விடுகிறேனென்கின்றேன். ஓ அசுரனே ! உனக்கு யுத்தஞ்செய்து மாண்டு போவது சுகமென்று தோன்றுகிறதா, அது செய்யாது பிழைத்திருப்பது சுகமென்று தோன்றுகிறதா ? உன்னிஷ்டத்தைச் சொல்வாயாக. என்னை யுத்தஞ் செய்வதற்குப் பின்னிட்டவளாக நீ நினையற்க. உன்னைக் கொன்றுவிடுவதிற் சந்தேகமே யில்லையென்று கூறினள். (35–45)

இவ்வண்ணஞ் சொல்லக் கேட்ட மகிஷன் காமத்தையே மேற்கொண்டவனாய்த் தேவியைப் பார்த்துச் சில இனிய வார்த்தைகளைக் குரோதமற்றுச் சொல்லத் தொடங்கினான் : ஓ பேரழகியே ! எனக்கு யுத்தமென்பதுதான் சுகம். ஆயினும் மானிடரால் மோகிக்கத்தக்க மிருதுவான சரீரத்தைப் படைத்தவளாய்க் காணப்படுகின்றாயாகலான் உன்னைக் கொல்வதற்கு என் நெஞ்சந் துணியவில்லை. அன்றியும், பிரமனாதி தேவர்களையெல்லாஞ் ஜயித்து இப்பொழுது பெண்ணாகிய உன்னோடு யுத்தஞ்செய்வது தகுதியாமா? நீ எனக்குச் சொன்னதுபோல் நான் உனக்குச் சில சொல்லுகிறேன், கேட்பாயாக : நீ என்னை விவாகஞ்செய்து கொள்வது சுகமாகத்தோன்றும் பக்ஷத்தில் அதுபோல் செய்துகொள். சுகமில்லையென்று தோன்றும் பக்ஷத்தில் நீ எங்கிருந்து வந்தனையோ அங்கேகுவாய். அப்படிப்போகும் பக்ஷத்தில் உன்னை நான் கொல்லுவதில்லை. இதமாயும் நன்மையாயுமுள்ள வார்த்தைகளை உனக்குச் சொன்னேன், சுகமாய்ப்போ ; உன்னைக் கொல்வதனால் எனக்கென்ன பெருமையுண்டாகும் ? ஸ்திரீஹத்தி செய்தேனென்கிற சிறுமைதானுண்டாகும். ஸ்திரீஹத்தி சிசுஹத்தி பிரம்மஹத்தி முதலிய ஹத்திகளைச் செய்தால் அவைகளால் வரும் பாவங்களைத் தாண்ட முடியாது. எனக்கு உன்னிடத்துண்டாயிருக்கும் காமத்தால் நிச்சயமாய் உன்னை எடுத்துக் கொண்டு வீட்டுக்குக் கொண்டுபோய் விடுவேன். கொண்டுபோனாலும் பயனென்னை ? பலாத்காரத்தால் போக சுகமுண்டாகுமோ ? புருஷர்களுக்குச் சுகம் ஸ்திரீகளாலும் ஸ்திரீகளுக்குச் சுகம் புருஷர்களாலும். ஸ்திரீ நீங்குவளானால் புருஷனுக்குத் துக்கமும், புருஷன் நீங்குவனானால் ஸ்திரீகளுக்குத் துக்கமும் உண்டாகத் தக்கதேயன்றி வேறு வகையினாலில்லை. அந்த நியாயத்தை நான் இன்னமும் யோசித்து உன்னை வணங்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன். எந்தச் சத்துருவின் வஞ்சனையான வார்த்தையினால் என்னை விரும்பாமலிருக்கின்றாய் ? நீ சர்வாங்க லக்ஷணமும் நிறைந்து சர்வாபரணங்களாலும் அழகு செய்யப் பெற்றிருக்கின்றதனாலல்லவோ நான் இவ்வளவு துயரப்படும்படியாகவுமாயினேன். அந்தோ ! நீ அழகும் அணியும் பெற்றுப் புத்தி சாதுர்ய

மென்கிற ஒன்றைமாத்திரம் பெருதிருக்கின்றனேயே! இது பெரும் பாவம். (46–45)

இனியேனும் உன்னுடைய மூர்க்கத்தனத்தை விட்டு மங்களகர மான விவாகஞ் செய்துக்கொண்டு என்னிடத்தில் இன்ப சுகமுறும் வகையைத் தேடுவாய். அது செய்வாயாயின் இருவருக்கும் சுக முண்டாகும். உன்னைப்போலும் சுகமற்றவளை எங்குங் கண்ட தில்லை. லக்ஷ்மி தேவியானவள் திருமாலோடும், ஸரஸ்வதி பிரம னோடும், பார்வதி ருத்திரமூர்த்தியோடும், இந்திராணி இந்திர னோடுங்கூடிச் சுகமனுபவிக்கவில்லையா? எந்த ஸ்திரீதான் பர்த்தா வில்லாமல் ஸ்திரமான சுகத்தை யனுபவிக்கின்ருள்? அங்ஙன மிருக்க, நீ என்ன காரணத்தால் புருஷசுகத்தை எண்ணுமலிருக் கின்ருய்? ஏன் மன்மதனும் உன்மேல் பாணப்பிரயோகஞ் செய்யாம லிருக்கின்ருன்? அவனும் உன்னைக்கண்டு மதிமயங்கிப்போய் விட்டனனே? உன்மேல் பாணப்பிரயோகஞ் செய்யாதவன் என்மே லேன் செய்யவேண்டும்? இதனை யாராயுங்கால் எனது சத்துருக் களாகிய தேவர்கள் அவனுக்குத் துர்ப்போதனை செய்து அவனது பாணத்தை அந்த ஸ்திரீயின்மேல் விடவேண்டாமென்று தடுத்து என்மேல் விடும்படிச் செய்தார்கள் போலும்!

மான்போலும் கண்களையும் மிருதுவான மேனியையும் படைத் தவளே! நீ அழகாயும் தனக்கனுகூலனுயுமிருந்த கணவனைவிட்டு மந்தோதரி எப்படிப் பரிபவப்பட்டனளோ அப்படி ஹிதமாக வந்த என்னை விட்டுப்பின் வருத்தப்படப் போகின்ருய். பின்னர் அந்த மந்தோதரி ஒரு துஷ்டபர்த்தாவைப் பெற்றனள். உன்னுடைய தலைவிதியும் அப்படித்தானிருக்கின்றதோ என்னவோ அறியேன் என்று பல பலவாய்ப் புலம்பிக்கிடந்தனன். (57–65)

ஓம் ஏகஶ்வர்ய ப்ரதாயிந்யை நம:

## 17. மந்தோதரி வரலாறு

வியாசர் கூறுகின்ருர்:—ஓ அரசனே! மகிஷாசுரன் வார்த்தை களைக் கேட்ட மஹாதேவி மகிஷனைப்பார்த்து வினவுகின்ருள்: ஓ அசுரனே! உன்னுல் சொல்லப்பட்ட மந்தோதரி என்பவள் யார்? அவளால் விடப்பட்ட கணவன் யார்? பிறகு அவளால் கொள்ளப் பட்ட கணவன் யார்? அவள் துக்கமடைந்தவிதம் எப்படி? இவற்றை விரிவாய்ச் சொல்லவேண்டு மென்றனள்.

மகிஷாசுரன் கூறுகின்ருன்: ஓ காமரூபிணீ! பூலோகத்தில் சிம்மளதேசமென்று ஒரு தேசமுள்ளது. அது சோலைகளால் சூழப் பட்டதும், தனதானிய ஸம்பத்துக்களால் நிறையப் பெற்றதுமான சிறப்பினை யுடைத்தானது. அந்தத் தேசத்தில் தர்ம சிந்தனையிற் சிறந்தவனும், நியாயத்துக்கு விரோதமில்லாமல் தருமா தருமங் களை நடத்துகின்றவனும், பிராம்மண போஷணையில் மிகச் சிறந்

தவனும் சத்தியவசனனும், மிகமேன்மைத் தன்மையனும், கோப மென்பதை யறியாதவனும், நீதிமுறைகளை யறிந்தவனும், சகல கலைகளும் நிரம்பப்பெற்றவனும், தனுர் வித்தையில் வல்லவனு மான சந்திரசேனனென்னும் அரசனிருந்தனன். அவனுக்கு இலக்கணங்களிற் சிறந்த அழகுள்ளவளாயும், கடுமொழி கடந்த வளாயும், இல்வாழ்க்கைக்கு வேண்டிய நன்னடைகளுடையவ ளாயும், எப்பொழுதுஞ் கோணாது முகமலர்ச்சி யுடையவளாயும், கணவனையே தெய்வமாகப் பேணும் ஒழுக்கத்திற் சிறந்தவளாயு முள்ள குணவதி என்னும் மனையாட்டி யிருந்தனள். அவள் பிரத மத்தில் ஒரு பெண்ணைப் பெற்றனள். குழந்தையை அரசன் கண்டு மகிழ்ந்து அதற்கு ஜாத கர்மாதிகளெல்லாம் நடத்தி மந்தோதரி என்று பெயரிட்டனன். பின்னர் அப்பெண் தினே தினே வளரப் பெற்று ஸர்வாங்க லக்ஷணங்களும் நிறையப்பெற்று வரும் நாளில் தந்தையாகிய சந்திரசேனன் நமது குழந்தைக்குத் தக்க வரன் எவ்விடத்தி லிருக்கின்றானென்று ஏக்கங்கொண்டு கவலையுற்றிருக்கும்பொழுது புரோகிதருட் சிறந்த சில முதிய வேதியர் அரசனைச் சமீபித்துக் கூறுகின்றார்: ஓ மஹாராஜனே! மந்திரதேசத்துக் கதிபதியான சுதன்மா என்றோரரசனிருக்கின்றான். அவன் மகன் கம்புக்கிரீவன்; அவனே சௌந்தரிய விசேஷங்களி லும் ஸர்வவித்யா விசேஷங்களிலும் சிறந்தவன். ஆகலான் அவனை உன் மகளுக்கு வரனாகக்கொண்டு உனது கவலையை யொழிப்பா யென்றனர். அரசன் சம்மதித்தவனாய்த் தன் மனையாட்டியினிடத் தில் தெரிவிப்ப, அவள் தன் மகளாகிய மந்தோதரியினிடம் சொல்லி னாள். தாய் வார்த்தையைக் கேட்ட மந்தோதரி தாயைப்பார்த்துக் கூறுகின்றாள்: என் தாயே! எனக்குக் கலியாணம் வேண்டாம். எனக்குச் சம்ஸாரத்திற் சிறிதும் ஆசையில்லை. நான் கௌமார விரதத்தை யனுஷ்டித்துக் காலத்தைக் கழித்துவருகிறேன். இது தான் எனக்குச் சுகம். நான் சுதந்தரமாய்த் தவஞ்செய்து காலங் கழிப்பதை விட்டுச் சம்ஸாரத்தில் பராதீனையாய்த் துக்கத்தை யனுபவிப்பதா சுகம்? இதில் சிறிதுஞ் சுகங்கிடையாது, துக்கமே. பண்டிதர்கள் ஒருவன் சம்சாரத்தில் பராதீனனாய்ப் போகாது சுவாதீனனாகவேயிருந்து கவலையற்றிருப்பானானால் அவனுக்கு மோக்ஷசுக முண்டாகிறதென்று சொல்லுகின்றனர். ஆகையால் நான் மோக்ஷசுகத்தையே யடைவேன். புருஷனால் எனக்குப் பிரயோஜனமில்லை. நீ பிதாவினிடம் என்னெண்ணத்தைத் தெரி வித்துவிடுவாய். நான் உனது அதீனமாகவே யிருக்கின்றேன். நான் விவாகஞ் செய்துகொண்டு கணவனுக்குச் சுவாதீனமாவேனா யின் மாமி மைத்துனன் இவர்களுக்கெல்லாம் வேலைக்காரியைப் போலாகவேண்டும். கணவனுடைய மனதை அறிவதென்றால் மிகவும் பெரிய துன்பம். அவன் மற்றொரு ஸ்திரீயை விரும்பி நடப்பானானால் அவளால் விளையும் துக்கம் இவ்வளவென்று சொல்லிமுடியுமா? அப்பொழுது கணவனிடத்தில் கோபமுண்டா கிறது. நான் எத்தனையென்று சொல்லுவேன்? அம்மா!

ஸம்ஸாரத்தில் சுகமேது? ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் துக்கமே! ஸம்ஸாரத்தில் உண்டாகும் சுகம் சொப்பனதருமம்போலுமாம். முற்காலத்தில் உத்தானனென்பவனுடைய புத்திரனும் மிகவுத்தமனும் சகல தருமங்களையும் அறிந்தவனும் துருவனென்பவனுக்குத் தம்பியாயுமிருந்த அரசன் தனது மனைவி பதிவிரதா சிரோன்மணியாயும் யாதொரு குற்றமுஞ் செய்யாதவளாயுமிருக்க, அவளை அரண்யத்தில் ஓட்டிவிட்டானென்று கேட்டிருக்கின்றேன். கணவனாலேயே இவ்வளவு கேடுண்டாகிறது. அவன் தேசாந்திரம் போவானானால், காமம் மேலிட்டு இரவும் பகலும் வாட்டுகின்றது. அவனிறந்தாலோ அவளுக்குண்டாகும் அமங்கலத்துவமும் துக்க சோகங்களும் சொல்லுக்கடங்குமோ? விதவை என்கிற பெயருடையவளாய்ப் புருஷர்களேயல்லாமல் ஸ்திரீகளாலும் தள்ளப்பட்டு நிஷேதிக்கப்படுகிறாள். இவ்வளவுக்கும் காரணம் கணவனை வேண்டுவதேயாகும். ஆகையால் விவாகம் வேண்டாமென்பதே என்னுடைய சம்மதமென்று சொன்னாள். பெண் வார்த்தையைக் கேட்ட தாய் தனது நாயகனிடமுஞ் சென்று பெண்ணினுடைய வைராக்கிய விசேஷங்களையும் விவாகத்துக்கு இணங்கமாட்டாத காரணங்களையும் நன்றாயெடுத்துச் சொல்லவும், அவன் அவளது எண்ணத்தை மறுக்கக்கூடாதவனாய் விவாகத்தை நிறுத்திவிட்டனன். (1–30)

பின்னர் அந்தப்பெண் யௌவன பருவத்தை யடைந்தாள். அவளுடைய தோழிகள், ஓ மங்கையர்க்கரசியே! நீ விவாகத்தை வெறுத்திருக்கின்றனையே. உன்னுடைய நலமெல்லாம் வீணாய்ப் போகின்றதே என்று பலவிதமாய்க் காமமுண்டா வதற்கேதுவான பல பல வார்த்தைகளைச் சொல்லி வந்தாலும் அவள் முன்போல் வைராக்கியமான வார்த்தைகளைப் பேசிவருவாளேயல்லாமல் காமத்துக்குட்பட்டவளாகத் தன்னைத் தெரிவிக்கமாட்டாள். ஒருநாள் அவள் ஓர் உத்தியானவனத்துள் தன் தோழிமார்களுடன் சென்று அதிவுல்லாசமாய் அங்கிருக்கும் அரிய மலர்களைப் பறித்துக் கொண்டுலாவி வரும்போது கோசல தேசத்தரசன் தேரின்மேலேறினவனாய் சிலசேனைகள் பின்னே வரத் தான் முன்னே தெய்வகதியாய் அந்த உத்தியானவனத்துக்கு வந்தனன். (31–36)

அவனைத் தூரத்தே கண்ட சில தோழிகள் அதிசயித்து மந்தோதரியைப் பார்த்துக் கூறுகின்றனர்: எங்கள் தலைவியே! உன்னுடைய பாக்கிய வசத்தால் ஒரு மஹாபுருஷன் வருகிறான்; உன்னுடைய புண்ணியத்தை நாங்கள் என்னவென்று சொல்லப் போகிறோமென்று அவனுடைய சௌந்தரிய விசேஷணங்களைச் சொல்லத் தொடங்கினர். தொடங்குவதற்கு முன், அந்த அரசன் சமீபித்து வந்து தோழிகளைப்பார்த்து, இந்தவிசாலமான கண்ணைப்படைத்து என்னை மன்மதன்பாற்படுத்திய மங்கை யார்? சீக்கிரமாய்ச் சொல்லுங்களென்றான். தோழியர்கள் அவனது விரைவான வார்த்தையைக் கேட்டுச் சற்றே நகைத்தவர்களாய் வினவுகின்றனர்: ஓ அரசனே! நாங்கள் நீர் இன்னாரென்று அறியாமல் எங்கள் தலைவியினுடைய வரலாற்றைச் சொல்லுவதென்றால் அழகாகுமா?

ஆகையால் உம்முடைய வரலாற்றை முன்னர் தெரிவிப்பீராயின் நாங்கள் நீர் கேட்டபடி சொல்லுவதற்கு என்ன தடையிருக்கின்றது? நீர் யார்? உம்முடைய பெயரென்ன? இவ்விடத்துக்கு வந்த காரண மென்ன? உமக்கு என்ன என்ன செய்யவேண்டும், என்றனர். அரசன் அவர்களைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ நங்கைமீர்! யான் உலகின்கண் யாவராலும் புகழத்தக்க கோசல தேசாதிபன். என் பெயர் வீரசேனன். சேனைகள் பின்னே வருகின்றன. இவ் விடத்திற்கு வரவேண்டுமென்று வந்தவனன்று; வழி தவறி வந்து விட்டேன். இஃது ஊழ்வகை யென்றனன். (37–44)

பின்பு தோழியர் கூறுகின்றனர்: ஓ அரசனே! இவள் சந்திரசேனனுடைய பெண். இவள் பெயர் மந்தோதரி. இங்கு எங்களோடு விளையாடிக்கொண்டிருக்கும் விளையாட்டை யுத்தே சித்து வந்தாள் என்றனர். அரசன் அவர்கள் வார்த்தையைக் கேட்டுத் தனதெண்ணத்தை இவர்களைக் கொண்டே முடிக்க வேண்டுமென்று துணிந்து அத்தோழியருள் தலைவிக்குச் சிறந்தா ளொருத்தியைத் தனியே யழைத்து எனதுயிராயுள்ள உனது தலைவியை எனக்களித்து என்னைப் பாதுகாத்தல் உனது கடமை யென்று அவளைப்புகழ்ந்து கூறுகின்றான்: என்னை நீ லேசாக நினையாதே. யான் சிறந்த காகுஸ்த வம்சத்திற் பிறந்தவன். இப் பொழுது காந்தர்வமணம் இருவருக்கும் உண்டாகும் வகையைத் தேடுவாய். எனக்கு வேறு பத்தினி கிடையாது. யௌவனவதி யாயும் உருவ ஸம்பன்னையாயும் நல்ல குலத்திற் பிறந்தவளாயு முள்ள இவள் என்னை வரனாகக்கொள்வதற்கு என்ன ஆக்ஷேபம்? அப்படிக் கொள்ளாமற் போவாளாயின் இவள் தந்தையே விதிப்படி கலியாணஞ்செய்து கொடுக்கும்படிச் செய்கிறேன்; சந்தேகமில்லை யென்றனன். தோழி கேட்டு அவனிடத்தில் ஒன்றும் உரையாடாது தலைவியினிடத்திற் சென்று கூறுகின்றாள்: ஓ மந்தோதரியே! இரண்டாவது மன்மதனென்று சொல்லும்படியான அழகனையும் மனோகரனையும் உனக்கொத்த பருவமுடையவனையும் உன்னிடத்தில் மிக்க அன்புடையவனையும் சூரியவம்சத்திற் பிறந்தவனையுமுள்ள அரசனொருவன் இச்சோலையில் வந்திருக்கின்றான். உன் தந்தையும் உனக்கு மணப்பருவம் வந்திருந்தும், வைராக்கிய முடையவளா யிருக்கின்றாளேயென்று துக்கித்துக்கொண்டிருக்கின்றார். எங்களை அடிக்கடி யழைத்துப் பெருமூச்செறிந்து என்னைப் பெண்ணுக்கு நல்ல புத்தி சொல்லக் கூடாதாவென்று சொல்லுகிறார். நாங்கள் உனக்குச் சொல்லும் வன்மையற்றவர்களாய் வாளாவிருந்து விட்டோம். இப்பொழுது நல்ல சமயம் வாய்த்துவிட்டது. ஸ்திரீ களுக்குப் பர்த்தாவினுடைய பணிவிடைதான் முக்கியமான தரும மென்று மனுநீதி கூறுகின்றது. பர்த்தாவைப் படைக்காதவள் நரகத்தை யடைவாள். ஓ பெண்கள் நாயகமே! நீ விவாகஞ் செய்துகொள்; உனக்கொரு துன்பமும் வராது என்றாள். (45–55)

மந்தோதரி தோழியைப் பார்த்துக் கூறுகின்றாள்: என்ன வாயில் வந்தபடி பிதற்றுகின்றாய்? எனக்குக் கணவன் வேண்டாம்.

வந்தவனைப் போகச் சொல்வாய். அவன் என்னை வெட்கமில்லாமல் ஏன் பார்க்கின்றான்? நான் அற்புதமான தவத்தைச் செய்கிறேனென்றனள். தோழி அவளைப் பார்த்துக் கூறுகின்றாள்: ஏன் அவசரப்படுகின்றாய்? மன்மதன் எவராலும் வெல்லத்தக்கவனல்ல. இந்த யௌவனகாலத்தைத் தாண்டுவது மிகவுங் கஷ்டம். நான் சொல்லும் இதமான வார்த்தையைக் கேட்டு அதுபோற் செய்வாய். அப்படிச் செய்யாமற் போவாயானால் உனக்குக் கஷ்டம் நேரிடுவது நிச்சயம். இதிற் சந்தேகமில்லை யென்றனள். மந்தோதரி தெய்வகதியாய் எது வந்தாலும் வரட்டும்; அதனை மாற்றமுடியாது. நான் விவாகம் வேண்டுமென்று வேண்டுவானேன், என்றாள். தோழி அவள் சொல்லைக்கேட்டு, கோசலாதிபன் பால் சென்று கூறுகின்றாள்: ஓ அரசனே! அவள் உன்னெண்ணத்துக்கு உடன்படமாட்டாள்; நீ கவலை கொள்ளாதே; வலியவந்த வாழ்வை எண்ணாது எப்பொழுது இழக்கத் துணிந்தாளோ இனி அவளுக்கு வருவதை நான் சொல்ல வேண்டுமா? அவள் நல்ல கணவனை இச்சிக்கமாட்டாள். நீ அவளிடத்தில் கொண்ட மோகத்தை விட்டுவிடுவாயென்றாள். அரசன் அவள் வார்த்தையைக் கேட்டுத் துக்கப்பட்டு ஆசையைவிட்டுச் சேனைகளோடு தன் நகரம் போய்ச் சேர்ந்தனன். (56–61)

ஓம் ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய ப்ரதாயை நம:

## 18. மகிஷாசுர வதம்

மகிஷன் கூறுகின்றான் :—ஓ திவ்ய மங்கள ரூபிணியாகிய தேவி! மந்தோதரியானவள் கோசல தேசாதிபனை வெறுத்தனுப்பிய பின்னர் வைராக்கிய முடையவளாகவே வாழ்ந்து வருநாளில் இவளது தங்கையாகிய இந்துமதி என்பவளுக்கு விவாகஞ் செய்யும் பருவம் வர, அரசன் சுயம்வரம் நாட்டிச் சகல தேசத்தரசர்களையும் வரவழைத்தான். அப்பொழுது அந்த இந்துமதியானவள் தன்னால் இச்சிக்கப்பட்ட ஓரரசனுக்கு மாலையிட்டு வரனாகக் கொண்டனள். அந்தச் சமயத்தில் மந்தோதரியானவள் விடனையும் துஷ்டனையும் சாதுர்ய முடையவனையும், அக்கூட்டத்திலிருந்த மந்திர தேசத்தரசனாகிய சாருதோஷ்ணன் என்னும் அரசனைப் பார்த்து மோகங் கொண்டவளாய் தனது வைராக்கியத்தை இழந்து தன் தந்தையைப் பார்த்து, எனக்கு இவ்வரசனை விவாகஞ் செய்து வைப்பாயென்று சொல்ல, அவன் மிகவும் சந்தோஷித்தவனாய் அவள் வேண்டிய படியே அவனையழைத்துக் கலியாணஞ் செய்து கொடுத்தனன். (1–6)

அந்தச் சாருதோஷ்ணன் என்பவன் மிக்க மகிழ்ச்சி யடைந்தவனாய் மந்தோதரியோடு தனது தாசி தாசர்களை யழைத்துக் கொண்டு தன் நகரம் போய்ச் சேர்ந்தனன். மந்தோதரியானவள் அவனோடு கூடி காமரசத்தை வேண்டியவண்ணம் தெவிட்டவுண்டு

வாழும் நாளில் ஒருநாள் தனது நாயகன் ஒரு வேலைக்காரன் மனைவியோடு கூடி கிரீடித்திருக்கிறனென்று தோழியால் கேள்வியுற்று நகைத்துக் கோபங்கொண்டு அவனை யிகழ்ந்து சில வார்த்தைகளைச் சொல்லி அவனைத் தன் வசமாக்கி வைத்திருந்தனள். மற்றொரு காலத்தில் எவ்விதத்தாலோ தன்னை ஏமாற்றி மற்றொருத்தியோடு எப்பொழுதுங் கூடியிருத்தலைக் கண்டு, அந்தோ ! இவன் பரஸ்திரீகளுடைய சம்போகமே மேலான போக்மென்று சுகித்து வருகின்றான். இவன் செய்தியை அக்காலத்திலறியாமற் போனேமே யென்று மிகுந்த துயரமடைந்து நாம் இந்த வஞ்சகனால் வஞ்சிக்கப் பட்டோமே, இவன் நாணமென்பது சிறிதுமில்லாதவனாயும் தயையற்றவனாயும் பரம துஷ்டனாயு மிருக்கும்பொழுது இவனால் நமக்கென்ன சுகமுண்டாகும் ? இனி ஸம்ஸாரத்தை விட்டால்தான் சுகமுண்டாகும் ; நாம் செய்யக்கூடாத காரியத்தைச் செய்துவிட்டோம். அஃது இப்பொழுது துக்கத்தைக் கொடுத்தது. இனி நாம் பிராணனை விடல் வேண்டும். விட்டால் அஃது ஆத்மஹத்தியாய்ப் பெரிதான பாவத்துக்காளாக்கி விடுமல்லவா ? தந்தையாரிடம் போவோமென்றாலோ, நாம் வைராக்கியம் பேசக் கேட்டிருந்த தோழிகளெல்லாம் பரிகாசஞ் செய்வார்களல்லவா ? என்று பல வாறுக வெண்ணி இனி எண்ணி ஏங்குவதிற் பயனென்னை யென்று எண்ணுவதை விட்டுக் காமசுகத்தைக் கைவிட்டு அவ்விடத்திலேயே தன் வாழ்நாளை வீணாளாகக் கழித்து வந்தனள். அவள் கதியைப் போலவே உன் கதியும் ஆகுமென்று தேவியைப் பார்த்து இகழ்ந்து கூறி, இனியேனும் என் வார்த்தையைக் கேட்பாய் ; கேளாமற் போவாயானால் நீ மிகுந்த துயரத்தையடைவாய், சந்தேகமில்லை யென்று கூறினன். (7–20)

தேவி அசுரனுடைய வார்த்தையைக் கேட்டுக் கூறுகின்றாள் : ஓ மூடாத்மாவே ! என்னை மந்தோதரியைப்போலவா எண்ணிவிட்டனை ? கடாவுக்கு எவ்வளவு அறிவோ அவ்வளவு அறிவுதானே உனக்கிருக்கும் ! பாதாளத்திற்குப் போவதென்றால் இப்பொழுதே போய்விடு. யுத்தஞ் செய்ய வீரமிருந்தால் யுத்தஞ் செய். நான் உன்னை உன் சேனைகளோடு யுத்தகளத்துக் கிரையாக்கிச் சுகமாய்ப் போகப்போகிறேன். எப்போது சாதுக்களுக்குத் துக்கமுண்டாகிறதோ அவர்கட்கு அத்துக்கத்தைப் போக்கிக் காக்கு நிமித்தம் நான் உருவங்கொள்ளத் தக்கவள். எனக்கு உருவமுங் கிடையாது, பிறப்புங் கிடையாது. இப்பொழுதும் தேவர்களைக் காக்கு நிமித்தம் இவ்வுருவத்தோடு வந்திருக்கின்றேன். தேவர்களோ உன்னைச் சங்கரிக்கும்படிப் பிரார்த்தனை செய்திருக்கின்றனர். அப்பிரார்த்தனையை முடிப்பதற்குச் சித்தமாயிருக்கின்ற நான் சொல்வதை விளையாட்டாக வெண்ணற்க. இது மெய் ; நின்று யுத்தமாவது செய், பாதாளத்துக்காவது போ என்றனள். (21–25)

இவ்வாறு கூறும் தேவியின் வார்த்தையை அசுரன் கேட்டு யுத்தாவேசங்கொண்டு யுத்தக்களத்தினின்று வில்லெடுத்துப் பாணங்களைச் சந்தித்து அதிவேகமாய்த் தேவியின்மீது விட்டனன்.

அவையெல்லாம் தேவி தடுத்துப் பெரும்போர் விளைவித்தனள். அந்த விளைவில் தேவரும் அசுரரும் ஜயம் யார் பாலதோவென்று கண்களை விழித்த வண்ணமாகவே பார்த்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் துர்த்தரன் மலைபோல் வீழ்ந்து மாண்டனன். அதைக் கண்ட திரிநேத்திரனென்னும் அசுரன், தேவியின்பேரில் ஏழு பாணங்களை விட்டு அட்டகாசஞ் செய்தனன். அவைகளைத் தேவிதடுத்து அவனையடக்க, அந்தகனென்பவன் அதிவேகமாய் ஓடிவந்து ஓர் இரும்புலக்கையை எடுத்து தேவி யூர்ந்துவந்த சிங்கத்தின் தலைமேல் மோதினன். அது கோபங்கொண்டு அவ்வசுரனை நகத்தாற் பூரி அவனது மாமிசத்தை ஆகாரமாகக் கொண்டது. இவைகளைப் பார்த்த மகிஷாசுரன் ஆச்சரியங்கொண்டு மிக்க கூர்மையுள்ள சிலீமுகங்களைச் சோனைமாரியாய்ப் பொழிந்தனன். அச்சிலீமுகங்களைத் தேவி ஒரு கணத்துக்குள் துகளாக்கி மகிஷனை கதாயுதத்தால் மார்பிலடித்தனள். அவ்வோரடியால் மூர்ச்சையடைந்து சிறிது நேரஞ்சென்று தெளிந்தெழுந்து கோபங்கொண்டு ஒரு கதையை யெடுத்துக்கொண்டு ஓடிச் சிங்கத்தின் தலைமேலடித்தான். அஃது ஆவேசங்கொண்டு பாய்ந்து அவனை நகங்களாற் கீர் கீர் எனக் கீறவும், மகிஷன் மானிடவடிவைவிட்டுச் சிங்கவடிவங்கொண்டு அச்சிங்கத்தைக் கீறத்தொடங்கவும் தேவி கோபங்கொண்டு ஸர்ப்பங்கள்போன்ற பல பாணங்களைவிட, அவன் அவ்வுருவைவிட்டு, யானைவடிவங்கொண்டு மலைகளைப் பிடுங்கி தேவியின் மேல் வீசினன். அவைகளைத் தேவி கண்டு சில பாணங்களை விடுத்துப் பொடியாக்கிச் சிரித்தனள். சிங்கமுந் தேவியோடு யானைவடிவங்கொண்ட அசுரன் தலைமேற்பாய்ந்து இரு பிளவாகப் பிளந்தது. அசுரன் அக்கணமே அந்தச் சிங்கத்தைக் கொல்ல சரபவடிவங்கொள்ள, அதுகண்ட தேவி அவனை வாளினல் வெட்டினள். அவனும் தேவியை வெட்ட, வெட்டுப்படாமையை அவன்கண்டு வெட்கமுற்றுத் தனதியற்கை யுருவாகிய கடாவுருக் கொண்டு கொம்புகளா லிடிப்பான், வாலைச் சுழற்றி முகத்திலடிப்பான், அவ்வாலினலேயே மலைகளைப்புரட்டி எறிவான், எறிந்து சிரிப்பான். ஓ பெண்ணே! உன்னலென்னவாகு மென்பான், இந் நேரம் யுத்தஞ்செய்தனையே, இப்பொழுது ஏன் சும்மா யிருக்கின்ருயென்பான், உன்னைப்போலும் மூடமதியைப் படைத்தா ரொருவருண்டோ வென்பான்; நீ மஹா பலையென்றனையே, அது எங்கே போய்விட்டது? நீ துர்ப்பலையென்று இப்பொழுது நன்ருய் வெளியாக்கி விட்டேன்; நீ மஹா துஷ்டை; நீ நிற்கும் நிலையைப் பார்த்தால் என்னிடத்தில் மோகங் கொண்டவள் போலத் தோன்றுகின்றது; ஆகையால் இனி நான் உன்னிடத்தில் மோகங்கொள்ளேன்; உன்னைக் கொன்று பின்னர் என்னைத் கொல்லும்படி உன்னையேவிய தேவர்களையும் கொன்று விடுகிறேனென்று பெரிய ஆரவாரஞ் செய்தனன். (26-51)

தேவி இவனது ஆரவாரத்தைக்கண்டு புன்னகையரும்பிக் கூறுகின்ருள்: ஓ மகிஷமே! ஏன் கத்துகின்ருய்? உனது கத்தல்

காதுக்கின்பஞ்செய்யுமா? உனது கத்தலை நிறுத்துவாய். உன்னைக் கொன்றுன்னாலுண்டாகிய பயத்தைத் தேவர்களுக்கு இப்பொழுது ஒழிக்கப்போகின்றேன். இது வரையில் மதுபானஞ்செய்து வெறி கொண்டு, சுர ஶ்ரேஷ்டர்களுக்கும் முனி ஶ்ரேஷ்டர்களுக்கும் துக்கத்தையும் பயத்தையும் விளைவித்து வந்தனை யல்லவா? அவை யெல்லாம் இனி உன்பாலதே யென்றனள். இவ்வாறு தேவி சொல்லி சண்டிகை யுருவங்கொண்டு மதுபாத்திரமேந்திய திருக் கரமுடையவளாய் மகிஷனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ண முடையவளாய் திராக்ஷாபலரசமாகிய மதுவையுண்டு சூலாயுதத்தை யேந்தி அசுரனைத் துரத்தத் தலைப்பட்டாள். அதுகண்ட தேவர் கள் முனிவர்கள் யோகிகள் சித்தர் கின்னரர் சாரணர் முதலிய யாவரும் ஆனந்தபரவசராய்ப் புஷ்பமாரி பொழிவாரும் தேவ வாத்தியங்களைக் கோஷிப்பாரும் தோத்திரஞ் செய்வாரும் உனக்கு ஜயமுண்டாகுக, உண்டாகுக என்பாருமாய் ஆகாயத்தில் நின்றனர்.

கபடத்தில் வல்லவனான மகிஷன் தான் கற்றிருக்கும் மஹா மாயையினால் பலவித உருவங்களை எடுத்தெடுத்துத் தேவியைத் துன்பஞ்செய்யத் தலைப்பட்டான். தேவி கண்கள் சிவந்து சூலத் தைச் சுழற்றி மார்பிற் குத்தினாள். அசுரன் பூமியில் விழுந்து ஒரு முகூர்த்தகாலம் மூர்ச்சித்துக்கிடந்து பின் தெளிந்தெழுந்து தனது முரட்டுக்கால்களால் சண்டைசெய்யத் தொடங்கி அடிக் கடி சிரித்து தேவர்களஞ்சும்படியாகச் சங்கத்துவனி செய்தனன். தேவி மனம்புழுங்கி ஆயிரங் கிரணம்விடும்படியான ஓர் அரிய சக் கராயுதத்தை யெடுத்து மகிஷனைப் பார்த்து, மதகர்வங்கொண்டு லாவும் மதிகெட்டவனே! இந்தச் சக்கராயுதத்தைப் பார்த்த னையா? இது சிறிதுநேரம் அசைவற்றிருப்பையானாலுன்னை யம லோகத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுமென்று சொல்லிக் கொண்டே சக்கரத்தை விட்டனள். அந்த க்ஷணமே அச்சக்கரம் அவனது சிரத்தை யறுத்துத் தள்ளி முன்போல் தேவி திருக்கரத்தி லமர்ந்தது. (52–64)

அவன் கண்டத்திலிருந்து உதிரவெள்ளம் பெருக்கெடுத் தோடிற்று. அவனுடைய முண்டமானது ஆகாயத்திற் சுழன்று பூமியில் விழுந்தது. தேவர்கள் கோஷிக்கும் ஜய சப்தமானது எங்கும் பரவியது. தேவியினுடைய சிங்கமானது மிகுந்த பசி கொண்டதுபோல் ஓடிப்போகத் தொடங்கிய அசுரர்களையெல்லாம் சுழன்று சுழன்றுலாவி அறைந்து பக்ஷணம் செய்துவிட்டது. அந்தச் சிங்கத்துக்கு அகப்படாது ஓடிப்போன அசுரரெல்லாம் பாதாளம் போய்ச் சேர்ந்தனர். அமரரெல்லாம் பரமானந்த மடைந் தனர். பூவுலகிலுள்ள முனிவர்களும் சாதுக்களும் ஏனையமானிடரும் கவலையற்று வாழ்ந்தனர். சண்டிகாதேவியும் திருவுருக்கரந்தனள். பின்னர் தேவர்கள் "மகிஷாசுர தீரவீர்ய நிக்ரஹாயை நமோ நம:" என்று நமஸ்கரித்து வாழ்த்தினர். (65–70)

ஓம் ஏகாந்த பூஜிதாயை நம:

## 19. மகிஷாசுர மர்தனீ ஸ்துதி

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! பின்னர் இந்திராதி தேவர்களெல்லாம் நம்மனோரானும் மற்றொருவரானும் கொல்ல மாட்டாத மகிஷனைத் தேவி அதி சுலபமாகக்கொன்று நம்மைக் காத்தனளேயென்று அவளது பெருங்கருணையை நாடித் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர் :

ஓ ஜகதீச்வரீ! உனது சக்தியினாலேயே பிரமன் சிருஷ்டியும் விஷ்ணுமூர்த்தி ரக்ஷகமும் ருத்திரமூர்த்தி யுகாந்தகாலத்திற் சங்காரமுஞ் செய்துவருகின்றனர். உனது சக்தியில்லாதொழியின் அம்மூவரும் அம்முத்தொழிலையுஞ் செய்வதற்குச் சமர்த்தராகார். ஆகவே நீயே அம்முத்தொழிலையுஞ் செய்கின்றவளாகின்றனை. ஹே அம்பா! கீர்த்தி, மதி, ஸ்மிருதி (ஞாபகம்), கதி, கருணை, தயை, சிரத்தை, திருதி என்பனவும் நீயே. ஹே புவனேச்வரி! பூமி, கமலை (லக்ஷ்மி), ஜயை, புஷ்டி, கலை, விஜயை, கிரிஜை என்பவரும் நீயே. துஷ்டி, பிரபுத்வம், புத்தி, உமை, ரமை, வித்யை, க்ஷமை, காந்தி, மேதை என்பனவும் நீயே. இவையொழிந்த சகலமும் நீயே என்றல்லவோ மூவுலகங்களாலும் போற்றப்படுகின்றனை. இவ்வகையான உன் சக்திகளன்றி எவரால் யாதுசெய்வதற்கியலும்? தாரணையாகிய நீ யில்லாவிடில் கூர்மன் நாகன் என்னும் வாயுக்கள் இளையென்கிற நாடியைத் தரிப்பதும், பூமியந்தரிக்ஷங்கள் நிலை பெறுவதும் எங்ஙனம்? ஓ தேவி! யாவுமாயும், நீ இன்றி ஒன்றுமமையாததுமாகிய அபாரமகிமை விளங்கிக்கொண்டிருக்க, உன்னை மதிக்காமல் சில மூடமனிதர் பிரம்ம விஷ்ணு ருத்ர சந்திராக்கினிகளையும் வாயு கணேசர் முதலானோரையுந் தோத்திரம் செய்கின்றனர். அந்தோ! நீயின்றி அவர்களால் எந்தக் காரியஞ் செய்யக்கூடும்? அவர்களால் செய்யப்படும் அனுக்கிரகங்கள் நீயேயன்றோ? ஹே அம்பிகே! சில அறிவிலிகள் அளவிறந்த அவிசுகளையும் நெய்யையும் அக்னியிற் சொரிந்து தேவர்களைக் குறித்து விசேஷமாய் யாகஞ் செய்கின்றனரே, அந்த யாகங்கள் சுவாஹா என்கிற உச்சரிப்பில்லாமல் சித்திப்பதெங்ஙனம்? அந்தோ! சுவாஹா என்பது நீயன்றோ? சுவாஹா என்று யாவர்க்குஞ் செய்கின்ற மூடர்கள் உன்னைக்குறித்து யாகஞ் செய்கின்றார்களில்லையே! இது பாவமன்றோ? அதற்கேது அவர்களது அறியாமையேயாம். ஓ தேவி! சகல சராசரங்கட்கும் சுகமளிப்பவள் நீயே! உனதம்சங்களாலேயே எப்போதும் யாவர்க்கும் ஜீவனத்தை யளித்துக் கொண்டிருக்கின்றனை. உனக்காட்பட்டவர்களை எவ்வண்ணம் பரிபாலிக்கின்றனையோ, அவ்வண்ணமே ஆட்படாதவர்களையும் பரிபாலித்து வருகின்றனை. ஹே மாதா! ஆட்பட்டவர்களையேயன்றி, ஆட்படாதவர்களையும் நீ காத்தலை யாராயுங்கால் அறிவாளிகள் தாமே வைத்து வளர்த்த விருக்ஷங்கள் இலை, பூ, காய், கனிகளற்று நிஷ்பலமாக விருப்பினும் அவைகளை வெட்டி யழிக்கமாட்

டார்களன்றோ? நீயுமதுபோல் அசுரர்களை அழிக்காது பரிபாலித்து வருகின்றனை. இவ்வாறுள்ள நீ இப்போது அசுரர்களை யுத்தகளத்தில் கொல்லுகின்றனையே. அது யாது கருதியோவெனின், அசுரர்கள் தேவஸ்திரீகளுடன் கூடிச் சுகிக்கவெண்ணவும், அதனைத் தேவர்கள் பொறுது வருந்தி வேண்டவும், அவை காரணமாய் அவர்களிடத்தில் வைத்த கருணையேயாம். இதனால் அவரவர் கோரும் வண்ணம் பரிபூரணஞ் செய்வதே உனது சரிதமென்றறிய வந்தது. இச்செய்தி யிங்ஙனமிருக்க, இவ்வசுரர்கள் மிக்க வீரப்பிரதாப முடையவராயிருந்தும் இறக்கக்கடவரென் றெண்ணிய உனது சங்கற்ப மாத்திரத்தில் இவர்கள் உயிரிழந்துபோக இவர்களைக் குறித்து இத்தகைய திருக்கோலங்கொண்ட தெற்றுக்கோ? இதுவும் இவ்வாறாக வேண்டுமென நீ லீலாமாத்திரத்தாலெண்ணிய ஒரு கிரீடாமாத்திரமன்றி வேறென்னை யிருக்கின்றது? கொடுமை மிகுந்த கலியுகத்தில் புராணங்களில் சாமர்த்தியரான தூர்த்தர்களால் வஞ்சிக்கப்பட்ட சிலர் பிரம்மன் முதலாயினோரைச் சேவிக்கின்றனரே யன்றி, அவர்களை யுண்டாக்கிய உன்னைச் சேவிக்கின்றாரில்லையே! அவரெல்லாம் உன் வசப்பட்டவர்களென்றும் அசுரர்களால் துன்பமடைந்தவர்களென்றும் அறிய வந்தும் அத்தேவர்களையே பூஜிக்கின்றனர். இது நல்ல பிரகாசமுள்ள ஒரு விளக்கை வைத்துக்கொண்டே பயங்கரமாகிய ஒரு பாழுங்கிணற்றில் வீழ்வதற்கொப்பாகின்றது. (1–13)

அந்தோ! சுகத்தைக் கொடுக்கும் வித்தையும் நீயே; அசுகத்தைக் கொடுக்கும் அவித்தையும் நீயே; பிறவிப்பிணியை யொழிப்பவளும் நீயே; முமுக்ஷுக்களா லாதரிக்கப்படுகின்றவளும் நீயே. இவ்வுண்மை யுணராத போகிகளான சில அறிவிலிகள் உன்னால் வருவது போகமென்றுணராது உன்னடியை யாராதிப்பதில்லை. சிறிதுணர்ந்தன்றோ பிரமாதி தேவர்களெல்லாம் சரண்யமாகிய உனது பாதாரவிந்தத்தையே சரணம் சரணமென்று சரணமடைகின்றனர். அத்தகைய பாதாரவிந்தத்தை எந்த அற்ப மதிகள் பஜிக்கின்றார்களில்லையோ, அவர்களே ஸம்ஸாரச்சேற்றி லழுந்துகின்றவர். ஹே சண்டி! உன் திருவடியிலொட்டிய தூளியினது பிரகாசத்தால் மும்மூர்த்திகளும் முத்தொழிலைச் செய்கின்றவர்களாக விருக்க, தௌர்பாக்யவான்களாகிய சிலர் உன்னை யெண்ணுவதில்லை. சுரர்களுக்கெல்லாம் நீயே வாக்தேவியாகின்றனை. அங்ஙனமிருந்தும் உன்னைக்கூற அவரும் அசக்தராகின்றனர். நீ அவர்களது முகத்தில் வசிக்காவிடில் மனிதர்களால் எங்ஙனம் பிரஸ்தாபிக்கப்படுவர்? உன்னாலல்லாமல் அவர்கட்கே உண்மையாயின் பிருகு முனிவரது கோபத்தால் விஷ்ணுமூர்த்தி சபிக்கப்பட்டு மீனும் ஆமையாயும் வராகமாயும் பின் நரசிங்கமாயும் ஏன் பிறந்தனர்? பிறக்குந் தன்மையுடைய அவரைச் சேவிக்கின்றவர்களுக்கு மிருத்யுபயம் நீங்குமென்பதென்னை? சம்புவினது சொரூபமாகிய லிங்கமானது உனதங்கத்துடன் கூடியிருத்தலாலன்றோ யாவரானும் பூஜிப்பதற்கு யோக்யமாயிற்று?

இவ்வுண்மையை யுணராது உன்னை விட்டுக் கபாலியைப் பூஜிப்பவர்கட்கு இம்மை மறுமைகளிற் சுகமுண்டாவ தெங்ஙனம்? ஆனை முகத்தோனும் கணாதிபதியாயு மிருக்கின்ற கடவுளைச் சுலபமாய்ப் பூஜிக்கின்றவரும் உன்னை மறந்து பூஜிப்பாராயின் அவர்கள் எல்லாப்பொருள்களையும் அவரால் தந்தருளப் பெறுதல் யாங்ஙனம்? யாவரிடத்தும் ஸ்தூலமாயறியத்தக்க உன்னை அறிவதற்கில்லாதவர் சூக்குமமாகிய உன்னுண்மைச் சொரூபத்தை யறியவல்லவராவரா? ஓ தேவி! மும்மூர்த்திகளும் மோகத்தினாலுனது பிரபாவத்தை யறியவல்லரல்லரெனின் அபார வைபவமுடைய உனது மாயா குணங்களால் மயக்குற்ற மனிதர் எவ்வாறறியப் போகின்றனர்? முனிவர்களும் உனது பதாம்புயத்தைச் சேவிக்காமல் மூடசித்தர்களாய் சூரியசந்திராதிகளைச் சேவித்துக் கொண்டு கிலேசமடைகின்றனர். அந்தோ! பலகோடி சுருதிகளறிந்தும் அதன் சாரமாகிய பரமார்த்தத்தை யறிந்தாரில்லையே. ஹே தேவீ! உனது மஹா மகிமையுடைய குணங்கள் மாயா விலாசத்துட்பட்ட உலகினரை நீ கூறியுள்ள நூலின்வழி பக்திநெறியிற் செல்லவிடாது தத்தம் போதத்தாற் கற்பிக்கப்பட்ட ஆகமங்களைக்கொண்டு பிரமாதி தேவர்களிடம் பக்தி செய்யச் செய்கின்றன. ஓ அம்பிகே! அங்ஙனஞ் செய்பவரையும் பிரசித்திபெறச் செய்கின்றனையே யன்றித் தாழ்வு படுத்துவதில்லையே. நான்காவதாகிய கலியுகத்தில் நான்காவதாகிய ஜீவபோதத்திற்கு வன்மை யதிகமாதலின் அப்போதத்தால் அசத்தாகிய ஆகமங்க ளியற்றப்பட்டன. அறிவுடையோர்களும் அவ்வுண்மையுணர்ந்து அருளாலியற்றிய ஆகமங்களையும் உன் சொரூபத்தையும் தற்போதமுடையார்க்கு வெளியாக்காது மறைந்து உன்னாலுண்டாக்கப்பட்ட தேவர்களையே உபாசிக்கச் செய்கின்றனர். முக்தியும் யோகசித்தியுமாகிய பிரம்மவித்தையை யுணர்ந்து சுத்த சத்வராய் விளங்கும் யாதொரு முனிவர்களோ, அவர்கள் உனது பாதாரவிந்தத்தில் லயித்தமனமுடையவர்களாயிருக்கின்றனர். அத் தன்யர்களோ கர்ப்பவாச துக்கத்தைத் தாண்டினவராவர். (14–27)

சிற்சக்தியாகிய நீ பரமான்வாவினிட மிருத்தலான் அப்பரமான்மாவாகிய பரசிவமும் உலக கிருத்தியத்தை நிகழ்த்துகின்றது. உன்னையன்றி அப்பரமான்மா தனதியல்பால் யாதொன்றும் செய்வதற்கும் கிரீடிப்பதற்கும் சஞ்சரிப்பதற்கும் வல்லதாகுமோ? அதுபோலவே ஜடமாகிய தத்துவங்களும் சித்தாகிய உன்னையன்றிக் காரியப்படுமோ? குணகர்மங்களோடுங்கூடிய இந்திரியாதிகளும் உன்னையன்றி யாதொரு செயலையும் செய்ய அறியவல்லனவாகுமோ? முனிவர்களாற் செய்யப்பட்ட யக்ஞங்களில் அவிர்ப்பாகங்களைத் தேவர்கள் எங்ஙனம் உன்னையன்றிப் பெறுவர்? யாகங்களும் சுவாஹா என்கிற பெயருடன் விளங்குகின்றமையாலன்றோ அவை பயன்படுகின்றன? நீ விச்வத்தையும் ஹரிஹரர் முதலிய சகல தேவர்களையும் பாலனஞ் செய்கின்றனை. ஈதெல்லாம் ஆதியி லுன்னாலன்றோ வுண்டாயிற்று? பிரளயகாலத்தில் உண்

டாக்கிய அந்த விஸ்வத்தைப் புசிக்கின்றனே. உனது மகிமையைத் தேவர் முதலாயினுரு மறிந்திலாராயின் மந்த மதிகளாகிய மனிதரெங்ஙன மறியப்பெறுவர்? மகாகோரரூபனுகிய மகிஷனைக் கொன்று தேவர்களாகிய எங்களைக் காத்தல் உன்னையன்றி யாவராற் கூடும்? ஓ ஜநநீ! மந்த மதிகளாகிய நாங்கள் உனது துதியுள் எந்தத்துதியை யறியவல்லவராவோம்? துதிக்கத்தொடங்கிய வேதங்களே உனது யதார்த்த நிலையை யறிந்தில. ஹே மாதா! மஹாகண்டகனுகிய எங்கள் சத்துரு தொலைந்து விட்டான். உலகத்திற் செய்யவேண்டிய காரியங்களெல்லாஞ் செய்தாயிற்று. கீர்த்தி எங்கும் பரவியது. மகா மகிமையுள்ள ஹே அம்பிகே! எங்களைக் கருணைகூர்ந்து காப்பாற்றுவாயாக என்று தோத்திரஞ் செய்தனர். (28–33)

ஜகதீஸ்வரி தேவர்களைப்பார்த்து மிருதுவாகிய மொழியுடன், ஓ தேவர்களே! உங்களுக்கு எந்தக்காரியங்கள் சாத்தியமாகாமல் அதனுல் ஆபத்து நேரிடுகின்றதோ அந்தப்பொழுதெல்லாம் என்னை ஸ்மரியுங்கள்; நானுங்களை ஆபத்தினின்று காப்பேனென்றருளியபோது, தேவர்கள் கூறுகின்றனர்: ஓ தேவீ! மகிஷ ஸம்ஹாரத்தால் எங்களுக்குச் சகல வேண்டுகோளும் நிறைவேறிற்றுயினும் உனது பாத பத்மங்களில் நீங்காதிருக்கும் மெய்யன்பை யெங்களுக்கருளவேண்டும். நாங்கள் அப்போதப்போது செய்துவரும் அபராதங்களை அன்னைபோற் பொறுத்துவரல்வேண்டும். ஏனெனின், தேகத்தில் இரண்டு பட்சிகள் எப்போதும் ஒன்றுக்கொன்று நட்புபாராட்டிக்கொண்டிருக்கின்றனவென்றும், அவ்விரண்டேயன்றி உபாசிக்கவேண்டியதாகிய மூன்ருவதுமித்திர மென்ருென்றுளதென்றும் அம்மித்திரமே சகல அபராதத்தையும் சகித்துக்கொண்டிருக்கிறதென்றும் கூறப்பட்டுள்ள தாதலால், ஓ தேவி! அந்த மித்திரம் நீ யன்ருே? ஆகவே ஜீவான்மா வானவன் மித்திரமாகிய உன்னை விடுத்து எது செய்வதற்குக் கூடும்? இவ்வுண்மையை யறிந்தவர் உன்னைப் பூசிக்காமற் போவரோ? தேவ மானிட முதலிய பெறுதற்கரிய பிறவிகளைப் பெற்றும் உன்னை யுபாசிக்காத மந்தபாக்கியவானினும் அதமன் வேருெருவனுளனே? சுகதுக்க மென்னு மிரண்டினும் மனோவாக்குக் காயங்களால் நாங்கள் சரணமடைய வேண்டியபொருள் நீயேயென்பது சத்தியம். ஓ தேவீ! சகல ஆயுதங்களாலும் எங்களைக் காத்தருள்வாயாக. உன்னை விட்டு எங்களைக் காப்பவர் யாருமில்லையென்று பிரார்த்தித்தனர். தேவி அவ்வாறே ஆகுகவென அருள்புரிந்து திருவுருக்கரந்தனள். தேவர்கள் பரமாச்சரியமுற்று ஆனந்தமெய்தினரென்றனர். (34–43½)

ஓம் ஏதமானப்ரபாயை நமஃ

## 20. மகாதேவி மறைந்தபின்

ஜனமேஜயன் உலகத்துக்கு வேண்டிய திருப்தியைச் செய்து வருபவளான பரதேவதையினுடைய பரத்துவ வைபவத்தையும் அதனைச் செவிக்கின்பமாக வெடுத்துப்புகட்டும் வியாசமுனிவருடைய பிரபாவத்தையுமெண்ணி மகிழ்ந்து கூறுகின்றான் :—

ஓ பிராமண சிரேஷ்டரே! உம்முடைய முகாரவிந்தத்தினின்றும் பெருகாநின்ற கதாரசமாகிய அமிர்தப்பிரவாகத்தைச் செவிமடுத்துண்ணுந்தோறும் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை ; இன்னமுங் கேட்க வேண்டுமென்கிற ஆவலையே விளைவிக்கின்றது. ஓ வியாசமுனிவரே ! பரம பவித்திரமாகிய தேவியினுடைய புண்ணியசரித்திரம் அற்பபுண்ணியவான்களால் கேட்கப்படுவதன்றே ! மஹா பாக்கியசாலிகளும் பிறவிப்பிணிக்கு மருந்தாகிய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதில் இளைக்காத செவிகளைப் படைத்தவர்களுமே இதனைத் தேவாமிருதமென்று கொள்ளத்தக்கவராவர். எந்தச் சரிதத்தைக் கேட்டால் தெய்வரூபத்தை யடைகின்றார்களோ அந்தச் சரித்திரத்தை ஆதரவோடு கேளாதவர்களையும் நிந்திக்கவேண்டும். தேவர் முனிவர்களைக் காக்கின்றதாயும் ஸம்ஸாரசாகரத்தைக் தாண்டச் செய்வதாயுமிருக்கிற ஜகதம்பிகையினுடைய லீலாப் பிரபாவங்களை நன்றி மறவாத பெரியோர் எவ்வண்ணம் கேட்காமலிருப்பர் ? எவர்கள் முக்தர்களோ, எவர்கள் மோக்ஷமடைய விரும்புகின்றனரோ, எவர்கள் ஸம்ஸாரத்தில் சுகம் விரும்புகின்றனரோ, எவர்கள் ரோக நிவிர்த்தியை விரும்புகின்றனரோ, அவரெல்லாம் வேண்டியாங்கருளவல்ல தேவியினுடைய சரிதங்களைக் கேட்க விருப்பமுள்ளவரே யாவரென்றும், தருமார்த்த காம மோக்ஷங்களில் விருப்பமுள்ள அனேக அரசர்கள் தேவியினது சரிதங்களையே எக்காலத்துங் கேட்கத்தக்கவராவரென்றும் வேத வித்துக்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன். அன்றியும் கர்மபலத்தை வேண்டாத மோக்ஷகாமிகளுங் கேட்க விருப்ப முடையவர்களெனின், ஸம்ஸாரிகள் கேட்கவேண்டியதவசியமல்லவா ? (1–6)

பூர்வஜன்மத்தில் எவர்கள் மல்லிகை சண்பகம் முதலிய அரிய மலர்களாலும் நல்ல வில்வதளங்களாலும் தேவியை ஆராதனை செய்தார்களோ, அவர்களே பூலோகத்தில் மஹாராஜாக்களாய்ப் போக ஐஸ்வர்யங்களை அனுபவிக்கின்றன ரென்று யூகித்தல் வேண்டும். எவர்கள் தேவியினிடத்தில் பக்தியற்றுப் பூலோகத்தில் பிறந்தார்களோ, எவர்கள் தேவியை அர்ச்சிக்காம லிருக்கின்றனரோ, அவர்கள் தனதானிய சூனியர்களாயும் ரோகபீடிதர்களாயும் சந்ததியற்றவர்களாயும் பிறரிடத்தில் ஏவலாளிகளாய் அவர்களால் ஏவப்பட்ட ஏவலைச் செய்கின்றவர்களாயும் சுமைகளைச் சுமக்கும் சுமையாட்களாயும் பொருள் கிட்டாமல் பொருளாசை மேலிட்டு அலைகின்றவர்களாயும் எவ்வளவு அலைந்தபோதிலும் வயிறு நிரம்புவதற்கேற்ற

ஆகாரம் கிட்டாதவர்களாயு மிருப்பர். அன்றியும் எவர் அந்தகர்களோ, ஊமைகளோ, செவிடர்களோ, நொண்டிகளோ, குஷ்ட ரோகிகளோ, துக்கத்துக்குப் பாத்திரர்களோ அவர்களெல்லாம் பூர்வ ஜன்மத்தில் தேவியைப் பூஜிக்காத பாவிகளென்றும், எவர்கள் ராஜபோகத்தோடும் நிறைந்த சம்பத்துக்களோடும் அநேகம் பரி ஜனங்களோடு மிருக்கிறார்களோ அவர்களெல்லாம் தேவியை அன்போடு பூஜித்த புண்ணிய சீலர்களென்றும் வித்துவான்களால் நிச்சயிக்கத்தக்கவர். (7–11)

ஆகையால், ஓ வியாசமுனிவரே! என்மேல் கிருபை யுடையவ ராய்த் தேவியினுடைய மகிமாதிசயங்களை விளைவிக்கவல்ல ஏனைய சரித்திரங்களையும் அனுக்கிரகிக்கவேண்டும். மகிஷனைக் கொன்று தேவர்களால் துதிக்கப்பட்டுத் தேஜோரூபிணியாய் விளங்கிய மகா லக்ஷ்மி சொரூபிணியான அந்தப் பரதேவதை மறைந்து போனா ளென்று சொன்னீரே, அவள் போனது சுவர்க்கத்திற்கோ, அல்லது வைகுண்டத்திற்கோ, இமோத் பர்வதத்திற்கோ, அல்லது இமயத்திற்கோ? அல்லது யமலோகத்தில் லயத்தை யடைந்த னளோ? அந்த வுண்மையைச் சொல்லுமென்றனன். (12–15)

வியாசமுனிவர் கூறுகின்றார்: ஓ ஜனமேஜயனே! சுவர்க்கம் வைகுண்டம் யமபுரம் என்னுமிடங்களை யடைபவர் ஆன்மகோடி களேயன்றிப் பரமான்ம சொரூபிணியாகிய மஹாதேவியா அடை வாள்? அன்று. பூர்வத்தில் உனக்குத் திருப்பாற்கடலின் மத்தியில் மணித்வீப மொன்றிருக்கின்ற தென்றும், அது அம்பிகைக்கு மனோகரமாகிய கிரீடாஸ்தானமென்றும், அவ்விடத்திலேயே எப் பொழுதும் நீங்காது நானாவிதவுருவத்துடன் இஷ்டத்தோடு வசிப் பாளென்றும், பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள் அவ்விடத்தில் ஸ்திரீ ரூபத்தோடிருந்து தேவி யனுக்கிரகத்தால் பின்னர் புருஷரூப மெடுத்து சிருஷ்டியாதி கிருத்தியங்களைச் செய்கின்றார்களென்றும் சொல்லி யிருக்கின்றேனல்லவா? அவ்விடத்திற்கே மாயா சொரூ பிணியாயும் அநாதியாயுமுள்ள அத்தேவி, தேவர் துதிசெய்தபின் சென்றனளென்றறிவாய். (16–19)

அம்பிகை மறைந்துபோனபின்னர், தேவர்கள் சூரியவம்சத்திற் பிறந்தவனும் மஹா பலசாலியாயும் மஹா வீரனும் ராஜ லக்ஷணங்களொடு கூடினவனும் அயோத்திக்கு மன்னவனுமாயி ருந்த சத்துருக்னனென்னும் அரசனை மகிஷாசுரனுடைய சிங்கா சனத்திலேற்றிப் பட்டாபிஷேகஞ் செய்து உலகினையாளும்படி விதித்து யாவரும் அவரவருலகங்களிற் சென்று வாழ்ந்திருந்தனர்.

சத்துருக்னனுடைய அரசாக்ஷியில் தருமங்கள் தவறாது நடந் தன. சகல ஜனங்களும் சுகமாய் வாழ்ந்தனர். மேகங்கள் காலந்தவ றாமல் வருஷித்து வந்தன. தானியாதிகளெல்லாம் செழித்தோங்கின. விருக்ஷஜாதிகளெல்லாம் பத்திரபுஷ்ப பலாதிகளைக் குறைவின்றிக் கொடுத்துவந்தன. பசுக்களெல்லாம் மடிசுரந்து பாற்பெருக் கோடுங்கூடித் தம்மைக் கறப்பவர்களுக்குத் திருப்தி செய்து

வந்தன. நதிகளெல்லாம் ஜலப்பெருக்கோடு கூடியும் கிராமங்களை யழிக்காது தனக்குரிய மார்க்கத்திற் சென்றும் உண்போர்க்குக் குளிர்ச்சியாயும் பக்ஷிஜாதிகள் நிறைந்து வசிப்பதற்கிடமாயு மிருந்தன. பிராம்மணர்கள் வேதார்த்தமறிந்தவர்களாயும் யக்ஞாதி கருமங்களில் பிரீதியுள்ளவர்களாயுமிருந்தனர். க்ஷத்திரியர்கள் தங்களுக்கு விதித்த தருமங்களிலும் அத்யயன தானுதிகளிலும் தனுர்வித்தையிலும் குடிகளைக் காப்பாற்றுவதிலும் நியாய யுக்த மான தண்டனைகளிலும் பகைவர் அயலோர் நட்பினரென்னும் இவர்களிடத்தில் இருக்கவேண்டிய சமபுத்தியிலும் தவருதிருந்தனர். வைசியர் ஏற்பதிகழ்ச்சி என்பதைக் கடைப்பிடித் தொழுகுவோர்க்கு வைத்திழக்கும் வன்கண்மையொழித்து ஈத் துவக்கும் இன்ப முடையவராயும் பசுக்களைக் காப்பதில் சிரத்தையுடையவர்களாயும் இருந்தனர். புலியும் பசுவும் உறவாடுந்தன்மை யுடையனவா யிருந்தன. இவ்வண்ணம் அந்தணர் முதலாயினுர் தத்தம் வருணுச்சிரம தருமங்களிற் றவறுதலற்றும் ஏனைய விலங்கினங்கள் பகைமையற்றும் ஸ்திரீஜாதிகள் பதிவிரதா தருமத்தில் இழுக்கற்றும் ஆசார தருமங்களில் வழுக்குதலற்றும் அசத்தியமான வசனங்க ளற்று மிருந்தனர். புத்திரர்கள் தாய் தந்தையர்களிடத்தில் பக்தி யுள்ளவர்களா யிருந்தனர். பாஷண்ட மதங்களும் அதர்மங்களு மழிந்தன. எவ்விடத்தும் வேதவாதங்களும், சாஸ்திர வாதங்களும், யாகாதி தருமங்களும் அவைகட்கேற்ற மண்டபாதிகளும் அவை களில் யூபஸ்தம்பங்களும் தேவி சம்பந்தமான பக்தி விசேஷங் களுமே மிகுந்திருந்தன. பிரயோஜனமில்லாத கலகங்களற்று யாவரும் சுகமுற்றிருந்தனர். எவருக்கும் ஆபத்தான அகால மரணங் கிடையாது. சினேகவாஞ்சையுடையோர் கூடிப்பிரிந்தா ரல்லர். மழையில்லாமையினு லுண்டாகுங் கருப்பும் செல்வ மிகுதி யினுலுண்டாகும் மாற்சர்யாதி தீயகுணங்களும் பூர்வ வினை வழியா லுண்டாகும் ரோகாதி பீடைகளும் ஒருவருக்கு முண்டாயினவன்று. சோரபயமும் வஞ்சனையாளர்களுடைய வஞ்சனைகளும் கோட் சொல்வோருடைய கோள்களும் மோகத்தை விளைவிக்கின்றவர் களுடைய மோக ஜாலங்களும் ஆசையை விளைவிக்கின்றவர் களுடைய பாசஜாலங்களும் மூடமதிகளால் விளையத்தக்க மூட விவகாரங்களும் வேதத் துவேஷங்களும் பாபிகளது தருமங்களு மில்லாதொழிந்தன. யாவரும் சகல தருமங்களிலும் பிரீதியுள்ள வர்களாக விருந்தனர். ஓ ஜனமேஜயனே ! அந்த நகரத்தில் ஸாத் விகம் ராஜஸம் தாமஸமென்னும் மூன்றுவிதமான தருமங்களை கைக்கொண்ட அந்தணர்களுமிருந்தனர். (20-37)

ஸாத்விக தருமமாவன :—வேதார்த்தங்களை யறிதல், சாத்விக குணத்தையே மேற்கொண்டிருத்தல், சத்தியமார்க்கத்தில் நிற்றல், தானம் வாங்குவதில் பிரீதியில்லாதிருத்தல்; கருணை, பொறை, முதலிய நற்குணங்களோடு கூடியிருத்தல், அதர்ம மார்க்கத்தில் மனம் சிறிதுஞ் செல்லாதிருத்தல்; சாதுக்களுடைய சங்கத்திலேயே கூடியிருத்தல்; பசுக்கொலையில்லாத யஜ்ஞங்களையே செய்தல்,

தானங்களைச் செய்தல், திரிகாலசந்திகளுந் தவருது செய்தல், எப்பொழுதும் அத்தியயனஞ் செய்தல் முதலியனவாம்.

**ராஜஸ தருமமாவன** :—வேத சாஸ்திரங்களில் பாண்டித்தியத்தை யடைந்து பண்டிதரென்று பேர்பெற்றிருத்தல், க்ஷத்திரியர்களுக்குப் புரோகிதராயிருத்தல், ஈதல் ஏற்றல் ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தலென்று சொல்லப்பட்ட ஆறுகர்மங்களிலும் பெருமைபெற்றிருத்தல், மாமிசாபேக்ஷையோடு யாகாதிகளைச் செய்து அவற்றைப் புசித்தல் முதலியனவாம்.

**தாமஸ தருமமாவன** :—பிராம்மண னென்பதற்குச் சிறிது அத்தியனஞ் செய்தல், எப்பொழுதும் கோபமும் ராகத்துவேஷமுங் கொண்டிருத்தல், பிரபுக்களிடத்தில் சேவை செய்கின்றவர்களாயிருத்தல் முதலியனவாம்.

இம்மூன்றுவித தருமங்களில் ராஜஸ தாமஸ தருமங்களைக் கைவிட்டு அந்தணரெல்லாம் ஸாத்விக தருமத்தையே மேற்கொண்டிருந்தனர். ஓ அரசனே ! அந்நகரம் மகிஷனுடைய கொடுங்கோலொழிந்தபின்னர், சத்துருக்னனுடைய செங்கோலினுல் எல்லாப் பொருளாலுந் தழைத்தோங்கிச் சுகமுற்றது. அந்த நகரவாசிகளாகிய சகல வருணத்தவரும் தேவியினது பக்தியிற் சிறந்து வாழ்வு பெற்றுய்ந்தனர். (38–50)

ஓம் ஏஜதனேக ஜகதீச்வர்யை நம:

## 21. சும்பநிசும்பர் தோற்றம்

சூதர் கூறுகின்றுர் :—ஓ சௌனகாதி முனிகணங்காள் ! மகிஷாசுரனுல் ஆளப்பட்ட நகரம் சத்ருக்னனுடைய அரசநீதி விசேஷணத்தால் சகல செல்வங்களுமுடைத்தாய்த் தருமங்கள் வளர்ந்தோங்கின வென்று வியாசமுனிவர் கூறிப் பின்னரும் அரசனைப் பார்த்துக் கூறுகின்றுர் : ஓ ஜனமேஜயனே ! தேவியினது சரித்திரங்களைக் கேட்பதில் நீ மிக்க ஆவலுடையவனுயிருத்தலால் இன்னமுஞ் சொல்லுகின்றேன், கேட்பாயாக. மஹாதேவியினுடைய சரித்திரம் சகலப் பிராணிகளுடைய பாவங்களையும் போக்கி உத்தமமான சுகத்தைக் கொடுப்பதென்றுல் பக்தியுடைய உனக்கது என்ன செய்யுமோ, அதை நான் சொல்லவேண்டுமா ? ஓ அன்பனே ! சும்பன் நிசும்பனென்று இரண்டசுரரிருந்தனர். அவ்விருவரும் சகோதரர்கள். சமமான பலமுள்ளவர்கள், புருஷர்களால் கொல்லப்படாதவர்கள்; சேனைகளில் மிக்கவர்கள்; எக்காலத்துந் தேவர்களுக்கிடுக்கண் செய்பவர்கள்; துராசாரத்தைக் கைக்கொண்டவர்கள் ; மதோன்மத்தர்கள், மாயாவிகளான மகா ராக்ஷஸர்களைக் கைவசமாகப் படைத்துள்ளவர்கள் ; இவர்களும் இவர்களைப்போன்ற சண்டன் முண்டன் குரூரன் ரக்தபீஜன் தாம்பரலோசனன் என்பவர்களும், இமயமலையில் வசித்திருந்த அசுரக்கூட்

டங்களும் தேவர்களுடைய நன்மையின் பொருட்டுத் தேவியினுல் கொல்லப்பட்டார்க ளென்றனர்.

ஜனமேஜயன் வினவுகிருன்: ஓ வியாச பகவானே! சண்டன் முண்டனென்பவர் யாவர்? அவர்களுடைய பலாபலங்க ளெத் தன்மையது? தேவியினிடத்தில் யாரால் ஏவப்பட்டார்கள்? தேவி யினுல் அவர்களுக்கு மரணம் வரவேண்டிய காரணமென்ன? சும்பன் நிசும்பனென்பவர் எவனுக்குப் பிறந்தவர்கள்? எவ்விதமாய்க் கொல்லப்பட்டார்கள்? இவையெல்லாம் விரிவாய்ச் சொல்லவேண்டு மென்றனன். (1–8)

வியாசர் கூறுகின்ருர்: ஓ அரசனே! பூர்வத்தில் சும்பன் நிசும் பனென்பவர் பாதாளத்திலிருந்து பூவுலகில் வந்தவர்கள். அவ்விரு வரும் புஷ்கரக்ஷேத்திரத்தையடைந்து ஒரு திவ்யமான விடத்தில் பதினுயிரம் வருஷம் அன்னபானுதிகளின்றிப் பிரமனைநோக்கி அரிய தவஞ்செய்து வந்தனர். பிரம்மதேவன் மகிழ்ந்து ஹம்ஸ வாகனுருடனு யவர்களுக்குக் காக்ஷிகொடுத்து அவர்களைப் பார்த்து, ஓ தபஸ்விகளே! நீங்கள் செய்யுந் தவத்துக்கு மகிழ்ந்தேன், எழுந் திருங்கள்; உங்களுக்கு வேண்டியவை யாவை? அவற்றைப் பூர்த்தி செய்யவே வந்தேனென்னவும், அவர்கள், விழித்தெழுந்து தவத்தி னுல் வாடிய சரீரமுடையவர்களாதலால் தள்ளாடித் தள்ளாடிப் பிர தக்ஷிணஞ் செய்து தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்காரஞ் செய்து எழுந்திருக்க முடியா தெழுந்து இனிய மொழிகளால் தோத்தி ரஞ் செய்யத் தொடங்கிப் பிரமதேவனைப் பார்த்துக் கூறுகின்ருர்கள்: ஓ தேவர்கட்கெல்லாந் தேவனே! பக்தர்களுக்கு அபயப்பிரதமான வனே! சிருஷ்டிகர்த்தனே! கிருபாசமுத்திரமே! எங்களை ரக்ஷியு மென்று சொல்லி, நீர் எங்களிடத்தில் சந்துஷ்டராயிருப்பதுண்மை யாயின், எங்களுக்கழியாதிருக்கத்தக்க தேவவுருவத்தைத் தந்தரு ளும். உலகில் மரணபயத்தைக் காட்டிலும் பெரிதான பயங் கிடை யாது. அஃது எங்களுக்கில்லாதிருக்கச்செய்யும் என்று கேட்டனர். பிரமன் கூறுகின்ருன்: ஓ தானவ சிரேஷ்டர்களே! நீங்கள் கேட் கும் வரம் உலகத்துக்கு விரோதமானது. யாராயினும் மரணபயத் தைப் போக்கும்படியான வரத்தைக் கொடுத்தார்களென்று மூன் றுலகினுஞ் சொல்லப்பெற்ற துண்டோ? பிறந்தவனுக்கு மரணம் நிச்சயம். இது சிருஷ்டிகாலந்தொட்டுண்டான வழக்கு. பிறந்தவ ரிறக்கவேண்டியவர். அதிற் சிறிதுஞ் சந்தேகமில்லை. ஆகையால் இவ்வொன்றைக் கேட்பதைவிட்டு வேறெதனைக் கேட்டபோதிலும் தருகின்றேன் என்றனன். அவர்களும் அதனை நன்ருயாலோசித்த வர்களாய்ப் பிரமனை நமஸ்கரித்துக் கூறுகின்றனர்: நீர் கூறியதுண் மையே! எங்களுக்கு தேவகணங்களாலும் மானிடர்களாலும் மிரு காதி பக்ஷிகளாலும் மரணம் வராவண்ணம் கிருபைசெய்யும். ஆனுல் ஸ்திரீகளைக் குறிக்காதொழிந்தோம். யுத்தத்துக்கு வரத்தக்க ஸ்திரீகள் யாரிருக்கின்றனர்? ஸ்திரீகளுக்கு நாங்கள் பயப்படமாட் டோம். ஒரு சமயம் அவர்களிடத்தில் எங்களுக்கதுவுண்டானுலு முண்டாகட்டும். அதனுல் குறைவில்லையென்றனர். பிரமன் சனி

விட்டதென்று மகிழ்ந்து, ஓ சும்ப நிசும்பர்களே! நீங்கள் கேட்ட வண்ணம் வரந்தந்தேனென்று சொல்லித் தன்னுலகடைந்தனன். (9–28)

சும்ப நிசும்பர்களுந் தங்களிடம் போய்ச் சேர்ந்து பிருகு முனிவரை வரவழைத்து அவரைப் புரோகிதராகக் கொண்டு வழிபட்டு அவரால் நல்ல திதிவார நக்ஷத்திரம் முதலியவை கூடிய சுபதினத்தில் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு சிங்காசனாதிபதிகளாய் வீற்றிருந்தனர். அசுரர்களெல்லாம் நாம் அமரர்களை யடக்கும் நாள் வந்துவிட்டதென்று அகமகிழ்ந்து கூட்டங் கூட்டமாய் வந்து கூடினர். அச்சமயத்தில் முன் சொன்ன சண்டன் முண்டன் முதலிய அசுரரெல்லாந் தங்கள் தங்கள் நால்வகைச் சேனைகளோடு வெள்ளமாகச் சூழ்ந்தனர். ரக்தபீஜ னென்பவனும் தாம்பரனென்பவனும் இரண்டக்ரோணி சேனைகளுடன் வந்து சேர்ந்தனர். (29–33)

ஓ அரசனே! ரத்தபீஜனோடு முன் தேவர்கள் போர்செய்த காலத்தில் அவனது சரீரத்தினின்றும் ரத்தம் விழுமாறால் அதினின்றும் அவனைப்போல் அநேக அசுரர்கள் மஹா குரூரர்களாயும் ஆயுதபாணிகளாயும் தோன்றி யெதிர்த்தனர். அவனுடைய ரத்தமே அசுரர்கள் தோன்றுவதற்குப் பீஜமாயிருந்ததனால் அவன் ரத்தபீஜனென்று பெயர் பெற்றனன். அவனை யெதிர்த்துப் போர் செய்பவரும் வெல்பவரும் கொல்பவருங் கிடையா. இப்படிப்பட்டவரெல்லாம் சும்ப நிசும்பர்களுக்குப் படைத்துணையாக விருந்தார்களென்றால் அவர்களுடைய பெருமைகளையும் சேனைப் பெருக்கத்தையும் சொல்லி முடியுமோ? அவர்களால் சகல ராஜ்யங்களும் பீடிக்கப் பட்டன. ஒரு சமயத்தில் இருவரும் இந்திரனை ஜயிக்க வேண்டுமென்றெண்ணிப் போருக்குச் சென்ற காலத்தில் தேவேந்திரன், அக்கினிதேவன் முதலிய திக்பாலகரைச் சேர்த்துக்கொண்டு யுத்தஞ் செய்யும்போது இந்திரன் தனது வச்சிராயுதத்தினால் நிசும்பனை மோதியடித்தலும் அவன் மூர்ச்சையாய் விழுந்தனன். அதனைச் சும்பனறிந்து இந்திரனோடு தேவர்களையும் வளைத்துப் பாணப்பிரயோகஞ் செய்து திரும்பிப் பார்க்கவொட்டாமல் பறக்கடித்து கற்பக விருக்ஷம் காமதேனு முதலிய சகல செல்வங்களையும் தங்கள் வசப் படுத்திக்கொண்டு அவனுடைய யக்ஞபாகத்தையும் தனக்காகும் வண்ணம் நியமித்துக் கற்பகச் சோலையையடைந்து அங்குள்ள சுகத்தால் மிகவும் மனமகிழ்ந்து அமிர்தபானஞ்செய்து சிறிது காலங் கழித்து அளகாபுரிக்குப்போய் குபேரனையோட்டி அங்குள்ள சகல நிதிகளையுங் கொள்ளைகொண்டு பின்னர் யமன் முதலிய திக்பாலகர்களையும் அடித்துத் துரத்தி அங்கங்கும் தங்களுடைய ஆட்களை வைத்துப் பரிபாலித்து வரச்செய்து சூரிய சந்திரர்களையும் தங்களாணை கடவாமல் போய்வரும்படிச் செய்து இவ்வாறு எங்குந் தன்னாணையே நிகழும் வண்ணஞ் செய்தனர். (34–50)

இந்திராதி தேவர்களெல்லாம் பதியிழந்தும் பதித்வமிழந்தும் பணமிழந்தும் பலமிழந்தும் படையிழந்தும் பரதேசிகளாய் மலை

களிலும் குகைகளிலும் வனங்களிலும் புதர்களிலும் நதிகளிலும் புக்கு ஒளிமாழ்கி அறிவுகெட்டு அமிர்தபானம் போய் அலைந்து அசுரர் கண்களுக்குப் புலப்படாமல் நாளைக் கழித்து வந்தனர். அரசனே ! செல்வம் போன வழியைப் பார்த்தனையா ? சுகமெல்லாந் துக்கமாய் வந்த வகையைக் கண்டனையா ? சுகம் தெய்வாதீன மல்லவோ ? பலவான்களா யிருந்தாலும் மகா மகிமையுள்ளவர்களா யிருந்தாலும் அறிவிற் சிறந்தவர்களாயிருந்தாலும் பெருமையிற் சிறந்தவர்களாயிருந்தாலும் துக்கத்தை யனுபவிக்க வேண்டிய காலத்தில் துக்கத்தையும் சுகத்தை யனுபவிக்க வேண்டிய காலத்தில் சுகத்தையும் அனுபவிக்கின்றார்களே யன்றிக் காலத்தைக் கடந்து சுதந்தரமாய்ச் சுகத்தையே யனுபவித்தார்களென்பதில்லை. காலதத்துவத்தினுடைய வியாபாரமானது மிகவும் ஆச்சரியமாக விருக்கின்றது.

ஓ ஜனமேஜயனே ! காலமானது சாமான்யமான ஒரு மானிடனை மஹாராஜாவாகவும், மஹாராஜாவாக உள்ளவனை ஐயமேற்பவனாகவும், பிறரிடத்தில் ஏற்கும் நிலையை யுடையவனைக் கொடுக்கும் நிலையை யுடையவனாகவும், கொடுக்கும் நிலையை யுடையவனை ஏற்கும் நிலைமை யுடையவனாகவும், பலவானைத் துர்ப்பலனாகவும், துர்ப்பலனைப் பலவானாகவும், பண்டிதனை அபண்டிதனாகவும், அபண்டிதனைப் பண்டிதனாகவும், சூரனைப் பேடியாகவும், பேடியைச் சூரனாகவும் செய்து ஆடல் காண்கிறது. அந்தோ ! நூறு அஸ்வமேதஞ் செய்தவனை இந்திராசனத்திலேற்றிப் பின் கல்லின் மேலும் மண்ணின்மேலு மிருக்கச் செய்து துக்கத்துக்காளாக்கி விட்டதே ! ஒருவனைத் தர்மிஷ்டனாகவும் ஞானவானாகவுஞ் செய்து அவனையே பாபிஷ்டனாகவுஞ் சிறிதும் ஞானமில்லாதவனாகவும் செய்கிறதே! பிரமனாதியரையும் இப்படியே செய்வதென்றால் அந்தக் கால தத்துவத்தைப் பற்றி ஆச்சரியப்படத் தக்கது என்னவிருக்கின்றது ! (51–61)

ஓம் ஏகவீராதி ஸம்ஸேவ்யாயை நம:

## 22. தேவர் அம்பிகையை வேண்டல்

வியாசமுனிவர் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகிறார் :—ஓ அரசனே ! தேவர்களையோட்டிய சும்பன் ஆயிரம் வருஷம் கொடுங்கோல் செலுத்திவரு நாளில் பதப்பிரஷ்டர்களாய்ப்போன இந்திராதியர் சிந்தாகுலப்பட்டு தங்களாசிரியரைச் சரணாகதி யடைந்து நீர் சர்வஜ்ஞரல்லவா ? நாங்கள் படும் துன்பத்தைப் போக்கடிப்பதற்கு ஒருபாயமுமில்லையா ? வேதசாஸ்திரங்களைத்தும் ஆன்மாக்களுக்கு நன்மையைச் சொல்லுகின்றனவாயும் இஷ்டகாமியங்களைப் பிரயோஜனப் படுத்துகின்றனவாயும் இருப்பதென்று சூத்திர கர்த்தாக்களெல்லாங் கூறியிருக்கின்றார்களல்லவா ? ஆகையால் இஷ்டகாம பலப்பிரதமாயிருக்கிற அநேக யாகங்களில்

இப்போது எங்களை யுத்தேசித்து எது செய்தால் க்ஷேமத்தை விளைவிக்குமோ அதனை நீரேயறிந்து, செய்யும் அனுஷ்டான தர்மங்களை விதிமுகமாகக்கூறும். ஆகமங்களையறிந்து சத்துரு நாசத்துக்குரித்தான ஆபிசாரத்தை எப்படிச் செய்தால் துக்க நிவிர்த்தியாகுமோ அதனையறிந்து உம்முடைய புத்திக்கேற்ப இப்போதே செய்யுமென்றனர். (1–7)

பிரகஸ்பதி அவர்களைப் பார்த்துக் கூறுகின்றார்: ஓ தேவர்களே! மந்திரங்களெல்லாம் தெய்வங்களின் வழியாகப் பலன்களைக் கொடுக்குமேயல்லாமல் தாமாகவே சுதந்தரமாய்ப் பலன்களைக் கொடுக்கவறியா. ஆகவே அம்மந்திரங்களுக்கு அதிதேவதைகளான நீங்களே துக்கத்துக்குப் பிராப்தர்களாய் விட்டால் நான் என்ன செய்வேன்? எந்த யாகஞ் செய்தபோதிலும் அவைகளில் இந்திரன் அக்கினி யமன் முதலிய உங்களைத்தானே வைத்துப் பூஜித்தல் வேண்டும்? பூஜைக்கு யோக்கியர்களான நீங்கள் ஆபத்தை யடைந்திருந்தால் யாகங்கள் என்ன செய்யப் போகின்றன? யாகங்கள் மந்திரங்களுக்குட்பட்டவை; நீங்கள் கால தத்துவத்துக்குட்பட்டவர். ஆகையால் காலதத்துவத்தைத் தடை செய்யும்படியானது ஒன்றுமில்லை. ஆனால் அந்தந்தக் காலத்துக் கேற்ற உபாயமாத்திரஞ் செய்ய வேண்டுமென்பது பெரியோரது ஆணை. சில புத்திமான்கள் காலத்தைப் பெரிதாகவும் உபாயத்தைக் குறைவாகவும் சிலர் உபாயத்தைப் பெரிதாகவும் காலத்தைக் குறை வாகவுங் கூறுவர். ஓ இந்திரனே! காலபலமும் உபாயமும் ஒன்று சேர்ந்தே ஒருவர்க்கு இஷ்ட பலத்தைக் கொடுக்கின்றன. சிலர் தெய்வமே ஊழென்னப்பட்ட காலத்தை எதிர்பார்த்து உபாயத்தைக் கைவிடுகின்றனர்; அது கூடாது. தனது புத்திக்கெட்டியவரையில் அவ்வக்காலத்துக் கேற்றவாறு உபாயத்தைப் பெரியோர் முகமாய்ப் பெறல் வேண்டுமாகையால் நானொன்றுலோசித்துச் சொல்லு கிறேன். (8–12)

காலமென்கிற தெய்வத்துக்குமேல் காலாதீதமாகிய தெய்வ மொன்றிருக்கின்றது. அதற்கு அக்காலம் சுவாதீனப்பட்டது. ஆகவே காலாதீதமாகிய தெய்வத்தின் கிருபையுண்டாவதற்குபாயம் வேண்டுமாகலான் அத்தெய்வத்தையும் உபாயத்தையுஞ் சொல்லு கிறேன், கேட்பாயாக. உங்களால் பூர்வத்தில் துதிக்கப்பெற்று மகிஷனைக் கொன்றது எந்தத் தெய்வமோ அந்தத் தெய்வந்தான் காலாதீதமாகிய தெய்வம். அத்தெய்வம் முன் நீங்களெல்லாந் தோத்திரஞ்செய்த காலத்தில் உங்களுக்கு எக்காலத்திலாவது ஆபத் துக்களுண்டாகுமானல் அக்காலத்திலென்னைத் தியானித்துத் தோத்திரஞ்செய்மின். நான் அவ்விபத்துக்களை நாசஞ்செய்து உங்களுக்கு வேண்டிய ஐஸ்வர்யங்களைக் கொடுத்துக் காக்கின்றே னென்றதல்லவா? ஆகையால் இப்பொழுது நீங்களனைவரும் அத் தேவியை யாராதனை செய்து தோத்திரஞ் செய்வதுதான் உபாயம். இப்போது அத்தேவி இமயமலையில் வாசஞ்செய்வதாகக் கேள்விப் பட்டேனாகலின் நீங்களனைவரும் அவ்விடத்துக்குப் போய் பக்தி

யோடு ஆராதனை செய்மின். உங்கட்குத் தேவியினுடைய பீஜசகித மான மந்திரங்கள் தெரியுமல்லவா? அந்த மந்திரோச்சாரணையில் சிரத்தையுடையவர்களாயிருங்கள். மந்திரோச்சாரணை செய்வ தாகிய யோகபலத்தால் தேவி பிரத்தியக்ஷமாவாளென்று தெரி கின்றது. உங்களுடைய துக்கத்துக்கு முடிவு இப்போதுதானேற் பட்டது, அதிற்சந்தேகமில்லை. தேவி உங்களால் பூஜிக்கப்பட்டு உங்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்கப்போகிருள். உங்கள் காரியங்களெல்லாம் சித்தியாகும். நீங்கள் திடமான பக்தியோடு இமயமலையைச் சேர்மின்களென்று ஆசிபுகன்றுபோயினர். (13–21)

தேவர்களெல்லாம் ஆசிரியராணையின்படி தேவியைத்'தியானித் தவர்களாய் இமயமலைக்குப் போய்ப் பக்தர்களுக்கு அபயத்தைக் கொடுக்கும் மஹா மாயா தேவியை நமஸ்கரித்துத் தியானபராயணர் களாய்த் தேவியின் மாயா பீஜாக்ஷரமந்திரத்தைப் பக்தி சிரத்தை யோடு ஜபித்துப் பின்னர் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர் :

ஹே தேவி! விஸ்வேஸ்வரி! பிராணநாதே! உனக்கு நமஸ் காரம். ஒ சதாநந்தரூபமே! சுரர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். அசுரர்களை நாசஞ் செய்கின்றவளே! மானிடர்களுக்கு அநேகவிதமான பிரயோ ஜனத்தைச் செய்கின்றவளே! பக்திகம்ய ஸ்வரூபிணியா யிருக்கின்றவளே! உனக்கு நமஸ்காரம். உனது நாமத்துக்குக் கணக்கில்லை. உனது சொரூபம் இப்படியென்று எவரும் அறிந்த தில்லை. வேத ஸ்வரூபமாகவும் சகல தேவதா ஸ்வரூபமாகவும் சகலப் பிராணிகளிடத்தில் சக்தி ஸ்வரூபமாகவும் பிரஜைகளைச் சிருஷ்டிக்கின்ற சக்தியாகவும் சங்காரகாலத்தில் சங்கரிக்கின்ற சக்தியாகவுமிருக்கின்ருய்; உனக்கு நமஸ்காரம். ஸ்மிருதியும் தைரியமும் நீ தான். புத்தியும் கிழத்தனமும் புஷ்டியும் சந்துஷ்டி யும் திருதி (தாரணை) யும் நீதான். காந்தியும் சாந்தியும் சிறந்த வித்யாரூபிணியும் லக்ஷ்மியும் கதியும் கீர்த்தியும் ஞானமும் நீதான். இந்த உலகத்துக்கு ஆதிகாரணமான பீஜமும் நீதான்; உனக்கு நமஸ்காரம். எக்காலத்தில் எவ்வுருவங்களெடுத்துத் தேவர்களாகிய எங்களுடைய காரியங்களை நடத்தி வந்தனையோ அவ்வுருவங்களுக் கெல்லாம் நமஸ்காரம். க்ஷமாசொரூபிணியாயும் யோகநித்திரா சொரூபிணியாயும் தயா சொரூபிணியாயும் விவக்ஷா (பிராணிக ளுள்ளத்தில் இதனைச் சொல்லவேண்டு மென்றெழு மிச்சை யெதுவோ அவ்விச்சா) சொரூபிணியாயு மிருக்கின்றவள் நீயே! உன்னையன்றி வேறு யாவர்? தேவர்களிடத்திலெப்பொழுதுந் தயை யுடையவளென்று புராணங்களாலும் வேதங்களாலும் புகழப் படுகின்றனை; எங்களுக்கெல்லாந் தாய் நீ யல்லவா? தாயாகிய நீ எங்களை காக்கின்ருயென்பது ஓராச்சரியமா! பிள்ளைகளைத் தாய் காப்பது இயல்பன்ரே? ஆகலான் இப்பொழுது எங்கட்குச் சகாயஞ் செய்கின்றவளாய் நாங்களெண்ணியிருக்குங் காரியங் களைப் பூர்த்திசெய்து விடுவாய். சர்வ உலகங்களாலும் நமஸ்காரஞ்

செய்யப்பெற்ற தேவியே! உன் குண விசேஷங்களையாவது சொரூப விசேஷங்களையாவது இத்தன்மைத்தென்று அறிவோமா? காக்கும் வல்லமையுள்ள நீ எங்களை உன் கிருபைக்குப் பாத்திரர்க ளென்று திருவுளத்திலெண்ணி இப்பொழுது வந்திருக்கும் பயத்தி னின்றும் எங்களை விடுவிப்பாய். நீ அசுரர்களைக் கொல்லத் தொடங்கிலுல் பாணங்களெடுப்பதில்லை. முஷ்டி வகையான யுத்தங்களைச் செய்வதுமில்லை. சூலம் கட்கம் தண்டம் முதலியவைக ளெடுப்பதுமில்லை. இவைகளொன்று மில்லாமலே சங்காரஞ் செய்யும்படியான சாமர்த்தியத்தை யுடையவளாயிருக்கின்ற நீ ஆயுதங்களைத் தாங்கியிருப்பது நாங்கள் கண்டு களிக்கு நிமித்தம் திருவிளையாட்டின் பொருட்டுக்கொண்ட கோலமாகுமேயன்றி யவைகளாலென்ன பயனுயிற்று? ஓ தேவீ! மூடர்கள் சிலர் இப் பிரபஞ்சத்தை நித்தியமென்கின்றனர். இப்பிரபஞ்சம் காரிய ரூபமாயுள்ளதன்றோ? ஆகவே அது அழிவுடையதாமேயன்றி நித்தியமாகுமா? இதனைக் காரியமென்றதனுல் காரணம் வேருென் றுளதென்றும் அக்காரணத்தினின்றும் காரியமாதல் ஒரு கர்த்தாவி னுலென்றும் அறிதல் வேண்டும். ஓ தேவீ! அந்தக் கர்த்தா நீதானென்று காரியமாகிய பிரபஞ்சத்தைக் கொண்டு அனுமா னத்தால் யூகிக்கின்றோம். ஆனுல் புராணங்களில் பிரம்மா சிருஷ்டிக்கின்ருரென்றும், விஷ்ணு காக்கின்ருரென்றும், ருத்திரர் சங்கரிக்கின்ருரென்றும் பிரசித்தியாகச் சொல்லுகின்றபடியால் அவர்களன்றோ கர்த்தாக்களாகவேண்டுமெனின், அவரெல்லாம் மஹா சம்ஹாரத்தி லொழிந்துபோய் புனர்சிருஷ்டி காலந்தோறும் உன்னில் நின்றுந்தோன்றி உன்னுடைய ஆணையை மேற்கொண்டு அம்முத்தொழிலையும் செய்துவருங் கர்த்தாக்க ளாவாரேயன்றி உன்னைப்போ லழியாதிருக்கின்றவரல்லர். ஆதலால் சேதனு சேதனப் பிரபஞ்சங்கட்கெல்லாம் நீயே காரணமாக விருக்கின்றனை; உன்னையன்றி வேறில்லை. சில வித்துவான்கள் திரிமூர்த்திகளும் ஒடுங்கித்தோன்றினுலும் சிருஷ்டியாதி தொழில்களுக்குச் சுதந்தர ராய் அவைகளை அவர்களே செய்துவரும் கர்த்தாக்களென்று வேதங் களிற் கூறப்படுகின்றமையா லவர்களை இப்பிரபஞ்சத்துக்குக் கார ணர்களல்லரென்று கூறப்படுமோ வென்பார். அவர்களை யாம் மந்தமதிகளென்று கூறுவோம். ஏனெனின் இவர்கள் தாமாகவே யொடுங்கித் தோன்றும் சக்தியுடையவராயின் ஒருவாறு காரணர்க ளென்று கூறலாம். அங்ஙமன்றி ஒடுக்குஞ் சக்தியும் தோற்றுவிக் குஞ் சக்தியும் இவர்களுடைய சுதந்தரத்துக் குட்படாதனவாய் ஒடுக்குவிக்குஞ் சக்தியொடுக்க இவர்களொடுங்கியும் தோற்றுவிக் குஞ் சக்தி தோற்றுவிக்க இவர்கள் தோன்றியும், பின்னர் அவரவ ருக்குரிய தொழில்களை நடத்துவிக்குஞ்சக்தி நடத்துவிக்க இவர்கள் அத்தொழில்களை நடத்தியும் வருகின்ருர்களேயன்றித் தாமாகவே ஒன்றுஞ்செய்தாரில்லை. ஆகலால் சக்திகளே எவ்வாற்ருனு முன் னிற்பனவாகத் தெரியவருகின்றன. இதனுல் மஹாசக்தியாகிய நீயொருத்தியே அவ்வச்சக்திபேதங்களாய் அவரவர்பால் நிறைந்து

நின்று அவ்வவர்களை அந்தந்தச் சக்தி யுக்தர்களாக்கி அவ்வத் தொழில்களை நடத்தி வருக்கின்றனையென்பது நிச்சயமாயிற்று.

ஆகலான் மேலான பிரம்மவித்தியா சொரூபிணியாயும் ஸர்வ காம பலப்பிரதையாயும் மோக்ஷத்தைக்கொடுக்கின்றவளாயும் தேவ கணங்களால் வணங்கப்பட்ட பாதகமலங்களைப் படைத்தவளாயு மிருக்கின்ற வுன்னை எந்த யோகிகள் ஜகன்மாதாவாக வுபாசிக்காம லிருக்கின்றார்களோ, அவர்கள் யோகிகளாயினும் ஞானசூனியர்க ளல்லவா? உன் மகிமையறிந்து தோத்திரஞ் செய்பவர்களுக்கு வேண்டியாங்கருள நீயே கமலா சொரூபிணியாயும், காந்தியாயும், ஸ்திதியாயும், இலச்சையாயும், கீர்த்தியாயும், புஷ்டியாயு மிருக் கின்ற உன்னை எந்த வைணவர்களாவது, பாசுபதர்களாவது, சூரிய உபாசகர்களாவது தியானஞ் செய்யாமலும் தோத்திரஞ் செய்யா மலு மிருக்கின்றார்களோ, அவர்களெல்லாம் டம்பாசார முடையவர்க ளென்று மதித்தல் வேண்டும். அதிற் சந்தேகமில்லை. ஹரிஹராதி களாலும் அசுரர் முதலியோராலுஞ் சேவிக்கப்பட்டிருக்கின்ற உன்னை இவ்வுலகின்கண் எந்த மானிடர்கள் அற்பபுத்தியினால் நமஸ்கரிக்காம லிருக்கின்றார்களோ அவர்கள் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவர்களென்று நினைக்கப்பட்டவர்களல்லவா? லக்ஷ்மீ ஸ்வரூபமாயிருக்கின்ற உன்னுடைய பாதங்களை விஷ்ணுமூர்த்தி யானவர் செம்பஞ்சின் குழம்பால் சிவக்கச்செய்கின்றார். பார்வதீ ஸ்வரூபமாயிருக்கின்ற உன்னுடைய பாததூளியில் ருத்திர மூர்த்தி யானவர் மிகவும் ஆசையுள்ளவரா யிருக்கின்றார். இவர்களே இவ்வாறிருப்பவரென்றால் ஏனையோருடைய செய்திகளை என்ன வென்று சொல்லலாம்? அந்தோ! உன்னுடைய பாதபத்மங்களை எவர்கள் தான் நமஸ்கரிக்கிறதில்லை! ராகமோகங்களை விட்டு முனி சிரேஷ்டர்களும் உன்னுடைய தயையையும் க்ஷமையையும் வேண்டு கின்றனர். உன்னுடைய பாதகமலங்களை நமஸ்கரிப்பதில் எவர் களுக்கு ஆவலில்லையோ அவர்களல்லவோ ஸம்ஸாரமாகிய பாழுங் கிணற்றில் வீழ்ந்த பதிதர்கள். குஷ்டம் குன்மம் தலைவலி இவைக ளோடு கூடினவர்களாகவும், தரித்திரம் தீனபாவனை முதலியன வுடையவர்களாகவும் சுகபரம்பரையில்லாதவர்களாகவும் எவர்கள் காணப்படுகின்றார்களோ அவர்களெல்லாம் உன்னை நமஸ்கரிக்காத வர்களே. எவர்கள் சாங்காலமளவும் புத்திரசந்தானமும் திரவிய சம்பத்தும் இல்லாதவர்களாய் விறகுச்சுமையைச் சுமப்பதுபோல் தேகச்சுமையைச் சுமப்பதில் சமர்த்தர்களாக விருக்கின்றார்களோ அந்த அற்பபுத்தி யுள்ளவர்கள் பூர்வ ஜன்மத்தில் எந்தக்காலத்தி லாவது உனது பாத பூஜையைச் செய்யாதவர்களென்று நினைக் கின்றோம் என்று தோத்திரஞ் செய்தனர். (22–42)

அப்பொழுது மஹாதேவி கருணைகூர்ந்து யௌவனமான திரு மேனியை யுடையவளாயும் திவ்யமான பீதாம்பரத்தைத் தரித்தவ ளாயும் நவரத்தினமயமான ஆபரணங்களைத் தரித்தவளாயும் சுகந்தமயமான புஷ்பமாலைகள் கஸ்தூரி களபாதிகள் முதலியவற் றைப் பூசிக்கொண்டவளாயும் ஜகத்தை மோகிக்கச் செய்யவல்ல

நல்ல பளபளப்பான காந்தியுடையவளாயும் ஸர்வ லக்ஷணங்களுக்கு லக்ஷ்யையாயும் அத்விதீய சொரூபிணியாயும் பிரத்தியக்ஷமாய், குகைகளினின்றும் வெளிவந்து, கங்காநதியில் ஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு பக்தியோடு தியானித்துத் தோத்திரஞ் செய்கின்ற தேவர்களைப் பார்த்து, மேக கர்ஜனைபோன்ற கம்பீரமான திருவாக்கினால் குயிலொலியைப் போலும் இனியமொழியோடு அவர்களிடத்தில் மிகுந்த அன்புடையவளாய், ஓ தேவர்காள்! நீங்கள் யாரைத் தோத்திரஞ் செய்கின்றீர்கள்? எதற்காகச் செய்கின்றீர்கள்? உங்களுக்காகவேண்டிய காரியங்களென்ன? எதற்காகச் சிந்தாகுலப்படுகின்றீர்கள் என்றனள். (43–48)

தேவியினுடைய ரூபலாவண்ய சௌந்தரியங்களைக்கண்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்திருக்கின்ற தேவர்கள் அம்பிகையினுடைய வார்த்தைகளைக் கேட்டுக் கூறுகின்றார்கள் :—ஓ தேவீ! பிரபஞ்சகாரணீ! கிருபாசமுத்ரீ! நாங்கள் உன்னைத்தான் தோத்திரஞ் செய்கின்றோம். அசுரர்களால் தபிக்கப்பட்டிருக்கின்ற எங்களை ஸர்வதுக்கங்களினின்று நீக்கிக்காத்தல்வேண்டும். ஓ மஹாதேவியே! மகிஷனைக்கொன்றபோது எங்கட்கு ஒரு வரங்கொடுத்திருக்கின்றனை. என்னையெனின் என்னை எப்பொழுது நினைக்கின்றீர்களோ அப்பொழுது நான் வந்து அசுரர்களாலுண்டாகும் துன்பங்களை யொழிப்பேனென்றருளியதேயாம். அதனால் இப்போது உன்னை நினைத்துத் தோத்திரஞ் செய்தோம். சும்ப நிசும்பர்களென்னும் அசுரர்கள் கோரரூபமுடையவர்களாயும் சகல சத்கருமங்கட்கும் விக்கினஞ்செய்கின்றவர்களாயும் ஒருவராலும் கொல்லப்படாதவர்களாயு மிருக்கின்றனர். ரக்தபீஜனென்பவனும் சண்டன் முண்டன் என்பவர்களாலும் இன்னும் பலவான்களான பல அசுரர்களாலும் எங்களுடைய ராஜ்யங்கள் அபகரிக்கப்பட்டுள்ளன. எங்களுக்கு உன்னைத்தவிர வேறுகதியில்லை. எங்களுடைய காரியத்தை நீதானே செய்யவேண்டும்? உன்னுடைய பாதத்தை எப்பொழுதும் வணங்குவதில் ஆசையுடையவர்களாகவிருக்கின்றோம். உன்னிடம் பக்தியுள்ள எங்களைத் துக்கமில்லாமல் வைக்கவேண்டுமல்லவா? அசுரர்களால் துக்கத்தையடைந்திருக்கிற எங்களுக்கு நீயே சரணமாகவிருக்கவேண்டும். நாங்கள் மாத்திரமன்று, துன்பப்படுவது, சகலலோகமுமாகும். ஆகலான் பிரபஞ்சமனைத்தையும் நீ காத்தல்வேண்டும். நீ தானே பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தவள். சிருஷ்டித்தவளாகிய நீ காக்காதொழிந்தால் வேறு யாவர் காக்க வருவர்? ஓ அம்பிகே! தானவர்கள் மிகவும் கொழுத்தவர்களாயும் அதிகபலமுள்ளவர்களாயும் உலகத்தை மிகவருத்துகின்றார்கள். சொன்னோம், சொன்னோம், காப்பாற்றுவாய், காப்பாற்றுவாய், சரணஞ் சரணமென்றனர். (48–57)

ஓம் ஏகப்ராபவசாலிந்யை நம:

## 23. காளியின் தோற்றம்

வியாசமுனிவர் அரசனைப்பார்த்துக் கூறுகின்றார் :—ஓ ஜனமே ஜயனே ! சத்துருக்களால் தவிக்கின்ற தேவர்களுடைய தோத்திரங் களைக்கேட்ட தேவியானவள் தன் சரீரத்தினின்றும் ஒரு சக்தியைத் தோற்றுவித்தனள். அச்சக்தி, சக்தி சரீரத்தினிறுந் தோன்றிய படியால் கௌசிகை என்றும், கருமைநிறமுடையவளாயிருந்தமை பற்றிக் காளி என்றும் யாவராலும் அழைக்கப்பட்டனள். அன்றி யும் மகாகோரரூபிணியாயும் யாவருக்கும் பயத்தைவிளை விக்கின்ற அசுரர்களுக்கு மஹாபயத்தை விளைவிக்கின்றவளாயு மிருந்தபடியினால் காளராத்திரி என்றும் பெயர் பெற்றனள். இவ் வகையாய்த் துஷ்டநிக்ரஹார்த்தங்கொண்ட திருமேனியைப் படைத்தவளாயினும் மனோகரமாயும் ஸர்வபூஷணா லங்கிருதையா யும் பளபளப்பாயும் பக்தர்கள் வேண்டுவனவற்றைக் கொடுக்குங் கிருபைக்கடலாயு மிருந்தனள். (1–5)

இந்தக் காளிகாதேவியை யுண்டாக்கிய மஹாதேவி, தேவர் களைப்பார்த்து, நீங்கள் பயப்படவேண்டாம். நான் உங்களுடைய சத்துருக்களாகிய சும்பநிசும்பர்களைக் கொன்றுவிடுகிறேன். உங் களுக்குச் சுகத்தைச்செய்கின்றேன். துஷ்டர்களாகிய அசுரர்களைக் கொல்லுங்காரியத்தையும், சிஷ்டர்களாகிய உங்களைக் காக்குங்காரி யத்தையும் அவசியம் செய்கின்றேனென்று உறுதிமொழிகூறி சிம்ம வாகனமூர்ந்து தன்னாலுண்டாக்கப்பட்ட காளிகாதேவியைப் பக்கத்தில்வைத்துக்கொண்டு சத்துருக்களுடைய பட்டணத்தை யடைந்து அங்குள்ள ஒரு பூங்காவனத்திலிருந்து சராசரங்களெல் லாம் மோகிக்கத்தக்க ஒரு கானத்தைப் பாடினாள். அந்தக்கானத் தைக்கேட்ட மிருகங்களும் பக்ஷிகளும் மோகமடைந்தன. தேவர்க ளெல்லாம் ஆகாயத்தி லிருந்தவண்ணம் பரமானந்தத்தை யடைந்தனர். (6–10)

ஓ அரசனே ! அந்தச் சமயத்தில் சும்பனுடைய சேவகர்களான சண்டமுண்டர்கள் அக்கானத்தைக் கேட்டு இந்தக் கானத்தைச் செய்கின்றவர்கள் யாவரென்று நாடி மஹாதேவியைப் பார்த்து ஆச்சரியமடைந்து சும்பனிடஞ் சென்று வணங்கிக் கூறு கின்றார்கள் : ஓ ராஜாதிராஜனே ! நம்முடைய உத்தியான வனத் தில் காமமோகினியாயும் ரூபலக்ஷண சௌந்தரியமுள்ளவளாயும் இருக்கிற ஒரு ஸ்திரீ இமாசலத்திலிருந்து சிம்மவாகனா ரூடையாய் வந்திருக்கின்றாள். அந்த உத்தமமான ஸ்திரீயைப்போலும் நாம் தேவலோகத்திலும் கந்தர்வலோகத்திலும் இப்பூலோகத்திலும் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. யாவரையும் மயக்கும்படியான கானமும் அவளிடத்தில் அமைந்திருக்கின்றது. அவளிப்பொழுது பாடிய கானத்தால் பசுபக்ஷிகளெல்லாம் சூழ்ந்து மயங்கிக் கிடக் கின்றன வென்றால் ஏனையோர் மயங்குவாரென்பதற்குச் சந்தேகமு

முண்டோ! ஓ அரசனே! இவள் யாருடைய பெண்ணென்றும் எதற்காக இங்கு வந்தாளென்றும் அறிந்துகொள்வாய்; பின்னர் அந்த அழகி உன்னுடைய வீட்டுக்கு வரும் வகையைத்தேடி உனக்குரிய ஸ்திரீயாக அவளையாக்கிக் கொள்வாய். உன்னுடைய அரசச் செல்வத்துக்கு மிகவுந் தக்கவள். இந்த ஸ்திரீ கிடைக்கத்தக்கவளல்லள். தேவர்களிடத்திருந்த சகல ரத்னங்களையுங் கிரகித்த நீ இந்த ஸ்திரீ ரத்னத்தை ஏன் கிரகிக்கமாட்டாய்? இந்திரனுடைய ஐராவதமும் பாரிஜாத விருக்ஷமும் ஏழுமுகமுள்ள குதிரையும் உன்னால் பலாத்காரமாய்க் கிரஹிக்கப்பட்டனவல்லவா? உனது தபோபலத்தால் ஹம்சத்துவஜமுடைய ரதம் பிரமதேவனால் கொடுக்கப் பெற்றனையல்லவா? குபேரனுடைய பத்மநிதியும் வருணனுடைய வெண்குடையும் உனது சகோதரனான நிசும்பனால் பலாத்காரமாய்க் கொள்ளப்பட்டன வல்லவா? அப்படியே வருணனுடைய பாசமும் சமுத்திர ராஜனுடைய வாடாத தாமரை மலர் மாலையும் நானாவிதமான ரத்தினங்களும் யமனுடைய பாசமும் மயனுடைய தண்டமும் உன்னுடைய பயத்தினால் அவர்களால் கொடுக்கப்பெற்றனை யன்றோ? இவ்வண்ணம், உனது மகிமையை நானென்னவென்று சொல்லப்போகின்றேன்? சமுத்திரத்திலுண்டான காமதேனுவேயன்றி மேனகை முதலிய தேவதாசிகளும் உன் சுவாதீனத்திலிருக்கின்றனர். எல்லாவற்றிலுஞ் சிறப்புற்ற சகல பதார்த்தங்களும் உன்னுடைய பலத்தினால் கிரகிக்கப்பட்டவைகளாகவிருந்தும் இந்த ஸ்திரீ ரத்தினத்தைமாத்திரம் ஏன் கிரகிக்காமலிருக்கின்றனை? உன்னுடைய அரண்மனையிலுள்ள ரத்தினம் போன்றவைகளெல்லாம் இந்த ஸ்திரீ ரத்தினத்தினாலேயே சிறப்படையத்தக்கவைகள். மூன்றுலகத்திலும் இந்த ஸ்திரீ ரத்தினம் போல் ஒரு ரத்தினமுங் கிடையாது. ஆகையால் அந்த ஸ்திரீயை அழைத்துக்கொண்டு வந்து உனது பத்தினியாக்கிக்கொள்வாயென்றனர். (11–30)

சண்டமுண்டர்களுடைய வார்த்தையைக் கேட்ட சும்பன் மலர்ந்த முகமுடையவனாய்ச் சமீபத்திலிருந்த சுக்கிரீவனைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ சமர்த்தனே! இப்போது இவர்களால் சொல்லப்பட்ட ஸ்திரீயினிடம் நீ சென்று அவள் என்னிடம் வரும் வகையான விதத்தை அவளிடம் சொல்லவேண்டும். சிருங்கார ரசத்தில் வல்ல சமர்த்தர்கள் ஸ்திரீகளிடத்தில் சாமதானமாகிய இரண்டு உபாயங்களைத்தான் பிரயோகஞ் செய்தல்வேண்டும். பேதோபாயமாவது தண்டோபாயமாவது பிரயோகப்படுத்தினால் ரசபங்க முண்டாமென்று சொல்லுகின்றனர். ஆகையால் பண்டிதர்களால் கழிக்கப்பட்ட பேத தண்டங்களை யொழித்துச் சாமதானமென்கிற இரண்டுபாயங்களைக் கைக்கொண்டு மதுரமான பரிகாசத்தோடுங் கூடிய வார்த்தைகளைப் பிரயோகஞ்செய்தால் எந்த ஸ்திரீதான் காமத்தாற் பீடிக்கப்பட்டவளாய் ஸ்வாதீனமாக மாட்டாளென்று கூறினான். சுக்கிரீவன் மிக இனிமையாயும் யுக்தமாயுமிருக்கின்ற சும்பன் வார்த்தையைக்கேட்டு ஜகதம்பிகையினிடத்திற்

சென்று மலர்ந்த திருமுகமுடையவளாய்ச் சிங்கவாகனத்தின் மேலிருக்கின்ற தேவியைக்கண்டு வணங்கிக் கூறுகின்றான் : (31–37)

ஓ அழகிற் சிறந்தவளே ! மன்மதனுக்கு மேலிட்ட அழகுள்ளவனாய்த் திரிலோகங்களையும் வென்றவனாய்ச் சர்வலோகாதிபத்யனாய் விளங்கும் சும்பனென்னும் சூரனாகிய அசுரன் உன்னுடைய சௌந்தரிய விசேஷங்களைக் கேட்டுக் காமபீடிதனாய் முன்னர் உனக்கு நமஸ்காரத்தைச் சொல்லி ஏனையவற்றைப் பின்னே கூறி என்னை உன்னிடம் அவ்வார்த்தைகள் சொல்லத் தூதாக அனுப்பினான். ஆகலான் அவற்றைப் பிரீதியோடு கேட்பாயாக. என்னையெனின், நான் சர்வலோகங்களையும் வென்று யாவருக்கும் மஹாராஜனாக விருக்கிறேன். தேவர்களுக்குரிய யக்ஞபாகங்களை இவ்விடமிருந்தபடியே கிரகித்துக் கொள்ளுகின்றேன். சர்வசம்பத்துக்கும் இடமாயிருக்கின்ற சுவர்க்கலோகத்தை உபயோகமற்றதாகச் செய்துவிட்டேன். அப்ஸரஸ்திரீகளை யெல்லாம் கிரகித்துக் கொண்டேன். எந்த உலகத்திலுமுள்ள ரத்தினங்களையெல்லாம் நானே அனுபவிக்கத்தக்கவனாக விருக்கின்றேன். அசுரர்களும், தேவர்களும், மானிடர்களும் என் சுவாதீனத்தி லிருக்கின்றனர். இத்தன்மையனாகிய என்னுடைய மனத்தை உனது சௌந்தரியாதி குணங்கள் என்காதின்வழியாக நுழைந்து சுவாதீனமாக்கிக் கொண்டன. அதனால் நான் உனக்கு ஊழியனாய்விட்டே னென்செய்வேன் ? எனக்கு நீ உத்தரவுசெய்கின்றாய் ; உனக்குச் சுவாதீனனான நான் அதனைச் செய்கின்றேன். ஓ மனோகரமான உருவத்தையுடையவளே! நான் உனது பணிவிடைக்காரன். காமபாணத்தினால் வருந்துகிற என்னைக் காப்பாய். எனக்கு நீ மகிஷியாய் இந்த மூன்றுலகத்திற்கும் நீயே அரசியாயிருந்து எல்லாப்போகங்களையும் அனுபவிக்கக் கடவாய். நான் என்னுடைய மரணபரியந்தம் உனக்கு ஊழியக்காரனாகவே யிருப்பதுமன்றி வேறுவகையாக ஆவேனென் றெண்ண வேண்டாம். எனக்கோ ஒருவராலும் மரணமில்லை. நீ எப்போதும் தீர்க்கசுமங்கலியாகவே யிருக்கலாம். உனக்கெவ்விடத்தில் கிரீடித்துக் கொண்டிருக்க விருப்பமோ அவ்விடத்தில் கிரீடித்துக்கொண்டிருக்கலாம் என்றனன்.

ஓ தேவியே ! இந்த சும்பனுடைய வார்த்தைகளை நீ பரியாலோசனைசெய்து நான் அந்த அசுரனுக்கு எதனைச் சொல்ல வேண்டுமோ அதனைச் சொல்லுவாய். நான் அதனை இக்கணமே போய்ச் சொல்லுகின்றேனென்றனன். (38–49)

தேவர்களுடைய காரியசித்தியின் பொருட்டு எழுந்தருளி வந்த தேவி புன்னகைசெய்து கூறுகின்றாள் : ஓ தூதனே ! உன்னால் சொல்லப்பட்ட சும்பனையும், நிசும்பனையும் நானறிவேன். அந்த சும்பன் தேவர்களையெல்லாஞ் ஜயித்திருக்கின்றானென்றும் சத்துருக்களையெல்லாம் நாசஞ் செய்திருக்கிறானென்றும் குணங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கிறானென்றும், சகல சம்பத்துக்களையும் அனுபவிக்கிறவனென்றும், மகா தானசாலியென்றும், மன்மத

உருவத்தையுடையவனென்றும், முப்பானிரண்டு லக்ஷணங்களோடு கூடினவனென்றும், தேவாசுர மனிதர்களால் கொல்லப்படாதவனென்றும் அந்த மகா சூரனைப்பார்க்க வேண்டுமென்றிவ் விடம் வந்திருக்கின்றேன். ரத்தினம் எப்படிப் பொன்னிடத்தில் பதிப்பிக்கப்பட்டுப் பிரகாசிக்கின்றதோ அப்படி நான் இந்த சும்பனால் வரிக்கப்பட்டுத் திரிலோகத்திலும் பிரகாசிக்க நெடுந் தூரத்திலிருந்து வந்திருக்கின்றேன். கந்தர்வரும், தேவரும், மானிடரும் இந்தச் சும்பனுக்குப் பயந்து நடுங்கினவர்களாய்த் தெளிவற்றிருக்கின்றனர். இப்போதும் இந்தச் சும்பனுடைய குணாதிசயங்களைக்கேட்டு அவனைப் பார்க்கவேண்டுமென்று வந் திருக்கின்றேன். ஆகையால் நான் சில வார்த்தைகள் சொல்லு கின்றேன். அவைகளை நீ அந்தச் சும்பனை யாருமில்லாதவிடத்தில் வரவழைத்துச் சொல்லுவாயாக என்று கூறுகின்றாள் : (50–57)

மஹா பலசாலியாகவும், சுந்தரனாகவும், தாதாவாகவும், குணவானாகவும், சூரனாகவும், சகல வித்தையிலும் வல்லவனாகவும், சகல தேவர்களையும் வென்றவனாகவும், சமர்த்தனாகவும், சத்துரு சம்ஹாரியாகவும், சிறந்தகுலத்திற் பிறந்தவனாகவும், சிறந்த ரத்தி னங்களையெல்லா மனுபவிக்கத்தக்க ஐஸ்வர்யவந்தனாகவும், உனக்கு மேலொரு கர்த்தாவை யறியாத மேலான கர்த்தாவாகவும், அள விறந்த சேனைகளை யுடையவனாகவும் இருப்பவனென்று உன்னை யறிந்தேன். ஓ மஹாபுத்திமானே! உன்னுடைய பட்டணத்துக்கு நானே இஷ்டப்பட்டு வந்துவிட்டேன். ஆனால் விவாக விஷயத்தில் எனக்கோர் சபதமுண்டு. என்னையெனின், என்னுடைய பலத் தன்மையினால் தோழிகளுடைய கூட்டத்தில் விளையாடிக்கொண் டிருக்கும்போது அவர்களைப்பார்த்து யுத்தஞ் செய்வதில் நான் மகா பலசாலி. எனக்கு வரனாக வரத்தக்கவன் எனக்குச் சமானமான பலமுள்ளவனாய் என்னை யுத்தத்தில் ஜயிப்பானாயின் அவனை நான் பர்த்தாவாகக் கொள்ளப்போகிறேனென்று சொல்லிவிட்டேன். தோழிகள் என் வார்த்தையைக்கேட்டு ஆச்சரியப்பட்டு இவள் ஏன் இவ்வண்ணமான சபதத்தைச் செய்தாளென்று சிரித்தனர். ஓ அசுர சிரேஷ்டனே! நீயும் மஹாபலசாலியாகையால் என்னுடைய பலாபலத்தை யறிந்து உன் பலத்தினால் என்னை வெற்றிகொண்டு விவாகஞ் செய்துகொள்வாய் என்கிற இவ்வார்த்தைகளைச் சொல்லுவாய் என்றனள். (58–65½)

ஓம் ஈகாரரூபிண்யை நம:

## 24. தூதுவர் உரை

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! இவ்வண்ணம் தேவி கூறிய வார்த்தைகளைக்கேட்ட தூதன் ஆச்சர்யப்பட்டவனாய் தேவியைப்பார்த்துக் கூறுகின்றான் : ஓ திரிலோக சுந்தரியே! நீ பேசுவதில் மிகவுஞ் சாமர்த்திய முடையவளென்று இப்பொழுது

சொல்லிவந்த சில நியாயத்தால் தெரிந்துகொண்டேன். ஆயினும் "பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்" என்பதனையும் உன்பால் காணப்பெற்றேனுகையால் எனக்கு வியப்பை விளைவிக்கின்றது. இப்போது நீ என்ன சொன்னுய்? "உன் பலத்தினுல் என்னை வெற்றிகொண்டு விவாகஞ் செய்துகொள்வாய்" என்று சொல்லச் சொன்னுய்? நீ சொல்லிய இந்தச் சொல்லால் அவன் உன்னை ஜயிப்பதற்கு முடியாதென்பதல்லவோ உன்னுடைய துணிவு? இந்திரன் முதலானேரை வெற்றிகொண்ட அவ்வீரனை நீ வெற்றி கொள்ள எப்படி இச்சித்தாய்? யுத்தத்தில் சும்பனை ஜயிப்பவரும் உண்டோ? ஸ்திரீ ஜாதியாயிருக்கின்ற நீ யுத்தலக்ஷணத்தை யறிய வில்லையோ? ஓர்கால் அறிந்தவளா யிருந்தாலும் 'அவனுக்கு முன் யுத்த வார்த்தையைச்சொல்லி நிற்கவல்லையோ? உன்னளவை யறியாமற் சொன்னுயல்லவா? "யாகாவாராயினு நாகாக்க, காவாக்காற் சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு" என்னும் நீதி வாக்கியத்தைக் கேட்டதில்லையோ? தனது பலத்தையும், எதிரியி னுடைய பலத்தையும் அறிந்தல்லவோ வீரம் பேசவேண்டும்? அவனை நீ ஏனையோரைப்போல லேசாக நினைக்கவேண்டாம். அவன் உன்னுடைய ரூபலாவண்யங்களைக்கேட்டுக் காமவெறி கொண்டு யுத்தத்தை மறந்து உன்னைப் பிரார்த்தனை செய்வதற் காளாயி னனேயன்றி யுத்தமுகத்தால் அடையவெண்ணுவனு யின் நீ எவ்வளவு? அவனது சமயத்தை எண்ணிப்பார்த்து விளை யாட்டு வார்த்தையைவிட்டு அவனிஷ்டத்தைப் பூர்த்திசெய்வாய். நீ மூர்க்க சுபாவத்தை விட்டு எனது வார்த்தையை நன்கு மதித்து சும்பனையாவது, நிசும்பனையாவது அடைவாயாக. நானுனக் கிதத்தைக் கூறுகின்றேன். அஃதாவது, சகலப் பிராணிகளாலும் எப்போதும் எவ்வாற்ருனும் சிருங்காரரசமே சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்ளத்தக்கது. அதனுல் புத்திமான்களும் சிருங்கார ரசத்தையே உத்தமமாகக் கொண்டு புதிதுபுதிதா யனுபவிக் கின்றனர். ஓ சிருங்காரரச முடையாளே! நான் சொல்லியவாறு நீ இணங்கிவராவிடில் எங்களரசன் கோபித்து வேறு தூதர்களை விடுத்து உன்னைப் பலாத்காரமாய்க் கூந்தலைப் பிடித்திழுத்து வரும்படி செய்வான். ஓ ஏலவார் குழலி! அக்கொடியராகிய தூதரும் அப்படியே செய்வர். ஓ மயில் போன்றவளே! நீ சாகசஞ் செய்வதைவிட்டு நாணத்தைக் கொள்ளவேண்டிய வளாக விருக்க நாணத்தைவிட்டுச் சாகசத்தைச் செய்கின்றனையே! இது பெண்தன்மையாமோ? இனியேனும் நாணத்தைக் கைக் கொண்டு எங்களரசனருகில் வருவாய். நீ கௌரவமாய் வாழ்வதற் குரியவள். உனக்கு அம்புகளைக் கொண்டு செய்யும் யுத்தமெங்கே, கேளிவிலாசமாய்ச் சுகித்திருக்கும் சுகமெங்கே? இவைகளை விசாரித்து நான் முன் சொல்லியவண்ணஞ் செய்வாயாக என்றனன். (1-11)

இவ்வாறு கூறிய வசனங்களைத் தேவிகேட்டுக் கூறுகின்ருள்: ஓ மூடனே! நீ பேசுவதிலும் நிபுணனென்றறிகின்றேன். சும்ப

நிசும்பர்கள் மிக்க பலவான்களென்பதை நானே யறிவேன். அறிந்தேனுயினும் முன் என்னுல் எது பிரதிக்ஞை செய்யப்பட்டதோ அஃது இப்போது இங்ஙனம் வேறுபடுமா? ஆதலின் நீ விரைவாக அசுரர் பாற்சென்று நான் சொல்வது போற்சொல்வாய். எவ்வளவு பலவானென்று தெரிந்தபோதிலு மென்னிடத்தில் யுத்தஞ்செய்து வெற்றிகொள்ளாதவனையும், அழகினுல் மாத்திரம் என்னை வெல்ல நினைக்கின்றவனையும் நான் பர்த்தாவாகக் கொள்வதில்லை யென்றும், என்னை யுத்தமுகத்தில் வெற்றி கொள்ளத்தக்க வன்மையாளன் எவனே அவனே எண்ணியவாறு என்னைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்ள வல்லவனுவனென்றும், யானே ஒருவனுல் பாணிக்கிரகணமாவதற்கு விருப்பங்கொண்டு வந்தவளல்லவள், எதிர்ப்போரது பிராணனைக் கிரகணம் பண்ணுவதற்கே விருப்பங்கொண்டு வந்தவளென்றும், ஆதலின் நீ சக்தியுள்ளவனுயின் என்னேடு போர்செய்ய வரலாமென்றும், என்னுடைய சூலத்திற்குப் பயங்கொள்வையாகில் சீக்கிரத்தி லிருந்த விடந்தெரியாமல் பாதாளம்போய்ச் சேர்ந்து வாழலாமென்றும், அடா! உனக்குப் பிராணனிடத்தில் விருப்பமுளதாயின் சுவர்க்கத்தையும் பூமியையும் விட்டோடிப் போகலாமென்றும் அஞ்சாமற் சொல்வாய். அவன் நீ சொல்லியவற்றைக் கேட்டு எது செய்தால் உசிதமென்று தோன்றுகிறதோ அதனைச் செய்வானுக. ஓ தருமந் தெரிந்த தூதனே! இத்தன்மையான விவகாரத்தில் தூதாக வருகின்றவனது தருமம் சத்துருவினிடத்திலும், தனது அரசனிடத்திலும் வாய்மைக்கு விரோதமாக ஒன்றுஞ் சொல்லக் கூடாதன்றே? அதனை எண்ணி நீ சீக்கிரமாய்ச் செல்வாயாக என்றனள்.

அவன் இவள் சொல்லியவெல்லாம் நீதியையும், தனது பலத்தையும் கால ஏதுவையுங் காட்டுங் கம்பீரமுடையன வென்றுச்சரியமடைந்து அசுரனிடஞ்சென்று அடிபணிந்து கைக்கூப்பி நின்று வணக்கத்துடனும், விநயத்துடனும் அசுரனுக்குப் பிரியமுண்டாகும் வண்ணம் நீதியுடன் சொல்லத் தொடங்கினுன் : (12–21)

ஓ அசுரேந்திரனே! உண்மையாயும் பிரியமாயுமுள்ள வசனத்தையே கூறவேண்டும். அவ்வண்ணம் கூறுவோர் அருமையன்றே? உண்மைக்கும், பிரியத்துக்கும் மாருகப் பேசுவதற்கு என்மனம் மிகவும் வருந்துகின்றது. ஏனெனில் உண்மையைக் கூறினுல் பிரியத்துக்கு விரோதமாயும், பிரியத்தைப் பாராட்டினுல் உண்மைக்கு விரோதமாகவும் இருக்கின்றதனுலென்க. கேட்போர் அறிவின் வசப்பட்டிருப்பாராயின் ஒரு தீங்கும் உண்டாகாது; ஆகவே நான் கூறுவதை யறிவுடன் கேட்பாயாக. இப்போது யுத்தத்துக்கு வந்திருப்பவள் உன்னிடம் வரத்தக்கவள்தானே? அவள் போர்செய்யுந் திறமற்றவளோ? அவள் செய்யும் சாகசக்கியங்களை என்னுலறிய முடியவில்லை. அவள் யாருக்குப் பத்தினியோ அதனையுங் கண்டுபிடிக்க முடியவில்லை. யுத்தத்தில் மிகவும் அகங்காரம் கொண்டிறுமாந்து கொடுமையைப் பேசுவதை மாத்திரம் அறியவல்லனுயினேன். அதனைக் கூறுகின்றேன். அவளென்னைப்

பார்த்து, ஓ தூதனே ! யான் பால்யத்தில் தோழிகளுடன் கூடி விளையாடிக் கொண்டிருக்குங் காலத்தில் என்னை யுத்தத்தில் ஜயித்து எனது கர்வத்தையடக்குபவன் எவனோ, அவனை நான் வரனாக வரித்துக்கொள்வே னென்று பிரதிக்ஞை செய்திருக்கின்றேன். அதனை இப்போது மாற்றுவேனா ? அந்தப் பிரதிக்ஞை பொய்த்துப் போகாவண்ணம் இந்தச் சும்பன் என்னிடத்தில் போர் செய்து வெற்றிகொண்டு, பின்தானென்ணியவாறு என்னையாள விரும்புவானாயின் யான் தடை சொல்லேன் என்றாள்.

ஐயா ! இனி இவ்வார்த்தைகளால் என்னவறிய வேண்டுமோ அதனையறிந்து எதனைச் செய்ய வேண்டுமோ அதனைச் செய்வாயாக. அவளோ யுத்தத்துக்குத் தயாராய்ச் சர்வாயுதபாணியாய்ச் சிங்கம்போல் இன்னமும் யாவர் வருவார்களென்று எதிர்பார்த்திருக்கின்றாள். அவளுக்குக் கொஞ்சமும் யுத்தத்தில் பயமில்லை. இனி நீ எதனை விதிக்கின்றனையோ, அதனைச் செய்கின்றேனென்றனன். (22–29)

அவைகளைக்கேட்ட சும்பன் அருகிலிருந்த தம்பியைப் பார்த்துக் கூறுகின்றான் : ஓ தம்பி ! நீ மிக்க புத்திசாலியல்லவா ? இப்போது யாம் யாது செய்யலாம் ? யுத்தத்துக்குக் கூப்பிடும் ஸ்திரீயோ ஒருத்தி ; ஆகையால் நானாவது போகிறேன் அல்லது நீயாவது போ ; எது உசிதமோ அதனை இப்போது செய்வாயென்றனன். அவன், ஓ அண்ணா ! அவளிடத்தில் நீயும் போகக் கூடாது ; நானும் போகக்கூடாது ; தூம்பரலோசன னென்பவனை அனுப்புவோம். அவன் அவளை ஜயித்து அழைத்துக்கொண்டு வருவான். அவன் அழைத்து வரும்படியான பலமுள்ளவனென்று சொல்லினன். சும்பன் அதற்கிசைந்தவனாய்த் தூம்பரனைப் பார்த்துக் கூறுகின்றான் :

நீ சீக்கிரமாய்ச் சேனைகளுடன் சென்று மதமயக்கத்தால் கர்வங்கொண்டிருக்கும் அவளை அடக்கி அவளுக்குத் துணையாகத் தேவராயினும், அசுரராயினும், வேறெத்தகையராயினும் வருவராயின் அவர்களையும், அவளுடனிருக்கின்ற காளியையும், கொன்று வருவாய். ஓ தூம்பரனே ! நீ யுத்தஞ் செய்யும்போது நான் விரும்பியுள்ள ஸ்திரீ மிருதுவான சரீரமுள்ளவளாதலால் அவள் பேரில் கொடுமையான பாணங்களை விடாமல் ஏனையோர்கள் மேல் கொடூரமான பாணங்களை விட்டு அவருயிர்களை வாங்கி விடுவாய். அந்த ஸ்திரீயை மாத்திரம் வதை செய்யாமலும், வாதை செய்யாமலும் அழைத்துக் கொண்டுவருவாய் என்றனன். (30–40)

இங்ஙனம் சும்பனாலேவப்பட்ட தூம்பரலோசனன் உடனே அறுபதினாயிரம் அசுரவீரர்களுடன் யுத்தஞ்செய்யப் புறப்பட்டு அழகிய உத்யான வனத்தின்கண் பிரகாசித்துக் கொண்டிருக்குந் தேவியைக்கண்டு அருகிற் சென்று யுக்தியுக்தமாயும் ரசமுடைய தாயுமுள்ள வசனங்களைக் கூறுகின்றான் : ஓ தேவி ! நான் சொல்வதைச் சாவதானமாய்க் கேட்பாயாக. எங்களரசனாகிய சும்ப

னுன்னைக்கண்டு மோகங்கொண்டு அதனால் மிக்க துன்பமுற்று ரசபங்கம் வராம லுன்னுடன் கூடிக் களிக்கும் வண்ணம் ஒரு தூத னிடம் தனது சமாசாரஞ்சொல்லி யுன்னிட மனுப்ப, அதற்கு நீ இணங்காமல் கூறிய வசனமானது விபரீதமாயிற்று. என்னை யெனின், நீ சொல்லிய வசனங்களிலுள்ள சூக்ஷ்மார்த்தத்தை அறி யாமல் அரசனிடஞ் சொல்லவே அவன் காமமயக்கங்கொண்டு மிகவும் அல்லற்படுகின்றான். நீ யுத்தம் என்று கூறியதன் பொருள் நானறிவேன். யுத்தம் ரதியாலும், உற்சாகத்தாலும் பாத்திரத்துக்குத் தகுந்தபடி நிகழ்வதாகும். இதில் ரதியால் நிக ழும் யுத்தம் பகைவர்களிடமாம். முற் கூறியது சுகத்தையும் பின்னர் கூறியது துக்கத்தையும் விளைவிப்பதாகும். ஓ பெண் மணியே! யான் உனது கருத்தை நன்குயறிவேன். நீ ரதி யுத் தத்தை விரும்பியே அவ்வாறு தூதனிடங் கூறி விடுத்தனை. இதனை நான் அரசனிடங்கூறவே அவன் என்னை உனதிடம் தூதாக வனுப்பினான். யான் அளவிறந்த சைனியங்களுடன் உன்னிடம் வந்தேன். நீ மிகவும் புத்திமதியாதலால் யான் கூறுஞ் சாரமாகிய வசனத்தைக் கேட்டுக்கொண்டு திரிலோகத்துக் கீசனும் தேவர்கள் கர்வத்தை யடக்கினவனுமாகிய சும்பனை அடைவாயாக. அடைவை யாயின் நீயே மகிஷியாயிருந்து நல்ல போகங்களை யனுபவிப்பாய். பெருந்தோளனாகிய அவன் காமலீலைகளில் பலவானுயுள்ளவன். அதனாலேயே உன்னை ஜயிப்பான். அவனிடம் நீ காமத்துக்குரிய பற்பல சேஷ்டைகளைச் செய்வாய். அவனும் அவ்வாறே செய் வான். அங்ஙனமான ரதி யுத்தத்திற்கு இக்காளி சாக்ஷியாயிருக் கட்டும். இவ்வாறு நடக்கும் யுத்தயோகத்தில் எனதரசன் உன்னை ஜயித்தவனாக, நீ சிரமமடைந்து படுக்கையில் உறங்கும்படியாவாய். ஆதலின், நீ எனது வார்த்தையை யுக்தமாக வெண்ணி மிகவுந் துக்கித்துக் கொண்டிருக்கும் எங்கள் அரசனை களிக்கச் செய்வா யாக என்றனன். (41–60½)

ஓம் ஈஸ்வரியை நம:

## 25. காளியின் கோர யுத்தம்

வியாசர் கூறுகின்றார்:—ஓ அரசனே! இவ்வாறு தூம்பரலோ சனன் கூறிப் பேசாமனின்றான். அவனைக் காளிகாதேவி பார்த்து நகைத்துக் கூறுகிறாள்: ஓ சிறிதுந் தெளிவில்லாத மூடனே! நீ சொல்லுஞ் சொல்லெல்லாம் கூத்தில் முன்னேவருகிற விகடக் கூத் தாடி சொல்வதுபோலிருக்கின்றது. அவனுக்கும் உனக்கும் வேற் றுமையில்லை. நீ மனதில் பல வீணான எண்ணங்களை எண்ணு கின்றவனாயும், பலவானாயும் சேனைகளைப் படைத்தவனாயுமிருக்கிற துராத்மாவால் அனுப்பப்பட்டவனாயு மிருக்கின்றான். ஓ மூடபுத்தி யுள்ளவனே! இப்பொழுது யுத்தஞ்செய்தால் செய்க, இல்லாவிடில் ஓடிப்போவாய். வீணான வார்த்தைகளைப் பேசற்க. அச்சும்பனை

யும், நிசும்பனையும் அவர்களைப்போன்ற பலரையும், உன்னைப் போன்ற பலரையும் இத்தேவியானவள் கொன்று தன்னிடம்போய்ச் சேரப்போகின்றாள். மந்தபுத்தியுள்ள சும்பனுடைய தன்மை எங்கே! பிரபஞ்ச மோகமற்ற தேவியினுடைய தன்மை யெங்கே! இவ்விருவருக்கும் விவாகமென்று சொல்லுகின்ற வசனம் யுக்த மாகுமா? அயுக்தமான வார்த்தையைச் சொல்லற்க. பெண் சிங்க மானது அதிக காமமுள்ளதா யிருந்தாலும் ஒரு குள்ள நரியைத் தனக்குக் கணவனாகக் கொள்ளுமா? அதுபோலவே பெண் யானை யானது ஒரு கழுதையைக் கணவனாகக் கொள்ளுமா? காமதேனு வானது காட்டுப்பசு மிருகத்தை விரும்புமா? அந்தச் சும்ப நிசும் பர்களிடத்தில் நான் சொல்லிவந்த இந்த வார்த்தைகளைச் சொல்லு வாய். இல்லாவிடில் பாதாளத்தைப் பார்த்து ஓடுவாயென்றாள். (1–7)

இவ்வுதாசீனமான வார்த்தைகளைத் தூம்பரலோசனன் கேட் டுக் கண்சிவந்து உக்கிரமான கோபத்தோடு காளிகாதேவியைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ விகாரமான வுருவத்தையுடைய வளே! உன்னுடைய சரீர விகாரத்தை மறந்து என்னைப் பார்த்துக் கூத்தாடியைப்போல் பேசுகின்றனை. ஓ கூத்தாடி யென்றா என்னை யழைக்கின்றாய்? என்னால் சொல்லப்பட்ட சும்ப னுக்கு நீ சொல்லிவந்த உவமானங்களெல்லாம் மிகவும் நன்றாயிருந் தன! ஆஹா! இப்பொழுதுன்னையும் இச்சிங்க வாகனத்தையுங் கொன்று பின்னர் இந்த ஸ்திரீயைப் பிடித்துக் கொண்டுபோய் எனதரசனிடம் நிறுத்துவேன். இஃது ரசமானதல்லவே யென்று பயப்படுகிறேன். ரசபங்க முண்டாகக் கூடாதென்கிற ஞாபகத்தை எண்ணா தொழிவேனாயின் கலகப் பிரியையான உன்னை இந்த வாளால் வெட்டி விடுவேன். ஓ மந்தமதியுள்ள காளீ! எதற்காக உன்னை நீயே புகழ்ந்து பேசுகிறாய்? இது வில்லாளிகளின் தன்மை யல்ல. உனக்கு ஏதேனும் யுத்தமென்பது தெரிந்திருக்குமாயின் உன் சக்திக்குத் தக்கபடி பாணங்களை விடுவாய். என்னால் நீ யம னுடைய சபையைப் போய்ச் சேரப்போகின்றாய் என்றனன். (8–11)

காளி அந்த க்ஷணமே வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து பாண வருஷங்களைப் பொழிந்தாள். ஆகாயவாசிகளாயிருந்த தேவரெல்லாம் காளிகாதேவியைப் பார்த்துத் தோத்திரஞ் செய்து உனக்கு ஜயமுண்டாகக் கடவதென்று வாழ்த்தினர். இருவரும், பாணம், கத்தி, கதை, உலக்கை முதலான பலவற்றை மாறி மாறி விட்டு யாவர்க்கும் பயத்தை விளைவித்தனர். காளிகாதேவி தூம்பர னுடைய தேரிற் பூட்டியிருக்கின்ற கழுதைகளை மோதியடித்து தேரையுமொடித்து அட்டகாசஞ் செய்தனள். அந்தத் தூம்பரன் வேறொரு தேர்மேலேறி அதிக கோபங்கொண்டு காளிகா தேவியின் மேல் பாணங்களை விட்டனன். அவள் அவைகளைத் தடுத்து அவன் மேல் பாணங்களை விட்டு அப்பாணங்களாலேயே அவனுடைய சேனைகளெல்லாம் அடிபட்டோடும் வகையைத்தேடி வேறு சில

பாணங்களை விட்டு அவனுடைய தேரை முன்போலழித்து வில்லையும் ஒடித்துவிட்டு தேவர்கள் மகிழும்வண்ணஞ் சங்கத்துவனி செய்தனள். அதுகேட்ட தூம்பரன் நாணமுற்றிப் பரிகமென்னும் ஆயுதத்தை யெடுத்துக்கொண்டு, ஓ காளிகா! இதோ உன்னைக் கொன்றுவிட்டேனென்று சொல்லி, ஓ பூனைக்கண்ணியே! என்று பரிகாசஞ்செய்தனன். அவ்வளவில் அவன் பஸ்மமாய்ப் போயினன். (12–22)

அதுகண்ட சேனைகளெல்லாம் பயந்தோடி நெடுந்தூரஞ் சென்று, ஓ அண்ணா! அண்ணா!! என்று கதறிக் கதறிக் கூவிச் சென்றன. தேவர்களெல்லாம் புஷ்பமாரி பொழிந்து ஆரவாரித்தனர். யுத்தகளமானது யானைகளாலும் குதிரைகளாலும் கழுதைகளாலும் நிறையப் பெற்றுப் போர்க்குப் பயங்கரத்தையும் கழுகு காக்கை நரிகள் முதலியனவற்றிற்குச் சந்தோஷத்தையும் விளைவித்தது. காளிகாதேவி யுத்தகளத்தைவிட்டு அப்புறம்போய் நின்று சங்கநாதஞ் செய்தனள். அந்த வொலியைக்கேட்ட சும்பன் வெளியே வந்து, கைகளற்றும் கால்களற்றும், அடிபட்டும், உதைபட்டும் பெருங்கூச்சலிட்டு ஓடிவருகின்ற சேனைகளைக் கண்டு, தூம்பரலோசனனெங்கே? எங்குப் போயினன்? அவனிருக்க நீங்களெப்படித் தோல்வியடைந்தீர்கள்? நம்முடைய சேனைகளெல்லாம் எங்கே? ஸ்திரீயை ஏன் கொண்டுவரவில்லை? என்ன செய்தி? சொல்லுங்கள்; சங்கநாதங் கேட்கப்படுகின்றதே அது யாரால் செய்யப்படுகிறதென்று கேட்கத் தூதர்கள் கூறுகின்றனர்: (23–31)

ஐயா பிரபுவே! கேளும்; தூம்பரலோசனனா? யுத்தகளத்திற்குத் தூமமாய்விட்டான். எங்களுக்குத் தோல்வியா? அத்தோல்வி வந்தபடியினாலன்றோ நீர் எங்களால் சங்கதி யறியலாயிற்று. நம்முடைய சேனைகளா? அவ்வுலகிலன்றோ போயின. ஸ்திரீயை ஏன் கொண்டு வரவில்லையா? நீர் மாளுவதற்காயின் கொண்டு வருகின்றோம். சங்கநாதஞ் செய்வதா? யாவரையுங் கொள்ளை கொள்வதற்கு வந்திருக்கும் காளிகாதேவியாகும். ஓ மஹாராஜாவே! சங்கநாதத்தைக் கேட்டீரா? இன்னநந் துவனி யடங்கவில்லையே. அந்தத் துவனியானது தேவர்களுக்கு மேன்மேல் சந்தோஷத்தை விளைவிக்கின்றது. தானவர்களாகிய நமக்குப் பயத்தை விளைவிக்கின்றது. அந்தக் காளியினால் யானை முதலிய படைகள் மாண்ட கோலாகலத்தையும் அவளது ஒரு ஹூங்காரத்தால் தூம்பரலோசனன் போன போக்கையும் நாங்கள் ஆலோசித்துப் பார்த்தே நமக்கு ஜயமுண்டாகா தென்று நிச்சயித்துக் கொண்டோம். நீரும் ஆலோசனையிற் சிறந்த மந்திரிகளோடு ஆலோசனை செய்து யுக்தமானவற்றைச் செய்யும். சேனைகளைத் துணையாகக்கொண்டு வராது தான் தனியாகவே வந்து உம்முடைய யுத்தத்தை விரும்பி யிருக்கின்றாளே அந்த ஸ்திரீ! இஃதுவென்ன ஆச்சரியம்! அவளுக்குப் பயமுண்டோ வென்றால் ஒரு சிறிது மில்லையே! அவள் சிங்கத்தின் மேலேறிக்கொண்டு மதச் செருக்குடையவளா யிருமாந்திருக்கின்றனளே! இஃது

என்ன ஆச்சரியம்! நீர் சீக்கிரத்தில் மந்திராலோசனை செய்து சந்தியையாவது சண்டையையாவது இந்த ஸ்தானத்தை விட்டு ஓடிப்போவதையாவது எண்ணித் துணியும். அவள் தனியே யிருப்பதால் பலமில்லை என்றெண்ண வந்தாலும் தேவர்களெல் லாம் பின்பக்கத்தே யிருந்து பலஞ்செய்கின்றவர்களாக விருக்கின் றார்கள். அவள் சமீபத்தில் ஹரிஹராதிகள் நீங்காதிருக்கின்ற னர். திக்பாலகரும் ஏனைய கின்னரகிம்புருஷ ராக்ஷஸ கந்தர் வர்களும் இவ்வுலகிலுள்ள மானிடர்களும் அவளுடைய பக்ஷமா கவே யிருக்கின்றனர். ஆகலான் அவள் பலமில்லாதவளென்று எண்ணுவதற்கிடமேயில்லை. ஆனால் அந்தத் தேவி இவர்களை யெல் லாம் தனக்குப் பலமாக வெண்ணியிருக்கின்றாளோ வென்றால் இல்லை. அன்றி இந்த யுத்தமென்கிற காரியத்தை ஒரு காரியமாக வெண்ணியிருக்கின்றனளோ வென்றால் அதுவுமில்லை. ஏனெனில் அவளொருத்தியே தாவர ஜங்கம வுருவமாயுள்ள எல்லாப் பிரபஞ் சத்தையும் நாசம் செய்யவல்ல சாமர்த்தியத்தைப் படைத்தவ ளாகக் காணப்படுகின்றாள். அத்தன்மையான அவள் இந்தத் தான வர்களை யெல்லாம் நாசஞ்செய்யச் சமர்த்தையா யிருக்கின்றா ளென்று நாங்கள் சொல்லவும் வேண்டுமா? இவைகளை யெல்லாம் நீர் ஆலோசனை செய்து எதனைச் செய்யவேண்டுமோ அதனைச் செய்யும். ஏனெனின், "எண்ணித்துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவமென்ப திழுக்கு" என்றதை எண்ணிப் பாரும். நாங்கள் பிரபுவாகிய உம்முடைய க்ஷேமத்தை அனவரதமும் எண்ணுகின்ற அடிமைகளாதலால் இதமான வார்த்தைகளையும், உண்மையான செய்திகளையும் எடுத்துச்சொல்ல வேண்டியது அவசியம் என்று கூறினர். (32–45)

இவர்கள் வார்த்தையைக் கேட்ட சும்பன் ஒன்றுஞ் சொல்லாது தனியிடத்துக்குச் சென்று தனது தம்பியாகிய நிசும்பனை அழைத் துக் கூறுகின்றான்: ஓ சகோதரனே! காளிகாதேவியினால் நமது வெள்ளமான சேனைகளோடு தூம்பரலோசனன் இறந்து பட்டான். இறந்துபோன சேனைகள் போக எஞ்சிநின்ற சேனைகளும் அவ ளால் அடிக்கப்பட்டு ஓடிவந்துவிட்டன. அந்தக் காளிகா தேவிக்குத் தலைவியான ஸ்திரீயோ வெற்றிச் சங்கமெடுத்து ஊதுகின்றாள். இஃதுவென்ன காலம்! சும்பனென்கிற நாமத்தை இதற்குத்தான் படைத்தேனோ! நன்று! நன்று!! அந்தோ காலவேற்றுமையி னுடைய தருமத்தை ஞானிகளுமறியார். திரணம் வஜ்ராயுத மாகிறது; வஜ்ராயுதமும் திரணமாகிறது. பலவான் துர்ப்பலனா கிறான்; துர்ப்பலன் பலவானாகிறான். ஓ புத்திமானே! எனக்கோ இப்பொழுது எது செய்யத் தக்கதென்று தோன்றவில்லை. உன்னைக் கேட்கின்றேன். இதற்குமேல் என்ன செய்யலாம்? அந்த ஸ்திரீ என்னால் அனுபவிக்கப்படுவாளாகத் தெரியவில்லை. இது நிச்சயம். ஆகையினால் நாம் ஓடிப்போகிறது யுக்தமா? போர் செய்வது யுக் தமா? விரைவாய்ச் சொல்வாய். நீ சிறியவனாகி விருந்தாலும் இந்தச் சங்கடத்தில் உன்னைப் பெரியவனாக நினைக்கின்றே

னென்றான். நிசும்பன் கூறுகின்றான்: ஓ அண்ணாவே! ஓடிப் போவது யுக்தமல்ல. துன்பமாகிய சங்கடத்தை நினைத்து நாமதற் குள்ளாவதும் யுக்தமல்ல. அவளோடும் நாம் யுத்தஞ்செய்வதே நல்லது. நான் சேனைகளைக் கூட்டிக்கொண்டு யுத்தத்துக்குப் போகிறேன். உன்னால் கொல்ல முடியாதென்றெண்ணத் தக்கவளா யிருக்கின்ற அந்த ஸ்திரீயை நான் கொன்றுவிட்டு உன்னிடத்தில் அதிசீக்கிரத்தில் வந்துவிடுகிறேன். ஒருசமயம் தெய்வகதியாய் நான் அவளால் இறந்துவிடுவேனாகில் பின்னர் நீ நன்றாயா லோசித்து எந்தக் காரியத்தையும் செய்வாயென்றனன். சும்பன் தம்பியினுடைய வார்த்தையைக் கேட்டுக் கூறுகின்றான்: (46–54)

ஓ தம்பி! நீ போகவேண்டாம். சண்டமுண்டர்களைச் சேனை களோடு கூட்டி யனுப்புவோம். அந்த சண்டிக்கு இந்தச் சண்ட முண்டர்களே சரியானவர்கள். முயலைப் பிடிப்பதற்கு யானையை அனுப்புவது யுக்தமாமோ? ஆகையால் அந்த ஸ்திரீயைக் கொல் வதற்கு அவர்களே போதுமான சமர்த்தர்கள் என்றனன். இவ் வாறு சும்பன் தம்பிக்குச் சொல்லி அவனைத் தடுத்து சண்டமுண் டர்களை யழைத்துக் கூறுகின்றான்: ஓ சண்ட முண்டர்களே! நீங்கள் சேனைகளோடு அந்த ஸ்திரீயினிடத்தில் சண்டைக்குப் போய்ச் சிறிதும் வெட்கமில்லாமல் மதமேற்கொண்டிருக்கின்ற காளிகா தேவியைப் பிடித்துக்கொண்டு அவள் ஓடிப்போகத் தொடங்கினாலும் விடாமல் யுத்தமுகத்தில் கொன்று விடுவீர் களாயின் பெரிய காரியம் முடிந்தது. அதன்பின் சிங்கவாகனா ரூடையா யிருக்கின்ற அந்த ஸ்திரீயைப் பிடித்திழுங்கள். இழுத்தும் வராமற் போவாளானால் தீக்ஷ்ணமான பாணங்களால் அவளையுங் கொன்றுவிட்டு இருவரும் விரைவாய் வந்து சேருங்கள் என்று கட்டளையிட்டனன். (55–60)

ஓம் ஈப்ஸிதார்த்த ப்ரதாயிந்யை நம:

## 26. சாமுண்டி பராக்கிரமம்

வியாசர் கூறுகின்றார்:—அரசனே! மஹாசூரனாகிய சும்பனால் ஆஜ்ஞாபிக்கப் பட்டவர்களாயிருந்த சண்டமுண்டர்கள் எண் ணிறந்த சேனைகளைக் கூட்டிக்கொண்டு யுத்த பூமிக்குப் போய்த் தேவியைப் பார்த்துக் கூறுகின்றனர்: இளம்பருவத்தோடு கூடி யிருக்கின்ற ஓ பெண்ணே! உன்னைப் பார்க்கின்றபொழுது எங் கட்கு மிகவும் இரக்கமாக விருக்கின்றது. தேவகாதகனான சும்பனை யும் தேவேந்திரனை வென்றவனான நிசும்பனையும் ஏன் அறிந்து கொள்ளாமலிருக்கின்றாய்? நீ உன்னிலும் ஒரு சிறிய பெண்ணையும் அற்பமாயிருக்கின்ற ஒரு சிங்கத்தையும் துணையாகக் கொண்டிருக் கின்றாய். இதனால் நீ மிகவும் துர்ப்பலை என்று தெரியவருகின்றது. ஓ புத்தியில்லாதவளே! இவ்வளவு துர்ப்பலையா யிருக்கின்ற நீ சர்வ பலத்தோடுங் கூடியிருக்கின்ற சும்ப நிசும்பர்களை எவ்வண்

ணம் வென்றுவிடலாமென்று எண்ணினுய்? உனக்குப் புத்தி சொல்லப் புருஷனுவது, உனக்குத் தோழியாயிருக்கத்தக்க ஒரு ஸ்திரீ யாவது இல்லையா? தேவர்கள் இந்தக் காரியத்தில் உன்னைத் தூண்டினார்களே, நீ நாசமடைவதற்கா? அந்தோ! இப்படியுந் தூண்டுவாருண்டோ? அவர்கள் தூண்டினுலும் நீ எதிரிகளுடைய பலாபலங்களை நன்ருயறிந்தல்லவோ யுத்தத்துக்கு வரவேண்டும்? நீ பதினெட்டுக் கைகளைப் படைத்திருக்கின்றனையே, அதுவோ இந்தக் கர்வத்தை உனக்குக் கொடுத்தது? இது வீணை கர்வம். தேவர்களையெல்லாம் ஜயித்த அந்தச் சும்பனுடைய எதிரில் அநேகமாய் நீண்டிருக்கிற உனது கைகளால் என்ன பிரயோஜனம்? கைகளில் தாங்கி யிருக்கின்றனவாகிய ஆயுதங்களாற்ருன் என்ன பிரயோஜனம்? ஐராவதத்தினது துதிக்கையை அறுத்தவனுயும், தவத்திற் சிறந்த தேவர்களை ஜயித்தவனுயுமிருக்கின்ற சும்பனுடைய அபேக்ஷையை நீ பூர்த்தி செய்து விடுவாய். அவன் உன்னை அபேக்ஷித்தது உன்னுடைய நல்லகால மென்றெண்ணுவாய். அவன் உன்னை யபேக்ஷிக்காமல் போரை யபேக்ஷித்திருப்பானுனல் நீ அவனுக்கு மசகமல்லவோ? ஓ மனேகரமான ஸ்திரீயே! விசாலாக்ஷியே! வீணுக்கு ஏன் கர்வப்படுகிருய்? பிரியத்தை விளைவிப்பதாயும், நன்மையை யுண்டுபண்ணுவதாயும் இப்பொழுதே சுகத்தைக் கொடுக்கிறதாயும் இருக்கின்ற எங்கள் வார்த்தையைக் கேட்பாய். சுகத்தை நாசஞ் செய்கிறதாயும், துக்கத்தை விளைவிக்கின்றதாயு மிருக்கின்ற காரியங்களெல்லாம் அறிவுடையாரால் தூரத்தே விலக்கத் தக்கவை. சுகத்தைக் கொடுக்கிற காரியங்களே சாஸ்திர மறிந்த பெரியோரால் அனுசரிக்கத் தக்கவை. (1–10)

குயில்போலும் இன்னிசை யுடையாளே! நீ சமர்த்தையாகவுங் காண்கின்ருய். ஆகலான் நாங்கள் சொல்வதைக் கேட்பாயாக. சும்பனென்பவன் தேவர்களை நாசஞ் செய்வதனுல் அதிகமான விருத்தியடைந்து சுகமுற்றிருக்கிருனென்பது பிரத்தியக்ஷம். அவன் பலமுடையவனென்பதற்கு வேறு சாக்ஷி வேண்டுமா? நீ எண்ணிப்பார். ஒருவன் பிரத்தியக்ஷமான காரியத்தைவிட்டு, சந்தேகமான காரியத்தில் பிரவேசிப்பானு? தெளிவுள்ளவன் சந்தேகமான காரியத்தில் ஒருநாளும் பிரவேசிக்கமாட்டான். சும்பன் தேவர்களால் ஜயிக்கமுடியாத வலுத்த சத்துருவாயிருப்பதால் உன்னை அவனை ஜயிப்பதற்குத் தூண்டினுர்கள். இஃது ஆண் தன்மையாகுமா? போருக்கு ஆண்மகன் வந்தால், போரை விரும்பலாம். பெண்பால் வந்தால் சுத்த வீரனுயினும் வீரப்போரை விரும்புவனு, காமப் போரையே விரும்புவான். இந்த வஞ்சத்தை எண்ணியே தேவர்கள் உனக்கு இதமான வார்த்தைகளைச் சொல்லி இந்தக் காரியத்தில் உன்னைத் தூண்டிவிட்டார்கள். அந்த உண்மையை நீ அறியாது அவர்களுடைய வஞ்சனைச் செயலுக்குட்பட்டனை! உன்னுல் போர்செய்ய முடியுமா? உன்னை வருத்தப்படுத்துவதற்காகவும் இந்த வஞ்சனையைச் செய்தனர்.

உலகில் காரியமித்திரனென்றும், தருமமித்திரனென்றும் இரு

வகையார். இவருள் காரியசித்தி வேண்டியவர் காரியமித்திரனை விட்டுத் தருமமித்திரனைக் கொள்ளல் வேண்டும். தேவர்கள் தங்கள் காரியத்தை எண்ணுகிறவர்களாதலால் அவர்கள் காரியமித்திரர்கள். நாங்கள் உன்னுடைய காரியத்தை யுத்தேசித்து இவ்வளவுஞ் சொல்லுகின்றோமாகையால் தருமமித்திரர்கள். எங்கள் சொல்லை உறுதியாக நம்பு. தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவனையும், எல்லாவுலகங்களுக்கும் பெரிய பிரபுவாயும் எங்கும் ஜயம் படைத்துள்ள சதுரனையும், சூரனையும், சுந்தரனையும், காம சாஸ்திரத்தில் சதுரனையுமிருக்கிற சும்பனென்னும் மஹா வீராதி வீரனை நீ வரனைக்கொள்வாய். அங்ஙனங் கொள்வையேயாயின் அவனுடைய ஆக்ஞையினால் சகலலோக சாம்ராஜ்யமும் உன்னுடையதாகும். உனக்குக் குறையென்பதேது? மனத்தை உறுதிப்படுத்த நாங்கள் சொல்வதை யெண்ணிப்பார்ப்பாயென்றனர். (11–17)

இவ்வண்ணஞ் சொல்விவந்ததைக் கேட்ட ஜகதம்பிகை யானவள் மேகம்போல் கர்ச்சித்துக் கூறுகின்றாள் :—ஓ மூடனே! ஏன் வீணாய்ப் பேசுகின்றாய்? திருமால் முதலான தேவர்களைக் கணவனைக் கொள்ளாத நான் சும்பனை எதற்காகக் கணவனைக்கொள்வேன்? எனக்கொரு நாயகன் வேண்டியதில்லை. அவனிடத்தில் எனக்கென்ன வேலை? சர்வ பூதங்கட்கும் நானே நாயகி. எங்கும் என்னாலேயே எல்லா வேலைகளையும் முடித்துக் கொள்கின்றனர். என்னையன்றி ஒருவரும் ஒரு சுகத்தையும் அடைந்தாரில்லை. இந்த சும்ப நிசும்பர்களைப்போல் அநேகரை நான் பார்த்திருக்கின்றேன். அநேக தைத்தியர்களைக் கொன்றிருக்கின்றேன். தேவர்களால் எனக்கொரு பலமுள்ளதாக நினைக்கவேண்டாம். அவரெல்லாம் யுகங்கடோறும் என் முன்னே நாசமடைகின்றவர்கள்! இப்பொழுது உங்களுக்கு நாசகாலம் வந்திருக்கிறது. என்னை உங்களுடைய கூட்டங்களை யெல்லாம் கொல்லவந்த யமனென்றறிவீர். இனி உங்களுடைய சந்ததிகளைக் காப்பதற்கு எவ்வளவு பிரயத்தனப் பட்டபோதிலுங் காத்துக்கொள்ளுவதற்கு முடியுமா? ஏன் வீணாய்ப் பிரயத்தனப் படுகின்றீர்கள்? சந்ததியைக் காத்துக்கொள்ளும் முயற்சியைத்தேடி யுத்தஞ் செய்யுங்கள். வீரதருமமுணர்ந்த பெரியோர் யுத்தத்தினால் வரப்போகிற மரணபயத்தை யடைவதில்லை; கீர்த்தியொன்றையே அடையவிரும்புவர். ஆகையால் சும்ப நிசும்பர்களால் நீங்கள் அடையப்போகிற பிரயோஜனமென்ன? வீரதருமத்தை விரும்பி என்னோடு யுத்தஞ்செய்து வீரசுவர்க்கத்தை யடையுங்கள். நீங்கள் முன்னே போய்ச் சேருவீர்களானால் உங்கள் பின்றொடர்ந்து ஏனையரெல்லாரும் வந்து சேருவார்கள். நான் இப்பொழுது அசுரர்களை யெல்லாம் கிரமமாய்க் கொல்லப் போகின்றேன். ஓ மந்தாத்மாக்களே! நாமும் நம்மினத்தவரும் நாசமடைய வந்துவிட்டதேயன்று துக்கப்படுவதை விட்டுவிடுங்கள். யுத்தஞ் செய்யுங்கள். உங்களுக்கு மேலுலகம்போகும் வழியைக் காட்டிவிட்டுச் சும்பனையும், நிசும்பனையும் மதோத்கடனை ரக்தபீஜனையும் மற்றவர்களையுங் கொன்று என்னிடம் போகப்போகிறேன்.

யுத்தஞ்செய்யச் சக்தியிருந்தால் வாருங்கள்; வில்லை எடுங்கள்; இல்லாவிடின் நில்லுங்கள். நீங்கள் பயங்காளிகளாக விருக்கின்றீர்கள். யுத்தஞ்செய்ய வந்தோம் வந்தோமென்று ஏன் பொய் வார்த்தை பேசுகின்றீர்கள் என்றனள். (18–30)

சண்டமுண்டர்கள் அம்பிகையினுடைய வார்த்தையைக் கேட்டுக் கோபங்கொண்டு தனுசை யெடுத்து நாணொலி செய்தனர். சண்டிகா தேவியும் பத்துத் திக்குஞ் செவிடுபடச் சங்கநாதஞ் செய்தனள். சிங்கமுங் கோபங்கொண்டு கர்ஜித்தது. இவ்விரண்டொலியுங் கேட்ட இந்திரன் முதலிய தேவர்கள் சந்தோஷித்தனர். சண்டிகையோடு, சண்டன் போர் தொடங்கிக் கூர்மையான பாணம் முதலியவைகளைக் கூட்டங்கூட்டமாக விட்டனன். அவைகளை யெல்லாம் சண்டிகையானவள் பொடிப் பொடியாக்கித் தும்சம் செய்தனள். முண்டனும் சேனைகளோடெதிர்த்துப் பாணங்களை அமோகமாக விட்டனன். அது கண்ட அம்பிகை கோபங்கொண்டனள்; கொள்ளவே திருமுகம் மேகம்போற் கறுத்தது. இரண்டு கண்களும் சிவந்தனவாய் வாழைப்பூப்போலாயிற்று. அப்பொழுது நெற்றிக் கண்ணினின்றும் காளி என்கிற சக்தி தோன்றி, புலித்தோலை ஆடையாகத் தரித்தவளாயும், யானைத்தோலை உத்தரீயமாகப் போர்த்தவளாயும், பிரம்ம விஷ்ணுக்களுடைய தலைகளை மாலையாக தரித்தவளாயும், நீரில்லாத ஆழ்ந்த கிணற்றைப்போல் கொப்பூழுடையவளாயும், வாள், பாசம் முதலிய பல ஆயுதங்களைத் தரித்தவளாயும், பரந்த திருமுக மண்டலத்தை யுடையவளாயும், அடிக்கடி நாவை மடித்து கோபக் குறியைக் காட்டுகின்றவளாயும், விசாலமான நிதம்பத்தைப் படைத்தவளாயும், பார்ப்போருக்குப் பயத்தை விளைவிக்கின்றவளாயும், அடங்காத கோபத்தை எப்பொழுதும் உடையவளாயும், காளராத்திரியைப் போல் நிறம் படைத்தவளாயும் பிரகாசித்தனள். (31–42)

இங்ஙனமான கோலத்துடன் விளங்கிய காளிகாதேவி அசுரச் சேனைகளை யெல்லாங்கொன்று அச்சேனைகளின் மஹாவீரர்களாயிருந்தவரையெல்லாம் கைகளால் வாரி வாரித் தனது வாயிலிட்டுப் பற்களாலிறுக்கினள். அப்படியே அந்தந்தப் பாகர்களோடும் மணி கட்டிய மதத்த யானைகளையும் குதிரைகளையும் ஒட்டைகளையும் சாரதிகளையும் ஒன்றுகவே விழுங்கி விழுங்கி பற்களால் மென்று விட்டனள். இந்தப் பெருங் கொள்ளையைப் பார்த்த சண்டமுண்டர்கள் பாணங்களை வருஷமாகப் பொழிந்து சேனைகள் அவள் கண்ணுக்குத் தோற்றுவண்ணம் அவளை மூடிவிட்டனர். பின்னர் சண்டனுனவன் சக்கராயுதத்தை விட்டுக் கர்ஜனை செய்தனன். காளிகாதேவி கர்ஜிக்கின்ற சன்டனையும் அவனால் விடப்பட்ட சக்கராயுதத்தையும் பார்த்துப் புன்னகை செய்து அவன் கொண்டகர்வம் அடங்கும் வண்ணம் ஒரு பாணத்தினால் மூடிய பாணங்களை விலக்கிச் சக்கராயுதத்தைப் பொடியாக்கி மற்றொரு பாணத்தினால் அவனை யடித்து மூர்ச்சிக்கச் செய்தனள். மூர்ச்சையாய்ப் பூமியில் விழுந்துகிடக்கின்ற சண்டனை முண்டன்

பார்த்து அதிதுக்கிதனைக் காளிகாதேவியின் மீது அநேக பாணங்களைப் பொழிந்து கர்ஜித்தனன். அது கண்ட சண்டிகா தேவி ஈஷிகாஸ்திரமென்கிற ஓரஸ்திரத்தினால் அப்பாண வருஷங் களைப் பொடிப்பொடியாக்கிப் பின்னர் சந்திராஸ்திரத்தால் மகா வீரியமுள்ள அந்த முண்டனை யடித்தனள். அவன் அந்த அடியி னாலேயே மதமடங்கிப் பூமியில் வீழ்ந்தான். அவன் வீழவும் சேனைகளெல்லாம் ஓவென்று பெருங் கூச்சலிட்டன. ஆகாயத்தி லிருந்த தேவரெல்லாம் துக்கம் நீங்கிச் சந்தோஷித்தனர். முன் விழுந்த சண்டன் மூர்ச்சைதெளிந்தெழுந்து சேனைகளுடைய பயங்கரவோசையும் தேவர்களுடைய நிர்ப்பய வோசையுங்கேட்டு மனம்புழுங்கி பெரிய கதாயுதமொன் றெடுத்துக்கொண்டு ஓடிப் போய்க் காளிகாதேவியினுடைய வலது தோளின்மே லடித்தனன். காளிகாதேவி அந்த அடியைத் தாங்காமல் உடனே பாசத்தை எடுத்து மந்திரித்துவிட்டு அவனைப் அப்பாசத்தினாற் கட்டி விட்டனள். பின்னர் முண்டன் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து பாசத்தாற் கட்டுண்டிருக்கும் சண்டனைப்பார்த்துக் கோபங்கொண் டவனாய் ஒரு சக்தியாயுதத்தை எடுத்து ஓடிவந்தான். அவனையும் அந்தத் தேவி பாசத்தினாற் கட்டிவிட்டாள். (42–57)

பின்னர் அந்தக் காளிகாதேவியானவள் மஹா வீரர்களான அவ்விருவரையும் முயல்களைப்போல் இரண்டு கைகளிலும் ஏந்திக் கொண்டு அம்பிகையினிடம் வந்து, ஓ தேவி ! இவ்விருவரும் இந்த யுத்தமாகிய யாகத்தில் யாகபசுக்களாகக் கொள்ளத்தக்கவர். நீ இந்த யாகத்துக்குப் பதியாயிருப்பதால் இந்தப்பசுக்களை ஏற்றுக் கொள் என்றனள். அம்பிகை காளியைப்பார்த்து மகிழ்ந்து அவ் விருவரும் ஒரு செயலுமற்றிருப்பதைக் கண்டு நகைத்து, ஓ காளி ! நரிகள்போல் விழிக்கின்ற இந்த இருவர்களையும் நீ கொல்ல வேண் டாம் ; உயிரோடு விடவும் வேண்டாம் ; யுத்தத்தில் பிரியமுள்ள வளே ! நீ மஹா சமர்த்தை. உனக்கு நான்வேறு சொல்லவேண்டுமா? தேவர்களுடைய காரியசித்தியை நீ செய்யத்தக்கவளென்றனள். காளி அம்பிகையினுடைய குறிப்பையுணர்ந்து, ஓ தேவியே ! நான் இவர்களைக்கொன்று திருப்தியடைகிறதில்லை. பிரசித்தமான இந்த யுத்தகளமாகிய யாகசாலையில் யூபஸ்தம்பமாகக் கத்தியை நாட்டி யிருக்கின்றது. ஆகையால் யாவருக்கும் இம்சையில்லாதிருக்கும் வண்ணம் இவ்விருவரையும் அந்தக்கத்தியினால்வெட்டி ரத்த பானஞ் செய்து திருப்தியடைந்திருக்கிறேனென்று அதிவேகமாய்ச் சென்று அந்தக் கத்தியை எடுத்து அவ்விருவர் தலைகளையுமறுத்து அதிக சந்தோஷத்துடன் ரத்தபானஞ் செய்தனள். அது கண்டு அம்பிகை ஆனந்தங்கொண்டு காளியை நோக்கித் தேவர்களுடைய காரியம் உன்னால் முற்றுப் பெற்றபடியால் உனக்கோர் நல்ல வரத்தை நானே மகிழ்ந்து கொடுக்கிறேன். நீ சண்டமுண்டர்களைச் சங் காரஞ் செய்தபடியால் " சாமுண்டி " என்று உலகின்கண் யாவ ராலும் போற்றப் பெறக்கடவா யென்றருள் புரிந்தனள். (58–65½)

ஓம் ஈத்ருகித்ய விநிர்தேஶ்யாயை நம:

## 27. ரக்தபீஜன் பிரவேசம்

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! இனி ரக்தபீஜனுடைய யுத்தத்தைச், சொல்லுகிறேன், கேட்பாயாக. சண்ட முண்டர்களிறந்ததைக்கண்ட அசுரச்சேனைகளெல்லாம் சும்பனாகிய தங்களுடைய அரசனை நோக்கிச் சென்றன. கைகால் முதலிய உறுப்புக்களொழியப்பெற்றவரும் உதிரவெள்ளத்தில் மூழ்கினவருமான பலர் புலம்பிக்கொண்டே சென்றனர். தூதர்களாயுள்ளவர் சும்பனிடம் ஓடிப்போய்க் கூறுகின்றனர் :

ஓ மஹாராஜனே! எங்களை ரக்ஷியும். காளிகாதேவி என்பவளொருத்தி இப்பொழுது வெளிப்பட்டு யாவரையும் பக்ஷித்துக் கொண்டே வருகின்றாள். உன்னையும் பக்ஷித்து விடுவாளென்று கோலாகலமாய்க் கதறிக்கதறி, ஐயா! சண்டமுண்டர்கள் அவளுடைய கத்தியினால் வெட்டப்பட்டு அவ்வுலகஞ்சென்றனர்; நாங்கள் உன்னிடம் பயந்தோடி வந்தோம். ரதகஜதுரக பதாதிகளெல்லாம் ஆயுதங்களால் அன்று அழிக்கப்பட்டன. அவள் வாயினால் விழுங்கப்பட்டன. யுத்தகளத்திலுள்ள பிணமலைகளினின்றும் உதிரவெள்ளம் பெருகிப் பெரிய நதிகளாய் வாரா நின்றன. அந்நதிகளில் மாமிசங்களாகிய சேறும் தலைமயிர்களாகிய வேலம்பாசிகளும் முறிந்தொடிந்துபோன ரதங்களாகிய சக்கரவாகப் பக்ஷிகளும், அறுபட்ட கைகளாகிய மீன் கூட்டங்களும், தலைகளாகிய * தும்பிபலங்களும் நிறைந்திருக்கின்றன. அவ்வலங்கோலங்களைக் கண்ட அசுரர் அப்பா அப்பாவென்றலறுகின்றனர்! அமரர், அம்மா அம்மா வென்று முகமலர்கின்றனர்!

ஓ மஹாராஜனே! இனி யோசனை செய்வதையும் யுத்தஞ் செய்யப் புறப்படுவதையும் விட்டுவிடு. பாதாளத்துக்குப் போகும் வழியைத் தேடியோடிவிடு. வந்திருக்கிற காளி ரத்தபானஞ் செய்து வெறிகொண்டு உன்னுடைய ரத்த ருசியையும் பார்க்க, வேண்டுமென்று பெருங்கூச்சலிடுகிறாள். இப்பொழுது நீ எதிர்ப் பட்டனையாயின் அவளுக்குப் பலியாய் விடுவாய், இதிற் சந்தேகமில்லை. அம்பிகையினுடைய சிங்கமோ எனக்கு நல்லவிருந்து வந்து விட்டதென்று கர்ஜனை செய்கின்றது. தேவர்களுடைய நல்லகாலம் நீ யுத்தத்துக்குத் தயாராக விருக்கின்றாய். யுத்தத்தில் உனக்கு மரணமுண்டாகுமே யன்றி வாழ்வுண்டாக மாட்டாது. நீ உன் சகோதரனை நிசும்பனது வார்த்தையைக் கேட்டு, காமத்தைத் துணையாகக் கொண்டு யுத்தமாகிய கடலில் ஆழந்தெரியாமல் கால் வைக்கத் துணியற்க.

இப்பொழுது யுத்தத்துக்கு வந்திருக்கிற ஒரு ஸ்திரீயை விரும்பி, இதுகாறும் உனக்குயிர்த் துணையாயிருந்த யாவரையும் நாசஞ் செய்கின்றனையே. உன்னுடைய குலநாசினியாய் வந்திருக்

* சுரைக்காய்

கிற அவள் என்ன நன்மை செய்யப்போகின்ருள்? ஓ ஐயா! ஐயோ! யுத்தத்தில் தோல்வியும் வெற்றியும் தெய்வாதீன மல்லவோ? அறிவுடையான் சிற்றின்பத்தை விரும்பிப் பெருந் துன்பத்தை விளைவித்துக் கொள்ளமாட்டான். உலகமெல்லாந் தெய்வமாகிய எந்த ஊழின் சுவாதீனமாயிருக்கின்றதோ அந்த ஊழ்செய்யும் ஆச்சரியத்தைப்பார்! ஒரு ஸ்திரீயினுல் எல்லா ராக்ஷசர்களுங் கொல்லப்பட்டார்கள். உன்னையும் ஒரு பொருளாக மதிக்கவொட்டாது யுத்தத்துக்கழைக்கின்றது. நீ லோக பாலர்களையெல்லாம் வென்றவனுயிருந்தும் அவ்வெற்றியின் சிறப்பை எண்ணுது ஒரு அற்பமான ஸ்திரீயை ஒரு பொருளாக மதித்து உன்னைச் சேனைகளுடன் வரச்செய்தது. இவைகளையெல்லாம் யோசிக்குங்கால் ஆச்சரியத்திலும் ஆச்சரியமன்ருே? உனது பிரபாவத்தை இப்போது மறந்திருக்கின்றனை போலும்! நீ புஷ்பகரத்தீவில் செய்த தவம் எளிதானதோ? அதற்கு லோககர்த்தாவான பிரம்மா ஓடிவந்தனரன்ருே? வந்தவர் உன்னையொன்றும் பரீக்ஷிக்காமல் உனக்கென்ன வேண்டும், வேண்டுமென்று உன்னைப் பிரார்த்தித்தனரன்ருே? அவரை, உனக்குத் தேவதானவ கின்னர கிம்புருஷ யக்ஷகந்தருவர் முதலியோராலும் ஏனைய மானிடராலும் அஃறிணைகளாலும் மரணம் வரக்கூடாதென்று கேட்டிருக்கின்றனை யன்ருே? அப்படிக் கேட்ட நீ இப்பொழுது தம்பிமாரையும் சேனுதிபதிகளையும் யோசனை செய்யத் தக்கவனு யிருக்கின்ருய். இஃது ஊழ் செய்த ஆச்சரியமன்ருே? இதனுல் உனக்கு இதுகாறும் இருந்தவூழ் ஆகூழ், இனிப்போகூழ். ஆகையினுல் உன்னைக் கொல்வதற்கு ஒரு சிரேஷ்டமான ஸ்திரீ வந்திருக்கின்ருள். (1–18)

ஓ அரசனே! அவளை நான் பார்த்தபொழுது அவள் ஸ்திரீயாகத் தோன்றவில்லை. எனக்கு எப்படித் தோன்றினளெனின் மகா மாயாப் பிரகிருதி சொரூபிணியாயும், கல்பாந்தத்தில் யாவரையும் சங்கரிக்கும் மகா சக்தியாயும், மீண்டும் அவரையெல்லாம் படைக்கின்றவளாயும், தேவர்களுக்கெல்லாம் பிரபுவாயிருக்கும் பிரபுத்வ காரணியாயும், ஸத்வ ரஜஸ் தமோகுண ரூபிணியாயும், பிரகிருதி ஸ்வரூபிணியாயும், ஸர்வசக்தி ஸ்வரூபிணியாயும், ஒருவராலும் வெல்லக் கூடாதவளாயும், எப்பொழுதும் நாசமடையாத நித்யையாயும், ஸர்வஜ்ஞையாயும், வேதத்துக்கு மாதாவான காயத்ரியாயும், சக்தியா சக்தி ஸ்வரூபிணியாயும், சுரர்களுக் காலயமாயும், நிர்க்குணையாயும், சகுணையாயும், சித்ஸ்வரூபிணியாயும், சர்வசித்தியும் கொடுக்கின்றவளாயும், அவ்யயமாயும், ஆனந்தத்தையே அனவரதமுங் கொடுக்கின்றவளாயும், தேவர்களுக்கு அபயங்கொடுத்தருளுந் தேவியாயும் தோன்றினுள். ஆகலின் நீ அவளிடத்தில் கொண்டிருக்கும் வைரத்தை விட்டுவிடு. அவளைச் சரணமடை. அடைவாயாயின் அத்தேவி உன்னை ரக்ஷிப்பாள். அந்த ரக்ஷகத்தை நீ மேற்கொண்டு அலங்காரத்தை விட்டு அடிமையாளாவாய். ஆவையேல் உனது குலமெல்லாம் பிழைக்கும். இப்போது அவளால் கொல்லப்பட்டவர்கள் போக ஏனைய

ரெல்லாம் கொல்லப்படமாட்டார்கள். ஓ ராஜேந்திரனே! இச்சமயத்தில் எங்களால் செய்து கொள்ளப்பட்ட விண்ணப்பத்தை ஆலோசித்தருளும் என்றனர். (19–24)

சும்பன் அவர்கள் வாய்மொழியைக் கேட்டபோதே அகங்காரங்கொண்டு கூறுகிறான்: ஓ மந்தபுத்தி யுடையவர்களே! போர்க்களத்தில் வெற்றியைக் கொள்ளாது தோல்வியைக் கொண்டு என்னையும் அதற்குள்ளாக்கவந்த அதிசூரர்களே! பேசாமலிருங்கள்; பேசியது போதும்; உங்களுக்கு இப்பொழுது போரில் ஆசையொழிந்து பிராணனில் ஆசைவந்திருக்கின்றது. நீங்கள் பாதாளம் போகலாம். சர்வ ஜகத்தும் தெய்வாதீனமாயிருக்குங்கால் இப்பொழுது எனக்கு வரப்போகிறதுந் தெய்வாதீனந்தானே? இதற்கு நீங்களும் நானும் சிந்திப்பதென்ன? மற்றைய இந்திராதி தேவர்கள் தான் சிந்திப்பதென்ன? ஒருவர் சிந்தனையும் பயன்படுமாறின்று; தெய்வசிந்தனை யொன்றே பயன்படுமென்றறிமின். ஆதலின் எனக்கியாதொரு சிந்தனையுமின்று. யார் யாருக்கு எது எது வரவேண்டுமோ அதற்கேற்ற பிரயத்தனந்தான் அவரவர் மனத்திற்றோன்றும். புத்திமான்கள் சர்வப் பிரகாரத்தினாலும் இந்த நியாயத்தையே யோசித்தவர்களாய்த் துக்கமென்பதைச் சிறிதும் அடையாமலிருக்கின்றனர். அறிவாளிகள் மரணபயத்தை எண்ணித் தங்களுக்குரிய தர்மங்களைக் கைவிடமாட்டார்கள். சுகம், துக்கம், ஆயுள், சாதல், சாகாதிருத்தலாகிய இவையெல்லாம் ஊழாகிய தெய்வத்தால் நியமிக்கப்பட்டுள்ளன. ஆதலால் அவையெல்லாம் மானிடர் முதலாயினோர்க்கு அந்தந்தக் காலங்களில் வந்தே தீருமன்றோ? மரணமென்பது பிரமனை விட்டதா? விஷ்ணுமூர்த்தியை விட்டதா? ஏனையோரைத்தான் விட்டதா? அவரவர்க்கும் விதித்திருக்கும் அவ்வக்காலங்களில் மரணம் வந்து விடுகிறதன்றோ? அங்ஙனமிருக்க என்னை மாத்திரந்தானா அந்த மரணம் விட்டுவிடும்? நானும் அந்த மரணமென்கிற காலத்துக் குட்பட்டவனா, அன்றா? நீங்கள் சொல்லியதை நானுட்கொண்டு போர் செய்யா தொழிவேனாயின், எனக்கு வரவேண்டிய மரணம் வாராதொழியுமோ? ஓ அறிவிலிகாள்! மரணம் வந்தொழியினும் அவரவரும் அவ்வச்சமயத்திற் செய்ய வேண்டிய தருமங்களை மாத்திரம் விட்டொழிதலாகாது. ஆகவே நானிப்பொழுது எனக்குரிய தர்மத்தை ரக்ஷித்துக்கொள்வது அவசியம். அது என்னை என்பீரேல், போருக்கஞ்சிப் பின்போதல் தருமமன்று; அஞ்சாது முன்னிற்றலே தருமம். ஆதலின் நான் போருக்கே போகின்றேன். அஃது எனக்கு வெற்றியைத் தந்தாலும் தருக, மரணத்தைத் தந்தாலுந் தருக. வெற்றி, மரணம் என்னும் இரண்டில் ஒன்று வருவது நிச்சயம். அதனை நான் சம்மதித்து அனுபவிப்பது நிச்சயம். ஓ போரைக்கண்டஞ்சிய முழுமூடர்களே! உலகில் முயற்சியையே காரணமாக வெண்ணி அதனைச் செய்கின்றவர்கள் தெய்வத்தைப் பொய்யாக்கித் தெய்வம் தெய்வமென்பது வீண், முயற்சியே வேண்டும்; முயற்சியுடையார் இகழ்ச்சி யடை

யடையார்; முயற்சியின்றி யாதொரு கோரிக்கையும் சித்திக்காது; இவ்வாறு பல யுக்திகள் கூறி வாதாடுகின்றனர். முயற்சி செய்யப் பயந்தவர், ஊழ்வகையால் எதுவர வேண்டுமோ அதுவரும்; நாம் வீணுக முயற்சி வேண்டும் வேண்டுமென் றலைவானேனென்பர். அதிர்ஷ்டம் அதிர்ஷ்டமென்பதும் ஊழென்பதும் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவதன்று; பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவது முயற்சியேயாம்; இந்த முயற்சியால் அப்பிரத்தியக்ஷமாகிய அதிர்ஷ்டத்தை அல்லது ஊழைப் பிரத்தியக்ஷமாய்க் காணலாம்; இம்முயற்சியின்றி எப்படி அதிர்ஷ்டத்தைக் காணக்கூடும்? முயற்சியில் சிரத்தை வைக்காமல் அதிர்ஷ்டம் அதிர்ஷ்டம் என்று அதனையே எண்ணி யிருப்பாராயின் அந்த வெண்ணமானது அவர்களைத் துக்கத்தில் விழும்படிச்செய்து விடுகிறது. குயவனுடைய சமீபத்திலிருக்கிற மண், பாத்திர பேதங்களாக வேண்டுமாயின் அவனுடைய முயற்சியால் அன்றோ? குயவன் முயற்சியின்றி, மண் பாத்திர பேதங்களாவதாயின் ஊழான் வருவதாகிய சுக துக்கங்கள் முயற்சியின்றி வருமென்பது அறியலாம். இங்ஙனங் கூறிவந்த நியாயத்தால் முயற்சியே காரியசித்தியைச் செய்யுமென்று அறிமின். காரியசித்தி முயற்சிசெய்துங் குறைவுண்டாகின்றதே எனின், அக்குறைவு முயற்சியின் குறைவென்றே எண்ணல் வேண்டும். இதனை விளங்கச் சொல்லுகிறேன், கேளுங்கள்: உலகத்தார் முயற்சியைத் தங்களுடையதாகவும், ஊழைக் கடவுளுடையதாகவும் எண்ணிப் பிதற்றி வருகின்றனர். அது பிரமாணமன்று. ஊழ் உயிர்களாலியற்றப்பட்டு வரும் வினைத் தொகுதியாம். அவ்வினைத் தொகுதியாயுள்ள ஊழை அவ்வுயிர்களனுபவிக்க, அவ்வுயிர்களுக்குத் தெய்வத்தால் அப்போதைக்கப்போது கூட்டிவைக்கும் ஒரு துணைக்கருவி முயற்சியென்றறிமின். அந்த முயற்சியைத் தேசம் காலம் தனது பலம் எதிரிகள் பலம் இவற்றை அறிந்து செய்யும் காரியம் எதுவோ, அது பிரகஸ்பதி பகவான் கூறிய நீதிப்படி சித்தியாவதில் யாதொரு சந்தேகமும் இல்லை என்று கூறினன். (25–42)

பிறகு சும்பன் ரக்தபீஜனென்கிற அசுரனைச் சேனைகளோடு யுத்தத்துக்குப் பிரயாணப்படுத்தி, மகா பலசாலியாகிய ரக்தபீஜனே! நீ போய் உன் சூரத்தனத்துக்குத் தக்கபடி யுத்தஞ் செய்வாயென்றனன். அதனைக்கேட்ட ரக்தபீஜன் கூறுகின்றான்: ஓ மகாராஜனே! நீ சிறிதுஞ் சிந்திக்க வேண்டாம். நான் அந்த ஸ்திரீயைக் கொண்டுவந்து விடுகிறேன். நான் செய்யப்போகிற யுத்தத்தை நீயே பார்க்கப் போகிறாய். தேவர்களுக்குச் சகாயஞ் செய்ய வந்திருக்கிற அந்த ஸ்திரீ எனக்கு எவ்வளவு! அவளை யுனக்குத் தாசியாகச் செய்கிறேனென்று சொல்லிச் சேனைகளோடு தேவியிடஞ் சென்றனன். (43–48)

அவன் வருவதைக் கண்ட தேவி சங்கநாதஞ் செய்தனள். அந்நாதத்தைக்கேட்ட அசுரர்களஞ்சினர். அமரர்கள் அகங்களிகூர்ந்தனர். ரக்தபீஜன் மாத்திரம் அஞ்சாமலும் சந்தோஷிக்கா

மனும் வீரங்கொண்டு சாமுண்டியாகிய தேவியைச் சமீபித்துக் கூறுகின்றான் : ஓ பெண்ணே! நீ சங்கநாதஞ் செய்து என்னைப் பயப்படுத்தலாமென் றெண்ணினையே? பயங்காளியாகிய இறந்து போன தூம்பரலோசனனைப்போல என்னை எண்ணினையோ? நான் ரக்தபீஜன்; என்னைக்கொல்ல உன்னாலாகாது. என்னோடு யுத்தஞ் செய்ய உனக்கெண்ணமிருக்கும் பக்ஷத்தில் என் முன்னேவா. நான் உனக்கஞ்சேன்; என் பலத்தைப்பார். இதுவரையில் உன்னிடம் வந்தவர்களில் ஒருவனாக என்னை யெண்ணற்க. என்னோடு யுத்தஞ்செய்ய ஆசையிருந்தால் ஏன் யோசனை செய்கின்றாய்? இப்போதே செய்யத் துணிவாய். நீ பெரியோர்களிடத்திற் பழகியிருக்கின்றனையா? அவர்களிடத்தில் நீதி நூல்களை ஏதேனும் கேட்டிருக்கின்றனையா? தனுர் வித்தையினுடைய லக்ஷணம் ஏதேனும் உனக்குத் தெரியுமா? கல்வியாளர்களுடைய சகவாசம் உனக்குண்டா? சாஸ்திர ஞானமும் அதற்கேற்ற தந்திர யுக்திகளும் உன்னிடமிருக்கும் பக்ஷத்தில் நான் சொல்லுமுண்மையான நன்மைச் சொற்களைக் கேட்பாயாக. காவ்யங்களில் நவரசங்கள் கூறப்பட்டுள்ளன; அவைகளுள் சிருங்காரரசம், சாந்திரசம் என்னும் இவ்விரண்டையுமே கவிவாணர்கள் சிறப்பாகக் கூறுவார்கள். அந்த இரண்டு ரசத்தில் உன்னுடைய பிரபுவினுடைய இருதயத்தில் சிருங்காரரசமே இப்பொழுது நிறைந்திருக்கிறது. ரசிகர்களாயுள்ளவரெல்லாம் அதனைத்தான் விரும்புவார்கள். விஷ்ணுமூர்த்தி லக்ஷ்மியோடும், நான்முகன் ஸரஸ்வதியோடும், இந்திரன் இந்திராணியோடும், சங்கரர் சங்கரியோடும் கூடியிருக்கின்றார்களே; அவர்கள் இருதயம் சிருங்கார ரசத்தோடு கூடின படியினாலல்லவா? நீ இதனை யோசித்துப் பார். இவர்களாவது உயர்திணையார். தாழ்ந்த அஃறிணையைச் சார்ந்த ஆண்கரடியும் பெண்கரடியோடு கூடியிருக்கின்றது. அதுமாத்திரமா? எல்லா மிருகங்களும் எல்லாப் பறவைகளும் அப்படியே கூடியிருக்கின்ற விஷயத்தில் ஆசக்தியுள்ளவைகளாகவே யிருக்கின்றன. இந்த விதமான போக சம்பத்தை விரும்பாத மகாமூடர்கள் யாரோ அவர்களைத் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவரென்றறிதல் வேண்டும். அவர்கள் தங்களை முற்றுந் துறந்த சந்நியாசிகளென்று கூறுகின்றனரேயன்றி மதுரமாய்ப் பேசுவதில் சமர்த்தர்களான வஞ்சிகளால் வஞ்சிக்கப்பட்டு அவர்களோடு கூடியின்புறும் சாந்திரசத்தில் ஆஸக்தியைக் கொள்ளுகின்றனரே, இவர்கள் துறவு என்ன துறவோ? மன்மதனும் லோபமும், தள்ளக்கூடாத குரோதமும், புத்தியை நாசஞ்செய்கிற மோகமுமிருக்கும்போது ஞான வைராக்கியங்கள் யாருக்குத்தான் நிலைக்கும்? அக்காமரசத்துக்கு அதிதேவதையாய்க் காணப்படுகிற நீ வைராக்கிய ஞான முடையவள் போல் காட்டுகின்றனையே. இது விந்தையினும் விந்தையே! இனி நீ சும்பனையாவது நிசும்பனையாவது கணவனாகக் கொள்ளக் கடவாயென்றனன். இவ்வாறு கூறிய வார்த்தைகளை அம்பிகையும் காளிகாதேவியும் கேட்டு நகைத்தனர். (49–63½)

ஓம் ஈச்வரீத்வ விதாயிந்யை நம:

# 28. சக்திகளின் பராக்கிரமம்

வியாசமுனிவர் அரசனைப்பார்த்துக் கூறுகின்றார்: இராஜேந்திரனே! ரக்தபீஜனுடைய வார்த்தைகளைக்கேட்டு நகைத்த அம்பிகையானவள் மேகத்தொனிபோன்ற கம்பீரமான சில வினோத வார்த்தைகளைப் பரிகாசமாய்ச் சொல்லத் தொடங்கினாள்: ஒ மந்தபுத்தியுள்ளவனே! நான் உனக்கு முன்வந்த சிலரிடத்தில் நான் பர்த்தாவாகக் கொள்ளத்தக்கவ னித்தன்மையனென்று இதமாகச் சொல்லியனுப்பியிருக்கிறேன். நீ அதனைக் கேட்டிலைபோலும்! கேட்டிருப்பையாயின் சும்ப நிசும்பர்களை என்னைப் பர்த்தாவாகக் கொள்ளும்படிச் சொல்லத் துணியாய். யான் சொல்வதைக் கேள்! உருவத்திலும் பலத்திலும் ஸம்பத்திலும் எனக்குச் சமமான ஒருவன் மூன்று லோகத்திலிருப்பானானால் அவனை நான் பர்த்தாவாகக் கொள்ளுவதற்கு யாதொரு தடையுமில்லை. என்னை வென்றவனையே விவாகஞ் செய்துகொள்வதென்று முன்னே பிரதிக்ஞை செய்திருக்கிறேன். அதுபோல் என்னை வென்று முறையாக விவாகஞ் செய்துகொள்ளுகிறபட்சத்தில் நான் சித்தமாகவிருக்கிறேன். நீ சும்பனுடைய உத்தரவினால் அவனுடைய காரியத்தைச் சாதிக்க வந்திருக்கின்றாய். அந்தக்காரியம் யுத்தமாகையால் அதனைச்செய். நீ என்னோடு தனித்துச் செய்வதற்கு அச்சமிருக்குமாயின் அச்சும்பனோடு நீ பாதாளம்போய்ச் சேர்ந்துவிடு. நான் யுத்தஞ் செய்யாதவனை விவாகஞ் செய்துகொள்ளுகிறதில்லை. நீங்களோ யுத்தஞ் செய்யாமல் வாய்ப்பேச்சினாலேயே என்னை வசப்படுத்திக்கொள்ளலாமென்றெண்ணுகிறீர்கள். அஃது ஒரு போதும் முடியாதென்றனள். (1–5)

அவைகளைக் கேட்ட அந்த அசுரன் மகா கோபங்கொண்டு அதிவேகத்தோடும் அவளது வூர்தியாகிய சிங்கத்தின்மேல் பாணங்களை விட்டனன். ஆகாயத்தில் ஸர்ப்பங்களைப்போல் வருகிற அப்பாணங்களை அம்பிகை பார்த்துக் கூர்மையான சில பாணங்களாலறுத்து அவனையும் மூர்ச்சிக்கும்படிச் செய்தனள். அவன் மூர்ச்சையடைந்து தேரினின்றுங் கீழேவிழும்போது சேனைகளெல்லாம் ஆகாவென்று பெருங் கூச்சலிட்டு நமக்கு முடிவுகாலம் வந்துவிட்டதென்றழுதன. அவ்வழுகையோசையைக் கேட்ட சும்பன் தனது சேனைகளெல்லாம் தன்னிடம்வரத் தூதர்களைக் கூவி, ஓ தூதர்காள்! காம்போதி தேசத்திலுள்ள சகல ராக்ஷஸர்களும் அவரொழிந்த காலகேயர்களும் தங்கள் தங்கள் சேனைகளோடுவந்து சேரும்படிச் செய்யுங்களென்று கட்டளையிட்டனன். (6–13)

காளிகாதேவி கண்டநாதத்தைச் செய்தாள். அம்பிகைநாணொலியையும் சங்கத்தொனியையுமுண்டாக்கினாள். அம்பிகையின் வாகனமாகிய சிங்கமுங் கர்ஜித்தது. இவற்றைக்கண்ட அசுரர்கள் ஆரவாரத்துடன் அனேகமாயிரம் பாணங்களைவிட்டு அநேகநாள் போர்செய்து வந்தனர். அச்சமயத்தில் சகல தேவர்களிடத்திலு

முள்ள சக்திகளெல்லாம் அந்தந்த தேவர்களுடைய வாகனுரூடராயும் ஆயுதபாணிகளாயும் அம்பிகைக்குப் படைத்துணையாக வந்து சூழ்ந்தனர். அவர்களுள் சிலரைக் கூறுகின்றேன்: பிரம்மசக்தி யானவள் பெண்ணன்னத்தின் மேலேறிக்கொண்டு ஜபமாலை கமண்டலம் முதலியவற்றைத் தாங்கினவளாய்ப் பிராம்மணி என்னும் பெயருடையவளாயும், விஷ்ணுசக்தியானவள் கருடாரூடையாய்ச் சங்கு சக்ரபாணியாய் கமலக்கையளாய்ப் பீதாம்பரதாரியாய் வைஷ்ணவி என்னும் பெயருடையவளாயும், ருத்திரசக்தியானவள் விருஷபாரூடையாய்த் திரிசூலபாணியாய் அர்த்தசந்திர சிகையியாய்ச் சர்ப்ப கங்கணியாய் மாஹேஶ்வரி என்னும் பெயருடையவளாயும், குமாரசக்தியானவள் மயூராரூடையாய் சக்தியாயுதபாணியாய் கௌமாரி என்னும் பெயருடையவளாயும், இந்திர சக்தியானவள் கஜாரூடையாய் வஜ்ராயுதபாணியாய் சர்வாபரண பூஷிதையாய்ப் பிரசன்னமுகமுடையவளாய் ஐந்திரி என்னும் பெயருடையவளாயும், வராக சக்தியானவள் வராக ரூபமுடையவளாய் வராகி என்னும் பெயருடையவளாயும், நிருதி சக்தியானவள் சிம்ம ரூபிணியாய் நாரசிம்மி என்னும் பெயருடையவளாயும், யமசக்தி யானவள் மகிஷாரூடையாய்த் தண்டாயுதபாணியாய்க் கோர ரூபிணியாய் யாமி என்னும் பெயருடையவளாயும், வருண சக்தி யானவள் வாருணி என்னும் பெயருடையவளாயும், குபேரசக்தி யானவள் கௌபேரி என்னும் பெயருடையவளாயும் வந்து கூடினர். (14–28)

இங்ஙனமான சக்திகளை அம்பிகை கண்டு களிக்கவும் தேவர்கள் ஆனந்தக்கூத்தாடவும் அசுரர்களேங்கவுமா யிருக்குஞ் சமயத்தில் சங்கரர் ஆங்கெழுந்தருளி, சண்டிகையைப்பார்த்துக் கூறுகின்றார்: ஹே தேவி! தேவர்களுடைய காரியசித்தியின் பொருட்டு சும்பன் நிசும்பனென்பவர்களையும் மற்றுமுள்ள வசுரர்களையும் அவருடைய பரிவாரங்களாகிய அசுரக்கூட்டங்களையும் நாசஞ்செய்து எல்லாவுயிர்களும் நிர்ப்பயமாய் வாழும்வண்ணஞ் செய்வாய். யுத்தம் முடிந்தபின் சங்கரிமுதலிய சகல சக்திகளும் தங்கள் தங்களிடம் போய்ச் சேரும்படி செய்வாய். தேவர்கள் தங்களுக்குரிய யக்ஞ பாகங்களைப்பெற்று வாழக்கடவர். உலகிலுள்ள அந்தணர்கள் யாகாதிதருமங்களை யாதொரு இடையூறுக்கும் அஞ்சாமல் பிரீதியுடன் செய்து வரக்கடவர். தாவர ஜங்கமங்களெல்லாம் சந்துஷ்டியுடன் விருத்தியடைக! உத்பாதங்க ளெல்லாம் சாந்தியடைக! ஈதிபாதைகளெல்லாம் நாசமடைக. மேகங்கள் காலந்தவருமல் நீர் பொழிக! பயிர்களெல்லாங் குன்ருதோங்குக என்ருசியும் ஆணையுங்கூறிக்கொண்டிருக்கும் அத்தருணத்தில் சண்டிகையினுடைய திருமேனியினின்றும் மஹாத்புதமாயும் மஹா பயங்கரமாயும் மஹா தீக்ஷ்ணமாயுமுள்ள ஒரு சிவசக்தி வெளிப்பட்டது. அச்சிவசக்தி மஹா சக்தனுகிய சிவபெருமானைப் பார்த்து, ஓ மஹாதேவரே! சர்வ சங்கார மூர்த்தியும் சர்வானுக்கிரகமூர்த்தியும் நீரேயாகையால் இப்பொழுது எங்கட்கு நீர் துணையாதல் வேண்டும்; அஃதாவது அந்த

அசுரேந்திரனிடத்தில் நீர் தூதாகச்சென்று சொல்லவேண்டியவாறு சொல்லி அவனை யுத்தத்துக்காளாக்கி எங்களிடம் வரச்செய்தல் வேண்டுமென்றனள். சக்திநாதனாகிய சங்கரர் அதனை யங்கீகரித்துச் சூலபாணியாய்த் தூதாகச்சென்று மன்மதனால் பீடிக்கப் பட்டுவருந்தும் சும்பனையும் நிசும்பனையும் பார்த்துக்கூறுகின்றார்: (29–40)

நீங்கள் சுவர்க்கத்தை விட்டு பாதாளத்தை யடைமின். தேவேந்திரன் இந்தச் சுவர்க்கத்தில் சிங்காசனத்தி லிருக்கக்கடவன். தேவர்களெல்லாம் இங்குச் சுகமுற்றிருந்து யக்ஞபாகங்களை யடையக் கடவர். உங்கட்குப் பிராணனிடத்தி லாசையுள்ளபக்ஷத்தில் நான் சொன்னபடி ஓடிப்போய்ப் பிழையுங்கள். ஆசையற்றிருக்கும் பக்ஷத்தில் யுத்தத்துக்குப் புறப்படுங்கள். என் சக்திகளெல்லாம் உங்களுடைய மாமிசங்களைப் பக்ஷணஞ்செய்து திருப்தியடைவர். ஓ சும்ப நிசும்பர்களே! நான் அம்பிகாதேவியின் தூதன். திரிபுர தகனஞ் செய்தவனும் நானே. உங்களது நன்மையை நாடியே இவ் வளவுஞ் சொன்னேன்! இன்னமுஞ் சொல்லுகிறேன்: நீங்கள் சுவர்க் கத்தையும் பூவுலகையும் விட்டுப் பிரகலாதனும் பலிச்சக்ரவர்த்தியு மிருக்குமிடத்தைப் போய்ச் சேருங்கள். இல்லாவிட்டால் சீக்கிர மாய்ப் போருக்குப் புறப்படுங்கள். உங்களெல்லோரையும் என்னு டைய சாமுண்டி கொன்றுவிடுவாள். அவள் சொல்லியது மிவையே. சொன்னேன், சொன்னேனென்று போயினர். (41–44)

ஓ அரசனே! சிவபெருமானைத் தேவி தூதாக அனுப்பிய காரணத்தால் சிவதூதியென்று மூவுலகத்திலும் பெயர் பெற்றனள். பின்னர் தூதாக வந்த சிவபெருமான் கூறியவைகளைக்கேட்ட சும்ப நிசும்பர்கள் சர்வாயுதபாணிகளாய்ப் போர்க்களத்திற்கு வந்து வில்லைவளைத்து நாணேற்றிக் கூர்மையான அநேக பாணங் களால் சண்டிகாதேவியை யடித்தனர். காளிகாதேவி சூலம் கதை கத்தி முதலிய சிலவாயுதங்களைக் கொண்டு அநேக அசுரர்களைச் சாகவடித்து அவர்களைப் பக்ஷிக்கிறவளாய்ப் போர்க்களத்திற்றனே திரிந்துகொண் டிருந்தனள். பிராம்மணி என்னுஞ் சக்தி அங்கு மூர்ச்சையாய் வீழ்ந்துகிடக்கின்றவர்களைத் தனது கமண்டலத்தி லுள்ள ஜலத்தைத் தெளித்து இறக்கும்படிச் செய்தனள். மாஹேஶ் வரி என்னுஞ் சக்தி போருக்கெதிர்த்து வருகின்றவர்களைச் சூலத் தினாற் குத்திப் பூமியிற்றள்ளி விட்டனள். வைஷ்ணவி என்னுஞ் சக்தி சக்கரத்தாலுங் கதையாலுஞ் சிலரைப் பிராணஹானி செய் தும் சிலரை முண்டங்களாகத் திரியச் செய்தனள். ஐந்திராணி என்னுஞ் சக்தியானவள் வஜ்ராயுதங்கொண்டு ஐராவதத்தின் துதிக்கையா லடிபட்டிருப்பவர்களை மோதிப் பூமியிற்றள்ளினள். வராகி என்னுஞ் சக்தி மூக்கினாலும் கோரதந்தங்களி னுனியினாலும் சிலரைத் தள்ளினள். நாரசிம்மி என்னுஞ் சக்தி நகங்களா லிருகூறாகக்கிழித்துப் பக்ஷித்துக்கொண்டே அடிக்கடி ஹுங் காரஞ் செய்து திரிந்தனள். சிவதூதியானவள் வீரட்டகாசஞ் செய்வதாகிய செய்கை யொன்றினாலேயே யாவரும் மூர்ச்சை

யாய் விழும்படிச் செய்தனள். சாமுண்டியும் காளிகாதேவியும் அதிவேகமாய் மூர்ச்சித்துக் கிடந்தவர்களைப் பக்ஷித்துவிட்டனர். கௌமாரி என்னுஞ் சக்தி பாணங்களாலடித்தனள். வாருணி என்னுஞ் சக்தி பாசத்தினால் அசுரர்களைப் பின் கட்டாகக்கட்டி மூர்ச்சித்து வீழ்ந்து கிடக்கும்படித் தள்ளினள். இவ்வாறு சக்திக் கூட்டங்களாகிய மாத்ருகணங்கள் அதிவீர பராக்கிரமமுள்ள அசுரக்கூட்டங்களைப் பலவிதமான ஹிம்சைகள் செய்து மர்த்தனஞ் செய்யும்போது அவர் கைக்ககப்படாது மிகுந்திருந்த அசுரக்கூட்டங்கள் ஓட்டம் பிடிக்கத் தலைப்பட்டன. அதனைக் கண்ட சக்திகணங்கள் வெற்றிச் சங்கமுழங்கின. தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்தனர். வெற்றிச் சங்கமுழக்கொலி கேட்ட ரக்தபீஜன் ஓடிப்போன தானவர்களைப் பார்த்துக் கோபித்துக் கர்ஜிக்கும் தேவர்களை யுறுமிக் கண் சிவந்தெதிர்த்துப் போர் செய்யத் தொடங்கினன். (45–63)

ஓம் ஈசாநாதி ப்ரஹ்மமய்யை நம:

## 29. ரக்தபீஜன் வதம்

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே ! அந்த ரக்தபீஜனென்பவன் தன்னுடைய தேகத்திலிருந்து விழும் ரத்தபிந்துக்கடோறுந் தன்னைப்போலும் பராக்கிரமமுள்ள அநேக அசுரர்கள் தோன்றுமாறு ருத்திர மூர்த்தியினால் மகாவீரியமுள்ள வரத்தைப் பெற்றுள்ளானதலால் காளிகாதேவி முதலிய சக்திக்கூட்டங்களைப் பொருளாக மதியாது அவர்களிலொருத்தியாகிய வைஷ்ணவியைப் பார்த்துத் தலையசைத்துச் சக்தியாயுதத்தினாலடிக்க, அவ்வைஷ்ணவி கதையினாலச் சக்தியாயுதத்தைத் தடுத்துச் சக்கரமெடுத்தவ்வசுரன்மேல் விடுத்தனள். அவ்வாயுதம் அவ்வசுரன்மேல் பட்ட மாத்திரத்தில் மலையினின்றுவீழு மருவிபோல் செந்நிறமுள்ள ரத்தப் பிரவாகம் பெருக்கெடுத்தோடிச் சிதறியது. சிதறிய அப்பிந்துக்கடோறும் அநேக அசுரர்கள் தோன்றினர். இதனைக்கண்ட இந்திராணியானவள் அவன் செய்தியை யுணராமல் மேன்மேலும் அவனையடிக்க, சிதறும் ரத்தபிந்துக்களினின்றும் அசுரக்கூட்டங்கள் ஆயுதபாணிகளா யெதிர்த்துவந்தனர். பிராம்மணி உதிக்கின்ற அசுரர்களோடு போர்புரிவதொழிந்து ரக்தபீஜனைப் பிரமதண்டத்தினால் கோபங்கொண் டடித்தாள் ; மஹேஶ்வரி அறுக்கத் தொடங்கினாள் ; நாரசிம்மி கத்தியினாற் கீறினாள் ; வராஹி மூக்கினாற் குத்தினாள் ; கௌமாரி மார்பிலறைந்தாள். இவ்வாறு இச்சக்திகள் செய்யும்போது அவ்வசுரன் கோபங்கொண்டவனாய் அவர்களையெல்லாஞ் சேர்த்தும் தனித்தும் பாணங்களாலடிக்க அச்சக்திகளும் சேர்ந்தும் தனித்தும் அவ்வசுரனைப் பலவாயுதங்களா லடித்தனர். இவர்களடிக்குந் தோறும் பெருக்கெடுத்தோடு முதிரவெள்ளத்தோடு அசுரவெள்ளமும் பெருக்கெடுத் தெங்கும் பரவியது. இவ்வெள்ளத்

தைக்கண்ட அசுரர்கள் இனியாம் யென்செய்யக்கடவோமென்று தலைகவிழ்ந்துகொண்டிருப்பத் தேவர்கள் கூறுகின்றனர்: (1–18)

இவ்வசுரக் கூட்டங்கள் பெருக்கெடுத்ததுபோலும் நமது சக்திக் கூட்டங்களும் பெருக்கெடுத்தாலல்லவோ நாம் பயமற்றிருக்கலாம்? சக்திக்கூட்டங்கள் முன்னிருந்ததுபோலிருக்க அசுர கூட்டங்கள் மிகுந்திருக்கிறது. இது மிகவும் கஷ்டம்! கஷ்டம்!! இனி சும்பநிசும்பர்களும் யுத்தத்திற்கு வரப்போகின்றனர். இதனால் பெரிதான கெடுதி நமக்கு நேரிடுமேயன்றி வெற்றியுண்டாகா தலரிதென்று சிந்தாகுல முற்றனர். அப்போது பரதேவதையாகிய அம்பிகை தாமரைபோலும் மலர்ந்த கண்ணுடைய காளிகாதேவியைப் பார்த்துக் கூறுகிறாள்: ஹே சாமுண்டே! உன்னுடைய வாயைப் பரந்தவாயாக விரித்துக்கொண்டு நான் பாணத்தாலும் கதை உலக்கை தண்டம் முதலிய ஆயுதங்களாலும் அசுரர்களையடிக்கும்போது அவர்களது உடம்பினின்றும் பெருகு முதிரத்தை ஒரு பிந்துவளவேனும் கீழே விழாமல் நீ பானஞ்செய்யவேண்டும். அவ்வாறு செய்வையாயின் மீண்டும் அசுரர்களுற்பத்தியாகார். இதுதான் அசுரர்களை நாசஞ் செய்விக்கு முபாயமென்றறிவாய். இதனை நீ செய்வதுமன்றி நானந்த ரக்தபீஜனைக் கீழே தள்ளி விடுகிறேன். அப்போது நீ அவனைக் கடித்து அவனுடம்பிலுள்ள உதிர முழுமையுங் குடித்துவிடுவாய். உதிரமொழிந்தால் அவனுயிரு மொழியும். அவனுயிரொழிந்தால் இந்திரனுக்கு ஜயமுண்டாகும். ஜயமுண்டானால் தேவர்களுக்குச் சொர்க்காதிபத்ய முண்டாகும். அஃதுண்டானால் நாம் நம்மிடம்போய்ச் சேரலாமென்று சொல்லினள். சாமுண்டியும் அந்த ரக்தபீஜனுடைய உதிரபானமாகிய பெரிய விருந்தை யெதிர்பார்த்திருக்க, தேவியானவள் சொல்லியது போலவனை உலக்கையினாலும் கத்தியினாலும் அடித்துவர அவள் அப்போதப்போ துண்டாகும் ரத்தவெள்ளங்களைப் பருகிவந்தனள். தன்னுடைய உதிரப்பெருக் கொழிவதைக்கண்ட ரக்தபீஜன் அச்சாமுண்டியை அதிக கோபத்தோடடித்தான். அவ்வடியை அச்சாமுண்டி சிறிதும் லக்ஷியஞ் செய்யாமல் ரத்தபானஞ் செய்து வந்தாள். தேவி முன்னர் இவனது ரத்தபிந்துக்களினின்றுந் தோன்றிய அசுரர்களை யெல்லாங் கீழேதள்ளி ஆயுதங்களாலவர்களைச் சேதிக்கும் போது அச்சாமுண்டி அவர்களுடைய ரத்தத்தையுண்டு வருவதோடல்லாமல் அவர்களுட் சிலரை விழுங்கத்தலைப்பட்டாள். இவ்வண்ணம் ரத்தத்தையும் ரக்தபீஜோத்பவர்களையும் உண்டும் விழுங்கியும் வந்தாளாகையால் அசுரக்கூட்டமும் உதிரவெள்ளமுமில்லாதொழிய ரக்தபீஜனைக் கீழேதள்ளி கத்தியினால் கண்டிக்க அவன் மாண்டனன். சாமுண்டியும் அவனது உதிரமெல்லாமுண்டு களித்தனள். ரக்தபீஜனது சாவையும் சாமுண்டியினது சந்தோஷத்தையும் கண்ட அசுரக் கூட்டங்கள் பயந்தோடி ஆஹா ஊஹூ என்று கதறிச் சரீரமுற்றும் உதிரமயமாயும் நிராயுதபாணிகளாயும் தங்கள் நிலையை மறந்து சும்பனிடம் போய்க் கூறுகிறார்:

ஓ அசுரேந்திரனே! ரக்தபீஜன் அம்பிகையினால் கொல்லப்

பட்டான். அவனுதிரவெள்ளம் சாமுண்டியினு லுண்ணப்பட்டது. பலசாலிகளான ஏனைய அசுரர்களெல்லாம் அம்பிகையின் ஊர்தி யாகிய சிங்கத்தினுல் விழுங்கப்பட்டனர். அவருள்ளும் ஒழிந்த சில வசுரர்கள் காளியினுல் பக்ஷிக்கப்பட்டனர். நாங்கள் தெய்வத்தினுல் பிழைக்கப்பட்டபடியினுல் இச்செய்தியை யுன்னிடத்திற் சொல்லு வதற்காளாயினேம். ஐயா! தேவி செய்த யுத்தசரித்திரம் எங்களாற் சொல்லமுடியுமோ? அது மிகவும் அற்புதம்! அற்புதம்!! இனி யாவரையும் நாசஞ்செய்ய வந்த அத்தேவி தைத்தியர்களாலும் தானவர்களாலும் அசுரர்களாலும் கந்தர்வர்களாலும் யக்ஷர்களா லும் பன்னகர்களாலும் நாகர்களாலும் மற்றெவராலும் எவ்விதத் தாலும் ஜயிக்கத்தக்கவளாகாள். இந்திராணி முதலிய சகலசக்தி களும் அந்த யுத்தகளத்தில் கூடியிருக்கின்றனர். அஞ்சியிருந்த சுரரெல்லாம் இப்போது யுத்தம்செய்து கொண்டிருக்கின்றனர். நம் சேனைகளெல்லா மொழிந்தன. தேவசேனைகள் வீரங்கொண் டுலாவுகின்றன. ஆகையால் நீ மந்திராலோசனை செய்து எது செய்யத்தக்கதோ அது செய்வாயாக. சக்தியாக வந்திருக்கிறவள் பல சக்திகளையுமுடையவள். அவளோடு வைரங்கொள்வது சுகத் தைச் செய்யமாட்டாது; சந்தியே சுகத்தைக்கொடுக்கும். இதைக் காட்டிலும் சரணமடைதல் நன்மையினும் நன்மையாம். அதற்குச் சம்மதிக்காத பக்ஷத்தில் பாதாளம்போய்ச் சேருவது உத்தமத்தி லுத்தமமாமென்றனர். இவ்வுண்மைகளைக் கேட்டுச் சும்பன் மரண மடையுங் காலம் சமீபித்துள்ளானுகையால் உதடுதுடிக்க அதிக கோபங்கொண்டு கூறுகின்றான் :— (34–48)

நீங்கள் பாதாளத்துக்குப் போக வேண்டுமானுலும் போகலாம்; அல்லது சரணமடைய வேண்டுமானுலு மடையலாம். யானிவ் விரண்டினையுஞ் செய்யேன். நான் ஒரு ஸ்திரீக்குப் பயந்து எப்படிப் பாதாளத்துக்குப் போவேன்? ரக்தபீஜன் முதலிய அசுரர்களையெல்லாம் அவளால் கொல்வித்துக் கீர்த்தியையும் போக் கடித்துக் கொண்டு பிராணனை மாத்திரம் காப்பாற்றிக் கொள்வதி னுல் நானடையும் பிரயோஜனமென்னையோ? காலத்தினுல் கற் பிக்கப்பட்ட பிராணிகளுடைய மரணமானது தடைசெய்யத் தக்கதோ? மரண பயமானது பிறந்தநாள் தொட்டே யிருக்கிற தல்லவா? மரண பயத்தைக் குறித்துப் பெறுதற்கரிய கீர்த்தியை விட்டுவிடுவாருமுண்டோ? ஆகையால் இப்பொழுதே அந்த அம்பிகையையும் இந்திராணி முதலிய சக்திகளையும் ஏனைய தேவர் களையுஞ் ஜயித்துச் சகல ராஜ்யங்களையும் ஆண்டு வாழக் கடவேன். இது நிச்சயம். நான் யுத்தத்திற்குப் போகிறேன். அந்த அம்பிகை யென்னுல் கொல்லப்படுவாளானுல் மீள்கின்றேன். இல்லாவிடில் வராமலொழிகின்றேன். ஓ நிசும்பனே! நீ உன் சேனைகளோடு பின்பக்கத்துக்குத் துணையாய் வருவாய்; அந்த ஸ்திரீயை நான் யமலோகத்துக்கனுப்பி விடுவேனென்றனன். நிசும்பன் கூறுகின்றான்: ஓ அண்ணுவே! நான் யுத்தத்திற்குப் போகின்றேன். காளிகாதேவி முதலிய சக்திகளையெல்லாங்கொன்று

அந்த அம்பிகையை மாத்திரம் பிடித்துக்கொண்டு வருகிறேன். அந்த ஸ்திரீ விஷயத்தில் நீ ஒரு சிந்தனையும் வைக்கவேண்டாம். பிரபஞ்சத்தையெல்லாம் சுவாதீனப்படுத்திக் கொள்ளும்படியான உன்னுடைய புஜபலபராக்கிரமமெங்கே ? அவளெங்கே ? அவ்வற்ப மானவளோடு யுத்தஞ்செய்யப் போகிறேனென்று சொல்வது உனது கீர்த்திக்கும் புகழுக்கு மிழுக்காமன்றோ? நீ சிரேஷ்டமான சுகங்களை யநுபவித்துக்கொண் டிருப்பாயாக. மகா கர்வமுள்ள அந்த ஸ்திரீயை நான் கொண்டுவருகிறேன். நானிருக்க நீ யுத்தத்திற்குப் போவது யுக்தமன்றென்று. மூத்தோனைப் பார்த்துச் சொல்லித் தம்பியான நிசும்பன் அதிகர்வங்கொண்டு தன் சேனைகளோடு யுத்தத்திற்குப் புறப்பட்டான். (49–60)

ஓம் ஈசத்வாத் யஷ்டஸித்தி தாயை நம:

## 30. நிசும்பன் அழிவு

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! நிசும்பன், மரணம் அல்லது ஜயம் என்னு மிவ்விரண்டி லொன்று வருவதுண்மை யன்றோவென்று நிச்சயித்துக் கொண்டவனாய்த் தேவிக்கெதிரில் வந்தனன். இவனது சகோதரனும் யுத்தரசத்தில் பண்டிதனுமான சும்பன் நமது சகோதரன்செய்யும் யுத்தத்தைக் காண்போமென் றிருந்தனன். தேவர்கள் மேகத்தி லொளிந்துகொண்டு போர்த் திறத்தைப்பார்க்க ஆசைகொண்டிருந்தனர். இவர்க ளிவ்வாறிருக்க நிசும்பன் அம்பிகையைப் பிரமிக்கச்செய்ய வெண்ணிப் பாணங் களைச் சோனைமாரிபோற் பொழிந்தனன். சண்டிகாதேவி சிரேஷ்ட மான தனுசையெடுத்து நிசும்பன் காணுமாறு அடிக்கடி சிரித்துத் தன்னருகிலிருக்குங் காளிகாதேவியை நோக்கிக் கூறுகின்றாள் :

ஓ காளி ! இவ்வசுரர்களுடைய மூடத்தனத்தைப் பார்த்தனையா? இவர்களென்னிடம் வருவது சாவதற்கா, பிழைப்பதற்கா ? இது காறும் அதிகோரமான அசுரர்களது வதத்தில் ரக்தபீஜனது நாசத் தையும் பார்த்து என்னுண்மையை யறியாம லெனதுமாயையினால் மோகிக்கப்பட்டவர்களா யின்னமுந் தமக்கு வெற்றியுண்டாமென்னு மாசையுடன் வருகின்றனர். அந்தோ! ஆசையே மிக்க பல முள்ளது. அது மனிதர்களை யெவ்விதத்திலும் விடுகிறதில்லை. அதற்கோரளவுமில்லை. தோல்வியடைந்தவனாயிருந்தாலும் பல மொடுங்கினவனாயிருந்தாலும் மிகவும் நசித்தவனாயிருந்தாலும் பக்கபலமில்லாதவனா யிருந்தாலும் மெய்மறந்தவனா யிருந்தாலும் அந்த ஆசை விடுகிறதில்லை. என்னால் கொல்லத்தக்கவர்களாகிய இவர்களுக்கு மரணம் சமீபித்துவிட்டபடியால் என்முன் வந்திருக் கின்றர். ஆகையால் எல்லாத் தேவர்களும் பார்த்துக்கொண் டிருக்கும்போதே இவர்களைக் கொன்று விடுகிறேனென்று அந்த நிசும்பனை அநேக பாணங்களால் மறைத்துவிட்டனள். நிசும்ப னும் அப்பாணங்களை யெல்லாம் அறுத்தெரிந்தனன். இவ்வண்ணம்

இருவரும் அநேகவிதமான யுத்தங்கள் செய்யும்பொழுது யானைக் கூட்டத்தில் சிங்கம் புகுவதுபோல் அசுரச்சேனையின் மத்தியில் தேவியினுடைய சிங்கமானது பாய்ந்து மதங்கொண்டிருக்கின்ற அசுரர்களைப் பற்களால் கடித்தும் நகங்களால் கிழித்தும் உண்டும் வந்தது. இந்தப்பிரகாரம் சிங்கத்தால் அசுரச் சேனைகள் நாசமடைவதைக்கண்ட நிசும்பன் ஓடிவந்தனன். ஏனைய அசுரர்களெல்லாம் பற்களையும் நாக்குகளையுங் கடித்துக்கொண்டு கண் சிவந்து இந்த ஸ்திரீயை விடுவதில்லை யென்று சூழ்ந்தனர். சும்பனும் தன் சேனைகளோடு கூடினவனாய் வந்து முன்னே நிற்கும் இக்காளிகாதேவியைக் கொன்று ஜகதம்பிகையைப் பிடித்துக்கொள்வோமென்றெண்ணி ரௌத்திர ரசத்தோடும் சிருங்கார ரசத்தோடுங் கூடியிருக்கிற அந்த மஹேச்வரியைப் பார்த்தனன். (1–17)

அந்த மஹேச்வரியோ, விசாலமான கண்ணுடையவளாயும் மூன்றுலகத்திலுங் காணக்கூடாத அழகிற் சிறந்த சுந்தரியாயும் கோபத்தாற் சிவந்துநோக்கும் பார்வையுடையவளாயு மிருக்கும் உக்கிரத்தைக்கண்டு இவளா நமக்கு அடங்கத்தக்கவளென்று அவ்வம்பிகையினிடத்தில் தான் கொண்டிருந்த ஆசையையும் ஜயத்தையடையவேண்டுமென்ற வீரத்தையும்விட்டு நமக்கு மரணம் சமீபித்துவிட்டதென்று நிச்சயித்துக்கொண்டு இனி யுத்தஞ் செய்வதே யுக்தமென்று போர்செய்யத் தொடங்கினன். இவன் கொண்ட வெண்ணத்தையும் இவன் நிற்கும் நிலையையும் அறிந்தவளாகிய ஸர்வஜ்ஞை அந்தச் சும்பனைப் பார்த்து நகைத்து அசுரரெல்லாங் கேட்கக் கூறுகின்றாள் : (18–21)

ஹே சும்பா ! உன்னைப்போலும் ஞானசூனியனை நான் கண்டதில்லை. உன்னிலும் சிறந்த ஞானசூனியர்கள் உன்னுடைய சேனைகள். இதுவரையில் என்னிடம் வந்தவர்கள் வெற்றியுடையராய் மீண்டிருப்பா ராயின் நீங்களும் நாமும் வெற்றியடையலாமென்று வரலாம். அந்தோ ! இனியேனும் நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் கைகளி லேந்தியிருக்கும் ஆயுதங்களை யெல்லாங் கீழே போட்டுவிட்டு உயிர் பிழைக்கவேண்டுமாயின் பாதாளத்திலாவது சமுத்திரத்திலாவது போய் ஒளித்து வாழுங்கள். வீரசுவர்க்கம் வேண்டுமாயின் என் பாணங்களாலடிபட்டு சுவர்க்கம் போய்ச் சேர்ந்து அங்கு சிங்காசனாரூடர்களாய் அப்ஸரஸ்திரீகளுடன் கூடி வாழுங்கள். சூரத்தன்மையும் பயத்தன்மையும் ஒருவருக்கும் நிலைத்ததல்ல ; என்னுடைய அபயத்தன்மையானது என்றும் நிலைத்திருக்கும். அதைத்தான் அறிவுடையார் அடையவிரும்புவர். அதுதான் என்றும் நிலையாயுள்ளது. ஆகையால் அந்த அபயத்தை உங்களுக்குக் கொடுக்கின்றேன். எல்லோரும் சுகமாய்ப் போய் வாழுங்களென்றனள். (22–24)

தேவி சொல்லியதை நிசும்பன் கேட்டு அகங்காரங்கொண்டு ஒரு கத்தியையெடுத்தோடி அதனைச் சுழற்றித் தேவியினுடைய சிங்கத்தின்மேல் வீசினான். அதனைத் தேவியார் கதையினாற் றடுத்துப் பொடிப் பொடியாக்கி ஒரு கோடாலியெடுத்து அவன்

ரேண்மேலடித்தனள். அவ்வடியை அவன் சகித்துக்கொண்டு அம்பிகையை மறுபடியும் அடித்தான். அவ்வம்பிகை இனி இவனைத் தாமதஞ் செய்யாது கொல்லவேண்டுமென்று துணிந்து கண்டா நாதஞ்செய்து அதிகமான கோரயுத்தஞ் செய்யத்தொடங்கினள். அவனும் அதற்கிளைக்காமல் செய்து வந்தனன். இருவர் படைகளும் அப்படியே செய்யத் தொடங்கின. ரத கஜ துரக பதாதிகளும் அமோகமாய் நெருங்கின. எங்கும் ரத்தவெள்ளம் பரவிற்று. நாய்களும் நரிகளும் கழுகுகளும் காக்கைகளும் சுழன்று சுழன்று வட்டமிட்டன. நிசும்பன் வீராவேசங்கொண்டு ஒரு கதையையோச்சி சிங்கத்தை மோதியடித்து நகைத்துத் தேவியையும் அடித்தனன். தேவி புன்னகை செய்து, ஓ மந்தபுத்தியுள்ளவனே! இதோ என்னுடைய கையிலுள்ள கத்தியை உன்னுடைய கழுத்தில் வீசப்போகின்றேன். வீசும் அவ்வளவு காலந்தான் நீ உயிருடன் கூடியிருக்குங்காலம். வீசியபின்னர் யமனுடைய கிருகத்தில் வாழப்போகின்றாயென்று சொல்லி அந்தக்ஷணமே அவனது தலையைக் கத்தியினால் அறுத்தெறிந்தனள். பின்னர் கபந்தமாய்ப்போன அவ்வசுரன் கீழே விழாமல் முன்கொண்ட வீரத்துடனே கதையைக் கையிலேந்திக்கொண்டு அமரரெல்லாம் நடுங்க போர்க்களமெல்லாம் சுற்றிச்சுற்றி வந்தனன். தேவிக்கு அதுவோர் விளையாட்டாக விருந்தது. பின்னர் தேவி அம் முண்டத்தைப் பார்த்து, ஓ முண்டமே! நீ உலாவி வந்தது போதும். உன்னுடைய முண்டத்தன்மையை யாவரும் அறிந்து கொண்டார்களென்று அம்முண்டத்தினது கைகளையும் கால்களையும் அறுத்துத் தள்ளினாள். அது கீழே விழுந்தது. அவனது சேனைகளெல்லாம் ஆ ஆ வென்று கதறிக் கைகளிலேந்தியிருந்த ஆயுதங்களையெல்லாம் எறிந்து உதிரமயமாயிருக்கும் சரீரத்தோடும் அரசனிடம் போய்ச் சேர்ந்தனர். சும்பன் அவர்களைப் பார்த்து, ஓ சேனைகளே! நிசும்பனெங்கே? நீங்களேன் தோற்றுப்போனீர்களென்றனன். (25–42)

தூதர்கள் கூறுகின்றனர்: ஐயா! உமது சகோதரனாகிய நிசும்பன் யுத்தகளத்திலுறங்குகின்றான். இனி எழுந்திருப்பானென்று நினைக்கவேண்டாம். இனி வேறொரு தாய்வயிற்றில்தான் எழுந்திருப்பான். அவனைப் பின்றொடர்ந்தவரெல்லாம் மாண்டு போயினர். இச்சமயத்தில் நீ யுத்தத்துக்குப் போவது சரியல்லவென்று சொல்வதற்கே நாங்கள் வந்தோம். ஏனெனில், இப்பொழுது வந்திருக்கிற ஸ்திரீயானவள் ஏதோ ஒரு பரமசக்தியானவள் தேவ காரியத்தை யுத்தேசித்து இந்தவுருவங்கொண்டு அசுரகுலத்தை நாசஞ்செய்ய வந்திருக்கின்றாளென்று நீ நிச்சயித்துக் கொள்வாய். அவள் சாதாரணமான ஸ்திரீயல்ல. தேவர்களாலும் அறியக்கூடாத மகிமையுள்ள மிகவுத்தமமான சக்தி; நானாவிதமான உக்கிரரூபத்தோடுங் கூடியிருக்கின்றாள். மாயாமூல சமர்த்தையான அவள் விசித்திரமான பூஷணங்களையும், ஆயுதங்களையுமுடையவள். யாவருக்குஞ் சுகத்தைச் செய்கின்றவள்.

ஒருவராலும் அறியத்தாகதவள். அவளுடைய சரித்திரம் அதிரகசிய மானது. துஷ்டர்களுக்குக் காளராத்திரி போன்றவள். தேவர்க ளெல்லாம் அசுரபயமற்றவர்களாய் அவளை ஓ ஸ்ரீ தேவீ! எங்கும் நிறைந்திருக்கின்றவளே! என்று பலவாறுகத் தோத்திரஞ் செய் கின்றுர்கள். நாமெல்லாம் இச்சமயத்தில் ஓடிப்போவதே தருமம். தேகரக்ஷணையைச் செய்துகொள்ள வேண்டியது அவசியம். இப்பொழுது பிராணனைக் காப்பாற்றிக் கொள்வோமாகுல் பின்னர் நாம் ஜயத்தையடையலாம். காலமானது ஒரு சமயத்தில் சாமான்ய மனிதர்களையும் பலமுடையவர்களாச் செய்யும்; ஒரு சமயத்தில் பலமில்லாதவராகவும் செய்யும்; அவர்களையே மற்றேர் சமயத்தில் பலமுடையவர்களாக்கி ஜயத்தைக் கொடுக்கும்; மஹா தாதாவாக விருக்கின்றவனை யாசகனுக்கும்; யாசகனுக விருக்கின்றவனைத் தாதாவாக்கும். திரிமூர்த்திகளும் இந்திராதி தேவர்களும் கால வசத்திலிருக்கப்பட்டவர்களே. இவர்களெல்லாம் காலவசத்தின ரென்றுல் நீ காலவசத்தனென்பது சொல்லவேண்டுமோ? ஆகை யால் உனக்கிப்போதிருக்கும் விபரீத காலத்தை யோசித்துப் பார்ப்பாய். இச்சமயம் தேவர்களுக்குக் காலம் நன்முகமாயும் அசுரர்களுக்கு துன்முகமாயுமிருக்கின்றது. ஓ அசுரனே! காலமானது ஒரு நிலைமை யுடையதன்று; அது நானுவித ரூபந் தரித்திருக்கின்றது. ஆகலான் அந்தக் காலத்தினுடைய விகற் பத்தை நன்றுய்த் தெரிந்துகொள்ள வேண்டியது. யாவருக்கும் சிலகாலத்தில் உற்பத்தி; சிலகாலத்தில் நாசம். அந்தந்தக் காலம் அந்தத் தொழிலேயே செய்யும்; அவை மாறிச் செய்யா. இதனை நீ பிரத்தியக்ஷமாயறியலாம். எவ்வாறெனின், இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் உனக்கனுகூல காலத்தில் பகுதி கட்டி வந்தனர். உனக்கு விரோதமாயிருக்கிற இந்தக் காலத்தில் பல மென்பதை என்றைக்கும் அடைவதற்கு யோக்கியமில்லாத ஒரு ஸ்திரீயினுல் என்றைக்கும் பலமுடைய அசுரரெல்லாங் கொல்லப் பட்டார்கள். இன்னமும் சாக்ஷிவேண்டுமா? காலமே சுபாசுபமா கிய இரண்டையுஞ் செய்கிறது. இந்த உண்மையால் இப்பொழுது நடக்குஞ் செயலுக்குக் காளியுங் காரணமல்ல; தேவர்களுங் காரண மல்ல. நன்றுய் ஆலோசித்துப் பார்க்குமளவில் இப்போது உனக் குத் தோல்வியென்பதில்லை. ஏனெனில், காலத்தினுல் வெற்றியுண் டாகாதிருக்கின்றதேயன்றி நீ எப்பொழுதும் தோல்வியடையத் தக்கவனல்லன். ஆகவே, நீ இப்போது யுத்தஞ் செய்யாது பாதா ளம்போவதால் தோல்வி வந்துவிட்டதென் றெண்ணவேண்டாம். உனக்கும் இறந்துபோன அசுரர்களுக்குங் காலந்தான் காரணம். வேறுகாரணம் இல்லவேயில்லை. இன்னமுஞ் சொல்லுகிறேும், கேட்பாயாக: போரில் இந்திரன் முதலியோர் ஆயுதமில்லாமல் உன்னெதிரில் தோற்றேடிப்போயினர். அவரெல்லாம் இப்போது சர்வாயுதபாணிகளாய் ஒரு ஸ்திரீயை முனைமுகத்தில் நிற்கச் செய்து தாங்கள் யுத்தஞ் செய்வதற்குத் தயாராயிருக்கின்றனர். ஓ ராஜேந்திரனே! யாங்கள் சிறியவராயினும் எங்களால் சொல்லப்

பட்ட சொற்களைமாத்திரம் ஆலோசித்து யுக்தம்போற் செய்வாய். சீக்கிரத்தில் ஆலோசித்துப் பாதாளம்போய்ச் சேரும் வகையைத் தேடுவாய். அவ்விடத்தில் பிழைத்திருந்து சிலகாலம் பொறுத் திருப்பையாயின் நீயே பின்னர் வெற்றியடையலாம். பாதாளம் போவதை விட்டு இப்பொழுதே யுத்தத்துக்குப் போவையாயின் இறந்துவிடுவாய். உடனே தேவர்களெல்லாம் சந்தோஷத்தோடு வெற்றி யுடையவர்களாய் மங்களம் பாடிக்கொண்டு நாற்றிசையுந் திரிந்துலாவி வருவர் ; இது நிச்சயமென்றனர். (43-64)

ஓம் ஈஷித்ர்யை நம:

## 31. சும்பன் முடிவு

வியாசமுனிவர் கூறுகின்றார் :— ஓ பூபதி ! சேனைகளும் தூதர் களும் சொல்லிவந்த சொற்களெல்லாங் கேட்டு, சும்பனைவன் கோபங்கொண்டு கண்சிவந்து சேனைகளைப் பார்த்துக் கூறுகின் றான் : ஓ மூடர்காள் ! நீங்களனைவரும் என் முன்னே நின்று சிறி தேனுமஞ்சாமல் சொல்லத்தகாத சொற்களெல்லாஞ் சொல்லத் துணிந்தீர்களல்லவா ? இதுதான் காலத்தின் கொடுமையென்றெண் ணுகிறேன். யாறு இந்த யுத்தத்துக்குப் பயந்து பாதாளம்போய்ச் சேர்ந்து பிழைத்திருக்கத்தக்கவன் ? மந்திரிகளையுஞ் சகோதரர்களை யும் ஒரு ஸ்திரீயினால் கொல்லும்படிச் செய்து நான் மாத்திரம் வெட்கமில்லாமல் உயிருடன் சஞ்சரித்துக்கொண்டிருப்பதா ? அந்தோ ! வீரரெல்லாம் என்னை என்ன நினைப்பார்கள் ? நீங்கள் காலதர்மத்தைக் கூறினீர்களல்லவா ? நான் சில கூறுகின்றேன் கேட்பீர்களாக :

காலமானது சுபகர்மங்களையும் அசுபகர்மங்களையும் செய்யப் பலமுள்ள பிரபுவாயிருக்கும்பொழுது நான் சிந்திக்கவேண்டிய தென்னவிருக்கின்றது ? காலத்தால் எது வரவேண்டுமோ அது வரட்டும். எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்யட்டும். அது முன்னின்று சாவையும் வாழ்வையும் இயங்கச் செய்வதாயின், அதனைமாற்றும் சக்தி யெனக்குளதோ ? அதனையுடையது அக்கா லத்தை இயக்கும் தெய்வத்துக்கே யுளது. எங்ஙனமெனின், மேக மானது வருஷிக்கவேண்டிய சிராவண மாதத்தில் வருஷிக்காமலும் வருஷிக்கக்கூடாத மார்கழி தை மாசியில் வருஷித்தும் வருகிறது. இதனை ஆராயுங்கால் தெய்வம் நிமித்தமாய் நின்று காலத்தைத் துணையாகக்கொண்டு நடத்துகின்ற தென்றறியக்கிடக்கின்றது. இதனால் காலத்தினும் பலமுள்ளது தெய்வமென்றும், அத்தெய்வத் தினால் நியமிக்கப்பட்டவையே ஜனன மரணங்களெல்லாமென்றும், அந்த நியமத்தை வேறாகச்செய்வதற்குக் காலத்தினாலும், மற்றெ வையாலும் முடியாதென்றும், ஆகலான் எல்லாவற்றிற்கும் மேலா யுள்ள தெய்வமே பிரதானமென்றும் இப்பொழுது நினைக்கின்றேன்.

இனித் தெய்வத்தால் வேற்றுமை யடையத்தக்க காலம் தெய்வத்தைப் பிரதானமாகக்கொண்டிருக்கின்ற என்னை என் செய்யும்? என்னுடைய பௌருஷத்தைத் தள்ளுங்கள்; நெருப்பிற் சுடுங்கள். (1–7)

ஏனெனின், தேவர்களை யெல்லாம் வெற்றிகொண்ட நிசும்பனையும் ரக்தபீஜனையும் இந்த ஸ்திரீ கொன்று விட்டாளல்லவா? இனி எனக்குக் கீர்த்தி ஏது? கீர்த்தியை விட்டு நான் பிராணனிடத்தில் ஆசை வைப்பேனு? உலகில் கீர்த்தி நிற்பதேயன்றி பிராணன் நிற்கின்றதா? உலகெல்லாம் படைக்கின்றவனும் ஆயிரம் சதுர்யுகத்தை ஒரு நாளாகவுங் கொண்டிருக்கின்ற பிரமனும், அந்தப் பிரமனுடைய கால அளவைக்குள் மஹாபோகிகளாக வாழ்கின்ற பதினன்கு இந்திரர்களும், அநேக ஆயிரஞ் சதுர்யுகமுடிந்தால் உலகைக் காக்குங் கடவுளாகிய விஷ்ணுமூர்த்தியும், இறந்து போகின்றுர்களல்லவா? இறந்து போனாலும் பிரம்மா படைக்குங் கடவுளெனவும், விஷ்ணு காக்குங் கடவுளெனவும், இந்திரன் மஹா போகி எனவும் கொண்டாடப் பெற்ற கீர்த்தி இறந்துவிட்டதா? அதுபோலவே ருத்திரரு மொடுங்குவர். ஏ மூடர்களே! தெய்வ நிர்மிதமான மரணத்தைப்பற்றிப் பேசுவதனுலென்னபயன்? காணப்படுஞ் சூரிய சந்திரர்கள் முதலிய யாவரும் அழிவுறுதல் சித்தம். பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும் நிச்சயமாகலான் நிலையில்லாத சரீரத்தில் நிலையான கீர்த்தியைப் பாதுகாத்துக் கொள்ளல்வேண்டும். ஓ சேனைகளே! பிரயாணப்படுங்கள்; யுத்தகளத்துக்குப் போவோம். தெய்வச் செயலின்படி ஜயமாவது மரணமாவது வருவது வருகவென்று சொல்லினன். பின்பு விரைவாய்ச் சர்வாயுதங்களையு முடையவனுய்ச் சதுரங்கசேனைகளும் பின்றொடர்ந்துவர திரிலோகமோகினியாயும் சர்வபூஷணலங்கிருதையாயும் சர்வலக்ஷணங்களோடு கூடினவளாயும் தேவ கந்தர்வ கின்னர யக்ஷர்களால் தோத்திரஞ் செய்யப்பட்டவளாயும் சங்கத்தொனி கண்டாநாதம் முதலிய த்வனிகள் மனோகரமாய்ச் சூழ்ந்தொலிக்கப் பெற்றவளாயும் சிம்மவாகனுரூடையாயுமிருக்கின்ற ஜகதம்பிகை யிருக்குமிடத்தை வந்தடைந்து அவ்வம்பிகையைப் பார்த்துக் காமமோகிதனுய் மன்மத பாணத்தா லடிபட்டவனுய் அடியில்வருமாறு சிந்திக்கின்றுன்:— (8–21)

இவளுடைய சுந்தரவடிவு மிகவு மாச்சரியமாகவிருக்கின்றது. ஏனெனில் அது நம்முடைய கண்கள் கூசும்படியான மின்னலை மின்னுகின்றது. இவளது உருவம் மேனி என்னுமிரண்டையும் நோக்குங்கால், உருவம் மின்னலையும், மின்னல் உருவத்தையும் பகைக்கின்றன. அன்றியும் இவளது வடிவம் மிருதுத் தன்மையும் இவளிருக்கும் நிலை கடினமான தீரத்தன்மையையும் விளக்குகின்றன. மேலும் மன்மதாவஸ்தை யில்லாதவளாய்க் காணப்படுகின்றுள். இவளுடைய அழகானது யாவரையும் மயக்குகின்ற மன்மதனை மயக்கும்; ரதியை மயக்குகின்ற மகாரதியா யிருக்கின்றது.

இவள் இந்த அழகொன்றினாலேயே மகாபலசாலிகளாயுள்ளவர்களைத் தன்னைக் கண்டமாத்திரத்தில் கொன்றுவிடுகிறாள். இவை யாவும் ஆச்சரியமாக விருக்கின்றன. இவள் நமக்குச் சுவாதீனமாக என்ன உபாயஞ் செய்யலாம்? இவளை வசியஞ் செய்வதற்கு மந்திரமுமில்லை. மதத்தால் கர்வித்திருக்கிற இந்த மோகினியே சகல மந்திரங்களையு மறிந்தவளாய்க் காணப்படுகிறாள். இந்த ஸ்திரீ எப்படி சுவாதீனமாவாள்? இவள் மகாபலசாலியாதலால் சாம தான பேதங்களாலுஞ் சுவாதீனமாகாள். ஆகவே இந்தப் போர்க்களத்திலிருந்து பாதாளம் போவோமென்றால் அது யுக்தமல்ல; இங்கு சாவதும் யுக்தமல்ல. ஸ்திரீயின் கையில் செத்தால் கீர்த்தி போய்விடும். என்ன செய்யத்தக்கது? எங்கே போகத்தக்கது? இரண்டு யுத்த வீரர்களில் ஒருவருடைய மரணம் மங்களத்தைத் தருமென்று பெரியோர் கூறியிருக்கின்றனர். இங்ஙனமிருக்க இவள் தெய்வத்தினால் நூறு மனிதரினும் அதிபலமுள்ளவளாய்க் காணப்படுகின்றனள். வீணுக்காக நாமேன் நல்ல வார்த்தைகள் சொல்லவேண்டும்? நானாவித ஆயுதங்களோடு கூடிக் கொல்வதற்கு வந்திருக்கிறவள் நல்ல வார்த்தையினால் பிரீதியடைவாளா? இவள் தானத்தால் சுவாதீனையாயினும் வீணாகும்; ஆகையால் யுத்தத்தில் மரணம் வருவது மேன்மையையும், ஓடுவது சிறுமையையுமுண்டாக்கும். இப்போது ஜயமாவது மரணமாவது தெய்வச் செயற்படி நடந்தேறுகவென்று சும்பன் பலவாறாய் ஆராய்ந்து தைரியத்துடன் யுத்தஞ் செய்வதற்குத் துணிந்து அம்பிகையைப் பார்த்துக் கூறுகின்றான்: (22–34)

ஓ பெண்கள் நாயகமே! இப்போது நீ யுத்தஞ் செய்யத்துணிவது வீண்பிரயாசை. அதனையறியும் அறிவில்லாதவளா யிருக்கின்றாய். ஸ்திரீகளுக்குப் பாணமெடுத்து யுத்தஞ் செய்யுந் தருமம் எந்த நூல்களிலாவது சொல்லப்பட்டுளதா? ஸ்திரீகளுக்குக் கண்களே பாணங்கள்; புருவங்களே தனுசு; சிருங்கார கிரீடாபாவங்களே ஆயுதங்கள்; சமர்த்த புருஷனே குறி; சந்தனப்பூச்சே யுத்தமுயற்சி; சம்போக விச்சையே தேர்; மந்தமான வார்த்தையே பேரிகை. இவைகளே பெண்களுக்குரிய யுத்த லக்ஷணம். இவையொழிந்த அஸ்திரம் முதலானவைகளைக் கொள்வதுவீண்; ஸம்சயமில்லை; ஸ்திரீகளுக்கு நாணமே பூஷணம்; நாணமொழிந்தவரே பூஷணமொழிந்தவர். தைரியங்கொண்டு வெளிவருதலே அபஜயம். அந்தோ! ஸ்திரீயானவள் கடினவெண்ணத்துடன் யுத்தத்துக்கு வருவளாயின் ஸ்தனங்களை எப்படி மூடிக்கொள்வாள்? தனுசை எப்படி யிழுப்பாள்? இவளுடைய மெல்லிய நடையெங்கே? தடியெடுத்தோடுவதெங்கே? இன்னமும் செய்யவேண்டிய மற்போர் முதலிய போர்களெங்கே? அந்த விஷயத்தில் உனக்கு புத்தி சொல்லுகிறவள் காளிகாதேவியும் சாமுண்டா தேவியுமே. சண்டிகை ஆலோசனை ஸ்தானத்திலிருக்கின்றவள். எல்லா ஜந்துக்களுக்கும் பயத்தை யுண்டுபண்ணுகிற சிங்கம் வாகனமாயிருக்கிறது. வீணாநாதத்தை விட்டு கண்டா நாதத்தைச் செய்கின்றாய்.

யௌவனத்துக்கும் அழகுக்கும் இந்தக் காரியம் விரோதமாயிருக்கிறது. ஓ அழகான பெண்ணே! உனக்கு யுத்தஞ் செய்ய வேண்டுமென்றுசை யிருக்குமாயின் தொங்குகின்ற அதரமும், அழகில்லாத நகமும், குரூரமான வுருவமும், காக்கைபோன்ற கருநிறமும், பெருத்த காலும், விகாரமான பற்களும், பூனைக் கண்ணுமுடைய குரூபியாய் யுத்தத்தில் ஸ்திரமாய் நின்று கடினமான வார்த்தையைச் சொல்லுவாயாயின் யான் யுத்தஞ் செய்யத் துணிவேன். இப்போதிருக்கும் இந்த அழகான வுருவத்தைக் கண்டு நானெப்படித் துணிவேன்? நான் துணிந்தாலும் என் கையாடவில்லையென்றனன். இவ்வண்ணஞ் சொல்வதைக் கேட்ட தேவி கூறுகின்றாள்: (35–45)

ஏ மந்தபுத்தி யுள்ளவனே! மன்மத பாணத்தால் மோகிக்கப்பட்டு ஏன் துக்கிக்கிறாய்? நீ காளிகையோடாவது சாமுண்டிகையோடாவது யுத்தஞ் செய். நானதனைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். இருவரும் உனக்குத் தக்கவர்கள். உன்னிஷ்டப்படி நானுன்னோடு யுத்தஞ்செய்ய இச்சிக்கவில்லையென்று அவனுக்குச் சொல்லி, காளியைப் பார்த்து, இவன் விரும்பியவண்ணம் நீ குரூரமான உருவமுள்ளவளா யிருக்கிறபடியால் இவனோடு போர்செய்வாயென்றேவ அவள் காலமறிந்து தூண்டப்பட்ட யமன்போல் கதையொன்றெடுத்துக்கொண்டு வரவே அவனு மவளுமெதிர்த்து இருவரும் அதிபயங்கரமான யுந்தஞ் செய்தனர். பிறகு சும்பன் கதையால் நோக்கியடிக்கக் காளியும் அடித்து அவன் தேரை முறித்து அதிலிருந்த கழுதைகளையும் சாரதியையு மடித்தாள். அவன் பெரிய கதைகொண்டு கோபத்தோடும் அவள் மார்பில் சிரித்துக்கொண்டே யடித்தான். காளிகை கத்தி யெடுத்துக்கொண்டு வேகமாய்ச் சென்று சந்தனம் முதலிய கலவைகள் திமிர்ந்திருக்கும் அவனது இடதுகையை யறுத்தனள். கையறுபட்டும் தேர்பொடிபட்டும் சரீரம் உதிரத்தினால் பூசப்பட்டும் அவனவற்றால் வருந்தாது மற்றொரு கையில் அக்கதையை வாங்கிக் காளியை யடித்தான். அவளும் வாளினால் கதையோடும் தோள்வளையோடும் கூடியிருக்கிற அவ்வசுரனது வலதுதோளைச் சிரித்துக்கொண்டே யறுத்துவிட்டாள். இரண்டு கையும் போகவே காலினாலுதைப்பதற்கோடிவந்தான். காளிகையும் அதிவிரைவாய் அவனிரண்டு கால்களையுமறுத்தனள். அவன் முண்டம்போலாயும் நில்நில்லென்று காளிகையை மிரட்டுகிறவன்போல் வந்தான். காளிகை கழுத்திலிருந்து உதிரவெள்ளம் வடிந்துகொண்டிருக்கிற தலையை யறுத்துத் தள்ளினாள். அது மலைபோல் பூமியில் விழுந்தது. அப்பிணமலையை இந்திராதி தேவர்கள் கண்டு சாமுண்டா தேவியையும் காளிகா தேவியையுந் தோத்திரஞ் செய்தனர். அச்சமயத்தில் காற்று சுகமாய் வீசிற்று. திக்குகள் நிர்மலமாயின. ஓமாக்கினி வலஞ்சுழித்தெழுந்தது. ஓ அரசனே! மிகுந்த அசுரர்களெல்லாம் அம்பிகையை நமஸ்கரித்து ஆயுதங்களை யெறிந்து பாதாளம் போய்விட்டனர். ஓ அரசனே! தேவியினது உத்தமமான சரிதத்

தையும் சும்பன் முதலானவர்களது வதத்தையும் தேவரக்ஷணையை யுமுனக்குச் சொன்னேன். பூவுலகில் இச்சரிதத்தைக் கேட்பவர் களும் படிப்பவர்களும் புண்யவான்களாவர். புத்திரனில்லாதவர் புத்திரரையும் தனமில்லாதவர் தனத்தையு மடைவர். வியாதியுள்ள வர்களும் சத்துரு பயமுள்ளவர்களும் அவ்வவற்றினின்றும் விடுபடுவர். இவை யன்றியும் எல்லாக் காமங்களையுமடைந்து முக்தியடையப் பெறுவரென்று வியாசர் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறியருளினர். (46-68)

ஓம் ஈக்ஷணஸ்ருஷ்டாண்ட கோட்யை நம:

## 32. சுரத-சமாதியர் வரலாறு

சூதர் கூறுகின்றார் :—ஓ மஹரிஷிகாள் ! ஜனமேஜயன் வியாச முனிவரைப் பார்த்து, ஓ மகரிஷியே ! சண்டிகாதேவியின் மகிமை உம்மால் நன்றாய் வர்ணித்துச் சொல்லக் கேட்டேன் ; இனி தேவி யாரால் பூஜிக்கப்பட்டாள் ? சர்வ காமங்களையுந் தருந் தேவியை எவன் பூஜித்துப் பெரிய பிரயோஜனத்தை அடைந்தனன் ? ஓ கருணைக்கடலே ! அத்தேவியினுடைய உபாசனை விதியையும் பூஜாவிதியையும் விஸ்தாரமாய் எனக்குச் சொல்லியருளுமென்று கேட்க, வியாசமுனிவர் அவன் வினவிய வினக்களுக்குச் சந்துஷ்டராய் மஹாமாயா பூஜையைப் பற்றிச் சொல்லுகிறார் : ஓ அரசனே ! முற்காலத்தில் சுவாரோசிஷாந்தரத்தில் சுரதனென்று பிரசித்தி பெற்றவனும் ஜனங்களைக்காப்பதில் ஊக்கமுள்ளவனும் தனுர்வேதத்தின் கரையறிந்தவனும், விரோதிகளில்லாதவனும் மகா தாதாவாயும் பிராமணர்களைப் பூஜிக்கின்றவனும் தானஞ் செய்கிற சுபாவமுள்ளவனும் சத்கர்மத்தில் பிரீதியுள்ளவனும் குருவினிடத்தில் பக்தியுள்ளவனுமுள்ள ஓரரசன் ராஜ்ய பரிபா லனஞ் செய்திருந்தனன். அக்காலத்தில் மலைகளில் வசிக்கிற மிலேச் சர்கள் பலமிகுதியினால் பகைமேற்கொண்டு மதத்து சுரதராசனாலா ளப்படும் பூமி முழுதுந் தங்கள் வசமாக்கிக்கொள்ள வேண்டுமென் னுங் கெட்ட எண்ணத்தால் நால்வகைச் சேனைகளோடும் போர் புரிவதற்கு வர, சுரதனும் தனது நால்வகைச்சேனைகளோடு மெதிர்த் தனன். அதிபயங்கரமான மிலேச்சர்கள் அரசனது பலத்துக்கு மிகவுங் குறைந்தவர்களாயிருந்துந் தெய்வாதீனத்தால் ஜயமடைந் தனர். தோல்வியடைந்த அரசன் உடனே தனது கோட்டையை யடைந்து மந்திரி முதலானவர்கள் சத்துருக்களாகிய மிலேச்சர்கள் பக்ஷமாயிருப்பதை யறிந்துகொண்டு மனவருத்த முற்றவனாய் ஆலோசிக்கலாயினன் : நமக்கு யாவரும் பகைவராயிருக்கின்ற படியால் இனி நல்லகாலம் வருமளவும் அக்காலத்தை யெதிர்பார்த் துக் கொண்டிருக்கலாமா ? அல்லது காலத்தை யெதிர்பாராது யுத்தஞ் செய்யலாமா ? எதனையும் ஆலோசிப்பதற்கு நமக்குச் சுவா தீனமான மந்திரிகளுமில்லை; என்ன செய்வோம் ? நமது மந்திரிகள் துர்மந்திரிகளா யிருத்தலால் ஒருவேளை சத்துருவைச் சேர்த்துக்

கொண்டு வந்து நம்மைப் பிடித்து அவர்கள் வசங் கொடுத்தாலுங் கொடுத்துவிடுவார்களல்லவா? அப்போது என்ன நடக்குமோ? பாபபுத்தி யுள்ளவனிடத்தில் விசுவாசஞ் செய்தல் கூடாது. உலோபத்துக் குட்பட்டவர்கள் எதுதான் செய்யார்கள்? சகோதரர் தாய் தந்தையர் சிநேகிதர் மந்திரிகள் ஆசாரியர் அந்தணர் ஆகிய இவர்களைப் பேராசை பிடித்தவர் துவேஷித்துக் கொள்ளுகின்றனர். அவர்களுடைய துவேஷத்தாலுண்டாகும் தீங்குகள் பலவென்று பலவாக எண்ணினன். இவ்வாறு ஆலோசித்து மிகவும் வருந்திய மனமுடையவனும் இனி யிங்கிருத்த லடாதென்று தனியே குதிரையேறிக்கொண்டு நகரைவிட்டு அரண்யம்போய் நாம் எங்கே போகலாமென்று சிந்தித்து மூன்று காதத்தில் சுமேதஸ் என்னும் ரிஷியினது ஆஶ்ரமமிருப்பதாகத் தெரிந்து அவ்வழியே வந்து பல விருக்ஷ ஜாதிகளாலும் புஷ்ப ஜாதிகளாலும் பக்ஷி ஜாதிகளாலும் அழகு பெற்று சொர்க்கபுரியினுஞ் சிறந்திருக்கும் வனத்தைக் கண்டு அதனுள்ளே செல்ல, அங்குச் சீடர்களுடைய வேதாத்யயன வோசையைக் கேட்டு மகிழ்ந்து அதுகாறுமடைந்திருந்த பயத்தை விட்டு இவ்வாச்சிரமத்தி லிளைப்பாறுவோ மென்றெண்ணி குதிரையை ஒரு மரத்திற் கட்டி வணக்கமுள்ளவனாய் சாலவிருக்ஷத்தின் நிழலில் மான்றோலாசனத்தில் சாந்தராயும் தவத்தினாலிளைத்த திருமேனி யுடையவராயும் சிஷ்யர்களுக்கு ஞானோபதேசஞ் செய்கின்றவராயும் வேத சாஸ்திரார்த்தங்களை நன்றாயறிந்தவராயும் குரோத லோபாதிக ளில்லாதவராயும் எவற்றிலுஞ் சந்தேகமில்லாதவராயும் ஆத்ம ஞானத்தில் ஊக்கமுள்ளவராயும் சத்தியவாதியாயும் இந்திரிய நிக்ரஹராயுமிருக்கிற சுமேதஸ் என்னும் ரிஷியைப் பார்த்துக் கண்ணீர்விட் டழுதுகொண்டே பூமியில் தண்டாகாரமாய் வீழ்ந்திருந்தனன். (13–29)

அம்முனிவர், அப்பா! எழுந்திரு, உனக்குச் சுப முண்டாகுக வென்றனர். அப்போதொரு சீடன் ஆசனங் கொடுக்க முனிவரது ஆக்ஞையா லுட்கார்ந்தனன். பின்னர் முனிவர், அவனது மனோ வெப்பமகலப் பலவினிய மொழிகள் கூறி அர்க்கிய பாத்யங் கொடுத்து, ஏன் சிந்தாகுலமுள்ளவனா யிருக்கின்றாய்? நீ அஞ்சற்க. அரசாள்வதை விட்டு இவ்விடம் வந்த காரணமென்னை? அதனைச் சொல்; நீ எண்ணியிருக்குங் காரியம் மிக்க அசாத்தியமாயிருந்தாலும் நான் முடிக்கிறேனென்று வினவவே, அரசன் கூறுகின்றான்: ஓ முனிபுங்கவரே! நான் சுரதனென்னு மரசன். சத்துருக்களால் ராஜ்யத்தையும் எனது மனைவி முதலிய எல்லாச் செல்வங்களையுமிழந்து இங்கு உம்மைச்சரணடைந்தேன். ஓ சிவஸ்வரூபியே! இனி நீர் எதனைக் கட்டளையிடுகின்றீரோ அதனை பக்தியுடன் செய்கிறேன். இப்பூலோகத்தில் உம்மைக் காட்டிலும் என்னைக் காக்கின்றவர் யார்? இப்போது எனக்குச் சத்துருபய முண்டாயிருக்கிறது. சரணாகதி யடைந்தவரிடத்திலன்புள்ள ஓ முனிபுங்கவரே! என்னைக்காப்பாயென்று புலம்பிச் சொல்லினன். (30–36)

அப்போது முனிவர் கூறுகின்றார்: ஓ ராஜஸ்ரேஷ்டனே! இவ்விடத்தில் நீ பயமின்றி வாசஞ்செய்யலாம். உனது சத்துருக்கள் இங்கு எனது தவவலிமையால் வரமாட்டார்கள். இங்கு அவர்களாலுண்டாகும் ஹிம்சையுண்டாகமாட்டாது. ஆனால் நாங்கள் வனவிருத்திசெய்வது போலும் நீயும் உதிர்ந்துபோன செந்நெல் தானியங்களைப் புசித்து ஜீவிக்கவேண்டும் என்றனர். அதனைக்கேட்ட அரசன் அப்படியே செய்கின்றேனென்று அவ்வாச்சிரமத்திலுள்ள பழம் வேர் காய் முதலியவைகளைப் புசித்து ஜீவித்து வந்தான். ஒருநாள் அந்தவரசன் தனது ராஜ்யாதி சுகங்களை நினைத்து விசாரபீடிதனாகி ஒரு மரத்தினிழலி லுட்கார்ந்து கொண்டு சிந்திக்கலாயினன்: அந்தோ! நம்முடைய ராஜ்யம் பாபிஷ்டர்களான மிலேச்சர்களால் கொள்ளை கொள்ளப்பட்டதே! அவர்களால் நமது ஜனங்கள் பீடிக்கப்பட்டிருப்பார்களன்றோ? நமது பரிஜனங்களெல்லாம் அவர்கள் வசப்பட்டுத் துக்கத்தை யனுபவிப்பார்களன்றோ? நமது செல்வங்களெல்லாம் கொலைகட் காமங்களுக்கே யாகுமன்றோ? அந்தோ! சத்பாத்திரத்தில் போகாதன்றோ என்று சிந்தித்துக்கொண்டிருந்தனன். (37–45)

அப்போது ஸம்ஸாரத்தில் விரக்திபிறந்த ஒரு வைசியன் அங்கு வந்தனன். அரசன் அவனைப்பார்த்து பக்கத்தி லுட்காரச்செய்து வினவுகின்றான்: நீ யார்? எங்கிருந்து இங்குவந்தனை? எதனால் நீ தீனனாயிருக்கிறாய்? நேசனைவழிவிட்டால் ஏழடிதூரம்பின்றொடர்ந்து பின்பிரிய வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆகையால் எனக்குச் சிநேகனாகிய நீ உண்மையைச் சொல்வாயென்றனன். வைசியன், நமக்கு நல்ல சிநேகங் கிடைத்ததென்று நினைத்துக் கூறுகின்றான்: ஓ அரசனே! நான் வைசியன்; என் பெயர் சமாதி; நான் தனமுள்ளவன்; தர்மத்தில் சமர்த்தன்; உண்மையையே சொல்லுகிறவன்; பொறாமையில்லாதவன்; இப்படிப்பட்ட நான் தனத்திலாசையுள்ள துஷ்டபுத்திர களத்திரங்களால் துரத்தப்பட்டவனாய்க் காட்டுக்கு வந்தேன். நீரார்? பாக்யவானாகப் பிரகாசிக்கின்றீர். ஓ நண்பரே! உம்முடைய சரித்திரத்தைக் கூறுமென்றனன். அரசன் கூறுகின்றான்: நான் சுரதனென்னும் பெயருள்ள அரசன். நானும் உன்னைப்போல் சத்துருக்களால் பீடிக்கப்பட்டு ராஜ்யமிழந்து மந்திரிகளால் வஞ்சிக்கப்பட்டவனா யிங்குவந்துவிட்டேன். ஓ வைசிய சிரேஷ்டனே! எனக்கு நீ தெய்வாதீனமாய் நல்ல மித்திரனாகச் சேர்ந்தாய். இக்காட்டில் நாமிருவரும் வசித்திருப்போம். நீ துக்கத்தை விட்டுவிடு என்று சொல்லிய போது வைசியன் கூறுகின்றான்: (46–54)

ஓ அரசனே! என் ஸம்ஸாரம் யாதொரு துணையுமில்லாதிருக்கின்றாள். நானில்லாமல் மிக்க துக்கமுள்ளவளாயும் அதுவே வியாதியாய்த் துக்கம் தாபம் இவைகளால் வருத்தப்பட்டவளாயுமிருப்பாள். என் மனைவியின் தேகம் சுகமாயிருக்குமாவென்று என் மனது தபித்துக்கொண்டே யிருக்கிறது. பிள்ளையையும் மனைவியையும் வீட்டையும் பந்துக்களையும் எப்போது பார்ப்பேன்?

வீட்டுச் சிந்தையினு லலைந்துகொண்டிருக்கிற மனதுக்குச் சுகமில்லையே யென்றனன். அப்போது அரசன் கூறுகின்றான்: ஓ வைசியனே! துர்நடத்தையுள்ளவராயும் பாவ புண்ணியந் தெரியாதவர்களாயுமிருக்கிற எந்த புத்திர களத்திராதிகளால் தூரத்திவிடப்பட்டனையோ அவர்களை மறுபடியும் பார்ப்பதனு லென்ன சுகமுண்டாகப்போகிறது? ஓ பெருந்தன்மையுள்ளவனே! நன்மையைச்செய்கிற சத்துருக்களே மித்திரர்கள். கெடுதியைச் செய்கிற பந்துக்களே சத்துருக்கள். ஆனதால் மனத்தைத் திடப் படுத்திக்கொண்டு என்னேடு சஞ்சரித்திருப்பாயென்றனன். இவ் வாறு சொல்ல, வைசியன் கூறுகின்றான்: ஓ அரசனே! என் மன தானது இப்போது மிக துக்கமுள்ளதாயிருக்கிறது. துஷ்ட சுபா வங்களால் விடக்கூடாமலிருக்கிற குடும்ப சிந்தனையினுல் மனம் வருந்துகின்றது; நான் என் செய்வேனென்றான். அரசனும், ஓ வைசியனே! ராஜ்யதுக்கம் என் மனத்தையும் வருத்தப்படுத்து கிறது; நாமிருவருமிப்போது சோகத்தை நாசம் பண்ணுகிற ஔஷதத்தை முனிவரைக் கேட்போமென்று அவரைச் சமீபித்து நமஸ்கரித்து இருவரு ளரசன் அம்முனிபுங்கவரிடம் பொறுமை யுடையவனுய்ச் சொல்லத்தொடங்கினான். (55–63)

ஓம் ஈஶ்வர வல்லபாயை நம:

## 33. புவனசுந்தரி மாஹாத்மியம்

வியாசர் கூறுகின்றார்:—ஓ ஜனமேஜயனே! சுரதனென்னும் அரசன் சுமேதஸ் என்னும் ரிஷியை வணங்கிக் கூறுகின்றான்: ஓ சுவாமி! யான் வனத்திற் சஞ்சரித்துக்கொண்டிருக்குந் தருணத் தில் இந்த வைசியன் மனைவிமக்களால் துரத்தப்பட்டு என்னிடம் வந்து மிக்க சிநேகனுயினன். எனக்கோ நிஷ்காரணமாய் வந்த பலவித துன்பங்கள் நேரிட்டு அதனுலுண்டான மனோவிசாரம் நீங்கிற்றில்லை. நான் அடிக்கடி குதிரைகளையும் அடிமையாட் களையும் நிதிகளையும் எனது சத்ருக்கள் ஒன்றுகூடி நிமிஷத்துக்குள் கொள்ளைகொண்டமையை எண்ணி ஏக்கமுற்றுச் சிந்தித்துத் துயரப்பட்டுக்கொண்டிருக்கிறேன். எனக்கு நித்திரை என்பதில்லை. சுகமெப்படியிருக்குமோ அதனையறியேன். யானே இவ்வுலக மெல்லாம் சொப்பனம், மித்தை யென்றறிவேன். அப்படியறிந்தும் என்மனம் நிலைபடாமல் சுழன்று சுழன்று என்னை வாட்டுகின்றது. யான் யாரோ, எனதென்கிற பதார்த்த கோடிகளெல்லா மெவை களோ என்றறிந்தவனுயிருந்தும் அவைகளைப் பரியாலோசிக்காத சமயத்தில் துக்கத்தை யுண்டுபண்ணுகின்றன. இவையெல்லாம் பிரமையென்பதை யானறிவேன். அப்படியிருந்தும் என் மனம் பயிற்சித் தடிப்பால் அவைகளைப் போய்க் கவருகின்றது. இதற்குக் காரணமென்ன? இது மிகவும் வியப்பைத் தருகின்றது. முனிவரே! நீர் அனைவருக்கும் மேலானவராயிருக்கின்றீர். உமக்குத் தெரி

யாத அம்சமொன்றுமில்லை. எல்லா ஸம்சயத்தையும் போக்கும் சக்தியுடையவராதலால் என் மனம் மோகமடைவதற்குக் காரண மெதுவோ அதனை அன்புடன் சொல்வீராக வென்று கேட்டனன். (1–8)

சுமேதமுனிவர் அவ்வரசனிடத்தில் கருணைவைத்தவராய்ச் சோகமோகங்களைப் போக்கும்படியான ஹிதோபதேசத்தைச் சொல்லத் தொடங்கினர் : ஓ அரசனே ! எல்லாப் பிராணிகளுக்கும் பந்த மோக்ஷங்களுக்கும் காரணம் மாயை யென்றே பெரியோர் கூறுகின்றனர். பிரம்ம விஷ்ணு ருத்திரேந்திர வருண வாயுவாதி தேவர்களும் கந்தர்வாதி ராக்ஷஸர்களும் மாயா வசப்பட்டவர்க ளாய்ப் பந்தமோக்ஷங்களுக் கிடமாகின்றனர். சிருஷ்டிக்கப்பட்ட சராசராத்மகமான இவ்வுலகமனைத்தும் மோகவலையிலகப்பட்டு அம்மாயைக்கே சுவாதீனர்களாகின்றனர். பிரமனாதி தேவர்களுக்கே இக்கதியானால் மானிடர்களிலொருவனான நீ எம்மாத்திரம்? அம் மாயையோ மிக வலிவுடையது; ஞானிகளுடைய மனதையும் மோகிக்கச்செய்யும். பிரமனாதிதேவர்களாயினும் ஞானிகளாயினும் பிராரத்த விசேஷத்தால் ராகத் துவேஷாதிகளுக்கு வசப்பட்டவர் களாய்த் திகைத்து மோகிக்கின்றனர். முன் கிருதயுகத்தில் நாராயணர் சுவேதத்வீபத்தை யடைந்து சுகதுக்கங்கள் மாறிமாறி வருகின்றமையால் இதனைப் பிரம்மானந்தப் பிராப்தியா லொழிக்க வேண்டுமென்று கருதி அங்குப் பதினாயிரம் வருஷம் கோரமான தவம்புரிந்து வந்தனர். பிரம்மதேவனும் ஒரு காலத்தில் அஞ் ஞானத்தை விலக்கிக்கொள்ள வேண்டுமென்கிற எண்ணங்கொண்ட வராய் மனுஷ்ய சஞ்சாரமில்லாத அரண்யத்தையடைந்து அங்குத் தவம்புரிந்துகொண்டிருந்தார். நாராயணர் தாம் தவஞ்செய்து கொண்டிருந்த சுவேதத்வீபத்தைவிட்டு வனாந்தரஞ் செல்லவேண்டு மென்கிற வெண்ணமுடையவராய் வேறு வசதியான ஆச்ரமத்தைத் தமக்குத் தபோவனமாக அமைத்துக்கொள்ளவிரும்பி வனங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டேவருந் தருணத்தில் பிரம்மதேவனும் அவ்வாறு தபோவனஞ் செல்லக்கருதிப் போய்க்கொண்டிருக்கும் போது அவ்விருவர்களுமோரிடத்திற் சந்தித்து ஒருவரையொருவர் நீர் யார், நீர் யாரென்று வினவினர். பிரம்மன், இவ்வுலகத்தைப் படைக்குங் கர்த்தா நானென்றனன்.

அதனைக் கேட்ட விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார் : ஓ மூடா ! யானன்றோ இவ்வுலக சிருஷ்டிகர்த்தா ! யான் யார் தெரியுமா ? விஷ்ணுவல்லவா ? நீ ரஜோகுணத்தை ஆச்ரயித்தவனாதலால் தாழ்ந்தவன். நீ எனக்கு எம்மாத்திரம்? நான் சத்வகுணத்தை ஆச்ரயித்தவன். என்னை நீ மறந்துவிட்டனையோ? நீ அநேக முறை ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டபொழுதெல்லாம் என்னைச் சரணமடைந்து காப்பாற்ற வேண்டுமென்று பலமுறை வேண்டிக் கொள்ள, நான் உன்னைக் காக்க அசுரர்களுடன் போர்புரிந்து காப்பாற்றினேனல்லவா ? சமீபகாலத்தில் மதுகைடபர்களைக் கொன்று உனக்கு வந்த ஆபத்தை நிவாரணஞ் செய்தேனே !

அன்றியும், ஓ மந்தமதியாளனே !அதையும் மறந்து விட்டனையோ? என்ன கர்வம்! என்ன மோஹம்! ஆஹா, நன்ருயிருக்கிறது! இம்மோகத்தை விட்டுவிடு. இவ்வுலகத்தி லென்னைவிட மேலானவ னெவனிருக்கின்ருன்? என் றிவ்வண்ணம் பிரம விஷ்ணுக்கள் கொடுமையாய்ப் பேசிக்கொண்டே கோபம் மேலிட உதடு துடிக்கக் கண்கள் சிவப்பேறப் பெற்றனர். (22–26)

இவர்கள் மத்தியில் ஓர் சிவலிங்கந் தோன்றிற்று. அஃது அமிர்தம்போல் வெண்மையாயும் பருத்துயர்ந்ததாயும் சுந்தரமாயு மிருந்தது. அத்தருணத்தில் ஆகாயவாணி, நீங்களேன் வாதஞ் செய்து கலாம் விளைக்கின்றீர்? உங்கள் மத்தியில் தோன்றியிருக் கும் இம்மகாலிங்கத்தின் அடியையாவது முடியையாவது எவன் முன்னே கண்டு வருகின்ருனே அவனே சிறந்தவன். ஆதலால் ஒருவன் பாதாளத்தையும் ஒருவன் ஆகாயத்தையுமடைந்து அடி முடிகளைத் தேடுங்கள். என் வாக்கியத்தை நிராகரணஞ்செய்யாமல் பிரமாணமாக வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக் குண்டாயிருக் கும் விவாதத்தை எவ்விதத்திலாவது சமாதானஞ் செய்யவே இம் மகாலிங்க முண்டாயிருக்கிற தென்று கூறிற்று. இவ்வாறு ஆகாய வாணி கூறியதைக்கேட்ட பிரம விஷ்ணுக்கள் அப்படியே செய்ய விருப்பங்கொண்டவர்களாய் அந்த லிங்கத்தை அளவிடுவதற்காக விஷ்ணு பாதாளத்தையும் பிரமன் ஆகாயத்தையுமடைந்து தேடத் தலைப்பட்டலைந்தனர். இவ்விருவரில் விஷ்ணுமூர்த்தி மிகவும் வருத்தத்துடன் பாதாளம்வரையில் தேடித்தேடி லிங்கத்தினடியைக் காணமுடியாமல் சிரமத்தினுல் திரும்பிவந்துவிட்டனர். பிரமன் ஆகாயத்திற்பறந்து தேடிக்கொண்டிருக்கும்போது தற்செயலாய்ப் பரமசிவன் சிரசிலிருந்து நழுவிவிழுந்த தாழம்பூவொன்றைக்கண்டு மிகவுஞ் சந்தோஷித்துத் திரும்பிவந்து விஷ்ணுமூர்த்திக்குத் தாழம் பூவைக்காட்டி இதை பரமசிவன் முடியிலிருந்து உமக்கு நம்பிக்கை யுண்டாகக் கொணர்ந்தேனென்று அசத்தியமான வார்த்தையைச் சொல்லினன். அச்சொல்லை விஷ்ணுமூர்த்தி கேட்டு அத்தாழை மலரைப் பார்த்து இதனைப் பரமசிவன் முடியிலிருந்து கொண்டு வரப்பட்ட தென்பதற்குச் சாக்ஷி யார்? அப்படி சாக்ஷி சொல்பவர் யதார்த்தவாதியாயும் ஆசாரசீலமுடையவராயும் நிஷ்பக்ஷபாதியாயு மிருத்தல் வேண்டுமல்லவா? அப்படிப்பட்ட சாக்ஷியே விவாத முண்டாகுங் காலத்தில் மத்யஸ்தமாகக் கொள்ளப்படுவ ரென்று சொல்ல, பிரமன் கூறுகின்ருன் : (27–38)

ஓ விஷ்ணுமூர்த்தியே! உமக்கென்ன இன்னும் நம்பிக்கை யுண்டாகவில்லையா? தூரதேசத்திலிருந்து வந்து உமக்கு யார் சாக்ஷிசொல்பவர்? எது சத்தியமோ அதை இம்மலரே சொல்லு மென்று கூறி, கேதகி மலரைச் சாக்ஷி சொல்லும்படிப் பிரேரேபித் தனன். தாழம்பூ, தன்னைப் பரமசிவன் சிரசிலிருந்து இப்பிரம தேவர் கொண்டுவந்தாரென்றும், இதிற் சிறிதுஞ் சந்தேகிக்க வேண்டியதில்லை யென்றுங் கூறிற்று. அதனை விஷ்ணுமூர்த்தி கேட்டு நகைத்து, நீ சொல்லியதை நம்பவேமாட்டேன். எனக்குப்

பிரமாணம் பரமசிவனே யென்றனர். பரமசிவனுர் கோபங்கொண்ட வராய்த் தாழைமலரைப் பார்த்து, நீ என் சிரசிலிருந்து விழுந்து நடுமார்க்கத்தில் பிரமன்கையி லகப்பட்டிருக்க, சிரசிலிருந்தே உன்னைப் பிரமன் கொண்டுவந்ததாக அசத்தியங் கூறினுயன்றோ? நீ இன்று முதல் எனது பூஜைக் கருகமாகாயென்று சபித்தனர். பிரமன் வெட்கமடைந்து விஷ்ணுமூர்த்தியைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்தனன். ஓ அரசனே! மாயையின் வன்மையைப் பார்த்தனையா? பிரம விஷ்ணுக்கள், யான் சிறந்தவன் யான் சிறந்தவனென ஒருவர்க்கொருவர் விவாதஞ் செய்வதற்கும், பரம சிவன் தாழம்பூவைத் திரஸ்கரிப்பதற்கும் காரணமாயிருந்தது மாயையே. இது ஞானிகளையும் மயக்கிவிடுகிறது. தேவர்கள் காரியத்தைச் சாதிப்பதற்கு விஷ்ணுமூர்த்தி அனேக அவதாரங்கள் செய்து அசுரர்களை வஞ்சிக்கின்றனர். இது மாயையின் கொடுமை யென்பதற் கையமுண்டோ? ஞானியாயிருக்கிற இவருக்குத் தேவ காரியத்தில் என்ன சம்பந்தமிருக்கிறது? ஞானிகளையும் பலாத்கார மாய் ஆகர்ஷித்து மோகத்தை யுண்டுபண்ணுகிறது. இத்தகைய மோகத்தை யுண்டுபண்ணுவதற்கு அதிஷ்டானமாயிருப்பதும் பந்த மோக்ஷங்களை யுண்டுபண்ணுவதும் ஸர்வ வியாபகமான பராசக்தி யென்றறிவாய். அச்சக்திதான் ஞானத்தை யுண்டுபண்ணி பந்தத் தைத் தொலைத்து மோக்ஷத்தை யுண்டுபண்ணத் தக்கவ ளென்றனர். (39–52)

இவ்வாறு வியாசர்கூற, அரசன், ஓ முனிவரே! பராசக்தியின் சொரூபத்தையும் அதனது வலிவையும் அச்சக்தியுற்பத்திக்குக் காரணமாயிருப்பதையுஞ் சொல்லவேண்டுமென்று கேட்க, முனிவர் கூறுகின்றுர்: ஓ அரசனே! இச்சக்தி அனுதியாயிருப்பதால் அதற் குற்பத்தி யென்பதில்லை; நித்யமானது; காரணங்களுக்கெல்லாம் காரணமாய் விளங்குவது. எல்லாப் பூதங்களிடத்தும் வியாபித்துச் சேஷித்திருப்பதென்றறிவாய். அச்சக்தியில்லாதவன் பிரேதம் போலாகின்றுன். சர்வ ஜந்துக்களிடத்தும் சித்ரூபமாய் விளங்கும் சக்திதான் அப்பராசத்திக்கு நிஜமான சொரூபம். அச்சித் சக்தியை உற்பத்தி திரோதானங்கட்காகத் தேவர்களும் மானிடர்களும் எப்போது துதிக்கின்றுர்களோ அப்போது பிரஜைகளுடைய துக்கத்தை நாசம் பண்ணுவதற்கு நானுரூபத்தைத் தரித்து நானு சக்தியுடன் சுவேச்சையா யுண்டாகின்றுள். அந்தச் சக்தி தேவர் களுக்குச் சுவாதீனப்பட்டவளல்லள்; காலத்திற்கும் வசப்பட்டவ ளல்லள். சகல புருஷார்த்தத்தையும் எளிதிற் றரத்தக்கவள். கர்த் திருத்வமில்லாத அச்சக்தி திரஷ்டாவாகவிருந்து இவ்வுலகமனைத் தையுந் திருசியப்படுத்துகின்றுள். திருசியத்துக்கு முதன்மையாய் விளங்குகின்ற அவள் ஒன்றுகவேயிருந்து பிரமாண்டமென்ற நாடகத்தைச் செய்து புருஷனுகிய பரமசிவனை ரஞ்சிக்கச் செய் கின்றுள். புருஷன் ரஞ்சிக்குங்காலத்தில் எல்லாவற்றையும் சங்கரிக் கிறுன். அப்பராசக்தியைக் காரணமாகக் கொண்டுண்டானவர்களே பிரம, விஷ்ணு, ருத்திராதிகள். இவர்கள் அம்பிகையின் லீலா

மாத்திரத்தில் சிருஷ்டியாதி காரியார்த்தமாய் அவ்வக்காலங்க டோறுங் கற்பிக்கப்பட்டவரேயன்றிக் கற்பிக்கப்படாமல் நித்தியரா யிருப்பவ ரல்லரென்று நிச்சயிக்கப்படுகின்றனர். பராசக்தி தன்னம்சத்தின தம்சங்களை இவர்களிடத்தி லாரோபணஞ்செய்து அவர்களுக்கேற்றபடி ஸரஸ்வதி முதலிய சக்திகளையுங் கொடுக்க வதனை யவர்கள் பெற்றிருக்கின்றனர். இவ்வுண்மையால் இவை களுக்கெல்லாங் காரணமாய் விளங்குபவள் பராசக்தியென மகத்துக் களுணர்ந்து அவளே சிருஷ்டிமுதலிய கிருத்தியங்களை யியற்றுபவ ளென நிச்சயித்துப் பூஜித்து நற்கதியடைகின்றனர். ஓ அரசனே! இப்படிப்பட்ட அம்பிகையின் சரித்திரத்தை என் புத்திக்கெட்டின வரையுஞ் சொன்னேன், என்றனர். (53–65)

ஓம் ஈடிதாயை நம:

## 34. நவராத்திரி பூஜை மகிமை

வியாசமுனிவர் கூறுகின்றார்: ஓ ஜனமேஜயனே! சுரத னென்னும் அரசன், சுமேதமுனிவரால் அம்பிகையின் மகிமையைச் சொல்லக்கேட்டு, தேவியிடத்தில் அன்புடையனாய், ஓ முனிவரே! எனக்கு அம்பிகையினது ஆராதனக்கிரமத்தையும், மந்திரமுறை யையும், ஓம விதியையும் தயைசெய்து கூறவேண்டுமென்ன, அம் முனிவர் மனிதர்களுக்குக் காமம், மோக்ஷம், ஞானம் என்பவற்றை யும் துக்கநாசத்தையுந் தருவதான தேவியினது சுபகரமாகிய பூஜா விதியைச் சொல்லுகிறேன், கேட்பாயாகவென்று கூறுகின்றார்:

பூஜைசெய்பவன் பிரதமத்தில் விதிப்படி ஸ்நானஞ்செய்து சுசி யுடையவனாய் வெண்மையாகிய வஸ்திரந்தரித்து ஆசமித்து நித்திய விதிகளை முடித்துக்கொண்டு தனது கிருகத்துக்குப்போய் கோமயத் தினால் சுத்திசெய்திருக்கும் நல்லவிடத்தில் உத்தமமாகிய ஆசனத் தின்மேல் உட்கார்ந்து மூன்றாவர்த்தி ஆசமித்து, தனது சக்தியானு சாரமாகப் பூஜாத்திரவியங்களைச் சேகரித்துத் தன் சமீபத்தில் வைத்துக்கொண்டு பிராணாயாமமும் திதிவார நக்ஷத்திராதிகளைக் குறிப்பதாகிய சங்கற்பமும், பின்னர் பூதசுத்தியாதிகளையு மியற்றி அது முடிந்தபின் திரவியசுத்தி நிமித்தம் மந்திரதீர்த்தத்தாற் புரோக்ஷித்து, அதன்பின்னர் நியாசங்களை விதிமுறையாய் நியசித்து, அதன் பின்னர் நல்ல தாம்பரத்தகட்டில் வெண்மையான சந்தனத்தால் முதலில் அறுகோணமும் அதற்கு வெளியில் அஷ்ட கோணமும் அக்கோணங்களில் நவாக்ஷர மந்திரத்தினுடைய பீஜங்களுமெழுதி இவ்வகையாக யந்திரப் பிரதிஷ்டைசெய்து வேதோக்த விதியாய்ச் சிவோக்தமாகிய மந்திரங்களினாலர்ச்சித்தல் வேண்டும்; ஆகமவிதியின் வழியாயும் பூஜைசெய்யலாம். விதி முறையாய்ப் பூஜித்தபின்னர் நவாக்ஷர மந்திரத்தைத் தியான பூர்வகமாய் ஜபித்தல்வேண்டும். ஜபத்தில் பத்தில் ஓரம்சம் ஹோமமும், ஒரு ஹோமத்திற்கு பத்துத் தர்ப்பணமும், பத்து

ஹோமத்திற்கு ஒரு பிராமணபோஜனமும் செய்வித்தல்வேண்டும். ஜப ஹோமாதிகள் முடிந்தபின்னர் அம்பிகைச் சரித்திரங்களில் மூன்று சரித்திரமாவது பாராயணம் பண்ணி விஸர்ஜனஞ் செய்தல் வேண்டும். (1–11)

ஓ அரசனே! பகவதியினுடைய பூஜையைப் பிரயத்தனப் பட்டுச் செய்தல் வேண்டும். அன்றியும், மிகவும் மேன்மையடைய வேண்டியவன் நவராத்திரி உபவாசத்தை விதிபூர்வகமா யவசியஞ் செய்தல்வேண்டும். இந்த நவராத்திரி பூஜாவிதியில் கூறப்படும் ஓமத்தில் மந்திர ஜபத்தோடு சர்க்கரையும் நெய்யும் தேனுங்கலந்த பாயசத்தையும், சாகமாம்சத்தையும் உபயோகித்தல் வேண்டும். அதற்குபயோகப்படும் பத்திர புஷ்பங்கள்—குற்றங்களில்லாத நல்ல வில்வ பத்திரங்களும், செவ்வலரிப்பூவும், சர்க்கரையோடு கலந்த எள்ளுமாம். இவை யர்ச்சனைக்குரியன. நவராத்திரி தினமாகிய ஒன்பது நாட்களில் அஷ்டமிதிதியும் நவமிதிதியும் சிறந்தன. இவை போலவே சதுர்த்தசி திதியும் சிறந்ததென்பர். இந்தப் பூஜையிற் பிராம்மண போஜனம் அவசியம் சிறப்பாகச் செய்வித்தல்வேண்டும். இவ்வண்ணம் செய்யப்பெற்றால் தனஹீனன் தனவானையும், ரோகி அரோகனையும், புத்திரஹீனன் சொற்படி நடக்கத் தக்க புத்திர பாக்கியவானையும், ராஜ்யபிரஷ்டன் ஸார்வ பௌமனையும், சத்துருபீடிதன் சத்ருஹரனையும், வித்யாஹீனன் (ஐயந்திரிபற) நல்லரஸஜ்ஞான வித்தியாசாலியாயும் ஆவார்க ளென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. இவ்வரிய நவராத்திரி உபவாசத்தை அந்தணர் முதலிய நான்கு வருணத்தவரும் பக்தியுடன் செய்யப் பெறுவாராயின் ஜகத்காரணியாகிய அம்பிகையினுடைய அனுக்கிரகத்தால் ஸர்வ சுகத்தையும் பெறுவர். ஸ்திரீ புருஷ கூட்டங்களை மிகுதியாகப் படைத்தவர் அவர்களால் வருந்தாதிருத்தற்கு நவராத்திரி விரதத்தைப் பக்தியுக்தராய்ச் செய்வாராயின் அவருக்கு வேண்டியவற்றை அம்பிகை யளிப்பள். (12–20)

ஓ அரசனே! சர்வ காமங்களையுங் கொடுக்கத்தக்கது நவராத்திரி பூஜையென்று சொன்னேனல்லவா? அதனது விதியைச் சற்று விரித்துச் சொல்லுகிறேன், கேட்பாயாக:

புரட்டாசிமாசம் சுக்கிலபக்ஷத்தில் வரும் நவராத்திரி பூஜா காலத்தில் சண்டிகையாகிய தேவிக்குப் பூஜாஸ்தானத்தைக் கற்பித்துக் கொண்டு அதில் விதிப்படி மண்டபமியற்றி வேதமந்திர விதிமுறையாய்க் கலசத்தை ஸ்தாபித்து, அதன்மேல் யந்திரத்தை வைத்து, அக்கலசத்தைச் சூழ்ந்து யவையாகிய தானியத்தைப் பரப்பிப் பின்னர் புஷ்பமாலை முதலியவற்றா லலங்கரித்து தூப தீபாதி யுபசாரங்களால் மூன்றுகாலமும் பூஜிக்கவேண்டும்.

ஓ அரசனே! தூபதீப நைவேத்திய பல புஷ்பாதிகளும் கீத வாத்தியங்களும் அவைகளோடு கலந்த ஸ்தோத்திர முறைகளும் விசேஷமாயிருக்க உற்சவாதிகளும் மிக்க சிறப்பாய் நடத்தவேண்டும். இவைகளில் திரவியலோபஞ்செய்தல் கூடாது. இப்போது

சொல்லி வந்தனவேயன்றிக் கன்னிகைகளுக்குச் சுகந்தமாகிய தைலம், சந்தனம், புஷ்பம், பூஷணம், வஸ்திரம், பக்ஷ்யம் முதலிய வற்றை மனோசம்பந்தமான உபசாரத்துடன் கொடுத்தல் வேண்டும். நவமி பூஜை முடிந்தவுடன் தசமிதினம் பிராம்மண போஜனஞ் செய்வித்துப் பாராயணஞ் செய்தல் வேண்டும்.

இந்த விரதத்தைப் பதிவிரதையாகிய சுமங்கலியாவது அமங்கலியாவது பக்தியோடு அனுஷ்டித்துச் செய்வராயின் இம்மையில் நினைத்த இஷ்டகாமங்களை அனுபவிக்கப்பெற்றுத் தேகாந்தத்தில் பரமபதத்தையடைவர். அம்பிகையி னிடத்தில் நிஜமான பக்தி யுடையவர் ஜன்மாந்தரத்திலும் மறவாமல் உத்தம குலத்திற்பிறந்து நல்லொழுக்கமுடையவராயிருப்பர். இந்த நவராத்திரி விரதமானது உத்தமோத்தமமான விரதமாகும். சிவையினுடைய விரதமாகிய இது சிறப்பாகிய சகல செல்வங்களையுங் கொடுக்கும். ஆதலால், அரசனே! நீ சண்டிகையினுடைய பூஜையைச் செய்வையாயின் சத்துருக்களை ஜயித்து ராஜ்யசம்பத்தை யடைவாய். இந்தத் தேகத்தினுற் பெறவேண்டிய சகல போகங்களையும் பெற்று புத்திர மித்திர களத்திராதிகளுடன் குறைவின்றி வாழ்வாய், சந்தேகமில்லை என்று கூறினர். (21–37)

பின்னர் சுமேதமுனிவர் வைசியனைப்பார்த்து, ஓ வைசியனே! விஸ்வேஸ்வரியும் மஹா மாயாசொரூபிணியுமாகிய தேவியை நீயும் ஆராதனைசெய்வாய். செய்வாயாயின் உன்னுடைய கிருகத்திலுள்ள உன்னைச்சேர்ந்தவரெலலாம் மிகவும்பெருமையாய்க்கொண்டாடுவர். நீ இச்சம்ஸாரத்தி லனுபவிக்க வேண்டிய ஸர்வ சுகங்களையும் அனுபவித்து மறுமையில் தேவியினது சாலோகத்தைப்பெற்றுப் பரமானந்த மெய்துவாய். பகவதியை யாராதிக்காதவ ரெவரோ, அவர் இகலோகத்தில் நானுவிதமான வியாதிகளாற் பீடிக்கப்பெற்றுப் புத்திர பாக்கியம் முதலிய பாக்கியங்களற்றுப் பெருந்துக்கமனுபவித்து மீளாநரகத்துக் காளாகின்றனர். எவர் வில்வம் அலரி தாமரை ஷண்பகம் முதலிய நல்ல பத்திர புஷ்பங்களைக்கொண்டு பவானியை வேதங்களிற் சொல்லப்பட்ட மந்திரங்களால் அர்ச்சிக்கின்றனரோ, அவர்கள் இம்மையில் மஹா சுசிகளாய் பரமபுண்ணியர்களாய்த் தேவியினிடத்தில் உண்மையான பக்தியுடையவர்களாய்ச் சகல தனங்களுக்கும் ஆஸ்ரயராய் மஹா வித்வான்களாய் ராஜ ஸ்ரேஷ்டர்களாய் இவ்வுலகிற்கோர் திலகம்போன்றவராய் விளங்குவர் என்றனர். (38–44)

ஓம் ஈஸ்வரார்த்தாங்க ஶரீராயை நம:

## 35. தேவி பூஜையின் பயன்

வியாசமுனிவர் ஜனமேஜயனைப் பார்த்துக் கூறுகின்றார்:— தேவி சரணாரவிந்த ரஸாம்ருதபான திருப்தனே! இவ்வண்ணஞ் சுமேதமுனிவர் சொல்லிவந்ததைக் கேட்ட அரசனும் வைசியனும்

விநயத்துடன் அவரை வணங்கி ஆனந்தமிகுதியால் மலர்ந்த கண்களுடையவர்களாய்க் கைகூப்பிக்கொண்டு கூறுகின்றனர் :— ஓ பகவானே! செயலற்றவர்களும் தீனர்களுமாகிய நாங்கள் தேவரீரது திருவாக்கினின்றும் பெருகாநின்ற அமுதவசனங்களால் கங்கையால் பகீரதன் பரிசுத்தமடைந்தமைபோல் பரிசுத்தமடையப்பெற்றோம். சாதுக்களாயுள்ளவர் பரப்பிரகிருதியாகிய தேவியையே சரணமடைந்தவர்களாய் கிருத்ரிமகுணங்களற்று யாவருக்கும் இதத்தையே செய்பவரா யிருப்பர். மகாதுக்க விநாசகரமாயிருக்கின்ற இந்த ஆஶ்ரமத்தை யாங்கள் செய்த பூர்வ புண்ணிய மகிமையால் வந்து சேரப்பெற்றோம். தேவரீரும் எங்கள் துக்கம் நிவிர்த்தியாம் வண்ணம் உபாயமுங் கூறியருளினீர். உலகினில் மனிதருள் தமது பிரயோஜனத்தையே கருதுகின்றவர் பலர். தேவரீரைப்போன்ற சில பெரியோரே பிறரது காரியத்தைத் தமது காரியமாகவெண்ணுகின்றவர். ஓ சுவாமிகாள்! யானோ பெருந்துயரத்தி லிருக்கின்றவன். இந்த வைசியன் என்னிலும் பெருந்துயரத்தி லிருக்கின்றான். யாங்கள் படுந் துன்பத்துக்குச் சம்ஸாரங்காரணமாகவிருந்தும் அதில் பற்றொழியாமையால் அச்சம்ஸார தாபத்தினால் மிகவும் வாட்டமுற்றிருக்கின்றோம். அந்த வாட்டம் தேவரீரைத் தரிசித்ததனால் நீங்கியிருக்கின்றோம். தேவரீரது திருவாக்கைக் கேட்டதனால் தன்யர்களாயினோம். ஓ கருணைக் கடலே! உமது கிருபையால் எங்களைக் காத்தருளவேண்டும். சாந்தராகிய தேவரீரது திருக்கரங்களால் எங்களைப் பிடித்துத் துக்கசாகரத்தினின்றுந் தாண்டச்செய்து மந்திரதானத்தால் கரையேற்றுவீராயின் நாங்கள் மகத்தாகிய தவத்தைச்செய்து தேவரீரை வந்து தரிசித்து எங்களிருப்பிடம்போய்ச் சேருவோம். ஆகையால் தேவரீரது திருவாக்கினின்றும் வந்த தேவியினது நவாக்ஷரமந்திரத்தை யுபதேசிப்பீராயின் அதனை யாங்கள் யாதொரு ஆகாரமுங் கொள்ளாமல் நிராகாரர்களாய் நியமத்துடன் ஸ்மரிக்கின்றோம் என்று பிரார்த்தித்தனர். (1–12)

அம்மஹாமுனிவர் தியான பீஜாக்ஷர பூர்வகமாய் அம்மஹா மந்திரத்தை அவருக்குபதேசித்தனர். அவ்விருவரும் உபதேசம் பெற்றபின்னர் ஆசாரியரையும் தெய்வத்தையும் தியானித்து, தெளிந்த மனமுடையவர்களாய் ஆகாரமற்ற உதரமுடையவர்களாய் ஒரு புண்ணிய நதிதீரத்தை யடைந்து ஏகாந்தமாயும் சுத்தமாயுமுள்ள ஒரு ஸ்தானத்திலிருந்து ஸ்திரபிரஜ்ஞையாய் அம் மந்திரத்தைப் பரமபக்தியுடன் ஜபித்துக்கொண்டும், மூன்று சரித்திரங்களை விடாமல் பாராயணஞ் செய்து வந்தும் ஒரு மாதங் கழிய தங்களுக்குள்ளே ஒரு திருப்தி யுடையவர்களாய்த் தேவியினுடைய பாதாம்புஜத்தில் ஸ்திரபுத்தி யுடையவர்களாய் வரு நாளில், ஒரு நாள் முனிவரிடம் வந்து அவரது அடியில் வீழ்ந்து அஞ்ஜலியஸ்தராய் நின்று தவஞ்செய்வதால் தங்களுக்குண்டாயிருக்கும் உள்ளக் கிளர்ச்சியைக்கூறி விடைபெற்றுத் தவத்தில் மிக்க வூக்கமுடையவர்களாய் இரவும்பகலும் இடைவிடாமல் ஜபமுந்

தியானமுஞ் செய்துவந்து ஒரு வருஷம் பழம் முதலிய ஆகாரங்களை விட்டு இலைகளைப்புசித்து மந்திரத்தை ஜபித்தும், அதன் பின்னர் இரண்டு வருஷம் உலர்ந்த சருகுகளைப் புசித்து இந்திரியங்களை யடக்கியும் மிகவுக்கிரமாய்த் தவஞ்செய்துவந்தனர். ஒருநாள் அவ் விருவருக்கும் கனவின்கண் பகவதியானவள் தரிசனந் தந்தனள். அத்தரிசனத்தைக் கண்ட அவ்விருவரும் சந்தோஷமடைந்து கண் விழித்தபின்னர் இத்தரிசனத்தை நனவின்கண்ணும் காணவேண்டு மென்னும் உறுதியுடையவராய் ஜலம் மாத்திரம் அருந்தித் தவஞ் செய்து வருவோம்; தேவியார் பிரத்தியக்ஷ மாகாவிடில் பிராணத் தியாகம் செய்துகொள்ளுவோமென்று நிச்சயித்துக்கொண்டு எண்ணியபடி அரிய தவஞ்செய்து வந்தனர். தேவி பிரத்தியக்ஷ மாகாமையைக் கண்டு வீரவைராக்கிய முடையவராய் ஒரு முழம் அகலமும் நிகளமுமுள்ளதாய் ஒரு முக்கோண குண்டத்தை யரசனமைத்து அதில் அக்னியைவளர்த்தி அந்த ஹோமாக்கினியில் தனது தேகவுறுப்புக்களைக் கண்டங் கண்டமாய்ச் சேதித்து அவை களை ஆகுதியாகக் கொடுத்து உதிரத்தையும் அதில் நெய்யாகச் சொரிந்து ஓமஞ்செய்தனன். (13–29)

அதுபோலவே வைசியனுஞ் செய்துவர, தேவியானவள் பிரத்தி யக்ஷமாய் வந்து, ஓ அன்பனே! நீ அருமையாகச் செய்த தவத்துக்கு நான் மிகவுஞ் சந்தோஷமடைந்தேன். உனக்கு வேண்டியவைகளைக் கேட்பாயென்றருளி, அப்படியே வைசியனை பார்த்தருளினள். அரசன், ஓ தேவி! உனது தரிசனத்தால் பரமானந்தமடைந்தேன். எனது ராஜ்யம் சத்துருக்களால் அப கரிக்கப்பட்டுப் போயிற்று; அஃது எனக்குக் கிடைக்கும் வண்ணம் அனுக்கிரகஞ் செய்யவேண்டு மென்றான். தேவியும், ஓ அரசனே! நீ உனது ராஜ்யத்துக்குப் போவாய்; அங்கிருக்கும் உனது சத்து ருக்களும் மற்ற மந்திரிகளும் பகைமை நீங்கிச் சரணமடைந்து எங்களைப் பாதுகாத்தல் வேண்டுமென்று பிரார்த்திப்பர்; நீ உனது ராஜ்யத்தை அறுபதினாயிரம் வருஷம் பரிபாலித்துத் தேகாந்தத்தில் சூரியனை யடைந்து பின்னவனிடமிருந்து பூலோகத்தில் மனுவாய்த் தோன்றுவாயென் றனுக்கிரகஞ் செய்தனள். வைசியன் தேவியை நோக்கிக் கூறுகின்றான்: ஓ தாயே! எனக்கு ஆகவேண்டிய தொன்றுமில்லை; இவை துக்கத்தை விளைவிக்கும் பந்தத்தைச் செய்வதொழிந்து மற்றெது செய்யவல்லும்? இவையெல்லாம் அழி யத்தக்கவைகள். ஆகலான் பந்தத்தை நாசஞ்செய்து மோக்ஷத் தைக் கொடுப்பதாகிய ஞானத்தை எனக்குக் கொடுத்தருள்வாய். அபாரமாகிய இச்சம்ஸாரத்தில் மூடராகிய பாமரர்களே கிடந்துழல் கின்றவர். பண்டிதர் இச்சம்ஸாரத்தினின்று கரையேற முயன்று அப்படியே யடைகின்றனர். நானிச்சம்ஸாரத்தை விரும்புவதில்லை யென்றனன். தேவி, ஓ வைசியனே! நீ நினைத்தவண்ணம் உனக்கு ஞானம் உதிப்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லையென் றனுக்கிரகஞ் செய்தனள். இவ்வண்ணம் அரசனுக்கும் வைசியனுக்கும் வேண்டி யாங்கருள் புரிந்து தேவி திருவுருக்கரந்தனள். (30–40)

பின்னர் அவ்விருவரும் தங்களபீஷ்டத்தை நிறைவேற்றி வைத்த முனிவரை வணங்கி நிற்ப, அரசனுடைய மந்திரி பிரதானிகள் நகரவாசிகள் முதலிய யாவரும் அங்கு வந்து முனிவரையும் அரசனையும் பணிந்து, ஓ அரசனே ! உமது சத்துருக்களெல்லாம் மரணமடைந்தனர். நீர் உமது ராஜ்யத்தைக் கைப்பற்றி எங்களைக் காத்துவர வேண்டுமென்று பிரார்த்திக்க, அரசனும் தேவியினது கருணையை வியந்து முனிவரிடத்து விடைபெற்றுக் கொண்டு தனது நகரம் போய்ச்சேர்ந்து வாழ்ந்திருந்தனன். ஓ அரசனே ! வைசியனுக்குத் தேவியினது அனுக்கிரகத்தால் ஞானோதயமாய் ஸர்வசங்க நிவிர்த்தி வந்து அந்த முனிவரது ஆஶ்ரமத்திலேயே ஸத்சங்கத்துடன் கூடியிருந்து சிலநாள் கழித்து தீர்த்தயாத்திரை செய்து மீண்டும் வந்து தேவியினது குணானுபவங்களைப் புகழ்ந்து பாடிப் பிரம்மானந்தமெய்தி ஜீவன் முக்தனாய் வாழ்ந்திருந்தனன். (41–47)

ஓ ஜனமேஜயனே ! உனக்கிதுவரையில் அரசனடையப்பெற்ற பொருட் செல்வ மிகுதியையும், வைசியனடையப்பெற்ற அருட் செல்வ மிகுதியையும் கூறிவந்ததுமன்றி, அசுரர்களது வதமும், தேவியினது அவிர்ப்பாக விசேஷங்களும், தன்னைச் சரண்புகுவோர்க்கு அத்தேவி அருள்செய்யும் அனுக்கிரகத் திறத்தையுங்கூறி வந்தனம். நீ கேட்டு வந்ததாகிய இந்த ஐந்தாவது ஸ்கந்தத்தை எந்த மானிடன் கேட்கின்றானோ அவன் இச்சம்ஸார சுகத்தை எவ்வண்ணம் அனுபவிக்கவேண்டுமோ அவ்வண்ணம் அற்புதமாயனுபவிக்கப் பெற்றுக் கீர்த்தியையுஞ் சுகத்தையுமுடையவனாய் நித்திய சுகத்துக் கேதுவாகிய திவ்யஞானத்தையும் மோக்ஷத்தையுமுடையவனாய் நித்ய திருப்தனாய் வாழ்வன். ஓ சௌனகாதியரே ! வியாச பகவான் ஜனமேஜயனுக்குக் கூறியபடி சர்வகாமப் பிரதமாயும், சர்வ முக்திப்பிரதமாயும், சர்வ துக்கஹரமாயும் சர்வானந்தப் பிரதமாயுமுள்ள இந்த ஐந்தாவது ஸ்கந்தத்தைக் கேட்டு வந்தீர்களாகையால் நீங்களே சகல ஐஶ்வர்ய ஸம்பன்னர்களாய் வாழ்வீர்களாகவென்று சூதபகவான் கூறியருளினார். (48–54)

**ஐந்தாம் ஸ்கந்தம் முற்றிற்று.**

# ஆறும் ஸ்கந்தம்

परया काञ्चीपुरया पर्वतपर्यायपीनकुचभरया
परतन्त्रा वयमनया पङ्कजसब्रह्म चारिलोचनया ॥

பரயா காஞ்சீ புரயா பர்வத பர்யாய பீந குச பரயா
பரதந்த்ரா வய மநயா பங்கஜ ஸ ப்ரம்ஹ சாரிலோசனயா.

ஓம் ஈஶாதி தேவதாயை நம:

## 1. திரிசிரன் வதை

ஓ சர்வசாஸ்திர ஞானசம்பன்னராகிய சூதபகவானே ! தேவரீர் கூறிவந்த ஐந்தாவது ஸ்கந்தத்தால் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் உள்ள உத்கர்ஷ அபகர்ஷங்களும், மகிஷாசுரனுடைய உற்பத்தியும், மகிஷாசுர விருத்தாந்தமும், இந்திரனால் செய்யப்பட்ட விமரிசையும், தைத்தியருடைய சேனைகளால் வந்த அபஜயமும், தேவதானவயுத்தமும், தேவர்களுடைய யுத்த பலாயனமும், தேவியினுடைய சொரூப ஆவிர்ப்பாவ விசேஷமும், தேவி ஆயுத பாணியாய் வந்ததும், தேவிக்கும் மகிஷாசுரனுடைய தூதனுக்கும் நடந்த சம்வாதமும், தேவியினிடத்தில் மகிஷன் தாம்பர தூதனை ஏவியதும், தேவிக்குந் தாம்பிரனுக்கும் நடந்த சம்வாதமும், தேவிக்கும் பாஷ்கல துர்முகர்களுக்கும் நடந்த யுத்தமும், தேவிக்கும் சிக்ஷுர தாம்பரனுக்கும் நடந்த யுத்தமும், தேவியினிடத்தில் அசிலோமபிடாலாதி பிரஸ்தானமும், தேவிக்கும் மகிஷனுக்கும் நடந்த சம்வாதமும்,மந்தோதரி விருத்தாந்தமும்,தேவிக்கும் மகிஷாசுரனுக்கும் நடந்த யுத்தமும், இந்திரனால் செய்யப்பட்ட தேவீஸ்துதியும், தேவி அந்தர்த்தானமானதும், சும்ப நிசும்பவிருத்தாந்தமும், இமாலயத்துக்கு இந்திராதியர் போனதும், சும்பநிசும்பர்களுடைய நகரத்திற்குத் தேவி போனதும், தேவீமஹாத்மியமும், காளிகா தேவிக்கும் தாம்பரலோசனனுக்கும் நடந்த யுத்தமும், தேவிக்கும் சண்டமுண்டர்களுக்கும் நடந்த யுத்தமும், ரக்தபீஜ யுத்தமும், தேவிக்கும் நிசும்பனுக்கும் நடந்த யுத்தமும், சும்பனுடையவதையும், சுரதன் வரலாறும், புவனசுந்தரீ மஹாத்மியமும், தேவீ பூஜாவிதானமும், தேவீ பூஜாபலமும் ஆகிய இவையெல்லாம் நன்குணயறியலாயினோம். அதனால் தேவியிடைய பராக்கிரம விசேஷங்களையும், அவளுடைய பராக்கிரம விசேஷங்களுக்கு அசுரர்கள் முன்னிலையாய் நின்றதையும், இவர்களது முன்னிலையால் வெளிப்பட்ட தேவியினுடைய பராக்கிரமத்தை உலகினரறிந்து வழிபடுவதற்கான ஒருபகாரம் விளங்குவதையும் கேட்டுக்களித்தோம்; இனி இது போலும் அம்பிகையினுடைய வீரப்பிரதாபங்களைக் கேட்டானந்திக்கத் தேவரீரது திருவருளை எதிர்பார்க்கின்றோம் என்று சௌனகாதி மகரிஷிகள் சூதபகவானைப் பிரார்த்திக்க அவர் ஆறுவது ஸ்கந்தத்திலடங்கியுள்ள அற்புத சரித்திரங்களைச் சொல்லத் தொடங்கினர்.

சௌனகாதியர் மீண்டும் சூதரை வணங்கிக் கூறுகின்றனர்: ஓ மஹானுபாவராகிய சூதபகவானே! வியாசமுனிவரால் அருளிச் செய்யப்பட்ட தேவீ பாகவத கதாமிர்தத்தை உமது முகமாய் நாங்கள் செவியார உண்ணப் பெற்றதனால் அது தெவிட்டாவமு தாய் மீண்டும் மீண்டும் உண்ணவே அவாவை விளைவிக்கின்றது. ஏனெனின், அது மஹா புராணங்களிலும் வேதங்களிலும் கூறப் பட்டதாயும் கேட்போர்க்குச் சுபத்தைச் செய்வதாயும் செவியாற் கேட்குந்தோறும் மனத்தால் நினைக்குந்தோறும் இன்பத்தை விளை விப்பதாயும் ஸர்வ சித்திகளுமுள்ளதாயும் ஸகல பாவங்களையும் நாசஞ்செய்வதாயும் கதாரூபமாயும் இருக்கும் விசேஷத்தினலென்க.

விச்வகர்மாவினுடைய புத்திரனும் வீரியவானுமான விருத்தி ராசுரனென்னும் பிரசித்தன் இந்திரனல் யுத்தமுகத்தில் எப்படிக் கொல்லப்பட்டான்? இவ்வசுரனது பிதாவோ அசுரபக்ஷத்திலுள்ள வனன்று; சுரர்களுடைய பக்ஷத்திலுள்ளவன். இவனும் அசுர குலத்திற் பிறந்தவனன்று; பிரம்மகுலத்திற் பிறந்தவன். இவனை இந்திரன் கொல்லுங்காரணமென்னை? தேவர்கள் ஸத்வகுணமுடைய வரென்றும் மனிதர்கள் ராஜஸ குணமுடையவரென்றும் திரியக்குகள் தாமஸ குணமுள்ளவையென்றும் புராணமறிந்த பெரியோர்கள் கூறுகின்றனர். எவரெவர் எவ்வெக்குண சம்பந்தமுடையவரோ அவரவர் அவ்வக்குண முடையவரா யிருத்தல் வேண்டும்; தேவபக்ஷமும் பிரம்மகுல சம்பந்தமுமுள்ள விருத்திராசுரனைத் தேவனாகிய இந்திரன் வஞ்சனையால் கொன்றனென்றது நிச்சய மல்லவா? விஷ்ணுமூர்த்தியும் அவ்விஷயத்தைப் பிரேரேபித்த வராயும் வஜ்ராயுதத்தின் மத்தியில் கபடத்தினல் நுழைந்த வராயுமாயினர். இது ஸத்வகுணந் தரித்திருக்கின்றவருக் கழ காமா? அன்றியும் விஷ்ணுமூர்த்தியும் இந்திரனும் அவனைச் சத்தி யந் தவறி யுத்த தர்மத்துக்கு மாருகச் சந்தியாகாலத்தில் ஜல நுரை யால் இறக்கும்படிச் செய்தனர். இவர்கள் இப்படிப்பட்ட காரி யத்தை இவ்வண்ணஞ் செய்தல்முறையாமா? ஒருவனை இருவர் எப் படிக் கொலைசெய்யக்கூடும்? இவர்களும் அஞ்ஞானத்தினல் வஞ்சிக் கப்பட்டு பாவபுத்திக்குள்ளாய் அநியாயத்தை நடத்துகின்றவர்க ளாயினர். சதாசாரத்தால் தேவர்கள் யோக்யதை யடைந்தவர்க ளென்றால், அந்தயோக்யதை இவ் வதர்மச் செயலில் இருப்பதாக நினைக்கவிருக்கின்றதா? நம்பியிருந்த விருத்திராசுரனைக் கபடத்தி னல் இந்திரன் கொன்று பிரம்மஹத்தியின் பாபத்தை யடைந் தான, அல்லவா? இது நிற்க, விருத்திராசுரவதம் தேவி செய்த தென்று சொல்லியிருக்கின்றீர். அதிலும் எங்கள் மனம் சந்தேகப் படுகின்றதென்று விண்ணப்பஞ் செய்யச் சூதர் அம்மஹரிஷிகளைப் பார்த்து, ஓ மஹரிஷிகாள்! விருத்திராசுர வதத்தைப் பற்றிய சரித் திரத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள் என்று சொல்லுகிறார். (1–12)

நீங்களிப்பொழுது வினவியவாறே மகாராஜாவாகிய பரீ க்ஷித்து வியாசபகவானைப் பார்த்து, ஓ பகவானே! மஹான்களாகிய

சரித்திரத்தைக் கேட்பதில் எவனுக் காசையடங்கும்? ஆதலால் விருத்திராசுரவத வைபவத்தைச் சொல்லி யருளுமென்று வினவ, வியாசமுனிவர் கூறுவாராயினர்: ஓ அரசனே! நீ புண்ணியசாலி யாதலால் உனது புத்தி புராணத்தைக்கேட்பதி லாசையுடைத்தா யிருக்கிறது. புராணசிரவணத்தால் தேவர்களும் அமிர்தபானஞ் செய்வதனாலுண்டாகும் திருப்தியை யடைகிறார்கள். புண்ணியமும் கீர்த்தியுமுள்ள திவ்யசரித்திரங்களை உன் புத்தி கேட்கவேண்டுமென் பதில் ஆக்கமடைந்திருக்கிறது. கேட்கிறவன் எப்போது ஒரேமன தாய்க் கேட்கிறானோ அப்போது சொல்லுகிறவனும் சந்துஷ்டசித்த னாய்ச் சொல்லுவன். நீ வினவிய விருத்திராசுரவதம் வேதபுராணங் களில் மிகவும் பிரசித்தியாயுள்ளது. ஓ ராஜேந்திரனே! இந்திரனும் விஷ்ணுவும் கபடத்தினால் விருத்திராசுரனைக் கொன்றார்களென்பதி லென்ன வாச்சரியம்? போகங்களை வெறுத்துப் பாபத்துக்கஞ்சிய மஹரிஷிகளும் மாயாபலத்தால் மோகிக்கப்பட்டு எப்பொழுதும் நிந் தையான காரியத்தைச் செய்திருக்கின்றனர். விஷ்ணுமூர்த்தி ஸத்வ மூர்த்தியா யிருந்தாலும் போகத்தில் விருப்புடையவராதலால் மிக வும் மோகத்தையடைந்து கபடத்தினால் அசுரர்களை எப்போதுங் கொலைசெய்து வருகின்றனர். மோகநிவிர்த்தியாவதற்கு யாவரையும் மோகிக்கச்செய்கிற பவானியாகிய பகவதியை மனத்தினாலாவது ஸ்மரித்தாலல்லவோ அஃதொழியும்? அத்தேவியை ஸ்மரித்து ஜபிப் பதற்குச் சமர்த்தனா யெவனிருக்கிறான்? நரசகாயராயும் மகாமகி மையுள்ளவராயுமிருக்கிற நாராயணரே அநேக யுகங்களில் மச்ச கூர்மாதி யோனிகளிலும் ஸம்ஸாரத்திலும் நியமிக்கப்பட்டவராய் நிந்தையான காரியங்களையும், இஃது என் தேகம், இஃது என் தனம், இஃது என்வீடு, இவர்கள் என் பந்துக்கள், இவர்கள் எனது புத்திர மித்திர களத்திரங்கள் என்று மோகத்தையடைந்தோர் ஒவ் வோர் சமயத்தில் புண்ணிய பாவங்களைச் செய்வார்போற் புண் ணிய பாவங்களைச் செய்திருக்கிறார். (13–25)

ஓ ராஜசிரேஷ்டனே! இவ்வுலகின்கண் முக்குணங்களான் மோகிக்கப்பட்ட மானிடருள் புத்தியைச் சுவாதீனஞ்செய்து கொள்ளும் வன்மையுடையவனையும், பரப்பிரமத்தை யறிந்தவ னையும், மோகத்தைப் போக்கடிப்பதற்குச் சமர்த்தனையும் உள்ளவன் எவனிருக்கின்றான்? ஒருவனுங்கிடையாது. ஏனெனில், இந்திரனும் விஷ்ணுவும் தங்கள் பிரயோசனத்தைச் சாதித்துக்கொள்ளும் எண் ணமுடையவர்களாய் விருத்திராசுரனைக் கபடத்தினாற் கொன்றார் களே! இவர்களைப் புத்தியைச் சுவாதீனஞ் செய்துகொண்டவர்க ளென்றாவது, பிரமத்தை யறிந்தவர்க ளென்றாவது, மோகத்தை யொழித்தவர்க ளென்றாவது சொல்லுவதற் கிடனிருக்கின்றதா?

ஓ அரசனே! இனி இந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் பூர் வத்தில் வைரமுண்டான காரணத்தைச் சொல்லுகிறேன், கேட்பா யாக. துவஷ்டப்பிரஜாபதியென்று ஒருவன் மஹா தபஸ்வியாயும் தேவசிரேஷ்டனையும் தேவகாரியம் செய்பவனையும் பிராம்மணப் பிரியனையுமிருந்தனன். அவன் இந்திரனிடம்வைத்த துவேஷத்தி

ணுல் மூன்றுதலேயுடைய ஒரு புத்திரனை யுண்டாக்கி விச்வரூபன் என்று பெயரிட்டனன். அவனே பெயராலும் உருவத்தாலும் மோகத்தையுண்டுபண்ணத் தக்கவனுயினுன். என்னேயெனின், பிர காசிக்கின்ற அவனது மூன்று முகங்களில் ஒன்ருல் வேதாத்யயன மும், ஒன்ருல் சுராபானமும், ஒன்ருல் எல்லா வுலகங்களையும் பார்ப் பதுமாகிய செயலேயும் செய்துவந்தனன். இங்ஙனமான அதிசயச் செயலுடைய அவன் போகங்களை வெறுத்து தபஸ்வியாயும் மேன் மையனுயும் இந்திரிய நிக்ரகனுயும் தர்மத்தையே ஆஶ்ரயிருக்கின்ற வனுயும் சில காலம் பஞ்சாக்னி மத்தியிலும் சிலகாலம் மரத்திநுனி யிலும் ஹேமந்தருது சிசிரருதுவெனும் இரண்டில் ஜலத்தினும் நிரா காரனுய் சுவாதீன புத்தியுள்ளவனுய்ச் சுகப்பிரதமான வஸ்துக்களை நிக்ரஹித்தவனுய் மந்தமதிகளாலுஞ் செய்யக்கூடாத வன்மையான தவச்செயலேச் செய்துவந்தனன். அதனைப் பார்த்த இந்திரன், மகா துக்கத்தையடைந்து அவனுடைய தபோவீரியத்தையும் சத்தியத் தையும் பார்த்து, சிந்தாக்கிராந்தனுய் விருத்தியடைந்திருக்கிற இந் தத் திரிசிரனுனவன் நம்மைக் கொன்றுவிடுவான் ; விருத்தியடைந் திருக்கிற சத்துருவை அலக்ஷியஞ் செய்தல் பண்டிதர்கள் கொள்கையன்று ; ஆகையால் இவனது தவத்தை நாம் நாசஞ் செய்தல் வேண்டும், தவத்தை நாசமாக்குவது காமமொன்றே ; ஆகலான் அக்காமத்தில் இவனை யாசையுடையவனுகச் செய்யத் தக்கவர் அப்ஸர ஸ்திரீகளே யாவரென்றெண்ணி, ஊர்வசி, திலோத் தமை, ரம்பை, மேனகை என்பவரை வரவழைத்து, ஓ தேவ தாசிகளே ! உருவத்தினுல் கர்வமடைந்திருக்கிற நீங்கள் செய்யத்தகும் காரியங்கள் வந்திருக்கும்போது அதனைச் செய்து எனக்குப் பிரியத்தை யுண்டுபண்ணுங்கள். என்னுல் ஜயிக்கக் கூடாத எனது சத்துரு எவ்விடத்திற் றவஞ் செய்கின்றுனே அவ் விடத்துக்கு நீங்கள்போய் உங்களுடைய சிருங்கார வேஷங்களாலும் சேஷ்டைகளாலும் காமமுண்டாக்கி மோகத்துக்குள்ளாக்குங்கள் ; காலதாமதஞ் செய்யவேண்டாம். உங்களுக்குச் சுகமுண்டாகுக ! எனது சங்கடத்தைத் தணியச் செய்யுங்கள். நீங்கள் மஹா மகிமையுள்ளவர்கள் ! எனது சத்துருவினுடைய தபோபலத்தை யறிந்து மனவருத்தமுள்ளவனு யிருக்கின்றேன் ; அவன் என்னு டைய சிங்காசனத்தை அபகரிக்க விருக்கின்றுன் ; எனக்குண்டா யிருக்கும் பயத்தைச் சீக்கிரத்தில் போக்கடியுங்கள். சமயம் வந் திருக்கும்பொழுது நீங்களனைவரும் எனக்குச் சகாயஞ் செய்தல் வேண்டுமென்றுன். (26–46)

இரங்கிக் கூறிய இந்த மொழிகளை அப்ஸர ஸ்திரீகள் கேட்டு வணங்கி, நீர் பயப்படவேண்டாம், அவன் மோகத்துக்குள்ளாகும் பிரயத்தனங்களைச் செய்கின்றேம்; எது செய்தால் உமக்குப் பய மில்லாமற் போகுமோ அதைச் செய்கிறேம் ; அவனை மோகத்துக் குள்ளாகச் செய்வது பெருங் காரியமா ? எவ்வகைத்தான தவத்தை யுடையவர்களும் நாங்கள் செய்யும் கிரீடை நர்த்தனம் கானம் முதலியவற்றைக் கண்டு மோகத்துக்குள்ளாகாமற் போவரோ ?

எங்கள் கடைக்கண் பார்வையாலும் எங்களுடைய அவயவங்களைக்கொண்டு காட்டும் லீலாபேதங்களாலும் உன்னுடைய சத்துருவை மோகிப்பித்து நாங்கள் சுவாதீனஞ் செய்து கொள்ளுகிறோம்; இவ்விஷயத்தில் நீர் சிறிதும் ஐயங்கொள்ள வேண்டாமென்று இந்திரனிடத்தில் விடைபெற்றுத் திரிசிரனிடத்திற் சென்று, காமசாஸ்திரத்திற் கூறியுள்ள சகல லீலாவிநோதங்களையும் ஒன்று பலவாகச் செய்து மயக்கத் தொடங்கினர். (47–51)

அத்திரிசிரனே தவத்தில் வைத்திருக்கும் உறுதியினால் குருடனைப்போலும் செவிடனைப்போலும் அவர்களுடைய லீலாவினோதங்களைப் பாராதவனாயும் கீதங்களைக் கேளாதவனாயும் இருந்தனன். அவனது உறுதியைக் கண்ட அப்ஸர ஸ்திரீகள் உடனே இந்திரனிடம் போவதற்குத் துணியாமல் சிலநாள் அவ்விடத்திற்றானே வசித்துத் தங்களால் கூடிய பல சாகசக்கியங்களைச் செய்துவந்தும் எண்ணம் நிறைவேறாமற் போயிற்று. இனி இங்கிருப்பதனாற் பயனில்லையென்று துணிந்து இந்திரனிடம் வாட்டத்துடன் சென்று மிகுந்த தீனர்களாய் பயத்தை மேற்கொண்டு, ஓ இந்திரனே! உன்னுடைய ஆணையின்படி சத்துருவினிடம் சென்று நாங்கள் செய்ய வேண்டிய காமச் செயலெல்லாம் செய்தோம். அவன் அச்செயல்களால் சிறிதுங் காமத்துக்குள்ளாயினானில்லை. இனி நாங்கள் செய்யத்தகுங் காரியம் இதுவென்று தெரியாமலுன்னிடம் சொல்ல வந்தோம். மேல் வேறெதனைச் செய்தால் அவனது தவம் நாசமடையுமோ, அதனை விரைவில் செய்யும். தவத்தினால் பிரகாசித்துக் கொண்டிருக்கிற அவனுடைய சாபத்துக்குள்ளாகாமல் நாங்கள் வந்தது யார் செய்த புண்ணியமோ! அவன் கலங்கா நிலைமையனென்று சொல்ல, இந்திரன் அவர்களது வாய்மொழிகளைக் கேட்டு அவர்களுக்கு விடைகொடுத்துப் போக்கி, அச்சபையிலிருப்பதற்கு நாணமடைந்து பாவத்துக்கஞ்சாது பயத்தையும்விட்டு அவனைக் கொல்வதற்கு ஆலோசிக்கலாயினான். (52–60)

ஓம் ஈச்வரப்ப்ரேரணகர்யை நம:

## 2. விருத்திரன் தோற்றம்

ஓ அரசனே! இனி இந்திரனாலோசித்துச் செய்ததைச்சொல்லுகிறேன் கேட்பாயாக. இந்திரன் இவ்விந்திரச்செல்வம் இந்தத் திரிசிரனுக்கும் வரலாமாவென்கிற லோபகுணத்தை மேற்கொண்டு ஐராவதத்தின்மேலேறி திரிசிரனிருக்குமிடஞ்சென்று, அத்திரிசிரன் ஆசனங்களிற் சிறந்த திடமான வீராசனமுடையவனா யுட்கார்ந்திருப்பதையும் சப்தவிஷயத்திற் செலுத்தாத சுரோத்திரேந்திரியத்தைப் படைத்திருப்பதையும் தியானயோகத்திலசைவற்றிருப்பதையும் அக்னி சூரியன் என்னும் இவர்களுடைய பிரகாசத்துக்குச் சமானமான தவப்பிரகாசம் பிரகாசிப்பதையுங்கண்டு, அந்தோ! நமக்கு ஆபத்து வந்துவிட்டதே என்றெண்ணிப் பாபபுத்தியில்லா

தவனை இவனை நாம் எவ்வாறு கொல்வது? இவனது தபோமகிமை யைக் கண்டு நாம் கொல்லாது விடுவோமாயின் இவன் நமது ஸ்தானத்தை யபேக்ஷிக்கிற சத்துருவல்லவா? இவன் எப்படி அலக்ஷியஞ் செய்யத்தக்கவனுவானென்று பலவாரு யாலோசித்துக் கொல்லத்துணிந்து வஜ்ராயுதத்தை அவன்மேல் வீசினன். வீசிய மாத்திரத்தில் அவன் பூமியில் வீழ்ந்திறந்தனன். இந்திரனுங்கண்டு சந்தோஷித்தனன். ஓ அரசனே! இஃதுவென்ன கஷ்டம்! தபசி யைக்கொன்று சந்தோஷிப்பவனும் உண்டோ? இதுதான் கஷ்டம்!! அவ்விடத்திற் சூழ்ந்திருந்த தவசிகளெல்லம் சங்கடமுற்று, அந்தோ யாதொரு குற்றமுமில்லாத இத்தவசி கொல்லப்பட்டாரே! இந்திரன் தேவனுயிருந்தும் துராத்மாக்களைப்போல் பாவபுத்தி யுள்ளவனுய்க் கொலைசெய்து விட்டானே! இந்தக் கொலையினல் வரும் தோஷத்தைச் சீக்கிரத்திலடைவானல்லவா? என்று பரிபவ முற்றனர். இந்திரனே நமது சத்துருவைக் கொன்றுவிட்டோ மென்று கவலையற்றவனுய்த் தன்னிடம்போய்ச் சேர்ந்தனன். கீழே வீழ்ந்த திரிசிரன் தபோநிதியாயிருந்தவனுகையால் இறந்தவனுயி னும் உயிருள்ளவன்போல் பிரகாசித்தனன். தன்னிடம்போய்ச் சேர்ந்த இந்திரன் சிறிது சந்தேகங்கொண்டவனுய் அத்திரிசிரனை மீண்டும் பார்த்தனன். அந்தோ! நாம் இவன் இறந்துவிட்டா னென்று எண்ணினேமே; இவனது முகம் பிரகாசிக்கிறதே! இறந் திருப்பானுயின் முகம் பிரகாசிக்குமா? ஆகலான் இவனது மூன்று சிரசையும் அறுத்தெரிதல் வேண்டுமென்று துணிந்து எதிரிலிருந்த விஶ்வகர்மாவைப் பார்த்துக் கூறுகிறன்: (1–10)

ஓ விஶ்வகர்மாவே! இவன் பிழைத்திருக்கின்றவனுகக் காண் கின்றன்; இவன் பிழைத்திருத்தல்கூடாது; ஆகையால் இவனது சிரங்களைப் பரசாயுதத்தால் சேதித்தெறிவாயென்றுசொல்ல, விஶ்வ கர்மா இவனது கண்டம் விசாலமானதாயிருப்பதால் பரசாயுதத்தால் சேதிக்க முடியாது; முடியாத காரியத்தை நான் செய்யத் துணிவே னுயின் அது பழிப்பாகும்; நீ இவனை உயிருள்ளவனுய் நினைக் கின்றய்; இவன் உயிருள்ளவனன்று, இறந்தவனே; இறந்தவனுகக் காணப்படினும் இவனுடைய தவப்பிரகாசத்தை நோக்க நீ சொல்லியபடி சேதிப்பதற்குப் பயப்படுகின்றேன்; இவன் சிர சைச் சேதிப்பதனல் உனக்குவரும் பிரயோஜனமென்னை? இவன் விஷயத்தி லுனக்குண்டாகும் பயமென்னை என்று வினவ, விஶ்வகர்மாவே! இவன் எனக்குச் சத்துருவாயிருப்பதால் இவன் பிழைத்திருத்தல் கூடாதென்று சேதிக்கச்சொன்னேன்; இவனது முகம் பிரகாசிப்பதை நீயே பார்ப்பாயாக. அந்தப் பிரகாசத்தால் உயிருள்ளவன்போல் காணப்படுகிறன்; ஆகையால் இவனைக் கொல்லச்சொன்னே னென்றன். விஶ்வகர்மா தவத்திற்சிறந்த இந்திரன், இவனைக் கொன்றல் பிரம்மஹத்தி வருமே, அதற் கென்செய்வீரென்றன். இந்திரன் பிரம்மஹத்தி என்னைத் தொடராவண்ணம் பிராயச்சித்தாதிகள் செய்து கொள்ளப் போகிறேன். பிராயச்சித்தாதிகளால் பிரம்மஹத்தியாதிகள் நிவிர்த்

தியாவதில்லை என்றிருந்தாலல்லவோ நான் சத்துருவைக் கொல்லுவதற்கஞ்சவேண்டும்? அன்றியும் சத்துருவாயிருக்கின்றவனை எவ்வித உபாயத்தினுலாவது எவ்வித வஞ்சனையினுலாவது கொல்லச்சொல்லி இருக்கின்றதேயன்றி, பயந்துவிடும்படிச்சொல்லவில்லை; பயந்துவிட்டவனுக்கு நரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றதென்றான். விஸ்வகர்மா, சத்துருவானவன் எதிர்த்து யுத்தத்துக்கு வருவானுயின் அவனை எவ்விதத்தினுலாவது கொல்லத்துணிவது நீதியாமேயன்றி அவன் தவத்திலிருக்கும்பொழுது கொல்லத்துணிவதுநீதியாமா? ஆகலான் நீ இப்பொழுது கொல்லத்துணிவது தவத்தையேயன்றிச் சத்ருவையன்று ; அந்தோ! நீ லோபகுணத்தால் இப்பாவச்செய்லைச் செய்யத் துணிந்தனை ! நான் ஏன் இந்தப் பாவச்செயலைச் செய்யவேண்டும்? இதனுல் எனக்கு வரும் பயனென்னை ? சொல்லுமென்றான். இந்திரன், ஓ விஸ்வகர்மாவே! நான் யாகத்தில் பசுவின்றலையை உனக்குரிய பாகமாகக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்கின்றேன் ; அதுபோல் தேவர்கள் கொடுப்பார்கள் ; இதிற் சந்தேகம் வேண்டாம்; நான் சொல்லியபடி இவன் தலையை யறுத்து எனக்குப் பிரியம் உண்டாகும்படி செய்வாயென்றனன். ஓ அரசனே ! இந்திரன் உனக்கு யாகத்தில் பாகம் உண்டென்று சொல்லிய அளவில் விஸ்வகர்மா தான் சொல்லிவந்த நீதிகளையெல்லாம் மறந்து வலுவான கோடாலியொன்றெடுத்து அவனது மூன்றுதலைகளையும் அறுத்துப் பூமியில் வீழ்த்தினன். வீழ்ந்த அத்தலைகளில் எந்தமுகத்திலிருந்து உலகங்களைப் பார்த்தானே அந்த முகத்திலிருந்து தீக்ஷண்யமான தேஜஸோடுங்கூடிய நெருப்புக் கோழியும், எந்த முகத்திலிருந்து சுராபானஞ் செய்தானே அந்த முகத்திலிருந்து மாடப்புருவும், எந்த முகத்திலிருந்து வேதம் படித்தானே அந்த முகத்திலிருந்து மீன்கொத்தியும் வெளியாயின. இப்பக்ஷிஜாலங்களைக் கண்ட விஸ்வகர்மா மகிழ்ந்து இந்திரன் சொல்லியபடி யக்ஞபாகம் பெற்றுத் திருப்தியடைந்தனன். இந்திரன் மஹாபலசாலியான சத்துருவைக் கொன்றுவிட்டோம், இனி நமக்கென்ன குறையென்று பின்னே வரப்போகிற பிரம்மஹத்தியை எண்ணுமல் இறுமாப்படைந்தனன். (11–28)

துவஷ்டப் பிரஜாபதி, பரமதார்மிகனுன தனது புத்திரன் இறந்ததைக் கேள்வியுற்று மஹாகோபங்கொண்டு யாதொரு தீங்கையும் எண்ணுத எனது புத்திரனை திரிசிரனை எவன் கொன்ருனே அவனைக் கொல்வதற்கு மீண்டும் ஒரு புத்திரனைச் சிருஷ்டிக்கிறேன் ; எனக்குச் சத்துருக்களாக ஏற்பட்ட தேவர்கள் என் பலத்தையும் எனது தபோபலத்தையும் நன்ருய்ப் பார்க்கட்டும்; அந்தப் பாபாத்மாவான இந்திரன் வன்மையுடன் தன்னுல் செய்யப்பட்ட கர்மத்தின் பலத்தை முழுவதும் அறிந்துகொள்ளட்டும் என்று பல வீரமொழிகளைக் கூறி, அதி வுக்ரத்துடன் அதர்வண மந்திரங்களினுல் எட்டு நாள் ஓமம் ஒன்று செய்துவந்தனன். ஜொலித்துக்கொண்டிருக்கிற அந்த ஓமாக்கினியினின்றும் அக்னி சொரூபமாய் ஒரு புருஷன் தோன்ற அவனைத் துவஷ்டப்பிரஜாபதி

பார்த்து, ஓ இந்திரசத்துருவே! என்னுடைய தபோபலத்தால் மஹா சரீரியாய் விருத்தியடைவாயென்றனன். சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே ஆகாயமெங்கும் பரவி பாவம் எப்படி விருத்தியடையுமோ அப்படி விருத்தியடைந்து, காலமிருத்யுவுக்குச் சமானமாய் நின்று, புத்திரசோகத்தை மேற்கொண்டிருக்கிற பிதாவைப் பார்த்துக் கூறுகின்றான்: ஓ பிரபுவே! எனக்கு நாமகரணஞ்செய்து நான் செய்யவேண்டிய வேலையும் நீர் சோகமடைந்திருக்குங் காரணமுஞ் சொல்லும். நான் அவ் வேலையைச் செய்து உமது சோகத்தைப் போக்கடிக்கிறேன்; உம்முடைய வருத்தத்தை யொழிப்பதே எனக்கு விரதம்; தந்தையானவன் பிள்ளையினால் சுகத்தை யடைவானேயன்றித் துக்கத்தை யடைவானா? ஆகையினால் துவஷ்டப்பிரஜாபதியாகிய எனது தந்தையே! சமுத்திரத்தில் ஒரு திவலையளவும் நீரின்றி இப்பொழுதே குடித்துவிடுகிறேன்; பர்வதங்களையெலாம் பொடியாக்கி விடுகிறேன்; தீக்ஷ்ணமுள்ள சூரியனை எனது கோபாக்கினியால் அப்புறஞ் செல்லாவண்ணம் தடுத்துவிடுகிறேன். தேவர்களோடு இந்திரனையும் ஏனைய திக்பாலகரையும் கொன்றுவிடுகிறேன்; இப்பூமியைத் தலைகீழாக்கி எல்லா உயிர்களையும் சமுத்திரத்திற் சேர்த்துவிடுகிறேன்; இப்பொழுது எதைச் செய்யவேண்டுமோ அதைச் சொல்லுமென்றனன். (29–42)

துவஷ்டா அவ்வார்த்தைகளைக் கேட்டு மஹா சந்தோஷமடைந்து கூறுகின்றான்: ஓ புத்திரசிகாமணியே! இப்பொழுது என்னைத் துக்கத்தினின்றும் காப்பதற்கு எதனால் சக்தியுள்ளவனாயிருக்கின்றனையோ அந்தக் காரணத்தால் நீ விருத்திரன் என்கிற பெயருள்ளவனாய்ப் பிரகாசிக்கக்கடவாய். எனது புத்திரனை உனது சகோதரன் மூன்று சிரசுடன் கூடி திரிசிரனென்று ஒருவனிருந்தான். அவன் வேத வேதாந்தங்களெல்லாம் நன்றாயறிந்தவன், சகல வித்தைகளினுஞ் சமர்த்தன். அவன் மூவுலகினரும் அதிசயிக்கத்தக்க மஹாதவத்தைச் செய்துகொண்டிருந்தான். அவனை மஹாபாவியான இந்திரன் தனது வஜ்ராயுதத்தாலடித்து மூன்று சிரங்களையும் அறுத்தெறிந்தான். அப்பிரம்மஹத்தியைச் செய்த நாணமற்ற துர்புத்தியுள்ள அந்தத் துஷ்டனைக் கொன்றுவிடுவாய்; அவன் நம் விஷயத்தில் குற்றவாளியாயுள்ளவனென்று கூறி, கத்தி சூலம் கதை சக்தி தோமரம் முதலிய பல ஆயுதங்களையும், எவ்வளவு பாணங்களெடுத்தாலுங் குறைவுபடாத இரண்டு அம்பறாத்தூணிகளையும், சுந்தரமான கவசத்தையும், மேகத்துக்குச் சமானமானதாயும் மகாவன்மையுடைய தாயுமுள்ள ஒரு தேரையுங் கொடுத்து, ஹே புத்திரா! இக்கணமே இந்திரனைக் கொல்லக்கடவாயென்று அதிகக் கோபத்தோடும் விருத்திராசுரனைப் போகும்படிச் செய்தான். (43–53)

ஓம் ஈசதாண்டவ ஸாக்ஷிண்யை நம:

# 3. விருத்திரன் வீரம்

ஓ புராணசிரவணனைந்த ரஞ்சிதனே! துவஷ்டா விருத்திரனுக்கு விடையளிக்கும்போது வேதபாரங்கதர்களான அந்தணரெல்லாம் ஆசீர்வதித்தனர். தந்தையினது ஆணையினையும் அந்தணரது ஆசியினையும் பெற்று விருத்திராசுரன் ரதாரூடனாய் வெளியே புறப்பட்டனன். இச்செய்தியை முன் தேவர்களால் தோல்வியடைந்திருக்கின்ற அசுரர்கள் கேள்வியுற்று அவனுக்குப் படைத் துணையாக வந்து சூழ்ந்தனர். இச்செய்தியை தேவதூதர்களும் அறிந்து வேகமாயோடி இந்திரனைப் பார்த்து, ஓ தேவராஜனே! உமக்குப் பலவானான சத்துரு ரதாரூடனாய் வந்துகொண்டேயிருக்கின்றான்; அவன் யாரெனில், உன்னைக் கொலைசெய்யும் நிமித்தம் துவஷ்டப் பிரஜாபதி செய்த ஆபிசாரமந்திர யாகத்திற் பிறந்தவன்; அவன் பெயர் விருத்திராசுரன்; அவனுடன் உம்மால் முன் தோல்வியடைந்து வைரங்கொண்டிருந்த அசுரரெல்லாம் வருகின்றனர். ஓ மஹானுபாவனே! அவனை ஜயிக்க உம்மால் ஆகாதென்று நினைக்கின்றோம்; ஏனெனில், அவனது சரீரத்தைப் பார்த்தாலே மேருமந்தர முதலிய மகாபர்வதங்களுக்குச் சமானமா யிருக்கிறது; அவனது த்வனியோ அதிகோரமாய் அமரரெல்லாம் அந்த க்ஷணமே அழிந்துபோகத் தக்கதாயிருக்கின்றது; அவனது வருகையைப் பார்த்தாலோ அதிவேகமாயிருக்கிறது; ஆகையால் நீர் பெரிய முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்றனர். தூதர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது தேவர்களிற் சிலர் ஓடி வந்து, ஐயா! நம்முடைய ஸ்தானங்களில் அநேகமான துர்ச்சகுனங்க ளுண்டாகின்றன; பயங்கரமான சப்தங்கள் கேட்கப்படுகின்றன; காகங்களும் கழுகுகளும் இன்னுஞ்சில பக்ஷிகளும் விகாரமான சப்தங்களோடு நம்முடைய வீடுகள் மேலழுகின்றன; சீசீ கூகூ என்கிற சில சப்தங்கள் ஆகாயத்தில் ஒலிக்கின்றன; பக்ஷிகளுடைய கண்களிலிருந்தும் மிருகங்களுடைய கண்களிலிருந்தும் தாரைதாரையாய் நீர் சிந்துகின்றது; இரவில் அழுதுகொண்டிருந்த ராக்ஷஸ ஸ்திரீகளெல்லாம் இப்பொழுது பயங்கரமான ஒலிகளைச்செய்து பயமுறுத்துகின்றனர். மரங்களில் படர்ந்திருக்கின்ற கொடிகளெல்லாம் கீழேவிழுந்து புரளுகின்றன. இவைகளன்றி ஆகாயத்தில் அநேக உற்பாதங்கள் காணப்படுகின்றன. இந்த உற்பாதங்கள் இந்தச் சுவர்க்கமாத்திரமல்லாமல் பூவுலகிலும் காணப்படுகின்றன. நமது தேவதா ஸ்திரீகளுடைய கனவின்கண் ராக்ஷஸ ஸ்திரீகள் சிலர் வந்து மிரட்டிப் பயமுறுத்தித் தலைமயிரை யறுக்கின்றனர். சிலர் கறுப்புச்சீலையை யுடுத்திக்கொண்டு விகாரமான முகத்தைக்காட்டி நீங்கள் வீட்டைவிட்டுப் போங்களென்று கூறிக்கொண்டு திரிகின்றனர். இவைபோன்ற பல துர்ச்சொப்பனங்களுமன்றி பூகம்பமும் கொள்ளிக்கட்டை விழுதலும் நரிகள் ஊளையிடுதலும் வீடுகள்தோறும் ஓணன்களுடைய கூட்டங்களும்

உண்டாயிருக்கின்றன ; சரீரங்களில் கண் துடிப்பும் கால் துடிப்பும் உண்டாயிருக்கின்றன வென்றனர். தூதர்களாலும் தேவர்களாலும் விருத்திராசுரனுடைய வரவையும் துர்ச்சகுனங்களேயுங் கேட்ட இந்திரன், சிந்தாகுலமடைந்து பிரகஸ்பதி பகவானே வரவழைத்து, ஓ சுவாமிகாள் ! இப்பொழுது நம்முடைய உலகில் பயங்கரமான துர்ச்சகுனங்களும், பெருங்காற்றுகளும் உண்டாயிருக்கின்றன. தேவரீர் எல்லாமறிந்தவர் ; துர்நிமித்தங்களே நாசஞ்செய்யவல்ல வர் ; ஸர்வஜ்ஞர் ; சகல சாஸ்திரார்த்தங்களினுண்மையை யறிந்த வர் ; எங்களுக்கெல்லாம் ஆசிரியராயுள்ளவர் ; சாந்தி தருமங்க ளெல்லா மறிந்தவர் ; ஆகையால் இப்பொழுது சத்துரு நாசஞ் செய்வதற்கான உபாயத்தையும் துர்ச்சகுனங்களுக்கான சாந்தி யையும் இவையன்றி வேறெதுசெய்தால் எனக்குத் துக்கமில்லாம லிருக்குமோ அதையும் தேவரீரே யோசித்து விரைவில் செய்தருளு மென்றனன். (1–20)

பிரகஸ்பதி பகவான் இந்திரனேப்பார்த்து, ஓ ஸஹஸ்ராக்ஷனே! யாதொரு குற்றமுமில்லாத தவசியைக்கொன்று மஹாபாதகத்தைத் தேடிக்கொண்டு இப்பொழுது என்னே என்னசெய்யச் சொல்லு கின்ருய் ? நீ செய்தபாவம் நான் செய்யும் பரிகாரத்தி லடங்குமா ? ஏனெனின், காலாந்தரத்தில் பலனேக்கொடுக்கிற புண்ணியபாவங் களுமுண்டு ; செய்தபொழுதே பலனேக்கொடுக்கிற அதிவுக்ரமான புண்ணியபாவங்களுமுண்டு. இவ்விரண்டுபகுதியில் நீ இப்பொழுது செய்தபாவம் இப்பொழுதே அதியுக்ரமான பலனேக் கொடுக்கத்தக் கது ; சுகத்தை விரும்புகின்றவன் எந்தக்காரியத்தையும் விசாரித் தல்லவா செய்யவேண்டும் ? ஒருவன் பிறர் வருந்தும்படியான காரியத்தை எப்பொழுதுஞ் செய்தல்கூடாது. செய்தாளுயின் அவன் எப்பொழுதுஞ் சுகமடையான் ; நீ அஞ்ஞானத்திலுைம் லோபகுணத்திலுைம் இந்தப் பிரம்மஹத்தியைச் செய்துவிட்டாய் ; அஃது அதிக விரைவாய் வந்துவிட்டது ; விருத்திரனென்னும் அவன் தேவராலுங் கொல்லக்கூடாதவனுய்ப் பிறந்திருக்கின்ருன் ; அவன் உன்னேக்கொல்ல அநேகமான அசுரக்கூட்டங்களோடும் வருகின்ருன் ; அவனிடத்துள்ள ஆயுதங்களெல்லாம் துவஷ்டப் பிரஜாபதியிலுல் கொடுக்கப்பட்டவை ; அவையெல்லா முனது வஜ்ராயுதத்துக்குச் சமானமானவை ; அவனுக்கு மரணம் வரப் போகிறதில்லே ; மரணபயமற்ற அவன் நிகரற்றவனுய் ரதாரூடனுய் வருகின்ருன் ; அவனேயசைக்க ஒருவராலும் முடியாது ; அவன் யாவரையும் நாசஞ் செய்யப்போகின்ருனென்றனர். (21–27)

அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது ஒருவிதமான கோலாகல சப்தமுண்டாக, இஃதென்ன சப்தமென்று அச்சப்தத் தைக் கவனித்துக்கொண் டிருக்கும்பொழுது, கந்தர்வர்களும் கின்னரர்களும் யக்ஷர்களும் ஏனைய தேவர்களும் தவத்தையே தனமாகவுடைய முனிவர்களும் தங்களுடைய ஸ்தானங்களேவிட்டு ஓடிவருவதைக் கண்டான். கண்டவுடன் இந்திரன் சிந்தாகுல முடையவனுய்க் கதறித் தூதர்களேக்கூவி, ஓ தூதர்களே ! இந்த

க்ஷணத்திற்றனே அஷ்டவசுக்களேயும் ஏகாதச ருத்திரர்களேயும் அசுவினி தேவதைகளேயும் துவாதசாதித்தர்களேயும் யமன் வாயு குபேரன் வருணன் முதலாயினேரையும் வரவழையுங்கள்; தேவ சிரேஷ்டர்களே யெல்லாம் ஆயுதபாணிகளாய் விமானங்களிலேறி வரச் சொல்லுங்கள்; சத்துரு வந்துவிட்டான். இதோ நான் புறப் படுகின்றேனென்று அவர்களே யனுப்பி கஜாரூடனுய்ப் பிரகஸ்பதி யுடன் புறப்பட்டான். தேவர்களும் யுத்தஞ்செய்யும் எண்ணமுடை யவர்களாய் இந்திரனேப் பின்ருெடர்ந்தனர். இவர்கள் வருகையைக் கண்ட விருத்திராசுரன் தேவர்களுக்கு வாசஸ்தானமாகிய மான தோத்தர பர்வதத்துக்குவர இந்திரனும் அவ்விடத்திற்றனே சென்று போர்புரியத் தொடங்கினன். (28–36)

இருவரும் கதை கத்தி பரிகம் பாசம் பாணம் கோடாலி முதலியவற்றல் நூறு மானிடவருஷம் ஒய்வில்லாமல் யுத்தஞ்செய் தார்கள். இந்திரன் தோல்வியடைந்து ஓடத்தலேப்பட்டனன். அவனேடத்தலேபடவே ஏனேய தேவர்களும் திக்பாலகரும் சூரியன் முதலாயினேரும் ஒருவர்போனவழி யொருவர் போகாமல் ஓடினர். விருத்திராசுரன் ஒருவரும் நில்லாது ஓடுதலேக்கண்டு, நகைத்துக் கொக்கரித்து சந்தோஷித்துத் தந்தையினிடஞ் சென்று வணங்கி, என் தந்தையே! இந்திரன் முதலிய யாவரும் என்னுல் ஜயிக்கப் பட்டார்கள்; அவர்களடைந்த கதியை யானென்னென்று சொல்லு வேன்? அதனே நீரே அறிந்துகொள்ளலாம். அவர்கள் பயந் தோடியபடியினு லுயிரோடுவிட்டேன்; இதோ இந்திரனுடைய யானேயைக் கொண்டுவந்தேன்; அதனேப் பெற்றுக்கொள்ளும்; உமக்கென்ன இன்னுஞ் செய்யவேண்டுமென்றனன். (37–44)

இவ்வார்த்தையைக் கேட்ட துவஷ்டா மகிழ்ந்து, அடா குழந்தாய்! நானிப்பொழுதுதான் பிள்ளேயையுடையவனுயினேன்; என் பிழைப்பும் நல்லதாயிற்று; என்னே நீ புனிதனுக்கினுய்; எனது சங்கடமெல்லாந் தொலேந்துபோயிற்று; உனது வீரியத்தைக் கண்டு என் மனத்திலுண்டாயிருந்த அலேச்சலெல்லாம் அடங் கிற்று; உனக்கொரு நன்மையைச் சொல்லுகிறேனென்று கூறு வதாயினன்: நீ யாவரிடத்திலும் நம்பிக்கை வைக்கவேண்டாம். மகா கபடசித்தனும் மாயாபேதங்களிற் சமர்த்தனுமிருக்கிற இந்திரன் உனக்குச் சத்ருவாயினன். சம்பத்து வேண்டுமானலும் அரசாக்ஷி வேண்டுமானலும் வெற்றியுண்டாக வேண்டுமானலுந் தவஞ்செய்யவேண்டும். தவமன்றி எவனுக்கும் ஒன்றுஞ் சித்திக் காது. ஆகையால் நீ சாவதான சித்தமுடையவனுய் வீராசனத்தி லிருந்து திடபக்தியோடும் பிரம்மனேநோக்கித் தவஞ்செய்வாய். உனக்குப் பிரபஞ்சகாரணனன பிரம்மன் அளவிறந்த தேஜஸோடுங் கூடி வெளிப்படுவான். வெளிப்படுங்கால் அவனுள்ளங் களிக்கு மாறு போற்றிப் புகழ்ந்து சிரேஷ்டமான வரங்களேப் பெற்று துர்நடத்தையும் பிரம்மஹத்தியுமுடைய இந்திரனேக்கொன்று என்னுள்ளங்களிக்குமாறு வருவாய். ஒ குழந்தாய்! தவந்தான் எல்லாவற்றையுங் கொடுப்பது. ஆகையால் நீ தவஞ் செய்வாய்.

பிரம்மதேவர் வேண்டியவரங்கள் கொடுப்பார். என்னப்பனே! என் பிள்ளையைக் கொன்றதனு லுண்டாகிய வைரம் என் மனதை விட்டு நீங்கவில்லை. நீ அவ்விந்திரனைக் கொல்லுமளவும் நான் துக்கசாந்தியடையேன். சுகமாய்த் தூங்கேன். துக்க சமுத்திரத் தில் மூழ்கிக்கிடக்கிற என்னைச் சுகமென்னுங் கரையிலேற்றி விடுவாயென்றனன். (45–54)

இங்ஙனங்கூறிய தந்தை மொழியைக்கேட்ட விருத்திராசுரன் விடைபெற்றுக் கோபத்தோடு கூடினவனுய்த் தவத்தைச் சந்தோ ஷத்துடன் செய்யத் தலைப்பட்டு கந்தமாதன பர்வதம்போய்ப் பரி சுத்தமான தேவகங்கையில் ஸ்நானஞ்செய்து தர்ப்பாசனத்தில் வீராசனனு யுட்கார்ந்து ஆகாராதிகளைவிட்டு யோகசித்தனுய்ப் பிரம்மாவை மனதிற் றியானித்துவந்தனன். இந்திரன் இவன் தவஞ் செய்வதைத் தெரிந்துகொண்டு அவனது தவத்தைக்கெடுக்கக் காந்தர்வ கன்னிகைகளை யனுப்பினுன். அவர்களேயன்றி யக்ஷர் களையும் பன்னகர்களையும் சர்ப்பங்களையும் கின்னரர்களையும் வித் யாதரர்களையும் அப்ஸர ஸ்திரீகளையும் அநேக தேவதூதர்களையும் அனுப்பினுன். அவரெல்லாஞ்சென்று தபஸைக் கெடுப்பதற்கான அநேக உபாயங்களைச் செய்தனர். அவர்கள் எதுசெய்தபோதிலும் விருத்திராசுரன் தவத்தில் சலிக்கவில்லை. (55–60)

ஓம் ஈச்வரோத்ஸங்க நிலயாயை நம:

## 4. விருத்திரன் வெற்றி

ஓ அரசனே! தவநிலையைக் கெடுக்கவந்த யாவரும் அவனது மனுேதிடத்தைக் கண்டு இனி நாம் செய்யத்தக்க சாமர்த்தியமான வித்தைகள் என்ன விருக்கின்றன? இனி யிங்கிருப்பதனு லென்ன பயன்? இவனிடத்தில் நமக்கு வெற்றி யுண்டாகாதென்று ஆசை யற்றுத் தேவலோகம் போய்ச்சேர்ந்தனர். அவர்கள்செய்தி யங்ஙன மிருக்க, இங்கு விருத்திராசுரன் நூறுவருஷம் யாதொரு விக்கினமில் லாமல் தவத்தைச் செய்து முடிக்குமளவில் பிரம்மதேவன் ஹம்ஸா ரூடனுய்த் தோன்றி, ஓ விருத்திரா! உனக்குச் சுகமுண்டாகுக; உனது தியானத்தை நிறுத்து; உனக்கிஷ்டமாயும் இன்பமாயுமுள்ள வரத்தைக்கேள், கொடுக்கிறேன்; நீ தவத்தினுல் மிகவும் இளைத்துப் போயினை; உனது தவம் எனக்கு அதிக சந்தோஷத்தை விளைவித்த தென்றனன். விருத்திரன் மிகத்தெளிவாகவும் அமிர்தம்போலும் கூறும் பிரம்மனது வார்த்தையைக் கேட்டுத் தவத்தைவிட்டு பிரம னைக் கண்டு களித்து கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பொழிந்து வணங்கி எழுந்துநின்று அஞ்சலியஸ்தனுய்ப் பிரம்மதேவனை நோக்கி நாத்தழு தழுத்துக் குழறிக்குழறிக் கூறலுற்றனன்: ஓ பிரபுவே! உனது தரிசனமெதனுல் கிடைக்கப் பெற்றேனுே அதனுல் எல்லாத் தேவர்களுடைய ஸ்தானங்களையும் கிடைக்கப் பெற்றவ னுயினேன். என்மனதில் அடையக்கூடாததான கோரிக்கையைக்

கொண்டிருக்கிறேன்; அதனைக் கேட்டருளல்வேண்டும். எனக்கு என் புகளாலும் விருக்ஷங்களாலும் உலர்ந்த வஸ்துக்களாலும் ஈரவஸ்துக் களாலும் மூங்கிலாலும் பல ஆயுதவகைகளாலும் மரணம் வராம லிருக்கவேண்டும். எந்த வீரியமிருந்தால் யுத்தத்தில் சகல பலத் தோடுங் கூடின தேவர்களால் யான் ஜயிக்கக்கூடாதவனு யிருப் பேனோ, அந்த வீரியம் எனக்குண்டாகவேண்டுமென்றனன். பிரம் மன் நகைத்து, ஓ விருத்திரனே ! நீ என்ன கேட்கின்றனையோ அது வன்மையுடையதேயாகும் ; அதற்குக் கெடுதியுண்டாகமாட்டாது; நீ வேண்டியபடி உலர்ந்த வஸ்துக்களாகிய கற்களாலும் கட்டை களாலும் ஈரவஸ்துக்களாலும் உனக்கு மரணம் வரமாட்டாது ; இது சத்தியமென்று சொல்லித் தன்னுலகம் போயினன். (1–10)

விருத்திரனும் சந்தோஷசித்தனாய்த் தன் தந்தையிடஞ் சென்று தான் வரம்பெற்ற செய்தியைச் சொன்னான். தந்தை கேட்டு மகிழ்ந்து கூறுகிறான் : அப்பா ! உனக்கு மங்களமுண்டாகுக ; எனது சத் துருவான இந்திரனைக்கொன்று அவனது அரசாக்ஷியைக் கைக் கொண்டு நீ இந்திரனாய் வாழக்கடவாய் ; அப்பொழுதுதான் புத்திர நாசத்தாலுண்டான என் மனோவியாதி நீங்கும் ; எனக்கு நீ புத்திர னல்லவா? உனக்குப் புத்திரத் தன்மையைச் சொல்லுகிறேன் : தந்தை ஜீவித்திருக்கும்போது அவனுத்தரவின்படி நடந்துகொள் வதும், அவன் இறந்ததினத்தில் அதிகமான அன்னமிடுவதும், கையில் பிண்டம் போடுவதுமேயாம் ; ஏனையபுத்திர தருமங்க ளெல்லாம் இவற்றுளடக்கமென்றறிவாய். ஓ குழந்தாய்! பாவியாகிய இந்திரனால் இறந்துபோன திரிசிரசு என் மனத்தைவிட்டு நீங்கவே யில்லை ; ஏனெனின் அவன் நன்னடக்கையிற் சிறந்தவன் ; சத்திய சந்தன் ; ஸர்வ சாஸ்திர பாரங்கதன், எப்பொழுதுந் தவத்திலேயே எண்ணமுடையவன். இப்படிப்பட்ட சத்புத்திரனை யிழக்கச் செய் தவன் வாழ்ந்திருப்பானாயின் என் மனந் தீப்பற்றி யெரியாதா ? என்றனன். விருத்திரன் தந்தை கூறிய துயரமொழியைக் கேட்டு மனம் புழுங்கி நமக்குத் தந்தையின் துயரத்தை யொழிப்பதைப் பார்க்கிலும் வேறு தவமுண்டோவென்று அப்பொழுதே சைனியங் களைக் கூட்டிக்கொண்டு ரணபேரி சங்கம் முதலிய பல வாத்தியங்கள் முழங்க அதிவேகமாய்ப் புறப்பட்டு, சேனைகளைப் பார்த்து, ஓ வீரர் களே ! இன்று இந்திரனைக் கொன்று நிருபத்திரவமான தேவ லோகத்தை என் வசமாக்கிக் கொள்ளப் போகின்றேன், வாருங்கள், வாருங்களென்று பெருங்கோஷஞ் செய்து சென்றனன். (12–21)

இவன் வருகையை வஜ்ரபாணி யறிந்து பயந்து லோகபாலகர் முதலிய யாவரையும் வரவழைத்து அவர்களை கழுகு யூகமாக வமைத்து அந்த யூகத்துக்குள்தா னிருந்தனன். இவனை விருத்திர னறிந்து வேகமாய்ப் போர் செய்யத் தொடங்கி தோமரம் பிண்டி பாலம் கத்தி கோடாலி முதலிய பல ஆயுதங்களால் இடித்துங் குத்தி யும் வெட்டியும் ஆரவாரஞ் செய்யும்பொழுது தேவர்கள் இனி நாம் பிழைப்பது அரிதென்று ஏங்கினர். அசுரர்களெல்லாம் ஆனந்தங் கொண்டு அடித்தனர். தேவர்கள் ஏக்கமும் அசுரர்கள் ஊக்கமுங்

கொண்டிருக்குஞ் சமயத்தில் இந்திரனைத் திடீரென்று பிடித்துக் கசக்கி மொத்தையாகத் திரட்டி வாயில் போட்டுக்கொண்டு அவனிடத்தில் தான் கொண்டிருந்த வயிரத்தை நினைந்து மென்று மென்று சந்துஷ்டனா யிருந்தனன். விருத்திரன் வாயில் இந்திரன் லேகியமா யிருத்தலைத் தேவர்கள் கண்டு கூகூ வென்றலறி, ஓ இந்திரனே! இந்திரனே! என்று கதறிப் பதறிப் பிரகஸ்பதியைப் பார்த்து, ஓ எங்களையரே! எங்களை ரக்ஷிக்கப்பட்ட இந்திரன் விருத்திரனால் பக்ஷிக்கப்பட்டானே! அந்தோ! இனி நாங்கள் என்ன செய்வோம்? விரைவில் நீர் ஆபிசார மந்திரத்தைச் செய்யுமென்று தேவர்கள் பரிபவப்பட்டுக் கூறுங்கால், பிரகஸ்பதி பகவான், ஓ தேவர்களே! இந்திரன் விருத்திரனால் பக்ஷிக்கப்பட்டாலும் அவனுக் கிறப்புண்டாகுமா? அவன் அவ்வசுரன் வாய் நடுவிலகப்படாமல் கடைவாயில் ஒருபுறம் ஒட்டிக் கொண்டிருக்கின்றானென்று கூறவே, தேவர்க ளவ்வசுரன் வாய் திறக்கும் வண்ணம் ஜிரும்பிகாஸ்திரமென்னும் ஓரஸ்திரத்தை விட்டனர். அதனாலவ்வசுரன் கொட்டாவி விட்டுக்கொண்டு வாயைத் திறந்தனன். அவனது வாய்ச் சந்தை எதிர்பார்த்திருந்த இந்திரன் அவ்வசுரன் வாய்ப் பல்லிற் படாமல் ஒரு சிறிய உருக்கொண்டு வெளியே வந்து வீழ்ந்து அவன் கண்ணுக்குப் புலப்படாமல் ஓட்டம் பிடித்தனன். ஓ ராஜேந்திரனே! அன்று அவ்வசுரனுக்குண்டாகிய கொட்டாவியே இப்பொழுது யாவரிடத்தும் உண்டாய் வருகின்றது. இதனைப் பெரியோர் அவசகுனமென்றும் அநுஷ்டானம் ஜபம் ஈச்வராராதனம் முதலியன செய்யுங் காலத்தில் இதுவுண்டாதல் குற்றமென்றுங் கூறுவர். (22–37)

இந்திரன் வெளியே வந்து ஓடியதைக் கண்ட தேவர்கள் சந்தோஷமடைந்து போர் செய்வதை விடாமல் இவர்களெல்லாம் ஒருபுறமும் விருத்திராசுரனொருவன் மாத்திரம் ஒருபுறமும் நின்று பதினாயிரம் வருஷம் போர்செய்து வந்தனர். விருத்திராசுரன் வரத்தால் விருத்தியடையும் பருவமுடையவனா யிருத்தலால் அவன் ஒருவனாகவே யிருந்தும் அவனுக்கே பலமும் வெற்றியு முண்டாயிற்று. தேவர்கள் தோல்வியடையும் பருவமுடையவர்களா யிருத்தலால் இவர்கள் பலராகவிருந்தும் இவர்கட்குத் துர்ப்பலமும் தோல்வியுமே யுண்டாயிற்று. இதுபோலவே வெற்றி யடையப் பெற்ற விருத்திரனுக்குச் சரீரப் பிரகாசமும் மனசந்தோஷமும் தேவர்களுக்குச் சரீர அப்பிரகாசமும் மனதுக்கமு முண்டாயின. துக்கமடையப் பெற்ற தேவர்கள் இருப்பதற்கிடனில்லாமல் சகல வாழ்வையும் விட்டோடி மலைமுழைகளினும் வனங்களினும் மிருகங்களைப்போல் வாழ்ந்திருந்தனர். சந்தோஷமடையப்பெற்ற விருத்திரன் இருப்பதற் கிடனுண்டாய் சுவர்க்கத்தையடைந்து ஐராவதம் உச்சைசிரவம் கற்பகவிருக்ஷம் முதலிய பஞ்சதருக்கள், காமதேனு சிந்தாமணி அப்ஸரஸ்திரீகள் முதலிய சகலசம்பத்துக்களையும் தன் வசமாக்கிக்கொண்டு வாழ்ந்திருந்தனன். இவன் வாழ்வைக்கேட்ட

தந்தையாகிய துவஷ்டாவும் அவனிடம் வந்து அளவளாவி வாழ்ந்திருந்தனன். (38–47)

பின்னர் இந்திரன் முதலிய தேவர்கள் முனிவர்களோடு கலந்து, ஐயன்மீர்! இனி நாம் என்செய்யலாம்? எல்லாம் செய்யவல்லவனுயிருக்கின்ற சிவன்தான் இப்பொழுது எதனைச் செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டுமென்று யாவருங் கூடிக் கைலைக்குப்போய் அக்கைலைநாதனைப் பணிந்து, ஓ மஹாதேவனே! கருணையங் கடலே! எங்களுக்கு உன்னால் கிடைக்கப்பெற்ற வாழ்வனைத்தும் விருத்திராசுரன் கொள்ளை கொண்டனன். இனி நாங்கள் போகுங் கதி யாது? உண்மையைச் சொல்லும், எங்கே போவோம்? எதைச் செய்வோம்? ஓ பக்தபராதீனனே! எங்கள் துக்கம் நாசமாகும் ஒருபாயத்தைச் சொல்லியருள்வாய். நீ சகல ஜீவரக்ஷகனல்லவா? எங்கட்குச் சகாயஞ் செய்து எங்களை ரக்ஷிப்பாய்! மதகர்விதனை விருத்திராசுரனைச் சங்கரியுமென்று பிரார்த்திக்கவே, கிருபாளுவாகிய சிவபிரானுர் இரக்கமுற்று, ஓ தேவர்காள்! நீங்கள் பிரமனையழைத்துக்கொண்டு விஷ்ணுவினிடஞ் சென்று இப்பொழுது என்னிடஞ் சொல்லியது போல் சொல்லுங்கள். அவன் சக்தியுள்ளவன். அசுரர்களை மோசஞ் செய்யும் வகையெல்லாந் தெரிந்தவன். பலமுள்ளவன். சமயோசிதமான யுக்தியுள்ளவன். தன்னை யடைந்தவர்களைக் காக்குங் குணமுள்ளவன். காரியசித்தி யுண்டாகவேண்டுமானுல் அவனையன்றி உங்களுக்கு வேறெருருவருமில்லை. ஆகையால் நீங்கள் அவனிடம் போய்ச் சேருங்களென் றனுக்கிரகஞ் செய்தனுப்பினர். (49–57)

தேவர்களும் எம்பெருமான்பால் விடைபெற்று விஷ்ணுவினிடஞ்சென்று தங்கள் குறையை விண்ணப்பஞ் செய்தனர். அதனைக்கேட்ட அவர் மிக்க விரக்கமுடையவராய், ஓ தேவர்களே! நீங்கள் அஞ்சவேண்டாமென்றுஅபயந்தந்தருளினர். இவ்வண்ணம் வியாசபகவான் ஜனமேஜயனுக்குக் கூறினுரென்று சூதபகவான் சௌனகாதியருக்குக் கூறியருளினுர். (58–62)

ஓம் ஈதிபாதா விநாஸிந்யை நம:

## 5. தேவி தோத்திரம்

சூதபகவான் கூறுகின்றுர்:—ஓ மஹரிஷிகாள்! வியாசமுனிவர் ஜனமேஜயனுக்குப் பின்னர் சொல்லிவந்த சரித்திரத்தைக் கூறுகின்றேன், கேட்பீர்களாக:

வியாசமுனிவர், அரசனைப்பார்த்து, உனக்குத் தேவர்கள் திருமாலைச் சரணமடைந்த வரலாற்றைக் கூறினே னல்லவா? இனி அத்திருமால் தேவர்களை நோக்கிக் கூறிய வுபாயத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக என்று கூறுகின்றுர்:

ஸகலவஸ்துக்களின் உண்மை யறிந்தவரான திருமால் பயமுற்றுச் சிந்தாகுல மடைந்திருக்கின்ற தேவர்களைப் பார்த்து, ஓ தேவர்

களே ! நீங்கள் என்னிடம் சொல்லி வந்ததை மற்ெருருதரஞ் சொல் லுங்களென்று கேட்டனர். அவர்கள் துக்கமிகுதியினுல் ஒன்றும் பேசாமல் வாய்மூடியிருந்தனர். விஷ்ணுமூர்த்தி, ஓ தேவர்காள்! ஏன் பேசாமலிருக்கின்றீர்கள்? நீங்கள் வந்த காரணத்தைச் சொல்லுவீராயின் அது நல்லதோ கெட்டதோ அதனைக்கேட்டு ஆபத்தாயின் அதனை நிவாரணஞ் செய்யுங் காரியத்தில் பிரவே சிப்பேனென்றனர். அதனைக்கேட்ட தேவர்கள், ஓ பிரபுவே! உம்மா லறியப்படாதது இம்மூவுலகிலுண்டோ? நீர் எல்லாமறிந்தவராயிருந் தும் ஒன்றும் அறியாதவர்போல் அடிக்கடி ஏன் கேட்கின்றீர் ? (1–3)

பூர்வத்தில் வாமனுவதாரமெடுத்து மூன்றுலகத்தையும் அடி யால் அளந்து மாபலியை யடக்கி இந்திரனை வாழச்செய்தீர். மோகினி வுருவங்கொண்டு அசுரர்களை மயக்கி அமிர்தத்தையும் இந்திரன் முதலிய எங்களுக்கு வழங்கினீர். இவ்வாறே ஒவ்வோர் சமயங்களிலும் வரும் இடையூறுகளைப் போக்கிப் பாதுகாத்து வந்தீர். அதுபோலும் இப்போது எங்களுக்கு வந்திருக்கும் விபத்தை எவ்வித வுபாயத்திலாவது போக்கி யெங்களைப் பாது காத்தல் வேண்டுமென்று வேண்டவே திருமால், ஓ தேவர்களே ! நீங்களொன்றுக்கும் அஞ்சவேண்டாம், விருத்திராசுரனைக் கொல் வதற்கு யாஞெரு நல்ல வுபாயத்தை யெண்ணியிருக்கிறேன். அதனுல் உங்களுக்குச் சௌக்கியமுண்டாகும். நான் உங்கள் விஷயத்தில் சரீரத்திலாவது புத்தியிலாவது பலத்திலாவது பொருளிலாவது கபடத்திலாவது மற்றெவ்விதத்திலாவது நன்மையே செய்வேன். விருத்திராசுரன் பிரமன் கொடுத்த வரத் தால் மிக்க வன்மை பெற்றிருக்கின்றுதலால் அவனை வெல்ல வேண்டுமாயின் பெரியோர்களால் சொல்லப்பட்ட சாமபேத தான தண்டமென்னும் நான்கையும் விட்டு வஞ்சனையாற் கொல்ல வேண்டும். ஏனெனின், அவன் சத்தியனல்ல. அவனுக்கோ பலத்திஞல் விருத்தியாகுந் தன்மையுண்டா யிருக்கின்றது. அவனைத் துவஷ்டாவும் எந்தப் பிராணிகளாலும் கொல்லா வண்ணம் படைத்திருக்கின்ருன். இவ்வண்ணமாக அவனுக்கு வாய்த்திருக்கும் பலங்கள் பல. ஆகலான் அறநூலிற் கூறியவாறு அவனை வெல்லுவோமென் றெண்ணிஞல் அவன் வெல்லப்படான். நன்மனமுடையாரிடத்துப் பகைமை வரின் அவரப் பகைமையை அறநூலின்வழி நிறுத்துவரே யன்றி அதனைக் கடந்து பகைமை போகும் வழியே போகார். தீயமனமுடையோர் அறநூலின் வழியை அறவேயொழித்துப் பகைமைபோகும் வழியே போவார். இவ்வுண்மையை யறிந்தவர் நன்மனமுடையோர்பால் அறநூலை யும் தீமனமுடையோர்பால் வஞ்சனையையுங்கைக்கொண்டு அவரவ ரிடத்து அவ்வச்செயலையே செய்வர். ஓ தேவர்களே ! விருத்திரா சுரனை முன்னர் வஞ்சனையாற்கலந்து சுவாதீனப்படுத்திக்கொண்டு பின்னர் அவனைக் கொல்லவேண்டும். (4–11)

இனிப் பேசுவதனு லென்னபயன் ? செய்யவேண்டுவன

வற்றைச் செய்யவேண்டும். அஃதாவது அவ்விருத்திராசுரன் எவ்விடத்தி லிருக்கின்ருனே அவ்விடத்திற்குக் கந்தர்வர்களை அனுப்பி அவனை உல்லாசப்படுத்தி நாமனைவரும் அவனது சினேகத்தை விரும்புவது போற்காட்டி அவனை நம் வசப்படுத்தி வெகுநாள் அவனோடு கலந்து வாழ்ந்து, நம்மிடத்தில் அவன் பகைமை எண்ணுவண்ணஞ்செய்து பின்னர் அவனிடத்தில் நமக் குள்ள பகைமையை மறவாமல் கொஞ்சங் கொஞ்சமாய்க் காட்டி இந்திரனுக்கும் அவனுக்கும் சபதத்தை யுண்டுபண்ணிப் போருக்கு வரச் செய்து போரை நடத்துவிக்கும் பொழுது நான் ஒருவருக்குந் தெரியாமல் இந்திரனுடைய வஜ்ராயுதத்தினுனியில் கலந்திருந்து இந்திரன் வஜ்ரத்தை அவன்மேல் விடும்பொழுது அவனைக் கொன்றுவிடுகிறேன். இது நிச்சயம். ஆனல் இப்பொழுது சிறிதுகாலம் அவனுடைய மரணகாலத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும். ஓ தேவர்களே! நீங்கள் அசுரனோடுறவாடிப் பின்ன வனைக் கொல்வது நியாயவிரோத மென்றெண்ணுவீர்கள். அயோக் யனை சத்ருவினிடத்தில் அயோக்யமான வேலை செய்கிறவனுக்குத் தோஷமில்லை. யோக்யதையோடு கூடின சூரனிடத்தில் மாத்திரம் நியாயத்தை யெண்ணிச் செய்யவேண்டும். இந்த அயோக்கிய னிடத்தில் நாம் வீரதர்மத்தை யெண்ணுவோமாயின் நமக்கு நாச முண்டாகு மென்பதிற் சந்தேகமில்லை. அதனை யெண்ணுதொழி வோமாயின் அவன் நாசமடைவதிற் சந்தேகமில்லை. நான் எண் ணுந் தர்மம் உங்களுக்குச் சகாயஞ் செய்யவேண்டு மென்ப தொன்றே யன்றி வேருெரு தர்மத்தையும் நானெண்ணுவதில்லை. எண்ணியிருப்பேனுயின் வாமனவடிவமெடுத்து மாபலியையும் மோகினி ரூபமெடுத்து அசுரரையும் வஞ்சித்திருப்பேனு? அதனை நீங்களே எண்ணிப் பாருங்கள். இந்திரனும் என்னைத்துணையாக வுடையோனுகையால் காரியமொன்றையே எண்ணுவதன்றிப் பழி பாவங்களை யெண்ணுவதில்லை. எண்ணி யிருப்பானுயின் திரிசிரன் தவத்திலிருக்கும்போது அவனைக்கொல்லத் துணிவானு? நான்றுணி வதும் அவன்றுணிவதும் நான் வஞ்சனைத்தொழில் செய்வதும் அவன் வஞ்சனைத் தொழில் செய்வதும் மற்றையர் செய்வதும் யாவும் சக்தியின் செயலே யாமென் றறிமின். அச்சக்தியின் செயலல்லது நானிப்பொழுது சொல்லிய செயல் நடைபெறுவது யாங்ஙனம்? (12–21)

ஆகையால் நீங்க ளனைவரும் தேவியைத் தோத்திரங்களாலும் மந்திரங்களாலுஞ் சரணமடையுங்கள். அந்த யோகமாயை உங் களுக்குச் சகாயஞ் செய்வாள். அவள் பிரகிருதியைக் கடந்த பர மான சாத்விகசொரூபமா யுள்ளவள். அவள்தான் நம்மால் எப் பொழுதும் நமஸ்கரிக்கப்பட்டவளா யுள்ளவள். சர்வசித்திகளையும் சர்வாபீஷ்டங்களையும் கொடுக்கத்தக்கவளாயு முள்ளவள். அவள் சாதாரணமானவர்களால் அடையத்தக்கவளுமல்லள். இந்திரனும் அவளைப்பூஜித்தே சத்ருக்களை வென்றிருக்கிருன். மோகிக்கச் செய்ய வல்ல அசுரர்கள் மோகிக்கும் வண்ணம் செய்யவல்ல மஹாமாயை

யாயுள்ளவள். அம்மகாமாயை இவ்வசுரனை மோகமடையச் செய்வாளென்பது ஓரதிசயமோ? அந்தப்பரதேவதை நீங்கள் செய்யுந் தோத்திரத்திற்குத் திருவுளமிரங்கி சற்று அவ்வசுரனை மோகப்படுத்துவளாயின் அவனை நீங்கள் அதிசுலபத்தில் வெல்லத்தக்கவராவீர்கள். இப்பொழுது அச்சக்தி பிரசன்னையாதல் வேண்டும். பிரசன்னையாயின் நமக்குச் சாத்தியமாகாதனவெல்லாம் சாத்தியமாகும். அவனைச் சாத்தியமாகக் கொள்ளாதவன் எவனாயினும் அவனெண்ணுமெண்ணங்கள் கைகூடுமென்றெண்ணன்மின். அவள் எல்லாக் காரணத்திற்குங் காரணியாயும் எல்லாவுயிருள்ளும் அந்தர்யாமியாயுமுள்ளவள். ஆகலான் உலகத்துக்கெல்லாம் மாதாவாயும் சர்வ மூலகாரணியாயுமிருக்கிற அத்தேவியை ஸத்வபாவத்தோடு பக்தி செய்து சத்ருநாசம் எங்களுக்குண்டாகவேண்டுமென்று சரணமடைமின். பூர்வகாலத்தில் யான் ஐயாயிரவருஷம் மதுகைடபர்களோடு இரவுபகல் யுத்தஞ்செய்தும் வெல்லமுடியாதொழிய அத்தருணத்தில் யான் தேவியைத் தோத்திரஞ் செய்தேன். அவள் கருணைகூர்ந்து எனக்குப் பிரசன்னையாய், நான் மதுகைடபர்களை மோகப்படுத்துகின்றேன்; நீ அச்சமயம் அவர்களை வென்று விடுவாயென்றருளியதனாலல்லவா அவர்களை நான் வென்றவனாயினேன். ஆகலான் நீங்கள் தேவியை நான் சொல்லியபடி தோத்திரஞ் செய்வீராயின் அவள் உங்கள் காரியத்தைச் சாதித்துவிடுவாளென்றனர். (22–31)

இவ்வாறு திருமால் கூறியதைக் கேட்ட தேவர்கள் மேருமலைக்கு வந்து அங்கு ஓர் ஏகாந்த ஸ்தானத்திலிருந்து சர்வலோகங்களையும் ரக்ஷித்தும் அவரவர் வினைக்கீடாய்ச் சிருஷ்டித்தும் சங்கரித்தும் வருகின்றவளாகிய தேவியைத் தியானித்து அவளது மந்திரத்தை ஜபித்துத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்:

பக்தர்களுடைய அபீஷ்டங்களை நிறைவேற்றுகின்றவளே! ஸம்ஸார துக்கத்தைச் சங்கரிக்கின்றவளே! அடியோங்கள் விருத்திராசுரனால் மிகவும் பாதிக்கப்பட்டவர்களாக விருக்கின்றோம். எங்களை ரக்ஷிக்கவேண்டும். எங்கள் விஷயத்தில் நீ சந்தோஷமுடையவளா யிருத்தல்வேண்டும். ஓ துக்கமுடையோரது துக்கங்களை நாசஞ்செய்கின்றவளே! பரமார்த்த தத்துவ சொரூபமாயிருக்கின்றவளே! உனது திருவடி மலரை எப்பொழுதுஞ் சரணமாகவடைகிறோம். சர்வலோகத்துக்குந் தாயாயிருக்கின்ற நீ சத்துரு பாதையில் வீழ்ந்துகிடக்கிற எங்களைப் பிள்ளைகளாக வெண்ணி ரக்ஷிக்கக்கடவாய்! ஓ தாயே! இந்த மூன்றுலகத்திலும் நீ யறியாததொன்றுண்டோ? எங்களிடத்தில் நீ ஏன் உபேக்ஷயாயிருக்கின்றாய்? எங்களுக்கு இவ்வுலகவாழ்க்கையைத் தந்தவள் நீதானே! பிரமன் முதலிய மூவரும் உன்னம்சத்திற் பிறந்ததனாலன்றோ சகலகாரியங்களையும் நடத்தும் வன்மையுடையராயினர். அவர்கள் செய்யுந் தொழிலில் அவர்களுக்குச் சுவாதீனமுண்டோ? அவர்கள் உனது புருவ நெருப்பின்வழியே ஆடுகின்றவர்களல்லவா? உலகில் அன்னைமார் தன்தன் புத்திரன்மார்கள் துயரப்படுவாராயின் அத்

துயரத்தைக் கண்டு மனம் வருந்தி அதனைப் பரிகரித்து அவர்களைச் சந்தோஷிப்பிக்கின்றீர்களே! அஃது உன்னாலுண்டாக்கப்பட்டதல்லவா? ஓ கிருபாசமுத்திரீ! உன்பாத கமலங்களைச் சரணை வடைகின்ற குற்றமில்லாத எங்களிடத்தில் ஏன் உபேக்ஷையாயிருக்கின்றாய்? இப்பொழுது நாங்களடைந்திருக்கும் பதங்களும் அப்பதங்களாலுண்டாகும் விஷயபோக சுகானுபவங்களும் உன்னை நமஸ்கரித்ததனா லுண்டானதன்றோ? நீ உண்டாக்காதொழியின் நாங்களேன் இந்த அற்பசுகத்தை விரும்பி அசுரர்களால் அடிக்கடியும் பெருந்துன்பத்தை அனுபவிக்கின்றவர்களாக விருக்கின்றோம்? உன்னால் திரோபவிக்கப்பட்டு நாங்கள் சிற்றின்பத்தையே பேரின்பமாகவெண்ணி அனுபவிக்கும் இத்தருணத்தில் அவைகட்கு இடையூறு வருமாயின் அவைகளையோட்டி அவ்வின்பத்தை எங்களுக்கு ஊட்டவேண்டுவது உனது கடமை யன்றோ? நீ எங்களுக்கு இந்தச் சிற்றின்ப சுகத்தை யூட்டாது பேரின்பத்தை யூட்டியிருப்பையாயின் நாங்களேன் இந்தத்துக்கத்துக்காளாவோம்? இப்படிச் செய்தது உன்னுடைய குற்றமா, எங்களுடைய குற்றமா? ஓ மஹாதேவி! இதனை நீயே எண்ணிப்பார்க்கவேண்டும்.

உன்னால் சிருஷ்டிக்கப்பட்ட மோகமானது எங்களுக்குப் பிரபுவாயிருக்கின்றது. கருணையே சுபாவமாகவுள்ள தாயே! எங்களை மயக்க மோகத்தைப் படைத்ததுபோலும் எங்களுக்கு ஞான வைராக்கியமுண்டாக எங்கள்பால் தயையைப் படைக்கலாகாதா? பூர்வத்தில் சகலலோகபயங்கரனை மகிஷனை எங்கள் நிமித்தமாய்க் கொன்றதுபோலும் எங்களுக்கதிபயத்தை விளைவிக்கின்ற விருத்திராசுரனை ஏன் கொல்லாமலிருக்கின்றனை? சும்பநிசும்பர்களையும் அவர்களுடன்வந்த அசுரவெள்ளங்களையுங் கொன்ற நீ இந்த மகாதுஷ்டனை விருத்திரனைக் கொல்லாமல் விருத்தியாக்கின்றனை! ஓ கிருபாசமுத்ரீ! எப்படியானால் அவன் ஜீவிக்காமலிருப்பானோ அப்படியேயெண்ணிச் செய்யலாகாதா? அவனால் நாங்கள் வருந்த எங்கள்பால் மோகத்தை வைத்ததுபோல் எங்களால் அவன் வருந்த அவன்பால் மோகத்தை வைக்கலாகாதா? எங்கள் சங்கடத்தை நீக்கத்தக்க சக்தியுள்ளவன் எவனிருக்கின்றான்? இல்லை என்பது மூன்றுலகினுமுண்டு. நீ ஒருத்திதானிருக்கின்றாய். விருத்திராசுர னிடத்திலும் உனக்குத் தயை யிருக்குமாயின் துஷ்டனாயும் உலகத்துக்குப் பீடையைச்செய்கின்றவனாயுமிருக்கிற அவனைக் கொன்றுவிடுவாய்; அதுதான் தயையாகும். அதனா லவன் பரிசுத்தமடைந்து பாபத்தினின்று நீங்கிவிடுகின்றானாகலா னென்க.

நீ கொல்லாவிடின் அவன் பாபவிசேஷத்தால் நரகமடைவான். இதுகாறும் எங்களை அசுரர்களாற் றுன்பப்படுத்தி எங்கட்குப் பக்திஞானவைராக்கியங்களை யுண்டாக்கிப் புனிதமாக்கியும், அசுரர்களுக்குத் தவத்தாலும் வரத்தாலும் அகங்காரத்தை அதிகரிக்கச் செய்து வாழ்விப்பதுபோல மோகாந்தகாரத் துட்படுத்திச் சங்கரித்துப் புனிதமாக்கியும் வருவதுபோல் ஏனிப்போது செய்யாதிருக்

கின்றனை? அந்தோ! ஓ தேவி! இந்த விருத்திரன் நரகத்தில் வீழ்வா னாயின் ஏனைய அசுரர்களைப்போல் இவன் மீளத்தக்கவனன்றே! ஆகலான் இவனைக்கொல்லுதல் அறமன்றென் றெண்ணி வாளா விருக்கின்றனையோ? நீ இப்போதிருந்தாயானாலும் எப்போதாவது கொல்லாமல் விடப்போகின்றனையோ? இல்லையே! அல்லது எங்கட்குச் சத்துருவாகிய இவன் உன் பாதங்களை நமஸ்கரிக்கின்றவனாயும் பக்தி பாராட்டுகின்றவனாயுந் தோன்றவில்லை. பாபபுத்தியுள்ள இவன் பக்தியுடையவனாயிருப்பானாயின் எங்களை ஹிம்சித்துப் பீடிப்பானா? ஓ தாயே! இவர்களுடைய ஹிம்சையில் உனக்கு நாங்கள் எப்படிப் பூஜைசெய்வோம்? பூஜையாதி ஜபங்களும் பூஜாத் திரவியங்களும், மந்திரங்களும், நாங்களும் பராசக்தியாகிய உன்னுடைய சொரூபமேயாதலால் உன் பாதங்களில் வீழ்ந்து வணங்குகின்றோம். இதுவே யாங்களிப்போது செய்யும் பூஜையாம். யோகிகளும் மோக்ஷ காமிகளும் உன்னுடைய பாதங்களையன்றோ ராக மோகமற்று எக்காலத்தும் ஸ்மரிக்கின்றனர்? அதுதானன்றோ ஸம்ஸாரங்கடத்தற்கு ஓடமாயுள்ளது? அந்த மகிமையுணர்ந்து எவர்கள் பக்தியோடு தியானஞ்செய்கிறார்களோ அவர்களன்றோ புண்ணியவான்கள்? ஆதலால் நாங்களும் உன் பாதத்தையே வணங்கிவிட்டோம். யாகஞ் செய்கிறவர்கள் ஹோமகாலத்தில் தேவர்கள் திருப்தியின் பொருட்டு சுவாஹாமூர்த்தியாயும், பிதுர்க்களுக்குத் திருப்தி செய்யும்பொருட்டு சுவதா மூர்த்தியாயு மிருக்கிற உன்னை ஸ்மரிக்கிறார்களன்றோ? மேதையும் காந்தியும் சாந்தியும் மனிதர்களுக்கும் பதார்த்தத்தை விளக்குகிற பிரசித்தமான புத்தியும் இம்மூன்றுலகத்திலுமுள்ள சர்வ சம்பத்தும் நீதானன்றோ? ஆகலான் உன்னை நமஸ்கரிக்கின்றவர்களுக்கு நீயே சர்வசம்பத்தையும் சிருஷ்டித்துக் கொடுக்கின்றனை யென்று துதித்தனர். (32–49)

தேவர்களால் தோத்திரிக்கப்பட்ட தேவி, அழகான ரூபமுடையவளாய் சர்வாபரண பூஷிதையாய் திருக்கரங்களில் பாசம் அங்குசம் வரதம் அபயம் என்பவைகளையும் இடையில் சப்திக்கின்ற சிலங்கைகளுள்ள ஒட்டியாணத்தையும் திருக்கரத்தில் வளையலையும் திருப்பாதங்களில் தண்டையும் திருமுடியில் பாலசந்திரனோடு ரத்னகிரீடத்தையு முடையவளாய் புன்சிரிப்போடு கூடின தாமரை மலர் போன்ற திருமுகமுடையவளாய் திரிநேத்திரையாய் பாரிஜாத மலரையும் தாமரையிதழையுமொத்த நிறமுடையவளாய் சிவந்த சந்தனமணிந்தவளாய் அனுக்கிரகத்தினால் மலர்ந்த முகமுடையவளாய் கருணைக்கடலாய் ஏனைய சிருங்கார வேஷங்களில் நிறைந்தவளாய் எல்லோரையும் காக்கிற சொரூபமுள்ளவளாய் எல்லாமறிந்தவளாய் எல்லாவற்றையுஞ் சிருஷ்டிக்கிறவளாய் ஸ்தூலப்பிரபஞ்ச சொரூபிணியாய் சர்வ வேதாந்தங்களால் நிச்சயிக்கப் பட்டவளாய் சச்சிதானந்த சொரூபிணியாய் பிரத்யக்ஷமாயினள். தேவர்களெல்லாம் நமஸ்கரித்தனர். அவர்களை மஹாதேவியானவள் பார்த்து, உங்கள் காரிய மென்னவென்று கேட்க, அவர்கள் எங்களுக்கு மஹா சங்கடத்தை விளைவிக்கிற விருத்திராசுரன் மோகமடையவும்

எங்களிடத்தில் விரோதபாவங் கொள்ளாமல் நம்பவும் எந்த ஆயுதத்தால் கொல்லப்படுவானோ அந்த ஆயுதத்திற்கு வன்மையுங் கொடுத்தருள்வாயென்று பிரார்த்திக்க, அவ்வண்ணமே யாகுக வென்றருளி மறைந்துபோயினள். தேவர்களுஞ் சந்தோஷத்தோடு கூடினவர்களாய்த் தங்கள் தங்களிடம்போய்ச் சேர்ந்தனர். (50–56)

ஓம் ஈஹாவிரஹிதாயை நம:

## 6. விருத்திரன் வதம்

ஓ ஜனமேஜயனே! இவ்விதமாய் வரம்பெற்ற தேவர்களும் ரிஷிகளும் மிகுந்த தேஜஸோடும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற விருத்திரனைப் பார்த்தனர். அவன் மூன்றுலகத்தையுஞ் சுட்டெரிக்கிறவன் போலும் தங்களை யெல்லாம் விழுங்குகிறவன் போலுமிருக்கிறதைக் கண்டு ரிஷிகள் அவனிடம்போய் தேவகாரியஞ் சித்திப்பதற்கு இன்பமான சில வார்த்தைகளைக் கூறத்துணிந்தனர்:

சர்வலோகத்துக்கும் பயத்தை விளைவிக்கிற ஓ விருத்திரனே! சகல பிரமாண்டமு முன்னு லாக்ரமிக்கப்பட்டிருக்கிற தல்லவா? இனி இந்திரனோடு வைரத்தை வகிப்பதனு லுனக்குச் சங்கடத்தைக் கொடுக்குமேயன்றிச் சுகத்தைக் கொடுக்குமா? நீங்களொருவருக்கொருவர் சத்துருக்களா யிருப்பதனுல் உங்களுக்கு உறக்கமென்ப துண்டாகாது. நீங்களிருவரும் முன் சண்டையிட்டுக் கொண்டிருக்கும்போதே அதிககாலங் கழிந்துவிட்டது. தேவர் தானவர் மானவர் முதலிய யாவரும் உங்களால் பீடிக்கப்படுகின்றுர்கள். இவ்வுலகில் கிரகிக்கத்தக்கது சுகமென்றும், விடத்தக்கது துக்கமென்றும் அறிவாய். துவேஷம் வைத்திருப்பவருக்குச் சுகங் கிடையாதென்பது நிச்சயம். யுத்த ரசத்தை யறிந்தவர்களாயும் சிருங்காரரசத்தில் சதுரர்களாயுமிருக்கிற பண்டிதர்கள் சகலேந்திரியசுகத்தையுந் தடைசெய்கிற யுத்தத்தைப் புகழார்கள். ஒரு விளையாடலைக்கருதி புஷ்பங்களினுலும் யுத்தஞ்செய்யக் கூடாதென்றுல் யுத்தத்தைக்கருதி தீக்ஷ்ணமான பாணங்களால் யுத்தஞ்செய்யக் கூடாதென்பதைச் சொல்லவும் வேண்டுமா? யுத்தத்தில் ஜயம் சந்தேகம். பாணத்தால் புண்ணுண்டாவது மாத்திரம் நிச்சயம். இந்தப் பிரபஞ்சமெல்லாம் தெய்வாதீனமாய் இருப்பதால் தோல்வி வெற்றிகளும் தெய்வாதீனமென் றெண்ணினவர் எப்போதும் யுத்தஞ்செய்ய வெண்ணுதல் குற்றம். காலத்தில் ஸ்நானமுங் காலத்தில் போஜனமுங் காலத்தில் சயனமுஞ் சொற்படி நடக்கவல்ல வேலைக்காரர்களமைவதும் கற்புடைய மனைவி வாய்ப்பதுமாகிய இவையெல்லாம் ஸம்ஸாரத்தில் சுகத்துக்கு யோக்கியமாகவிருக்கின்றன. பயங்கரமாகிய யுத்தத்தில் யுத்தஞ்செய்கிறவனுக்குப் பாணவருஷத்தினுலென்ன சுகமிருக்கின்றது? ஒருவேளை சத்துருவை நாம் ஜயித்தோமென்கிற சுகந்தோன்றும். இதுவன்றி யுத்தத்தில் மரணமடைந்தால் சுவர்க்கமடையலாமென்கிற வார்த்தை

யொன்றுண்டு. அது வஞ்சக வார்த்தை யென்றறிவாய். அவ் வஞ்சகச் சொல் யுத்தத்தில் பிரவேசிப்பதற்காக ஏற்படுத்தியிருக் கிறதேயன்றி வேறில்லை. யுத்தத்திலிறந்தவுடன் நரி முதலிய ஜந் துக்களால் பிடுங்கப்பட்டு துன்பப்படுவது பிரத்தியக்ஷமாய்க் காணக்கூடுமானதாகவிருக்கப் பின்னர் இவன் சுவர்க்க சுகத்தை யடைகிறானென்பதை எந்த மூடன்றான் நம்பி அந்த யுத்த மரணத் தைக் கோருவான்? ஆதலால், ஓ விருத்திரனே! இந்திரனோடு எப் போதும் உனக்குச் சிநேகமிருக்கவேண்டும். அஃது இருந்தால் எப்போதும் இருவரும் சுகத்தை யனுபவிப்பீர்கள். நாங்களுங் கந்தர்வர்களும் அவரவரிடங்களில் சுகமாய் வாழ்ந்து கொண்டிருப் போம். தைரியசாலியான விருத்திரனே! உங்களிருவருக்கும் இராப்பகல் யுத்தம் நடந்திருக்கும்போது யாங்களெல்லாம் அடைந்த துன்பம் இவ்வளவினவென்று சொல்லமுடியாது. இப்பவும் யாவ ருடைய துக்க நிவிர்த்தியின் பொருட்டு நாங்கள் உங்களுடைய சிநேகத்தைப் பிரார்த்திக்கின்றோம். நீங்களிருவருஞ் சிநேகமாய் விட்டால் நீங்களும் உலகிலுள்ள யாவருஞ் சுகத்தையடைவீர்க ளல்லவா? உங்களிருவருக்கும் நாங்களே மத்தியஸ்தராயிருந்து சபதமூலமாகவே சிநேகமுண்டாக்குகின்றோம். இந்திரன் நீ எப்படிக் கேட்கின்றனையோ அப்படி சபதஞ்செய்து கொடுத்து உன் னுடைய மனதைச் சந்தோஷப்படுத்தப் போகிறான். பூமி சத்யத் தையே ஆதாரமாக வுடையது. அதுபோலவே சூரிய சந்திரர்கள் பிரகாசித்துலாவுவதும், வாயு காலத்தி னளவாய்ச் சலித்து வருவ தும், சமுத்திரம் கரையைக் கடவாதிருப்பதும் சத்திய மொன்றினு லேயேயாகலான் உங்களுக்குச் சத்திய முன்னிலையாகவே சிநேக முண்டாய் ஓரிடத்திலேயே படுக்கையும் ஜலக்கிரீடையும் சிங்கா தனத்தில் வீற்றிருப்பதுமாகிய செயல்கள் நடந்தேறி வரவேண்டு மென்றனர். (1–23)

இவ்வாறு ரிஷிகள் சொல்லவே, மகா புத்திசாலியான விருத் திரன் அவர்கள் வார்த்தையைக்கேட்டுச் சொல்லுகிறான்: ஓ தயை யிற் சிறந்த தபஸ்விகளே! நீவிர் என்னால் பூஜிக்கத்தக்க மகிமை யுடையவர்களே! நீவிர் எப்போதும் பொய் சொல்லாமையும் நன் னடக்கையும் மிகப்பெருமையும் உடையீர். ஆதலால் நீவிர் கபட மூலத்தை யறியீர். புத்திமானுயுள்ளவன், வைரம் வைத்தவன், துஷ்டன், அறிவில்லாதவன், காமுகன், காந்தியில்லாதவன், நாணமில்லாதவன் என்னும் இவர்களிடத்தில் சிநேகித்தலாகாது. ஓ மகான்களே! நான் சொல்லிவந்த தீயவையெல்லாம் ஒன்றேனுந் தவறாதுடையவன் இந்திரன்; அவனிடத்தில் சிநேகஞ்செய்தல் எப்போதுங் கூடாது. நீங்களெல்லோரும் ஞானசமர்த்தர்கள், சாந்தர்கள், துஷ்ட தர்மங்களை யறியீர். உங்களுக்குத் துரோக புத்தி கிடையாது. உயிர்கள் தாம்தாம் செய்யும் சுபாசுபகர்மங் களைத் தாம்தாமேயனுபவிப்பர். ஒருவனுக்குத் துரோகஞ் செய்திறந் தவன் நன்மையை எப்படியடைவான்? நம்பவைத்து இம்சிக்கின்ற வர் மறுமையில் நரகமடைவரென்பதும் இவ்வுலகில் துக்கமடைவ

ரென்பதும் நிச்சயம். பிரம்மஹத்தியாவது சுராபானமாவது செய்தவர்களுக்குப் பிராயச்சித்தமுண்டு; நம்பிக்கைத் துரோகமாவது மித்திரத்துரோகமாவது செய்தவர்க்குப் பிராயச்சித்தங்கிடையாது. ஆகலான் இந்திரன் நம்மைத் துரோகஞ்செய்வதிற் சிறந்தவன். அவனது நட்பை யாஞெருபோதும் வேண்டேன் என்று சொல்லினன். (24–29)

அதனைக் கேட்ட முனிவர்கள், ஓ நீதிமார்க்கங்களையறிந்த சதுரனே! நீ எண்ணியிருக்கும் ஏற்பாட்டை ஸ்திரமாகச் சொல்லுவாயாயின் அந்த ஏற்பாட்டின்படியே உனக்கும் இந்திரனுக்கும் சிநேகஞ்செய்து வைக்கின்றோமென்று கூறினர். விருத்திரன் தேவியினது திரோத சக்தியினால் சிறிது மயங்கினவனாய் அவர்களை நோக்கிக் கூறுகின்றான்: ஓ முனிவர்காள்! யான் உலர்ந்துள்ள வஸ்துக்களாலும், ஈரமுள்ள வஸ்துக்களாலும், கல் கட்டை முதலியவைகளாலும், வஜ்ராயுதத்தாலும், இந்திரன் முதலிய தேவர்களாலும் பகல் இரவென்னும் காலங்களில் எனக்கு மரணந் தேடாத பக்ஷத்தில் நீங்கள் சந்திசெய்யுங் காரியத்தை நானொப்புக்கொள்ளுகிறேன். இதற்குமாறாக யெண்ணும்பக்ஷத்தில் ஒப்புக்கொள்ளேன் என்று சொல்லினன். முனிவர்கள் அவனை பூஜ்யமான வாசகங்களால் மிகவுந் தோத்திரஞ் செய்து நீ சொல்லியபடியே செய்கிறோமென்று இந்திரனை வரவழைத்து நடந்த ஏற்பாட்டைச் சொல்ல, இந்திரனவ்விஷயத்தில் பயமற்றவனாய் அம்முனிவர் முன்னிலையிலேயே அக்கினி சாக்ஷியாய் விருத்திரன் வேண்டியவாறெல்லாம் சபதஞ்செய்துகொடுத்தனன். விருத்திரனும் அவன் வார்த்தையில் பிரமாண புத்திவைத்து நம்பிக்கையடைந்து மிகுந்த ஆசையுடையவனாய்ப் போகியாகிய இவனே சினேகி என்று ஒருகணமும் பிரியாமல் ஒரு சமயம் நந்தவனத்திலும் ஒரு சமயம் கடற்கரையிலும் உல்லாசமாய்த் திரிந்துலாவி வருவான். இவ்வண்ணம் நடந்து வருங் காலத்தில் விருத்திரன் சிறிதும் வஞ்சனையின்றி அவனிடத்தில் அதிகப் பிரீதியுடையவனாக இருந்தனன். இந்திரனோ விருத்திரனிடத்தில் வஞ்சத்தை உள்ளத்துள்ளே வைத்து இவனை எந்த உபாயத்தினால் கொல்லலாமென்னும் சிந்தனை மேற்கொண்டு அதற்குரிய சமயத்தை எதிர்பார்த்து அது கிட்டாமையால் மனம் வருந்தி ஏக்கமுற்றிருந்தனன். இந்திரனுக்கு நாளுக்குநாள் விருத்திரனிடத்தில் வஞ்சகுணமே மேலிட்டும், விருத்திரனுக்கு இந்திரனிடத்தில் விசுவாச குணமே மேலிட்டும் வந்தது. அநேக நாள் சென்ற பின்னர் இவ்விருவரும் நட்பாயிருத்தலை விருத்திரன் தந்தையாகிய துவஷ்டாவறிந்து தன் மகனை யழைத்து, ஓ மகனே! நானிப்போது சொல்லப்புகும் நன்மையான வார்த்தைகளைக் கேட்பாயாக என்று கூறுவானாயினன்: (30–42)

வைரம் வைத்தவனிடத்தில் எப்போதும் சிநேகம் வைத்தல் கூடாது. அங்ஙனமிருக்க உன்னிடத்தில் இந்திரன் இடைவிடாமல் வைரம் வைத்துள்ளவனல்லவா? அவன் தன்னின் உயர்வாகப் பிறரைக் காண்பானாயின் பொறாமை கொள்ளுகிறவன். பேராசை

யினுல் மதங்கொண்டு துவேஷத்திலேயே பிரீதியுடையவன். பிறரது துக்கத்தைக் கண்டு சந்தோஷிக்கின்றவன். பிறர் மனையாட்டி களிடத்தில் பிரீதியுள்ளவன். பாபபுத்தியினுல் வஞ்சகச் செயலையே செய்கின்றவன். அச்செயலுக்கே சமயந்தேடுகிறவன். துரோகத்தையே செல்வச் செருக்கால் பிரதானமாக உடையவன். மஹா மாயாவி. அகங்காரம் படைத்தவன். தாயினுதரத்தில் பிரவேசித்து கர்ப்பத்தை யழிக்கத் தொடங்குங்கால் அந்தச் சிசுவானது கதறிக் கதறிப் புலம்பச் சிறிதேனுமிரக்கமின்றி ஏழு துண்டாகத் துணித்தவன். இப்படிப்பட்டவனை நீ விசுவசித்து வருகின்றனையே! இஃதென்ன பாவம்! அவனிடத்திலும் விசுவாசம் வைக்கலாமா? ஓ குழந்தாய்! பாவஞ் செய்தவனுக்கு மறுபடியும் பாவஞ் செய்வதில் என்ன லஜ்ஜை யுண்டாகும்? ஆகையால், அப்பா குழந்தாய்! இனி நீ அவனது சிநேகத்தை விடுவாயாக வென்றனன். விருத்திரன் சமீபித்த மரணமுடையவனுதலால் தந்தை சொல்லிய வார்த்தையில் லக்ஷியமற்றவனுய் இந்திரனை முன்போலவே சிநேகித்து வந்தனன். (43-48)

ஒருநாள் கடற்கரையில் சந்தியாகாலத்தில் விருத்திரனை இந்திரன் கண்டு, இந்தப்பொழுது இவனுக்கு நாம் சத்தியம் பண்ணிக் கொடுத்திருக்கிற காலமன்றல்லவா? இதுவே இவனைக் கொல்வதற்கு நல்ல சமயம்; இவனுக்குச் சகாயமாய் வரத்தக்க கூட்டத்தாரொருவருமில்லை; இதுபோலும் நமக்குச் சமயம் வாய்க்கப் போகிறதா வென்று கொல்வதற்குத் துணிந்து விஷ்ணுமூர்த்தியை நினைத்தனன். அவரும் ஒருவர் கண்ணுக்குந் தெரியாமல் அவன் முன்னே வந்து அவனபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு உடனே அவனது வஜ்ராயுதத்தில் பிரவேசித்தனர். அதனையறிந்த இந்திரன் கால விரோதமுமில்லை; வஜ்ராயுதமும் வன்மை பெற்றிருக்கிறது; ஆனுல் இதனுல் கொல்லப்படாதல்லாவா? இதற்கென்ன செய்வோம்? இனி வஞ்சனையாற் கொல்லாமற் போவோமாயின் நமக்குக் கீர்த்தி கிடைக்குமா என்றெண்ணி யிருந்தனன். அத்தருணத்தில் பரதேவதையினுடைய அனுக்கிரகத்தால் கடலில் தெய்வகதியாய் மலைக்குச் சமமான நுரையானது உயர்ந்தோங்கி யிருப்பதைக் கண்டான். இது தெய்வச் செயலென்றறிந்து, இஃது ஈரமுமல்ல, உலர்ந்ததுமல்ல; மற்றெதுவு மல்லவென்று மனத்துள்ளே எண்ணிச் சந்தோஷித்து உடனே அந்த நுரையைத் தனது கையால் வாரி யெடுத்து அம்பிகையைப் பரமபக்தியுடன் தியானிக்கவே, தேவி வந்து தன்னம்சத்தை அதிற் சிறிதே கலப்பித்தனள். அதனை யறிந்த விந்திரன் மகிழ்ந்து அந்த நுரையை வஜ்ராயுதத்திற் பூசி விருத்திரன்மேல் வீசிவிட்டனன். அது அவன்மேல் பட்ட மாத்திரத்தில் அவன் பர்வதம்போல் பூமியில் விழுந்தனன். அதனை இந்திரனும் ரிஷிகளும்கண்டு ஆனந்தமடைந்தவர்களாய் இச்சத்துரு சங்காரம் தேவியினது அனுக்கிரகத்தா லானதன்றேவென்று பல வாருய் அம்பிகையைத் தோத்திரஞ் செய்து ஒரு நந்தவன மமைத்து அதில் ஆலயமொன்று ரத்னமயமாய்ச் சமைத்து அத

னுள் மரகதத்தால் தேவியைப் பிரதிஷ்டைசெய்து மூன்றுபோதும் திவ்யமான சகலத் திரவியங்களாலும் பூஜித்து வழிபட்டு வாழ்த்தினர். அன்றுமுதல் தேவியானவள் தேவர்களுக்குக் குலதெய்வமாயினள். தேவர் முதலாயினர் தேவியைப் பூஜித்தபின்னர் தங்கள் சகாயராகிய திருமாலையும் பூஜித்து வாழ்த்திப் பரமானந்தமடைந்தனர். காற்றும் சுகமாய் வீசிற்று. யக்ஷ கந்தர்வாதியரெல்லாம் விருத்திராசுரனது வதத்தைக் கண்ணுற்று இது பராசக்தி அவனை மோகிப்பித்ததனாலும் நுரையிற் பிரவேசித்ததனாலும் அவன் இந்திரனால் கொல்லப் பட்டானேயன்றி இவனாலேயே கொல்லப்பட்டவனன்றென்றனர். அன்றுமுதல் எவ்வுலகத்தும் விருத்திர னிறப்பதற்குத் துணையாய் நின்றவள் தேவியாகலான் "விருத்திர நிஹந்திரீ" என்று அத்தேவியும், தேவியினது துணையைக்கொண்டு கொன்றவன் இந்திரனுதலால் "விருத்ரஹதன்" என்று இந்திரனும் புகழப்படுகின்றனர் என்று வியாசமுனிவர் கூறியருளினர். (49–68)

ஓம் ஈசசக்த்யை நம:

## 7. குற்றம் செய்த நெஞ்சம்

சூதர் கூறுகின்றார் :—எனதாசிரியராகிய வியாசபகவான் ஜனமேஜயனை நோக்கிக் கூறுகின்றார் : ஓ அரசனே ! விருத்திராசுரன் பூமியில் வீழ்ந்தபின்னர் விஷ்ணுமூர்த்தி வைகுண்டத்துக்குப்போயினர். இந்திரன் பராசக்தியின் அனுக்கிரகத்தால் விருத்திரனைக் கொன்றானாயினும், நம்பியிருந்தவனைக் கொன்றோமே, இது பாவமன்றோ வென்று சிறிது மனதில் பயமடைந்து தன்னுலகம் சேர்ந்தனன். முனிவர்கள் நாம் நடுவுநிலைமைக்கு விரோதமில்லாமல் நடக்கவேண்டியவர்களாக விருக்க, விருத்திரனிடத்தில் வஞ்சித்துக் கூறியதனாலன்றோ இந்திரனாலவன் கொல்லப்பட்டான் என்று பலவாறு மனங்கலங்கி அடிக்கடிக் கூறுவாராயினர் :

இந்திரன் செய்தது பாவமன்றோ ? இப்பாவம் அவனது சேர்க்கையால் வந்ததல்லவா ? நமக்கு முனிவர்களென்கிற பெயர்கெட்டுப் போயிற்றே ! விருத்திரன் நம்முடைய வாக்கியத்தினாலன்றோ இந்திரனை நம்பினான் ? விச்வாசகாதகன் இந்திரனேயன்றி நாமுமாயினோமே ! இவனுடைய வஞ்சனையையறிந்தும் நம்முடைய மமதையினாலன்றோ இருவருக்கும் சபதம் செய்வித்தோம்? அந்த மமதையன்றோ இந்த அனர்த்தத்தை விளைவித்தது ? அதனை நாம் நிந்திக்க வேண்டும். பாவத்தொழிலுக் காலோசனை செய்கிறவன், உபாயஞ் சொல்லுகிறவன், அதற்குத் தூண்டுகிறவன், சிநேகமாய் பக்கத்திலிருக்கின்றவன் இவரெல்லாம் பாவத்துக் காளானவர்களே. அது நிச்சயம். விஷ்ணுமூர்த்தியானவர் ஸத்துவமூர்த்தியா யிருந்தும் இவ்வஞ்சகனாகிய இந்திரனுக்கு உபாயமும் சகாயமுஞ் செய்தார் ; ஆனால் அவரும் தன் பிரயோஜனத்தி லாசையுள்ளவர். இந்திரனும்

தன் பிரயோஜனத்தி லாசையுள்ளவன். தத்தம் பிரயோஜனத்தையே பெரிதாகவெண்ணுகின்றவர் பிறருக்குச் செய்யுங் கெடுதியினலுண்டாகும் பாவத்துக் கொருபொழுதும் அஞ்சார். ஆகலான் தற்பிரயோஜனத்தை நாடுகின்றவராகிய விஷ்ணுமூர்த்தியின் சகாயத்தால் இந்திரன் சகலவிதத்தாலும் பாவத்தையே செய்து வருகிறுன். புருஷார்த்தங்களுக்குள் தருமம் மோக்ஷம் என்னுமிரண்டே சிறப்புள்ளன. அவ்விரண்டும் இப்போது போயின. மூன்றுலகத்திலும் தருமத்தை நாடலும் மோக்ஷத்தை எண்ணுதலும் அரியனவே. யாவரும் பொருளையும் இன்பத்தையுமே புகழாகவெண்ணுகின்றனர். வாயினற் சொல்வது மாத்திரம் தருமமே. எண்ணுவது பொருளும் சிற்றின்பமுந்தான். மகத்துக்களென்று பெயருடையாரும் டாம்பீகமுடையாரே, உண்மையில்லை என்று பலவாருய்த் தங்கள் மனதிலெண்ணி அடிக்கடி மனங்கலங்கி சகல முயற்சிகளையும் விட்டுத் தங்கள் ஆச்ரமம் போய்ச்சேர்ந்தனர். (1–11)

ஓ அரசனே! இவர்கள் செய்தி யிங்ஙனமிருக்க, விருத்திராசுரனிறந்ததை அவன் தந்தைகேட்டு ஓவென்றலறி அழுது புரண்டு பிரேதத்தைக் கண்டு, அந்தோ! அந்தோ!! வென்றேங்கிப் பின்னர் ஒருவகையாற் றெளிந்து அவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை விதிப்படிச் செய்து முடித்துச் சோகபீடிதனுய் மித்திரகாதகனுகிய இந்திரனைச் சபிக்கத் தொடங்கி எவன் என் பிள்ளையை வஞ்சித்துக்கொன்று எனக்குத் தாபத்தை யுண்டுபண்ணினனே அவன் தெய்வத்தினல் நிருமிக்கப்படும் பெரியதோர் துன்பத்தை யடையக்கடவன் என்று சபித்து மேருபர்வதத்தையடைந்து தவஞ் செய்திருந்தனன் என்று கூறியபொழுது, ஜனமேஜயன் வியாச முனிவரை நோக்கி, ஓ ஐயா! விருத்திரனைக் கொன்றேமே என்று பீதியுடன் சென்ற இந்திரன் சுகமடைந்தானு, துக்கமடைந்தானு என்று வினவ, வியாசர் கூறுவாராயினர் : (12–17)

ஓ மகானுபாவனே! என்ன வினவுகின்றுய்? என்ன சந்தேகந் தோன்றிற்று? இந்தச் சந்தேகம் உனக்குத் தோன்ரு வண்ணம் இதுகாறும் பலபலவாய்ச் சொல்லிவந்ததும் உனக்கப்போதைக்கப் போது புதுமையாகவே யிருக்கின்றது. என்ன செய்யலாம்? உன்னல் வஞ்சனையில்லை, கூறுகின்றேன் கேட்பாயாக. பலவான்களாயினும், பலமற்றவர்களாயினும் அவர்கள் செய்யும் சுபாசுப கர்மங்கள் சிறிதாயினும் வெகுவாயினும் அவை அவசியம் அனுபவிக்கத் தக்கவைகளே. உயர்ந்தோர் செய்யுங் கருமங்கள் அவரனுபவிக்க வேண்டியதில்லை; தாழ்ந்தோர் மாத்திரம் தாம் செய்யுங் கருமங்களைத் தாமே யனுபவிக்க வேண்டியவரென்கிற வேற்றுமை யுண்டோ? ஆகலான் தேவராயினும் மனிதராயினும் செய்த பாவத்தைத் தாம் தாம் அனுபவிக்க வேண்டியவர்களே. அது விடாது. விருத்திரனைக் கொல்வதற்கு இந்திரனுக்கு இந்த வுபாயஞ் சொன்னவரும் விஷ்ணுவே. பின்னர் அவனது வஜ்ராயுதத்திற் கலந்தவரும் அவரே. இரண்டிற்குந் துணையாயிருந்தவர் இந்திரனுக்கு ஆபத்து வந்த காலத்தில் ஏன் சகாயஞ் செய்யவரவில்லை? ஓ

அரசனே! தெய்வம் அனுகூலமா யிருக்குங் காலத்தில் எல்லாரும் பந்துக்களாகவே யிருக்கின்றனர். தெய்வம் பிரதிகூலமா யிருக்கும் போது சகாயஞ் செய்கின்றவர் ஒருவருங் கிடையாது. தாய் தந்தை சகோதரர் மனைவி பரிசாரகர் சிநேகர் முதலாயினோர் சகாயஞ் செய்யாரோ வெனின் ஒருவருஞ் செய்யார். அவரவர் செய்யும் பாவபுண்ணியங்களே அவரவர்களுக்குச் சகாயமா யுள்ளன. அதனை யானினிச் சொல்வதனாலும் அறிவாய். எல்லாருடைய யோசனையாலும் விருத்திரனைக்கொன்ற இந்திரன் ஒளியிழந்தவ னாயினன். எல்லாத் தேவரும் அவனை விட்டோடினார். ஓடினவர் சும்மாவிராமல் இவன் பிரம்மஹத்தி செய்தவனென்றும், அந்தோ! அக்னிசாக்ஷியாய்ச் சபதஞ் செய்து கொடுத்துச் சிநேகிதனாக்கிக் கொண்டவனைக் கொல்ல எந்தப் பாவிதான் இச்சிப்பானென்றும், இவனால் என்ன பாவஞ் செய்யப்பட்டதப்பாவென்றும், முனிவர் களும் இந்த இந்திரனுடைய வஞ்சனையால் வேதப் பிரமாணத்தை மறந்து பௌத்தர்களைப்போல் வஞ்சவொழுக்கத்தைக் கொண்ட னரே என்றும், எவர்தான் முன்னே ஒன்றைச் சொல்லிப் பின்னே ஒன்றைச் செய்வரென்றும், இந்த விஷ்ணு இந்திரன் முனிவர் முதலியோரைப் போல் எந்த அறிவிலிகளுஞ் செய்யாரென்றும் தேவகந்தர்வ கோஷ்டிகளிலும் மற்றெந்த விடத்திலும் இகழ்ந்து கூறத் தலைப்பட்டனர். (18–30)

ஓ அரசனே! தன் கீர்த்தியைக் கெடுக்கும் வார்த்தைகளைப் பிறர் சொல்லக்கேட்டு உலகில் தன் கீர்த்தியைக் கெடுத்துக் கொள்ளு கிறவன் இந்திரனாயினும் அவன் பிழைப்பை நிந்திக்க வேண்டும்! ஏனெனில், இவனது அபகீர்த்தியை எதிர்பார்த்துக் கொண் டிருக்கும் சத்துருவானவன் அது வெளிப்படுமாயின் மலர்ந்த முகமுள்ளவனாவ னல்லவா? இதற்குச் சிலசான்று கூறு கின்றேன். பாவஞ்செய்த ராஜரிஷியான இந்திரத்துய்மன் கீர்த்தி நாசத்தால் சுவர்க்கத்திலிருந்து விழுந்து விட்டான். இவனைப் போலவே சிறிய குற்றத்தால் யயாதிமகாராஜனும் சுவர்க்கத்தினின் றும் வீழ்ந்து பதினெட்டு யுகம் கர்க்கடகமாயிருந்தான். பிருகு முனிவர் சாபத்தால் விஷ்ணுவானவர் மீன்முதலிய இழிந்த யோனி வாய்ப்பட்டுத் துக்கித்தனர்; வாமனாவதாரத்தில் ஏற்பதிகழ்ச்சி யென்பதை மறந்து யாசகத்துக்குப் போயினர்; ராமாவதாரத் தில் சீதையை யிழந்து பெருந்துக்கத்தை யடைந்தார் என்று உலகில் இன்றளவுஞ் சொல்லப்பட்டு வருகின்றதல்லவா? மேன்மை யுடையார் பாவஞ்செய்வாராயின் இவ்விதமான நிந்தனையைத்தான் உலகிலடைவர்.

ஓ அரசனே! இந்திரன் தேஜசிழந்தானென்றே னன்றோ? பின்ன ரவன் அறிவிழந்து சபையைவிட்டுத் தனியிடத்தேசென்று பெருமூச்செறிந்து சங்கடப்பட்டுக் கொண்டிருக்கும்போது, அஃ தறிந்த இந்திராணி அவனிடஞ்சென்று வினவுகின்றாள்: ஓ பிரபுவே! ஏன் பயப்படுகின்றீர்! உமக்குப் பெரிய சத்துருவா யிருந்த விருத்திரனைக் கொன்று விட்டீரே இப்பொழுது ஏன்

சிந்தனைப்படுகின்றீர் ? உலகத்துக்கெல்லாம் ஈசனாயிருக்கின்ற நீர் ஒன்றும் தெரியாத மூடனைப்போல் ஏனழுகின்றீர் ? இனி நீர் கவலைப்படத்தக்க சத்துருவில்லை என்று கூறியபொழுது, இந்திரன் கூறுகின்றான் : (31–40)

ஓ இந்திராணி ! நீ சொல்லியபடி பலவானான சத்துருவும் எனக்கில்லை ; சுகமுமில்லை. யானிப்போது பிரம்மஹத்தியினால் பயந்திருக்கிறேன். எனக்கு இந்திரசபையும் கற்பகச் சோலையும் அமிர்தமும் கந்தருவருடைய கீதமும் அப்ஸரஸ்திரீகளுடைய நடனமும் நீயும் காமதேனுவும் இன்பமாகவும் சுகமாகவுங் காணப்படவில்லை. என் செய்வேன் ? எங்கே போவேன் ? என்னாத்மாவுக்குச் சிறிதுஞ் சுகமில்லை என்று தனது நாயகிக்குக் கூறி, அவ்விடத்தை விட்டு மானஸ தடாகத்துக்குப்போய் அதிலுள்ள ஒரு தாமரை நாளத்தில் பிரவேசித்து அந்நீரில் வாழும் தண்ணீர்ப் பாம்புபோல் யாதொரு சகாயமுமின்றிச் சிந்தாக்ராந்தனாய் இந்திரிய சக்தியற்றவனாய் பிரம்மஹத்தியினால் பீடிக்கப்பட்டு ஒருவருக்குந் தெரியாமல் வாழ்ந்திருந்தனன். (41–48)

அப்போது பலவுத்பாதங்கள் உண்டாயின. சித்தர் சாரணர் ரிஷிகள் முதலாயினாரெல்லாம் பயமடைந்தவர்களாய் ஏங்கி என்ன தீங்கு வருமோ வென்றேளித்துத் திரிந்தனர். உலகில் மழையின்றி க்ஷேமம்போய் க்ஷாம முண்டாயிற்று. நதிகளிற் பிரவாகப் பெருக்கமும் தடாகங்களில் நீர் நிறைவும் ஒழிந்து போயின.

சிலகாலங் கழிந்தபின்னர் தேவரும் முனிவருங்கூடி தேவராஜனில்லாதிருப்பது தகுதியன்றென் றெண்ணி நகுஷ மகாராஜனை இந்திரனாகச் செய்தனர். தர்மிஷ்டனான நகுஷனும் இந்திரனாய் வாழுநாளில் ராஜஸகுண மேலீட்டால் ஸ்திரீ சுகத்திலாசையுடையவனாய் மன்மத பாணத்தால் வருந்தி அப்ஸர ஸ்திரீகளோடு உத்யான வனத்தில் கிரீடித்துக் கொண்டிருக்குஞ்சமயத்தில் இந்திராணியினது சௌந்தரியாதி விசேஷங்களைக் கேள்வியுற்றுக் காமமீதூர்ந்து தவத்திற் சிறந்த மகரிஷிகளைக் கூவிக் கூறுகின்றான் : இந்திராணியானவள் ஏன் என்னிடம் வராமலிருக்கின்றாள் ? நான் உங்களாலும் தேவசமூகங்களாலும் இந்திரனாகத் தாபிக்கப்பட்டிருக்கிறேனல்லவா ? ஆதலால் அவள் என்னைச் சேரும்படிச் செய்வீர்களாக. ஓ தேவர்காள் ! முனிகணங்காள் ! நானெப்பொழுது தேவேந்திரனாய் விட்டேனோ, அப்பொழுதே எல்லா உலகுக்கும் ஈஶ்வரன் நானே ; எனதிஷ்டத்தை யறிந்து நீங்கள் முயற்சி செய்வீர்களாயின் சசி என்னிடம் சீக்கிரம் வந்து சேருவாளென்றனன். அவ்வார்த்தையைக் கேட்டுத் தேவர்களும் முனிவர்களும் சிந்தாகுலமடைந்து இந்திராணியிடஞ் சென்று அவளை நமஸ்கரித்து, ஓ இந்திராணியே ! துர்நடத்தையுள்ள நகுஷன் உன்னை விரும்பி அழைத்து வரும்படி எங்கள் பேரில் கோபங்கொண்டேவியிருக்கின்றான். என் செய்வோம் ! நாங்களே இந்திரப்பட்டங் கட்டிவிட்டோமாகையால் இனி அவனாணையைக் கடப்பதற்கும் முடியுமோ? நாங்களென் செய்வோமென்று சொல்ல, இந்திராணி வருத்தமுற்ற

வளாய் ஆசிரியராகிய பிரகஸ்பதியினிடஞ்சென்று நமஸ்கரித்து, ஓ தேவகுருவே ! நகுஷனுலெனக்கு வரத்தக்கதாயிருக்கிற துன்பத்தை யொழித்துக் காப்பாற்றும் ; உம்மைச் சரணடைந்தேனென வருந்தினள். அப்பொழுது அவர் கூறுகின்ருர் : ஓ சசியே ! நீ அஞ்சற்க. அநாதியாய் நடந்து வரப்பட்ட தருமத்துக்கு மாருக நானுன்னை அவன் வசப்படுத்துவேனு ? அன்றியும் சத்துருவுக் கஞ்சிச் சரணமடைந்தவரை அச்சத்துரு கையிற்ருனே ஒருவன் கொடுப்பானுயின் அவன் நரனில் அதமனன்ருே ? அவன் பிரமப் பிரளய பரியந்தம் நரகத்தில் வீழ்ந்து கிடப்பவனன்ருே ? ஆகலின் என்னைச் சரணமடைந்த உன்னை நகுஷன் வசமாய் ஒருகாலத்தும் ஒப்புவிக்கமாட்டேன். நீ அஞ்சேல், அஞ்சேலென்றனர். (49–62)

ஓம் ஈஷத்ஸ்மிதானனுயை நம:

## 8. நகுஷன் விபரீத புத்தி

வியாசர் கூறுகின்ருர் :—ஓ ஜனமேஜயனே ! நகுஷன், சசியானவள் பிரகஸ்பதியைச் சரணமடைந்தமையைக் கேள்வியுற்று, இவனல்லவோ நமது காமாசாந்திக்குத் தடைசெய்தனனென்று அடங்காக் கோபங்கொண்டு சில தேவர்களையழைத்து, ஓ தேவர்காள் ! மூடனுன பிரகஸ்பதி சசியை என் வசமாக்காது தன் வசம் வைத்திருப்பதைக் கேள்வியுற்றேன். நானவனைக் கொல்வேனென்று அகங்காரமாய்ச் சொல்ல, தேவரும் முனிவரும் அவனை நோக்கிச் சில சமாதான வார்த்தைகள் சொல்லத் தொடங்கினர் : ஓ எங்களரசனே ! கோபத்தை யடக்கும். இப்பொழுது தோன்றிய பாபபுத்தியை விட்டுவிடும். பரஸ்திரீ சங்கமம் தருமசாஸ்திரங்களால் நிந்திக்கப்பட்டுள்ளது. நீரிப்போது விரும்பிய இந்திராணி உமக்குப் பரஸ்திரீயேயாவாள். அவளுடைய பர்த்தா இப்போதிருக்கின்றனன். அவனிருக்கும்போது அவள் அவனது பத்னியன்ருே ? பதிவிரதா தருமத்தை யொருபோதும் அவள் விடாதவள். அத்தருமமொன்ருனே சகல மகிமையும் பெற்றிருக்கின்ருள். அம்மகிமைக்குக் கர்த்தாவாயிருக்கின்ற பர்த்தா ஜீவித்திருக்கும்போது வேறெருரு கர்த்தாவை எப்படி பர்த்தாவாகக் கொள்வாள் ? நீரும் மூன்று லோகத்துக்குப் பிரபுவாயிருக்க தர்மா தர்மங்களையெண்ணித் தர்மங்களைக் காத்தல்வேண்டும். தருமங்களைக் காக்காது நீரே அதருமத்தைச் செய்வீராயின் உலகிலுள்ளார் நசித்துப் போவார். ஓ பிரபுவே ! இதிற் சந்தேகமில்லை. எந்தப் பிரகாரத்தினுலும் நன்னடக்கையைக் காப்பாற்றுவதே பிரபுவாயிருப்பவனுக்குத் தக்க செய்தியாகும். இப்போது உமக்குண்டாயிருக்குங் காமத்தைத் தணிவித்துக்கொள்ள வேண்டுமாயின் இந்திராணிக்குச் சமானமான அநேக தேவதாசிகளிருக்கின்றனர். சிருங்கார ரசத்துக்கு ஸ்திரீ புமான்களிருவரிடத்து முண்டாகுமாசையென்கிற ரதியே காரணமென்றும் ஒருவரையொருவர் பலாத்காரஞ் செய்யின்

அது ரசபங்கமென்றும் பெரியோர் கூறுகின்றனர். உங்களிரு வருக்கும் சமமான பிரீதியிருக்குமாயின் சுகமுண்டாகும். ஆதலால் நீர் சிரேஷ்டமான பதவியைப் பெற்றிருக்க இந்திராணியை விரும்புவதை விட்டு நல்ல அபிப்பிராயத்தைக் கொள்ளும். ஒருவருக்கு விருத்தியும் நாசமுமுண்டாவது புண்ணிய விருத்தி யினாலும் பாப விருத்தியினாலுமேயாம். இம்முறையையுணர்ந்து பர ஸ்திரீயை விரும்புவதாகிய பாபவிருத்தியைவிட்டு விரும்பாததாகிய புண்ணிய விருத்தியைக் கைக்கொள்ளுமென்று கூறினர். (1–11)

கூறவே, நகுஷன் கூறுகின்றான் :—ஓ தேவர்காள் ! உம்மா லிருக்கின்றவனாகச் சொல்லப்பட்ட இந்திரன் கௌதமரது பத்தினியை அனுபவித்த காலத்தும், சந்திரன் பிரகஸ்பதி பத்னியை யனுபவித்த காலத்தும் நீவிரெங்கு போயிருந்தீர்கள் ? உலகில் யாவரும் பிறருக்குப் போதிப்பதில் சமர்த்தரேயன்றி போதித்தவாறு தாமும் நின்று நடக்கப்பெறுதல் துர்லபமே. இப்போது இந்திராணி யானவள் இந்திரப் பட்டத்துக்குரிய வென்னையடைவதனால் யாதொரு குற்றமுமுண்டாக மாட்டாது. இது விஷயத்தில் நீங்களும் முயல்வீராயின் விசேஷமான நன்மையடைவீர். நானும் மிக்க சந்தோஷமடைவேன். உங்களிடத்தில் எனக்குள்ள உரிமையினால் இவ்வளவுஞ் சொன்னேன். இனி நீங்கள் என்னிடம் இருப்பதை விட்டு இந்திராணியிடஞ்சென்று அவளை நல்ல வார்த்தையினா லாவது அதற்கிணங்காளாயின் பலாத்காரத்தினாலாவது சீக்கிரத் தில் என்னிடம் அழைத்து வரவேண்டியது என்றனன். அவன் சொல்லியதைத் தேவரும் முனிவருங்கேட்டு, அவனெண்ணத்தைத் தடுப்பதற்கு முடியாமல் உடன்பட்டவர்போன்று மிகவும் பயந்து, ஓ தேவராஜனே ! உமதிஷ்டப்படியே நாங்கள் சென்று அவளைச் சாமோபாயத்தினாலேயே வசப்படுத்தி உம்மிடம் கொண்டுவந்து விடுகிறோமென்று சொல்லி அவனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, குருவின்பால் சென்று அவரை வணங்கிக் கூறுகின்றனர் : ஓ ஆசிரியரே ! இந்திராணி உம்மைச் சரண்புகுந்திருப்பதாகக் கேள்வி யுற்றோம். நகுஷனை இந்திரனாக ஆக்கியபடியால் இந்திராணி அவனிடஞ் சேரத்தக்கவளன்றோ ? அவனைப் பர்த்தாவாய்க் கொள்வதனாற் குற்றமென்னை என்றனர். (12–21)

பிரகஸ்பதி கூறுவாராயினர் :—ஓ தேவர்களே ! நீங்கள் சொல்வது சரியே. ஆயினும் அவள், இந்திரலோகத்திலுள்ள அரசச் செல்வங்களை இந்திரலோகத்தில் வசிக்கப் பெற்றவரெல்லாம் அனுபவிக்கலாம் ; அதனால் குற்றம் நிகழ்வதற்குக் காரணமில்லை ; அவைகளைப்போல் என்னையும் அனுபவிக்கலாமோ? அனுபவித்தால் எனக்குப் பதிவிரதா தோஷமும், அவனுக்குப் பாவமும் உண்டாகு மன்றோ என்னுங் கருத்தையுட்கொண்டு தனது பதிவிரதா தருமத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று என்னைச் சரண்புகுந்தா ளாகையால் அவளை நான் அவனிடம் அனுப்பமாட்டேன் என்றனர். அதுகேட்ட தேவர்கள் கூறுகின்றார் : அங்ஙனமாயின் நகுஷன் கோபமும் துர்நடத்தையும் உடையவனா யிருத்தலால்

இந்திராணி அவனிடம் போகாவிடில் நமக்கு ஏதேனுந் தீங்கு செய்வான். அவன் அது செய்யாவண்ணம் வேறு ஏதேனும் ஒரு உபாயஞ் செய்யவேண்டும். என்னையெனின், சசியானவள் அவனிடம் போய்ச் சரசவார்த்தைகளால் அவனைச் சரிப்படுத்திக் கொண்டு, ஓ நகுஷனே! நான் இந்திரன் உயிரோடிருப்பதும் இல்லாததுந் தெரிந்துகொண்டு வந்துவிட்டேனுல் நாமிருவரும் சுகமாய் வாழலாமென்று சொல்லி இத்தனை நாளைக்குள் வருகிறேனென்று ஒரு காலவரையையுஞ் செய்து கொள்வாளானுல் அவன் அறிவில்லாதவனுதலின் அவ்வஞ்சமொழியை உண்மையென நம்பிச் சிறிது சாந்தமுற்றிருப்பன். பின்னர் நாம் இந்திரனைத் தேடத் தொடங்குவோம் என்று சொல்லவே தேவகுருவும் அவ்வாலோசனையை ஒருவாறு அங்கீகரித்து அவளையனுப்ப, அவளும் தேவர்களும் நகுஷனிடம் போயினர். (22–25)

அவன் இந்திராணியைக் கண்டமாத்திரத்தில் சந்தோஷமடைந்தவனுய் அவளைப் பார்த்துக் கூறுகின்றுன்: ஓ அழகிய கண்ணுடையாளே! நானிப்போதுதா னிந்திரனுயினேன். என்னிடம் நீ கூடுவதற்கு யாது சந்தேகமிருக்கின்றது? யான் சகல தேவர்களாலும் சகல லோகத்தாராலும் பூஜ்யமடைந்தவனுயிருக்கின்றேன் என்றனன். இந்திராணி கற்புடையாளாகையால் நாணமும் நடுக்கமுங்கொண்டு கூறுகின்றுள்: ஓ தேவராஜனே! நீ கூறியதெல்லாம் உண்மையே. நானுன்னைச் சந்தோஷிப்பிக்கச் செய்வதற்கும் யாதொரு தடையுமில்லை. ஆயினும் உன்னிடத்தில் நானொருவரம் இச்சிக்கின்றேன். என்னையெனின், இந்திரன் இருக்கிறுனென்பதும் இல்லை என்பதும் தெரியவில்லை. சந்தேகமாயிருக்கின்றது. ஆகையால் நானே சென்று உண்மையறிந்து உன்னிடம் வருகின்றேன்; இது நிச்சயம். அதுவரையில் நீ பொறுத்திருக்க வேண்டும். இதுவே யான் வேண்டும் வரமென்றனள். நகுஷனும் மகிழ்ந்து உண்மையென்று நம்பி விடை கொடுத்தனன். இந்திராணி நமக்கு வந்த ஆபத்து நீங்கிப்போய் விட்டதென்று அவனைவிட்டுத் தேவர்களிடம் வந்து, ஓ தேவர்களே! இனி எந்நாயகன் வரும் வகையைத் தேடவேண்டும்; என்ன சொல்லுகின்றீர்களென்று கேட்க, அவர்கள் அவள் சொல்லிய நல்ல வார்த்தையைக் கேட்டு யாவரும் ஆலோசித்து விஷ்ணுமூர்த்தியினிடஞ் சென்று அவரைப் பணிந்து போற்றிக் கூறுகின்றுர்: ஓ ஜகன்னுதரே! இந்திரன் பிரம்மஹத்தியினுல் பீடிக்கப்பட்டு ஒருவருக்குந் தெரியாமற் போய்விட்டான். அவனை பிரம்மஹத்தியினின்று நீக்கிக் காக்கவேண்டியது உமது கடமை. நீர்தான் கதி. அவனில்லாமையினுல் நாங்களடைந்திருக்கும் ஆபத்தை ஒழிக்கத்தக்கவர் நீரன்றி வேறு யாவரிருக்கின்றனர் என்று புகழ்ந்தனர். (26–38)

திருமால் கூறுகின்றுர்:—ஓ தேவர்களே! எவளை நினைத்தால் சர்வபாபங்களும் நசித்துப்போமோ அவளை யுத்தேசித்து நீங்கள் ஓர் அஶ்வமேதஞ் செய்வீராயின் அதனுல் அத்தேவி திருப்தி

யடைந்தவளாய் பிரம்மஹத்தியை நிவிர்த்தி செய்வாள். அத்தேவியினுல் இந்தப்பாவம் நசித்துப்போகுமென்று சொல்லவும் வேண்டுமா ? இந்திராணியையும் அத்தேவி பூஜையே செய்து வரும்படிச் சொல்லுங்கள். அப்பூஜையே சகல சுகத்தையும் கொடுக்கும். அந்த நகுஷனை மோகத்துக் குள்ளாக்கித் தீமையை விளைவித்து அதனுலவன் நாசமடையும் வண்ணம் பரதேவதை செய்வாள். இந்திரனும் அந்த அச்வமேதத்தால் பரிசுத்தனுய்ச் சீக்கிரத்தில் சுவர்க்கத்துக்கு வந்து சேருவானென்றனர். தேவர்கள் அவர் வார்த்தைகளைக் கேட்டு இது நல்ல உபாயந்தானென்று சிந்தித்து இச்செய்தியை இந்திரனுக் கறிவிப்போமென்று அவனுக்குந் தெரிவித்து அச்வமேதத்தை முடித்துப் பின்னர் பிரகஸ்பதி பகவானை யழைத்துக் கொண்டுபோய் இந்திரனைப் பற்றியிருந்த பிரம்மஹத்தியை விருக்ஷங்களிலோர் பங்கும், நதிகளிலோர் பங்கும், பர்வதங்களிலோர் பங்கும், பூமியிலோர் பங்கும், ஸ்திரீகளிலோர் பங்குமாகப் பாகித்துப் போக்கி யவனைப் பரிசுத்தமாக்கினர். இந்திரன் பிரம்மஹத்தியினுலடைந்திருந்த பயமற்றுத் தன்னுலகம் போய்ச்சேரும் காலம் வராமையால் முன்போல் தாமரை நாளத்துக்குள் பிரவேசித்து ஒருவருக்குந் தெரியாமல் காலத்தை எதிர் பார்த்திருந்தனன். தேவர்களும் இந்திரலோகம் போய்ச் சேர்ந்தனர். இந்திராணியானவள் நமது நாயகன் பிரம்மஹத்தி நீங்கப் பெற்றும் நம்மோடிருப்பதற் கில்லாமல் முன்போலாயினனே, கணவனைவிட்டு நாமெவ்வா றிருப்பதென்று அவனையே எண்ணி விரக தாபமடைந்து ஆற்ருது தேவகுருவின்பாற் சென்று, எனது நாயகன் முன்போல் என் கண்ணுக்குத் தோன்ருமலிருக்கின்றனனே, நானெப்போது காணப்பெறுவேன் ? அதற்கோருபாயங் கூற வேண்டுமென்று பிரார்த்திக்க அவர், ஓ புலோமன் புத்திரியே ! இப்போது செய்துவரும் தேவி பூஜையை விடாமற்செய்து வருவையேயாயின் அவள் உனது நாயகனைக் காணும்படிச் செய்வாள். நகுஷனையும் மோகவலைக் குள்ளாக்கி இந்திரபதத்திலிருந்து கீழே விழும்படித் தள்ளுவாள். இதுதான் உபாயம் என்று சொல்ல, அவள் தேவி மந்திரத்தைப் பிரயோக விதியுடன் அவரிடத்தில் உபதேசம் பெற்றுத் திரிலோக நாயகியாகிய பகவதியை விசேஷமான பலிகளாலும் புஷ்பார்ச்சனைகளாலும் சிறப்பா யாராதித்து வந்தனள். (39–56)

சிலநாளைக்குள் தேவி, போகவிருப்ப முடையவளாகிய இந்திராணி போகானுபவத்துக்குரிய சுகந்த புஷ்பாதிகளெல்லாம் வெறுத்துத் தவசிகளைப்போல் தவக்கோலம் புனைந்து நம்மால் புருஷனைக் காணவேண்டுமென்று நம்மை விசேஷமாகப் பூஜித்து வருகின்ருளல்லவா வென்று இரக்கங்கொண்டு, திரிலோக சுந்தரியாய் ஹம்ஸவாகனரூடையாய், கோடி சூரியப் பிரகாசமுடையவளாய் கோடி சந்திர சீதளமுடையவளாய், நான்கு வேதங்களையே பாசம் அங்குசம் வரதம் அபயங்களாகத் திருக்கரத்தில் தரித்த

வளாய், பாதம் வரையில் அசைந்தாடுகின்ற முத்தாரந் தரித்த வளாய், பிரசன்னமாயிருக்கின்ற திருமுகமண்டல முடையவளாய், திரிலோசனியாய் அன்பர்க்கருளும் திருவுஞ் செல்வமுமாய்ப் பிரகாசிக்கின்ற ஸ்தன கும்பத்வயங்களுடையவளாய், பிரமாதி கீடாந்தங்கட்கு மாதாவாய், கருணைம்ருதசாகரியாய், அநந்தகோடி பிரம்மாண்ட நாயகியாய், பரமேஶ்வரியாய், சர்வேஶ்வரியாய், சர்வஜ்ஞையாய், கூடஸ்தையாய், அக்ஷரரூபிணியாய் விளங்கும் தனது திருக்கோலத்தை அவள் காணும்வண்ணம் காக்ஷிகொடுத்து இந்திராணியை நோக்கி மேகம்போலும் கம்பீர த்வனியுடன் திரு வாய்மலர்கின்றாள் :

ஓ இந்திர வல்லபே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள். உன்னால் நான் நன்றாகப் பூஜிக்கப்பட்டு மிக்க சந்தோஷத்தை யடைந்துள்ளேன். நீ வேண்டியவாறே நான் தருகின்றேன். உனக்கு வரங்கொடுக்கவே வந்தேன். வேறு காரியார்த்தமாக வந்தவளல்ல. என்னுடைய தரிசனம் அநேககோடி ஜன்மாந்தர புண்ணிய மிகுதியால் கிடைக்கத் தக்கது என்றருள, இந்திராணி அன்புடன் கேட்டு, ஓ தாயே! எனக்குப் பர்த்தாவினுடைய தரி சனம் அதிக துர்லபமாயிருக்கின்றது. நான் அவரைக் காணவும், எனக்கு நகுஷனால் உண்டாயிருக்கும் பயம் நாசமாகவும், என்னி டத்தில் நான் வாழவும் அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்றும் பிரார்த்தித்தனள். அம்பிகை இந்திராணியைப் பார்த்து அனுக் கிரகிக்கின்றாள்: ஓ சசியே! நீ என்னருகிலிருக்கும் தூதியாகிய இவளோடு மானச தடாகத்துக்குப் போவையாயின் அங்கு விஶ்வ காமை என்கிற நாமத்துடன் எனது விக்ரஹம் ஒன்றிருக்கின்றது. அந்தவிடத்திலிருக்கின்றான் இந்திரன். நீ அவனை யங்குக் காண்பா யாக. இன்னும் சிறிது நாளையில் நகுஷனை மோகாந்தகாரத்துக் குள்ளாக்கிக் கீழே தள்ளப்போகிறேன் ஆகையால் நீ அவனால் யாதொரு துன்பத்தையுமடையாமல் உனது பதத்தில் சுகமாய் வாழலாமென்றருளினள். தேவியினது தூதியானவள் இந்திரா ணியை யழைத்துக்கொண்டுபோய் தேவி சொல்லியவிடத்தில் இந்தி ரனைக் காணும்படிச் செய்தனள். அவளும் அதுகாறும் காணுதற் கரிதாயிருந்த கணவனை மிக வெளிமையாகக் கண்டு கண்களி கூர்ந்து ஆனந்தமுற்றனள். (63–72)

ஓம் லகாரரூபாயை நம:

## 9. நகுஷன் வீழ்ச்சி

ஓ ஜனமேஜயனே! பகவதியினுடைய பூஜாபலத்தால் அவளது கிருபை வாய்க்கப்பெற்ற இந்திராணியானவள் தனது நாயகனைக் காணப்பெற்று அதிசயமுற்றிருக்குந் தருணத்தில் இந்திரனும் அவ ளைப் பார்த்து அதிசயமும் ஆச்சரியமுமடைந்து, ஓ விசாலாக்ஷி! நானிங்கிருப்பது ஒருவருக்கும் தெரியாதே! நாளொருவராலும்

அறியக்கூடாதவனு யிருக்கின்றேனே ? நீ இங்கு எப்படி வரப் பெற்ருய் ? நானிங்கிருப்பது உனக்கு எப்படித் தெரியவந்த தென்றனன். அவ்வாறு வினவியபொழுது இந்திராணி கூறுவாள்: ஓ பிரபுவே! யான் தேவியினுடைய அனுக்கிரகத்தால் நீரிங்கிருப்பது தெரிந்து வந்தடைந்தேன். நாம் ஒருவரையொருவர் காணப் பெற்றது அவளுடைய அனுக்கிரகமன்றியாமோ ? அச்செய்தி அங்ஙனமிருக்க, இப்போது தேவர்களாலும் ரிஷிகளாலும் செய்யப் பட்ட முயற்சியினுல் நகுஷனென்னும் அரசன் உம்முடைய பட்டத்தை யுடையவனுக வந்திருக்கின்ருன். அப்பாவி என்னைத் தினந்தோறும் தேவர்களுக்கெல்லாம் பிரபுவா யிருக்கின்ற என்னைப் பதியாகக் கொள்வாயென்று வருத்துகின்ருன்; நானென்ன செய்வே னென்றனள். இந்திராணி இவ்வாறு துக்கித்தபோது இந்திரன் கூறுகிருன் : ஓ கற்புடையாளே ! நானே காலத்தை யெதிர்பார்த் திருக்கின்றேன். அப்படியே நீயும் உன் மனதைத் திடப்படுத்திக் கொண்டு காலத்தைப் பார்த்திருப்பா யென்ருன். அவள் அதனைக் கேட்டுப் பெருமூச்செறிந்து நடுங்கித் துக்கத்தோடும் இந்திரனைப் பார்த்துக் கூறுகிருள் : ஓ என் நாயகனே ! என் மனேதிடம் அவனை என்னசெய்யும் ? அவனே செல்வத்தாலும் சரீரத்தாலும் மத முடையவனுயும், நாம் இந்திரனுய் வந்துவிட்டோ மென்கிற கர்வ முடையவனுயு மிருக்கின்ருன். அவனென்னைச் சுவாதீனஞ் செய்துகொள்ளுதல் ஓரருமையானதோ ? எனக்குக் காவலாக இருக்கத் தக்கவர் ஒருவருமில்லையே. தேவர் முதலிய யாவரும் அவனுக்குப் பயந்தவர்களாகவே யிருப்பதுமன்றி என்னையும் நோக்கி நீ அவனைச் சந்தோஷப்படுத்துவா யென்கின்றனர். அவர்களை எப்படி நான் துணையாக நம்புவேன் ? அவர்களைவிட்டு நமது ஆசிரியரை யடைய்லாமென்ருலோ அவருக்கு என்ன படைத் துணை யிருக்கின்றது ? அவரெப்படி என்னைக் காக்கவல்லவராவர் ? அன்றியும் தேவர்களென்னை அப்பாவி வசமாக்கத் துணிந்து இவரை வந்து ஆலோசனை கேட்டாலும் இவரும் அவர்களிடத்தில் தாக்ஷிண்ய முடையவராயிருத்தலால் அவர்கள் ஆலோசனையை மறுக்க மாட்டார். ஆகலான் நான் மனக்கவலைக் குள்ளாயிருக் கின்றேனே யன்றி வேறில்லை. நானே ஸ்திரீ. ஸ்திரீயா யிருக்கின்ற நான் காவலற்றிருத்தல் தருமமன்று. அன்றியும் நான் சுவர்க்கத்தி லிருப்பதென்ருல் அது அவனுடைய சுவாதீனத்திலுள்ள தல்லவா ? ஆகவே அவ்விடத்திலுள்ள நான் மாத்திரம் எப்படி சுவாதீன மாகாமற் போவேன் ? இப்போது நமக்குக் காலம் வித்யாசமா யிருப்பதால் இன்னும் என்ன தீங்குவருமோ ! அனதையா யிருக் கின்ற நானென் செய்வேன் ? விபசாரியாயிருப்பேனுயின் எனக்கு யாதொரு கவலையுமில்லை. நான் உன்னையே எதிர்பார்க்கின்றவளா யிருக்கின்றேன். எனது கற்பை காத்துக்கொள்ளும் விஷயத்தில் மஹா துக்கிதையாயிருக்கின்ற வென்னைக் காக்கத்தக்கவர் அவ் விடத்திலில்லை யென்றனள்.

பரிபவப்படுகின்ற இந்திராணியை இந்திரன் கண்டு மிகவும்

வியந்தவனாய், ஓ சசிபோன்ற முகமுடைய சசியே ! உனக்கோ ருபாயஞ் சொல்லுகிறேன், கேட்பாயாக என்று கூறுகின்றான் : நமக்குக் கெட்டகாலமா யிருக்கின்ற தென்றனையே, அஃது உண்மைதான். ஆயினும் காலங்கெட்டதாக வருவது அனுபவிக்கும் போக சுகங்களுக்கேயன்றி அவரவர் நடக்கும் ஒழுக்க நடத்தைக் கன்று. இந்த உண்மையால் "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறை காக்குங் காப்பே தலை" எனக் கூறும் தரும உரையை நாடிச் சிறையைக் கூடாது உனது நிறையை நாடு. அந் நிறையே உனக்குச் சிறை. அந்நிறையில்லா தொழியின் வேறெந் தச் சிறைகளால் காக்கப்பட்டாலும் நீ கற்புடையவளாக மாட்டாய். இவ்வுண்மை யுணராத மனிதர் நம்முடைய ஸ்திரீயை நாம் காவ லோடு வைத்திருக்கின்றோம், அவள் கற்புக்கு மோசம் வராதென் றிறுமாந்து ஆண் சிங்கம் போன்றிருப்பாராயின் நிறையிழந்து காமத்திலுழலும் ஸ்திரீ இவனது சிங்கநடையை நடைபெறு விப்பாளோ ? ஆகலான் நீ காவலில்லை யென்று கவலைகொள்ளற்க. காவலாளிகள் உன்னிடத்திலேயே யிருக்கின்றனர். அவர்களை வேண்டிக்கொள். உனக்கு நான் என்ன விசேஷஞ் சொல்ல வேண்டும் ? ஆனால் முயற்சியை யனுசரித்து ஒரு வஞ்சனையான உபாயமொன்று சொல்லுகிறேன். என்னையெனின், அந்தத் துஷ்டன் உன்னைப் பலாத்காரஞ் செய்ய வருவானாயின் நீ அதற்கிணங்கினவள்போற் காட்டி அவனை ஏகாந்த ஸ்தானத்தில் சமீபமாய் வைத்துக் கொண்டு, ஓ அரசனே ! நீர் சப்த ரிஷிகள் தாங்கச் சிவிகையின்மேல் என்னிடம் வருவீரானால் நான் மிக்க சந்தோஷமுடையவளாய் உம்முடைய சுவாதீனமாகவே யிருப் பேன் ; முதலில் என்னிடம் இப்படி நீர் வரவேண்டு மென்று நான் விரதங் கொண்டிருக்கின்றேனென்று கூறுவையே யாயின் அவன் காமாந்தகனாய் அறிவிலியா யிருத்தலால் நீ சொல்லியதை யெண்ணிப் பாராது ரிஷிகளை அவனைத் தாங்கிவரும் வேலைக்கு ஆளாக்கி விடுவான் ; அவர்களும் அதற் குடன்படுவார்கள். அவர்க ளுடன்படும் பக்ஷத்தில் அவர்களால் அவனுக்குச் சாபம்வருவது நிச்சயம். ஜகதம்பிகையும் உனக்குச் சொல்லி யிருக்கிறபடி துணையாயிருந்து முடிப்பாள். அவளை நினைக்கின்றவர்களுக்கு எப் போதுஞ் சங்கட முண்டாக மாட்டாது. ஒருசமயம் உண்டானா லும் அது நன்மையாக மாறிவிடும். ஆகலான் ஆசிரியர் உனக்குப தேசித்தபடி மணித்வீபத்தில் வீற்றிருக்கின்றவளாகிய அம்பிகை யைச் சர்வப்பிரயத்தனத்துடன் நீ மறவாமற் பூஜித்து வருவாயாக என்றனன். (13–21)

சசியும் கணவன் சொல்லே தெய்வ வாக்காகையால் அவ் வாக்கை உண்மையாகக்கொண்டு நகுஷனிருக்குமிடத்தைப் போய்ச் சேர்ந்தாள். அவள் வருகையைக் கண்ட நகுஷன் மிகவும் மகிழ்ந் தவனா யவளைப்பார்த்துக் கூறுகிறான் : ஓ சத்திய வாக்குடைய வளே ! சுகமாய் வந்து சேர்ந்தனையா ? உனக்கடிமையாயிருக்கின்ற என்னிடத்தில், நான் சீக்கிரமாய் வருவேன்; நீ அதுவரையில் உயிர்

வாழ்ந்திருப்பா என்று சொல்லிப்போன அவ்வுண்மைச் சொல்லா லுயிர்வாழ்ந்திருக்கின்றேன். இனி உயிர்வாழப்பெற்றதனு லடைய வேண்டிய சந்தோஷத்தையுமடைந்த வனுயினேன். இனி என் னிடத்தில் நாணமுற்றிருப்பதை விடுவாய். நானுன்னிடத்தில் ஆவலுள்ளவனு யிருத்தலால் என்னை நீ சேரவேண்டிய தவசியம். உனக்கிப்போ தாகவேண்டிய விஷயமேதேனுமிருக்குமாயின், அத னைச் சொல்லுவாய். இப்போதே செய்து முடிக்கிறேனென்றனன். அவன் வேண்டவே இந்திராணியானவள் இது நல்லகால மென் றெண்ணிக் கூறுகின்ருள்: ஓ தேவராஜனே! எனக்கு வேண்டிய காரியங்க ளனேகமாய் முடித்துவிட்டாய். அஃது என்னையெனின், நானிந்திரனை யிழந்திருந்த காலத்தில் பூலோகத்திலிருந்து இவ்வுலகத்துக்கு வந்துவிட்டாய். வந்து நீ தேவர்கள் முனிவர் கள் முதலாயினுரைச் சுவாதீனஞ் செய்து கொண்டாய். அவர் களைக் கொண்டு பட்டாபிஷேகமுஞ் செய்துகொண்டு உன்னுணை யுஞ் செலுத்தி வருகின்ருய். அவர்களும் உன்னுணைக் கஞ்சுகின் றனர். என்னையும் அவர்களைக் கொண்டே உன்னிடம் வருவித் துக் கொண்டாய். இன்னமு மெனக்குச் செய்யவேண்டியதென்ன விருக்கின்றது? இவ்வளவு வன்மையாளனை நான் கண்டதில்லை. ஆனுல் எனக்கோர் குறையுளது. அஃது என்னையெனின், நீ இப் போது என்னைநோக்கி உனக்கேதேனும் ஆகவேண்டிய விஷய மிருக்குமாயின் அதனைச்சொல்வாய் என்றும் இப்போதே செய்து முடிக்கிறேன் என்றும் சொன்னபடியினுல் சொல்லத் துணி கின்றேன். அதனை முடித்துவிடுவாய். அதன் பிறகு நானெரு சந்தேகமும் யாதொரு தடையுமின்றி யுன்னோடு வாழ்வதிற் றடையேயில்லை யென்றனள். அவள் வாய்மொழியைக் கேட்ட நகுஷன், நீ ஒன்றுஞ் சந்தேகிக்கவேண்டாம்; உனது கோரிக்கை யைச்சொல், அது கிடைக்கத் தகுந்ததாயிருந்தாலும், கிடைக்கத் தகாததா யிருந்தாலும் அதனை நான் முடித்துக் கொடுக்கிறே னென்று பின்விளைவை யறியாமற் கூறினுன். இந்திராணி அதனை வற்புறுத்தவேண்டிக் கூறுகின்ருள்: ஓ தேவராசனே! உன்னிடத் தில் சிறிது சந்தேகமிருக்கின்றது. நீ முடிப்பாயென்று எனக்கு நம்பிக்கையில்லை. நானெப்படிச் சொல்லுவேன்? உலகில் சத்திய வாக்குடையரரிது. ஆகையால் நீ சொல்லிய துண்மையா யிருக் கும் பக்ஷத்தில் நான் சொல்லுகிறபடி முடிக்கிறேனென்று சபதஞ் செய்து கொடுப்பையாயின் நீ வுண்மைக்குக் கட்டுப்பட்டவனென்று தெளிந்து பின்னர் என் காரியத்தைச் சொல்லுகிறேன். அதனைச் செய்து முடிப்பையேயாயின் யான் உனக்குச் சுவாதீனையென்பதுஞ் சத்தியமே. இதுவே நான் செய்யும் சத்தியமென்ருள். (22–37)

நகுஷன், ஓ என் மனேரமையே! நீ சொல்வதை நான் செய் யாமற் போவேனுயின் நான் செய்த யக்ஜம் தானம் முதலிய சகல புண்ணியங்களும் இழந்தவனுவேனென்று சத்தியஞ் செய்தனன். இந்திராணி மகிழ்ந்து கூறுகிருள்: அரசே! இந்திரனுக்கு யானை குதிரை தேர் முதலியன வாகனமா யிருக்கின்றன. விஷ்ணுமூர்த்

திக்குக் கருடன் வாகனமா யிருக்கின்றான். ருத்திரருக்கு விருஷபம் வாகனமாகவிருக்கின்றது. கணபதி சுப்பிரமணியர்களுக்கு மூஷிகமும் மயூரமும் வாகனமாக விருக்கின்றன. யமனுக்கும் பெரிய கடாவிருக்கின்றது. மற்றத் தேவர்களுக்கும் விமானம் முதலியவைக ளிருக்கின்றன. உன்னை நான் இவர்களெல்லாரினுஞ் சிறந்தவனாக வெண்ணுகிறேன். ஆகலான் உனக்கு யாவருக்கும் அமையாத வாகனத்தால் ஒரு சிறப்புண்டாகவேண்டுமென்று நினைக்கின்றேன். அஃதென்னையெனின், நீ தவத்திற்சிறந்த சப்தரிஷிகளுந் தாங்கச் சிவிகையின்மேல் வரவேண்டும். அவர்கள் ஒருவருக்குந் தாங்கியதில்லை. அவர்கள் உன்னைத் தாங்கப்பெற்றால் உன்னைக் காட்டிலும் உத்தமன் எவனிருக்கின்றான்? அப்படிப்பட்ட உன்னைப் பதியாகக்கொள்வதைப் பார்க்கிலும் எனக்குச் சிறப்பு யாதிருக்கின்றதென்றனள். நகுஷன் அதைக்கேட்டு அப்பொழுதே தேவியினுடைய மாயையின் வசப்பட்டு மமதையடைந்து சிறிதும் ஞானமில்லாதவனாய் இந்திராணியை மிகவும் புகழ்ந்து கூறுகிறான்: ஓ இந்திராணியே! உன்னுடைய அறிவின்விசாலத்துக்கு நானென்ன சொல்லுவேன்! என்னுடைய தவம் முதலியவற்றை மதிக்கத் தக்கவர் இவ்வுலகின்கண் ணெவரிருக்கின்றனர்? நீ இப்போது உண்மையைச் சொன்னாய். என் பெருமைக்குத்தக்க நல்ல வாகனத்தையும் ஏற்பாடு செய்தாய். உன்னிஷ்டப்படியே செய்கிறேன். முனிவர்கள் எனது வாகனத்தைத் தாங்க வருவாராயின் உலகம் எனது தவத்தையும் புகழையும் செல்வப்பெருக்கையும் என்ன விதமாகத்தான் சொல்லிப் புகழாது? இவ்வளவு புகழை எனக்குத் தேடினையல்லவா? உன் சொற்படிச் செய்து உன்னிடம் வருகின்றேனென்று அவளைப்போக விட்டனன். பின்னர் சப்தரிஷிகளை வரவழைத்துக் கூறுகின்றான்: (38–43)

ஓ மஹரிஷிகாள்! நான் எதைச் செய்யவேண்டுமென் றெண்ணினாலும் அதனைச் செய்யவல்ல சர்வசக்தியை யுடையவனாயிருக்கின்றேன். என்னைக் குறித்து என்ன காரியஞ் செய்யவேண்டுமென்று நான் சொன்னாலும் நீவிர் அதனை யாலோசனையில்லாமற் செய்யவேண்டும். இப்போது இந்திர ஸ்தானத்தை நான் அடைந்தேனே யன்றி இந்திராணியை யடையப் பெற்றேனில்லை. அவளைப் பெறுதொழிவதற்கா நானிவ்வுலகுக்கு வந்ததும் இந்திரனானதும்? அதனை நீங்களே யோசித்துப் பார்மின்; அவள் என்னோடு கூடிவாழ்வதற்கு உங்களை நான் வாகனமாகக்கொண்டு வரவேண்டுமென்று என்னை வேண்டிக் கேட்டுக்கொண் டிருக்கின்றாள். இது செய்யக் கூடாததா யிருந்தாலும் அவளுடைய வேண்டுகோளுக்காக என்பால் தயவுவைத்து எவ்விதத்திலாவது நீங்கள் செய்யவேண்டும். நான் மன்மதனால் மிகவுந் துன்பப்படுகின்றேன். என்னுடைய துன்பத்தைப் போக்குவது உங்களுக்குப் புண்ணியமும் கருணையுமாமன்றோ? உங்களை யடைக்கலம் புகுந்தேன்; இந்தக் காரியத்தை நடத்தவேண்டுமென்று வேண்டினன். வருங்காலத்தை யுணரவல்ல அகஸ்தியர் முதலிய அரும்பெருந் தவசிகள் அற்பமதி

யாளன் கூறியதை இந்திராணிபால்வைத்த கருணையினால் அங்கீகரித்தனர். நகுஷன் மிகவுஞ் சந்தோஷமடைந்தவனாய்க் கவலையற்றுச் சிவிகையைக் கொண்டுவரச்செய்து அம்மகரிஷிகள் தாங்கி நடப்ப, இந்த நகுஷன் சிவிகையை நடத்தத் தொடங்கினன். இவன் வினையும் தீவிரமாயிவனை நடத்தத் தொடங்க, அவ்வினையை அம்பிகையினுடைய மாயாசக்தியும் நடத்தத் தலைப்பட்டது. இவ்வாறு மாயையும் வினையும் மேன்மேல் முடுகி முயலவே அறிவாகிய பெருஞ்செல்வமிழந்த நகுஷன் காமம் வெகுளி மயக்கமென்ற மூன்றனுட்பட்டு காமத்தை இந்திராணியினிடத்தும், மயக்கத்தைத் தன்னறி வினிடத்தும், வெகுளியைத் தானூர்ந்துவரும் சிவிகையைப் பொறுத்து வருபவருள் ஒருவராகிய அகஸ்திய முனிவரிடத்துமாக்கினான். ஓ அரசனே! நகுஷனுக்குப் பின் விளைந்த விளைவைக் கேட்பாயாக: (44–50)

சிவிகையின்மீதேறி அதனைச் செலுத்தத் தொடங்கிய நகுஷன், வினைவசத்தான் அத்தருணம் இன்மையுளின்மையாகிய அறிவின்மையை நிலைக்களமாய்ப் பெற்றிருந்தன னாதலின் "ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலு" மாகிய பெருந்தவத்தினர் தனது சிவிகையைப் பொறுத்துவரும் அருமையையுணராது, ஆகாரமாயுண்ட வாதாபி என்னும் அசுரனைத் தமது வயிற்றினிடத்திலேயே ஜீர்ணமாய்ப் போகக் கரத்தால் வயிற்றைத் தடவினவரும் சமுத்திர நீரை ஒருளுந்தளவாக்கி ஆசமனமாகவுண்டவரும், விந்தகிரியை யடக்கினவருமாகிய அகஸ்திய முனிவரது திருமுடிமேல் தனது கால் தாங்கும்படித் தொங்கவிட்டுக் கையிலுள்ள பிரம்பால் அவரைத் தாக்கி ஸர்ப்ப ஸர்ப்பென்றான். உடனே அகஸ்திய முனிவர் நீயா என்னை ஸர்ப்பவென்று சொல்லத்தக்கவனென்று கோபங்கொண்டு எந்தக் காட்டில் சங்கடங்கள் பெரிதாக நேரிடுமோ அக்காட்டில் அநேகமாயிரவருஷம் பெருந்தேகமுள்ள ஸர்ப்பமாய்க் கிடப்பாயாக வென்று சபித்தனர். அதனைக்கேட்ட நகுஷன் நடுநடுங்கி, ஐயரே! அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள்க வென்று வேண்டலும் குருமுனிவர், சற்றிரங்கினவராய், ஓ நகுஷனே! நீ மலைப்பாம்பாகவானாலும் உன்னுடைய பராக்கிரமத்தினால் சஞ்சரித்து மீண்டும் சுவர்க்கத்தை வந்தடையப் போகின்றாய். யுதிஷ்டிரனென்று பிரசித்திபெற்ற தருமனுன்னைப் பார்த்துக் கேட்கும் கேள்விகளுக்கு நீ விடைகூறும்போது இச்சாபம் நீங்குமென்றனுக்கிரகித்தனர். நகுஷன் அவ்வனுக்கிரகத்தைப் பெற்றுச் சுவர்க்கத்தினின்றும் வீழ்ந்தான். இச்செய்தியையறிந்த பிரகஸ்பதி வேகமாய் மானஸசரசுக்குப் போய் இந்திரனைக் கண்டு நடந்த செய்திகளைச் சொல்ல, இந்திரன் கேட்டுச் சந்தோஷமடைந்து அவ்விடத்திலேயே யிருந்தனன். தேவர்களும் முனிவர்களும் நகுஷன் பூலோகத்தில் வீழ்ந்ததைப் பார்த்து யாவரும் இந்திரனிருக்குமிடத்தைச் சேர்ந்து அவனைச் சமாதானப்படுத்தி மரியாதையுடன் சுவர்க்கத்துக் கழைத்துக்கொண்டு போய் சிம்மாசனத்திலிருத்தி மங்களகரமான அபிஷேகம் செய்தார்கள். பின்னர்

இந்திரன் அந்தப்புரம் போய் மிக்க பிரேமையோடு கூடின சசியோடு நந்தனவனத்தில் கிரீடித்துக் கொண்டிருந்தனன்.

ஓ அரசனே! விருத்திராசுரனால் துன்பமடைந்த இந்திரன் தேவியனுக்கிரகத்தாலன்றோ தன்னிடம்போய்ச் சுகமாய் வாழப் பெற்றனன்? எவன் எந்தக் கர்மத்தைச் செய்கின்றானோ அவன் அந்தக் கர்மபலத்தை யவசியமா யனுபவிப்பான். செய்யப்பட்ட சுபாசுபகர்மம் அனுபவித்தாலல்லது தீருதலில்லையென்றார் வியாச முனிவர். (51–67)

ஓம் லலிதாயை நம:

## 10. கர்மத்தின் போக்கு

சூதர் கூறுகின்றார் :—ஜனமேஜயன் வியாசமுனிவரை வணங்கி வினவுகிறான் : ஓ சுவாமிகாள்! ஆச்சரியமான நகுஷனுடைய செய்தியும் இந்திரனுடைய செய்தியும் இந்த இந்திரனுக்கும் இந்திராணிக்கும் தேவிதுணையாய் நின்று அவர்களபீஷ்டத்தை நிறைவேற்றிய மகிமையும் தேவரீரால் சொல்லக்கேட்டேன். ஓ ஐயா! நல்ல புண்ணிய விசேஷத்தாலடையத் தக்கதாயுள்ள சுவர்க்கலோகத்துக் கதிபதியாயிருக்கும் இந்திரன் சுகத்தையே மேன்மேலும் அடையவேண்டிய வனாயிருப்ப அவன் அவ்விடத்திலனுபவிக்கக் கூடாத ஸ்தானப் பிரஷ்டம் முதலிய பல பெருந் துன்பங்களை யனுபவித்தானென்பதைக் கேட்கும் விஷயத்தில் எனக்குச் சந்தேகமுண்டாயிருக்கின்றது. என்னையெனின், நூறு யாகஞ்செய்து முடித்தபின்னர் இந்திரபதங் கிடைத்தது. அது கிடைத்தபின்னர் தேவர்களுக்குப் பிரபுவாயிருக்கும் தன்மையும் கிடைத்தது. இவ்விரண்டும் கிடைக்கப் பெற்றவன் எப்படி ஸ்தானப் பிரஷ்டத்தை யடைந்தான்? இவற்றிற்குக் காரணஞ் சொல்லும். தேவரீர் சகல புராணங்களையும் சொன்னவராயும் எல்லாமறிந்தவராயு மிருக்கின்ற மகானாயிருக்கிறபடியால் உம்மிடத்தில் பக்தியுள்ள சிஷ்யனாகியவெனக்குச் சொல்லக்கூடாத சங்கதி யாதுளது? ஆதலால் எனக்குண்டாகிய சந்தேகங்களை நீக்கியருளுவீரென்று ஜனமேஜயன் கேட்க, வியாசர் அரசனைப் பார்த்து அவன் வினாக்களுக்கு முறையாய் விடை சொல்லத் தொடங்கினார் : (1–6)

ஓ அரசசிரேஷ்டனே! ஆச்சரியமான கர்மத்தின் காரணத்தைக் கேட்பாயாக. தத்துவமறிந்தவர்களால் கர்மங்களின் முறைமையைச் ஸஞ்சிதம் பிராரப்தம் வர்த்தமானமென மூன்று விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றுள் ஸஞ்சிதமானது, அநேக ஜன்மங்களினாலுண்டானதென்றும், அஃது ராஜஸம் தாமஸம் ஸாத்விகமென மூன்று வகையென்றும், பிறவிகடோறுந் தொடர்ந்து வரத்தக்கதென்றும், சுபமாயும் அசுபமாயும் பாபமாயும் புண்ணியமாயுமுள்ளதென்றும், பிராரப்தமானது, இப்போது கூறிவந்தபடி

சுபாசுபமாயும் பாவ புண்ணியமாயுமுள்ள அவை யப்படி யப்படியே அவசியமா யொவ்வொரு ஜன்மத்திலும் அனுபவிக்கவருவனவென்றும், அவ்வா றனுபவித்தாலுங் கல்பகோடிகாலங்களானாலும் சேஷப் படாமல் கழிகிறதில்லையென்றும், வர்த்தமானமானது, சுபகிருத்தியமாவது அசுபகிருத்தியமாவது ஒருவன் எதைச் செய்கிறானோ அந்தக் கிருத்தியமென்றுஞ் சொல்லப்படுகின்றது. ஓ அரசனே! தேகாரம்ப சமயத்தில் முன்கூறிய சஞ்சித கர்மத்திலிருந்து சிறிது கர்மமெடுத்து கால நியமப்படி இவனிடத்திலனுபவிக்க விருக்கிற தெதுவோ அதைத் தான் பிராரப்தமென்றும் அவ்வனுபவத்தினாலேயே ஸஞ்சிதம் சிறிது சிறிதாய் க்ஷயத்தையடைந்து வருமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகலான் பிராரப்தகர்மம் ஜன்மங்கடோறு மனுபவிக்கத்தக்கது; அதிற் சம்சயமில்லை. இந்தவுண்மையால் தேவராயும் மனுஷ்யராயும் அசுரராயும் யக்ஷர்களாயும் கந்தர்வர்களாயும் கின்னரர்களாயும் பிறந்தாலும் ஜன்மாந்தரங்களில் நன்மைதீமையாய்ச் செய்யப்பட்ட கர்மங்கள் அவசியமாய் அனுபவிக்கத்தக்கன வென்பது நிச்சயந்தான். தேகோற்பத்திக்குக் காரணம் கன்மமே. அக்கன்மம் நாசமானால் பிராணிகளுக்கு ஜன்மமும் நாசமாய்விடும். இதிற் சம்சயமில்லை. தேவ தானவ யக்ஷ கின்னரர்களாயிருந்தாலும் அவரெல்லாம் கர்மத்துக்குச் சுவாதீனப்பட்டிருக்கின்றார்களல்லவா? அப்படியில்லாவிட்டால் தேகசம்பந்த மெப்படியுண்டாகும்? தேகோற்பத்தி சுகதுக்கானுபவங்களுக்குக் காரணமாயிருக்கிறது. ஆதலால் அநேக ஜன்மங்களிலுண்டாகிய சஞ்சிதகன்மங்களின் மத்தியில் ஏதோ ஒரு கர்மத்துக்குக் காலபக்குவமுண்டாகின்றது. அப்பக்குவத்தினால் அக்கர்மத்திற்கு வேகமுண்டாகின்றது. அது பாபமாயிருந்தால் அந்தப் பிராரப்த கர்மவசத்தினால் பாவத்தையும் புண்ணியமா யிருந்தாலதனையுஞ் செய்கிறான். இவ்வனுபவ விசேஷத்தைத் தேவர் முதலிய யாவரிடத்தும் காணலாம். (7–20)

இதற்கொன்று கூறுகின்றேன்: தருமனிடத்திலிருந்து பிறந்த நர நாராயண ரிருவரும் கிருஷ்ணார்ச்சுனர்களாகப் பிறந்தார்களல்லவா? இச்செய்தி யிங்ஙனமிருக்க, உலகில் எவன் தேவாம்சமுள்ளவனோ அவன் அதிக சம்பத்துடையவனாயும், அன்னதானம் முதலிய தானங்களைச் செய்பவனாயும், ரிஷி அம்ச முடையவன் காவியங்களைச் செய்யத்தக்கவனாயும், ருத்ராம்சமுடையவன் ருத்திரனைப் பூஜிப்பவனாயும், விஷ்ணு அம்சமுடையவன் அரசனாயும் இவ்வண்ணமாகவே இந்திரன் அக்னி யமன் குபேரன் முதலியோருடைய அம்சங்களுடையோர் பிரபுத்துவத்தையும் பிரபாவத்தையும் கோபத்தையும் பராக்கிரமத்தையு முடையவரா யிருப்பர். சரீரங்களும் அப்படியே நிருமிக்கப்படுகின்றன வென்பது நிச்சயம். இந்த முறைமையை யனுசரித்தே உலகத்தில் பலவான்களாயும் வித்யாவான்களாயும் தானஞ்செய்பவர்களாயும் எவரெவரிருக்கின்றனரோ, அவர்களெல்லாம் தேவாம்சங்களாகச் சொல்லப்படுகின்றனர். ஓ அரசனே! ஸஞ்சிதகர்மம் பிராரப்தத்துக்கு வரும்

விநோதத்தைச் சில கூறுகின்றேன், கேட்பாயாக: பாண்டவர்கள் தேவாம்சங்களாகச் சொல்லப்படுகிறார்கள். கிருஷ்ணரும் நரநாராயணும்சமென்கின்றனர். பாண்டவர்கள் காட்டிற்பிறந்தார்கள். பிறகு நகரமடைந்தார்கள். பின் புஜபலத்தினால் ராஜசூய யாகத்தையுஞ் செய்தார்கள். அதன்பின்னர் துக்ககரமாகிய வனவாசத்தையடைந்தார்கள். அந்தத்துக்ககரமாகிய வனவாசத்தில் அருச்சுனனால் அருமையான தவஞ்செய்யப்பட்டது. பின்னர் தேவர்களால் வரதானம் பெற்றனர். அருச்சுனன் பின்னரடைந்த அநேக துக்க சமயங்களில் அவனால் செய்யப்பட்ட தவங்களெவ்விடத்திற்குப் போயின? பூர்வத்தில் பதரிகாச்ரமத்தில் நரனாயிருந்தபோது செய்த உத்தமமான தவம் அருச்சுனனாய்வந்தபோது எங்கேபோயிற்று? அந்தத் தவம் ஏன் பலன்கொடுக்கவில்லை? ஆகலான் பிராணிகளுடைய தேகசம்பந்தத்தில் கர்மத்தின் கதி மறைந்திருக்கிறது. அதனை எவ்விதத்தினாலும் தேவர்களறிய வேண்டினாலும் அறிய முடியாது. ஏனைய மனிதர்களுக்குச் சொல்லவேண்டுமா? (21–34)

கிருஷ்ணரும் அதிகசங்கடமான காராக்கிருகத்தில் பிறந்தார். வசுதேவரால் நந்தகோபரிடம் விடப்பட்டார். பதினொரு வருஷம் அங்குவசித்தார். மறுபடி மதுராபட்டணத்துக்கு வந்து கம்சனையடித்தார். தாய்தந்தையர்களைக் காராக்கிருகத்திலிருந்து விடுவித்தார். மதுரையில் உக்கிரசேனனை அரசனாகச்செய்தார். மறுபடியும் மிலேச்சராஜனுடையபயத்தால் துவாரகைக்கு வந்தார். பெரிதான கர்மங்களையும் கர்மவசத்தால் செய்தார். இதுபோல் துவாரகையில் அநேக காரியங்களைச்செய்து பிரபாசமென்னுமிடத்தில் தேகத்தியாகஞ்செய்து குடும்பங்களோடு கூடச் சுவர்க்கம் போயினார். கிருஷ்ணருடைய புத்திரர்களும் பௌத்திரர்களும் சிநேகர்களும் சகோதரர்களும் குலஸ்திரீகளும் சகல யாதவர்களும் பிராமண சாபத்தால் பிரபாசத்தில் நாசமடைந்தார்கள். ஓ அரசனே! பின் கிருஷ்ணர் வேடன் பாணத்தால் நாசமடைந்தார். இவையெல்லாஞ் சொல்வதற்கு வேண்டியவினாக்களை நீ கேட்டபடியினால் ஒருவராலும் அறியக்கூடாத கர்மங்களின் கதிகளிவ்வாறு மென்று ஒருவாறெடுத்துக் கூறினேன். நீ இவ்வுண்மையை யுணர்ந்து பிராணிகளுடைய சரீரம் சுகதுக்கங்களுக்குப் பாத்திரமாயிருக்கிறதென்றும் அதனால் பிராணிகள் இடைவெளியில்லாமல் சுகத்தையாவது துக்கத்தையாவது செய்து அவற்றையனுபவிக்கின்றார்களென்றும் ஒருபிராணியாவது தன் சுவாதீனமாயிருப்பது கிடையாதென்றும் யாவரும் எப்போதும் தெய்வாதீனமாயிருந்து ஜனன மரணங்களையும் துக்கசுகங்களையு மனுபவிக்கிறார்களென்றும் அறிந்து சாந்தியடைவாயாக என்றனர். (35–41)

ஓம் லக்ஷ்மீவாணீ நிஸேவிதாயை நம:

# 11. யுகதர்மம்

ஜனமேயன் வினவுகின்ருன் :—ஓ பிராமண சிரேஷ்டராகிய வியாசமுனிவரே ! கிருஷ்ணர்ச்சுனர்களுடைய ஜன்மங்கள் பூபாரங் கழிக்கவந்தனவென்று சொல்லப்பட்டிருக்கின்றன. இப்போது நீர் கூறிவந்தனவற்றை யாராயுங்கால் என் மனதில் சந்தேக முண்டாயிருக்கிறது. அஃது என்னையெனின், துவாபரயுக முடிவில் பூமிதேவியானவள் அதிபாரத்திஞல் பீடிக்கப்பட்டுச் சக்தி யீனையாய்த் துக்கிதையாய்க் கோரூபந்தரித்துப் பிரம்மாவைச் சரணடைய அவர் பூபாரத்தை யொழிப்பதற்கும் சாதுக்களைக் காப்பதற்கும் விஷ்ணுமூர்த்தியைப் பிரார்த்தித்தனரென்றும், அவர் பரதகண்டத்தில் வசுதேவரது கிருகத்தில் சகலதேவரோடும் அவ தரித்துப் பூலோகத்திலுள்ள பாவ புத்தியோடு கூடியிருந்த அரசர்களையெல்லாங் கொன்றனரென்றுங் கூறியிருக்கின்றதே. பூமியில் எவ்வளவு பாரம் நீங்கிற்று ? பீஷ்மர் துரோணர் விராடன் துருபதன் பாகிலீயன் சோமதத்தன் கர்ணன் முதலிய இவர்க ளெல்லாம் கொல்லப்பட்டார்களே இவர்களேன் கொல்லப்பட்டார் கள் ? எல்லாத் தனங்களும் எவர்களால் அபகரிக்கப்பட்டன ? கிருஷ்ணமூர்த்தியினுடைய ஸ்திரீகளெல்லாம் எவரால் அபகரிக்கப் பட்டார்கள் ? அப்படிப்பட்ட துஷ்டர்கள்-இடையர்கள் மிலேச்சர்கள் வேடர்கள்—கிருஷ்ணரால் ஏன் கொல்லப்படவில்லை ? இவர்க ளெல்லாம் கொல்லப்படாமலிருக்க அறிவிற்சிறந்த கிருஷ்ணரால் பூபாரம் நீங்கிற்றென்ப தென்னை ? ஓ மஹானுபாவரே ! இவ் வகைத்தான சந்தேகம் என்னுள்ளத்தை விட்டுப்போகவில்லை. கலியில் சகலரும் பாவத்தைச் செய்கின்றவர்களாயிருக்கின்றனரே ; பூபாரம் போயிற்றென்பதெங்கே யென்றனன். (1–10)

வியாசமுனிவர் கூறுகின்ருர் :—ஓ அரசனே ! எந்தயுகத்தில் எந்தவிதமான ஜன்மங்கள் காலானுகுணமாக வுண்டாகின்றனவோ, அவை வேருகமாட்டா. அவைகட்கு யுகதருமந்தான் காரணம். எவர்கள் தருமத்தில் மாத்திரம் ஆஸக்தியுள்ளவர்களோ அவர்கள் கிருதயுகத்திலும், தருமத்திலும் அர்த்தத்திலும் ஆஸக்தியுள்ளவர் திரேதாயுகத்திலும், தர்மார்த்த காமமென்னும் மூன்றிலும் ஆஸக்தி யுள்ளவர்கள் துவாபர யுகத்திலும், அர்த்தத்திலும் காமத்திலும் ஆஸக்தியுள்ளவர்கள் இக்கலியிலும் பிறப்பார்கள். ஓ அரசனே ! யுகதருமம் வித்தியாசத்தை யடையவே அடையாது என்ருர். தர்மத்தையும் அதர்மத்தையுஞ் செய்வது காலந்தானென்று முனிவர் கூறவே, அரசன் வினவுகின்ருன் : ஓ மஹானுபாவரே ! கிருதயுகம் முதலிய மூன்று யுகங்களில் தானமுதலிய நற்கருமங் களைத் தவருதியற்றி வந்த புண்ணியசீலர்கள் இப்போது எங்கே யிருக்கின்றனர் ? இக்கலியுகத்தில் துர்நடத்தை யுள்ளவர்களாயும் ஒழுக்கம் முதலிய நற்கருமங்களை விட்டிருப்பதால் நாணமற்றவர் களாயும் பாபிஷ்டர்களாயும் தெய்வத்தை நிந்திக்கிறவர்களாயு

மிருக்கின்றவரெல்லாம் கிருதயுகம் வரும்போது எங்கே போகின்றனர்? இவையெல்லாம் எனக்கு விரிவாய்ச் சொல்ல வேண்டும். இத்தரும நிச்சயங்களை அவசியங்கேட்க ஆவலுடையவனுயிருக்கின்றேனென்றனன். (11–18)

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! கிருதயுகம் முதலிய மூன்றினும் அந்தந்த யுகங்கட்குத் தக்கபடி நான்கு வருணத்தவரும் தங்களுக்கு விதித்த கருமங்களிலேயே ஆவலுள்ளவர்களாயிருப்பர். அத்தருமங்களாவன: சத்தியம், தானம், தயை, தன் மனையாளோடு மாத்திரம் புணர்தல், எவரிடத்தும் துரோகஞ் செய்யாதிருத்தல், சகல ஜந்துக்களிடத்தும் சமபுத்தியாயிருத்தல் முதலிய சாதாரண மான தர்மங்களாம். இவற்றைக் கிருத யுகத்தில் நான்கு வருணத்தவர்களே யன்றி, ஏனைய வருணத்தவரும் விடாதவராயும் அவைகளிற் சத்திய புத்தியுடையவராயும் நடக்கப்பெற்றவராகலான் அவரெல்லாம் சுவர்க்கத்தை யடைந்தார்கள். ஏனைய திரேதாயுகம் துவாபரயுகங்களிலும் அப்படியேதான். இக்கலியுகத்தில் முன் கூறிய தருமங்கட்கு மாருயொழுகும் மனிதர்களெல்லாம் இக்கலியந்தத்திலேயே நரகத்தையடைந்து கிருதம் முதலிய மூன்றுயுக பரியந்தம் அதிலனுபவிக்கவேண்டிய துன்பங்களையெல்லா மனுபவித்து மீண்டும் அவரெல்லாம் கலியுகம் வரும்போது முன்போல் பூவுலகிற் பிறந்துழல்வர். கிருதயுக வாரம்பத்தில் சுவர்க்கத்திலிருக்கும் சத்புருஷரெல்லாம் பூவுலகில் வந்து பிறக்கிறார்கள். ஓ அரசனே! இவ்வண்ணம் தருமங்களிற் றவருத புண்ணியரெல்லாம் கலியுகந் தோன்றி முடியுமளவும் சுவர்க்கத்தில் வசிப்பரென்றும், தருமத்தை யெண்ணுத பாவிகளெல்லாம் கிருதயுக முதலிய மூன்று யுகங்களும் தோன்றி யொடுங்குமளவும் நரகத்தில் வசிப்பவரென்று மறிவாய். இப்பொழுது சொல்லிவந்த முறை மாறி வருவதுமுண்டு. என்னையெனின், கலிபுருஷாளாகிய சிற்சில துஷ்டர்கள் தெய்வ கதியாய்த் துவாபர திரேதா கிருதயுகங்களிற் பிறக்கிறார்கள். கிருத யுகத்தில் பிறக்கும் துஷ்டர்கள் நற்கருமத்துக்குரிய அந்த யுகத்திலும் செய்யுங் கர்மப்பிரபாவத்தினுல் கலியிற்பிறந்து மிகுந்த துக்கத்தை யடைந்து அக்கலியுக தர்மத்தினுல் மறுபடியும் பாப கர்மங்களையே செய்கிறார்கள். அது யுகதருமத்தின் செயல். ஆதலால் காலத்தின் சமாசாரம் எப்போதும் மாருதென்றனர். (19–30)

ஜனமேஜயன் வினவுகிறான் : ஓ மகானுபாவரே! எனக்கு இந்த தருமங்கள் மூன்றுஞ் சொல்லவேண்டாம்; எந்தெந்த யுகத்தில் எந்தெந்தத் தருமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன? அவைகளை யப்படி யப்படியே கேட்க விரும்புகிறேனென்று பிரார்த்தித்தனன். வியாசமுனிவர் கூறுகின்றார் : ஓ அரசனே! சாதுக்கள் மனதும் யுகதர்மத்தினுல் மாறுபடுகிறதுண்டு. அதனை முன்னர் திருஷ்டாந்த முகமாய்க் கூறுகின்றேன், கேட்பாயாக. உன் தந்தை யயாதிகுலத்திற் பிறந்த க்ஷத்திரியன்; பூலோகத்துக்கெல்லாம் அரசனுயிருக்கிறவன். அத்தன்மையன் தவஞ்செய்கிற பிராமணனுடைய கழுத்தில் இறந்த பாம்பை எப்படிச் சேர்த்தான்? அவ

னெண்ணம் அப்படிப்பட்ட பாவத்தில் பிரவிர்த்தித்த தல்லவோ? அது யுகதர்மமென் றறிந்துகொள்ளவேண்டியது. யுக தருமத்தால் புத்தி மாறுதலுண்டு. ஆகலான் அறிவுடையவன் மிகவும் பிரயத்தனத்தால் முன் கூறிவந்த தருமங்களைச் செய்யவேண்டியது. இனி நீ கேட்டவண்ணம் யுகதருமங்களைக் கூறுகின்றேன். கிருத யுகத்தில் அந்தணர்கள் வேதமறிந்தவர்களாயும் பராசக்தியைப் பூஜிக்கின்றவர்களாயும் தேவி தரிசனத்தில் ஆவலுள்ளவர்களாயும் காயத்திரீ பிரணவத்திலும் காயத்திரீ தியானத்திலும் காயத்திரீ ஜபத்திலும் மாயாதேவியின் பீஜாக்ஷர ஜபத்திலும் ஆஸக்தியுடையவர்களாயிருப்பர். க்ஷத்திரியர் கிராமங்கடோறும் ஆலயம் கட்டி வைப்பதில் பெருமுயற்சி யுள்ளவர்களாயும் யாவரையும் தங்கள் தங்கள் தருமத்திலாஸக்தியும், சத்தியம், சுசி, தயையென்னும் இவைகளோடு கூடியுமிருக்கச் செய்பவர்களாயும் அயுக்தகர்மத்திலாவலில்லாதவர்களாயும் தத்வக்ஞானத்தில் சமர்த்தர்களாயு மிருப்பார்கள். வைசியர்கள் பயிர் வர்த்தகம் கோரக்ஷணம் இவைகளிலாஸக்தியுள்ளவர்களாயிருப்பார்கள். சூத்திரர்கள் மூன்று வருணத்தாரையும் பாதுகாப்பதிலும் ஈஸ்வர சேவையிலும் சமர்த்தர்களாயிருப்பார்கள். இவ்வாறு வருணநெறியிற் பிறழாத நான்கு வருணத்தவரே யன்றி ஏனையோரும் தேவி பூஜையில் ஆஸக்தி சிறிதுங் குன்றுதவர்களாயிருப்பர். திரேதாயுகத்தில் கிருதயுகத்திலுள்ள அந்தத் தருமங்களுக்குச் சிறிது குறைவு வரும். துவாபரயுகத்தில் அந்தத் தருமங்கட்கு விசேஷமாய்க் குறைவு வரும். கலியுகத்தில் முந்திய மூன்று யுகங்களில் ராக்ஷஸர்கள் எவர்களோ அவர்களே அந்தணர்களாய்ப் பிறந்து பாஷண்டர்களிடத்தில் பிரீதியுள்ளவர்களாயும் பிரஜைகளை வஞ்சிப்பதில் மிகுந்த புத்தியுள்ளவர்களாயும் அசத்திய வசனமே கூறுகின்றவர்களாயும் வேத தருமங்களைவிட்டு டம்பாசாரமுள்ளவர்களாயும் சாமர்த்திய முடையவர்களில் மிக்க சமர்த்தர்களாயும் மேலான தருமஞ் சிறிதுமின்றியே நமக்கு மேலானவ ரெவரிருக்கின்றனரென்றெண்ணுதலாகிய அகங்காரமாத்திர முடையவர்களாயும் வேதாத்தியயன மென்பதே இல்லாதவர்களாயும் சூத்திரர்களுக்கு வேலைசெய்கின்றவர்களாயும் நானாவித அதர்மங்களை நடத்துகின்றவர்களாயும் வேதங்களை நிந்திக்கின்றவர்களாயும் மகா குரூரர்களாயும், தருமப்பிரஷ்டர்களாயும் தருமத்துக்கு விரோதமாய்ப் பேசுகின்றவர்களாயும் சூத்திர தருமத்தைக் கைக்கொண்டவர்களாயும் தானம் வாங்குவதில் ஆசையுள்ளவர்களாயு மிருப்பார்கள். இவர்களைப் போலவே ஏனைய வருணத்தவரும் தந்தந் தருமங்களைக் கைவிட்டு வாழ்கின்றவர்களாய் அசத்தியமே சொல்லுகின்றவர்களாயிருப்பார்கள். ஸ்திரீகள் விருத்தியடைந்தவர்களாய் தங்கள் மனம் போனபடி சஞ்சரிக்கின்றவர்களாய் காமம் லோபம் மோகமுடையவர்களாய் மகாபலிஷ்டர்களாய் பொய்யே சொல்லுகின்றவர்களாய் ஜீவிப்பதற்கான தொழில்களிற் கஷ்டமான தொழிலுடையவர்களாய்த் தனது நாயகனை வஞ்சிக்கிறவர்களாய்க் கற்புநிலைபேசுவதில்

பண்டிதர்களாய்ப் பாவங்கட்கெல்லாங் காரணர்களா யிருப்பர். ஓ அரசனே! எப்போது கலியுகம் விருத்தியடைகிறதோ, அப்போதே சகல தரும மூலங்களும் நாசமடைகின்றன. சர்வதரும சூனிய மான கலியில் ஒருவரிடத்திலும் ஒரு தருமமும் காணமுடியாது. மகாதருமம் தெரிந்தவர்களும் அதர்மமே செய்வார்கள். அது கலியின் சுபாவம். அதை எவராலும் விடமுடியாது. விடாது இயற்கையாய்ப் பாவஞ்செய்கிறவர்களுக்குச் சாதாரணமான உபா யத்தினல் பிராயச்சித்த முண்டாத லரிது. ஓ அரசனே! பிராயச் சித்தமானது சுத்தியடைதற்கு. அச்சுத்தி புசிக்கும் ஆகாரமுத லியவற்ருல் சிறிது சிறிதா யுண்டாதல்வேண்டும். ஆகாரசுத்தி யுண்டானல் சித்தசுத்தி யுண்டாகிறது. அஃது வுண்டானல் தருமப் பிரவிர்த்தி யுண்டாகிறது. ஓ அரசனே! சித்தசுத்திக்கு முதலொ ழுக்கமாயுள்ள ஆகாரவசுத்தி கலியில் மிகுந்திருக்கும். அதனல் தருமப் பிரவிர்த்தியில் துஷ்ட செய்கையின் சம்பந்த தோஷ முண்டா யதர்மப் பிரவிர்த்தியுண்டாம். அப்பிரவிர்த்தியினல் நிச்சயமாய் வருணசங்ரகம் முதலிய சகல சங்ரகமு முண்டாகு மென்றனர். (31–54)

யுகதருமங்களைக்கேட்ட ஜனமேஜயன் வினவுகின்ருன்: ஓ பகவானே! சகல தருமங்களுமறிந்தவரே! சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுள்ளவரே! அதர்மமே மிகுந்துள்ள கலியில் மனிதர் களுக்கு, ஐயா! எப்படி நல்லகதி யுண்டாகும்? கலியில் நல்லகதி யடையத்தக்க உபாயமிருக்குமானல் அதனைத் தயவுசெய்து எனக் குச் சொல்லியருளுமென்றனன். ஓ மகாராஜனே! அந்த விஷயத் தில் ஒரே உபாயந்தானிருக்கிறது. அந்த ஒன்றைத்தவிர வேறில்லை. அதுவே சர்வதோஷத்தையும் பரிகரிக்கத்தக்கது. அது யாதெனின், தேவியின் திருவடித் தாமரையைத் தியானித்தலேயாம். ஓ அரசனே! தேவிக்கு எப்படிப்பட்ட பாபத்தையும் நாசஞ்செய் யும் வன்மை யிருக்கின்றபடியினலே அவளுக்கு மஹாசக்தி யென்று பெயர். அச்சக்தியினல் போக்கத்தகாத பாவங்கள் கிடையா. ஆதலால், அரசனே! நீ அதற்காகப் பயப்படவேண்டாம். தேவி யினது நாமத்தை நினைக்கவேண்டுமென்கிற வெண்ணமில்லாமல் வேடிக்கையா யுச்சரித்தாலும் அவ்வுச்சரிப்பானது எந்தப் பலன் களைத்தான் கொடுக்கமாட்டாது? அவளது நாமோச்சாரணைகொடுப் பதுபோல் ருத்திரர் முதலாயினரும் கொடுக்கச் சமர்த்த ரல்லர். பாவங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் ஸ்ரீ தேவியின் நாமஸ் மரணையே. ஓ அரசனே! கலிபயங்கொண்டவன் புண்ணிய க்ஷேத் திரத்தில் நீங்காது வாசஞ்செய்து நிரந்தரமாய் அம்பிகையின் நாமத்தை யுச்சரித்துக் கொண்டிருத்தல் வேண்டும். எனதெனப் பற்றும் எல்லாப்பொருளையு மொழித்து நானென்றெழு மகங்காரத் தையு மழித்து எவன் பக்தியோடு தேவியை நமஸ்கரிக்கின்ருனே அவன் பாபத்தில் நலிவடையான். இது சர்வசாஸ்திர ரகஸ்யமா யுள்ளது. ஆதலால் நீ யான் கூறிவந்தவையெல்லாம் ஆலோசனை செய்து தேவியினது பாதாம்புஜத்தைத் தியானஞ் செய்துவருவாய்.

அறிவுடையா ரெல்லாம் அஜபாமந்திரமாகிய தேவியினது நாம காயத்திரியை ஜபஞ்செய்வார்கள். அறிவிலிகள் மாயா வைபவத்தினால் மகத்தான தேவியினது மகிமையை யறியார்கள். கலியிற் பிறந்து அதற்கஞ்சுகின்ற பிராமணர்களெல்லாந் தேவிகாயத்திரியை இதயத்துள் ஜபஞ்செய்வார்கள். கலியில் மாயா வைபவம் பெரிதாகையால் தேவிமகிமையை யறியார்கள். ஓ அரசனே! உன்னால் எவை கேட்கப்பட்டனவோ அவை என்னால் சொல்லப் பட்டன. இன்னும் யுகதருமங்களில் எதைக்கேட்க விச்சிக்கின்றாயென்றார் வியாசர். (55–65½)

ஓம் லாகின்யை நம:

## 12. தீர்த்தக்ஷேத்திர மஹிமை

வியாசமுனிவர் கூறியதைக்கேட்ட ஜனமேஜயன், ஓ முனிஸ்ரேஷ்டரே! தேவரீர் கலிதோஷம் வந்தணுகாதிருப்பதற்கு முன்னர் க்ஷேத்திரவாசங் கூறினீராதலால் பூலோகத்தில் தேவர்களாலும் முனிவர்களாலும் அடையத்தகுந்த புண்ணிய க்ஷேத்திரங்களையன்றி புண்ணிய தீர்த்தங்களையும் நதிகளையும், எந்த க்ஷேத்திரத்தில் எந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் தானஞ் செய்வதனால் எத்தன்மையான பலனுண்டாகுமோ அதனையும், தீர்த்தயாத்திரைக்குரிய நியமங்களையும் ஆங்காங்கு நடத்த வேண்டிய கடன்களையும் விசேஷமாய்ச் சொல்லவேண்டுகின்றேனென்று விண்ணப்பஞ் செய்தனன். வியாசமுனிவர், ஓ அரசனே! எந்தத் தீர்த்தங்களில் தேவியினுடைய ஸ்தானங்க ளிருக்கின்றனவோ, அந்தத் தீர்த்தங்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாகவென்று கூறுகிறார்: நதிகளுக்குள் மிகவுஞ் சிறந்ததாகிய கங்காநதியும், யமுனை, ஸரஸ்வதி, நர்மதை, கண்டகி, சிந்து, கோமதி, தமஸா, காவேரி, சந்திரபாகா, வேத்ரவதி, சர்மண்வதி, சரயு, தாபீஸா, பிரமதியும் ஆகிய இவைகளெல்லாம் பிரசித்தமாயும் தேவி வசிக்கப்பெற்றதாயுமுள்ள சிரேஷ்டமான தீர்த்தங்களாகும். இவைகளல்லாமலும் அநேக நதிகளிருக்கின்றன. அவைகளில் சமுத்திரமடையும் நதிகள் புண்ணியத்தைக் கொடுப்பன. சமுத்திரத்தை யடையாநதிகள் சுவல்ப புண்ணியத்தைக் கொடுப்பன. சமுத்திரத்தை யடையப்பெற்ற நதிகளுள்ளும் எந்த நதிகள் எக்காலத்திலும் பிரவாகமுள்ளனவா யிருக்கின்றனவோ, அவை மிக்க புண்ணியமுள்ளன. ஆவணிமாதம் முதல் இரண்டுமாத பரியந்தம் அந்த நதிகளுக்கு ரஜஸ்வலைகாலமென்று கூறுவர். அக்காலங்களில் மழைபெய்யும் சம்பந்தத்தால் கிராமங்களிலுள்ள அசுத்தபதார்த்த சம்பந்தமுள்ளவைகளாயிருக்கும். இந்நதிகளேயன்றித் தடாகங்களுக்குள் மிக்கபுண்ணியமுள்ள மானசசரசு, பிந்துசரசு, அக்ஷோதசரசு முதலிய அநேக புண்ணிய சரசுகளிருக்கின்றன. ஓ அரசனே! இப்போது சொல்லிவந்த தீர்த்தவிசேஷங்க ளிங்ஙன மிருக்க,

புஷ்கரக்ஷேத்திரம், குருக்ஷேத்திரம், தர்மாரணியம், பிரபாசம், பிரயாகை, நைமிசாரணியம், அற்புதாரணியம், மேருபர்வதம், ஸ்ரீசைலம், கந்தமாதனம் முதலிய அதிபரிசுத்தமான க்ஷேத்திரங் களுமிருக்கின்றன. இந்த க்ஷேத்திரங்களேயன்றி ரிஷிகள் அரிய தவமியற்றித் தத்தம்பெயரால் பிரசித்திபெற்ற பதரிகாச்சிரமம் முதலிய அநேக ஆச்சிரமங்களிருக்கின்றன. அவர்களால் வசிக்கப் பெற்றதாயிருக்கின்ற இவ்விடங்களேயன்றி அவர்களால் பரிசுத்த மென்று சொல்லத்தக்க ஆச்சிரமங்களும் அளவிறந்தனவாயிருக் கின்றன. பார்த்த மாத்திரத்தில் பாவங்களைப் போக்கவல்ல இந்த ஸ்தானங்களிலெல்லாம் தேவியினுடைய ஸ்தானங்களிருக் கின்றன. (1–15)

ஓ அரசனே! புண்ணிய தீர்த்தங்களும் தானங்களும் விரதங் களும் யாகங்களும் இவை யொழிந்த அநேக புண்ணிய கருமங் களும் திரவிய சுத்தி கிரியாசுத்தி மனோசுத்தி என்கின்ற மூவகைச் சுத்திகளால் பரிசுத்தத்தைப் பெறுகின்றனவாம். இச்சுத்திகளுள் சிலசமயத்தில் திரவியசுத்தியும் சிலசமயத்தில் கிரியாசுத்தியும் நேரிடும். மனோசுத்தி நேரிடுதல் எச்சமயத்து மில்லை. ஏனெனில், ஓ அரசனே! மனமோ மிகவுஞ் சஞ்சலமுடையது. அநேகவிஷயங் களை யாஸ்ரயித்திருக்கின்றது. அவ்விஷய ஆஸ்ரயத்தால் நானாவித மான அபிப்பிராயங்களுண்டாயவைகளா லிழுக்கப்பட்டுளது. இத்தன்மையான மனம் எங்ஙனஞ் சுத்தியைப் பெறும்? காமக் குரோத லோப அகங்காராதிகள் அம்மனதுக்குத் துணையாயுள்ளன. இவை தவம் தீர்த்தம் விரதங்கள் நிகழுங்காலங்களில் விக்னஞ் செய்கின்றவைகளன்றோ? ஆகையினால், அரசனே! ஒருவருக்கும் ஹிம்சை செய்யாதிருத்தல், உண்மையாயிருத்தல், பிறர் பொருளைக் களவு செய்யாதிருத்தல், ஆசாரத்தோடிருத்தல், ஐம்புலன் வழி செல்லாதிருத்தல், தாம்தாம் கொண்ட தருமங்களைப் பாது காத்துக் கொள்ளுதல் முதலிய இவையெல்லா மிருக்கப்பெற்றால் அவையே நல்ல புண்ணிய தீர்த்தஸ்நான பலனைக் கொடுக்கும். தேகசிரமம் முதலியவற்றால் தீர்த்த யாத்திரைக்குப் போகின்றவன் நித்திய கர்மத்தை விட்டாலும் ஸ்திரீ சம்சர்க்கஞ் செய்தாலும் தீர்த்த யாத்திரையால் வரும் பலனைப் பெறுவானா? அந்த யாத்திரை வீணானதே; சரீரத்திலிருக்கும் மலத்தைக் கழித்தற்கேயாம். ஓ அரசனே! மனத்தைச் சுத்திசெய்து தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய் கின்றவர்கட்கே அது பயனைத் தருமன்றி மனத்தைச் சுத்திசெய்யா தார்க்கு அஃது ஒரு பயனுந் தருவதின்று. ஆயின் அந்தத் தீர்த்த ஸ்நான புண்ணியம் மனத்தைச் சுத்திசெய்யாதோவெனின், அது செய்வதற்குச் சாமர்த்திய முடையதன்று. உடையதாயிருக்கு மாயின் கங்கா தீரத்தில் வசித்துக்கொண்டிருக்கிற முனிவர்கள் ராகத்வேஷமுள்ளவர்களா யேனிருத்தல்வேண்டும்? முனிவர்களிற் சிறந்த வசிஷ்டர் முதலான சாந்தர்களும் விஶ்வாமித்திரர் முதலிய தவத்திற் சிறந்தவர்களும் கங்கா தீரத்தில் வசித்தவர்களாயிருந் தும் ராக த்வேஷத்தி லாவலுள்ளவர்களாய்க் காமக்குரோதாதி

களால் கலக்கப்பட்டவர்களா யிருந்தார்களல்லவா? ஆதலால், அரசனே! மனேசுத்தி செய்யத்தக்கவர்களான சத்புருஷர்களுடைய சத்சங்க சம்பந்தம் தெய்வசம்பந்தத்தால் நேரிடுமாளுல் அந்தஞான நிஷ்டர்களின் சத்சங்கமென்கிற தீர்த்தந்தான் அந்தரங்க சுத்தியாகிய மனேசுத்தியைச் செய்யும். ஓ அரசனே! அதுவொழிந்த வேதசாஸ்திராதிகளும் விரத தான தவாதிகளும் ஏனைய கூட்டங்களும் சித்தசுத்தியைச் செய்யத்தக்கனவல்ல. ஏனெனில், பிரம்மபுத்திரரும் வேதவித்யா விசாரதருமாகிய வசிஷ்டர் கங்காதீரத்தில் வசித்தவராயிருந்தும் விஸ்வாமித்ரரிடத்தில் அவலமாகிய ராகத்துவேஷமுடையவரா யிருந்து கடுமையான யுத்தஞ்செய்து அரிச்சந்திரன் காரணமாய்க் கொக்காய்ப்போகவுஞ் சபித்தனர். விஸ்வாமித்திரரும் அப்படியே வசிஷ்டரை ஆடியென்னும் பக்ஷியாய்ப் போம்படிச் சபித்தனர். பின்னரிருவரும் மானசசரசில் வசித்திருந்து அவ்விடத்தில் சிங்கங்களைப்போல் மதோன்மத்தர்களாய்ப் பதினுயிரம் வருஷம் மகா கோபத்துடன் நகங்களானும் மூக்கானும் பயங்கரமான யுத்தஞ் செய்தனர். ஓ அரசனே! கங்கையிலும், மானசதீரத்திலும் வசித்தும் அத்தீர்த்தங்கள் அவர்களுக்கு ராகத்துவேஷங்களை யொழித்துச் சித்த சுத்தியையுண்டாக்கியதா? இல்லையேயென்றனர். (16–34)

ஜனமேஜயன், ஓ ஐயா! முனிஸ்ரேஷ்டர்களாயும் தருமத்திலாசையுள்ளவர்களாயுமிருக்கிற அம்முனிவர்கள் எந்தக்காரணத்திஞல் ஒருவருக்கொருவர் வைரங்கொள்ளவும் சபிக்கவும் வந்து துக்கத்துக்காளானுர்கள்? இவர்களால் மனிதர்களுக்குந் துக்கமுண்டாயிற்று; இவற்றின் காரணத்தை எனக்கு நன்ருய்ச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க, வியாசர் கூறுகின்ருர்: பூர்வம் சூரியவம்சீயஞன திரிசங்கு புத்திரனும் ஸ்ரீ ராமசந்திரருக்கு நெடுங் காலம் முன்னிருந்தவனுமான அரிச்சந்திரனென்ருே ரரசனிருந்தான். அவன் பிள்ளையில்லாதவனுய்ப் பிள்ளைவேண்டுமென்னும் அவாவால் வருணனைக்குறித்து ஒருவராலுஞ் செய்தற்கரிய நரமேதத்தைச் செய்யப் பிரதிக்ஞைசெய்து சங்கற்பஞ் செய்தமாத்திரத்தில் வருணன் திருப்தியடைந்தவனுய்ப் புத்திரப்பேறுண்டாகவனுக்கிரகித்தனன். அதனல் மனைவி கர்ப்பவதியாயினள். அரசனும் அதனைக்கேட்டுச் சந்தோஷமடைந்து விதிப்படி கர்ப்ப ஸம்ஸ்காரம் முதலியவற்றை நடத்தினுன். பின்னர் சர்வலக்ஷணத்தோடுங் கூடிய பிள்ளை பிறந்தது. புத்திரப்பேற்றையடைந்த அரசன் ஆனந்தபூரிதனுய் ஜாதகர்மம் முதலானவற்றை நடத்திச் சுவர்ண தானம் கோதானம் பூதானம் முதலிய தானங்களை விசேஷமாக அந்தணர்களுக்குக் கொடுத்துப் புத்திரமஹோற்சவத்தை நடத்தி வந்தனன். அத்தருணத்தில் வருணன் பிராமண வேஷங் கொண்டுவர, அரசன் அவனை விதிப்படிப் பூஜித்துவணங்கி நின்று, தேவரீர் யாதுகாரியமாயிங்குவந்தீரென்று கேட்க, அவன் நான் வருணன்; உன்னைக்குறித்து வந்தேன்; நீ சங்கற்பஞ் செய்து

கொண்டபடி புத்திரனைப் பசுவாகக்கொண்டு யாகத்தை நடத்தி சத்தியவாக்குடையவனாய் விளங்குவாயென்றான். அம்மொழியைக் கேட்ட அரசன் மனங்கலங்கித் துக்கிதனாய்ப் பின்னர் துக்கத்தைத் தன்னுளடக்கிக் கைகூப்பி வருணனைப்பார்த்துக் கூறுகிறான் :— ஓ சுவாமி ! நான் பிரதிக்ஞைசெய்தவண்ணம் யாகத்தை விதிப்படிச் செய்து என்னுடைய வாக்கைக் காப்பாற்றிக் கொள்கிறேன். இப்போது எனது பத்னி ஒருமாதம் அசுத்தத்துக்குள்ளாயிருக்குங் காலமாயிருத்தலால் அந்த நாள் கழிந்தவுடன் அவள் சுத்தமாவாள். பிறகு யாகஞ் செய்வதிற் றடையில்லையென்றான். வருணன் அதைக்கேட்டுத் தன்னுலகம்போய்ச் சேர்ந்தனன். பின்னர் அரசன் சந்துஷ்டனாயும் சிறிது கவலையுள்ளவனாயு மிருந்தான். (35–49)

ஒருமாதஞ் சென்ற பின்னர் முன்போல் வருணன் வர, அவனை அரசன் கண்டவுடன் மிகுந்த பயபக்தி விசுவாசத்துடன் அர்க்கிய பாத்ய ஆசமனாதிகள் தந்து வழிபட்டு வணக்கத்துடன் கூறுகிறான் : ஓ சுவாமிகாள் ! உபநயனமில்லாத பிள்ளையை எப்படி யூபஸ்தம் பத்தில் கட்டுவேன்? ஆகையால் உபநயன ஸம்ஸ்காரத்தால் அவனை க்ஷத்திரியனாக்கி உத்தமமான யாகத்தை முடிக்கிறேன். ஓ தேவனே! யான் உம்முடைய சேவகனாயுள்ளவன் ; என்னைக்குறித்து இச் சமயம் இவ்வளவு தயவு செய்வீரானால் யானிப்போது சொல்லியபடி யாகத்தைமுடிக்கிறேன். உபநயனஞ் செய்யாத பிள்ளைக்கு எந்தக் காரியத்திலும் அதிகாரமில்லையே ! விதியப்படி யிருக்கின்றதே ! நானென் செய்வேனென்றான். வருணன் அதைக்கேட்டுக் கூறு கிறான் : ஓ அரிச்சந்திரனே ! நீ என்னெதிரில் நரயாகஞ் செய்கிறே னென்று சங்கற்பஞ்செய்து என்னை வஞ்சிக்கிறாய். புத்திரனில்லா மலிருந்தவுனக்குப் புத்திரனைத் தந்தபடியினாலன்றோ புத்திர சிநேகம் விடத்தக்கதாயில்லை ? நீ இப்போதும் பயந்தவனாய் இனிய மொழியினால் உண்மையாய்ச் செய்கிறேனென்று சொல்லுகிறபடியி னால் நான் போகிறேன். சிலகாலங்கழித்து உன் வீட்டுக்கு வருவேன். அப்போதாவது சத்திய வாக்குடையவனாய் யாகத்தைச் செய்யவேண்டும். அப்படிச்செய்யாமற் போவையேயானால் உன் னிடத்தில் என்னுடைய கோபத்தோடு கூடிய சாபத்தை விடுவே னென்றனன். அரசன், ஓ வருணதேவரே ! குமாரனுடைய சமா வர்த்தன கர்மமுடிவில் அந்த யாகத்தைச்செய்து அதில் விதிப்படி என் மகனைப் பசுவாக ஹோமஞ்செய்கிறேன் ; தேவரீர் கோபிக்க வேண்டாமென்று சொல்லவும், வருணன் மிக்க சந்தோஷமுடையவ னாய் அப்படியே ஆகட்டுமென்று அதிசீக்கிரமாய்த் தன்னிடம் சென்றனன். வஞ்சவெண்ணத்தோடு கூடிய அரசனது மதி நிம்மதியாயிருந்தது. (50–58)

அவன் பிள்ளை லோகிதாஸனென்கிற பெயர் பெற்றுச் சத்தியத் தில் விருத்தியுள்ளவனாய் மிகவுஞ் சமர்த்தனாய்ச் சர்வ வித்தைகளி னிலும் வல்லவனாய் வாழுநாளில் பிதா வருணனுக்குச் சொல்லி யிருக்கும் யாகத்தின் காரணங்களைச் சாங்கோபாங்கமாய்த் தெரிந்துகொண்டு நமக்கு யக்ஞத்தில் மரணமுண்டென்று நிச்ச

யித்து அதற்கஞ்சி ஒருவராலுமறியக்கூடாத ஒரு மலைக்குகையுள் ஒளிந்திருந்தனன். அரசனும் நாள் செல்லச் செல்ல பயமடைந்த வனாயிருந்தனன். வருணன் சொல்லியதுபோல் வந்து அரசனைப் பார்த்து, ஓ அரசனே ! ஏன் யக்ஞம் செய்யாமலிருக்கின்றாய் ? இப் போது செய்யென்று சொல்ல அரசன் வாடின முகமுடையவனாயும் கலங்கிய கண்ணுடையவனாயும் கூறுகிறான் : ஓ தேவசிரேஷ்டரே! என் பிள்ளை என்னையறியாமலோடிப் போனான். அவன் போன விடந் தெரியவில்லை. நானென்ன செய்வேன்? என்றால் வஞ்சனை யில்லை யென்றான். வருணன் மிகவுங் கோபங் கொண்டவனாய் அசத்தியவாதியான அந்த அரசனைப் பார்த்து, ஓ கபடபண்டிதனான அரசனே ! எதனால் என்னை வஞ்சித்தனையோ அதனால் உன் தேகத் தில் ஜலோதரமென்கிற வியாதியானதுண்டாகக் கடவதென்று சபித் துத் தன்னிடம் போய்ச் சேர்ந்தான். பின்னர் அரசன் அந்த வியாதியினால் பீடிக்கப்பட்டுப் பெருந் துன்பமுற்றிருந்தனன். அச்சங்கதியைப் புத்திரன் கேள்விப்பட்டும் வராமல் அக்குகையி லேயே யிருந்தனன். வழிப்போக்க னொருவனவனைப் பார்த்து, உன் தகப்பன் சாபத்தினாலுண்டான ஜலோதர வியாதியினால் துக்கிதனாய்ச் சங்கடமனுபவித்துக் கொண்டிருக்க, நீ குகையை விட்டு வராமலிருக்கின்றனையே ! ஓ துர்ப்புத்தியுள்ளவனே ! நீ பிறந்ததும் பிழைத்திருப்பதும் லாபமென் றெண்ணுவதற்கிட முண்டோ ? எல்லாம் நாசமாய்ப் போயிற்றென்றறிவாய். இந்தச் சரீரத்தினால் உனக்கென்ன பலனுண்டாயிற்று ? உனக்குத் தேகத் தைக் கொடுத்த தந்தையைத் துக்கத்துக்குள்ளாக்கி நீ இங்கு உயிரோ டிருப்பதனால் உன்னைப்போலும் அதமனொருவ னுண்டோ ? உன் விஷயமாய் உன் தந்தை வியாதி பீடிதனாய்ப் புலம்பிக்கொண்டிருக் கிறான். சற்புத்திரன் தந்தையின் விஷயத்தில் பிராணனைக் கூட விடுவனென்பது நிச்சயமென்றனன். அவ்வார்த்தையை லோகி தாசன் கேட்டு மனம் வருந்தித் தந்தையைப் பார்க்க வேண்டுமென் றெண்ணினான். இந்திரன் அதனையறிந்து பிராமண வேஷங் கொண்டு மிக்க தயையுள்ளவன்போல் ரகஸ்யமா யவனிடம் போய், ஓ ராஜபுத்திரனே ! நீ மூடனாயிருக்கிறாய் ; துன்பத்தோடிருக்கிற உன் தந்தையிடத்தில் போவதனா லென்ன பயன் ? ஏன் வீணாசைப் படுகின்றாய் ? வியாதியைப் போக்கடிக்க உன்னாலாகுமா ? நீ அறி வற்றவனாதலா லொன்றையு முணராதவனா யிருக்கின்றாயென்று கூறினான். (59–74)

ஓம் லலநாரூபாயை நம:

## 13. அரிச்சந்திர உபாக்கியானம்

வியாசர் கூறுகின்றார் : ஓ ஜனமேஜயனே ! தந்தையைக் காணப் புறப்பட்ட புத்திரனை இந்திரன் தடுத்துவிட்டா னல்லவா ? மீண்டும் இந்திரன் அவனைப் பார்த்துக் கூறுகின்றான் : ஓ லோகி

தாசனே! உன் தந்தை வருணனுக்கு உன்னை யாகப் பசுவாகக் கொடுக்கிறேனென்றது உண்மையென்று நினைக்கின்றாய்? அவன் பின் விளைவை யறியாமல் சாகசமாய்ச் சொல்லிவிட்டான். அஃது இப்போது வினையாய் வந்துவிட்டது. இந்தச் சமயத்தில் அங்குப் போவையானால் நோயினால் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிற உன் தந்தை உன்னைக் கண்டவுடன் யாதொரு யோசனையுஞ் செய்யாமல் உன்னை யூபஸ்தம்பத்தில் பசுவாகக் கட்டி கொஞ்சமேனுந் தயையு மிரக்கமுமின்றிக் கொல்லப் போகிறான். அப்போது நீ என் செய்வா யென்றான். இவ்வண்ணஞ் சொல்லக் கேட்ட அவன் தேவி மாயை யினால் மோகிக்கப்பட்டவனாய்த் தந்தையிடம் போகாமனின்று விட்டனன். பின்னருமவன் தந்தைபாலுள்ள அன்பால் எப்போ தெப் போது புறப்படுகிறானோ அப்போதப்போதும் இந்திரன் மறவாமல் தடுத்து வந்தான்.

இவன் செய்தி யிங்ஙனமிருக்க, அரிச்சந்திரன் சர்வக்ஞராகிய வசிஷ்டரைப் பார்த்து, ஓ பகவானே! ரோகத்தினால் பீடிக்கப்பட்டு மிகவும் வருத்தமடைந் திருக்கின்ற வென்னை ரக்ஷியுமென்றான். வசிஷ்டர் கூறுகிறார்: ஓ அரசனே! உனது ரோகநாசத்தைக் குறித்து யான் சொல்லும் உபாயமொன்றிருக்கிறது; அதனைச் சொல்லுகிறேன் கேட்பாயாக: தருமசாஸ்திரத்தில் புத்திரர்கள் பதின்மூன்று விதமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்பதின் மூவருள் விலைக்கு வாங்கப் பெற்றவனும் ஒருவனுமாகலான் நீ யோர் பிராமணப்பிள்ளையை அவன் தாய்தந்தையர் எவ்வளவு திரவியத்தைக் கேட்கின்றனரோ, அத்திரவியத்தைக் கொடுத்துப் பெற்றுக்கொண்டு வருணனுக்குச் சொல்லியபடி யாகத்தைச் செய்வையாயின் இந்தரோகம் நாசமாய்விடும். வருணனுஞ் சந்துஷ்டி யடைவானென்றனர். (5–8)

அரசன் அதைக்கேட்டு மந்திரியைப்பார்த்துக் கூறுகிறான்: ஓ புத்திமானே! நமது ஆசிரியர் சொன்னதைக் கேட்டனையன்றோ? நானிந்த மகோதரவலியால் படும் பாடும் நன்று யறிந்திருக்கின்றனை யன்றோ? ஆகலான் நீ இப்போதே புறப்பட்டுத் தேசங்கடோறுஞ் சென்று அங்கங்கும் அதிகப்பிரயத்தனத்துடன் விலைக்குப்பிள்ளை யைத் தரத் தக்க பிராமணனைத் தேடுவாயாக. திரவியத்தி லாசை யுள்ள பிராமணன் எவனாவது நேரிடுவான். அவன் பிள்ளையைப் பொருளாக வெண்ணாது பொருளையே பொருளாக வெண்ணுவான். அக்குறிப்பை யறிந்து நீ அவன் கேட்கும் பொருளைக் கொடுத்துப் பிள்ளையை யழைத்துக்கொண்டு வருவாய். திரவியத்தில் நீ சிறிதும் லோபங்கொள்ளற்க. ஓ மந்திரி! நீ அம்முயற்சியிற் போவதுமன்றி வேறு சிலரை விடுத்து அவர்கள் யாவருமறிய யாராவது அரசன் செய்யும் யக்ஞத்துக்கு ஒரு பிள்ளையைக்கொடுத்து வேண்டிய பொருளைப் பெற்றுக்கொள்ளலாம் என்று சொல்லும்படியாயுஞ் செய்வாயென்றனன். அவனது ஆணையின்படி மந்திரி புறப்பட்டு பட்டணங்கள், கிராமங்கள், வீடுகள் முதலிய விடங்கடோறுஞ் சென்று விசாரித்து வரும்பொழுது தேசத்தில் மஹா தரித்திரனாயும்

பொருளாசை யுடையவனுயும் மூன்று பிள்ளைகளை யுடையவனுயு முள்ள அஜீகர்த்தனென்கிற ஒரு பிராமணன் கிடைத்தனன். அவனிடத்தில் மந்திரி ஜேஷ்டனுங் கனிஷ்டனும் நீங்கலாக நடுவே நின்ற சுனச்சேபனென்பவனை வேண்டிய பொருள்கொடுத்து அழைத்துவந்து அரசனிடங்கொண்டு வந்தனன். அரசன் அவனைக்கண்டு அத்யந்த சந்தோஷமடைந்து யாகத்துக்கு வேண்டிய உத்தமமான சாமக்கிரியைகளைச் சேகரித்துக்கொண்டு யாகஞ்செய்யத் தொடங்கினன். அந்தச் சமயத்தில் விஸ்வாமித்திர முனிவர் அங்கு வந்து யூபஸ்தம்பத்தில் கட்டியிருக்கின்ற சுனச்சேபனைப் பார்த்து மிகவும் இரங்கிய மனமுடையவராய் அரசனை நோக்கிக் கூறுகிறார்: இப்பிள்ளையைக் கொலைசெய்யாதே! இச்சாகசமான வேலையைச் செய்யாதே! யான் சொல்லும் வார்த்தையைக் கேட்பாய். ஓ தீர்க்காயுஷ்மானுயிருப்பவனே! இந்தப் பிள்ளையை விட்டுவிடுவையானுல் உனக்குச் சுகமுண்டாகும். உன்னை நான் மிகவும் பிரார்த்திக்கின்றேன். அந்தோ! குழந்தை அழுகிறுன். அவன் விஷயமாய் என்னிடத்திற் றேன்றிய விரக்கமானது என்னை மிகவும் வாட்டுகின்றது. உயிர்களிடத்துக் கொள்ளும் இரக்கத்தைக் காட்டிலும் ஒருவனடைய வேண்டிய தொன்றுண்டோ? உனக்கு ஏனிரக்கமுண்டாகவில்லை? இனியேனும் இரக்கத்தைக் கொள்வாயாக. உன்னைப்போன்ற அரசர்கள் பிறனுடைய தேகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு இரக்கமுள்ளவர்களாயதனையே விரதமாகக்கொண்டு அதனுல் வரத்தக்கதாகிய சுவர்க்கத்தை யபேக்ஷித்துத் தங்களுடைய தேகத்தைக் கொடுத்திருக்கிறுர்கள். நீயோ அப்படியன்றி உன்னுடைய தேகத்தை ரக்ஷிக்கும் பொருட்டுப் பிராம்மணக் குழந்தையைப் பலாத்காரமாய்க் கொல்லத் துணிந்திருக்கின்றுய். அந்தோ! இதுவென்ன வாச்சரியம்? பிறவுயிரைக் கொலைசெய்தல் பாவமல்லவா? இப்போது நீ அனுபவிக்கும் வயிற்றுவலியும் பாவத்தால் வந்ததல்லவா? பாவத்தால் வந்ததைப் பாவமா போக்கடிக்கும்? இஃதென்ன மடமை! புண்ணியமன்றே பாவத்தை யொழிக்கும்? புண்ணியமென்பதும் விரதமென்பதும் பிறவுயிரை வருத்தா தொழிவதினும் வேறென்றுண்டோ? பாவமென்பது இரக்கங் கொள்ளா தொழிவதினும் வேறென்றுண்டோ? ஓ அறிவில்லாதவனே! இனியேனும் இந்தப் பாலனிடத்தில் இரக்கங் கொள்வாய். இப்போது நீ இவனைக் கொல்லத்துணிந்ததற்குக் காரணம் தேகத்தினிடத்தில் நீ வைத்த இரக்கந்தானே? அது போலும் அவனவன் தேகத்திலும் இரக்கமிருக்குமல்லவா? இது நீயும் அறிந்த நியாயந்தானே! இந்த விரக்கத்தைப் பற்றி இப்போது சொல்லி முடியுமோ? இது யான் சொல்வதன்று; வேதவுண்மை. அந்த உண்மையைக் கொண்டே யான் சொல்லுகிறேன். இந்த உண்மைப் பிரமாணத்தில் உனக்குப் பிரமாணமிருக்கும் பக்ஷத்தில் இந்தப் பாலனை இந்த யூபஸ்தம்பத்தினின்றும் அவிழ்த்து விடுவா யென்றனர். அரசன் அவர் வார்த்தையைச் சிறிது மெண்ணுது அநாதரவுசெய்து பின் னனுபவிக்க

வேண்டிய வினைவலியான் தானெண்ணியவாறு முடிப்பதில் முயற்சி யுடையவனு யிருந்தனன். அதனையறிந்த விஸ்வாமித்திரர் அவ் வரசன்மேல் கோபங்கொண்டவராய் அவனிடத்தில் வார்த்தையாடு வதை யொழித்து யூபஸ்தம்பத்தில் கட்டுண்டிருக்கும் சுனச்சேபனு கிய பாலனிடத்தில் வந்து, நீ அஞ்சாதே! என்று அவனைத்தேற்றி வருண மந்திரத்தை யுபதேசித்தனர். அவன் அம்மந்திரத்தை நலி வாகிய த்வனியோடு உச்சரித்து உச்சரித்துக் கூவினுன். வருண தேவன் அவன் கூச்சலைக் கேட்டு இரக்கங்கொண்டு அவனெதிரில் வந்து அவனைக் கட்டவிழ்த்துவிட்டு அரசனுக்கும் வயிற்றுவலி யைப் போக்கிப் போயினுன். (9–28)

விஸ்வாமித்திர முனிவர் அரிச்சந்திரன் தமது சொல்லை எண் ணுது அவமதித்தானென்று உள்ளத்துள்ளே சினமுடையவராய்ச் சமயம் பார்த்திருந்தனர். சிலநாள் சென்று அரசன் வேட்டையாடு நிமித்தம் குதிரைமீதேறி அரண்யத்துக்கு வந்து வேட்டையாடி ஒரு பன்றியைத் துரத்திக்கொண்டு கௌசிகநதி தீரமாய் உச்சிப் பொழுதில் வரும்பொழுது விஸ்வாமித்திர முனிவர் இதுதான் சமய மென்றெண்ணி விருத்தப் பிராமண வடிவங்கொண்டு அவன்பால் வந்து அவனது நாடு நகரம் முதலிய செல்வங்களையும் வஞ்சனையாற் பெற்றுக்கொண்டு பின்னர் தனது நிஜவடிவத்தோடு சிறிது மச்ச மின்றி வந்துநின்றனர். அவரை வசிஷ்டமுனிவர் நோக்கி, ஓ விஸ்வாமித்திரனே! துர்ப்புத்தியுள்ள அதமனே! பிராமண வேஷத்தை வீணுகப்பூண்டிருக்கும் வீணனே! முனிவர் தருமத்தை விட்டு பக்ஷியாகிய கொக்கின் தருமத்தை யுடையவனே! ஏன் வீணுகக் கர்வத்தை வகிக்கின்ருய்; முனிவரில் யான்தான் சிறந்தவ னென்று டாம்பீகத்தை வகித்திருக்கின்ருய். உலகத்துக்கே யன்றி எனக்கும் எஜமானுயிருக்கின்ற அரிச்சந்திர மகாராஜனிடம் யாதொரு குற்றமுங் காணுமலவனை நீ அதிகமான துக்கத்துக்குள் ளாக்கி வருந்தச் செய்தனையே! இதுகாறும் நீ கொக்கு தியானஞ் செய்வதுபோல் கண்மூடியிருந்து திடீரென்று பெருஞ் செல்வத்தை விழுங்கிவிட்டனையே. ஆதலால் நீ கொக்காகக் கடவாயென்று சபித்தனர். அச்சாபமொழியைக் கேட்ட விஸ்வாமித்திரர் கோபங் கொண்டு, ஓ வசிஷ்டா! நான் நீ யிடுஞ் சாபத்துக் காளாவதுபோல் நானிடுஞ் சாபத்துக்கு நீயும் ஆளாவாயென்று, நானெதுவரையில் கொக்கா யிருக்கின்றேனே அதுவரையில் நீயும் * ஆடிப்பக்ஷியா யிருத்தல் வேண்டுமென்று சபித்தனர். இவ்வாறொருவருக்கொரு வர் சாபமேற்றவர்களாய் மானசசரசில் விஸ்வாமித்திரர் கொக்கா யும் அங்குள்ளவோர் விருக்ஷத்தில் வசிஷ்ட முனிவர் ஆடிப் பக்ஷி யாயுமிருந்து முன்னுள்ள துவேஷம் நீங்காது ஒருவருக்கொருவர் நாடோறும் மூக்கினுலும் நகங்களினுலும் கீறியும் குத்தியும் பலாச மலர்போல் அநேக வருஷகாலம் சரீரமுற்றும் உதிரம் வெள்ளமாய்ப் போம்படிப் போர்விளைத் திருந்தனர். (29–42)

---

* இதனைச் சாரரி, ஆதி யென்றுங் கூறுவர்.

ஓ அரசனே! இது சித்தசுத்தியில்லாத குறையன்ருே வென்றனர். ஜனமேஜயன் இவ்விருவர் கதி என்னவாயிற்ருே, அதனை யறியவேண்டுமென்கிற ஆவலுடையவனுய் வினவுகிருன்: ஓ முனிபுங்கவரே! தேவரீர் சித்த சுத்தியின்றன்மை இத்தன்மைத் தென்றறிவிப்பதைப் பார்க்கினும் அம்முனிவரிருவரும் அச்சாப விமோசனம் எப்படி யெய்தப்பெற்றனரோ? ஓ மஹானுபாவரே! நானதனைக் கேட்க ஆவலுள்ளவனு யிருக்கின்றேனுதலால் அதனைச் சொல்லவேண்டு மென்றனன். வியாசர் கூறுகிருர்:— ஓ அரசனே! சில காலஞ்சென்ற பின்னர் வசிஷ்டருக்குப் பிதா பிரமனுதலால் அவர் மனமிரக்கமுற்று இருமுனிவரிடத்தும் தேவர்களோடுவந்து போரை நிறுத்திச் சாபத்தையும் அவர்களாலேயே நிவிர்த்தித்துக் கொள்ளும்படிச் செய்து அவர்களைப் பார்த்து, நீவிர் முப்போதும் நீரில் மூழ்கித் தவத்தான் மாட்சிமையுடையார்போற் காட்டி மாட்சிமையற்ற இத்தீக்குணங்களாகிய மாசினை மனத்தின் கண்ணதாக வாக்கினீரே! இது நன்று! நன்று!! உங்களுடைய வொழுக்கங்களெல்லாம் வஞ்சக மனத்தாரது படிற்ருெழுக்கம் போலாயிற்றே. இப்படிற்ருெழுக்க முடையோராகிய உங்களது வான்போலுயர்ந்த தவவேஷம் என்ன பயனைச்செய்யும்? இத்தவவேஷமாகிய தோற்றம் பசுவானது காவலாளிகள் கடியாமலிருப்பதற்குப் புலியின்ருேலைப் போர்த்துக் கொண்டு பயிர்களை மேய்வதுபோலும் உலகிலுள்ளாருடைய பொருள்களைச் சுலபமாய்க் கவர்தற்குச் சாதனமாயிற்று. இனி இக்கூடா வொழுக்கத்தைவிட்டு சுகமா யிருங்களென்று சொல்லித் தம்மிடம் போய்ச்சேர்ந்தனர். முனிவர்களும் தங்களாச்சிரமங்களை யடைந்து ஒருவருக்கொருவர் சிநேகமாய் வாழ்ந்திருந்தனர். ஓ அரசனே! இவ்வுலகத்தில் தேவனு யிருப்பினும் மனிதனுயிருப்பினும் அகங்காரத்தை ஜயித்துச் சித்தசுத்தியடைந்து சுகமாயிருந்தவனெவன்? அநேக மகிமைகளால் மகான்களென்று பேர்பெற்றவராலுஞ் சித்தசுத்தி யடையத்தக்கதல்ல. ஆதலால், அந்தச் சித்தசுத்தியொன்றே பிரயத்தனத்தால் சாதிக்கத் தகுந்தது. சித்தசுத்தியைத் தேடுதலாகிய பிரயத்தனத்தைவிட்டு தீர்த்தம், தானம், தவம் சத்தியம் முதலிய காரியங்களில் பிரயத்தனப்பட்டுச் சாதிக்கமுயலுதல் வீணுகும். சித்தசுத்திக்காகப் பிரயத்தனப்படுதல் யாதெனின், மனமானது செவிமுதலிய பஞ்சேந்திரியங்களின் வழியாய் விஷய சம்பந்தத்தையடைந்து அதிலுழலப்பெருமல் புண்ணிய தீர்த்தங்களிலும் புண்ணிய க்ஷேத்திரங்களிலுமுள்ள தேவியைப் பூஜை செய்வதிலாசையையுண்டாக்கி தேவி யிருக்குமிடங்களிலேயே விடாமலிருப்பதற்கும் அவளது நாமங்களை வாயினுல் விடாமலுச்சரிப்பதற்கும் அவளுடைய குணங்களைத் தோத்திர ரூபமாய்த் தோத்திரஞ் செய்வதற்கும் அவளுடைய பாதங்களை தியானிப்பதற்கும் ஆக்கமு மூக்கமு முடையதாயிருக்கச் செய்வதாகும். இங்ஙனமான பிரயத்தனத்தை எவன் செய்கின்ருனே அவன் கலிதோஷத்தினின்றும் விடுபட்டுப் பயமற்றவனுகின்ருன். இங்ஙனமான சித்த

சுத்திபெற்றவன் பாபியாயிருந்தாலும் ராகத்துவேஷாதி ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டவனுகின்முன். ஓ ஜனமேஜயனே! இதனை நன்குணர்வாயாக வென்றனர். (43–54)

ஓம் லஸத்தாடிம பாடலாயை நம:

## 14. வசிஷ்டர் சாபம்

சூதர் கூறுகின்றார்: ஜனமேஜயன் வியாசமுனிவரை வணங்கி வினவுகிறான்: ஓ மகானுபாவரே! வசிஷ்ட முனிவர் மகானுபாவராகையால் அவருடைய சரித்திரத்தை யின்னமுங்கேட்க விரும்புகிறேன். அந்த வசிஷ்டருக்கு மித்திராவருணி என்கிற பெயர் எப்படி வந்தது? அப்பெயர் அவருக்கு நடத்தையினுல் வந்ததா? குணத்தினுல் வந்ததா? அதற்குத் தகுந்த காரணமெனக்குச் சொல்லுமென்றனன். வியாசர் கூறுகிறார்: ஓ அரசச் சிரேஷ்டனே! வசிஷ்டர் நிமியென்னு மரசனுல் சாபம் வரப்பெற்று அதனுல் அவர் தேகத்தை விட்டுப் பிரமனுணையால் மித்திராவருணனிடம் மறுபடியும் பிறந்தார். அதனுலவர் மித்திராவருணியெனப் பெயர் பெற்றன ரென்ருர். ஜனமேஜயன் வினவுகிருன்: ஓ ஐயா! நிமி என்னும் அரசன் பிரம்மரிஷியை ஏன் சபித்தான்? அவன் சபித்தாலும் அந்தச்சாபம் பிரம்மரிஷியான இவருக்குப் பலிக்கலாமா? இஃது எனக் காச்சரியமாயிருக்கிறது. ஓ சுவாமிகாள்! அவ்வரசன் இவரிடம் குற்றம் நிகழக் கண்டு சபித்தானு? வேறேதேனுங் காரணத்தால் சபித்தானு? ஓ தருமமறிந்தவரே! சாபமிடவேண்டியவ ரின்னுர், பெறவேண்டியவ ரின்னுரென்னும் ஒரு வியவஸ்தையின்றி நடந்துவருகின்றதே; அதற்கு முதற்காரணம் எதுவோ அதனைச் சொல்லுமென்றனன். (1–6)

வியாசர் கூறுகிருர்: ஓ நுண்ணிய அறிவுடையோனே! நீ கேட்ட காரணம் முன்னென்னுல் சொல்லப்பட்ட நகுஷனுடைய சரித்திரத்தினுலேயே யூகிக்கலாம்; ஆயினுஞ் சொல்லுகிறேன். இந்த ஸம்ஸாரமானது ஸத்வ ரஜஸ் தமோகுணமாகிய மூவித மாயா குணங்களாலடையப்பட்டுக் கலந்துகொண்டிருக்கின்றதல்லவா? அம்முக்குண சம்பந்தமான ஸம்ஸாரத்தை யுடையவர்களே அரசரும் முனிவரும். அரசன் உலகதருமஞ் செய்தாலும் ரிஷிகள் யோகதவஞ் செய்தாலும் இருவர்க்கு முள்ள மனமானது முக்குணங்களிற் பயின்று அதனுல் ஞானமற்று அப்பிரகாசத்தை யடைந்திருப்ப தாகும். அவ்வப்பிரகாசமான மனமுடைய அவர்கள் காமக்குரோத லோப அகங்காரம் முதலானவைகளோடு கூடினவர்களாய்ச் செய்தற்கரிய தருமத்தையும் தவத்தையுஞ் செய்கிருர்கள். ஓ அரசனே! க்ஷத்திரியர் ஸத்துவகுணத்தைவிட்டு ரஜோகுணத்தினுல் வியாபிக்கப்பட்டவர்களாய் யாகஞ் செய்கிருர்கள். அதுபோல் முனிவர்கள் ரஜோகுணத்தைவிட்டு ஸத்வகுணத்தினுல் வியாபிக்கப்பட்டவர்களாய்த்

தவத்தைசெய்வார்களாயின் அரசர்களிடுஞ்சாபம் முனிவர்களைப்பற்ருது. ஸத்வகுணமாத்திரமுடைய முனிவர்க ளெவருங்கிடையாது. அரசரும் முனிவராகிய அந்தணரும் ரஜோகுணமுடையவரே. ஆகலான் வசிஷ்டர் நிமி என்னும் அரசனுலும் நிமி வசிஷ்டராலுஞ் சமமாய்ச் சபிக்கப்பட்டு இருவருஞ் சாப பலத்தால் மகாதுக்க மடைந்தனர். திரவியசுத்தியும் கிரியாசுத்தியும் பிரகாசமான மனச்சுத்தியும் திரிகுணத்மகமான ஸம்ஸாரத்தில் பிராணிகளுக்குண்டாவது துர்லபமென்றறிவாய். அது பராசக்தியின் மாயாப் பிரபாவமாம். அந்த மாயாசக்தியை எவன் எந்த க்ஷேத்திரத்திலிருந்தாலும் எந்தத் தவஞ்செய்தாலுந் தடைசெய்யத்தக்கவ னல்லன். எவன் விஷயத்தில் தேவி தயை செய்கின்ருளோ அவன் பாமரனுயினும் அவனை அம்மாயை யொருக்ஷணத்தில் விட்டுப் போகின்றது. சத்திய ஶௌச விரதம் முதலியவைகளை யுடையவனுகின்ருன். அவள் தயை செய்யாளாயின் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாயிருந்தாலும் மானிடருள் பண்டிதனுயிருந்தாலும் அம்மாயை அவர்களை விட்டுப் போகின்றதில்லை ; சத்திய விரதம் முதலானவைகள் விட்டுப்போகின்றன. ஓ அரசனே ! அந்த மாயாதேவியின் திருவுள்ளமறிந்தவ ரெவருமில்லை. சத்திய விரதம் முதலியவையில்லாத பாமரரை அவையுடைய பண்டிதராகச் செய்வாள். அவையுடைய பண்டிதரை அவையில்லாத பாமரராக்குவாள். இவ்வாறு செய்யவல்ல மஹாமாயா சொரூபிணி யாருக்குச் சுவாதீனமானவளெனின், தனது பக்தர்களுக்குச் சுவாதீனமானவள். ஆதலால் சகல பாவங்களையும் நாசஞ் செய்வதற்கு அவளிடம் பக்தி செய்யவேண்டும். அந்தப் பக்தி லோபம் டம்பம் முதலானவைகளோடு கூடியிருக்குமாயின் அவள் தயை செய்யாள், கெடுத்து விடுவாள். ஓ அரசனே ! இனி வசிஷ்டருக்கு வந்த சாப காரணத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக : (7–16)

நிமி என்பவன் இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவன் ; அழகிய உருவத்திலும் சகல நற்குண நற்செய்கைகளிலும் தரும ஞானத்திலும் பிரஜைகளை ரக்ஷித்துச் சந்தோஷப்படுத்துவதிலும் சத்யமாயிருப்பதிலும் தானஞ் செய்வதிலும் யாகஞ் செய்வதிலும் பிரம ஞானந்திறுஞ் சிறந்தவன். பிராமணர்களுக்கு வேண்டிய சுகஞ் செய்யும் பொருட்டுக் கௌதமருடைய ஆச்சிரமத்தில் புரஞ்ஜெயனென்கிற தன்னுடைய பிள்ளையைத் தாபித்தவன். இவ்வாருன நல்லொழுக்கங்களிற் சிறந்த அரசனுக்கு ராஜஸபுத்தியுண்டாய் அதனேடு அநேக காலமாய்ச் செய்யத்தக்கதாயுள்ள யாகத்தினுல் தேவியைப் பூஜிக்க வேண்டுமென்கிற ஆவலுமுண்டாய் இக்ஷ்வாகுவை வணங்கி அவ னனுமதிபெற்றுச் சாத்திரங்களிற் சொல்லியிருக்கிறபடி யாகத்துக்குரிய சம்பாரங்களைச் சேர்த்துக்கொண்டு சர்வக்ஞர்களாயும் சர்வகலா சம்பந்நர்களாயும் சமர்த்தர்களாயும் மஹா தபஸ்விகளாயுமுள்ள பிருகு முனிவர், ஆங்கீரசர், வாமதேவர், கௌதமர், வசிஷ்டர், புலஸ்தியர், ரிசீகர், புலஹர் முதலிய முனிவர்களையும் வரவழைத்துத் தனது ஆசாரியராகிய

வசிஷ்டரை வணங்கி மிக்க விநயத்தோடு பிரார்த்திக்கின்ருன் : ஓ முனிசிரேஷ்டரே ! கருணைக்கடலே ! எனக்குத் தேவரீர் ஆசிரிய ராகையால் யான் செய்யவெண்ணி யிருக்கும் யாகத்தை நடத்தி வையும் ; அந்த யாகத்துக்கு என்னுல் சேகரிக்கப்பட்ட சாமக் கிரியை முழுவதுந் தேவரீர் கண்ணுற்று அவைகளைச் சுத்திசெய் தருளும். அந்த யாகத்தை ஐயாயிர வருஷம் தீக்ஷையோடிருந்து செய்யவேண்டுமென்று அபேக்ஷை கொண்டிருக்கிறேன். நான் செய்ய வாசைகொண்ட யாகம் யார் பொருட்டென்று தேவரீர் கேட்பீராயின், ஜகதம்பிகையாகிய தேவியின் பொருட்டே ஆகலான் எந்த யாகத்தினுல் தேவியைப் பூஜித்தால் அவள் பிரீதியடைவாளோ அந்த யாகத்தை விதிப்படி செய்யவேண்டு மென்றிருக்கிறே னென்றனன். (17–27)

வசிஷ்டர் கூறுகிருர் : ஓ அரச சிரேஷ்டனே ! சிலநாளைக்கு முன் தேவேந்திரன் உன்னைப் போலவே தேவிக்குப் பிரீதியுண்டாம் வண்ணம் ஐந்நூறு வருஷம் யாகஞ்செய்ய வேண்டுமென்று என்னை யழைத்தனன். அதற்கு வருவதாய் நாஞெப்புக் கொண்டேன். ஓ அரசனே ! அதுவரையில் பொறுத்திருப்பையாயின் நான் இந்திரன் வேண்டுகோளின்படி தேவியின் யாகத்தை முடித்துவிட்டு உன்னிடம் வருகிறேனென்ருர். அரசன், ஓ எனதாசிரியரே ! யாக நிமித்தமாய் அநேக முனிவர்களை வரவழைத்து விட்டேன். சர்வ சம்பாரங்களையுஞ் சேர்த்துவிட்டேன். இனி எப்படி நான் அவ்வளவு காலம் காத்திருப்பேன் ? இக்ஷ்வாகு குலத்திற்கு நீர் குருவாயிருக்கிறீர். நீர் எல்லாம் அறிந்தவர். உமக்கு நானென்ன சொல்லுவேன் ? எங்கள் குலத்துக்கு ஆசிரியரா யிருக்கின்ற நீர் 'என் காரியத்தை நிறுத்திவிட்டு மற்ருெருவர் காரியத்தை விரும்பிப் போவது முறையாகுமா ? இது தேவரீருடைய நிலைமைக்குத் தகுதியானதன்று ; நீர் போகக்கூடாது. திரவிய ஆசையைக் கொள்ளாதீரென்று தடுத்தனன். முனிவர் திரவிய ஆசையினுல் அவன்றடையில் நிற்கப் பெருமல் இந்திரனிடம் போய்ச் சேர்ந் தனர். அரசனும் மனவருத்தத்துடன் கௌதமரிடஞ் சென்று அவரை யழைத்துக்கொண்டு இமயமலைச் சாரலில் கடற்கரையில் யாகசாலை யேற்படுத்தி யாகத்தை நடத்த ஆரம்பஞ்செய்து அச் சமயத்தில் அந்தணர்களுக்கு வேண்டிய தானங்களைக் கொடுத்து ஐயாயிரவருஷம் யாகஞ்செய்வதாக சங்கற்பித்துக்கொண்டு தீக்ஷை வகித்து நடத்திவந்தனன். ருத்விக்குகள் அரசன் கொடுக்குந் தானங்களாலும் பசுக்களாலுஞ் சந்தோஷ மடைந்திருந்தனர். அச்சமயத்தில் வசிஷ்டர் இந்திரனிடஞ் சொன்னபடி ஐந்நூறு வருஷங் கழிந்தமையால் இங்கு வந்துவிட்டனர். அவர் வரும்போது அரசன் மிகுந்த நித்திரையாகவிருக்க அவனது சேவகர் அவனை யெழுப்பி வசிஷ்டமுனிவர் வரவைத் தெரிவித்தனர் ; தெரிவித்தும் அரசனதனைத் தெரிந்துகொள்ளாதவனு யிருந்தனன். அப்போது வசிஷ்டமுனிவர் இவ்வரசன் நம்மிடம் பயமும் பக்தியுமற்றவனுகக் காண்கின்ருன் ; அவை யிருக்கும் பக்ஷத்தில் சேவகர் நமது வருகை

யைத் தெரிவித்தும் வாராமலிருப்பானு ? இது நமக்கவமான மன்ரூ வென்று கோபங்கொண்டு குலகுருவாயிருக்கின்ற நம்மைவிட்டு வேரொருவனைக் குருவாகக்கொண்டு நம்மையவமதித்து யாகதீக்ஷை வகித்து அதனைச்செய்யத் தொடங்கினுனதலால், அவன் தேகமில் லாமற் போகக்கடவனென்றும், இப்பொழுதே அவன் சரீரமும் விழக் கடவதென்றுஞ் சபித்தனர்.　(28–42)

அச்சாபத்தைக் கேட்ட சேவகர் உடனே அரசனிடஞ் சென்று அவனையெழுப்பி வசிஷ்டர் வந்தமையும் பின் சபித்தமையுங் கூற, அரசன் கோபங்கொண்டவனுய், முனிவரிடம் விரைந்துவந்து தான் கொண்ட கோபத்தை வெளிக்காட்டாது மிக்க விநயத்துடன் கூறு கிருன் : ஓ தருமசீலரே ! என்னுல் யாதொரு குற்றமுமில்லை. யான் யாகத்தைத் தொடங்கிய காலத்திலேயே தேவரீரிடம் தெரி வித்து நீர் போவதையும் மறுத்தேன். நீர் போய்விட்டீர். போனவர் மீண்டும் வந்து நீரே என்னிடங் குற்றமிருப்பதாக வெண்ணிச் சபித்துவிட்டீர். நீர்தானு தருமத்தின் முடிவையறிந்தவர் ? நீர்தானு வேதவேதாந்தங்களை நன்குணர்ந்தவர் ? ஆஹா ! நீரிட்ட சாபம் நன்ருயிருக்கிறது ! கோபம் சண்டாளனைக் காட்டிலும் கொடிதென் றெண்ணிப் பெரியோரெல்லா மதனை நீக்கி விடுகின்றனர். நீர் கொண்ட இக்கோபத்தினுல் நீரடைய வெண்ணிய பயன் யாது ? நீர் முனிவர்களுக் கிருக்கவேண்டிய சூக்ஷ்ம தருமத்தை இதுகாறுந் தெரிந்துகொள்ளாம லிருந்தமைபற்றி நான்மிகவும் வருந்துகிறேன். நீர் என்னிடம் குற்றங்காணுது சபித்தீர் ; நான் உம்மிடங் குற்றங் கண்டே சபிக்கிறேன். ஓ முனிவரே ! நான் தேகமிழப்பதுபோல் நீரும் தேகமிழக்கக்கடவீரென்ருன். பின்னரிருவரும் சாபமேற்ற வராய்த் துக்கமுற்றிருக்க, வசிஷ்டர் பிரம்மதேவரிடஞ்சென்று தமக் குச் சாபமாய் வந்த விபத்தைக்கூறி வினவுகிருர் : ஓ என் தந்தையே ! தேகத்தைவிட்டு எங்ஙனஞ் சுகமுற்றிருப்பேன் ? இனி நான் தேகமடைதற்குக் காரணமாயுள்ள பிதா யார் ? அவரால் வேறு தேகம் வந்தால் இப்போதுள்ள ஞானமெனக்குண்டாக வேண்டுமே ! நீர் சர்வசிருஷ்டி வல்லவராகையால் எனக்கிப்போ துண்டா யிருக்கும் துன்பம் நீங்கப்பெற்று இனி வரவேண்டிய தாக வெண்ணுகின்ற இன்பம் வரப்பெற்று வாழ அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.　(43–55)

பிரம்மதேவர் வசிஷ்டரது பரிபவத்தைக் கண்டு கூறுகிருர் : ஓ புத்திரா ! நீ துன்பமொழிக. மித்திரா வருணருடைய தேஜசில் கலந்து அதில் நிலைபெற்றிருப்பாய். பின்னர் ஒரு காலத்தில் அவ ரிடமிருந்தே அயோனிஜனுய்ப்பிறந்து தேகவிருத்தியையடைந்து சகல சாஸ்திரசம்பன்னனுய் யாவராலும் பூஜிக்கப் பட்டவனுய் முனிசிரேஷ்டனுய் வாழக்கடவாய்; இதில் நீ ஐயங்கொள்ளற்கவென் றனர். வசிஷ்டமுனிவர் கவலையற்றவராய் அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து விடைபெற்று மித்திராவருணருடைய தேஜ சில் கலந்திருந்தனர். இவ்வாறிருக்குநாளில் ஊர்வசியானவள் தற் செயலாய் தன்னுடைய சகிகளுடன் அந்த மித்திராவருணருடைய

ஆச்சிரமத்திற்கு வந்தனள். அவளை அம்முனிவர்கண்டு காமவசப் பட்டுக்கூறுகிருர்: ஓ ஊர்வசி! நீ இவ்விடத்திற்கு வந்தது என் தவ மல்லவோ? வந்த நீ நான்வேண்டிய வின்பத்தையளித்து என்னை வாழ்விக்கவேண்டும். என்மனம் காமத் தீயால் தபிக்கின்றது. அதனை நீ தணியச்செய்வையாயின் உனக்கு புண்ணியமுண்டென்று பலவாருய்வேண்டினர். அவள் அதற்கிசைந்தவளாய், ஓ முனி வரே! நீர் வருந்துதலொழிக. உமதிஷ்டப்படி இங்கு வசித்துஉமக்கு வேண்டிய இன்ப நலந் தருகின்றேனென்றுகூறி அவரோடு கூடிப் போகித்து வாழுநாளில், ஒரு நாள் அம்முனிவர் அவளோடு கிரீடித் துக்கொண்டிருக்கிற சமயத்தில் அவருடைய வீரியம் அங்குள்ள ஒரு கும்பத்தில் வீழ்ந்தது. ஓ அரசனே! பின்னர் அக்கும்பத்தினின் றும் அகஸ்தியமுனிவர் முன்னும், வசிஷ்டமுனிவர் பின்னுமாக வெளிவந்தனர். அகஸ்தியர் அப்பொழுதே வனத்துக்குப் போயி ஞர். வசிஷ்டரோ, சகலகலாவல்லபராய் பரமஞான நிஷ்டராய்ப் பிரகாசிக்க, இக்ஷ்வாகு வம்சத்தில் வந்த அரசன் அவரது நல்லொழுக்கத்தையும் அறிவின் விசாலத்தையுங் கண்டு களித்துத் தனது குலத்துக்கு என்றும் ஆசிரியராயிருக்கப் பிரார்த்தித்த பொழுது அவரப்படியேயிருந்தனர். ஓ ஜனமேஜயனே! வசிஷ்ட முனிவருக்கு மித்திராவருணி என்கிற பெயர் வந்த வரலாறிதுவாகு மென்றனர். (56–69)

ஓம் லலந்தி காலஸதீ பாலாயை நம:

## 15. நிமி சாபம்

சூதர் கூறுகின்றுர்:—ஜனமேஜயன் வியாசமுனிவரை நோக்கி, ஐயா! வசிஷ்டருடைய தேகப்ராப்தியைச் சொல்லி யருளியதுபோல் நிமிச்சக்கரவர்த்தி வேறு தேகத்தை யெப்படி யடைந்தானே அதையுமெனக்குச் சொல்லவேண்டுமென்றனன். வியாசமுனிவர் கூறுகிருர்: ஓ அரசனே! வசிஷ்டமுனிவர் மீண்டுந் தேகமடையப் பெற்றதுபோல் நிமிச்சக்கரவர்த்தி யடைந் தானில்லை. இவன் சாபமேற்றவுடன் சரீரமுழுதுங் கொளுத்தப் பட்டவன்போல் தபித்துக்கொண்டிருந்தனன். யாகத்துக்கு வந் திருந்த ருத்விக்குகள் முதலியோர் அவன் படும்பாட்டைக் கண்டு சிந்தாகுலமடைந்து எண்ணுவதாயினர்: இந்தக் கஷ்டத்தில் நாமென்ன செய்யத்தக்கது? தருமப் பிரபுவாகிய அரசன் தீக்ஷையோடு கூடியிருக்கிறுன். யக்ஞமோ முடியாமலிருக்கிறது. முடிவதற்குமுன் விபரீதமோ வந்துவிட்டது. இந்த விபரீதத்தைக் கண்டு விடலாமோவென்றல் விடவுங்கூடாது. அது மகாதோஷம். ஆதலால் கட்டாயமாய் நடத்தவேண்டும். இடையில் அரசனுக்குத் தேகம் போய்விட்டால் யாகத்தை நாமெப்படி முடிப்பது? சாபத்தை தீர்ப்போமென்றல் நாம் சக்தியில்லாதவர்களாயிருக் கின்றே மென்றெண்ணினர். ஓ அரசனே! இவ்வாறு யாக

மந்திரங்கட்குரிய அந்தணர்கள் பலபலவாயெண்ணி முடிவில் இவ்வரசனை மந்திரங்களால் காப்பாற்றுவோமென்று துணிந்து உடனே நானுவித மந்திரங்களால் அந்தப் பிரபுவின் தேகத்தைச் சிறிது சுவாசத்தோடிருக்கும் வகையாகச் செய்து நானுவிதமான சுகந்த கந்தங்களாலும் மலர் மாலைகளாலும் அவன் தேகத்தை யடிக்கடி குளிரச்செய்து விகாரமடையாமல் வைத்துக்கொண்டு யாகத்தைப் பூர்த்திசெய்து வரும்போது தேவர்களெல்லாம் வந்தனர். அவர்கள் வருகையைக் கண்ட ருத்விக்குகள் அவர்களைச் சந்தோஷிக்குமாறு தோத்திரஞ்செய்து அரசனுக்காசிரியரால் வந்த துன்பங்களை விண்ணப்பம் செய்தனர். அவைகளைத் தேவர்கள் கேட்டு நிமிச்சக்கிரவர்த்தியைப் பார்த்துக் கூறுகிருர் : ஓ அரசனே! யாங்களெல்லோரும் உன்னுல் செய்விக்கப்பட்ட யாகத்தால் சந்தோஷமும் திருப்தியுமடைந்தோம். இனி உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக. நீ செய்த இந்த யாகத்தினுல் உனக்கு வேண்டிய தேகமெதுவோ அந்தச் சிரேஷ்டமான தேகத்தை யடையலாம். ஆகையால் உனக்குத் தேவதேகம் வேண்டுமா? மானிட தேகம் வேண்டுமா? எந்தத் தேகத்தை மனதில் கோருகின்றனையோ அந்தத் தேகம் உனக்குண்டாகுமாறு நாங்களனுக்கிரகஞ் செய்கின்ருேம்; உனக்கு வேண்டிய வரமென்னவென்று கேட்டனர். நிமி சந்துஷ்டியடைந்தவனுய்த் தேவர்களைப் பார்த்துக் கேட்கிருன் : எப்போதாவது நாசமடையப்போகிற இந்தத் தேகத்தில் எனக்குக் கோரிக்கையில்லை. ஆகையால் சர்வப் பிராணிகளுடைய நேத்திரங்களில் நான் காற்றுருவமாயிருந்து வசித்தல் வேண்டும். இதுவே என்னுடைய வேண்டுகோளென்றனன். அவன் வேண்டுகோளையுணர்ந்த தேவர்கள் நிமியை நோக்கி, ஓ மகாராஜனே! சர்வ மங்களகரையாயும் சர்வேஸ்வரியாயுமிருக்கின்ற தேவியை நீ பிரார்த்தனை செய்வையாயின் உன் யாகத்தினுல் திருப்தியடைந்திருக்கிற தேவி உன் கோரிக்கையை நிறைவேற்றுவாளென்று கூறிச்சென்றனர். (1–13)

அரசன் தேவர்கள் சொல்லியபடி தேவியைப் பக்தியுடன் திவ்யமான தோத்திரங்களால் போற்றி வாழ்த்திப் பிரார்த்தித்தனன். அம்பிகை அவன்பால் கருணையுடையவளாய்க் கோடிசூரிய ருதித்தாற்போலும் பிரகாசிக்கின்ற திருமேனியுடையவளாய்ப் பிரசன்னமாயினள். அரசன் அம்பிகையைக் கண்டு ஆனந்தபரவசனுய், ஹே அம்பிகே! எந்த ஞானத்தில் எனக்கு மோக்ஷ முண்டாகுமோ அந்த ஞானமும் சர்வ ஜந்துக்களுடைய நேத்திரங்களில் வாசமுமுண்டாக வேண்டுமென்று பிரார்த்திக்க, ஜகன் மாதாவாகிய தேவி அங்ஙனமே ஆருகவென்றனுக்கிரகஞ் செய்து பின்னர், ஓ அரசனே! நீ சகலப் பிராணிகளுடைய நிமையில் வசிக்கவெண்ணியபடியால் தேவர்கள் நீங்கலாக ஏனைய மனிதர்களும் பசுக்களும் பட்சிகளும் நிமைகொட்டுந்தன்மையை யடையப்பெறுமென்று கூறி அங்கிருந்த எல்லாமுனிவர்களையுங் களிக்கச்செய்து திருவுருக்கரந்தனள். தேவி மறைந்தபின்னர் முனிவர்களெல்லாங்கூடி நமதரசனுக்குச் சந்ததி

யில்லாமற் போதல் நலமன்றென்றெண்ணி நிமிச்சக்கரவர்த்தியின் தேகத்துக்குச் சமஸ்காரஞ் செய்து அவ்விடத்தில் அரணிக்கட்டையைப் பிரதிஷ்டைசெய்து புத்திர நிமித்தமாய் மந்திரங்களைக் கூறிக் கடைந்தார்கள். அந்த அரணி கடையப்பட்டிருக்கும்போது சர்வ லக்ஷணங்களோடுகூடின வேறொரு நிமிச்சக்கரவர்த்தி என்று சொல்லும்படியான தோற்றத்தோடு ஒரு பிள்ளை பிறந்தனன். அரணிக் கட்டையைக் கடைந்ததனால் பிறந்தவனாகையால் அவன் மிதி என்றும், ஜனக நிமித்தமாய்ப் பிறந்தவனாதலால் ஜனகனென்றும் பெயர்பெற்றனன். நிமிச்சக்கரவர்த்திக்குத் தேகமில்லாமல் போய் விட்டபடியால் அந்த வம்சத்தில் வரும் அரசரெல்லாம் விதேகர்களென்று கூறப்பெற்றனர். பின்னர் நிமிச்சக்கரவர்த்தியின் மகனாகிய மிதியென்பவன் கங்கா நதியின்கரையில் மனோஹரமாயும் கோபுரம் பிரகாரம் மாளிகை முதலானவைகளோடு கூடினதாயும் தன தானியாதிகளால் சம்பூர்ணமாயுமிருக்கிற ஒரு நகரம் தன் பெயரால் விளங்க மிதுலாபுரி என்று யாவராலும் வழங்கச்செய்தனன். ஓ அரசனே! அந்த வம்சத்தில் எந்த அரசர்கள் பிறக்கிறார்களோ அவர்களெல்லாம் ஞானவான்களாய் ஜனகர்களென்றும் விதேகர்களென்றும் பெயர்பெற்று வருபவரானார்கள். ஓ ஜனமே ஜயனே! நீ விரும்பியவண்ணம் நிமிச்சக்கரவர்த்தியின் வரலாற்றைக் கூறினேனென்றார். (14–31)

ஜனமேஜயன் கூறுகிறான்: ஓ வியாசபகவானே! நீர் கூறும் ஒவ்வொரு கதையிலுஞ் சிற்சில சந்தேகங்களெனக்குத் தோன்றுகின்றன. பல முறை கேட்பதற்கு லஜ்ஜையுடையவனாயினும் தோன்றுஞ் சந்தேகங்கட்கு லஜ்ஜையுண்டாகவில்லை. நானென் செய்வேன்? தேவரீருங் கருணையுடையவராதலால் நான் கேட்குந்தோறுங் கோணாது விடைகூறி வருகின்றீர். அவ்விடையானது எனக்குண்டாகும் லஜ்ஜையை யொழித்து இன்னமுங் கேட்கச் செய்கிறது. ஓ கிருபாநிதியே! நிமியினால் வசிஷ்டருக்குண்டாகிய சாபத்தைக் கேட்கச் சந்தேகமுண்டாயிற்று. அஃதென்னையெனில் நிமிச்சக்கரவர்த்தி சகல தருமங்களையுந்தெரிந்து உலகியலைச் செங்கோன்முறையாக என்றும் மாறாது நடத்த வேண்டியவனாயிருக்க, தனது குருவாயும் பிராம்மணச் சிரேஷ்டராயும் பிரம்ம புத்திரராயுமிருக்கிற வசிஷ்ட முனிவரிடத்தில் பொறுமையாக விருத்தலை ஏனிழந்தனன்? ஆசிரியன் சபித்தால் மாணவன் ஆசிரியனைச் சபிக்கலாமா? அன்றியும் யாகத்தைத் தொடங்கி நடத்திவருங் காலத்தில் தன்னுள்ளத்தில் கோபத்துக் கிடங்கொடுக்கலாமா என்றனன். (32–35)

வியாசர் கூறுகின்றார்: ஓ அரசனே! மனோதருமத்தை வெற்றி கொள்ள வறியாதவரால் பொறுமையடையத் தக்கதல்ல. பொறுமையுடையாரை இவ்வுலகிற் காண்பது மிகவுங் கஷ்டம். அப்பொறுமையோடு ராகத்வேஷங்களுக் கிடமில்லாமல் தாங்குறித்த காரியத்தை முடித்துக்கொள்ளுஞ் சாமர்த்திய முடையாரைக் காண்டலதனினுங் கஷ்டம். எவராயினும் சர்வசங்கபரித்தியாகஞ் செய்ய

வும் நித்திரை பசி தாகம் முதலியவைகளை யடக்கவும் யோகாப்பியா சத்திற் பயிலவும் வன்மையைப் பெறினும் பெறுவர். பொறை யுடைமை யொன்றைமாத்திர முடையராகும் வன்மையை யொருவரு மெய்தப்பெறார். ஓ ஞானசீலனே! சர்வசங்க பரித்தியாகஞ் செய் யத் தலைப்படுவோர் புறத்தே யிருக்குஞ் சங்கங்களை யறிந்து அவைகளைப் பரித்தியாகஞ்செய்ய முயலுவரே யன்றித் தம்மகத் திருக்கும் காமம் குரோதம் லோபம் அகங்காரமென்னு மிச் சங்கங்களை யறியவு மறியார்; பரித்தியாகஞ் செய்யவுஞ் செய்யார். இந்நான்குமே பொறையுடைமைக்குச் சத்துருவா யுள்ளவை. இந்தச் சத்துருக்களை யறிந்தார் இவ்வுலகில் எவ ருள்ளார்? அவர்கள் முன் பிறந்ததுமில்லை; இப்போது பிறந் திருக்கவுமில்லை; இனி பிறக்கப்போகிறதுமில்லை. இவ்வுல கிலின்மை யுண்மைபோல் சொர்க்கத்திலும் பிரம்மலோகத்திலும் வைகுண்டத்திலும் கைலாயத்திலும் மற்றெவ்விடங்களிலுமில்லை யாம். அஃதெப்படியெனின், முனிவர்களும் தவசிகளும் முன் கூறி வந்த ஏனையோரும் மூன்றுலகத்திலு முள்ளவரேயன்றி இல்லாதவ ரன்றே. இவருள் பொறையுடைமை யுடையாரைக் கண்டோமா? இவர்களிடத்திலேயே காணக்கூடாதபோது சாமானியராயுள்ள மனிதரிடத்துக் காணப்போகின்றோமா? மற்றெவற்றைக் காணப் பெறுவோமெனின், பிரகிருதி சம்பந்தமா யிருக்கின்ற மூன்று குணங்களையும் அம்முக்குணங்களின் விகாரச் செயல்களையுந்தான் காணப்பெறுவோம். கபிலமுனிவரென்பவர் சாங்கிய சாஸ்திரத்தில் வல்லவராயும் யோகாப்பியாசத்தில் பயின்றவராயு மிருந்தும் அந்த மஹாஞானவர் வேற்றுமையால் சகராஜனுடைய புத்திரர்களைத் தீயில் கொளுத்திவிட்டனர். ஏனெனின், எல்லாவுயிர்களுந் தோன்றுதற் குக் காரணம் அகங்காரமாதலால் அவ்வுயிர்களின் செயலாகிய காரியமும் அகங்காரமாகவே யிருக்கும். காரியம் காரணமெத் தன்மைத்தோ அத்தன்மையாயிருக்குமேயன்றி அதற்கு வேறாக விருக்குமா? இவ்வுலகினை ஆக்கியுங் காத்தும் அழித்தும் வருகின்ற பிரமன் முதலிய மூவரும் முக்குணவயப்பட்டுள்ளவரே. அக்குண சம்பந்தமில்லா தொழியின் தாம் தாம்செய்யுந் தொழிலில் பிரபுத்வத்தைக் கொண்டிருப்பரா? இப்படியே எல்லாப் பிராணி களும் ஒரு சமயத்தில் ஸத்வகுணப்பிரதானராயும், ஒரு சமயத்தில் ரஜோகுணப் பிரதானராயும், ஒரு சமயத்தில் தமோகுணப் பிரதான ராயும் அவ்வக்குணங்களின் செயல்களைச் செய்வரேயன்றி இம் முக் குண சம்பந்தமற்ற சுத்த ஸாத்விக குணமாத்திரமாகவேயிருந்து அக்குணத்திற்குரிய செயலைச் செய்யவறியார். துரீயப்பொரு ளாகிய பரமாத்மா ஒருவனே குணரகிதனும் குணசகிதர்களாற் காணக்கூடாதவனும் நிர்லேபனும் அவ்யயனும் அப்பிரமேய னும் சநாதனனுமுள்ளவன். அவனது மகாசக்தியாகிய பராசக்தியும் நிர்க்குணையாயும் பரமாத்மாவினிடத்தில் நிலை பெற்றவளாய் அற்பவறிவுடையவர்களா லறியக்கூடாதவளாயும் சர்வ பூதங்களிடத்தும் வாசஞ்செய்கின்றவளாயு மிருப்பவள்.

அந்தப் பரமாத்மாவும் பராசக்தியுமாகிய அவ்விருவரும் எப்பொழுதும் நீங்காது ஐக்கியமாகவேயுள்ளவர். இவ்வா றபின்னமாயிருக்கின்ற பர சிவசக்திகளை யறிகின்றவனெவனோ அவனொருவனே சர்வகுண தோஷங்களினின்றும் நீங்கியிருக்கத் தக்கவனாவன். வேதாந்தங்களும் அந்தப் பரமாத்மா—பராசக்தித் தியானத்தினாலேயே மோக்ஷமுண்டாகிறதென்று கூறுகின்றன. திரிகுண சொரூபமான இச்சம்ஸாரத்தில் இவ்வேதாந்த உண்மை ஞானத்தை எவனறிகின்றானோ அவனே மோக்ஷமடைகின்றான். ஓ அரசனே! அந்த ஞானம் சப்த ஞானம் அனுபவ ஞானமென இருவகைப்படும். சப்தஞானமாவது—வேதசாஸ்திரங்களை யறிந்த புத்திபலத்தினால் உண்டாகும். முன்கூறிய வேதாந்த உண்மை சுத்த ஸாத்விக ஞானமாகும். இந்த ஞானமானது ஞானிகளுடைய சங்க மாத்திரத்தினால் உண்டாகத்தக்கது. அந்த ஞானத்தினால் புத்தியினாற் கற்பிக்கப்படும் அநேக சந்தேகங்கள் உண்டாக்கப் படுகின்றன. அனுபவஞானமானது—சப்தஞான பலத்தினால் தன்னுள்ளேயிருந்து தன்னை வஞ்சிக்கும் அஞ்ஞானத்தையறிந்து அதன் வஞ்சவழியைக் கண்டொழித்தலாம். இந்த ஞானமுண்டாதல் மிகவுங் கஷ்டமாகும். இந்த அனுபவஞானத்தை விட்டுச் சப்த ஞானமாத்திரமா யொருவனிருப்பானாயின் அவனந்த ஞானத்தினாலஞ்ஞானத்தை யொழிக்கவல்லவனாகான். இருளைப் போக்க வெண்ணியவொருவன் தீபம் தீபமென்று வாயினால் மாத்திரஞ் சொல்லுவானாயின் அச்சொல்வன்மையினாலேயே இருள்போகுமோ? அதுபோலாகும் சப்தஞானத்தின் வன்மையென்க. (36–54)

ஓ அரசனே! எந்தக்கர்மம் ஸம்ஸாரபந்தத்தை நீங்கச்செய்கின்றதோ அதுவே கர்மமெனப்படும். எந்த வித்தை மோக்ஷத்துக்குச் சாதனமாகின்றதோ அதுவே வித்தையெனப்படும். ஸம்ஸாரபந்த நிவிர்த்தியைச் செய்யவறியாத கர்மமும் கர்மமல்ல; மோக்ஷ சாதனத்துக்கமையாத வித்தையும் வித்தையல்ல. இவ்விரண்டும் சரீரப் பிரயாசையையும் காரியத்தில் சாபலியத்தையும் கொடுப்பனவாம். நல்லொழுக்கத்தோடு கூடியிருத்தல், பிறருக்குதவி செய்தல், கோபமில்லாதிருத்தல், பொறுமையுடையரா யிருத்தல், தைரியமுடையராயிருத்தல், சந்தோஷமுடையராயிருத்தல் இவை முதலியனவெல்லாம் மோக்ஷசாதனமாயுள்ள வித்தையினால் வரத்தகும் பலனும். இந்த வித்தையும் இதைக்கொண்டு செய்யத்தகும் தபசும் யோகாப்பியாசமுமில்லாமல் காமக்குரோதம் முதலிய சத்துருக்களுடைய நாசமுண்டாகாது. இந்த நாசமும் இந்தச் சத்துருக்கள் தோன்றுதற்கிடமாயுள்ள மனம் நாசமானாலன்றி ஆகாது. ஆகலான் நிமிச்சக்கரவர்த்தி நான் சொல்லியவாறு மனோநாசஞ் செய்திருந்தாலல்லவா தனதாசிரியரிடத்தில் பொறையுடைமையைப் போற்றியிருப்பன். பூர்வத்தில் யயாதி மஹாராஜன் பிருகு புத்திரனாகிய சுக்கிராசாரியனால் சபிக்கப்பட்டவனாயிருந்தும் தான் பிரதி சாபம் அந்தச்சுக்கிரனுக் கிடாமல் அவனால் சபிக்கப்பட்டதாகிய கிழத்தன்மையைத் தானடைந்தனன். இதுவன்றோ பொறையுடை

மைக்கழகு? உலகில் ஒருவன் சாதுவாயும் ஒருவன் துஷ்டனாயும் சாதுவானவனே துஷ்டனாயும் துஷ்டனே சாதுவாயும் இருத்த லியல்பு. இவ்வாறிருக்குமாயின் யாரைக் குற்றமுடையரென்றும் யாரைக் குணமுடையரென்றுங் கூறலாம்? இவற்றை யெண்ணத் தக்கவர் பொறையுடைமையை வேண்டுபவரே! பூர்வத்தில் ஹைஹயரென்கிற அரசர்கள் மிக்க கோபங்கொண்டவர்களாய்ப் பிருகு முனிவருடைய குலத்திற் பிறந்தவர்களாயும் புரோகிதர் களாயு மிருந்த பிராம்மணர்களைப் பொருளிடத்துள்ள ஆசையினால் இவர்களை நாம் கொல்வோமானால் பிரம்மஹத்திப் பாவம் வந்து முன்னிற்குமே என்று சிறிது மெண்ணாமல் அப்பாவம் வருமென்ற ஞானத்தைப் பின்றள்ளி விட்டு அவாவை முன்னாகக்கொண்டு அவ் வந்தணருள் ஒருவரையும் விடாமல் கொன்று விட்டார்கள். இத் தன்மையான அறிவின்மைக்கு யாம் யாது செய்யலாமென்றனர். (54-63)

ஓம் லலாட நயனார்ச்சிதாயை நம:

## 16. பேராசையின் விளைவு

சூதர் கூறுகின்றார் :—வியாச முனிவரால் சொல்லிவந்த ஞான விசேஷங்களையெல்லாங் கேட்டவனாகிய ஜனமேஜயன் இறுதியில் அரசர்களால் பிராமணவதை யுண்டாயிற்றென்கிற விஷயத்தைக் கேட்டு ஆச்சரியமடைந்தவனாய் வினவுகிறான்: ஐயா! பாட்ட னாரே! பிரம்மஹத்தியைப் பார்க்காமல் பிருகு வம்சத்திற் பிறந்த பிராமணர்களை எவர்கள் கொன்றார்களோ அந்த ஹைஹயக்ஷத்திரி யர்கள் எக்குலத்திற் பிறந்தவர்கள்? அவர்களுக்கு அவ்வந்தணரிடம் பகையுண்டான காரணம் யாது? அதனைச் சொல்லவேண்டும். அரசசிரேஷ்டர்கள் காரணமின்றிக் கோபிப்பார்களா? அக்காரணஞ் சிறிதன்றிப் பெரிதாயிருத்தல் வேண்டும். அன்றியும் புரோகிதர் களாகிய அவர்களோடு இவர்களுக்கு வைரமுண்டாக வேண்டிய அவசியமேயில்லை. இதனால் அவர்களிடம் குற்றமுளதென்றெண்ணு கின்றேன். இலதாயின் பூஜிக்கத்தகுந்த பிராம்மணர்களை எப்படிக் கொல்லுவார்கள்? ஓ ஐயா! அந்தணர்களாகிய அவர்கள் குற்ற மான செயலை ஏன் செய்யவேண்டும்? அப்படி அவர்கள் தான் செய்யினும் பலவான்களாயுள்ள இவ்வரசர் பாபத்திற்கஞ்சாமலேன் கொலை செய்யவேண்டும்? இவர்கள் செய்யத்துணிந்த கொலையைப் பார்க்கினும் அவர்களாற் செய்யப்பட்ட குற்றம் பெரிதாயிருக்குமா? இஃது எனக்குச் சந்தேகமா யிருக்கின்ற தென்றனன். இவனது கேள்விகளுக்கு முனிவர் மிகவுஞ் சந்தோஷித்தவராய் அந்தச் சரிதத்தை மனத்தினால் ஞாபகப்படுத்திக்கொண்டு சொல்லத் தொடங்கினார் : (1–6)

ஓ ஜனமேஜயனே! பூர்வத்தில் கார்த்தவீரியனென்னும் ஹைஹயராஜனிருந்தான். அவன் ஆயிரங்கை யுள்ளவனாயும்

மகாபலசாலியாயும் தருமத்திலூக்கமுள்ளவனையும் விஷ்ணுமூர்த்தியின் அவதாரமாகிய தத்தாத்திரேயருக்குச் சிஷ்யனையும் சகல சித்திகளுள்ளவனையும் பிருகு வம்சத்திற் பிறந்தவர்களைப் புரோகிதர்களாக வுடையவனையும் வேதவிதி முறையாய் யாகஞ் செய்வதில் தர்மிஷ்டனையும் தானத்தி லாவலுள்ளவனையும் பிராமணர்களுக்கு வேண்டிய தானங்களைக் கொடுக்கிறவனையுமிருந்தனன். அரசனிடத்தில் அந்தணர்கள்பெற்ற தான தனத்தினால் மிக்க தனவான்களாயும் சிறந்த குதிரைகளை யூர்திகளாக உடையவராயும் ரத்னாபரணங்களன்றி வேறேராபரணங்க ளில்லாதவராயும் உலகில் புகழ்பெற்று வாழ்ந்திருந்தனர். இவ்வாறந்தணர்களை வாழ்வித்த கார்த்த வீரியார்ச்சுனன் காலத்தால் சுவர்க்கத்தை யடைந்தனன். பின்னர் அவன் வம்சத்திற் பிறந்த அரசர்கள் பொருளில்லாது எளியராய் வறுமையடைந்து பொருள் வரும்வழி அறியாது தங்கள் தந்தைபால் தானமேற்ற அந்தணர்கள் பெருஞ் செல்வவான்களாயிருத்தலால் அவர்கள் பாற்சென்று தமது வறுமையைப் போக்கிக்கொள்வோமென் றெண்ணி அப்படியே அந்தணர்பாற் சென்று அவரடி வணங்கி, ஓ ஐயன்மீர்! நாங்களிப்பொழுது தனமற்று தானமேற்க வந்திருக்கின்றேம் ஆதலான் உமக்குரிய அறுதொழிலில் முதலாயுள்ள ஈதற்றொழிலை யெங்கள்பாற் செலுத்த வேண்டுமென்று பிரார்த்தித்தனர். பொருளாசையிற் சிறந்த அவ்வந்தணர்கள், எங்கள்பாற் பொருளேது? உங்களுக்குக் கொடுக்கும் பொருளுடையவர்களாக நாங்களிருப்போமா? அதனை நீங்களறியீரா? போமின்! போமின்!! எங்களிடத்திற் பொருளில்லையென்று கூறினார்களேயன்றி அவர்களுக்குச் சிறிதேனுந் திரவியங் கொடுத்தாரில்லை. அவர்கள் கடுமொழியைக்கேட்ட அரசகுமாரர்கள் தம்மிடந்தானமேற்போரிடத்து தம்மையேற்கும்படிச் செய்த வூழை நினைந்து நாம் செல்லத்தக்கவர்களேயன்றி இவர்களை நாம் நோவதனாற் பயனென்னை யென்று சென்றனர். அவர்கள் சென்றதைக் கண்ட அந்தணருட் சிலர் திரவியத்தைப் பூமியிற் புதைத்தும் தம்மினும் தனத்திற் பெரியவந்தணரிடத்து வட்டிக்குக் கொடுத்தும் தத்தம் கிருகங்களைவிட்டு அரண்யங்களிற் சென்று வறியர்போல் மலை முழைகளிலும் நதி தீரங்களிலும் வசித்து வாழ்ந்திருந்தனர். சிலநாள் கழித்து அரசர்கள் பிருகுவம்சத்தாராகிய அந்தணர்களுடைய ஆச்சிரமங்களிற் சென்று அங்கு அவர்களில்லாமையைக் கண்டு இவ்வந்தணர்களெல்லாம் தேடியபொருள் இவ்விடத்திலிருக்க வேண்டுமேயன்றி வேறெவ்விடத்திற் போக்கவறிவார்? ஆகையால் நாம் இவ்வாச்சிரமங்களில் பூமியைத் தோண்டிப் பார்ப்போமென்று தோண்டச் சிலபொருள் கிடைக்கப்பெற்றுக் கவலையற்று ஆசைப்பெருக்குடையவர்களா யெங்குந்தோண்டி அளவிறந்த பொருளைக் கிரகித்துக்கொண்டு தங்களிடம்போய்ச் செல்வவான்களாய் வாழ்ந்திருந்தனர். (7–21)

இச்செய்தியறிந்த பிராமணர்கள், அந்தோ! அந்தோ!! வென்றேங்கி அரசர்கள்பாற்சென்று, ஓ அரசர்களே! எங்களை ரக்ஷிக்க

வேண்டும்; உங்கள் சரண்புகுந்தோமென்றேலமிட்டலறினர். அவர் களைக்கண்ட அரசர்கள் முன்செய்த கொடுமையை நினைந்து பாணங்களையெடுத்து அதட்டித் துரத்தியோட்டினார்கள். அந்தண ரெல்லாம் இனி நாம் இங்கிருப்போமாயின் நமது பொருள் போன வாறு நம்முயிரும் போமென்றஞ்சி மலைகளையும் வனங்களையும் தேடியோடினர். அரசர்கள் இவ்வந்தணர்க் கருவுகளும் உலகில் வாழக்கூடாதென்று எங்குந் திரிந்து திரிந்து தம்மிடம் தானம் வாங்கினவரேயன்றி வாங்காதாரையும் விருத்தர் பாலர் முதலாயி னாரையுங் கருப்பிணிகளையு மழித்தனர். அக்கொலையால் வரும் பாபத்தைச் சிறிது மெண்ணிலர். அந்தணரெல்லாம் நாமென் செய்வோம் நம்முடைய வம்சமெல்லாம் நாசமடையும்போற் காண் கின்றது. நம்மை ரக்ஷிப்பவ ரெவருள்ளாரென்று பலவாறாய் மனங் கலங்கி அரசருட்சிலரைப் பார்த்துக் கூறுகிறார்கள்: ஐயகோ! நாங்களென்ன பாவஞ் செய்தோம்? உங்கள் தந்தைபால் தானம் நாங்கள் வாங்கினோமில்லை. உங்கள் பொருள் எங்களிடமில்லை யென்ப துண்மை. பிராமண ஸ்திரீகளைக் கொல்வது பெரும் பாவம். இத்தருமத்தை நீங்களறியீரா? கோபங்கொள்ளாது எங்களை யுயிரோடு விட்டுவிடுங்கள். பிருகு வம்சத்திற் பிறந்த கற்புடைய ஸ்திரீகளையும் விடுங்களென்று வேண்டினர். வேண்டியும் அவர்களொருவரையேனும் விட்டாரில்லை. புண்ணிய தீரத்திலுள்ள சில முனிவர்கள் இவர்களை யெதிர்ப்பட்டு, ஓ க்ஷத்திரியர்களே! உங்களுடைய க்ஷாத்திர தருமத்தைப் புண்ணியத்தின் வழி செலுத்தாமல் பாபத்தின் வழி செலுத்துகின்றீர்களே! அந்தண ரொழியின் உலகம் வாழ்வதெங்கே? ஏனிப்படிச் செய்கிறீர்கள்? அந்தணர்களிடம் கோபிக்கவேண்டா மென்றனர். (22–30)

அரசர் முனிவர்களைப் பார்த்துக் கூறுகிறார்: ஓ பெரியோர் களே! நீங்களனைவரும் மகா சாதுக்களாகக் காணப்படுகின்றீர்கள். உங்கள் வாக்குகளில் எங்களால் கொல்லப்படும் அவ்வந்தணர் களுடைய பெயரை வழங்கப்பெறுதலும் பாவம். இவர்களுடைய தீங்கை நீங்களறிந்திலீர்கள். இவர்கள் எங்கள் பூர்வீகர்களை மார்க்கங்களிற் பறிக்குங் கள்வரைப்போல் வஞ்சித்து எங்கள் பொருளையெல்லாங் கொள்ளைகொண்டவர்கள். இவர்களைப்போன்ற வஞ்சகர்களுமுண்டோ? இவர்களுடைய வைதீக ஆசாரமெல்லாம் டம்பமே. இவர்கள் கொக்கைப்போல் கண்மூடியிருக்குந் தியான மானது பிறர்பொருளைக் கொள்ளை கொள்வதற்கேற்ற உபாயங்களை யெண்ணுதலே. ஐயன்மீர்! நாங்கள் வறுமையாளர்களா யிவர் களிடஞ்சென்று எங்கள் குறைகளைக்கூறி எங்களுக்கு வேண்டும் பொருளை இப்போது தருவீராயின் இக்காலவட்டிக்கு அதிகமான வட்டி கொடுக்கின்றோமென்று வேண்டிக்கொள்ள, அதற்கவர்கள் நாங்கள் படும்பாட்டையும் வேண்டிக்கொள்ளு மின்னுரைகளையுஞ் சிறிதுமெண்ணாது வழிப்போக்கர்களுக்குக் கூறுவதுபோல, எங்கள் பால் பணமேதையா? நாங்கள் யாசிக்கின்றவர்களல்லவா? யாகஞ் செய்வதற்கே பணமில்லாமல் நாங்கள் துக்கப்பட்டிருக்கும்போது

உங்களுக்குப் பொருளெப்படிக்கொடுக்கக்கூடும்? போம் போமென் ருர்களையா! எங்கள் கார்த்தவீர்யார்ச்சுனன் இவர்களுக்குப் பொருள்கொடுத்த தெற்றுக்கு? இவர்கள் தங்களைக் காத்துக் கொள்ளுதற்கும் செய்யவேண்டிய தானதருமங்களையுஞ் செய்தற்கு மன்ரே? இவ்வசுரராகிய பூசுரர்கள் ஒரு காசளவேனும் ஒரு யாசக னுக்காவது ஓரந்தணனுக்காவது கொடுத்திருப்பார்களா? தாங்க ளாவது அனுபவித்திருப்பார்களா? பிறருக்குந் தமக்கும் பயன் படாத பொருளுக்குச் சோரபயமும் ராஜபயமும் அக்னிபயமும் இம்மூன்றுமல்லாத வஞ்சனையாற்கொள்வோரதுபயமுமுளவென்று பெரியோர் கூறுவரே. திரவிய லக்ஷ்மியானவள் தன்னை யறத்தின் வழிச்செலுத்தாதவரையும் தம்பொருளைப் பிறருக்குபகரிக்கப்படும் பிறர் பொருளென்றெண்ணுமல் தம்பொருளென்றெண்ணித்தாமே யனுபவிப்பவரையும் விட்டு நீக்குங்கால மெக்காலமென்று அக்காலத்தை யெதிர்பாரா நிற்பள். ஓ முனிவர்களே! நாங்கள் இவர்களைத் தானங்கேட்கவில்லை; உபகாரஞ் செய்யுங்களென்றுங் கேட்கவில்லை; தரும வட்டிக்குங் கேட்கவில்லை. தரும வட்டிக்கு மேல் கால்வட்டி கொடுக்கிருேமென்று கேட்டோம். அதற்கில்லை யென்று கூறினுர்களே! இவர்கள் அந்தணரென்னுஞ் சொல்லுக்கும் உரியவரா? இவர்களன்ருே அறங்கொல்லும் அசுரரென்று சொல்லப்படுபவர்? இவர்கள் எங்களுக்குப் புரோகிதராவரா? அந் தணருக்கு ஆசையங்கமாகச்சொல்லப்பட்டிருக்கிறதா? நிராசையை யொருகாலத்து மெண்ணியிருப்பரா? ஓ ஐயன்மீர்! தனத்திற்கு தானம் போகம் நாசமென்று மூன்றுளதன்ருே? அவற்றுள் அறி விற்சிறந்த சமர்த்தர்களால் தனத்துக்குத் தானமும் போகமுமுண் டாகும். பாபிஷ்டர்களால் நாசமொன்றுமே யுண்டாகும். எவன் தானஞ்செய்யாமலும் தானனுபவிக்காமலும் பூமியிற்புதைத்துவைக் கின்ருனே அவ்வஞ்சகனை அரசன் தண்டிக்க வேண்டுமென்று விதி யுளதாகலான் அவ்விதியைநாடி இத்தண்டஞ்செய்து வருகின்ருேம். ஓ மகான்களே! எங்களை நீவிர் அநீதிமான்க ளென்றெண்ணு தொழியுங்களென் றுபசரித்துச்சொல்லி பிருகு வம்சோற்பவராகிய ஸ்திரீகளைப் பூமியெங்குந் தேடித்திரிந்தார்கள். (31–43)

அவ்வந்தண ஸ்திரீகளெல்லாம் இவர்கள் வருகையைக் கண்டஞ்சி அழுதுகொண்டே நடுநடுங்கி இமயமலையை யடைந் தனர். இவ்வாறு பாபத்தொழிலிற் றலைப்பட்டவர்களான ஹைஹய ராஜாக்களால் பிராம்மணர்கள் பீடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார்கள். ஓ அரசனே! மானிடர்களுக்கு லோபமே சரீரத்திலிருக்கும் பெருஞ் சத்துருவாயும் சர்வதுக்கத்துக்கும் ஸ்தானமாயும் பிராணனை நாசஞ்செய்யத்தக்கதாயும் சர்வ பாபத்திற்கும் மூலமாயுள்ளது. எவனொருவன் லோபத்தையும் ஆசையையுமுடையவனு யிருக் கின்ருனே அவனெப்பொழுதும் மூன்று வருணங்களுக்கும் விரோதத்தைச்செய்வான். அவனே சர்வ சங்கடத்திற்குங் காரண மாய்ப் பரம தருமத்தையும் குலதருமத்தையும் விட்டு மாதாவையும் பிதாவையும் ப்ராதாவையும் பந்துக்களையும் குருவையும் மித்திரனை

யும் பிராம்மணனையும் புத்திரனையும் சகோதரியையுங் கொலை செய்வதற்கஞ்சான். அந்தப்பாபி எந்தக் கெட்டக் காரியத்தைத் தான் செய்யான்? குரோதம் காமம் அகங்காரம் என்னுமிந்த மூன்று சத்துருக்களைப் பார்க்கிலும் லோபமே பலமான சத்துரு வாகும். அதனு லதனையுடையவன் எந்த வேலையைத்தான் செய்யான்? ஓ ஜனமேஜயனே! ஹைஹய ராஜாக்களும் அந்த லோபத்தினுலேயே அளவிலடங்காத பாவத்தைச் செய்து வந்தனர். இவராற் கொல்லப்பட்ட அந்தணர் கூட்டமும் இவ்வண்ண மழி வெய்தியதற்குக் காரணம் அந்தலோபமே யென்றறிவாய் என்றனர். (44–51)

ஓம் லக்ஷ்மீஜ்ஞோஜ்வல திவ்யாங்க்யை நம:

## 17. பார்கவர் பிறப்பு

சூதர் கூறுகின்றுர்:—ஜனமேஜயன், வியாச பகவானை நோக்கி, ஓ ஐயா! அப்பிருகுவம்ச ஸ்திரீகள் அந்தத் துக்க சமுத்திரத்தி லிருந்து எப்படிக் கரையேறினுர்கள்? அந்தப் பிராமணர்களுடைய வம்சம் எப்படி நிலைபெற்றது? மஹாலோபிகளான ஹைஹய ராஜாக்கள் அந்தப் பிராம்மணர்களைக் கொன்றபின் என்னசெய்தார் கள்? இந்த விஷேத சரித்திரத்தை யெனக்குச் சொல்லவேண்டும் என்று வினவ, ஓ பிரம்ம சொரூபியே! உம்முடைய கதாவமிர்தத் தைப் பானஞ்செய்கிறவெனக்குத் திருப்தியுண்டாகவில்லை. பரிசுத்த மாயும் சுகத்தைக் கொடுக்கிறதாயு மிருக்கின்ற உம்முடைய கதா வமிர்தமானது கேட்கக் கேட்க மனிதர்கள் மனதுக்கு இகபோக வெறுப்புண்டாய்ப் பரலோகத்தில் விருப்பத்தைக் கொடுக்கின்ற தென்றனன். வியாசமுனிவர் கூறுகிறுர்: ஓ அரசனே! இமய மலையையடைந்த ஸ்திரீகள் எப்படித் துக்கத்திலிருந்து நீங்கப்பெற் ருர்களோ, அப்படியே இக்கதையைக் கேட்கின்றவர்கள் பாபத்தி னின்றும் நீங்கப் பெறுவரென்றறிவாய். ஹைஹயராஜாக்களால் பயந்தோடிப்போன பிருகுபத்தினிகள் இமயகிரியை யடைந்து நதி யின் கரையில் மண்ணினுல் தேவிரூபத்தைச் செய்து ஸ்தாபித்து ஆகாராதிகளை யொழித்துத் தேவியைத் தியானித்து, ஓ தேவி! நீஎங் களுக்கு வந்திருக்கும் ஆபத்தை யொழித்து நாங்களெண்ணி யிருக் குங் காரியத்தை முடிக்காமற் போவையேயாயின் நாங்கள் மரண மடைவது நிச்சயமென்று சொல்லி அவள் பாதத்தில் வீழ்ந்து நமஸ் கரிப்பதுபோல் படுத்துக்கொண்டார்கள். அவர்களுடைய கனவில் தேவி பிரத்தியக்ஷமாய் திருவாய் மலர்கின்றுள்: ஓ உத்தமமான ஸ்திரீகளே! உங்களுக்குள் ஒருத்தியினுடைய தொடையிலிருந்து ஒரு புத்திரன் பிறக்கப்போகிறுன். அவன் என்னுடைய சக்தியைப் பெற்று எண்ணியிருக்கும் உங்களுடைய காரியத்தை நிறைவேற்றப் போகிறுனென் றனுக்கிரகஞ்செய்து அந்தர்த்தானமாயினள். அந்த ஸ்திரீகள் விழித்துக்கொண்டு மஹா சந்தோஷத்தை யடைந்து இந்

தப் புத்திர பாக்கியம் யாருக்குக் கிடைக்குமோவென் றெண்ணி யிருக்க, தேவி யனுக்கிரகித்தபடியே ஒரு ஸ்திரீயின் தொடையில் கர்ப்பந்தரித்தது. அச்சமயத்தில் அந்த க்ஷத்திரியர்கள் கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு கர்ப்பிணிக ளெங்கே, எங்கே யென்று நான்குபக்கங்களிலுந் தேடிப்பார்த்து வரும்போது தேவி யனுக் கிரகத்தால் கர்ப்பிணியாயிருக்கின்ற ஸ்திரீயைப் பெருங்கூட்டத் துடன் கண்டனர். கர்ப்பிணி அவர்களைப் பார்த்தவுடன் பயந்தவ ளாய் நம்முடைய கர்ப்பத்தைநாமெப்படிப்பாதுகாப்போமென்றலறி யழும்போது கர்ப்பத்திலிருக்கும் சிசுவானது தன் தாயினழுகைக் குரலைக்கேட்டுத் தொடையைப் பிளந்துகொண்டு சூரியனுதித்தாற் போல் வேகமாய் வெளியில்வந்தது. அச்சிசுவின் தேஜஸானது எதிரில்வருகின்ற அந்த க்ஷத்திரியர்களுடைய கண்களைக் குருடாக்கி விட்டது. அக்குருடர்களெல்லாம் அதிசயித்துக் கண்தெரியாம லலைந்து அலறியழுது, அந்தோ! இப்படிச்செய்தது அந்தணர்களு டைய பிரபாவமோ, அல்லது அவ்வந்தண ஸ்திரீகளுடைய பிர பாவமோ, என்றேங்கினவர்களாய் ஒருவருக்கொருவர் நாமிங்கே ஸ்திரீகளைத்தான் கண்டோமேயன்றிப் புருஷர்களைக் கண்டோ மில்லை; ஆதலால் இது செய்தது ஸ்திரீகளேயென்று துணிந்து, அந்தோ! நாம் இன்னமும் இங்கிருப்போமாயினென்ன தீங்கு விளையுமோ? நாம் இதுகாறுஞ் செய்துவந்த ஸ்திரீஹத்திகள் நம்மை ஹத்திசெய்யும் போலிருக்கின்றனவே; நாம் யாரைச் சரணடைய லாம்? நமக்குக் கண்களும் போயிற்றே யென்றேங்கி அங்குள்ள ஸ்திரீகளை நமஸ்கரித்துக் கைகூப்பிநின்று கூறுகிறார்: (1–20)

ஓ அன்னையீர்! நாங்கள் உங்களுடைய அடிமையாட்களாயி னோம். மகா பாபிகளாய்க் கொலைசெய்து வந்த நாங்களெல்லாம் உங்களுடைய பார்வையால் கண்ணிழந்தவர்களாயினோம். ஓ கற்புடைய மங்கையரே! எங்களை உங்களது திருவுருவங்களைக் காணவண்ணஞ்செய்து விட்டீர்கள். உங்களுடைய கற்பின் றிறத்தையும் தபோபலத்தையு மென்னென்று சொல்வோம்! எங் களுக்கு நேத்திர பிக்ஷையைத் தந்தருள்வீராக; நாங்கள் செய்து வந்த கொடுமையை ஒரு சிறிது மெண்ணுதீர்கள்; எண்ணுவீர்களா யின் நாங்கள் அந்தகர்களாகவே யிருப்போமே. அது பாவமல்லவா? புண்ணியாத்மாக்களாக விருக்கின்ற வுங்களுக்கு எங்களாலிப்பாவம் வருவானேன்? அன்னைமீர்! நாங்கள் வேண்டியவாறுநேத்திரபிக்ஷை யைத் தருவீர்களாயின் நாங்களும் பாபத்தினின்றும் விடுபடுவோம்; உங்களுக்கும் பாபம்வந்தணுகாது. பாபிகளாகிய நாங்களெவ்வளவு பாபஞ்செய்யினும் எங்களை உலகமிகழ்ச்சி செய்யாது. இதுபோல புண்ணியப்பெருக்குடைய நீங்கள் கண்ணைத் தராதொழிதலாகிய இச்சிறு பாவத்தைச் செய்வீராயின் உலக முங்களைப் புகழ்ச்சிசெய் யாது. ஆகலான் புகழ்ச்சியை விரும்பிச் செய்யத்தகுந்த நீவிர் இவ்விகழ்ச்சிக் கிடஞ்செய்து கொள்ள லழகாகுமா? எங்களுக்குக் கண்களைத் தருவீராயின் உங்களடிகளை வணங்கி உங்களிடத்து வைரமு மொழியப் பெற்று உங்கள் திருவுருவத்தைக் கண்களாற்

காணுது கற்பு நிலைமையை மாத்திரம் மனத்தால் மதித்து வாக்கி ணுற்புகழ்ந்து எங்களிடம்போய்ச் சேருகின்ருேம். கர்ப்பிணிகளா யிருக்கின்ற நீங்கள் புத்திரபாக்யம்பெற்றுச் சுகமாய் வாழக்கடவீர்க ளென்று வணங்கியும் வாழ்த்தியும் கதறுகின்றவர்களாயினர்.(21–29)

அவ்வரசர்களது வார்த்தைகளைப் புத்திரபாக்யம் பெற்றவளா கிய பிராமண ஸ்திரீ கேட்டுச் சற்றிரங்கினவளாய் அவர்களைப் பார்த்துக் கூறுகின்றனள்: ஓ அரசர்களே! உங்களுடைய நேத்திரங்களை நானும் என்னினத்தவருமாகிய கற்புடைய மங்கையருங் கெடுக்கவில்லை. உங்கள் மீது எங்களுக்கென்ன கோபம் இருக்கின்றது? நான் சத்தியமாய்ச் சொல்லுகிறேன். இப்போது நீங்கள் என்னை நோக்கிவருஞ் சமயத்தில் என் தொடை யைக் கர்பஸ்தானமாய்க் கொண்டிருந்த பிருகுமுனிவர் வெளிப் பட்டு வந்து உங்கள்மீது கோபமுடையவராய்த் தனது தேககாந்தியி ஞல் உங்கள் கண்களை யழித்தனர். அதன் காரணத்தைக் கேட்பீர் களாக: தன் வம்சத்தவரும் பந்து வர்க்கத்தவருமான அந்தணர் களையும் அந்தணஸ்திரீகளையும் கர்ப்பிணிகளையுஞ் சிறிது மெண் ணுது நீங்கள் கொலைசெய்து வந்தபடியால் மிகவுங் கோபங்கொண் டவரா யுங்களினத்தவரை யெல்லாங் கொலை செய்வதற்கெண்ணி உங்கள் கண்ணுக்குத் தான் தோன்ருதிருக்கும் வண்ணம் என்னு டைய உதரத்தைக் கர்ப்பஸ்தானமாகக் கொள்ளாமல் தொடையைக் கர்ப்பஸ்தானமாகக் கொண்டு நூறு வருஷமாகிய இக்கால பரியந் தம் அங்கிருந்த வண்ணமே வேத வேதாந்தங்களைக் கற்றுணர்ந்து நிறைந்த பண்டிதராய் உங்களைக் கொல்லுஞ் சமயம் பார்த்திருந்து இன்று நீங்களென் னெதிர்ப்படவே அவரும் என் தொடையினின் றும் வெளிவந்து உங்களுக் கெதிர்ப்பட்டு உங்களனைவரையும் அந்த கர்களாக்கினுர். இனி யவரெண்ணியபடிச் சங்கரிப்பாரென்பதிற் சந்தேகமில்லை. அவருக்கோ மகாதேவியின் கிருபை யிருக்கின்ற மையால் அவர் யாருக்கு மஞ்சார். ஆதலால் நீங்களவரைச் சரண மடைந்து நமஸ்கரிப்பீர்களாயின் அவர் ஒரு சமயம் சந்தோஷ சித்தராய்த் திருஷ்டிதானஞ் செய்தாலுஞ் செய்வார். அத்தானம் என்ஞல் செய்ய முடியாதென்றனள். (30–37)

இந்த வார்த்தையைக் கேட்ட அரசர்கள் உண்மையென நம்பி, ஓ பார்க்கவரே! உம்மை நாங்கள் நமஸ்கரிக்கின்ருேம்; யாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளுமென்று பன்முறையும் பிரார்த் திக்கவே அந்தப் பிருகு முனிவர் சந்தோஷமுடையவராய்க் கூறு கிருர்: ஓ அந்தகர்களே! உங்களுக்குக் கண்களைத் தந்தேன். நீங்கள் பிழைத்திருக்க வேண்டுமாயின் உங்கள் கிருகம்போய்ச் சேருங்கள். இனி அந்தணர் வர்க்கங்களுக்கு யாதொரு தீங்கும் செய்யாது அவர்களை வாழவைத்து நீங்களுஞ் சுகமாய் வாழக்கட வீர்களென்று ஆசீர்வதித்தனர். பின்னர் அவர்கள் விடைபெற்றுத் தங்களிடம்போய்ச் சேர்ந்தனர். பார்கவரையும் அவரது தாய் பாதுகாத்து வந்தனளென்று வியாசர் கூற, ஜனமேஜயன் வினவு கிருன்: ஓ முனிவரே! க்ஷத்திரியர்களுடைய கொடுஞ் செயலைக்

கேட்டதனுல் இந்த க்ஷத்திரியர்கள் கொல்வதற்கும் அந்தணர்கள் கொல்லப்படுவதற்குங் காரணமாய் நின்றது திரவியத்தினிடம் வைத்த வாசையென்றே தீர்மானிக்கிறேன். இனி அந்த அரசர்கள் ஹைஹயர்களென்று பிரசித்தி பெற்றதற்குக் காரணஞ் சொல்லும். ஓ ஐயா! எது என்பவனிடமிருந்து யாதவரும், பரதனிடமிருந்து பாரதரும் பிறந்தனர். அக்குலத்திலேயே ஹைஹயனென்ருெருவ னிருக்க வேண்டுமென் றெண்ணுகிறேன். அவ்விவரத்தைக் கூற வேண்டுமென்று வினவினன். வியாசர், நீ கேட்ட ஹைஹயர்கள் சரிதத்தை விரிவாய்ச் சொல்லுகிறேன், கேட்பாயாகவென்று கூறு கிருர் : (38–48)

ஓ அரசனே! அளவில்லாத காந்தியையுடைய சூரியன் புத்திர ஞன ரேவந்தன் உச்சைச்ஶ்வரமென்னுங் குதிரை மீதேறிக்கொண்டு வைகுண்டஞ் செல்ல, லக்ஷ்மிதேவி, இது நம்முடன் பாற்கடலிற் பிறந்த குதிரையல்லவாவென் றதனழகைக் கண்ணிமை கொட்டாது பார்த்து நிற்க, விஷ்ணுமூர்த்தியாகிய புருஷோத்தமர் குதிரை மீதிருக்கிற புருஷனைப் பார்த்து அவனழகுக்கு மிகவும் வியந்து, லக்ஷ்மியைப் பார்த்து, ஓ கமலநாயகி! இவன் யார்? அங்கமுள்ள மன்மதனே? மூன்றுலகையும் ஓரிமைப்போதில் சுற்றிவருகின்றவ ஞகக் காணப்படுகின்ருன். இவன் செய்தி யுனக்குத் தெரியுமோ வென்று கேட்க, அவளதைக் கேட்பதற்கும் அதற்கு விடைபகருவ தற்கும் செவியும் நாவுமாகிய புலன்கள் கட்புலனேடு கலந்து குதி ரையின் வசப்பட்டிருத்தலால் விடைகூறவில்லை; அவளென் செய் வாள்? அதனையறியாத விஷ்ணுமூர்த்தி முன்கேட்டவாறு பல முறையுங் கேட்க முறை பிறழ்ந்திருக்கின்ற லக்ஷ்மி உரையாடா மலே யிருந்தனள். இவளுரையாடாதிருக்குங் காரணமென்ன வென்று விஷ்ணுமூர்த்தி யூகிக்கவே அவளது நிலைமையைச் சற் றுணர்ந்து கூறுகிருர் : ஓ செந்தாமரையாளே! என்ன பார்க்கின் ருய்? உனது கண் இமைகொட்டா திருக்கப் பெற்றதற்குப் பிரயோ ஜனம் இக்குதிரையைப் பார்ப்பதுதானே? உனது மனத்தை இக் குதிரையின் பேரழகோ கொள்ளை கொண்டது? யான் கேட்கும் விஞவுக்கும் விடைதருவதற் கசக்தளாய் மெய்யும் மறந்திருக்கின் றனை! உனக்கு இக்குதிரையின் மீது மோகம் வந்திருப்பினும் நான் கேட்கும் விஞக்களுக்கு விடை கூறலாகாதா? அந்தோ! அந்தோ!! இனி நீ எல்லாவிடத்தும் ரமிக்குந் தன்மை யடையப் போகின்ற படியால் ரமையென்னும் பெயரையும், நீ எவ்விடத்தும் நிலையற்றுச் சஞ்சலையாயிருக்கப் போகின்றபடியால் சஞ்சலையென்னும் பெய ரையும், பிரகிருதிமாயை ஸ்திரம்போற் காட்டி யெப்படி ஸ்திரமில்லா திருக்கின்றனளோ அப்படியே ஸ்திரமில்லாத புத்தியையும் பெற் றிடுதி யென்று வசைமொழி கூறிப் பின்னும் நீ என் சமீபத்தி னின்றுகொண்டே ஒரு மானிடனேறி வந்த குதிரையைப் பார்த்து மோகித்தபடியால் நீ பூலோகத்தில் பெண் குதிரையாகப் பிறக்கக் கடவாயென்றனர். (49–61)

அச்சாபமொழியைக் கேட்ட லக்ஷ்மி மனந்திடுக்கிட்டு விஷ்ணு

மூர்த்தியைப் பார்த்துக் கூறுகிருள் : தேவர்களுக்கெல்லாம் பிரபுவாயும் எனக்கு நாயகராயும் ரக்ஷக மூர்த்தியாயு மிருக்கின்ற நீர் நான் பார்த்த குற்றமொன்றுக்குப் பல சாபமிட்டீரே. எதன்பொருட்டு அவ்வளவு சாபத்துக்கென்னை யாளாக்கினீர்? இவ்வளவு கோபம் உம்மிடத்தில் நான் பார்த்ததில்லை; உமக்கிருந்த பிரேமை எங்கே போயிற்று? என்னிடம் வைத்த பிரேமை யென்றுமழியாதென்று நினைத்திருந் தேனே. நீர் சொல்லியவையெல்லாம் வஜ்ராயுதம் போலிருக் கிறதே; அதைச் சத்துருவினிடத்திலல்லவா செலுத்த வேண்டும்? சிநேகமுள்ளாரிடத்துச் செலுத்தலாமா? உம்மிடமெப்போதும் வரம் வாங்கத் தக்கவளான நான் இப்போது சாபத்தை எப்படி வாங்கு வேன், நீர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆவிவிடுகிறேன். நான் உம்மைப் பிரிவதனுலுண்டாகும் விரகாக்கினியினுல் தவிப் பேளு, ஜீவிப்பேளு? ஓ பிரபுவே! எப்போது எனக்கிட்ட இச்சாபம் நீங்கப்பெற்று உமது சமீபத்தை வந்தடையப் பெறுவேன்? என்மீது தயவு வைத்துச் சொல்லியருளுமென்றனள். விஷ்ணு மூர்த்தி, ஓ கமலாசனீ! பூலோகத்தில் எப்போதுனக்கு எனக்குச் சமானமான பிள்ளையுண்டாகின்ருனே அப்போது என்னிடம் வாழப்பெறுவாயென்றனர். (62–69)

ஓம் லக்ஷகோட்யண்ட நாயிகாயை நம:

## 18. லக்ஷ்மியின் தவம்

சூதர் கூறுகின்ருர் :—அப்போது ஜனமேஜயன் வியாசமுனி வரைப் பார்த்து, பகவானே! வைகுண்டத்துக்கு வந்த ரேவந்தன் என் செய்தான்? காலவசத்தினுல் லக்ஷ்மியானவள் விஷ்ணுமூர்த்தியால் சபிக்கப்பட்டபின்னர் எவ்விடத்தில் எவ்வாறு பெண் குதிரையாய்ப் பிறந்தனள்? மானிட சஞ்சாரமில்லாத அரண்யத்தில் என்ன செய்து காலத்தைக் கழித்துப் புத்திரனை எவ்வாறு பெற்று எவ்வளவு காலங் கடந்து விஷ்ணுவை யடைந்தாளென்று வினவ, வியாசமுனிவர், ஓ அரசனே! கேட்கக்கேட்கச் செவிக்கின்பந்தரும் இச்சரிதத்தைக் கூறுகின்றேன், கேட்டு மகிழ்வாயாக என்று கூறத்தொடங்கினர்:

ஓ அரசனே! வைகுண்டம் வந்த ரேவந்தன் தன்முன் லக்ஷ்மியை விஷ்ணுமூர்த்தி சபித்ததைப் பார்த்து பயந்தவனுய்த் தூரத்திலிருந்தவண்ணமாக அவரை நமஸ்கரித்துத் திரும்பி அதிவேகமாய்த் தந்தையிடம் வந்து லக்ஷ்மிக்கு நேர்ந்த சாபத்தைக் கூறியிருந்தனன். இவன் செய்தியிங்ஙனமிருக்க, லக்ஷ்மியானவள் விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரித்து விடைபெற்றுப் பூவுலகில் சூர்ய பத்தினி தவம்புரிந்த அரண்யமடைந்து பெண் குதிரை வடிவேற்றுக் காளிந்தி நதியோடு தமஸா நதி சங்கமிக்கும் சர்வசித்திகரமாகிய அப்புண்ணிய க்ஷேத்திரத்தில் தவசிந்தனையோடுமிருந்து, மகா தேவரும் சங்கரரும் சர்வ வாஞ்சிதப் பிரதரும் திரிசூலதரரும்

சந்திரசேகரரும் பஞ்சானனரும் தசபுஜரும் கௌரீ தேகார்தரும் கர்ப்பூர கௌரதேகரும் நீலகண்டரும் திரிலோசனரும் வியாக்ராஜினதரரும் கஜசர்மோத்தரீயரும் கபாலமாலாதரரும் நாகயக்ஞோப வீதருமாகிய சதாசிவமூர்த்தியை ஒரு நெறியமனத்தாற் றியானித்து ஆயிரந் தேவவருஷம் வைராக்கியத்துடன் அதிவுக்ரமான தவம்புரியவே, மகாதேவர் மகிழ்ந்து பார்வதிசமேதராய் ரிஷபாரூடராய் பிரத்யக்ஷமாய் அந்த லக்ஷ்மிதேவியைப் பார்த்துத் திருவாய் மலர்கின்றனர் : (1–18)

ஓ சர்வமங்களே! நீ யாதுகருதித் தவஞ்செய்கின்றாயதனைச் சொல்வாயாக. சர்வாபீஷ்டங்களையுந் தருகின்றவனையும் சர்வலோக சிருஷ்டனையும் சர்வலோகப் பிரபுவாயும் போகமோக்ஷப் பிரதனையும் வாசுதேவனையுமிருக்கிற வுனது நாயகனைவிட்டு என்னைத் தோத்திரஞ் செய்கின்றனையே, இது நீதியாமா? வேதத்தில் ஸ்திரீகளுக்குப் பர்த்தாவே தெய்வம்; வேறொரு தெய்வமில்லை; பர்த்தா எத்தன்மையனாயினும் அவனுக்குப் பணிவிடை செய்வதே தருமமென்று கூறப்பட்டிருக்கிறது. உனது நாயகனை நாரணனே எல்லாராலுஞ் சேவிக்கத்தக்கவன். எப்பொழுதும் யோக்கியமாயுள்ளவன். வேதத்திற் சொல்லியபடி உனது நாயகனாகிய அவனை நீ தியானிக்க வேண்டியவளாயிருக்க, அவனைவிட்டு ஏன் என்னைத் தியானிக்கின்றாயென்று கேட்டருளினர். லக்ஷ்மிதேவி யடிபணிந்து பிரார்த்திக்கின்றாள் : என்பால் கருணைகூர்ந்துவந்த பரமேஸ்வரரே! நானென்னுயகனால் இவ்வுருவாகச் சபிக்கப்பட்டேன்! எனக்குப் புத்திரப் பேறெப்போதுண்டாகுமோ அப்போதுதான் இச்சாப விமோசனமும் வைகுண்டப் பிராப்தமுமுண்டாமென்று அவராலேயே கூறப்பெற்றுள்ளேன். எனக்கு நாயகனில்லாமல் புத்திரனுண்டாவதெப்படி? அதற்கு வழி அவருங் கூறினாரில்லை, நானுங் கேட்டேனில்லை. அவரோ நாயகியில்லையென்கிற கவலையற்றவராய் வைகுண்டத்தில் வாழ்கின்றனர். நானோ நாயகனில்லையென்கிற கவலையுடையவளாய் இவ்வரண்யத்தில் திரிந்தலைகின்றேன். தேவரீர், உன் நாயகனை விட்டு என்னையேன் தியானிக்கின்றாயென்று கேட்டருளியது என்னிலைமை யறிதற்கோ? உமதுண்மை வெளிப்படுத்தற்கோ? அது யானறியுந் தரத்ததோ? ஆயினுஞ் சில விண்ணப்பம் செய்கின்றேன் : ஸ்திரீகளுக்கு தெய்வம் நாயகனே; வேறில்லையென்று வேதங் கூறியதென்றருளியதுண்மையே! ஸ்திரீகளுக்குத் தந்நாயகனே தெய்வமென்னுங்கால் அவன் அந்த ஸ்திரீயொழிந்த மற்றையருக்கு தெய்வமன்றென்று ஏற்படுகின்றதல்லவா? தெய்வமாயிருப்பவன் யாவருக்குந் தெய்வமாயிருக்கவேண்டியவனேயன்றி ஒருவருக்குமாத்திரம் தெய்வமாயும் மற்றையருக்கெல்லாம் மனிதனுமிருப்பனா? அப்போ தவனிடத்துள்ளது மானிடத் தன்மையா? தெய்வத்தன்மையா? அவனிடத்துள்ளது மானிடத்தன்மை; இவள் பாவிக்கவேண்டியது தெய்வத்தன்மையென்றுணரவருகின்றது. இவ்வுணர்ச்சியை இன்னமுமாராயுங்கால் இவனிடத்துள்ள உண்மைத்தன்மை மானிடத்

தன்மையன்றி தெய்வத் தன்மை இல்லையென்றும், இவனிடத்தில் பாவித்த தெய்வத்தினிடத்துள்ள உண்மைத்தன்மை அவரவர் பாவிக்குந் தெய்வத்தன்மையா யிருப்பதேயன்றி பாவித்தற்கிடமா யிருக்கும் அவ்வப் பொருளின்றன்மை யுடையதல்லவென்றும் விளங்குகின்றது. இவ்வுண்மையால் வேதம், மானிடனை மானிடனுகப் பாவித்தலாலவன் பதியாகமாட்டான்; அவனைத் தெய்வமாகப் பாவித்தால்தான் பதியாவான். அப்பதிபாவனைதான் சர்வப் பிரயோஜனமுந் தரும்; அப்பதிபாவனை செய்யாவிடின் இவள் யாதொரு பயனுமற்றுப் பதிதையாவாளென்று அவளுக்குத் தெய்வத் தன்மையை யுணர்த்தி அத்தெய்வத்தை வழிபடுவதற்கான வழி பர்த்தாவெனக் காட்டியதேயன்றி இந்தப் பர்த்தாதான் தெய்வம், தெய்வமென்பது வேறில்லையென்றுணர்த்த அவ்வாறு கூறிய தன்றே. ஆகவே என்னுடைய பர்த்தாவிடம் நாடோறும் பாவித்து வந்த தெய்வத்தையே இப்பொழுதும் பாவித்துத் தியானித்து வந்தேனேயன்றி வேறு யாரைத் தியானித்தேன்? அத்தெய்வம் தேவரீராகையால் இன்று யான் காண வெளிப்பட்டு வந்தீர். நீரன்றி யான் தியானித்து வந்த தெய்வம் என்னுயகனுகிய நாரணராகவே யிருப்பராயின் அவரே வந்திருப்பாரன்றே? ஆக லான் அவரவரே; நீர் நீரே. இதனுல் அவர் அவராக விருத்தலாகிய வொருதன்மை யுடையவரென்றும் நீர் எல்லாப் பொருளாயும் ஆகாதவராயு மிருத்தலாகிய இருதன்மை யுடையவரென்றும் அறியக் கிடக்கின்றது. இவ்விரு தன்மை தேவரீருக்குண்மையாத லால் நானென் நாயகனுடிருந்து உம்மை வழிபட்ட அக்காலத்து நீராகவேயிருந்து எனக்கு எல்லாச் சுகத்தையுந் தந்துவந்தீர். நானென் நாயகனுகிய அவரைவிட்டு உம்மை வழிபடும் இக்காலத்து நீரும் அவருக்கு வேருய் வந்து நான் வேண்டுஞ் சுகமளிக்க வந்தீர். எந்நாயகன் அவர் அவராகவே யிருக்குந் தன்மையுடையவ ராகலால் அவர் நீராக வந்திலர். ஓ சங்கரரே! தேவரீர் யாவுமாய் யாருமாயிருக்குந் தன்மை யுடையீராதலால் முன்னொன்னுல் அவராவுமிருந்தீர், பின் இப்போது வேருயிருக்கும் உண்மையுங் காட்டவந்தீர். ஆகலான் இப்போது வேண்டிய வரமெதுவோ அதனைக் கொடுத்தருளும். இவ்வுண்மை யிங்ஙனமிருக்க, எங்களிரு வருடைய தவவிசேஷத்தால் தேவரீருக்கும் அவருக்கும், பார்வதி யாருக்கும் எனக்கும் பேதமில்லாத தன்மையும் பெற்றிருக்கின் ஞேம். இவ்விஷயத்தில் சந்தேகமில்லை. (19–31)

ஓ சர்வஜ்ஞரே! நீ என்னையேன் தோத்திரஞ் செய்கின்ருயென் றீர். நாராயணர் எனக்கு நாயகர்; நீர் தெய்வம். நான் அவரை நீராகவெண்ணும்போது நீர் அவராகின்றீரல்லவா? இத்தன்மை யான அபேதத்தை யறிந்தே உம்மை நான் தோத்திரஞ் செய்தேன். இவ்வபேதத்தன்மையை யறியாமல் நான் தியானமாவது தோத்திர மாவது செய்திருப்பேனுயின் எனக்குத் தோஷமுண்டாகுமென் றனள். சிவனுர் லக்ஷ்மியினது ஞானவிசேஷத்தை யறிந்து மகிழ்ந்தவராய், ஓ கமலாக்ஷி! நீ சொல்லிவந்த நியாயப்படி விஷ்ணு

வுக்கும் எனக்கும் அபேதமென்பது சத்தியமே. இந்த நியாயம் உனக்கெப்படித் தெரியவந்தது? யான் எல்லாமாயிருக்குந் தன்மை யாகிய ஏகத்வத்தைத் தேவர்களும் முனிவர்களும் வேதாந்த முணர்ந்த ஞானிகளும் குதர்க்கத்தாலறியாமல் பேத புத்தி யுடைய வர்களாய்த் துவேஷிக்கின்றனர். இவர்களிங்ஙனமிருக்க, உலகில் எனக்குப் பக்தர்களென்று சொல்லப்பட்ட பலர் விஷ்ணுவைத் துவேஷித்து நிந்திக்கின்றவர்களாயும், விஷ்ணுபக்தர்களென்று சொல்லப்பட்ட பலர் என்னைத் துவேஷித்து நிந்திக்கின்றவர்களாயு மிருக்கின்றனர். இதற்குக் காரணம் தேவியினுடைய மாயையினால் அவர்கள் கவரப்பட்டிருக்குந் தன்மையேயாம். ஏனெனில், பக்தர்களென்று சொல்லப்பட்ட இவர் ஸ்தூல உருவங்களைக் கண்டு பக்திபண்ண வந்தார்களேயன்றி சொரூப உண்மையைக் கண்டு பக்திபண்ண வந்தவர்களல்லர். சொரூபவுண்மையை யறியப் புகு வாராயின் துவேஷமுடையவராகார்; ஸ்தூலவுருவம் பல வேற்றுமை யாயுள்ளது; சொரூபம் வேற்றுமையாகாது ஒரு தன்மையாயுள்ளது. ஆகவே ஒரு தன்மையாயிருக்கும் சொரூப உண்மையைவிட்டுப் பல தன்மையாயிருக்கும் வடிவத்தைப்பற்றிஞராதலின் கண்டஞ் ஞான முடையவராய்ப் பேதவாதத்துக்குள்ளாகின்றனர். என்னுடைய அபேதத் தன்மையாகிய ஏகத்வத்தை யறிவதென்றால் அகண்ட ஞானமும் புண்ணியவிசேஷமும் பெற்றவரா யிருப்பி னறிவர். அவர்களிடத்தில் தேவியினது மாயாவிலாசம்போய் ஞானவிலாச முண்டாகும்; இது யாவர்க்குங் கிடைத்தலரிது, கஷ்டப்பட்டறிதல் வேண்டுமென்று சிவபிரானருளவே லக்ஷ்மிதேவி மிக்க ஆராமை யுடையவளாய், ஓ மஹேஶ்வரா! தேவரீர் கஷ்டமென்று கூறிய துண் மையே. அடியாளை இந்த நியாயமெப்படி உனக்குத் தெரியவந்தது என்றருளினீரல்லவா, அதனை இனி விண்ணப்பிக்கின்றேன்: (32–38)

என் நாயகரான நாராயணர் ஒரு காலத்தில் பத்மாசனராய் வீற்றிருந்து தியானித்துக் கொண்டிருந்தனர். அதனைக்கண்ட நானதிசயித்தவளாய் அவர் தியானநிலையினின்று நீங்கியவுடன் அடிபணிந்து நானிதுகாறு மும்மையே தெய்வமென் றெண்ணி யிருந்தேன். திருப்பாற் கடலில் நான் தோன்றிய காலத்திலும் அங்கிருந்த தேவர்களையெல்லாம் பார்க்க அவருள் நீரே யதிக ரென்று தெரிந்து உம்மை நாயகனைக் கொண்டேன். அங்ஙன மிருக்க நீரிப்பொழுது தியானிக்கின்றீரே யாரை? அவரும்மிலும் அதிகமான தெய்வமாக வல்லவா யிருத்தல் வேண்டும்? அத் தெய்வமா யுள்ளார் யார்? அதனைச் சொல்லும்; எனக்குச் சந்தேகமா யிருக்கிறதென்று வினவினேன். அவர், ஓ கமலநாயகி! எவனதிசீக்கிரத்தில் சந்தோஷிக்கிருனே, எவன் பார்வதிநாதனே, அவன்தான் என்னிலுமதிகன். அந்த ஈஶ்வரனைத்தான் தியானிக் கின்றேனென்று கூறியதேயன்றிச் சில உண்மை கூறுகிறே னென்ருர். என்னையெனின், அவன் சர்வேந்திரியாமித்வம் உடையவனுதலால் எல்லாவுயிருள்ளு முள்ளவனுயிருக்கின்ருன்.

உள்ளாயிருக்குந் தன்மையைக்கண்டு சோகம்பாவனைசெய்வா ராயின் உள்ளாயிருப்பதேயன்றி இவன்தானேயா யிருக்கின்ருன். தானேயாயிருக்குந்தன்மையை அவனருளாற்கண்டு அன்புசெய்து தியானமாத்திரமாகவே நிற்கப்பெறுவாராயின் தானே யிவனுய் நிற் கும் நிலைமையை யுடையவனுகின்ருன். இந்நிலைமைகூடிய பின்னர் இவனவன்ருன், அவனிவன்ருன் ; இவன் செய லவன்செயல்தான் அவன்செய லிவன் செயல்தான். இவ்வத்வைத வுண்மையையே வேதாந்தங்கூறுவதாகிய உண்மையும். ஓ செல்வச்சொரூபிணியே ! நானவ்வேதாந்தவுண்மையுணர்ந் துள்ளேனுதலால் நானிப்பொழுது சர்வேந்திரியாமியாயிருக்கின்ற அப்பரமேஶ்வரனைச் சோகம்பாவனை முறைமையாலும் அன்பின் வசப்பட்ட தியான முறைமையாலும் தியானித்துவருகின்றேன். இவ்வாறு இடைவிடாது நான் தியானிப் பதனுல் தேவதேவனுய தன்னைத் தியானிக்கின்றே னென்று அவ னென்னை இடைவிடாது எண்ணுகின்றவனுயிருக்கின்ருன். இவ் வாறு இடைவிடாது இருவரும் தியானித்தல் நினைத்தலாகிய செய லுடையோ மாதலால் நானப்பரமபதிக்குப் பிராணனுயிருக்கின் றேன். பக்தருக்குப் பக்தராயிருக்கின்ற அவன் எனக்குப் பிராணனு யிருக்கின்ருன். நானவனிடத்தி லன்பாலும், அவனென் னிடத்தி லருளாலுங் கலந்திருக்குங் கலப்பினையறிந்து பேத மின்மையையுணராது என்னை வழிபடும் பக்தரென்று பெயருடை யோர் என்னைக் கடவுளாகப் புகழ்ந்து அவனை யிகழின் நிச்சய மாய் நரகத்தையடைவர். இப்பொழுது நான் சொல்லியவை யுண்மையென்று அக்காலத்தில் ஏகாந்தஸ்தானத்தில் தேவரீரது சொரூப வுண்மையைக் கூறியிருக்கின்ருர். ஓ எனது நாயகருக்கு ஆத்மநாயகரா யிருக்கின்ற பிரபுவே ! தேவரீர் நாராயணருக்குப் பிரியராயிருக்கும் உண்மையுணர்ந்தே உம்மைத் தியானித்தேன் ; தோத்திரஞ் செய்தேனென்றனள். மஹேஶ்வரர் மகிழ்ந்தவராய் திருவாய்மலர்கின்ருர் : (39–49)

ஓ லக்ஷ்மியே ! உன துண்மைஞானத்துக்கும் அன்புக்கும் நானதிசயிக்கு மதிசயம் என்னென்று சொல்லுவேன் ! இனி உன்னுடைய நாயகன் நீ மகிழும்படியாக ஆண் குதிரையாய்வந்து உனது மனேரதத்தைப் பூர்த்திசெய்து புத்திரப்பேறடையச் செய்வான். நீ கவலையற்றிருப்பாயாக. அவனெப்படி குதிரை யாக வரப்போகிருனென்றெண்ணற்க. நானவனை மகாமோகிதனு யுன்னிடம் வந்துசேரும்படியான காரியத்தைச் செய்கின்றேன். அவனுக்குச் சமானமான புத்திரனைப் பெறுவாய். அவன் ஏக வீரனென்கிற பெயருடையவனுய் யாவராலும் வணங்கத்தக்க பிரபுவாகப் போகின்ருன். அவனுல் ஹைஹய வம்சம் விருத்தி யடையப்போகின்றது ; நீ முன்போலவே வைகுண்டத்தில் உனது நாயகனேடுகூடி வாழ்வாயாக. இப்போது நான் சொல்லியவண்ணம் உனக்குச் சுகமுண்டாவதற்குச் சர்வசக்தி ஸ்வரூபமாயிருக்கின்ற பராசக்தியைத் தியானித்துச் சரணமடைவாயாக. அவளைச் சரணமடைந்தால்தான் நீ குதிரையைக் கண்டு மோகித்துக் காம

மதத்தைக்கொண்ட தோஷம் நீங்கிச் சித்த சுத்தியடையப் பெறுவா யென்றனுக்கிரகித்தனர். பின்னர் பரமேஶ்வரர் பார்வதியாரோடு மறைந்தருள லக்ஷ்மிதேவியும் சிவனுராணையின்படித் தேவியினது திருவடிமலரைத் தியானித்து நாராயணர் எப்போது அஶ்வமாக வருவாரென் றெதிர்பார்த்துக்கொண்டு தோத்திரஞ்செய்து வந்தனள். (50–62)

ஓம் லக்ஷ்யார்த் தாயை நம:

## 19. லக்ஷ்மி நாரணனைச் சேர்ந்தது

சூதர் கூறுகின்றார் :—வியாசமுனிவர் ஜனமேஜயனை நோக்கி, பரமேஶ்வரர் லக்ஷ்மிதேவிக்கு அனுக்கிரகித்துக் கைலைக்குச்சென்ற பின்னர் தமது கணங்களுள் தூதுசெல்லத்தக்கவனை சித்திர ரூபனை யழைத்து, நீ வைகுண்டத்துக்குப்போய் நாராயணனைக் கண்டு பூவுலகில் லக்ஷ்மி வருத்தமுற்றிருக்கின்றபடியால் அவள் வருந்தாவண்ணஞ்சென்று அழைத்துக்கொண்டு வைகுண்டம் வந்துசேர வேண்டுமென்று யான் சொல்லியதாகச் சொல்லிவருவா யென்றேவினர். அவனவ்வண்ணமே வைகுண்டஞ்சென்று தன் வரவை அங்குள்ள துவாரபாலகரால் விஷ்ணுமூர்த்திக்கு முன்னே தெரிவித்து உள்ளே செல்ல, அவன் வருகையை விஷ்ணுமூர்த்தி கண்டு ஆச்சரியப்பட்டு அவனை யுபசரித்து மகேஶ்வரருடைய சுபத்தை முன்னர்கேட்டுப் பின்னர் வினவுகின்றார் : ஓ தூதனே ! இறைவர் யாதுகாரியமாய் உன்னை என்னிடம் அனுப்பினர் ? என்றால் ஆகவேண்டிய காரியமானது அவரை யுத்தேசித்ததா ? தேவர்களை யுத்தேசித்ததா ? என்ன கட்டளையிட்டிருக்கின்றார் ? சொல்வாயென்றனர். (1–18)

சித்திரரூபன் கூறுகிறான் : ஓ நாராயணரே ! அவர் காரியமு மல்ல ; தேவர்களுடைய காரியமுமல்ல. உம்முடைய காரியத் தைத்தான் உமக்குக் கட்டளையிட்டிருக்கின்றார். அஃது என்னை யெனின், இந்த வைகுண்டத்தில் உம்முடைய இருதயமத்தியில் அதிசுகியாய் போகரூபிணியாய் வசிக்கத்தக்க லக்ஷ்மிதேவி, காளிந்திநதிக்கும் தமசாநதிக்கும் நடுவிலுள்ள பிரதேசத்தில் ஒரு பெண் குதிரையாய் அதிதுக்கிதையாய் யோக ரூபிணியாய் வசித்துக் கொண்டிருக்கிறாள். யாவருக்கும் இஷ்டபோகங்களைக் கொடுக் கின்றவளாயும் தேவ யக்ஷ கின்னர கிம்புருஷர்களால் போற்றப் பட்டவளாயும் உள்ள அவள் அந்த அரண்யத்தில் யாதொரு செயலுமற்று இப்படியிருப்பதுங் கஷ்டகாலத்துக்குரிய லக்ஷண மல்லவோ ? உலகில் லக்ஷ்மி நீங்கினால் கஷ்டமனுபவிப்பார் களென்று கூறுவது வழக்கம். அவளே கஷ்டத்தை யனுபவிப்ப தென்றால் இது பாவமல்லவோ ? இனிப்பூவுலகிலுள்ளார் லக்ஷ்மி யினால் சுகமுண்டாகுமென்று நினைப்பார்களோ ? யாவரும் தரித்திரர்

களாகவன்றே இருப்பர்? உமக்குத்தான் சுகமேது? பலமில்லாத வனும் தனமில்லாதவனும் தங்களுக்கு வேண்டிய பலத்தையும் தனத்தையும் விரும்புவதொழிந்து ஸ்திரீசுகத்தை மாத்திரம் விரும்பு கின்றனர். எவருக்கும் எதுவில்லாதொழியினும் ஸ்திரீமாத்திர மிருக்கப்பெறின் அவருக்கு எல்லாச்சுகங்களு முடையனவாகக் காணப்படுகின்றன. நீர் தனம் பலம் எல்லாமுடையவராயிருந்தும் அந்த லக்ஷ்மிதேவி யில்லாதிருப்பீராயின் அவைகளாலென்ன சுகத்தைப்பெறுவீர்? அன்றியும் நீர் பத்தினியை விட்டிருப்பது உமக்குப் பகைவராயிருக்கின்ற அசுரர் நகைப்பதற்கிடந்தரு மல்லவா? சத்துருக்கள் நகைக்க விடஞ்செய்து பிழைப்போனது பிழைப்புமோர் பிழைப்பாமா? இனி உம்முடைய பகைவர்கள் லக்ஷ்மிதேவி குதிரையாயிருப்பதைப் பார்ப்பாராயின் இரவும்பகலும் உம்மைப் பரிகாசஞ்செய்து சந்தோஷிப்பார்களல்லவா? இனி யேனும் யான்சொல்வதை ஆலோசித்துச் சர்வ லக்ஷணங்களும் சகல சௌந்தர்யங்களும் சகல சற்குணங்களு முடையவளாகிய உமது பத்தினியை யழைத்துக்கொண்டுவந்து சுகமாயிரும். சுகம்வேண்டாதவராயும் நிர்விஷயராயு மிருக்கின்ற சிவனுர், பார்வதியார் தக்ஷனிடம் பிறந்த பாபத்தையொழித்தற்பொருட்டு அச்சரீரத்தைமாற்றி மலையரையன் மகளாயிருந்தகாலத்து அவரது பிரிவுக்காற்ருது வருந்திய வருத்தம் என்ஞற்சொல்லிமுடியுமோ? நிஸ்ஸம்ஸாரியாகிய அவருக்கே பத்தினிப்பிரிவு வருத்தத்தை விளைவித்திருக்குமாயின் ஸம்ஸாரியா யிருக்கின்ற நும்போல் வாருக்குச் சொல்லவேண்டுமா? பின்னர் அப்பெருமான் தவம் புரிந்து ஞானிகளுக்கு ஞானயோக சுகத்தைமாத்திரமளித்துப் போகிகளுக்குப் போகசுகத்தை யளிக்கப்பெருது அத்தேவியாரை மணந்து இன்றளவும் நீங்காதுடனிருந்து யாவர்க்கும் போகங் களைத்தந்து வருகின்றனர். ஆகலான் நீரும் ஆயிரவருஷ காலமாய்ப் பத்தினியைவிட்டுத் துன்பமனுபவிப்பதை விட்டு அவள் கொண்டிருக்கும் உருவத்திற்கேற்ப ஆண்குதிரையாய்ச் சென்று அவளுக்குப் புத்திரபாக்கியம் தந்து அழைத்து வந்து சேருமென்று சொல்லினன். (19-34)

விஷ்ணுமூர்த்தி, ஓ சித்திரரூபனென்கிற சிவகணனே! நீ சொல்லியவையெல்லாம் சிவனுருடைய வாக்காகையால் அவ் வாக்கின்படியே செய்கின்றேன்; நீ கைலைக்கேகலாமென்று விடை தந்து, பின்னர் தேவியினது மாயாசக்தியினுல் காமவிருத்தி யுண்டாய்ப் பீடிக்கப்பட்டு இனி நாமிங்கிருப்பது தகுதியன்றென்று வைகுண்டத்தைவிட்டு லக்ஷ்மியினிடம்வந்து பேரழகோடுங்கூடிய ஆண்குதிரையாய் லக்ஷ்மியாகிய பெண்குதிரையின் ரூபலாவண்ணி யங்களைக் கண்டதிசயித்து லீலையைக்கருதி நின்றனர். இவர் நிலைமையைக்கண்ட லக்ஷ்மிதேவி இது காட்டிலுலாவுங் குதிரை யன்று; சிவபெருமானனுக்கிரகித்தபடியேவந்த விஷ்ணுமூர்த்தியாகு மென்றெண்ணி அன்று உச்சைஶ்ரவமென்னுங் குதிரையை எவ்வள வதிசயத்தோடும் பார்த்தனளோ, அவ்வதிசயத்தினும் அதிசய

மாய்க் காமவிருத்தியோடு லீலையை யவாவிப் பார்த்தனள். இருவர் கருத்துமொன்றுபடவே அவ்விடத்தே புணர்ச்சியுங் கூடப்பெற்று ஓருத்தமமான பிள்ளையைப் பெற்றனர். பின்னர் அப்பிள்ளையை விஷ்ணுமூர்த்தி பார்த்துஇதுவுந்தெய்வச்செயலாமென்று நகைத்து, ஓ லக்ஷ்மியே! இந்தப்பிள்ளையை இவ்விடத்திலே நிறுத்திவிட்டு நாமிருவரும் இவ்வுருவை மாற்றிக்கொண்டு வைகுண்டம்போய்ச் சேருவோமென்று சொல்லவும், லக்ஷ்மி புத்திர வாஞ்சையினால் கூறுகிறாள்: ஓ என் நாயகனே! இப்பிள்ளையை நான் எப்படி விட்டுவருவேன்? மனுஷ்ய சஞ்சாரமில்லாத இவ்வரண்யத்தில் நதிசங்கமஸ்தானமாகிய இத்தீரத்தில் பாலனையும் யாதொருசக்தியுங் கூடாதவனையும் யாதொரு நாதனில்லாதவனையு மிருக்கிறவிவனை நாம் விட்டுப்போவோமாயின் இவனுக்குள்ள கதியாது? உமக்கு மங்கலம் நானயிருப்பதுபோல் எனக்கு நன்கலன் அளவறிந்த இம்மகன்றானே! ஆகலின் நான் இம்மகனை விட்டுவருவதற்கு எப்படி மனந்துணிவேன்? உமக்குந் துணிவதற்குக் காரணமில்லா திருக்க நீரென்னைப் பிள்ளையைவிட்டு என்னுடன் வருவாயென்றது ஆச்சரியமேயென்றனள். சொல்லிக்கொண்டிருக்கும்போது இரு வருக்குந் திவ்யதேகம்வர அக்கணமே ஒரு விமானத்துடன் தேவர் களுங்கண்டு போற்றி நின்றனர். (35–46)

அதனைக்கண்டு விஷ்ணுமூர்த்தி கூறுகிறார்: ஓ லக்ஷ்மி! விமானம் வந்துவிட்டது; தேவர்களும் பிரார்த்திக்கின்றனர். நீ வேறுவார்த்தை சொல்லவேண்டாம். உன் பிள்ளைக்கு யாதொரு குறைவும் வரமாட்டாது. அவனை நான் பாதுகாக்கின்றேன். நீ ஐயுறேல்; நீ வாவென்றழைத்தனர். லக்ஷ்மிதேவி, ஓ என்பிராண நாதனே! இப்பிள்ளை உம்மைப்போலும் காந்தியுள்ளவனாய்ப் பிரகாசிக்கின்றமையால் வைகுண்டம் அழைத்துப்போவோம்; என் பிராணனாயிருக்கின்ற இவனைவிட்டு நான் வருவேனாயின் உடல்விட்டுப்போன ஒருவனை வைகுண்டம் போயினனென்று கூறு வதுபோலாகும்; ஆகலான் இக்குழந்தையை யெடுத்துக்கொள்ளு மென்ன, விஷ்ணுமூர்த்தி கூறுகிறார்: ஓ கமலாக்ஷீ! இவனாலிங்குச் சில ஆச்சரியமான காரியங்களாகவேண்டி யிருக்கின்றபடியால் நான் சொல்வதைத் தடுக்காதுவிட்டுவிடு. யயாதியென்று பிரசித்தி பெற்ற துர்வசுவின் குமாரனாகிய ஹரிவர்த்தமன் புத்திரப்பேறு வேண்டி இவ்வரணியத்தில் நூறு வருஷமாய்த் தவஞ்செய்கின்றான். ஆகலான் அவனிமித்தமா யிப்புத்திரனுண்டானான். நானவனை யிவ்விடமனுப்புகிறேன். அவன் தனக்குப் புத்திரப்பேறு கிடைத்த தென்று ஆனந்தமுற்றுத் தன் வீட்டுக்குக் கொண்டுபோவா னென்றனர். இவ்வாறு லக்ஷ்மியைச் சமாதானப்படுத்தி விமானத் திலேற்றிக்கொண்டு தன்னுலகஞ் சென்று சுகமாய் வாழ்ந்திருந்த னர். (47–55)

ஓம் லக்ஷ்ணுகம்யாயை நம:

# 20. லக்ஷ்மி பெற்ற ஏகவீரன்

சூதர் கூறுகின்றார் :—ஜனமேஜயன் வியாசரைநோக்கி, ஓ ஐயா! புலி சிங்கம் முதலிய துஷ்டமிருகங்கள் வசிக்குங்காட்டில் அந்தக் குழந்தை அவைகளால் கிரகிக்கப்படாமல் எப்படிப் பிழைத் திருந்து க்ஷேமத்தை யடைந்தது? அதனையுங்கேட்க விரும்புகிறே னென்று சொல்ல, வியாசர் கூறுகிறார் : ஓ அரசனே ! லக்ஷ்மியும் நாராயணரும் போனவுடன் சம்பகனென்கிற வித்தியாதரனொருவன் காமத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற தனது பத்தினியோடு கிரீடார்த்தமாய் விமானத்தின்மேலேறிக்கொண்டு வரும்போது தெய்வகதியாய் அவ்வரண்ணியத்துக்கு வந்தனன். அவ்விடத்தில் தேவகுமாரன்போல் பிரகாசிக்கின்ற சுந்தரமான அக்குழந்தையைக் கண்டு விமானத்தைவிட்டிறங்கி பொருளில்லாதவனுக்குப் புதையல் கிடைத்ததுபோல் நமக்கு இப்புத்திரன் கிடைத்தானென்று மிக்க ஆனந்தத்துடனெடுத்து மதனாலசை என்கிற தன் ஸ்திரீயினிடத்திற் கொடுத்தனன். அவள் அக்குழந்தையை வாங்கிப்பார்த்து, ஆ! இக்குழந்தை இப்பொழுதுதான் பிறந்ததுபோற் காண்கிறது. பிறந்தவிப்பொழுதே மன்மதன்போல் பிரகாசிக்கின்றதே யென்று ஈன்றதாய் போல் மகிழ்ந்து புளகாங்கிதங்கொண்டு மார்பிலணைத்து முத்தமிட்டுத் தான் பெற்ற குழந்தையாகவே மேன்மேலாவலுள்ள வளாய் இறுகத் தழுவிக்கொண்டு இருவரும் மகிழ்ந்து உடனே விமானத்தின்மேலேறிச்சென்றனர். செல்லும்போது மதனாலசை யானவள் தனது நாயகனைப்பார்த்துச் சிரித்துக்கொண்டே, இந்தப் பிள்ளை யாருடைய பிள்ளை ? இவனை யாருமில்லாத காட்டில் யார் விட்டது? ஏன் விடப்பட்டான்? நமக்கென்று தெய்வத்தினால் கொடுக்கப்பட்டானோ? இவனைப் பார்க்கப்பார்க்க எனக்கு ஆச்சரிய மாயிருக்கின்றதென்று வினவினள். (1–11)

கந்தர்வன் கூறுகிறான் :—ஓ என் பிராணநாயகி ! நீ கேட் டவை யெல்லாம் சீக்கிரமாய் இந்திரனிடம்போய் அவனால் இவன் தேவனா, தானவனா, நமது கந்தர்வகுலத்தவனா, வேறு யாவன், என்று எல்லாந் தெரிந்துகொண்டு பின்ன ரிவனை நமது பிள்ளை யாகக் கொண்டாடுவோம். நன்றாய்த் தெரிந்துகொள்ளாமல் ஒரு காரியமும் நிச்சயிக்கக் கூடாதென்று சொல்லினன். சொல்லிய வண்ணமே இந்திரனிடஞ்சென்று அவனைப் பணிந்து போற்றி மலர்ந்த முகமுடையவனாய்க் குழந்தையைக் காட்டிக் கூறுகிறான் : இக்குழந்தை காளிந்தி தமஸா என்னும் நதிகளின் சங்கம ஸ்தான மாகிய புண்ணிய க்ஷேத்திரத்தில் கிடைத்தது. இக்குழந்தை யாருடையதோ? அதனைச் சொல்லுவீராயின் நாங்கள் இக் குழந்தையைச் செல்வமாக வைத்துக்கொள்வோம். இஃது அதி சுந்தரமா யிருப்பதால் என் மனைவி விட்டுநீங்கக்கூடாத பிரிய முடையவளாயிருக்கிறாள். புண்ணிய க்ஷேத்திரத்தில் தெய்வ

கதியாய்க் கிடைத்த பிள்ளையையெடுத்துக் கொள்ளலாமென்று தருமநூலிலும் சொல்லியிருக்கிறது. ஆகையினால் இக்குழந்தையின் சரிதத்தைச் சீக்கிரமாய்ச் சொல்லுமென்று கேட்டனன். இந்திரன் கூறுகிறான்: ஓ கந்தர்வனே! இச்சிசுவானது ஒரு காரணத்தால் குதிரையுருக்கொண்ட நாராயணருக்கும் லக்ஷ்மி தேவிக்கும் பிறந்தது. அன்றியும் யயாதிபுத்திரன் புத்திரப்பேறு வேண்டி அரிய தவஞ்செய்கின்றானதலால் அவனுக்கு அப்புத்திர பாக்யமளிக்கவே நாராயணர் இப்புத்திரனை யுண்டுபண்ணினார். இது நிச்சயம். இப்போதே அந்த நாராயணர் துர்வசு என்னு மரசனை அவ்விடமனுப்பப் போகின்றார். நீ சீக்கிரமாய் இக் குழந்தையைக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும். அரசன் அங்கு வருங்காலத்தில் இக் குழந்தை யில்லாமற் போமாயின் மகா துக்கமடைவான். நீ இக்குழந்தையைக் கண்டு என்னிடம் வருவ தற்கான காலவரையறை எவ்வளவாயிற்றோ, அவ்வளவேதான் இக்குழந்தையினால் உங்களுக்கு வரத்தக்க சுகப்பேறென்றறியக் கடவீர். இச்செய்தி நீங்களொருவருக்கும் விளம்பரஞ் செய்யக் கூடாது. இக்குழந்தையானவன் பூலோகத்தில் ஏகவீரனென்னும் பெயருடையவனாய்ப் பிரசித்தியடையப் போகின்றான். நீ சீக்கிர மாய் இக்குழந்தையை யவ்விடத்திற் கொண்டுபோய் விடுவாயாக. இனி நீ இங்கிருத்தல் உசிதமன்றென்றனன். அக்கணமே அச்சம் பகன்கிய கந்தருவன் புறப்பட்டுப்போய் குழந்தையை முன்னிருந்த விடத்திற்றானே விட்டுவிட்டுத் தன்னிடம் போய்ச் சேர்ந்தனன். (12–26)

இவன்செய்தி யிங்ஙனமிருக்க, நாராயணர் துர்வசுவினிடஞ் செல்ல அவர் வருகையைக்கண்ட அரசன் ஆனந்த பரவசமுற்று சாஷ்டாங்கமாக வீழ்ந்து பணிந்து, ஓ தேவர்களுக்கெல்லாந் தேவனே! சர்வ லோகங்களுக்கும் பிரபுவா யுள்ளவனே! உம் முடைய தரிசனங் கிடைக்கத் தகுந்த பாக்கிய மென்னிடத்து மிருந்ததோ? நீர் என் போன்ற அறிவிலிகளால் காணத்தக்கவரோ வென்று தோத்திரஞ் செய்ய, விஷ்ணுமூர்த்தி, ஓ அரசனே! நீ செய்துவந்த தபசுக்கு மிகவும் மகிழ்ச்சியடைந்தேன்; வேண்டிய தைக் கேட்பாயாகவென்ன, அரசனடி பணிந்து, ஓ பகவானே! நான் புத்திரப்பேறே பெரும் பேறெனக் கருதியிருக்கின்றே னாகையால் அப்பேற்றை யெனக்கருள வேண்டுமென்று பிரார்த் தித்தனன். அவர், ஓ அரசனே! உனக்கப் பேற்றை யளிக்கவே காளிந்தி தமசா கூடுமிடத்தில் ஒரு புத்திரனை வைத்திருக் கின்றேன்; அவன் லக்ஷ்மிக்குப் பிறந்தவன்; அவனை இலேசாக நினைக்கவேண்டாம்; அவனையே புத்திரனாகப் பெறுவாயென் றனுக்கிரகஞ்செய்து போயினர். அரசன் அக்கணமே ஒரு திவ்ய ரதத்தின் மீதேறிக்கொண்டு விஷ்ணுமூர்த்தி சொல்லியபடி குழந்தை யிருக்குமிடம் வர, அக்குழந்தை விளையாடிக்கொண்டும் கட்டை விரலை வாயில்வைத்துச் சுவைத்துக்கொண்டும் நாராயணரைப் போல் பிரகாசித்துக் கொண்டிருக்கு மதிசயத்தைக் கண்டு மகிழ்ந்து

தாமரை மலர்போல் மிருதுவா யிருக்கின்ற தனதிரண்டு கைகளா லும் வாரியெடுத்து மார்பிலணைத்து உச்சிமோர்ந்து அவனது முகத்தைப் பார்த்துக் கூறுகிறான்: அப்பா! என்மீது கருணை யுள்ள விஷ்ணுமூர்த்தி உன்னையெனக்குத் தந்தார். அழகாயிருக் கின்ற உன்னை என்பொருட்டிங்குவிட்டு லக்ஷ்மிதேவியும் போயினாள். அவர்களுக்கென்ன கைம்மாறு செய்யப்போகின் றேன்? புத்திரப் பேறற்றவனுக்குக் கதியில்லை யென்பதைக் கருதி வாடியிருந்த வென்னை மகிழ்விக்கவந்த என் செல்வனே! என்னை ரக்ஷிப்பாய். உன்னைப் பெறுதற்கு நூறு வருஷம் அரிய தவம்புரிந் தேன். அதனாலன்றோ லக்ஷ்மியும் நாராயணரும் அச்வ வுருவங் கொண்டுன்னைத் தந்துப்போயினார். புன்னகையோடுங் கூடியிருக்கு முன்னை லக்ஷ்மிதேவி விட்டுப்போவாளா? அது என்மேல் வைத்த கருணையல்லவா? உன்னை எவள் புத்திரனாக வைத்துக் கொள்ளு கிறாளோ அவள் புண்ணியவதியாயிருப்பவளல்லவா? இச்சம்ஸார மாகிய துக்கக்கடலைக் கடத்தற்கு நீ ஒரு தோணியல்லவாவென்று ஆனந்தித்தனன். பின்பு அரசன் அக்குழந்தையைப் பாராட்டிச் சீராட்டி யெடுத்துக்கொண்டு தன் நகரம்போகப் புறப்பட்டனன்.

(27–44)

இவன் வருகையை மந்திரிகள் புரோகிதர்கள் நகரவாசிகள் முத லிய யாவரும் கேள்வியுற்றுச் சகலமரியாதையுட னெதிர்கொண்டுவர அவர்களையெல்லாம் அரசன்கண்டு மகிழ்ந்து பல இனிய உபசார வார்த்தைகள் கூறி நகரத்திற் பிரவேசித்து வீதியிலுள்ளாரெல்லாம் பொரிகளையும் மலர்களையுஞ்சிந்த அரண்மனை புகுந்து யாவருக்கும் அங்குநின்று விடைதந்துப் பின்னர் அந்தப்புரஞ் சென்று தன் மகிஷியாகிய பத்தினியை யழைத்துத் தன்கையிலிருந்த புத் திரனைத் தந்தனன். அவள் அப்புத்திரனைக் கையிலேற்று ஆச்சரி யமும் அன்பு முடையவளாய் மன்மதனுக்குச் சமானனான இப்புத் திரன் உமக்கெவ்வாறு கிடைத்தான்? யாரால் கொடுக்கப்பட்டான்? என் மனத்தைக் கவர்ந்து என்னாசையைக் கொள்ளைகொள்ளும் இவன் செய்தியைச் சீக்கிரஞ் சொல்லுமென்றனள். அரசன், ஓ ராணியே! நான் புத்திரப்பேறு வேண்டித் தவங்கிடக்கப் போனதை நீ யறிவையன்றோ? அதுபோல் தவம்புரிய நாராயணர் கிருபை யால் இவன் கிடைத்தானென்று நாராயணர் செய்தியையும் புத் திரன் வரலாற்றையுங் கிரமமாகக் கூறினன். அவள் கேட்டு மகிழ்ந்து நம்முடைய தவந்தான் லக்ஷ்மி நாராயணர்களை இவ் வாறாக்கியதென்று அப்புத்திரனை மார்பிலணைத்துக் கொண்டு அரசனைப்பார்த்து இனிப் புத்திரோற்சவத்துக்குரிய வைபவங் களைச் செய்வதை நாம் கவனிக்கவேண்டுமென்ன, அரசனும் அப் படியே அந்தணர் முதலிய யாவர்க்குந் தானமளித்து ஜாதகர்மம் நாமகரண முதலிய சடங்குகளை நடத்தத்தொடங்கி, ஏகவீரனென்று பெயரிட்டு இந்திரனுக்குச் சமானமான பலத்தையுஞ் சுகத்தையு முடையவன்போல் சந்தோஷித்து நாம் புத்திரனைப் பெற்றதுபோலு மெவன் பெறுவான்? சாக்ஷாத் விஷ்ணுமூர்த்தியின் அம்சமன்றோ

நமக்குப் பிள்ளையாக வந்ததென்று பற்பலவாய் வியந்துகூறிப் பிதுர்க்களுடைய கடனுந் தீர்ந்ததென்று திருப்தியடைந்து யாதொரு ஸம்ஸார தாபமுமின்றி வாழ்ந்திருந்தனன் என்றனர். (45–54)

ஓம் லப்தகாமாயை நம:

## 21. ஏகவீரன் பட்டாபிஷேகம்

சூதமுனிவர் கூறுகின்றூர் :—வியாசமுனிவர் ஜனமேஜயனை நோக்கி, ஓ அரசனே ! ஏகவீரனுகிய அந்தக் குழந்தைக்கு அவன் தந்தை ஜாதகர்மம் முதலிய சடங்குகளைச் செய்யத்தொடங்கி நாம கரணஞ் செய்தபின்னர், அந்தந்த மாதங்களிலும் அவ்வத்தினங் களிலுஞ் செய்யத்தக்கனவாகிய கிருத்தியங்களையும் வைபவங்களை யுஞ் சிறப்பாக நடத்தினன். அவனும் அவர்களால் காப்பாற்றப் பட்டவனுய்ச் சீக்கிரத்தில் விருத்தியடைந்துவர, ஆருவது மாதத் தில் அன்னப்பிராசனமும் மூன்ருவது வருஷத்தில் சூடாகரணமுஞ் செய்வித்து அநேகமாக வந்த பிராமணர்களுக்குக் கோதானம் முதலிய அளவிறந்த தானங்களையுங்கொடுத்துத் திருப்தியாக்கிப் பதின்ரோவது வயதில் உபநயன கர்மத்தை நடப்பித்து வேதாத் தியயனத்துக் குரியவனுக்கினுன். அந்த ஏகவீரன் சகலவேதங் களையு மறிந்தவனுயும் அரச தர்மத்தில் சமர்த்தனுயுமானுன். அரசன் அவனது வித்தையையும் சாமர்த்தியத்தையுங் கண்டு மகிழ்ந்து, இனியரசியலுக் குரியவனுக்கவேண்டு மென்று கருதி, சூரியனுக்கு புஷ்யநக்ஷத்திரயோகமிருக்கிற தினத்தைப் பட்டாபி ஷேகத்திற்குரிய நாளாகப்பார்த்து, அதற்குவேண்டிய சாமக்கிரியை களைச் சேகரித்து, சகல வேதமறிந்த அந்தண ஶ்ரேஷ்டர்களை வர வழைத்து, விதிமுறையாய்ச் சமுத்திர தீர்த்தம் முதலிய தீர்த்தங் களால் அபிஷேகஞ் செய்வித்துப் பிராம்மணர்களுக்குக் கொடுக்க வேண்டிய தானங்களையளித்து, ராஜ்யத்தைப் பிள்ளையினிடங் கொடுத்து மந்திரிகளுக்கு வேண்டிய சன்மானங்களைச் செய்து, அவர்களைக் கௌரவப்படுத்தி, ஓ மந்திரிகளே ! நீங்கள் என் மகனு கிய ஏகவீரனை என்னைப்போற் பாவித்து அவனைக்கொண்டு மனு நீதி கோணுது அரசாக்ஷி நடத்திவருவீர்களென்று சொல்லி, அரசுக் குரிய சகல வதிகாரங்களையும் அவர்கள் வசமாக்கிவிட்டு, தான் தனியிடத்திலிருந்து, நமக்குக்கிடைத்த இப்புத்திரனுல் ஸம்ஸாரத்தி லனுபவிக்க வேண்டிய சுகங்களெல்லா மனுபவித்தோம்; பிதுர்க் கடன் முனிவர்கடன் முதலிய கடன்களையுங் கொடுத்தவனு யினேம்; இனி நாம் முக்தியடையவேண்டிய கடன் ஒன்றே யுடையோமா யிருக்கின்ரேமென்று நிச்சயித்து, ஸம்ஸாரத்திலலைந் திருந்த புத்தியைச் சுவாதீனப் படுத்திக்கொண்டு மனைவியுடன் வனத்துக்குப் போய் மைநாகபர்வத மடைந்து, அதன் சிகரத்தில் ஓராஶ்ரம மமைத்து, வானப்பிரஸ்தனுய்க் காய் கனி சருகுகளை ஆகார

மாய்க் கொண்டு நாடோறும் பார்வதி தேவியை இடைவிடாமற் றியானித்திருந்து, காலமுடிவில் மனைவியுடன் சுவர்க்கமடைந் தான். அச்செய்தியை ஹைஹயன் கேள்வியுற்று வேதத்திற் சொல்லிய வண்ணம் ஊர்த்த தேகிகளாகச் சென்றவர்களுக்குச் செய்யும் விதிகளையும் உத்தரகிரியையும் நடத்தித் தன்தந்தையினுற் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை மிக்க நீதியுடன் பாதுகாத்து மிகவுங் கௌரவஞ் செய்யப்பட்டவனுய் நானுவிதமான போகங்களை யனு பவித்து வந்தனன். (1–16)

ஒரு நாள் அவ்வேக வீரன் மந்திரிகளுடைய புத்திரர்களோடு கூடினவனுய்க் குதிரைமீதேறிக் கொண்டு கங்கா நதிக்கரைக்குப் போய், அங்கு மிகவும் அழகிய குயில்களுடைய ஒலிகளாலும் புஷ் பங்களாலும் கனிவர்க்கங்களாலும் வண்டினங்களின் வரிசைகளா லும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற வனங்களின் சிறப்பைக் கண்டு அதன் பின்னர் வேதத் தொனியும் ஹோமப்புகையும் ஆகா யத்தில் ஆவரிக்கப் பட்டிருக்கின்றமையும் அங்குள்ள முனிவ ராச்சிரமங்களில் மான்குட்டிகள் விளையாடுவதையும் கோபிகா ஸ்திரீகளால் ரக்ஷிக்கப்படுகிற வயல்களில் பயிர்கள் செழிப் புற்றிருப்பதையும் பூந்தோட்டங் களெல்லாம் மலர்ந்த மலர் களால் பொலிவு பெற்றிருப்பதையும் பார்த்து மகிழ்ந்து, அப் புறஞ்சென்று புதர்களையும் சண்பகம் பலா மா மகிழம் மலர்ந்திருக் கிற மந்தாரம் பனை புங்கம் கடம்பு முதலிய விருக்ஷராசிகள் செழித் தோங்கி யிருப்பதையும் கண்ணுற்று, அப்புறஞ் செல்லும்போது கங்கையில் மலர்ந்து பரிமளம் வீசுகின்ற ஒரு தாமரை மலரைப் பார்த்தான். அம்மலருக்குத் தென்பக்கத்தில் அம்மலர்போலுங் கண்களையும் பொன்போலுடம்பையும் அழகிய கருமணல்போற் கூந்தலையும் சங்குபோல் கழுத்தையும் மின்னல்போ லிடையையும் கோவைப்பழம்போ லுதட்டையும் சூதாடு கருவிபோல் ஸ்தனங்களை யும் எட்பூப்போல் நாவையும் வாய்க்கப்பெற்ற ஒரு கன்னிகை யாதொரு துணையுமின்றிக் குரளிப்பட்சியைப்போ லழுதுகொண் டிருக்கிறதைப் பார்த்துக் கூறுகிருன் : (17–26)

ஓ பெண்ணே! நீ என்ன காரணத்தால் இங்கழுதுகொண்டிருக் கிருய்? நீ யார்? நீ யாருடைய பெண்? நீ கந்தர்வஸ்திரீயா? தேவஸ்திரீயா? ஓ குயில்போலுள்ளவளே! நீயேன் தனியாய்விடப் பட்டாய்? உனக்கு நாயகனுண்டா? அவனெங்கே போனுன்? உன் தந்தை யெங்கே யிருக்கின்ருன்? நீ எதற்காக துக்கிக்கின்ருய்? அதனை என்னிடம் சொல்லுவையாயின் அத்துக்கத்தை நான் நீக்கி விடுகிறேன். ஓ மேன்மையான சரீரமுடையவளே! நானிவ்வுலகை யாளுமரசன்; என் ராஜ்யத்தில் பிரஜைகளைத் துன்பப்படுத்து கின்றவ ரொருவருங் கிடையாது. அன்றியுங் கள்ளர் பயமும் ராக்ஷசர் பயமுங் கிடையாது. நான் நடத்திவரும் செங்கோன்முறை யான் எக்காலத்துந் தீங்கினைக் குறிக்கும் உற்பாதங்களுண்டா மாறில்லை. புலி சிங்கம் முதலான குரூர ஜந்துக்களுந் தீங்குசெய்யு மாறில்லை. ஆகையால் நீ அவ்விடம் வரவெண்ணினுல் இப்

பொழுதே வரலாம். அந்தோ ! நீயேன் இந்தக் கங்காநதி தீரத்தில் தனியேயழுகிறாய் ? இவ்விடத்தில் நீ துக்கிப்பதனால் எவன் வருவான் ? இங்கு ஒருவருமில்லையே ! எனக்கு நீ அழுங் காரணத்தைச் சொல்லுவாய். என்னை நீ இலேசாக நினைக்கவேண்டாம் ; பிராணிகளாலொழிக்கக் கூடாத பெருந் துன்பமாயிருந்தாலும் அதனை நான் சுலபமாயொழித்து விடுவேன். உனக்கு வந்த துக்கம் மனிதர்களால் வந்ததாயிருந்தாலும் தெய்வத்தால் வந்ததாயிருந்தாலும் நானொழித்துவிடுவேன். துக்கத்தையொழிப்பதே என்னுடைய விரதம். நீ எதனை விரும்பி இப்படியழுகின்றாய் ? அந்த விருப்பத்தைச் சொல்லுவாய். அதற்கேற்ற உபாயத்தை நான் செய்கின்றேனென்றனன். அக்கன்னிகை அவனுடைய வார்த்தையைக் கேட்டுக் கூறுகின்றாள் : (27–34)

ஓ ராஜஶ்ரேஷ்டனே ! யாருந் துக்கமில்லாமல் துக்கிப்பார்களா? ஆகையால் நானுந் துக்கத்தினால் தானழுகிறேன். அத்துக்க காரணத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக : ஓ அரசனே ! உன்னுளுகைக் குட்படாததொரு தேசத்தில் ரைப்பியனென்றொரு வரசனிருக்கின்றான். அவனுக்கு ருக்குமரேகை யென்கிறவொரு மனைவியுள்ளாள். அவளோ அழகிற் சிறந்தவளாயும் இல்லறம் நடத்துவதில் சாமர்த்தியமுடையவளாயும் கற்பிலக்கணத்தில் முதன்மையானவளாயு முள்ளவள். அவ்வரசனுக்கு இவள் வாய்க்கப்பெற்றதுபோலும் புத்திரப்பேறு வாய்க்கப் பெறாமல் அபுத்திரவானாயிருந்தனன். அவன் அபுத்திரவானென்கிற துன்பத்தை யடையாதவனா யிருந்தாலும் அவன் மனையாட்டி நமக்குப் புத்திரப் பேறில்லையே யென்கிற ஏக்கமுடையவளாய், ஒருநாள் தனது நாயகனைப் பார்த்து, ஓ பிரபுவே ! நான் பிழைத்திருப்பதனால் என்ன பிரயோஜனம் ? நானிப்பூவுலகில் மலடியென்று பெயர்பெற்று இந்த ராஜ்ய சுகத்தை யனுபவிப்பதாகிய பிழைப்பை நெருப்பினாற் சுடவேண்டுமென்று மனம் நொந்து சொல்லும்போது, அந்த அரசன் அவளது துக்கத்தைச் சகியாதவனாய்த் தானும் புத்திரகாமனாய்ப் பிராம்மணர்களை வரவழைத்து, விதிப்படி புத்திரகாமேஷ்டி யாகத்தைச் செய்து அவர்களுக்கு வேண்டிய தக்ஷிணைகளைக் கொடுத்து ஹோமாக்னியில் நெய் ஹோமஞ் செய்யும்போது அவ்வக்னியினின்று அழகிய அங்கங்களுள்ளவளாயும் சுபலக்ஷணங்களோடு கூடினவளாயும் கோவைப் பழம்போலுதடுள்ளவளாயும் முத்துவரிசைபோல் தந்த வரிசைகளுள்ளவளாயும் விற்போல் புருவங்களுள்ளவளாயும் பூரணசந்திரன்போல் முகமுள்ளவளாயும் பொன்போல் காந்தியுள்ளவளாயும் மேகம்போல் கூந்தலுள்ளவளாயும் செந்தாமரைபோல் உள்ளங்கால் உள்ளங்கைகளுள்ளவளாயும் தளிர்போல் மிருதுவான சரீரமுள்ளவளாயும் மான்போல் கண்களுள்ளவளாயுமோர் கன்னிகை வெளியே வந்து ஹோதாவினிடம் போக, அவர் அவளைக் கையிற் பிடித்துக்கொண்டு அரசனிடம் போய்க் கூறுகின்றார் : ஓ அரசனே! இந்தப் பெண்ணை வாங்கிக்கொள். நெய்ஹோமஞ் செய்துகொண்

டிருக்கும்போது ஏகாவலிபோலிவளிந்த யாகத்தீயிற் பிறந்தாளாகை யால் ஏகாவலியென்றே பெயர்பெற்று இவ்வுலகில் வாழ்வாள். ஓ அரசனே! இவளைப் பெண்ணென்றெண்ணற்க. புத்திரனுல் நீ என்ன சுகமடைவையோ அந்தச் சுகம் இவளாலடைவாய்; இப் பெண் விஷ்ணுமூர்த்தியினுல் கொடுக்கப்பட்டவளாதலால் சந் தோஷமடைவாயாக வென்றனர். ஹோதாவின் வார்த்தையைக் கேட்ட அரசன் அழகிய கன்னிகையைப் பார்த்து மிகவுஞ் சந் துஷ்டியுள்ளவனுய் பெண்ணை வாங்கிக்கொண்டு தன் பத்தினி யிடங் கொண்டுபோய், ஓ நல்ல பாக்கியஞ் செய்தவளே! இந்தப் பெண்ணை வாங்கிக்கொள்வாயென்ன, அவளும் பெண்குழந்தையை வாங்கிக்கொண்டு தானே புத்திரனைப் பெற்றதுபோல் சந்துஷ்டி யடைந்தாள். (36–50)

பின்னர் அரசன் புத்திரனுக்குச் செய்யும் விதிபோல் ஜாத கருமமுதலிய மங்கள கிருத்தியங்களையுஞ் செய்து முடித்து யாகத் தையும் பூர்த்திசெய்து பிராமணர்களுக்குக் கொடுக்கவேண்டிய தக்ஷிணைகளையுங் கொடுத்து யாவரையு மனுப்பிவிட்டுச் சந்தோஷ சித்தனுயிருந்தான். அந்தப் பெண்ணும் பிறைபோலும் தினேதினே விருத்தியடைந்து வருதலை அரசன் மனைவி கண்டு அவளை ஒரு கணமும் பிரியாதவளாய் மிக்க சந்தோஷமடைந்து புத்திரோற் பத்தி நிமித்தம் செய்வதாகிய உற்சவத்தை விசேஷமாய் நடத்தி வந்தனள். ஓ அரசனே! அந்தப் பெண் அரசனுக்கும் அரசிக்கும் புத்திரனுல் விளையுஞ் சுகத்தை விளைவித்துச் செல்வமாயிருந்தனள். நானே அந்த அரசனுடைய மந்திரியின் பெண். எனக்கு யசோவதி என்று பெயர். அந்தப் பெண்ணும் நானும் சமான வயதுள்ளோம். அவள் பிதாவாகிய அரசன் அப்பெண்ணோடு விளையாடுவதற்கு என்னை அப்பெண்ணுக்குத் தோழியாகச் செய்தான். நாங்களிரு வரும் இரவும் பகலும் பிரியாமல் மிகப் பிரீதியோடு வாழ்ந்திருந் தோம். அந்த அரசபுத்திரியாகிய ஏகாவலி யென்பவள் தாமரைப் பூவில் மிக்கப் பிரீதியுள்ளவளாயிருந்ததனுல் எங்கு அவள் தாமரை மலரைப் பார்க்கின்றனளோ அங்கு நீங்காமல் விளையாடுவாள்; வேறிடத்தில் விளையாடுகிறதில்லை. அவளிடத்துக்குத் தூரத்திலிருப் பதாகிய இக்கங்கை நதியிலுள்ள தாமரைத் தடாகத்தை யோர் நாள் பார்த்து அன்றுமுதலென்னோடும் மற்றைத் தோழிகளோடும் இவ்விடம் வந்து விளையாடிப்போவது வழக்கம். இது மானிட சஞ் சாரமில்லாத விடமாயிருத்தலால் இவ்விடத்துக்கு வருவது நலமன் றென்று நானெண்ணி அவள் தந்தையாகிய அரசனிடஞ் சென்று, ஓ அரசனே! உன்னுடைய புத்திரி மானிட சஞ்சாரமில்லாத கங்காதீரத்திலுள்ள ஒரு தாமரைத் தடாகத்தில் நாடோறும் போய் விளையாடுகிறுளென்று சொல்லிவிட்டேன். பிறகு அரசன் அரண்மனையிலேயே வண்டுகள் மொய்க்கும்படியான தாமரை மலர்களுள்ள தடாகங்களை விருத்திசெய்து பெண்ணை யழைத்து, அம்மா! இனி நீ தாமரைத் தடாகத்தை யுத்தேசித்து வெளியில் போக வேண்டாமென்று தடைசெய்தான். அவன் தடைசெய்தும்

அத் தடைக்குள்ளாகாது இங்குள்ள தடாகத்துக்கே வந்துபோகும் இச்சையுடையவளாயிருந்தாள். அதனை அரசனறிந்து தடைசெய் வதற்கஞ்சி அநேக காவற்காரர்களை ஆயுதபாணிகளா யுடன்போய் வரும்படித் திட்டஞ் செய்தனன். அதுமுதல் அவ்வரச புத்திரி அக் காவலாளிகளுடனும் நான் முதலிய தோழிகளுடனும் இத் தடாகத் துக்கு வந்து விளையாடிப் போவது வழக்கமென்றாள் என்றனர். (51–61½)

ஓம் லதாதனவே நம:

## 22. ஏகாவலி வரலாறு

சூதர் கூறுகின்றார் :—வியாச முனிவர் ஜனமேஜயனை நோக்கிச் சொல்வதாயினர்; ஓ அரசனே ! யசோதி என்பவள் ஏகவீரனென்ப வனைப் பார்த்து, ஓ அரசனே ! அந்த ஏகாவலியானவள் ஒருநாள் காலையிலெழுந்திருந்து தோழிகளோடு கூடினவளாய் இரு பக்கத் திலும் சாமரம் வீச ஆயுதபாணிகளாகிய காவலாளிகள் ஜாக்கிரதை யாய்ச் சூழ்ந்துவர இவ்விடத்துக்கு வந்து வழக்கம்போல் விளையா டிக்கொண்டிருக்க, எங்களைப் போலும் நாடோறும் விளையாடும் அப்ஸர ஸ்திரீகள் அன்றும் இங்கு வந்துசேர்ந்தனர். பின்னர் அவர் களும் நாங்களும் வேடிக்கையாய் விளையாடிக்கொண்டிருக்குஞ் சம யத்தில் காலகேதுவென்று பிரசித்தி பெற்ற மஹாபலசாலியான ஓரசுரன் இரும்புத் தண்டம் கதை கத்தி தனுசு பாணம் தோமரம் இவைகளைத் தாங்கியிருக்கின்ற அநேக ராக்ஷசர்கள் சூழ ஏகாவலி யைப் பார்த்துக்கொண்டே அதிவேகமா யிவ்விடத்துக்கு வரத் தலைப்பட்டனன். அதனையறிந்த நான் இவளைப்பார்த்து, ஓ எங்கள் தலைவியே ! எவனோ ஒரு ராக்ஷசன் வந்து உன்னைப் பார்க்கிறான். நாம் தனியேயிருப்பது நன்றன்று. நாம் நம்முடைய காவலாளிகள் மத்தியில் போயிருப்போமென்று சொன்னேன். அவளுமப்படியே யிருப்போமென்று யாவரையு மழைத்துக்கொண்டு காவலாளிகள் மத்தியிலிருக்கும்போது அக்காலகேதுவானவன் காமமோகிதனாய் ஒரு பெருந்தடியை யெடுத்துக்கொண்டு காவலாளிகள் யாவரையுந் துரத்திக்கொண்டே யோடிவரும்போது அவன் வருகையைக்கண்ட ஏகாவலி பயந்து நடுங்கி யழுதுகொண் டிருந்தனள். அவன் யாவரையுந் துரத்திவிட்டு இவளைப் பிடித்துக்கொண்டனன். அப் போது நான், ஓ ராக்ஷசனே ! இப்பெண்ணை விட்டுவிடு ; என்னைப் பிடித்துக்கொள் என்று சொன்னேன். அவளை மதித்த அவனுக்கு என்னிடத்தில் மதிப்புண்டாகுமா ? அதனால் என்னைப் பிடித்துக் கொண்டு போவதற் கெண்ணாமல் பிடித்த அவளையே கொண்டு போகத் தொடங்கினன். அதைக்கண்ட காவலாளிகள் அந்த ராக்ஷசனைத் தடுத்து நில்லு நில்லென்று கோபத்துடன் சூழ்ந்து வீரர்களும் அதிசயிக்கும்படியான யுத்தஞ்செய்யும்போது ராக்ஷசச் சேனைகளெல்லாம் மிகவும் முயற்சியுள்ளவர்களாய் யுத்தம் புரிந்து

காவலாளிகளை யெல்லாங் கொன்றுவிடவும், அசுரன் ஏகாவலியை யெடுத்துக்கொண்டு தன் சேனைகளுடன் பட்டணத்துக்குச் செல்லத் தொடங்கினான். அப்போது அவன் கையிலகப்பட்டிருக்கும் ஏகாவலி பெருங்குரலிட்டழுதனள். அவ்வழுகைக் குரலைக்கேட்ட நான் அந்த ராக்ஷசன்போகும் வழியே போகும்போது அவளென்னைப் பார்த்து, ஓ யசோதே! என்னைப்பார்! என்னைப்பாரென்றழுது கொண்டே போனாள். நானும் விடாமல் பின்றொடர்ந்து சென்றேன். அதனாலவள் சிறிது பயமற்றவளாகச் சென்றாள். நானும் அவள் சமீபத்திற் போய்விட்டேன். போகவும் என்னோடு அவள் அடிக்கடி பேசிக்கொண்டே மிக்கதுக்கமுள்ளவளாய் சரீரமெல்லாம் வியர்த்து நடுக்கமுற்று என் கழுத்தைக் கட்டிக்கொண்டு ஓவென்றலறி யழுதாள். இப்படி யிவளழும்போது அந்தக்காலகேதுவென்பவன் என்னைப் பார்த்து மிகப்பிரீதியோடு, எனது பிரியைக்குச் சகியாகிய பெண்ணே! உனது தலைவியைப் பயப்படவேண்டாமென்று சமாதானப்படுத்துவாய். தேவலோகத்துக்குச் சமானமான என்னுடைய பட்டணம் வந்து சேர்ந்துவிட்டோம். ரதிக்குச் சமானமான இவளுக்கு நான் தாசனாய்விட்டேன். ஏனழுகின்றாள்? அழவேண்டாமென்று சொல்லுவாயென்று என்னையும் அவளுடைய பக்கத்திலிருக்கும்படி தேரிலேற்றிக்கொண்டு சேனைகளுடன் மலர்ந்த முகமுடையவனாய்த் தன் பட்டணம்போய்ச் சேர்ந்தான். (1–21)

பின்னர் ஏகாவலியையும் என்னையும் பால்போலிருக்கிற வோர் கிருகத்தில் வைத்துக் கோடிராக்ஷசர்களைக் காவல்வைத்தான். மூன்றுநாள் அந்த ராக்ஷசன் ரகசியமாயென்னைப்பார்த்து மன வருத்தப் பட்டுக்கொண்டிருக்கிற அவளுடன் சில வார்த்தைகள் நான் சொல்வதுபோல் நீ சொல்வாய். என்னையெனின், ஓ சுந்தரவதியே! நீ எனக்குப் பத்தினியா யிருப்பாய். நீ மனம்போனபடி எல்லாச் சுகத்தையு மனுபவிப்பாய். சந்திரன் போன்ற முகமுடையவளே! என்னுடைய ராஜ்யமெல்லாம் உன்னுடையதே. நானுன்னுடைய தாசனாயிருக்கின்றேனென்று சொல்லச் சொன்னான். நானவனைப் பார்த்து, ஓ ராக்ஷசனே! நானிந்தக் கொடுமையான வார்த்தையை யவளிடஞ் சொல்லமாட்டேன். நீயே சொல்லிக் கொள்ளென்றேன். மன்மதனால் பீடிக்கப்பட்ட அவன் பயத்தால் மெலிவடைந்திருக்கின்ற ஏகாவலியைப் பார்த்து வணக்கத்தோடு, உளதோவிலதோ என்று சந்தேகிக்கச் செய்யவல்ல இடையுடையாளே! நீ என்மேல் மந்திரத்தை ஏவிவிட்டாய். அதனாலென் மனம் உன் சுவாதீனமாய்விட்டது. இனி நானுனக்கு ஏவலாளியாய் விட்டேன். மன்மதபாணத்தினால் பீடிக்கப்பட்டுப் பரவசனாயிருக்கிறவென்னைப் பர்த்தாவாகச் செய்துகொள். சஞ்சலப்படுமென் மனத்தையும் சஞ்சலமற்றிருக்கும் உன்னுடைய யௌவனத்தையும் வீணாக்காது என்னைக் கட்டிக்கொண்டு ஸபலமாகச் செய்வாயென்றான்.

அப்போது ஏகாவலி என்றந்தை ஹைஹயனென்னும் அரசகுமாரனுக்கு என்னைக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டபடியால்

நானும் அவனையே மனதினால் பர்த்தாவாக நிச்சயித்துவிட்டேன். எவனைப் பர்த்தாவாக நினைக்கின்றோமோ அவனுக்கே நாங்களாவது அநாதிவழக்கம். அதைவிட்டு நினையாத உன்னைப் பர்த்தாவாக எப்படியடைவேன்? நீ கன்னிகா தருமந்தவிர மற்ற தரும சாஸ்திரங்களெல்லாம் அறிந்தவனாகக் காண்கின்றாய். அத்தருமத்தை நான் கூறுகின்றேன் கேட்பாயாக: கன்னிகையானவள் தந்தையார் தன்னை எவனுக்குக் கொடுக்க நினைக்கின்றாரோ அவனையே பர்த்தாவாகத் தானடையவேண்டும். எப்போதும் கன்னிகை சுதந்தரமுடையவளல்லவென்று சொன்னாள். அவனதனைக் கேட்டானேயன்றி தருமத்தையெண்ணி மோகத்தை விடாதவனா யெங்களிருவரையும் விடவில்லை. அவன் செய்தி யங்ஙனமிருக்க, ஓ அரசனே! அவனது பட்டணமோ சங்கடமான பாதாளத்தில் அநேக ராக்ஷசர்களால் காவல்கொண்டு கோட்டையைச் சுற்றிலும் அகழியுடைத்தாயிருக்கிறது. நானவளை விட்டுப் பிரிந்த துக்கத்தினா லிங்கழுதுக்கொண்டிருக்கிறேனென்றாள். (22–36)

அவள் சரிதத்தைக் கேட்ட, ஏகவீரன், ஓ பெண்ணே! அப்பட்டணத்திலிருந்து நீ எப்படிவந்தாய், அதைச் சொல்லவில்லையே! அன்றியும் நீ சொல்லிவந்ததில் எனக்கோராச்சரியமிருக்கிறது. என்னையெனின், ஓ பெண்ணே! அவள், தந்தையாரால்ஹைஹயனுக்குக் கொடுக்க நிச்சயப்பட்டாளென்று சொன்னாய்; ஹைஹயனென்னும் பெயருள்ளவன் யானே. என்னைத்தவிர வேறு அப்பெயருள்ளவன் கிடையாது. எனக்காகவே அவள் நிச்சயிக்கப்பட்டாளா? நீ அந்த உண்மையைச்சொல்லி என் சந்தேகத்தை யொழிப்பாய். எனக்கிவ்வையமொழியுமாயின் நானவ்வதமனைக் கொன்று அவளைக் கொண்டு வருகின்றேன். பாதலத்திலெவ்விடமிருக்கிறாள்? அது உனக்குத் தெரியாததல்லவே! எல்லாஞ் சொல்லி வந்தவளாகிய நீ அந்தவொன்றைத்தானே மறைத்துச் சொன்னாய்; அவளங்கிருப்பது அவள் தந்தைக்குத் தெரியுமா, தெரியாதா? நீயாவது அவள் சங்கடப்படுவதனை அவனுக்குச் சொல்லக்கூடாதா? அவன் வேறொருவராலறிந்திருப்பானாயின் பெண்ணை விடுவிப்பதற்கு அவன் ஏன் பிரயத்தனப்படவில்லை? தன்பெண் கடுங்காவலிலிருப்பதைக் கேட்டும் அவனெப்படிச் சகித்திருக்கின்றான்? அவன் யுத்தஞ் செய்வதற்கு வல்லமையற்று ஏங்கியிருக்கின்றானா? சீக்கிரமாய்ச் சொல்லுவாய். நீ அப்பெண்ணினுடைய தேவசம்பத்தமான குணங்களனைத்துஞ் சொல்லி என்னுடைய மனத்தை அவள் வசமாக்கி விட்டபடியால் நான் காமவசப்பட்டுப் பீடிக்கப்பட்டவனாய்ச் சங்கடத்திலிருக்கும் அப்பெண்ணை அவ்விடத்தினின்று நீக்கி எப்பொழுது சுகமாய்ப் பார்ப்பேனென் றேங்குகின்றேன். பார்க்கும் விஷயத்தில் என் மனம் அதிக ஆசையுடைத்தா யிருக்கிறது. ஒருவராலும் பிரவேசிக்கக் கூடாமையாயிருக்கிற அவன் பட்டணத்துக்குப் போகு முபாயத்தை மாத்திரம் நீ சொல்வாய். அவ்வுபாயமுனக்குத் தெரியுமென்பதிற் சந்தேகமில்லை. தெரியா

திருக்குமாயின் அச்சங்கடத்திலிருந்து நீ யெப்படி வந்திருக்கலா மென்ருன். (37–46)

யசோதி, ஓ அரசனே! நான் பால்யத்தில் சித்தப் பிராம்மண னிடத்தில் பகவதியினுடைய மஹா மந்திரத்தை பீஜத்தியான பூர்வகமா யுபதேசிக்கப் பெற்றிருக்கின்றேன். அந்த மந்திரத்தைச் சிறையிருந்த அவ்வீட்டில் ஒரு மாதம் வரையில் நிராதாரையாய், நிராஶ்ரயையாய், பிரபஞ்சந் தோன்றி நின்றழிதற்கு ஆதாரையாய், தன் பக்தர்களுடைய சகல காரியங்களையுஞ் சாதித்துக் கொடுக் கின்றவளாய்ப் பிரகாசிக்கின்ற தேவியைச் சிவந்த ஆடைதரித்தவ ளாயும் சிவந்த கண்களுடையவளாயும் நல்ல மங்களகரையாயும் இருப்பவளாய்த் தியானித்து இந்தச் சிறையினின்றும் விடுவிக்க வல்லவள் இவளன்றி வேறொருவரு மில்லையென்று நிச்சயித்து ஜபித்துவந்தேன். அவ்வாறு ஜபித்துவரும்போது எனக்கு உறக்கம் வந்தது. அவ்வுறக்கத்தி லுண்டாகிய கனவின்கண் மஹாதேவி வந்து அனுக்கிரகிக்கின்ருள்: ஏன் உறங்குகின்ருய்? எழுந்திருந்து சீக்கிரமாய் கங்கைக்கரைக்குப்போய்ச் சேருவாய். அவ்விடத்தில் லக்ஷ்மிபுத்திரனுகிய ஹைஹயனென்னும் அரசனொருவன் வரு வான். அவனுக்கு ஏகவீரனென்றும் பெயர். அம்மஹாவீரன் தத்தாத்திரேயனுல் என்னுடைய மந்திரமாகிய மஹாவித்தையை யுபதேசிக்கப்பெற்று அதனுல் என்னை எப்போதும் உபாசித்தும், மனத்தை அவ்வழி நிறுத்தியும், ஏனையவிந்திரியாதிகளெல்லாம் அவ்வழியில் உழன்றுகொண்டிருக்க என்னுடைய பூஜையி லாசை வைத்தும் தியானித்தும் வருகின்ருன். ஓ யசோதே! அவன் இந்தப் பெருந்துக்கத்தை நீக்கி விடுவான். நீ கண்ணீர் விட்டழ வேண்டாம். அவன் அக்கங்கைக் கரையில் உன்னைக் காணும் பொழுதே உன்றுயரமொழிவதில் ஐயமில்லை. பின்னர் இந்த அசுரனையு மவன்கொன்று ஏகாவலியைச் சிறையினின்றும் விடு வித்து அவளுள்ளங் களிக்குமாறு செய்வான். ஆகையால் இந்த ஏகாவலி அவனையே நாயகனுகக் கொள்ளவேண்டுமென்று கட்டளை யிட்டனள். உடனே நானுங் கண்விழித்து அதிசயமும் ஆராமை யும் உடையவளாய் ஏகாவலிக்கு அச்செய்தியைச் சொன்னேன். அவளதைக்கேட்டு ஆனந்த பரவசையாய்த் தனக்கு நேர்ந்த துன்பங்களையெல்லாம் மறந்து, ஓ தோழி! தேவியனுக்கிரகித்த வண்ணம் கங்கைக் கரைக்குப்போய் அங்கு ஆகவேண்டிய காரியங் களைச் செய்வாய். தேவி நமக்கு நல்ல வனுக்கிரகத்தைச் செய்வா ளென்று எனக்கு விடைகொடுக்க, அவ்விடையைப் பெற்று, இனி நாம் போகவேண்டுமேயென்று தேவியை நினைக்க, அவளது கருணையினுல் எனக்கு வழியொன்று தோன்றிற்று. அவ்வழியே நானதிவேகமாய்வர அது என்னை இவ்விடத்திற் கொண்டு வந்து விட்டது. ஓ அரசனே! என்னுடைய செய்தி யிதுவாகும். இனி உம்முடைய செய்தியைச் சொல்லும். நீர் யார்? யாருடைய குமாரர்? எல்லாவற்றையுங் கிரமமாய்ச் சொல்லுமென்று கேட்டனள் என்றனர். (46–65)

ஓம் லலாமராஜதளிகாயை நம:

## 23. ஏகவீரன் வீரமும் மணமும்

வியாசர் கூறுகின்றார் :—ஓ அரசனே! லக்ஷ்மி நாராயணர்களது புத்திரனாகிய ஹைஹயன் யசோதை யென்பவள் சொல்லிவந்த வார்த்தைகளைக்கேட்டு மலர்ந்த முகமுள்ளவனாய் அவளை நோக்கி, ஓ நங்காய்! யான் ஹைஹயன்; ஏகவீரன் என்னும் இப்பெயருள்ளேன். நான் லக்ஷ்மி தேவியினுடைய புத்திரன். இத்தகைய சிறப்புள்ள என்னுடைய மனத்தை நீ என்னுடைய சுவாதீனத்திருக்க வொட்டாமலும் அது பராதீனமாய்க் காமாக்னியால் பாதிக்கப்பட்டிருக்கவுஞ் செய்தனை; நானென்ன செய்வேன்? அது முதலில் நீ சொல்லி வந்த ஸ்திரீயினுடைய வடிவ லக்ஷணங்களைக் கேட்டு மன்மத பாணத்தாலடிபட்டது; இரண்டாவது, அவளுடைய குண விசேஷங்களைக் கேட்டு அவள்பால் போகத்துணிந்தது; மூன்றாவது தேவியினுடைய அனுக்கிரகத்தைக் கேட்டு அவளை யாச்ரயித்து விட்டது; நான்காவது ஏகாவலியானவள் அந்த அசுரன் முன்னே ஹைஹயனைத் தவிர வேறொருவனை நினைக்கமாட்டேனென்ற கற்பு விசேஷத்தைக் கேட்டு அடிமையாய் விட்டது. இச்செய்தி யிங்ஙனமிருக்க. (1–7)

இனி, நாம் என்னசெய்யலாம், அதனைச் சொல்வாய். நானிது வரையில் அந்தத் துஷ்டனுடைய பட்டணத்தை யறிந்ததுமில்லை, போனதுமில்லை; ஆகையால் என்னை அவ்விடத்திற்கு நீ அழைத்துக்கொண்டு போவாய். இதுதான் நீ செய்யவேண்டிய உபகாரம். நானந்த அசுரனை அக்கணமே கொன்று ஏகாவலியைச் சிறையினின்றும் விடுவித்து அவள்படும் துன்பத்தை யின்பமாக்கி அவள் தந்தைபால் கொண்டுபோய்விட்டு, ஐயா! இனி உன்னுடைய புத்திரிக்கு விவாகஞ் செய்யுங் காரியத்தில் தலைப்படலாமென்று சொல்லிவிடுகிறேன். பிறகு அரசனிடத்தில் சொல்லவேண்டியது எதுவோ அதனை நீ சொல்வாய். அதுவே என்னுடைய இஷ்டமுமாகும். நானவளை நினைந்து படும் காமநோயைத் தீர்த்தற்குச் சாதனமாயுள்ளவள் நீயன்றி மற்று யாருளார்? அதனை நீயே யறிவாய். இப்போது அவளிருக்கும் பட்டணத்தைக் காட்டி என்னுடைய பராக்கிரமத்தைப் பார்ப்பாய். பரஸ்திரீயை விரும்பிய அவ்வசுரனை நான் சங்கரிப்பதற்கு இப்போது நீதான் வல்லமையுடையவளென்று நினைக்கின்றேன். ஏனெனின், நீ என்னை அவன் பட்டணத்தில் கொண்டுபோய் விட்ட பின்னரன்றோ எனது வல்லமை வெளிப்படப்போகின்றது அதனாலென்றான். யசோதை இவனது சாகசமான வார்த்தையைக்கேட்டுச் சந்தோஷித்தவளாய் லக்ஷ்மி புத்திரனை நோக்கி, ஓ ஏகவீரனே! அந்த வசுரனுடைய பட்டணம் போகவேண்டுமானால் என்னிடத்திலிருக்கும் தேவியினுடைய மந்திரத்தை முன்னம் பெற்றுக்கொள். பின்னரவன் பட்டணத்தைக் காண்பிக்கின்றேன்; நாம் அவ்விடத்திற்குப் போனவுடன் போர் விளையுமாகலான் நீ என்னுடன் சகல சேனைகளோடும் வர

வேண்டும். காலகேதுவென்பவன் மஹாபலசாலி. அவனுடைய சேனைகளும் மஹாவீரர்கள். அவர்களை இலேசாக நினைத்தல் கூடா தென்றாள். ஏகவீரன் அவள் சொல்லியபடியே தேவிமந்திரோப தேசம் பெற்றுத் தனது சேனா சமுத்திரங்களுடன் புறப்பட்டனன். அந்த ஏகவீரன் திரைலோக்ய சுந்தரியாகிய யோகேஸ்வரியினது மஹா மந்திரோபதேசம் பெற்றுப் புறப்பட்ட அந்த விசேஷத்தால் யாவருடைய எண்ணங்களையு மறியத்தக்கவனும், தூரத்திலிருக்கும் பொருளும் சமீபத்திலிருப்பது போல் காணும் வல்லமையுள்ள வனுமாயினான். அவ்வாறு தனக்குண்டாகிய மகிமையையுணர்ந்து மந்திரத்தைப் போற்றி அந்த யசோதையுடன் புறப்பட்டு மஹா சர்ப்பங்களால் காவல்கொண்டிருக்கும் பாதாளத்தில் மஹா குரூரர் களாகிய அசுரர்களால் காவல்கொண்டிருக்கும் அந்த காலகேதுவி னுடைய பட்டணத்தை அதிக சுலபமாய்ப் போய்ச்சேர்ந்தனன். (8–24)

இவனது வருகையை அசுரனது தூதர்கள் கண்டு அழுது கொண்டே யாதொன்றுந் தோன்றாமல் மதி மயங்கினவர்களாய், ஏகாவலியினிடத்தில் காமமோகிதனாய் அவள் சமீபத்திற் சென்று அதிவிநயத்தோடு வேண்டிக்கொண்டிருக்கின்ற காலகேதுவினிடத்தி லோடி, ஓ அசுரேந்திரனே ! என்னசெய்கின்றாய் ? இங்கு இவளோடு சகியாய் வந்திருந்த யசோதையானவள் யாரோ ஒரு அரசனைச் சேனைகளோடும் அழைத்துக்கொண்டு வருகின்றாள். அந்த வீரனை நாங்கள் கண்டபொழுதே எங்களுக் கழுகையுண்டாகியது. அஃது என்னகாரணமோ ? என்னசகுனமோ, நாங்களறியோம். அந்த வீரன் இந்திரனோ, அவன் மகனாகிய ஜயந்தனோ, சிவன்மகனாகிய முருகனோ ! அவன் மதத்திருக்கும் மதத்தையும் சேனைகளுடைய வீரபராக்கிரமத்தையும் நமது சேனைகள் காணப்பெறின் எங்களைப் போல் அழுதுகொண்டே யோடிவருவரேயன்றி எதிர்த்து நிற்பார்க ளென்று நாங்கள் நினைக்கவில்லை. நீ இனிச்சும்மா யிருப்பதினால் யாதொரு பயனுமில்லை. நீ வேண்டிக்கொண்டிருக்கிற இவள்தான் இந்தப் போருக்குக் காரணம். உனக்கு யுத்தஞ்செய்யச் சாமர்த்திய மிருந்தால் யுத்தத்துக்குப் புறப்படு. இல்லாவிடில் இப்புண்ணிய வதியை அவனுடன் கூட்டியனுப்பி விடு. இப்போது எதிரியி னுடைய சைனியங்கள் மூன்று காதத்தி லிருக்கின்றன. யுத்தஞ் செய்ய உனக்குத் தைரியமிருக்கும் பக்ஷத்தில் ரணபேரி யடிக்கும் படியாய் உத்தரவு செய்வாயென்று சொல்ல, அவ்வார்த்தைகளை அசுரன் கேட்டுக் கோபம் கொண்டவனாய் ஒன்றனையுமெண்ணாது படைகளைக் கூவி, ஓ படைகளே ! நீங்களனைவரும் சகலவாயுதங்க ளுடன் அதி சீக்கிரமாய் நம்மை எண்ணாது வருகின்ற பகைவன் முன்னே சென்று போர் புரியுங்கள். நானும் உங்கள் பின்னோடு வருகின்றேனென்று அவர்களை முன்னேவிட்டுத் தானும் சர்வா யுதபாணியாய்ப் புறப்பட்டு ஏகாவலியைப் பார்த்து, ஓ எனது மனோன்மணியே! உனது சகியினுடைய காரியமல்லவா இவ்வளவும்? ஆஹா ! அவளுக்கு இவ்வளவு சாமார்த்தியமிருக்குமாயின் உனக்கு

எவ்வளவிருக்கமாட்டாது? வருகின்ற இவன் யார்? உனது தந்தையா? அல்லது உன்னைச் சேர்ந்தவர்களில் யாராவது ஒருவனா? உண்மையைச் சொல். உனது தந்தையாயிருப்பானாயின் அவனை நானொன்றுஞ் செய்யேன். அவனை யழைத்துவந்து எனது அரண்மனையிலிருத்தி அவனுக்கு வேண்டியபடி உணவுகளானும் ஆடையாபரணாதிகளானும் அவனுள்ளங்களிக்குமாறு செய்கின்றேன். வேறு பகைவனாயிருப்பானாயின் அவனையிப்போது எனது கொடூரமான ஒரு பாணத்தால் யமனுலகத்திற் கொண்டுபோம்படிச் செய்கின்றேன். அவனுக்கு வேறு யமன் வேண்டாம். எந்த மூடன் தான் என்னுடைய பராக்கிரமம் முதலியவற்றை யெண்ணாது வருவான்? அவனுயிரினிடத்தில் விருப்பமுள்ளவனாயிரான். நீ வருகின்றவன் இன்னானென்று சீக்கிரத்தில் சொல்வாயென்று கேட்க, அவள், ஓ அசுரனே! நானிங்கு உன்னுடைய கடுங்காவலிலிருக்க, வருகின்றவனின்னானென்று நானெப்படிச் சொல்லுவேன்? அவன் என் தந்தையுமல்லன், வேறு என்னைச்சேர்ந்த பந்துக்களிலொருவனுமல்லன். அவன் எவனோ? எதற்காக வருகின்றானோ? நானொன்றுமறியேனென்றாள். அசுரனவற்றைக்கேட்டு, ஓ பிராணநாயகியே! நீயொன்றுமறியாயென்பதுண்மையாயின் உன்னிடமிருந்த யசோதை போயன்றோ இவன் வருகின்றான்? அவள் வராதிருப்பாளாயின் இவன் யாரோவென்று நீ சொன்னதுவுண்மைதான். அவளுக்குத் தெரிந்தவன் உனக்குத் தெரியாதவனாயிருப்பானா? இது விந்தையினும் விந்தையே! என்னுடைய தூதர்கள் உன்னுடைய தோழிதானழைத்துக்கொண்டு வருகின்றாளென்று சொல்லுகின்றார்களே! நீங்களிருவரும் மஹா சாமார்த்தியவதிகள்தான். என்னை யெதிர்த்துவருகிற சத்துரு எவ்வுலகினுமில்லை யென்றான். (25-40)

ஓ அரசனே! இவனிப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போது சில தூதர்கள் ஓடிவந்து, ஓ அசுரேந்திரனே! என்ன செய்கின்றீர்? பகைவரிதோ வந்துவிட்டனரே! உமக்கு இவளிடத்தில் பேசுவதற்கே காலம் சரியாயிருக்கிறது. அவளும்மிடத்திற் பேசிக்கொண்டே காரியத்தில் கண்ணாயிருக்கின்றாள். நீர் புறப்படுமென்று தூதர் கடிந்து சொல்லவே, அவன் அவளைச் சற்று விட்டிருப்பதற்கு மனந்துணிந்து ரதத்தின்மீதேறிச் சென்றான். இவன் வருகையைக்கண்ட ஏகவீரன் யசோவதியுடன் குதிரைமீதேறிக்கொண்டு எதிர்த்துவந்தான். இருவரும் இந்திரனும் விருத்திரனும் போர்புரிந்ததுபோல் போர்புரிந்தனர். இவ்விருவரதுபோரைத் தேவரெல்லாங்கண்டு இப்போர் எப்போருக்கிணையாகுமென்று அதிசயித்திருக்கும்போது ஏகவீரன் காலகேது என்னும் அசுரனை நோக்கிக் கதையினால் ஓரடியடித்தான். அவ்வோரடியினாலேயே அவன் உயிரிழந்தவனாய்ப் பூமியில் வீழ்ந்து யமபுரஞ்சென்றனன். அசுரச்சேனைகளெல்லாம் போனவழி தெரியாமலோடிப்போயின. இவ்வற்புதத்தைக்கண்ட யசோதையானவள் இதுவன்றோ தேவியினது கருணையென்று வியந்து ஏகாவலியைப் பார்த்து, ஓ என்னரசியே! பரமேஸ்வரியி

னுடைய கிருபையினுல் உனக்குவந்த ஆபத்து ஓரிமைப்பொழுதில் போனவழி தெரியாமற்போயிற்று. அந்த அசுரனைக்கொன்ற அரசனுகிய இம்மஹா புண்ணியசாலி ஸ்ரீராமமூர்த்தியைப்போல் பிரகாசிக்கின்ருன். அவன் உன்னைப் பார்க்கவேண்டுமென்கிற ஆவலுடையவனு யிருக்கின்ருன். நான் இம்மஹாபுருஷனைக் கங்கைக்கரையில் பார்த்து இவனுடைய செய்திகளையெல்லாமறிந்து உன்னுடைய கஷ்டத்தையும் உனது ரூபலாவண்ணிய விசேஷங்களையுஞ் சொன்னேன். அவனதனைக் கேட்டு இந்த ராக்ஷசனுடைய கொடுஞ் செயலால் நீ படும்பாட்டையும் மன்மதனுல் தனக்குண்டாகிய பெரும்பாட்டையும் எண்ணிப்பார்த்து மனம்பொருதவனுய் வந்து ராக்ஷசப்போரை யொழித்து மன்மதன்போரை உன்னுலொழித்துக்கொள்ள எதிர்பார்க்கின்ருன். உனதெண்ணம் எப்படியோவென்ருள். (41–52)

தோழி யசோதை இவ்வாறு சொல்லவும் அவள் ஓ தோழி! யௌவனமுடைய ஸ்திரீ யௌவன புருஷனிடத்தில் போவதென்ருல் நாணமல்லவோ? அஃதுவுனக்குத் தெரிந்ததுதானே! ஆயினும் இவ்வரசன் என்னுடைய கஷ்டத்தைப்போக்க இவ்வளவுதூரஞ் சிரமப்பட்டுவந்து இவ்வளவு பெரிய யுத்தத்தைச் செய்திருக்கும் போது அம்மஹானுபாவனை நான் திருப்திசெய்யாதிருப்பேனுயின் தேவிக்குச் சம்மதமாகுமா? ஆதலால் நாம் போகலாமென்று ஒரு பல்லக்கின்மேலேறிக்கொண்டு அவன் முன்னே போயினுள். அவன் இவள் வருகையைக்கண்டு சமீபத்தில் வந்து அவள் அழுக்கடைந்த சரீரத்தோடும் மாசேறிய ஆடையோடும் இருப்பதைப் பார்த்து மிகவும் மனவருத்தமுடையவனுய் அவளைப் பார்த்து, ஓ ரதிபோன்றவளே! யசோதையால் உன்னை மனத்தகத்தே நிர்மலமாய்க் காணப்பெற்ற நான் இப்போது வெளியில் இவ்வாருன அழுக்கடைந்த கோலத்துடன் காணப்பெற்றேனே! இஃது எனது கண்கள் செய்த பாவமோ? நீ எவ்வாறிருந்தபோதினும் என்னுசை உன்னைப் பார்ப்பதில் முற்பட்டு வந்து நிற்கின்றது. அதற்கு உனது திருமுகத்தைக்காட்டி அதனை யுன் வசமாக்கிக்கொள்வாய். அஃது என்னுள்ளடங்கத்தக்கதாகவில்லை. நானென் செய்வேனென்று வேண்டிநிற்க, அவளும் இவனது வார்த்தைகளுக்கெல்லாம் புன்னகையோடுங் கூடியிருந்தனள். இருவரது குறிப்பையுங்கண்ட யசோதை அவனைப் பார்த்து, ஓ ஏகவீரனே! இந்த ஏகாவலியை இவன் தந்தை யுனக்கே கொடுப்பதாகச் சொல்லியிருக்கின்ருராகையால் இவள் உன்னுடைய சுவாதீனமா யிருக்கத்தக்கவளே. ஆனுல் இவளுடைய சல்லாபசுகம் உனக்குக் கிடைப்பதற்கு இன்னுஞ் சிறிதுபோது பொறுத்திருக்கவேண்டும். நீங்களிருவரும் இனி கவலை கொள்ளாதீர்கள். ஓ அரசனே! இவளை யழைத்துக்கொண்டுபோய் தந்தையிடஞ் சேர்த்து விடுவையாயின் அவர் உடனே விவாகத்தைச் செய்துமுடிப்பாரென்று சொல்லவும், ஏகவீரன் அவளது வாய்மொழியை வாய்மையென வெண்ணி இருவரையும் அழைத்துக்

கொண்டு சகல சேனைகளுடன் அவன் தந்தையிடம் போவதற்குப் பிரயாணப்பட்டு வரும்போது இவர்களது வருகையை அவன் கேள்வியுற்று ஆச்சரியமுஞ் சந்தோஷமு மடைந்து மந்திரி முதலாயினருடன் சகல வாத்தியங்களுங் கோஷித்துக்கொண்டுவர எதிர்கொண்டுபோய்த் தனது புத்திரி அழுக்கடைந்த வாடையுடன் வாட்டமுற்றுவருங் கோலத்தைக்கண்டு மனம்புழுங்கி யசோதை யைக்கேட்டு அவளால் எல்லாச் சங்கதிகளுந் தெரிந்துகொண்டு மனப்புழுக்கமாறி ஏகவீரனது ஒழுக்கத்தைநாடி அவனை முன்னும் தன்மகளைப் பின்னுமாக விசாரித்து அன்புபாராட்டி நீங்களிருவரும் சுகமாக வாழக்கடவீர்களென்று தன்னரண்மனைக்கு அழைத்துக் கொண்டுபோய்க் கொலுமண்டபத்தி லிருக்கச்செய்து யாவரையும் பார்த்து, ஓ மந்திரிகளே! நமது அருமந்தச் செல்வியை நாமனை வருங் கண்டு களிக்குமாறு செய்வித்த இம்மகாபுருஷனைக் காட்டி லும் நமக்கு எவன் மருமகனாக வருவான்? ஆகையால் நமது பெண்ணை இந்த ஏகவீரனுக்குக் கலியாணஞ்செய்து கொடுக்க வேண்டுமென்றுசொல்லி அப்பொழுதே விவாகத்தையும் நடத்தி வேண்டிய ஸ்ரீதனங்களையுங் கொடுத்துத் தன் பெண்ணோடு யசோதையையுங் கூட்டி அனுப்பினான். அந்த ஏகவீரனும் மன மகிழ்ந்தவனாய் யசோதையுடன் தனது பத்தினியையும் அழைத் துக் கொண்டுபோய்ச் சுகமாய் வாழ்ந்திருந்து பின்னர் கிருதவீரிய னென்னும் ஒரு புத்திரனையும்பெற்று மகிழ்ந்திருந்தனன். அவனுக் குப் பிறந்தவன் கார்த்தவீரியன். ஓ அரசனே! கார்த்தவீரிய னுடைய வம்சமும் இதனாலறியக் கடவாய் என்றனர். (53–66½)

ஓம் லம்ப முக்தாலதாஞ்சிதாயை நம:

## 24. வியாசர் வருத்தம் (1)

சூதர் கூறுகின்றார்:—ஜனமேஜயன் ஹைஹயர்களுடைய வம்சோற்பத்தியைக்கேட்டு ஆச்சரியமடைந்தவனாய், வியாசரை நோக்கி, ஓ சர்வஜ்ஞரே! இப்பொழுது நீர் சொல்லிவந்த சரிதம் மிக்க ஆச்சரியகரமாயிருக்கின்றது. லோகபாலகராகிய விஷ்ணு மூர்த்தியானவர் வனத்தில் குதிரை யுருவங்கொண்டுவந்து லக்ஷ்மி யோடு கூடினாரென்பது எனக்கு மிகவும் வியப்பைத்தருகின்றது. அதனுண்மையை எனக்கு விளங்கும் வண்ணஞ் சொல்லப் பிரார்த் திக்கின்றேனென்று கேட்க, வியாசமுனிவர் கூறுகின்றார்: ஓ அரசனே! திரிலோக சஞ்சாரியாயும் வீணைகானப்பிரியராயும் யாவர்க்கு மின்பமளிப்பவராயுமுள்ள நாரதமுனிவர் ஒரு சமயம் என்னுடைய ஆச்சிரமத்துக்கு வர, அவரை நான்கண்டு அடி பணிந்து ஆசனமளித்து அதிலிருக்கச் செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகள் தந்து மிக்க விநயத்துடன் நீ எண்ணியவாறு நானு மெண்ணி அந்நாரதமுனிவரை நோக்கி வினவலாயினேன்: ஐயா! சாரமில்லாததாகிய இச்சம்ஸாரத்தில் பிராணிகளுக்கு என்ன சுக மிருக்கின்றது? நீர் நன்றாய் பரியாலோசனைசெய்து பாரும். எப்

பொழுதும் எவ்விடத்திலும், எவனிடத்திலும் சுகமிருக்க நானறிந்தேனில்லை. நானே ஒரு த்வீபத்திற் பிறந்து அந்த க்ஷணத்திலேயே பாதுகாக்கத்தக்க தாயினாலும் விடப்பட்டு, யாதொரு சகாயமுமில்லாமல் கர்மவசத்தால் அரண்யத்தில் விருத்தியடைந்து, பின்னர் மேருபர்வதத்துக்குப் போய் புத்திராபேக்ஷையினால் பரமேஶ்வரனை நோக்கி அதி உக்கிரமான தவத்தைச் செய்து, அவரருளால் சுகனென்கிற ஒரு புத்திரனைப்பெற்று அவனுக்கு வேதசாரங்களை யெல்லாங் கற்பித்து வருங்காலத்தில் அவன் என்னைவிட்டு ஓடிப்போனான். பின்னர் நான் அப்புத்திர சோகத்தால் வருத்தமுற்று எங்குந் திரிந் தலையுங்காலத்தில் நீரும் சில நல்லுபதேசங்களைச் செய்துப்போனீர். நானவ் வுபதேசங்களாலும் புத்திரசோகம் நீங்கப்பெறாது ஏக்கமுடையவனாய் மேரு பருவதத்தையுந் தவத்தையும்விட்டு குருஜாங்கலம் என்னுந் தேசத்தையடைந்து அங்கும் எப்பொழுதும், சுகனே! சுகனே யென்று புத்திரனைக் கூவிக்கூவி யலைந்தலைந்து இனி இச்சம்ஸாரத்திலென்ன சுகமிருக்கின்றதென வெறுத்து இப்பிரபஞ்ச வாழ்க்கையைப் பொய்யென வெண்ணியிருக்கு மச்சமயத்தில், மாதாவைப் பார்க்கவேண்டுமென் றெண்ணமுண்டாக அவளிருக்குமிடத்தைத் தேடிச்சென்றேன். (1–20)

அவளோ சந்தனு மகாராஜாவினால் வரிக்கப்பட்டுப் புத்திரப் பேறுண்டா யிருப்பதறிந்து அவளிடத்திற் போவதை விட்டு ஸரஸ்வதி தீரத்தில் ஓர் ஆச்சிரமங் கட்டிக்கொண்டு வசித்திருக்குங் காலத்தில் என் தாய்க்குப் பர்த்தாவான சந்தனுமகாராஜன் சொர்க்கத்தை யடைந்துபோக, அவளும் அவளுடைய இரண்டு பிள்ளைகளும் காங்கேயனால் காக்கப்பட்டு, பின்னர் அக்காங்கேயன் சித்திராங்கதனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து அரசியலை நடத்திவரச் செய்தனன். அப்பொழுது என் தாய் மகிழ்ந்திருந்தாள். அவனுஞ் சின்னாள் கழித்துச் சொர்க்கத்தை யடைந்தனன். பின்னரவளழுதவண்ணமா யிருந்தாள். அதனை நானறிந்து அவளைச் சமாதானஞ் செய்வதற்குப் போய் காங்கேயனையுங் கண்டு தாயாரைச் சமாதானப்படுத்தினேன். காங்கேயன் விசித்திர வீரியனுக்குப் பட்டாபிஷேகத்தோடு கலியாணமும் நடத்த, அது கண்டு நானும் என் தாயும் சுகமாக வாழ்ந்திருந்தோம். சின்னாள் கழித்து க்ஷயரோகத்தா லவனும் இறந்து போனான். பின்னர் அவன் பத்தினிமார்கள் மாமியாரை வணங்கி நாங்களினி யிங்கிருத்தல் கற்பிலக்கணமன்று; அக்னிப் பிரவேசமாய் எங்கள் கணவருடன் சுவர்க்கத்தில் வசிக்கின்றோம்; எங்களுக்கு விடைகொடுக்க வேண்டுமென்று வேண்ட, அவளதற்கு டன்படாது தடைசெய்து விசித்திரவீரியனுக்குச் செய்யவேண்டிய கருமாதி கிரியைகளைப் பீஷ்மருடன் கலந்து செய்து முடித்தனள். நானும் என்னுடைய ஆஶ்ரமத்துக்கு வந்துவிட்டேன். என் தாயானவள் புத்திரசோக மிகுதியினாலும் சந்ததியற்றுப்போன துக்கத்தினாலும் என்னை

நினைத்தாள். நான் அந்தக்ஷணமே அவளிருக்கும் நாகசமென்னும் பட்டணத்துக்குப்போய் அவளைக்கண்டு வணங்கி, ஓ தாயே! எதற்காக இப்பொழுது என்னை நினைத்தாய்? என்னாலாக வேண்டிய காரியமென்ன? எனக்கு நீயே குரு தெய்வமெல்லாமும். உன்னுடைய உத்தரவுக் கிரண்டாவதாக உனக்கடிமையாக யிருக்கிற நான் செய்யேனுகையால் எனக்குக் கட்டளையிடுமென்று கேட்க, அதற்கு என் தாய் கூறுவாளாயினள்: அப்பா புத்திரனே! நீ சர்வசாஸ்திர தருமங்களையும் நன்குயறிந்தவனுகையால் நான் சொல்லப்போகிற தருமத்தில் விளங்கும் உபகாரத்தை நன்குயாலோசித்து என்னெண்ணத்தைப் பூர்த்தி செய்வாய். இச் சந்தனுவம்சம் இது வரையில் இந்தக் காங்கேயருடைய பீஷ்மத்தால் காக்கப்பட்டு வந்தது. இப்போது இந்த வம்சம் போகும் போலிருக்கின்றதே என்கிற ஏக்கமும் பயமுமுடையவளாய் அவற்றைப் போக்கிக்கொள்ளுவதற்கு உன்னை நினைத்தேன்; நினைத்தபடி நீயும் வந்தாய். வந்த நீ வம்ச விருத்தியைச் செய்து போகவேண்டும். யான் வம்சச் சேத பயத்தால் வருத்தமடைகின்றேன். என்னை நீ ரக்ஷிக்கவேண்டும்; அதாவது விசித்திரவீரியனுடைய பத்தினிமாரிருவரையும் நீ கூடி வம்சோத்பாதனஞ் செய்வாயாக. ப்ராதாவினுடைய வம்சத்தை விருத்தி செய்வதனுல் உனக்கு யாதொரு தோஷமு முண்டாகமாட்டாதென்றுள். (21–44)

இவ்வாறு கூறிய தாயின் வார்த்தையைக் கேட்டு நான் சிந்தாகுலமடைந்தவனுய் நாணத்தால் தலைகுனிந்துகொண்டே தாயைநோக்கி, ஓ அன்னுய்! பிறருடைய ஸ்திரீயைக் கையினுற் ரொடுவதே அதிக பாதகமென்று தெரிந்த யானே இந்த அதர்ம மார்க்கத்தைச் செய்ய எப்படித் துணிவேன்? சகோதரனுடைய மனைவி புத்திரியென்று சொல்லப்பட்டிருக்க வேதங்களை எல்லாம் படித்த நான் இந்த விபசாரத்தை எப்படிச் செய்வேன்? அதர்ம மார்க்கத்தில் வம்சத்தை விருத்தி செய்தால் வம்ச விருத்தியை எதிர்பார்த்திருக்கும் பிதுர்க்களெல்லாம் பாபிஷ்டர்களாய் நரகத்தை யடைந்து அதினின்றும் எழுந்திருக்கமாட்டாமலிருப்பர். ஓ அம்மா! யாவருக்கும் தருமங்களை யுபதேசஞ் செய்கின்றவனுயும் தருமங்களறிவதற்கே புராணங்களைச் செய்கின்றவனுயும் இருக்கின்ற நான் எப்படி இந்த நிந்தையான காரியத்தைச் செய்வேனென்றேன். இவையெல்லாங் கேட்டுவந்த தாயானவள் அப்போது நான் சொல்லிவந்த தருமாதருமங்களைச் சிறிதும் எண்ணிப் பாராமல் வம்சோத்பத்தியை எவ்விதத்திலாவது செய்ய வேண்டு மென்கிற ஒரு தருமத்தையே மேற்கொண்டு என்னைப் பார்த்துக் கூறுகின்றுள்: அப்பா குழந்தாய்! நீ சொல்லிய வெல்லாஞ் சரியேயாயினும் என்னுடைய வார்த்தையினுல் உனக்கு யாதொரு தோஷமு முண்டாக மாட்டாது. பெரியோர்களென் றெண்ணத் தக்கவர் அதருமத்தைச் சொன்ன போதிலும் அதனை யோசியாமல் மனிதர்கள் செய்யவேண்டு மென்றும், தாயானவள்

எது செய்தால் சந்தோஷிப்பாளோ அதைச் செய்யவேண்டு மென்றும் தரும நூல் கூறியிருக்கின்றதல்லவா? அத்தருமங்களை நீ இப்போதெண்ணி புத்திர சோகத்தில் மூழ்கியிருக்கின்ற வென்னை நான் சொல்லியபடி செய்து சந்தோஷப் படுத்துவாயென்றனள். (45–54)

அவள் சொல்லி முடித்தவுடன் பீஷ்மன் என்னைப் பார்த்து, ஓ வியாசரே! நீர் இந்த விஷயத்தில் ஆலோசனை செய்வதை விட்டுவிடும். "தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை" என்பதை நாடும்; நாடிச் செய்வீராயின் நீர் உலகில் அதர்மராக வழங்கப்பட மாட்டீரென்றான். பின்னர் நான் இருவர் வார்த்தையையுங்கேட்டு அந்த நிந்திதமான காரியத்தைச் செய்யவாரம்பித்து அந்தப்புரஞ் சென்று படுக்கையறையில் நானிருக்கும்போது அம்பிகை என்பவள் வந்து என்னைப்பார்த்து மனம் ரமிக்காதவளாய் அருவருப்படைந் தனள். அதனைக்கண்ட நான் அவளைப்பார்த்து, நீ என்னைக்கண்டு அருவருப்படைந்து கண்களை மூடிக்கொண்டபடியினால் உனக்குப் பிறக்கப்போகிற பிள்ளை அந்தகனாக விருப்பானென்று சபித்தேன். அச்சாபத்துடன் அவளென்னைக் கூடிப்போயினள். மறுநாள் என் தாய் என்னை ரகசியமான ஸ்தானத்திலழைத்து, அப்பா! நல்ல புத்திரன் பிரக்கும்படியாக அனுக்கிரகஞ் செய்தனையா வென்றாள். நான், ஓ அம்மணி! நீ என்பால் அனுக்கிரகத்தை நினைக்க அது சாபமாய் முடிந்ததென்று நடந்த செய்திகளைச் சொன்னேன். அவ ளதைக்கேட்டு என்ன காரியஞ் செய்தாய்! எதற்காக நான் பிள்ளையை வேண்டியது? என்று வருந்திநிற்ப, நானும் அவள் வருத்தத்தைக் கண்டு வருத்தமுற்று எப்படிச் செய்தோமென் றெண்ணியிருந்தேன். (54–61)

ஓம் லம்போதரப்ரஸாதே நம:

## 25. வியாசர் வருத்தம் (2)

வியாசர் கூறுகின்றார்:—ஓ! ஜனமேஜயனே! எனது சகோதரன் மனையாட்டிக்கு என்னால் நேரிட்ட சாபத்தை எனது தாயாகிய சத்தியவதி கேட்டு வருத்தமுற, நானும் அவளது துயரத்தைக்கண்டு துன்பமுற்றிருக்கும்போது, அவள் மீண்டும் மிகவும் பயந்தவளாய் என்னைப் பார்த்து, ஓ புத்திரா! அம்பிகை என்பவள் பெறப்போகிற பிள்ளை குருடாயிருக்குமாதலால் அப்பிள்ளை அரசாக்ஷிக்கு யோக் கியனாகானே! நானென் செய்வேன்! என்பாலன்புடையனாய் மறு படியும் நீ இனி அம்பாலிகையோடு அரசாக்ஷிக்குரிய ஒரு சத்புத்தி ரனைப் பெற்று எனக்குக் கௌரவத்தைக் கொடுப்பாயென்று வேண் டினாள். நான் அவளது இரக்கத்துக்கஞ்சி அவள் சொல்லுக்குடன் பட்டு, அந்த அம்பாலிகை அம்மாதத்தி லாகவேண்டிய ருது காலத்தை யெதிர்பார்த்துக்கொண்டு அஸ்தினாபுரத்தி லிருந்தேன். பின்ன ரவள் ருதுஸ்நானஞ்செய்து நானிருக்கும் ஏகாந்தமான

படுக்கையறையில் மாமியார் உத்தரவின்படி வந்துசேர்ந்து என்னை யும் என்னுடைய சடையையும் பற்களையும் வற்றல்போலிருக்கும் உடம்பினையுங் கண்டு அருவருத்து வியர்த்து உடம்பை வெண்ணிற மாக்கிக்கொண்டு மன வருத்தத்தோடு என்னருகேவந்து நின்றனள். நானவளைப் பார்த்துக் கோபங்கொண்டு, ஓ பெண்ணே! நீ என்னைப்பார்த்து உன்னுடம்பை வெண்மையாக்கிக் கொண்டபடி யால் உனக்குப் பிறக்கப்போகிற பிள்ளை வெண்ணிறத்தோடு மிருப் பானென்று சபித்துப் பின்னரவளுடன் சுகித்து மறுநாள் என் னிடம்போய்ச் சேர்ந்தேன். பின்னர் இரண்டு பிள்ளைகளும் திருத ராஷ்டிரனென்றும் பாண்டுராஜனென்றும் பிரசித்தி பெற்றிருந் தனர். என் தாயார் மாத்திரம் ஒருவன் குருடனையும் ஒருவன் பாண்டுரோகனையும் இருப்பதைப் பார்த்துத் திருப்தியடையாத வளாய், ஒரு வருஷங் கழித்து என்னை வரவழைத்து, ஓ குழந்தாய்! உன்னாலுண்டாக்கப்பட்ட இரண்டு பிள்ளைகளும் அரசாக்ஷிக்குரிய வர்களல்லர்; மனோகரமான வேறொருபிள்ளையை நீ கொடுக்கவேண்டு மென்ன, நானப்படியே செய்கிறேனென்று சொல்லவும், அவள் மகிழ்ந்தவளாய்த் தன் மருமகளாகிய அம்பிகா என்பவளை வர வழைத்து, ஓ பெண்ணே! நீ வியாசனிடத்தில் வெறுப்படையாமல் அவனைச் சந்துஷ்டனாக்கி அவனோடு கிரீடித்து அரசாக்ஷிக்கு யோக்கியமான ஒரு பிள்ளையைப் பெறுவாயென்று வேண்டிக் கொள்ளவே, அவள் நாணத்துடன் மறுமொழியொன்றும் சொல் லாமல் அவளிடம் விடைபெற்றுச் சென்று, தனது நாயகன் தாதி யொருத்தியை யழைத்து, என்னிடம்வேண்டிய சங்கதிகளைச் சொல்லி அவளை ஆடையாபரணங்களால் அலங்கரித்து நறுமணங் கமழும் பூக்களைச்சூட்டி சுகந்தங்களைப் பூசி ரதியும் நாணும்படி யான கோலத்துடன் நானிருக்கும் படுக்கையிடத்திற்கு வந்து என்னைக்கண்டு முகவிலாசத்துடன் காமவிலாசத்தையுங் காட்டித் தழுவி என்னை மதனநூலிற் பயில்வித்து இதுவே பரமானந்தமென மூழ்குவித்தனள். (1–20)

ஓ நாரத முனிவரே! நானவ்வானந்தத்திற் றிளைத்து அவளைப் பார்த்து, ஓ பூங்கொடி போன்றவளே! சர்வலக்ஷணங்களோடு கூடினவனையும் சௌந்தர்ய வானையும் சகல தருமங்களுணர்ந்த வனையும் சத்தியவாதியாயும் உள்ள ஒரு புத்திரன் உனக்குப் பிறப்பானென்று வரங் கொடுத்தேன். அவன்தான் விதுரனென் பவன். இந்த மூன்று பிள்ளைகளும் சகோதரனுடைய பத்தினி களிடத்தும் அவனுடைய தாதியினிடத்துமாகிய பர (அன்னிய) க்ஷேத்திரத்தில் பிறந்தவர்களாயிருந்தும் இவர்களிடத்தில் எனக் குண்டாகிய ஆசை தர்ம பத்தினியிடத்தில் பிறந்த பிள்ளைக ளிடத்திலுண்டாகும் ஆசையினுஞ் சிறந்தது. இவர்களால் சுக னில்லையே என்ற ஏக்கத்தையும் மறந்தேன். இது மாயையின் செய லன்றோ? இம்மாயையை வெல்ல ஸ்வாதீன அறிவுள்ளவர்களாலும் முடியாது. அதற்கோ உருவமுங்கிடையாது; இடமுங்கிடையாது. அது உருவமும் இடமுமில்லாமலே ஞானிகள் முதலாயினரை

மயக்குவதல்லது அதனை மயக்கும் ஞானிகளொருவருங் கிடையாது. ஓ திரிலோகசஞ்சாரியே! அதன் விலாசத்தை நானென்னென்று சொல்லுவேன்? ஸம்ஸார பந்தரகிதனுயிருந்த நான் அதுமுதல் தாயாரென்றும் பிள்ளைகளென்றும் பந்தமுண்டாய் அடிக்கடியும் அஸ்தினுபுரத்திற்கு வருவதும் ஸரஸ்வதிக்குப் போவதுமாய் ஊசலைப்போ லென்மனமுழல ஓரிடத்தில் நிலையாயிராமல் அலைந்து கொண்டேயிருந்தேன். அதுமாத்திரமா? ஒருவேளையில் நமக்கே னிந்தபந்தமென்று பந்தமற்றுத் தெளிவடைந்தும் ஒரு சமயத்தில் நாமிறந்துபோவோமாயின் நமக்குச்சிராத்தாதி கருமங்கள் செய்தற்குரிய பிள்ளைகளிவர்களாகாரே; இவர்களிடத்தில் நாமேன் ஆசைவைத்துழல வேண்டுமென்று வெறுப்படைந்தும், ஒரு சமயத்தில் வெறுப்படைந்திருக்கும் நம்மிடத்தில் பந்தத்தை யுண்டு பண்ணுகின்றது எதுவோ அதுவல்லவோ மாயை; அந்த மாயையை வெல்லவேண்டுமென்றும், நாம் அனியாயமாய் மோக மாகிய பாழ்ங்கிணற்றில் வீழ்ந்துவிட்டோமே என்றும் என்னுள்ளத் துள்ளே நினைப்பேன். இவ்வாறு நினைக்கத்தக்க நினைவுடன் கூடி யிருக்கின்ற நான் பாண்டுவுக்கு ராஜ்ய பட்டாபிஷேகமானவுடன் ஆஹா! நமது பிள்ளைக்குப் பட்டாபிஷேக மாய்விட்டதேயென்று மகிழ்ந்தேன். பின்னர் அவன் குந்தி மாத்திரி என்கிற இரண்டு ஸ்திரீகளை விவாகஞ்செய்துகொண்டு சில நாள் நகரத்தில் வசித்துப் பின்னர் பிராம்மண சாபத்தால் அரண்யத்தில் வசிக்கப்பெற்று ஸ்திரீகளுடைய சல்லாப சுகமற்றிருந்ததைக் கேள்வியுற்று வருத்த முற்றவனிடத்திற்போய் அவனுக்குவேண்டிய சமாதானங்களைச் சொல்லிவிட்டு அஸ்தினுபுரத்திற்குப்போய் திருதராஷ்டிரனைக் கண்டு அவனுக்குஞ் சொல்லவேண்டியவைகளைச் சொல்லிப் பழையபடி என்னுடைய ஆஶ்ரமம் வந்து சேர்ந்தேன். (21–34)

ஓ நாரதமுனிவரே! தவசியாயிருந்தும் "தவஞ்செய்யார் தங்கருமஞ்செய்வார்" என்றபடி நான் தவத்தைச்செய்யாமல், ஆசையுட்பட்டு அலைந்து திரிந்த செயலெல்லாங் கூறுகின்றேன், கேட்பீராக. வனவாசஞ் செய்திருந்த பாண்டு மகப்பேறு வேண்டித் தன் மனையாட்டிகளாகிய குந்தியையும் மாத்திரியையு மழைத்து நீங்களிருவரும் யமன் வாயு இந்திரன் அஶ்வினி தேவதைகள் என்கிற இந்த ஐவர்களால் நன்மக்களைப் பெறக் கடவீர்களென்று ஆக்ஞைதர அவர்கள் அப்படியே அந்த ஐவரால் தருமன் பீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் என்கிற ஐவர்களையும்பெற்று வாழ்ந்துவர, பின்னர் ஓர் நாள் அப்பாண்டு வானவன் தனக்குள்ள சாபம் தானறிந்தவனுயிருந்தும் மாத்திரியி னிடத்தில் சம்போகஞ்செய்து இறந்தனன். அதனைக்கண்ட அந்த ஸ்திரீகளும் அக்கினிப் பிரவேசமாவதற்குத் துணிய, அங்குள்ள பெரியோர்கள் அதனைக்கண்டு தடுக்கும்போது குந்திதேவி ஒரு வாறு தடைப்பட்டு நிற்க, மாத்திரி தடைப்படாமல் அக்கினியிற் பிரவேசமாயினள். பின்னர் குந்தி ஐந்து பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு ஏக்கமுற்றிருக்கும்போது சில முனிவர்கள்

அவளை யழைத்துக்கொண்டு அஸ்திநுபுரம்போய் பீஷ்மரையும் விதுரரையுங் கண்டு இவர்களது வரலாற்றைச்சொல்லி அவர்களைக் காத்துவரும்படி கட்டளையிட்டனர். இச்செய்திகளை நான்கேட்டு அச்சுகதுக்கங்களுக்காளாய் பீஷ்மனிடத்தும் விதுரனிடத்துஞ் சென்று அவர்களைப் பாதுகாக்கவேண்டிய விஷயங்களைப்பற்றி யாலோசித்து அப்பாண்டு புத்திரர்களைக் காத்துவரும்படிச் செய்தேன். பின்னரப்பாண்டு புத்திரர்கள் துரியோதனுதியரால் பல கொடுமைகளனுபவித்து வருவதைப் பீஷ்மன்கண்டு அவர்களைப் பிரியாமலிருந்து துரோணுசாரியரால் தனுர்வித்தையில் சமர்த்தராகும்படிச் செய்துவருநாளில் கர்ணனுடைய பலத்தால் துரியோதனனுக்குச் செருக்குண்டாய் கலகமுதிர்ந்து துரியோதனுதியர்க்கும் பீமனுக்கும் பகையதிகரித்து வருவதை திருதராஷ்டிரனறிந்து இனி இவர்களை யொன்ருய் வாழும்படிச் செய்வோமாயின் பெருங்கலகம் விளையுமென்றஞ்சிப் பாண்டுபுத்திரர்களை வேறிடத்தில் வைத்தனன். அப்படிவைத்திருந்தும் துரியோதனன் தீங்கான வெண்ணமுடையனுதலால் அரக்குமாளிகையொன்றமைத்து அதில் அவர்களை வைத்துத் தீயிட்டனன். அக்கொடுந்தொழிலைக்கேட்ட நான் அழுது புரண்டலறித் துக்கித்த துக்கம் இவ்வளவென்று சொல்லிமுடியாது. (35–49)

பின்னரவர்களைக் காணவேண்டுமென்று காடுகளெல்லாந் திரிந்து திரிந்தலைந்து அவர்களைக் கண்டுபிடித்து ஏகசக்கர நகரத்துக்கனுப்பி ஒருவாறு மனத்திருப்தியடைந்து அதன் பின்னர் துருபதனுடைய பட்டணத்துக்கனுப்பினேன். பின்னரவர்கள் திரௌபதியினுடைய சுயம்வரத்தில் மிகவும் மெலிந்து வணக்கமுள்ளவர்களாயும் துக்கிதர்களாயும் பிராம்மண வேஷம்பூண்டு மான்றோலைத் தரித்தவர்களாயும் வந்து சேர்ந்தனர். அவர்கள் வேஷத்தைக்கண்டு பெருந்துயரத்தை யடைந்தேன். இதுவென்ன பந்தமையா! அப்படித் துயரத்தோடிருக்கும்பொழுது அருச்சுனன் அச்சுயம்வரத்தைத் தன்னுடையதாக்கிக் கொண்டு அந்தப் பாஞ்சாலியைத் தாயினுடைய ஆணையின்படி இவருங் கலியாணஞ் செய்துகொண்டமையைக் கண்டு ஆனந்தித்தேன். பின்னரவர்கள் பாஞ்சாலியுடன் அஸ்திநுபுரம்போயிருக்க, அதைவிட்டுத் திருதராஷ்டிரனுலும் கிருஷ்ணபகவானுலும் காண்டவப்பிரஸ்தத்தில் வசிக்கும்படியாய் வந்தது. அதில் வசித்திருந்து பின்னரவ்விடத்தை அருச்சுனன் அக்கினிதேவனுக்குத் திருப்தியாக்கிவிட்டனன். அதன் பின்னர் தருமராஜன் ராஜசூய யாகஞ் செய்து பெரும்பட்டத்துடனிருக்க நானதைப் பார்த்து எனக்கே அப்பட்டம் வந்ததுபோலும் அதிக சந்தோஷமடைந்தேன். அப்பாண்டவர்கள் துரியோதனனுடைய பொருமைச் செயலால் யாவுந் தோற்றுச் சகல செல்வங்களையுமிழந்து திரௌபதிக்கு மானபங்கமும் வரப்பெற்று வனவாசமே கதியாய் வருந்தா நிற்ப, நானவையெல்லாங் கேட்டுப் பெருந் துக்கத்துக்காளாயினேன். ஓ நாரத பகவானே! சுகதுக்க சொரூபமான ஸம்ஸாரத்தினது அநாதி தர்மத்தை

யானறிந்தவனுயிருந்தும் பிரமையினுல் சுகதுக்கங்களில் மூழ்கிப் போய்விட்டேன். நான் யாருடைய பிள்ளை, அவர்கள் யாருடைய பிள்ளைகள், தாய் யார் என்பது தெரிந்திருந்தும் என் மனது இரவும் பகலும் மோகத்தினுல் சுழன்றுகொண்டு எங்கே போவேன், என்ன செய்வேனென்று எவ்விதத்தானும் சந்தோஷம் சிறிதுமடையாமல் ஊஞ்சலிலேறி யாடுகின்றவன்போல் ஆடியாடி அலைந்துழன்றதே யன்றி நிலையாயொன்றினும் நின்றதின்று. ஓ முனிஸ்ரேஷ்டரே! நீர் சர்வக்ஞராயிருக்கின்றீர். இந்த மோகத்திற்குக் காரணமென்னையோ? அதனை யெனக்குச் சொல்லிச் சந்தேகத்தைப் போக்கி நானெப்படி மனவருத்தமின்றிச் சுகமாயிருப்பேனே அப்படிச் செய்யுமென்று விண்ணப்பஞ் செய்தேன். (50–63)

ஓம் லப்யாயை நம:

## 26. நாரதர் மோகம்

வியாசர் ஜனமேஜயனை நோக்கிக் கூறுவாராயினர்:—ஓ அரசனே! நாரதமுனிவர் மோக காரணத்தைக் கேட்கிற என் வார்த்தைகளை யெல்லாங் கேட்டுச் சிரித்துச் சொல்லுகிறுர்: ஓ வியாசரே! புராணமெல்லாஞ் செய்தவரே! நீர் என்னை என்ன கேட்கின்றீர்? இச்சம்ஸாரத்தில் மோகமில்லாத மனிதனுமுண்டோ? பிரமனுதியரும் ஜனகர் கபிலர் முதலாயினுரும் மாயையினுல் சூழப்பட்டவர்களாய் ஸம்ஸார மார்க்கத்திற் றிரிகிறுர்களென்று சொன்னுல் ஏனையரைச் சொல்லவும் வேண்டுமா? அவர்களெல்லா மங்ஙனமிருக்க, உலகிலென்னை ஞானியாக அறிந்து கொண்டிருக்கின்றுர்களே, அவர்களறிந்த வண்ணம் நானிருக்கின்றேனு? இல்லையே. நானெல்லாரைப் போலுமே மோகமடைந் திருக்கின்றவன்றுனே யன்றி வேறில்லை. ஓ வியாசரே! நான் பூர்வம் ஸ்திரீ தேகமடைந்து ஓரரசனுக்கு மனைவியாய் மோகத்தினுலனுபவித்த பெருந்துக்கமான விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன், கேட்பீராக: (1–5)

ஒரு காலத்தில் நானும் பர்வத மகாமுனியும் தேவலோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்து பூப் பிரதக்ஷணஞ் செய்து உத்தமமான பரதகண்டம் வந்தடைந்து ஆங்காங்குள்ள புண்ணிய தீர்த்தங்களையும் புண்ணிய க்ஷேத்திரங்களையும் முனிவராச்சிரமங்களையுங் கண்டு களித்துலாவி வந்தோம். ஓ வியாசரே! நாங்கள் பூலோகத்துக்கு வரும்போது ஒருவருக்கொருவர் ஒரு சங்கேதஞ் செய்துகொண்டு புறப்பட்டோம். அஃதென்னையெனின், நம்மிருவருக்குள் எந்தெந்தவிடத்தில் யாருக்கு எப்படியெப்படி மனுேவிருத்தி யுண்டாகிறதோ அதை மறைக்காமல் சொல்லிவிடவேண்டும்; அது நல்லதாயினும் கெட்டதாயினும் மறைக்கக்கூடாது. அன்றியும் போஜனம் தனம் ஸ்திரீ என்னு மிவ்விஷயங்களில் யாருக்கு எப்படி மனதுண்டாகிறதோ அதையுமப்படியே ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ள வேண்டுமென்று சபத பூர்வமாய்ச்

சங்கேதஞ் செய்துகொண்டோம். அப்படியே ஒரே மனமுள்ளவர் களா யிஷ்டப்படி எங்குந் திரிந்துவரும்போது கிரீஷ்ம காலத்தின் முடிவு வரவே சஞ்சயமென்கிற பட்டணம் வந்து சேர்ந்தது. அந் நகரத்தரசனுல் நாங்கள் கௌரவத்தோடும் பக்தியோடும் பூஜிக்கப் பட்டவர்களாய் அவனுடைய வீட்டில் நான்கு மாதமிருந்தோம். ஏனெனில் நான்கு மாதமும் மழைக்காலமாகையால் வழி நடப்பவர் கட்கு மிகவும் வருத்தத்தை யுண்டாக்கும். ஆனதுபற்றியே அறி வுள்ளவர்கள் அந்நான்கு மாதமும் ஒரேவிடத்திலிருந்து ஏனைய எட்டு மாதங்களில் காரியார்த்தமாய்த் திரிவர். வெளியில் சுகத் தைக் கோருகிறவர் மழைக்காலத்தில் பிரயாணஞ் செய்யக்கூடாது. ஆனதால் நாங்கள் அரசன் வீட்டில் வாசஞ் செய்துவந்தோம். அந்த மஹாராஜனே பிரதி தினமும் எங்களுக்குப் பிக்ஷையென்கிற மரியாதையில்லாமல் விருந்தென்கிற மரியாதையில் போஜனத்தை நடத்தி வந்தனன். அதுவுமன்றி தமயந்தியென்று பிரசித்தி பெற்ற தன் மகளையும் எங்களுக்குப் பரிசாரகஞ்செய்ய வேற்படுத் தினன். மிக்க அழகான தந்த வரிசையையும் சௌந்தரியத்தையும் நல்ல விவேகத்தையும் பரந்த கண்களையுமுடைய அந்த ராஜபுத்தி ரியும் எங்களிருவருக்குஞ் செய்யவேண்டிய பணிகளில் எந்தச் சம யத்திலும் முயற்சியோடிருப்பதுமன்றி ஸ்நான காலங்களில் வேண் டிய வரையில் சுத்தமான தீர்த்தமும் போஜன சமயத்தில் இஷ்ட மான போஜனமும் அது முடிந்தபின்னர் தாம்பூலமும் இவற்றி டையே வேண்டுவனவுங் கொடுத்துக்கொண்டு வருவள். இவை யன்றி நாங்கள் கேட்பதற்குக் கூடாமல் மனத்தால் விரும்பப் படு வனவாகிய ஆசனம் சயனம் முதலானவற்றைத் தானே குறிப்பா லறிந்து யமைப்பாள். இவ்வண்ணம் அவளுடைய பணிவிடையின் சுகத்தால் அங்கு நாங்கள் ஆவலுள்ளவர்களாய் வசித்திருக்கும் போது நான் வீணையைக் கையிலெடுத்துச் சாதக நிமித்தம் உத்தம மான ஸ்வரத்தை ஆலாபனஞ் செய்துகொண்டு மனதுக்கினிய ஸாமகானத்தைப் பாடி வருவேன். (6–22)

அச்சமயங்களில் ராஜபுத்திரி மனோகரமான அக்கானத்தைக் கேட்டு வருவதனுல் என்னிடம் மிகவும் ஆவலுள்ளவளாயினள். எனக்கும் அப்பெண்ணிடத்தில் மிக்க பிரீதியுண்டாய்த் தினேதினே எங்களிருவருக்கும் உண்டாகிய ஆசைவிருத்தியாயிற்று. அதனு லவள் போஜனம் முதலிய சகல காரியங்களிலும் என்னிடத்தி லதிக ப்ரீதியாய் விசாரிப்பதும் என்னுடனிருக்கும் பர்வதமுனியைச் சாமானியமாய் விசாரிப்பதுமாயிருந்தனள். இந்தப் பேதவுபசார மும் தினேதினே விருத்தியடைந்து என்னுடைய ஸ்நானத்துக்கு வெந்நீரும் அவருக்குக் குளிர்ந்த ஜலமும் எனக்குத்தயிரும் அவருக்கு மோரும் இப்படியே உண்பனவற்றிலும் உடுப்பனவற்றி லும் ஏனையபணிகளிலும் வேறுபாடே செய்துவந்ததோடு எனக் குரிய படுக்கையை மிக வெண்மையாயும் மிருதுவாயுமுள்ளதைப் போடுவாள் ; அப்படிப்பட்டத்தை அவருக்குப் போடமாட்டாள் ; என்னைச் சந்தோஷமாயும் அவரை வெறுப்பாயும் பார்ப்பாள். இவ்

வாறு இவள் செய்யும் பேதத்தால் பர்வதமகாமுனி இவளிப்படி நடத்துவதற்குக் காரண மென்னேயென்று ஆச்சரியத்தோடு மன தில் சிந்தித்து என்னே ரகசியமாயழைத்து, ஓ நாரதமுனியே! இந்த ராஜபுத்திரி உன்னிடமெப்பொழுதும் பிரீதியுடன் வேலே செய்கின்றதுமன்றி உனக்குவேண்டிய போஜனமும் பக்ஷியமும் நீ வேண்டாமென்று தடுத்தாலும் வேண்டிவேண்டி யுண்பிக்கிருள்; நாஞே வேண்டுவதுமில்லே, வேண்டிஞலும் அவள் கொடுப்பது மில்லே. உன்னிடத்தில் அப்படியும் என்னிடத்தி லிப்படியுமா யிருப்பதற்குக் காரணந் தெரியாமையா லெனக்குச் சந்தேகத்தை விளேவிக்கின்றது. இதஞல் இந்த ராஜபுத்திரி உன்னேப் பர்த்தா வாகச் செய்துகொள்ள இச்சிக்கிருளென்றும் நீயுமப்படியே அபிப் பிராயப் பட்டிருக்கிருயென்றும் உங்களிருவரிடத்திலு முண்டா யிருக்குங் கண் செய்கைகளாலும் முகக்குறிப்புகளாலும் நானறி கின்றேன். உள்ளே நிகழுமெண்ணத்தைக் கண்ணும் முகமுங் குறிப்பிஞல் உணர்த்துமன்றே? ஓ நாரதமுனியே! நாம் புறப் படும்போது இருவருஞ் செய்துகொண்ட சங்கேதத்தை நினேத்து பொய்யை யொழித்துண்மையைக் கூறுவாயாகவென்ருர். (23–32)

இவ்வாறு அவரென்னேப் பலாத்காரமா யழைத்துக் கேட்டபடி யிஞல் நான் வெட்கப்பட்டுக் கொண்டு, ஓ பர்வதமுனியே! நீர் சொல்லியபடியே இருவருக்கும் ஆசையுண்டாயிருப்பதிற் றடை யில்லே; அஃது உண்மைதானென்று சொன்னேன். அவர் கோபங் கொண்டவராய், ஓ நாரதனே! முதலாவது நாம் செய்துகொண்ட சபதப்படி யுனக்குண்டாகிய இச்சையை ஏன் சொல்லாதிருந் தாய்? இரண்டாவது என்னே வெறுத்திருக்கும் அவளே நீ வெறுக் காது மோகங்கொண்டிருக்கின்ருய். இவ்விரண்டுந் துரோகமான செயலாதலால் உன்னேப்போலுந் துரோகி யொருவனுண்டோ! சீ சீ! இனி உன்முகம் குரங்குமுகமாகப் போகக்கடவது என்று சபிக்க நான் அக்கணமே அம் முகத்தைப் பெற்றேன். பின்னர் நானும் அவரை உடன்பிறந்தாள் பிள்ளேயென் றெண்ணுது அதிக கோபத்தோடு மூடாத்மாவாகிய நீ சொற்ப குற்றத்திற்காகச் சபித்த படியால் உனக்குச் சொர்க்கத்தில் வாசமில்லாமல் மிருத்யுலோகத் தில் வாசமுண்டாகக் கடவதென்று சபித்தேன். (33–40)

அச்சாபத்தைக்கேட்ட முனிவர் மனவருத்தத்துடன் அப்பட் டணத்தை விட்டுப்போயினர். எனது வீணுகானத்தைக் கேட்டு வந்த அந்த ராஜபுத்திரி எனது முகம் வானர முகமானதைப் பார்த்து மிகவும் மனவருத்தமுற்றனளென்று நாரதர்கூற, வியாசர், ஓ பிரம்மசொரூபியே! பின்னர் நீரெப்படி அச்சாபத்தினின்றும் விடுபட்டு மனிதமுகமுள்ளவரானீர்? உம்மைச் சபித்துப்போன அந்தப் பர்வத முனிவரெவ்விடம் போஞர்? உங்களிருவருக்கும் மீண்டு மெவ்வாறு சிநேகமுண்டாயிற்று? இவையனைத்தும் விரி வாய்க்கூறி யருளவேண்டுமென்று கேட்க, நாரதர், ஓ மஹானு பாவரே! இச்சரித்திரம் மிகவும் பெரிதானபடியால் அவ்வளவையு மெவ்வாறு சொல்வேன்? பர்வதமுனி போனபின், ராஜபுத்திரி முன்

போல் பணிவிடை புரிபவளாகவே யிருக்க, நான் நாணத்தால் மிக்க துன்பமுள்ளவனாய் விசாரப்பட்டுக் கொண்டு நமக்கெந்தகதி கிடைக்குமோவென்று சிந்தித்திருக்குஞ் சமயத்தில் சஞ்சய மகா ராஜன் புத்திரிக்கு விவாகத்திற்குரிய பருவம் வந்திருப்பதை யறிந்து மந்திரிகளை நோக்கி, ஓ மந்திரிகளே! என் புத்திரிக்கு விவாககாலஞ் சமீபித்து விட்டபடியால் அவளுக்குத் தகுந்த அழகுள்ளவனையும் யாவருக்குஞ் சம்மதப்பட்டவனையும் உதாரம் முதலான சத்குணங்களோடு கூடினவனையும் மகாசூரனையும் நற் குலத்திற் பிறந்தவனையுமிருக்கிற ராஜபுத்திரனொருவனைக் குறிப் பிப்பீர்களாயின், அவனை என் புத்திரிக்கு விதிப்படி மணம் புரிவிக் கின்றேனென்ன, மந்திரிகள், ஓ அரசனே! உன் புத்திரிக்குத் தகுந்த சகல நற்குணமுள்ள அநேக ராஜபுத்திரர்களிருக்கின்றனர்; அவருள் ரிசி என்னும் ராஜபுத்திரன் சிறந்தவனா யிருக்கிறபடியால் அவனை வரவழைத்து யானை குதிரை முதலான வரிசையுடன் பெண்ணைக் கொடுக்கலாமென்று கூறினர். (41–52)

இச்செய்தி தமயந்தி யறிந்து சகியொருத்தியை யழைத்து, ஓ சகியே! நீ தனியேயிருக்கு மென்றந்தை யிடஞ் சென்று உன் புத்திரி மகதியென்னும் வீணையில் வல்லவரும் அறிவிற் சிறந்த வருமான நாரத மகாமுனிவர்பால் வீணாகானத்தை நாடோறுங் கேட்டுவந்த வாசை மிகுதியால் அவரையே நாயகனாகக்கொள்ள வேண்டுமென்று முன்னமே யெண்ணியிருக்கின்றவளாகக் காணப் படுகின்றமையால் அவள் வேறொருவரைப் பர்த்தாவாகக் கொள்ளா ளென்பது நிச்சயம்; இனி நீர் அவளிஷ்டப்படி அம்முனிவருக்கே விவாகஞ் செய்துவைப்பதே தருமமாகும். ஓ தருமமறிந்தவரே! அவள் முதலையோடு திமிங்கலமாதி நீர்வாழுயிர்களும் உப்பென்பது மில்லாமல் ஸ்வரபேதங்களுடன் ராகமென்னுஞ் சுவையோடுகூடிய சுகமென்னுந் தண்ணீரால் நிறைந்தோங்கி யிருக்கின்ற வீணாநாத மாகிற சமுத்திரத்தில் மூழ்கியிருக்கின்றா ளாதலால் அக்கடலுக்கு அதிதேவதையாயிருக்கின்ற நாரதரைவிட்டு யாவரை நாயகனாகக் கொள்வாள்? அதனை நீரே யாலோசித்து அவளிஷ்டப்படி விவா கத்தை நடத்துமென்று சொல்லி வருவா யென்றனுப்பினாள். (53–51)

ஓம் லஜ்ஜாட்யாயை நம:

## 27. நாரதர் விவாஹம்

சூதர் கூறுகின்றார்:—பின்னர் நாரத முனிவர் வியாசரைப் பார்த்து, ஓ முனிவரே! தமயந்தியின் தந்தையாகிய அரசன் தாதி யினால் தனது புத்திரியினபிப்பிராயத்தை அறிந்தவனாய்த் தன் னருகிலிருந்த மனைவியைப் பார்த்துக் கூறுகிறான்: ஓ கைகையே! உனது புத்திரியின் சகி சொல்லிவந்த வார்த்தைகளைக் கேட் டனையா? நம்மிடம் வந்திருக்குங் குரங்கு முகமுள்ள நாரத முனி

வர் தான் அவளுக்கு நாயகனாக வேண்டுமாம். உன்னுடைய புத்திரியின் புத்தி விசாலத்தை நானென்ன சொல்லுவேன்! யோசித்துப் பார். அவளந்தக் குரங்குமுகனை விரும்பினாலும் அவனுக்கு நான் எப்படிக் கொடுப்பேன்? குரூபியான அந்தப் பிச்சாண்டி யெங்கே! என் புத்திரியாகிய இவளெங்கே! இந்த விபரீதமான காரியத்தை நானொருபோதுஞ் செய்யமாட்டேன். நீ அந்த நாரத முனிவனிடத்தி லாவலுள்ள உனது அருமந்த புத்திரியை யழைத்துத் தனியே வைத்துக்கொண்டு சாந்தையாய் சாஸ்திரங்கட்கும் பெரியோர்கட்கும் ஒப்பாயுள்ள புத்தியை அவள் புத்தியிலமையச் சொல்லுவா யென்றனுப்ப, அவளப்படியே தன் பெண்ணை யழைத்துக் கூறுகின்றாள்: (1–5)

ஓ குணவதியான தமயந்தியே! சௌபாக்கியவதியாகிய உன்னழகெங்கே! குரங்கு முகமுள்ள தரித்திரனாகிய அம்முனிவனுடைய கோரமெங்கே! நீ கெட்டிக்காரியா யிருந்தும் பிச்சாண்டியினிட மெப்படி மோகமடைந்தாய்? நீயோ கொடிபோல் மிருதுவான தேகமுள்ளவள்; அவனோ சாம்பலால் பூசப்பட்டு வறண்டு போன தேகமுள்ளவன். ஓரங்க தோஷமுமில்லாத பெண்ணானவள் குரங்கு முகனோடு எப்படித்தான் பேசுவாள்? ஓ புன்னகையுள்ள பெண்ணே! உனக்குரிய ராஜபுத்திர னிருக்கக் குரூபியான அம்முனிவனிடம் உனக்கேன் பிரீதியுண்டாயிற்று? வீணாய் நீ அடஞ் செய்யாதே. உன் தந்தை நீ யனுப்பிய தாதியினால் உன்னெண்ணத்தை அறிந்து துக்கமடைகிறார். நில வேம்பின்மேல் முல்லைக்கொடி படர்ந்திருந்தால் அதனைக் கண்டவர், அந்தோ! இக்கொடி இம்மரத்தில் படர்ந்திருக்கிறதேயென்று மனவருத்தமடையாமற் போவாரா? அதுபோல விவாக காலத்தில் உனது அழகிய கையை அந்தக் குரங்குமுகன் பிடித்துக்கொண்டு சேர்ந்து வருவானானால் அங்கு வந்திருப்பவரது மனமெப்படித்தான் தவிக்காது? மிருதுவாயும் இளமையாயுமுள்ள வெற்றிலைகளை ஒட்டகந் தின்பதற்கு ஒருவன் தருவானா? அதுபோல உன் தந்தை உன்னை அம்முனிக்குக் கொடுக்கத் துணிவானா? நீதான் அந்தக் குரூபியோடு பேசத்துணிந்தாலும் உன் மனம் அசுசியை யடையாதா? அருவருக்கத்தக்க அவனோடு நீ எவ்வண்ணம் மரண பரியந்தம் காலத்தைக் கழிப்பா யென்றனள். (6–13)

தாய் வார்த்தையைக்கேட்ட தமயந்தி சிறிதும் என்மேல் வெறுப்பில்லாதவளாய் என்னையே மனதில் நிச்சயஞ்செய்து கொண்டு தாயைப் பார்த்துக் கூறுகின்றாள்:—ஓ தாயே! நீ சொல்லியவெல்லாஞ் சரியே. நான் ஒன்று சொல்லுகிறேன்; முகத்தினாலும் வடிவினாலும் தனத்தினாலுஞ் சிறந்திருப்பவன் மூடனாயிருந்தா லவனாலென்ன பிரயோஜனம்? யுத்த சாமர்த்திய மில்லாதவனுக்கு ராஜ்யத்தினாலென்ன பிரயோஜனம்? ஓ தாயே! எல்லா வின்பத்திலுஞ் சிறந்தது செவிக்குரிமையாயுள்ள கான வின்பம். அவ்வின்பத்தைக் காட்டிலுள்ள பெண் மான்களும் விரும்பி அதனால் மோகிக்கப்பட்டவைகளாய் அந்தக் கானஞ்

செய்கின்றவர்களையே பார்த்துப் பிராணனை விடுகின்றன. அந்த இசையாகிய கானத்தை யறியாதவன் சிறந்த மானிடனாயிருந்தாலும் அவனைச் சுடவேண்டும். இசைமயமாயிருக்கின்ற எந்த கானவித்தையை நாரதரறிந்திருக்கின்றாரோ அவ் வித்தையின் பிரபாவத்தை சிவன் தவிர மற்றொருவருமறியார். நீ அம்முனிவனோடு மரண பரியந்தம் எப்படி வாழ்வாயென்று கேட்டனையன்றோ? மூடனோடு கூடி வாசஞ் செய்வதுதான் க்ஷணத்துக்கு க்ஷணம் மரண துக்கமாகுமேயன்றி அவரது சகவாசம் அப்படியாமா? மூடன் ரூபவானானாலும் தனவானானாலும் அவனாலென்ன சுகமுண்டாகும்? அவனை எப்பொழுதும் விட்டுவிடவேண்டும். யாதொரு குணமுமில்லாமல் வீணாய்க் கர்வங் கொள்ளுகிற மூடனான அரசனிடத்தி லுண்டாகும் சிநேகம் துக்கத்தை விளைவிக்குமாகையா லதனை நிந்தித்து குணமுடையவனான பிக்ஷாண்டியி னிடத்திலுண்டாகும் சிநேகம் சுகத்தைக் கொடுக்குமாகையால் அதனையே போற்றவேண்டும். சர்வஜ்ஞனாயும் இந்திரியங்களின் வன்மையை யறிந்தவனாயும், மோஹம் அஞ்ஞானம் இவைகளைப் பேதித்தவனாயுமுள்ள மஹா புருஷன் கிடைப்பதரிது; கங்கா நதியும் ஸரஸ்வதி நதியும் தம்மை யடுத்தவரை யெவ்வாறு கயிலையங்கிரியை யடைவிக்குமோ, அவ்வாறு ஸ்வரஜ்ஞானத்தில் சமர்த்தனா யிருக்கிறவன் தன்னை யாச்ரயித்தவனைக் கயிலாயமடைவிக்கின்றான். ஸ்வரப்பிரமாணத்தை எவனறிகிறானோ அவன் மானிடனானாலும் தேவன்தான். அதனை எவனறிந்து கொள்ளவில்லையோ அவன் தேவராஜனாக விருந்தாலும் மிருகந்தான். மூற்சனாபேதத்தையும், தான மார்க்கத்தையுங்கேட்டு எவனானந்த மடையவில்லையோ அவனை மிருகமாக நினைக்கவேண்டுமேயன்றி அவ்வானந்தத்தை யடையவல்ல மான்கள் மிருகங்களல்ல. விஷத்தோடு கூடியிருக்கும் சர்ப்பம் செவியில்லாமலிருந்தும் மனோகரமான கானத்தைக் கேட்டானந்திக்கின்றது. இரண்டு செவிகளைப் படைத்த மானிடர் அதனைக் கேட்டுச் சந்தோஷமடைகிறதில்லை. அவர்களையன்றோ சுடவேண்டும். ஒன்றுமறியாத குழந்தைகளும் ஸ்வரத்தோடு கூடின பாடலைக் கேட்டு மகிழ்கின்றன. அக் குழந்தைகளைக் கண்டோரும் புகழ்கின்றனர். பெரியவர்களாகவிருந்து கானத்தை யறியாமல் தம்மை எல்லாமறிந்தவராகவெண்ணி யறிந்தவர்களைக் கண்டு இகழ்கின்றனர். இங்ஙனமிருக்க, ஓ என்னன்னையே! நாரதருடைய அனேக நற்குணங்களை என் தகப்பனார் ஏன் தெரிந்துகொள்ளாமலிருக்கின்றார்? மூன்று லோகங்களுக்குள் நாரதருக்குச் சமானமாய்ச் சாமகானம் பாடுவாருமுண்டோ? அவரை யிகழ்ச்சியாகக் கூறுதீர்கள். அவர் சாபத்தினால் குரங்குமுக மாவதற்கு முன்னரே நானவரைக் கணவராக நினைத்துவிட்டேன். நினைவால் நினைத்தவரை இப்பொழுது மாற்றலாமா? அது நீதியாமா? இசை ஞானத்திற் சிறந்த கின்னரர்கள் குதிரைமுக முடையவர்களா யிருந்தும் அவர்களைத் தேவராவது மற்றையாராவது வெறுக்கின்றார்களா? அவர்களையன்றோ

யாவரும் விரும்புகின்றனர். ஆகலான் முகத்திலைென்ன பிர யோஜனம்? (14–25)

ஓ தாயே! முனிவரை விரும்பினேனென்று என் தகப்பனார் வருந்துவதைவிட்டு என்னைச் சந்தோஷத்துடன் அந்த நாரத மஹா முனிவருக்கே கொடுக்கவேண்டுமென்று நீ சொல்லுவாயென்றாள். அவளது வார்த்தைகளைக் கேட்ட தாய், தனது பர்த்தாவினிடஞ் சென்று, ஓ எந்நாயகனே! என் பெண்ணினுடைய அபிப்பிராயங் களை நன்றாயறிந்துகொண்டேன். அது விதிவசம். இனி நீர் அந்த நாரத முனிவருக்கும் நமது பெண்ணுக்குஞ் சுபகரமான தினத்தில் விவாகஞ்செய்துவிடும். அம்முனிவரோ சர்வமுமறிந்த வராக விருக்கின்றார். நம்முடைய பெண்ணும் அவரை மனத்தால் வரித்துவிட்டாள். ஆனபடியால் அதை மாற்றுவது நமக்குத் தரும மல்லவென்று கூற, சஞ்சயராஜன் இருவருக்கும் விதிப்படி விவாகஞ் செய்தனன். (26–33)

விவாகமாக வேண்டுமென்றெண்ணி ஏங்கியிருந்த நான் விவாகமான பின்னர் நமக்கேனிந்த விவாகமென்று பிரதி தினமு மெண்ணி யெண்ணி மன வருத்தத்துடன் அவ் விடத்திலேயே வசித்துக்கொண்டு எவ்வெப்பொழுது அந்தத் தமயந்தி எனக்கு வேலைசெய்ய வருகின்றாளோ அவ்வப்பொழுதெல்லாம் என் முகத் தைக் கோணி எண்ணுதெல்லா மெண்ணி யேங்குவேன். அவள் மாத்திரம் என்னைப் பார்த்து மனவருத்த மடைவதில்லை. சில காலஞ் சென்ற பின்னர் அந்தப் பர்வத மகாமுனி அநேக தீர்த்த யாத்திரை செய்துகொண்டு என்னைப் பார்ப்பதற்காக வர, நான வரை மிக்க பிரீதியோடு எதிர்கொண் டழைத்துவந்து ஆசனத்தி லிருத்திவிதிப்படி பூஜித்துபசரித்து நிற்கும்பொழுது, அவரென்னைப் பார்த்துத் துக்கமடைந்தவராய், அந்தோ! நீர் இந்த முகத்துடன் காட்டிலிருந்தால் துக்கமில்லை. ராஜ புத்திரியோடு கூடியிருப்ப தென்று லெவ்வளவு கஷ்டம்! நானப்போது உம்மீது வந்த கோபத் திலைிப்படிச் சபித்துவிட்டேன். இப்போது இந்த ராஜ புத்திரியைப் பார்த்தபோது எனக்கு மிகவு மிரக்கமுண்டாயிற்று. ஆதலின் என் புண்ணியத்திலைல் நீர் அழகான முகமுடையவராய் வாழ்வீரென் றனுக்கிரகஞ்செய்ய, அவ்வனுக்கிரகத்தைப் பெற்ற நானும் அவரைப் பார்த்து, ஓ முனிவரே! என்மீது தயவு வைத்து எனது துக்கத்தைப் போக்கிய நன்மையால் நீரும் என்னலிடப்பட்ட சாபத்தினின்றும் விடுபட்டவரானீர்; இனி நீர் சொர்க்கத்துக்கு இஷ்டப்படி போகலாமென்றேன். நானும் அவருக்கு முன்பாகவே இந்த அழகான நன் முகத்தைப் பெற்றேன். ராஜ புத்திரியும் என்னைப் பார்த்து மிக்க சந்தோஷமடைந்து தன் தாயினிடஞ் சென்று, அம்மா! உன் மருமகப்பிள்ளை அந்தப் பர்வத முனிவர் அனுக்கிரகத்தால் இன்று சாபம் நீங்கி அழகான முகமுள்ளவராயின ரென்று கூற, அரசி அதனைக் கேட்டு அரசனிடமறிவிக்க, அவன் சந்துஷ்டி யடைந்தவனாய் மிகப் பிரீதியுடன் என்னைப் பார்த்து மகா சந்தோஷமடைந்து, ஓ நாரத மகா முனிவரே! இன்று தான்

கவலை யொழிந்தவனானேன். இன்றுதான் பெண்ணைப் பெற்ற வனாயும் விவாகஞ் செய்தவனாயுமானேனென்று அப்பொழுதே எனக்கும் பெண்ணுக்குஞ் செய்யவேண்டிய மரியாதைகளை யெல்லாஞ் செய்தான். (34–46)

ஓ வியாசரே! எனக்கு மாயா பலத்தினால் எது நேர்ந்ததோ அவையெல்லாஞ் சொன்னேன். ஐயா! மாயா குணத்தால் நிரு மிக்கப்பட்ட பொய்யான இச்சம்ஸாரத்தில் சுகமுள்ள பிராணிகளு முண்டோ? அப்படிப்பட்டவர்க ளிதுவரையிற் பிறந்ததுமில்லை; இனிப் பிறக்கப்போகிறதுமில்லை. காமம், குரோதம், லோபம், மாச்சரியம், மமதை, அகங்காரம் முதலிய இவையெல்லாம் மஹா பலமுள்ளவை. இவற்றை யாவரால் ஜயிக்கமுடியும்? ஜயித்தாரு முண்டோ? ஸத்வம் முதலிய முக்குணங்களன்றோ தேகோற்பத் திக்குக் காரணமாகின்றன. ஓ வியாசரே! என்னுடைய சரித்திரத் தில் இன்னுமொன்று சொல்லுகிறேன். அதனையுங் கேளும். ஒரு சமயத்தில் விஷ்ணுவுடன் நான் காட்டில் திரிந்துகொண்டிருக்கும் போது விஷ்ணுமூர்த்தி வேடிக்கையா யென்னை ஒரு க்ஷணத்தில் ஸ்திரீயாக்கிவிட்டார். பின்னர், மாயா பலத்தினால் ஒரு அரச னுக்கு மனைவியாய் அனேக பிள்ளைகளைப் பெற்றேனென்றார். அதனைக் கேட்ட வியாசர், ஓ சாந்தகுண சீலரே! உம்முடைய வார்த்தையைக் கேட்க எனக்கோர் பெருஞ் சந்தேகந் தோன் றிற்று. மகா ஞானியாயிருக்கும் நீர் எப்படி ஸ்திரீயானீர்? மறுபடி எப்படி புருஷரானீர்? எப்படி அநேக புத்திரர்கள் பிறந் தனர்? எந்த அரசனுடைய வீட்டிலிருந்தீர்? இச்சரிதம் மிக அற்புத மாக விருக்கின்றது. அதைச் சீக்கிரமாய்ச் சொல்லும். ஏனெனின், ஓ நாரதரே! உம்முடைய சரித்திரம் கேட்கக் கேட்க இன்னமுங் கேட்கவேண்டுமென்ற ஆசை மேலிடுகின்றபடியால் யான் கேட்கின் றேன், சொல்லுமென்றார். (47–56)

ஓம் லயவர்ஜிதாயை நம:

## 28. நாரதர் பெண்ணானது

சூதர் கூறுகின்றார்:—நாரதர், வியாச பகவானைப் பார்த்து, ஓ முனிவரே! யோகநிலை யறிந்தவர்களான முனிவர்களும் மாயா பலத்தை யறிந்தவர்களல்ல. அதற்காகவே இச்சரிதத்தைச் சொல்லுகிறேன், கேளுமென்று கூறுவாராயினார்: தாவர ஜங்கம மாயிருக்கும் பிரமாதி ஸ்தம்பபரியந்தமான ஜகத்தெல்லாம் மாயையினால் மோகிக்கப்பட்டிருக்கிறது. இது நிற்க. ஒரு காலத் தில் நான் சத்தியலோகத்திலிருந்து மனோகரமான ஶ்வேதத்வீபத்தில் விஷ்ணுமூர்த்தியைத் தரிசனஞ் செய்வதற்குப் போய் மகதி என்னும் வீணையை யெடுத்து இன்னிசையமைந்த ஸப்தஸ்வரத் தோடு பாடும்போது சங்குசக்கரதரராகிய விஷ்ணுமூர்த்தி அச்சமயத்தில் சர்வ லக்ஷணத்தோடு கூடினவளாயும் சர்வ பூஷ

ணங்களா லலங்கரிக்கப்பட்டவளாயும் ஸ்திரீகளுக்குள் உத்தம மானவளாயும் யௌவனுதிகளால் மிகச் செருக்குடையவளாயும் தனக்கு வேண்டியவாறு மிகவும் இஷ்டமா யிருப்பவளாயும் பொன்னிற முள்ளவளாயுமிருக்கிற லக்ஷ்மி தேவியோடு சந்தோஷமாய்க் கிரீடித்துக்கொண்டிருந்தனர். அந்த லக்ஷ்மிதேவி என்னைப் பார்த்தவுடன் மறைந்துபோயினள். நான் முகுந்தனை நோக்கி, ஓ பகவானே! நான் விடனுமல்ல, துஷ்டனுமல்ல; நான் ஜிதேந்திரியன். கோபத்தையும் மாயையும் வென்றவன்; இப்படிப்பட்ட நான் உமது சமீபத்தில் வரும்போது லக்ஷ்மிதேவி ஏன் மறைந்து விட்டனளென்றேன். (1–12)

விஷ்ணுமூர்த்தி சிறிது கர்வத்தோடு கூடின என் வார்த்தைகளைக் கேட்டு என்னைப் பார்த்து நகைத்து நீ பாடும் வீணையினது ஸ்வரம்போலிருக்கின்றது, உனது மதுரமான வார்த்தையும்; ஓ நாரதனே! தனது பர்த்தாவை இதர புருஷன் வந்து பார்க்கும்போது ஸ்திரீ இருக்கக்கூடாதென்பது நீதி. ஓ வித்துவானே! மாயையானது சுவாசபந்தம் செய்யத் தக்கவர்களாலும், சாங்கிய மறிந்தவர்களாலும், ஆகாரங்களை யொழித்தவர்களாலும், ஜிதேந்திரியர்களாலும், யோகிகளாலும், தேவர்களாலும், மற்றுமெவராலும் ஜயிக்கத் தக்கதல்ல. ஆகையால் நீ மாயையை ஜயித்திருக்கிறேனென்று இப்போது சொல்லியதுபோல் இனி எப்போதுஞ் சொல்லற்க. மாயையை ஜயிக்க வல்லமை யுள்ளவர்களாயிருந்தாலும் வெளியில் சொல்லத் துணியார்கள்; நானுஞ் சொல்லமாட்டேன்; பிரமனுஞ் சொல்மாட்டான். மாயையை ஜயிக்க வல்லமை யுள்ளவர்களான ஜனகாதி முனிவர்களுஞ் சொல்லமாட்டார். மாயாதீதனுகிய சிவனுருங் கூருரெனின் நீயா கூறவல்லவன்? தேவ மானிட திரியக்காதி தேகங்களை எவன் தரித்திருக்கின்றுனே அவன் ஜயித்திருப்பானுயின் அச்சரீரத்தையடைவனு? அவன் வேதமறிந்தவனுயிருந்தாலும் யோகமறிந்தவனுயிருந்தாலும் எல்லாமறிந்தவனுயிருந்தாலும் ஜிதேந்திரியனு? இருந்தாலும் முக்குணத்தோடுங் கூடினவனுதலின் அவனெப்படி அந்த மாயையை ஜயிக்க வல்லமை யுள்ளவனுவான்? உருவமில்லாததாகிய காலமும் அந்த மாயைக்கு ரூபமாயிருந்து அம்மாயையே வெளிப்படுத்துகின்றது. எங்ஙனமெனின், வித்துவான் மூடன் மத்திமன் என உலகில் மூன்று வகையாயுள்ளார். இவர்களுள் அக்காலமானது வித்துவானைத் தருமமறியாதவனுயும் மூடனைத் தரும மறிந்தவனுயும், மத்திமனை இவ்வண்ண மாறுபட்டிருப்பதால் இவ்விரண்டினுண்மையை அறிவதற்கில்லாதவனுயு மாக்கிவிடுகிறது. இது தான் காலம் மாயையோடு கூடிச்செய்யும் சேஷ்டையாகும். அந்தச் சேஷ்டை யொருவிதமாயறியத் தக்கதல்லவென்று கூறி விஷ்ணுமூர்த்தி மௌனமாயிருந்தனர். நானவரை, ஓ நாராயணரே! மாயை யென்பவளுடைய உரு எத்தன்மைத்து? அவளெத் தன்மையவள்? அவள் வல்லப மெத்தன்மைத்து? எங்கிருப்பவள்? எதனை ஆதாரமாகவுள்ளவள்? இவற்றினுண்மையைச் சொல்லும்.

நானந்த மாயையைப் பார்த்து அவள் தன்மையை நன்றாயறிய விரும்புகின்றேனாதலால் விரைவி லவளையுங் காண்பியுமென்று சொல்ல, அவர் கூறுகின்றார் : ஓ நாரதனே! அம்மாயை முக்குண சொரூபிணியாயும், யாவராலும் சம்மதித்துப் புகழப்பட்ட சர்வஜ்ஞையாயும், எவராலும் வெல்லக்கூடாதவளாயும், அநேக பேதவுருவமாயுள்ள சகல ஜகத்தையும் வியாபித்திருக்கின்றவளா யும், அகிலலோகத்துக்கும் ஆதாரையாயுமுள்ளவள். உனக்கு அவளைப் பார்க்கவேணுமென்கிற ஆவலிருக்குமாயின் இப்பொழுது என்னோடு கருடன்மேல் வருவாயாக. நான் அவளிருக்குமிடங் கொண்டுபோய் ஜிதேந்திரரல்லாதவர்களால் ஜயிக்கக்கூடாத அந்த மாயையை யுனக்குக் காண்பிக்கிறேன். நீ அவளைப் பார்ப்பையாயின் உனக்கு மனதிலுள்ள துக்கம் நீங்கிவிடுமென்று சொல்லி, கருடனை மனதில் நினைத்தனர். (13–23)

நினைத்தபடி அக்கருடன் வரப் பின்னரவர் என்னுடன் கருடாரூடராய் திவ்யமான வனங்களையும், ஆறுகளையும், ஏரிகளை யும், பட்டணங்களையும் முனிகளுடைய ஆச்சிரமங்களையும், அழகான நடபாவிகளையும், தடாகங்களையும், தாமரைமலர்களா லழகுபெற்றிருக்கும் மடுக்களையும், பசுக்கூட்டங்களையும் ஏனைய மிருகக்கூட்டங்களையும், பன்றிக் கூட்டங்களையும் பார்த்துக் கொண்டே கன்னியாகுப்ஜ மென்னும் பட்டணத்துக்கு வந்து அங்கு திவ்யமான ஒரு தடாகத்தைப் பார்த்தோம். அது தாமரை முதலிய மலர்களால் பிரகாசிக்கப்பெற்று அழகுள்ளதாயும், வண்டினங்களால் சப்திக்கப் பெற்றதாயும், அன்னபக்ஷி, கரண்டபக்ஷி, சக்கரவாளப்பக்ஷி முதலிய சிறந்த பக்ஷிகளால் நிரம்பப்பெற்றுள்ளதாயும், பால் கடலோடு போர்செய்ய வெழுந் திருப்பதுபோல் மேலோங்கிய சகசமார்த்தியைப் பெற்றுள்ளதாயு மிருந்தது. இவ்வாறான அதன் சிறப்பை நான் கண்ணுற்று அதிசயத்துடனிருக்குஞ் சமயத்தில் விஷ்ணுமூர்த்தி, ஓ நாரதனே! இந்த நிர்மலமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பின்னர் இப் பட்டணத்தையும் பார்க்கப்போவோமென்று சொல்லிச் சிரித்துக் கொண்டே எனது சுட்டுவிரலைப் பிடித்துக்கொண்டு சுற்றிவந்து அந்த சிரேஷ்டமான தடாகத்தைப் புகழ்ந்து அதன் கரையி லிருக்குமோர் மரநிழலில் சற்றிளைப்பாறி, ஓ நாரதனே! சாதுக்க ளுடைய மனம்போல் நிர்மலமாயிருக்கு மித்தீர்த்தத்தில் நீ முன்னே ஸ்நானஞ்செய்க. பின்னர் நானுஞ் செய்கிறேனென்று சொல்லவே அவர்சொல்லை நம்பி நான் வீணையையும், கிருஷ்ணாஜினத்தையும் கரையில் வைத்துவிட்டு முன்னர் கைகால்களை யலம்பிச் சிகையை முடித்து ஆசமனஞ்செய்து தர்ப்ப பவித்திரந் தரித்துக்கொண்டு அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து கரையேறி என்னைப் பார்க்கின்றபொழுது நான் சர்வாபரணத்தோடுங்கூடி ஸ்திரீரூபமா யிருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு பூர்வதேக நிலையையும் மாயாவி யான நாராயணரையும் எனது வீணையையும் மறந்துத் தடாகத்

-தைத் திரும்பிப்பார்த்து இஃதுவென்ன வதிசயமென்று அங்கு நின்றிருந்தேன்.

பின்னரங்கு நல்ல வயதுடன் சர்வபூஷணலங்கிருதனுய் மன்மதனே வுருவங்கொண்டாற்போல் விளங்கும் காலத்துவஜ னென்னும் அரசன் சதுரங்க சேனைகளோடு ரதாரூடனுய் வந்து திவ்யமான பூஷணங்களா லலங்கரிக்கப்பட்டு பௌர்ணமி சந்திரன் போல் பிரகாசிக்கின்ற முகமுள்ளவனுயிருக்கின்ற வென்னைப் பார்த்து ஆச்சரியமடைந்து, ஓ கலியாண சுந்தரீ! நீ யாருடைய பெண்? தேவபுத்திரியா? நாககன்னிகையா? யௌவனத்தாலும், பூஷணத்தாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கும் நீ எப்படிச் சகாய மின்றி இங்கு தனித்திருக்கிருய்? நீ கலியாணஞ்செய்யப் பெற்றவளா? கன்னிகையா? உண்மையைக் கூறுவாய். தடாகத்தில் என்ன பார்க்கின்றுய்? மன்மதனையும் மோகிக்கச் செய்யவல்ல ஓ சிறிய பெண்ணே! உன் கோரிக்கை யாது? நீ என்னைப் பர்த்தாவாகக்கொண்டு நானுவித போகங்களையு மனுபவிப்பா யென்று கூறினன். அவன் செய்தி இங்ஙனமிருக்க, நாரா யணரோ என்னுடைய வீணையையும், மான்றேலையும் எடுத்துக் கொண்டு கருடாரூடராய்த் தன்னிடம்போய்ச் சேர்ந்தார். (44–54½)

ஓம் ஹ்ரீங்கார ரூபாயை நம:

## 29. நாரதர் புது வாழ்க்கை

சூதர் கூறுகின்றுர்: நாரதமுனிவர் வியாசமுனிவரைப் பார்த்து, ஓ முனிவரே! தடாகக்கரையில் வந்துநின்ற வரசன் சொல்லியவை யெல்லாங்கேட்டு என் மனதில் நன்றுயாலோசித்தும் ஒன்றுந் தோன் றுமையால் அவனை நோக்கி, ஓ அரசனே! நான் இன்னுருக்குப் பெண்ணென்பதை யறிந்திலேன். இது நிச்சயம். இத்தடாகக் கரை யில் நான் வந்திருப்பது பிரம்மன் விதித்த விதியன்றி வேறில்லை. இனி ஆதாரமில்லாதிருக்கின்ற யான் என்ன செய்வேன்? எங்கு செல்வேன்? எனக்கு நன்மையுண்டாகும் வகையாது? என் முயற்சி யாதொன்றுமில்லை. தெய்வசங்கற்பம் என் விஷயத்தில் யாதா யிருக்கின்றதோ அதனையுமறியேன். நீர் தருமமறிந்த அரசனு யிருத்தலால் உமக்கு யாது தோன்றுகின்றதோ அதனைச்செய்யும். என்னை ரக்ஷித்தற்குரிய தாய் தந்தை முதலிய பந்துக்களுமில்லாமல் உமது சுவாதீனமாயிருக்கின்றேனென்று நான் சொல்லி வரும் போது, அவன் என்பால் காமங்கொண்டவனுய்த் தனது சேவகர் களை நோக்கி, ஓ சேவகர்களே! இவளை நானழைத்துக்கொண்டு போகவேண்டியிருப்பதால் முத்துச்சரங்களாலும், வெண்பட்டுக் களாலும், மிருதுவான மெத்தைகளாலும் அலங்கரிக்கப்பட்டுள்ள ஒரு சிவிகையைக் கொண்டுவாருங்களென்ன அவர்களப்படியே கொண்டுவர, அவ்வரசன் என்னை அச்சிவிகை மீதேற்றிக்கொண்டு

மிக்க சந்தோஷத்துடன் தன்னரண்மனைக்குச் சென்று சுப லக்கினங் கூடிய சுபதினத்தில் விதிப்படி அக்னிசாக்ஷியாய் என்னை விவாகஞ்செய்து கொண்டனன். நானவனுக்குப் பிராண நாயகியாயும் அவனால் சௌபாக்கிய சுந்தரியென்று பெயருடையவ ளாயும் அவனால்செய்யப்படுங் கிரீடைகட்கெல்லா முரிமை யுடையவளாயும் விசேஷமான சுகங்களை யனுபவித்துக் காம சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விலாசங்களுக்கெல்லாம் உரித்தான வளாயு மிருந்தேனுகையால் அவ்வரசன் தன் ராஜ்யகாரியங்களை யெல்லாம் விட்டு மன்மதனுக்காளாய் இரவும் பகவும் கிரீடிப்பதில் ஆவலுள்ளவனாய் இவ்வளவு காலமாயிற்றென்பதை யறிந்துகொள் வதற்கும் அறிவில்லாதவனாய் உத்தியானவனங்களிலும் அரண்யங் களிலும் உல்லாசமாயிருக்கத்தக்க மாளிகைகளிலும் மெத்தை களிலும் நடபாவிகளிலும் உயர்ந்த மலைகளிலும் வசித்து மது பானஞ்செய்து மதத்தவனாய் விளையாடிக்கொண்டு என் சுவாதீன மாயிருந்தனன். (1–16)

ஓ வியாசரே! நானும் அவனுடனே கூடிச் சுகித்திருந்தேனே யல்லது எனது பூர்வஜன்மம் முனிஜன்ம மென்பதை நினையாத வளாய் இவன் நமக்கே பர்த்தா, நாமே இந்த அரசனுக்குள்ள ஸ்திரீ களில் இஷ்டமான பத்னி, நாம்தாம் பட்டத்தரசி, நாம்தாம் காம விலாச மறிந்தவள், நமக்கிப்படிப்பட்ட புருஷன் கிடைத்ததினு லன்றோ நம்முடைய வாழ்நாள் சபலமாயிற்றென்று இரவும் பகலும் அவனிடத்தில் ஆசையுள்ளவளாய்க் கிரீடித்திருந்தேன். அந்தோ! எனக்கு முன்னுள்ள பிரம்மஞானமும் பிரம்ம விஞ்ஞானமும் தர்ம சாஸ்திர பரிஞ்ஞானமும் மறந்துபோயின. ஓ வியாசமுனிவரே! இவையெல்லாம் மறந்தவளாயும் அஞ்ஞானமும் அஞ்ஞான விஞ்ஞானமும் அதர்மசாஸ்திர பரிக்ஞானமுமாகிய இவற்றை மற வாதவளாயும் அரசனோடு கிரீடிக்குஞ் சுகமே பேரின்ப சுகமாயும் பன்னிரண்டு வருஷகாலம் ஒரு க்ஷணகாலம் போலக் கழித்தேன். என் தவமெல்லாம் கொள்ளைபோகவந்த அக்காலத்தில் கர்ப்பவதியு மாயினேன். அதனை அரசன் கண்டு மகா சந்தோஷமடைந்து விதிப்படி ஸீமந்தம் முதலிய சடங்குகளை நடத்தி கர்ப்ப ஸம்ஸ்காரஞ் செய்து அடிக்கடி என்னை சந்தோஷப்படுத்தி உனக்கென்ன இஷ்ட மென்று கேட்பான். எல்லாவிதத்தாலுஞ் சந்தோஷமடைந்திருக்கிற நான் வெட்கத்தினு லொன்றுஞ் சொல்லாமலிருப்பேன். பத்தாவது மாதம் பூர்த்தியாகும்போது சுபநக்ஷத்திரத்தோடும் தாராபலத் தோடுங்கூடின சுபதினத்தில் புத்திரோற்பத்தியாயிற்று. பின்னர் செய்யவேண்டிய புத்திரோற்சவத்தையும் நடத்தி வீரவர்மனென்று பெயரிட்டுப் பிள்ளையைப் பார்த்து மகா சந்தோஷசித்தனு யென் னிடம் முன்னையிலுமிக்க பிரீதியுடையவனாயினான். நானுமவன்பா லப்படியேயிருந்து இரண்டு வருஷங் கழித்து கர்ப்பவதியாய் சர்வ லக்ஷணத்தோடுங்கூடிய இரண்டாவது பிள்ளையைப் பெற்றேன். அவனுக்கு மப்படியே அரசன் செய்யவேண்டிய புத்திரோற்சவத்தை நடத்தி சுதன்மனென்று பெயரிட்டான். அப்படிப் பன்னிரண்டு

பிள்ளைகளைப் பெற்றேன். அப்பிள்ளைகட்கெல்லாம் சகல சிறப்புகளும் நடந்தன. பின்னர் அப்பிள்ளைகளுக்கெல்லாம் விவாஹம் நடத்தி அப்பெண்களாலும் பிள்ளைகளாலுஞ் சூழப்பட்டவளாய்ப் பெரிய ஸம்ஸாரியாய்ப் பின்னர்ப் பிள்ளைகளுக்கெல்லாம் பிள்ளைகள் பிறக்க, அப்பேரன்மார்களுடன் சல்லாப முடையவளாய் அவர்கள் விளையாடும் விளையாடலைக்கண்டு மோகம் விருத்தியடையப் பெற்றவளாயினேன். (17–32)

ஓ முனிவரே! இக்காலம்வரை சுகமன்றி வேறொன்றறியேன். அதன் பின்னர் சிலவேளைகளில் சுகமும் சிலவேளைகளில் துக்கமும் சில வேளையில் ஐஸ்வர்யமும் சிலவேளையில் ஆச்சர்யமு முடையவளாயிருந்தேன். அதன் பின்னர் பிள்ளைகளுக்கு ரோகமுண்டாகும் போது தேகசந்தாபமும் சில சமயத்தில் ஒருவருக்கொருவர் உண்டாகுங் கலகங்களால் பயங்கரமும் மருமக்கள்மார்களுக் குண்டாகுங் கலகங்களால் மரண துக்கத்துக்குச் சமானமான துக்கமுமுண்டாயின. ஓ முனிவரே! இவ்வண்ணம் நான் அஞ்சத்தக்க பொய் நடத்தையுள்ள சுகதுக்க சொரூபமான ஸம்ஸாரத்தில் மூழ்கினவளாய் பூர்வஞானமும்போய் சாஸ்திரஞானமும் மறந்து ஸ்திரீத்வ மாயையினு லாவரிக்கப்பட்டு எப்பொழுதும் வீட்டின் காரியத்திலேயே ஆசையுள்ளவளாய் மோகத்தை விருத்திபண்ணுகிற அகம்பாவ முடையவளாய் நம்முடைய பிள்ளைகளெல்லாம் மகா பலசாலிகள், மருமகளெல்லாரும் நற்குலத்திற் பிறந்தவர்களென்கிற கர்வமடைந்து நம்முடைய பிள்ளைகளெல்லாம் வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கிறுர்கள்; ஸம்ஸாரியான ஸ்திரீகளுக்குள் நம்மைப் போலும் யாருள்ளார்? நாமே புண்ணியவதி யென்றிறுமாந்தேனையா! நாம் நன்னடக்கையுள்ள ராஜபத்தினி; வெகுபுத்திரர்களை யுடையேம்; பதிவிரதை யென்றும் ஸம்ஸாரத்தில் வெகு புண்ணியவதியென்றும் பெயர்பெற்றுள்ளே மென்றுமிருந்தேனேயல்லது ஒருநாளாவது நாம் நாரதனல்லவா வென்றும் விஷ்ணுமூர்த்தியால் வஞ்சிக்கப் பட்டோமென்றும் மனதிலுல் சிந்தித்தேனில்லை. (33–40)

பின்னர், தூரதேசத்திலிருக்கும் ஒரு பெரிய அரசன் என் பர்த்தாவுக்குச் சத்துருவாய் ரதகஜதுரகபதாதிகளுடன் வந்து யுத்தத்திற்கழைத்து பட்டணத்தைச் சூழ்ந்துகொள்ளவே, என் பிள்ளைகளும் பேரன்மார்களும் யுத்தசன்னத்தர்களாய்ப் பட்டணத்திற்கு வெளியேபோய் அவனேடு போர்புரிந்து காலவசத்தால் சத்துருவினுல் மாண்டனர். அரசனே தோல்வியடைந்து பிள்ளைகளும் பேரன்மார்களும் மாண்டதை யெண்ணுது என்னை யெண்ணித் தானுயிர் விடுவதற்கஞ்சி வீட்டுக்கு வந்தனன். நான் என் மக்களிறந்து போனமையைக் கேள்விப்பட்டு பிள்ளைகளையும் பேரன்மார்களையும் போர்க்களத்திற் பார்த்து சோக சாகரத்தில் மூழ்கி, ஆ பிள்ளைகளே! எங்கே போய்விட்டீர்கள்? பலிஷ்டமான பாழுந் தெய்வத்தினுல் நான் வஞ்சிக்கப்பட்டேனே யென்றழுதுகொண்டிருந்தேன். அவ்வாறிருக்கும்போது விஷ்ணுமூர்த்தி நல்ல வஸ்திர

முடுத்திக்கொண்டவராயும் வேதமெல்லா மறிந்தவராயுமுள்ள ஒரு நல்ல விருத்தப் பிராமண வேஷங்கொண்டு போர்க்களத்திலென் சமீபத்தில் வந்து அழுதுகொண்டிருக்கிற வென்னைப் பார்த்து, அம்மா ஏனழுகிறாய்? பர்த்தாவென்றும் மாடென்றும் புத்திரர்களென்றும் பௌத்திரர்களென்றும் வீடென்றும் ஒவ்வோருருவங் கொண்டுவந்த இச்சம்ஸாரத்தில் வைத்த மோகத்தினால் துக்கம் நேரிடுகின்றதேயன்றி ஆராய்ச்சி செய்யுங்கால், நீ யார்? இந்தப் பிள்ளைகளெல்லாம் யாருடைய பிள்ளைகள்? இவர்களைப்பற்றி உனக்கென்ன சம்பந்தம்? ஒன்றுமில்லை. இனி நீ உன்னாத்மா கடைத்தேறுவதைப்பார்; எழுந்திரு; அழுகையை நிறுத்து. மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு பரலோகமடைந்த புத்திரர்களுக்கு வழக்கப்படிச் செய்யவேண்டிய தகனாதிகளை நடத்துவாயாக. வெளியேயுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வோம். வீட்டிலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யலாகாதென்று தர்மசாஸ்திரம் விதித்திருக்கின்றது; ஆகையால் புறப்படென்று என்னைப் பிரயாணப்படுத்தி அரசனையும் பந்துக்களையும் என்னைச் சூழ்ந்து வரும்படிச் செய்து தான் முன்னே நடந்து புருஷ தீர்த்தமென்னும் ஒரு தீர்த்தத்துக்குப் போய் என்னைப் பார்த்து, ஓ பெண் யானையைப் போல் நடக்கிற ஸ்திரீயே! இத்தடாகத்தில் ஸ்நானஞ்செய். வீணான துக்கத்தை விட்டுவிடு. புத்திரர்களுக்கு உத்தரகிரியை செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது. உனக்கு முன் ஜன்மங்களிலிறந்துபோன பிள்ளைகள் எத்தனை கோடியோ! தாய் தந்தையர்களெத்தனை கோடியோ! புமான்களாயிருந்தவர்களெத்தனை கோடியோ! அப்படியே சகோதரர்களும் எத்தனை கோடியோ! இந்தப் பிராந்தி ரூபமான ஸம்ஸாரத்தில் நீ யாருக்கென்றழுவாய்? பொய்யாயும் சொப்பனத்துக்குச் சமானமாயும் பிராணிகளுக்குத் தாபத்தை யுண்டுசெய்கிற இந்தச் சம்ஸாரத்திலழுது முடியுமோ வென்றென்னைத் தேற்றி அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வித்தார். (41–61)

அதில் மூழ்கி எழுந்தவுடன் எனக்குப் புருஷஜன்மம் வந்துவிட்டது. விஷ்ணுமூர்த்தி எனது வீணையையும் கிருஷ்ணாஜினத்தையுங் கையிலேந்தி நின்றனர். அவரை நான் பார்த்ததும் எனக்குப் பூர்வவுணர்ச்சி வந்து நாம் இங்கே ஏன் வந்திருக்கிறோம்? நமக்குப் பெண் தன்மை இவரால்தான் வந்தது; இவர் தானிம்மாயைச் செய்தவரென்று சிந்தித்திருக்கின்றபோது, அவர், ஓ நாரதமுனியே! ஜலத்திலென்ன செய்கிறாய்? போகலாம் வாவென்றார். அப்போது தருணமான பெண் தன்மை யிக்காரணத்தால் வந்ததென்றும் மறுபடியும் ஆண் தன்மை யிக்காரணத்தால் வந்ததென்றும் அறிந்துகொள்ளச் சக்தியில்லாதவனாய் விட்டேன், என்றிவ்வாறு நாரதர் வியாசரைப் பார்த்துக் கூறினரென்றனர். (62–66)

ஓம் ஹ்ரீங்கார நிலயாயை நம:

## 30. மாயையின் பலம்

சூதர் கூறுகின்றார் :—நாரதமுனிவர் வியாசபகவானைப் பார்த்து, ஐயா ! பின்னடந்த எனதற்புத சரித்திரத்தைக் கேளும் ! நான் ஸ்திரீ வடிவமொழிந்து புருஷ வடிவமானதை என்னுடன் வந்த என்னாயகனாகிய அரசன் பார்த்து ஆச்சரியமடைந்தவனாய், என் மனையாட்டி எங்கே போனாள் ? இந்த முனி யார் ? இவர் என் மனையாளுடன் மூழ்கவில்லையே ! அவள்தான் முனியாய்விட்டனளோ ? இல்லை ! இல்லை !! அவளெப்படி முனியாவாள் ? அந்தோ ! நானென் செய்வேன் ? என்னிஷ்டையான என்னாயகியே ! உன் பிரிவினால் நானழுதுகொண்டிருக்கின்றேனே ! என்னை யழும்படியாகச் செய்து விட்டு நீ எங்கே போய்விட்டாயென்று சிறிதும் லஜ்ஜையின்றி ஓவென்று பெருங்குரலிட்டழத் தொடங்கி, ஓ பெருத்த தொடையுள்ளவளே ! தாமரை மலர்போன்ற கண்களுள்ளவளே ! ஓ புன்சிரிப்புள்ளவளே ! நீ இங்கில்லாமல் என்னை எப்படிப் பிரிந்து போனாய் ? என் கிருகமும் என் ராஜ்யமும் வீணாய்ப்போயிற்றே ! என் பிள்ளைகளெல்லாம் இறந்தும் என் பிராணனை யுனக்காக வைத்திருந்தேனே. இப்பொழுதும் உன் விரகத்தினாற் பிராணன் வெளியே போகாமலிருக்கிறதே ! என்னுடன் பிரீதியாயிருந்த நீ மாத்திரம் என்னை வஞ்சித்தனையே ! ஓ விசாலமான கண்ணுடையாளே ! நானழுது கொண்டிருக்கின்றேனே. உன் கண்ணுக்குத் தெரியவில்லையா ? நானுன்னைப் புருஷனில்லாதவளென்றெண்ணி யிருந்தேனே. இப்போது நீ அந்தப் புருஷனிடத்தில் போயிருப்பதாகத் தெரிகின்றதே ! நீ அப்படியிருந்தாலு மெனக்கொரு வார்த்தை சொல்லக் கூடாதா ? முதலிலென்னைச் சேர்ந்த காலத்தில் நீ வைத்திருந்த பிரீதியெல்லாம் இப்போதெங்கே போயிற்று ? அந்தோ ! நீ உயிரோடிருந்தால் இப்படியிருக்க மாட்டாய். தனுராகாரமாயிருக்கிற புருவங்களுள்ளவளே ! நீ ஜலத்தில் மூழ்கினபோது மச்சங்களாலும் கூர்மங்களாலும் பக்ஷிக்கப்பட்டனையோ ? அல்லது என்னுடைய துர்ப்பாக்கியத்தினால் ஜலாதிபதியாகிய வருணன் பிடித்துக் கொண்டு போய்விட்டானோ ? அல்லது, ஓ அழகான அங்கங்களுள்ளவளே ! உன் பிள்ளைகளோடு சேர்ந்துவிட்டனையோ ? ஓ புண்ணியவதி ! அமிர்தம்போல் இனிப்பாய்ப் பேசுகின்றவளே ! உனக்குப் பிள்ளைகளிடத்தில் அந்தரங்கமான பிரீதியுண்டென்பது இப்போதன்றோ தெரியவந்தது. என்னைவிட்டுப் புத்திரவாஞ்சையினால் சுவர்க்கத்துக்குப் போவது யுகதருமமல்லவே ! ஓ என் பிராணநாயகியே ! பிள்ளைகளோடுன்னையும் இழந்திருக்கிற இந்தத் தருணத்திலும் எனக்கு மரணம் நேரிடவில்லையே ; என்ன செய்வேன் ? எங்கே போவேன் ? பூவுலகில் ராமனைத் தெய்வமென்று சொல்லுகின்றனரே, அவனிப்போதில்லையோ ? நானிப்போது படுந் துன்பம் இப்படிப்பட்டதென்று அவனுக்கு நன்றாய்த் தெரியுமே. அவனென்னைப்போலும் மனைவியை யிழந்து துன்பப்பட்டவ

னல்லவா ? எனக்கேன் ஒருகதியுந் தேடாமலிருக்கின்றான்? ஒரு ஆவிற்கு இரண்டுகொம்பு தோன்றினாற்போல் வாழத்தக்க தம்பதிகளுள் சிலரைத் தெய்வமானது ஒரேகாலத்திற் கொல்லுதலும் வேறாகப் பிரித்துக் கொல்லுதலுஞ் செய்துவருகின்றதே! இது கொடுமையல்லவா? தெய்வமானது காலவேற்றுமை செய்யலாமா? மஹரிஷிகள் பர்த்தா மரணமடைவானாயின் பத்தினி அவனுடன் மரணமடைய வேண்டுமென்றும் அக்கினிப்பிரவேசமாக வேண்டுமென்றும் விதித்தது சிறந்ததே. அதுபோலும் பத்தினியிறந்தால் பதியுமிறக்க வேண்டுமென்று ஏன் விதிக்காமற் போயினரென்று பற்பலவாய்ப் பிதற்றி அழுதுகொண்டிருந்தான். (8–12)

நாராயணர் அவனைப் பார்த்து, ஓ ராஜஸ்ரேஷ்டனே! ஏனழுகிறாய்? நீ தர்மசாஸ்திர மறிந்தவனாயும் பெரியோர்களை யடுத்தவனாயு மெனக்குத் தோன்றவில்லை. உன்னுடைய பிரியையாகிய மனைவி யெங்கே போயினாள்? அவள் யார்? நீ யார்? அவளுன்னைச் சேர்ந்ததென்பதெங்கே? உன்னைப்பிரிந்த தென்பதெங்கே? மனைவி மக்கள் சகோதர ரென்றெண்ணப்பட்ட இவரெல்லாம் ஸம்ஸாரமென்னும் பிரவாகத்தில் ஒன்றோடொன்று சேருகின்ற செத்தைகள் போலன்றோ? இங்கிருந்து வீணாயழுவதினால் என்ன பிரயோஜனம்? வீட்டுக்குப் போ. ஒருவரோடொருவர் சேர்தலும் பிரிதலுந் தெய்வாதீனமாயுள்ளது. நீ இந்த ஸ்திரீயை இவ்விடத்திலேயே கூடிக் களித்தாய். இவ்விடத்திலேயே பிரிந்து துக்கிக்கின்றாய். இவளுடைய தாய் தந்தைகளை நீ யறிவையோ? அல்லது பார்த்திருப்பையோ? ஒன்றுமில்லாதிருக்க, நீ இவளை இக்குளக்கரையில் சேர்ந்தது காகதாளிய நியாயமாகும். இனிக் கூடுவதென்பது ஏது? இனித் துக்கப்படுவதனால் என்ன பிரயோஜனம்? எல்லாம் காலத்தின்படி நடக்குமாகையால் அதனை உன்னாலு மென்னாலு மற்றெவராலும் அதிக்கிரமிக்க முடியாது. இனி அக்காலமானது உனக்கு என்ன சுகத்தைக் கூட்டுமோ அந்தச் சுகத்தை வீட்டுக்குப்போயனுபவிப்பாயாக. இப்போது மறைந்துபோன அந்த உத்தம ஸ்திரீ எப்படி வந்தாளோ, அப்படியே போய்விட்டாள். நீ அந்த ஸ்திரீ வருவதற்கு முன் எப்படியிருந்தனையோ அப்படி யிருப்பாயாக. இனி நீ எவ்வளவு அழுதபோதிலும் அவளந்த அழுகையைக்கேட்டு, ஐயோவென்றிரங்கி வரப்போகிறதில்லை. ஓ அரச சிரேஷ்டனே! யோகஞ்செய்வாய். போகம் வருவதும் போவதும் காலவசத்தினாலென்றறிக. இவ்வருத்தமான ஸம்ஸார மார்க்கத்தில் விசனப்படுவதனால் வரும் பயனென்னை? சுகமோரிடத்தி லிருப்பதில்லை; அதுபோலவே துக்கமுமோரிடத்திலிருப்பதில்லை. சுகமுந்துக்கமும் மாறிமாறி வந்துகொண்டேயிருக்கும். ஆகையால் நீ மனதை யொருவழியில் ஸ்திரப்படுத்திக்கொண்டு ராஜ்யத்தை சுகமாயனுபவிப்பாயாக. இதிலுனக்கு வெறுப்பாயிருக்கும் பக்ஷத்தில் தாயாதிகளுக்கு ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டு காட்டுக்குப்போய் யோகாப்பியாசஞ் செய்வாயாக. இம்மானிட தேகமானது ஒரு க்ஷணகாலத்தில் நசித்துபோகும் அநித்தியத்தன்மை

யுடையது. இம்மானிட தேகம் போமாயின் மீண்டுங் கிடைப்ப தரிது. இது க்ஷணத்தில் நாசமடையத்தக்க தன்மையை யுடைத் தானதாயினும் பிரயோஜனமோ நித்தியமாகிய பெரிய பிரயோஜ னத்தைக் கொடுக்குந் தன்மையை யுடைத்தாயுமுள்ளது. இங்ஙன மான அரியதேகங் கிடைத்திருக்கும்போது செய்யுங் கருமத்தைச் செய்வதொழிந்து செய்யவேண்டிய தல்லாததாகிய காரியத்தைச் செய்தழிந்து போவதனு லென்னபயன்? அருந்தல் பொருந்தலா லுண்டாகுஞ் சுகங்களையறிந் தனுபவிக்குந்தன்மை பசுஜாதிக ளிலு மிருக்கின்றது. அப்பசுப்போலன்று இம்மானிட தேகம். ஓ அரசனே! நித்திய சுகத்துக் கேதுவாகிய ஞானம் இம்மானிட தேக மொன்றினுற்றான் கிடைக்கத்தக்கது. வேறெந்தவிதமான சரீரங் களினுங் கிடைக்காது. ஆதலால் நீ வீட்டையும்விட்டு ஸ்திரீ யின் பிரிவினுலுண்டாகிய துக்கத்தையும் விட்டு வனத்துக்குச் செல் லக்கடவாய். இவ்வுலகம் மாயாகாரியமாகையால் மோகிக்கப்பட் டிருக்கிறது. இவ்வண்ணம் மாயை மயங்கச் செய்கின்றது மாயா சொரூபிணியாகிய தேவியின் பலத்தினுலென் றறிவாயென்று அவ னுக்குப் போதிக்கவே, ஒருவாறு தெளிந்தவனுய் அந்த விஷ்ணு மூர்த்தியை நமஸ்கரித்து அத்தடாகத்தில் ஸ்நானஞ்செய்து தனது கிருகம்போய் தாயாதிகளுக்குத் தனது ராஜ்யத்தைக் கொடுத்து வைராக்கிய முடையவனுய் அரண்யஞ்சென்று சாத்விகஞானத்தை யடைந்து வாழ்ந்திருந்தனன். (13–29)

ஓ வியாச பகவானே! அரசன் போனபிறகு விஷ்ணுமூர்த்தி என்னைப் பார்த்து அடிக்கடி சிரித்தனர். நானவரைப் பார்த்து, ஓ பிரபுவே! உம்மால் நான் வஞ்சிக்கப்பட்டு, பெரிதான மாயா பலத்துக்குள்ளாய் ஸ்திரீதேக மெடுத்து அந்தத் தேகத்தில் நான் செய்த வேலைகள் மிகவும் ஆச்சரியகரமானதால் அவைகளை யெண் ணிப் பார்க்கின்றேன். அந்தோ! நான் அந்த ஸ்திரீ தேகத்தை யடைந்து இந்திரன்போன்ற ஓர் அரசனைப் பர்த்தாவாகக்கொண்டு பெரிய ஸம்ஸாரியாயிருந்தேன். இப்போது இச்சரீரத்தை நோக்கு மளவில் முன்னிருந்த நாரத சரீரமாகத் தெரியவருகின்றது. அதே மனம், அதே தேகம், அதே (ஆண்) குறி முதலிய வெல்லாமும் முன்னிருந்ததுபோல் பெற்றவனுயிருந்தும் அந்த ஞாபகம்மாத் திரம் ஏன் மறந்துபோயிற்று? அதுபற்றி மிகவு மாச்சரியப்படு கின்றேன். பகவானே! நான் குளத்தில் மூழ்கியபோது பூர்வ ஞானமெவ்வாறு மறந்துபோயிற்று? இவற்றின் காரணங்களைக் கூறவேண்டும். ஓ விஷ்ணுமூர்த்தியே! நான் ஸ்திரீ தேகத்தை யடைந்திருந்த காலத்தில் அனேக விதமான சுகதுக்கங்களை யனுப வித்தேன். பிரதிதினமுஞ் சுராபானஞ் செய்தேன். நியமமில்லாமல் போஜனமுஞ் செய்தேன். நாரதனென்பதையும் மறந்தேன். இவை நிற்க, இப்போது ஸ்திரீ ஜன்மத்தில் நடந்த செய்திகளை எப்படி நன்றுய்த் தெரிந்து கொள்ளுகின்றேனே அப்படி நான் ஸ்திரீயா யிருந்தபோது நாரதனு யிருந்ததைத் தெரிந்து கொள்ளவில்லையே! இதனை எனக்குச் சொல்ல வேண்டுமென்றேன். (30–37)

விஷ்ணுமூர்த்தி, மகாபுத்திமானுன ஓ நாரத முனியே! இதைத் தான் பெரியோர் மாயா விலாசமென்று சொல்லுவர். சர்வ ஜந்துக் களினுடைய தேகங்களிலும் சுகதுக்க சம்பந்தமாயிருக்கின்ற அவஸ்தா பேதங்கள் பல. அதுபோலவே ஜாக்கிரம் சொப்பனம் ஸுஷுப்தி துரீயம் துரீயாதீதம் என்னும் ஐந்தவஸ்தைகள் எல்லாச் சரீரங்களிலுமுண்டு. இந்த ஜாக்கிரம் முதலிய அவஸ்தைகளை எப்படி ஒருவன் மாறிமாறி யடைகின்ருனே அப்படியே தேகாந் தராவஸ்தையு மடைகின்ருன். இதுபோல் நீ ஸ்திரீ தேகத்தை யடைந்ததுமாம். இதிலென்ன சந்தேகம்? மாயையை ஜயித்தே னென்று சொல்லிய நாரதனே! ஜாக்கிரம் முதலிய அவஸ்தை களின் அனுபவத்தைக் கேட்பாயாக! சுஷுப்தியவஸ்தை யடைகிறவன் செவியால் கேட்கிறதுமில்லை, வாயினுற் பேசுகிறது மில்லை, மற்ருென்றையறிகிறது மில்லை. அவன் ஜாக்கிராவஸ்தை யடைவானுயின் எல்லா விஷய ஞானங்களையு மறிந்துகொள்ளு கிருன். மனமானது ஜாக்கிரத்தினுல் மறைப்பில்லாமல் பிரகாசித் தும் சுஷுப்தியினுல் பிரகாச மில்லாமல் மறைந்து மிருக்கின்றது. இனிச் சொப்பனத்திலோவெனின், நானுவிதமான மனோபேதமா யுள்ள வபிப்பிராயங்கள் அநேக விதமாயுண்டாகின்றன. அஃ தென்னையெனின், ஒருவன் தன்னைக் கொல்வதற்கு யானை யோடி வந்ததாகவும் அதனைக்கண்ட தான் ஓடுவதற்குச் சக்தியின்றி யானென்ன செய்வேனென்று மறைந்துகொள்வதற் கோடியதா கவும் அங்கிடங்காணுமல் பயந்ததாகவுஞ் சொல்லுகிருன். ஒரு வனிறந்துபோன பாட்டனுரைப் பார்த்து அவருடன் வீட்டிற்கு வந்து அவருடன் பலவார்த்தைகளாடிப் போஜனஞ் செய்த தாகக்கண்டு சொல்லுகிருன். இவ்வாறு சொப்பனங்கண்டவர் விழித்துக்கொண்டு சொப்பனத்தி லறிந்தனுபவித்த சுகதுக் கங்களை நன்ருய் ஞாபகம் பண்ணிக்கொண்டு பிறருக்கு விவ ரமாய்ச்சொல்லிப் பின்னர் இது பிரமையென்றுஞ் சொல்லுகின்ற னர். அதுபோல் சொப்பனத்தில் எவராவது ஜாக்கிரத்தில் நடந்த செய்திகளைத் தெரிந்துகொள்ளுகின்ருர்களா? இல்லையன்ருே? இது போலவே நீ எடுத்த அந்த ஸ்திரீஜன்மம் சொப்பனுவஸ்தை போன்றதெனவும், இந்த நாரதஜன்மம் ஜாக்கிராவஸ்தையைப் போன்றதெனவும் அறிவாய். ஆகவே நீ அந்த ஸ்திரீஜன்மமாகிய சொப்பனுவஸ்தையில் இந்த நாரதஜன்மமாகிய ஜாக்கிராவஸ்தை யனுபவத்தை எப்படி யறிவாய்? ஓ நாரதமுனியே! இதை மாயையி னுடைய செயலென்றுணர்க. அம்மாயாகுணங்களுடைய கரையை நானுமறிந்தவனல்ல; ருத்திரருமறிந்தவரல்ல; பிரமாவுமறிந்த வனல்ல. நாங்களே அறிந்திலமென்ருல் மந்தபுத்தியுள்ளவராகிய வேறுயாவரெப்படி யறியவல்லவராவர்? மாயாகுணத்தினுடைய அளவு எவனுக்குந் தெரியாது. தாவரஜங்கமரூபமான வுலகமெல் லாம் குணத்திரயத்தினுல் நிருமிக்கப்பட்டிருத்தலால் இச்சம்ஸார பிரவிருத்தியுண்டாகின்றது. குணசம்பந்தமில்லாவிடின் ஸம்ஸார மேது? நான் ஸத்வகுணத்தில் பிரதானனுயிருக்கின்றவனுயினும்

என்னிடத்தில் ரஜோகுண தமோகுணங்களுமுள்ளன. அப்படியே பிரமனும் ருத்திரருமுள்ளார். நாங்கள் மூவரும் குணங்களை விட்டிருக்கும் பிரபுக்களல்ல. அஃதில்லாதபிரபு துரீய சிவனொரொருவரே. அவரையன்றி மற்றொருவரையுங் குணரகிதரென்று கேட்டதில்லை. ஓ முனிசிரேஷ்டனே! நீ மாயாவிலாச வைபவத்தைக் காண்; அதனைக் கடத்தலரிது; அதிலாழ்ந்துபோகாது ஞான நிலையைக்கூடுமுபாயத்தை யூகிக்கவும்; என்னால் விளைவிக்கப்பட்ட அசாரமாயும் கரையில்லாததாயுமுள்ள இச்சம்ஸாரத்தில் அது எப்படி இது எப்படியென்று மோகத்தையடையவேண்டாம். மாயாப் பிரவாகபேத விலாசங்களை நீதான் கேட்டு முடியுமா? நான்தான் சொல்லிமுடியுமா? அது மஹா அற்புதமாயுள்ளதென்றார். இவ்வாறு விஷ்ணுமூர்த்தி தனக்குக் கூறினரென்று நாரதமுனிவர் எனக்குக் கூறினரென்றார். (38–53)

ஓம் ஹ்ரீம்பதப்ரியாயை நம:

## 31. மாயைக்கு மருந்து

சூதர் கூறுகின்றார்:—வியாசமுனிவர் ஜனமேஜயனை நோக்கி, மகாராஜனே! மாயையினுடைய மகத்துவத்தை நாரதரிடத்தில் இவ்வண்ணம் நான் கேட்டிருக்கின்றேனாதலால் அம்மாயையின் ஸ்வரூப விசேஷங்களை யுனக்கு நன்றாய்ச் சொல்லுகிறேன், கேட்பாயாக. நான் அந்த நாரதருடைய ஸ்திரீதேகத்தைப்பற்றிய சரிதத்தை அவரால் கேட்டபிறகு, ஓ நாரதமகாமுனிவரே! பின்னர் விஷ்ணுமூர்த்தி யாதுகூறினார்? உம்மையழைத்துக்கொண்டு எவ்விடம் போயினாரென்றேன். அந்த நாரதர், ஓ வியாசமுனிவரே! அத்தடாகத்தின் கரையினின்று கருடாரூடராய்ப் புறப்பட்டு என்னைப்பார்த்து, ஓ நாரதனே! இனி உமக்கு எந்தவிடத்திற்குப் போகவேண்டுமென்றிச்சை யுதிக்கின்றதோ அவ்விடத்துக்குப் போகலாம். அல்லது என்னுடன் வைகுண்டம் வருவதாயிருந்தாலும் வரலாமென்று கூற, நானவரிடம் விடைபெற்றுக்கொண்டு இந்திரலோகம்போய்ச் சேர்ந்தேன். அவரும் எனக்கு விடைகொடுத்துவிட்டு வைகுண்டம் போய்ச்சேர்ந்தனர். பிறகு நான் என் தந்தையிருக்கும் சத்தியலோகம் போய்ச் சேர்ந்து அவரை நமஸ்கரித்து அவரெதிரினின்று என்னுடைய சரிதத்தை நினைத்துக் கொண்டிருந்தேன். அவர், ஓ புத்திமானே! எங்கே போயிருந்தாய்? எதற்காகச் சிந்தைப்பட்டுக்கொண்டிருக்கிறாய்? உன்னுடைய மனம் இப்போது சுகமாக விருக்கிறதென்று நானினைக்கவில்லை. நீயாராலாவது வஞ்சிக்கப்பட்டனையா? அல்லது ஏதேனும் ஆச்சரியத்தைக் கண்டனையா? விசனப்பட்டுக் கொண்டிருக்கின்றவனையும் அறிவு கலங்கினவனையுங் காணப்படுகின்றாய். ஏனப்பா அப்படியிருக்கின்றாய்? உட்காரென்றார். நானவர் கட்டளைப்படி ஆசனத்திலிருந்து மாயாபலத்தால் உண்டான என்னுடைய விருத்தாந்தத்தை சொல்லத்தொடங்கி, ஓ என்றந்தையே! சமர்த்தரான விஷ்ணு

மூர்த்தியால் நான் மிகவும் வஞ்சிக்கப்பட்டு ஒரு தடாகத்தில் மூழ்கி ஸ்திரீரூபமெடுத்து பூர்வஞானமெல்லாம் மறந்து அநேக வருஷகாலம் ஸ்திரீயாகவேயிருந்து புத்திரசோகத்தினுலுண்டாகும் துக்கங்களெல்லாம் அனுபவித்துப் பின்னரந்த விஷ்ணுமூர்த்தியால் நல்லுபதேசமும் பெற்றுத் தடாகத்தில் மூழ்கியெழுந்து புருஷனுயினேன். ஓ ஐயா! நானிவ்வாறு மோகமடைந்ததற்குக் காரணம் யாது? மாயையின் வன்மையைக் கடத்தல் மிக்க வரிதென்று நானிதுவரையில் தெரிந்து கொள்ளாமலிருந்தேனுகையால், இந்த மோகோத்பத்தியானது என்னுடைய ஞானத்தைக் கெடுதி செய்து விட்டது. இப்பொழுது அந்த மாயையால் விளையும் சுபாசுபங்களெல்லாம் நான் நன்ருயனுபவித்துத் தெரிந்து கொண்டேன். ஓ என்றந்தையே! நீரெப்படி மாயா பலத்தை ஜயித்திருக்கிறீர்? அந்த உபாயத்தை யெனக்குச் சொல்லுமென்றேன். (1–17)

அவரென்னை நோக்கிச் சிரித்து, அப்பா! இம்மாயை சகல தேவர்களாலும் மகா மகிமையுள்ள முனிவர்களாலும் பிரம்மஞானமுள்ள தபசிகளாலும் காற்றையே புசிக்கிற யோகிகளாலும் முக்குணத்தான் மும்மூர்த்திகளாகிய எங்கள் மூவராலும் வெல்லத் தக்கதல்ல. சிருஷ்டி ஸ்திதி லயமென்கிற முத்தொழிலையுஞ் செய்விக்கவல்ல அந்த மகா மாயையையறியும் வன்மையுள்ளார் யாவர்? ஓ புத்திமானே! காலம் கர்மம் சுபாவம் இவை முதலான நிமித்த காரணங்களால் மகா பலமுள்ள அந்த மாயையெங்கும் வியாபித்துச் சுகதுக்கங்களை விளைவிக்கின்றபடியால் அவைகளில் உன்னறிவைச் செலுத்தாமலும் அவைகளுடைய அனுபவங்களிலாச்சரியம் வைக்காமலுமிருப்பாயாக. நாங்களெல்லோரும் மாயையினுல் மோகிக்கப் பட்டிருக்கிருேமென்று அதனுண்மையைச் சொல்லவும், நான் அவ்வுண்மையைக் கேட்டு மனந்தெளிந்து மாயா காரியங்களில் தலைப்பட்டுழலவரும் அவ்வக்காலங்களில் ஆச்சரியப்படுதைவிட்டு நித்தியானந்த சுகத்தை நாடினவனுயினேன். ஓ வியாசமுனிவரே! பின்னரவரிடத்தில் விடைபெற்றுத் திவ்ய தீர்த்தங்களையெல்லாம் பார்த்துக்கொண்டே வந்தேன். ஆதலால் நீரும் கௌரவ புத்தியை நாசஞ்செய்து மோகமொழிந்து காலகர்ம சுபாவத்துக் கீடாயமைக்கப்பட்ட இவ்விடத்திலேயேயிருந்து சுகமாய் காலத்தைக் கழித்து வாரும். அவனவனுல் செய்யப்பட்ட சுபாசுபகர்மங்கள் கட்டாயமாய் அனுபவிக்கத்தக்கதேயென்று மனத்தில் நிச்சயித்துக்கொண்டு சுகமாய்ச் சஞ்சரித்திருமென்று சொல்லி என்னிடம் விடைபெற்றுப் போயினுர். (18–25)

ஓ அரசனே! நானப்பொழுது நாரதமுனிவரால் சொல்லப் பட்டவுண்மையான அனுபவ வார்த்தைகளை மனத்தில் சிந்தித்துக் கொண்டு அன்றுமுதல் ஸரஸ்வதி நதிக்கரையில் வாசஞ்செய்து கொண்டு அச்சிந்தனையில் என்னுள்ளம் நிலைபெற்று காலத்தைக் கழிக்கு நிமித்தம் உத்தமபுராணமாயும் சர்வசம்சயத்தையுமறவே யொழிப்பதாயும் நானுவித சரித்திரங்களுடன் வேதப் பிரமாணத் தோடு கூடினதாயுமிருக்கிற இந்தத் தேவீ பாகவதத்தை நிருமித்

தேன். ஓ அரசஸ்ரேஷ்டனே! நீயுமப்படியே இம்மாயா விஷயத்தில் சந்தேகப்பட வேண்டியதில்லை. இந்திரஜால வித்தை செய்கின்ற வனொருவன் மரத்தினால் பாவைகளை நிர்மாணஞ் செய்துகொண்டு அவைகளைத் தன்னிஷ்டப்படி எப்படிக் கூத்தாட்டிவைக்கின்றனனோ அப்படி மாயா தேவியே தாவரஜங்கமரூபமான இப்பிரபஞ்சத்தை யெல்லாமுண்டாக்கி ஆட்டிவைக்கின்றாள். பிரம்மாதி ஸ்தம்ப பரியந்தமான தேவாசுரர் மானிடர் முதலிய யாவரும் பஞ்சேந்திரிய சம்பந்தமான மனம் முதலிய அந்தக்கரண வசப்பட்டுழல்கின்ற வரேயன்றி வேறில்லையாகலான், அரசனே! யாவருக்கும் மூன்று குணங்களும் அக்குணங்களோடுகூடிய காரியங்களுமுண்டாகிற தென்பது நிச்சயம். மாயையில் பிறந்த மூன்று குணங்களும் வெவ்வேறு சுபாவமுள்ளவைகள்; ஸத்துவகுணம் சாந்தமாயும் ரஜோகுணம் கோரமாயும் தமோகுணம் மூடமாயுமுள்ளன. மாயா சம்பந்தமுள்ள இம்முக்குணங்களோடு எப்போதும் புருஷன் கூடி இருக்கிறானாதலால் அந்த மாயையை விட்டிருக்க எப்படி முடியும்? உலகில் நூலில்லாமல் வஸ்திரமெப்படியாகும்? அதுபோல் அம்மூன்று குணங்களைவிட்டு மனிதனாவது திரியக்சாதியாவது கிடையாதென்பது நிச்சயம். மண்ணில்லாமல் கடமெப்படி யில்லையோ அப்படியே முக்குணங்களைவிட்டு மும்மூர்த்திகள் முதலிய யாருமில்லை. முக்குண வசத்தராகிய மூவரும் சில சமயத்தில் சந்தோஷமாயும் சில சமயத்தில் சந்தோஷமில்லாமலும் சில சமயத்தில் துக்கமாயும் சில சமயத்தில் துக்கமில்லாமலு மிருக்கின்றனர். ஓ ஜனமேஜயனே! பிரமன் ஒருவேளையில் ஸத்துவ குணத்தை ஆஸ்ரயித்திருக்குங் காலத்தில் சாந்தனாய்த் தியான முள்ளவனாய் சர்வ பிராணிகளிடத்தும் பிரீதியுள்ளவனாய் நல்ல ஞானத்தோடுங் கூடினவனாயிருக்கின்றான். அச்சத்துவ குணத்தை விட்டு ரஜோகுணத்தை ஆஸ்ரயித்திருக்குஞ் சமயத்தில் எல்லா வஸ்துக்களிடத்தும் பிரீதியற்று கோர ரூபியாயும், தமோகுணத்தை யாஸ்ரயித்திருக்குங் காலத்தில் துக்கமடைந்து மூடனாயுமாகின்றான். இப்படியே ஏனையருமென்பதிற் சந்தேகமில்லை. (26–44)

ஓ அரசனே! பிரம்மன் முதலானவர்களே முக்குணவசப்பட் டிருப்பவர்களானால் சூரிய சந்திர வம்சத்து ராஜாக்களுக்கும் இன்னுஞ் சில மகான்களுக்கும் மாயா விஷயத்தைப்பற்றி நாமென்ன வார்த்தை சொல்லலாம்? இவ்வுலகில் தேவர் சுரர் முதலான எல்லாப் பிரபஞ்சமும் மாயைக்கு அதீனமாகையால் நீ இவ்விஷயத்தில் சந்தேகிக்கவேண்டாம். சகலப்பிராணிகளும் மாயை அதீனர்களாயும் மாயையினிஷ்டப்படி யலைந்துழல்கின்றனர். அம்மாயை எப்பொழுதும் சம்வித்ரூபமான பராசக்தியினிடமிருந்து அவ்வக்காலத்துக் கேற்றவாறு அப்பராசக்தியினாலே வசப்பட்டு ஜீவர்களிடத்தில் வசித்துக் கொண்டிருக்கிறது. ஆதலால் மாயை யோடுகூடிய சம்வித்ரூபமாயும் பரமேஸ்வரியாயும் சச்சிதானந்த ரூபியாயுமிருக்கிற தேவியைத் தியானிக்க வேண்டும், பூஜிக்க வேண்டும், நமஸ்கரிக்கவேண்டும். தேவி மந்திரத்தை ஜபிக்க

வேண்டும். இத் தியானுதிகளால் தேவி சந்துஷ்டியடைந்து பிராணிகளைச் ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்துத் தன் மாயையுமடக்கித் தன்னனுபவத்தைக் கொடுக்கிருள். லோகமெல்லாம் மாயா சொரூபமாக விருக்கிறது. பரமேஶ்வரி அம்மாயா சொரூபமான லோகத்திற்கு எஜமானியாயிருக்கிருள். ஆதலால் மூன்று லோகத்தாராலும் சுந்தரமான தேவியே புவனேஶ்வரியென்று சொல்லப்படுகிருள். ஓ அரசனே ! மனம் புவனேஶ்வரி ரூபத்தில் சம்பந்தித்திருக்குமாயின் இச்சம்ஸாரத்தில் சதசத்ரூபமான மாயை என்ன செய்யும்? ஆதலால் மாயையை யொழிப்பதற்குச் சதானந்தரூபியான தேவியைத் தவிர வேறெரு தேவதாந்தரங்கள் சக்தியுள்ளனவல்ல. தமோராசியை நாசஞ்செய்வதற்குத் தமசே காரணமாக மாட்டாது; சூரியன் சந்திரன் அக்னி மின்னல் இவைகளுடைய காந்தியல்லவோ இருளைப் போக்கடிக்க வல்லமையுள்ளவை. ஆதலால் சம்வித்ரூபமாய்த் தானே பிரகாசித்துக் கொண்டிருக்கிற மாயேஶ்வரியான அம்பிகாதேவியை மாயையைக் கழிப்பதற்காக மிகப் பக்தியோடு பூஜிக்க வேண்டும். (45–55)

ஓ அரசனே! உனக்கு விருத்திராசுரவதம் முதலான பல சரிதங்களைச் சொல்லிவந்தேன். அவைகளை நீயும் பக்திசிரத்தையோடு கேட்டுவந்தனை. இன்னும் வேறெதைக்கேட்க இச்சிக்கிருய்? தேவியின் மகிமையை விஸ்தாரமாய்ச் சொல்லுகிற இந்தப் புராணத்தின் பூர்வபாகம் உனக்கு என்னலிதுவரையிற் சொல்லப்பட்டது. இந்த ரகசியமான பாகவதத்தைச் சாதாரணமான மனிதனுக்குச் சொல்லக்கூடாது. பக்தனையும் சாந்தனையும் தேவியினிடத்தில் பிரீதியுள்ளவனையும் சிஷ்யனையும் அல்லது ஜ்யேஷ்ட புத்திரனையும் அதி பக்தியோடு கூடினவனையுமிருப்பவனுக்கே சொல்லல் வேண்டும். வேதத்திற்குச் சமானமாயும் நல்ல பிரமாணத்தோடு கூடினதாயும் கதைகளுக்குள் ஶ்ரேஷ்டமாயுமிருக்கும் இப்புராணத்தை மிக்க பக்தியோடு எவன் படிக்கிருனே எவன் கேட்கிருனே அவன் இவ்வுலகில் தனவானையும் ஞானவானையுமிருப்பன். (56–60)

ஆருவது ஸ்கந்தம் முற்றிற்று.